ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீமத்கம்பராமாயணவசனம்.

## உயுத்தகாண்டம்.

இஃது

சிந்தாத்திரிப்பேட்டையிலிருக்கும்

மெய்யூர்

சின்னையாமுதலியாரவர்கள்

குமாரர்

வீராசாமிமுதலியாரவர்களாலும்

ஷை பேட்டையிலிருக்கும்

காஞ்சிபுரம்

ஆதிமூலமுதலியாரவர்கள்

குமாரர்

[illegible]ருமுதலியாரவர்களாலும்

வளவனூர்

வித்வான்—ஆதிமூலமுதலியாரைக்கொண்டும்

சென்னைநார்மல்கல்லிஜ்

தமிழ்ப்பண்டிதர்

கோ-இராசகோபாலபிள்ளை

யவர்களைக்கொண்டும்

முற்றும் எழுதுவிக்கப்பட்டு,

சிந்தாத்திரிப்பேட்டையிலிருக்கும்

ச, முனிசாமிமுதலியாரவர்களது

மெய்ஞ்ஞானசூரியோதயவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

கலியுகாதி௵ - ௪௯௬௫-க்குச் சரியான ரக்தாக்ஷி௵ - ஆடி மீ.

ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# சாத்துக்கவிகள்

கா - பச்சையப்பமுதலியாரது - சென்னைக்கல்விச்சாலையில்

தமிழ்த்தலைமைப்புலமைநடாத்தும்.

வித்வான்.

## அ,சுப்பராயபிள்ளையவர்கள்செய்தது.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உலகுபுகழ் புலவர்மதி மொழியமுத கவியரசெ னுெப்பற்ற கம்பருளும் *
ஒளி ரிராமாயண வுயுத்தகாண்டந்தன்னை யோங்குவள மெய்யூர்வரும் *
கலைவலானென்னும் வீராசாமிநதிகுலக் காவலனு மிணையில்காஞ்சிக் *
கருதுபுகழ் மன்னு ரெனும்வள்ள ஞனுமிக் காசினியில் யாருமுணர *
இலகுபொரு ளமைவசன காவியமதாச்செய்க வெனவேண்டு கோளினாலே *
இலக்கண விலக்கியப் புலமைநிறை வளவனு ரெழிலாதி மூலமாதும் *
அழகிய முத்தமிழாகு மழைபொழியு நன்மேக மணிகொள் கோமளபுரியில்வாழ் *
...பர்குல திலகனம் ராசகோபாலவே ளறிஞனு மியற்றினரரோ. *

ஷைகல்விச்சாலையில்தமிழ்ப்புலவரும்,

கோ இராசகோபாலபிள்ளையவர்கள்.

மாணுக்கரும்.

## திருமணப்.

## கேசவசுப்பராயமுதலியார்செய்தது.

பதினுெஞ்சீர்க்கழி நெடி லாசிரியவிருத்தம்.

தெய்வவொண்புலமை மகாகவி கம்பர் செப்பிய பெரியகாப்பியமாம் *
சீர்கொளும்புருடாகாரவைபவஞ்சேர்சிறையிருந்தவளுடையேற்றம் *
பெய்வருமிதிகாசச்சிரேட்டமதாப் பிறங்கிராமாயணந்தன்னைப் *
பேதையும்பெண்களும் முணர்ந்துய்வான் பிடுறுவாசகமாக *
மெய்வளர் வீராசாமிமால் காஞ்சிவேந்தன்மன்னூர் முயற்சியினால் *
வீறுசேர் மருவுவளவனூராதிமூலவித்துவசிரோமணியும் *
மைவளர்சோலைவண்டறைமாநீர்வளவயற்கோமளபுரத்து *
வண்டமிழ்ப்புலமையிராசகோபாலவள்ளலுமியற்றியிட்டனரே. *

ஸ்ரீராமஜெயம்.






நன்ருக. குருவாழ்க. குருவேதுணை.

# உ யுத்தகாண்டம்.

## கடல்காண்படலம்.

ஒன்றேயென்னினொன்றேயாம்பலவென்றுரைக்கிற்பலவேயாம் ... ...*
அன்றேயென்னினன்றேயாமாமேயென்னினுமேயாம் ... ... ... *
இன்றேயென்னினின்றேயாமுளதென்றுரைக்கினுளதேயாம் ... ... ...*
நன்றேநம்பிகுடிவாழ்க்கைநமக்கிங்கென்னேபிழைப்பம்மா ... ... *

சதுர்யுகமும் மாறுகின்றகாலத்திலும்சலனமில்லாமல்நிலைபெற்றிருக்கின்ற உன்னதமான கமேருமுதலாகியபர்வதங்களும் - எக்காலத்திலும்வற்றாதிருக்கின்றசமுத்திரமும்- பூமியும் டபாரிசத்திலே வான மளவும் உயரவும், தென்பாரிசத்திலிருக்கின்ற பொதியமலைமுதலாகிய மலைகளும்-நிலமும்பாதாளபரியந்தந் தாழவும், எங்கும்பரவியெழுந்த வானரசேனை எழுபது வெள்ளமும் தெற்கிலுள்ள மகரவெள்ளமாகிய கடலின் அருகேவந்திறங்கியது. சமுத்திரமானது சமீபித்திருக்கிறபடியினாலும், சுவாமி வெகுநாளாகப் பிராட்டியாரைப் பிரிந்திருக்கிறபடியினாலும் இனி வழிமத்தியில் எங்கும் நில்லாமல் பசி-தாகம்- இளைப்பு முதலானதுகளையும் பாராமல் எப்படியாவது பிரயாசத்துடனே பிரயாசமாய்ப்போய்ச் சீக்கிரத்திற்சேரவேணுமென்றும் - ராவணாதி ராக்ஷதருடனே எதிர்த்துச் சண்டைசெய்து ஜெயித்துச் சீதாதேவியின் சிறையை மீட்கவேணுமென்றும் எண்ணங் கொண்டவர்களாய்மனதுபொங்க, நிலமேழும்பரந்துவிளைந்து நடந்துவந்த வானரசேனை வீரர்களெலம் மாண்பையுடையர க்ஷகர்களாமல், சுவமிக்கு என்ன அபாயம் [illegible]றதோவென்று சுவஜாக்கிரதையுடனே அ[illegible]யாய் அருகுப்புறத்தில் பு[illegible]ருந்தேயப்தி, அந்த வானரர்கள்தங்களைப்பெற்ற தாயர் தந்தையர் தமையன்மார் தம்பிமார்பெண்சாதிபிள்ளைகள் முதலானவர்களையும்கைவிட்டு, சுவாமி காரிய துரந்தரர்களாய்த் தமக்குத்துணையாக வந்ததனால் அவர்களில் ஒருவராவது தப்பாமல்வந்து சேர்ந்தார்களாவென்றும், அவர்களுக்குப்பொல்லாங்கு எங்கே சம்பவிக்கிறதோ வென்றும் ஒருவேளை கர்மவசத்தால் ஆருக்காவது பிராணநஷ்டம்வந்தால் அந்தச் செய்திகேட்டு, அவர்களுடையபந்துவர்க்கத்தார் இந்தராமன் தன் பெண்சாதியை ராவண னெடுத்துக்கொண்டுபோனதைக்குறித்து அவனைஜெயிப்பதற்காக, எங்கள் புத்திரர் புருஷர் அண்ணன்மார் தம்பிமார்களையெல்லாம் ஆட்டுமந்தைபோல மடக்கிக்கொண்டுபோய்ப் பதனமாய்க் காப்பாற்றி அழைத்துக்கொண்டுவராமல் அநியாயமாய் ராக்ஷதப்புலிகளின் வாய்க்கு இரையாகக் கொடுத்துவிட்டான் நாசகாலனென்று தம்மை நிந்திப்பார்களென்றும் எப்போதும் அவர் அவர்களை மறவாமல், மனதில்சிந்தித்துக் கொண்டிருக்கிறதனால் அந்த வானரவீரர்கள் அவருக்கு அகத்திலும் படைசூழவும், ஜான[illegible]ப்பிரிந்தபின்பு ஒருவிதத்தால் தம்மு[illegible] கண்களால் பார்த்திருக்கிற தாமரைப் புஷ்பங்களும், இதழ்விரிந்து உறங்குகின்ற

ராத்திரி காலத்திலும் நித்திரையில்லாமல் துக்
கித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீராமபத்திரர்சமீ
பமாய்வந்து தென்கடலைக்கண்டார்.— மாய
னென்னுந் திருநாமத்தையுடைய லோகாராட்
டியன் அநேககாலமாய்த்திருக்கண்வளர்ந்தரு
ளாமல் தன் சயனஸ்தானத்தைவிட்டுப்போய்
வெகுதூரந்திரிந்து இப்பொழுதுமீண்டுவந்
தானைகயால் இனிப் பழையபடியே பள்ளி
கொள்வானென்று நினைத்து வெண்மையாகிய
புஷ்பத்தைச் சிந்துவதுபோல நுரையையும்
முத்துகளையும் சிந்தி, நெடிதாகிய பாயலைச்
சுருட்டிஉதறி மறுபடியும் விரிப்பதுபோல
அந்தக்கடலலைகள் தென்றிசையிலிருந்து வரு
கின்ற மந்தமாருதத்தினால் மோதப்பட்டு எழு
ம்பிச்சுருண்டுவிழுந்து எங்கும்பரவிப்பாயத்
தலைப்பட்டதுகள். பெருகிவழிகின்ற கண்ணீ
ராகியகடலின்நடுவில்நின்று சீதாபிராட்டியார்
விசனப்பட்டுக்கொண்டிருக்கின்றதனால் தமக்
குவந்தபழிக்கும், மன்மதனுடையபஞ்சபாண
த்திற்கும் இலக்காயிருக்கின்ற ரகுநாயகருடை
ய அழகிய திருத்தோள்களைச் சமுத்திரங்கொ
ழிக்கின்ற அலைகளிலிருந்து தென்றற்காற்று
னது, கிரகித்துக்கொண்டுவந்து தூவுகின்ற
சிறியநீர்த்துளிகள் கருமானுடைய உலைக்க
ளத்தில் துள்ளியெழுகின்ற நெருப்புப்பொறி
களைப்போல என்னகாரணத்தினாலோ? சுறுக்
கிடும்படிச்சுடத்தலைப்பட்டதுகள். ஜானகியா
கியபிராணநாயகியைப்பிரிந்த வியாகுலத்தால்
நேற்றுக்கண்டதிருமேனி இன்று கண்டவர்க
ளுடைய கண்களுக்கு நிறம் வேறுபட்டு
அடையாளம் தெரியக்கூடாமல், இந்தப்
படி நாளுக்குநாள் இளைத்துக் காணத்தக்க
தாக உயிர்நிலை தளர்கின்ற ஸ்ரீராமனாகிய மரு
மகனைக்கண்டும் வாவென்றழையாமல், ஐயா
உன்னுடைச்குரிய நாயகியைப்பறிகொடுத்தை
யா? உனக்கும்ஆபத்துவந்ததா? என்று மேல்
விழுந்து அழாமல், தன்மகளாகிய சீதையை
ராவணன் கொண்டுபோனதைக்குறித்துத்தன
க்குச்சம்பவித்த சோகத்தினால் மெய்மறந்து,
என்றும் வராத இந்தச்செல்வமருமகன் மாமி
யார்வீடுதேடி அபூர்வமாகவந்ததையும் நினை
யாமல், தன்னுடன்கூடத் துணையாயழுகின்
றவர்களுமில்லாமல் ஒற்றைக்குரலாய்த் தனி
யேகதறிக்கொண்டிருக்கின்ற கடலினுடைய
அலையாகியகைகளின்மேல், தவழ்ந்துவிளையா
டுகின்ற இளந்தென்றலாகிய அதன்பிள்ளை
யானது இளங்கன்று பயமறியாதென்றபடி
யே சமயமும்பாராமல், அந்தக் கடற்கரையி
லிருக்கின்ற புன்னைப்புஷ்பத்தின் மகரந்தப்
பொடியாகிய சந்தப்பொடியை வாரிக்கொ

ண்டுவந்து அடிக்கடி ஸ்ரீராகவனாகிய தன்
அக்காள்புருஷின்மேலிறைத்து, மைத்துனன்
முறைகொண்டாடத் தலைப்பட்டது. கட
லினிடத்தில் பவளக்கொடிகள் படர்ந்திருப்
பது எப்படியிருக்கிற தென்றால், தம்மு
டைய திருத்தோள்களுக்கு முன்பு ஒப்பா
காத மேருமுதலாகிய பலமலைகளும் சிறிது
ஒப்பாகும்படி, மிகவும் மெலிவுகூர்ந் திருக்
கின்ற சக்கரவர்த்தி திருமகனுக்கு எதிரே
ஏழுலோகத்தாரும் சிரசின்மேல்கொள்ளத்த
க்க கற்புக்கிருப்பிடமாகிய சீதாதேவியின்திரு
வாயைப்போல, ஒப்பற்றதுகளாய்த் தோன்றி
அவருடைய பிராணனை வாட்டுகின்றதுகளா
கையால்இதுகள் ஜீவகோடிகளை இம்சிக்கின்ற
எமன் தானோவென்று அவர் பயப்படும்படி
யிருக்கின்றதுகள். அந்தக் கடலானது என்
மகளாகிய சீதையானவள் ஒழியாத துன்பத்
தை அநுபவித்துக்கொண்டு லங்கையிலே
தனியே தவஞ் செய்கின்றது, அவளுடைய
பர்த்தாவாகிய உம்முடைய கௌரவத்திற்குத்
தகுதியா யிருக்கின்றதோவென்று கண்ணீர்
ததும்புவதுபோல முத்துகளைச்சிந்தி, கை
யைவிரித்து மார்பிலடித்துக்கொண்டு சுவாமி
திருவடியில்விழுந்து முறையிடுகின்றதேயல்,
அலைகளெழுந்து மடங்கி விழும்படி இரை
யத்தொடங்கியது. மற்றும் ஆதிசேஷனுடை
ய முடியின் மேற்கிடக்கின்ற பூமியே அம்
மிக்கல்லாக மேலே எழும்பிச் சிதறுகின்றதி
று துளிகளேதெளிநீராக, புனிதமாகிய நீர்க்
குழலியைச் சுழற்றிச்சுழற்றி வெளுத்ததுரை
யாகிய சந்தனத்தை ஸ்ரீராமச்சந்திரனுடைய
விரகாக்கினியால் வெதும்புகின்ற திருமேனி
யில், அந்தவெப்பந் தணியத்தக்கதாக அள்
ளிப்பூசும்படி அக்கடலானது அலையாகிய
கையினால் அரைப்பதும்போலவு மிருந்தது.
மேலும் குயிலையொத்த பிராட்டியாரு
டைய அபராதத்தைநீக்கித் தேவர்களுக்குச்
சம்பவித்த குறையை முடிக்கும்படிக் கையி
லே கோதண்டத்தையேந்தி, முதுகின்புறத்
தில் அம்புப்புட்டிலைத்தாங்கி அதிககோபத்
துடனே சத்துருக்கள்மேல் யுத்தத்திற்காக
வந்திருக்கின்ற கங்கைநாட்டையுடைய தசரத
குமாரனைப்பார்த்துமனதுகளிக்கும்படி அலை
களாகிய கைகளைத்தலையின்மேல் எடுத்துக்
கொண்டு எதிரே ஓடிவந்து ஆர்ப்பரிக்கிறது
போலவுமிருந்தது. இவ்விதமாகிய சிறப்பி
னையுடைய தென்சமுத்திரத்தின் கரையில்
ரகுகுலோத்தமர்வந்துசேர்ந்து அந்தக்கடலு
க்கும் எழுபங்கு அதிகமாக அபிமானமும்
துக்கமும் ஆசையும் உதிக்கும்படி இனிமேல்

என்ன விளையுமோ வென்று எண்ணமிட்டுக்
கொண்டிருந்தார். இவரிப்படியிருக்க, பின்
புலங்காபட்டணத்தில் நடந்த காரியங்களையும்
நிகழ்ந்தபொருள்களையும் குறித்துச் சொல்லு
கின்றோம்.

கடல்காண்படலம்-முற்றிற்று.

## மந்திரபடலம்.

ஆஞ்சனேயரால் கொளுத்தப்பட்டு எரி
ந்து நீறாய்ப்போன லங்காபுரியைப் பிரம
தேவர்வந்திருந்து தெய்வத்தச்சனாகிய மயன்
என்பவனை அழைப்பித்து, ஆக்கியாபித்துக்
கொண்டு அவன் சுவர்க்கமுதலாகிய மூன்று
உலகத்திலும் விசேஷமாகிய அழகுண்டாகத்
தக்கதாக இந்திரன் - குபேரன் - முதலாகிய
தேவர்களெல்லாம் இது அமராபதியோ? அள
காபுரியோ? தேஜோபதியோ? வென்று சந்தே
கமுற்றுப்பிரமிக்கும்படி ஒருக்ஷணப்பொழு
தில் நிர்மிதப்பண்ணினான். சகலலோகசிரு
ஷ்டிகர்த்தாவாகிய அந்தப்பிரமதேவரோ இப்
படிச் செய்யவேணு மென்று அதன் அங்கங்
களையெல்லாங் குறித்துக்காட்ட அவருடைய
நோக்கத்தின் படியே, அந்த மயனானவன்
சிருஷ்டித்தா னாகையால் பழிப்பில்லாத உல
கங்களை யெல்லாம் பலகால் அழித்தழித்துச்
செய்கின்றவனுக்குச் செய்தற்கு அரிதாகிய
தும் ஒன்றுண்டோ? அப்படி ஆயிரத்தெட்டு
மாற்றையுடைய ஜாம்பூநதமென்னும் பொன்
னினாலும் கோமேதகம்- பவளம்-புஷ்பராகம்
மரகதம்- மாணிக்கம்- முத்து- வச்சிரம்-வைடூ
ரிய மென்கின்ற நவரத்னங்களாலும் நூதன
மாய் மகா விநோத விசித்திரமாகச் செய்யப்
பட்ட திவ்விய சுந்தரத்தையுடைய லங்காபட்
டணத்தை, ராவணேஸ்வரன் வந்து பார்த்து
உடனே தேவலோகத்தையும் அதனோடு ஒப்
பிட்டுப் பார்த்து இந்த நகரம் முன்னிலும்
அதிக அழகையும் - அற்புதத்தையும் உடைய
தாயிருக்கின்றதென்று நினைத்து அதற்குமுன்
லங்கை அழிந்துபோய்விட்ட தென்று தான்
கொண்டகோபமாறிமிகவுஞ் சந்தோஷப்பட்
டான். பட்டணமுழுதும் செவ்வையாகப்
பார்த்துச்சந்தோஷித்த தசக்கிரீவன் பிதாமக
னாகிய அந்தப் பிரமதேவருக்குக் கிரமமாகப்
பூஜார்ச்சனை செய்து, மயனுக்கும் மகிழ்ச்சி
யுடனே அருமையாகிய நானாவித வஸ்துக்
களையும் அபிமானம் வைத்து வெகுமானங்
கொடுத்தனுப்பினான். பின்புசெழுமையாய்ப்
பிரகாசிக்கின்ற மாணிக்கத்தினாற் செய்த பத்
துலக்ஷந் தூணிறுத்தி அதிக சிங்காரமாகக்
கட்டப்பட்ட மகாமண்டபத்தில், சிங்கங்கள்
சுமக்கின்ற உன்னதமாகிய ஆசனத்தில் பிரதா
பலங்கேஸ்வரனானவன் போய், சிநேகிதர்க
ளாகிய சுற்றத்தாரும்- பூரணமாகிய மந்திரித்
துவத்தையுடைய வயோதிக பிரதானிமார்க
ளும்- சேனாபதிகளும் புடைசூழத் தன்மார்
பிலணிந்த மணிமாலை மலர்மாலை முதலானது
களும் அசையத் தேவஸ்திரீகள் சாமரம்வீச
ம்படி வீற்றிருந்தான். அப்போது ஆலோ
சனை செய்யவேணுமென்று கருதி அங்குள்ள
முனிவர்களையும் தேவர்களையும் ஸ்திரீகளையும்
பாலியர்களையும் மற்றுமுள்ள அந்நியர்களை
யும் அப்பாற்போகச்சொல்லி, சகலசாஸ்திர
பண்டிதர்களையும் நெடுங்காலமாகத் தன்னு
டன் பழகியிருக்கின்றவர்களையும் விர்த்தர்க
ளையும் குணசாலிகளையும் மந்திரிசிரேஷ்டர்
களையும், வரவழைக்கச்சொல்லி ஆக்கியாபித்
துத் தன்னருகில் வைத்துக்கொண்டு இதரமா
னவர்கள் நிறைந்து அமைந்த நல்ல கேள்வி
யை உடையவர்களா யிருந்தாலும், சிநேகரா
யிருந்தாலும் பந்துக்களாயிருந்தாலும், புத்
திரர்களுக்கும் தம்பிமார்களுக்கும் சமான
மானவர்களா யிருந்தாலும் அவர்களையெல்
லாம் வரவொட்டாமல் தடுத்து, வண்டுகள் கா
ற்றுகள் முதலானதுகளும் உள்ளே நுழை
யாமல் விலக்கிவிடும்படி உத்தரவுசெய்து திக்
குகள்தோறும் காவற்காரரை வைத்தான். அந்
தக் காவல்வீரரைக்குறித்து வேறென்ன சொ
ல்லுகிறது உலகமெல்லாம் ஒருமிக்கக் கூடி
எதிர்த்தாலும் உள்ளங்கைக்குள்ளிட்டு மூட்டு
ப்பூச்சிகளைப்போல, நசுக்கிப்பிசைந்தெறியத்
தக்க பலசாலிகளாயிருக்கின்றவர்களாகையால்
அவர்கள் காவலில் பறக்கின்ற பட்சிகளும்-
எங்கும் ஓடித்திரிகின்ற மிருகங்களும் - மற்ற
ஜெந்துக்களும் சப்திக்கிறதற்கும் பலதிசை
களிலும் சஞ்சரிக்கிறதற்கும் அஞ்சி வாயைத்
திறவாமல், அதனதுகள் இருந்தவிடத்தில் இரு
ந்தவிடத்தில்தானே அசைவற்ற சித்திரம்போ
ல ஸ்தம்பித்திருந்து விட்டதுகள். செவிகளி
லணிந்த மாணிக்க குண்டலங்களும் - தோள்
களிலணிந்த நவரத்னவாகுவலயங்களும் - மார்
பிற் பூண்ட முத்துமணித் தாழ்வடங்களும்
முன்கையில் தரித்த மரகதகடகங்களும் ஜாஜ்
வல்யமாய்ப் பிரகாசிக்கவும், சிரசில்கவித்ததச
சிரகிரீடங்கள் இருளைக்கோபித்துத் தூரத்த
வும் அப்படிப்பட்ட மகாசபைநடுவில் வீற்
றிருந்த ராவணேஸ்வரன், தான் நினைத்த நினை
வை வெளியிடும்பொருட்டுத் தனக்குச் சமீப

த்திலிருந்த மந்திரத்தலைவர்கள் முகத்தைப்
பார்த்துச் சொல்லுகின்றான். ஒரு குரங்கினா
லே என்னுடைய அழியாத பெரியலங்காபட்
டணம் அழிந்துபோயிற்று. இதைப்பார்க்கி
லும் இனிமேலும் வரத்தக்க மானத்தாழ்வு
என்ன இருக்கின்றது, என்னுடைய பராக்
கிரமமும் குறையாத சம்பத்தும் ராஜரீகமும்
அழகாயிருக்கின்றன என்றுசொல்லி, மற்றும்
அந்தச் சிறுகுரங்கு சுட்டுச் சூறைபாடும்படி
நம்முடைய நகரமானது சமூலமும் வெந்து
பொடியாய் விட்டது. பந்து ஜனங்களும்
சிநேகர்களும் மடிந்தார்கள். எங்கும் மிகுதி
யாகிய உபத்திரவமுண்டாயிற்று இப்படிப்ப
ட்ட அவமானத்தைக் கண்டும் இந்தச் சிங்காச
னத்தில் என்சரீரம் சாவாமல் ஜீவித்திருக்கின்
றது. லங்கையின் கிணறுகள் குரவுகளிலெல்லா
ம் இன்னமும் உஷ்ணமாறாச் சுரந்தபடியிருக்
கிறது ஊருக்குள் குரங்கு இட்ட தீ ஆறவேயில்
லை. ஸ்திரீகளின் தலைமயிரெல்லாம் அகிற்புகை
மணக்கின்றது மாறிச் சுடுநாற்றம் நாறிக்
கொண்டிருக்கின்றது. நாமெல்லாம் அந்தச்
சுடுநாற்றத்தைத் தானே அநுபவித்துக் கொ
ண்டிருக்கிறோம். நல்லது பின்னையொன்று
மில்லாமற்போனாலும் இப்படிச்சண்டைசெய்
து வீண்பிரமாதத்தை விளைத்துப்போனகுர
ங்கு மாண்டுபோய்விட்டதென்கின்ற சொல்
லாவது நமக்குக்கிடைக்கலாகாதா, அதுவுமில்
லையாகையால் நாமெல்லாம் பிறந்தும் பிறவா
தவர்களானோமென் பதைப் பெற்றோமேயல்
லாமல் நமதெண்ணத்தின்படி முடித்தோமா,
இனிநமக்கென்னபெருமையிருக்கின்றது அப
கீர்த்திக்காளானோமென்று இவ்விதமாக ராவ
ணன் சொல்ல, உக்ரமாகியகோபத்தையுடைய
சேனாபதியான பிரகஸ்தனெழுந்து நமஸ்
கரித்துச்சுவாமி! அடியேனொருவிண்ணப்பஞ்
செய்கிறேன் அதைத்தாங்கள் கேட்டருளவே
ணுமென்று நின்றபடியே சொல்லுகின்றான்.
ராமலக்ஷ்மணர்களாகிய மனிதர்களை வஞ்சித்
து அவர்களுடைய ஸ்திரீயை எடுத்துக்கொ
ண்டுவருகிறது பயந்தவர்கள் செய்கிறகாரிய
மென்று நான்முன்னமேதானே அறிவித்தே
ன். சகலத்தையும் அறியத்தக்க புத்திகோசர
த்தையுடையநீர் அது அற்பமாகிய செய்கை
யென்று எனக்குத்தோற்றிச் சொன்னதாக
நினையாமற்போனீர், அவர்கள் கரதூஷணாதி
யவர்களைக்கொன்றவர்கள். மேலும் உம்மு
டைய தங்கையாருடைய மூக்கையறுத்த வீ
ரர்கள். ஒரு குரங்கைத்தூதனுப்பி அக்ஷகுமா
தலானவனையும் மாய்த்தவர்கள் அவ்வன்
பத்தை விளைவித்தவர்கள். அப்படிப்பட்ட
சத்துருக்களை அப்பொழுதே கொல்லாமல்
விட்டுவிட்டு. இப்பொழுது அரசாட்சியழிந்த
தென்று விசனப்படுகிறீர்- சாம-தான-பேத-
தண்டமென்கின்ற நால்வகைஉபாயத்தில் ஒன்
றாகிய, தண்டமென்றுசொல்லப்பட்ட போர்
செய்துவெல்லுதற்கு உரியவர்களைக் கண்ணி
லேகண்டும், அதுசாத்தியமான காரியமாயிரு
ந்தும் ராஜரிகஞ் செய்கிறவர்கள் அப்படிச்
செய்யாமற் பொறுத்துக்கொண் டிருப்பார்
களோ, பகைவர்களுடைய மதத்தையடக்கி
அரசாளத்தக்க ஆண்மையையுடைய நாம்
இனியவர்களை வணங்கியா பிழைக்கப்போகி
றோம். இதுவல்லாமலும் நீர்உம்மோடெதிர்த்
ததேவர்கள் அசுரர்களனைவரையும் விஜயம்
புஜபலம் வீரம் தீரமற்று ஓடிஒளிக்கும்படி
ஒடுக்கி, திரிலோகாதிபதியாய்ராஜ்யபாரம்பண்
ணிக்கொண்டுவந்தது உம்முடைய வீரத்தினா
லேயோ, அல்லது பொறுமையினாலேயோ
சொல்லுமையா- சத்துருக்கள் பிராணநாசமா
ம்படி அவர்களை அதம்பண்ணாமல் இந்தலங்
கையிலே சௌக்கியமநுபவித்துக் கொண்டி
ருப்போமானால் அந்தக்குரங்கின் மட்டிலே
தானேபோமா, இனியொரு கொசுவந்து
உபத்திரவஞ் செய்தாலும் விலக்கக்கூடுமோ,
இந்தவூரைச் சுட்டெரித்துப்போன குரங்கை
ப்பின்தொடர்ந்துபோய் அதையும் அக்குரங்
கை இவ்விடத்திற்கு அனுப்பியமனிதர்களையு
ங் கொன்று, பழியைத்தீர்த்துக்கொள்ளாமலு
மிருக்கிறோம். சும்மாவாயினாலே பலகாலு
ஞ்சொல்லிக்கொண்டும், மனதினாலேநினைத்து
க்கொண்டு மிருந்தோமேயாகில் நம்முடைய
ஆண்மைக்கு எந்தவிதத்திலும் குறைவுவரு
மென்றுசொன்னான். அவ்வண்ணமாகப் பிர
கஸ்தன் சொன்னவுடனே அவனுக்குப்பின்
மகோதரனென்னும் பெயரினையும் மலைபோ
லும் நெடியதோளினையுமுடைய முதல்மந்தி
ரியானவன், கண்கள்கொதித்தெரியும்படித்தி
சைமுழுதும்பார்த்து ராவணனைநோக்கி ஐயா,
சேனாபதி சொன்னதுகளெல்லாம் சரிதான்
ஆயினும் நான் சொல்லுகின்றதையுங் கேளு
மென்று சொல்லத்தொடங்கினான். தேவரீரு
டைய வீரசௌரியங்களுக்கும் ஆக்கினைக்கு
ம்பயந்து தேவர்களொடுங்கிப்போனார்கள்.
சித்தர்களும் திசைதிசையாய்ச் சிதறினார்கள்.
அசுரர்களும் செருக்கழிந்தார்கள். யாவருந்
தங்களுக்கு இறைவர்களென்று வணங்குகின்
ற பிரமருத்திராதியர்களாகிய திரிமூர்த்திக
ளும் ஒதுங்கிக்கிடக்கிறார்கள். இன்னம் வே
றுவல்ல விசேஷித்துச்சொல்லத்தக்கது சகல
ருடைய பிராணனையும் வாங்குகின்ற மகாபல

த்தையுடைய எமனும் உம்மைத்தன்னுடைய
பிராணனைவாங்குகின்ற எமனென்று நினைத்து
உம்முடைய ஆக்கினையைச் சிரசாகவகித்து
நீரிட்டவேலைச் செய்துகொண்டிருக்கிறான்.
ரிஷபவாகனரோடுங்கூடியருத்திரமூர்த்தியுடனே
கூட அவருடைய வெள்ளியங்கிரியையும் அடி
யோடே அள்ளி அண்டத்தைமுட்ட அங்கை
யாலெடுத்து, அட்டகாசஞ்செய்த அதிபராக்
கிரமத்தையுடைய நீர் சுள்ளியாகிய சிறுகொ
ம்புகளில் தங்கித்திரிகின்ற ஒரு குரங்கினுடை
யதோள்வலியை விசேஷித்துச்சொல்லி, அதற்
கு உம்முடைய புஜபலத்தை இளைத்ததாக
எங்களுடனே இகழ்ந்துபேசுகின்றீர். பூலோ
கத்திலும் சுவர்க்கலோகத்திலும் பாதாளலோ
கத்திலும் சகலமான இடங்களிலும் உம்மு
டையதிருஷ்டிக்குத்தட்டுப்படாதவர்கள் ஆரி
ருக்கின்றார்கள். ஆயினும் நீர் கண்டவர்களு
க்குள்ளே யுத்தஞ்செய்து உம்மாலே ஜெயி
க்கப்படாத சூரர்கள்தான் எவர்களுண்டு?
ஒருவருமில்லையே! இப்படியிருக்க அந்தச்
சொற்பமானவர்களைக்குறித்து இவ்வளவாக
ஆலோசிக்கவேணுமா? இனி நீர் இப்படிக்
கொல்லாத் துக்காக்கிராந்தராய்ப்பேசவேண்டா
ம் நானும் தடைசொல்லுகிறதில்லை இப்பொ
ழுது எனக்குச் செலவுகொடுத்து என்னை
யனுப்பினீரேயாமாகில், இந்தக்ஷணமே அந்
தக்குரங்கின்குலத்தை நிர்மூலஞ்செய்துஒடுங்
காத வலிமையையுடைய அம்மனிதர்களின்
உயிரையுமுண்டு உம்முடையபகையைநானே
முடித்துவிடுவேனென்றுசொன்னான். இந்தச்
சொல்லை அவன்சொல்லி முடிப்பதற்குமுன்
வஜ்ரதந்தனென்பவன் தன்பற்களைக் கடி
த்துரத்தத்தைப் பொழிவதுபோலக் கண்கள்
சிவக்கச்சொல்லுகின்றான். திரிலோகபயங்கர
னே நீபோய்மனிதரையும் குரங்கையும் தரை
யிலிட்டுக் கைகளால் தேய்த்துத் தின்றுவி
ட்டுவாவென்று என்னையேவி, நீர் இவ்விடத்
தில்தானே யிராமல் வெகுதூரம்ஆலோசித்
து ஆராய்கின்றதென்ன என்னிடத்தில் ஏதா
வது உமக்குச்சந்தேகமுண்டா? முன்பு எந்த
உலகத்திலும் உம்முடைய ஏவலைக் கேளாத
சத்துருக்களைக்கருவறுத்து, சகலரையும் உம
க்கு அடிமையாகும்படிசெய்த நான் எவ்வி
டத்திலேயோ எதுவோ ஒருகாரியத்திலே தவ
றிப்போனதாக நினைத்தோ இந்தக்காரியத்
தை பென்னைமுடிக்கச்சொல்லி எனக்கு உத்
தரவுசெய்யாமலிருக்கிறீரென்றான். அவ்வாறு
சொன்ன வஜ்ரதந்தனை நீயதற்குத்தக்கவனல்
ல நில்லென்று விலக்கித் துன்முகனென்
பவன் எழுந்து ராவணேஸ்வரனைப் பார்த்
து, நீரிதுகளை எம்முன்னும் பலவீனரைப்
போலச் சொல்லுகின்றீரோவென்று கைகூ
ப்பித்தொழுது சொல்லத் தலைப்பட்டான்.
அஷ்டகஜங்களும் உம்மையெதிர்க்கத்தக்க பல
முடையதுகளல்ல தேவர்களும் பலத்தில்எளி
யவர்கள். முக்கண்படைத்த சிவனுடையகை
லாசகிரியும் பலமற்றதாயிருக்கின்றது. அது
களெல்லாம் அப்படியிருக்க இனி மனிதர்
களும் குரங்குமே பலத்தில்மிகுத்தவர்களா
னால் திரிலோககண்டகனாகிய ராவணேஸ்வர
னுக்குண்டாகிப் பலமெல்லாம் அங்கேதான்.
சிறப்பான செய்கைகள் அநேகமா யிருக்க
எப்போதும் அற்பச்செய்கையே சிறியவர்க
ளுக்கு உரியதாயிருக்கின்றது. ஆகையால் நம்
முடைய சத்துருக்கள் பலத்தையுடையவர்க
ளென்றாலும் நாம் அவர்களுக்குப் பயந்து
நம்முடைய உயிரினிடத்தி லிச்சைவைத்துக்
கொண்டுபின்னிடுகிறதா? இப்பொழுதுஆலோ
சித்த ஆலோசனை பூமியிலே சஞ்சரிக்கின்ற
மனிதர்களையும் குரங்கையும் நாம் உண்ணு
கிறதற்கு ஏற்றதாகவே யிருக்கின்றது. அப்
படியே உண்ணுகிறதற்காக நாமஞ்சுவோ
மானால் அப்புறம் ராக்ஷதர்களைப்பார்க்கிலும்
கீழ்ப்பட்டவர்க ளாயிருக்கின்றார்கள். நம்மு
டைய நகரத்தின் வாசலைக் கடந்து உள்ளே
வருவதும் - நாம் குடியிருக்கிற ஊரிலே
நெருப்பை வைப்பதும் - எதிர்த்தவர்கள்
இறக்கும்படி சண்டை செய்து போவதும்-
குரங்குக்கு எளிதாயிருக்கிறது. ராக்ஷதர்களு
க்குக் கடலை நீந்துகிறதே அரிதாயிருக்கிறது.
இந்தமட்டும்வந்து உம்முடைய அரமனையை
யும் கோட்டையையும் சம்பத்தையும் மிதமில்
லாத சேனைகளையும் உமது வீரத்தையும் அச்
சமில்லாமல் கண்ணினாற்பார்த்து, மனதினால்
மதித்துப்போய் ஆர்தான் உலகத்தில் உயிர்த
ப்பிப் பிழைத் திருக்கின்றார்கள். பொருந்
தியகாரியத்தையேநினைத்தாலும்உறுதியையே
ஆலோசித்தாலும்ஜெயிக்கத்தக்கதையே விரு
ம்பினாலும் போர்த்தொழில்செய்யத்துணிந்
தாலும், அவர்களிருக்கு மிடத்திற்போயல்
லவோ ஆகவேண்டியது. ஆகையால் அவ்விட
த்திற்போய் அவர்கள் நிர்மூலமாகும்படிக்
கொல்வதேகாரியமென்று தெரியச்சொன்னா
ன். அந்தத் துன்முகனை லங்காதிபதியின்
கண்ணுக்கெதிரே கையமர்த்தி மகாபாரிச
னென்ற பராக்கிரமத்தையுடைய மந்திரியா
னவன்சொல்லுகின்றான். கோபமும் சாமர்த்
தியமும் குரங்குக்கேயல்லாமல் இனி நமக்
கென்னயிருக்கின்றது முன்னே அந்தக்குரங்
குடனே பலமில்லாதவர்கள் சிலப்பர் யுத்தஞ்

செய்துமடிந்து போனார்களே அவர்களுடனே நம்முடைய புஜபலமெல்லாம் போய்விட்டதா? அல்லது குரங்குவந்து இட்டநெருப்பினால்வெந்துபோன லங்கையுடனேகூட ராக்ஷதர்களுடைய ஆண்மையும் வெந்து தான் போயிற்று! மனிதர்கள் சுயேச்சையாய் எவுவதும் குரங்குவந்து இந்தவூரைக் கொளுத்துவதும் ராக்ஷதசேனையை மடிப்பதும்! அதினிமித்தம் மற்றவர்களெல்லாம் விசனப்பட்டுக் கூட்டங்கூடி ஆலோசிப்பதுமானால் அப்பால்நடக்கவேண்டியதைக்குறித்துச் சொல்லவேணுமா? இப்படிக்கெல்லாம் இருந்திருந்து இதுகளைஒருவரோடொருவர் ஆலோசனைபண்ணவும் வாயினாற்சொல்லவும் எனக்குச்சம்மதியாயிருக்கவில்லை. அந்தமனிதர்களையும் குரங்கையும் கொன்று தின்றாலொழிய ஒரு எண்ணமுங் கைகூடிவரமாட்டாதென்று சண்டைசெய்யவே எத்தனப்பட்டு அதிக கோபமாய்ச் சொன்னான். அவனுக்குப்பின்பு பிசாசனென்று பெயர்பெற்றவன் நம்முடைய ராஜாசெய்கின்றதைப் பார்த்தால் வீணாயோசிக்கிறதும், சரீரம் குன்றுகிறதுமாயிருக்கிற காரியமேயல்லாமல் ஒன்றும்சாரமில்லாத படியினாலே நாமெல்லாம் பட்டணத்தைவிட்டுப் பலதிசையிலும்போய், நம்முடைய வாழ்வையொழித்துவிட வேண்டியதாயே நேர்ந்ததென்று நெருப்பைப்போலப் பொங்கிச்சொன்னான். அவன்சொன்னவுடனே சூரியசத்துருவென்பவன் நம்முடைய ராஜாவின்குணமோ இப்படியிருக்கின்றது. இவருடைய ஆலோசனையும் ஒருவிதமாயிருக்கின்றது. ஆகையால் காணுமிடத்தில் மனிதர்களேபெரியவர்களும் நாம் சிறியவர்களுமாய்விட்டோம். இனி வேறென்ன இருக்கின்றதென்று சொன்னான். அப்புறம் யாகசத்துருவென்கின்றவன். ராக்ஷதர்கள் யுத்தஞ்செய்வதிலும் பலத்திலுந்தாழ்ந்தவர்களா? இது ஒருவராலேசொல்லத்தக்கதா? மனிதர்களைக்குறித்துச் சகலருங்கூடியிருந்து மந்திராலோசனைசெய்கிறமட்டும் வந்துவிட்டதே ஆ! நன்றாயிருக்கின்றதென்றுசொன்னான். பின்பு தூமாக்ஷன் குரங்கின் கூட்டத்தையுடைய மனிதர்களை நாங்களொருபொருளாகச் சொல்லமாட்டோம். மேலும் சூலப்படையையுடைய ருத்திரனைக்குறித்துச்சொன்னாலும் லக்ஷியஞ்செய்யமாட்டோம் எப்படியாயினும் அவர்களைக்கொல்லுகிறதே யுக்தமென்று சொன்னான். அவனுக்குப்பின் மற்றமந்திரிமார்களும் இதுவேயுக்தமென்று பற்றியிருக்கின்ற சர்ப்பங்களைப்போல மனம்புழுங்கிஅவரவர்களிருந்தவிடத்திலிருந்து சொன்னார்கள். இந்தப்பிரகாரம் அதிகோபாவேச முடையவர்களாய்ச்சொன்ன மந்திரிமார்களையெல்லாம் நீங்கள்காரியாகாரியந்தெரியாமற்பேசுகின்றீர்கள் சும்மாஇருங்களென்று தடுத்து, தன்தமயனாகியதசக்கிரீவனைப்பார்த்து நான் இதமானசில வார்த்தைகளைச்சொல்லுகிறேன் கேளுமண்ணாவென்று, அவனுடைய நேரிளையதம்பியாகிய கும்பகர்ண னென்பவன் சொல்லத்தொடங்கினான்.—ஐயா! நீர் சிரேஷ்டமாகிய பிர்மகுலத்திலே உற்பவித்தீர் சகஸ்திரவேதங்களையும் ஓதி அதுகளின் அர்த்தங்களையந்தெளிந்து ஞானோத்கிருஷ்டராயிருக்கின்றீர் இப்படிப்பட்டநீர் பாபகிர்த்தியத்தை விரும்பிச்செய்ய ஏற்பட்டீர் சித்திரவிசித்திரமாயிருக்கின்ற மகாபட்டணத்தை அக்கினிதத்தமாம்படிசெய்தீர். என்னுடையராஜரிகம் அழிந்துபோய்விட்டதென்று வருத்தப்படுகின்றீர் ராஜதர்மந்தப்பி அந்நியகுலத்தானொருவனுடையபெண்சாதியை இச்சித்து எடுத்துவந்து சிறைவைத்தீர். ஆதலால் நீர்இந்தப் பாபகர்மமொன்றுமாத்திரமா சூழப்பெற்றீர். மேலும் கொடியபாபாத்மாக்கள் அடையத்தக்கமகத்தாகியபழியையும்அடையப்பெற்றீர். இதைப் பார்க்கிலும் அதிகமாகிய பழிவேறொன்றுண்டா! இப்பொழுது நகரமானது அழிந்து போய்விட்டதென்று வெட்கப்படுகிறீர் உம்முடைய பிராணனுக்குச் சமானமாகிய தேவிமார்களெல்லாம் உம்மைக்குறித்து அடிக்கடிச் சிரிக்கும்படி, ஒருவன் பெண்சாதியாயிருக்கின்றவளுடைய காலிலே நீர்போய் விழுந்து விழுந்துவணங்க அவள்வைது மறுக்கும்படியாயிருக்கின்றதே இதைப்பற்றி நாணமில்லையா? இதுவென்ன கீர்த்தியா? என்றைக்கு ஒருவனுடைய மனையிடத்திலிருந்த பதிவிரதையைக்கொண்டுவந்து இரங்காத கடினசித்தமும் அதற்குத்தக்ககடினச்செய்கையுமுடையவனாய் முறையழிந்து சிறைவைத்தையோ, அன்றைக்கே ராக்ஷதர்களுடைய பெருமைகுலைந்து போயிற்று. அபகீர்த்தியை யுடையவர்களும் புகழைப்பெறுவதுண்டா, குற்றமற்ற பரதாரத்தையெடுத்துவந்து சிறைவைத்தநீர் தோஷமில்லாத கீர்த்தியைஇச்சிக்கின்றீர். வாய்மாத்திரம்டம்பமாய் வீரம்பேசுகின்றது. மனிதனென்பதைக்குறித்து அபிமானமும்வாதிக்கின்றது ஆகையால் நம்முடையபிரதாபம் தன்றாயிருக்கின்றது. உயர்ந்தவர்கள்செய்வதற்குரியநல்லசெய்கையைச்செய்யவில்லை. நம்முடையராக்ஷத குலத்துக்கேற்ற துஷ்கிர்த்தியமே செய்தீர்இனியந்தச்சீதா பிராட்டியைவிட்டுவி

ட்டோமானாலும், நாம்பராக்கிரமத்தில் மிகவும்இளைத்தவர்களாகின்றோம். அதைவிடஅவர்கள்கையினால் மாண்டுபோனாலும் நல்லதாகும். அதுபழிப்பாகமாட்டாது. ஆரணியத்தில் தனக்கு உபபலமில்லாமல் ராமன் ஒருவனேயிருந்து வில்லைவளைத்துக் கரதூஷணதிரிசிரர்களுடையசேனைகளைநாசமாக்கி, அவர்களையுங் கொன்று வென்று களைபறித்தான். அதுவும் அவனுடைய சாமர்த்தியத்திற்குப் போதுமானதல்ல இனிநமக்கும் அந்தக்கதிதானேகப் போகின்றது அதற்குமேல் நமக்கென்னஉறுதியுண்டு? அந்தமானிடர்கள் நம்மை ஜெயிக்கத்தக்கவர்களானாலும் சாரமில்லையென்பதாக நினைத்து நாம்விலகியில்லாமல் அவர்கள்மேற் படையெடுத்துப்போய் நெருக்கி யுத்தஞ்செய்து, அவர்களைக் கொல்லாமற்போவோமானால் தேவர்கள்முதலாகிய எழுலகத்தாரும் ஒருமிக்க அந்தப் பகைவர்களுடனே கூடிக்கொள்வார்கள். அவ்விதமாக அவர்களுக்குப்படைத்துணை சேர்கிறதற்கு முன்னே ஒருநொடிப்பொழுதில் நாம் கடலைத்தாண்டிப்போய், அம்மனிதர்கள் வானரர்களெல்லாரும் வேறிடத்தில் ஓடிப்போகாதபடி வளைத்து வேருடனே மடிந்துபோகப் பஸ்மபடலஞ்செய்வதே காரியமென்று சொன்னான். அந்தவார்த்தைகேட்டு ராவணேஸ்வரன் தம்பி கும்பகர்ண நீநல்ல உபாயஞ்சொன்னாய் நானும் இப்படியே யோசித்தேன் இதைவிட்டு இனிவேறொருயோசனை செய்கிறது காரியப்பழுதாகும். இந்தநொடியிற்போய்ச்சத்துருக்களையெல்லாங்கொன்று குவித்துவிட்டுவருவோம். நம்முடைய சேனாசமுத்திரத்தை யெல்லாம் இப்பொழுதுபிரயாணப்படுத்தும்படிச் செய்யக்கடவாயென்று ஆக்கியாபித்தான். இப்படியாகப் பிரதாபலங்கேஸ்வரன் சொன்னபொழுது ஐயா! சேனைகளுடனே நீர்போயல்லவா மனிதர்களோடு எதிர்த்துச்சண்டையிட்டு அவர்களைஜெயித்து வருகிறவர். அப்படியானால் எங்களுடையவீரம் நல்லதாகுமென்று சிரித்து, ஜேஷ்டபுத்திரனாகிய இந்திரஜித்துச் சொல்லுகின்றான். உமாபதியானவர் கொடுத்தவரங்களையும் ஆயுதங்களையும் பிரமதேவன் கொடுத்த வரங்களையும் ஆயுதங்களையும் நாகபாச முதலானதுகளையும் வீணேசுமந்து கொண்டு, இங்கேயிருக்கின்ற பலபேர்களுமேசுகின்றஇழிசொல்லுக்குஇளையாமல் உழல்கின்றவனாய் நானுமொருவனிருக்கிறேனல்லவா? திரிலோகங்களும் அதுகளைச் சிருஷ்டித்து ரக்ஷித்துச் சங்கரிக்கின்றவர்களாகிய திரிமூர்த்திகளுடனே கூடிவந்து உம்மோடெதிர்த்துச் சண்டைசெய்தாலும் என்னையறுப்பும். உமக்குநான் ஜெயத்தைச்சம்பாதித்துக்கொடாமற் போவேனேயாகில் நீரென்னைப்பெற்றதுமில்லை நானுமக்குப் பிள்ளையாய்ப்பிறந்ததுமில்லை. குரங்குகளிறக்கவும் பூமிமுழுதும் என்னாலேகுறைத்துத்தள்ளப்பட்ட தலைகளால் மறைபடவும், போர்க்களமானது அதமாகவும் ராமலக்ஷ்மணர்களாகிய மானிடர்கள் மிகவும் வருத்தப்படவும் சீதையானவள் மெய்ப்பதைத்துத் துக்கப்படவும் அவ்விருவருடைய சிரசுகளையுங் கொய்து கொண்டுவருகிறேன் பாரும். இனிச்சொல்லினாலே காலத்தைக் கழிக்கவில்லை. சுருக்கத்தில்முடித்துவிடுகிறேன் குரங்குகள் மலையைப்பிளக்கும்படி விசையாயிடித்து விழுகின்ற வல்லிடியைப்போலக் கடுமைதோன்றும்படி, என்வில்லிலே பூட்டிப் பிரயோகிக்கப்படுகின்ற உக்கிரமான பாணத்திற்குப்பயந்து பல்லை இளித்துக் கொண்டு இந்த அண்டத்தைத்தாண்டியோடுவதைக்கண்டு மெய்ச்சும். ஆனைப்படையில்லாதவர்கள்- தேர்ப்படை யில்லாதவர்கள் புரவிப்படையில்லாதவர்கள் - ஆட்படையுமில்லாதவர்கள்- நம்மைப்போலவரமும்பெறுதவர்கள்-கையிலேஒருபொருளுமில்லாதவர்கள் கூனியமுதுகையுடைய அற்பமாகிய குரங்குகளைக்கூட்டிக்கொண்டு நம்மைவெல்ல நினைக்கின்றவர்களோ மானிடர்களா யிருக்கின்றார்களாகையால் நமதாண்மையானது அழகாயிருக்கின்றதல்லவா? பிருதிவி- அப்பு- தேயு - வாயு-ஆகாசமாகிய பஞ்சபூதங்களும் அப்பஞ்சபூதகாரியமாகிய உலகங்கள்யாவும் ஒருநிமிஷத்தில் நிலைகுலையும்படி மானிடர்களுக்குள்ளே ஒருவருந்தவறுமலும், குரங்குகள்முதலற்றுப்போகவும் நாசஞ்செய்யாமல் நான்மீண்டுவருவதில்லையென்றுசொல்லிப்பிதாவின் பாதத்தைவணங்கி யெழுந்து எனக்குவிடைகொடுக்கவேணுமென்ற மாத்திரத்தில், அதிககோபங்கொண்டு வாயிலுள்ள பற்களைக்கடித்து உயிரைவருத்துகின்ற சகலதீவினைகளையும் வென்ற பெரியோர்களுக்குள் விசேஷமாக மதிக்கப்படுகின்ற விபீஷணரானவர், அந்த இந்திரஜித்தைப்பார்த்துச் சொல்லுகின்றார். அப்பாசகலசாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்த அதிநுட்பமாகிய அறிவினையுடையவர்களும் மேலாகியபொருளை அறியத்தக்க பெருமையை யுடையவர்களும்போலப்பேசவந்தையே! மேல்வருங்காரியத்தைக் கண்டறியுங்கல்வியில்லாத சிறுபிள்ளையாகிய நீயா இந்தவிஷயங்களைக் குறித்துப் பேசுகின்றவன். நீபேசுகின்றது எப்படியிருக்கிறதென்றால் விவேகமில்லாதவனும் கண்

னில்லாதவனுமாகிய ஒருவன் தன்கையினுலெழுதப்பட்ட சித்திரம்போ லிருக்கின்றது. முதிர்ந்த வயதினையும் பேரறிவையுமுடையவர்கள் கூடி மந்திராலோசனைசெய்யும் இந்தக் கூட்டத்தில் நீமுன்னே சேர்ந்திருக்கலாமா? பால்யத்தினுலே அந்தக்கிரமத்தை யென்னுமலிருக்கின்றாய் நிர்மலசித்தத்தையுடைய பெரியோர்கள் எப்போதுங் கிரமமாகவே நடந்துகொள்கின்றார்கள். அவர்க ளிருக்கட்டும் பாபாத்மாக்களாகிய அசுரர்கள் முதலானவர்கள் புண்ணியாத்மாக்களாகிய தேவர்களாய்ச் சிக்ஷிக்கப்படுகின்றது தர்மத்தினுலேயோ? அல்லதுமாயையினுலேயோ? அல்லதுவஞ்சனையினுலேயோ? அல்லதுதங்களுடையபராக்கிரமத்தினுலேயோ? நீதர்மத்தைதக்கைவிட்டுத் தேவர்களை ஜெயித்த உன்னுடைய பராக்கிரமச் செய்கையை ஆலோசித்தறியுமிடத்தில் அதுவும் பூர்வம் நெறிதவறுமற்செய்த தவத்தினுலும் வரத்தைவிட்டு அந்தப்பிரமாதி தேவர்கள் கொடுத்த வரத்தினுலுமே. இன்னமும்பொல்லாதவர்க ளநேகர்கள் மும்மூர்த்திகளையும் வென்று மூன்றுலோகங்களையும் பூரணமாக அரசாண்டுகொண்டிருந்தும் கெர்வமதிகரிக்கும்படி, மரணமேமுடிவாக இறந்துபோனார்களேயல்லாமல் நியாயமாய்த்தேவர்களைவென்றவர்கள் ஆரிருக்கின்றார்கள்? முனிவர்களுக்குள்ளும் தேவர்களுக்குள்ளும் முன்னும் பின்னும் இருவினைகளையுங்கடந்து மேலாகிய மோக்ஷசாம்பிராஜ்யத்தை அடைந்தவர்க ளுத்தமர்களென்று அளவிட்டுச் சொல்லுவோம். மற்றவர்களுக்குள்ளே ஆர்தான் அப்படிச்செய்தார்கள் சிறுபிள்ளையானபடியினுலே இப்படிச் சொல்லுகிறாய்நீபுத்தியில்லாதவ னென்றுமகனை அதட்டி, தமயனுகிய ராவணனைப்பார்த்து சுவாமி! என்வார்த்தையை இகழ்ச்சிசெய்யாமற் கேட்பீரேயாகில் தெளிவான நல்லசொற்களைச் சொல்லுகிறேனென்று சொல்லத்தலைப்பட்டார். எனக்குத் தந்தையும்நீரே! தாயும்நீரே! தமயனும்நீரே! நான்பூஜிக்கின்ற சாக்ஷாதுதெய்வமும்நீரே! தவமும்நீரே! மற்றுஞ் சகலமும்நீரே! ஆகையால் உம்முடைய இந்திரயோகபோக பாக்கிய வைபவத்தை இழந்துவிடுகிறீரென்று மிகவும் மனமெலிந்தேன். அதனுல் உமக்குநான்சொல்ல வெத்தப்பட்டேன். பலநூல்களையுங் கற்றமைந்த தன்மைபென்னிடத்திலில்லாமற் போனாலும்சாத்தியமாகத் தக்கவிஷயத்தை ஆலோசியாவிட்டாலும், உபாயதந்திரங்களை நிச்சயித்துச் சொல்லாதிருந்தாலும் நீரென்சொல்முழுதுங்கேட்டபிறகு வேண்டுமானுல் என்மேற் கோபித்துக் கொள்ளும். சிலாக்கியமாகிய நம்முடையநகரமும் உம்முடைய பிரதாபமும் ஜானகியென்கின்ற லோகமாதாவினுடைய கற்பினுல் வெந்ததல்லாமல் ஒருகுரங்குசுட்டதென்று நினைக்கிறதென்னபெருமையா? யோசிக்குமிடத்தில் எவர்களுக்காகிலும் ஆபத்தும் சம்பத்தும்பெண்ணினுலும் பொன்னினுலும் மண்ணினுலுமல்லதுவேறொன்றினுல் வரத்தக்கதுகளோ? கடல்சூழ்ந்த லங்கைக்குத்தலைவன் பூர்வம் அருமையாய்ச்செய்த தபோபலமெல்லாம் ஒருமானிடஸ்திரீயினுல், அழிந்துபோமென்றுஉலகத்தார்சொல்லும் அபக்கியாதியாகியவார்த்தையானது இப்பொழுதென்னமுடியத்தக்கதா? நீர்பிரமாவைநோக்கி நெடுநாளாகத்தவஞ்செய்து அவரிடத்தில் தேவதானவர்முதலானவர்களை ஜெயிக்கும்படி வரம்பெற்றபோது மனிதனை ஜெயிக்கும்படி வரம்பெறஇல்லையே? ஆகையால் அவர்களை எந்தவிதத்தால் இனிஜெயங்கொள்வீர் வேறொருஉபபலமும்வேண்டாமல் நீர்தனியேஎதிர்த்துஎழுலகங்களையும் வெல்லத்தக்கவராயிருந்தும், மனிதர்களைமாத்திரம் வெல்லமாட்டீரென்பதற்கு ஆயிரந்தோள்களையுடைய கார்த்தவீரர்ச்சுனனுகியமனுஷனுக்கு, உம்முடையவலிதோற்றுப்போனதுவே திருஷ்டாந்தம் இதைவிடவேறு சாக்ஷியும் வேணுமா? முற்காலத்திலே வானத்தளவும்உயர்ந்தகைலாசகிரியையெடுத்ததுகண்டு சதுர்ப்புஜங்களையுடைய நந்திகேஸ்வரன் நீ குரங்குகளாலே உன்பலமழியப் படுவாயென்று சொன்னசாபத்தை வாலியினிடத்திலேபிரத்தியக்ஷமாகக்கண்டிருக்கிறீர். பூர்வம்தெய்வீகமாகிய கற்பினையுடைய வேதவல்லியென்ற ரிஷிபுத்திரியானவள் ஸ்ரீமகாவிஷ்ணுதனக்குக்கணவனுக வேணுமென்று தபசுபண்ணிக்கொண்டிருக்குமளவில், அவளைநீர் கற்பழிக்க எற்பட்டபோது அவள்வாயினுற் கொடுத்தசாபத்தை நாம்தடுக்கத்தக்க வல்லமையுடையவர்களாவோமா? உனக்குநானே மிர்த்துவாகிய தீராப்பிணியென்று சொல்லிவிட்டு அக்கினிப்பிரவேசமானுளே அவள்தான் இந்தச்சீதையாய்வந்து அவதரித்திருக்கின்றாள். இந்திராதிதேவர்களுக்குச் சத்துருவாயிருந்த சம்பராசுரனை ஆகாசத்தினிடத்தில் ரதத்தை நடத்திக்கொண்டுபோய் வில்லின்வலிமையால் பிரபலமாகிய யுத்தஞ்செய்து தலையறுத்து, அந்தத்தேவர்கள் பிழைக்கும்படி தேவராஜனுக்கு அரசுகொடுத்து உதவிசெய்து தர்மசக்கரமானது தானேவிடபடியே உலகத்தில் தனக்கு ஊழியஞ்செய்ய, மகத்தாகியகீர்த்தியை வகித்ததசரதமகாராஜனென்பவ னொருவனிருந்தா

ன் அந்தத் தசரதனே, தேவேந்திரன் ரிஷபமாய்ச்சமைக்க முதுகின்மேலேறி யிருந்து யானையுருவி அசுரர்களையெல்லாஞ்சங்கரித்த ஒப்பற்ற ஆண்மையையுடைய ககுஸ்தமகாராஜனும்; தன்னிடத்திலிட்டவித்துக்களையெல்லாம் முளைக்கவொட்டாமல் தனக்குள்ளேயிழுத்துக்கொண்டு மதப்பட்டிருந்த பூமியின்மேல் பாணப்பிரயோகஞ்செய்து அதன்மதத்தையடக்கி, அது பசுவுருக்கொண்டுவந்து தானியமுதலாகிய சகல பதார்த்தங்களையும் கொடுக்கும்படி முலையின்வழியே கறந்தெடுத்துக்கொள்ளச்செய்த பிருதுமகாராஜனும், சமுத்திரத்தைத்தோண்டியசகரர்களும், தபசினால்ஆகாசகெங்கையைப் பூமியிற்கொண்டுவந்த பகீரதமகாராஜனும் அவதரித்த மநுவம்சத்தில் உற்பவித்தவன் அவன் பொய்பேசிஉலகத்தைப் பகைத்தவர்களுடைய குலத்தைக்கருவறுத்துத் தர்மத்தைவிர்த்திசெய்து அந்தத்தர்மநெறியில்நின்று, தன்மனைவிக்குக் கொடுத்தவரத்தை மறுக்கமாட்டாமல் சத்தியத்தை நிலைநிறுத்துவதற்காகப் பிராணனைக் கொடுத்துத் தேவர்களும் பெறுவதற்கு அருமையாகியசாக்ஷாதுமோக்ஷத்தைப் பெற்றான். அந்தத்தசரதச்சக்ரவர்த்தியின் புத்திரர்களே இப்போது உமக்குப் பகைவர்களாய் வந்திருக்கிறார்கள். அம்மம்மா! அவர்களை எப்படிப் பட்டவர்களென்று நீர் கேட்பீரோயாகில் ராமனென்றும் லக்ஷ்மணனென்றும் பெயர் பெற்ற அந்த இருவரும் தங்களுக்கு, ஒருவரும் எதிரில்லாதவர்களா யிருக்கின்றவர்கள். முனீஸ்வரர்களும் தேவர்களும் எல்லாமறிந்த ஞானியர்களும் மற்றுமுள்ள சகல உத்தமர்களும் நினைப்பதற்கு அருமையாகிய தகைமையுடைய மகா புருஷர்கள். நாம் செய்த தீவினையால் மனிதர்களாக வடிவெடுத்து யாவர்க்கும் எளிதாக வந்திருக்கின்றார்கள் தாமரையாசனத்தை யுடைய பிரமதேவனுடனே, சகலபுவனங்களையுஞ்சிருஷ்டிசெய்கிறேனென்று பிரயத்தினப்பட்ட விஸ்வாமித்திர மகாரிஷி கொடுக்கப் பெற்றதுகளாய் இமைப்பொழுதிலே யாவரும் நாசமாம்படி, எவ்வகைப்பட்டவுலகங்களிலும் விசையாய்ச் செல்லுகின்ற அஸ்திரசஸ்திரமுதலாகிய ஆயுதங்களைக் கையிற் பிடித்திருக்கிறார்கள், பூர்வம் புஜபராக்கிரமத்தையுடைய அசுரர்களுடனே பகைத்துத் தேவர்களிளைத்தசமயத்தில் அவர்களுக்காக எடுத்து வளைத்துயுத்தஞ்செய்து ஜெயத்தைச் சம்பாதித்துக்கொடுத்த கருடவாகனரூடனாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய கைவில்லையும்- முப்புரங்களை எரித்து நீறாகும்படி கைலாசநாதன் பிரயோகித்த திவ்வியாஸ்திரத்தையும் முனிதலைவராகிய அகஸ்தியர் கொடுக்கப் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள். அவர்களிடத்திலிருக்கின்ற நாகாஸ்திரங்கள் எப்படிப் பட்டதுகளென்றால்; நாவை நீட்டி உலகங்களையெல்லாம் ஒருமிக்கவளைத்து எடுத்து விழுங்குகின்றதுகளும்- திக்குகளையெல்லாம் ஒருக்ஷணத்திலே போய்அளவிடுகின்றதுகளும்-எப்போதும் விஷாக்கினியே கக்கிக்கொண்டிருக்கின்றதுகளும்-அதியுஷ்ணமாகப் பெருமூச்செறிகின்றதுகளும் - பிரகாசத்தை வீசுகின்றசூரியபற்களை யுடையதுகளும் அவ்வீராதி வீரர்களுடைய அம்புறைதூணியாகிய புற்றினிடத்திலிருந்து சீறுகின்றதுகளும் - பூரணயௌவனத்தையுடைய பெரியோர்கள்விஷயத்தில் அபசாரப்படுகின்ற பாபாத்மாக்களுடைய உயிரையல்லது வேறொரு இரையை இச்சியாததுகளுமா யிருக்கின்றதுகள். அவர்களுடைய விற்கள் அத்தப்பிரதாபசாலிகளால்மாத்திரம் எடுப்பதற்கும் வளைப்பதற்கும் பாணப்பிரயோகஞ் செய்வதற்கும் சுலபமாயிருக்கிறதேயல்லாமல், மற்றொருவரால் அசைக்கப்படுமோ? அப்படிஅபாரமானதுகளும்நெடியதுகளுமாயிருக்கின்றதுகள். அதுகளிற்பூட்டிய நாரியும் அறுபடாததுகள். நம்முடையசொற்பமாகிய விற்களைப்போல எளிதில் ஒடிக்கப்படுமோ? அன்றியும் அதுகள் மரமோ? மூங்கிலோ? அண்டத்தை ஊடுருவி நிற்கின்ற மகாமேருவோ? சப்தகுலாசலங்களில் சம்பந்தப்பட்டதுகளோ? அல்லது இதுகளெல்லாமல்லவோ? என்னவோ தெரியாது. அவர்களுடையபாணங்களால் கடலைக்கடைந்தவாலியினுடைய மார்புருவி அவன் பராக்கிரமமடங்கியது. உலகத்தையெல்லாங் கவிந்து சூழ்ந்த மராமரங்களும் ஒடுங்கியதுகள். கரன் முதலானவர்களுடைய தலைகளும் விராதனுடைய தலையும்கண்டிக்கப்பட்டதுகள். இனி யுத்தமுண்டாகுமானால் தேவர்களுடைய விபத்துநீங்குமல்லாமல் அவர்களுக்கு அடங்காத பகையென்பது வேறொன்றுண்டோ? மகிமையையுடைய முனீஸ்வரர்கள் அவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து இணையில்லாதவர்களாகிய அந்த இருவரும், தேவர்களுடனே புவனங்களை யெல்லாம் வெல்லுவார்களென்றும், ராக்ஷதர்களுடைய குலமானது வேரற்றுப்போம்படிக் கொல்லுவார்களென்றும் நினைத்தறிந்து அவர்களை வந்து சிநேகித்திருக்கிறார்கள். உம்முடையசிறுமையேயல்லாமல் வேறுகதி யில்லாதிருக்கிற தேவர்களு

டைய மனது முன்பு ராக்ஷதர்களுடையபெய
ரைச்சொன்னாலும் நடுங்கும். இரவும்பகலும்
நித்திரைசெய்யவுமாட்டார்கள். இப்போது ஜா
னகியாகியவிஷத்தை உண்ண எத்தினப்பட்ட
வர்கள்மாண்டுபோய் நரகபிராப்தர்களாவார்க
ளென்றெண்ணிக்கொண்டு நமக்குப்பயப்படா
திருக்கிறார்கள். அடைக்கலஸ்தானத்தையறியா
திருந்ததனால் நமக்குப் பயந்துகிடந்த ரிஷிக
ளுடையமுகங்கள்பகற்கால சந்திரனைப்போல
ஒளிமழுங்கியிருந்தது போய், இப்போது சரத்
காலத்தின் இராத்திரியிலுதயமாகிய சந்திரனை
ப்போல அதிக பிரகாசத்தைக்கொண்டிருக்
கின்றதுகள். கடல்சூழ்ந்த உலகத்தைவிட்டு
அப்புறம்போய்த் தங்கள் உருவத்தைமறைத்
துக்கொண்டெங்குஞ்சஞ்சரியாமல் ஒடுங்கிப்ப
துங்கியஎமன் முதலானதேவர்களும், முனிவர்க
ளும் மற்றவர்களும்சீதையானவள் நம்முடை
யநகரத்தில் வந்திருக்கிறாளென்றுகேட்டபின்
பு பயமில்லாமல், திரும்பிவந்து தங்களுலக
மாகியசுவர்க்கமுதலானதுகளையும் அடிக்கடிப்
பார்த்துச் சந்தோஷித்துப் போகின்றார்கள்
சொல்லத்தகாத துர்ச்சகுனங்கள் எங்கும் கா
ணத் தலைப்பட்டதுகள் நம்மை வெல்லத்தக்க
சத்தியில்லாத நம்முடைய சத்துருக்களாகிய
தேவர்களும், அசுரர்களும் சண்டையிலே தோ
த்துவிட்டுவிட்டுப் போனகுதிரைகளும் யானை
களும் வலதுகாலை முன்னேயெடுத்துவைத்து.
நம்முடைய கிரகங்களுக்குள் வந்துநுழைகின்
றதுகள். ராக்ஷதர்கள்வாயிலும் பல்லிலும் நீரி
ல்லாமல் வாடுகின்றார்கள். பேய்களும் பூதங்க
ளும் நாய்களும் நரிகளும் நாடுநகரமுழு
மையும் திரிகின்றதுகள். ஸ்திரீகளுடைய
கூந்தல்களும் நம்முடைய சிகைகளும் நெரு
ப்பில்வெந்து சுடுநாற்றம் நாறுகின்றதுகள்.
இனியிதுகளைப்பார்க்கிலும் வேறு துர்நிமித்த
முமுண்டா? தேவலோகமானது அதமாகும்
படித் தேவர்களைப் போரிலே நிர்மூலஞ்செ
ய்த-கரன்- தூஷணன் திரிசிரன்-மான்வடிவெடு
த்தமாரீசன்- வாலிமுதலானவர்களுமே இவர்க
ளால்மாண்டதனால் மானை இடதுகையிலேந்
தியசிவனும் - சக்கரபாணியாகிய விஷ்ணுவும்
பிரமாவும்-மற்றத் தேவேந்திராதிதேவர்களுந்
தாம் இந்த இரண்டுமனிதர்களுக்குச்சமானமா
வார்களென்று ஆர்தான்எண்ணுவார்கள். ஐயா!
இன்னமொன்றுசொல்லுகிறேன் அதைச்சந்
தோஷமாய்க்கேளும் அந்தஇரண்டுமனிதர்க
ளையும் வானரக்கூட்டங்களையும் வந்திருக்கிற
வர்களைநம்முடையபகையாளிகளாகிய தேவர்க
ளென்று அறிந்துகொள்ளும். ஆகையால் அவர்
களுடனே பகைகொள்ளலாமென்பது செவி
கொடுத்துக் கேட்கத்தக்கதல்ல இது நமக்கு
உறுதியென்று நினைப்பதுங் காரியமல்ல கீர்
த்தியும் பாக்கியமும் குலசிரேஷ்டமுங்குறைந்
துபோக, அபகீர்த்தியும் சிறுமையும் அசிரேஷ்
டமும் பிரபலிக்கநமதுசுற்றத்துடனே நாம்ம
டிந்திடாமல் சலியாதகற்பினையுடைய சீதாபி
ராட்டியை விட்டுவிடும். இதைப்பார்க்கிலும்
வேறே ஜெயமென்பது நமக்கில்லையென்று
பிரமக்கியானிகளுக்குள் சிறந்தவிபீஷணரான
வர்சொன்னார். அந்தவசனத்தைக்கேட்டராவ
ணேஸ்வரன் கையோடுகைபறைந்து வாய்கள்
தோறுமுள்ள கோரதந்தங்கள் பிறைக்கூட்
டம்போலப் பிரகாசிக்கக் கண்களில் நெருப்
பெழ, ரத்னாரங்களும் அதுகள் ஜொலிக்கின்ற
மார்பும் தோளும் குலுங்க நகைத்துச்சொல்
லத்தொடங்கினான். இவ்விடத்திற் பேசினவர்க
ளெல்லாரைப் பார்க்கிலும் நல்ல உறுதிகளைச்
சொல்லுகிறேனென்று சொல்லிக் கேவலம்
பித்தர்கள் பேசுகிற பேச்சுகளையே நீ பேசி
னாய். என்னுடைய மகாபலத்தைத் தொச்சை
யாகிய மானிடர்கள் ஜெயங்கொள்ளுவார்க
ளென்று எனக்கு நேரிலே தானேசொன்னது
நீயவர்களுக்குப் பயப்பட்டுச் சொன்னதா?
அல்லது அவர்களிடத்தில் அன்பினாலே சொ
ன்னதா? என்னகருத்துக்கொண்டு சொன்னாய்.
மனுஷப் பசுக்களை வெல்லும்படிக்கு நான்
வரம்பெறவில்லையென்று இந்த அற்பவிஷத்
தை எனக்கொரு லக்ஷியமானதாகக் குறித்துக்
கொண்டு, என்மேற் குற்றஞ் சொல்லவந்தை
யே அஷ்டதிக்குகளையும் திரிலோகங்களையும்
அஷ்டகஜங்களையும் ஜெயித்து அந்தத் தழல்
வண்ணனாகிய சிவனைக் கைலாசபர்வதத்துட
னேஎடுத்தேனே. அப்படியெல்லாம் செய்கிற
தற்கு முன்பு நான் ஏதாவது வரம்பெற்றது
ண்டா? கொஞ்சமாவது மனதிலெண்ணிப் பா
ராமல் பயனில்லாத சொற்களைச் சொன்னாய்.
ரணகளத்தில் தேவர்கள் என்மேற் பிரயோக
ஞ்செய்த தெய்வீகமாகிய கொடிய ஆயுதங்க
ளெல்லாம்என்னை என்ன உபத்திரவஞ்செய்த
துகள் அவர்கள் தான் என்ன செய்தார்கள்.
அந்தமனிதர்கள் என்னைவெல்லுகிற தென்ப
து அப்படியிருக்கட்டும். கைகேசியென்றஒரு
தாய்வயிற்றிலே என்னுடனேகூடப் பிறந்த
உன்னைத்தான் அவர்கள் ஜெயிக்கமாட்டுவார்க
ளென்று சொல்லுகிறதற்கு இடமுண்டா?
நல்லது ஒருவன் ஏதாவது சொல்லும்பொழு
து இதுசொல்லத்தக்கது தகாதது என்று ஆய்
ந்தறிந்தல்லவோ சொல்லவேணும். அவ்வாறு
நீயோ சொல்லுஞ்சொல்லை அறிந்துசொல்ல
வேயில்லை. பலதரம் தோற்றும் ஒருதரம்வெ

ற்றிகொள்ளத்தக்க பராக்கிரமமுமுண்டு ஆனாலும் அண்டத்தைக் கவ்வியெறிகின்ற மகாபலத்தையுடைய என் பந்துஜனத்தையும், என்னையும்போர்க்களத்தில் ஜெயிக்கின்ற சத்துருக்களுண்டென்றும் நினைவு கொண்டாய். தம்பி நான் தேவர்களிடத்திற் பெற்ற வரத்தினால் மிகவுஞ்செருக்குண்டாய்ப் பேசுகிறேன் அந்த மனிதர்கள் திரிமூர்த்திகளுக்குள்ளே ரிஷபவாகனரூடனாகிய சிவனிடத்திலேயா? புவனங்களையெல்லாம் ரக்ஷிக்கின்ற மகாவிஷ்ணுவினிடத்திலேயா பிரமாவினிடத்திலேயா இவர்களல்லாமல் மற்ற யாரியத்திலேதான் வரம் பெற்றார்களென்று சொல்லுகின்றாய்? நந்தி கொடுத்த சாபத்தினால் குரங்குகள் நம்மைக் கெலிக்குமென்று சொல்வாயானால் இந்திராதி தேவர்களாலும் சித்தர்கள் யக்ஷர்கள்முதலானவர்களாலும், நமக்கு வந்திருக்கிற சாபங்கள் எண்ணத்தொலையுமா? அதுகளெல்லாஞ் செய்ததென்ன? சுரோத்திராதி இந்திரியங்களையும் சப்தாதிவிஷயங்களையும் மனாதி அந்தக்கரணங்களையும் அடக்கினவர்களாகிய எதீஸ்வரர்களிலும், ரிஷீஸ்வரர்களிலும் நமக்கு மரணம் சித்திக்கும்படிப் பிரார்த்திக்காதவர்களார் அவர்களுடைய எண்ணங்களெல்லாந்தான் நம்மை அழித்துவிட்டதென்ன? சபையிலே நடனஞ்செய்கின்ற சிவனிடத்தில் அன்புசெய்து அந்தப்பூஜாபலத்தால் எதிரியின் பலத்தில் பாதிதனக்கு வரும்படி வாலிவரம்பெற்றதை அறியாமல் நானினைத்துநிற்க, என்பலம் அவனிடத்திற் போய்ச்சேர்ந்ததனாலல்லவோ அவனுக்குத் தோற்றேன். அப்படியிருக்க மற்றக் குரங்குகளெல்லாம் என்னை ஜெயங்கொள்ளுமென்பது நீயெப்படிக்குறித்துக்கொண்டாய். நீலகண்டத்தையுடைய சங்கரனும், சக்கரதரனாகிய மாகாவிஷ்ணுவும், அந்த வாலிக்கு எதிரே நின்று போர்செய்தாலும், அவர்களுடைய மகாபலமும் அவனிடத்திற் சேர்கின்றவரத்தை அறிந்து அவனுக்குஎதிரே போவதற்கு அஞ்சி ராமனாகிய அந்த மனிதன்மறைந்திருந்து அவனை எய்தான். மிதிலையில் ஊனமாகிய வில்லையொடித்துக் கிஷ்கிந்தையில் ஓட்டையான மராமரங்களின்மேல் அம்பைச் செலுத்தி அயோத்தியில் கூனியினுடைய உபாயத்தினால் அரசாட்சியை இழந்து, ஆரணியத்திற்குவந்து நான் செய்த மாயையினால் தன்பெண்சாதியைப்பறிகொடுத்து மானமில்லாமல் இன்னமும் உயிரைச் சுமந்துகொண்டிருக்கின்ற அந்தமனிதனுடைய பலத்தை நீயல்லாமல், மதித்துச்சொல்லுகிறவர்களாரிருக்கிறார்களென்று நமது வார்த்தையை இகழ்ச்சிசெய்து உனக்குப் புத்தியில்லை நல்லது நீயெழுந்திரு அப்பாலே போவென்றுசொன்னபோது, விபீஷணர் இவன் பாழ்த்தான் போவென்று ஒழியாமல் அவனுக்குச் சமீபத்திற்போய்ச் சமீகாரவாஞ்சல்லியத்தினால், மறுபடியும் இன்னமொருவுறுதிவார்த்தை சொல்லுகிறேன் கேளுமென்று சொல்லுகின்றார். தனக்கு மேற்பட்ட பொருள் வேறொன்றில்லாமல் ஒப்பற்றிருக்கின்ற பராபரவஸ்துவாகிய ஸ்ரீமந்நாராயணனே நம்முடைய நிமித்தம் தேவர்கள்செய்த உபாயத்தினால், அந்தமானிடனாக வந்து அவதரித்திருக்கின்றான் நீரேதோஅறியாமல்இகழ்கின்றீர் அப்படிச்செய்யவேண்டாமென்று தமையன் பாதத்தைத்தொழுது இரந்துசொல்ல, அதுகேட்டுத் தசக்கிரீவன் ஆ! ஆ! அம்மனிதனை விஷ்ணுவென்று சொல்வாயானால் உன்புத்தியை யென்னவென்கிறது அற்பபுத்தியென்றல்லவோ சொல்லவேணும். ஆயினும் அந்த விஷ்ணுஎன்னுடைய யுத்தத்திலே எத்தனையோதரந் தோற்றோடினான் மேலும்என்னிஷ்டப்படிக் கெல்லாம் இத்தனைகாலமாய் நான் நடந்தேனே, மூழுமுதலாகிய அவனென்ன செத்துக்கிடந்தானோவென்று கோபித்துக்கொண்டு, பின்னும்இந்திரனைப்பிடித்துச்சிறைவைத்தகாலத்திலும் அஷ்டதிக்கஜங்களின் தந்தங்களை முறித்தகாலத்திலும் பூர்வம் தான்வந்து போர்செய்யுந்தோறும், தன்னை நான் துரத்தியடித்தகாலத்திலும் தேவர்களுடைய உலகத்தைப்பஞ்சாய்ப்பறக்க அடித்தகாலத்திலும் நீசொன்ன அந்தத்தேவன் அறியாத சிறுபிள்ளையாயிருந்தானோ? சிவனும் பிரமாவும் தேவர்களுக்குந் தெரியாத அந்தவிஷ்ணுவும் மற்றுமுள்ள இந்திரன், அக்கினி, யமன், வருணன், வாயு, முதலாகிய தேவர்களும் அடங்கியொடுங்கிக் கிடிகொள்ளும்படி, திரிலோகங்களையும் நான் ஏகாதிபத்தியமாக அரசாண்டுகொண்டிருந்தது அவனில்லாமையினாலேயோ? அல்லது அவன் பலவீனப்பட்டு ஒதுங்கிக்கிடந்ததனாலேயோ நீசொல்லுகின்ற ஆச்சரியமான சொல்லுக்கு என்னசொல்லுகிறது. ஏகமூர்த்தியாகியவிஷ்ணு தன்னுடைய ஆயிரந்தோள்களும் ஆயிரம் சிரசுகளும் பிரமாண்டத்தையெல்லாம் ஒரு உள்ளங்காலுக்குள்ளடக்கிய ஸ்தூலவடிவமும், மிகவுஞ் சிறியதுகளென்று நினைத்து நாம் தின்னுகின்ற சொற்பமாகிய மானிடவுருவமெடுத்துக்கொண்டோ, நம்மை ஜெயம்பண்ண வந்திருக்கிறான். பித்தனாகிய சிவனும், மாயனாகியவிஷ்ணுவும் என்பெயரைக்கேட்டுப்பயந்து நடுங்கித்தளர்ந்து ஒடுங்கிறபோதெல்லாம் அவர்கள் எதிரியாரிஷபத்தின் முதுகிலும்

கருடன் முதுகிலும் என்னுடைய பாணங்கள் போய் மலைகளின்மேல் விழுகின்ற இடிகளைப் போலத் தைத்துக்கொண்டு இன்னமுமிருக்கின்றதுகள். இப்படியெல்லா மிருக்க நீயென்ன பேய்ப்பேச்சுப் பேசுகின்றாய்? அவனுக்கும் எனக்கும் உள்ளபடியே யுத்தம்நேரிட்டதானால் நீபுஜபலமா யெங்களுடனே கூடப் புறப்பட்டுவந்து சண்டைசெய்ய வேண்டியதில்லை. உன்னுயிருக்கு லயமில்லா திருக்கிறதற்கு இந்த அழிவில்லாத லங்கைக்கோட்டையிருக்கிறது இதற்குள்ளேதானே சுகமாயிரு பயப்படாதே பயப்படாதேயென்று சொல்லி, பக்கத்திலிருந்தவர்களுடைய முகத்தைப் பார்த்துஆலாலமாகியவிஷத்தைப்பார்க்கிலும் அதிக உக்ரமான கோபத்தை யுடையவனாய், கை கொட்டிப் பிரளயகால இடி. யிடித்தது போல ஆர்ப்பரித்துப் பகபகவென்று சிரித்தான். பின்னும் அந்த விபீஷிணாழ்வானவர் சுக்கிரீவனை நோக்கி ஐயா! பூர்வகாலத்தில் உம்மைப்போலல்ல உம்மினும் அதிகபலமும் பிரதாபமும் படைத்தவர்கள் அநேகர், இந்த மகாபுருஷின் சங்கரிக்கும்படித் தங்கள்பந்துவர்க்கத்துடனே சமூலமாய் மாண்டுபோனார்கள். நானுமத்துச் சொல்லவேண்டுவது இன்னமொன்றுண்டு அதுஎன்னவென்றால், இரணியனென்ற அசுர ராஜனுடைய சரித்திரமாம் அதையுள்ளபடிச் சொல்லுகிறேன் கேளுமையாவென்று சொல்லத் தலைப்பட்டார்.

மந்திரபடலம் முற்றிற்று.

## இரணியவதைப்படலம்.

அந்த இரணியன் வேதத்திற் சொல்லியிருக்கின்ற தவங்களையெல்லாஞ் செய்து தன் மனதில் நினைத்து வாயினாற் கேட்டவரங்கள் எதேதோ அதுகளையெல்லாம், பிரமதேவன் கொடுக்கும்படிப் பெற்றுக்கொண்டு வந்து சிவன் பிரமா விஷ்ணுவாகிய மும்மூர்த்திகளும் முடிவுகாணப்படாத சகலபூதங்களுக்குள்ளபலத்தையும் ஒருமிக்கப்பெற்று, எக்காலத்திலும் அழியாமல் நித்தியமாயிருக்கின்றவனென்று வேதவேதாந்தங்களால் சொல்லப்பட்ட ஜெகதீஸ்வரனாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவும் பிரமாவும் - ஜடாமகுடத்தையுடைய சிவனும் படைத்துக் காத்து அழிக்கின்ற இந்த ஒரு அண்டத்தின்மட்டுந்தானோ? இதற்கு அப்புறத்திலுள்ள அளவில்லாத பல அண்டங்களிலுள்ளவர்களும் தன்பெயராலே சொல்லும்படி வாழ்ந்திருந்தான். எட்டுத்திக்குகளையுந் தாங்குகின்ற ஐராவதமுதலாகிய அஷ்டகஜங்களில் வலதுகையில் ஒரு யானையும் - இடதுகையில் ஒருயானையுமாக இரண்டுகையினாலும் இரண்டு யானைகளைச் சுண்டற்காய்போல அலக்ஷியமாக எடுத்து ஒன்றோடொன்று முட்டவிடுவான். அளவுகாண்பதற்கரிதாகிய ஆழத்தையும்அகலத்தையுமுடையஏழுசமுத்திரங்களையும்தோணிமுதலானதுகளில்லாமல், கணைக்காலளவு ஆழமாக எண்ணித் தன் காலாலேயே நடந்து கடந்து கரையேறுவான். ஆகாசகங்கை முதலான மகா நதிகளின் ஜலத்தைக் கொஞ்சமென்று நினைத்து அதுகளின் கிட்டவும் போகான். ஸப்தமேகங்களின் ஜலத்தைக் குளிர்ச்சிபோதாதென்று எட்டியும்பாரான். சமுத்திரஜலத்தை உப்பென்றுகருதி அதில் மூழ்கவேமாட்டான் பின்னை யெப்படி ஸ்நானஞ் செய்கிற தென்றால், அண்டமுகட்டை உடைத்து அதற்கு அப்புறத்திலிருக்கின்ற பெரும்புறக் கடலின் ஜலத்தில் ஸ்நானஞ் செய்வான். அவ்விதமாகப் பெரும்புறக்கடலில் ஸ்நானஞ்செய்து நாகலோகத்திற்குப்போய் நாககன்னிகைகள் உபசரிக்க ஷட்ரசபதார்த்தங்களுடனும், பால் பழம்பஞ்சகச்சாயங்களுடனும் இஷ்டான்னம் புசித்துக் கர்ப்பூர தாம்பூலங்கொண்டு கந்த புஷ்பாதிகளைத் தரித்து இளைப்பாறி இந்திரலோகத்திற்குப்போய், அமிர்தபானம் பண்ணி இந்திராணிமுதலாகிய தேவஸ்திரீகள் சத்திரம் பிடிக்கச் சாமரம்வீசக் காளாஞ்சியேந்த, ரம்பை மேனகை முதலாகிய தேவதாசிகள்பரத நாட்டியஞ்செய்ய, தேவேந்திரன் முதலான பலதேவர்களும் ஏவல்கேட்க அந்தஇந்திரனுடைய சுதர்மமென்னும் மண்டபத்தில். சுதர்மணி சிங்காசனத்திலிருந்து வேடிக்கையாகப் பகற்பொழுது. போக்கி, சத்தியலோகத்திற்குப்போய்ப் பிர்மாவுடனே சனக-சனந்தன-சனாத- சனற்குமாரர்களும் மற்றுமுள்ள சகல ரிஷிகளும்புடைசூழ, அந்தப்பிர்மாவின் திருவோலக்கத்திலிருந்து சம்பிரமத்தோடே இராப்பொழுது போக்குவான். ஒருசமயத்தில் விமானத்தின்மேலேறிச் சந்திரமண்டலத்திற்குப்போய் அந்தச் சந்திரனைப்போலவே சஞ்சரிப்பான். ஒருவேளையில் தேரின்மேலேறி அதைச் சூரியமண்டலத்திற்கு நடத்திக்கொண்டுபோய் அந்தச் சூரியனைப்போலவே உலாவுவான். எட்டுத்திசைகளிலும் போய்த் திக்குப்பாலர்கள் செய்யுங்காரியத்தையுந் தான்செய்வான். மகமேருவின்சிகரத்தில் பிரசண்டமாருதம் மோதியடித்தாலும் யுகாந்தகால இடியிடித்து விழுந்தாலும் மகாபிரளயம் வந்தா

னும் எவ்வளவாயினும் சலனமில்லாமல், சொர்னச் சாயையாயும் சித்திரவிசித்திரமாயு மிருக்கின்ற பெரிய கோட்டைக்குள் நவரத்ன கசிதமாயும் திவ்விய தேஜோமயமாயும் பிரகாசிக்கின்ற அழகியமண்டபத்தில், மாணிக்கசிங்காசனத்தில் சக்ரேஸ்வரனாய்வீற்றிருந்து அகண்டாதி பத்தியமாக ராஜரிகஞ் செய்வான். பிருதிவி- அப்பு- தேயு - வாயு- ஆகாசமாகிய இதுகளுக்கு அதிதேவதையா யிருக்கின்றவர்களைத் தள்ளித் தான் அவர்களுக்குப்பிரதியாயிருந்து அவர்கள்செய்கிற கிர்த்தியங்களெல்லாஞ்செய்வான். கமலக்கண்ணனாகியஸ்ரீ மகாவிஷ்ணுவும்- அக்கினிக்கண்ணனாகிய- சிவனு மென்கின்ற இவ்விரண்டுபெயருந்தவிரத் தன்பெயரையே சகலலோகத்தாரும் சொல்லிஸ்தௌத்தியஞ்செய்ய, பிராமணர்முதலானவர்கள் மூவகை அக்கினிகளையுங்கொண்டு வேதோக்தமாகச்செய்கின்ற- யாகங்கள்- எக்கியங்கள்-கிர்துக்களில், தேவர்களைநோக்கியவர்களுக்குக் கொடுக்கின்ற அவிர்ப்பாகங்களையெல்லாம் தனக்குக்கொடுக்கும்படி அந்தத் தேவர்களனைவருந் தானயிருந்து வாங்கியுண்பான். ஆக்குதல் - காக்குதல் - அழிக்குதல்- என்கின்ற இந்தமுத்தொழில்களையும்மும்மூர்த்திகளுங்கைவிட்டு ஒதுங்கிநிற்கும்படித்தானேயதுகளைச்செய்பத்தலைப்படுவான். யோகீஸ்வரர்களெல்லாம் அவனாலேதங்கள்பதங்களை இழந்தார்கள். தேவர்களும் தங்களுக்கு அவனே முக்கியதெய்வமென்று எண்ணிஅவன்பாதத்தையே அர்ச்சிக்கிறதல்லாமல் மற்றொருவனைப்பூஜிக்கிறதேயில்லைமுற்காலத்திலே அமரர்கள் அசுரர்களெல்லாருங்கூடி, வெகுபிரயாசமாகத் தூக்கிநட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்த மத்தாகிய நெடிய மந்தரகிரியை, அவன்கையில் ஊன்றுதடியாகச் சிலநாள்பிடித்துக்கொண்டிருந்துபின்பு அது தன்கைக்குப்பளுவுபோதாதென்று எறிந்துவிட்டான். சூரியன் உதித்து ஒடுங்குகின்ற ஸ்தானங்களாகிய உதயகிரி-அஸ்தமானகிரி யென்கின்ற இரண்டுமலைகளும் அந்தஇரணியனுடையஇரு காதுகளுக்கும் குண்டலங்களா யிருக்கின்றதுகளென்றால் -மற்றும் அவன் பராக்கிரமத்தைச்சொல்லவேண்டியதென்ன? நான்முகப் பிரமாமுதலாகிய தேவர்களும் தேவகுருவாகிய பிரகஸ்பதியும் சதாகாலமுங் கற்பதுங் கேட்பதும் அவனுடையகீர்த்திப்பிரதாபமே, அநாதியாயழியாதிருக்கின்ற வேதங்களும்அந்தவேதங்களுக்கு அதிதேவதையும் இரணியநமாவென்றே சொல்லுகிறது. ஜெபம்-தபமுதலான தவங்களையுஞ்சகலரு மவனைநோக்கியேசெய்கிறது. அவன் அடிவைத்தால் பூமிதாழ்ந்து மேயாம் சகஸ்திர பணமகுடங்களையுடைய அனந்தனும்முடிசோர்ந்துபோவான். அவன் எழுந்துநின்றால் அண்டமுகடுசிரசிலேமுட்டி அப்பாலுயர்ந்துபோம். அவன்நடந்தால்பஞ்சமகாபூதங்களும் நடுங்கிச்சலிக்கும். அவன் பெற்றவரத்தினாலும், அஷ்ட சித்திகளாலும். ஆணிலும்-பெண்ணிலும்-அலியிலும்-உயிருள்ளதுகளாகிய சித்துப்பொருள்களிலும் உயிரில்லாததுகளாகியஜடப்பொருள்களிலும், கண்ணினாற் காணப்படுகின்ற காட்சிப்பொருள்களிலும் - மனதினால் நினைக்கப்படுகின்றகருத்துப்பொருள்களிலும்-சகலசராசரங்களிலும்சர்வாந்தரியாமிபோலப்புகுந்து சஞ்சரிப்பான் மண்ணிலும்மடியான். வானிலும் அழியான். நீரிலுஞ்சாகான். நெருப்பிலும்வேகான் காற்றிலும் இறவான். தேவர்களனைவரும் - யக்ஷர்களெவர்களும்- பிரமா-விஷ்ணு- ருத்திராதியர்களும், அவனைக்கொல்லயத்தினப்பட்டாலும் உயிர்மாயான். மற்றமனிதர்கள் - மிருகங்கள்- பறவைகள் முதலான பலபல ஜீவராசிகளாலும் அவனுக்குமரணமேயில்லை. அண்டர்கள்முனிவர்கள் மற்றயாவரும்இடுகின்றசாபங்களும் அவனைச்சேர்கிறதேயில்லை. அவனுக்குஅகத்திலுஞ்சாவில்லைபுறத்திலுஞ்சாவில்லை. இரவிலுஞ்சாவில்லைபகலிலுஞ்சாவில்லை.தெய்வீகமாகியசக்ராயுதம்-சத்திவேல்-எமதண்டம்-எமபாசம்-பிரமதண்டம்- பிரமபாசம்- பிரமாஸ்திரம்- நாராயணாஸ்திரம்- பாசுபதாஸ்திரம்- இந்திராஸ்திரம் - அக்கினியாஸ்திரம் - வருணாஸ்திரம் நாகாஸ்திரம் - மாயாஸ்திரமுதலாகிய அநேகவகை ஆயுதங்களும் அவனைக்கொல்லமாட்டாதுகள். எமன்வந்து பிடித்துக்கொண்டு போனாலும் சாகமாட்டானென்றால் பின்னையார்தான் அவன்பிராணனைமாய்க்கின்றவர்கள் பஞ்சமகாபூதங்களும் ஒன்றாகக்கூடி ஒருருக்கொண்டுவந்தாலும்மாளான். வேதத்திற்சொல்லப்பட்டமந்திரங்களினாலும், ஔஷதங்களினாலும் இறக்கமாட்டான். பெற்றபிதாவே அவனைக்கொல்லஎற்பட்டாலும் பிராணலயப்படான் இதுவாகும் அவனுடைய நிலைமை. எல்லாஉலகங்களுக்கும் தானொருவனே தலைவனாகி யாவரும் தனக்கெதிரில்லாமல் மகத்தாகிய தீரசூரபிரதாபத்துடனே வாழுங்காலத்தில் அந்த இரணியேஸ்வரனுக்கு, அறிவுடையவர்களுக்கெல்லாம் மேலாகிய அறிவினையுடையவன். நல்லவர்களெல்லாரினும் மிகவும் நல்லவன். வேதத்தைக்காட்டிலும் மகாபரிசுத்தமுள்ளவன் தாயைப்பார்க்கிலும் அதிக[illegible]பன்னவன். அவனிறந்த[illegible] அப்

படிப்பட்டமகாநயாவுமொருவன் அருளைத் திருமகனாக உற்பவித்துப் பிரகலாதனென்ற பெயரினையுடையவனாய்வளர்ந்து, ஐந்துவயதுள்ள சிறுபிள்ளையாயிருக்குங்காலத்தில் அநேகயுகங்களைக்கடந்தும் அபிவிர்த்தித்துக்கொண்டிருக்கின்றஆயுஷியத்தையுடையவனாயும், சதுர்த்தசபுவனத்தாரும் தன்பாதத்தை வணங்கும்படி ஏகசக்ரேஸ்வரனாயுமிருக்கின்ற இரணியாசுரன் மனமகிழ்ச்சிகொண்டு உருகி மகனைப் பார்த்து ஐயா! என்புத்திரசிரோமணியாகிய பிரகலாதா! நீசகலசாஸ்திரங்களுங் கற்றுக்கொள்ளென்றுசொல்லி அபரிமிதமாகிய கல்வியும் விவேகமுமுடைய அசுரகுருவான சுக்கிராசாரியார் புத்திரன் சண்டாமார்க்கனென்னபவனை அழைப்பித்து, நீர் என்கண்மணியாகியபிரகலாதனுக்கு வேதசாஸ்திராப்பியாசம்பண்ணுவியுமென்று திட்டப்படுத்தியனுப்பினான். அவ்வண்ணமே அந்தஉபாத்தியாயன் பிரகலாதனைக் கூட்டிக்கொண்டுபோய்க் கல்விக்கழகத்தினிடத்திற்சேர்ந்து வேதத்தை யோதுவிக்கத்தொடங்கி, அசுரேந்திரனுடைய தபோகுமாரனைப் பார்த்து ஐயா! இரணியநமாவென்று உன்பிதாவினுடையநாமத்தை முன்னே ஸ்மரணைசெய்யென்றுசொன்னான். அதுகேட்டுஅந்தப் பாலன் தன்னிரண்டுசெவிகளையுங் கைகளால் மூடிக்கொண்டு பேரறிவையுடைய உபாத்தியாயனே! நீர் இப்படிச்சொல்லுகிறது நன்மையல்லவென்று வேதத்தின்முடிவிலேசொல்லப்பட்ட தத்துவார்த்தமாய் விளங்கிநிற்கும்பிரமசாக்ஷாத்காரத்தின் திருநாமத்தைப் பிரசித்தமாக, அரிஓம்நமோநாராயணாய என்று நாவினாற்சொல்லிமனதுருகிஸ்தம்பாகிர்தியாயமைவுற்றுநின்று தன்னுடைய இரண்டு கைகளையுந்தலையின்மேல் அஞ்சலிபண்ணிக்கொண்டு, நமஸ்கரித்துத் தாமரைகளுக்கு இணையாகிய கண்கள் ஆனந்தபாஷ்பம்பொழியத் தேகம் புளகிக்க மயிர்க்குச்செறிய, இந்தப்பிரகாரம் அந்தஞானசிரேஷ்டனாகிய பிரகலாதாழ்வான் பத்திபாவசனாய்ப் பகவத்தியானத்திலிருந்தான். அப்போது அந்தப்பிராமணன் உடல்நடுங்கி என்னடாதரோகி! என்னடாபாவி! என்னடாசண்டாளா! ஐயையோஎன்னையுங்கெடுத்தாய் என்னைக்கெடுத்ததல்லாமல் உன்னையுங்கெடுத்தாய் நீகெட்டதுமல்லாமல் சகலத்தையுங் கெடுத்துவிட்டாயே அடகெடுவாய்! குலநாசகா! அந்தப்பிரமாதிதேவர்களுஞ் சொல்லுகிறதற்குஅடாததாய் அயோக்கியமானதாயிருக்கின்ற ஏதோஒன்றைச்சொல்லும்படி உனக்குப் புத்திபிறந்து நாவெழுந்ததே இது என்னகாரணம்! ஓகோ என்ன அக்கிரமத்தைச்செய்ப நினைத்தாயென்றான். அப்படி உபாத்தியாயன் சொன்னதற்குப் பிரகலாதன் ஐயாவித்தியாகுருவே! நான்செய்ததென்னவென்றால் முதல் என்னை உய்யும்படி செய்துகொண்டேன். பின்பு என்தந்தையை உய்யும்படிசெய்தேன். அப்பால் உம்மைஉய்யும்படிசெய்து இந்தஉலகத்தையும்உய்யும்படிசெய்ய உத்தேசித்துவேதாத்தியயனம் பண்ணுகின்றவர்கள். ஆதியிலும் அந்தத்திலும் அந்தவேதத்தின் முதற்பொருளாகிய ஸ்ரீ அரியைப்பல்லவ்வாஸ்துதிசெய்கிறது சம்பிரதாயமாயிருக்கிறது. நானும் அந்தப்படியே சொன்னேன் நான் சொன்னதில் என்னகுற்றமென்றுசொல்ல, தேவர்களுக்கெல்லாம் தலைவனாயிருக்கிறவன் இந்திரன் அந்த இந்திராதி தேவர்களுக்குந் தலைவர்களாயிருக்கின்றவர்கள் திரிமூர்த்திகள். அந்தத் திரிமூர்த்திகளுக்குந் தலைவனாயிருக்கிறவன் உன்னைப் பெற்ற தந்தையாகிய இரணியேஸ்வரன் அப்படிப்பட்டவனுடைய பெயரைச்சொல்லுகிறதற்கு, அருகனாயிருக்கிற பிராமணோத்தமனை என்னைப்பார்க்கினும் நீயென்னவிசேஷமாகத்தெரிந்தவனா! இந்தக் கர்ணக்ரேமாகிய பெயரைச்சொல்லி என்குடியைக் கெடுக்காதேயப்பா உனக்குப் புண்ணியமாய்ப் போகின்றதென்று சண்டாமார்க்கன் சொன்னான். அப்போது நிர்மலசித்தத்தையுடைய பிரகலாதன் நான் அந்த ஆதிநாயகனுடைய திருநாமத்தையல்லாமல் வேறொன்றையுமறியேன். என்னறிவுக்குச் சொல்லவேண்டியது பிறிதொன்றுமில்லை அவனுடையகடாக்ஷத்தினாலே எனக்குப் போதிக்கப்படாத பரமார்த்தமும் வேறில்லையென்றுசொல்லி, சண்டாமார்க்கனைப் பார்த்துமறுபடியும் புராதனமாகிய வேதங்கள்கிரமமாக நிச்சயித்துச்சொல்லப்பட்ட பொருளுக்கெல்லாம் முடிவாகிய பரமபொருளாயிருக்கின்ற ஸ்ரீமந்நாராயணன், எனக்குள்ளேவந்து புகுந்து என்னுடைய இதயகமலத்தைத்தனக்கு உறைவிடமாகக்கொண்டு எழுந்தருளியிருக்கின்றான் ஆகையால் அவனைவிடப்பெறுதற்குரியபயன் எனக்குவேறொன்றுமில்லை. ஆனாலும்நானறியாதது ஏதாவதிருந்தால் அதை நீநிதவறாமல்ஓதுவியும். ஐயா! பிரமசிரேஷ்டர்களெல்லாம் ஆனாச்சொல்லுகின்றதுவேதங்களும் ஞானியர்களும் எந்தவஸ்துவைச் சொல்லுகின்றது உபநிடதங்கள் எதைச்சொல்லுகின்றது. அமரர்களும் முனிவர்களும் சொல்லுகின்ற அந்தச் சர்வேஸ்வரனுடைய திருநாமத்தைச் சொல்லவேணுமேயல்லாமல் வேறேசொல்லத்தக்கதும் ஒன்றுண்டோ! மகாநுக்களானவர்கள் இருக்காதி வேதங்களிலும்

அக்கினிஷ்டோமாதியாகங்களினாலும் தத்து வக்கியானத்தினாலும் மற்றுமுள்ள எவ்வகைப் பட்ட சாதனப்பொருள்களாலும், சாதித்துப் பெறுவதற்குரிய பொருளையே நான்முக்கிய மாய்ப்பெற்றிருக்கிறேனாகையால் இனியொரு வர் ஓதுவிக்கும்படி ஓதி, கேட்பிக்கும்படி க்கேட்கத்தக்கபொருள் இன்னமும் ஒன்று ண்டாயிருக்கின்றதோ? அதுஇல்லை இல்லை, ஆரணியவாசஞ்செய்தும் - மலைக்குகைகளிற் சேர்ந்திருந்தும் - கிருஷ்ண ஜினந்தரித்தும்- சிரமுண்டிதஞ்செய்தும்ஜடைவளர்த்தும் அக் கினிமத்தியிலிருந்தும் தவம்பண்ணியும், அஷ் டாங்கயோகஞ்செய்தும் ஞானநிஷ்டைசாதி த்தும் இந்தக்கிரமத்தினால் மோக்ஷத்தைய டைந்த முக்தாத்மாக்கள் பெற்றபாக்கியத்தி லும், மிகவும்உத்கிருஷ்டமாகச் சொல்லப்பட் ட பகவத்கடாக்ஷமாகிய பரமபாக்கியத்தை நான்பெற்றேன். இதைப்பார்க்கிலும் மேலும் வருத்தப்பட்டுச் சம்பாதிக்க வேண்டியது என்னஇருக்கின்றது? ஸ்ரீதெய்வநாயகனுடை ய அடியார்க்கடியாரா யிருக்கின்றவர்கள் செவிகளினால் பலகேள்விகளையும் கேளாதவர் களானாலும் வாயினால்பலநூல்களையும்படியா தவர்களானாலும், தேவர்களுக்குஅவிகொடுக்கி ன்றமந்திரங்களைச் சொல்லுகின்ற சதுர்வேத ங்களின் பூர்வார்த்த உத்தரார்த்தங்களும் அறி வார்கள். வித்துவஜனர்களும் ஆவார்கள் உண் மைப்பொருளையுங் காண்பார்கள். அவர்களு டையபிரபாவத்தைபாரறிவார்கள். எனக்கும்ச துர்முகப்பிரமாவுக்கும் சகலமானவர்களிலுமு யர்ந்த தனக்கும்தன்னிலையறியக்கூடாதிருக்கி ன்ற அந்த எம்பெருமான் என்மனதிலெழுந் தருளியிருக்கின்றமையால், எனக்குச்சகலமும் எளிதிற்கிடைத்திருக்கின்றன. ஐயா! உபாத்தியா யரே உமக்கும் இதைவிடயுக்தமான துமற்றொ ன்றில்லை. இப்படியேநீருஞ்சொல்லிஇந்தஅநு ஷ்டானத்தையே கைக்கொண்டு உம்முடைய ஆத்துமாஉஜ்ஜீவிக்கின்ற விதத்தைநாடிக்கொ ள்ளுமென்றுசொன்னான். இவ்வாறெல்லாம்பிர கலாதன்சொல்லக்கேட்டு அந்தச்சண்டாமார்க் கனென்கிற உபாத்தியாயன் அதுகளுக்குப் பிரதியாக யாதொருசொல்லுஞ் சொல்லாமல் மனமறுகி, இனியெனக்கென்ன பெருமையி ருக்கின்றது என்பிராணனுக்கே முடிவுவந்த து. இரணியனிடத்திற்போய் அவனைக்கண்டு நல்ல விசேஷத்தைச்சொல்லித் தப்பிவருகிற தேமகாபிரயாசம். அப்படியிருக்க இந்தக் கொள்ளையை எப்படிமனந்துணிந்து நாவா னது கூசாமற் சொல்லுகிறது. சொன்னால் அவனென்னசொல்லுவானோ? நான்வேதங் கற்பிக்கச்சொன்னால் எதேதோ துர்ப்போத னைகளைப்பண்ணி நீயென்பிள்ளையின்புத்தியைய க்கெடுத்துவிட்டாயென்பானோ? கோபத்தினா லேகொலைசெய்வானோ? இதுவரையிலுஞ் சுக மாகஜீவித்தேன். இப்பொழுதெனக்குக் கிரக சாரந்தான்போதாதோ? ஐயையோ! இதென்ன தர்மசங்கடமாயிருக்கின்றதென்று எண்ணாத தும்எண்ணி முகம்வாடிக்கிலேசித்துப் பயந் து நடுநடுங்கிக்கொண்டேபோய் இரணியனைக் கண்டு, அதிகபயபக்திவிசுவாசத்துடனேசாஷ் டாங்கமாகவிழுந்து வணங்கியெழுந்து கைக ட்டி வாய்புதைத்து வஸ்திரத்தை யொதுக்கிக் கொண்டுநின்று சுவாமி! அடியேனொருகனவு கண்டேன் அதைத்தேவரீரிடத்திற்சொல்லும் படி வந்தேனென்றுசொன்னான். அதுஎன்ன ஐயாவென்று இரணியன் கேட்க, எங்களுக் கெல்லாந்தந்தையாயும் குலதெய்வமாயுமிருக் கின்ற இரணியேஸ்வரனே கேளுமையா! உம் முடையவரகுமாரன் இம்மையிலானாலும்மறு மையிலானாலும் வாயினாற்சொல்லத்தகாததா யும், மனதினும் நினைக்கக்கூடாததாயு மிருக்கி ன்றசொற்களைஒருவர் சொல்லிக்கொடுக்காமல் தானே சொல்லிக்கொண்டிருக்கிறான். வேத மோதென்றுசொன்னால் ஓதாமல் நான்முன் னமேதானே சகலார்த்தங்களையும் அறிந்திரு க்கிறேனென்று சொல்லுகிறானென்று சொன் னான். அப்படி உபாத்தியாயன் சொல்லக்கே ட்டு இரணியன் ஐயா சண்டாமார்க்கரே! பிரா மணர்களுக்கு யோக்கிய மல்லாததுகளையும் முன்புயாவருஞ்சொல்லியகிரமத்திலேசம்பந் தப்படாததுகளையும், நீர்வெறுக்கும்படி அவ ன் தன்னறிவினாலே புதுமையாக எடுத்துச் சொன்னதுகள் தானென்ன சொல்லுமென் றான். அதற்குப் பிராமணன்பயந்து சிரசின் மேற்கைகூப்பி நமஸ்கரித்துச் சொல்லுகின் றான். சுவாமி! காதுக்குள்ளே விஷசர்ப்பம் நுழைகிறதுபோல மகாக்ரூரமா யிருக்கின்ற சொல்லை அடியேன்தேவரீரிடத்திற்சொல்வே னேயாகில் ரௌரவநரகத்திலேபோய்விழுவே ன். என்னவும் இப்பொழுதே வெந்துஇற்று விழுந்துபோமென்றுசொல்ல, அதுகேட்டுக் கொடியவனாகிய இரணியாசுரன் ஆச்சரிய சித்தனாய்ச் சீக்கிரமாக என்குமாரனை அழை த்துவாருங்களென்று ஆக்கியாபித்தான். அந் தக்ஷணமே தூதர்களோடிப்போ யழைத்து வந்தார்கள். தனக்குஒருதுணையும் வேண்டாம லிருக்கின்ற ஏகமூர்த்தியைத் துணையாகவுடை ய பிரகலாதன்வந்து, தன் பிதாவைக்கண்டு சேவித்தான் அப்படிச்சேவித்த புத்திரனைம ணிபாரம்பிரகாசிக்கின்ற தன்மார்பி லிடத்தி

லணிந்த பொற்கண்ணமுதலானதுகள் அவன் மார்பிற் படியும்படி. அவ்விருவிறகத் தழுவிப்பக்கத்தில் வைத்துக்கொண்டு அவனுடைய திருமேனிமுழுமையும்பார்த்து அப்பாபிரகலாதா! உங்களுபாத்தியாயர் கோபிக்கும்படி நீபழுதாக என்னவார்த்தை சொன்னாய் அதைச்சொல்லென்று. இரணியன்கேட்க, ஐயா வேதமோதும்போது பிரதமத்திலேசொல்லப்பட்டதை நான் உச்சரித்தேன். அறிந்தாலும் நினைத்தாலும் கேட்டாலும் சொன்னாலும் துன்பக்கடலைக் கடப்பதற்கு உரியது இதுவேயாம் இதைவிட நல்லதுவேறொன்றில்லையென்று பிரகலாதன் சொன்னான். தேவர்களுக்குத்தக்க வொழுக்கத்தையுடைய அந்தப்பிரகலாதன் அப்படிச்சொல்லவே, பொல்லாதவனாகிய இரணியன் குற்றமில்லாத உபாத்தியாயன் சொல்லத்தக்கதையே சொல்லியிருப்பான். ஆனதாகட்டும் இவனுடைய அபிப்பிராயத்தையறிவோமென்று நினைத்துக்கொண்டு நீசொன்ன அந்தச்சொல்லென்ன சீக்கிரமாகச் சொல்லென்று கேட்க, மனோபீஷ்டத்தை யெல்லாங் கொடுப்பதும், அதுகளையநுபவித்துக் கடந்தால் மோக்ஷத்தை அடையும்படிசெய்வதும், ஓமங்கள்யாகங்கள் செய்தவர்களை அதுகளுக்குரிய பதவிகளிற்செலுத்துவதும் அந்த ஏகவஸ்துவாயிருக்கின்றவனுடைய திருநாமமே அது பிரணவத்துடனேகூடிய நமோநாராயணாய வென்னும் திருமந்திரமேயாம்.—பூமண்டல முதல்பிரமலோகபரியந்தம் வாழ்கின்ற எண்ணிக்கையில்லாத பூதபௌதிக சராசரங்கள் யாவற்றினுள்ளும் கலந்து நிறைந்து அந்தக்கரணங்களிலும் பொருந்தி, அங்கிருந்து உதிக்கின்ற உணர்வினால் உணரப்படுவது இந்தத் திருவஷ்டாக்ஷரமேயல்லது வேறில்லை. திரிநேத்திரங்களையுடைய மகாதேவனும் சதுர்முகபிரமாவுமாதியாக மனிதர்கள்வரையிலும் இந்தத்திருமந்திரத்தை மறந்தவர்கள் இறந்தவர்களே. இதைஒருவர்காண்பிக்க ஒருவரறிகிறதோ? மகாபிரயாசம். அப்படியானால் எப்படித்தான் அறிகிறதென்றால் சொல்லுதற்குரியஅதிகாரியாகிய சதாசாரியனும் கேட்பதற்குரிய பக்குவியாகிய சிஷ்யனும் கூடிஒருமித்திருந்து காட்டக்கண்டறிந்தாலறியலாம். மற்றப்படி அநாசாரியனாகிய ஆசாரியனும்அபக்குவியாகிய சிஷ்யனும் அதனிலையைக்காட்டவும்-அறியவுமாட்டார்கள். ஜனனமாகியசமுத்திரத்தின்பழுவினையாகிய சுழலில்நின்றுங்கரையேற்றுகின்ற ந[illegible]க்கலமாயிருப்பதும் யா[illegible] [illegible]பசுத்து தருமமாகிய பூமியை

யிருப்பதும் - சொல்லுக்கு மங்களகரமாயிருப்பதும்- ரிஷிகள் வேதத்தின்முடிவில் சிலாக்கியமாகத் தெளிந்தெடுத்த மெய்ப்பொருளுமிதுவே இதற்குச்சமானாதிகமுமிதுவேயல்லாமல் மற்றொன்றுமில்லை. — உம்முடைய ஆத்துமாவுக்கும் என்னுடைய ஆத்துமாவுக்கும், இவ்வுலகத்திலுள்ள சகல ஆத்துமாக்களுக்கும் இதுவே உறுதியென்று நான்மதித்துச்சொன்னதென்று, தத்துவஞானிகளிற் சிறந்தவனாகிய பிரகலாதாழ்வான் விசிதமாய்ச் சொல்லவே, இரணியன் ஜோதிமின்னலைப் போலப் பிரகாசிக்கின்ற தன்கையிலேந்திய வீரவேலாயுதத்தைச்சுழற்றிக்கண்களை நெருப்புஜொலிக்கவிழித்து; அடாதுஷ்டப் பயலே நான்பிறந்தநாள்முதல் இந்நாள்வரைக்கும் இந்தப் பெயரைச்சொன்னவாயையும் இதைநினைத்தமனதையும் என்னுடைய ஒப்பற்ற சக்ராக்கினையானது தகித்துவிடும். அப்படியிருக்கப்பிள்ளையாருனக்கிந்தப் பெயரைச்சொல்லிக்கொடுத்தவர்கள். நீஎவரிடத்திற்கற்றுக் கொண்டாய். சீக்கிரத்தில் உள்ளத்தைச்சொல்லடாவென்றுகாலாக்கினி சொரூபமாய்க் கோபித்து ரிஷிகள், தேவர்கள் முதலாகத்திரிலோகங்களிலுமுள்ள மற்றச்சகலமானவர்களும் என்னுடைய உபயபாதத்தையே தியானஞ் செய்கிறது. என்பெயரையே ஸ்துதிசெய்கிறது ஆகையால் அவர்களெல்லாம் உனக்கு இதைச் சொல்லுகிறதற்குப் பயப்படுவார்கள். எப்படித்தான் நீ அறிந்தாய்? அந்தவிஷ்ணுவானவன் என்னிடத்தில் யுத்தஞ்செய்யும்படி அநேகாவர்த்திவந்து எதிர்த்து, தானேறிய கருடவாகனத்தின் வேகத்தால்தப்பி யோடிப் போய்க் கடலிலேவிழுந்து அமிழ்ந்து இன்னமும் எழுந்திராமல் கிடந்து உறங்குகின்றான். அவ்வாறு உறங்குகின்றவனுடைய பெயரை உனக்கு உறுதியென்று சொன்னவர்களைக்காட்டடா? சமுத்திரத்தின் சிறுமணலை எண்ணி அளவிட்டாலும், நம்முடையகுலத்திலேதோன்றிய பெரியோர்களை அளவிடக்கூடாது. அத்தனைபேர்களும் அவனொருவனே கொன்றுதீர்க்கும்படி மாண்டுபோனார்கள். எலியானது தனக்குக் கூற்றுவனாகிய கொடிய பாம்பின்பெயரைச் சொன்னதனால் அதற்கு என்ன நன்மையுண்டு? அப்படித்தானிருக்கிறது நீ அந்தச்சத்துருவின்பெயரைச் சொல்லுகிறது. உனக்கிந்தத் துர்ப்புத்தி வந்ததற்குக் காரணம் என்னவென்றுசொல்லலாம். மேலேழுலோகங்களையும் கீழேழு லோகங்களையும் தன்வயிற்றுக்குள்ளே அடக்கிவைத்துக் கொள்ளத்தக்க சந்தேகமற்ற வலிமையுடைய என்

தமைபனுகிய இரணியாக்ஷனென்பவனை ஒரு பன்றியாகவடிவெடுத்துக் கொம்பினுற்குத்தியெறிந்து மடித்தவனுடைய பெயரைச்சொல்லுகிறதற்கோ! உன்னைநான் பிள்ளையாகப்பெற்றது. பெற்றதந்தையின் பெயரைச்சொல்லுகிறதற்கல்லவா! உலகத்திலிருக்கும் அறிவுள்ளயாவருக்கும் எல்லாவற்றிற்கும் நானொருவனே தலைவனுயிருக்கிறேன் சகல உயிர்களையும், உண்டாக்கல் காத்தல் அழித்தலென்கின்ற இம்மூன்று தொழில்களும் என்னுலேசெய்யப் படுகின்றனகள். இந்தப் பிரத்தியக்ஷமாகிய காரியத்தைப் பாராமல் வேறே காரணமுண்டென்று நீ சொல்லுகின்றது எந்த வேதத்தின் சம்மதமென்றுந்தெரிகிறுய்! ஆதியந்தமில்லாத அளவிறந்த வுலகங்களிலும் வேதம் எந்தமார்க்கமோ அந்த மார்க்கத்தையே சார்ந்து அது சொன்ன விதிப்படியே குற்றமற்ற நல்வினையைச்செய்தவர்கள் மேம்படுவார்கள், தீவினையைச்செய்தவர்கள் தாழ்வார்கள். ஆராயுமிடத்தில் இது எதார்த்தமாம். பூர்வத்தில் மகத்தாகிய தவத்தைச் செய்ததனுல் அரிபிரமாக்கள் திரிமூர்த்திகளென்று யாவருஞ்சொல்லத்தக்க பதத்தைப்பெற்றுர்கள். பின்பு நான் அவர்களைப்பார்க்கிலும் விசேஷமாகிய தவத்தைச்செய்து உண்மையாகிய நாயகத்துவத்தை வகித்ததனுல் அந்தப்பதத்தை யவர்களிழந்து, இனியிச்சித்தாலும் அதுகிடைப்பது துர்லபமென்று நினைத்துப் பூரணமாகியஎன்னதிகாரத்துக்குள்ளடங்கி நடக்கின்றுர்கள். புத்தியில்லாத இளம்பிள்ளையாகிய நீ இப்பொழுது செய்தபிழையை நான் பொறுத்துக்கொண்டேன். இனிமேலிப்படிப்பட்ட விரோதமாகியவார்த்தைகளைச் சொல்லாதே. உபாத்தியாயர் என்ன சொன்னுலும் அதுகளை இதமாகவேகொள்ளக்கடவாய். இனி யோதுபோவென்று இரணியாசுரன்சொல்ல, ஐயா! உமக்கு நானறிவிக்கவேண்டிய வார்த்தைகள் சிலவுண்டு. நீர் அசட்டை பண்ணுமல் கேட்டறியவேண்டும். என்னவென்றுல் அது வேதமாகிய கடலுக்குக்கரையாயும், யாவருங் கற்கின்ற கல்வியாகிய பாலுக்குப்பிரையாயுமிருக்கின்றதென்று பிரகலாதன் சொல்லத் தலைப்பட்டான். வித்தில்லாதவிளைவு ஒன்றுமில்லை. உம்முடையபைத்தியத்தைவிட்டு அறிவீரேயாகில் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலக் காண்பீர். தனக்குள்ளேயிருந்து உலகங்களை யெல்லாம் உற்பவிக்கப்பண்ணியும் தானும் அதுகளுக்குள்ளேகலந்திருந்தும், தனக்குப்பின்னுமில்லாமல் முன்னுமில்லாமல் ஏகவஸ்துவாயழியா திருக்கின்றவனுடைய மகிமைப்பிரபாவமானது ஒருவரால் நிச்சயித்துச்சொல்லத்தக்கதோ? விரிந்து ஸ்தூலித்திருக்கின்ற பிருதிவிமுதலாகிய தத்துவங்களையெல்லாம் வெவ்வேருகப் பகுத்துக் காணுங்கின்றசாங்கியநெறியும்யோகநெறியுமென்று இரண்டுவழிகளுண்டு. அதுகளை யறிந்தவர்களுக்கல்லதுமற்றவர்களுக்கு அவனுடைய மேலாகிய உயர்ந்தநிலை இப்படியென்று அறியக்கூடுமோ? வேதமுடிவில் சித்தென்று தெளிந்துசொல்லப்பட்ட மெய்ப்பொருளாகிய அவனுடைய தன்மையைத் தம்மைத்தாமறிந்த ஞானசீலர்களறிவார்கள். அப்படியல்லாமல் விஷயங்களையே பொருளென்று மதித்துக்கொண்டிருக்கின்றபித்தர்களுமுண்டு அவர்கள் தம்மையறியாமையால் அவனுடைய தன்மையையும் அறியார்கள். அவர்கள் மோக்ஷமும்பெறமாட்டார்கள். பிரத்தியக்ஷமுதலாகிய பிரமாணங்களால் அளவிடப்படாததாயும் மனதுக்கு அகோசரமானதாயும் உபநிடதங்களிற் சொல்லப்பட்ட வாக்கியங்களாலும், அந்த வாக்கியார்த்தங்களாலும் அறிவிப்பதற்கு எட்டாததாகியு மிருக்கின்ற அந்தப்பரமபுருஷனுடைய ரகசியத்தை மெய்மையைக்காணுத பாமரர்களி லாரறிவார்கள். கீழ்மேல் நடுவாகிய மூன்றுலகங்க ளாகியும், முக்குணங்களாகியும் யாவரும் யாவையுமாகியும், இதுகளுக்கு வேறுபட்டும் நீக்கமில்லாமலிருக்கின்ற ஒப்பற்ற நிலைமையையுடைய பரம்பொருளாகிய ஒருவனுடைய கிர்த்தியங்கள், பிரமாதி தேவர்களாலும் முனீஸ்வரர்களாலுந்தான் அறியப்போமோ? கர்மமும் அந்தக் கர்மத்தாலாகிய பயனும் அப்பயனைத் தருகின்ற கர்த்தாவும் தானு யிருக்கின்றுன். அவனுடையஅருமையையும்பெருமையையும் ஆரேனும் அறிவார்களாகில் அவர்கள் இகபரமென்கின்ற கடலைக்கடந்து கரையேறுவார்கள். மந்திரமும் மாதவமும் அதுகளால்வரும் பிரயோசனமும் அதுகளைக்குறித்துக் கிரமமாகச் சொல்லப்பட்ட தெய்வமும் வேதமும் வேள்வியும் ஆவுதியும் அவனே. முறைதவறுமல் முன்னே கொடுக்கவேண்டிய பலனை முன்னே கொடுக்கிறதும் பின்னேகொடுக்கவேண்டியபலனைப் பின்னே கொடுக்கிறதும் அந்தநாராயணன் செய்கையே. அதை அவனுடைய அற்புதமாகிய மாயையினுலே அநேகரறியாதிருக்கின்றுர்கள். நல்வினையானது நன்மையும் தீவினையானது தீமையுமாகிய ஒவ்வொருபலனைக் கொடுக்குமல்லாமல் விசேஷமாகக் கொடுக்கமாட்டாதுகள் அந்தப் பகவானுடைய கருணையின் பிரபாவம் அப்படியல்ல பலகாலும் ஜனனமர்ணத்துக்கு

ஏதுவாகிய இருவினைகளும் பற்றற்றுப்போம்படி ஆசிரதர்நினைத்ததுகள் என்ன என்னவுண்டோ அதுகளையெல்லாம் அவர்களுக்குக் கொடுக்கின்றது. இதையன்றி வேறுதிருஷ்டாந்தமும் வேணுமோ! யாககிர்த்தியங்களைச் செய்கின்ற சோமயாஜிகள்யாகமுடிவிலே அந்தச்சேஷிசாயிக்கு ஒரு ஆவுதிகொடுப்பார்களானால் அது சராசரங்களுக்கெல்லாம் திர்ப்தியாகும். வேதமும் இப்படியே சொல்லுகின்றது மூலப் பிரகிருதியென்னும் மாயையினிடத்திலிருந்துதோன்றியபஞ்சபூதபௌதிகங்களைத்தந்த முதற்பொருளானது அந்தப்பூதபௌதிகங்களாலாகிய மிருககதிகளும் அதுகளுக்குமேலாகிய மனுஷகதிகளும், அதுகளுக்கு மேலாகிய தேவகதிகளும் ஆகிய இவ்வகையாயுள்ள எழுவகைத்தோற்றத்திலும் போக்குவரவற்றதில்லமையை அடையாதவர்களுடைய அறிவுக்குளெட்டுமோ? பிரமாமுதலான சராசரங்களெல்லாம் அந்தஜோதி சொரூபியின் திருநாபிக் கமலத்தின் பொகுட்டில் ஒருபுளாக்குள்ளே அடங்கியிருக்கின்றன. காண்கின்றவர்கள் காட்டுகின்றவர்களுடைய கண்ணுக்குள்ளும் அவனொளித்திருக்கின்றான் பஞ்சபூதங்களுக்குள்ளும் நிறைந்திருக்கின்றான். சகலருடையநினைவிலுஞ் செய்கையிலும் சொல்லிலும் வாழ்ந்திருக்கின்றான் இந்திரியங்கள் தோறும் சேர்ந்திருக்கின்றான் இப்படிக்கெல்லாமிருக்கின்றதைத் தாமெவ்வளவும் நினைக்கிறதுமில்லை. முன்பு ஏகாக்ஷரமாகிய பிரணவமும் பின்பு துவயாக்ஷரமாகிய நமசப்தமும் அப்பால்பஞ்சாக்ஷரமாகிய நாராயணாயவென் பதுமாகிய எட்டெழுத்தும் மூன்றுபதமும் இரண்டு சந்தியுமாய்த்தழைத்திருக்கின்றான். காம - வெகுளி - மயக்கங்களினு லுண்டாகிய தீமைகளையெல்லாம் நிவர்த்திசெய்கின்ற அந்த ஷாட்குண்ய பரிபூரணனுன எம்பெருமானுடைய திருநாமத்தையும் அதன் மகிமையையும் குறித்துப்பேசாதவர்கள், அவனது இருப்பை எப்படி யறிந்து பேசமாட்டுவார்கள்? காலமும்- கருவியும்- இடமும்- பயனும்- அந்தப் பயனை அநுபவிக்கின்றவனும் - சீலமும்- அதுகொடுக்கின்ற சம்பத்கரமுமாயிருக்கின்றான். பெரிதாகிய ஆலமரமும் சிறிதாகிய அதன் வித்தும்போலச் சங்கோசமாயும்விகாசமாயு மிருக்கின்றான். சங்கீதவித்துவான்கள் ஸப்தசுரங்களையும் தங்களுக்குள்ளே உதிக்கின்ற உணர்வினுல் முன்பு சிந்தித்துக்கண்டறிந்து, பின்புவீணையினிடத்தில்வாசித்தலினுல் செவிக்குவிஷயமாகும்படி அறிகிறதுபோல, பெரியோர்கள் யோகத்தில் தியானத்தின் வழியாகத் தமக்குள்ளே தரிசித்து அந்த யோகதிடத்தினுலே புறத்திற்காண்கின்றதனுல் அகத்திலுள்ளவனுகியும், புறத்திலுள்ளவனுகியும், ஆகாசமானது மற்றப்பூதங்களோடு சேர்ந்திருந்தும் அதுகளுடனே கலவாமலிருப்பது போல, அவன் பிருதிவிமுதலான தத்துவங்களுடனே கூடியிருந்தும் அதுகளிலெல்லாம் தாக்கற்று நிற்பவனுகியும் வேதங்களும் பிரமிக்கின்ற தன்மையையுடையவனுகியுமிருக்கின்றான். ஓங்காரமாகிய ஓரெழுத்துக்குள் அதனுயிராயுமிருக்கின்றான் அறிவுக்கறிவாயுமிருக்கின்றான் மூன்றுலகங்களையும்தழுவியிருப்பதனுல் புகையும்அக்கினியும்போலவுமிருக்கின்றான். பலபேதமாகிய சமயங்களைப்பற்றி, வாதிக்கின்ற சமயவாதிகளுடைய மாறுபாடுகளையொழித்து ஏகபாவனையாய்ப் பேசுகின்றவர்களுக்கெல்லாம் பலமலர்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட மாலையினிடத்துள்ளமலர்களைப் போலவும் கடலும் அதனலையும் போலவும் வேறுபாடில்லாமலுமிருக்கின்றான். இப்படிப்பட்டபரமாத்துமனை நீரிகழ்ந்துபேசி உம்மைச்சார்ந்திருக்கின்றசெல்வமும் உம்முடையதீர்க்காயுளும்பெயரற்றுப்போம்படி நீரும் பிராணனைஇழந்துவிடுகிறீரோயென்றுநினைத்து, நானந்த ஜெகதீஸ்வரனுக்குத் தண்டம் சமர்ப்பித்துமங்களாசாஸனமாக அவனுடையதிருநாமத்தைச் சொன்னேனென்று பிதாவுக்குத்தெரியும்படிச் சொன்னுன். . இதுகளை எதிரோதின்று பிரகலாதன்சொல்லவே அந்த இரணியனுக்கு எவ்வகையுலகங்களும் அஞ்சும்படிச் சமுத்திரத்தில் தோன்றிய ஆலாலம்போலப் பிரபலமாகிய கோபமூண்டது. சூரியனும் சந்திரனும் ஆகாசமுஞ் சுழன்றதுகள் பூமி கம்பிதமாயிற்று அவனுடையகண்கள் உதிரத்தைக் கக்கின. கொடிபோலப் புகை யெழுந்தது. யுகாந்தகாலாக்கினியைப்போல உக்கிரமாகிய அக்கினிஜொலித்தது. இவ்விதமாகப் பொங்கி அந்த இரணியேஸ்வரன் என்னுடனே பகைக்கின்றவர்க ளினிவேறில்லைகுடலுக்குள்ளே கிருமிபோல, என்னிடத்திலேதானே பிறந்துஎன்சத்துருவுக்கே நானடிமையென்று சொல்லுகின்றுனுகையால் இவனைக் கொண்டு போய்க் கொலை செய்யுங்களென்று ஆக்கியாபித்தான். அந்தநொடியிலேதானேகாலனைப் பார்க்கிலும் அதிகமான கொடுமையைச்செய்கின்றவர்களாகிய அசுரர்களநேகர்வந்து, ஒரு யானைக்குட்டியைச் சிங்கக்கூட்டம் பிடித்து இழுத்துக்கொண்டு போவதுபோலப் பற்றியிழுத்துக்கொண்டுபோய் மலைபோல் உயர்ந்த ரத்னகசிதமாகிய வாசலுக்கு வெளியிலே

திறத்தி, மழு- வாள்- சூலம்- வேல்- குந்தம்- கெதை முதலாகிய ஆயுதங்கள் ஒன்றுபோல அநேகமாயிரங்களைக் கொண்டு பிரகலாதன் மேல் பிரயோகஞ்செய்து இவனை உயிருடனேதின்றுதீர்ப்போமென்று, இடியைப்போலக் கொக்கரித்துக் கண்களால் நெருப்பைச் சொரிந்தார்கள் ஜீவகோடிகளினிடத்தில் பெற்ற தாயைப்போல அன்பு செலுத்துகின்ற அந்தப்பிரகலாதன்மேல், தவத்தைச்செய்யாத பாவிகளாகிய அசுரர்கள் பிரயோகித்த ஆயுதங்களெல்லாம், நல்லொழுக்கத்தையுடைய மெய்ஞ்ஞானியின் சகாயத்தைப் பெற்றவனொருவனை அவன் பகையாளிகள் திட்டிய திட்டுப் போலாய்விட்டதுகள். அவன் ஒரு தன்மையாகிய வைராக்கிய சித்தத்தையுடையவனாய்த் தான் அகக்கண்புறக்கண்களால் தரிசிக்கப்பட்ட தெய்வநாயகனாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடியை மறவாமலும், அவன் திருநாமத்தை விடாமலும் தியானம் பண்ணிக் கொண்டிருந்ததனால் அவன்மேலெறிந்ததுகளும் எய்ததுகளும், அவனை எற்றியதுகளும் குத்தியதுகளும் அரிந்ததுகளுமாகிய பல படைகளும்முறிந்து ஒடிந்து உதிர்ந்து சிறு பொடிகளாய்ப்போனதுகளேயல்லாமல், அவனுடைய திருமேனியிலுண்டாகிய தினவைக் குறித்துச் சொறிந்த அம்மாத்திரம் உபத்திரவமுஞ் செய்யவேயில்லை, அதையந்த அசுரர்கள்பார்த்து ஆச்சரியங்கொண்டு இரணியனிடத்தில்வந்து சுவாமி எங்களிடத்திலுள்ள ஆயுதங்களை யெல்லாம் பிரயோகஞ் செய்தோம். அதுகளெல்லாந் தவிடுபொடியாய் விட்டதுகள் உம்முடையகுமாரன் சரீரத்துக்கு யாதொருதுன்பமுமில்லை. இனிமேல் வேறேநாங்கள் செய்யவேண்டியதென்ன வென்றார்கள்? அப்போது அசுரேந்திரன் மிகுந்தகோபமுண்டானவனாய்ப் பிரகலாதன் கபடமானநெஞ்சையுடையவனாகையால், ஏதோமந்திரக்கட்டினால் அந்த ஆயுதங்களெல்லாம் தன்னுடம்பில் தாக்காமல் முறிந்துபோம்படிசெய்தான் நல்லது இப்பொழுது நீங்கள்கோரமான அக்கினியைமூட்டி அதிலே, அவனைக் கட்டித்தள்ளிவிடுங்களென்று சொன்னான். அப்படியே அந்தத் துஷ்டர்கள் அதிக அகலமும் நீளமும் ஆழமுமுள்ளதாகஒருபெரியகுழிவெட்டி அந்தக்குழியிலே பர்வதம்போலப் பருத்தபுளியங்கட்டைகளை மேலுமேலும் நிறைய அடுக்கி, ஆயிரங்குடத்து எண்ணெயும் நெய்யுங்கொண்டுவந்து சொரிந்துதனல் மூட்டினார்கள்ஜ- வாலையானது, தெய்வலோகமட்டும்போய்த் தவழும்படிநெருப்புப்பற்றிக்கொண்டு பிரளய காலாக்கினிபோ லெரிந்தது. அவ்வக்கினமா யெரியும்பொழுது அங்கிருந்தவர்களெல்லாம் உயிர்சோரும்படி, எல்லையநாகிய பிரகலாதனாவானைக்கையையுங்காலையுங்கட்டி நிர்த்தாக்ஷிணியமாய்த் தள்ளிவிட்டார்கள். அவன்லோகநாட்டியனுடைய திருவடியை நமஸ்கரித்து அரிகரியென்று அதின்மேலவிழுந்தான் அவனுக்கு அதியுஷ்ணமாகிய அனலானதுகுளிர்ந்துசீதள சந்தனக்குழம்புபோலாய் விட்டது. அன்று அநுமானுடையவாலின்மேல வஸ்திரங்களைச் சுற்றி நெய்யிலேதோய்த்து விஷித்துக்குச் சமானமாகிய ராக்ஷதர்கள் கொளுத்திவிட நம்முடைய லங்கையாதியந்தமுஞ்சுட்ட தீயானது, பதிவிரதாரத்னமாகிய ஜானகியானவள் சொன்ன ஆசீர்வசனத்தினால் உஷ்ணமாறும்படி அந்த ஆஞ்சனேயனுடைய வாலைப்பிடிக்குளிர்ந்ததோ, அப்படியே பிரகலாதனுடைய மாணிக்கத்தையொத்த அருமைத்திருமேனியானது குளிர்ந்தது. அப்பொழுது இரணியனிடத்தில் அசுரர்கள்போய் ஐயா! தேவரீர் உத்தரவின்படி நெருப்புக்குழியில் தள்ளியும் உம்முடைய புத்திரனை ஜ-வாலையையுடைய அந்தநெருப்பானது எவ்வளவுந் தகிக்கவேயில்லை. இனியென்னசெய்கிறதென்று கேட்டார்கள். இரணியாசுரன் விழிகள் கொதிக்கும்படி மகத்தாகிய குரூரத்தைக்கொண்டு அப்படிபா! அந்தஅக்கினியைக்கட்டிச் சிறையிடுங்கள். இந்தத் திருட்டுப்பையலை அஷ்டமா நாகங்களைவிட்டுக்கடித்து. உயிர்குடிக்கும்படி செய்யுங்கள் அவன் சாவாமலிருக்கிறதைப் பார்ப்போமென்று ஆக்கியாபித்தான். அனந்தன்- வாசுகி- சங்கன்- குளிகன்- பதுமன்- மகாபதுமன்- தக்ஷகன் - கார்க்கோடகன் என்கின்ற தெய்வீகமாகிய சர்ப்பங்களெட்டும் இரணியேஸ்வரன் நினைத்தமாத்திரத்தில் அதிசீக்கிரமாக எங்களுக்கு என்னகட்டளை யென்று வந்து, அவன்சொற்படியே கொடியவிஷாக்கினியைச் சிந்துகின்ற வாயினால் இளைச்சலிட்டுச்சீறிப் பிரகலாதனுடைய அழகியதிருமேனியில், வாளைப்போல நீண்டுவளைந்து கூர்மையாயிருக்கின்ற பற்களூன்றும்படி மரணமடைவதற்கேதுவாகியந்தி நக்ஷத்திரங்களில் அதிககோபமாய்க் கடித்ததுகள். கடித்தவுடனே படம்விரித்துக் கொண்டாடியதுகள் தரையிலும் புரண்டதுகள். அப்போதுபிரகலாதன் தன்சரீரந்துடிக்காமல் எம்பிரானுடைய திருநாமத்தையே உச்சாரணம் பண்ணிக்கொண்டிருந்தான். பக்கத்தில் நின்றவர்கள் பயத்தினால் வாயின் வழியாக ரத்தத்தைக் கக்கவும் பாம்புக்கு வைரியாகிய கருடனும் நடுக்கத்

தையுடையவும், திவ்யதேகத்திற்குள்ளேபாலசந்திரன் நுழைகிறதுபோலக்கடிமீளாதஉறுப்புகளில் காளி-காளாத்ரி-யமன்-யமதூதியென்கிற நான்குபற்களும் தைத்து உருவ எழும்பி எழும்பிக் கடித்ததனால் அந்தப்பாம்புகளின் பற்களெல்லாம் வலியற்று ஒடிந்து உதிர்ந்தனகள். பிரகலாதனுக்குக் கடித்த இடங்களிலெல்லாம் விஷம் பாயாமல் அமிர்தம் ஊறி யொழுகத் தலைப்பட்டது அதுகண்டு, அவர்களோடி அஷ்டநாகங்களும் சூழ்ந்து பற்றிக்கடித்தும் அதுகளின்பற்கள் அழுந்தவுமில்லை. உம்முடைய குமாரனுக்கு விஷமே தாவுமில்லையென்று இரணியனுடனே சொன்னார்கள். அவன்கேட்டுத் திக்கஜங்களுக்குமுன்னே கொண்டுபோய்ப்போட்டு அதன் காலாலிடறச்செய்து விடுங்களென்றான். என்றமாத்திரத்தில் பலபேர் தங்களுடைய பசையில்லாத மனதைப்போலக் கிழக்குத்திசையில் விசையாயோடி, இந்திரன் ஏறுகின்ற ஐராவதமென்கிற கொடிதாகிய கோபத்தையும் மதத்தையும் பலம்பொருந்திய நான்குகொம்புகளையுமுடைய வெள்ளையானையை, அதிசீக்கிரமாகக் கொண்டுவந்து நிறுத்தி அதன்முன்னே பிரகலாதனைக் கைகளிலும் - கால்களிலும்-மார்பிலும்- கழுத்திலும் தெய்வீகமாகியபாசங்களை இறுக்கி ஒடுக்கிக்கட்டி எடுத்துக்கொண்டுபோய்ப்போட்டார்கள். அத்தருணத்தில் மெய்ப்பொருளை யறிந்தவனாகிய பிரகலாதன் அந்தயானையைப்பார்த்து. ஐராவதமே? உன் தாயைப்பெற்ற பாட்டனாகிய கஜேந்திரனைப் பூர்வகாலத்தில் ஒருமுதலையானது விழுங்கினதுகண்டு ஆதிமூலமே என்றழைத்த, அதன்முன்னே வந்து ரக்ஷித்த அந்தக் கஜேந்திரவரதன் என் மனதினிடத்தில் வந்திருக்கின்றான் என்றுசொன்னான் இப்படிச் சொல்லாததற்குமுன்னேதானே அந்தவெள்ளையானையானது, இவன் சாக்ஷாத் அரிபக்தன் இவன் விஷயத்தில் அபசாரப்படலாகாதென்று பிரகலாதனைப்பிரதக்ஷணமாகவந்து, தன்னுடைய நெற்றியிலணிந்த சொர்ணபட்டமானது நிலத்தில் பொருந்தும்படி அவனுக்குத்தெண்டம்சமர்ப்பித்து விட்டுத்திரும்பியது. இந்தச்செய்தியைச் சத்துருக்கள் இரணியனுக்குப்போய்ச் சொன்னார்கள். அவன்ஒருயானையானது உலகத்தில் எங்கும் தனக்கு இடங்கிடையாமல் எனக்குப் பயந்துபோய், சமுத்திரத்திலே தங்குகின்ற விஷ்ணுவென்பவனையே பெரிய பொருளாக மதித்துக்கொண்டு என்னுடைய அழியாதவீரத்தையும் ஆக்கினையையும் அழித்தது, ஆகையால் அதைக்கொல்லுக்கவென்று நெஞ்சுகொதித்துச்சொன்னான். உடனே அசுரர்கள் ஐராவதத்தைக் கொல்லும்படிப் பிரயத்தனப் பட்டார்கள் அப்படித் தன்னைக் கொல்லவந்தபோது அது பயந்து இரணியனே கொடியவனாயிருக்கின்றான். பிரகலாதனே சுவாமிக்கு அடியவனாயிருக்கின்றான். இத்தன்னை பெரிய சங்கடமாக நேர்ந்ததென்று நினைந்து துக்கித்துப் பின்புஒருவிதத்தில் மனந்துணிந்து பொன்னொளியையும் மழுங்கச்செய்கின்ற தேஜஸையும் - கீர்த்தியையுமுடைய சத்தியசந்தனாகிய பிரகலாதனைக்கொல்லும்படிவந்து மின்னலைப்பழிக்கின்ற பிரகாசத்தையுடைய தன் கொம்புகளினால், அவனுடைய வலிபெற்றமார்பில் குத்தியழுத்தியது அப்விதமாக அழுத்தவே அந்தத் தந்தங்கள் நான்கும் இளவாழைத்தண்டுபோல முறிந்து போய்விட்டதுகள். அதுகண்டு உண்மையில்லாத அசுரர்கள் கண்ணிமைப்பதற்குள்ளாகப் போய் ஐராவதம் உம்முடைய குமாரனைத் திரும்பிவந்து குத்திப்பாய்ந்து கொம்புகள் இற்றுவிழுந்ததென்று சொல்ல, அசுரேந்திரன் கோடைக்காலத்துச் சூரியனைப்போலச் சுடுகின்ற கண்ணையுடையவனாய்க் கோபித்து அவனை எழுநிலைகளையுடைய நமது பெரியஉப்பரிகையின் வாசற்கோபுரசிகரத்தின்மேல் ஏற்றி, பூமியிலே தள்ளிவிடுங்களென்று உத்தரவு செய்தான் பல்லாயிரகோடி அண்டங்களையும் உண்டருளிய பரமாத்துமனுடைய உபய திருவடிகளை, தியானிக்கின்ற புண்ணியாத்துமனாகிய பிரகலாதனைப் பிரசண்டவாயுவைப் பார்க்கிலும் அதிகபலத்தையுடைய கொலையாளர்கள் அப்படியே கட்டித்தூக்கிக்கொண்டு போய், மகாமேருவைப்போல அண்டபரியந்தமுயர்ந்த இரணியனுடைய வாசலிலிருக்கின்ற கோபுரசிகரத்தின் மேலேற்றி அங்கிருந்து தலைகீழாகவுருட்டித் தள்ளிவிட்டார்கள். அந்தச்சமயத்தில் பூமாதேவியானவள் இரணியனுடைய தமயனாகிய இரணியாக்ஷன் தன்னைப் பாயாகச்சுருட்டிக்கொண்டு போனபோது, அவனைவராகமாயவதரித்துக்கொன்றுதன் ஆபத்தை நீக்கிய பகவானுடைய பக்தன் இவனாகையால் இவனுக்குவந்த ஆபத்தைத் தான் நீக்கவேண்டுமென்றெண்ணிப் பிரகலாதனிடத்திலிரக்கத்தையுடையவளாய், அவனுக்கு யாதொரு உபத்திரவமுமில்லாமல் மாந்தளிருக்கொப்பாகிய தன் கைகளினால் அவனை எதிரே ஏந்திக்கொண்டாள். அதை இரணியனறிந்து உடல்வெதும்பிப் புத்திரவாற்சல்ய மென்பது கடுகளவுமில்லாமல் அந்தக் கள்ளனை யாவராலும் அசைக்கப்படாத பெரிய மலையுடனே

நெருக்கிக்கட்டி, கரைகாணக்கூடாத சமுத்திரவெள்ளத்திலே விட்டுவிடுங்களென்று ஆக்கியாபித்தான் இவ்வண்ணமாக ஆக்கியாபித்தபோது, அந்த அசுரர்கள்பெற்றதகப்பனே கொஞ்சமாவதுபச்சாத்தாபமில்லாமலும் இவன்பிள்ளையாகையால் இவனைக்கொல்லுகிறது நமக்குத்தர்மமல்லவென்று நினையாமலும்விடாமல் ஒட்டிக்கொல்லஏற்பட்டானென்று, தாங்களும்தயையில்லாமல் பர்வதத்துடனேசேர்த்துக்கட்டி வாயுவேகமாய்க்கொண்டுபோய்க் கடலின் நடுவிலே விட்டார்கள். நடுவுநிலைமையையுடைய ஏகநாயகன் திருநாமத்தைச்சோரவிடாதவனாகையால் பிரகலாதனுக்குப் பாதாளபரியந்தம் ஆழ்ந்தபெரிய சமுத்திரமானது சிறியமடுவைப்போலிருந்தது- அந்தநெடியமலையும் சுரைக்குடுக்கைபோல மிதந்தது அலைமோதுகின்ற கடலிலேமூழ்காமல்அப்படிமேலேமிதக்கின்றபர்வதத்துடனே அந்தப் பாலன், மகாபிரளயத்தின் மத்தியிலே ஆலிலையின்மேல் குழந்தைவடிவுகொண்டு சயனித்திருந்த ஜெகத்ரக்ஷகனைப்போலிருந்து தலையின்மேல் கைகூப்பிக்கொண்டு, தீர்க்கவைராக்கியத்தை யுடையவனாய் அவனுடைய சகஸ்திர திருநாமங்களையும் சொல்லி ஸ்துதிசெய்யத் தலைப்பட்டான்.

கவி.

அடியாரடியேனெனுமார்வமலால் .. ...✻
ஒடியாவலியானுடையேனுளனோ ... ✻
கொடியாய்குறியாய்குணமேதுமிலாய் .. ✻
நெடியாயடியேனிலைநேருதியோ. ... (க)

கள்ளந்திரிவாரவர்கைதவனீ... ... .. ✻
உள்ளந்தெரியாதவுனக்குளவோ... ... ✻
துள்ளும்பொறியின்னிலைசோதனையோ ...✻
வெள்ளந்தருமின்னமுதேவிதியோ... (உ)

வருநான்முகனைம்முகன்வானவர்கோன் ... ✻
திருநான்மறையின்னெறியேதிரிவார் ...✻
பெருநாடெரிகின்றிலர்பேதைமையேன் ✻
ஒருநாளுனையெங்ஙனமுள்ளுவனோ ... (௩)

செய்யாதனவோவிலைதீவினைதான்... ...✻
பொய்யாதனவந்துபுணர்ந்திடுமால் ✻
மெய்யேயுயிர்தீர்வதொர்மேல்வினைநீ ...✻
ஐயாவொருநாளுமயர்த்தனையோ... ...(௪)

ஆயப்பெறுநன்னெறிதம்மறிவென்... ✻
றேயப்பெறுமீசர்களெண்ணிலரால் ✻
நீயப்புறநிற்கநினைக்கிலர்நின் ... ...✻
மாயப்பொறிபுக்குமயக்குவரால்... ..(௫)

தாமேதனிநாயகராயெவையும்... ✻
போமேபொருளென்றபுராதனர்தாம்... ✻
யாமேபரமென்றனரென்னவவர்க் ... ...✻
காமேபரமின்னலதாருளமோர். ... ... (௬)

ஆதிப்பரமாமெனினன்றெனலாம் ... ✻
ஓதப்பெருநால்களுலப்பிலவால் ... ... ✻
பேதிப்பனநீபவைபேர்கிலையால் ... ✻
வேதப்பொருளேவிளையாடுதியோ ... (௭)

அம்போருகனைரானுரதியார் ... ... ...✻
எம்போலியரொண்ணிடிலென்பலவாம் ... ✻
கொம்போடடைபூகனிகாயெனினும் ...✻
வம்போமரமொன்றெனும்வாசகமே... (௮)

நின்னிற்பிறிதாய்நிலையிற்றிரியா ... ...✻
தன்னிற்பிறிதாயினதானெனினும் ✻
உன்னிற்பிறிதாயினவோவுலகம் ... ...✻
பொன்னிற்பிறிதாகியபொற்கலனே... (௯)

தாய்தந்தையெனுந்தகைவந்தனைதான் ... ✻
நீதந்தனைநீயுறுநெஞ்சினன்யான் ... ...✻
நோய்தந்தவனேநுவதீர்வுமெனு... ✻
வாய்தந்தனசொல்லிவணங்கினனால்... (௰)

பொருள்.

துஷ்டர்களுக்கு நிஷ்கண்டகனை யிருக்கின்றவனே! எவர்களாலுங் குறித்தறியப்படாதவனே! தோஷிகுணம்யாதொன்று மில்லாதவனே! விராட்சொரூபனே! நான் உன்னுடைய அடிமைக்கடிமையா யிருக்கவேண்டுமென்கின்ற விருப்பமுள்ளவனே யல்லாமல் அழியாத அகங்காரத்தையுடையவனாய் உனக்கு எதிர்த்தட்டாவேனோ? ஆயினும் என்னுடைய பக்திஹீனமாகிய நிலைக்கு நீ இணங்கி அருள்வையோ? வஞ்சகத்தைக்கொண்டு நடிக்கின்றவர்களுக்கு வஞ்சகத்தைக்கொண்டு நடிக்கின்றவன் நீயாகையால், உள்ளத்திலுள்ள ரகசியங்களில் நீயறியாததுகளுமுண்டோ? அமிர்தபிரவாகமாக விருக்கின்றவனே! இப்படிப்பட்ட துன்பங்களை நானடைவது ஊழின் சோதனைதானோ? பிரமாவும் ருத்திரனும் தேவேந்திரனும் வேதஞ்சொன்ன நெறிப்படி நடக்கின்றார்களேயல்லாமல் அநேககாலமாயுன்மகிமையை அறியவில்லை அப்படியிருக்க நானுன் பிரபாவத்தை எப்படி யறிவேன். அடியேன் செய்யாத பாபகர்மமோ இல்லை அதுகளெல்லாம் தவறாமல் வந்து எனக்குப் பிராப்தமாகின்றதுகள் இது எதார்த்தந்தான் ஒருகாலத்தில், அந்தக்கர்மம்என்னாத்துமாவைவிட்டுநீங்கும்படி எத்தனைப்பட்டாலும்அதையெக்காலமும் என்னாத்துமாவுடனே சம்பந்தப்படும்படிச்செய்கின்ற செய்கையை நீ மறவாதிருக்கின்றாயாகையால், அது உன்னருளில்லாமல் எப்படி நிவர்த்தியாகும். ஆராய்ந்து அ

டையப்பெறுகின்ற நல்லநெறியானது தம்மறி
வேயென்று பொருந்தப்பெற்ற புஜ்பர்கள்
அநேகருண்டு. நீயவர்களுடைய அறிவுக்கும்
அப்புறத்தில் நிற்க உன்னையெண்ணாதவர்களா
யவர்களெல்லாம் உன்னுடையமகாமாயையாகி
யவலைக்குள் அகப்பட்டுமயங்குகின்றார்கள். தா
ங்களேதனிநாயகமாய்த்தோன்றி எல்லாப்பொ
ருள்களுந்தங்களுக்குத் தெரியுமென்று நிச்சயி
த்தமுனிவர்களெல்லாம், நாமேபரத்துவமெ
ன்றுஎண்ணியிருந்தார்கள் அப்படிஎண்ணத்த
க்கதாகஅவர்களுக்கு அந்தப் பரத்துவஞ்சித்தி
க்குமா, சாக்ஷாத்காரம் உன்னையல்லாமல்வேறே
யாரிருக்கிறார்கள்? ஒருசமயத்தார் காரணகாரி
யத்தைப்பற்றிஜெகத்துக்குநீயேஆதியாகியபர
மென்றால் மற்றொருசமயத்தார் சுத்தாசுத்த
த்தைப்பற்றிஅல்லவென்று சொல்லலாம். இந்
தப்படிப் பலவிதத்திலுஞ்சொல்லுகிறதற்குச்
சாஸ்திரங்களும் அநேகமாயிருக்கின்றதுகள்
அந்தச் சாஸ்திரங்க ளெல்லாம் பேதிக்கும்
நீயப்படிப்பேதிக்கமாட்டாய். வேதார்த்தமா
யிருக்கின்றவனே இப்படிக்கெல்லாம் கபட
நாடகம் நடிக்கின்றையோ? எல்லாம்நீயாயிரு
க்கின்ற உன் பிரபாவத்தையறியாத என்னைப்
போலிருக்கின்றவர்கள் ஒரு தன்மையாக உன்
னையே குறியாமல், பிரமாவென்றும் சிவனெ
ன்றும் மற்றும்பலபலதேவர்களென்றும் வெ
வ்வேறாகக் குறிப்பதென்னதன்மை? கொம்பு
இலை மலர் கனி காய்களென்று சொல்லும்படி
வெவ்வேறாய் அநேகமாயிருந்தாலும் விருக்ஷ
மொன்றே யென்கின்றசொல் இப்பொழுது
தான்புதிதாய்த் தோன்றியதோ? உலகம்
உன்னிலிருந்து வெளிப்பட்டு விகாரமாய்த்
தனக்குள்ளே பலபேதப்பட்டதானாலும், உன
க்கு அந்நியமாயிருக்கின்றதோ பொன்னினா
லாகிய ஆபரணங்கள் அந்தப் பொன்னுக்கு
அந்நியமாகுமோ? தாயாகியும் தந்தையாகியும்
வந்து நீயே யென்னைப்படைத்தருளினாய் நீ
யெழுந்தருளியிருக்கின்ற நெஞ்சத்தையுடை
யவன் நான் எனக்குஜனனமரணமாகியநோய்
களைத்தந்தவன் நீயாதலால், அந்தநோய்களு
க்கு நிவர்த்தியும்நீயே சொல்லவேண்டுமைய
னேயென்று பத்திபரவசனாய் இந்தப்படிப்
பலவிதத்திலும் தன்வாக்கில் வந்ததுகளைச்
சொல்லிச்சொல்லி ஸ்தோத்திரஞ் செய்துவ
ணங்கினான். அதை அசுரர்களாலறிந்த மகாப
ராக்கிரமசாலியாகிய இரணியன் அவனைக்கொ
ண்டுவந்து என்முன்னே விடுங்க ளென்றான்.
அவ்வாறே சமுத்திரத்தில் மிதந்துகொண்டி
ருக்கின்ற பர்வதத்துடனே கட்டிய கட்டவி
ழ்த்துக்கொண்டுவந்துவிட்டார்கள் விட்டமா
த்திரத்தில் சரீர மெரிந்து புழுங்கி, இவனுக்கு
விஷங்கலந்த அன்னம் பதார்த்தம் பால்பழம்
பஞ்சகச்சாயமுதலாகிய பக்ஷணைகளை ஊட்டி
இவனைக் கொன்றுவிடுங்களென்றான் அவ்வா
றேஅநேகவகைப்பட்டவிஷான்னத்தையும்ஊ
ட்டினார்கள். அதுகளையும்அவன்உண்டு பகவத்
கடாக்ஷத்தினாலே ஜீரணஞ் செய்து கொண்டு
சாவாம லிருந்தான். அதுகண்டு இரணியன்
அப்புறம் ஒரு இருப்புப்பணையின்மேல் வை
த்துச் சம்மட்டிகளைகொண்டு, கை கால் தலை
உடல்முதலானதுகளும் சிதைந்து பொடியா
ய்ப் போகும்படி மர்த்தியுங்களென்று ஆக்
கியாபித்தான். அவ்வண்ணமே அந்தக் கொலை
யாளர்கள் பிரகலாதனைக் கட்டிக் கொண்டு
போய்ப் பணையின்மேல் வைத்து எத்தனை
யோ பெரிய இருப்புச் சம்மட்டிகளைக்கொ
ண்டுபலமாகஓங்கியடித்தார்கள். கொடியபாத
கர்களாகிய அசுரர்கள்கணக்கில்லாதவர்கள்மூச்
சுவிடாது ஓயாமல்அடிக்கவேஇனியேது இவன்
பிழைக்கிறது? கனவிலுமில்லையென்றுசகலமா
னவர்களும் எண்ணும்படியாயிருக்கின்றசமய
த்தில், அந்தப் பிரகலாதாழ்வான் தனக்குள்ளே
அந்தரியாமியாயிருக்கின்ற எம்பெருமானுக்
குக் கைகளோ ஆயிரமல்ல அநேகம். திருவடி
களோ அளவிறந்ததுகள். திருக்கண்களோஎண்
ணத்தொலையாததுகளென்று இந்தப்பிரகாரம்
அவனுடைய அவயவமுதலாகிய ரூபநாமகுண
ங்களை ஒழியா துதியாநித்துமன முருகிக்கொண்
டிருந்தானேயல்லாமல், தன்னை யடிக்கிறார்க
ளென்கின்றநினைவுசிறிதாவதுகொள்ளவில்லை.எ
ன்னசெய்தும் ஊறுபடாததுகண்டு இரணியன்
மாயையினால் இவன் உடலுஞ்சிதையாமல் உயி
ரும் பிரியாமலிருக்கத்தக்க உபாயத்தையுடை
யவனாயிருக்கின்றானாகையால், இனிநானேகொ
ல்லுகிறேனென்று கோபித்து உலகங்களெல்
லாம் நடுங்கும்படிச் சமீபத்தில்வந்தான் அப்
படிக்கொல்லவந்தபிதாவைப் பிரகலாதன்வண
ங்கி ஐயா! என்னுயிரைவாங்கும்படி நீர் வருத்
தப்படவேண்டாம் இது உம்மாலே சாத்திய
மாகத்தக்கதல்ல. சகல புவனங்களையும் உண்
டாக்கிய ஸ்ரீமந்நாராயணனே கொள்ளும்படி
யிருக்கின்றதென்று சொன்னான். அதைக்கே
ட்டு இரணியாசுரன் அடா உலகங்களையுண்டா
க்கினவனென்றுசொன்னையே! உலகங்களையுண்
டாக்கினவரார் என்பெயரை ஸ்துதி பண்ணிக்
கொண்டிருக்கின்ற திரிமூர்த்திகளா? அல்லது
முனிவர்களா? அல்லது தங்களுக்குள்ளதுகளை
யெல்லாம் என்னிடத்தில் தோற்றுப்போயிரு
க்கின்ற தேவர்களா? அல்லது மற்றவர்களா?
தெரியச்சொல்லடா என்றான் அப்படிப்பட்

டவ னொருவன் உண்டாயிருந்து அவனைக்கா ட்டுவானானால் காணலாமென்று நினைத்துத் தனக்குக்கோபமூண்டெழுந்தும், இரணியன் பிள்ளையைக் கொல்லவில்லை அப்பொழுது பிரகலாதன் அவனுமொன்று கேட்டீரல்லவோ? முன் குறித்தபடியே உலகங்களைப் படைத் தவனும் அதுகளுக்குள் நானாபேதமாகிய உயிர்களைப் படைத்தவனும் அந்த அறியாத உயிர்கள்தோறும் அந்தரியாமியா யிருந்து அங்கங்கே வாசஞ் செய்கின்றவனும், பூவி னிடத்தில் மணமும் எள்ளினிடத்திலெண்ணெ யும்போலவும், அளவில்லாத பலபொருள்களி லும் கலந்து நிறைந்திருக்கின்றவனுமாகிய அரியென்பவன்தான். அவன் எங்கண்ணினால் நோக்கிக்காண்பதற்கு எவ்விடத்திலு மிருக்கி ன்றான். உன்னிடத்தில் நான் அவனைக்குறி த்து அன்புடனேசொன்னேன், நீ யொன்றுவ து உறுதியாகக் கொள்ளவில்லை ஆகையால், உன்னுடையகண்களால் நோக்கிப்பார்ப்பத ற்கு உனக்குமூத்தவனாகிய இரணியாக்ஷனு டைய உயிரைமாய்த்ததாமரைக்கண்ணன், அத் தனைலேசாய்க்கிடைக்கின்றவனோ? சாத்துவிகம் ராஜசம் தாமசமாகிய முக்குணங்களு மவ னுடையதுகள். சிருஷ்டி - திதி - சங்காரமா கிய முத்தொழில்களு மவனுடையதுகள். வெ ண்மை பசுமை செம்மையாகிய மூவுருவமு மவனுடையதுகள். சோமசூரிய அக்கினியாகி ய முச்சுடர்களு மவனுடையகண்கள், காரு கபத்தியம் - தக்ஷணாக்கினியம் - ஆகவனீயமா கிய வேதாக்கினி மூன்று மவனுடையதுகள். சொக்கமத்திய பாதாளமாகிய மூவுலகமும வனுடையதுகள். முதலும் நடுவும் முடிவு முண்டாயிருக்கின்ற பொருள்களுக் கெல்லாம் அவனேசாக்ஷியா யிருக்கின்றவன் இதுவே வேதத்தின்முடிவு இதுவே சத்தியமென்று சொன்னான். இப்படி யென்று சொல்லவே இரணியாசுரன் தன்னுடையதந்தங்கள் பிரகா சிக்கும்படிக் கலகலவென்று நகைத்து, அடா உலகத்திலுள்ள பலபொருள்களிலும் அந்த அரியென்கின்ற ஒருவன் புகுந்து நிறைந்திரு க்கின்றானென்று சொல்லையே அதை நான் கண்டு பின்புஅதற்குத்தக்கபடி செய்கிறேன். அப்படியே அந்தத் திருடனிருப்பானாகில் அவனுடைய நிலைமையைத் திருஷ்டாந்தப்ப டுத்து பார்ப்போமென்றுசொன்னான். அதற் குப்பிரகலாதன் ஐயா! அந்தப்புருஷோத்த மன் சாணிலுமிருக்கின்றான் அணுவிலுமிரு க்கின்றான் அந்த அணுவை அநேகங் கூறாகச் செய்யப்பட்ட பரமாணுவிலு மிருக்கின்றான் மகமேருவிலு மிருக்கின்றான் இவ்விடத்தில் நிற்கின்ற தூணிலுமிருக்கின்றான் நீர் சொ ன்ன சொல்லிலு மிருக்கின்றான் அவனில்லாத பொருளொன்றுமில்லை இந்த அதிசயத்தைப் பார்க்க வேணுமானால் சீக்கிரத்தில் சந்தேக மில்லாமல் பிரத்தியக்ஷமாகச் சோதித்தறிந்து கொள்ளுமென்றான். இவ்விதமாகச் சொல்ல வே இரணியன் நல்லதென்று சம்மதித்துப்பி ன்னுஞ் சொல்லுகின்றான், தேவர்களுக்கும் உனக்கும் ஒத்தவனாகி இந்த வுலகமெங்கும் நிறைந்திருக்கின்ற அந்தமகாவிஷ்ணுவை இங் கே நிற்கின்ற தூணினிடத்திலிருக்கக் காட்டு காட்டாமற் போவாயானால், மஸ்தகத்தைய டைய மதயானையைச் சிங்கமானது அறைந்து கொல்வதுபோல உன்னை நான்கொன்று உன் னுதிரத்தைக் குடித்து உடலையுந்தின்றுவிடுவே னென்றுசொன்னான். அதுகேட்டு அறிவிலே சிரேஷ்டனாகிய பிரகலாதன் கேளுமையாபிதா வே என்னைக் கொல்லுகிறேனென்று அடிக்க டிச் சொல்லுகின்றீரே என்னுயிரானது உம் மாலே கொல்லப்படுகிறதற்கு, அத்தனைஎளி தாயிருக்கின்றதல்ல நான் உமக்கு முன்னே சொன்ன சர்வேஸ்வரன் நீர் குறித்த குறித்த இடங்களி லெல்லாம் அவசியம் காணப்படு கிறான் காணமற்போவானேயாகில், என் னுயி ரை நானே மாய்த்துக்கொள்ளுகிறேன் அப்ப டிச் செய்யாமல் பின்னும் பிராணனுடனிரு ப்பேனானால், அவனுக்கு நான் அடிமையல்ல எனக்கவ னுண்டவனல்ல வென்று பிரதிக்கி னை பண்ணினான். அப்பொழுது இரணியாசு ரன் தன்னுடைய வக்கிரதந்தங்கள் பிரகாசிக் கும்படி சிரித்துக் காலாக்கினிபோல மன ம்பொங்கி நல்லது நல்லதென்று சொல்லிஇடி விழுந்ததுபோல, அதிசஆர்ப்பாடமாகஎதிரே யிருந்த சொர்னமயமாகிய நெடிய தூணைத் தன்னுடையவஜ்ர கடகங்களையணிந்த ஜெயம் பெற்றகையினால்ஓங்கி உக்கிரத்துடனே விசை கொண்டு அறைந்து, இதிலே எங்கேகாட்டடா வென்றான் அப்படி அறைந்த மாத்திரத்தில் அந்தத் தூணிலிருந்து ஒருபேரோசை யான து எழுந்துதிசைகளைக்கிழித்து, அண்டமுகட் டையும் பிறிக்கொண்டு ஊடுருவும்படிச் சிவ ந்தகண்களையுடைய சிங்கமானது லோகாலோ கங்களெல்லாங் கிடுகிடாயனமாகமிகவும் உக்கி ரமாய்ச் சிரித்தது. சார்வகாலமும் சதுர்முக ப்பிரமாவும் கைலாசநாதனுந் தேடியுங்காண ப்படாத அதிதூரத்திலிருக்கின்ற சர்வக்கியன் சர்வபரிபூரணனாகிய எம்பெருமான், அந்த ஸ்தம்பத்தில் சிரித்தவுடனே முன்புபரமாத்து மனைநான் எப்படியும் உமக்குத்தேடிக்காண் பிக்கிறேனென்று இரணியனுக்கு, உறுதியாகச்

சொல்லியிருந்த மகாத்மியானியாகிய பிரகலாதாழ்வான் எழுந்து கூத்தாடினான் ஆனந்தக் கண்ணீர் விட்டழுதான் அவன் விஷயமாயிருக்கின்ற திவ்விய சூக்திகளைப் பாடினான் சிரசின்மேற் கைகளை அஞ்சலி பண்ணிக்கொண்டான் சாஷ்டாங்கமாகச் சேவித்தான் மான்கன்றுபோலத் துள்ளித் துள்ளி உலகமெல்லாம் ஓடியோடித் திகைத்தான். அந்தச்சமயத்தில் இரணியன் கொக்கரித்து அடடா! தூணிலிருந்து சிரித்ததையே நீயாரடா! இந்தப் பையல் சொன்ன விஷ்ணுதானா? எனக்குப்பயந்து ஓடிப்போயிருந்தவனாயினும் நீயொளித்துக் கொண்டிருந்த சமுத்திரத்திலிடம் போதாதென்றோ? இப்பொழுது இந்தத் தூணினிடத்தைத் தேடி இதிலே வந்து ஒளித்தாய் ஆகட்டும் என்னுடனே யுத்தம்பண்ணத்தக்க வல்லமையை யுடையவனானால் தூணைவிட்டுச்சீக்கிரமாகப் புறப்படு புறப்படு. ஏன் காலதாமதஞ் செய்கின்றாயென்று சொல்லிப் பின்னும் அதட்டியார்ப் பரித்தான். அப்பொழுது அண்டம்வெடித்ததுபோலப் படீரென்று அந்தத்தூணும்பிளந்தது அதிலிருந்து உக்கிரநரசிங்கமானது பிறந்தது பிறந்தவுடனே அதுவளர்ந்தது. அப்படி வளர்ந்து அஷ்டதிக்குகளையும் பகிரண்ட முதலானதுகளையும் அளந்துகொண்டேபோய் நிறைந்தது ஆயினும், பகிரண்டத்திற்கு அப்பால் நடந்த செய்தியென்னவோ அதையாரறிந்து சொல்லுகின்றவர்கள். ஆகாசம் கீழும்மேலும் கிழிந்தது பரிமளம் பொருந்திய துளபமாலையை அணிந்த நரசிங்க மூர்த்தியின் திருவுருவம்வானத்தை யூடுருவிப் போனதை நாமறியமாட்டோம். திருவடித்தாமரைகள் பூமியிலே தோயும்படி நின்றபொழுது நெடிதாகிய அண்டமுகட்டில் சத்தியலோகத்திலிருந்த பிரமதேவன், அன்றுதான் அந்த நரசிங்கப்பெருமானுடைய திருவுந்திக்கமலத்தில் உற்பத்தியானவன்போல விளங்கியிருந்தான். அப்படிப்பட்ட நரசிங்க சொரூபத்திற்கு எத்தனையோ கைகள் எத்தனையோகால்கள் எத்தனையோ முகங்களுண்டா யிருந்ததுகள். அதுகளைக்குறித்து இவ்வளவென்று எண்ணிக்கணக்கிட்டுச் சொல்லத்தக்க விவேகிகளுமுண்டோ? உலகமெல்லாம் பரவியிருந்த அசுரசேனை ஆயிரகோடி வெள்ளமும் மாண்டுபோம்படித் தனித்தனியே நரசிங்க மூர்த்தியின் கைகள் அள்ளிக்கொண்டதுகள். அந்தச்சகஸ்திரகோடி வெள்ளமாகிய அசுரர்களுக்குள்ளே ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருதிருமுகமும் இரண்டிரண்டுகைகளும் ஒவ்வொரு சிரசுக்கு மும்மூன்று கண்களுமாயங்கங்கேகாண, திருமேனியில் முடங்கிய ரோமங்கள் அசையும்பொழுது அதுகளிலிருந்து உண்டாகியகாற்றுப் பிரளயகாலாக்கினியை அவிக்கவும், சுவாசம்பிரசண்டமாருதத்தை அடக்கவும், கண்களில் நின்று ஜொலிக்கின்ற கோபாக்கினியானது சமுத்திர ஜலத்தைச் சுவறச்செய்யவும் வாயிலுள்ள நீர் சகலமாகியபுவனங்களையும் நிரப்பவும், பல்லாயிரகோடி யண்டங்களும் நெருங்கியரோமங்கள்தோறும் முட்டைகளைப்போலொட்டிக்கொண்டிருக்கவும் இந்தப்படி கோரபீகரமாகிய சொரூபத்துடனே, உலகமெங்குமிடமில்லாமல் நிறைந்துதோன்றிய அந்த நரசிங்கமூர்த்தியானவர் ஊழிக்காலத்தில் சகலவுயிர்களையும் திருவுதரத்தில்வைத்து வாழ்விப்பதுபோல, பிரமாமுதலாகிய தர்மாத்மாக்களையெல்லாம் அப்பொழுது தமதுகர்ப்பத்தினிடத்தில்வைத்துத் தாயைப்போல ரக்ஷித்துக்கொண்டு அந்தஅசுரர்கள்மேல்தாவி, அநேகரை யெடுத்து அர்த்தசந்திரனுக் கொப்பாகிய தம்முடைய வக்கிரதந்தங்களுக்குள் அடக்குவார். அநேகரைவாரிப் பூமியிலிட்டுத் தேய்ப்பார். அநேகரைத்தூக்கிப் பகிரண்டத்தில் மோதுவார். அநேகரைப்பிடித்து மகமேருவிலடிப்பார். அநேகரைவிரல்களினாற் பிசைவார். அநேகரைக்கடல் நீருக்குள் அமிழ்த்திக் குமிழி யெழும்படிச்செய்வார். அநேகரைவடவாமுகாக்கினியிலிட்டு வாட்டுவார். அநேகரை யிருபாதியாகக் கிழிப்பார், அநேகரைக்குத்தி வாயைப்பிளப்பார் - அநேகரை நகங்களாற்கீறித்தோலுரிப்பார். அநேகரைக் கண்களைத்தோண்டியெறிவார். அநேகரை வயிற்றைப்பீறிக் குடலையறுப்பார். அநேகரைப் பசையற்றுப் போம்படி நசுக்குவார். நகச்சந்திற் பதுங்கியிருப்பவர்களை நகத்தினாலேயே அழுத்திக்கொல்லுவார். யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் மற்றும் அந்த அசுரர்களுக்கு வாகனமாயிருக்கின்ற யானைகள் சங்கங்கள் முதலானதுகளையும் உடல்கள் பின்னப்படாமல் உயிருடனே எடுத்து விழுங்குவார். ஸப்த சமுத்திரஜலங்களையும் அதுகளிலுள்ள பெருமீன் சிறுமீன்களுடனேயும் மொடுமொடு வென்று குடிப்பார். எழுமேகங்களையும் இடிகளுடனே உட்கொள்ளுவார் இந்தக் கோரத்தைக்கண்டு தர்மதேவதையும் இனியெதுசுவாமிக்குக் கோபந்தணிகிறதென்று அஞ்சிச் சலிப்புற்றது பின்னுஞ்சில அசுரர்களைச் சக்ரவாளகிரிபோடெற்றுவார். சிலஅசுரர்களை அண்டச்சுவரின்மேல் மோதுவார். சில அசுரர்களை ஸப்த குலபர்வதங்களின் மேலடித்துக்கொல்லுவார்,

சிலஅசுரர்களை அஷ்டதிக்குகளிலும் அடங்கியிருக்கின்ற இருட்பிரதேசத்திற் கொண்டுபோய்த் தமதுபெரியகையாலறைந்துதேய்ப்பார். சிலஅசுரர்களை மலையைப்போல உருண்டு விழும்படியாகத் தமதுகைநுனி நகத்தினாற் றலைகளைக்கிள்ளியெறிவார். சிலஅசுரர்களைவாரிச் சூடுபிறக்கும்படி நசுக்குவார். சிலஅசுரர்களைக்கொல்லுகின்ற முறைமைப்படி கொல்லுவார். சிலஅசுரர்களுடைய உயிரைப்பறித்துப்பானம் பண்ணுவார். சிலஅசுரர்களைப் பிடித்துக் கடல்நீர் ஆகாசத்தில் தாவும்படி கடலைநிறையத் தூர்த்துவிடுவார். மூன்று லோகங்களிலு முள்ள அவுணகோடிகளை யெல்லாம் ஒன்றுதவிராமற் பிடித்துக் கொன்று ஸ்ரீகளுடைய கருப்பமுமழிந்துபோகும்படியாகச் செய்து இந்த அண்டத்தில் அவுணரில்லாமற் கொன்று அப்புறத் தண்டங்களிலும் தேடித் தடவிக்கொண்டிருந்ததுகள் இந்த நரசிங்கத்தினுடைய சிலகைகள். இந்தப்பிரகாரமாக இரணியாசுரனும் அவன்பெற்ற தேவரக்ஷகனான பிரகலாதாழ்வானும் தவிர மற்றப் பலவகைப்பட்ட அவுணர் கூட்டங்களை யெல்லாம் ஒரு இமைப்போதினிற்கொன்று ஆக்கிரமித்து வருகின்ற அந்த நரசிம்மத்தை இரணியாசுரன் பார்த்து, தனது வலதுகையில் வச்சிராயுதத்தை யுருவிக்கொண்டு இடதுகையில் ஆகாசத்தையும் மறைக்கும்படியான கேடயத்தைப் பிடித்துக் கொண்டு தேவர்களுடைய மனது தீயும்படியாகவும் சப்த சமுத்திரங்களும் வற்றி மணல்காணும்படியாகவும் அஷ்டகுல பர்வதங்களும் நடுங்கும்படியாகவும் - கெர்ஜ்ஜித்து - உயிருள்ள மகமேருவைப்போல உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டுநின்றான். அவ்வாறு நின்ற தன்பிதாவைப் பெரியோர்களெல்லாந் துதிக்கும்படியாக நிற்கின்ற பிரகலாதாழ்வான் பார்த்து ஐயா! ஏகசக்கராதிபதியே! இப்போது இந்த நரசிம்ம மூர்த்தியைப்பார்த்தும் நீஉன்னுடையமனதில் ஒன்றுமாலோசிக்க வில்லையல்லவா? இந்தக் கருணைக்கடலாகிய நரசிம்மமூர்த்தியை வணங்கு, அந்தப்படி நீ வணங்குவாயாகில் அவரிடத்தி லிதுவரையில் நீ செய்திருக்கிற அபராதங்களை யெல்லாம் பொறுத்துக் கொள்ளுவாரென்று சொல்லக்கேட்டு, இரணியன் அதிக உக்கிரங்கொண்டு அடா பிரகலாதனா? இதைக்கேள்-உன்கண்முன்பாகவெளிப்பட்டிருக்கின்ற இந்த நரசிங்கத்தினுடைய தோள்களையும் கால்களையும்வெட்டித்தள்ளி உன்னையும் இரண்டு துண்டமாகத் துண்டிட்டு என்னுடைய வாளை வணங்குவேனே யல்லாமல் எனதுதேவிமார்களுடைய வூடல்காலத்திலும் நான் வணங்கினதை நீகண்டதுண்டா வென்று அண்டங்களெல்லாம் நடுங்கும்படியாகச் சிரித்து அப்படிச்சிரித்தவாயிலும்-கையிலும்-கையிற்பற்றியிருக்கின்ற வாளிலும் நடந்தகால்களிலும்குபுகுபுவென் றுதீப்பொறி பறக்கும்படியாக அதிககோபத்தோடு அந்த நரசிம்மத்தை எதிர்க்கவந்த மாத்திரத்தில், கொடுமைகளைச் செய்துகொண்டிருக்கின்ற அசுரர்களுடைய தந்திரங்களுக் கெல்லாம் மேலாகிய உபாயங்களைச் செய்யும் அகடிதகடனா சாமர்த்தியமுள்ள அந்தநரசிம்ம மூர்த்தியானவர், கணிதசாஸ்திர பண்டிதர்களாலும் கணக்கிட்டு இவ்வளவென்றுதொகைசொல்லுதற் கரிதான தம்முடைய எண்ணிறந்த கைகளினாலுங்கால்களினாலும் அந்தஇரணியாசுரனைச் சூழ்ந்து கட்டிப்பிடித்தார். இந்தப்படிக் கொருவனையொருவர் கட்டிப்பிடித்து எல்லா வுலகங்களுக்கு மேலாய் ஒருவருங்காணாதபடி உயர்ந்து நிற்கின்ற தன்மையைக்காணும்போது பயப்படும்படியான ஆகாரத்தையுடைய இரணியாசுரன் மேருமலைக்குச் சமானமாகவும், இந்த நரசிம்மமூர்த்தி மற்ற அஷ்டகுலா சலங்களுக்குச் சமானமாகவும், காணப்பட்டார்கள். மேலும் இந்த நரசிம்ம மூர்த்தியானவர் மிகுந்த கெர்ஜ்ஜிதத்தினாலும் வேலாயுதம் போன்ற நகங்களையுடைய அநேகமாயிரங் கைகளாலும் சப்திக்கின்ற அலைகளையுடைய திருப்பாற்கடலானது பிர்ம்மலோகத்தைத் தாவிக்கொண்டுபோகிறதுபோலும் காணப்பட்டார். இரணியன் அந்தச்சமுத்திரத்திற்கு நடுவிலகப்பட்ட மேருமலைக்குச் சமானமாக விருந்தான்.

இப்படி இருவரும் மிகுந்தஉக்கிரத்தோடு யுத்தஞ்செய்யும்போது இந்த நரசிம்மமூர்த்தியானவர் தமதொரு கையினாலே இரணியனுடைய இரண்டுகால்களையும் சேரப்பிடித்து வாரி அவனுடைய வாளும்-கைகளும்- தலையும் பிர்ம்ம லோகத்தினுடைய அண்டச்சுவரில் உராசும்படியாகச் சூரியனானவன் தன்னுடைய பரிவேடத் தோடுங்கூடச் சுற்றிவருகிறதைப்போலத் தோன்றக் கிறுகிறென்று சுழற்றிய காலத்தில், அந்த இரணியனுடைய இரண்டு காதுகளில் தொங்கிக்கொண்டிருந்த குண்டலங்கள் சிதறி கிழக்கிலொன்றும், மேற்கிலொன்றுமாக விழுந்ததுகள். அதைப்பார்க்கும்போது சூரியனானவன் உதயகாலத்திலும், அஸ்தமன காலத்திலும், பிரகாசிக்கின்ற காலைமாலை கிரணங்களைப்போலவு மிருந்ததுகள். இந்தப்பிரகார மிவர்க ளிரண்டுபேருஞ் செய்த யுத்தப்பெருமையை இத்தன்மையதென்று ஒருவன் தன்னொருவாயினாற் சொல்லும் வல்லமையுடையவனாவானோ? அந்தக்காலத்தில் தன்

னடியார் யாவர்க்கும் பரமபதத்தைக் கொடுக்கும் வள்ளல்தன்மையை யுடையவரான, அந்த நரசிம்மமூர்த்தியானவர், தமது வெண்மையான நகங்களினாலே இந்த இரணியனுடைய மார்பிலே நறுக்கென்று குத்தினார். குத்தினமாத்திரத்தில் மார்பினிடத்தில் குபுகுபுவென்று இரத்தவெள்ளமானது புறப்பட்டுப் பூமியெல்லாம் பரவினது. இப்படி யுத்தஞ்செய்தபிறகு நரசிம்மமூர்த்தியானவர் அந்திநேரத்தில் அவனுடைய கோபுரவாசற்படியில் தமது திருத்தொடைகளின்மேரில் இரணியாசுரனைவைத்து வச்சிராயுதம்போன்ற தமது நகங்களினால் அவன் மனிமார்பை இரண்டாகப்பிளந்து அவனுடைய உதிரங்களையெல்லாம் பூமியின்மேரில் சித்தவொட்டாமல் வாயினாலுறுஞ்சிக் கொப்புளித்துக்கொண்டு அவனைச்சம்மரித்து அவனால் தேவர்களுக்கு உண்டாயிருந்த துன்பங்களைப் போக்கினார்.

அந்தச்சமயத்தில் இரணியாசுரனுக்குப் பயந்தோடிப்போய்த் தாங்களிருந்த இடந்தெரியாமல் மறைந்திருந்த திரிநேத்திரங்களை யுடைய பரமசிவனும், எட்டுக்கண்களை யுடைய பிரமதேவனும், ஆயிரங்கண்களையுடைய இந்திரனும், திக்குப்பாலர்களும், எல்லாத்தேவர்களும், சமஸ்த ரிஷிக்கூட்டங்களும், மற்றுமுண்டான சகலமானபேர்களும் ஒன்றுசேர்ந்து அவ்விடத்தில்வந்திருந்து கொண்டு நம்முடைய ரக்ஷகராகிய இந்தநரசிம்மமூர்த்தியின் பயங்கரமான ஸ்வரூபத்தைக்கண்டு கண்கூசி; எந்தக்கண்களாற் காண்போமென் றிரக்கமுற்றவர்களாய் நிற்கப் பார்த்தபார்த்தபேர்களுடைய கண்களுக்கு முன்பாகத் தமது திருமுகமும், திருக்கைகளும், திருமேனியும், திருவடிகளுமாய்த் தோன்றி எல்லாவிடங்களிலும் தாமாய் நிறைந்து; வாக்கினாலும், மனத்தினாலும், அறிவினாலும், அளவிடக்கூடாதபடித்திருவடிகள் பாதலத்திற்குக் கீழாகவும், இடைப்பிரதேசம் ஐம்முகனுடையோருங் காண வரிதாம்படியாகவும், திருமுடி சத்தியலோக வாசியான பிரமதேவனாலும் அளவிட்டுக் காணமுடியாமலும், பெரிய ஆகாரத்துடனே சேவைசாதிக்கின்றதைக் கண்டு; சமஸ்தமான தேவர்களும், ரிஷிகளும் பயந்து நிற்க. அப்படி பல்லுக்குப்பல் இடைவெளி ஆயிரங்காதமாகவும், கோடானுகோடி திருமுடிகளையுடையவராகவும், அளவிடுதற்கரிதான பெரியதிருமேனியை யுடையவராகவும், பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற அந்த நரசிம்மமூர்த்திக்கெதிரே கமலோற்பவனான பிரமதேவன் வந்து நின்றுகொண்டு அவருடையபுகழையெடுத்துச் சொல்லத்தொடங்கினான்.

## கவி.

தன்னைப்படைப்பனவுந் தானேயெனுந்தன்மை, பின்னைப்படைத்தனவேற் காட்டும்பெரும்பெருமை, யுன்னைப்படைத்தாய்நீ யென்றுனுயிர்படைப்பா, னென்னைப்படைத்தாய்நீ யென்னுமதுயெற்றுமே.................. (க)

பல்லாயிரகோடி யண்டம்பணிக்கடனு, ணில்லாதமொக்குளிற் றோன்றுமானின்னுழையே, எல்லாவுருவுநீ யென்றக்காலிவ்வுருவம், வல்லேகுறித்தால் வரம்பின்மைவாராதோ .. ... (உ)

பேராயொருபொருட்கே பல்வகையாற் பேர்த்தெண்ணுந், தானாநிலையைத் தனியைப் பிறரில்லை, யாரைப்படைக்கின்ற தியாரையளிக்கின்றதி, யாரைத்துடைக்கின்ற தையாவறியேமால்............................(௩)

நின்னுளேயென்னை நிருமித்தாய்நின்னருளா, லென்னுளேயெப்பொருளு மியாவரையும் யானீன்றேன், பின்னிலேன்முன்னிலேன் எந்தைபெருமானே, பொன்னிலேதோன்றும் பூணுக்கும்பூட்சியாய்........................ (ச)

## பொருள்.

தேவரீருடைய கல்யாணகுணங்கள் ஒவ்வொன்றும் தன்னைத்தானே சிருஷ்டித்துக் கொண்டதென்று நினைப்பதற்கு, அக்குணங்கள் தேவரீருடைய திருமேனியையன்றியில் தன்னைத்தான் பிரத்தியேகமாகச் சிருஷ்டித்துக்காட்டுமேயானால்; அந்தப்பெருமையை உடையதாகும். அப்படிக்கில்லாமல் தேவரீரோ உம்முடைய திருமேனியையும், அத்திருமேனிக்குப்பிரகாசமாகத் திவ்யகல்யாணகுணங்களையுஞ்சிருஷ்டித்தீரானால் உலகசீவகோடிகளைச் சிருஷ்டிக்கும்படி என்னை நீர்சிருஷ்டித்தீரொன்றுஞ்செய்கை யெத்தன்மைத்தாகும். பல்லாயிரகோடி அண்டங்களும் குளிர்ந்தசமுத்திரத்தில் தோன்றிஅழியும் குமிழியைப்போல உம்மிடத்தி லுற்பவிக்கும் எல்லா வுருவங்களும் நீரேயாயிருக்க, அவற்றை யெல்லாம் அழிக்கும்படியான இவ்வுருவத்தையும் வகித்துக் கொள்ளுவீரோ யானால், அநவஸ்தா தோஷமென்கிற ஒருகுறைவரமாட்டாதோ! ஒருவஸ்துவுக்கே பலபெயரிட்டுப்பேசித்து நினைக்கும்படியான காட்சியையுடையவர் நீயொருவரே வேறொருவரில்லை. யாதலால் நீராரைச் சிருஷ்டிக்கின்றீர்-யாரை இரக்ஷிக்கின்றீர் - யாரைச்சம்மரிக்கின்றீர் - அம் மாயா லீலையை நாங்களொன்றுமறியமாட்டோம். உமது உந்திக்கமலத்தி லடியேனையுண்டாக்க உமதுகி

ருபை யினியமனத்திருமெலென்னிடத்தி னில்லா
ம், எல்லாப்பொருள்களையும் ருத்திரேந்திராதி
எல்லா ஜீவர்களையும் யான்சிருஷ்டித்தேன். உம்
மையன்றி எனக்கொரு காரணமுமில்லை - கா
ரியமுமில்லை - பிரம ருத்திரேந்திராதியர்களா
ன எங்கள் பிதாவாகிய பெருமானே! ஒரு
பொன்னினுண்டான பலபூஷணங்களைப் போ
லப்பல வடிவுடைய தேகதேகி ஐக்கியபாவ
மான ஏகஸ்வரூபரானவரோ? என்றிப்படியாக
ப் பிரமதேவனும், மழுவாயுதத்தையுடைய உ
ருத்திரனும், மற்றதேவர்க்கள் முதலிய யாவர்க
ளுஞ், சாஷ்டாங்கபிரணாமங்களைச்செய்துக்கொ
ண்டு இரண்டுபக்கங்களிலும் நின்றுகொண்டி
ருக்க. சக்கிரதரராகிய சாக்ஷாத்து ஸ்ரீவைகுண்
டபதியானவர் அடங்காத தமது கோபமாறி,இ
ப்போதே லோகமெல்லா மழிந்துபோகுமெ
ன்று மனம் நடுங்கிக் கொண்டிருக்கின்ற பிர
ம ருத்திரேந்திராதி சமஸ்ததேவர்களையும் பா
ர்த்துப்பயப்படாதேயுங்களென்று கிருபைசெ
ய்து,தாமரைபுஷ்பம்போன்ற தமது திருக்கர
த்தால் அபயங்கொடுத்தார். இப்படிக்கொடுத்த
சமயத்தில் தேவர்களெல்லாருந் தங்கள்பய நி
வாரணத்தின் பொருட்டுப்பூவில்வீற்றிருக்கின்ற
ஸ்ரீமகாலட்சுமியும், அழகுக்கு அழகானவளும்
சர்வத்திராளுக்கும் ஐஸ்வரியமானவளும்,பரம
பதவின்பத்தைக்கொடுப்பவளும், பிராணரக்ஷ
கியும், தேவாமிர்தத்தோடுங்கூடப் பிறந்தவளு
ம், தேவர்முதலிய யாவர்களையும் பெற்றதாயா
னவளுமாகிய-பெரியபிராட்டியானா அந்த நர
சிம்மமூர்த்தியினிடத்திற் செழுந்தருளும்படி
யாகப் பிரார்த்தித்தார்கள்.

அப்படி தேவர்கள்பிரார்த்தித்தப்பிரகா
ரம் தம்மெதிரிலெழுந்தருளிய செந்தாமரைப்
புட்பத்தின்மீது வீற்றிருக்கும் தூண்டாவிளக்
கானவளும், நல்லவாசனைபொருந்திய புஷ்ப
மாலையிற்கட்டிய விளங்கொழுந்தைப்போல்ற
வளும், எல்லாவுலகங்களையும் அவ்வுலகங்களிலு
ள்ள பிரமருத்திரேந்திராதிகள்முதலிய ஜீவகோ
டிகளையும் பெற்றதாயாகியவளுமான, சாக்ஷாத்
து ஸ்ரீமகாலட்சுமியைச் சமானுதிக-ரகிதனுன-
சாக்ஷாத்துநரசிம்மமூர்த்தியானவர்கிருபையுட
னே கடாக்ஷித்த மாத்திரத்தில் ரிஷிக்கூட்டங்க
ளெல்லாம் புருஷ சூக்தத்தினல் ஸ்தோத்
திரம் பண்ணினர்கள். அப்போது பரஞ்
சோதியாகிய ஸ்ரீநரசிம்மமூர்த்தியானவர் சந்
தோஷத்துடன் தனக்கெதிரில் நிற்கின்ற பக்
த சிரோன்மணியாகிய பிரகலாதாழ்வானைக்
கடாக்ஷித்து - ஐயா, பிரகலாதாழ்வானே?
உன்னுடைய தகப்பனகிய இரணியனைநான்
உன் கண்ணெதிரே கொன்று அவனுடைய
உயிரைப்போக்கின காலத்திலும்; உன்மனது
கிலேசித்தேனுஞ் சஞ்சலப்படாமல் தர்மமார்
க்கமானசெய்கையுடனேகூட என்மீது அத்திய
ந்தபக்திவைத்திருந்தாயே! அப்படிப்பட்ட
தயவுள்ள உனக்கு நானென்ன பிரதியுபகாரஞ்
செய்யப்போகின்றேன். ஒரிமைப்பொழுதை
ஆயிரம்பங்கிட்டு அதிலொருபங்கான சிறுகா
லத்திற்குள் உன்தகப்பனை உயிரைமாத்திரம்நீக்
குகிறவனைப்போல அவனுடைய தேகத்தையும்
பிளந்து சின்னபின்னப்படுத்தக்கண்டும், பொ
றுமையமைந்த நல்லமனதுடனே நீ இருந்தா
யே! இனிமேலுனது சந்ததியார் என்னிடத்தி
ல் அளவில்லாத பலகுற்றங்களைச்செய்தபோதி
லும், அவர்களைக்கொல்லுகிறதேயில்லை, உனக்
கும் நல்லவனுகவிருக்கிறேன். நானுனக்குச்செ
ய்யவேண்டிய நன்மைகள் எவ்வளவுமீவண்டுமா
னபோதினும் அஞ்சாமைப்படாமல் கேட்கக்கட
வாயென்று ஆக்கியாபித்தருளினர். அப்போது
பிரகலாதாழ்வார் ஸ்வாமீ! உம்மால்முன்புஅடி
யேன்பெற்ற பேறுகளுக்கு ஓரளவில்லை, ஆயி
னும் இன்னொருவரம் அடியேனுக்குக்கிருபை
செய்யவேண்டும். அதென்னவென்றால், அடி
யேன் எலும்பில்லாத இழிபிறவியாகிய புழு
வாகச் செனித்த போதினும், உம்மிடத்தும்-
உம்மடியாரிடத்திலும் அத்தியந்த அன்புபெற்
றிருக்குப்படியான இந்த அரியவர மொன்று
மாத்திரமே வேண்டுமென்றான். அப்படிச்சொ
ன்னபிரகலாத ஆழ்வானைக் கடாக்ஷித்துக்கருணை
த்திருவுள்ளத்தராய்ஓ!பிரகலாதாழ்வானே!பிரம
ருத்திராதி தேவர்களான சமஸ்தபூதங்களும் அ
ழிந்தகாலத்திலும் நீ அழியாமல் என்னைப்போ
ல் நித்தியனுய்ச் சீவன்முத்தனுகக்கடவாய் சோ
திமயமாகிய பிரகலாதாழ்வானே! இந்த மூன்
றுலோக வாசிகளும் உனக்கடிமையல்லவோ!
அவர்களெல்லோ வணங்கியடையும் பிரயோச
னங்களையெல்லாம் உன்னைவணங்கி - உன்னுற்
பெற் றுஜ்ஜீவிக்கக் கடவர்கள். எனக் கன்பான
வர்களெல்லாம் உனக் கன்பராகக்கடவர்கள். நீ
இனித்தானவர்களுக்கு அரசனு யிருக்கிறதுமா
த்திரமோ? வானவர்களுக்கும் நீயேதலைவனு
யிருக்கின்றாய்! நல்ல தர்மமும் - சத்திய
மும் - நான்குவேதங்களும் - பெரியஞா
னமும் - பொறுமையும் - எண்குணங்களும்
உன்சொற்படி உனக்கு வேண்டியவைகளைச்
செய்துய்யக்கடவர்கள். இனி எனக்கு முனக்கு
மொருபேதமு மில்லையென்று எம்பெருமான்
வரங்கொடுத்து. எல்லாலோகத்தவர்களும் கை
கூப்பி வணங்கும்படியாகவும், ஆசாரவாசலி
ல் செயபேரிகை முழங்கும்படியாகவும், பிரக
லாதாழ்வானுக்கு திருமுடிசூட்டித் தேவர்க

ளையெல்லா மறைத்து நீங்கள் இந்தப் பிள்ளைக்குச் செய்யவேண்டிய உரிமை பெருமைகளையெல்லாம் செய்யக்கடவீர்களென்று ஆக்கியாபித்தார். அப்படியே தேவர்களெல்லாரும்பிரகலாதாழ்வானுடைய பட்டாபிஷேகத்தில் தங்கள்தங்களுக்குரிய கடமைகளைச்செய்யவும், பிரமதேவன் ஓமம்வளர்க்கவும், சாக்ஷாத் நாராயணன் முடிசூட்டவும், இந்தப்பிரகாரமாகப் பிரகலாதாழ்வான் மகாராஜனாய்த் திரிலோகத்தவர்களும், ஸ்தோத்திரம்பண்ணவும், மகாரிஷிகள் வேதபாராயணஞ் செய்யவும், சிம்மாசனத்தின்மீது எழுந்தருளியிருந்தார். இது பூர்வவிருத்தாந்தமாகும். ஓ அண்ணா! இராவணேஸ்வரா? நீ இதை நன்றாய் நோக்காலோசனைசெய்யவேண்டும், என்னமோ சாமான்னியமென்று அலசியம் பண்ணுவாயானால் தீமைவிளைகிறது சத்தியமாகுமென்று புத்திமான்களில் சிரேஷ்டரான (விபீஷிணாழ்வான்) தன்தமயனாகிய இராவணனுக்குச் சொன்னார்.

இரணியவதைப்படலம்

முற்றும்.

.................

## விபூஷணனடைக்கலப்படலம்.



இந்தப்பிரகாரமாக விபீஷிணாழ்வான்சொல்ல, இராவணன்கேட்டும் - சீதையினிடத்தில் தான்வைத்திருந்த ஆசையினாலே அந்தக்கேழ்வியைத் தன்மனதில் உறுதியென்றுநம்பாமல் செவ்வரக்கூட்டியதுபோல், இரண்டுகண்களுஞ் சிவந்து மிகுந்தகோபமுடையவனாய் இரணியனென்கிறவன் என்னைக்காட்டிலும் மிகுந்த பலமுள்ளவன். அப்படிப்பட்டவனை அந்தவிஷ்ணுவானவன் கொன்றுபோட்டானென்று பயந்து இந்தமனிதரிடத்தில் நீ பக்ஷம் வைத்திருக்கின்றாய்! மரணமென்கிற ஒரு முடிவுகாலத்தினால் அப்படிப்பட்ட பலமொழியுமேயல்லாமல் வேறல்ல, அப்படிப்பட்ட இரணியனால் பெற்று வளர்க்கப்பட்ட பிரகலாதனன் வளர்த்தகடாவையில்பாய்ந்ததுபோலத் தன்தகப்பனை அந்தவிஷ்ணுவானவன் பிளந்து சம்ஹாரித்தகாலத்தில்விசனமென்பது எள்ளளவேனுமில்லாமல், தான் மிகுந்த மகிழ்வடைந்திருந்தான். அந்தப்பிரகலாதனனும் என்பகையாளிகளானஅந்த மானிடர்களுக்குச் சிநேகம்பூண்டிருக்கின்ற நீயும் சமானமானவர்கள். உங்களைப்போலொத்த துரோக சிந்தனையுடையோர்கள் வேறொருவருண்டோ? மிகுந்த பெருமையுடையவனாகிய இரணியனுடைய குமாரனான பிரகலாதனனுடைய சுபாவத்தைப்போலச் செய்யவேண்டிய தந்திரங்களை நீசெய்துமுடித்து நானிந்த மனிதனுக்குத் தோற்றபின்பு ஏழையான நீஎன்னுடைய இந்தமிகுந்த ஐஸ்வரியத்தை அடைந்து வாழலாமென்றிருக்கிறாய் உன்னுடைய நினைவின்படி இது உனக்குக்கிடைக்குமோ? நீஅவர்களிடத்தில்வெகுநாளைய உறவாளிகளைப்போலமிகுந்தஅன்புவைத்திருக்கின்றாய்எனக்குப்பகையாளிகளாகியஅந்தமனிதரிடத்தில்சிநேகம்வைத்திருக்கின்றாய்-அவர்கள்பக்ஷத்தில் மெத்த உருகிப்போகிறாய்- அழுகிறாய்- அவர்களை ஸ்தோத்திரம்பண்ணுகிறாய் - ஆகையால் அவர்களுக்கு நீ புகலா யிருக்கின்றாய் - இதற்குவேறே சாட்சி வேண்டியதில்லை, அந்தமனிதர்களிடத்திற்குப்போய் அவர்களைச் சிநேகஞ் செய்துகொண்டு செய்யவேண்டிய தந்திரங்களையெல்லாம் நன்றாயாலோசனைபண்ணிக்கொண்டாய்- என்னைச்செயிக்கவேண்டுமென்றும்நினைத்திருக்கின்றாய்- இந்த இராசரீகத்தில்பேரினு மாசைவைத்திருக்கின்றாய் - உன்னுடைய செய்கையானது வெகுகொடூரமானதாகவிருக்கின்றது, உன்னைப்பார்க்கினு மெனக்குப் பகையாளிகளாரிருக்கின்றார்கள். அன்றைக்கொரு குரங்குவந்து நம்முடைய அசோகவனத்தையழித்துவிட்டதற்காக அதைக்கொல்லும்படியாகநான்சொன்னதற்குத் தூதனைக்கொல்லுவதுவெற்றியல்லவென்று விலக்கிவிட்டாய்-இனி நடக்கவேண்டியகாரியத்தை நினைத்துக்கொண்டு வெற்றிமாலையை அணிந்துவந்திருக்கின்ற ஸ்ரீராமனை உனக்குத்துணைவனாக்கிக்கொள்ளுகிறதற்குத்தீர்மானித்திருக்கின்றாய் - நீ உன்பிராணனுக்குப் பயந்து இருக்கின்றா யானபடியால் எதிரிகளோடு யுத்தஞ் செய்கிறதற்கு நீதக்க யோக்கியனுமல்ல உனக்கு இரக்ஷகர்களாக அந்த மனிதர்களிடத்தில் சிநேகம் வைத்திருக்கிறாய்? உன்மனதிலுதிருக்கின்றது. நீ பிறந்த இராக்ஷச நிலைமையுமாற்றிவிட்டாய் விஷத்தைக்கூட வைத்திருப்பதுபோல உன்னையு மென்னுடன்கூட வைத்துக்கொண்டு வாழ்கிறதினால் நன்மையுண்டாகுமோ? ஆகையால் சகோதர அத்தியென்கிறதை நினைத்து உன்னைக்கொல்லாமல் விட்டுவிட்டேன் நீஒன்றும்பேசாதே சீக்கிரமாய் வெளியேபோய்விடு என்கண்முன் நிற்பாயேயாகில் மரணமடைந் திடுவாயென்று இனி அழிந்துபோகின்றவனும் தனக்குள்ள அறிவெல்லாங்கெட்டவனுமான இராவணன் சொன்னான்.

அப்படி அவன்சொன்ன மாத்திரத்தில் (விபீஷிணாழ்வான்) அந்தச் சபையைவிட்டெழுந்திருந்து ஆகாசமார்க்கத்திற்போய் - அநேகநீதியான காரியங்களை ஆலோசித்து- அண்ணா பிரதாபலங்கேஸ்வரா? மிகுந்த வாழ்வுடனேக்

ட ஊழிகாலபரியந்தம் உயிரோடேயிங்கூடிவாழ்ந்திருக்கிறதை எள்ளளவும் நீநினையாமல் அற்பமானபேர்கள் சொல்லுகிறதைக்கேட்டுக் கெட்டுப்போகிறது நியாயமாகுமா? தர்மந்தப்பினபேர்களுக்கு ஆண்மையுமுண்டா! உன்பிள்ளைகளென்ன? குருக்கள்மாரென்ன? மிகுந்தபந்துக்களென்ன? சிநேகிதர்களென்ன? பலஹீனர்களும் பலமுள்ளவர்களுமான உன்னைச்சேர்ந்தபேர்களென்ன? இத்தனைபேர்களையும் ஸ்ரீராமருடைய அம்புக்கிலாயாகக் கொடுத்து நீயுமிறந்துபோவாய். நான் பலவகையாலும் உறுதியானவைகளையும், தகுந்தவைகளையும், உன்மனதுக் கிசையும்படியாகத் தெரிவித்தேன் அவ்வளவையும் நீஆலோசிக்கவில்லை. அண்ணா! என்குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளவேண்டுமென்று உத்தமனானவிபீஷணாழ்வார் சொல்லிப்போட்டு, அந்த இலங்கா பட்டணத்தைவிட்டுப் புறப்படும்போது அனலன்- அனிலன்-அரன்-சம்பாதிஎன்கிற நான்குமந்திரிகளும் வேகமாய்வந்து விபீஷணாழ்வாருடனேபுறப்பட்டார்கள். அவ்வாறுபுறப்பட்ட விபீஷணாழ்வாரும், நாலுதோழர்களும், குரங்குப்படையோடு இராமலக்ஷ்மணர்களென்கின்ற இரண்டுமனிதர்கள். சமுத்திரக் கரையில் வந்து சேர்ந்திருக்கிறார்கள். என்று சமாசாரங்கேட்டு, வேறோரிடத்துக்குப்போய் இந்த நான்கு தோழர்களுடன் விபீஷணாழ்வாராலோசிக்கத் தொடங்கினார். ஐயா! தோழர்களே? தர்மசித்தையுடையவர்களிடத்திலே எனக்குப் பக்ஷமுண்டாயிருக்கின்றது. நான் புகழுபல்லாமல் வாழ்வை விரும்பவில்லை மறந்துவிட்டேன். என்சகோதரன் தர்மத்தை யுறுதியென்று பிடியாதபடியினாலே அவனைவிட்டு நீங்கிவிட்டேன். இனி நான் செய்யவேண்டியதென்ன நீங்கள் சொல்லுங்களென்று கேட்க, தருமசாஸ்திர நிபுணர்களான அந்தநான்கு ஆலோசனைமந்திரிகளும், ஒருவருக்கொருவர் நன்றாயாலோசித்துச்சொல்லத்தொடங்கினார்கள். ஐயா! விபீஷணமஹாராஜனே! பெருமையிற்சிறந்தது இதினும் வேறொன்றில்லை, குறைவில்லாத ஐஸ்வரியமானது தர்மசொரூபியாகிய இந்த இராமசந்திரனைத் தரிசித்துக்கொண்டிருக்கின்றதே, இனி உமக்குத் தர்மமுமிதுவேயாகும், என்று சொன்னார்கள். அதை விபீஷணாழ்வார்கேட்டு - ஐயா, மந்திரிகளே! நல்லவார்த்தை சொன்னீர்கள். நாமிதைத் தவிர்ந்து வேறொருகாரியஞ் செய்வோமேயானால் இராக்ஷசர்களாகவே போய்விடுவோம். நம்முடைய அல்பமான சென்மம் நீங்கிக் கடைத்தேறும்படி அநந்தகல்யாண குணகண ஸ்ரீமானான, ஸ்ரீராம மூர்த்தியினுடைய இரண்டு செந்தாமரைக் கமலம்போன்ற திருவடிகளையும் அடைக்கலமாய்ச் சேரக்கடவோம் என்று பின்னுஞ் சொல்லுகின்றார்.

இந்த ஸ்ரீராமமூர்த்தியை நான் முன் பொருக்காலும் பார்த்ததுமில்லை, இவரைப் பற்றிக்கேள்விப்பட்டதுமில்லை, இவரிடத்தில் எனக்கன்பு பிறந்ததற்குக் காரணந் தெரியவில்லை, என்தேகமெல்லாம் ஆனந்தமென்னுங் கடலிற் குளித்துக் குளிர்ந்துவிட்டது. என்னுடைய நெஞ்சும் திடமாய் நிற்கமாட்டவில்லை உருகிப்போகிறது-இவர் என்னுடைய அல்பமான பிறவிநோய்க்குப் பகையாளிபோலக் காணப்படுகின்றார், ஈஸ்வரபக்தியும், நல்லதர்ம்மமும், பக்ஷபாதமின்மையும் பிறவுயிர்களிடத்திலருளும் ஸ்ரீவேதவித்துக்களுடைய ஆசீர்வாதங்களும் மூலதாமரைபுஷ்பத்தில் வசித்துக்கொண்டிருக்கின்ற சாக்ஷாத்து பிரமதேவனை நோக்கித் தவஞ்செய்த காலத்தில் நான் விரும்பிப்பெற்றவரங்களும், ஆகியஇவைகளாலுண்டாகிய பிரயோசனங்கள், என்னை இப்படிப்பட்ட பரிசுத்தவானாகச்செய்தனவைகளே என்று நினைத்தேன். பிரமருத்திரேந்திராதி யாவர்களுக்கும் ஏகநாயகனாகிய இந்த ஸ்ரீராமமூர்த்தியினுடைய திருவடிகளைத் தியானித்து நம்முடைய மனதில் நினைத்த எண்ணங்களையெல்லாம் முடித்துக் கொள்ளும்படி யாயினேம். என்று மிகுந்த ஆநந்த பூர்ணனாய்க் கடலைத் தாண்டிப்போய் அந்தவிபீஷணரானவர் அக்கரையில் எங்கும் விளக்கு வெளிச்சம் பிரகாசிக்கின்றதினால் பாற்கடலில் தாமரை புஷ்பித் திருக்கிறதுபோலக் காணப்படுகின்ற பெரியவானரசேனைகளைத் தமதுகண்ணினாலே பார்த்து தேகத்தோடுகூடிய சகலஜீவகோடிகளையும் இந்தவானரங்களையும்ஓரிடத்தில்நிறுத்தி மதிப்பிடுவோமானால் இந்தவானரசேனைகளின் தொகையே பெரிதாயிருக்குமென்று, தன்னுடைய மந்திரிகளுக்குச்சொல்லி, நாமிப்போது இராத்திரிகாலமாயிருக்கிறபடியினாலே அவ்விடத்திற்குப்போகிறது நமக்குத்தகுதியல்லவென்று உயர்ந்தபொருள்பட ஆலோசனைசெய்து அதிவிவேகியான அந்தவிபீஷணாழ்வார், ஓரிடத்தில் மறைந்திருந்தார். ஒற்றைச்சக்கரத்தைப்பூண்ட தேரையுடைய சூரியனுமுதயமாயினான்.

அந்தச் சமயத்தில் லோகா ராட்டிரான ஸ்ரீராமமூர்த்தியானவர், சமுத்திரத்தைக் கடக்கும்படியாக நினைவுகொண்டவராய்- நீலோற்பலபுஷ்பம்போன்ற கண்களோடுகூடிய சீதாபிராட்டியாருடைய பவளத்தைக் காட்டினு

ன்று சிறந்து பிரகாசிக்கின்ற சிவந்தவிதழை நினைத்துச் சோர்வடைந்து, அந்தக்கடற்கரைக்குச் சமீபத்தில்வந்து அவ்விடத்திலுள்ள சோலைகளையும், நீர்க்குழிகளையும், மணல்வெளியையும், தாழஞ்செடிகளையும், நீலோற்பலபுஷ்பங்களையும், கருங்குவளைப்புஷ்பங்களையும், படர்ந்திருக்கின்ற புன்னை விருக்ஷங்களையும், அதன் பக்கத்தில் அன்னங்கள் நிறைந்து ஒன்றோடொன் றணையும்படியாகக் காமவேட்கையை வளர்க்கத்தக்க புஷ்பச்சோலைகளையும், பார்த்தும். அவ்விடத்தில் கும்பல்கும்பலாக அலைகளினாலொதுக்குண்டு கிடக்கின்ற முத்துக் குவியல்களையும், பவளக்குவியல்களையும், மற்றமணிக்குப்பைகளையும், சொர்ணமயமான கடற்கரைகளையும், யாவர்களும் பயப்படும்படியான அநேகமரங்களடர்ந்த தோப்புகளையும், மணற்குன்றுகளையும், அவற்றின்மேல் புரண்டுவருகின்ற கடலலைகளையும், உற்றுப்பார்த்தும். ஆய்ச்சியர் தங்கள்நாயகன்மார்கள் எப்போது வருவார்களென்று மின்னலைப்போலும் பிரகாசிக்கின்ற அழகிய விரல்கள் தேயும்படியாகச் சுழிகள்சுழித்துச் சகுனம் பார்க்கும்போது, தங்கள் கண்ணீரானது அந்தச் சுழிகளை அழித்துவிட, அதனால் விசனமுடையவர்களாய் - மறுபடியும் அச்சுழிகளைச் சுழித்துக்கொண்டு இருக்கின்ற சமுத்திரக்கரையிலுள்ள புன்னைமரச் சோலையையும், நுழைந்து பார்த்தும். குளிர்ந்த சமுத்திரத்தினுடைய அலைகளானது மோதியடித்துக்கொண்டு வருகிறதினாலே அதன்கரையிலுள்ள வளைந்ததாழஞ்செடிகளின்மேல், பாதிச்சிறகினால் தன்னுடைய பெட்டையைப் பக்கத்திலணைத்துக்கொண்டு, ஆணன்னங்கள் நித்திரைசெய்கிறதைப்பார்த்தும். பெருமூச்சு விட்டவராய். உண்ணுதற்காக மீன்கொண்டுவரும்படி அந்த மரக்கிளையைவிட்டுப் பிரிந்துபோன ஆண்கொக்கானது திரும்பிவரப்பட்ட திசையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்ற வெண்மையான பெட்டைக் கொக்கைப்பார்த்து, மனயிரக்க முடையவராயும். ஒருபெண் கொக்கின்மேல் மோகங்கொண்ட இரண்டு ஆண்கொக்குகள், மிகுந்த கோபமுடையவைகளாய்க் கண்களில் நெருப்புப்பொறிபறக்க. ஒன்றோடொன்று பின்னிடையாமல் யுத்தஞ்செய்வதைக்கண்டு, தானுங்கோபங்கொண்டு புருவநெறிப்பையுடையவராயும். நிறைந்த ஊடலினாலே ஆணன்னத்தை ஜெயித்தப் பெண்ணன்னமானது கலவியில் ஆணன்னத்திற்குத் தோர்வையுற்று நிற்கிறதைக்கண்டு, தனதுபவளம்போன்றவிதழை முத்துப்போன்றபற்களினால் அதுக்கிக்கொண்டு துக்கமுடையவராகியும், சமுத்திரக்கரையிலுலாவிக்கொண்டிருந்த சக்கிரவர்த்தித்திருமகனானவர், இளையபெருமாள், சுக்கிரீவமகாராஜர், சாம்பவர், அநுமார், முதலானபேர்கள் தேறுதலைசொல்லத் திருவுளந்தேறி, சுபாவவழியோடுங்கூடியபித்தனைப்போல அவ்விடத்தைவிட்டுத் தமது உறைவிடமே வந்துசேர்ந்துச் சதுரர்களான துணைவர்களோடுங் கூடிக்கொண்டு அவ்விடத்தில் அணியணியாய்நிற்கின்ற வானரசேனையில் (விபீஷணாழ்வார்) மனக்களங்கமில்லாமல் வந்துசேர்ந்தார்.

இப்படிவந்த விபீஷணாழ்வாரையும், அவருடைய தோழர்களையும், வானரசேனைகள் பார்த்து, நம்மிடத்திற்கு இந்த இராக்ஷதர்கள்வந்தார்கள். வந்தவர்கள் என்னசெய்ய நினைக்கின்றார்களோ அதைஅறிகிலோம். ஆதலால், இவர்களைத் தள்ளுங்கள் பிடியுங்கள் அடியுங்கள்என்று இடிஇடித்தாற்போல கர்ச்சித்து சொல்லிக்கொண்டு அவர்களைச் சுற்றிக்கொண்டார்கள். அப்போது விபீஷணாழ்வாரானவர் இவ்விடத்தில் எனக்கு வேறொருதுணையுமில்லை, அதிவீரபராக்கிரமசாலியான - ஸ்ரீராகவமூர்த்தியே உமக்கபயமென்று கூவிய சப்தமானது, சக்கிரவர்த்தித் திருமகனுடைய திருச்செவியில் நுழைந்தமாத்திரத்தில் தமது துணைவராகிய- இளையபெருமாள், சுக்கிரீவன், அநுமார், சாம்பவர் முதலானவர்களைக் கிருபையோடு முகமலர்ந்துபார்த்து ஐயா, ஸ்ரீராகவப்பெருமானே! உமக்கபயமென்று சொல்லுகிறார்களே அவர்களியாரென்று பார்த்துவந்து சொல்லுங்களென்று; ஆக்கியாபித்தார் அங்கேயப்படியிருக்க, இங்கேவானரசேனையில் வந்துசேர்ந்தபோது வானரவீரர்களால் விபீஷணருக் குண்டானதைச் சொல்லுகிறோம் என்று கம்பநாட்டாழ்வார் சொல்லுகிறார். வானரர்கள் விபீஷணனைப்பார்த்துத் தர்மதேவதையே இந்த இலங்காதிபதியானவனை இங்கே கொண்டுவந்துவிட்டது. யதார்த்தமாய் என்னமோ ஒருபொல்லாங்கு செய்கிறதற்கு இவ்விடத்திற்குவந்தான்- இவன்தானிராவணன் ஆதலால், நம்முடைய எண்ணத்தை முடித்துக் கொள்ளலாம். மஹாபாவியாகிய ராவணனுக்கு இருபதுகைகளும், பத்துத்தலைகளுமிருக்கிறதாய்ச் சொல்லுவார்களே ! அவைகளெல்லாம் அறுந்து போய் விட்டதுகளோ ! என்கின்றவர்களும், எங்களோடு சண்டைசெய்ய மாட்டுவையோ ! யென்கிறவர்களுமாய், ஆளுக்கொரு வார்த்தையாகச்சொல்லி மிகுந்த கோபத்தோடு நெருக்கி இவனைப்பிடித்து நாம் சிறையில்வைத்

றுவிட்டுப்பிறகு நம்முடையசுவாமிக்குச்சொல்லுவோ மென்பார்கள் சிலர். இவனைக்கொல்லாமல் இவனைப்பார்த்தும் க்ஷணப்பொழுதாவது நாம் சும்மாநிற்கவேண்டிய தென்னவென்று நெருங்கிப்போகின்றார்கள் சிலர். இவர்களிராக்ஷசஜாதியிற் பிறந்தவர்களாதலாற் க்ஷணப்போதுக்குள்ளாக ஆகாசமார்க்கமாய் மறைந்துபோய்விட்டால் அப்புறம்நாம் செய்வதென்ன என்பார்கள் சிலர். இவனைச் சும்மாக் கொல்லுகிறது மாத்திரந் தகுதியோ? குத்தி நசுக்கிவிடுவதே நல்லதென்று வெகு கோபத்துடனே சொல்லுகிறார்கள் சிலர். இப்படி அவரவர்களுக்குத்தோன்றியபடிசொல்லும்போது நிபுணர்களான - மயிந்தனென்பவனும், துமிந்தனென்பவனும், ஸ்ரீராகவருடைய நியமனத்தால் விரைவாயோடிவந்து அப்படிக் கொல்லும்படியாகப் போகின்ற சேனைத்தலைவர்களை விலக்கி, வேதசாஸ்திரங்களை யுணர்ந்தவர்களான அந்த இரண்டு வானரவீரரும், அந்த அரக்கனைப்பார்த்து இவர்கள் கோபக் குறியுடையவர்களல்லவென்றுதெரிந்து, சாமுத்திரிகாசாஸ்திரப்படி அவர்கள் விவேகாதிகளையெல்லாம் ஆராய்ந்து. நீங்கள் யார்? இவ்விடத்திற்குவந்த காரணமென்ன? சண்டைசெய்கிறதற்காகவோ? அல்லது வேறே ஒரு எண்ணமாகவோவந்தீர்கள். மேலும் நீங்கள் இவ்விடம் வந்துசேர்ந்ததற்குக் காரணமேதுவோ அதுகளையெல்லாம் ஒளியாமல் உண்மையாகச் சொல்ல வேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு சத்தியவந்தனான விபீஷணாழ்வாருடைய தோழரில் ஒருவனாகிய அனலன் சொல்லுகிறான். இவர்பிர்ம்மாவினுடைய குமாரரான தயாசீலரும், தர்மவானுமாகிய புலஸ்தியபிர்ம்மாவினுடைய புத்திரர் விபீஷணரென்னும் பெயரினையுடையவர், சூரியவம்சசிரேஷ்டரும்லோகநாயகருமானஸ்ரீராகவப்பிரானுடையதிருவடிகளைச் சரணமடைந்து உஜ்ஜீவிக்கவந்தார். தர்மநிலைமை தவறாமலும், சாக்ஷாத்து நாராயணமூர்த்தியினிடத்தில் நிறைந்த அன்பும், நிலைத்த சத்தியமும், பிராமணர்களிடத்தில் விஸ்வாசமுமுதலாகிய இந்த நற்செய்கைகளையெல்லாம் பிரமதேவனைநோக்கித்தபசுசெய்து பெற்றுக்கொண்டார். அதன்றியும்; இவர் இராவணனைப்பார்த்து - ஐயா, இராவணேஸ்வரா! நீ அக்கினியைமுன்தானையில்முடிபோட்டுக்கொண்டிருக்கின்றவர்களைப்போலஅவிவேகமுள்ளவனாய் லோகநாயகருடைய தேவியாகிய சீதாபிராட்டியாரைச் சிறையில் வைக்கலாமா? அந்தச் சீதாபிராட்டியை விட்டுவிட்டால் நீ கடைத்தேறுவாய் விடாமற் போவாயேயானால் அழிந்துபோவது சித்தமென்று, பற்பலவிதமான நல்லபுத்திமதிகளைச்சொன்னார். அதைக் கேட்டு கொடூரமான துர்ச்சிந்தையையுடையவனும், புத்திஹீனனுமான இராவணன் இவரைப்பார்த்து நீ எனக்குப் பின்பிறந்தவனென்ற காரணத்தினால் பிழைத்துக்கொண்டாய், வெளியே போய்விடு என்கண்முன்னாக நின்றால் இறந்துபோவாயென்று சொன்னதைக்கேட்டு அந்த இராவணனைவிட்டு நீங்கி வந்துவிட்டார் என்று நடந்த சவிஸ்தாரங்களையெல்லாம் விரித்துச் சொல்லியதை மயிந்தனென்பவன் கேட்டு ஆலோசித்து, இந்தவார்த்தை சுவாமி இடத்தில் அவசியம் சொல்லத்தக்கதென்று திரும்பி இளையபெருமாளும், வானரசேனைகளும், பிராகிருதகாவலாய்ச் சூழ்ந்துநிற்கச்செய்து தருமமும், நீதியும், தவமும், மதிள்களாகவும்; கீர்த்தியும், பொறுமையும், வாயில்களாகவும்; கிருபையே ஒரு கோயிலாகவுங் கொண்டு எழுந்தருளியிருக்கின்றசக்கிரவர்த்தித் திருமகனுடைய சன்னிதியில் மிகுந்தபயபக்தியுடனேபோய் அவருடைய திருவடிகளில்தெண்டனிட்டுச்சுவாமி! அடியேனுக்கொருவிண்ணப்ப மிருக்கின்றதென்றுசொல்லத், தாமரைத்தடாகம்போலும், திருக்கண்களோடுங்கூடி எழுந்தருளியிருக்கின்றஸ்ரீராமமூர்த்தியானவர் சுற்றிக் கட்டியிருக்கின்ற சடாமகுடத்தோடுங்கூடிய தமது திருமுடியை அசைத்துச்சொல்லும்படி சைஜ்ஞைசெய்ய, மயிந்தன் தான்சத்தியமாகக்கண்டதையும், கேட்டதையும், சொல்லத்தொடங்கினான். சுவாமி! மேல் விளையுங்காரியம் அடியேனுக்குத் தெரியாது, விபீஷணனென்கின்ற பெயரையுடைய ஒருவன் இராவணனுக்குத் தம்பியாம் அவன் தன்னுடைய மந்திரிகளானநான்குதோழர்களோடு நம்முடைய வானரசைனியங்கள் மத்தியில் வந்துசேர்ந்தான். அப்படி வந்துசேர்ந்தவனை அநேகவானரவீரர்கள் கொல்லுங்கள்- பிடியுங்கள் - தள்ளுங்களென்று சொல்லிக்கொண்டு நெருங்கிப்போனார்க ளதை அடியேன்பார்த்துப் பொறுங்களென்று அவர்களைத் தடுத்து அவனை நீயார்! உன்னுடையநிலைமையென்ன! சொல்லென்று கேட்க, அவன் துணைவர்களில் அனலனென்னு மொருவன் இந்தவிபீஷணர் கொடுந்தீமையைச்செய்துமுடித்த தன்தமயனான ராவணன் போய்ச் சேரப்போகிறது துன்பமிகும் நரகஸ்தானமே அவனைக்காப்பதற்கு வேறொரு இடமுமில்லை என்று, கிருபாநிதியாகிய சக்கிரவர்த்தித் திருமகனைச் சரணமடைந்தானென்று சொன்னதுமன்றி, அந்த விபீஷணன் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் பற்று

ள்ள சிந்தனையையும், உண்மையையும், பிரம தேவனிடத்தில் வெகுகாலந் தபசுசெய்து வர மாகப்பெற்ற பரிசுத்தவா னென்றுஞ் சொன் னன், மேலும் பதிவிரதா சிரோமணியான ஸீதாபிராட்டியை நீவிட்டுவிடாமல் காத்திருப் பையேயானால், இப்போது சூரியனுழையாம ல் பக்கத்தில் சுற்றிப்போகும்படியான பெரு மையையுடைய இந்த இலங்காபட்டணத்தில் உன்னுடைய கிரீடங்களோடுங்கூடிய தலைகள் புரளுமென்று ஒருநல்லபுத்தியும்சொன்னனும் அதற்கு இராவணன் அதிககோபமுள்ளவனாய்க் கண்களிற் றீப்பொறிபறக்கும்படியாக ஓ!விபீ ஷிணு? நீஒருக்ஷணப்பொழுதேனும் என்சமீப த்தில நிற்பையேயாகில் உனக்கு மரணம்சம்ப விப்பது நிச்சயம் ஆகையால், என்கண்முன் னுக நிற்காமல் அப்புறம் போய்விடுவென்று சொல்லத் தேவரீரைச் சரணமடைந்தானும் என்றுஞ் சொன்னன். இது அடியேன் கேள் விப்பட்ட விருத்தாந்தம் என்று மயிந்தனெ ன்பவன் விண்ணப்பம் பண்ணிக்கொண்ட பொழுது அவ்வார்த்தையைக் கேட்ட - சக் கிரவர்த்தித் திருமகனுகிய ஸ்ரீராமமூர்த்தியா னவர் தமக்கருகில் நிற்கின்ற சுக்கிரீவமகாரா ஜன் முதலான துணைவர்களைப்பார்த்து, இப் போதிந்த மயிந்தன்சொன்னதைக் கேட்டீர்க ளே ! இந்த விபீஷிணன் அடைக்கலப்படத்த க்கவனே! நீக்கப்படத்தக்கவனே!உங்களுடைய பத்திகோசாத்தினாலே சீர்தூக்கிப் பார்த்துச் சொல்லுங்களென்று நியமித்த விசாலமான க மலலோசனருக்குத் தண்டஞ் சமர்ப்பித்து இ ராஜகாரிய விவகாரங்களை நடத்துகிறதில் இன் னது தகுந்தயிடமின்னது தகுந்தகாலமென்று ஆலோசித் தறியும்படியான சமர்த்துள்ள ரத் தின கிரீடதாரனுகிய சுக்கிரீவமகாராஜன் ஆதி யான வேதங்களையும், மனுமுதலான சாஸ்தி ரங்களையும்,கரைகண்ட தேவரீர் இப்படிப்பட் ட காரியங்களைக்குறித்து எங்களிடத்தில் விசா ரிக்கவோ எங்களைவினவினகாரியம்விதிக்குமே லிருக்கின்றதே ! கிருபா சமுத்திர மானவ னே! ஆகிலும்,அடியேன்சொல்லுவது தகுந்த தல்லாததும், சாஸ்திரோக்த மல்லாததுமாயி ருந்த போதிலும், என்னறிவுக்குத் தகுதி யானவைகளை விண்ணப்பம் பண்ணுகின்றே ன். கிருபைசெய்து திருச்செவி சாற்றி யரு ள வேண்டும். இனிவிளைவது தேவரீருக்கேதெ ரியும். இப்போது சண்டை தொடங்குகிறதா கவிருக்கின்றதே அதற்காகவுமல்ல, எதிரிகள் கொல்லும்படியாக வந்திருக்க அதை ஆலோ சியாமையுமல்ல, இவனுடைய தமயனை நீக் கிவிட்டு வந்ததுமாத்திரமேதருமமாகுமா? அ

யோக்கியரான ராக்ஷதர்களுக்குள் யோக்கியர் களுமுண்டாயிருப்பார்களா ! பெற்றகாலமு தல்தயவுவைத்துப்போஷித்துக்கொண்டுவந்த தாய் தகப்பன்மார்களையும் தனக்கு முன்பிறந் த பிராதாவையும், தன் ஆசாரியர்களையும், அ ரசர்களையும், பகைக்கிறதும் அவர்களைவிட்டுப் பிரிகிறதும் யோக்கியர்களுக்கிகழ்ச்சியாகுமே யல்லாமல் சந்தோஷிக்கும்படியானதோ! மே லும் தன்தமையனிருக்குமிடத்திலிருந்து அவ ன்பிரவேசித்தயுத்தத்தில் தானும்பிரவேசித்து, அவனுடன்கூட மாண்டுபோக வேண்டியதாயி ருக்க - அதற்குப்பயந்து நம்மிடத்தில்வந்துசேர் ந்தான், இது உலகத்தில் வீரலக்ஷணத்துக்குப்ப ழியையுண்டாக்குமல்லவோ!தர்மத்தையேவிரு ம்பினபோதிலும்,தன்னுடையபந்துக்களையெ ல்லாம்விட்டுப் பலர்நகைக்கும்படியாகத், தன் மானம்புறமானமென்பதில்லாமலிருந்து அந்த ப்பகையாளிகளிடத்தில் சேர்ந்துகொள்ளுதல், எக்காலத்திற்கும் பழியாகாமல்போகுமா ? இ வன் தன்னுடைய தமையனுன இராவணன் வா ழ்ந்திருக்கிற காலத்தில் அவனுடைய செல்வத் தைப் பங்கிட்டு அனுபவித்துக் கொண்டிருந் து இப்போதவனை யெதிரிகள்பகைத்து வந்தி ருக்கும்போது அந்தயுத்தத்திற்கு அவனுக்கு உதவியாயிராமல், நம்மிடத்தில்வந்து சேர்ந் தானுனதால், கிருபாநிதியாகிய - ஓரகுராமா ! இவன் நமக்கு உறவாளியென்று எண்ணலாமா? பொன்மானுருவான மாரீசன் தன்மருமக னுகிய இராவணனுடைய துற்புத்திக் கிசைந் து அவனுடைய செஞ்சோற்றுக் கடனுக்காகத் தன்பிராணனைக் கொடுத்ததைப் பார்த்திருந் தும், இந்த விபீஷிணன் அநேக தவங்களை யும் சாஸ்திர விசாரணையையும் விட்டபோது இவனை நீக்கிவிடாமல் இவனிடத்தில் சிநேகங் கொள்ளலாமோ ? எமனோடு கூடிக்கொண்டு மூன்று லோகத்தவர்களு மொன்றாய்ச் சேர்ந் து உம்மோடு எதிர்த்தகாலத்திலும் தேவரீர் அவர்களை யொரு லக்ஷியம் பண்ணுதவராச்சே நமக்குச் சத்துருவாகிய - இராவணனுடைய தம்பியான இந்த விபீஷிணன் நம்மிடத்தில் வந்துசேர்ந்ததினுல் நமக்கு இவன்சிநேகனுவா னே? இராக்ஷசர்களை யெல்லாங்கொன்று கரு வறுத்து தர்மத்தைப்பரிபாலிக்கும்படியாக வ ந்தோமென்கின்ற பெருமையையுடைய நாம் இந்தநிர்த்தயாஜெந்துவா னவனைச்சிநேகமாக அங்கீகரிப் போமே யானுல் நாம் பலயீன னென்று பிறர்நினைப்பார்களல்லவா ! தல்லபந் துக்களாக இருக்கின்றபேர்கள் தங்களைப்பிரிந் தகாலத்திலேயும், தங்களோடுகூடி முகங்காட் டிக்கொண் டிருக்கிறகாலத்திலேயும், அவ்வு

டைய மிகுந்தஅயிஸ்வரியத்தைத் தாங்கள்பெ
ற்று அனுபவிக்கிற காலத்திலேயும், அவ்வயிஸ்
வரியத்தையிழந்து தரித்திரனாய்த் தங்களோடு
கூடிவந்து பிழைக்கிறகாலத்திலும், வித்தியாசப்
படாமல் ஒரேநிலைமையாயிருப்பார்கள். மேக
ம்போலுந் திருமேனியையுடைய ஸ்ரீராமமூர
த்தியே! நாமிந்தவிபீஷிணனைப்பட்சமாகஅங்
கேரித்தம்பாதிலும்விஷத்தைப்போலநமக்குத்
தீமைசெய்ய வந்தவனே யல்லாமல் அடைக்க
லமாக நம்மிடத்திற்கு வந்தவனல்ல இந்த வி
பீஷிணன் என்று சுக்கிரீவமகாராஜன் தன்ன
பிப்பிராயத்தை விவரமாகச் சொன்னதைக்
கேட்டு அவன் பின்னாக நிற்கின்ற அனேகசா
ஸ்திர கேள்விகளையுடையவனும், தனக்குச் ச
மானமில்லாத பலாக்ஷிடிகனுமான ஜாம்பவ
னைப்பார்த்து, உன்னுடைய அபிப்பிராயமெ
ன்னவென்று ஸ்வாமிகேட்க, அனேககாலமா
க வெகுகாரியங்களை அனுபவமா யறிந்த அ
ந்தஜாம்பவன் ஸ்வாமீ! சத்துருக்கள். மிகுந்த
அறிவுடையவர்களா யிருந்தபோதிலும், அவ
ர்களைச் சினேகர்களென்றுகொண்டால் எதார்
த்தமாய்க் கெட்டுப்போவார்கள். இராக்ஷதர்க
ள் நல்ல நெறியுடையவர்களைப்போலக் காண
ப்பட்டாலும், ஜாதிஸ் பாவத்தைக் கொண்டு
பெரியோர்கள் அவர்களை யோக்கியர்க ளெ
ன்று நம்புவர்களோ? அப்பஜாதியிற் பிறந்தவ
ர்கள், ஜெயமுங்காட்டுவார்கள். அதிகவினய
விஸ்வாச முள்ளவர்களாகவு மிருப்பார்க
ள். செய்யவேண்டிய காரியங்களை ஒழுங்
காகவு முடிப்பார்கள். தீர்க்கப் பகைடாளி
களாகவு மிருக்கமாட்டார்கள். ஆனபோதிலு
ம், அவர்களைச் சினேகர்களாகக் கொண்டாற்
பெருமை யுண்டாகுமோ? மேலும், வேதவி
திகளையும், யாகதருமங்களையும், மாறுபாடாக்
கிப் பிராமணர்களுக்கு துக்கத்தையும், தேவர்
களுக்குத் துன்பத்தையும், செய்துகொண்டு
வருகின்ற மகாபாதகர்கள், நம்மிடத்தில் வந்த
திலேலே யோக்கியர்களாய், நமக்கு நன்மை
செய்வார்களோ! அப்படிப் பட்டவர்கள்,
தம்மைச்சரணடைந்து நாமுமவர்களைக் காப்
போமானால் அவர்கள் பொய்யைக் கொண்டு
வஞ்சனையான துரோகங்களைச் செய்தபோ
திலும், அதை எதார்த்தமாகக் கொண்டு நாம்
இறந்தபோதிலும், நம்முடைய ஐஸ்வரியங்க
ளை யிழந்தபோதிலும், லோகத்தவர்க ளெல்
லார்க்கும் பழியுமாகும் தர்மதேவதையும் ச
கிக்கமாட்டாது. இன்னமிதற்கு மேல்விளைகிற
தீங்கை நான் சொல்லவேண்டுமோ! தேவரீர்
காட்டில்வாசம் பண்ணுகிறகாலத்தில் மானு
ருவங்கொண்டு வந்தவனுடையவருகை யெப்
படிப்பட்ட துன்பத்தைவிளைத்ததோ அப்
படிப்பட்டதாகாமல், இவனுடைய வரவு முடி
வுபெறுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொ
ண்டான். அதன்பிறகு எல்லாச் சாஸ்திரங்க
ளையும் படித்து அதனுடைய உண்மைப்பொ
ருளைப் பலரிடத்திலும் கேட்டறிந்தவனான நீ
லனென்கிறவானரசேனாதிபனைப்பார்த்து உன்
னுடைய அபிப்பிராய மென்னவென்று கே
ட்க மிகுந்தபக்திவிசுவாசத்துடன், சகலவேத
சாஸ்திரங்களையுந் தெரிந்த ஸ்ரீராகவனே! அ
டியேன் விண்ணப்பம் பண்ணிக்கொள்வது
இழிவாகிய குரங்கினுடைய சொல்லென்று சி
ரிக்கத்தக்கவைகளாயிருந்தபோதிலும், அங்கீ
கரிக்கவேண்டும். சத்துருக்களைச் சினேகர்களா
கவேற்றுக்கொள்வதில் அனேகவேற்றுமையுண்
டு தங்களுடைய பந்துக்களாயிருக்கின்றபேர்
கள், யுத்தஞ்செய்கிற காலத்தில் எதிர்த்துவந்
த வீரர்களுக்குப் பயந்து அவர்களைப் பல
வானர்களாகக் காட்டிவந்தவர்களும், ஸ்ரீகளிட
த்தி லாசைவைத்தவர்களும், குறைவுபடாத தி
ரவியங்களை யிழந்துகோபிக்கின்ற பேர்களு
ம், தேகாபிமானிகளான பேர்களும், யுத்தத்தி
ல் புறங்கொடுத் தோடிவந்த பேர்களும், தா
யாதிகளுக்குச் சேரவேண்டிய தாயபாகத்
தைக் கொடாமல் அதைக்கொண்டு ஐஸ்வரிய
வான்களா யிருக்கிறவர்களும், அன்னியரால்
பீடிக்கப்பட்ட பந்துக்களைக் கொன்றுவிட்ட
பேர்களும், அன்னிய இராஜதெண்டனைக்குட்
பட்டவர்களை வருத்தப்படுத்தின வர்களும், ப
கையாளிகளிடத்தில் தம்மையாளை விட்டிழந்
தவர்களும், ஆகியஇவர்கள் நம்முடையபிள்ளை
களாயினும், நம்மிடத்திலவந்தால் தெண்ட
னையடைதற் குரியவர்களேயாவர்கள். மேலும்
இவர்கள் தங்களுக்குள்ளும் பொறுமையுடை
யவர்களல்ல, நாமுறவுசெய்யத் தக்கவர்களு ம
ல்ல, அப்படிப்பட்ட இராக்ஷதர்கள் நம்மைவ
ந்து சேர்ந்தார்கள். தம்முடைய பந்துக்களு
க்குக் கெடுதியுண்டாகும்படியாக அவர்களைவி
ட்டு நீங்கிவந்தார்கள். ஆதலால், இவர்கள் மிகு
ந்த துணிவுடையவர்கள். இப்படிப்பட்டவர்க
ள் விஷயத்தில் நாமென்ன தீர்மானிக்கலாம்.
இப்போது நாமிருக்கிறகாலத்தைப் பார்க்கு
ம்போதும், சாஸ்திரங்களினுடைய துணிவை
நிச்சயிக்கும் போதும், தமயன்மேற் கோபங்
கொண்டுவந்த இவனுடைய நடக்கையை சிந்
திக்கும்போதும், இவனுடைய நினைமை இப்ப
டிப்பட்டதென்று நாமறியும்படியான தன்
மையையுடையதா யிருக்கின்றதோ! என்று
தனக்குத் தோன்றிய நியாயங்களை யெடுத்துக்
காட்டினான்.

பிறகு - ஸ்ரீராமர், மற்ற மந்திரிமார்களையும், அநேகவித்துவான்களையும், தனக்குச் சிநேகமாயிருக்கின்றவர்களையும்பார்த்து, இந்த விபீஷணன் விஷயத்தில் உங்களுக்கிருக்கும் அபிப்பிராயமென்னவென்றுகேட்க, அவர்களெல்லாரும்வித்தியாசப்படாமல் ஒரேமொழியாய் இவனை யங்கீகரிக்கிறது கிருபாநிதியாகிய தங்களுக்குத் தகாதென்று தீர்மானமாய்ச் சொன்னார்கள்.

அதைக்கேட்டு எல்லாரினும் முதன்மைப் பட்டவரான ஸ்ரீராமப்ரியானவர் அநுமானைப்பார்த்துச் சமானமில்லாத மிகுந்தநல்ல அறிவையுடையமாருதியே! உன்னுடைய அபிப்பிராயமென்னவென்றுகேட்க, அநுமானானவர் தலைவணங்கி கைபொத்தி வாயைப்பொத்திக் கொண்டு சுவாமீ! அடியேங்கள் தேவரீருடைய திருவுள்ளத்துக்கு இணங்கும்படிச்சொல்லத் தக்க அறிவுடையவர்களல்ல என்றாலும், மந்திராலோசனைசெய்து காரியம்நடத்துகிறது தேவர் சந்நிதியின் கடமையானதால், அதன்படி தேவருங்கேட்கத் திருவுளங்கொண்டீர், என்று அதிருஷ்டமான செல்வியையுடைய ஆஞ்சநேயர் மிகுந்த பக்திவினய விஸ்வாசத்துடன் சுவாமீ! ஆலோசித்து சொல்லவேண்டியவைகளெவ்வளவுண்டோ? அவ்வளவையும், தேவரீருடைய சந்நிதியில் உத்தமமானதாயின்னதென்று, இங்குள்ள பெரியோர்களெல்லாரும் விவரமாய் விண்ணப்பஞ்செய்திருக்க, அடியேனைப்போன்றவர்களெல்லா மபேக்ஷித்துச்சொல்லவிருக்கின்றது. இந்தப்பெரியோர்கள்சொன்ன, ஆலோசனை அதிக உயர்ந்ததே! ஆயினும்; அடியேன் கண்ணாரக்கண்டறிந்த சில காரியங்களைச் சொல்லுகிறேன். தேவர் திருச்செவிச்சாத்தியருளவேணும். இந்தவிபீஷணனைத் தீயவனென்று சந்தேகித்துச்சொல்லமாட்டேன். அடியேன் இலங்கைக்குப்போய் இராவணன்சபையில் சேர்ந்தபோது அவன் என்னைக் கொல்லும்படியாகத் தன்னுடைய கிங்கரரை யேவினான். அப்போது இந்தமகானுபாவராகிய விபீஷணர் பகையாளிகளுடைய தூதுவனைக் கொல்லுவது தகாது, பழியாகும். மேலும், வெற்றியுமல்ல வென்றுசொல்லி, அவர்களைவிலக்கி, ஸ்ரீகளைக்கொல்லுகிறதும், கண்ணில்லாத குருடர்களைக்கொல்லுகிறதும், தூதர்கள் எவ்வளவு கெடுதிசெய்தகாலத்திலும், அத்தூதனைக்கொல்லுகிறதும், நல்லதல்லவென்று, இப்படிப்பட்ட சிறந்த ஏதுக்களை இராவணனுக்குத் தெரியச்சொல்லினார்.

பின்னும் இராத்திரிகாலத்தில், இவருடைய திருமாளிகைக்குள் நான் பிரவேசித்தபோதும், அவ்விடத்திலுலாவிக்கொண்டிருந்தபோதும், நல்லசகுனங்கள் அடியேனுக்குக்காணப்பட்டதுமல்லாமல், சுவாமீ சக்கிரவர்த்தித்திருக்குமாரராகிய ஸ்ரீராமமூர்த்தியே! இன்னும் அடியேன்கண்டவைகளைச் சொல்லுகின்றேன். இவர் திருமாளிகைக்குள் மதுமாமிஸங்களிருக்க நான்கண்டதில்லை, அதுவெப்போதும் தர்மம்-தானம்-வந்தனைவழிபாடுமுதலானவைகளால் பிராமணகிரகம்போல பிரகாசித்துக்கொண்டிருந்தது, இவருடைய குமாரத்தியான திரிசடையென்பவள் என்தாயாகிய சீதாபிராட்டிக்கு, அம்மா! இந்த துர்ப்புத்திமானான இராவணன் உன்னைக்கையால் தொடமாட்டான், அப்படித்தொடுவானானால் அவன் தலை சகஸ்திரசுக்கலாய் வெடித்து அவனும், எமலோகத்தையடையும்படியாகப் பிர்ம்மதேவரிட்ட ஒருசாபமுண்டாயிருக்கின்றது என்று இதுமுதலான இனியவார்த்தைகளைச்சொல்ல, அடியேன் காதாரக்கேட்டுமிருக்கின்றேன். மேலும் துளபமாலிகாதரராகிய சுவாமீ! நெஞ்சிலவஞ்சனையுள்ளபேர்களுடைய முகத்தைப்பார்த்தமாத்திரத்திலே அவரவர்களுடைய குணம் வெளியாகாமல் மறைவாகமாட்டாது. (உடைந்த கப்பலைவிரும்பி சமுத்திரத்தில் முழுகிப்போகிறவர்களைப்போல) அடியேன் இவர்விஷயத்தில் பொய் சொல்லுவேனோ! மனதிலுள்ளதை வாயால் சொல்லுகிறதற்குமுன்னமே, அவரவர்களுடைய முகங்களே வெளியாக்கிவிடும். (திருட்டுப்பயிர் செய்கின்றவர்கள், ஒருவருக்குந் தெரியப்படாத இருண்ட ஒரு பள்ளத்தில் பயிர் செய்வார்களேயல்லாமல் அதிகாரிகளுடைய கண்களுக்குத்தோற்றும்படிசெய்யமாட்டார்கள்.) சுவாமீ! இராவணனை அலட்சியமாகத்தன் வாலில் கட்டியிழுத்துக்கொண்டெங்குந்திரிந்தவாலி சுவர்க்கத்தையடையவும், அவனுடைய பட்டத்தைச் சுக்கிரீவமஹாராஜ ரடையும்படியாகவும், வளைத்த உம்முடைய வில்வல்லமையையும், உம்முடைய ஜயப்பிரதாபத்தையும், உம்முடைய நல்லசீலகுணத்தையும் கேள்விப்பட்டு, உம்மையடைந்து, ஞானப்பிரதேசமான பரமபதவாழ்வையடையும்படி, இந்தவிபீஷணர் உம்முடைய திருவடியை அடைக்கலம் புகுந்தார். மேலுமிந்த இராக்ஷசர்களுடைய இராஜரீகம் வேதமார்க்கத்துக்கு விரோதமான கொடுங்கோன்மையோடு கூடினதாகையால், இது நிலைத்திருக்க மாட்டாதென்று நம்பி இந்தச் சமுத்திரஞ்சூழ்ந்த இந்த உலகமுழுவதையும், உம்முடைய தம்பியாகிய பரதாழ்வாருக்கு கொடுத்துவிட்ட அபாரகருணையையும், உம்முடைய சத்தியத்தையும் விரும்பிவந்தார்;

இவர் தகுதியல்லாதகாலத்தில் வந்தாலும் குறை
யல்ல ; வாலிக்குச்சமானமான பலமுள்ளவர்க
ளான மூலபலசைனியங்களினுடையவல்லமை,
தங்களுக்கு உதவியானதா யிருந்தபோதினும்,
இந்தராக்ஷசர்களுக்கு முடிவுகாலம் வந்துவிட்
டதென்கின்ற நம்பிக்கையினால், தம்முடைய
சகோதரர்களை உண்மையாய்ப் பிரிந்துவிட்
டார். அந்த இராக்ஷசர்களுடைய மாய தந்திர
செய்கைகள் அநேகமுண்டு ; அந்தவித்தை
யில் நன்றாய்த்தேர்ந்துபழகியிருக்கின்ற இந்த
விபீஷணரொருவர், நமக்ககப்பட்டார். இனிநா
மெளிதில்வெற்றிபெறலாம். இந்தராக்ஷதர்களு
டைய மனதின் தீமையை ஆராய்ந்தறிகிறது ந
மக்குமெத்த லேசாய்முடியத்தக்கது. இவர்கள்
கொல்லும்படியான செய்கையைப் பெற்றவர்
கள் என்கின்ற எண்ணம் இனிநீங்கும்படிஅனு
ப்பப்பட்டவர்களுக்குச்சமானமாயிருக்கிறார்க
ள், மேலும் இவர்கள் எளியவர்கள் இவர்களை
ப்பற்றி யாலோசிக்க வேண்டியதில்லை. மேலு
ம் இவர் இந்தராக்ஷசர்கள், பிரமாதி தேவர்க
ளிடத்தில் பெற்றிருக்கின்ற பெரியவரங்களை
யும், இவர்களுக்குத் தெரிந்த வஞ்சனை, சூது,
முதலானவைகளையும் பார்க்கும்போது, இவர்
களை யல்லாமல் வேறொருவரும் இப்படிப்ப
ட்ட தவங்களைச்செய்து, வரம் பெற்றவர்களில்
லை. இவர்களுடைய பெரியவரங்களும், இவர்க
ளுடைய பிறவிக்குணமான வஞ்சனை சூது
முதலான வைகளும், தேவரீர் திருக்கை
யிற் பிடித்திருக்கின்ற கோதண்டத்தி லிரு
ந்தும் புறப்படுகிற ராமபாணத்தினால் வெந்
து அழிந்து போகுமென்று நினைத்து, உ
ம்முடைய திருவடிகளை யடைந்தார். ஜெயப்
பிரதாப சீலரானதேவரீர் தேவர்களாலும், அ
சுரர்களாலும், தேவதேவர்களான பிரமருத்தி
ரேந்திராதிகளாலும், செய்துமுடிக்க அரிதா
ன தர்மஸ்தாபனத்தை முடிக்கும்படியாகக்,க
ங்கணங்கட்டிக்கொண்டு, எழுந்தருளி யிருக்கி
ன்றீர். ஆபத்தையடைந்து அபயம் புகுந்தவ
ர்களைச், சந்தேகித்து அகற்றிவிடுவீரோயானா
ல்; ஒருசிறுகிணற்றின் சலத்தை பெரியசமுத்
திரமானது சந்தேகித்து நீக்கினாற் போலா
ய்விடுமே ? இந்தவிபீஷணர் பகையாளியை
ச்சேர்ந்தவர், நமக்குச்சிநேகரல்லவென்றுஇவ
ரைத்தள்ளி விடுவோமேயானால், அறிவாளிக
ள்பார்த்தால் நகைப்புக்கு யிடமாயிருக்குமல்
லவா ? தாயத்தில் ஒருவருக்குச் சேரவே
ண்டிய பாகப்பொருளையும், விளையுந் தானியங்
களையும், அவர்களுக்குக் கொடாமல் தாங்க
ளேஅதை இச்சிப்பார்களே யானால், தந்தை
யர்களானாலும், தம்பி தமையன்மார்க ளானா

லும், அவர்களல்லவோ ! பகையாளிகளாய்ப்
போர்க்களத்தில் மரணமடையத் தக்கவர்கள்.
ஆகையினாலே இந்தவிபீஷணனுடைய வரவு
நல்வரவாகுமென்று அடியேனுடைய மனதில்
நினைத்திருந்தேன். வேதத்திற்குச் சமானமா
னதேவரீருடையதிருவுள்ளக்குறிப்புஎப்படிப்
பட்டதோ தெரியாதென்று, நான்கு முகங்க
ளோடுங்கூடிய பிரமாவினாலும், கற்றறிய அ
ருமையான சாஸ்திரங்கள் எல்லாவற்றையும்,
சூரியனுடையகதிக்குமுன்னிட்டு அவனுடை
ய சன்னிதானத்தில கற்றறிந்தவரும் சமுத்
திரங்களை யெல்லாந் தாண்டி இலங்கைக்கு
ப்போய் ஜயம்பெற்று இந்தலோகங்களை யெ
ல்லாம் ரக்ஷிக்கும்படியாக அவதரித்தவருமான
மாருதியானவர் சொன்ன அமிர்தவார்த்தையை
ச்சக்ரவர்த்தி திருக்குமாரர். தமதுதிருச்செவி
யைச் சாய்த்து, மிகுந்த சந்தோஷத் தோடு
கேட்டருளி. அந்தச்சதஸி லிருக்கின்ற புத்தி
மான்க ளெல்லாரும் சபாஷென்று மெச்சிக்
கொள்ள அவர்களைப் பார்த்து, இந்த ஆஞ்ச
னேயர்சொன்னநடிகாசிரேஷ்டமானஆலோ
சனையாகும் இதற்குமேல் நீங்களெல்லாரும்
தெளியும்படியாகச் சொல்லுகின்றேன். கே
ளுங்களென்று, அவர்கள் கேட்கும்படியாக
ஸ்ரீராம மூர்த்தியானவர் அவர்களைப்பார்த்து
இந்த விபீஷணன் என்னையடைக்கலம் புக
வேண்டுமென்று நினைத்துவந்த இந்தக்காலமு
ம், அவனுடையமனதிலுண்டானவிருப்பமும்,
அவனுக்கு ராஜ அயிஸ்வரி யத்தின்மேல் ஆ
சையில்லாமையும், நம்மிடத்தி லடைக்கலம்பு
குந்த இந்தபெரிய தர்மமொன்றினால் மாத்தி
ரமே, நட்பானவனல்லவென்று திருப்திகரமா
னதா யிருக்கின்றது. இனிமேல் வேறேசொல்
லவேண்டிய வார்த்தையொன்று மில்லை இந்த
ஆஞ்சனேயர் தெளிந்துசொன்ன ஆலோசனை
யே தகுந்த ஆலோசனை, இப்படிக் கல்லாமல்
வேறொன்றினால் வெற்றிவந்தாலுஞ்சரி, வாழ்
வுவந்தாலுஞ்சரி, அதுஎனக் கங்கீகாரமல்ல !
இவரடைக்கல மென்றுசொல்ல, இவனை அங்
கீகரிக்கிறதினால் எனக்குத்தோல் விவந்தபோ
திலும், மரணம்வந்தபோதிலும், அதுவேயெ
ன்பட்சம். என்னை யடைக்கலம் புகுந்தவன்
புண்ணியம் ஒன்றுமில்லாமல் மாத்திரமல்ல
தகப்பனையும், தாயையும் கொன்றுவிட்டு அந்
தமகாபாதகத்துடனே வந்தபோதிலும், அவ
னேயெனக்கு இனிமையைச்செய்கிற சிநேக
னாகும். அந்தஅடைக்கத்தைத் தவறினவனுக்க
ல்லவோ ! இம்மையிற்பழியும், மறுமையில்
நரகமுமுண்டாகும், என்பிதாக்களில் சிபிச்ச
க்கிரவர்த்தியானவர் புறவுக்காக துலைபேறின

தன்மையை யெங்கள் வம்சத்தவர்களுக்குள்
ளே தங்களாயுள் நாளில் மறந்துபோனபே
ர்களில்லையே ! அப்படியிருக்க. என்னை அ
டைக்கலமென்று வந்துசேர்ந்தவனைத் துறந்
துவிடுவேனாகில் நானிருந்துஞ் செத்த
வனேயல்லது வேறல்ல. எல்லாச் சீவகோடிக
ளையுஞ் சிருஷ்டித்து ரக்ஷித்துக் கொண்டிரு
கிற சாக்ஷாத்நாராயணமூர்த்தியானவர், உலக
த்துக்கெல்லாந் தாய்தந்தைதேவதையும், அந்
த ஜீவர்களுக்குள் அந்தர்யாமியாயிருந்
தும், தன்திருவடிகளை அடைக்கலமாகச் சேர்
ந்தபேர்களுக்கு மதியும், இகத்தில் ஐஸ்வரிய
த்தையும், மறுமையில் பரமபதத்தையுங் கொ
டுத்துதவுவனென்று, இச்சவிரதத்தை விட
டாதுச்செய்யவேண்டும். என்னையார் ரக்ஷிப்
பார்களென்று சீதையானவள் அழுது புலம்பும்
போது, அம்மா! நீபயப்படாதே! உனக்குநான்
துணையிருக்கின்றேன் என்று இதமாய்ச்சொல்லி
த்து இக்கிராவணபாதகனுடனே பெரியயுத்
தத்தைச்செய்து ஜயம்பெற்றுத்தெய்வமரணத்
தையடைந்த ஜடாயுவாகிய என்பிதாபெற்ற
பெருமையும், எனக்குசாக்ஷியல்லவோ? மேலு
ம் அபயமென்று அடைந்தவர்களுடைய உயி
ரைத் தன்னுயிர்போலரக்ஷியாதசண்டாளனும்
ஒருவன்செய்தநன்றியை நினையாதவனும், கள
ங்கமறப்பட்டரிசொரியாமல்வேதநிச்சயமானமெ
ய்ப்பொருளை பொய்யென்றுசொன்னவனும்,
ஆகிய இவர்களெல்லா மீளாத நரகமடைவார்
கள். தேவர்களுக்கு இம்சைசெய்த அவிவேகி
யாகிய ராவணனை நான் கொல்வேனென்று சப
தம்பண்ணிக்கொண்டது சீதைக்காகவோ என்
னை அபயமடைந்த ரிஷிகளுக்கு வாக்தத்தந்
தம் பண்ணினதற்காகவல்லவா ? அந்தச்சொ
ல்லை நான் தவறலாமா ஒரு யானையானது முத
லையினாலே இம்சிக்கப்பட்டபோது ஆதிமூ
லவஸ்துவான பரப்பிரம்மமே உமக்கபயம்;
என்னை ரக்ஷிக்க வேண்டுமென்று கூப்பிட்ட
அந்தக்காலத்தில் வேதோபநிஷத்திலும் மதி
யப்படாதமெய்ப்பொருளான சாக்ஷாத் நாரா
யணமூர்த்தி அந்த கஜேந்திராழ்வானுக்குச்
சேவைசாதித்து ரக்ஷித்தாரென்கிற வார்த்தை
யை ஞானவான்கள் மறந்துவிடுவார்களோ!
தம்முடையகாரிய மாகாவிட்டாலும் போகட்
டும், அடைக்கலம் புகுந்தவர்களை ரக்ஷிக்கிற
தைப்பார்க்கிலும் தயாசீலர்களுக்குப் பெரு
மை வேறொன்றன்றோ! அதைநீங்கள் நன்
றாயோசித்துப் பாருங்கள் - தன்னை அடைக்க
லமாக அடைந்தபேர்கள் அற்பர்களாயிருந்த
போதிலும், தன்னுயிரைக்கொடுத்தாகிலும் அவ
ர்களை ரக்ஷிக்கநினையாமல் போவானேயாகில்
அப்படிப்பட்டவன் சக்கிரவர்த்தியானபோதி
லும் அவனுக்கென்ன மேன்மையுண்டாகும்.
ஆனபடியினாலே அபயமென்று சொன்னமா
த்திரத்தில் அவனுக்கபயதானங் கொடுக்கவே
ண்டியதே தருமமாகும். நீங்கள் சொன்னதெ
ல்லாம் என்னிடத்தி லுங்களுக்குண்டான பக்ஷ
த்தினாலேதான். அவனைப்பற்றி நாமாலோசி
க்கவேண்டியதில்லை, சூரியகுமாரனான சுக்கிரீ
வமகாராஜனே ! இந்த ராவணனும் ராக்ஷசர்கள்
பிசாசர்கள் - யக்ஷர்கள்- தானவர்கள் முதலா
ன திரிலோகவாசிகளுமான - இவர்களெல்லா
ரு மொருமிக்கச்சேர்ந்து என்மேல்யுத்தத்திற்
கு வந்தபோதிலும், என் சுண்டுவிரலா லவர்க
ளெல்லாரையும் ஜயித்துவிடுவேன். பயப்பட
வேண்டாம் .அந்த விபீஷணனை என்னிடத்
திற்கு அழைத்துக்கொண்டு வரக்கடவாயென்
று நியமித்தமாத்திரத்தில், சுக்கிரீவமகாராஜன்
ம்தசராஜனுன சக்கிரவர்த்தித்திருமகனார் திரு
வுள்ளத்தைப்போலத் தன்மனமுந் தெளிந்து
இதோ அடியேனழைத்துக்கொண்டுவருகிறே
னென்று வேகமாய்ப்புறப்பட்டுச் சத்தியவந்
தரான விபீஷிணாழ்வாரிடத்திற்கு வரும்போ
து சுக்கிரீவமகாராஜனை மயிந்தனென்கிற சே
னைத்தலைவன் விபீஷணருக்குக் காட்டி ; உம்
மை யழைத்துக்கொண்டு வரும்படியாக ஸ்வா
மி நியமித்தார் அதனாலும்மை யெதிர்கொள்
ளும்படியாக பெரியமலைக்குச் சமானமான
தோள்களையுடைய சூரியகுமாரர் எழுந்தரு
ளினாரென்று சொன்னமாத்திரத்தில், கலங்கிக்
கொண்டிருந்த உள்ளத்தையுடையவரான வி
பீஷிணாழ்வார் மிகுந்தமனக்களிப்புடனே தா
மு மவரெதிர் நடந்துபோனார். அயோக்கியர்
களா யிருக்கின்றபேர்கள் தங்களாயுள்வரையும்
பழகினபோதிலும் நட்பாகமாட்டார்கள். புத்
திமான்கள்கண்ட அந்தக்ஷணமே சிநேகமாவா
ர்கள், என்ற நீதிப்படியே இருவருடையமன
மும் ஏகமாகும்படி விபீஷிணாழ்வாருஞ் சுக்கி
ரீவமகாராஜனும், இரவும் பகலு மொருகாலத்
தில் கலந்ததுபோல ஒருவரையொருவ ராலிங்
கனம்பண்ணி நின்றபோது,சுக்கிரீவமகாராஜன்
விபீஷிணரைப்பார்த்து, நீர் சரணமடைந்த
சக்கிரவர்த்தித்திருமகனுகிய ஸ்ரீராமர் தங்களு
டைய வம்சத்துக்குத்தக்கமுறைமைப்படி உம்
மிடத்தில் கிருபைகூர்ந்து, அபயதானம்பண்
ணினார். இனிச்சீக்கிரமாய்வந்து அவர்திருவடி
களுக்குத் தெண்டன்சமர்ப்பியும் என்று ஆண்
சிங்கம்போன்ற சுக்கிரீவமகாராஜன் சொன்ன
வார்த்தை செவியில் நுழைவதற்கு முன்னமே
சுத்தநிறத்தையுடைய விபீஷிணாழ்வாரிரண்
டு கண்களிலுமிருந்து ஆனந்தபாஷ்பப்பிரவா

கம் கனாபுரண்டோடவும், தேகங்குளிரவும், சந்தோஷமிகுதியினாலே, உடல் மயிர்க்கூர்ச்செறியவும், சர்வசங்கபரித்தியாகம் பண்ணினவர்களான ஜீவன் முக்தர்களுக்கு நண்பரான, ஸ்ரீராகவபிரான் என்னையும்உறவென்று திருவுளங்கொண்டு, அபயதானம் பண்ணினரோ! அப்போதே, என்னுடைய பாபவினைகளெல்லாம் போய், அந்தப் பாபகாரியமான மாயவாழ்க்கையோடுங் கூடிய, என்னுடைய பிறவியையும் கடந்து, மறுமையிலடையவேண்டிய நரகத்தையும் நீங்கிவிட்டேன். செம்பஞ்சைப்போலுஞ் சிவந்தமிருதுவான திருவடிகளையுடைய லோகமாதாவைப்பிரிவுசெய்த ராவணனுக்குத் தம்பியான என்னையும் வரும்படியாகத் திருவுள்ளங் கொண்டாரோ! மயக்க நெஞ்சையுடையவனான ராவணன், என்சொல்லை மறுத்தபோதே சூரியனுடைய தேரும் லங்கைமேலோடுமல்லவா? எம்பெருமானுடைய கிருபை, இவ்வளவு சௌலப்பியமாயிருக்குமேயானால், ராக்ஷசர்களுக்கு இனி பிழைப்புண்டாகுமோ? துஷ்டர்கள் சகிக்கக்கூடாத இம்சைகளைச்செய்தபோதிலும், கிருபாவான்களான பெரியோர்கள் தங்களுக்குச் சுபாவமான நிலைமையில் நின்றுந் தப்பமாட்டார்கள். சமுத்திரமானது தேவர்கள் பெரிய மலையை மத்தியில் நிறுத்தி, சின்னபின்னமாகக் கடைந்தகாலத்திலும், அவர்கள் பிழைக்கும்படியாகஅமிர்தத்தைத்தானேகொடுத்ததென்றுசொன்னபோது, மிகுந்த அறிவுடையவரான சுக்கிரீவமகாராஜர் விபீஷணரைப்பார்த்து, நம்முடைய சுவாமியானவர், நல்லவர்தீயவரென்றுகருதமாட்டார். தமதுதிருவடிகளிற்சரணமடைந்தவர்களைக் கடாக்ஷிக்க வேணுமென்கின்ற அருத்தியுடைய பரமாத்துமா, தாமசஞ்செய்யாமல் எழுந்தருளுமென் றழைத்துக்கொண்டு, அநேகமலைகள் சூழ்ந்துகொண்டு வரும்படியாக இமயமலையும், மேருமலையும் வருகிறதுபோலத் தங்கள் தபோபலத்தையடைந்தவர்களான விபீஷணாழ்வாரும், சுக்கிரீவமகாராஜநும், வானரவீரர் சூழ்ந்துவர, ஏழுமராமரங்களூ முருவும்படியாகப் பாணப்பிரயோகஞ்செய்த பிரதாபசீலரான; சக்கிரவர்த்தித் திருமகனுருடையசன்னிதிக்குவந்து, வானரவீரர்கள் நிறைந்த அந்தக்கடற்கரையில் இளையபெருமான் கையில் வில்லைப் பிடித்துக்கொண்டு பக்கத்தில் காவலாய்நிற்க, லோகநாயகரான ஸ்ரீராமமூர்த்தியானவர் வில்லைப்பிடித்துக்கொண்டிருக்கின்ற மேருமலையானது பக்கத்திலேநிற்கும்படியாக கருங்கடலானது க்ஷீரசாகரத்தினால்சூழப்பட்டு, தாமரைப்பக்ஷிபங்களைப் பக்ஷித்துக்கொண்டிருந்தாற்போலப் பிரகாசிக்கின்றவரும், மிகுந்தகளிப்புடனே சூழ்ந்துகொண்டிருக்கிறவானரசேனைகளுக்குநடுவில் தேவர்கள் வணங்கி வேண்டிக்கொள்ள களங்கமற்று அலைகளோடுவிளங்கிக்கொண்டிருக்கின்ற, பாற்கடலி னடுவில் தமது யோகநித்திரையைவிட்டு எழுந்தருளியிருக்கின்ற க்ஷீரசாகரநாதனைப்போல் பிரகாசிக்கிறவரும், வளைந்து கறுத்த அழகியபுருவம்போலலைகள்ஒன்றோடொன்றுகூடவும், பூணுதற்கின்பத்தைத்தருவதானமுத்தைப்போற்பிரகாசிக்கின்ற வெள்ளிய மணற்பிரதேசத்தில் விசாலமான வானரப்படைகளுக்கு நடுவில் கருநிறத்துடன் ஒளிபொருந்திய நெற்றியையுடைய சீதாபிராட்டியின் கண்ணில் கருமணியைப்போல் பிரகாசிக்கின்றவரும், மேகங்களை வாகனமாயுடைய காலத்தில் தேவேந்திரன் தன்வில்லை விட்டிருந்ததுபோல ரத்தினாபரணங்களை நீக்கிப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற திருமார்பை யுடையவரும், கடலைக் கடையும்போது மந்திரகிரியிற் பூட்டிய வாசுகியைக் கழற்றிவிட்டதுபோல ரத்தின கங்கணங்கள் நீங்கிய திருத்தோள்களை யுடையவரும், தனது கிரணங்களை நீக்கிவிட்டு கிருபையினாலே அமிர்தத்தைப்பொழிந்துக்கொண்டிருக்கின்ற ஷோடசகலா பூர்ண சந்திரனுக்குச்சமானமான திருமுகத்தையுடையவரும், தன்பிதாகொடுத்த ராஜமுடியைத் தமது திருத்தம்பியாருக்குக் கொடுத்தருளி சிறியதாயாரால் பெற்ற ஜடாமகுடத்தைத் தரித்துக்கொண்டிருக்கிற திருமுடியை யுடையவருமான ஸ்ரீராமமூர்த்தியைப்பார்த்து, தேகம் புளகாங்கிதமாகவும், கண்களி லானந்தபாஷ்பம் பொழியவும், மனமுருகி அஞ்சனகிரிக்குச்சிவந்த திருக்கண்களுண்டோ! அல்லது கறுத்தமேகந் தாமரைப்புஷ்பித்ததோ! அவ்விரண்டுமல்ல, இவர் சாக்ஷாத்கண்ணன்போலிருக்கிறது. அல்லது மிகுந்தகிருபையொழுகுகிற சத்தியமான தருமதேவதைக்கு நிறங் கறுப்பாயிருக்கிறதோ! வென்று நினைத்தவராய் மின்மினிப்பூச்சியின் ஒளி தோன்றி மறைவதுபோல அழிந்துபோகும் பிறவியையும், தமக்குரிமையான இராஜ்கீரீடத்தையும் நீக்கிவிட்டு ஸ்வாமியினுடைய திருவடித்தாமரைகளைச் சிரசிற்சூடிய செல்வரான ஸ்ரீவிபீஷணாழ்வார் என்தமையனுன இராவணன், என்தந்தையாகிய புலஸ்தியருக்குத் தந்தையான [illegible]டைய தந்தையாகிய பிரம்மாவினுடைய [illegible]த்தப்பனுன, ஸ்ரீராமமூர்த்தியை வணங்கும்படியாக எனக்கு உபகாரஞ்செய்தாயென்ன அ

சொல்லிப்பின்னும், மிகுந்ததபசுசெய்தபேர்
களுக்கும் நீக்கக்கூடாத பிறவிப்பிணிக்கு மரு
ந்தாக யிருக்கின்ற, சாக்ஷாத் நாராயணனே !
வில்லிலம்பைப்பூட்டிக்கொண்டு, இந்த அரக்
கர்களைக் கொல்லும்படி நின்றான். இவர்கள்
பெருமையை என்னசொல்லப் போகிறேன்.
இந்த அரக்கர்கள் அளவில்லாத அருந்தவஞ்
செய்தவர்களேயென்று ஆச்சரியமானசராயு
ம், தமது இரண்டுகைகளையும் ரத்நகிரீடத்
தின்மேல்கூப்பினவராயும், கல்லுமாமுரு
கும்படியானகாட்சியையுடையகிருபாமூர்த்
தியாகிய ஸ்ரீராமச்சந்திரர்இரக்கத்துடன்கடா
க்ஷித்தருளும்போதெல்லாம் தண்டஞ்சமர்ப்
பித்துக்கொண்டேபோய் சர்வாபீஷ்ட ப்ரத
சாகரமானஇரண்டுதிருவடிகளிலும்சரணாகதம்
பண்ணி, அடியேனுடைய பிறவித்துன்பம் ஒ
ழிந்துபோய்விட்டது என்று, மனதின் நினைவு
முகத்திலே பிரகாசிக்கவும், ஆனந்தக்கண்ணீ
ரோடுபூமியில்மார்புபடியும்படியாகவும் தெ
ண்டஞ் சமர்ப்பித்த விபீஷிணாழ்வாரைக் கிரு
பையுடனே ஆலிங்கனம்பண்ணினதுபோலக்
கடாக்ஷித்து, எழுந்திருக்கக்கடவாயென்றுநிய
மித்துத், தமது திருக்கையினால்இருக்கும்படி
சைக்கினை பண்ணிப் பின்பு, சக்கிரவர்த்தித்
திருமகனுனவர் மிகுந்த கிருபையும், சந்தோ
ஷமும் பொங்கும்படியாக விபீஷிணாழ்வா
ரைக்கடாக்ஷித்து இந்தப்பதினாலுலோகங்களு
ம், எல்பெயரு மெத்தனைகால மிருக்குமோ
அதுபரியந்தம் ராக்ஷசர்களுக்கு வாசமாக
இருக்கின்ற இந்த லங்கையி னைஸ்வரியமெல்
லாம் உனக்கேயாகும்படியாக இதோ கொடு
த்துவிட்டேன் என்று வாக்குத்தத்தம் பண்
ணியருளினார். இப்படிச் சுவாமீ அருளிச்
செய்த கிருபையைப்பார்த்தோ ! அவரால்
எல்லாப் பெருமையையும் பெற்ற விபீஷி
ணாழ்வாருடைய தர்மத்தைப் பார்த்தோ !
வேறென்னகாரணத்தினாலோ! சுவாமி வாக்கு
தத்தம் பண்ணிய மாத்திரத்தில், உலகத்திலு
ள்ள சராசரங்களெல்லாம், தனித்தனியே தம
க்கே வாழ்வுண்டானதுபோலப், பெருங்கோ
ஷியாகச் சத்தமிட்டனகள். பிறகு, கிருதா
ர்த்தனானேன் என்று முடிக்கடிவணங்கிக்கொ
ண்டு நின்ற, அஞ்சனமலைபோன்ற நிறத்தையு
டைய, விபீஷிணாழ்வாரிடத்தில் ஸ்ரீராமர் கிரு
பைகூர்ந்து, அடைக்கலம் புகுந்து நமக்குத்
துணைவராகிய, குற்றமற்ற கீர்த்தியோடுகூடிய
இவருக்கு நித்திரைசெய்யாத நேத்திரத்தையு
டைய ஐயனே ! முடிசூட்டக் கடவாயென்று
நியமித்தார். அதைக்கேட்டுமேல்விளையக்காரி
யங்களையெல்லா மறியும்படியான புத்தியை
யுடைய, (விபீஷிணர்) சுவாமீ! எந்நாளும் அ
ழியாத அளவிறந்த பெருமையைத் தரத்த
க்க நல்லசெல்வத்தை யருளிச் செய்திரோ யா
யினும், திருட்டுச் சுபாவமுள்ள இராக்ஷசனு
ன இராவணனுக்குத், தம்பியென்ற சம்பந்த
மொழிந்து விடும்படியாகத், தேவர்திருத் த
ம்பியான பரதாழ்வாருக்குச் சூட்டிய, திருப்
பாதுகையாகிய மௌலியை, அடியேனுக்
குஞ்சூட்டி யருளவேண்டுமென்று விண்ண
ப்பம்பண்ணினார். அதுகேட்டு ஜகத்ரக்ஷகனா
கிய சீதாபிராமன், நாங்கள் முதலில் நால்கு
சகோதரர்களாகப்பிறந்தோம். அப்புறம் கு
கனோடு சேர்ந்து ஐந்துபேரானோம். மே
ருகிரியைச் சுற்றிவருகின்ற, சூரியகுமாரனான
சுக்கிரீவ மகாராஜனைச் சேர்ந்து, ஆறுபேரா
னோம். இப்போது எங்களிடத்தில் வைத்த அ
ன்பினாலே இங்கேவந்துசேர்ந்த மனப்பூரண
மான காதலையுடைய விபீஷிணாழ்வானே! உ
ன்னோடு எழுபேரானோம். அடர்ந்து இருள்
தங்கியிருக்கின்ற நெடியகாட்டிற்குப் போகு
ம்படியாக நியமித்த நம்முடைய பிதாவாகி
ய தெசரதமகாராஜனும் இந்தப்புத்திரர்களா
ல் மிகுந்த வெளவை யடைந்தார். என்றுசொ
ன்ன சுவாமியினுடைய வார்த்தையைக்கேட்
டு சுவாமீ ! சர்வலோக ரக்ஷகராகிய தேவரீ
ர் வேறென்ன சொல்லவேண்டிய திருக்கின்
றது, நாய்க்குச்சமானமான அடியேனைத் தே
வரீருடன் பிறந்தவர்களோ டொருவனென்ற
ருளிச்செய்தீர். இனி அடியவர்களுக்குள் சிற
ப்புற்றேனென்று சந்தேகபய நிவர்த்தகராகி,
ஸ்ரீராகவ பிரானுடைய திருவடிச் சுவட்டைத்
தமதுசொர்ன்னகிரீடத்தைத் தரிக்கும்படியா
ன சிரசிற்சூட்டிக்கொண்டு, சூரியனை உச்சியி
ற்சேர்த்துக்கொண்ட பெரியமலையைப் போ
லும் நிற்கின்ற, இலங்காதிபதியான விபீஷி
ணாழ்வாரைப்பார்த்து, ஸ்ரீராம லட்சுமணர்க
ளிருவரும் களித்தார்கள். அப்பால், சுக்கிரீவ
மகாராஜர் முதலான வானரர்களெல்லாஞ் ச
ந்தோஷித்தார்கள். தேவர்கள் புஷ்ப வரு
ஷம் வருஷித்தார்கள். சப்தசமுத்திரங்களும்,
சப்தமேகங்களும், சப்தித்தனகள். தேவதுந்
துமியும், தேவசங்கமு முழங்கினதுகள்.
சொர்ன்னவருஷம் வருஷித்துக் கொண்டும்;
வாசனைப்பொடிகளை யிறைத்துக் கொண்டும்,
தேவர்களெல்லாரும், ஆகாசமார்க்கத்தில் நின்
று மங்களங்கூறினார்கள். அமிர்தத்திற்குச்சமா
னமான சொல்லையுடைய, சீதாபிராட்டியார்
விஷயத்தில், முறைமைதப்பி அபசாரப்ப
ட்ட, என்னுடைய வம்சத்திலுண்டான இந்த
ராக்ஷசகுலம், இப்போது சிரேஷ்டத்தை ய

டைந்ததென்று பிர்ம்மதேவர் துக்கநிவாரண மானர். பிறகு தர்மதேவதையும், இராவணனுடைய செல்வமழிந்து போய்விட்ட தென்று ஆர்த்துக் கூத்தாடிக்கொண்டு சந்தோஷித்தது. இப்படிப்பட்ட காலத்தில் ஸ்ரீராமச் சந்திரமூர்த்தியானவர் இலங்காதிபத்திய அயிஸ்வரியமெல்லாம், விபீஷிணாழ்வான் பெற்றதைப் பலருங்கேட்டறியும்படியாக எங்குங்கட்டியங் கூறும்படிச் செய்து, அங்கே தமதுபக்கத்தில் அதிக விஸ்வாசத்துடன் வாய்பொற்றிக்கொண்டு நிற்கின்ற, சுக்கிரீவ மகாராசனையும், இளைய பெருமாளாகிய லக்ஷ்மணனையும், பார்த்து, நீங்களிருவரும் சகலவானரப்படைகளுடன் இவரை நம்முடைய பாடிவீட்டைச் சுற்றி, ஊர்க்கோலம் செய்வியுங்க ளென்று நியமித்தார். அந்தப்படியே விபீஷிணாழ்வாரை இரண்டு திருவடிச் சுவட்டைத் தரித்த முடியுடனே சந்தன விமானத்திலேற்றி, அந்தவிமானத்தை வானரவீரர்கள் சுமந்துக்கொண்டு, இந்திரபோக ஐஸ்வரியத்தையடைந்த லங்காதிபதியிவரோ ! எச்சரிக்கை பராக்கென்று கட்டியங்கூறிக்கொண்டுவானரசைனியங்கள்சூழச் ஸ்ரீராமருடையபாடிக் கூடாரத்தை வெகு வேடிக்கை விநோதமாகச் சுற்றி, நகர்வலம்வந்தார்கள். அப்போது தங்கள் தாசசொரூபத்துக்கு அநுகுணமான கைங்கரியத்தைச் செய்யும்படியாக அபேக்ஷித்துக்கொண்டிருக்கின்றதேவர்கள். அக்கைங்கரியப் பிரதிசம்பந்தியான திருவடியைத்தேடிக்கொண்டிருந்து அன்றுதரிசித்த பிர்ம்மதேவனும் மற்றதேவர்களுமெல்லாம், சமுத்திரஸ்நானஞ் செய்து தங்களுடைய பாபநிவாரணம் பண்ணிக்கொண்டு சுவாமியினுடைய திருவடித்தாமரை மலரைத்தங்கள் சிரசின்பேரில் சூடிக்கொண்டு அவர்களடைந்தஆனந்தப்பிரதாபதன்மையை இந்தவிதமென்று தெரிந்துச்சொல்ல யாவராலாகும். ரிஷிகளும், தேவர்களும், ஞானவான்களும், பக்திமான்களும், யாகாதிகிருதுக்களைச் செய்துமுடித்து நின்றவர்களும், மகத்தாகிய தபசிகளும், இந்த விபீஷிணாழ்வான் பெற்றபேறு இதுவனாயினும் யாரபெற்றுளொன்று, ஆச்சரியப் பட்டுக்கொண் டிருந்தார்கள்.



விபீஷிணனடைக்கலப்படலம்

முற்றும்.

## இலங்கைகேழ்விப்படலம்.



இந்தப் பிரகாரமாக, ஊர்க்கோலம் வந்து சுவாமியினுடைய திருவடியில் தெண்டஞ்ச மர்ப்பித்த விபீஷிணாழ்வாருக்கு, அங்கே வசிக்கும்படியாக ஒருபெரியவிடுதிசெய்துகொடுத்து அதிலவரை யிருக்கும்படி வைத்தபிறகு, சூரியன் தன்கிரணங்களையெல்லாம் அதிக உஷ்ணமானவைகளென்று நீக்கிவிட்டதுபோல, அஸ்தமனமானன். சுவாமியும் தனது க்ஷத்திரிய தர்மத்துக்கிசைந்த சந்தியாவந்தனாதி கருமங்களை முடித்துக்கொண் டெழுந்தருளி யிருக்கும்போது, மேற்குத்திசையில் அக்கினி நிறமான செவ்வான முண்டாகிப் பின்பு ஆகாசமெல்லாங்கறுகறுத்தது. மன்மதன் புஷ்பபாணங்களை ஸ்ரீராமர்மேல் பிரயோகித்தான். சமுத்திரமானதுகோத்து மூடிக்கொண்டதுபோல, அஷ்ட திக்குகளையும், இருள் மூடிக்கொள்ள, அந்தச்சமுத்திரத்தில் தாமரை, அல்லிக்கொடி முதலானவைகள் புஷ்பித்ததற் கொப்பாக ஆகாசத்தில் கிரகநட்சத்திரங்கள் பிரகாசித்தன. சீதாபிராட்டியாரை நினைத்து வருத்தமுற்றுக்கொண் டிருக்கின்ற ஸ்ரீராம மூர்த்தியினுடைய மனதைவருத்தப்படுத்தும் கருத்தால் இருளைக்கண்டமாத்திரத்தில் புஷ்பித்த மல்லிகைக் காடானது நட்சத்திரங்களுடன் கூடிய ஆகாசம் போன்றிருந்தது. இருளினலேமறைபடாமல் என்னைச்சமானப் படுத்திக்கொண் டிருந்தும். ஒளியினலே என்னைத் தோற்கப்படுத்தி ஜெயம்பெற்ற, திருமுகத்தை யுடைய சீதாபிராட்டியாருக்குச் சிநேகராகிய இந்த ஸ்ரீராம மூர்த்தி இராத்திரிக்குச்சமானமான திருமேனியை யுடையவரா யிருக்கிறபடியால் இவரைவெல்லலாமென்று எண்ணங் கொண்டது போலச் சந்திரனுதையமாகி, இந்த ஸ்ரீராமரை வருத்தும் படியாக அந்தச் சீதாபிராட்டியாருடைய நிறத்தை நாமுடைத்தா யிருந்தோமானல், இவருடையமனதைக்கலக்கப்படுத்தி தமதுவசப்படுத்திக் கொள்ளலாமென்று நினைத்து தன்னுடைய சந்திரிகையாகிய வலையைக் கடல்சூழ்ந்த உலகமுழுவதிலும் வீசினன். அப்போது சமுத்திரமானது நம்மைப் போன்ற நிறத்தை யுடையவரா யிருந்தும். இந்த ஸ்ரீராமர் நம்மைத் தம்முடைய வானர சேனைகளால் அணையிட்டு அடைக்கும்படியாக வந்தாரல்லவா! அப்படிப்பட்டவர் நம்முடையகண்முன்னே கிடைத்துவிட்டாரோ, இவரோ

டு சன்னைசெய்து மோக்ஷிக்கிறதற்கு சமயம்
வாய்த்ததென்று, உடல்புரிக்கதுபோலுமிரு
ந்தது பூரணசந்திரனைக்கண்டுதாம்பெருகின
து. மேலுஞ்சமுத்திரமாகியபாம்பானதுமூன்
றின இரதபுகத்தில்வளர்ந்த தோலையுரித்துத்த
ள்ளினதுபோல விளங்குகின்றமணற்குன்றுக
ளால் விசாலித்திருக்கின்ற சமுத்திரதீரப் பிர
தேசத்திலெல்லாம் பாலைக்கவிழ்த்துவிட்டது
போலச் சந்திரிகைப்பிரகாசித்தது. அப்போ
து வாசனைபெல்கிறவாயையும்,மல்லிகையரும்
பெல்கின்ற பல்லையும், தேனில் மொய்த்துக்
கொண்டு இருக்கின்ற வண்டுகளென்னுங் கரு
வரிகளையும், தேனுகிய கண்களையும், மலைக்கு
கையிலிருந்து பாய்கின்ற சக்தியையு முடை
யதான தென்றலென்கிற, புலியானது ஸ்ரீரா
மர்மேல் சீறிக்கொண்டு புறப்பட்டது. கடல்
கடைந்து அமிர்தங் கொடுத்தவனுனை வாலியி
னுடைய மார்பையும், காட்டினிடத்தில் ஓங்
கிவளர்ந்திருந்த மராமரங்களையும் தமது கை
யிற்கொண்ட பாணத்தினுலே துளைத்த ஸ்ரீ
ராமருடைய திருமார்பிற்பாய்ந்திருக்கிற மன்
மதபாணத்தோடுகூட, சந்திரிகையினுடைய
கிரணங்களாகிய வாளாயுதமும்பாய்ந்தது. அப்
போது ஸ்ரீராமமூர்த்தியானவர் தம்முடைய
இளைத்த திருமேனியைப் பார்ப்பார். தம்மு
டைய இனிய உயிருக்கொப்பாகிய சீதாபிரா
ட்டியாரை நினைப்பார். தமக்குச் சம்பவித்த
துன்பத்தை ஆலோசிப்பார். வேறொன்றையு
ம்பாராமல் தமக்குஎதிராக விருக்கின்ற கடலை
ப்பார்ப்பார். இராவணனுகிய திருடன் வாசம்
பண்ணுகின்றலங்காதீபமெங்கேயென்று சுற்
றிப்பார்ப்பார். அப்புறம், தம்முடையகோத
ண்டத்தைப்பார்ப்பார். இப்படி அநிகஆபர
ணங்களைத் தரித்திருக்கின்றசீதாபிராட்டியாரி
டத்தில்கொண்டமோகப்பித்தேறியமனத்தை
யுடையவரான, ஸ்ரீராமர் மிகுந்த அழகையு
டைய முத்துப்போன்றதந்தபந்தியோடுகூடி
ய பவளத்தையொத்த சீதாபிராட்டியாருடை
ய திருவதரத்தைத் தமதுமனத்தில் நினைத்து
மறவாமல் வருத்தமடையுங் காலத்தில், சூரிய
குமாரனுன சுக்கிரீவமகாராஜன், எல்லாக் காரி
யங்களையும் பூரணம் பண்ணத்தக்க திறவுள
த்தை யுடையசுவாமீ! தேவரீர் இனிவிபீஷணை
ரோடுஆலோசித்து,மேல்நடக்கவேண்டியகாரி
யத்தைஎன்னுமல் இப்படிவருத்தப்படுவதுதி
ருபாசமுத்திரம்போன்றதங்கள்பெருமைக்கு
த்தக்கதோ! என்று சொன்னமாத்திரத்தில்,
ஸ்ரீராமமூர்த்தி துக்கந்தீர்ந்தவராய், சு
க்கிரீவனைப்போல் விபீஷணனை அழைத்துக்
கொண்டுவரும்படி நியமிக்கச், சுக்கிரீவமகா
ராஜன் விபீஷணரிடத்திற்குப்போய் உம்மை
சுவாமி வரும்படி நியமித்தாரென்ன ? உடனே
அக்கிரமமல்லாத வழியையடைந்தவரான வி
பீஷணுழ்வாரும் தாமரைநெருங்கிப் புஷ்பி
த்த தடாகம்போல எழுந்தருளி யிருக்கின்ற
ஸ்ரீராமருடைய சன்னிதியில் வந்து அவரு
டைய திருவடித் தாமரைகளில் தெண்டஞ் ச
மர்ப்பிக்க அந்தவிபீஷணுழ்வானை எழுந்திரு
ந்து உட்காரும்படியாக நியமித்தார். அப்ப
டியே உட்கார்ந்தபோது தம்பி விபீஷணு!
சமுத்திரத்தினுல் சூழப்பட்ட லங்காபட்ட
ணத்தினுடைய அரணிப்பும், அதிலுள்ள ரா
க்ஷசர்களுடைய வல்லமையும், சைனியங்களி
னுடைய தொகையும், விவரமாய்ச் சொல்ல
வேண்டுமென்றார். விபீஷணுழ்வார் எழுந்தி
ருந்தார். இருந்தேசொல்லென்ன ! இரண்டு
கைகளையுங் கூப்பிக்கொண்டு சுவாமியைத்
தொழுது விஞ்ஞாபனகாரியங்களை விவரமாகச்
சொல்லத்தொடங்கினுர்.

முன்னொரு காலத்தில் ஆதிசேஷனும்,
வாய்வுபகவானும், தங்கள்வலியைச்சோதிக்கு
ம்படியாக ஆயிரஞ்சிகரங்களோடுகூடிய மே
ருமலையி னிடமாகவந்து ஆதிசேஷன் தன்னு
டைய ஆயிரந் தலைகளாலும், ஆயிரஞ்சிகரங்
களையு மறைத்துமூடிக்கொண்டார். அப்போ
து வாய்வு பகவான் பூமிக்குஞ்சுருவாணியாக
நிலைத்திருக்கிற மேருமலையை அலைகுலையச்
செய்து தம்முடைய பலத்தினுலே ஒருசிகர
த்தைப் பறித்துக்கொண்டுவந்து சமுத்திரத்தி
ன்மத்தியி லெறிந்துவிட்டார். அதுதா னிந்த
லங்காதீபம். அந்ததீபம்,எழுநூறுயோசனைவி
ஸ்தாரமாகும். அதைச்சூழ்ந்தகோட்டைமதில்
லட்சயோசனை ஆழ்ந்ததும். சூரியமண்டல
த்துக்கு மூடர்ந்ததுமாய் உலகத்தை சக்கர
வாளகிரி வளைத்துக்கொண்டிருக்கிறதுபோல,
வளைத்துக்கொண் டிருக்கின்றது. அதைச் சு
ற்றிலுமுள்ள தந்திரங்களையும், சூத்திரவேலை
ப் பெருமைகளையும், காவலாக அமைத்திருக்
கின்ற அரண்முதலான வைகளையும், விரித்து
ச் சொல்லவேண்டுமானுல், ஆயுள்போதாது.
அடியேன் வேறென்ன சொல்லவேண்டியிரு
க்கின்றது, தேவரோ கடாக்ஷிக்கலாம். அதற்கு
ச் சமுத்திரமே அகழாக விருக்கின்றது. அப்
படிப்பட்ட கோட்டையின் வடக்கு வாசலுக்
குக்காவலா யிருப்பவர்கள் பதினுறுகோடி அ
ரக்கர்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும்
யுகாந்தகால யமனுஞ் சமானமல்ல, சாக்ஷா
த் சிக்ஷிப்பவர்கள் ருடரான ஈசானமூர்த்தியே
சமானமாகும். மேற்குக்கோட்டை வாசலில்
இருக்கின்ற காவலாளிகள். அவர்களைப் பா

ர்க்கிலும் இரண்டுகோடிபேர்க ளதிகமானவர்கள். அவர்கள்கண்ணெதிரோ எமன்வரக்கண்டால் அவனுடைய ரக்தசகிதமாயுயிரையுமுண்டுவிடுவார்கள். தெற்குக்கோட்டை வாசலைக்காக்கின்ற துஷ்டர்கள், மலைக்குச்சமானமான ஆகாரமுள்ள பதினாறுகோடிபேர்கள். அவர்களுடையகொடுமைசொல்லிமுடங்காது, மிகுந்தபலமுள்ள நமனுடையஅரசையும் பிடுங்கிக்கொள்ளத்தக்க வல்லமையுடையவர்களாகும். கிழக்குக்கோட்டை வாசலிலிருக்கின்ற துஷ்டர்களும்பதினாறுகோடிபேர்கள்தானென்றுகேள்வி, அவர்களஷ்டதிக்கஜங்களையும் பின்னங்காலைப்பிடித்துப்பூமியிலறைபத்தக்கவல்லபமுள்ளவர்கள். ஆகாசத்தில்காத்துநிற்கின்ற துஷ்டர்கள் முப்பத்திரண்டு கோடிபேர்க ளென்பார்கள். தேவர்கள் வருவார்களென்று,பூமிக்குள் பதுங்கிக்கொண்டிருக்கின்ற இரக்கமற்றராக்ஷசர்களுக்குஅளவில்லை. அந்தக்கோட்டைமதிலுக்கு உட்புறத்திலும்,வெளிப்புறத்திலும், நித்திரையில்லாமல் காற்றையாகாரம் பண்ணிக்கொண்டு, காற்றாடியைப்போலச்சுற்றித்திரிந்து,காத்துக்கொண் டிருக்கின்ற ராக்ஷசர்கள் ஆயிரங்கோடிபேர்கள். இந்தப்பிரகாரமாக அந்தலங்காபுரிக்கு மூன்று அரணங்களுண்டு, அவைகளைக்காக்கின்ற ராக்ஷசர்கள், மதிலொன்றுக்கு முப்பதுகோடியாக, மதில்மூன்றுக்கும் தொண்ணூறு கோடிபேர்கள் காவலிருப்பார்களேயானால்,அந்தலங்காபட்டணத்தின் பெருமையைச் சிறப்பித்துச் சொல்லவேண்டுமோ ? ராவணனால் சிறப்பும், செல்வமும், அடைந்து தீர்க்கவைரமுள்ள அதிகபலவந்தர்களும்,எதிரிகள்வந்தால்உண்மையாய்ப்பாடுபட்டு உதவிசெய்கிறவர்களுமாய், ஆயிரத்தறுநூறுகோடி ராக்ஷசர்க ளிருக்கின்றார்கள். அதுவுமல்லாமல் அவனுடைய அரண்மனைவாசலில் இந்தவுலகத்தை யொருகையில் தூக்கும்படியான தைரியசாலிகளும், மலைக்குச்சமானமானபலமுள்ளவர்களுமாய்க்,கோடிகோடி ராக்ஷசர்காவலிருக்கின்றார்கள். மேலுமந்த ராவணனுடைய மேருமலைக்குச் சமானமாகிய ராஜமாளிகைவாசலின் இடதுபக்கத்திலும், வலதுபக்கத்திலும்,விஷக்கண்ணர்களும், அக்கினிக்கண்ணர்களும், கோபக்கண்ணர்களும், கண்சிமிட்டாமல் பார்க்கிறவர்களுமாய், அறுபத்துநாலுகோடிராக்ஷசர்கள் காத்துக்கொண்டிருக்கின்றார்கள். அல்லாமலும்பேய்க்குச்சமானமாகப் பிதற்றிக்கொண்டு அவனுக்கு மூலபலமாயிருக்கின்ற ஆயிரம்வெள்ள சைனியங்களைக் கொல்வதற்குப்பிரம்மகற்ப பரியந்தஞ்செல்லவேண்டு மென்பது அடியேனுக்குத் தெரியும். சதுரங்க சைனியங்களாய்ப் பதினாயிரம்தேரும், செந்தாமரைப் பூவைப்போல முகங்களையுடைய இருபதினாயிரம் யானைகளும், காற்றைப்போலப் பறக்கும்படியான நாற்பதினாயிரங் குதிரைகளும், எண்பதினாயிரம் ஒட்டகங்களு மிருக்கின்றன. லங்காபட்டணத்தினுடைய அரணிப்பு இப்படிப்பட்டது. அதன்சைனியங்களினுடைய தொகை-இவ்வளவாகும். இவனிடத்தில்வரமாகவாங்கின வளாயுதத்தை வலதுகையில் பிடித்திருக்கின்ற வருண ராவணனுக்குத் துணையானவர்கள் தங்களுக்குவேண்டிய பலங்களையும், வரங்களையும், அனேகதபங்களைச்செய்து பெற்றுக்கொண்டார்கள். அவர்களில், கும்பனென்று ஒருவனுண்டு, அவனூழிக்காற்றைப் பார்க்கிலும் மகாகொடுமையானவன், சுவர்க்கலோகத்திலுள்ள சித்தகணங்களைச் சிறையிட்டவன், ரதகஜதுரகபதாதிகளான பத்துக்கோடி சைனியங்களையுடையவன். வேறொருவன் அகம்பனென்ற பேருள்ளவன். அவனனேகயுகந் தவஞ்செய்து வெகுவரங்களைப் பெற்றிருக்கின்றான். அவன் யுத்தங்களல்லாமல் தனக்குச்சுகந்தருவதாக வேறொன்றையும் இச்சிக்கிறவனல்லன்! அவனுடைய சைனியங்கள் அளவில்லாதவைகள். அவனோ ? நரசிம்மத்திற்குச் சமானமானவல்லமையுள்ளவன். நிகும்பனென்றொரு பெரியவாகாரமுடையவனுண்டு,அவன்மலையிலும் பெரியதானகுதிரைகளும், யானைகளும், தேர்களும், வில்வீரர்களும், ஆகிய வொன்பதுகோடிசைனியங்களையுடையவன். இவனோடு யுத்தஞ்செய்யவேண்டுமென்று தனதுவாகனமாகிய ஆட்டுக்கடாவைவேகமாய் நடத்திக்கொண்டுவந்து யுத்தத்தில்நின்ற அக்கினிதேவனைத் தோற்கடித்தான். மகோதரனென்கிற மற்றொருவீரனுண்டு - இவன்பிசாசங்களும், யாளிகளும்,யானைகளும்,கழுதைகளும்,கட்டப்பட்டபத்துக்கோடி தேர்ப்படையை யுடையவன். தாயாயிருந்தபோதிலும் வஞ்சனைசெய்கிறதில் பின்னிடமாட்டான். மகா தந்திரசாலி. யாககேதுவென்றொரு வீரனுண்டு - இவன் மலையில் வாசஞ்செய்கின்ற வர்களான இருபதுகோடி வீரர்களுக்குத் தலைவன். இவ்வுலகுக்குள்ளவர்கள் நாலாக்கில்லை யென்னும்படியாய், யாவர்களையும், தன் பற்களுக்கு இரையாக்கி விடுவான். அனேகந் தடவைகளில் யுத்தத்துக்குவந்த தேவர்களை ஜயித்திருக்கின்றான். சூரியகேதுவென்று ஒரு வீரனுண்டு - அவன்பூலோகத்தி லுள்ளவர்களையும், தேவலோகத்தி லுள்ளவர்களையும், ஒன்றாகச் ஒரேநாளில் தின்றுவிடத்தக்கவனென்று பிர

சித்தப்பட்டவன். இவன்எட்டுக்கோடி சைனி
யங்களையுடையவனும், அக்கினியும்பயப்படும்
படியான பார்வையுடையவனுமானவன். மா
பெருங்பாரிசனென்ற ஒருவீரன் மலையிலும்
மிகுந்த பலமுள்ளவன். தேவர்களும், ரிஷிக
ளும், பிரமமுனிவாதிகளும், இவன் பெயரைச்
சொல்லவேண்டுமானாலும் பக்கம்பார்த்துச்
சொல்லவேண்டும்படியாகியமகத்தானகோப
முள்ளவன். இவன் பதினாறுகோடி சைனியங்க
ளுக்குத்தலைவன் வஜ்ரதந்தனென்றும், காலாந்த
கனென்றும், பெயருள்ள எரிமுகத்தையுடை
யவனும், எட்டுக்கோடிசைனியங்களுக்கு அ
திபதியும், சூலாயுதத்தையுடைய உமாநாயக
னையும் வெல்லத்தக்க பலமுள்ளவனுமாகிய
ஒருவீரனுண்டு; எந்தக்காலத்திலும் சஞ்சல
ப்படாதவர்களான பத்துக்கோடி சைனியங்
களை வசப்படுத்திக்கொண்டிருக்கிற-வல்லமை
யில் தனக்குச்சமானமாக வேறொருவருமில்
லாதவனும், யுத்தத்தில்யக்ஷர்களைக்கையினாலே
பிசைந்து நசுக்கினவனுமான - பிசாசன் என்
கின்ற மற்றொருவீரனுண்டு - தேரும், யானை
களும், குதிரைகளும், வில்வீரர்களுமாகிய
பதினாறுகோடி சைனியங்களுக்குத் தலைவனு
ம், பூமியைப்பேர்த் தெடுக்கத்தக்கவனும், ச
ப்த சமுத்திரங்களும், சப்தகுலாசலங்களும் க
லங்கச்செய்ய வல்லவனும், கோபித்துப்பே
சுகின்ற சக்தியுடையவனு மான, துன்முக
னென்று ஒரு பாபியுண்டு. லங்காதிபத்தை
யொத்த மற்ற தீபங்களிலே வாசம்பண்ணு
கிறவர்களான பத்துக்கோடி ராக்ஷச வீரர்க
ளுக்குத்தலைவனும், வாள்வித்தையில் வெற்றி
பெற்றவர்களான வித்தியாதரர்களைத் தோற்க
டித்து அவர்களுடைய கீர்த்தியைப் போக்க
டித்தவனு மானவிரூபாக்ஷனென்று அக்கினி
க்கக்குகின்ற பார்வையுடையவ னொருவனுண்
டு. யுத்தத்தில்வல்லவனும், மகாஜெயசாலியும்,
தேவர்கள்மத்தாகக்கொண்ட கோவர்த்தனகிரி
க்குச்சமானமானவனும், எல்லாச்சேனாபதிகளி
லும், அதிகபலமுள்ளவனும், பூலோகத்தாரும்
சுவர்க்கலோகத்தாரும், கேட்டமாத்திரத்தில்
முதுகுகாட்டி போம்படியான ரணமஸ்த
னென்கிறபெயருள்ளவீரனொருவனுண்டு. து
ம்ராக்ஷனென்பவன் பிணங்களைமசானத்தில்லவ
க்கவொட்டாமல் தன்பல்லுக்கே இலாயாக்கிக்
கொன்னுகிறவனும், கோடாகோடிராக்ஷசவீ
ரர்களுக்குத் தலைவனும், தேவர்களையெல்லா
ம் யுத்தத்தில் முதுகிட்டோடும்படியாகச்
செய்தவனுமானவன். இப்படிப்பட்ட பேர்
களையெத்தனையாயிரம் பேர்களென்று சொ
ல்லப்போகின்றேன். அந்த ராவணனுடைய
உதவிச் சைனியங்களா யிப்போது சொன்ன
வர்களைப்பார்க்க இரண்டு மடங்கு சைனியங்
களுக்குத் தலைவனாயிருக்கின்ற பிரகஸ்தனென்
று ஒருவீரனுண்டு. சேனாதிபதியாகிய இந்தி
ரனுடைய ஐராவத மென்கின்றயானை பின்னி
ட்டோடவும், அந்த இந்திரனுடைய ஏழுசக்க
ரம்பூட்டியதேர் - சின்னபின்னப்பட்டோட
வும், முப்பத்துமூன்றுகோடி தேவகண
ங்களும் - முதுகிட்டோடவும், தன்னுடை
யஅம்புகளை- பிரயோகித்தவனும், அஷ்டதிக்
கஜங்களினுடைய நான்கு சந்திரர்களைப்போ
லப் பிரகாசிக்கின்ற நான்கு கொம்புகளையும்
பிடுங்கிக்கொண்டு மேருபர்வதமானது மதங்
கொண்டு திரிந்தாற்போலத் திரிந்துகொண்டி
ருந்தவனுமான கும்பகர்ன்னனென்றுராவண
னுக்கு ஒருதம்பியுண்டு. மேலும் சூரியசந்தி
ரர்களையும் சிறையிட்ட மிகுந்தகோபமுடை
யவனான இந்திரசித்தென்று சொல்லப்ப
ட்டபிள்ளை ராவணனுக் கொருவனுண்டு - இ
வன் இந்திரனைப்பிடித்து கட்டினதழும்பு அ
ந்தஇந்திரனுடைய கையிலுங்காலிலு மின்ன
மாறவில்லை. அந்தஇந்திரசித்தையுஞ் செயிக்க
வல்லவனும், கொஞ்சமாவது தருமத்துக்கு இ
ரக்கப்படாதவனும், சாக்ஷாத்து கைலாசமூர்
த்தியினிடத்தில்பெற்ற வில்லையுடையவனும்,
இந்திரசித்துக் கிளையவனுமான ஒருபிள்ளையு
ண்டு - வேறொரு இந்திரனிவனுக்குச் செயிக்
கிறதற் கில்லாமையா லிந்திரசித்தென்ற பே
ரில்லாமல் அதிகாயனென்ற பேருண்டாயிற்
று. இவ்விருவரல்லாமலும் ராவணனுக்குத் தே
வாந்தகன் - நராந்தகன் - திரிசிரா வென்கின்
ற மூன்றுபிள்ளைகளுண்டு அந்தமூன்றுபேரு
ம் திரிமூர்த்தியை யொத்தவர்கள். யுத்தத்துக்
குப் புறப்பட்டால் அவர்களெதிரில் நிற்கவல்
லவர்கள் திரிபுவனங்களிலும் ஒருவருமில்லை.
இவர்களுடையவல்லமை யிப்படியிருக்க. ரா
வணனுடையபலம் எனக்குத் தெரிந்தமட்டுக்
குஞ்சொல்லுகின்றேன். அவன் பிர்ம்மபௌத்
திரரும்- காசிபமஹாரிஷியின்புத்திரருமா
ன-புலஸ்தியப் பிர்ம்மாவினுடையபுத்திரன்.
இவன் தபசில்முனிவர்களிலும் உயர்ந்தவனாகி
திரிநேத்திராகிய ருத்திரமூர்த்தியைநோக்கித்
தவஞ்செய்து, எல்லாச்சிறப்பையும்பெற்றான்
இவன். பூதகோடிகளெல்லாஞ்சூழ்ந்துகொண்
டிருக்கும் படியான சாக்ஷாது மான்தோலா
டையையணிந்த ருத்திரமூர்த்தியானவர்-பார்
வதிசமேதராய் எழுந்தருளியிருக்கின்றகைலா
சபர்வதத்தைஉள்ளங்கையில் வேரோடுபிடுங்கி
த் திரிலோகங்களும், நடுநடுங்கும்படியாய்த்
தூக்கினான். உலகங்களைத் தாங்குகின்ற அஷ்ட

திக்கஜங்களையும் தந்தங்கள் முறியும்படியாகத் தன்னுடைய புஜத்தினால் தாக்கினான், இனி நம்மீதும் வருவானென்று முப்பத்துமுக்கோடிதேவர்களும் நடுக்கங்கொண்டு ஓட்டம்பிடித்தார்கள். இவன் காலகேயர்களை அவர்கள் பந்துசகிதமாக, அணிந்த கிரீடங்களோடும், பிடித்த ஆயுதங்களோடும், கொன்றபிறகு இவனுடைய பெயரைக்கேட்டாலும் இடிமுழக்கங்கேட்ட சர்ப்பம்போல் தானவர்களுடைய கருவுங்கூட இன்னும் பயப்படுகின்றது. அநேகதடாகங்களால் சூழப்பட்ட அளகாபுரி பட்டணத்தில் இப்போது பதுங்கிக்கொண்டிருக்கிற குபேரன் தன்னுடைய அநேகமான அயிஸ்வரியங்களெல்லாம் பட்டணவீதிகளில் சிந்திச்சிதறுண்டுபோகும்படியாகப் புலியைக்கண்டமானைப்போலப்பயந்து தன்மானமும், புஷ்பகவிமானமுமிழந்து, இந்த லங்காபட்டணத்தையும்விட்டு, ஓடிப்போய்விட்டான். நம்மையடித்து உடம்பெல்லாங்காயப்படுத்தினதுமல்லாமல் இந்த ராவணனாகிய நமன் நம்முடைய உயிரையும் வாங்கும்படியானசெய்கையிலிருக்கின்றானென்று யமனுந் தன் பட்டணத்தைவிட்டு ஓடித் தன்னுடைய ஆயுள்நாளைக் கணக்கெண்ணிக்கொண்டிருக்கின்றான். சூரியனை லங்காபட்டணத்துக்குள் பிரவேசிக்கவொட்டாமல் வெளியிலேயேநிற்கும்படியாக ஜெயித்து, அந்தச் சூரியனுடைய கண்களுக்கு லங்கையின் பெருமையையும் காட்டவில்லை. வருணனை ஜெயித்து, அவனுடைய பாசத்தையும்பிடுங்கிக்கொண்டான், அந்தப்பயத்தினாலே அவன் தப்பிப்பிழைத்துச்சமுத்திரஜலத்திற்குள்ளே மறைந்துக்கொண்டிருக்கிறான். இப்படிப்பட்ட பலமுள்ள ராவணன் மலைகளெல்லாம் பொடிப்பொடியாயழிந்தாலும், இவனுடைய தோள்களுக்குக்கொஞ்சமேனும் லயமுண்டாகிறதில்லை, இவனுடைய பலம் இன்றைக்கானாலும், நாளைக்கானாலும், இன்னுங் கொஞ்சங்காலப்போய் அழியுமானாலும் தேவராலன்றி வேறொருவரால் முடியாது.

இந்த ஆஞ்சனேயரால், புலியினிடத்திலகப்பட்ட ஆடுகளைப்போலச்செத்தழிந்த ராக்ஷசர்களுக்களவில்லை, தோரணக்கம்பத்தினால் வதைப்பட்ட ராக்ஷசர்கள் கடல்மணலின் தொகையைப்பார்க்கிலும் அளவில்லாதபேர்கள். அதுவுமல்லாமல் லங்காபட்டணமுஞ்சுட்டெரிக்கப்பட்டது. அப்போது அதில் வெந்த ராக்ஷசர்களுடைய தேகத்தில்கரிகள் நிறைந்த கடலிலிருக்கிற வடவாமுகாக்கினிக்குக்கொடுத்ததட்சணையாயினது. அந்தராக்ஷசர்களுடைய கையில்பிடித்திருந்த மலைபோன்றவில்லோடுங்கூட அவர்களைப்பிடித்து இவர் பூமியில்தேய்க்கும்போது அவர்கள் தேகத்திலிருந்துமழிந்த ரக்தநிணக்குழம்புகள் லங்காபட்டணத்துத்தெருவில் இன்னமும் உலரவில்லை. அந்த ராவணனுடைய பஞ்சசேனாதிபதிகள் தேவர்களுக்குரிய சுவர்க்கத்திலுள்ள காவலையும், அரணங்களையும், அழித்தவீரர்களாகும். அப்படிப்பட்டவர்கள் தங்கள்சேனைகளும், பத்துக்களுமாய் யானையின்காலிலகப்பட்ட செல்லைப்போல் இவரால்நசுங்குண்டு இறந்தார்கள். இதுவுமல்லாமல் எண்பதினாயிரம்பேர் கிங்கரர்கள்மலைக்குச்சமானமான ஆகாரங்களையுடையவர்கள், கொடியகையினாலும், மழுவாயுதத்தினாலும், இருப்புலக்கைகளினாலும், எதிர்த்துநின்று ருத்திரமூர்த்தியினால் அழிந்துபோனதிரிபுராசுரர்களைப்போலானார்கள். ஜம்புமாலி யென்கிற மகாவீரன் ஒருவன் சமுத்திரம் போன்ற சைனியங்களோடுகூட இந்த ஆஞ்சனேயரை எதிர்த்து, இவர் தோளொன்றுக்கு ஆயிரமாயிரம் அம்புகளைப் பிரயோகித்துப் பிறகு அவன்கை வில்லினாலேயே அடியுண்டு எமலோகமேபோய்ச்சேர்ந்தான். இதுவுமல்லாமல் அந்தலங்காபட்டணத்தை இவர் எரித்தகாலத்தில் அதிலழிபட்டுப்போன ராக்ஷசர்களையிவ்வளவென்றுயார்கணக்கிட்டுச்சொல்லுவார்கள். எரிந்துபோகாமல் தப்பியின்னமும் வீரர்களிருக்கின்றார்களா? இவரால் எரிக்கப்பட்ட அந்தலங்காபட்டணநெருப்பானது அவர்களுடைய ரக்தநிணங்களினாலேதான் அவிந்தது. லங்கையி லிறந்தவர்களைப் பற்றி; வேறே யென்ன சொல்லஇருக்கிறது. ராவணனேன் அணிந்த மாலையுடனும், பூசின சந்தனத்துடனும், அன்று பூண்ட ஆபரணங்களுடனும், கட்டிய வஸ்திரங்களுடனுங் கூட ஏழுநாள்வரைக்கும் அந்தலங்கையிலிருக்கச் சகிக்கமாட்டாமல் ஆகாயத்திலேயே நின்றுவிட்டான். அந்தவல்லமைபொருந்திய ராவணனுடைய லங்காபட்டணப் பெருமையையும், அதன் காவற்பெருமையையும், சொல்வேனோ? அதுஎரிந்துபோனபிறகு இராவணனுடைய ஏவலினால் சாக்ஷாத்து பிரம்மதேவரே அந்த லங்காபட்டணத்தைப் பழையபடியே சிருஷ்டித்து விட்டார். மதத்த யானையையொத்த கரன்முதலாகிய வீரர்களும், வாலியும், தேவரால் இறந்ததைக் கேட்டதினாலும், கபிசிரேஷ்டராகிய இந்த ஆஞ்சனேயரால் லங்காபட்டண மெரிந்ததையும், இவர் ராக்ஷசர்களைக் கொன்றுவிட்டு வந்ததையும், அடியேன் கண்ணினாற் கண்டதினாலும் தான்

இவ்விடம்வந்து தேவரீருடைய திருவடியை யடைந்தேன் ஸ்வாமீ! என்று தம்முடைய திருமேனியோடு உறவுகொண்ட கறுத்தமேனியையுடையவரான விபீஷணாழ்வார் விண்ணப்பம்பண்ணிக்கொண்ட வார்த்தைகளை யெல்லாங்கேட்ட ஸ்ரீராமமூர்த்தியானவர் மாலைப்போலுங்கேசத்தையுடையவரும், மிகுந்த பாக்கியமுள்ள மயில்போன்றவருமான சீதாபிராட்டியாரை வெகுகாலம் விட்டுப்பிரிந்திருந்ததினால் ஒளிமழுங்கி, மெலிந்திருந்த திருத்தோள்கள்பூரித்துக்,களைதூதராகிய ஆஞ்சநேயரைப்பார்த்துச் சொல்லுகின்றார். வீரசிகாமணியாகிய ஆஞ்சநேயனே! அந்த ராவணனுடைய சைனியங்களில் பாதிசைனியங்களுக்கு மேற்படவே கொன்றுவிட்டாய். லங்காபட்டண முழுவதையும், அக்கினிக்கிரையாக்கிவிட்டாய். இனியங்கே யென்னபலமிருக்கின்றது. சீதையைப்பெற்றும் இங்கேகொண்டுவராதது என்னுடைய வில்லின் வீரத்தைக் காட்டும்படியாகத்தானே! உன்னுடைய தோள்வல்லமையை நிலைநிறுத்துவைத்திருக்கின்ற அந்த லங்காபட்டணத்துக்கு நாங்கள்போய் இனிச் செய்யப்போகின்ற காரியங்களினால் எங்களுக்கு என்னபெருமையுண்டாகப் போகின்றது. மேருமலைக்குச் சமானமான தோள்களையுடையவனே! நாங்கள் அதிகசேனைகளோடு வந்து, என்ன காரியத்தைச் செய்தோமென்று கீர்த்தியடையப்போகிறோம். என்னுடைய சௌரியத்தையும், ராவணனுடைய வல்லமையையும், ஜெயம் பெற்றதினாலும், தோற்பித்ததினாலும், உன்வசப்படுத்திக்கொண்டாய். என்ன யிஸ்வரியமெல்லாம் உருவம்பெற்று வந்தது போலும் உற்பவித்த ஆஞ்சநேயனே! இந்த மூன்றுலோகங்களையுஞ் சிருஷ்டித்த பிர்ம்மதேவருடையபதவியை மறுகற்பத்தில் நீயடையக்கடவாய். என்று அருளிச்செய்தமாத்திரத்தில், அனுமாரானவர் சுவாமியினுடைய திருவடிகளில சாஷ்டாங்கத்தெண்டன் சமர்ப்பித்து, ஒன்றும்பேசாமல் வாய்பொத்திக்கொண்டு நின்றார். அவருடைய பிரதாபத்தைக் கேள்விப்பட்ட வானரவீரர்களும், அவர்களுக்குத் தலைவரான சுக்கிரீவமகாராஜரும், மோட்சத்தை யடைந்தவர்களைப்போலப் பரமானந்த பரிதர்களாய் ஆச்சரியமடைந்தார்கள்.

இலங்கை கேள்விப்படலம்
முற்றிற்று.

## வருணனடைக்கலப்படலம்.

விபீஷணாழ்வார் சுவாமியை நோக்கிச் சுவாமீ! இனிமேல் இந்த ஆஞ்சநேயருக்கு இந்த மூன்றுலோகங்களைச்சிருஷ்டிக்கிறதும், ரக்ஷிக்கிறதும், சம்மரிக்கிறதும், ஒருகாரியமல்ல. இனி வருணனை அழைக்கும் விதத்தையும், நம்முடையசேனை இந்தச்சமுத்திரத்தைத் தாண்டிப்போகும் வழியையும், ஆலோசிக்கவேண்டும். மறைந்துநின்ற உம்முடைய கல்யாணகுணங்களை யாசிரயிக்க இந்தச் சமுத்திரமானது இச்சிக்கின்றது. மேலும் உம்முடைய வமிசத்தாராலுண்டானது. ஆதலால்,தேவரீர் விரும்பும்வரத்தை யிதுகொடுத்தருளும், இந்தச்சமுத்திரராஜனைக்கேட்டுச் சைனியங்கள் போகும்வழியைப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்றார். இதைக்கேட்டு விபீஷணாழ்வானுடையவார்த்தைநன்றாயிருந்ததென்று சந்தோஷப்பட்டு வானரசைனியங்களோடுகூட ஸ்ரீராமமூர்த்தியானவர்சமுத்திரத்தில் சமீபமாகவந்தபோது, சூரியனுடைய குதிரைகள் அஸ்தமனகிரியில்நின்றுந்தாண்டிப்போய்விட்டது. அப்போது, இராத்திரிகாலமாயிற்று. சூரியனுக்குப்பகையான அந்த இருள் நீங்கும்படி அமிர்தகலைகளோடுங் கூடிய சந்திரனுதித்தது. பொறிகளோடுங்கூடிய படத்தையுடைய கரும்பாம்பாகிய ராகுவினாலே விழுங்கி யுமிழப்பட்ட அந்தச்சந்திரனைப்போலு மிருந்தது இந்தச்சமுத்திரஞ்சூழ்ந்த பூமியானது. அப்போது சுவாமியானவர் சீதாபிராட்டியாரை மீட்டுக்கொண்டுவரத்தக்கவழியைப் பெறும்படியான திருவுளங்கொண்டவராய்ச் சாஸ்திரோக்தமாக இளையபெருமாளால்திருத்தப்பட்ட தெர்ப்பைச்சயனத்தின்மீதுவருண மந்திரத்தைச் செபித்துக்கொண்டு, கடலின் மேல் பார்வைசெல்லும்படியாகச் சயனித்துக்கொண்டிருந்தார். தமதுதிருமேனியிற் றுகள்படியவும், சூரியன் திருமுகமண்டலத்தை ஸ்பரிசிக்கவும்,ஒருபகல் ஒரு ஊழிக்காலத்திற்கொப்பாக ஏழுநாள்பரியந்தம் சயனித்திருக்கவும், வருணதேவன் வராமையைக்கண்டு இந்தப்பெரியசமுத்திரராஜனானவன் நாம்கேட்ட வரம்உண்டு இல்லையென்று சொல்லும்படியாகவரப்பெற்றோமில்லையேஎன்கின்ற கோபத்தினாலே, சமுத்திரத்திலே அக்கினி புறப்பட்டதுபோலச்செந்தாமரைப் புஷ்பம்போன்ற இரண்டுதிருக்கண்களுஞ்செவந்தது. நாம்சிறந்த பெண்சாதியை யிழந்து, இந்தச் சமுத்திரத்

ளைத்தாண்டிப்போகிறதற்குவழிவேண்டுமென்றுவேண்டியும், இந்தவருணதேவன் இல்லையென்றுசொல்வதற்கிடாக, ஒளித்துக்கொண்டால்போலிருக்கிறது, என்று மிகுந்த கோபத்துடனே பெருமூச்சுவிட்டுக்கொண்டு, நீண்டவில்வளைந்ததுபோல இரண்டுபுருவங்களும்வளைந்தவராகித், தாங்களொருவரிடத்திலும், ஒன்றும் விரும்பாதவர்களாயிருந்தாலும், தம்மிடத்தில்ஒருவர் வந்துஏதேனுங் கேட்பார்களானால் அவர்களுடைய வறுமையை நீக்குவார்கள். இன்றைக்கு நாம் கடலைத்தாண்ட வேண்டுமென்று வருணராஜனைப்பிரார்த்திக்கவும், அதை மறுத்துவிட்டான். இவனுடையநீதி நன்றாயிருக்கின்றது, நன்றாயிருக்கின்றது. என்று மிகுந்தகோபத்துடன்நகைத்து, நம்மை அற்ப வில்லையுடையவனென்றும், ராவணன் அபகரித்துக்கொண்டு போகத் தன்தாரமிழந்த தன்மையையுடையவனானபடியால், வீரமற்ற மனிதனென்றும், நிந்தனைசெய்து, இந்த வருணராஜன் வாராமற்போனான், என்று நினைத்தும், ஒருதவிசெய்து ஒன்றைப்பெற்றுக் கொள்ளுதலும், கீர்த்தியினால் ஒருவரிடத்தில் ஒன்றைப்பெற்றுக் கொள்ளுதலும், சண்டைசெய்து துரத்திவிட்டு ஒன்றைப்பெற்றுக்கொள்ளுதலும், ஆகிய இவைகளெல்லாம் வழக்கமானவைகள். நாமப்படிச்செய்யாமல் கேட்டுவாங்கும்படி வந்தபோது தன்னியல்பும், தர்மமும், குறைவாகும்படி ஒளித்துக்கொண்ட இது நன்றாயிருக்கின்றது. நம்மைக் காட்டிற்குவந்து காய்கனிகளைத்தின்று உடம்பு வளர்த்துக்கொண்டுயிருக்கிறவனென்று நினைத்திருந்த இந்த கடலுக்குத்தலைவனான வருணராஜனுடைய பெருமையையும், வில்லுடனேநின்ற மனிதனாகிய எம்முடைய சிறுமையையும், தேவர்களே பார்க்கட்டும். பழிக்குப்பயந்து நாமிருந்த தன்மையை அற்பமென்று நினைத்து நம்மை நிந்தித்த இந்தச்சப்தசாகரங்களும் வெந்து ஒருபிடிசாம்பலாகும்படியாகவும், பஞ்சபூதங்களும் வந்து அழுதுகொண்டு பிராணபிக்ஷை கேட்கவும் செய்கிறேன், அப்போது என்னுடைய சேனைகள்கால்கூசாமல் தாராளமாக இந்தக்கடலின்வழியாக நடப்பார்கள். மோக்ஷத்தையடைந்த முக்தர்களானபோதிலும், இந்த பூமியில் வெறுமையோடு வருவார்களானால் ; ஒருவருமவர்களை - லக்ஷியஞ்செய்யமாட்டார்கள். அக்கினியானபோதிலும், சிறிதாய்க் காணப்பட்டால் அதற்குப்பயப்படமாட்டார்கள். உருவச்சிறுமையைக்கண்டவர்கள் குணப்பெருமையைப்பார்த்தா லல்லாம லுணர்வடைய மாட்டார்கள். என்றுஊழிக்காலத்தில் அதிகஉக்கிரத்தோடு புறப்படுகின்ற சூரியனைப்போல பிரகாசிக்கின்ற திருமுகமண்டலத்தையுடையவராய் ஸ்ரீராமரானவர் பலதரம் வில்லைக் கொடுகொடுவென்று கேட்டபோது கண்கள் சிவந்து நெருப்புப்பொறிபறக்க லட்சுமணப் பெருமாள் வில்லைக்கொடுத்தார். அதைவாங்கி சுவாமியானவர்வளைத்து நாணேற்றி விரலால் குணத்தொனிப் பண்ணினார். அந்த குணத்தொனியானது கயிலாசபதியினுடைய தேவியாகிய பார்வதியுடைத்தாயிருந்த ஊடலையும் நீக்கிவிட்டது.

மேலும் சுவாமியானவர் லோகத்திலுள்ள ஜலத்தையெல்லாம்முடிவுகாலத்தில் கிரகிக்கின்ற கிரணங்களையுடைய சூரியனுக்குச்சமானமான அஸ்திரங்களைப் பிரயோகம்பண்ணினார். சப்த குலாசலங்களைப் பார்க்கிலும், மிகுந்தபலமுடையதான அந்தகோதண்டத்தை மூன்றாம்பிறைச்சந்திரனைப்போல் வட்டாகாரமாக வளைத்து, அதில்சராசரங்களையும்பிரளயகாலத்தில் சுட்டெரிக்கின்ற வடவாமுகாக்கினியைக் காட்டிலும், மூன்றுபங் கதிகமாகக் கொடுமையையுடையபாணங்களைப்பிரயோகித்தார். அப்போது சமுத்திரத்திலுள்ள மீன்களும், பாம்புகளும், மலைகளும், மற்றுமுள்ளவைகளும் சமித்துகளாகவும், நுரைகளோடுங்கூடிய அந்தச் சமுத்திர ஜலமானது ஹோமநெய்யாகவும், பிரயோகிக்கப்பட்ட அம்பு அக்கினியாகவும், சமுத்திரக்குழியானது சூழ்ந்த யாககுண்டமாகவும் இருந்தது. மேலும், அந்தப் பெருமைபொருந்திய நெடியவில்லிலிருந்து புறப்பட்ட ராமபாணம் சப்தசாகரங்களையும் புகையும்படியாகச் சுட்டெரித்துக்கொண்டு. ஊழித்தீயின் கொழுந்துகள் புறப்பட்டதுபோலப்போய்ச் சக்கிரவாள கிரிக்கப்புறத்திலிருக்கின்ற இருளையும் நாசப்படுத்தி விட்டதுகள். சுவர்க்கலோகத்திலிருக்கின்ற கற்பகச் சோலைகளுந் தீயும்படியாகக் குதித்துவிட்ட ராமபாணாக்கினியினாலே மருமஸ்தானமெரிந்து பெரும்புறக்கடலிலுள்ள மகரமச்சங்கள் இடிவிழுந்ததுபோலும் விழுந்ததுகள். சமுத்திரத்திலுள்ள மலைகள்வெந்து புகைந்துகொண்டு மேலெழும்பின அக்கினிப் பொறிகள் ஆகாசத்தை அளாவினதால் அந்த ஆகாசத்தில் ஓடுகின்ற மேகங்கள் வெந்து பூமியிலுதிர்ந்து விட்டதுகள். நிர்த்தனம் பண்ணிக்கொண்டிருந்த அரம்பாஸ்திரிகளினுடைய கறுத்த கூந்தலெல்லாம் வெளிர்த்துப்போய்விட்டதுகள். ராமபாணங்கள் மார்பில்பட்டுப் பாய்ந்ததினால் ; ரத்தங்கக்கிக்கொண்டு அனேகமகா மச்சங்கள்வற்றி யுலர்ந்துபோய்

விட்டதுகள். திமிங்கலங்களும், திமிங்கிலகில மச்சங்களும், அனேக கண்டதுண்டமாய் நறுக்குண்டுசெத்ததுகள். மலைகளெல்லாம் எரிந்து சாம்பல்பறக்கவும், மேதாறுகொண்டு சமுத்திரஞ்சேறுகி அத்தச்சேற்றுந் தீயவும், ஆதிசேஷனுடைய ஆயிரஞ்சிரசுகளுங் காய்ந்துபோகவும், ராமபாணங்கள் நூறும், ஆயிரமும், கோடிகளுமாகப் புறப்பட்டதுகள். மீன்களெல்லாம் பொய்சொன்னவர்களுடைய குலம்போலக் கருவற்றுப்போய்விட்டதுகள். பாய்மரங்களோடுங்கூடிய கப்பல்கள் சமுத்திரத்தில் ஓடித்திரிவதுபோல அனேக மீன்கள் பாய்ந்த அம்புகளோடுங்கூட ஓடித்திரிந்ததுகள். சமுத்திரமானது ரத்தங்கள்வழிந்து ஓடும்படியாக நெஞ்சுபிளப்புண்ட இரணியனைப்போலவும், சிவந்த அந்திவானத்தைப்போலவுமிருந்தது. பத்திபத்தியாக ராமபாணங்கள் பறந்துபோனதினாலே, அந்தச் சமுத்திரத்திலிருந்த அனேகமீன்கள் வெந்து தீய்ந்துபோனதுகள். அனேகமீன்கள் கரிந்துபோனதுகள். அனேகமீன்கள் பொரிந்துபோனதுகள். சுவாமியினுடையபாணம் குடித்துவிட்டதினாலேவற்றி, அங்கங்கேகொஞ்சகொஞ்சஞ் சலமுள்ளதாய் பக்கத்தில் அன்னங்கள் சூழ்ந்திருக்கும்படியாக வெந்துக்கொண்டிருக்கின்றசமுத்திரம் கறுத்தசட்டிபோலவும், அதில் வேகின்றசிலமீன்கள். நெய்யில்வேகின்றமீன்கள்போலுமிருந்ததுகள். அனேகராமபாணங்கள் ரத்தத்தைக்குடிக்கிறதுபோலச்சமுத்திரஜலத்தையெல்லாம் வற்றிப்போகும்படியாய்ப்பானம் பண்ணினதினாலே அதில் பிரகாசித்துக்கொண்டிருந்த பவளம்- மாணிக்கமுதலான ரத்தினக்கூட்டங்கள் கடல்வெந்து அவிக்கக்கூடாத மிகுந்தநெருப்பைச் சொரிந்ததுபோலு மிருந்தது. சமுத்திரமுழுமையும் நீர்வற்றி - வெளியாய்ப்போய் விட்டபடியினாலே, கொழுப்புடனே கரிந்துகிடக்கின்ற மீனினங்கள் சுமிதற்குவைத்திருக்கும் சங்குகளையும், கரிகளையும்போலிருந்ததுமல்லாமல், ஆற்றினிடத்தில் பிணங்களை வரிசைவரிசையாய் வைத்து தகனஞ்செய்த அங்கங்கள்போலு மிருந்தது. சிறிக்கொண்டுவருகின்றராமபாணங்களொன்றோடொன்றுதாக்கி அக்கினியை உண்டாக்கினதினால்மூங்கிற்காடுபற்றி யெரிகிறதுபோலுமிருந்தது. கடலிலுள்ளமீன்களும், மற்றஜீவகோடிகளுமெல்லாம் ராமபாணத்தினால் துண்டிடப்பட்டு, அவற்றிலிருந்து மொழிவருகின்ற ரத்தவெள்ளங்கள்கடலைப்போலுஞ்சிலபக்கங்களில்அலைமோதிக்கொண்டிருந்தது. ஸ்ரீராமபாணமகாத்துத்தன்னைத் தெறிபட்டுவிழுந்து இழ்ந்தசமுத்திரக்கொதிநீர்ப் படும்போதெல்லாம் நெருப்புக் குமிழ் குமிழொன்றுபற்றி, உள்ளூன்றிய வேரோடுங்கூடப் பெரிய மரங்களும், மலைகளும், எண்ணெயில்தோய்ந்து வேகிறதுபோல வெந்ததுகள். தேவதேவரான ஸ்ரீராமரால்விடப்பட்ட பாணமானது பிரம்மாவினுடைய சாபத்தைப்போலப் பிசகாமல் மனோவேகத்திலு மதிகமாகக்கடுகி உக்கிரமான அக்கினியை அங்கங்கே கக்கிக்கொண்டுபோகிறபடியினாலே சமுத்திரமானது தாமரைப்புஷ்பித்திருந்த ஒருதடாகம்போலு மிருந்தது. பெரியோர்கள் கோபித்தாலும் அதுசிறப்பைக் கொடுக்குமே யல்லாமல் கெடுதியைத் தரமாட்டாதென்பதைத் திருஷ்டாந்தமாய்க் கண்டோம். அதெப்படியென்றால், உப்புச்சமுத்திரமென்றுஉலகத்தவர்கள். பழிக்கிறதுபோய் ஸ்ரீராமருடையபாணம்பட்டு வற்றிப்போனஅந்தத் தென்சமுத்திரம் சுத்தோதகசமுத்திரமாய்விட்டது. வரிசைவரிசையாகயிருக்கின்ற பெரிய அண்டங்களையெல்லாம்வாரி யுண்டருளின சாக்ஷாத்நாராயணனுக்குஇந்தச்சமுத்திரத்தை வற்றடிப்பதொருவல்லமையோ? பூமியைமூழ்த்துவதுசமுத்திரம்அந்தச்சமுத்திரங்களையும், ஊழிகாலத்தில் வடவாமுகாக்கினியானது - பக்ஷித்துப்போடுமென்றுசொன்னவேதவாக்கியத்தினர்த்தத்தை இவர் நிலைநிறுத்திக்காட்டினார். ராத்திரியும்-பகலுமாக- அந்தக்கடலுக்குள்ளாகயிருந்து மங்களகரமான தவஞ்செய்துகொண்டிருந்த மஹாரிஷிகள் அந்தஸ்ரீயப்பதியினுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருந்தபடியால், ராமபாணத்தினால் வேகாதவர்களாகி அந்த அக்கினிமயமான ஜலத்துக்குள்ளேயேசஞ்சரித்தார்கள். தென்திசை வடதிசைமுதலானஎல்லாதிக்குகளிலும் புகைப்படலங்கள் மூடிக்கொண்டதனால், சூரியனுடைய குதிரைகள் புகையால் உடல்கருகிநிறமாறி நடக்கக்கூடாமல்வழிதப்பிநின்றுவிட்டதுகள். தம்மைவிட்டு நீங்கினபேர்களுக்குத் துன்பமுண்டாகுமென்று வருத்தப்படுந் தன்மையுடையவர்கள். எல்லாச்சாஸ்திரங்களையுந்தெரிந்திருந்தாலும், அறிவில்லாதவர்களுக்குச்சமானமேயாகும். அதுபோலச் சக்கிரவாளப்பக்ஷிகள் தம்மைவிட்டுப் பிரிந்திருக்கின்றபேடுகளைத்தேடிக்கொண்டுபோய் அந்த அக்கினியி லகப்பட்டுத் தீய்ந்திறந்துபோய் விட்டதுகள். பொறுமையற்ற கருங்கடல் முழுதும் அக்கினிவிசாலித்துவேகத் தொடங்கினபோது அதன்கொடுமையைச் சொல்லவேண்டுமோ? நெருங்கியபெரும் புகைப்படலந்தங்களைச் சூழ்ந்துகொண்டபடியால், தேவர்களுங் கண்சிமிட்டி வியர்

வும் அடைந்தார்கள். பூக்களைத் தேடிப்போகாமல் ஒளியைக்கண்டு அவ்விடத்தைச் சேர்ந்தீருபாவங்களெல்லாம்ஒன்றாய்க்கூடினது போன்றிருந்த வண்டுகளெல்லாம்அந்நெருப்பைக் கடந்துபோக வேறுவழி யில்லாமையால் வருணராஜனுடைய விருத்தியடையாத புகழைப் போல மடிந்துபோய் விட்டதுகள். நெருங்கி கூடிக்கொண்டிருந்த கடற்பறவைகளெல்லாம் ஆகாசத்திற் பறக்கத்தொடங்கி அவ்வாகாசவெளியில்போவதற்குச்சக்தியில்லாமல்நெருப்புப்பற்றியெரிகிறதேகத்தை யுடையவைகளாய்ப் பூமியி லுதிர்ந்துவிட்டதுகள். இறந்துபோன பட்சிகளெல்லாம் போக, சாகாத பட்சிகள் அக்கினிப்படலமான துசூழ்ந்துகொண்டபடியினலே தாங்கள் முட்டையிட்டுவைத்தவிட மின்னதென்று தெரியாமல் வெந்த முத்துக்களைத் தமதுமுட்டைகளென்று எடுத்துக்கொண்டுபோனதுகள். அக்கடலிலுள்ள குரங்குகள் பாவிகளே! சாக்ஷாத் எம்பெருமானை மனிதனெல்று நிந்தித்து, அவரிடத்தில் சேராமல் இங்கேயேயிருந்துவிட்டோம். ஆனபடியினலே, அவர் நம்மைத் திருவுளத்தில் நினையாமற் போனரென்று தங்களுடைய பற்களை இளித்துக்கொண்டு ஆகாசத்தில் தாவிக் குதித்து ஓடிப்போய்விட்டதுகள். அதிக தீமையை யுடையவர்களாய், கடலில் மறைந்துகொண்டிருந்த அசுரர்களெல்லாஞ் செத்துப் பெரியமலைகளைப்போலச் சமுத்திரத்தில் மிதந்தார்கள்.பொற்குடமானதுஇடையில்விரிந்ததுபோ லொத்தவரிகளையுடையபொன்னிறமானமான்களெல்லாம்வெந்துவிழுந்துவிட்டதுகள். ஆகாசகங்கையும்வற்றிவறன்றுவிட்டது. வானநட்சத்திரங்களும் வெந்துபோய்விட்டதுகள்.சிவந்தநிறத்தையுடையதுகளாகவும்,அக்கினியை வளர்க்கின்றவைகளாகவும், நீதியைப்போல நடக்கின்றவைகளாகவும், தபசைப்போலவிர்த்தியானவைகளாகவும், கோபம் பலவுருவு கொண்டதுபோலிறவைகளாகவும் இருக்கின்ற ராமபாணங்கள் அகஸ்தியமகாமுனியைப்போலச் சமுத்திரத்தைவற்றக்குடித்துவிட்டதுகள். சமுத்திரத்தை மூடிக்கொண்ட தீயினலே பூலோகமானது மரங்களோடுங்கூடவெந்து லங்காபட்டணத்தின் மதிலும், வேகத் தலைப்பட்டபோது அதிலுள்ள ராக்ஷசர்களெல்லாம் முன்சுட்டுவிட்டுப்போன தூதன் மறுபடியும் வந்தானே வென்று பயமடைந்தார்கள். சூரியனைப்போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற மேருமலையானது, பொற்காறுகளாக உருகினது. ரக்தந்தோய்ந்ததுபோன்ற முருக்கம்பூவுக்குச் சமானமாகக்காடுகள்நெருப்பாய் வெந்ததுகள். பவழக்காடுகளெல்லாம் கரிக்குப்பனுக்குச் சமானமாய்விட்டது. பெரிய மலைக்குச்சமானமாகப் பருத்திருக்கிறமீன்கள் உயிர்தப்பிப்பிழைத்து ஓரிடத்திலும் ஒதுங்குதற்கிடமில்லாதவைகளாய்ச் சமுத்திரசலத்திற்குள் நுழைகின்றதுகள். அவைகளிற்சிலமீன்கள் இந்த நீராக்காட்டிலும் நெருப்பே குளிர்ச்சியா யிருக்கின்றதென்று கரையிற்குதித்து உடல் ஒடிக்கின்றதுகள்.

இந்தப்பிரகாரமாக ராமபாணமானது சுருண்டுவிழுகின்ற திரைகளையுடைய கடல் நீரையெல்லாம் பானம்பண்ணிப்போட்டு, இனிப் பானம்பண்ணுகிறதற்கு ஜலமில்லாமல் பூலோகத்திலுள்ள அந்தகாரத்தைக்கெடுத்து நரகலோகத்திலுள்ள இருளை மழியும்படியாகச் சூரியனைப்போலச்சென்றதுகள். உலகத்தைச்சூழ்ந்திருக்கின்ற சப்தசாகரங்களையும் கொதிக்கச்செய்த ராமபாணங்கள் வேகமாய்ப் போய், மேலுங்கீழுமாகப் பாய்ந்து பிரமாண்டத்தையும் உருவி, அப்புறத்திலுள்ள பெரும்புறக்கடலையும் தொடர்ந்து போனதுகள். ஆகாசங்கிழிந்து அவ்விடத்தில் நின்று முதிருகிறசெவந்தமணிகள் சொர்க்கலோகம் உடல்கிழிந்து ரக்தவெள்ளமொழுகுகிறதுபோலிருந்ததுகள். கடலின் ஜலமெல்லாம்வற்றி அதன் குடல்கள் கிழிபட்டதுபோலக் கடற்பாம்புகள் நெளிந்ததுகள். சமுத்திரம் ஜலம்வற்றி ரத்தினங்கள் வைத்திருக்கின்ற பெட்டியைப்போலிருந்தது. சமுத்திரத்தின் வளைகளில் நுழைந்து ராமபாணங்கள் தைத்திருக்கின்ற சங்கங்கள் சட்டுவம்போலப் பிரகாசித்ததுகள். அநேகஆயிரபாணங்கள்தைத்தலினலே மலைகளுமநேகஆயிர துண்டுகளாய்விட்டதுகள். வித்வான்கள் கோபித்தால் தேய்ந்துநசிந்துபோனவர்களைப்போல அந்தச் சமுத்திரத்திலுள்ள முத்துக்கள் ராமபாணத்தால்வெந்து,ஒன்றுஞ்சிதறிப்போனதுகள். இப்படிஸ்ரீராமாஸ்லேவெந்துமாண்டஜீவகோடிகளெல்லாம்பரமபதமடைந்துவிட்டதுகள். அந்தச்சமுத்திரத்தில் நெருங்கிவளர்ந்த மூங்கிற்காடுகளிற்பற்றிய அக்கினிபுறப்பட்டுச்சமுத்திரநீர் முழுதிலும்பரவியோடினது. கொடியஅக்கினியானது பூமியைச்சுற்றிலும்வளைத்துக்கொண்டது,பூமிதேவிதரித்துக்கொண்டிருந்த நீலவஸ்திரத்தை நீக்கிவிட்டுச் செகப்புவஸ்திரத்தைத் தரித்துக்கொண்டதுபோலுமிருந்தது. படித்தவர்களும், படித்தவர்களும், மனஞ்சகித்துக்கூடியிருக்கமாட்டாததுபோல, ஸ்ரீராமபாணத்தினுலுண்டான அக்கினி இந்த சமுத்திரசலத்தைப் பானம்பண்ணுவதைக்கண்டு சகிக்மோட்டாம

ல் வடவாமுகாக்கினியானது உயிர்பதைத்து வேறொரு கடலை நாடி, ஓடத்தொடங்கினது. இந்தச் சமுத்திரத்தில் பற்றிய நெருப்பானது ஜீவகோடிகள் வாழும்படியான உலகத்தையெல்லாம் மூடிக்கொண்டு, ஆகாசபரியந்தம்பரவி, ஊழிக்காலத்தில் உலகங்களையெல்லாம் முழுதழிக்கும்படியாகப்பொங்குகிற பெரும்புறக்கடலை ஒத்திருந்தது. அக்கினியானது ஆகாசத்தை வளாவிச்சுட, அதைச்சகிக்கமாட்டாமல் தேவர்கள் சுவர்க்கலோகத்தைவிட்டுப் பிர்ம்மலோகத்திற்குப்போய், அவ்விடத்திலே தங்குவார்களேயானால் பூலோகத்திலிருக்கின்ற மற்றவர்களுடைய செய்கையையின்னபடியென்று சொல்லவேண்டுமோ? ஸ்ரீராமரானவர் இனிநாம்வருத்தமுண்டாவதை ஆலோசிப்பதென்ன, இப்போதே வருணனையோடிவரும்படிச்செய்கிறேனென்று அதிகஉக்கிரமானகோபத்துடனே பிரம்மாஸ்திரத்தையெடுத்து வில்லிற்பூட்டினார். பூட்டினமாத்திரத்தில் தேவர்களெல்லாம் நடுங்கிவிட்டார்கள். இனியார் பிழைக்கப்போகிறார்களென்றபயத்தால் மேகங்களெல்லாம் கதறினதுகள். வருணன் நாவில் தண்ணீரில்லாமல் அபயக்கூக்குரலிட்டான். எல்லாலோகத்திலும் அடைபட்டிருந்த ஆறுகளெல்லாந்தத் தளித்துப்போய்விட்டதுகள். பிர்ம்மாண்டத்துக் கப்புறத்திலிருக்கின்ற பெரும்புறக்கடலுங் கொதிக்குமானால் எழுசமுத்திரங்களினுடைய செய்கையைச்சொல்லவேண்டுமா? சாக்ஷாத் கயிலாசபதியினுடைய சடாபாரத்தில் ஆதிகாலந்தொட்டு வாழ்ந்துகொண்டிருக்கின்ற ஜலஸ்வரூபமாகிய கங்காதேவியும் பதைபதைத்துப்போனாள். பிரமதேவனுடைய கமண்டலத்திலுள்ள தீர்த்தமும் கொளகொளவென்று கொதித்தது. தமக்குத்தயவுவந்தகாலத்தில் லோகங்களையெல்லாஞ் சிருஷ்டித்துக்,கோபம்வந்தகாலத்தில் மறுபடியுஞ் சம்மரிக்கும்படியான சர்வேஸ்வரனை இந்த வருணன் அறியாமற்போனானே! அவருடைய கோபத்தைக்கண்டபின்பாவதுபோசப் புத்தியில்லாமல் தாமசப்பட்டானே! இவனைப்பார்க்கிலும் ராக்ஷசர்களா? பகைபாவிகள் என்று தேவர்களெல்லாம் நபிக்கிறார்கள். தானே தனியாயிருந்து தன்னிடத்திலேயே எல்லா வுலகங்களையும் பெற்றவனை சர்வேஸ்வரனால் கோபிக்கப் பெற்றால் இவன் இனி பிழைக்கிறதற்கிடமெங்கே, குற்றமில்லாதவர்கள்பேரிலும் இப்படிப்பட்ட தப்பிதம்வருகிறதற்குச்சம்பவித்ததேயென்று சமஸ்தாத்மாக்களும் வருணனைத் தூஷித்ததுகள். அப்போது வருணன் லோகமெல்லாம் அக்கினிச்சுவாலையோடு மிகுந்த புகை நிறம்பினதினாலே வழிதெரிந்துபோகச் சக்தியில்லாதவனாய்க், கண்களில் தாரைதாரையாய்க்கண்ணீர்விட்டுப், பக்தியுடனே உருகி, மனநடுங்கித் தொழுதகையனாயும், குழவியைப்போலக் கெஞ்சிப்புகழ்கின்றசொல்லையுடையவனாயும்,சுவாமீ! தேவரீர் அடியேனை நினைத்ததன்மையைக் கடலுக்கரையில் நின்ற நாய்போன்ற அடியேன் அறியவில்லையென்றுசொல்லிக்கொண்டு, சுவாமிக்குச் சந்தேகநீங்கும்படியாக அக்கினிபற்றி எரிகின்ற சமுத்திரத்தின்மத்தியிலே தட்டித்தடுமாறிக்கொண்டுநடந்து,வாய்குளறி, வேகின்ற நிலையையுடையவனாயும், பயந்தநெஞ்சையுடையவனாயும், சருகினொத்ததேகத்தையுடையவனாயும், கண்களில் புகைமண்டிக்கொள்ளக் குருடனைப்போலவழிதடவிக்கொண்டு, மிகுந்தவருத்தத்துடனே தூக்கப்பட்டுவந்து நின்று,குற்றமற்றலோகத்திற்கெல்லாம்ரக்ஷகராகிய தேவரீரே கோபித்தால், உம்முடைய இரண்டு திருவடிகளேயல்லாமல் அடியேனுக்கு வேறுகதி யொன்றுண்டோ? இந்தலோகமெல்லாம் உமக்கு ஒருலட்சியமோ? உம்மையல்லாமல் எனக்கு வேறு ரக்ஷகருண்டோ? உமக்கே யபய மபயமென்று அடிக்கடி சொல்லிக்கொண்டு, நீரே இந்தச் சமுத்திரங்கள். நீரேயக்கினி. மற்றப்பூதங்களும்நீரே. ஊழிக்காலமும்நீரே. உலகங்களும்நீரே. அந்த உலகத்தில் வசிக்கின்ற ஜீவகோடிகளும் நீரே. இப்படிப்பட்ட உம்மை மறப்பேனோ? அடியேன் மிகவும் கொடிய அக்கினிசூழ்ந் தெரித்ததினால் வருத்தப்பட்டுப்போனேன் ரக்ஷித்தருளவேண்டும், லோகங்களை யுண்டாக்குவீர். உண்டாக்கி ரக்ஷித்தவைகளைக் கடைசியில் சுட்டெரித்துவிடுவீர். அவைகளையெல்லாம்உண்டுவிடுவீர். உம்மாலாகாதகாரியமுமுண்டோ? மிகுந்த கூர்மையுள்ள ஒருபாணத்தினாலே இந்தமூன்றுலோகங்களையும் சுட்டு, நாசமாக்கிப்போடுவீர். அடியேனுக்கு இவ்வளவுசெய்யவேண்டுமோ? மிகுந்த பிரசண்டகிரணங்களாகிய வாளாயுதத்தினாலே எங்குமூடிய இருட்காட்டை வெட்டிச்சாய்க்கும்படியான சூரியமண்டலத்தில் வசிக்கின்ற ஜோதிஸ்வரூபமே! வேதங்களின் ஆதாரமே! நால்முகங்களையுடைய பிரமதேவனாகிச், சராசரங்களைச் சிருஷ்டித்தபோது,தாமரைபுஷ்பத்தில் எழுந்தருளியிருந்த அநாதிவஸ்துவே! ஒருவருக்கும் தெரியாமல் லோகங்களையெல்லாம் மறைத்துவைத்திருக்கின்ற இருளையோடுகூடின ஸ்வதப்பிரமாணமான வேதப்பிரதிபாதய வஸ்துவான ஆதிகாரணவஸ்துவே! ரட்சித்தருளவேண்டுமென்று

அழைத்த கஜேந்திராழ்வானுடைய துக்கம் நீங்கும்படியாகக் கெருடபகவான்மீது எழுந்தருளிவந்து சேவைசாதித்த புராதனரே! உமக்குமங்களமுண்டாவதாக. எனக்குத்தாயும் நீரே - தந்தையும்நீரே - வேண்டிய மற்றயெல்லாப்பொருளும்நீரே - ஆதியும்நீரே - அந்தமும்நீரே - மோக்ஷமும்நீரே - நரகமும்நீரே - சர்வேஸ்வரரான நீரே உம்மை அறியாதிருந்தால் அடியேன் எப்படி யறியப்போகிறேன் அடியேனை இகழக்கூடுமோ? என்று வருணன் இருளைத்துரத்தும்படியான திவ்ய தேஜஸ் உள்ள ஆதிசேஷனுடைய ஆயிரம் சிரோரத்தினங்களையும் பழிக்கும்படியான ஆயிரம் ரத்தினங்களாலாகியமணிமாலையை ஸ்வாமியின் திருவடிகளில்காணிக்கையாகவைத்துச், சிறியவர்கள் தப்பிதஞ் செய்வார்களேயானல், பெரியோர்கள் அதைப்பொறுப்பது கடமையாகும். சகஸ்திரநாமங்களையுடைய சுவாமீ! உமக்கு அடைக்கலம் என்று திருவடிகளில் விழுந்தான். இப்படி ஒருமலையானது அக்கினி பற்றி யெரிகிறதுபோல எரிகிற உருவத்துடனே சமூத்திரராஜன் அடியேனு முமக்கபயமென்று, சொன்னமாத்திரத்தில் மிகுந்த நெருப்பிலேகாய்ந்து பொங்கிவழியும் பாலானது கொஞ்சந்தண்ணீரைத் தெளித்தமாத்திரத்தில் ஆறிஅடங்குவதுபோல, ஸ்ரீராமமூர்த்திகோபமாறி, வருணனைப்பார்த்து கோபமாறினேம் பயப்படாதே, உனக் கபயந் தந்தருளினேம் உன்னைவேண்டிப் பிரபத்திபண்ணவும் வராமல், கோபித்தபிறகு வந்ததற்குக் காரணமென்ன? விவரமாகச் சொல்லென்று நியமித்தமாத்திரத்தில் வருணன்சுவாமியைத்தொழுதுசொல்லத்தொடங்கினன். பூமிதேவியைப்பார்க்கிலும் மிகுந்த பொறுமையையுடைய உமதுபத்தினியாகிய சீதாபிராட்டியாருக்குச் சம்பவித்ததுன்பத்தைஇன்றைக்குத்தேவரீருடையவார்த்தையினுல்தானறிந்தேன். ஏழுசமுத்திரங்களுக்கப்புறத்தில் மீன்கள்சண்டைசெய்துகொண்டிருந்ததைவிலக்கப்போயிருந்தேனுகையினுலேதேவரீருடையநியமித்தத்தையடியேனறியமாட்டேன், இதுதான்உள்ளசமாச்சாரம் என்றவருணனுடையவார்த்தையைக்கேட்டு, இரக்கமுற்று, இந்தக்காரியம்நிற்கட்டும். இந்தப்பாணம் சும்மாவியர்த்தமாய்ப்போகாதுஇதைப்பிரயோகிக்கும்படியான லக்கு, இன்னதென்று சொல்லக்கடவாய், என்று நியமிக்க வருணன் மிகுந்த சந்தோஷத்துடன் அடியேனும் இந்தலோகங்களும் பிழைத்தோம். மலையைக்காட்டிலும் முயர்ந்த திருத்தோள்களையுடைய சக்கிரவர்த்தித்திருக்குமாரரே? மருகாந்தாரமென்கிற தீவிலே நூறுகோடி பேர்களுக்கு மதிகமாக அசுரர்களிருக்கிறர்கள். அவர்கள் இந்தலோகத்து ஜீவகோடிகளில்அனேகங்களை தின்றுவிட்டார்கள். அவர்களெனக்கு மகாபகையாளிகள் இந்தப்பாணத்தைஅவர்கள்மேல் பிரயோகித்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, வேதசாஸ்திரங்களை ஆராய்ந்தறிந்த மகாரிஷிகளுடைய அறிவுக்கு மெட்டப்படாமல் எழுந்தருளிய ஸ்ரீராமமூர்த்தியானவர் நூறுகோடிபேர்களான அந்த துஷ்ட அசுரர்களை அவர்களுடைய வம்சசகிதமாக சீக்கிரமாய்ப் போய்ச் சம்மரித்து விடும்படியாக ஆக்கியாபித்து அந்தப்பாணத்தைவிட்டார். ஒருக்ஷணநேரத்திற்குள்ளாக அவர்களைச் சுட்டெரித்துப்போட்டு அந்தப்பாணதி தேவதையானது மறுபடியுஞ் சுவாமியின் அம்புறாத்தூணியில் வந்து நுழைந்துகொண்டது. சத்கர்மங்களைச் செய்து, தர்மந்தப்பாதவர்களுக்கு எப்பொழுதும் நன்மையே சேருமல்லது, கெடுதியுண்டாகமாட்டாது, அழித்துவிடும்படியாக உன்மேற்பிறந்த கோபமானது, துஷ்ட செய்கையையுடையவர்களான அசுரர்களுக்கே தீமையைச்செய்தது. பாபத்தைச்செய்துகொண்டிருந்தவர்களான அசுரர்களை அனேகாதது ரமோடி எரித்து புகைமண்டும்படியாகவும் தீபத்தைப் போன்ற ஞானமுடையவர்களான வேதமூர்த்திகளா விடப்பட்ட சாபத்துக்குச் சமானமாகவும், எம்முடைய பாணமானது சுட்டுவிட்டபடியினலே தர்மத்தைக்காட்டிலும் பலமுள்ள தொன்றுண்டோ? ஓய்வருணதேவனே! நீயெமக்கு அபயமென்று புகுந்தாய், அப்படி உனக்கு அபயங்கொடாவிட்டால் பழியுண்டாமென்று நாம் கோபமாறினேம். பாதகர்களாகிய ராவணாதி ராக்ஷசர்களுடைய தலைகளை அறுக்கும்படியாக இந்தச்சமுத்திரத்தைத் தாண்டிப்போகிறதற்கு எங்களுக்கு வழிகாட்டவேண்டும், என்று சுவாமிகேட்க, வருணன் தபஸ்ரேஷ்டரான சுவாமீ! இந்தச்சமுத்திரத்தினுடைய ஆழமும், அகலமுமறிகிறதற்கு அடியேனுலும்முடியாது, இதின்ஜலத்தை இறைத்து கட்டிவைக்கிறதற்கு அநேகாகஇருக்கின்ற இந்த ஏழுலோகங்களும் போதாது. மேலும், தேவரீருடைய சேனைகள் இதை இறைத்து வற்றடிக்கிறதற்கு அநேககாலஞ்செல்வதுமல்லாமல் மனத்தளர்வையுமடைந்துவிடும். எல்லாஜீவகோடிகளும்கல்லைப்போலவலியுடையவைகளாய் ஒன்றின்மேலொன்றுநின்றாலும் இதில்மூழ்கிமாய்ந்துபோய்விடும். ஆகையால் என்மேல்வைத்தபொருளொன்றுநழுகிவிழவொட்டாமல் எத்தனைகாலமானலுஞ்

சுமந்துகொண்டிருக்கின்றோம். தேவரீர் என் தலையின்மீது, ஒருசேதுவைக்கட்டிச் சந்தோஷிமா யெழுந்தருளும், என்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டான். நல்லது, அப்படியே செய்கிறோம், என்று சொல்லி, வானரங்களைப் பார்த்து நம்மிடத்தில் வருணன் கொண்டிருக்கிற தயவினாலே இன்றைக்கே நிரும்படியாக எல்லாரு மலைகளைக்கொண்டுவந்து அடுக்கிச் சேதுகட்டுங்கள் என்று நியமித்துவிட்டு, சுவாமி தம்முடைய இருப்பிடம்போய்ச் சேர்ந்தார். வருணதேவனும் ஸ்வாமியினிடத்தில் சந்தோஷிமாய்விடைபெற்றுக்கொண்டு போய்விட்டான்.

வருணனடைக்கலப்படலம்
முற்றிற்று.

.....................

## சேதுப்படலம்.



பின்பு, சுக்கிரீவமஹாராஜர் அநேகவானரமந்திரிமார்களுடனே விபீஷிணாழ்வாரும்சேர்ந்து 'ஆலோசித்து, இனி நடக்கவேண்டிய வேலையை முடிக்கும்படித்தீர்மானிக்கிறதற்கு வானரத்தச்சனாகிய நளனைவரவழைத்தார் அப்படியே நளன்வந்து சுக்கிரீவ மகாராஜருக்குத்தெண்டனிட்டு மகாராஜரே, அடியேனை யழைப்பித்த காரிய மென்னவென்று கேட்க, நாமெல்லாம் இந்தச்சமுத்திரத்தைப் பந்தனை செய்ய வேண்டுமென்ன, அப்படியே நல்லது சுக்கிரீவமகாராஜரே! கடலையடைத்துச் சேது கட்ட வேண்டுமேயானால் நம்முடைய சைனியங்களுக்கு மலைகளைக்கொண்டுவரும்படி நியமியும், அடியேன் மேருவையும், அணுவையும், வித்தியாசந் தோற்றவொட்டாமல் படியச்செய்து கட்டுகிறேனென்றுசொன்னான். அப்போது சாம்பவர்வானரசேனையைப்பார்த்து, இளையபெருமாளும், சுவாமியும், 'விபீஷிணாழ்வாரும், சுக்கிரீவமகாராஜருமல்லாதமற்றவர்களெல்லாஞ்சூழ்ந்திருக்கின்றசமுத்திரத்தைப்பந்தனஞ்செய்கிறதற்குப் புறப்படுங்களென்றுசொன்னார். அந்தப்பிரகாரமே வானரசேனைகள் வெகுதூரம் போய் அனேகமலைகளைப்பெயர்த்துக்கொண்டு இரண்டுகைகளிலும், தோள்களின்மேலும், தலையிலுஞ் சுமந்துகொண்டு ஒருசமுத்திரத்தை யடைக்கிறதற்கு மற்றச்சமுத்திரங்களெல்லாஞ் சேர்ந்துவந்ததுபோலப் புறப்பட்டுவந்ததுகள். சிலவானரங்கள் மலைகளைப்பெயர்த்துக்கொண்டிருந்ததுகள். அப்படிப் பெயர்க்கப் பெயர்க்கஅவைகளைச்சிலவானரங்கள் இழுத்துக்கொண்டுவந்ததுகள். சிலவானரங்கள் தலைமேற் சுமந்துகொண்டு வந்ததுகள். சிலவானரங்கள் அந்த மலைகளால் கடலைத் தூர்த்ததுகள். சிலவானரங்கள் அப்படிக் கடலைத்தூர்த்த சந்தோஷத்தினாலே நின்று ஆர்ப்பரித்ததுகள். சிலவானரங்கள் கூத்தாடினதுகள். சிலவானரங்கள் பாட்டுக்களைப்பாடினதுகள். சிலவானரங்கள் ஒருமலையைக் காலாலுருட்டிக்கொண்டும், இரண்டுமலைகளை இரண்டு தோளின்மேல் தூக்கிக்கொண்டும், ஆகாசத்தை யளாவிச் சூல்கொண்ட மேகங்களால்சூழப்பட்டஒருபெரிய மலையைத் தலையிற்சுமந்துகொண்டும், ஒருமலையை வாலில்கட்டியிழுத்துக்கொண்டும் வந்ததுகள். இந்தப்பிரகாரமாக கைக்குக்கை கொண்டுவந்து கொடுங்கள் கொடுங்களென்று வேகப்படுத்தினபோது, மூன்றுகோடிவானரங்கள்சேர்ந்து தூக்கிக்கொண்டுவந்தாலும், அப்படிப்பட்ட பெரியமலையையும் நளனென்கிறவானரத்தச்சன் ஒருகையைநீட்டி வாங்கிவைத்தடுக்கித்தன் சாமர்த்தியத்தைக்காட்டி, வருணதேவனை நடுங்கும்படியாகச்செய்தான். வெற்றியையுடைய வானரசேனைத்தலைவர்கள் சந்திரமண்டல வரையிலுமளாவியிருக்கின்ற பெரியமலைகளைத்தங்கள்கால்களால்உதைத்து அசைக்கும்போது அந்தமலையின்மேலிருக்கின்ற மேகங்களெல்லாங் கூச்சலிட்டுக்கொண்டோடினதுகள். எக்ஷர்களும், எக்ஷஸ்திரீகளும், ஓட்டம் பிடித்தார்கள். வண்டுகள் சப்தித்துக்கொண்டிருக்கின்ற பெரியமலைகளை அலைகளையுடைய கருங்கடலின் கரையில் கொண்டுவந்து அணைகட்டுவதற்குக் குவித்துவைத் திருந்தது, அதுகளின்மேல் மோதுகின்ற அலை நீர்த்திவலைகள் சுவர்க்கலோகத்தைத் தாண்டிப்போய், மறுபடியுந் திரும்பிப் பூமியில்விழுகிறபடியால், தேவலோகத்திலு மழைபெய்ததாயிற்று. இப்படிமலைகளை அடியோடே பிடுங்கி, வானரத்தலைவர்கள் எறிகிறபோது, அந்தமலைகள் ஒன்றின்மேலொன்றுபட்டு சமுத்திரஜலத்தில் நெருப்புப் பறக்க அந்தநெருப்பைவருணன் பார்த்து, இது ராமபாணநெருப்போவென்று பயந்தான். கிருஷ்ணமூர்த்திக்குச் சமானமாக ஒருவானரவீரன் பெரியமலையைக் கையில் தூக்கிக்கொண்டுவந்து சமுத்திரத்திலெறிந்தபோது, அந்தக்கடலிலுள்ள முத்துக்கள் நீர்த்துளிகளோடுங் கூடச்சிதறி, ஆகாசத்திற்போய் வானநக்ஷத்திரங்களுக்குச்சமானமாகப்பிரகாசித்ததுகள். செவந்தமலைகளைப் பிடுங்கி எறிந்தபோது ஆகாச

சத்தினிடமாக முன்சிதறிப்போயிருந்த முத்துக்கள் வந்துவிழுந்து பதிந்ததினால், ஆகாசத்தில் படர்ந்திருக்கின்ற மேகங்கள் மேற்கட்டும் வஸ்திரத்துக் கொப்பாகிச் சூரியனுக்காகப் போடப்பட்ட முத்துப் பந்தலைப்போலு மிருந்தது. மேகங்களாற்சூழப்பட்ட மலைகளுடன் அலைசுருட்டுகின்ற கடலில்வந்துவிழுந்தயானைகள் பெரியவாயையுடைய சுறுமீன்கள் வந்து கௌவ்வின மாத்திரத்தில் பயந்து பூர்வத்திலே தடாகத்தினிடத்து முதலையினால் கௌவப்பட்டுப் பயந்து, ஆதியந்தமில்லாத பரம்பொருளே ? யென்று துதிக்கையைத் தூக்கிக்கொண்டு கூப்பிட்ட கஜேந்திரனுக் கொப்பாயிருந்ததுகள். புலால்நாறிக்கொண்டிருந்த சமுத்திர சலமானது சுறுக்கலுண்டாகும்படி ஒழுகுகின்ற தேனும், புஷ்பங்களும், சந்தனக்கட்டைகளும், அகிற்கட்டைகளும், இன்னமநேகவாசனைத்திரவியங்களும், ஆகாசமுழுமையுங் கமழுகின்ற தேவகந்தம்போல-நெருக்கிப் பரிமளிக்கின்ற படியினாலே வாசமூட்டிக் குடத்தில்நிறைத்து வைத்திருக்கின்ற திருமஞ்சனதீர்த்தம்போல வாசங்கமழ்ந்தது. மிகுந்தகொடையாளர்கள் குடும்பமெல்லாம் சிறுமைப்பட்டாலும் தங்கள் கொடைமாறாதது போல மாமரங்கள் முதலிய கனிவிருக்ஷங்களோடுங்கூடிய பெரியமலைகளெல்லாந் தங்களிடத்திலுள்ள கனியுங் காயும்-தேனும், மாமிசமும், திவ்வியபரிமள புஷ்பங்களும் முதலான மற்றெல்லாவற்றையும் சமுத்திரத்திலுள்ள மீன்கள் பெற்றுக்கொள்ளும்படியாகக் கொடுத்து, சிறப்பை யடைந்ததுகள். மிகுந்த சேற்றுக்குள் அமிழ்ந்துபோகின்ற மலைகள் தமக்குள்ள மிகுந்தசெல்வங்களைக் கொடாமல் ஒளித்துக் கொள்ளுகின்ற லோபிகளைப்போலவும், அவைகளிலுள்ள தேனிறைந்த புஷ்பங்களையும், காய்களையும், கனிகளையும், இன்னுமுள்ள மற்றப்பொருள்களையும், உண்ணப்பெறாதவெண்மையானமீன்களெல்லாம், கொடைபெறாதயாசகரைப்போலவு மிருந்ததுகள். மேலும், காற்றாடியைப்போல மிகுந்தவேகமாய்த் திரிந்துகொண்டிருக்கின்ற வானரங்கள் பெருமலைகளைச் சடுதியிற் கடலிற்போடும்படியாகப் பெயர்த்தபோதும், அப்பெரிய மலையிலுள்ள பாம்புகள் யானையை விழுங்கிப்போட்டு நகரமாட்டாமல் அறிவில்லாதவர்கள் துன்பம்வந்து சம்பவித்தபோதும், உணர்வடையாதது போலச் சோர்ந்து உறங்கிக்கிடந்தது. ஆபரணத்துக்கொப்பாய் மின்னுகின்றபற்களை யுடையவைகளாய்ச் சமுத்திரத்திலிருக்கின்ற முதலைகளும், துதிக்கையுடையவைகளாய், மலையிலிருக்கின்ற மதயானைகளும், கர்சித்துக்கொண்டு ஒன்றோடொன்றெதிர்த்துச் சுற்றிப்பற்றி, இடியுடன்கலந்த ஊழிக்காலத்தின் மேகத்திற்கொப்பாக மிகுந்தயுத்தஞ் செய்ததுகள். அன்றியும்-அற்பபுண்ணியஞ் செய்தவர்களிறந்து சுவர்க்கமடைந்து, அப்புண்ணியபத்திற்கீடாக அந்தச்சுவர்க்கத்தலத்தைக் கண்ணால்மாத்திரங்கண்டு மீண்டதுபோல சிலவானரவீரர்கள் எறிகின்றமலைகள் ஒன்றின்மேலொன்றுபட்டு எழும்பித் தேவலோகத்திற்சென்று அங்கேதங்காமல் கீழேவீழ்ந்ததுகள். எறியப்பட்டமலைகளில்முன்னே வசித்திருந்த வல்லமையுள்ள சிங்கங்களும், புலிகளும், ஆண்யானைகளும், கூர்மையான பற்களையுடைய சுறுமச்சியங்களால் கொல்லப்பட்டு நீரினிடத்தில் மாண்டதுகள். இந்தப்பிரகாரம் தங்கள் நிலைமைவிட்டால் பலவான்களும் அபலவான்களாவார்களென்று அறிவாளிகள் சொல்லுவார்களல்லவோ ! கொடையாளிகள் தங்கள் புத்திபூர்வமாக உதவாவிட்டாலும், அவர்கள் அயிஸ்வரியங்கள் யாவர்களுக்கு முபகாரமாவதுபோலப் பெரியமலைகளின் சிகரத்திலிருந்துபெருகி யொழுகுகின்ற பூந்தேன்களை அம்மலைகளே கொடாவிட்டாலும், கடல்மீன்கள் நிறையக்குடித்து வானரங்களைப் போலச் சந்தோஷித்துத் துள்ளிக் குதித்ததுகள். மிகுந்த நெருப்புண்டாக ஒன்றோடொன்றுதாக்கும்படி வானரங்கள் அதிகமாகமலைகளைக் கொண்டுவந்து இறக்கின வேகத்தினாலே தேனைச் சொரிகிறதுபோலக் குளிர்ந்த நீரைச் சொரிகின்ற அம்மலைகளில்விளைந்த மூங்கிலிற்பிறந்த முத்துக்களுக்கும், வாய்விரிந்த இப்பியினிடத்தில் பிறந்தமுத்துக்களும், வலம்புரிமுத்துக்களும்கலந்து விருந்துகொண்டாடினதுகள். வெண்ணெய்நல்லூரிலடைக்கலமென்று வந்தவர்களைச், சடையப்பமுதலியார்ஆதரித்துத் தாங்குவதுபோல, வானரசேனைவீரர்கள்பெரியமலைகளை வருத்தப்பட்டுப் பேர்த்தெடுத்துக்கொண்டு வந்தெறிந்தபோதிலும், வானரத்தச்சனாகிய - நளன் - தன்வித்தியாசாமர்த்தியத்தால் அவைகளை ஒரு அநாயாசமாக ஏந்திவாங்கினான். ஆகாசத்தை யளாவிக்கொண்டிருக்கின்ற மலைகளை வானரவீரர்கள் வேரோடு பெயர்த்தெடுத்துக் கொண்டுவந்து சமுத்திரத்தில் கும்பல்கும்பலாய்க் குவித்துவிட்டபடியினாலே, கடல்நீரெல்லாம் பூமியில்தேக்கி பூமிகடலாகவும், கடல்பூமியாகவும், மாறிவிட்டன. சாக்ஷாத்து தாரகமந்திர வாச்சியனாகிய ஸ்ரீராமபிரான் விரும்பினால் எது எப்படியாக மாட்டாது, கொடுமையானசிங்கங்களும், வேங்

கைப்புலிகளும், யாளிகளும், சூழ்ந்துகொண்
டிருக்கின்ற மலைகளும், விருட்சங்கள்முதலான
வைகளும், நெருங்கியிருக்கின்ற படியினாலே,
நெய்தனிலம் குறிஞ்சிநிலமாய் விட்டது. ம
லையிலுள்ளமிருகங்கள் யாம் உண்ணக்கிடை
யாதவைக ளிவையென்று சொல்லுகிறதற்கு
அவைகளுக்குவேண்டிய ஆகாரங்களி லெவை
யும்மலையிலில்லை. அம்மிருகங்கள் சமுத்திர
த்தில் விழுந்தபோது, தாம் உண்ணத்தகாத
மீன்களாலே உண்ணப்படாமலிருந்த மிருகங்
களொன்றுமில்லை. கொல்லாமல் வளர்க்கின்ற
வர்களிடத்தில் மிருந்தபயவு உண்டாயிருக்கிற
படியினாலே அப்படிப்பட்டவர்களைவிட்டு அ
வைகளின் ஒன்றும்விலகாது. இம்மலைஎங்களுக்
காதாரமா யிருக்கின்ற தாகையா லிதைவிடோ
மென்று தொடர்ந்ததுபோல - எல்லா மிரு
கங்களும், அம்மலையுடனே கடலில்வந்துசேர்ந்
துவிட்டன. உலகப்பற்றில்லாத ரிஷிகள்எல்லா
ரும், தினந்தோறும் வருத்தமில்லாம னுண்ணு
ம்படியாக மிருந்த கனிகளையும் - காய்களையும்
பெற்றுச் சந்தோஷமாகத் தவமுஞ்செய்கிறத
ற்கு நல்ல இடமாயிருந்தபடியால் அம்மலைக
ளைவிரும்பி, அவைகளுடன்தாமுமுடிகிறதற்கி
ச்சித்தார்கள். இந்தமலைகளின்மேல் புலால்தின்
று வாழ்ந்துகொண்டிருந்த இராக்ஷசர்கள் த
லையின்மேல் கையைவைத்துக்கொண்டு நமக்கி
னி இருக்கிறதற்கு மலையிலிடங்கிடையாது. அ
தைவிட்டாலும் வேறேவாழும்படியான இட
மும் நமக்கில்லையென்று சொல்லிக்கொண்டு
லங்கையைப்போய்ச் சேர்ந்தார்கள். சமுத்
திரநீரில் முழுவதும், முழுகாமலும், மேலே
மிதவாமலும், சிறப்பாகக்கட்டப்பட்ட சேது
வினைக்கட்டினுடைய இரண்டு பக்கங்களிலும்,
தங்கள் கூட்டத்துடனே வரிசை வரிசையாய்ச்
சேர்ந்த சிங்கங்களும், யாளிகளும், அந்தச்
சேதுவுக்கு இரண்டு பக்கத்திலுங் கட்டப்ப
ட்ட ஒழுங்கான வழுதகப்போலு மிருந்த
துகள். முத்திப்போட்ட பளிங்குமலைகள் பி
ரகாசித்துக்கொண் டிருக்கின்றதைத் தெரியா
மல் இடையில் வெளிவிழுந் திருக்கின்றதென்
றும், அவ்வெளியைமூடுகிறதற்கு வேண்டு
மென்று வானரவீரர்கள் சிலமலைகளைக் கொ
ண்டுவந்து சேர்த்தார்கள். பூமியானது ப
ள்ளமாய்ப் போகும்படியாக வானரங்கள் பி
டுங்கியமலைகளின் வேரைப்போல அந்த மலை
களினுடைய குகைகளில்நின்றும் பாம்புகள்
நழுவிப் பூமியில் தொங்கினதுகள். அந்தச்சே
துவில் சூரியகாந்த மலையின்பக்கத்தில் சிவந்தி
ருண்டமலைகளையும், வரிசையாக அடுக்கிவைத்
திருக்கின்றது, கிருபாமேகமாகிய ஸ்ரீராகு

லோத்தமரானவர் மஹாதேவனாகிய வருண
ராஜன் வெறுங்கழுத்துட னிருக்கிறானென்
று அவனுக்குத் திருப்பிக்கொடுத்த வருண
சரமாகிய - ரத்நமாலைபோலிருந்தது. யோகீஸ்
வரர்கள் தங்களுக்குச் சொந்தமான தேகத்தை
விட்டுவிட்டு மறுகூடுபாய்ந்து சித்து விளையா
டுகிறதுபோலக் கடற்பாம்புகள் தாமுன்வாழ்ந்
துகொண்டிருந்த மலைகளைவிட்டு அம்மலைகளி
ன்பக்கத்தில் சேதுவின் கட்டடத்துக்காகப்
போடப்பட்டவேறு பெரியமலைகளின் குகை
யில்நுழைந்ததுகள். அனுமாரானவர் கொண்
டுவந்து போட்டமலையினால் சிதறுண்டநீர்த்
துளிமேபாடு அந்தச்சமுத்திர ஜலத்திலுள்ள மீ
ன்களும், சகலாத்மகோடிகளையும், சம்ரக்ஷணை
செய்யும் ஸ்ரீ உபேந்திரருடைய லோகத்தை
ப்போய்ச் சேர்ந்ததினால் அந்தச் சேதுவினு
டைய சிறப்பைச்சொல்லுகிறதற்கு ஒரு முகா
ந்திரம் வேண்டுமென்று ஆலோசிக்கவும் வே
ண்டுமோ ? வாயுபுத்திரராகிய அனுமாரு
டைய நீண்டதோள்களைப்போலப் பருத்திருக்
கின்ற மலைகளைக் காடிப்படைக்குத் தலைவ
ராகிய - ஜாம்புவர், பிடுங்கி யெறிந்த வேகத்தி
னாலே சிதறிப்போனகடல் நீரானது தேவர்க
ளுடைய சிரசின்மேற் போய்ப்பட்டது. இ
டியுடன்கலந்த மேகங்கள் சூழ்ந்தமலைகளைப்
பனசனென்கின்ற வானரவீரன், கொண்டுவந்
துபோட அவைகள்பாதாளலோகபரியந்தம்ப
திந்ததினாலே, அவைகளை ஆயிரம் பணாமுடியை
யுடைய ஆதிசேடமூர்த்தி தாங்கமாட்டாமல்,
அந்தலோகவாழ்வை வெறுத்துவிட்டுப் பூலோ
கத்திற்குவந்து விடப் புறப்பட்டார். நீலனெ
ன்பவன் ஒரு பெரியமலையைப் பிடுங்கியெ
றிய அந்த மலையானது, சமுத்திரத்தினுடைய
அடித்தளவளவாயினும்தாக்கிச்சமுத்திரஜலமெ
ல்லாம்பொங்கிக் கரைக்கு மேற்பட்டு வழிந்து
பூமிமுழுவதும் சலமூடிக்கொண்டதினாலே,
உலகத்துள்ள ஜனங்களெல்லாம் அழுதுகொண்
டோடத் தலைப்பட்டார்கள். இப்படி வானர
வீரர் ஒவ்வொருவரும் ஆயிரம்யோசனை யுய
ரமாக இருக்கின்ற பெரியமலைகளைப் பிடுங்கி
யெறிந்து கர்ஜ்ஜித்தபோது வாசனை ஊட்டிக்
கொடிகளைக்கட்டிய உப்பரிகைகளோடுங்கூடி
ய லங்காபட்டணவீதியெல்லாம் சமுத்திரஜல
ம்பரவினது, மயிந்தனென்கின்றவானரவீரனா
ல் போடப்பட்ட பெரியமலையானது ஆகாச
த்தைமுட்டி விழுந்தபோது சப்தித்தெழுந்
த சமுத்திரசலமானது திகந்தபரியந்தமுஞ்
சென்றதினால் அஷ்டதிக்குகளிலுமுள்ள திக்
கஜங்கள் தம்முடையநிலைபெயர்ந்துக் கூச்சலி
ட்டதுகள். குமுதனென்கிற வானரவீரன்போ

ட்ட பெரியமலையானது நட்டுவனைப்போலச் சமுத்திரத்தைக் குதிக்கச்செய்தது, அதனால் சமுத்திரத்தினுடையநீர்த்துளிகள்சுவர்க்கலோகத்திற்போய்த்தெறித்தனகள். அதைக்கண்டுதேவர்கள் இன்னமும்அமுதமுண்டாகப்போகிறதென்கின்ற ஆசையினாலே துள்ளிக்குதித்தார்கள். அமிர்தமுண்டாகும்படியாகக் கடலைக்கடைந்தவாலியினுடையபுத்திரனாகிய அங்கதனென்பவன், இளையபெருமாளானவர் ஆயிரம்பாணங்களைக்கொண்டுவிலக்கினாலும் விலக்கக்கூடாத பெரியமலையொன்றைப்பிடுங்கியெறிந்து மறுபடியுமந்தக் கடலைத்தன்தந்தையைப்போலக்கலக்கினான். அளவில்லாதகரடிக்கூட்டங்கள்கொண்டுவந்து போடப்பட்டமலைகள், ஒன்றின்மேலொன்றுவிழுந்து புண்ணியஞ் செய்யாதவர்களுடைய ஐஸ்வரியத்தைப்போலப் பொடிப்பொடியாய்ச் சிதறிப்போய்விட்டனகள். சமுத்திரத்தினுடைய ஆயிரயோசனை வரையினும் மிகவுமுயர்ந்து பருத்திருக்கின்ற திமிங்கில மச்சமானது தன்மேல் பெரியமலைகள் பாரஞ்சுமர அதைச் சகிக்கமாட்டாமல் உடல்பதைத்துப் புரண்டபோது மலைகளெல்லாஞ்சரிந்துவீழ்ந்துவிட்டனகள். அப்படிக்கொண்டுவந்தமலைகளை வரிசேர்க்கிறதற்கு இசைவுபார்த்து உடைக்குமடையாளம்வைத்த அந்த வானரத்தச்சன் மலைகளையொன்றுபோலுடைத்துச்சேர்த்துச் சமானமானமலைகளை, வரிசையாயடுக்கிமேல்மட்டம்ஆகும்படி மணலைவாரிப்போட்டுத்தனதுபெரியகையினாலே சமப்படுத்திப்பரப்பி அநேககோடிவானர சைனியங்கள் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு கூட்டமாய்க்கொடுக்கின்ற பெரியமலைகளை எழுக்கம்பம்போன்ற தன்னுடையகையைநீட்டி எல்லாவற்றையு மொருமிக்கச்சேர்த்து வாங்கும்போது, நழுவி விழுகின்றமலைகளைக் கால்களினாலே தாங்கிச் சேர்த்துக் கொள்வான். வானர வீரர்களெல்லாம் மலைகளைத் தலையின்மேற் சுமந்துகொண்டு பூமியிற் போடாமல்வரிசை வரிசையாகநிற்க அந்தத் தோற்றமானது கடலிற்கட்டுகிறசேதுவை யல்லாமல் இந்த வானரசேனைகள் தலையில்பேரிலும் ஒருசேதுவை யுண்டாக்கினதுபோலு மிருந்தது. அவர்கள் பெரியமலையைக் கொண்டுவந்து வரிசைவரிசையாக வைத்திருக்கிற படியினாலே, பூமியில்நடக்க வழியில்லாமல் சிலவானரர்கள் கையில் தூக்கிக்கொண்டு வந்தமலையைத் தலையிலே தாங்கிக்கொண்டு சமுத்திரஜலத்திலிறங்கி நடந்துபோனார்கள். சில வானரர்கள் வெகுதூரம் வருத்தப்பட்டுக் காலோய்ந்து பசியினால் சிரமமடைந்து சுமந்துகொண்டுவந்த மலைகளைக் கீழேயிறக்கிவைத்து அவைகளிற்கட்டியிருக்கின்ற தேன்களை அடிக்கடிக்குடித்து வெறியேறி, மெய்ம்மறந்து நித்திரைபோயினர். மலைகளைக்கொண்டு வருகிறதற்காகப்போகிறவானரர்களிற் சிலர் அஷ்டதிக்கிலுமிருந்து மலைகளைக்கொண்டுவருகிற வானரர்களிற் சிலர், இப்போது சேதுவெவ்வளவுகட்டியாயிற்றென்று கேட்கப் பாதி கட்டியாயிற்றென்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள். திருவணைசெய்கிற மலையிலிருக்கின்ற குங்குமங்களும், குகையிலுள்ளதேன்களும், அநேகஜாதிபுஷ்பங்களும் கலந்து துறைதோறும் படிந்திருப்பதினாலே உப்பாகிய கருங்கடல் நிறத்தினாலும், சுவையினாலும், மதுரமாகிய செந்தேன்கடலுக்குச்சமானமாயிருந்தது. இந்தச்சமுத்திரமானது அநேகம் பெரியமலைகளைப்போட்டுத் தன்னை நெருக்கப்படுத்தியும், எவ்வளவு தரித்திரம் வந்தகாலத்திலும், குடும்பசம்ரக்ஷணைசெய்கின்ற உயர்ந்தகுடிப் பிறப்பாளரைப்போலக் கொஞ்சமும், கலங்காமலிருந்தது. மலைகள் விழுந்தபடியினாலே சிதறின நீர்த்துளிகளோடுங்கூட, ஆகாசத்தில்போகிற மீன்கள், இந்தக்கடல் தூர்ந்துபோனபடியினாலே பெரும்புறக்கடலிற் சேருகிறதற்குப் போகிறதுபோலு மிருந்தது. கொழுந்துவிட்டுப் படர்ந்துவருகின்ற பவளக்கொடிகள் அமிழ்ந்துபோகும்படியாகஎறியப்பட்ட மலைகளாற்சிதறுண்ட நவரத்தினங்கள்ஒருபக்கத்தில்ஒளிவீசின. வானரவீரர்கள்ஆலமரங்களைப்பறித்தபோது அதில் வாழ்ந்துகொண்டிருந்த பக்ஷிக்கூட்டங்கள் குடும்பத்தைத்தாங்குகிறவன் இறந்தபோது அவனால்ரக்ஷிக்கப்பட்டவர்கள், வேறேதங்களுக்கு ரக்ஷகரில்லாமையால் அழுது துக்கிக்கிறதுபோலக் கூச்சலிட்டுக்கொண்டு பறந்தனகள். மாமரங்களெல்லாம், கடலில் விழுந்தபோது அந்த மாமரங்களில் வாழ்ந்துகொண்டிருந்த வண்டுகளெல்லாம், அரசனிறந்துபோக, ஆதரணையில்லாத ஏவலாளர்களைப்போலப் பலபக்கங்களிலும் ஓடினகள். வானரவீரர்களால் வேரோடுகூடப்பறியுண்ட புஷ்பங்களையுடைய விருக்ஷங்களைச்சூழ்ந்து படர்ந்திருந்த பூங்கொடிகள், அவைகளுடனே வெகுதுன்ப மடைந்தனகளே யாயினும், நாயகன்மாரிறந்துபோக அவர்களோடுடன்கட்டை ஏறுகின்ற நல்லகுல ஸ்திரீகளைப்போல அந்தமரங்களுடனே சமுத்திரத்தில் விழுந்தனகள். சிலவானரவீரர்கள் மலைகளைப் பிடுங்கிக்கொண்டு வரும்போது அவற்றிலுள்ள யானைகளுடைய மதசலத்துக்குஆசைப்பட்டு, அவைகளைப் பின்றொடர்ந்து மொய்த்துக்

கொண்டுவந்த வன்கடினங்கள், அந்தயானைக
ள் மலைகளுடனேகூடச் சமுத்திரத்தில் விழு
ந்தபோது நாயகச்செளக்கியமா யுள்ளவரா
யிலும் அவன் கைப்பொருள்களைப்பறித் த
னுபவித்துக் கொண்டிருந்து அவனுக்குச்சங்
கடம்நேரிட்டமாத்திரத்தில் அவனைவிட்டு வில
கிப்போகின்ற வேசைகளைப்போலத் திரும்பி
ப்போய்விட்டதுகள். மலைகள் விழுவதனால் சி
தறுண்ட வுப்புக்கடலின் நீர்த்துளிகள்பட்டுப்
பெரும்புறக்கடலினது ருசியும் நீங்கிப்போ
னது. அன்றியும் மேகத்தினிடத்துள்ள அக்
கினிமயமாக விருக்கின்ற இடிகளுங் குளிர்ந்து
போய் விட்டதுகள். இவ்வளவுதானே மேக
ம் வருஷிக்கின்ற மழைத்தண்ணீரும் உப்புக்க
ரித்தது. பெரியமலைகள் விழுந்தபோது எ
திர்த்தெழுந்த நீர்த்துளிகள் எப்போதும்பரி
க்கின்றதினால் சூரியனுடைய உஷ்ணகிரணங்க
ளானவை சந்திரனுடைய கிரணங்கள்போலு
ங் குளிர்ந்துபோய்விட்டதுகள். பேர்த்தெறிந்
த மலைகளாற் சிதறுண்ட நீர்த்துளிகளோடு மே
லெழுந்துபோன பவளத்துண்டங்கள், பிரகா
சிப்பதினாலே ஆகாசமுழுமையும் மின்னற்
கொடிகள் சொலிக்கிறதுபோ லிருந்ததுகள்.
ரத்நங்களை விரித்தாற்போ லிருக்கின்ற மண
ற்பிரதேசங்களின் பக்கங்களிலே அக்கினிகளை
ப் பரப்பிவைத்ததுபோலே, தனித்தனியே அ
நேகவிதமான கனிவர்க்கங்களை உண்ணுதற்கு
ப் பரப்பிவைத்திருக்கின்ற வானரங்களினுடை
ய கூட்டத்தின்விசாலம் அநேகப்பெருமணிக
ளையுடைய சமுத்திரப்பரப்பை யொத்திருந்த
து. இந்தப் பிரகாரமாகச் சேதுவானது லங்
கைபரியந்தம் மூன்று நாளைக்குள்ளாகக்கட்டி
முடிந்தது. கட்டிமுடிந்த சந்தோஷத்தினு
ல் வானரக்கூட்டங்கள் மிகுந்த பேரோசை
போடு கர்ச்சித்ததினால் அண்டகோளம் படீ
ரென்று பிளந்துவிட அப்போதிருந்த ஆகா
சம் மற்றொருலோகத்தில் ஆகாசம்போலக்கா
ணப்பட்டது. சேதுகட்டுதற்கு வேறேயொ
ருவரைத் தேடவேண்டிய காரணமென்ன?
செகன்மாதாவாகிய சீதாபிராட்டியாருடையது
ன்பத்தை நீக்கும்படிக்கு நீங்கள் என்னுடைய
முதுகின் வழியாய் - லங்கைக்குப் போகலா
மென்று பிலத்துவாரத்திற் குள்ளிருந்து ஆதி
சேஷன் மேலெழுந்து தனது முதுகையுயர
த்தினதுபோலச் சேதுவானது பிரகாசித்
துக்கொண் டிருந்தது. மெய்ம்மைவிரும்பிய
லங்கையென்கின்ற ஸ்திரீயானவள் இராக்ஷசர்க
ளாற் செய்யப்பட்ட தீமையைச்சகிக்கமாட்டா
தவளாகி ஸ்ரீசர்வேஸ்வரனுடைய சேனையைக்க
ண்டு சந்தோஷித்தினால் தனது கையைநீட்டி
உபசரிப்பதுபோலு மிருந்தது. காட்டாறுகளா
லே நிறைந்த சமுத்திரத்தைச் சர்வஞ்ஞரான
ஸ்ரீராமசந்திரருடையசேனைகள் தாண்டிப்போ
கிறதற்கு ஆறென்று பெயர்பெற்றவழி தான
ல்லாமல் வேறேதுவென்று ஆகாசகங்கையா
னது சமுத்திரத்தின் குறுக்காக விழுந்திருந்த
துபோலு மிருந்தது. மேலும் வானரசை
னியங்களால் கட்டப்பட்ட சேதுவானது நவர
த்தினக்கற்களினாலே பிரகாசிக்கின்றபடியினா
ல் ஆகாசத்திலுள்ள இந்திரவில்லானது சமு
த்திரத்தின்குறுக்கேகிடந்ததுபோலும் தோ
ற்றிக்கொண்டிருந்தது. இப்படிப்பட்ட சிற
ப்பையுடைய சேதுவை மிகுந்த சந்தோ
ஷித்துடனே கட்டிமுடித்துப் பிறகு வானர
சேனாதிபதியான சுக்கிரீவமஹாராஜரும், லங்
காதிபதியான விபீஷிணாழ்வாரும், இன்னும்
அங்குண்டான சகலமானவர்களும், ஸ்ரீகோதண்
டதீக்ஷாகுருவினிடத்திற்குவந்து தெண்டஞ்
சர்ப்பித்து, நூற்றிரண்டுயோசனை நீளமும்,
பத்துயோசனை அகலமுமான சேது கட்டி
முடிந்த தென்பதாக விண்ணப்பம் பண்ணிக்
கொண்டார்கள்.

சேதுப்படலம்
முற்றிற்று.

---

## ஒற்றுக்கேள்விப்படலம்.



அப்போது, தயாமூர்த்தியாகிய ஸ்ரீராம
பிரானானவர், ஆநந்த அமுதவெள்ளம் பெரு
கத் தமது நீண்ட செந்தாமரைக் கமலம்போ
ன்ற திருக்கையினால், வானரத்தச்சனாகிய நள
னைத் திருமார்போடு சேர்த்துத்தழுவி, நான்
சொன்னபடியே எல்லா முடிந்ததா வென்று
வினவி, அத்தியந்த சந்துஷ்டராய் எல்லாரு
ம் வாருங்களென்று நியமித்துப் புறப்பட்டு
ப்போய், தம்முடைய பழைய வாசஸ்தல
மாகிய, திருப்பாற்கடலுக்கு எதிர்த்தட்டாகக்
கருத்தகடலிலே சயனித்துக்கொண்டிருக்கின்
ற, சாக்ஷாது விஷ்ணுவுக்குச்சமானமாகக் கட்
டப்பட்டிருக்கின்ற சேதுவுக்குச் சமீபத்தில்
வந்து, தேவதேவராகிய ஸ்ரீராமமூர்த்தியான
வர், தம்முடைய பிராணனையொத்த சீதாபிரா
ட்டியாரைக் கண்டதுபோல, மிகுந்த சந்தோ
ஷமுடையவராய், இந்தப் பெரியகடல்நிரம்ப
மலைகளைக்கொண்டு தூர்த்து; அணைகட்டின

கு மாஅருமைபாகும். லோகங்களைச் சி ருஷ்டித்த பிரமதேவனேவந்து கட்டினபோ திலும், இதுமுடிகிறதற்கு எத்தனைகாலஞ்செ ல்லுமென்று, பின்னும் சர்வசம்மார கர்த்தா வாகிய ஸ்ரீதாசரதியானவர், அதிக ஆச்சரியப் பட்டு, இந்தக் கடலினுழமாவது ஒருவராலு ஞ் சொல்லிமுடியுமோ! இந்தச் சமுத்திரத் தைக்காட்டிலும், லங்கைபெரிதாயிருக்கின்றது. ஆகையா லிந்தக்கடலைவிட்டு இதற்குமேலான சப்தசாகரங்களையும் ஒருக்ஷணநேரத்திற்குள் ளாக இந்த வானரக்கூட்டங்கள் தூர்த்துவிடு வார்களென்பதற்குச் சந்தேகமுண்டோவென் று சொல்லிச், சைனியங்களுக்கு முன்னுக வி பீஷிணுழ்வாரைப் போகும்படியாகவும், பின் பக்கத்தில் சாஸ்திரோக்தங்களையெல்லாம்விகித மாக நன்றாய்க்கற்றுணர்ந்த சமர்த்தரான ஆஞ் சநேயராவரும்படியாகவும், நியமித்துத், தம க்குப்பின்னுகை இளையபெருமாள் எழுந்தருள, வீரத்தோடுகூடிய மகாஅழகிய திருத்தோள்க ளையுங், கறுத்ததிருமேனியையுமுடைய ஆண் யானைக்கொப்பாகத்தாம் எழுந்தருளினர். பெ ரியவானரசேனைகள் ரத்தினங்களையும், முத்து க்களையு மெறிந்துகொண்டு, கரையிலேயோங்கி வளர்ந்திருக்கின்ற, சோலையில் தாவிவிழுகின் ற அலைகளுக்குச்சமானமாகவும், கருங்கடலிற் போய்விழுகின்ற காவிரியாற்றின் பெருக்கை ப்போலவும், உயர்ந்த சேதுவின் வழியாகப் போனதுகள். குறிஞ்சிநிலத்திலுள்ள ஆகா ரங்களையும், முல்லைநிலத்திலுள்ள ஆகார ங்களையும், மருதநிலத்திலுள்ள ஆகாரங்களை யும், சுமந்துகொண்டு போகிறபடியினலும், அந்தவானரசேனைகள் குறிஞ்சிநில முதலான வற்றிலுள்ள உணவுப்பொருள்க ளொன்றும் விடாமல், கொள்ளைகொள்ளையாய் அலைகளெ ன்கிற கைகளினல் வாரிக்கொண்டு கடலில் விழும்படியாகப் போகின்ற அந்தக் காவிரி யாற்றுக்குச் சமானமாக இருந்தது. அந்தச் சேதுவானது இறுகியழுந்தும்படியாக மிதித் துக்கொண்டு ஒருவர்போனவழியில் ஒருவர் போவதினலே காலடிபட்டுத்தேய்ந்து, அந்த வழியில் சமுத்திரத்தினலைகள்பாய்கிறபோதெ ல்லாம், குதிரைமேலேறிச் சவாரிசெய்துகொ ண்டு போகிறவர்களைப்போல, வானரவீரர்கள் குதித்துக்குதித்துத்தாவிக்கொண்டுபோனர்கள் அப்படி போகும்போது, ஒருவர்தேகத்தோ டொருவர்தேகம் நெருங்கி உராய்கின்றபடி யால் நடக்க விசையற்றுக் கால்தவறி பக்கத் தில் விசாலமான இடமில்லாமல் - கடலில் விழுந்தவர்களை முழுகிப்போகாமல், கை அூக்கிவிடுகின்ற தயையுடையவர்கள் கைகொ டுத்துத்தூக்கி வரிசைவரிசையாக அழைத்துக் கொண்டுபோக, இப்படி அநேகவானரவீரர் கள்போனர்கள். கருங்கொண்டமேகத்திற்கு ச்சமானமாகக்கறுத்த, ஸ்ரீராமமூர்த்தியினது திருமேனியில் சூரியனுடைய அதிக உஷ்ண மாகிய கிரணங்கள்படவொட்டாமல் தழைத்து மிகுந்த நிழல்தருகிற உயர்ந்தஅதிக சீதளசந் தனவிருக்ஷங்களையும், சுரபுன்னைவிருக்ஷங்களை யும், பிடுங்கிக்குடைபிடித்துக்கொண்டு ஸ்ரீராம மூர்த்திக்குஇரண்டுபக்கங்களிலும்அநேகவான ரர்கள்போனர்கள். தெய்வீகம் பொருந்திய அநேகமான யாகாதி கிருதுக்களைச் செய்யும் படியாகிய வேதோத்தமர்கள் அத்தியயனம் ப ண்ணுகின்ற வேதார்த்தமே யதார்த்தமாய்த் தாமாக எழுந்தருளியிருக்கின்ற அந்தச்சக்கிர வர்த்தித்திருமகனுருடைய திவ்வியதிருமேனி யானது இளைப்படையாமல், நானுவிதபரிமள சுகந்தபுஷ்பக்கொத்துக்களுள்ள மரக்கிளைகளை யொடித்து அவைகளைத் திருத்தவேண்டிய பிரகாரமாய்த்திருத்திச் சாமரைபோல அநே கவானரவீரர்கள் வீசிக்கொண்டுசென்றர்கள். சீதாபிராட்டியாருடைய திருமணத்தைத்திருவு ளத்தில்நினைத்துத்தம்முடையரத்தினக்கணங் கள்பொருந்திய திருக்கரங்களைக்கடாக்ஷித்துக் கொண்டு, யுத்தத்தின்பேரில் இச்சைகொண்டு போகின்றவர்களானவானரசேனைகளுடனே ச முத்திரத்தைத்தாண்டிக்கரைபேறித், தேவாமி ர்தத்திற்குச்சமானமாகிய தமதுதிருத்தம்பியா ரோடும் சுக்கிரீவமஹாராஜர் விபீஷிணுழ்வா ர் அனுமார்முதலான துணைவர்களோடும், அரு ந்ததியுங்கண்டு அதிசயித்து ஸ்தோத்திரஞ்செ ய்பத்தக்க சீதாபிராட்டியார், எழுந்தருளி யிருக்கின்ற அந்தலங்காபட்டணத்தின் சமீபத் பத்திலிருக்கின்ற ஒரு பெரிய மலையின்மேல் தேவர்கள் பெருந்தவஞ்செய்து, பிரார்த்தித்த தின்பொருட்டு வந்தவதரித்தருளின, ஸ்ரீராம மூர்த்தியானவர் எழுந்தருளி, நீலனென்கின்ற வானரசேனுவீரனைப்பார்த்து, அப்பா நீலா! நம்மோடு கூடவந்த சைனியங்களுக்கெல்லாம் பாடிக்கூடாரம் நீ செய்விக்கவேண்டுமென்று, ஆஜ்ஞாபித்த மாத்திரத்தில் அவன் சுவாமியி னுடைய திருவடிகளில் நமஸ்கரித்துவிட்டுப் போய்ச் சமுத்திரத்தில் அணைகட்டி வழிசெய் தவனுன, நளனுக்குச் சுவாமி நியமித்தக்கட்ட ளையை விவரமாகச்சொன்னன். அதைக்கே ட்ட நளன் தன் பிதாவாகிய மயனும், நாணம டையத்தக்கதாக அந்த இடத்தைச் சதுரப்படு த்தித் தலைவர்களான சுக்கிரீவமகாராஜர் - விபீ ஷிணுழ்வாரென்று சொல்லப்படுகின்ற இரு வர்களுக்கும், மற்றயாவர்களுக்கும் அவரவர்க

ன் நிலைமைகளுக்குத் தக்கபடியே பிரமதேவனால் சிருஷ்டிக்கப்பட்டதுபோலப் பொன்னினாலும், ரத்தினங்களாலும், பாடிக்கூடாரமமைத்துச் சகலலோகநாயகரான ஸ்ரீகோதண்டபாணி எழுந்தருளியிருக்கத்தக்க இடத்தையுமுண்டாக்க வேண்டுமென்ற விருப்பத்துடனே அம்மலைச்சிகரத்தை மட்டப்படுத்தி, மூங்கிற்கால்கள் நாட்டித், தருப்பைப்புற்களால் ஆக்கையிட்டுக்கட்டித், திவ்வியசுகந்தபரிமள புஷ்பங்களினால் மேற்கூரை மேய்ந்து பர்ணசாலைகட்டிமுடித்தான். பின்பு, சுக்கிரீவமகாராஜர் முதலான யாவர்களுந் தத்தமது வாசஸ்தானங்களைநோக்கி எல்லாச் சீவகோடிகளிடத்திலும், தாயைப்பார்க்கிலும் மிகுந்த தயாசீலரும், சர்வரக்ஷகருமான ஸ்ரீராமமூர்த்தியை மனம்பூரணமாக வாழ்த்திச் சாஷ்டாங்கமாகத் தெண்டனுஞ்சமர்ப்பித்து, அந்தமலையின் அஷ்டதிக்குகளிலுமுள்ள அவரவர்களிருப்பிடத்தைச் சேர்ந்தார்கள். அப்பால், சர்வலோகசரணியராகிய ஸ்வாமியுந் தம்முடைய பர்ணசாலையில் சந்தோஷமாக எழுந்தருளினார். மிகுந்த மனவருத்தமுடைய ஸ்ரீராமர் லோகமாதாவாகிய சீதாபிராட்டியாரைப் பிரிந்ததனாலுண்டாகிய துக்கசாகரத்தில் மூழ்கவும், நக்ஷத்திராதி கிரஹங்கள் பிரகாசிக்கவும், கறுத்தஉப்புநீர்த்துளிகள்பட்டு மழுங்கிய ஒளிபிரகாசிக்கச் சுத்தஜலத்தில் ஸ்நானம் பண்ணுகிறதற்குப் போவதுபோலச்சூரியன்அஸ்தமனமானான். அப்படிஅவன் அஸ்தமித்தமாத்திரத்தில், ஸ்ரீராமர் மீது அஸ்திரப்பிரயோகம்பண்ணுகிறதற்காக அதிகவேகத்துடனேஇரண்டுகுதையும்ஒன்றோடொன்று பொருந்தும்படியாக வளைக்கப்பட்ட மன்மதனுடைய வில்லைப்போல மேற்றிசையில் மிகுந்த பிரகாசத்துடனே மூன்றாம்பிறைச்சந்திரனுதயமாயிற்று.

சகஸ்திர இதழ்களோடுங்கூடிய தாமரைப்புஷ்பத்திலுண்டான வாசனையையுடைய மகரந்தப்பொடிகளை அளாவிக்குளிர்ந்த பனிநீர்த்துளிகளை வீசிக்கொண்டுவருகின்ற தென்றற்காற்றைப்பார்க்கிலும், அந்திவானமாகிய செவ்வானத்தைக் காட்டிலும், மன்மதபாணமாகிய அம்பிலும், அதிகமான உக்கிரத்தைக்காட்டிக்கொண்டு, அந்த மூன்றாம்பிறைச்சந்திரன் மிகுந்த சுவாலையைவீசினது. கோபவேளையிலும் அழகுவிளங்கிக்கொண்டிருக்கின்ற திருமுகமண்டலத்தையுடைய சீதாபிராட்டியாரைப் பிரிந்தகாலமுதல்நித்திரையையும், நாவிற்குருசியையும், மறந்திருப்பவராகிய, ஸ்ரீராமருடைய திருத்தோள்களில், சந்திரகிரணங்கள் பிரகாசிப்பது தன்னிடத்தில் வாசமாயிருந்த மயில்பிரிந்துவிட்ட சமயம்பார்த்துபெருமை பொருந்திய ஒருமரகதமலைமேல் அக்கினிமயமான சுவாசத்துடன் வெண்மையான ஒருகுட்டிப்பாம்பு தவழ்வதை ஒத்திருந்தது. சீதாபிராட்டியா ரெழுந்தருளிய லங்காபட்டணத்தைக் கிட்டிவரவர, வச்சிரகங்கணங்கள் தரித்து அழகுடனே திரண்ட திருத்தோள்களையுடைய ஸ்ரீராமபத்திரர் தேகமெல்லாம் புழுங்கி, வருத்தமடைந்தார். அநேக காததூரத்திலே இருந்து நினைக்கும்போதே சுட்டெரிக்கும்படியான செவந்த இதழும், கறுத்த கண்ணையுமுடைய அந்தச்சீதையாகிய அக்கினியானது சமீபத்தில்வந்தாற் சுடாமலிருக்குமோ? இந்தப்படியாகச் சீதாபிராட்டியாருடைய வியோகாக்கினியாலே ஸ்ரீராமபிரானானவர் வருத்தப்பட்டுக்கொண் டிருக்கும்போது, இராவணன் தன்னுடைய வாழ்நாளுக்கு முடிவுவந்ததினாலே ஸ்ரீராமருடைய பலாபலங்களைத் தெரிந்துவரும்படியாக இரண்டு ஒற்றர்களை அனுப்பினான்.

அவர்கள் ராக்ஷசமாயையினால் குரங்குருவ மெடுத்துக்கொண்டு வானரசேனைகளைச் சுற்றிச் சுற்றி, எவ்வளவுசேனைகளென்று மதிப்பிட்டுப், பார்த்துக்கொண் டிருக்கும்போது, பூர்வத்தில் தாம்செய்த நல்ல தபோபலத்தினாலே முந்திவந்து சாட்குண்ணிய பரப்பிரம்மமாகிய ஸ்ரீராமஸ்வாமியை ! அடைக்கலம் புகுந்த விபீஷணாழ்வார். பெரிய சமுத்திரத்திற்குச் சமானமாகிய வானரசேனைகளை இவ்வளவென்று தம்முடைய உள்ளத்தில் கணித்தறிந்திருக்கின்றவரானபடியால், பாற்கடலில் ஒருசிறுதுளிநீர் தெளித்தபோதிலும், அந்த நீரை வேறுபிரித் தறியும்படியான அன்னத்தைபொத்த விவேகசாமர்த்திய முள்ளவராய், மகத்துக்கு மகத்தாயும், அணுவுக்கணுவாயுமிருந்து ஒரேதன்மையாய் காண்டற்கரிய அகண்டாகாரமாய்ப் பருத்துயர்ந் திருக்கின்ற தம்முடைய விராட்சொரூபத்தை யுள்ளடக்கிக்கொண்டு, தம்முடையஸ்வரூபமிப்படிப்பட்டதென்று தெரியாதபடிமறைந்து, அந்தரியாமியாய்ச் சகலாத்துமாக்க ளிடத்திலும், வசித்துக்கொண் டிருக்கின்ற மகாமாயாசக்தியையுடையவர்களான பெரியபிராட்டியாரும் அவர்நாயகரான நாராயணமூர்த்தியுமாகிய இருவரையும், தங்களுடைய இருதயத்திலே தரிசனைசெய்கின்றமகாயோகிகளுக்குச் சமானமானவராய், இராவண ஒற்றர்களாகிய ராக்ஷசர்கள். சிறியவானர தேகத்தை யுடையவர்களாய்ப், பார்க்கப் பயங்கரமாய்ப் பருத்துயர்ந்திருந்த ஆகாரத்தை உள்ளடக்கிக் கொண்டு

தங்கள் உண்மையான உருவம் ஒருவருக்குந் தெரியாதபடி மறைத்துக்கொண்டு திரிகின்ற அந்த மாயாரூபிகளான இரண்டு ராக்ஷசரையும், சூசனையாகக்கண்டு அவர்களைத்தம்முடைய முஷ்டிபிடித்த பலம்பொருந்திய கைகளினாலே வானரக்கூட்டங்களுக்கு இரக்கமுண்டாகும் படிக்குக் குமைத்து, வெறொன்றுஞ்செய்யாமல், மிகுந்தபலமுள்ள ஊனுங்கொடியா விருக்கிக் கட்டி, ரத்தங்கக்கிக் கொண்டிருக்கின்ற அவ்விருவரையும், கட்டியகட்டுடனே சுவாமிக்கு முன்பாகக்கொண்டுவந்து, இராவணனால் அனுப்பப்பட்ட திருடர்களிவர்களென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். அதைக்கேட்ட சேஷசாயியாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர், அவர்களைப்பார்த்துப்பகைவரொன்றுநினையாமல், இவர்கள் தமக்குச்சகிக்கக்கூடாத வருத்தத்தைச்செய்தபோதிலும், குரங்குகளாச்சுதேயென்று இரக்கங்கொண்டவராய், நம்மைத்தஞ்சமென்றடைந்தவர்களை நாம் வருத்தப்படுத்தலாமோ? இவர்களைத் துன்பப்படுத்தாமல் விட்டுவிடுங்களென்று திருவாய்மலர்ந்தருளினார். இப்படிச் சுவாமி சொல்லுவதைக்கேட்டு, இந்த ராக்ஷசத்திருடர்கள் சுவாமியைப்பார்த்து. ஓ வில்வீரசிகாமணியே! இந்த விபீஷணன் உம்முடைய சேனாசமுத்திரமாகிய வானரவீரர்களுடைய மிகுதியைப்பார்த்து, இவர்களைவெல்லுகிறது அரிதென்றெண்ணி, வஞ்சனைசெய்து எங்களையெல்லாங் கொல்லுகிறதற்கு வந்தான். நாங்கள் யதார்த்தமான குரங்குகள் எங்களை அங்கீகரித் தருளவேண்டுமென்று சொன்னார்கள். அப்போதுவிபீஷணாழ்வார், சுவாமியினுடைய திருவுள்ளத்தின்தயையைஅறிந்து கண்ணுந்தண்ணீருமாய்நின்று சுவாமீ! இவர்கள் மலையிலுங், காட்டிலும், வாழ்கின்ற குரங்குகளல்லர். தயையுந் தாக்ஷிண்ணியமும், சத்தியமுமில்லாத மனதையுடையவனான ராவணனால் ஏவப்பட்டதூதர்களிவர்களிரண்டுபேரில் ஒருவனுக்குச் சுகனென்றுபேர் - மற்றொருவனுக்குச் சாரனென்றுபேர் - என்றுசொன்னதுமல்லாமல், இவர்கள் மாறுருவந் தரித்துக்கொண்டிருக்கின்ற திருடர்கள், அந்த மாறுபாட்டைத்தேவரீருக்குச் சந்தேகமறக்காட்டுகின்றேன். பார்த்தருளவேண்டுஞ் சுவாமீ என்று விபீஷணாழ்வார் ஒருமந்திரத்தைச் செபித்தார். செபித்த மாத்திரத்தில், பாதரசத்துளிபட்டவுடனே தன்னுடைய பழையநிறமாறி வேறுபட்டு வெள்ளிநிறமாக இருந்த பொன்னானது புடமிடுகிறவர்கள் அந்தரசம் போகத்தக்க தகுந்த செய்கைகளைச் செய்து, புடமிடத் தன்பழையநிறத்தைப் பெறுமாறுபோல, வானரவடிவுகொண்டிருந்த அந்தத் திருடர்கள் தங்கள் யதார்த்தமான ராக்ஷசவடிவுடனே வக்கிரதந்தங்களை யுடையவர்களாய்ப் பயந்து, மலைபோல்நிற்கின்ற அந்தக் கொடியவர்களைப் பார்த்து, சிரித்துத், துன்பமுற்றுத் தம்மையடைந்தவர்களுடைய துக்கங்களையெல்லாம் நிவர்த்திசெய்யும் பரமதயாளுவான ஸ்ரீராமமூர்த்தியானவர் பயப்படாதேயுங்கள். நீங்களிவ்விடம் எதுகாரியத்திற்காக வந்தீர்கள், அந்த விவரங்களையெல்லாம் விசதப்படச் சொல்லுங்களென்று நியமித்தார். அந்தப்படி நியமித்தமாத்திரத்தில், பெரியோர்களெல்லாம் தாயென்று தெரிந்து கொள்ளும்படியான சீதாபிராட்டியாரைத் தன்னைக்கொல்லும்படியான ஒருபெரியநோயென்று அறியாமல், தனக்குத்தானே சம்பாதித்துக்கொண்ட ராவணனால் ஏவப்பட்டு, இன்னது சொல்லவேண்டுமென்கிறதைத் தெரியாமல் மனதிலொன்றைநினைத்து, வாயில் ஒன்றைக்கூறுகின்றவர்களாய், வணங்கிச் சுவாமீ! வஞ்சனையான தந்திரத்தினால் இவ்விடத்திலுள்ள உளவைத்தெரிந்து கொண்டுபோய்ச் சொல்லும்படியாக வந்தோமென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார்கள்.

அதைக்கேட்டு ஸ்ரீராமர் அப்படியா நல்லது-ஓய்,- சுகசாரணர்களே? உங்களை இங்கே விலங்கிட்டுச் சிறைப்படுத்தாமல் விட்டுவிட்டேன், நீங்கள் ராவணனிடத்திற்போய் இந்த அளவில்லாத லங்காபட்டணத்தினுடைய அயிஸ்வரியத்தையெல்லாம் உன்னுடைய தம்பியாகியவிபீஷணருக்குக்கொடுக்கப்பட்டதென்றும், வானரசேனாவீரர்கள் மலைகளைக்கொண்டு கடலையடைத்துச் சேதுவைக்கட்டி அந்தவாராவதியின்வழியாய்க்கடலைத்தாண்டி எல்லாரும்லங்கைக்குவந்தார்களென்றும், இத்தனைநாள்பொறுத்திருந்தவில்வீரர்களும், வந்திருக்கிறார்களென்றும், பனங்குலையைப்போலும் பத்துத்தலைகளை யுடையவனான ராவணன் வசித்துக்கொண்டிருக்கின்றதும், குரூரம்பர்களான இராக்ஷசர்கள் நிரம்பியதுமான லங்கைக்குன்றமானது சமுத்திரத்தால்சூழப்பட்டுஇந்தமலையிலிருக்கின்றதென்று தெரிந்துகொள்ளக் கூடாமையா யிருந்தபடியினாலே உயிருடனும், துஷ்டஹிருதயத்துடனுமாய் இத்தனைநாள்வாழ்ந்திருக்கும்படியாய் நேரிட்டதென்றும், என்பிதாவாகிய ஜடாயுபகவானைக்கொன்று அவருடைய பந்துக்களை வருத்தினபடியே அவனுடையபந்துக்களையும், அவனுடையபலத்தையும், அவனுக்குண்டான எல்லாவரங்களின் பெருமையையும், ரணகளத்தில் நாசப்படுத்தி என்

ளுடைய பிதாவுக்காகச் சொர்க்க லோகத்திலிருக்கிற தேவர்களுக்கு அவனுயிரைக்கொண்டுதான் பலியூட்டப்போகிறேனென்று சொன்னதாகவும், மிகுந்தவேகத்தோடுஞ் செல்லுகின்ற ரிஷபவாகனத்தையும், கருடவாகனத்தையுமுடையவர்களான, மூன்றாம்பிறைச் சந்திரனை அணிந்த ருத்திரமூர்த்தியும், தாளஸிமாலிகாதராயியவிஷ்ணுமூர்த்தியும், மற்றச்சமஸ்தலோகநாதர்களும், அவனுக்குதவியாகவந்து காத்தபோதிலும், என்னுடைய இராமபாணத்தினால், அவனுடைய சிரசுகத்தைப்பல துண்டங்களாகச்செய்யப் போகிறதாய்ச் சொன்னேனென்றும், பதிவிரதாதவலஸ்ரோமணியான ஸீதையைத்தனித்தவொருசிறையிலிருக்கும்படியாகவீரர்களுக்கடுக்காத வஞ்சனையைச்செய்த அந்தமாபாதகக்கொடியோனுன ராவணனைஅவனுடையபந்துக்களோடுங்கூட அக்கினிபற்றி எரியும்படியான நரகமென்று சொல்லப்பட்டமீளாத சிறையிலே வைக்கப்போகிறேனென்றும், நான் சொன்னதாகச் சொல்லுங்கள். நீங்கள் எங்களுடைய சைனியங்களை எல்லாம் நுழைந்து நன்றாய்ப் பார்த்தாயிற்றே ! இனிநீங்கள் செய்யவேண்டியது ஒன்றுமில்லையே ! ஆகையால் நீங்கள் போங்களென்று திருவாய்மலர்ந்தருளி, வானரசைனியங்களைப் பார்த்து, நாம் மனப்பூரணமாய் அஞ்சலென் றிவர்களுக்குச் சொன்ன நம்முடையவாக்கை நினைத்துக்கொண்டு இவர்களைவாக்கினாலும், மனத்தினாலும், உங்களுடையகையினாலும், ஒருதுன்பமுஞ் செய்யாமல், சீக்கிரமாய்வெளியேகொண்டுபோய்விடுங்களென்று நியமித்தார். அப்படியேகொண்டுபோய்விட்டுவிட்டார்கள். விடப்பட்ட சுகசாரணர்கள் நாங்கள் பிழைத்தோம் பிழைத்தோமென்று சந்தோஷித்துடன் ஓட்டம்பிடித்தார்கள்.

அப்போது ராவணன் சமுத்திரராஜன் பயந்து அடைக்கலப்புகுந்ததையும், வானரங்கள் சமுத்திரத்தில் சேதுகட்டினவல்லமையையும், அந்தச் சேதுவின்வழியாக வானரசைனியங்களுடன் ஸ்ரீராமர்முதலானவர்கள் வந்ததையும், பார்த்துக்கொண்டு, இராத்திரியில் ஒரிடத்தில் தனித்திருந்து தன்னுடைய பிள்ளை பெண்சாதியொருவரையும்வரவொட்டாமல் நியமித்து, காற்றும்நுழைவதற்கருமையானமந்திராலோசனைசாலையென்கிற ஒருரஹஸ்யஸ்தானத்தில் தன்கருத்துக்கிசைந்த மந்திரிமார்களோடுங்கூட ஆலோசனை செய்யும்படியாகப் போனான். அங்கே மிகுந்தபுத்தியும், யதார்த்தமும், சாஸ்திரகேள்வியும் சிறிதேனும் இல்லாதவர்களும், ஊமை - செவிடுமுதலான அங்கஹீனர்களும், கூன்-குறள் - சப்பாணிமுதலியகுரூபிகளும், விளக்குகளைப்பிடித்துக்கொண்டு சுற்றிநிற்கச்செய்து, அசுரயக்ஷ காந்தருவர்முதலானவர்கள் வணங்கும்படியான பாதங்களையுடைய பிரதாபலங்கேஸ்வரனாகியராவணன் அந்த மந்திரிகளைப்பார்த்து, மனிதர்கள் நம்முடையபட்டணத்தைச் சமீபித்துவந்துவிட்டார்களே? இனிநாம் செய்யவேண்டிய காரியமென்னவென்று கேட்டபோது, ராவணனுடையதாயைப்பெற்றபாட்டனாகிய மாலியவான் ராவணனைபார்த்துச்சொல்லுகின்றான். அப்பாராவணா! அந்த இராமனுடைய வடவாமுகாக்கினியையொத்தசரங்களினால்சமுத்திரராஜன் உடல்வெந்து நடுநடுங்கிச்சூரியனுக்குச்சமானமான இரத்தின மாலைகளைக்கொண்டுவந்து ஸ்ரீராமனுடைய உபயதிருவடிகளில்வைத்து வணங்கிக்கொண்ட அந்தச்செய்தியானது சூலத்தைப்போல என்னுடைய நெஞ்சுக்குள் நின்று தொளைக்கின்றது. அந்தச் சமுத்திரமானது ஸ்ரீராமபாணத்தால் சின்னபின்னப்பட்டழிந்ததும், அந்தப்பகவானுடைய உத்தரவின்படியே அணைகட்டிமுடிந்ததும், மிகுந்தபயத்தினாலே அந்தக்கடல் அவர்கள் இலங்கையிற் பிரவேசிக்கும்படியாக வழிகொடுத்ததும். ஆகியஇந்த அபூர்வமான செய்கைகளெல்லாம் என்னுடைய மனத்தை மெத்தவும் வருத்தப்படுத்துகின்றதே! மேலும் லோகத்திலிருக்கப்பட்ட மலைகளையெல்லாம் வேரோடு பிடுங்கிக்கொண்டுவந்த வானரவீரர்கள் தங்களுடைய தோள்களைக் கொட்டிக் கர்ஜ்ஜித்த சப்தமும், சமுத்திரத்தைக்கெட்டியாக அடைத்துக்கட்டின கோஷமும், என்னுடையநினைவை ஸ்தம்பிக்கும்படிச் செய்துவிட்டதே! மிகுந்தகோபாவேசத்தோடு அளவில்லாத வானரவீரர்கள் தங்களுடைய சக்திக்குத்தக்கபடி மலைகளைச்சுமந்துக்கொண்டு வந்து கொடுக்க, அவைகளையெல்லாம் அலக்ஷியமாக ஒருநளனென்கிற வானரவீரன் தன்னுடைய கைந்நுனிவிரல்களினால்வாங்கிச் சமுத்திரத்திலிட்டது, என்மனத்தினிடத்தில் இட்டதுபோ லிருக்கின்றதே,! இந்தலங்காபட்டணத்தை முன்னொரு குரங்குவந்து சுட்டதையும், சமுத்திரத்தை அந்தக்குரங்கு தாண்டிவந்ததையும், மஹாபலசாலிகளான நம்முடைய அநேக ராக்ஷசர்களை அந்தக் குரங்கு கொன்றுவிட்ட விதத்தையும் கண்டோமே ? அல்லாமலும் இந்தக் கொடுமையான செய்கைகளெல்லாஞ் செய்துவிட்டு - அந்தக்குரங்கு நம்முடைய கண்ணுக்கு எதிராகவே எவ்வளவும் அச்சமில்லாமல் போய்விட்டதே ! இவைகளையெல்லாம் நாம் அனுபவமாய்ப் பா

ர்த்திருந்தும், அந்த மனிதர்களுடைய பலா பலத்தைப்பற்றி ஆலோசிக்கவும்வேண்டுமோ? என்று நல்ல நீதிவார்த்தைகளைச் சொல்லுமா த்திரத்தில், இராவணன் பற்களை நறநறெனக் கடித்துக், கண்களில் அக்கினிப்பொறி பறக் கும்படியாக நம்முடைய மந்திராலோசனை நன்றாயிருந்தது நன்றாயிருந்ததென்று கோபித்து, ஓ மாலியவானே! நீ எப்போதும் உயிரோடு கூடி வாழ்ந்துகொண்டிருக்கும்படியாக, விபீஷிணனோடுகூடப் போய்விடென்றான். இதைக்கேட்ட மாலியவான் எப்போதும் நல்லவார்த்தையை துஷ்டர்கள் கெட்டதென்று நினைப்பார்கள் என்று எண்ணிக்கொண்டு, ஒன்றும்பேசாமல்மௌனமாக இருந்துவிட்டான். அப்போது அங்கிருந்த சேனாபதியான பிரகஸ்தனென்கிறவன் எழுந்திருந்துவணக்கஞ்செய்து கையைக் கூப்பிக்கொண்டு, ஐயா ! மாலியவானே ? ஏழைகளான மனிதர்கள் இந்த அற்பமாகிய கடலைத்தாண்டிவந்த தொன்றுதானே அவர்களுக்குப்பலம், அஷ்டதிக்குப்பாலர்களும் வணங்கும்படியாகஜயம்பெற்று அவர்கள் இந்தப்பிரதாப லங்கேஸ்பரனாகிய ராவணனுக்கு ஊழியஞ்செய்துகொண்டிருக்கின்ற அந்தயதார்த்தத்தை யொன்றும் நினைக்காமற்போய்விட்டீரோ ! இந்தக் குரங்குகள் வருத்தப்பட்டுச், சிறுகுன்றுகளைத் தூக்கிக்கொண்டுவந்து, கடலையடைத்தாரென்று பிரதாபித்துச் சொன்னீர். இந்த ராவணேஸ்வரர் அந்தமகா கயிலாச பர்வதத்தைப்பிரமதகணங்களோடும், உமாநாயகனாகிய பரமசிவனோடும், உச்சாணிவேரும்பறிபடும்படிப்பேர்த்தெடுக்கவில்லையோ? அதைஇப்போதேன் சொல்லவேண்டும் இந்த இரண்டுமனிதர்களும், குரங்குகளும், புத்திகெட்டவர்களாய் நம்முடைய வாசஸ்தலமாகிய இந்தலங்கைக்குவந்து சேர்ந்தார்கள். தங்களை நாசப்படுத்துவதானகாலம், பிடரியைப்பிடித்துத்தள்ளிக்கொண்டு வந்தபடியா லினிச்செத்தவர்களேயல்லாமல், பிழைக்கிறவர்களல்லவென்று சொன்னான். அப்போது தேகமுழுதும் மூடிக்கொண்டிருக்கின்ற நிலபங்கிதரித்தவனும், அக்கினிஜொலிக்கின்ற கண்களையுடையவனும், கையில் பிரம்பும் பிடித்துக்கொண்டிருக்கின்றவனுமான, வாயிற் காவலாளியாகிய - ஒரு கட்டியக்காரன் ராவணனிடத்துக் கோடிவந்து கீழே விழுந்து கும்பிட்டு நின்று சுவாமீ ! எச்சரிக்கை பராக்கு, தாங்க ளனுப்புவித்த ஒற்றர்கள்வந்தார்களென்று சொன்னான். சொன்ன மாத்திரத்தில் அக்கினி பொழிகின்ற கண்களுடையவர்களும், மிகுந்த பலமுள்ளவர்களுமான ராக்ஷசர்களுக்குத் தலைவனாகிய ராவணன் நல்லது அவர்களை இங்கே அழைப்பென்று நியமிக்க சுவாமீ! அப்படியே புத்திபெற்றுப்போய், அந்த ஒற்றர்களை உள்ளேபோங்களென்று அனுப்பினான். அவர்கள் ராவணனுடைய சமுகத்தில்வந்து அவனுக்கு வணக்கஞ்செய்து, வானர சேனைகளை நினைத்து நினைத்துத்திடுக்கிடும்நெஞ்சை யுடையவர்களாய்க் கணக்குப்போதெல்லாம் ரக்தங்கக்கிக்கொண்டும்நின்றார்கள். அப்படி நின்றவர்களைப்பார்த்து, வானரசேனைகளுடைய அளவையும், விபீஷிணன்செய்கிற செய்கையையும், இராமலக்ஷ்மணர்களுடைய தன்மையையும், விவரமாய்ச்சொல்லுங்களென்று, பாவரும்பயப்படும்படியான எமனுக்குச்சமானமாகிய ராவணன்கேட்கச் சுகசாரணர், சுவாமீ! ராவணேஸ்வரா, நாங்கள் இந்தச் சமுத்திரத்தை ஒருக்ஷணத்திற்குள்ளே தாண்டி, வானரசேனை சமுத்திரம் வசிக்கின்ற பாடிக்கூடாரங்கள்தோறும், அந்த வானரவுருவந் தரித்துக்கொண்டு போய் நாங்கள் அந்தச் சேனைசமுத்திரத்தினுடைய அளவைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையுடனே உன்னிப்பாய்ப் பார்த்துக்கொண்டு கருடனிலும் அதிவேகமாகப் பறந்தோடிப்போயும், அதினளவைப்பார்க்க எங்களாற்கூடாமற்போய்விட்டது. அந்தவானரசேனையினுடைய விரிவைப்பார்த்துச் சொல்லுகிறதற்கு நாங்கள் வேண்டுமோ ? அந்தவானரர்கள் இந்தக் கடலை அடைத்தபோது, சப்தித்துக்கொண்டெழும்பின அந்த நீர்த்துளிகளே உமக்கு முன்னேவந்து சொல்லவில்லையா ? பிரமருத்திரேந்திராதிகளாலும், இத்தன்மையதென்று அளவிடவுங்கூடாத வேதசாஸ்திரங்களைக் கற்றறிந்த அந்த மனிதர் தம்முடைய தோள்களாகிய மேருமலையைப்பார்த்துப் பாணங்களையும்பார்த்துத், தமது வில்லையும் பார்த்தமாத்திரத்திலே, சமுத்திரமானது வெந்து நீறாய்விட்டது. கற்பகப்பூமாலை அசைகின்றரத்தினமயாலங்காரமுள்ளமார்பையுடைய ராவணேஸ்வரா? உம்முடைய லங்காதிபத்திய அயிஸ்வரியமெல்லாவற்றையும் அந்த ஸ்ரீராமமூர்த்தி சூரியசந்திரர்களுள்ளவரையிலும், தமது நாமம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறவரையிலும், உம்முடைய தம்பியாகிய விபீஷிணனுக்கே சொந்தமாகக் கொடுத்துவிட்டார். முன்னாகத்தூதுவந்த ஒருகுரங்கு தன்னுடைய புஜபலபராக்கிரமந் தெரிவித்தபெருமையையோ? இன்னமொருவருமளவிடவில்லை, அப்படியிருக்க. சேதுபந்தனஞ்செய்தார்களென்கிற ஒருபொதுவான வல்லமையும் வெளிப்பட்டிருக்கின்றது. முப்பத்து மூன்று கோடி தேவர்களும், தேவாமிர்த பானம்பண்

னும்போது தங்களுடைய பந்தியில் நானவர்கள் மறைந்திருக்கிறதை அறிந்து, சர்வவல்லவரான - ஸ்ரீமாதவப்பிரானுக்குத் தெரிவித்த தன்மைபோல, உம்முடைய தம்பி வானரர்களைக்கொண்டு எங்களை யடிப்பித்து, மடலோடு மடல்மாறியச் சேர்த்துக்கட்டி இழுத்துக்கொண்டுபோய்ச் சஹஸ்ரகோடி கிரணங்களோடுகூடிய இளங்கதிர் சூரியனைப்போலப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற மகாவீரனை - ஸ்ரீராமமூர்த்திக்குக் காட்டி, எங்களை ராக்ஷசர்களென்று சொல்லி, மந்திரத்தினுல் நாங்கள் குரங்கல்லாமையையும் வெளிப்படுத்தினன். எங்களை ராக்ஷசர்களென்று தெரிந்துகொண்டும், அந்தவெற்றிவீரரான ஸ்ரீராமர் எங்கள்மீது பரிபூரண தயைவைத்ததினுல் நாங்களும், பிராணன் தப்பிவந்து உம்முடைய பாதங்களையடைந்தோம். மேலும், அந்த ஸ்ரீராமர் சொன்னவார்த்தைகள் இவைஇவையென்று ஒன்றும்விடாமல், விவரமாகச்சொல்லி இதுதான் நாங்கள் போய்வந்த ஒற்றுத்தொழிலின் விதமென்றுகூறிப் பின்னும் உமக்குண்டாகும் குறைவுகளும் பொல்லாங்குகளும் நீங்கி; இன்றுமுதல் தீர்க்காயுசுடையவராகக்கடவீரென்று வாழ்த்தினார்கள். அப்போது மகோதரன் ராவணனைப்பார்த்து, ஐயா! இராவணேஸ்வரா! பெரியோர்களுடைய சாபவார்த்தையைப்போல தப்பாமல் கொல்லத்தக்க வில்லைப் பிடித்துக்கொண்டிருக்கின்ற அந்த மனிதர்கள் சமுத்திரசலத்தை வேலி லணையிட்டடைத்து, வல்லமையுள்ள சேனைகளுடனே யாவருந்துதிக்கின்ற நம்முடைய ஊராவந்து சேர்ந்தார்களென்ற போதே இனிநாமாலே சித்துச்செய்யவேண்டிய செய்கையமுண்டா யிருக்கிறதாவென்று சொல்லிப், பின்னும் சொல்லுகிறன். நாம் சீதையை விட்டுவிட்டபோதிலும், தேவர்கள் ராவணன் பயந்தானென் றிகழ்வதுமல்லாமல், உம்மோடு ஸ்ரீராமலக்ஷ்மணர்களுக் குண்டான பகையை ஒழியவிடார்கள். ஸ்ரீராமன் சண்டையில் ஒருவேளைச்சிநேகமாகிறதாயிருந்தாலும், உன்தம்பியாகிய விபீஷணன் அப்படியாகும்படிவிடான். சத்துருக்கள் நம்முடைய ஊரைக்கிட்டினபிறகு அவர்கள் செய்யப்போகிற அவமானத்தை இப்படியென்று சொல்லவேண்டுமோ? நாம் படைகளுடனேபோய்ச்சமுத்திரத்தின் அக்கரையிலவாகளிருக்கும்போதே வானரர்களுடனே அந்தமனிதர்களையுங் கொன்று திரும்பி, நம்மிடம் வந்து சேரவேண்டுமென்றதை ஆலோசியாமற் போய்விட்டோம். இப்போது அவர்களிங்கேயே வந்திருக்கிறார்கள். இனி யவர்களைக் கொல்வதைவிட நமக்கு வேறே யுறுதிப்பாடுமுண்டோ? இச்சித்தது சமீபத்திற் கிடைக்கப்பெற்றால் வெகுதூரம்போய்ப் பிரயாசப்பட்டு வெற்றிகொள்ளுவதிலும் சிறப்பானதல்லவோ? திரிலோககண்டகனாகிய ஓ ராவணேஸ்வரா! ஆயிரவெள்ளமான நம்முடைய ராக்ஷசச்சேனைகள் அழியவேண்டுமானாலும் நூறூழிக்காலம்வேண்டியதாகும். நமக்குச் சேனையிலென்ன குறைச்சல்? சிங்கத்தைக்கண்ட நாய்க்கூட்டங்களைப்போலோடிவிடுமேயல்லாமல், நீகோபித்துப் புறப்படும்போது இந்த அற்பக்குரங்குகளும், உன்னெதிரே நிற்கமாட்டுமோ! அதப்படியிருக்க. நம்மோடு பகைத்து வந்தவர்களைத் தங்கள் சேனையுடனே மடங்குண்டு பெரியசமுத்திரத்தில் வீழ்ந்து சிதறுண்டோடிப் போகச் செய்யத்தக்க சேனையும், நானுமாய்ப் போய்க் கொடிய யுத்தஞ்செய்கிறவிதத்தைக் கொஞ்சம் தயைசெய்துபாரும். எனக்குத்தரவு கொடுமென்று, இந்திரனை முதுகுகாட்டியோடச்செய்த அந்த ராவணனுடைய மனம் சம்மதிப்படும்படிச்சொன்னன். அப்போது தன்புத்தி பூர்வமா யனுபவித்தறிந்த மாலியவான் சத்தியமாக நாம் கேள்விப்பட்டதைப் பொதுநெறி நிலையாகச் சொல்லித் தெரிவிப்பது நல்ல அறிவாகுமென்று நினைத்து, வேதசாஸ்திர விதிகளினுல் நிச்சயமாய்ச்சொல்லப்பட்டவஸ்துவானவர்கள் இந்த ராமலட்சுமணர்களே என்பதை விவரமாகச்சொல்லத்தொடங்கினன். அப்பா-ராவணு! நம்மிடத்தில் சண்டைசெய்கிறதற் கேற்பட்டுவந்தவீரர் சமுத்திரங்களாற்சூழப்பட்ட ஐம்பத்தாறு தேசத்திற்கும், ஏகசத்திராதிபதியானதசரதருடையகுமாரராகத் திருநாமஞ் சாற்றிக்கொண்டுவந்திருக்கிறபரஞ்சோதி ஸ்வரூபனென்றும் வேதத்தினுச்சியிலெழுந்தருளியிருக்கும் தேவதேவரான சர்வேஸ்வரனென்றுஞ் சொல்லுகின்றார்கள். அவருக்கிளையவரான லட்சுமணனா அம்பரம்பொருளுக்குச் சயனத்தலமாகிய ஆதிசேஷனென்கிறார்கள். அவர் உயர்ந்த நிலையினின்று முற்றத்துறந்து அகங்கார மமகாரமாகிய குற்றமற்ற ஜீவன்களினிடத்தெல்லாம் சேஷத்துவபாரதந்திரியமாகிற ஞானநிலையைக் காட்டுகின்றவர்களைப்போல, எல்லா ஸ்வரூபத்திலும், பரிசுத்தவானென்றதை லோகப்பிரசித்தமாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். அந்த இரண்டுவீரர்களுடைய வில்லுகளைப் பிரம்மதேவன் குலாசலங்களுடைய சத்தையெல்லாம் வேறாக வெடுத்து வில்லாகச்செய்த அந்தக்காலத்தில் அதற்கு ஏற்ற நாணி அத்திருவனந்தாழ்வானையே அமைத்திருக்கின்றதாம். பாணமாகச்செ

ய்த காலநேமியோவென்றால், ஒருவராலுக்க ணிக்க இசையாதெங்கிறார்கள். வாலியையும் அவனுக்குப் பிள்ளையாக வந்தவனையும், தேவேந்திர னெங்கிறார்கள். நீலனென்கிற வானரசேனாபதியை லோகங்களையெல்லாம், சுட்டழிக்கத்தக்க அக்கினிதேவ னெங்கிறார்கள். யமனுக்குச்சமானமான ஸ்ரீராம தூதனை,வாயு பகவானும், சாம்பசிவனுமென்கிறார்கள். மேலும், இந்த ஸ்ரீராமதூதர் இனிமேல் பிர்ம்மா வாகப்போகிறாரென்று மொருவிசேஷஞ்சொல்லுகிறார்கள். அந்தபிர்ம்மபதவியை அவருக்குக் கொடுத்தவர் இராக்ஷசர்களுடைய கருவை அறுத்துவிடுவதாக இந்தஊருக்குவந்திருக்கிற ஸ்ரீராமபத்திரரென்று எல்லாருஞ் சொல்லுகின்றார்கள். இவர்களுடைய வல்லமையைப்பார்த்து, ஒப்பிட்டுச்சொன்னார்களோ? யதார்த்தமேசொன்னார்களோ? தெரியாது, குரங்காய்வந்தவர்க ளொவ்வொருவரும் பிரம்மசிவேந்திராதி தேவர்கள் என்றார்கள். இந்தச் சமாசாரங்களைச்சொன்னவர்கள்பயத்தினால்சொன்னார்களோ? அல்லது அவர்களுடைய ஞானதிருஷ்டியினால் தெரிந்துசொன்னார்களோ? தெரியாது. சீதையைப் பிரம்ம ருத்திரேந்திராதி தேவர்களுக்கு மெட்டப்படாத பரமபத நாட்டிலுள்ள - சாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மியென்று சொல்லவேண்டுமே யல்லது, இந்த லோகத்து எளியபெண்ணென்று இகழ்வாய் நினைக்கப்படாதென்றும், மஹாபரிசுத்தமானவளென்றும், அமிர்தத்துடன் அவதரித்தவளென்றும், சர்வலோகங்களுக்கும் நிருபாதிகத்தாயானவ ளென்றும், சொல்லிக் கொள்ளுகின்றார்கள். மீன்களையுடைய சமுத்திரமாகிய அகழியாற் சூழப்பட்ட மேருசிகரமாகிய லங்காபட்டணத்திற்கு ராஜனான ராவணனுடையவரத்தை நினைத்துத், தர்மசம்ஸ்தாபனபரர்கள், தங்கள் சுயேச்சையாகவே மனிதவடிவுகொண்டு காட்டுக்குவந்ததும், தேவர்களுடைய பிரார்த்தனையால் தானென்றும் சொல்லுகிறார்கள். அப்படியே அளவில்லாத உற்பாதங்களுஞ் சம்பவித்தன வெங்கிறார்கள். சர்வஜீவர்களுக்குந் தாயைக்காட்டிலும், அதிககிருபையை யுடையவரான சீதாபிராட்டி பெழுந்தருளி யிருக்கின்ற அதிரஹஸியமான அசோகவனத்தை யறியத்தக்கவரான ஸ்ரீராமதூதரால் இந்த லங்கையைக் காத்துக்கொண்டிருந்த தேவதையானது உதையுண்டு, அந்தக்காவலைவிட்டு ஓடிப்போய்விட்டதென்றும், அதனாலேயே இந்தயுத்தமுஞ் சம்பவித்ததென்றும், சொல்லுகிறார்கள். அந்த ஸ்ரீராமருடைய அம்புக்கு லக்ஷ்யமானவர்கள் இப்போது ராஜீகஞ்செய்துவருகிற ராக்ஷசர்களெங்கிறார்கள். அப்படியென்று நம்முடைய வசத்திலிருந்த பொய்யாத நாவையுடையவனும், தேவமந்திரியான பிரகஸ்பதிக்கும் ஒருமுறைமுயர்ந்தவனுமான ; உன்தம்பியாகிய விபீஷணன் சொல்லிவிட்டுப் போனானென்றும், வெளிபரங்கமாகச் சொல்லுகின்றார்கள். இவைகளையெல்லாம் நான்கேள்விப்பட்டதுமல்லாமல் என்குலம் ஆதியில் நாசமானதும், பரம்பொருளாகிய அவனாலேதான், இதையெல்லாம் உன்னிடத்திலெனக்கிருந்த டக்ஷத்தினாலே யிவ்வியாபு ங்காரியங்களைக்குறித்து மனதில்வருத்தமுற்று உனக்குச் சொன்னேனினியாவது சீதையை விடுவாயானால் இந்தப்பொல்லாங்குவிலகிப்போய் விடுமென்றும், சொன்னதைக்கேட்டு ராவணன் மாலியவானைப்பார்த்து - நீ - சொன்னவைகளெல்லா மிருக்கட்டும், அந்தமனிதர்களும், வானரங்களும், இன்று வதைதப்பிநின்ற தேவர்களென்று சொன்னது மல்லாமல், அவர்களுக்கு நான் தோற்றுப்போவேனென்றுஞ் சொன்னாய். நீ இதுவரையில் பலசாஸ்திரங்களையும் படித்தறிந்தது யிவ்வளவுதானாவென்றிகழ்ந்து பின்னும்சொல்லத்தொடங்கினான்.

இந்தப்பேதைகளான மனிதர்களுடனே குரங்குகளல்ல, மற்றராக்ஷசர்கள் தானாகட்டும். பூலோகத்தி லுள்ளவர்கள் - நாகலோகத்தவர்கள் - சுவர்க்கலோக வாசிகள் எல்லாரும் பகைத்து, என்மேல் சண்டைக்கு வந்தபோதிலும், சீதையின்விஷயத்தி லென்றைக்கானாலும், என் வல்லமையில் தப்பிப்போய் விடுவேனோ? இந்த லோகங்களை யெல்லாஞ் செயித்தவைகளாய் என்கையில் ஒன்றல்லவே! அநேகபாணங்க ளிருக்கின்றதுகளே, அவைகளந்தஅனுமானுடைய கொடுமையிலும், அதிகமாய் முன்னாலே மிகுந்த உக்கிரமான யுத்தஞ்செய்த தேவர்களுடைய முதுகைபு மூடிருவிட்போனவைகளாச்சே? அப்படிப்பட்டதுகள், இன்று இந்தக்குரங்குகளின்மேல்செல்லச் சத்தியற்றதுகளோ? சூலாயுதத்தைக் கையில் பிடித்துக்கொண் டிருக்கின்ற பரமசிவனேயொரு குரங்காய்ப்பிறந்து வந்தாலென்ன எனக்கண்டா விடைந்துபோக வேண்டுமே யல்லாமலென்ன என்னசெய்யமாட்டுவான். பாற்கடலைக்கடைந்தகாலத்தி லுலகமெல்லாம் பயப்படும்படிப் புறப்பட்டுவந்த காலகோடிவிஷத்தையும், கவுளீகரிக்க வல்லமைகளாக்கு மென்கையில் இருக்கின்ற சூரியபாணங்கள். என்வல்லமை உனக்குத் தெரியாதுபோ லிருக்கிறது. யுத்தத்தி லெனக்குத் தோற்றுப்போன சக்கராயுதத்தனான விஷ்ணுவே? இந்தஸ்ரீராமனா

கலர்ந்து எதிர்த்தாலுந்தாவென்ன? எல்லையிலிருக்கின்ற பாணங்கள் சூரியசந்திரர்களுந் தீய்ந்துபோம்படி அதிவேகமாகச் செல்கின்றவைக ளல்லவோ? அவைகள், சமுத்திரத்தைக் கடையும்போதுண்டான கௌஸ்துபமணியோ? அவன்மார்பில் தரித்துக் கொள்ளுகிறதற்கு. வெற்றிபொருந்திய வாளாயுதத்தை புடையவர்களான தேவர்களுக்கு ராஜனுகிய இந்திரன், குரங்குருவங் கொண்டானேயானுல்; அன்றைக்குஅவனுல் பிரயோகிக்கப் பட்டவச்சிராயுத மதுக்கச் சிறகுவெட்டுண்டு நிற்க மாட்டாமல் விழுந்த அற்பமலைகளோ? என்பு ஜமலிகள் அலறலருடபடுகிறது, என்று இப்படி ராவணன் சொல்லிக்கொண் டிருக்கும்போது குலஸ்திரீகளுடையஉள்ளமேதூதாகப்போகத் தங்களுயிர்க்குச் சமானமாகிய நாயகன்மார்கள் தங்கள் சொந்தவீட்டிற்குப் போகவும், அவர்களைவிட்டுப் பரஸ்திரீகள் சோர்வடையவும், சக்கரவாகப் பக்ஷிகளுடைய வியசனங்கள் விலகவும், மேருமலையையுமூடிக்கொண்டிருந்த பிரளயவெள்ளம் வடிந்ததுபோல உலகத்தை மூடிக்கொண்டிருந்த ராத்திரிக் கழிந்து, பொழுதுவிடிந்தது. லங்காபட்டணத்தின் தன்மை யிப்படிப்பட்டதென்று எட்டிப்பார்க்கவும் பயந்து, அந்தமதிலுக்குப் பக்கமாய்த் தினந்தோறும் போய்க்கொண் டிருந்த சூரியன் இப்போது சக்கரவர்த்தித் திருக்குமாரர் யுத்தத்திற்கு வந்திருக்கிறார், நமக்கு நல்லசமயம் கிடைத்ததென்று வெகுநாளாய்க் காணமலிருந்த அந்தலங்கையைப் பார்க்கிறதற்காகப் புறப்படுகிறதுபோல உதயமானன்.

ஒற்றுக்கேள்விப் படலம்
முற்றிற்று.

---

## இலங்கைகாண்படலம்.



அப்போது ஸ்ரீராமர் அருந்ததிக்குச்சமானமாகிய சீதாபிராட்டியார், அவ்விடத்திலிருக்கின்றுரென்று மிகுந்த ஆசையுடனே சுவர்க்கலோகத்தைக் காணப்போகிறவனைப்போலத், துணைவர்களானதிருவடி-மஹாராஜர் அங்கதன் சாம்பவர்-முதலானவர்கள் சுற்றிவரவும், இளையபெருமாள் பின்தொடரவும், சுவேலா பருவதத்தின் சிகரத்தின்மேலேறி யருளினார். மிகுந்த பலவந்தர்களான வீரர்களெல்லாம் நெருங்கிச் சூழ்ந்துவரவும், சுக்கிரீவமஹாராஜரும், அங்கதனும் கைகொடுத்துக் கொண்டுவரவும், (ஸ்ரீசாருண்தவம் சோத்தாரசர்.) அதிகபலமுள்ளசிகரமும், யாளியும், புலியுஞ் சூழ்ந்து கொண்டு சரும்படியாக, உயர்ந்த பருவதத்தின்மேலுறுகின்ற ராஜசிம்ஹத்துக்குச் சமானமாயிருந்தார். மேலும் அந்த ஸ்ரீராமர் அலைமோதிப் பொங்கிச் சப்திக்கின்ற சமுத்திரஞ் சூழ்ந்த உலகமெல்லாம் மூடிக்கொள்ளுகின்ற இருளைப்போல் மொய்த்துக் கொண்டிருக்கின்ற மிகுந்த ராக்ஷசர்களுடைய நகரமும், அதன் ஐயிஸ்வரியமும், அழியச்செய்கின்ற உற்பாதத்தைக் காட்டும்படி கிரமமாய் உதயகிரியி னின்று உதித்துவராமல் இருந்தாற்போலிருந்து உக்கிரமாக வடக்கே யொரு மலையி னுச்சியில் உதித்த கருஞ்சூரியனை யொத்திருந்தார். பெரியயுத்தத்தில் மிகுந்த அஸ்திரவருஷங்களைப்பொழிகின்ற வில்லுடனே கூட அந்தச் சுவேலாசலத்தின்மேல் தாமரைகளைப் பூத்துக்கொண்டு, ஒருபெரியகாளமேகம் வந்ததுபோல ஸ்ரீகோதண்டபாணியாகிய ஸ்ரீராம மூர்த்தியானவர், திருக்கைகளும், திருவடிகளும், திருக்கண்களும், திருமுகமும், திருவாயும் பிரகாசிக்க எழுந்தருளியிருந்தார். வலியமலையையொத்த திருத்தோள்களையுடைய சக்கிரவர்த்தித் திருமகனார் பெருமைபொருந்திய தம்முடைய கோதண்ட வல்லமையினால், மகாதேவனாகிய வருணனைவரவழைத்து மலைகளால் சேதுகட்டிக் கடலைத்தாண்டிச் சுவேலாசலத்தின் மீது வானரவீரர் கூட்டத்தினடுவே, சுவர்ன்னகிரிகளுக்கு மத்தியிலிருக்கின்ற ஒரு மரகதமலையையும் ஒத்திருந்தார். பெரியசமுத்திரத்தின் மத்தியில் திருவணையைக்கண்டு; வருணனிடத்திற்கொண்ட கோபமாறிய ஸ்ரீரகுநாதர் சீதாபிராட்டியென்னுந் தமதினிய உயிர்பிரிந்தபிறகு துணைபிரிந்த அன்றிற் சேவலைப்போல வருத்தமுற்றிருந்தவர், தமதிரண்டு திருக்கண்களாலும் லங்காபட்டணத்தைப்பார்த்து இளையபெருமாளுக்கு அதன்பெருமையைக் காட்டத்தொடங்கினார். லோகத்தில் வித்துவான்கள் நம்முடைய அயோத்தியாநகரமுதலாகிய எல்லாலோகத்திலுள்ள எல்லாநகரங்களுக்கும் உபமானஞ்சொல்லிப் புகழ எற்படுங்காலத்தில், இந்திரபதவியாகிய சுவர்க்கலோகத்தைத் திருஷ்டாந்தப் படுத்துகிறார்கள். இந்தலங்காபட்டணத்தையெடுத் துவமிக்கிறார்களில்லை. அதற்கு மிதற்குமுள்ள தாரதம்மியந்தெரிய அரிதானதா லிதன்பிரபாவத்தை அவர்கள் அறியவில்லைபோலிருக்கின்றது.

சூற்றமறப்பிரகாசிக்கின்ற செம்பொற்றகடு படுத்ததலத்தில் சூரியனுங் கண்கூசத்தக்க மிகுந்த ஒளியுள்ள நவரத்தினங்களால் செய்து முடிக்கப்பட்டதுகளும், ரிஷிகளாலுஞ் சித்திரிக்கக் கூடாததுகளுமான மாளிகைகளினுடைய பொருத்தமான வேலைமானங்கள் அ

திகபிரகாசமுள்ள கிரணங்கள் சூழ்ந்ததனால் க
ண்ணுக்குத்தெரியவில்லை, விரிந்தகிரணங்களை
யுடையவைகளாகிப் பிரகாசிக்கின்ற ரத்தின
ங்களினுடைய கிரணக்கூட்டங்கள் ஆகாசவ
ளாயில் அளாவுகின்றதைப் பார்க்கும்போது
சிங்கத்துக்குச் சமானமாகியவெற்றியோடுங்கூ
டிய வல்லமையுள்ள ஆஞ்சநேயன் வைத்தநெ
ருப்பாலின்னமு மிந்த லங்காபட்டணமெரிகி
ன்றதென்றுநினைக்கும்படியாயிருக்கின்றதுபா
ர்த்தாயாலட்சுமணா? மேகங்கள்பரவிப்படர்ந்
திருக்கின்றபெரியமரகதத்தளத்தில்தங்கத்தால்
கட்டிய உப்பரிகைகளின்தழைந்தகிரணக்கூட்
டங்கள் சூழும்படியாக மத்தியில் களங்கமற்ற
வஜ்ஜிரக்கற்கள் பதித்துக்கட்டிய வீடுகள்,கொ
டிப்பாசி படர்ந்துள்ள ஒருதடாகத்தில் தாம
ரைப் புஷ்பத்தில் வசிக்கின்ற அன்னப்பட்சி
களைப்போ லிருக்கின்றதைப்பார். அக்கினிக்
கொழுந்துபோன்ற ஜோதியையுடைய ரத்தி
னங்களை யழுத்திக்கட்டிய மிகுந்த பிரகாசமு
ள்ள மேல்மாடங்கள் நெருங்கிச்சொலிக்கின்ற
படியால், கருமை நிறத்துடன் ஆகாசமார்க்க
மாய்ப்போகும்மேகங்களெல்லாம் அந்தச்சுட
ர்கள்பட்டு உலைக்களத்தில் வேவும்படிக் காய்ச்
சின இரும்புக் கொப்பாகச்செவந்து ஒளி
வீசுகிறதைப்பார். வளைந்த வில்லின்வடிவத்
தைப்போலத் திரண்டதோளையுடைய லக்ஷ்
மணா! அதோபார், கோபக்கண்ணோடுங்கூடிய
ஆனையானது இருள்படிந்த நிறத்தையுடைய
தாகவிருந்தபோதிலும், ஊரலுக்குச் சமானமா
ன பலம்பெற்றிருக்கின்ற கால் நகங்களினால்
பொற்றரையைக்கல்லிப்பேர்த்துத்தனது துதி
க்கையினால் அந்தப் பொற்புழுதியைத் தன்
னுடம்பெல்லாம் வாரி பூசிக்கொண்டு பொ
ன்மலையைப்போலப் போகின்றது. யுத்தஞ்
செய்கின்ற வில்லையுடைய இளையவனே! அ
தோபார், மிகுந்த பிரகாசத்தோடுங் கூடிய
சுவர்ன்னத்தேர்களில் கட்டியிருக்கின்ற ஒளி
யையுடைய வாழைமரங்களும், அந்தத்தேரின்
மீது கட்டிப்பறந்துகொண்டிருக்கின்ற சுவர்
ன்னக்கொடிக்காம்புகளும், ஆகாசத்தினிடத்தில்
பரவியிருக்கின்ற மேகமாகிய அழுக்கைத் து
டைத்து அந்த அகண்ட ஆகாசமாகிய கண்ணா
டியைப் பிரகாசப்படுத்துகிறதுபோலு மிருக்
கின்றது. அதுவுமல்லாமல் இந்த லங்காபட்ட
ணமானது நூல்போட்டதுபோல வரிசையா
க ஒன்றின்பக்கத் தொன்றாகச்சேர்த்து சுவர்
ன்னத்தகடுபதித்து சித்திரங்களமைத்துப் பத்
திபத்திகளாய்க் கட்டியிருக்கின்ற மாளிகைக
ளாகிய ரத்தினமணிகளுக்கு நடுவே ராவணனு
டைய மாளிகையானது நாயகப்பதக்கத்துக்கு

ச்சமானமாகி, சமுத்திரராஜன் தரித்துக்கொ
ண்டிருக்கின்ற ரத்தினமாலைபோலு மிருக்கி
றதுபார். நல்லவில்லைகமார்க்கத்தையுடைய தம்
பீ! அழகான லங்கையின் தெருத்தெருவில்
வர்ன்னத்துக்கொரு ரத்தினங்களினால் கட்டப்
பட்டிருக்கின்ற உப்பரிகைகளின் வரிசையான
நிழல் படுவதனால் தன்னுடைய சொந்தநிற
மானது தெரியாமலும், ஒருநிறத்தையாவது
சேராமலும், இன்னஜாதியானதென்று அறிய
ப்படாமலும், குதிரைகள் போகின்றதுகள்
பார். அதிக பராக்கிரமம்பொருந்திய சுத்த
வீரனே! மன்மதனுங்கண்டு புத்திமருண்டு
ஆச்சரியப்படும்படியாய் தெளிவான பளிங்குக்
கல்லால் பிரகாசிக்கத்தக்கதாகக் கட்டின உப்ப
ரிகைகள் வேறே ஒருபொருளின் சாயை படும்
போதுமாத்திரங் காணப்படுகின்றன. அப்ப
டிக்கில்லாதபோது ஆகாயத்தோ டாகாயமாய்
க் காணப்படவில்லை. அவை காணப்படுகிற
தோற்றம், ஜலத்தினாலே கட்டப்பட்டவைகள்
போல நிழலிடுகிற தன்மையுடையவைகளா யி
ருக்கின்றதுகள்பார். அம்புகோத்துவளைந்தவில்
லைப்பிடித்திருக்கின்ற அழகிய கையையுடைய
ஓலக்ஷ்மணா! வெண்மையாய்க் கூனிய சந்
திரனுடைய கிரணங்கள் பிரகாசிக்கிறதுபோ
லும் காணப்படுகின்ற ஆகாசத்தையளாவிய
முத்துப்பந்தலுக்கு மத்தியில் அலங்கரித்து
வைக்கப்பட்ட மரகத ரத்தினமானது, பாற்க
டலின்மத்தியில் சயனித்துக்கொண்டிருக்கின்ற
பரமவிராட்புருஷிருக்கு நிகராக இருக்கின்ற
துபார். மிகுந்த பலத்தையுடைய ராஜசிம்
ஹத்திற்கொப்பாகிப் தசரதகுமாரனே! சூரி
யனைப்போலு மதிக பிரகாசத்தை வீசுகின்ற
உப்பரிகையின்மீது ஒரு தேவஸ்திரீயானவள்,
கறுத்த வுறையில் நின்றும் வெளியிலெடுக்கப்
பட்ட கண்ணாடியானது ஆகாசத்தினிடமாக இ
ராகுவென்கின்றகருப்பாம்புபற்றிவிழுங்கிமறு
படியுங்கக்கினசந்திரனுக்குச்சமானமாகஇருக்
கிறதைஉற்றுப்பார். வெற்றியைக்கொடுக்கின்ற
வில்லைக் கையில்வைத்திருக்கிற வீரசிகாமணி
யே! அநேககொடிகள் நெருங்கியஉப்பரிகைக
ளுள்ள லங்கையிலிருக்கின்ற நீண்ட கழுத்
தையுடைய ஒட்டகங்கள் அந்த லங்கையினுப்
பரிகைகளில் புஷ்பங்களைப்போலப் பிரகாசிக்
கும்படியாகப் பதிக்கப்பட்ட ரத்தினங்களினி
ன்று வீசுகின்றகிரணங்களைத், தேமாவிருக்ஷங்
களினுடைய கொத்துகளாகிய தளிர்களென்று
பறித்துத் தின்னும்படியாகக் கழுத்தை நீட்டு
கின்றதைப்பார்; வெற்றிமாலையைத் தரித்தவி
ல்லைக் கையிலேந்திக்கொண் டிருக்கின்ற அதி
கபராக்கிரமமுடைய லக்ஷ்மணா! விசித்

ன்பூமாலையைநீக்கிவிட்டுதங்கள்கூந்தல்களுக்கு ஊட்டுகின்ற அகிற்புகையினால் முழுதுஞ்சூழப்பட்ட ஒரு பவளமாளிகையானது யானையுரியைப் போர்த்துக்கொண்டிருக்கின்ற பார்வதிசமேதராகிய சாம்பசிவமூர்த்தியைப்போலும், பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது பார். தசரதமகாராஜருடைய அருந்தவப் புத்திரனே ! விஸ்வகர்மாவானவன், நீலரத்தினத்தினால் அலங்கரித்துச் செய்யப்பட்ட செய்குன்றங்கள், ஒருவரும் தெரிந்துகொள்ளக் கூடாதவஞ்சகமனத்தையுடைய ராக்ஷசர்களாலே சம்பாதித்து வைக்கப்பட்ட பாபநிக்ஷேபங்களைப்போலுமிருக்கின்றவைகளைப்பார். மானைப்போல மதர்த்த தங்களுடைய பார்வையானது, விபரீதமாகும்படியாக மோகத்தினாற் பிணிப்புண்டு, சொந்தநாயகர்களைவிட்டுப் பிரிந்துவந்து, கள்ளிடையைப்போலத்ததளிக்கின்ற உள்ளத்தை யுடையவர்களும், சர்ப்பத்தின் படத்திற்குச் சமானமான அல்குலை யுடையவர்களுமாகிய ராக்ஷசஸ்திரீகள் வருஷாகாலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்ற மயில்கூட்டங்களைப்போல நம்மைப்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்பார். அகாலத்தில் பழுக்கும்படி மாதுளம்பழத்துக்குப் புகையூட்டுவதுபோல, வண்ணப்பெண்ணொருத்தி ராக்ஷசராஜஸ்திரீயினுடைய புஜங்களில் சந்தனத்தால் கோலமெழுதி அது உலரும்படி பொன்தூபமுட்டியால் அகிற்புகை யூட்டுகின்றதைப்பார். புதுமலராற்றொடுத்த மாலையைத் தரித்திருக்கின்ற வீரசிகாமணியே ! நம்முடைய சைனியங்களைப் பார்க்கும்படியாக, வீணாநாதத்திற்குச்சமானமாகிய சொல்லையுடைய தேவஸ்ரீகளும், தேவபுருஷர்களும், நமக்கு இனிவாழ்வுண்டாயிற்றென்று லங்காபட்டணத்தையெல்லாம் பாழாக்கி விட்டுப்போட்டு ஓடிப்போகிறவர்களைப்போல ஆகாசமார்க்கமாக எறிப்போகிற விதத்தைப்பார். என்று இந்தப்பிரகாரமாக லங்காபட்டணத்தை இளையபெருமாளாகிய லட்சுமணருக்குத் தாரகமந்திரவாச்சியராகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் காட்டினபோது, சுவாமி சொன்னபிரகாரம் இளையபெருமாள் திரும்பச் சொல்லுகிறதற்குக்கூடாமல், அந்த லங்கைப் பெருமையைக்கண்டு அதிசயப்பட்டுக்கொண்டிருக்கின்ற காலத்தில், லங்காதிபதியான ராவணன் வானரசைனியங்களினுடைய பெருமையைப்பார்க்கும்படியாக ஆகாசத்தையளாவிய சிகரங்களோடுக்கூடிய உத்தர கோபுரத்தின்மீதேறினான்.

இலங்கைகாண் படலம்
முற்றிற்று.

## கோபுரப்படலம்.

கட்டுங்கயிறுகளெல்லாந் தெறிக்கத்தக்கதாகக் கோபிக்கும்படியான, மத்தகஜத்துக்குச் சமானமாகிய அந்த ராவணன் சீதையினிடத்தில்வைத்த ஆசையாகிய மன்மத பாணமானது தைக்க; வாட்டமுற்றிருக்கின்ற மல்லயுத்தஞ்செய்து காய்ப்பேறிய தோள்களுடனே அநேக கவர்களையுடைய ஒருபெரியமலைபோல, உத்தரகோபுரத்தின்மீது நின்றான். சுகுமாரியாகிய சீதாபிராட்டியாருடைய அழகினாலே தளர்வடைந்து மெலிந்திருந்த அந்தத் தோள்கள். சண்டையென்று சொன்னமாத்திரத்தில் மேருமலையைக் காட்டினும், பருத்துப் பலங்கொள்ளும் படியாகக் கர்வித்திருக்கின்ற மனத்தையுடைய ராவணன். சொர்ணகிரீடங்கள் பொருந்திய தலைகள் பிரகாசிக்கவும், அழகிய பொன்மலைக்குச் சமானமாக உத்தரகோபுரம் பிரகாசிக்கவும், பிரளயகாலத்தில் உலகமுழுதும்போது உலகத்தைவிட்டு மேலேறிப்போகின்ற அநேக சிரசுகளோடுங் கூடிய சர்ப்பராஜனாகிய வாசுகிக்குச் சமானமானவனாய், பஞ்சபூதங்களோடுங் கூடிய தேகத்தையும், பத்துத்திசைகளிலும் பார்வையுற்றிருக்கின்ற பத்துதலைகளையும், மற்றப்பக்கங்களையும் மறைத்து நிழல் பரப்பிக்கொண்டு யாவர்களுமாச்சரியப் படும்படியான விசாலமாகிய குடைபிரகாசிக்கவும், பக்கங்களி னின்றுகொண்டு வீசுகின்ற வெண்சாமரக்காற்றினால் கனிந்து இருண்டு உயர்ந்திருக்கின்ற ஒருபெரியமலையின்மீது தத்திவிழுகின்ற அருவியாறுகளைப்போல நீண்டபெரிய உத்தரீயங்கள் தன்னுடைய விசயம் பொருந்திய மார்பில் அசைந்துகொண்டிருக்கவும், தேவாமிர்தத்திற்குச் சமானமாயிருக்கிற ஊர்வசியும், வாசனையுள்ளதாமரைமலர்போலப்பரிமளிக்கின்றதேகத்தையுடைய அழகியதிலோத்தமையும், சிவந்த இதழும் குயிலையொத்தசொல்லையுமுடைய மேனகையும் முதலிய உயர்ந்த ஸ்திரீகளெல்லாம் தாங்கள் தெய்வமாதர்களாயிருந்தும், ஆயிரத்திலொருகூறும் ஒப்பாகாமல் சூரியனைக்கண்ட சந்திரனைப்போல விளங்குகின்றமையால், சீதாபிராட்டியாருக்கு அழகை விளைவித்துக்கொண்டு பக்கத்தில் நின்று நிர்த்தனம் பண்ணவும், வீழிப்பழத்திற் கொப்பான இதழையும், குருத்து மூங்கில்போன்று மிருதுவான தோள்களையுமுடைய, கந்தருவஸ்திரீகளில் நன்றாய்ப் பாடத்தக்கவர்கள் பக்

கத்திற்கு ஆயிரத்தெழுபது பேர்களாக இரண்டு பக்கத்திலும் இரண்டு வரிசையாய்ச் சூழ்ந்து பாடிக்கொண்டு நிற்கவும், வாயாகிய குகையினிடத்தில் பதிந்திருக்கின்ற வளைந்தகூர்மையான மிகுந்தபிரகாசமுள்ள வாளாயுதங்களுக்கொப்பாகியபற்கள் இளஞ்சந்திரிகையை வீசிக்கொண்டிருக்கவும், குண்டலங்கள் படிந்துறைந்துகொண்டிருக்கின்ற தோள்களாகிய ஒவ்வொருமலையிடத்திலும், சப்திக்கின்ற மேகதாரைகள் சொரிந்தாற்போலமுத்துமாலைகள் பிரகாசிக்கவும், அருமையான உயிரானது தேயும்படி மனமானது சீதாசீதாவென்று கருதாநிற்கப் பலசாஸ்திரங்களைக்கேள்விப்பட்டிருக்கிற செவியாகிய வாய்கள் தேவநாத சுரங்களையுடைய வீணையினிசையினோடு நாரத மகாமுனிவர் பாடுகின்ற சாமவேத ஸ்தோமிர்தத்தை வாரிக்குடிக்கவும், கொடுமையான கையினிடத்தில் வேலாயுதத்தையுடையவர்களும், வாளாயுதத்தை யுடையவர்களும், வில்லையுடையவர்களுமாய்ச் சங்கரமூர்த்திக்கும், தோல்வியடையாத பலசாலிகளான நூறுகோடி ராக்ஷச மெய்காப்பாளர்கள் சூழ்ந்து பார்த்துக்கொண்டிருக்கவும், லோகங்களையெல்லாம்பெயர்த்து உள்ளங்கையில் தூக்கத்தக்க சக்தியையுடையவர்களும், லங்காபட்டணந்தோன்றின காலந் தொட்டிருக்கிறவர்களுமாகி,யாதொரு குற்றமுமில்லாத கணிதநூலோர்களாலே கணக்கிட்டுச் சொல்லப்பட்ட நூறுகோடி யக்ஷர்கள் பக்கத்தில் வில்லைப்பிடித்துச் சூழ்ந்து ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கவும், பூமியில் சஞ்சரிக்கின்றவர்களும், ஆகாசத்திற் பரவியிருக்கின்றவர்களும், ஜலபுஷ்களமான மேகத்தினுடைய சப்தத்தையொத்த பேரிகைகளையும், முருடென்கிற வாத்தியங்களையும், ஆகுளியென்கிற சிறுபறையையும், சந்தோஷவாத்தியங்களையும், சமுகத்துவாரத்தில் முழக்கிக்கொண்டிருக்கவும், விஷத்தையும் மேகத்தையுமொத்த விழிகளையுடைய நாகஸ்திரீகளும், பூங்கொடிக்குச்சமானமாகிய இடையையுடைய பூலோகஸ்திரீகளும், இனிய மதுரம் பொருந்திய சுவையைத்தருகின்ற சொற்களையுடைய சுவர்க்கலோகத்து ரம்பா ஸ்திரீகளுடன் சேர்ந்து - மதுரமான கானங்களைப் பஞ்சம சுதியில் பாடிக்கொண் டிருக்கவும், மேகமு மஞ்சும்படியாகக் கர்ஜ்ஜிதச் சொல்லையுடைய கட்டியக்காரர்கள் விஷத்தைக் கக்கிக்கொண்டு அக்கினி ஜொலிக்கின்ற கண்களையுடையவர்களாயும், பலநிறமுள்ள மெய்ச்சட்டையை யணிந்து கையிற் பிரம்பைப் பிடித்துக் கொண் டிருக்கின்றவர்களாயும், மேகயப்பக்ஷியையொத்த வேகத்துடனே நடந்து நான்குதிக்குகளிலும் கட்டியங் கூறிக்கொண்டு திரியவும், அஷ்டகுலாசலங்களையும், சமானஞ்சொல்லுகிறதற்குக் கூடாத விசாலமான தோள்களினிடத்துப் பூசியிருக்கின்ற கலவைச்சாந்தினுடைய பரிமளமானது ராவணன் வருகிறானென்று ஒற்றர்கள் சொல்லுவதுபோல அஷ்டதிக்குகளிடத்தும்போய்க்கமழ்ந்துகொண்டிருக்கவும், கையிற் பிரம்பையுடையவர்களும், தீப்பறக்கும்படியாக விழிக்கின்ற கண்களையுடையவர்களும், க்ஷணத்துக்கு க்ஷணம் ஒவ்வொருவகையான கோபத்தையுடையவர்களும், நகரக்காவலை விரும்புகிறவர்களுமாகிய பதினாயிரம் ராக்ஷசவீரர்கள்சூழ்ந்துகொண்டு நிற்கவும், இப்படியாக அழகிய தோரண வாசலின்மீது கருக்கொண்ட கறுத்தமேகம்போல நின்ற ராவணன் ஸ்வதப்பிரமாணவேதப் பிரதிபாத்திய வஸ்துவும், அபௌருஷேயமாகிய வேதபுருஷனாலுந் தேடிக்காண வரிதான முதற்காரணப் பொருளுமாகிய சாக்ஷாது ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியைத் தன்னுடைய இருபதுகண்களாலும் நன்று யுற்றுப்பார்த்தமாத்திரத்தில் பத்து வாய்களும் மடிந்ததுகள் இருபதுகண்களிலும் குபுகுபென்று நெருப்புப்பொறிபறந்ததுகள். அப்படிப்பட்ட சமயத்தில் அஷ்டதிக்குகளிலும், வெள்ளிடியிடித்து நெஞ்சில் கோபாக்கினியானது திகுதிகென்று பற்றி யெரிந்தது. ராவணனுக்கு இடதுகண்களும், இடதுதோள்களுந் துடித்ததுகள். இப்படிப்பட்ட துர்ச்சகுனங்கள் காணும்படியாக இக்ஷுவாகு வம்சப்பிரபுவான ஸ்ரீராமமூர்த்தியைக்கண்டு, ஆகாசமார்க்கமாய்ச் செல்லுகின்ற செவந்த கிரணங்களையுடைய சூரியன் ஒரே இராசியில் வரக்கண்டு எதிர்த்த கொடியராகுவைப்போல அதிககோபமடைந்து சாரனென்கிற ஒற்றனைப் பார்த்து, ஸ்ரீராமனுடைய வடிவழகே அவனை எனக்குத்தெரிவிக்கின்றது. மற்றச்சேனாவீரர்களை இன்னா ரின்னாரென்று தெரியக்காட்டென்று வினவச், சாரன் காட்டத்தொடங்கினான். ஐயா இராவணேஸ்வரா! அதோ இளஞ்சூரியனைப் போலப் பிரகாசித்துக்கொண்டு ஸ்ரீராமனுக்குப்பக்கத்தி லிருக்கின்றவன்தான். சூர்ப்பநகையைத்திரிலோகபயங்கரராகிய உம்முடைய தங்கையென்று கேட்டமாத்திரத்தில் பெருங்கோபங்கொண்டு, தனது அழகிய கையினிடத்தில் வாளையுருவி, உமது தங்கையாகிய மங்கையர்க் கரசியானவள் ஓவென்றலறு புலம்புப்படி முலையையும், மூக்கையும் சேர்த்துப் பிடித்து அறுத்தவனாகிய லட்சுமணன். இவன்

தருமசித்தை யுடையவனேயல்லது, அதர்ம்ம நோக்கமுடையவ னல்லாதவனுகிக் கருங்கடலைச் சக்கிரவாளகிரியானது சூழ்ந்து காத்துக்கொண்டிருக்கிறதுபோல ஸ்ரீராமனுக்கு யாதொருவருத்தமும் தோற்றாதபடிச் சகலபணிவிடைகளையுஞ் செய்து, சுவர்க்கத்தை யடைந்தபேர்களும், துறக்கக்கூடாத நித்திரைக்கதிதேவதையாகிய க்ஷாமதேவதையை ஒழிம்படியாகக் கோபித்துத் துறந்துவிட்டான். அந்த ஸ்ரீராமன் கைதொட்டுக்கொண்டிருக்கும்படியாகக்கைலாகுகொடுத்துக்கொண்டு நிற்கிறவன் தன்தமையனான வாலியோடு இந்தஅண்டங்களெல்லாம் நடுங்கும்படியாகக் கொடிய யுத்தஞ்செய்த தன்கீர்த்தியால் பிரகாசித்துக் கொண்டிருப்பவனும், சூரிய குமாரனுமான சுக்கிரீவனென்கிற நாமதேயமுடையவன். அவன் பக்கத்தில் நிற்கிறவன் அசுரர்களுக்குத் தோல்வியடைந்தவர்களான தேவர்களுடைய வாசஸ்தலமாகிய தேவலோகத் தமிர்தமுண்டாகும்படியாக மந்தரகிரியிலே வாசுகியென்கிற சர்ப்பராஜனைக் கயிறாகப்பூட்டித் தனதுபெரிய தோள்களினாலே க்ஷீரசாகர மதனம்பண்ணின வாலியினுடைய குமாரனாகிய அங்கதனென்கிற பெயரினையுடையவன். அவனைச்சேர நிற்கின்றவன் சூரியனுடைய கதிக்குமுன்பாகப்போய் அவனிடத்தில் நவவியாகரணங்களைக் கற்றுணர்ந்தவனும், இந்தப் பூலோகத்தைத் தனது தந்தத்தினால் பெயர்த்தெடுத்த ஆதிபுருஷ வராகமூர்த்திக்குச் சமானமாகிய பலத்தை யுடையவனுமாய்ச், சமுத்திரத்தைத் தாண்டி இந்தலங்கைக்குவந்த அனுமானென்கிற பெயரினையுடையவன். இவனுடைய காரியங்களையெல்லாம் முன்னாலே நீர் பார்த்திருக்கின்றீரல்லவா? இதோநிற்கின்றவன் அக்கினி குமாரனாகிய நீலனென்கிற பெயரினையுடையவன். இவனைத்தெரியாதவர்கள் பலம்பொருந்திய குலாயுதமும், பாசமும் இல்லாமல் வந்திருக்கின்ற விஷ்ணுவுக்குச் சமானமாகக் கறுத்த யமனென்றுசொல்லுவார்கள். அதோ மலைக்குச்சமானமாக பெரியஆகாரமுள்ளவன்தான் நளனென்னும் பெயரினையுடையவன் இவன்வருணன்வழிகொடுக்கவில்லையென்று ஸ்ரீராமமூர்த்தி அதிகோபங்கொண்டு, அக்கினியாஸ்திரத்தினால் கடலைச்சுட்டபோது அச்சூடாறுதற்குமுன்னே விசாலமாகிய சமுத்திரத்திலே சேதுவைக்கட்டிவழியுண்டாக்கினான். அவன் பக்கத்தே நிற்கின்றவன் மூன்றுகாலத்தையும் தன்னுடைய புத்தியினாலே முறைப்படி யறியத்தக்கவனும், தேவர்களெல்லாருஞ் சமுத்திரத்தில் விஷமுண்டாகும்படியாகக் கடைந்த அந்தக்காலத்திலும், இருந்த பெரியோனுமான கரடிப்படைக்குத் தலைவன். அவன்பெயர் ஜாம்புவனென்பார்கள். அவன் இவ்வளவுவயதாகியும் இன்றைக்குங்கூட இந்தச் சப்தலோகங்களையும் அம்மனைக்காய்போலெடுத்தெறியத்தக்க அதிகபலாஷ்டிகனாக விருக்கின்றான். அந்தச் சாம்புவனுக் கிருபாரிசத்திலும் ஒரு கரியமலையி னிருபக்கத்திலும் இரண்டுமேருமலை நிற்கின்றதுபோல நிற்கிறவர்கள் இராமலட்சுமணர்களுக்குச் சமானமானவர்களும், தேவமருத்துவர்களுடைய புத்திரர்களுமாகிய மிகுந்த பலசாலிகளாகும். அதோ நிற்கின்றானே அவன்தான் குமுதனென்று பெயருள்ளவன். அவனைச்சார்ந்து இருக்கின்றவனே குமுதாக்ஷனென்பவன். இந்தப்பக்கத்தி லிருக்கின்றானே அவன்தான் கவயன். அவனுக்குச் சமீபத்திலிருக்கின்றானே அவன்தான் கவயாக்ஷன். அதோநிற்கின்றானே அவன்தான் சிவனென்றும், பிர்ம்மாவென்றும் நாம் சந்தேகிக்கும்படி லங்கைக்குவந்த தூதனாகிய அனுமானுடைய பிதாவென்னும் வாயுதேவனுக்கொப்பாக நினைக்கத்தக்க கேசரியென்கிற நாமதேயத்தை யுடைய அதிகபலசாலி யானவன். மிகுந்த பலத்தோடுங்கூடிய தோள்களையுடைய சிங்கத்திற்குச் சமானமாக, விஷத்தையுடைய சர்ப்பராஜர்களும், ஜீவாத்தினங்களைக் கக்கும்படியாகக் கோபித்துக்கொண்டிருக்கின்றானே? அவன் அஷ்டகுலாசலங்களையும் வேரோடு பேர்க்கத்தக்க வல்லமையுடைய சரபனென்கிற நாமதேயத்தையுடையவன். அந்தப்பக்கத்தில் இருக்கிறவன் சதவலியென்கிற பெயரையுடைய வானரவீரன். இதோமூன்றுகண் ணில்லாதவனா யிருந்தபோதிலும் திரிபுரங்களைச் சுட்டெரித்த ருத்திரமூர்த்திக்குச் சமானமாக நிற்கின்றவன் பனசனென்கின்ற வானரவீரன். சண்டைக்கெல்லாந்தானென்று ஏற்று நிற்கின்றவன், இடபனென்கிற நாமதேய முள்ளவன். அவனுக்கெதிராகத் தோன்றுகின்றவன் மகாபுத்திமானாகிய சுசேஷணனென்கின்ற பெயரையுடையவன். மூங்கிற்புதருகளுள்ள மலைகளையெல்லாம் வேரோடும் பிடுங்கிப் பூமியின் கடினத்தன்மையை நீக்கி, மிருதுத்தன்மையை உண்டாக்கினவனும், வடவாமுகாக்கினியையும் குளிரும்படிச்செய்த கோபத்தையுடையவனும், சூரியகுமாரனான சுக்கிரீவனுக்கு இடதுபக்கத்திலே நிற்கின்றனுமான காளைதான் ததிமுகனென்கிற பெயரினையுடையவன். அவனுக்குப் பக்கத்தில் நிற்கின்றவன்தான் சிங்கமென்னும் படியான பலமுடைய சங்கனென்று

சொல்லப்பட்டவன். கேளுமையா ! பிரதாபலங்கேஸ்வரா; இந்த வானர சைனியங்களுக்கு எண்ணுமில்லை, எல்லையுமில்லை, ஆகாச நக்ஷத்திரங்களை இத்தனையென்று கணக்கிட்டாலும், சமுத்திரத்திலுள்ள மீன்களை எண்ணிப்பார்க்கக் கூடுமானாலும், கடல் மணலையெல்லாம் கணித்துத் தொகைதைத்த போதிலும், இந்த வானரர்கள் கணக்கி லகப்பட மாட்டார்கள். நீரே பாருமையா வென்று காண்பித்தான். அப்படிச்சாரன் சொன்னதைக்கேட்டுக் கோபங்கொண்ட மிகுந்தபலவானாகிய இராவணன் புன்சிரிப்புச்சிரித்து. ஓ சாரா! காட்டிலே வசித்துக்கொண் டிருக்கின்ற அற்பமாகிய குரங்கைப் புகழுகிறாயென்ன ? வனங்களிலும், பலமலைகளிலும், திரிந்துகொண் டிருக்கின்ற அநேக மான்குலங்கள் கூட்டங்கூடி ஒருசிங்கத்தை என்ன செய்யமாட்டும் ; அதுபோல இந்த வானரங்களெல்லாம் என்னை என்னசெய்யக் கூடுமென்று சொன்னான். அந்தச் சமயத்தில், சூரியவம்ஸோத்பவராகிய ஸ்ரீராமமூர்த்தியானவர், இராவணனுக்குத் தம்பியாகிய விபீஷிணாழ்வானைப்பார்த்து, தம்பி விபீஷிணாழ்வானே ? அதோ லங்கைக்கோட்டைக் கோபுரத்தின்பேரில் நின்று நம்முடைய சைனியங்களைக் காணும்படியாக நினைவுகொண்டு, ஆகாசமும் மறையும்படியாகக் கூடியிருக்கின்றவர்களைக் கிரமமாய், இன்ன பெயரினையுடையவ ரின்னாரென்று சொல்லக்கடவாயென்று நியமிக்க. விபீஷிணாழ்வான், சக்கிரவர்த்தித் திருக்குமாரராகிய, சுவாமீ ! ரம்பை- ஊர்வசி- திலோத்தமை முதலான ஸ்ரீகளுக்குநடுவே கோபுரத்தின் சிகரத்துமீதிலே நிற்கிறானே ; அவன்தான் தன்பந்துக்களாகிய நாற்றுக்களை யெல்லாம், நரகமாகியகழனியில் நடும்படியாக அந்நிலத்தைச் சேறுசெய்து வைத்திருக்கின்ற அற்ப கிருத்தியத்தை யுடையவனான ராவணனென்கிற பெயரினையுடையவ னென்றார்.

கோபுரப் படலம்
முற்றிற்று.

---

## மகுடபங்கப்படலம்.



விபீஷிணாழ்வான் ராவணனென்று சொல்லி, மற்றொருவனை நினைத்துச் சொல்லுகிறதற்கு முன்பாகச் சூரியகுமாரராகிய சுக்கிரீவமஹாராஜர், கண்களில் நெருப்புப்பொறி பறக்கும்படியாக அஞ்சனாதேவியானவள் ; தன்குமாரருக்குச் சூரியனைக்காட்டிச் சிவந்தகனியென்று சொன்னமாத்திரத்தில் அந்தச் சூரியன்மேற்பாய்ந்த ஆஞ்சநேயனைப்போலக் குதித்தொன்று ராவணன்பேரில் சண்டைக்குப் பாய்ந்தார். தன்னுடைய பிதாவாகிய சூரியபகவான் ஆயிரங்கிரணங்களையும் பரப்பிக்கொண்டு, உதயகிரியினிடத்திலிருந்து அந்தலங்கா கோபுரமாகிய மலையானது சிதறுண்டு போகும்படியாகப் பாய்ந்ததுபோது மென்று கண்டோர் சொல்லும்படி தேவாமிர்தம் ஒருசேரத் திரண்டு இருந்ததுபோலுள்ள சுவேதகிரியி னுச்சியைவிட்டு, ராவணனேறி நின்ற உத்தர கோபுரமானது சிதைந்து போகும்படியாகப் பாய்ந்தார். பள்ளத்தைத் தேடிக்கொண்டு போகின்ற ஜலத்தைப்போல அதிவேகமாய்ச்சென்று மேருமலையினது ஒரு சிகரமாகிய லங்கையானது முழுமையும்நடுங்கி நொறுங்கு மென்னும்படி உத்தரகோபுரத்தின்மேல் பாய்ந்த ; சுக்கிரீவமஹாராஜானவர், சமுத்திரத்திற்குச் சமானமான விசாலாக்ஷத்தையுடைய சீதாபிராட்டியார், ராவண அபகாரத்தில் பொருட்டுத்துக்கித் தழுதகாலத்தில் அந்தராவணன்மீது தனதுபுத்தி பூர்வமாகப் பாய்ந்துசென்ற ஜடாயுமகாராஜனுக்குச் சமானமானார். இப்படிச் சுக்கிரீவமஹாராஜர் பாய்ந்தபோது; ஜனனவிடாய்ப் பட்டோடிவந்தடைந்த மெய்ஞ்ஞானியர்கள்கண்டு, விடாய் தணியும்படியான நீலமேகசாமள ரூபரும், கிருபாசமுத்திர மானவருமாகிய ஸ்ரீராமபிரானைப் பார்க்கும்படியாக இமையாக் கண்களைப் பெற்று, பேறடைந்தோமெனச் சந்தோஷிப்பட்டுக் கொண்டிருந்த, ரம்பை முதலானஸ்திரீகள், மயில்கள் தாம் வசித்துக்கொண் டிருக்கிற மலையினிடத்தில் இடிவிழுந்த மாத்திரத்தில் நடுங்கிப் பறந்துபோகின்ற அந்தமயிற் கூட்டங்களுக் கொப்பாக வோடிப்போனார்கள். உதயகாலத்திருளை நாசம்பண்ணுகின்ற சூரியகுமாரராகிய சுக்கிரீவமஹாராஜர், மிகுந்தபல முள்ளவனான ராவணனுக்கு எதிராகப்போய், நீலமலைக்கு முன்னின்ற கயிலைமலைபோலவும், க்ஷீரசாகரத்தைக் கடைந்தபோது அதிற்பிறந்துவந்த ஆலகாலவிஷத்திற்கு முன்பாகநின்ற ருத்திரமூர்த்திக்குச் சமானமாகவும் நின்றார். அப்படிநின்ற சுக்கிரீவனை, ராவணன் பார்த்து, இவ்விடத்திற்குநீவந்த காரியமென்னவென்று கேட்கவும், அதற்குப் பிரதியுத்தரம் ஒன்றுஞ்சொல்லாமல் எதிரேபோய் அஷ்டதிக்குகளையும் வென்ற, உயர்ந்த பெரியதோள்களிருபதும், ஒன்றோடொன்றுபின்னிக்கொள்ளவும்,

தேகம் நடுக்கங் கொள்ளவும், அவனுடைய மார்பில் பதியும்படியாகத் தமுடைய இரண்டுகைகளாலும் மோங்கிக்குத்தினார். அந்தக் குத்தைப் பட்டுக்கொண்டு, ராவணனானவன் மிகுந்த கோபத்தோடும், ஆக்கிரமித்து நெருப்புப் பறக்கும்படியாகப் பார்த்து, பத்துத் திசைகளினிடத்தும், பிரதித்தொனி யுண்டாகும்படியாக மஹாவிருக்ஷக் கிளைகளைப்போல பக்கத்தில்தழைத்து உயர்ந்திருக்கின்ற இருபது பெரியகைகளாலு மோங்கி, இடியிடித்ததுபோலச் சுக்கிரீவமஹாராஜனை யடித்தான். அப்படியடித்தராவணன் தன்னுடையவிரல்கள் பட்டவிடத்தில், அவருடையதேகத்திற்காயப்பட்டு, ரத்தஞ்சிதறி யொழுகாநிற்கச் சஞ்சரித்துக்கொண்டு எதிரேபோய் ஒருவருடனேயொருவருடன் தாக்கும்படியாக இடித்துக் கண்களினின்றும் அக்கினி பறக்கும்படியாகக் காலினாலெற்றினான். அப்படி அவன் உதைத்துத் தள்ளினமாத்திரத்தில் குதிசென்றுபாய்ந்து கிரீடங்கள் தரிக்கப்பட்டிருந்த பத்துத் தலைகளினிடத்தும், பத்துமுகங்களிலும், சுக்கிரீவமஹாராஜர் எட்டியுதைத்தார். அப்படி உதைத்தச் சுக்கிரீவருடைய இரண்டுகால்களையும், ராவணன்பிடித்து ஒருக்ஷண நேரத்திற்குள்ளாக தேகமானது பதைபதைத்து உலைவுறும்படியாகப் பலவித சேஷ்டைகளைச்செய்து மதத்தஒருயானையைச்சிம்ஹமானதுபிடித்து அலட்டினாற்போல அலட்டி, அந்தக்கோபுர தளத்தின்மீது போட்டுத் தன்காலைக்கொண்டு மிதித்துத்துவைத்தான். அப்படி மிதித்த ராவணனுடைய பெரியதேகத்தை வேகமாய்ப்பற்றி இழுத்துத் தமது மிகுந்தபலத்தினாலே அந்தத் தளத்தின்மீது தள்ளியமுக்கி; இரண்டு கோரதந்தங்களையுடைய. வாயிற்குத்திமலைக்குகையிலிருந்தும் சொரிகின்றதுபோலவும், ஒழுகுகின்ற ரத்தத்தைக் கையினால் வாரிச் சுக்கிரீவமகாராஜர் குடித்தார். அப்படி குடித்த சுக்கிரீவமகாராசருடைய தேகமாகிய மேருமலையை அநேகபடங்களோடுங் கூடிய தலையினையுடைய சர்ப்பராஜனைப்போலப் பலகைகளினாலும் பிடித்து, மையைப்போலுங் கொடியநிறத்தையுடைய ராவணன் மிகுந்த கோபத்துடனே திக்குகளினிடத்தும், மலைகளினிடத்தும், பூமியினிடத்துமாகக் கிறுகிறென்று சுற்றினான். அப்படி சுழற்றின ராவணனுடையமார்பில், ரத்தஞ்சிந்தும்படியாகக் குத்தி, தனது பருத்துயர்ந்த பெரியகைகளைக் கொண்டு, இடுப்பைப் பிடித்துத்தூக்கி; அவன்மனதுதிடுக்கிட்டுப் பலம்-தைரியம்-கெடும்படியாகத் திரிபுரங்களை அன்று சுட்டெரித்தயுகாந்தகால ருத்திரனைப்போல அவனைக்கசக்கி லங்கைக் கோட்டையைச் சூழ்ந்த அகழியில் விட்டெறிந்தார். அப்படி அகழியில் விட்டெறிந்த சுக்கிரீவமகாராஜனை ராவணன் சீக்கிரமாகப் பாய்ந்துபிடித்து தானும் அந்த அகழியில் விட்டெறிந்தான். அவருமப்படியே மறுபடியும், குதிசென்றுபாய்ந்து; இவனை எதிர்த்து நிற்க இருவரும் ஒருவரையொருவர் விடாமல் இறுகக்கட்டிப் பிடித்துக்கொண்டு பாய்ந்து அவ்வகழியில் விழுந்தார்கள். அப்படி விழுந்தவர்களாகிய இராவணனும், சுக்கிரீவமகாராஜரும், கிறுகிறென்று சுழன்றார்கள். ஒருவரையொருவர் விட்டுப்பிரிந்து, இடசாரி - வலசாரி - வலசாரி - இடசாரியாகத் திரிந்தார்கள். ஒருவரையொருவர் காயப்படுத்தினார்கள். ஒருவருக்கொருவர் தோற்கவில்லை, ஒருவரையொருவர்விட்டு நீங்கவுமில்லை. ஒவ்வொருவரும், வீரபௌருஷ வார்த்தைகளைப்பேசி ஒருவர்மேலொருவர் பாய்ந்து ஒருவருக்கொருவர் பின்னிடையாமல் எதிர்த்து நின்றார்கள். மிகுந்தகோபங்கொண்டு தளர்ச்சி யடையாமலும், சிறிதுவீரமும் நஷ்டப்படாமலும், சமயுத்தஞ்செய்தார்கள். அப்போது சூரியகுமாரராகிய சுக்கிரீவமகாராஜர், அந்த அகழியே சமுத்திரமாகவும், தமது அழகு பொருந்திய கைகளே வாசுகியாகவும், பற்றி வலிக்கும்போது அந்தச்சுழியிலகப்பட்டுக்கொண்டு முழுகிப்போகின்ற ஜலயந்திரம்போலச்சுழலுகின்ற இரக்கமற்ற ராக்ஷசனாகிய இராவணனே மந்தரகிரியாகவும், தோன்றத்தாம்அந்தக்கிரியைப் பற்றிக் கடைந்த வாலிக்குச் சமானமாகவும் தோன்றினார். இந்தப்பிரகாரமாக ஒருவரையொருவர் காயப்படுத்திப் புண்ணில்நின்றும் ஒழுகுகின்ற ரக்தமானது ஆலையிலுடைந்த கரும்பில்நின்றும், புறப்பட்டசாறு பெருக்கெடுத்தோடுகிறதுபோலப்பெருகியோட, அவ்விருவரும் - கழுகும் - பருந்தும் - பறக்கிறதுபோல ஆகாசமார்க்கமாக எழும்பினபோது அவர்கள் கண்களில்நின்றும், புறப்பட்ட கோபாக்கினியாலே லோகமெல்லாந் தீபத்தலைப்பட்டது, விசாலமான ஆகாசத்தில் யுத்தஞ்செய்கின்ற சுக்கிரீவமகாராஜரானவர், கருமேகம்போன்ற நிறத்தையுடைய மேருமலையையொத்த கோபமுள்ளவனான ராவணனுடைய வெற்றிமாலையைத் தரித்த இருபது தோள்களினாலும், கட்டிப்பிடிக்கப் பட்டபோது, ராகுவினாலே பிடிக்கப்பட்ட பரிவேடத்தோடுகூடிய தம்பிதாவாகிய சூரியனுக்கொப்பாக விருந்தார். இந்தப்பிரகாரம்ஆகாசத்தில் மிகுந்த யுத்தஞ் செய்துக்கொண் டிருக்கிறபோது சூரிய

குமாரராகிய சுக்கிரீவமகாராஜருடைய மேனி
யைத் தனது இரண்டுதோள்களினாலே மறை
த்த மிகுந்த பலமுள்ள ராவணனென்னவன் உஷ்
ணமாகிய கிரணங்களையுடைய சூரியபகவானை
மறைத்த மேகத்திற்குச் சமானமாக இருந்
தான். அப்போது சூரியகுமாரராகிய சுக்
கிரீவமகாராஜர் பாதச்சிலம்புகள் சப்திக்கும்
படிநடந்துவந்து வேடிக்கைப்பார்த்துக்கொ
ண்டிருக்கின்ற ராக்ஷசஸ்திரீக ளெல்லாரும்
கீழேவிழுந்து கதறும்படியாகவும், பகைவர்
களாகிய்ராக்ஷசர் பெரியலங்காப்பட்டண முழு
தும் ஒடிஇளைப்படையவும், உத்தரகோபுரமா
னது தலைகீழாய்விழுந்து பொடிப்பொடியா
யிடியவும், ஸ்வர்க்கலோகத்திலிருந்து ஒருசிம்
ஹமானது தனித்துக் குதித்தாற்போல வந்
து குதித்தார். அப்படிக்குதித்தமாத்திரத்தி
ல்மிகுந்த கோபத்தோடு அதிகபலாட்டியனு
ன ராவணனென்னவன் பூலோகத்தைப் பொரு
ந்தும்படியாக வந்து விழுந்த இடியுடனே
சம்பந்தப்பட்ட மின்னலாகிய பற்களையுடை
ய ஒருபெரிய காளமேகமானது விழுந்தாற்
போல உன்னைக்கொன்று தின்றுவிடுவேனெ
ன்று அவனைப்பின்றொடர்ந்துவந்து இரண்டு
கைகளையுந் தாவிப்பிடிக்க அவனைச் சுக்கிரீவ
மகாராஜர் அதிககோபாவேசத்தோ டெதிர்த்
து, அவனுடைய இருபதுகைகளையும் சேரப்
பிடித்து, எமனும் பயப்படும்படியாகப் பூமி
யில் வாரியறைந்தார். அப்போது ராவணன்
சுக்கிரீவமகாராஜனை ஒருயந்திரப் பிரதிமை
யைத் தூக்கி யெறிவதுபோல, ஆகாசத்தில்
விட்டெறிந்தான். அவர் அதைத் தப்பித்துக்
கொண்டு ஒருபந்துதாக்குண்டு எழும்பினது
போலச் சடக்கெனப்பாய்ந்து,ராவணனை எதி
ர்த்து நின்றார். இப்படியாக அவர்கள் லங்
காபட்டணத்திலுள்ள விருக்ஷங்களெல்லாம்,
புற்பூடு நசுங்குவதுபோல நசுங்கவும், விசால
மான அந்தப் பூமிமுழுமையும் பாளம் பாள
மாகக் கிழிந்துபோகவும், கொடியகோப மு
திர்ந்து ஒருவரை யொருவர் ஒங்கிக்குத்தும்
போது பெரிய சுவர்களெல்லாம் நெக்குவிட்
டுப் பிளந்துபோய்விட்டதுகள். உயர்ந்தமலை
களெல்லாம் பொடிப்பொடியாய் நொறுங்கி
விட்டதுகள். லங்காபட்டணக்கோட்டை ம
தில்களெல்லாம் அஸ்திவாரத்தோடு இடிந்து
விழுந்துவிட்டதுகள். இவ்விருவரும்நெருங்கி
உபரப்பறக்கின்றகாற்றுடியைப்போலக்கிறுகி
றுவென்று சுழலும்போது அவர்களைப்பார்த்
துக்கொண்டிருந்த ராக்ஷசர் அந்த வேகத்தா
லே அவர்களுடையமேனியை வெண்மை கரு
மையென்று அறியாமல் கைகளைப்பிசைந்து.

றிய்றுசுற்றி இருவரும் ஒருவனைவிட்டொருவர்
பிரிந்தார்கள். அல்லது ஒருவரோ டொருவர்
சேர்ந்தார்கள் என்று தெரிந்து கொள்ளமாட்
டாதவர்களாய் ராவணனைச்சுக்கிரீவமகாராஜர்
வாரி யெறியும்போது ராவண னெறிந்தான்.
சுக்கிரீவ னெறியவில்லையென்றும், சுக்கிரீவனை
ராவணன் வாரியெறியும்போது சுக்கிரீவனெறி
ந்தான் ராவண னெறியவில்லையென்றும், சுக்
கிரீவர் ராவணனைத் தாக்கும்போது ராவணன்
தாக்கினான் சுக்கிரீவன் தாக்கவில்லை யென்
றும், ராவணன் சுக்கிரீவனைத் தாக்கும்போது
சுக்கிரீவன் தாக்கினான் ராவணன் தாக்கவில்லை
யென்றும், அவர்களுக்கெதிரே நின்றும் அவர்
களில் ஒருவரின்னாரென்று அறியாதவர்களாய்த்
தாங்கள் கற்றிருந்த மல்லுயுத்த வித்தையெல்
லாவற்றையும் இதைக்கண்டு மறந்துவிட்டார்
கள். இந்தப்பிரகாரமாக சுக்கிரீவமகாராஜரும்,
ராவணனும் யுத்தஞ்செய்துகொண்டிருந்தா
ர்கள். அவ்விடத்தில் தம்மைச் சரணடைந்த
வர்களுக்கு வேண்டியதுகளை வேண்டியபடி
அருளுகின்ற கருணாசலதியும் அதிமானுஷசே
ஷ்டிதருமாகிய ஸ்ரீராமசந்திர மூர்த்தியான
வர் தம்முடைய உயிருக்குச்சமானமான மிகு
ந்தபக்ஷமுள்ள துணைவனென்னும், சுக்கிரீவமகா
ராஜனைக்காணாததினால் வியசனமுற்று அப்பா
சுக்கிரீவா! நானினைத்திருந்த காரியங்களெல்லா
ம் இன்றைக்குடனே முடிந்துபோய் விட்ட
து என்று தன்னுணர்வுமாறி,மனக்கலக்கமுற்
றுச்சோர்ந்துசொல்லுகிறார். தம்பீ சுக்கிரீவா!
ஒருமைப்பாடான என்னுணர்வே! என்உயிர்க்
குச் சமானமாகிய துணையே! உன்னை யிழ
ந்து நான்மாத்திர மிருக்கிறதினால் எனக்கு
ஒருகாரியமுமாகமாட்டாதே! அதுவுமல்லா
மல் தேவர்களெல்லாரையும் துக்கசாகரத்தில்
மூழ்த்தி, ராக்ஷசர்களெல்லாருக்கும் வெற்றி
யைக் கொடுத்தாயே, உன்னுடைய கோபமா
னது என்னைக்கெடுத்துவிட்டதே! சீதையினு
டைய ஆபரணங்களைக்காட்டி, என்னுயிரைக்
கொடுத்த உபகாரகனே! இந்தராக்ஷசர்கள்
தெய்வத்தன்மையுள்ள அஸ்திர சஸ்திரங்களை
யுடைய மகாபலவந்தர்கள்: மேலும் மாயவஞ்
சனையிலே மிகவும் கைதேர்ந்த பாவிகளாச்
சே, அப்படிப்பட்ட துஷ்டர்கள் கையில் நீ
அகப்பட்டுக் கொண்டாயே! ஆகையால் அ
வர்களுடைய காவலைக்கடந்து எவ்விதமாய்ஒரு
வாய் நீவராமற்போவாயேயானால், இந்தப்பதி
னாலுலோகங்களையும் நான் பெற்றபோதும்,
அந்தவாழ்வோடு வாழ்ந்திருப்பேனோ! உன்
னைவிட்டுத் தனியனாய் உயிர்வைத்துக் கொண்
டிருப்பேனோ! ஐயோ! நாதொருவிதமாக

நினைக்க, என்கருமமற் றாறேன்றுப் முடிந்து விட்டதே! ஆகையினாலே இனி நான் வாழ மாட்டேன். நீ இல்லையென்கிற வார்த்தையைக் காதினாலே கேட்கவுஞ் சகிக்கக்கூடவில்லையே! உன்னை அந்தத்துர்க்குணனான ராவணன் கொன்றுவானேயானால் எப்போதும் நிலைநிற்கும்படியான பழி உண்டாகத்தக்கதாய் பெரிய யுத்தகளத்திலே என்னைக்கொன்றவனியாகிறாயல்லவோ? எங்கண்மணியே! சுக்கிரீவா! நீ இறந்துவிட்டாயென்ற சொல்லைக்கேட்டால் உடனே நானுமிறந்துபோகாமல், ராக்ஷசர்களுடைய பலவந்த சேஷ்டைகளை இந்தஉலகத்திலில்லாமல் நீக்கிப் பிறகு என்றுயிரைமாய்த்துவிடவேனானபோதிலும், இந்த ஸ்ரீராமன் தனக்கு நன்மைசெய்த சிநேகர்களான அநுமான், சாம்புவன், நளன், முதலாகிய பேர்களுடனே தன்னுயிருக்குச் சமானமாகவந்து சேர்ந்த சுக்கிரீவனை மறந்துவிட்டானே, இவனொரு சுத்தவீரனோவென்று உலகத்தார்பழிப்பார்களே! ஆகையினால் அந்தக்காரியமுஞ்செய்யமாட்டேன். நீவெகுகுரூரமான காரியஞ்செய்துவிட்டாய், பக்ஷமுந்தயையுமில்லாத எனக்கு எப்போதும்நிலைநிற்கும்படியான உபகாரஞ்செய்த உன்னைநான் ஒழித்துவிட்டுவாழலாமோ? இந்தஎழுபதுவெள்ள வானரசைனியங்களில் ஒருவராவது குறையாதபடியிருந்தவளப்பத்தையுடைய அயோத்தியாபுரியைப்போய்ச் சேர்ந்தாலல்லவோ? துக்கமற்றுச் சந்தோஷமாயிருப்பேனென்று, ஸ்ரீராமர் துக்கப்பட்டுப் புலம்பிக்கொண்டிருக்கையில் சுக்கிரீவமகாராஜரும், ராவணனும் ஒருவரையொருவர் வெற்றிகொள்ளாமலும், ஒருவருக்கொருவர் தோல்வியடையாமலும், செய்யும் கொடுமையான யுத்தத்தில் மகாபலவந்தனான ராவணனுடைய கிரீடங்களிலுள்ள ஒப்பற்ற பத்து ஜீவரத்தினங்களையும் தன்னுடைய பலத்தினாலே பற்றிப் பறித்துக்கொண்டு, அவன் செத்தவனைப்போல வெட்கப்பட்டுக்கொண்டு நிற்க, குபீரென் றுபாய்ந்து வானரசேனைக்கு மத்தியில்வந்து கூட்டமாகிய ரத்தினங்களிலழுத்த ஒவ்வொரு கிரீடங்களிலும் இருந்து பறித்த அந்தநாயக ஜீவரத்தினங்களை அழுது துக்கித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீரகுநந்தனருடைய திருவடித்தாமரைகளில் பாதகாணிக்கையாகச் சமர்ப்பித்து நமஸ்காரஞ்செய்து, சகலருக்கும் ஜீவன்வந்ததுபோல எதிரேவந்து சுக்கிரீவமஹாராஜர் நின்றார். அப்படிநின்ற சுக்கிரீவருடைய சரீரத்திற்பட்ட புண்களிலொழுகிவருகின்ற இரத்தமும், நிசசிசரியில் வசிக்கும், ராக்ஷசரைத் தின்றுவந்த இருசமுத்திர; ஸ்ரீராமர் அந்த சுக்கிரீவராகிய தம்மையப்பனைத் தம்மார்பிலே தழுவிக்கொண்டு, கருணைசாந்து மடைதிறந்து, ஒழுகுவதுபோலத் தாரைதாரையாயொழுகாநின்ற தமது செந்தாமரைமலர்போன்ற கண்ணீராலே ஸ்நானம் பண்ணுவித்து என்மனதை விசனமானது பிளக்கவும், அங்குமிங்குமாவி தடுமாறவும், சரீரம்ஸ்தம்பித்துத் தெளிவில்லாமற் திகைத்துப்போகவும், எல்லாநூல்களையுங் கற்றுணர்ந்த உன்மனது திகைத்து என்னைப்பிரிந்துபோனாயே? என்று கண்களிலே அருவிசோரச் சுக்கிரீவனைப்பார்த்துப் பின்னுஞ்சொல்லுகிறார். பெருமை - வண்மை - ஆண்மை - இவைகள், பொறுமையினாலல்லவோ ! உண்டாகின்றன, செய்யத்தகாததையும், எனக்குச் சம்பவிக்கப் போகின்ற பழியையும் மறந்து, இகபரமிரண்டையுங் கெடுக்கும்படியாய், நீ என்ன நினைத்து என்ன செய்தாயப்பா ; போனவிடத்தில் அந்தத்தையைகெட்ட பாவியாகிய ராவணன் உன்னைக் கொன்றானேயானால் பிற்பாடு நான் பிராணனை வைத்துக்கொண்டிருந்து இந்த ராட்சசர்களை வேரோடேபறித்து வெற்றிகொண்டாலுந் தோற்றவனேயல்லது ஜயித்தவனாவேனோ ! இப்போது நீ விரைவாய்வராமற் சற்றுத் தாமசித்திருப்பாயேயானால், எனக்குச் சீதையினாலேயு மிந்தப் பூமியினாலேயுங் காரியமென்ன இருக்கிறது, நீ இறந்துபோனாயென்று உன்னைத்தொடர்ந்து நான்வருவேன் ; என்னை இந்தமூன்றுலோகங்களுந் தொடர்ந்து வரும். அப்படி யாகும்படியாய் விளையாட்டிலேயே ? என்னபிழை செய்துவிட்டாய் அப்பாதம்பீ ! என்றிப்படியாக, ஸ்ரீராமபிரான்சொல்லச் சுக்கிரீவமகாராஜர் சொல்லுகிறார். சுவாமீ! தேவரீருடைய காரியத்திற்காகக் காட்டிலேகழுகரசரான ; ஜடாயு செய்ததுபோலவும், நாட்டில் - ஸ்ரீகுகப்பெருமான் செய்த நன்மைபோலவும், செய்யாமற் போனேனே? அவைகளைக் காதினாற்கேட்டவனுமல்லாதவனாய்விட்டேன். நான் உண்மையாய்க் கேட்டவனேயானால் செகந்மாதாவைமீட்டுக்கொண்டு, அந்நீசனுடையபத்துத்தலைகளையுங்கொய்துகொண்டல்லோ வருவேன், பெரியபகைமூண்டிருக்கவும், என்குரங்குப்புத்திக்குத் தக்கதாயோடி, தீராதிருக்கும்பகையைக் களையாமல்வந்தேன், என்பகையைத்தீர்த்து என்பிராணனையும், ரட்சித்துச் சகலசாம்பிராச்சியமுங்கொடுத்த உமக்கு உம்முடையபகையை உமக்கேகொடுத்தேன், இன்னம்பிராணனையும் வைத்துக்கொண்டு திரிகிறேன், திக்கஜத்தினுடைய தந்தங்களைவிட என்தோள் பலங்குறைந்து

போச்சே ? அப்படிக்குறையவில்லை யெ
ன்பேளுகில் அந்தத்துராத்து மாவிஞுடைய
மார்பில் என்கைகள் புதையும்படி குத்திவிட்
டல்லவோ வருவேன் ; உம்முடைய அம்புக்கு
முன்னேநான்போ யந்தப்பகையை யறுக்கி
றேனென்று சொன்னமனமும், நாஞும் யா
தொருதீங்கு மில்லாமலேவந்து சேர்ந்தோம்.
எல்லாச்சாஸ்திரங்களையுங் கற்றறிந்த உம்முடை
ய தூதரானவர் போயிருந்தபோது அஸ்திர
ங்களுடனே அநேககோடி ராக்ஷசர்கள் வந்
தெதிர்த்தார்கள், அவர்களை யெல்லாங் கொன்
று தமது வாலிஞுடைய பலத்தைக்காட்டி வந்
திருக்க நானந்தவூரிலே என்கால்பலத்தைக் கா
ட்ட, ஓடிப்போயோடிவந்து விட்டேனேயல்
லாமல் ஏதாகிலுஞ் சாரசியமுண்டாயிற்ளு? வெ
ன்று.சொல்லித்தமதுதலையைவளைத்துக்கொண்
டு வானராதிபதியான சுக்கிரீபர்நின்ளுர். அப்ப
டி விபசனமுற்று நின்ற சுக்கிரீவமஹாராஜ
ளைப் பார்த்து, லங்காதிபத்திய மோதிரமு
ம், மிகுந்த ஆபரணமும்பூண்ட விபீஷிணும்
வாஞுனவர் ஒருவார்த்தை சொல்லுகிளுர். அ
ந்த ராவணேஸ்வரனுடைய கிரீடமென்ளுல்,
அவன்தலைமே லிருக்கிறதன்ளே ;. அந்தத்தலை
யிலும், அது அதிகமாச்சே ? அதிலுமு
யர்ந்ததென்ன விருக்கிறது, அந்தக்கிரீடம் அ
வன்தலையைப்பார்க்கிலும், உயிரைப்பார்க்கிலு
ஞ், சிறந்ததாயிற்றே ? அவனுடைய பிரதாப
கீர்த்தியை வேரோடேபிடுங்கிவந்து விட்டீரோ!
அந்த ஆதிசேஷன் சிரோரத்தினத்தைப்பறிக்
கவேண்டிஞல் தன்காலினலே கல்லியெறிந்து
விடவல்லவன்? அந்தராவணனுடைய சிரசிலுள்
ள ஜீவரத்தினங்களைப் பறித்துவந்தீரோ; மிகுந்
த சௌரிய வந்ததிரிபுராந்தகனுலேயும் ஆகு
மா ! இதுக்குமேலானகாரியமும், வேறேயுண்
டா ! ஸ்ரீ உபேந்திர னுடைய மார்பிலே த
ரித்திருக்கிற கௌஸ்துவமணியையும், காளக
ண்டனுன சிவனுடைய சடையிலேதரித்திருக்
கிற பாலசந்திரனையும் பறித்தாலும், அந்த
ராவணனுடைய சிரங்களிலே தரித்திருக்கிற கி
ரீடங்களைப் பறித்துவந்ததே வீரியாதிக்கமா
ச்சே ? சிவன்கையி லிருக்கிறவாளை வாங்கிக்
கொண்ட இந்த ராவணனுடைய கிரீடத்தைப்
பறித்துவந்தீர்; அவனைஜயப்பண்ணுகிறதற்கு,
அஸ்திவாரம் போட்டுவந்தீரோ! வாகுவலயங்கள்
பூண்ட புஜபலமுள்ளவானராதிபதியே? என்று
விபீஷிணர் சொல்லக்கேட்டு ஸ்ரீராமர் அது
மெய்தான். இப்போதுதம்பிசெய்துவந்தகாரி
யம் கொஞ்சமா! இதுஅந்த ஆதிபுருஷிவராக
ஸ்வரூபரான; பகவான்செய்தாலென்னமோ ?
சொல்லமாட்டோமே யல்லாமல், பின்னையொ
ருத்தராலேசெய்து முடிக்கிறகாரியமா! தன்னு
டையபலத்திற்கு இது ஜயமல்லவென்றும், சு
த்தவீரர்கள் செய்யத்தக்கது இதொருநன்மை
யாவென்றும்என்னைச் சொல்லுகிளுரல்லாமல்
இது ஆராலேசெய்யச் சக்தியமென்று ஸ்ரீரா
மர் அத்தியந்த, இரக்கத்துடனே சொன்ளுர்.
அப்போது சூரியன் தன்னுடையகுமாரன் சா
மார்த்தியத்தினுலே ராவணனுடைய கிரீடங்
களைப்பறித்துவர ; அதைப்பகிரங்கமாய்க் க
ண்டு ஒன்றைவிட் டொன்ளுய் முடியப்போ
கிறதென்று அந்தராக்ஷசனுக்குப்பயந்து ஒளி
த்துப் போகிறவனைப்போல அஸ்தமானகிரிக்
கப்பால் மறைந்துபோனுன்.

மகுடபங்கப்படலம்
முற்றிற்று.

---

## அணிவகுப்புப்படலம்.

ஸ்ரீராமர் சுக்கிரீவன்செய்துவந்த ஜயத்
தை மனதில் நிறையவைத்து நினைத்து நினைத்
துத் தோள்கள் பூரித்துக்கொண்டிருக்க அப்
போதுவந்த இருளுக்கு ராவணனுடையகிரீ
டமானது கைவிளக்காய்ப் பிரகாசிக்கச், சுவே
லாசலத்தைவிட்டிறங்கித் தமதிருப்பிடம்போ
ய்ச் சேர்ந்தார். ஒருநாளு மிப்படிப்பட்ட
அவமான மடைந்தவனல்லாத இலங்காதிபதி
யான இராவணேஸ்வரன் இதைத்தேவர்கள்வந்
துநின்று கண்டார்களேயென்கிற நாணம் அதி
கரிக்கவும், ஸ்ரீகள்பார்வை அப்போது பார்த்
திருந்த புருஷர்கள் நோக்கம்போலக் கூசா
மல் பார்த்திருக்கவும், சாகாதுசெத்தவனுடை
ய அபகீர்த்தியைப்போல அந்த உத்தரகோபு
ரத்தைவிட்டு இறங்கி அவமானத்திலே குனி
க்கப்பட்ட மார்புடனே முகங்களையெல்லாம்
தலைவளைந்த தாமரைமலர்கள்போலவளைத்துக்
கொண்டு தன்னுடைய அரண்மனைபோய், ம
த்தியபானத்தையும், ஆடல்பாடல்களையும் வி
ட்டு, ஒருவருடனேயும் பேசாமல் தன்படுக்
கையிலே சேர்ந்தான். அந்தப் படுக்கையான
து திரைகளையுடைய பால்சமுத்திரம்போல
வும், அதின்பேரில் ஜீவரத்தினங்களை யிழைத்து
படுத்திருக்கிற ராவணன் பலதலைகளிலுமுள்ள
ரத்தினங்களையிழந்து தன்மீது சயனித்திருக்
கும் ஸ்ரீசாட்குண்ணிய பரப்பிரமத்தைப் பி
ரிந்திருக்கிற - ஆதிசேஷினுக் கொப்பாகவு

யிருந்தான். அப்படியிருக்கிற சமயத்தில் தா
யைப்போலத் தன்னுடைய பழகினவர்களுக்கு
ம், தன்னுடைய நிலைமை - இப்படிப்பட்ட
தென்று காட்டாத மாயவித்தையில் தேறின சா
ர்த்தூலன் பள்ளியறைவாசலில் வந்து நிற்க, கா
வற்காவலாளிகளிலொருவன் இராவணனருகேவ
ந்து, சுவாமீ! எதிராளிகளுடையசேனையிற்போ
ய்அவர்கள்காரியமறிந்துவரச்சொல்லியனுப்பி
னதூதன் வந்திருக்கிறானென்றுவணங்கிச்சொ
ல்ல, அழையென்றாக்கியாபித்தான்; அவனும்வ
ந்து வணங்கிநிற்க, அவனைப்பார்த்து அடா! நீய
றிந்துவந்த எல்லாக்காரியங்களையு மொளியா
மற் சொல்லென்று ராவணன்கேட்க, அந்தச்
சாதுரியபுத்திமானான அவன்; இராவணனு
டைய முகக்குறிப்பினாலவனுடைய மனத்தை
யறிந்து கொண்டவனாய்த் தன்சரீரத்தைவளைத்
கமாய் வளைத்துக்கொண்டு மெள்ளத் தான்போ
ய்வந்தவரலாற்றைச் சொல்லுகிறான். சுவாமீ! ப
தினேழுவெள்ளஞ் சேனைகளுடனேயும், வீர
லட்சுமணனுடனேயும், அனுமான் நம்முடை
யமேலைக்கோட்டை வாசல்அரணைக்கைப்பற்ற
வருகிறதாகவிருக்கிறது. அல்லாமலும்அங்கதன்
பதினேழுவெள்ளஞ் சேனைகளுடனே தெற்கு
வாசலைச் சாதிக்க வந்திருக்கின்றான். நீலன் ப
திநேழுவெள்ளஞ் சேனையுடனேயும், அனே
கம்படைத் தலைவருடனேயும், கீழைக்கோட்
டைவாசலில்சேர்ந்திருக்கிறான். மற்றப்பதினே
ழுவெள்ளஞ் சேனையுஞ், சுக்கிரீவனுந் தன்னை
ப்பிரியாமலிருக்கும்படியாய், வடக்குவாசலில்
நிற்கும்படிஅந்தத்தசரதபுத்திரன் குதூகலமா
கவந்திருக்கிறான். இந்தச்சேனைகளுக்கெல்லா
ம், இங்குள்ள காயுங்-கனியுஞ்சுற்றித்திரிந்துகொ
ண்டுவரும்படியாக இரண்டுவெள்ளஞ் சேனைக
ளையனுப்பியிருக்கின்றான். இந்தவாசல்கள்தோ
றுந் திரிந்து மருமங்கள் தெரிந்து சொல்லும்
படியாய், உம்முடைய தம்பியைத் திட்டம்ப
ண்ணியிருக்கின்றான். தானுந் தன்தம்பியும்
சண்டைக் கெதிர்த்துநிற்கிறதா யிருக்கின்றான்.
இதுதான் அவ்விடத்தில் நடந்தசெய்தியென்று
அந்தச்சார்த்தூலன் சொல்லக்கேட்டு, கண்களி
லெல்லாம் நெருப்புப்பொறிபறக்க, நாளையதி
னம் அவர்களுடைய சரீரங்கள் என்னுடைய
தேர்க்காலிலேநசுங்க; அவர்கள்ரக்தம் புழுதியுட
னேகூடப் பறக்கும்படியாய்ப் பண்ணிப்போ
டுகிறேன் பாரென்று, பல்லை நெறுநெறுவென்
று கடித்துச் சுக்கிரீவன் குத்தின குத்துகளினு
லே ரத்தம்பீரிட்டு அந்த ரத்தக்குறியாற் சிவ
ந்து சூரியோதயமான நிலைமையை இளவெயி
லொளி பிரகாசிக்கிறதுபோலப் பிரகாசிக்கின்ற
தோள்களையுடைய ராவணன் மன்மதபாணத்
தால் எரிக்கப்பட்டுப் புஷ்பமெத்தையைவிட்
டு வேறொரு ரத்தினசிங்காதனத்திலே போயி
ருந்து, யோசனைசெய்து அந்தந்தக்காலத்திற்
குத்தக்கப்படி யோசித்துப் பலாபலங்களை
யறிந்துசொல்லுகின்ற தன்வமிச பரம்பரை
யாய்வந்த மந்திரிகளை அழைத்துவரச் சொல்
லி ஆஜ்ஞாபிக்க, அப்படியே அவர்களு மந்த
அரண்மனைவந்து சேர்ந்தார்கள். பாலைவனத்தி
ல் கானலாகிய தங்களுடைய தேரைச் சுற்றிக்
கொண்டிருப்பதுபோல பளிங்குக்கல்லாற் க
ட்டிய ஒருபெரிய மண்டபத்தைச் சுற்றிக்கா
வல்செய்யும்படிப்பத்துக்கோடிப்பேய்க்கூட்
டங்களைவி, மிகுந்தஅறிவுள்ளவர்களான மந்
திரிகளோடு அந்தமந்திராலோசனைமண்டபத்
தைச்சேர்ந்து அவர்களைப் பார்த்துக் குரங்கு
ச்சேனைகள் எங்கும்வந்து சுற்றிக்கொண்டதே
வாசலுக்குவாசல் வானரங்களாகநிறைந்து யுத்
தத்திற்குத் தலைப்பட்டு நம்மை இன்னமும்
விடாது வருத்தப்படுத்துகின்றதுகளே; நாமி
தற் கென்னகாரியம் செய்யத்தகும் என்று
அவர்களை வினவினான். அதற்கு அவனுடை
ய அம்மானாகிய நிகும்பன் மிகுந்த கோபங்
கொண்டு கண்களில் நெருப்புப்பொறி பறக்
க இடியிடித்தாற்போலச் சிரித்து, பூமியைக்
கையாலறைந்துசொல்லுகின்றான். ஐயா, ராவ
ணா! எழுபதுவெள்ள வானரசைனியங்கள்நம்
முடைய கோட்டை மதிலையெல்லாஞ்சூழ்ந்து
முற்றிக்கை செய்துகொண்டதுகள். இப்போ
து நீ வேறென்னமோசெய்ய ஏற்பட்டாய்
போலுமிருக்கின்றது, நமக்குப் பெரியசமுத்
திரத்திற்கொப்பான ஆயிரம்வெள்ள ராக்ஷசச்
சேனைகளிருந்தும், சத்துருக்கள் கோட்டையி
ன் அரணிப்பைப் பற்றிக்கொள்ளும்படியாக
நெருங்கி, மேற்கொண்டு வந்துவிட்டார்கள்.
வளைதடி, மழுவாயுதம், தண்டாயுதம், வில்,
வாள், சூலாயுதம், என்றுசொல்லப்பட்ட பெ
ரிய ஆயுதங்களைக் கையிற் பிடித்துக்கொண்டு
நம்மிட ராக்ஷசவீரர்கள் கோபித்தகாலத்தில்
அவர்களுக்குக் கும்பிடுபோட்டுவிட்டுத்தங்களு
டைய சைனியங்களுக்கு முன்னாகத் தேவர்க
ளெல்லாம் ஓட்டம் பிடித்தார்களே! அப்
படிக்கிருக்கக் கையில் ஒரு ஆயுதங்களுமில்
லாமல் இந்தக் குரங்குப்படைகள் வெறுங்கை
யால் வெற்றிகொள்ளுவது ஆச்சரியமாகஇரு
க்கிறது. ஐயோ! காமவிகாரமல்லவோ நம்மை
இப்படி வேரோடுக்கெடுத்துவிட்டது. என்று
பின்னும் அதிக பக்ஷத்தோடு ஒருவார்த்தை
சொல்லத் தொடங்கினான். இந்த ஊருக்கு
வந்து நெருப்புவைத்து சாம்பலாக்கிவிட்டுப்
போன குரங்குக்குக்கையிலே சக்கரமுண்டா

மலைகளுக்குச் சமானமான பத்துத்தலைகளையு டையபிரதாபலங்கேசுரனாகிய உன்னுடையகிரீடத்திலுள்ள நாயக ரத்தினங்களைப் பறித்துக் கொண்டுபோனசுக்கிரீவனுக்குசூலாயுதமும்-வாளாயுதமும்- வேலாயுதமும்- உண்டாயிருந்தனவோ? இந்தஇரண்டுகுரங்குகளின்கைகளில் ஓராயுதத்தையும் கண்டோமில்லை; ஆகையால்,இனி ராமனுடைய பாணம் வரிசை வரிசையாகப் புறப்படுகிறதற்குமுன்னதாகவ்ரீகளுக்குள்ளே, அதிக உத்தமையான அந்தச் சீதையைக்கொண்டு போய்விட்டு, ஆயுதமில்லாத அந்த சேனைகளைச் சேர்ந்து பல ஆயுதங்களையு முடைய நாம் அடைக்கலம் புகவேண்டுமேயல்லாமல் அவரவர்கள் மட்டில் தப்பி யொளித்துக்கொள்ளுகிறதற்கும் வேறேவழி யிருக்கின்றதா வென்றுசொன்னான். அப்போது கண்களில் தீப்பொறி பறக்கும்படியாக மாதுலனைப்பார்த்து எனக்கு அபகீர்த்தி சம்பாதிக்கிறாய்போ லிருக்கின்றது, நீ என்மீதுபட்சமில்லாதவனாகி நமதுகுலத்தின் பராக்கிரமமுதலியவற்றை அறியாதவர்கள் சொல்லுகிற தகாத வார்த்தைகளையா சொல்லுகிறா யென்று, பின் பிறரால் நிந்திக்கப் படுகின்றவனான ராவணன் மிகுந்தகோபத்துடனே சொன்னான். அந்த நிகும்பன் பின்பொன்றும்பேசாமலிருந்தான். அப்போது ராவணன் பிரகஸ்தனைப்பார்த்து, காலகேயர் யாவரையுஞ் சம்ஹாரம்பண்ணின ஆயுதங்களையெல்லாந் தரித்திருக்கின்ற சேனாபதியே? நீஇருநூறுவெள்ளம் ராக்ஷசசேனைகளோடும், உன்பந்து ஜனங்களோடும், கிழக்குவாசலைக்காத்துக்கொண்டு நில்லென்று ஆக்கியாபித்தான். அப்படியவனுக்குஆக்கியாபித்துத், தென்திசைக்கதிபனாகியஎமனுடைய அகங்காரத்தை அடக்கின, மகோதரனை நீசீக்கிரமாகப்போய் மதத்தவீரனை மகா பாரிசனென்பவனைத் துணையாகக் கூட்டிக்கொண்டு, இருநூறுவெள்ளஞ் சேனைகளுடனே தெற்குவாசலிலே நின்று அிங்கேவருகின்ற வானரசேனைகளையெல்லாஞ் சம்ஹரித்துப் போடென்று கட்டளையிட்டு, இந்திரசயித்தைப்பார்த்து, அநுமானுடைய பலத்தை நீ அறிந்திருக்கின்றா யாகையால், இருநூறுவெள்ளஞ் சேனையுடனே பொழுதுவிடிகிறதற்குள்ளாக மேற்குவாசலிற்போய்க் காத்திருவென்று உத்தரவுசெய்து, பின்பு விருபாக்ஷனைப்பார்த்து, இதுவரைக்குந் தேவர்களை ஜயம்பண்ணிக்கொண்டிருந்த நீ குரங்குப் படைகளின்மேல் சண்டைசெய்யும்படிப் போகிறது அற்பமாகும், கீர்த்தியும் வரமாட்டாது, இருக்கிற மூலச்சேனைகளுடனும், மந்திரிகளுடனும், பட்டணத்தைக் காத்திருவென்று சொல்லிப் பிரமனுலகத்திற் கிப்புறத்திலுள்ளவர்களையெல்லாம் ஜயித்துவிட்டு வெகுநாளாகச் சண்டை கிடைக்க வில்லையே யென்று கொதித்துக் கொண்டிருக்கின்ற - யானைவீரர் - குதிரைவீரர் - தேர்வீரர் - காலாள்களாகிய இருநூறுவெள்ளஞ் சேனையுடனே வடக்குவாசலை நான் காத்துக்கொள்ளுகிறேனென்று ஆயத்தம்பண்ணினான். அப்போது இருதிறத்தாருக்கும், யுத்த அபேட்சை யுண்டாகி விரைவில் பொழுதுவிடியவில்லையென்று உதயத்தை எதிர்நோக்கிக்கொண் டிருந்தமையால் அந்தராத்திரி ஒருகற்பகாலம்போல நீளுவதாகக்காணப்பட்டது, அல்லாமலும் இனி ராட்சதர்களாலுண்டாகும், உபத்திரவங்கள் ஒழிந்துவிடுமென்றெண்ணிக் குதூஹலமாயிருக்கும் தேவர்கள், முனிவர்கள் முதலிய சாதுசனங்களுக்கும், லோகங்கள் சுகிப்பதுவே தாம் சுகிப்பதாகவும், துக்கிப்பதுவே தாம் துக்கிப்பதாகவும்,கொள்பவராகையால் ஆதிசங்கற்பத்தின்படி நிறைவேற்றக்காலம்வாய்த்ததென்றிருக்கிறஸ்ரீராமபிரானுக்கும், ஸ்ரீரகுகுலோத்தமருடையசௌந்திரியத்தில்மூழ்கி அவருடைய திருமார்பைவிட்டுப்பிரியாதகாலம் கிடைத்ததென்பதினால், ஜானகிப்பிராட்டியாருக்கும், தன்னுடையபேதைமைப் புத்தியால்மனுஷியனொன்றெண்ணி நாளைசுலபத்திலே வெற்றிகொள்ளலாமென்று அகங்கரிக்கும் ஹேயகுணசீலனாகிய ராவணனுக்கும் ஆநந்தத்தை விளைவிப்பதாகவு மிருந்தது. அப்போது பொறுமைதயை முதலிய சற்குணங்களில்லாத அதிகபலாஷ்டிகனாகிய ராவணனுடைய கொடுமைக்குப்பயந்து வெளிப்படாமல் வேதனைபட்டுக் கொண் டிருந்தகாலத்தில், இருமாப்புடையோருடைய கர்வத்தைப்போக்கிக்காக்க வல்லவரைக்கண்டு வெளிப்பட்டாற்போலச்சூரியன்உதையமானான். அப்போது ஸ்ரீராமபிரானுடைய சேனைகளும், அதிகசௌரியத்துடனே கடல்களினலைகளோய்ந்துபோகவும், ஆகாசமெல்லாம் மறைபட்டுப்போகவும், தூளிகளெழும்பும்படியாகப் புறப்பட்டுத் தங்கள் ராஜனாகிய சுக்கிரீவமஹாராஜாவி னுக்கினையின்படி அந்தந்த வாசல்களின் சமீபத்திலேபோய் லங்கையை வளைத்துக்கொண்டு அந்தக்கோட்டைமதிலைத்தாவி,ஆகாசத்தை மூடிக்கொண்டிருந்த இருளும், இச்சேனைகளினுடைய தேககாந்தியால் அழிந்துபோகவும், அண்டமும்நடுக்கமெடுக்கவும், ஆர்ப்பரித்தனகள். அப்போது சுக்கிரீவமஹாராஜனு மிளையபெருமாளும் பின்னேவர அஜசங்கரேந்திராதி தேவர்கள் தொழுது

வாழ்ந்த ஸ்ரீராமமூர்த்தியும், லங்கையை நோக்கி நடந்தார். சகலசாஸ்திரபண்டிதராலும், அளவிடக்கூடாத பலமுள்ள ராக்ஷசசேனைக் கடலை உள்ளேயுடையதாக விருந்தும், கருங்கடலாலே வெளியே சூழப்பட்டதான வானரசேனைகளால் வளைத்துக்கொள்ளப்பட்ட அந்தப் பாவியினுடைய லங்காபட்டணமானது பாற்கடல்மத்தியிலுள்ள ஒருநகரத்தைப்போலிருந்தது. ராக்ஷசசேனைகளைப்பிடிக்க வீசியவலையைப்போல் வானரசேனைகள் லங்காநகரத்தை வளைத்துக்கொண்டது. மேலும் அந்த லங்கையானது பிரளயகாலத்தில் ப்ரம்மருத்திரேந்திராதி ஆத்துமகோடிகள் தங்கியிருக்கத்தக்க மாயப்பெருமானுடைய திருவுதரம்போலவும், பிரகாசித்திருந்தது.

அணிவகுப்புப் படலம்
முற்றிற்று.



## அங்கதன் தூதுப்படலம்.

ஸ்ரீராமபிரான் இந்தப்படி அதிகசீக்கிரமாக வடக்குவாசலின் சமீபத்திற் கெழுந்தருளி, எழுபது வெள்ளஞ்சேனைகளையுடையவராய், அந்தக்கள்ளனை வரவுபார்த்துக் கொண்டேயிருந்து, அவன் வரவு காணாததினாலே விபீஷிணனையழைத்துத் தம்பீ! எனக்கொரு நல்ல யோசனை தோன்றுகிறதென்று திருவாய்மலர்ந்தருளுகிறார். இப்போது ஒரு தூதனை ராவணனிடத்திற்கு அனுப்பிச் சீதையை விடுகிறாயோவென்று கேட்டனுப்பினால், அதற்குமறுத்துச்சொல்லி அனுப்புவானாகில், அதன்மேல் யுத்தத்திற்கு ஆரம்பிக்கலாம், அதுவே என் யோசனையும், இராஜதருமமும், நீதியுமென்று கிருபாநிதியானவர் சொல்ல அந்தவார்த்தையை ராக்ஷசாதிபதியான விபீஷிணன் வாய்மேட்டுச் சுவாமீ! அழகாயிருக்கின்றதென்றார். வானராதிபதியான சுக்கிரீவமஹாராஜரும், இது இராஜதருமமே வேறல்ல; இராஜாக்களுக்குச் செய்யத்தக்கதே யென்றான். இதுகளையெல்லாம் இளையபெருமாள் கேட்டு, அவனை இராத்திரம் கேட்பது மிகுந்த எளிமையாகும், ஆகையால் இனி நாம் ராக்ஷதர்பேரில் அஸ்திரப்பிரயோகஞ் செய்வதேயல்லது, அவனையொரு பொருட்டாக எண்ணிச் சமாதானவார்த்தை சொல்லித் தூதனுப்புவது தகாதென்று மின்னையுஞ் சொல்லுகின்றார். தேஜஸ்ஸையுடைய லோகமாதாவைச் சிறையிலே வைத்ததல்லாமல் தேவர்கள், ரிஷிகள் முதலானபேர்களையும் மிகுந்த வருத்தப்படுத்தினான்; சகலஜீவகோடிகளையும், அடித்துங்கொன்றுந் தின்றுவிட்டான். சகலலோகங்களையும் ஆசையினாலே தானே ஆளுகிறான். இந்திரனுடைய சகலசாம்பிராச்சியங்களுந் தானே அபகரித்துக்கொண்டான் தருமந்தப்பினவழியே நடக்கின்றான். அல்லாமலும், சுவாமீ! தேவரீர் அளவில்லாத துக்கசாகரத்திலே முழுகியிருக்கும் படியாகவஞ்சனைசெய்து தேவியாரையும் பிரித்தான். திக்கில்லாதவராயழுதுகொண்டு போகின்ற சீதாபிராட்டியாரது துக்கத்தைச் சகிக்கமாட்டாமல், தனியாயுத்தத்திற்குவந்த உம்முடைய பிதாவாகிய ஜடாயுவையும் முன்னே கொன்றிருக்கின்றான். அப்படிப்பட்ட பாவிக்கு நாம் தூதனுப்பினால், அவன தற்கிசைந்து பிராட்டியாரை விட்டுவிடுவானேயாகில், அப்போது அவனைக்கொல்லாமல் விடவேண்டியதல்லோவரும்; அந்தப்படிவிட்டுவிட்டால் தேவரீருடைய பெருங்கீர்த்தி யிருக்கிறவாக்கும், லங்காதிபத்தியம் உனக்கென்று இவருக்குவாக்குக் கொடுத்திருக்கிறதும், வீணுக்குமல்லவோ? நீர் பண்ணினசபதம் எப்படிமுடியும், உம்முடைய அன்பினாலே அதுகளையெல்லாம் விட்டுவிடுவீராகில் இந்த லங்கையினுடைய பலத்தைப்பார்த்து இதில் நாம்பிரவேசிப்பது மிகுந்தபொல்லாங்கைத் தருமென்று அஞ்சிநின்று விட்டதென்று உலகத்திற்குத் தோன்றுமே! ஆதலால், எவ்விதத்திலும்போர்செய்வதே அதிகச்சிறப்பாகுமென்றுஞ்சொன்னார். அந்தவார்த்தையைக்கேட்ட வீரசிகாமணியாகிய ஸ்ரீராமமூர்த்தி நகைத்து ஒருவார்த்தை அருளிச்செய்கிறார். தம்பி நானென்றையு மொருபோது மறந்தவனல்லேன் பிராரப்தப்படிக்கு வந்து முடியப் போகிறது, ஆனாலும் தெரிந்தபெரியோர்கள் சொல்லியிருக்கின்ற, நீதிசாஸ்திரத்தை நீக்கிநடப்பது யுக்தமல்லவே? அதிபலசாலிகளானாலும், பொறுமையினாலேயே எந்தக்காரியமும் செய்யவேண்டும், அப்படிசெய்கிறதே ஜெயமானகாரியம், அதுதான் தருமமுமாகுமென்று அவருக்குச்சம்மதியாகும்படிச் சொன்னார். அப்படியாகச்சொல்லி, இதற்கு ஆரையனுப்புவோம், அனுமானை அனுப்பினால் இவனைத்தவிர இவ்விடத்திற்கு வரத்தக்கபேர் வேறேயில்லையென்று அவர்களுக்குத்தோன்றும், ஆகையால் அங்கேபோனவிடத்திலே அவர்கள் தங்கள் சௌரியத்தைக்காட்டினாலும், அதுகளையும் ஜயித்துக் க்ஷேமமாய்ப்போய்வரத்தக்கவன் அங்கதனென்று,

அவனை அழைத்து நம்பின்னாய்; நீ அந்தச் சத்துருவிடத்திற்குப்போய், என்னபிப்பிராயத்தைச் சொல்லிவரவேண்டுமென்று ஸ்ரீராமபிரானுர்சொன்னுர். அவரருளுப்பாட்டைப் பெற்ற அங்கதராஜனுக்குத் தோள்கள் பூரித்தன. அவனுடைய சந்தோஷ நிலைமையை இவ்வள வவ்வள வென்று கூறத் தரமாகுமோ! அவன் சந்தோஷித்துடனே எழுந்திருந்து சுவாமியைப்பார்த்து அடியேன் அந்தக்கொடியோனுன ராவணனிடஞ்சென்று யான்சொல்லவேண்டுங் காரியமென்னவென்று பரிந்து கேட்க, எவர்களும் புகழ்ந்துசொல்லும் பெருங்கீர்த்தியைப்பெறவேண்டிச் சீதையைவிட்டுப் பிழைப்பதோ? அல்லது நரகத்திற்கேதுவாகப் பத்துத்தலைகளும் பனங்காய்கள்போலச் சின்னபின்னமா யறுபட்டு மாண்டு மாய்வதோ? உன்சம்மதியென்றுகேள். விரோதமாக அவன் கோபங்கொண்டு மறுத்தானேயாகில் நாங்கள் வந்திருக்கும்போது நீ கோட்டைக்குள்ளே மறைந்திருக்கிறது தருமமல்லவே! சௌரியவந்தனுக்கிது அழகாகுமோ? அல்லது ஆண்மையாமோ? சாமார்த்தியமுமல்லவே, உனக்கு எதிரில்வந்து யுத்தஞ்செய்யச் சக்தியுண்டானுல் வந்தெதிர்க்கலாமெனச் சொன்னதாகச் சொல்லக்கடவாயென்று ஸ்ரீராமபத்திரர்சொன்னுர். அப்போது அங்கதன் சேவித்து, ஒருசிம்ஹமானது ஆகாசத்தில் தாவிப்போகிறதுபோலவும், ஸ்ரீராமபாணத்தின் விசையைப்போலவும், அதிகவேகமாய் அநுமாருக்கிரண்டாவது நீயென்றுசொல்லும்படி நல்ல வார்த்தை பெற்றேனே எனக்குச் சமானமாரிருக்கிருர்களென்கிற மகிழ்ச்சியுடனே வேலாயுதத்தையுந் தோற்கடித்து நெருப்புப் பொறி பறக்கும்படியாகப்பார்க்கிற ராக்ஷசரைச் செயங்கொள்ளும்படிக்குத் திருப்பாற்கடற்சயனத்தைவிட்டு அயோத்தியி லெழுந்தருளின ஸ்ரீராமருடைய நியமனத்தைச் சிரசாவஹித்த தூதனுன இந்த அங்கதராஜன் சூரியனைத் தாண்டிப்போகக்கூடாததும், மகமேருவிலும் உயர்ந்திருக்கின்றதுமான மதில்களையுந்தாண்டி, அந்தராவணனிருக்கிறஇடம்போய்ச்சேர்ந்தான். அவ்விடத்தி லநேக ராக்ஷசர்கள் அழுதுகொண்டு அந்தஅநுமானேவந்தானுவென்று பயந்துதொழுகின்ற பந்துக்கள் தங்களைச் சுற்றிக்கொண்டுவர தன்னிடத்திற்கு வந்து முறையிட்டுக்கொள்ளுகிற வீரர்களுடைய வார்த்தைகள் தன்னுடைய பத்துமுகங்களிலுமுள்ள செவிகளில்நுழையபத்தன்காலில் விழுகின்ற அந்தச் சேனைகளைப் பார்த்து, ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்கிற ராவணனை அங்கதகுமாரன்கண்டு, நாம் கல்பினுலும், மரத்தினுலும், இந்தச் சிறுகடலைக்கட்டினதுபெருமையென் றல்லவோ எண்ணியிருந்தோம்? இவன் பிரதாபத்தைப்பார்த்தால் இவனையும் வெல்லநினைத்துத் தைரியங்கொண்டு புறப்படுவோர்களு முண்டோ? இவன்கையி லாயுதமெடுப்பானுனுல் ஸ்ரீராமர்கையில் வில்லொன்றிருந்தாலல்லாமல் வேறேயெதிர்த்து நிற்பவர்களுமுண்டோவென்று மிகுந்த ஆச்சரியத்துடன் பிரமித்து நின்று இவனைவெல்லவேண்டுமென்று நினைக்கிறவர்கள் யுத்தத்திலே இவனைத் தோற்கடித்த என்தந்தையாகிய வாலியின் மார்பில் ஒருஅம்பெய்து கொன்றுவந்த அந்த ஸ்ரீராமர் குறித்தா லல்லாமல் பிழைத்திருக்கின்ற மற்றவராலே இவனை யேதேனுஞ்செய்யலாமோ? ஆபரணங்களில்லாமலே அழகைவிளைவிக்கும்படியான சீதாபிராட்டியார் பேரில் ஆசைவைத்திருக்கின்ற இவனைக் கொன்று இவனுடைய துராசையை அறுத்தெறியவல்லமையுள்ளவர்கள் யாரிருக்கின்றுர்கள். ஆதிசேஷன்மீதுபாய்ந்து அவனுடைய சிரோரத்தினங்களைப்பறித்துவந்த கருடனைப்போல இவன் மேற்பாய்ந்து இவனோடு மல்லயுத்தஞ்செய்து இவனுடைய கிரீடத்திலுள்ள ஜீவரத்தினங்களைப் பறித்துக்கொண்டு வந்த நம்முடைய சிறிய தந்தையே வல்லவனென்று, கிருபாநிதியாகிய ஸ்ரீராமதூதனுன அங்கதன் இப்படிப் பலவாறு நினைத்துக்கொடிய அக்கினிமயமான இடியையும், யமனையுஞ்சேர்த்து அவைகளுடனே காலகோடி விஷத்தையுங் கூட்டிச்செய்தது போலக் கிரீடங்கள்மின்ன ஒருகருங்கட லிருக்கிறதுபோல இருக்கிற சிங்கத்தையொத்த ராவணனுக்கு முன்னேபோய் நின்றுன். இப்படி எதிரே நின்றவனைப்பார்த்து காலாக்கினிபோலக் கோபத்துடனே இப்போது இங்கே வந்த நீயார்! வந்தகாரியமென்ன? இந்த ராக்ஷசர்கள் உன்னைக்கொன்று தின்பதற்குமுன்னே தெரியச்சொல்லென்று ராவணன்கேட்க, வாலிபுத்திரனுகிய அங்கதன் தந்தங்களெல்லாம் பிரகாசிக்கநகைத்து ஒருவார்த்தைசொல்லுகிறுன்.

கவி.

பூதநாயகனீர்சூழ்ந்த புவிக்குநாயகனைப்பூமேல், சீதைநாயகன்வேறுள்ள தெய்வநாயகனீசொன்ன, வேதநாயகன்மேனின்ற விதிக்குநாயகன்றான்விட்ட, தூதனுன்பணித்தமாற்றம் சொல்லிடவந்தேனென்றுன்................ *

பஞ்சபூதங்களுக்கும், சமுத்திரத்தால் சூழப்பட்ட இந்தப் பூலோகத்திற்கும், நீ பூமி

போடு போர்க்கெதிர்த்துக்கொண்டுவந்த லோகமாதாவான ஸீதாபிராட்டிக்கும், சமஸ்தலோகநாயகர்களாகிய ப்ரம்ம ருத்ரேந்திராதிதேவர்களுக்கும், நீ நாள்தோறும் ஓதிவருகின்ற வேதத்திற்கும், சகலாத்துமாக்களையுந் தன்னியமப்படி நடத்திவருகின்ற மேலாகிய விதிக்கும், ஆகிய இவைகளுக்கெல்லாம் நிருபாதிக நாயகனாயிருக்கின்ற ஸ்ரீராமநாமதாரக ப்ரம்ஹத்தினால் விடப்பட்ட தூதனுக்கொளும், நான் அவருனக்கு ஆஜ்ஞாபித்த நியமனத்தைச் சொல்லும்படியாக வந்தேனென்று, இவ்வாறு அங்கதன் சொல்லவே, அரனும் அயனும் அரியுமல்லாமல் குரங்குகளைக் கூட்டிக்கொண்டுவந்து கடலாகிய குட்டைக்கு ஒருசேதுகட்டி இன்னம் பயந்துகொண்டு உன்னைத் தூதனுப்பின நரனோ மேலோகநாயகன் என்று நகைத்து, கங்கையையும், மூன்றாம்பிறையையுந்தரித்த திரிநேத்திரதாரிக்கும், கையில் சங்குசக்கரந் தரித்த விஷ்ணுவுக்கும் முன் என்னுற்சப்பவித்ததை யறிந்தும், இந்த ஊனாவந்தடைந்த அந்த ராமன் யாராயிருந்தாலும், அவன் செய்தி யிருக்கட்டும். அந்தமனுஷனுக்குத் தூதாக இங்கேவந்து பயப்படாமலிப்படிசொன்ன நீயார், சொல்லென்று ராவணன்கேட்க, அங்கதன் நான் தேவேந்திரனுடைய குமாரனும், பூர்வகாலத்திலே ராவணனென்கிற ஒருவனை அழகான தோள்களோடுசேர்த்துத் தன்வாலிலேகட்டிக்கொண்டுமலைகளைத்தாண்டித்திரிந்தவனும், தேவர்களுண்ணும்படிக்கு மந்தரகிரியினாலே கடலைக்கடைந்து அமிர்தங்கொடுத்தவனுமான வாலியினுடைய புத்திரனென்று சொன்னான். அதைக்கேட்டு உன் தகப்பன் எனக்குச் சிநேகிதனென்கிறதற்குப்பழயகதையைச்சொன்னநீ பேசாக்ஷியாகவிருக்கின்றாய், அப்படிப்பட்டவன்மகனானநீமனுஷனுக்குத் தூதனானதைப்பார்க்கிலும், இந்தனை வேறேயுண்டா? உனக்கு வானராதிபத்தியம் நானே கொடுத்தேன் நீ அவர்களிடத்தில் விழிவடையாமல் வந்து, பெரிய உபகாரஞ்செய்தாய் வாலிக்குப் பிள்ளையாகையாலெனக்கும் நீ பிள்ளைமுறையே அல்லது வேறல்ல, தகப்பனைக்கொன்றவன் பின்னே தும்பிட்டுக்கொண்டுதிரிந்துபேதையைப் போல இருந்தாயென்கிற அபகீர்த்தியுந் தீர்த்துவிட்டாய், சீதையைப்பெற்றேன் - உன்னை என்குமாரனாகவும் பெற்றேன் இனி என்னால் என்னமுடியாதகாரியம் இருக்கின்றது, அந்தமனுஷர்கள் இன்றைக்கோ நாளைக்கோ மாண்டு போகிறதற்குச் சந்தேகமில்லை, உன் ராஜ்யம் உனக்கேகொடுத்தேன், நீ ஊழிகால பரியந்தம் அந்தராஜ்யத்தை யாண்டுகொண்டு சுகமாக இரு, தேவர்களெல்லாங் கைதொழப் பொற்சிங்காதனத்திலேவைத்து மஹாராஜாவாக உனக்கு நானே முடிசூட்டுவேனென்று ராவணன் சொல்ல, அந்த வார்த்தையை அங்கதன்கேட்டு இங்கே இருக்கிறவர்களுக்கெல்லாம் முடிவுகாலம் வந்ததென்பதை அறிந்துதானே உன்னுடைய தம்பி உங்களையெல்லாம் விட்டு எங்களிடம்வந்துசேர்ந்தான். அதைநீசுத்தமாகமறந்து உன்வாயிலே வந்ததைச் சொல்லி என்னை உன்வசஞ்செய்து நானுந்திரிலோக நாயகராகிய ஸ்ரீராமரால் விடப்பட்ட தூதனாகவந்து அரசாளுகிறது புத்திமான்களால் ஆலோசிக்கத் தகுந்ததே, மேலும் சிங்கமானது நாய்கையில் மகுடாபிஷேகம் பெற்றதுபோல உன்னால் நான் அரசாட்சி பெறுவேனேயானால் இதற்குச்சமானமாகியது வேறென்ன இருக்கின்றதென்று கைகொட்டித் தன்னுடைய மார்புந் தோளும்லங்கைப்பட்டணமுழுதுங்குலுங்கும்படிக்குக் கெக்கலிகொட்டிச் சிரித்தான். அப்போது ராவணனுக்கு அங்கதனைக் கொல்லத்தக்க கோபம் பொங்கித் தங்களாயுசுமுடிந்த மனுஷனை நம்பிச்சாகத்துணிந்திருக்கிறகுரங்கே நீவந்தகாரியத்தைச் சொல்லென்று சொல்ல, அதைக்கேட்டு அங்கதன் சொல்லுகிறான். ஸ்ரீராமசுவாமி என்னை அழைத்துநீபோய் தன்னுடைய குலத்தையெல்லாங் கொல்லுகிறதற்கேற்பட்ட பாவியாகியும், யுத்தத்திற்குப்பயந்து கோட்டைக்குள்ளே பதுங்கியிருக்கின்றவனுமானராவணனைச்சீதாபிராட்டியைவிடுகிறையா, இல்லாவிட்டால்போர்செய்துபிராணனைவிடுகிறயாவென்றுகேட்டறிந்துவரும்படியாகக் கிருபைநிறைந்த மனமுடையவராகச் சொன்னார். அதுவுமல்லாமல் பருந்துக் கிரையாகும்படி உன்பாட்டியாளைக் கொன்றபோதும் அநேக சேனையுடனே உனக்குத் தேவாமிர்தத்தைக்காட்டிலும் சிறப்புற்ற அம்மானைக்கொன்றநாளிலும், ஆரணியத்திலேவந்து உன்தங்கை சூர்ப்பநகையினுடைய மூக்குமுலையையும் எங்களிளையபெருமான் அரிந்தநாளிலேயும் வாராதநீ இனி ஆண்மையுங்காட்டப் போகிறாயா? பந்துக்களோடும் அநேக ராக்ஷசக் கூட்டத்தோடும் உலகத்திற்குக் களைபிடுங்கினதுபோலக் கரதூஷணர்களான உன்தம்பிமார்களைக் கொன்றதைப்பார்த்திருந்தும் வராதவனீ. மேலும் இளையபெருமாளைப் பிரியும்படியாக வஞ்சனைசெய்து சீதையைக்கொண்டுபோன வக்கிரதந்தங்களையுடைய ராக்ஷசனான நீ யுத்தத்திற்கு வருவாயா! அநுமார்வந்து சீதையைக்கண்டு எதிரேவந் தெதிர்த்த ராக்ஷசர்களை யெல்லாம் காலால் எற்றிவிட்டு உன்பிள்ளை அக்ஷதனையும்

தலையில்போட்டுத் தேய்த்துவிட்டு,உன் ஊரிலேயும் நெருப்புவைத்துக் கொளுத்தி, நீயும் பார்த்திருக்கவே கடலைத்தாண்டி வந்திருக்கச் சேயுங் கூடத்தொடர்ந்து வரமாட்டாத நீசெய்யுஞ்சண்டையுமொன் றிருக்கின்றதோ? உன் இனத்தாராகிய சுகசாரணர்களுக்குப்பிராண பிரதிஷ்டை கொடுத்து அவர்களுடைய கள்ளத் தன்மையையும் அறிந்து, அவர்களாலுனக்குப் புத்திசொல்லி அனுப்பினபோதும், வருணன்வந்து எங்களாண்டவராகிய ஸ்ரீராமனை வணங்கினபோதும், உன்தம்பிக் கிலங்காதிபத்தியங் கொடுத்தபோதும், சமுத்திரத்தை அடைத்து அணையிட்டபோதும் வராத உன்னுடையஆண்மைக்குமொருசிறப்புண்டா?தேவர்களும், உன்மீது ஆசைகொண்டிருந்த ஸ்திரீகளும் பார்த்துக்கொண்டிருக்க, என்சிறியதந்தையாகிய சுக்கிரீவமஹாராஜாவாலே கிரீடங்களைப்பறிகொடுத்தும், யுத்தத்திற்கு வராதவன் நீ, இனி உன்வீரத்தைப்பற்றி யென்னசொல்லப்போகிறேன். நெஞ்சில் கொஞ்சமும் தயவில்லாத உன்னை உன்குலத்துடனே கொன்றபோதும், அதனால்தனக்கொருகீர்த்தியுமில்லையாம், அவ்வளவுஇழிவான நிந்தைக்குட்பட்டாய்; எல்லாருந் தூஷிக்கிற துவிஜையானது, உன்னைச்சூழ்ந்துக் கொள்ளும்படி உன்னூரை நாங்கள் வளைந்துகொண்டும், வெளியே வராமல் பதுங்கிக்கொண் டிருக்கின்றாய்; நீ திக்குவிஜயம்பண்ணினகீர்த்திவரவர நஷ்டமாய்ச்சிறந்துவருகின்றதுஎன் றிப்படிப்பலவாகச்சொல்லிப்பின்னும்,அங்கதன் ராவணனைப்பார்த்து எங்களாண்டவர் ஆக்கியாபித்தருளினபடி உனக்கு நன்மை வேண்டுமானால் எங்கள்சீதாபிராட்டியாரைக் கொண்டுவந்துவிட்டுச் சுவாமியைவணங்கிச்சுகமாய்வாழ்ந்திரு,அப்படிக்கில்லாமல் உன் பந்துக்களுடனே நீயும் போர்க்களத்தில் மடிந்துபோக வேண்டுமென்கிற எண்ண முனக்கிருக்குமானால், ஸ்ரீராமர் உன்னுடைய கோட்டைவாசலில், கையும் - வில்லுமாக உன்வரவை எதிர்பார்த் திருக்கின்றார். என்பின்னாலேயே வா? வருணமண்டலத்திலும்,அக்கினிமண்டலத்திலும்,பூமண்டலத்திலும், சுவர்க்கலோகத்திலும், உண்டானவீரர்களையெல்லாம்,போர்க்களத்திலேதோற்றுப்போகும்படி ஜெயம்பெற்றநீ இப்போது இலங்கையிலொளித்துக் கொண்டு அதைமங்கும்படிச்செய்வாயானால்,யாவருக்கும்பழியாய்விடும்,என்று அவனுடைய மனம் உளையும்படிச்சொல்லக்கேட்டமாத்திரத்தில், ராவணன் அங்கதனுயிர் முழுதையும்வாரி யுண்டுவிடுகிறவனைப்போல மிகுந்த கோபமுள்ளவனாகி நான்கு மகாவீரர்களான இராக்ஷசர்களைப் பார்த்து, இவனைப்பிடித்து மூளை சிதறிப்போகும்படிப் பூமியிலறையுங்களென்று ஏவினான். அந்தப்படியே அவர்கள்வந்து பிடித்தார்கள். பிடித்தமாத்திரத்தில், அவர்கள் நாலுபேர்களையுந் தூக்கிக்கொண்டு ஆகாசமார்க்கத்தி லெழும்பி அவர்கள் தலைகளறுந்து அந்த ராவணனுடைய கோபுரவாசலில் வந்து விழும்படி கொக்கரித்துக்கூவி - அவர்களைக் காலினாலே துவைத்து - ஒருவார்த்தைசொல்லுகின்றான். ஓ இராக்ஷசர்களே ? ஏழைகளான நீங்கள்யாவரும்,ஸ்ரீராமரால்விடப்பட்ட கொடியபாணம் தகதகாயமாய் மின்னலைப்போல வருவதற்கு முன்னமே ஓடிப்பிழையுங்களோடிப்பிழையுங்களென்று, ஆரவாரித்துச் சொல்லிக்கொண்டுஆகாசமார்க்கமா யெழும்பிப்போய்ச் சந்திரன் பூமியிலிறங்குவதுபோ லிறங்கி, ராவணனுடைய பாதாரவிந்தத்தில் வணங்கித் தெண்டன் சமர்ப்பிக்க அங்கதனைப் பார்த்து, ராவணனென்னுங் கொடியோனுடைய அபிப்பிராயமியாதோ ! அவையெல்லாந் தெரியச்சொல்ல வேண்டுமென்று, ஸ்ரீராமர்கேட்க, சுவாமீ ! அதுகளைச் சொல்லுவதாலுண்டாகிற சாரமென்ன, அந்தமூர்க்கனுடைய பத்துத் தலைகளையு மறுத்துத்தள்ளினா லல்லாமல் அவன் சீதாபிராட்டிமேல்வைத்த ஆசைமாறாதென்று அங்கதகுமாரன் சொன்னான்.

அங்கதன் தூதுப்படலம்
முற்றிற்று.

## இராவணன்முதனாள்உயுத்தப்படலம்.

பின்னும் அங்கதகுமாரன் வானரப்படைத் தலைவர்களைப்பார்த்து, இனி யுத்தஞ்செய்வதே காரியமல்லாமல் வேறோர் யோசனையில்லை, திசைகளெல்லாம் பேரிகை முழக்கியதுபோல நம்முடைய பாடிக்கூடார வாசல்கள்தோறும்போய், எல்லாருக்கும் யுத்தமென்று தெரியச்சொல்லுங்கள் - மலைகளும் - மரங்களும் பிடுங்கிவந்து, முன் சமுத்திரத்தைத் தூர்த்துப் பழகினகைகளினாலே, லங்கைக்கோட்டைக்கு அரணாயிருக்கின்ற அகழிகளைத்தூர்த்துப்போடுங்கள், ராக்ஷசர்களையெங்குந் திரியவொட்டாமல் பலவிருக்ஷங்களால் அடித்து அவர்களையுத்தத்திற்கு வரச்சொல்லி அழையுங்கள். சூரியனானவன் மேற்றூண்டிவராத அவன்கோட்டை

மதில்களைப்போய் இற்ற க்ஷணமே பிடித்துக்கொள்ளுங்களென்று, இப்படி பலவாறு ஆஜ்ஞாபித்தமாத்திரத்தில், பெரியமலைகளையும், மரங்களையும், பிடுங்கிக்கொண்டு புறப்பட்ட சிங்கங்களையொத்த வானரசேனைகள், முதலைகளெல்லாம் ஓடிப்போகும்படியாகவும், அதில் உள்ள ஜலமெல்லாம் மேலேறியோடிவிடவும், தலையிட்டுக்கொண்டு அந்தலங்கையின் அகழியைத்தூர்த்துவிட்டதுகள். இப்படி எழுபதுவெள்ளம், வானரசேனைகளும், எட்டாங்கடல் போன்ற அகழியைத் தூர்த்தமாத்திரத்தில் அதிலேஇருந்ததண்ணீரெல்லாம் அந்தவானரங்களுக்கு உதவிசெய்வதுபோலப் பொங்கிவழிந்து அந்தக் கோட்டைவாசல் வழியாய்ப்போய் லங்காபட்டணத்தைமூடி வளைந்துக்கொண்டது. அநேகவானரங்கள் ஜெயப்பிரதாபசாலியான அந்த ராவணனுடைய பெருங்கீர்த்தியை வேருடனே பிடுங்குகிறதுபோல விசாலித்துத்தழைந்து மலர்ந்த தாமரைக்கொடிகளை வளையங்களுடனே பிடுங்கிக்கொண்டதுகள். அதிலே நீலோற்பல புஷ்பங்கள் குவிந்தது எப்படியிருந்ததென்றால் நிந்தைக்குப் பாத்திரவானான ராவணனுடைய புகழானது அவனுடனேகூட அழிந்துபோய் விடுகின்றதே! என்று அந்த அகழி கண்ணைமூடிக்கொண்டு அழுகிறதுபோலிருந்தது. தாமரைகளெல்லாம் பிடுங்குண்டுபோனபடியினாலே, அதிலே இருந்தவண்டுகளெல்லாம் பறந்துபோய் விட்டதுகள். அன்னங்களெல்லாம் முட்டைகளைத் தங்கள்வாயிலே கவ்விக்கொண்டு பறந்து ஓடிவிட்டதுகள். வல்லிசையாய் ராகங்களைப் பாடுகிறவண்டுகள் மொய்த்திருக்கின்ற, கமுகு-தெங்கு-முதலிய பனைகளின் பாளையிலுள்ள பூந்தாதுகளுதிர்ந்திருக்கின்ற நீர்நிறைந்தபள்ளங்களிலுள்ள தாமரைமலரினிடத்து வாளைமீன்கள் தாவும்படியாக, வானரவீரர்கள் ஓரிடத்திலிருந்து வேறோரிடத்திற் குதித்துப் பாய்ந்தார்கள். கூட்டங்கூட்டமாக பெரிய விருக்ஷங்களும், மலைகளும், பூந்தாதுகளும், மேல்மேலுமடர்ந்து அகழியில்விழுந்து நெருக்குகிறபடியாலும் அதிலுள்ள நீரெல்லாம்மேலேறி பலஆறுகளாய்ச் சமுத்திரத்தின்மேல் பாவியோடினது. அந்தஆறுகள் கடலில்விழுமிடங்கள்தோறும், அங்கங்குத் தோன்றுகின்ற நீர்ச்சுழிகளில் சுழிந்துமுழுகி மேலெழுகின்ற தாமரைப் புஷ்பங்கள், சமுத்திரஜலத்தில் ஸ்நானம்பண்ணி மேலெழும்புகின்றஸ்திரீகளுடையமுகத்தை யொத்திருந்ததுகள். எல்லாமேன்மைகளையு முடையவனான, ராவணனுடைய புராதனமாகவிருந்த அகழியே வானரக்கூட்டங்களால் தூர்ந்துபோகும்படியானகாலம்வந்துநேரிட்டதானால் இனி மற்றவர்களுக்கு பலத்திற்கும், பாக்கியத்திற்கும், தரித்திரத்திற்கும், ஒருநிதமுண்டாகுமா! அப்படி அகழியைத்தூர்த்த வானரசேனைகள் அந்த அகழிக்கரையை இடித்துத் தகர்த்துவிட்டு, அந்தக்கோட்டைமதில் முழுதையும், தாங்களேறி நடக்கிறதற்குத்தக்க ஒருவரப்பாக்கிக்கொண்டு, அதின்பேரில்நின்று சப்தசாகரமும், சப்தமேகமும், கலங்கும்படி கர்ஜ்ஜித்ததுகள். அந்த வானரசேனைகள் சக்கிரவாள கிரியைப்போல வளைந்து அண்டமுகட்டை அளாவியிருக்கின்ற அந்த மதிலின் மேலேறி ஆகாசத்தைத் தொட்டுக்கொண்டிருக்கிற சிலவானரங்கள் - அந்த மதிலுக்கு அலங்காரமாகக் கட்டியிருக்கிற அநேக வெள்ளைக் கொடிகளைப்போலக் காணப்பட்டதுகள். அளவில்லாத ரத்தினங்களாலும், சுவர்ணங்களாலும், இயற்றப்பட்ட மேருமலையைப்போ லிருக்கின்ற கோட்டைமதில், தன்னை ஒருவரு மிடிக்கவேண்டாமலே இந்த வானரவீரர்கள் ஏறிநிற்கிறதைச் சுமக்கச் சக்தி யில்லாமல் தானே பூமியி லழுந்திப்போய்விட்டது. அப்போது - ராக்ஷசர் முரசறைந்துகொண்டு புறப்பட்டார்கள். அவர்கள் ஆனைமேலேறிப் பிடித்துவந்த கொடிகளால் ஆகாசம் மறைந்து விட்டது. ராக்ஷச சேனைகள் மிகுந்த ஆர்ப்பாட்டத்தோடு புறப்பட்டதனால் எழும்பிய சேனுபராகம் அஷ்டதிக்குகளிலும் போய்ப் படிந்ததுகள். அந்தச் சேனைகள் சண்டைக் கென்று புறப்பட்ட பேரோசையானது சுவர்க்கலோக பரியந்தம்போய் அளாவினது. சங்கங்கள் தொனித்ததுகள். அவர்க ளணிந்துகொண்டிருந்த ஆரங்க ளொலித்ததுகள். நிர்த்தனம்பண்ணிக்கொண்டு வருகின்ற குதிரைகள் அனுமானித்ததுகள். தேர்களில் கட்டியிருக்கின்ற மணிகள் கோஷித்ததுகள். யானைகளெல்லாம் பெருங்கூட்டமாகவும், அதிகவேகமாகவும் நடக்கின்றமையால் அதனிரண்டுபக்கங்களிலுங் கட்டியிருக்கின்ற மணிகள் கணீர்கணீரென்று ஒலித்ததுகள். அந்தச்சமயத்தில் வெகுகாலமாக விருத்தியடைந்திருந்த ராக்ஷசகுலமாகிய அரிஷ்டங்களெல்லாம் அழிந்துபோகவும், மற்றத் தேவர்கள் - மனிதர்கள் - வானரர்களெல்லாம் வாழ்வடையவுந்தக்க க்ஷேமமான காலத்தை விதிகொண்டுவந்து காண்பிக்க, வானரசேனாசமுத்திரம் அதிக மனவூக்கங்கொண்டு, ராக்ஷச சேனாசமுத்திரத்தோடு கலந்து, ஒன்றோடொன்று எதிர்த்தது. வானரசேனைகள் தங்கள் வாய்ப் பல்லுகளையும், உயர்ந்த குன்றுகளையும்,

பெரியமலைகளையுமே தமக்கு ஆயுதங்களாகக் கொண்டு போர்செய்யப்புறப்பட்டதுகள். ராக்ஷசசேனைகள் வில்லாயுதம்-நீளமானவேலாயுதம்-சூலாயுதம்- வாளாயுதம்- முசலாயுதம்- சக்கராயுதம் முதலான அநேகமான ஆயுதங்களைக் கொண்டு சண்டைக்குப்புறப்பட்டு ஒருவரோடொருவர் யுத்தஞ்செய்யத்தொடங்கி,வானரங்கள் விட்டமலைகளை ராக்ஷசர்கள் அம்புகளால் பொடிசெய்தார்கள். அந்தராக்ஷசர்களுடைய அம்புகளை வானரர்கள் விருக்ஷங்களால்சாடித் துண்டுதுண்டாக்கினார்கள். அந்தவிருக்ஷங்களை ராக்ஷசர்கள்விட்ட உதிரந்தோய்ந்து செக்கச்செவேலென்று பிரகாசிக்கின்றவேலாயுதங்கள் நொறுங்கிவிட்டதுகள். வானரவீரர்களெறிந்த மலைகளால்வஞ்சகர்களான ராக்ஷசர்களுடைய தலைகள்சிதறி, அவர்கள் நாக்கில்வழியாயும், செவியில்வழியாயும், மூக்கின்வழியாயும், தலைமூளைகள் வழிந்து சரிந்தன. கன்னங்கறேலென விளங்குகின்ற ராட்சசவீரர்கள் விட்ட அம்புகள்பட்ட புண்களில் ரத்தங்கள் வடிய, பற்களெல்லாந்தகர்ந்து தங்கள் கையில்பிடித்திருக்கிற மலைகளோடு அநேக வானரங்களுருண்டுபோயின. லங்கைக்கோட்டை மதிளின்மே லேறியிருந்த வானரவீரர்கள் வீசியெறிந்த மலைகள் ராட்சசர்களின் உடல் மீது, மலைகளின்மே லிடிவிழுந்ததுபோலத் திடமொன்று விழுந்து அவர்கள் பிராணனைப் பறக்கடித்துவிட்டதுகள். நெருப்பைப்போலெரிந்துகொண்டிருக்கின்ற குரூரப்பார்வைகளையுடைய அரக்கர்கள் கைகளையுதறி வீசியெறிந்த வேலாயுதத்தினால் எதிர்த்துவந்த வானரங்களுடைய தேகங்கள் கோட்டைமதிலுக்குப் புறம்பில் மண்ணுக்குள் புதைந்துபோய்விட்டதுகள். வானரவீரர்க ளதிகோபங்கொண்டு அநேகராட்சசர்களைக்கடித்தும், குத்தியும், கையாற் கழுத்தைப்பிடித்துத் தமது நீண்ட நகங்களால் இருபிளவாகப்பிளந்தும், அறைந்தும், காலினாலுதைத்தெறிந்தும், கொன்றுவிட்டதுகள். ராட்சசர்கள் சஸ்திரங்களைத்தொட்டும், அஸ்திரங்களை விட்டும், இருப்புலக்கை-தண்டாயுதம்-முதலானவைகளால் மோதியும், வேலாயுதத்தைக்கொண்டு தேகத்தில் அழுத்தியும் சண்டைசெய்தபடியால் வானரங்கள் கூட்டங்கூட்டங்களாக மடிந்துபோனதுகள். ரத்தத்தினாலே தோயப்பட்டிருக்கிற அந்தப் பொன்மதிலானது பவளத்தினாற் கட்டப்பட்ட மதில்போன்றிருந்தது. ரத்தமானதுபிணமலைகளை யிழுத்துக்கொண்டு உப்புச்சமுத்திரத்தில்போய்விழும்படிபிரவகித்தது. ஆகாசமுழுவதும் கழுகு பருந்து முதலான பக்ஷிகள் படர்ந்து பறந்துகொண்டிருந்தபடியினாலே, அதுலங்கையை மறைத்து ஒருபந்தலிட்டது போலவிருந்தது, அதனால் இந்திரனுக்கும் லங்கைக்குள் நுழையக்கூடாமல் திரும்பிப் போகத்தக்கதாயிருந்தது.கொள்ளிவாய்ப் பிசாசத்துடனே அநேககவந்தங்கள் அந்த ரத்தவெள்ளத்தின் நடுவில் இருபட்சத்தாரினுங் கூத்தாடினதுகள். இந்த ரத்தக்கடலில் பக்ஷிகள் முழுகி ஆகாசமார்க்கத்தில் பறக்கிறபடியினால் அந்தத்துளிகள்பட்டு லங்கைப்பட்டணத்தில் கட்டியிருந்த கொடிகளுடைய பலநிறங்களும் போய் எல்லாம் செந்நிறக்கொடிகளாய் விட்டதுகள். ரத்தவெள்ளமானது லங்கைக்கோட்டை மதிளுக்கு மேற்பட்டுப் பொங்கிவழிவதினாலே வானரசேனாசமுத்திரம், பாற்கடலானது மேருமலையின்மேலேறிஇறங்கிவருவதைப் போலஅந்தமதிலைவிட்டிறங்கியோடிவிட்டதுகள்.நடுக்கங்கொண்டராக்ஷசசேனை வெள்ளம்மதிலினுண்மேடைகளிலும், மதிலின்மேலும்,மதிலுறுப்புகளிலும், கோட்டைவாசல்களிலும், நிலாமுற்றமாகிய அட்டாளங்களிலும், இன்னும் லங்கைப்பட்டண முழுவதிலுமுள்ள மேட்டுப்பாங்குகளிலும்போய் நிறைந்ததுகள். இப்படி ராட்சசசேனைகள் நெருங்கி நிறைந்திருப்பதைக்கண்டு வானரசேனைகள் ரத்தக்கடலிற் குதித்து நீந்தும்போது, அதிகநெருக்கத்தால் நீந்தமாட்டாமல் அதில் அமிழ்ந்தும், நீந்திக் கையோய்ந்து விழுந்து மிவ்வாறோடத் தொடங்கின.வானரசமுத்திரம்ஓட்டம்பிடிக்கவேராக்ஷசர்கள் கெக்கலிகொட்டிக்கொண்டு மூன்று லோகங்களையும் அழிக்கும்படியாகப் புறப்பட்ட மகாபிரளயகாலசமுத்திரம்போலச்சப்தித்ததுகள். அந்தராட்சசர் முழக்கிக்கொண்டுவந்த பேரிகை முழக்கமும், முருடுவாத்தியசப்தமும், சங்கவாத்தியநாதமும், தாளவாத்தியத்தொனியும், அவரவர்களுடைய வில்களின் குணடங்காரமும், ஒன்றாகக்கூடி சமுத்திர ஓசையை மயங்கும்படிச்செய்துவிட்டன. அப்படிப்பட்ட சமயத்தில் எல்லாலோகங்களையுஞ் சிருஷ்டித்த பிரம்மதேவருடையநான்கு முகங்களினின்றும் நான்குநதிகள் புறப்பட்டதுபோல ராட்சச சேனாசமுத்திரங்கள் ஆகாசத்தைத் தொட்டுக்கொண்டிருக்கின்ற லங்கைக்கோட்டைக் கோபுரவாயில்களின் வழியாய்ப் புறப்பட்டுச் சுற்றிவளைத்துக்கொண்டதுகள். பூமித்துவாரத்தின் வழியாக பெரியமலைகள் எழும்பிவருவதுபோல துதிக்கைகளில் கொடிமரங்களைப் பிடித்து, எட்டுதிக்குகளிலும் வீசிச்சுழற்றிக்கொண்டு கொடியோடு கொடி சிக்கிக் கொள்ளும்படி யாகவும், பிடித்துக்

கொண்டுவருகிற கொடித்தண்டுகள் முறியும்படியாகவும், பூமியி லூன்றிக்கொண்டு வந்ததுகள். அந்தயானையில் மதநீர்களால் அவ்விடங்களெல்லாஞ் சேறுகி அதில் ஊழிக்காற்றைப் போல் ஓடுகின்ற ரதங்களால் அச்சேறுகாய்ந்து புழுதியாகிவிட்டது. வானரவீரர்களா லிடிக்கப்பட்ட மதில்களைப் புடைவையாகவுடைய லங்கைப் பட்டணமாகிய பெண்ணானவள் வாரிக் குடித்து அதைச் சகிக்கமாட்டாமல் மறுபடியும் கக்குகின்ற பெரிய கடலினுடைய அலைகளைப்போலக் குதிரைகள் கோட்டைவாசல்வழியாகப் புறப்பட்டதுகள். ராவணனுடைய ஆக்கினையாலே சூரியன் லங்கைக்குள் பிரவேசியாதபடியால், பூமியில் பந்துக்களானவர்கள் ஒருவரோடொருவர் சேருமுறைப்படி தினந்தோறும்வந்த ராக்காலமானவைகள் பந்தியாக லங்கைப்பட்டணத்தில் ஓரிடத்திலிருந்து மறுபடியுந் திரும்பிக் கோர்வையாக வருவதுபோல ராட்சசக்காலாள்கள் புறப்பட்டார்கள்.

இப்படிப்புறப்பட்ட ரதகஜதுரக பதாதிகளான சேனைகளின்காற்றூளி பூமியைச்சுமந்துகொண்டிருக்கின்ற ஆதிசேஷனுடைய வரிசையான ஆயிரந்தலையினுடைய சுமை குறையும்படியாகப்பறந்து, சுவர்க்கலோகத்தின் மேல்முகடு முழுவதையும், அண்டபித்திகையின் புறப்பக்கத்தையும், அஷ்டதிக்குகளின் வெளிப்புறத்தையும் போய்த் தொத்திக் கொண்டு, மறுபடியுங் கீழேஉதிராமலிருந்துவிட்டது. அந்தராக்ஷசர்கள் இப்படிநெருக்கக், குரங்குச்சேனைகள்குலைந்துபோய், யுத்தஞ்செய்கின்ற ஆசையினால் உண்டாகிய செருக்குடனே நிற்கிற சூரியகுமாரரான சுக்கிரீவமஹாராஜனிடத்திற்றுப்போய்ச் சேர்ந்ததுகள். தன்சேனைகள்சாய்ந்து தளர்ந்ததையும், கர்ஜ்ஜித்துக்கொண்டுவந்த ராக்ஷசசேனையினுடைய பெருமையையும் பார்த்துக் கோபாக்கினியுடனே அங்கேயிருந்த ஒருமராமரத்தைக்கையில் எடுத்துக்கொண்டு புகுந்து - ஆனை - குதிரை - தேர்- பதாதிகளான நால்வகை ராக்ஷச சேனைகளுக்கெதிரே, ஒவ்வொருத்தருக் கொவ்வொருவராக நெருங்கி முன்னாலே தோரணக் கம்பத்திலிருந்து, அடித்தவ னிவனென்று நினைக்கும்படியாக அந்த ராக்ஷசர்களுக்குக் காணப்பட்டு, ஆனையுங், குதிரையும், ராட்சசர்களுந், தேர்களும் முறுமுறும்படியாகவும், அவர்களுடைய ரத்தவெள்ளத்தால் தன்கையிலிருக்கிற மராமரமானது, தனதுவெள்ளைநிறந் தோற்றாமல் சிவந்தநிறமாம்படி குளிக்கவும், கிறுகிறென்று வீசி அடித்தார். அப்போது வானரகுலவீரர்கள், தம்மரசனுக்கெதிரில் சண்டைக்குவந்த ராட்சசர்களுடன் பெரும்போர் செய்யத்தொடங்கி, மலைகளைப்பிடுங்கிஅரக்கர்மேலெறியஅதனால்அவர்களில் அநேகம்பேர்நசுங்கிமடிந்தார்கள். இராக்ஷசர்கள்விட்ட அம்புகள் பட்டுஅநேக வானரர்களும் இறந்தார்கள். அப்போது ரணகளத்தில் பேய்க்கூட்டங்கள் பாடத்தொடங்கினதுகள். கவந்தங்கள்கூத்தாடினதுகள். ரத்தவெள்ளங் கடலைக்கிழித்துக்கொண்டோடினது. பதிவிரதா சிரோன்மணிகளானஸ்திரீகள் யுத்தக்களத்திற்குவந்து தங்கள் தங்கள் நாயகன்மார்களுடைய சரீரங்களைத்தேடத் தலைப்பட்டார்கள். அல்லாமலும் அதிக உக்கிரமான கோபத்தையுடைய வானரவீரர்களால், தங்களாயுள் முடிந்தராக்ஷசர்களுடைய ரக்தவெள்ளமோடுகின்ற ரணகளமானது வெறுங்களமாம்படித் தப்பியுயிரோடிருந்த ராக்ஷசர்கள் சண்டைக்கு ஆற்றமாட்டாமல் ஓட்டம்பிடித்தார்கள்.

அப்போது வச்சிரமுஷ்டியென்கிற ராட்சசன் தங்கள்சேனை பின்னிடையவே ? அதிக கோபத்துடனேகடலிலோடுகின்றகப்பல்போலத் தேனைப்பருந்துக் கூட்டங்கள் பின்றொடரும்படி முழக்கிக்கொண்டுவந்து எதிர்த்து அந்தவானரங்கள்பேரிலே சரமாரிகளாகப் பொழிந்து சின்னபின்னமாகும்படிச் செய்தான். அதுகண்டு இந்திராதிதேவர்கள் மனந்திகைத்தார்கள். அப்போதுசுக்கிரீவமகாராஜர் மனது நொந்து அவனுடையதேரும், அதில் வெகுவிசித்திரமாகக் கட்டியிருக்கின்ற குதிரைகளும், அவனும் பொடிப்பொடியாய்ப் போகும்படியாகப்பாய்ந்து குதித்து, அவன்கையிலிருந்த வில்லையும், அம்பறாத்தூணியையும் பிடுங்கியொடித்து, அவனுடையசரீரத்தைச் சிதைத்துவிட்டுப் போய்விட்டார். அந்தப்படியாக ஒருபெரியமலையானது அழிந்ததுபோல, வச்சிரமுஷ்டியென்கின்றவன் மரணமடையவே, மற்ற ராட்சசர்களெல்லாம் நிற்கமாட்டாமல் நிலைகுலைந்து ஊரைப்பார்த்தோடத்தலைப்பட்டார்கள். அப்படியோடுகிறதைக்கண்டு அங்கிருந்த வானரர்கள் சமுத்திர கோஷம்போலே ஆர்ப்பரித்துக் கொக்கரித்தார்கள். இவர்களிங்கே இப்படியிருக்க, கிழக்குவாசலிலே புறப்பட்டு, வீழிப்பழம்போலச்சிவந்த குரூரமான கண்களையுடைய ராக்ஷசர்கள் பிரளயகாலசமுத்திரம்போலப் புறப்படக்கண்டவானரவீரர்கள் தங்களோடு மாறுகொண்டெதிர்த்த பகைவர்களான இராக்ஷசர்கள்மேல்பகைத்து, யுத்தஞ்செய்யத் தலைப்பட்டார்கள். விஷத்தை யொத்த அந்த ராக்ஷசர்கள் - சூலம், வாள், தோமரம், வாளா, சக்கரம், அம்பு முத

லான ஆயுதங்களை- சேனை - மழையைப்போல இடைவிடாமல் அவரவர்கள் கைகளால்சோர்வடையாமல் பொழியவே ? அதனால் சிலவானரங்கள் வாலுங் காலும் அறுபட்டுத் தறிபட்டுக் குறைபட்டு முறையிட்டு மடிந்தனுகள். வெற்றிபெற்ற சிலவானரவீரர்கள், வீசியெறிந்த மலைகளும், மரங்களும், உகாந்தகால நமனைப்போலப் போய்விழுந்தமாத்திரத்தில், அநேகராக்ஷசர்க ளிறந்தார்கள். குதிரைகளும், யானைகளும், தேர்களும் விழுந்து நாசமாயின. அப்போது மற்றராக்ஷசர்கள் மிகவும் கொதித்து ஆக்கிரமித்துப் பராக்கிரமத்தோடு, தண்டு - வாள் முதலான படைகளினாலே சிதைக்க, வானரசேனைகள் சரீரங்கள் கிழிபட்டுச், சல்லடைக்கண்களாகக் குழிபட்டு, ரத்தப் பிரவாகமாய் நிற்கமாட்டாமல் ஒட்டமெடுத்தார்கள். அந்தச்சமயத்தில், அக்கினிபுத்திரனுகிய நீலன் - அங்கு அண்டமளாவும்படியாக நீண்டு - பருத்துஉயர்ந்திருந்த ஒருபெரியமராமரத்தை அதிவேகமாய்த் தனது பலம்பொருந்திய கைகளினால் வேரோடே பிடுங்கிக்கொண்டுவந்து ராக்ஷசப்பூண்டுகள் கூண்டோடழிந்து சின்னுபின்னமாகும்படிப் பிரளயகாலாக்கினியைப்போல அடித்தான். அந்த மராமரத்தா லடியுண்டு அநேகந்தேர்கள் - தேர்த்தலைவர்கள் - யானைகள் - யானை வீரர்கள் - குதிரைகள் - குதிரைவீரர்கள், அல்லாமலும், அந்த ராக்ஷசர்கள் தங்கள் தேர்களில் கட்டிவந்த சிங்கங்கள் - யாளிகள் - பூமியிலே விழுந்து மடிய ரத்தப் பிரவாகம் எங்கும் பிரவகித்தோடிச் சமுத்திரத்தில் விழுந்து நிறைத்தது. அவ்வாறுமடிந்த ராக்ஷசர்கள்போக மற்றவர்கள் ஒட்டமெடுத்தார்கள். அவ்விராக்ஷசச்சேனைத் தலைவனுன கும்பானுவென்பவன் ; அதிககோபத்துடனே தன்கை வில்லில் அஸ்திரங்களைப் பூட்டிப் பிரயோகித்தமாத்திரத்தில், அந்தஅஸ்திரங்கள் எண்ணிறந்தனுகளாய்ப் பிரவேசித்துப்போய் அநேக வானரங்களைத் துண்டந் துண்டமாகத் துணித்து விட்டனுகள். அப்போதங்கிருந்து பார்த்துக்கொண்டிருந்த சேடிக்குத்தலைவனுன இடும்பனென்பவன் ; ஒரு பெரியபர்வதத்தை தனது புஜபலத்தினுல் உக்கிரமாய்ப்பேர்த்துக் கையிலெடுத்துக்கொண்டு கும்பானுவுக்கெதிராகவந்துகுதித்து அவன் பிரயோகஞ்செய்த அந்த அஸ்திரங்கள் நெருங்கி வருகிறதற்கு முன்னமே, அவனுடைய கொடிகளும், வில்லும், அம்பும், தேரும், தேரிற்பூட்டின குதிரைகளும், நாசமடையவும், சிங்கங்கள் அழியவும், அந்தப்பர்வதத்தினுல்எறிந்தான் உடனே கும்பானு மேகத்தில்நின்றும்,இடியானது பாய்ந்ததுபோலப்பூமியிற்குதித்துவிளக்கும்படியாகப்பாய்ந்து, வானரங்களெல்லாம், புறங்காட்டியோடும்படி யுத்தஞ்செய்து இடும்பன்மார்பிலே ஓங்கியொருகுத்துக்குத்திக்கொக்கரித்தான். அப்படிக்குத்தி எதிரேநிற்கிற அந்தக்கும்பானுவை இடும்பன்கன்னத்திலறைந்துதலைமயிரைப்பிடித்திழுத்து மடலோடுமடல்சேரக்குண்டுகட்டாகக்கட்டி அவனைக்குப்புறத்தள்ளி அவனிடுப்பினில்தன்னிரண்டுகாலுமூன்றி எதிர்நின்றுகொண்டு மலைச்சிகரம்போலிருக்கிற அவன்தலையைக் கையினுற்பற்றி, மூளை சிதறும்படிசாடிப் பூமியிலறைந்துகொன்றான். அதைக்கண்டு சுமாலிபுத்திரனுன பிரகஸ்தன் அதிக மனவருத்தமுற்று, வில்லைவளைத்து வானரசேனைகள்பேரிலே ஒன்று - பத்து - நூறு - ஆயிரம் - பதினுயிரம் - நூறுயிரமாகச் சர்மாரிபொழிந்து, க்ஷணநேரத்திற்குள்ளே வானரசேனைகளைச் சின்னு பின்னப்பட்டுச் சிதறிப் போகும்படிச் செய்ததை இடும்பன்பார்த்து,வெகுகோபத்துடனே பக்கத்திலிருந்த ஒருமலையைப்பிடுங்கியெறிந்து, எமனைப்போல அந்தப் பிரகஸ்தன்சேனையை நாசப்படுத்தினுன். அப்போது அவன் அஸ்திரவருஷித்தால் அந்தமலையை ஒவ்வொருநூறு யுதிரும்படிச்செய்தான். இடும்பன் பின்னையுமொரு மராமரத்தை வேரோடே பிடுங்கிக்கொண்டு, இடிபோல மோதியடிக்கவே ? பிரகஸ்தன் கையிலிருந்த வில்லுந்-தேருங்- குதிரைகளும் - தூள் தூளாகச்சிதறிப்போயின.

அப்படித்தேரும்-வில்லும்- இழந்து, இடியிடித்தாற்போலச் சத்தித்து, ஆகாசத்திலுள்ள சூரியன் பரிவேடத்தைநீக்கிக் கையிலொருதண்டாயுத மெடுத்துக்கொண்டு, பூமியிலிழிந்து ஓடிவருவதுபோலப் பிரகஸ்தன்வாயை மடித்துக்கொண்டு இரண்டுகண்களிலும், அக்கினிப்பொறிகள் பறக்கும்படியாக வோடிவந்தான். வந்தமாத்திரத்தில், அக்கினிகுமாரனுன நீலன் ; வெகுகோபத்துடனே அவனுக்கெதிரோயாய்ந்து, அவன்பிடித்துவந்த தண்டாயுதத்துடனே ? அவனைத்தூக்கி ஆகாசத்தில் விட்டெறிந்து கர்ச்சித்தான். அப்போது சுமாலிபுத்திரன்ஆகாசத்திலேநின்றுங்குதித்து, தேவர்கள் நடுங்கும்படியாய் நீலன்பேரிலேதண்டாயுதத்தினுல் மோதினுன். அந்த அடிக்கு நீலன் இளையாமல் தண்டாயதத்தைப் பறித்தெறிந்துவிட்டு, உன்பிராணனை இதோ முடிக்கிறேனென்று சொல்லிக்கொண்டு, தன்கையினுலோங்கிப் பிரகஸ்தன் தான் முன்குடித்திருந்த ரத்தத்தைக் கக்குகிறதுபோலக் கக்கும்படி

யறைந்தான். பிரகஸ்தன் அதற்குக்சலியாம
லும், கொஞ்சமாகிலுங் கூசாமலும், நீலனு
டையமார்பிலேயோங்கி, ஒரு குத்துக்குத்தின
ன். இவ்விதமாக இருவருஞ்செய்த யுத்தமித்
தன்மையதென்று எவராலேயுஞ் சொல்லி மு
டியாது. இப்படி யுத்தஞ் செய்கிறபோது ரா
க்ஷசசேனாபதியான பிரகஸ்தனை நீலன் வாலினு
லே சுற்றிக்கட்டிவிட்டுத், தோளிலேயும், மார்
பிலேயுந், தலையிலேயும், கையிலேயும், அடித்
தான். நீலன்அடித்த இடிமுழக்கம்போன்ற அ
ந்த அடியினால், பர்வதமானது முறிந்து விழு
வதுபோலப் பிரகஸ்தன் துண்டு துண்டாகத்
தறிபட்டுத் தெறிபட்டு விழுந்திறந்தான். அப்
படி பிரகஸ்தன் விழுந்திறந்ததைக்கண்டு, தே
வர்கள் சந்தோஷித்து ஆர்ப்பரித்தார்கள். அ
தைப்பார்த்து நெறித்த செம்பட்டமயிரையும்,
வெண்மையான கோரதந்தங்களையுமுடைய ம
ற்ற ராக்ஷசர்கள்பயந்து முறிந்து தங்கள் இ
ருப்பிடமாகிய லங்கையைநோக்கி ஓட்டம்பிடி
த்தார்கள். இவர்களிப்படியிருக்கத் தெற்கு
வாசலின்வழியாகச் சுபாரிசனோடு புறப்பட்ட
ராக்ஷச சேனைகளை யெல்லாம் கொன்று அங்
கே அங்கதனிருந்து இடிக்கிடும்படி அடித்த
அடியினாலே, சுபாரிசனென்கிற படைத்தலைவ
ன் சதறிப் - பதறி - உதறிவிழுந்துசெத்தான்.
அவன் இப்படிசாகவே மற்ற ராக்ஷசக் கூட்
டங்களெல்லாம், நிற்கமாட்டாமல் ஓட்டம்பிடி
த்தார்கள். மேற்குவாசலிலிருந்த இருநூறு
வெள்ளம் ராக்ஷசசேனைகளும், மகாபலசாலி
யான துன்முகனும் புறப்பட்டுப்போய் அ
னுமான்கை யென்கின்ற யமனாலே ஒருவருந்
தவறாதபடி யத்தனைபேரும் மடிந்துபோனார்
கள். அந்தந்தக்கோட்டை வாசல்கள்தோறும்
நடந்த யுத்தங்களைப்பார்த்த தூதுவர்கள் அ
திசீக்கிரமாக ஓடோடிவந்து ராவணனைச்சேவி
த்து எங்கள் சக்கிரவர்த்திநம்ப ! இந்த அதிச
யத்தைக் கேட்கவேண்டுமென்று சொல்ல, அ
வன் தலையைச்சாய்த்துக்கேட்கக்காதிலேரகசி
யமாக, ஐயா ! இராவணேஸ்வரா ? கிழக்கு
வாசலிலே புறப்பட்டுப்போன நம்முடைய
சேனைகளுங், எக்காலத்திலும், ஜெயம்பெற்று
வந்தவனும், உன்னுடைய ஆஜ்ஞாசக்கிரத்தை
யொத்தவனுமான பிரகஸ்தனென்னுஞ் சே
னாதிபதியி னுயிரானது, வானரசேனாதிபதி
யான நீலனென்பவனால் வீரசொர்க்கம்போ
ய்ச்சேர்ந்தது. வடக்குவாசலில் வச்சிரமுஷ்
டியும், மேற்குவாசலில் மலையையொத்த துன்
முகனென்பவனும், ஒருவரும் ஜெயிக்க வொண்ணா
து ஐம்பதுவெள்ளஞ் சேனையு மிறந்துபோ
னார்கள். தெற்குவாசலிற்போன நம்முடைய
ராக்ஷசக் கூட்டத்திலே, சுபாரிசனு மிறந்து
போனான். மற்றவர்கள்போனவழியை நாங்க
ள் அறியோமென்று சொன்னார்கள். அந்த
வார்த்தையைக் கேட்கவே ! ராவணன் நெருப்
பிலே நெய்யைவிட்டதுபோலக் கோபாக்கினி
மண்டிக் கண்களிலே அக்கினிஜுவாலைகள் எழு
ம்பும்படியாக அடிக்கடிப் பெருமூச்சுவிட்டு
மறுமடியு மந்தத்தூதர்களைப்பார்த்து பிரகஸ்
தனை யார்கொன்றவன் நிறுத்திப் பொறுமை
யோடுசொல்லுங்களடா வென்று சொன்னான்,
அதற்குத்தூதன், சுவாமீ ! நீலனென்பவன் ;
ராக்ஷசசேனைகளை யெல்லாம் எங்குந்தலைக்காட்
டவொட்டாமல் சிதையவடித்துவிட்டுப் பிரக
ஸ்தனுடனெதிர்த்து, இருவரும் பற்பலவிதங்
களாக யுத்தஞ்செய்தார்கள். அந்தச் சமயத்தி
ல் நீலன்கையினாலோங்கித் தலையிலடித்தான்.
அந்தப்பலமான அடியினாலே அந்தப் பிரகஸ்
தன் மாண்டுபோனானென்றும், அவனுடனே
கூடத் துணையாகச் சென்றவர்களில் நாங்கள்
மாத்திரந்தான் தப்பிப் பிழைத்துவந்தோம், ம
ற்றராக்ஷசர்க ளனைவருஞ்சிதைந் திறந்துபோ
ய் விட்டார்களென்றும், இப்படியாகச்சொன்
னார்கள். அந்தவார்த்தையைக் கேட்கவே ! ப
ல்லை நறநற வென்று கடித்துத் திசாதிசைக
ளெல்லாம் திக்கென்று ஒரே காலத்தில் பற்றி
யெரியத் தக்கதாகக் கண்களில் தீப்பொறிப
றக்கப் பார்த்து, ராவணன் தனக்குச் சமீ
பத்திலிருக்கிற ஒரு ராக்ஷச வீரனோடு ; நம்
முடைய சேனாதிபதி பிரகஸ்தன், ஒருமரத்
தையெடுத்துவந்து போர்செய்த அற்பக்குர
ங்கினால் இறந்துபோனானென்று வெளியரங்
கமாகத் தூதுவர்கள் சொன்னார்களே ? இந்
திராதிதேவர்களை யெல்லாம் ஜெயித்து, அதி
கீர்த்திபெற்றவன். ஒருகுரங்கினாலே செத்தா
னென்கின்ற இந்தவார்த்தையைக் கேட்கவே! எ
ன்காதும் வெந்து, மனதும் வேகிறதென்று
சொல்லி, அப்பிரயோசகமான ஒருசிறிய எலி
யைப்போன்றகுரங்கு அடிக்க, மகம்மேருவை
ப்போலப் பருத்துயர்ந்த உருவமுள்ளவன், இ
றந்துவிட்டபடியால் பகையையும், அக்கினி
யையும், கொஞ்சமென் றெண்ணலாகாது என்
றுகருதி இரண்டுகண்களிலுந் தாரைதாரையாக
க் கண்ணீரொழுக அங்கலாய்த்து, நல்லது அ
திருக்கட்டும், நமக்குக்குறைவுவராமல் குதிரை
ப்படையுடனே புறப்பட்டுப் போங்களென்று
வில்வீரர்களானராக்ஷசர்களை அனுப்பி யுத்தகா
ரியங்களையெல்லாந் தெரிந்துகொண்டு கைலா
சமலையைப்பதித்துப் பந்தாடின பராக்கிரம
சாலியான, ராவணன் ஆயிரங் குதிரைகளைக்
கட்டியிருக்கிறதும், சமுத்திரம்போலச்சத்திக்

கத்தக்க ஒட்டமுடையதும், தெய்வலோகங்க
ளெல்லாங் கொள்ளைகொள்ளும்படியாகச் செ
ன்றதும், முன்னாலே தேவராஜனாகிய தேவேந்
திரன் தோற்றுக்கொடுத்ததும், அதிகபலமுள்
ளதும் உயர்ந்ததும், விசாலமானதுமாகியதே
ரின்மேலேறி, ரிஷபவாஹனாரூடரான ருத்திரமூர்
த்தியை வணங்கி ஸ்தோத்திரஞ்செய்து, மகம்
மேருகிரிக்குச் சமானமாகிய வில்லைக் கையி
லேந்திக்கொண்டு, அட்டகாசஞ்செய்து குணத்
தொனிசெய்தமாத்திரத்தில் அந்தச்சத்தத்தால்
தென்றிசைக்கதிபனான கூற்றுவனுடைய ஸ்திரீ
யின்வயிற்றிலே இருந்தகெர்ப்பமுங் கலங்கிவி
ழுந்தது. பின்னும் தேவர்களுடைய மணிமார்
பினிடத்தில் பட்டு முறியாத பலமுள்ளதும்,
ஒருவர்மீதும் இதுவரையும் பிரயோகஞ் செ
ய்யாததுமான பலபல ஆயுத வர்க்கங்களைக்
கைகளில் பிடித்துக்கொண்டும், வச்சிரகவசத்
தை மார்பிலே தரித்துக்கொண்டும், தும்பை
மாலையைச்சூடி, இருபக்கங்களிலும் வீசுகின்
ற வெண்சாமரைகள் நுரைகள்போலவும், தன்
சரீரமே யொரு கடல்போலவும், முத்துக்கு
டையென்கின்ற பூரணச்சந்திரனுக்குக் கீழே
காணப்பட்ட கரியமேகம் போலவும் பிரகா
சித்தான். சேனா சமுத்திரங்கள் வர, முரசு
கள் ரணபேரிகைகள் - தவளசங்கங்கள் - கா
ளங்கள் - முதலான வாத்தியங்கள் அண்
டகடாகங்கள் முழுதும் படீரென்று வெடி
க்கும் படியாய் முழங்கினதுகள். ஆனைக
ளும், தேர்களும், குதிரைகளும், ராக்ஷசர்க
ளும்வந்து நெருங்கி யுகாந்தகாலத்தில் சப்த
சமுத்திரங்களு மொன்றாய்ப் பொங்கிவந்தது
போல் நிறைந்ததுகள். அதினடுவே மகம்
மேருபர்வதம்போலத் தேரிலேறிவந்தவனான
ராவணன் பிரகாசித்தான். அந்தத் தேரிலே
சரிகமபதநிச - வென்கின்ற ஏழிசைகளை
யுங்காட்டுகின்ற, வீணைக்கொடி ஆகாசமட்டு
மளாவிப் பிரளயகாலக்கூற்றுவ னீட்டியசைக்
கிற நாவைப்போலத் தோன்றினது. இந்
த யுத்தத்தில் வந்த ராக்ஷச சேனாசமுத்திரத்
தை தாண்டுகிறதற்கு ஸ்ரீராமமூர்த்தியையே
ஒருதோணியாக நினைத்து யுத்தத்தைப் பார்
க்கவந்த தேவர்கள் நெருப்புப்பற்றி எரிகின்ற
மூங்கிற்காட்டை யுடைய மலைகளைப்போலச்
செம்பட்டமயிருங் கறுத்த தேகமுமாய்க் கா
ணப்படுகின்ற இந்த ராக்ஷசர்களைப் பார்த்து
ப் பயந்து ஆகாசத்தில் சிதறிப்போனார்கள்.
தேரிற்கட்டியிருக்கின்ற கொடிகளும், யானை
மேல் பிடித்துவருகின்ற படைமுன் னணிக்
கொடிகளும், அளாவித் தோய்ந்த படியினா
லே ஆகாசகங்கையுஞ் சுவறிவற்றிப் போச்சு.

ஆயிரங்கோடிப் பேய்கள் ஆயுதங்களைச் சுமந்
துகொண்டுபக்கங்களில்வரவும், இரண்டாயிரங்
கோடி சேமத்தேர்கள் பின்னேவரவும், அநே
கராக்ஷசப்படைத்தலைவர்களுடைய சேனைகள்
நெருங்கி ஆர்ப்பரித்துச் சூழ்ந்துவரவும், இந்
தமூன்றுலோகங்களையும் வெற்றிகொண்ட ரா
வணன் புறப்பட்டுவந்தபோது, வானர தூதர்
கள் ஓடிவந்து லோகநாயகரான ஸ்ரீராமமூர்
த்தியைச்சேவித்து சுவாமீ ! அற்பத் தொழி
லையுடைய ராவணன் சமுத்திரம்போல அநே
கஞ்சேனைகள்சூழ அதிககோபத்துடனே யுத்
தகளத்தில்வந்து சேர்ந்தானென்றுசொன்னார்
கள். ராவணன் யுத்தத்திற்வந்தா னென்கிற
வார்த்தையைக் கேட்கவே, சீதையைமீட்டதற்
கொப்பான தைரிய சந்தோஷத்தினாலே இது
வரையில் சீதையைப் பிரிந்து இளைத்திருந்த
தோள்கள்பூரித்தன. மரவுரிதரித்து இடது
பக்கத்திலே வாளை இறுக்கிக்கட்டினார். பின்
னும் உலகத்தில் துன்பத்தைத் தருவதாகிய ச
கலகருமங்களினாலும் ஒருபயனு முண்டாகா
தென்கிற மெய்ஞ்ஞானநேத்திரத்திற்கு இஷ்
டமாகிற பராபரவஸ்துவான ஸ்ரீராமர் பூர்வத்
திலே வாமனாவதாரத்தில் தமது திருவடிகளா
ல் உலகத்தை யளந்தகாலத்து வேதத்திற்கு
மிந்தஉலகங்களுக்கும்எட்டப்படாமல் இருந்த
திருப்பாத விரல்கள் பக்கங்களில் விரிந்திருந்
ததன்மைபோல அந்தத்திருவடிக்கு வீரகண்
டாமணியைத்தரித்தார். ஆகாசத்தில் நக்ஷத்
திரங்கள் பிரகாசிக்கிறதுபோலத் தமது திரு
மார்பில் பிராட்டியில்லாமலிருப்பதினால் அவ
னுக்கு வருத்தமுண்டாகாதென்பது கருதினா
ரோதெரியாது, அந்தமார்பில் வச்சிரகவசத்
தை யிறுக்கிக்கட்டினார். கற்பகக்கிளையில் க
ரும்பாம்பு சுற்றிக்கொண்டிருக்கிறதுபோலக்
கையில் முன்கைத்தோல்கட்டிக்கொண்டு, ரா
த்திரிகாலத்திலும் பூத்துப் பிரகாசிக்கிறதும்,
நடுப்பகற்காலத்திலும் நிறமாறுதலும்வாடாம
லுமிருக்கிறதுமான தாமரைமலர்போன்ற கை
விரல்களுக்குவிரற்புட்டில் பூட்டி, புலகத்திலுள்
ள பாஷையையுங் கற்று, அளவிறந்த சாஸ்திரங்
களையும் ஆராய்ந்து, பஞ்ச இலக்கணங்களைக்
கற்றறிந்த மகாகவியாற் செய்யப்பட்ட செய்
யுட்களைப்போல விளங்குகிற அக்ஷயத் தூணீ
ரத்தையுந் தோளிற் கட்டிக்கொண்டு, பிரகாசி
க்கின்ற மேகக்கூட்டங்களுக்கு மத்தியில் கிடக்
கும்படியான மின்னலுக்கொப்பாக அளவில்
லாத கிரணங்களுடன்கூடிய நெற்றிப்பட்டந்
தரித்துக்கொண்டு, இளந்தளிரான இலைகளையு
டைய ஆத்திமாலையுடனே அழகிய துளவமலர்
மாலையும், தும்பமாலையையுந் தரித்து, இந்தப்

பெரிய உலகமும், இதிலுள்ள எல்லாச் சராசர
ங்களும் முதலாய்த்தமது திருவயிற்றில் அடங்
கிய சமஸ்த வஸ்துக்களும், தாமே யென்று
சொல்லும்படியாக விருந்தும், இப்போ தி
து வேறாக இருக்கிற தாதலா லிது வே
றொரு பொருளென்று சொல்லும் படியான
தான மஹாகோதண்ட மென்னும் வில்லை
இடது கையில் பிடித்துக் கொண்டவராய்
ஸ்ரீராமர் - வானரசேனைகளி னடுவே திருப்
பாற்கடலுடனே ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் புற
ப்பட்டு வருகிறதுபோலவே வந்து. உலகங்க
ளையெல்லா மழிக்கவந்திருக்கிற பிரளயகால
ருத்திர மூர்த்தியைப் போல வானர சேனை
களுக் கெல்லா முன்னணிப் படையில் வி
ல்லுடனே நின்றுகொண்டிருக்கிற தம்பியுட
னேவந்துகூடினார். அப்போது சப்தசமுத்
திரங்களும் ஏககாலத்தில் திரண்டுவந்ததும்போ
ல் வந்த ராக்ஷசசேனைகளும், மின்னலைப்போ
லப் பிரகாசிக்கிற பல்லுகளையுடைய வானர
சேனைகளும், உயிர்களைக் கொண்டுபோகி
ற எமனை தன்வேலையில் பிரவேசிக்கும்படிச்
செய்கிறதுபோல எதிர்த்துப் போர்செய்யத்
தொடங்கின. அச்சமயத்து ராக்ஷசர்களுடை
ய தலைகளறுந்தனுகள். குடல்கள்சரிந்தனுகள்.
தேர்கள் சிதைந்துருண்டதுகள். குதிரைகளிற
ந்ததுகள். எங்கும்ராக்ஷசப்பிணக்கும்பல்களா
கக் குவிந்ததுகள். அந்தப்பிணக்கும்பல்களை
வாரிக்கொண்டு ரத்தவெள்ள மெங்குமோடிப்
பெருகினது. தெற்கு வடக்கில் குரங்குச்சே
னைகளுடைய பல்லுகளுதிர்ந்தது. குரங்குப்பி
ணங்கள் பொற்குவியலைப்போலவும், மலையடு
க்குப்போலவும், மேகக்கூட்டங்கள்போலவும்,
காணப்பட்டதுகள். குரங்குகள் இரண்டுகைகளி
லு லறைய, ராக்ஷசர்கள் ஏறிவந்த குதிரைகளு
டையகாற்குளம்புகள்சிதைந்துபோய்விட்டது
கள். அவ்வானரவீரர்களுடையகுத்தினால்ராக்ஷ
சர்கள் மார்புபிளந்தோடி விட்டார்கள். அவர்க
ளுடையரத்தம் அங்கங்கு ஆறுகளாயோடின
து. அப்போது ராவணன்கண்களில் நெருப்
புப்பொறிபறக்கத் தன் வில்லைவளைத்துத் தேவ
ர்கள்நடுங்கக் குணத்தொனிப் பண்ணினான்.
அந்தச் சத்தத்தினாலே சிலவானரசேனைகள் இ
டிமுழக்கங்கேட்ட, சர்ப்பக்கூட்டம்போல ஒ
டியொளித்ததுகள். சிலவானரங்கள் போர்க்கள
த்தைவிட்டு ஓடிவிட்டதுகள். சிலகுரங்குகள்ப
யந்துவிட்டதுகள். சிலவானரங்கள் பயந்துவோ
டயத்தவித்ததுகள். சிலவானரங்கள் மூர்ச்சை
யாய்விழுந்து விட்டதுகள். நெஞ்சில்சற்றுமிர
க்கமற்ற ராவணன் ஆகாசமுங்கிழிபடும்படியா
கப்பண்ணின அந்தநாணொலிகேட்டு, அவ்சா

திபரான ராக்ஷசர்களேபயந்து நடுநடுங்கினால்,
குரங்குகள்பயந்ததை இன்னபடியென்றுசொ
ல்லவேண்டுமோ! ஆனால், ஸ்ரீவிபீஷிணாழ்வாரு
ம், இளையபெருமானும், சுக்கிரீவமகாராஜருமா
த்திரம், பயமென்பதில்லாமல் சுவாமியுடனே
கூட நின்றார்கள். மற்றவர்களெல்லாம் நாலு
திக்கிலும், ஓட்டம்பிடித்தார்கள். ஆகாசமுந்
தூளிப்படலத்தால் மூடிப்போயிற்று. முல்
லை - குறிஞ்சி - மருதம் - நெய்தல் என்னும்
நால்வித நிலமாகிய இந்தப்பூமியை ஒருகை
யால்தூக்கி எடுக்கும்படியான பராக்கிரமசா
லியாகிய ராவணன்வில் குணத்தொனியால். இ
ந்தப்பூலோகத்தவர்களை நடுங்கச்செய்தது மா
த்திரமோ? அது சப்தலோகங்களை யழிக்கவ
ரும் பிரளயகாலமேக கர்ஜ்ஜனைப்போலத் தே
வர்கள் செவியிலும் நுழைந்தது. அப்போது
வானராதிபதியான சுக்கிரீவமகாராஜர், வச்சி
ராயுதத்தையொத்த ஒரு பெரியமலையைப்பி
டுங்கி அதிவேகத்துடனே அக்கினிகள் ஜொலி
க்கும்படி ராவணன்பேரில் விட்டெறிந்து ந
கைத்தார். ராவணன் அதை ஒருபாணத்தினு
லேசாம்பலாய்ச் சிதறிப்போகும்படிக் கீழேத
ள்ளினான். அதுகண்டு சுக்கிரீவமகாராஜர், அ
திககோபத்துடனே கண்களிற் பொறிபறக்
கப் பூமியின்வயிறுங் கிழியும்படியாக ஒரு
பெரியமராமரத்தை வேருடனே பெயர்த்துப்
பிடுங்கிக்கொண்டார். அதைக்கண்டு, ராவண
ன் அனேகமாயிரம் அம்புகளைப் பிரயோகம்ப
ண்ணி, அந்தமரத்தை ஆயிரத்துக்குமேலும்,
அதிகதொகையாகத் துண்டங்களாக்கி விட்டா
ன். பின்பு, சுக்கிரீவமஹாராஜர், மேருமலை
யினும் பெரியதொரு பருவதத்தைப் பேர்
த்தெடுத்து, நெருப்புப்பொறிபறக்க, ராவ
ணன்பேரில் வீசியெறிந்தார்! அந்தப்பரு
வதத்தையு மொருஅம்பினா லுடைத்துத்தள்ளி
த் திக்குப்பாலகனா முதுகிட்டோடும்படி
தோற்கடித்தவில்லைக் கெட்டியாகப் பிடித்து
சுக்கிரீவருடையமார்பி லொருவச்சிரஅம்பு அ
ழுந்தும்படியாக விட்டுவிட்டான். அப்படி
விட்ட பாணமானதுபோய் அழுந்தவே! சுக்கி
ரீவமகாராஜர்சரீரம்பதைத்தார். அப்படிபதை
க்கிறதற்கு முன்னமே மேற்குவாசலி லிருந்த
சிறியதிருவடி யாகிய அனுமார்கூட யிருந்
து அறிந்தவர்போல ஒருநிமிஷத்தி லோடிவ
ந்து சுக்கிரீவமகாராஜருக்கு முன்னாகநின்றுரா
வணனைப்பார்த்து, எங்கள் ராசா ஆயாசந்தீர்
ந்து வருகிறதற்கு முன்னே மிகுந்தபலசாலி
யான ராவணனே நீஎன்னுடனே போர்செய்
கிறாயாவென்று சொன்னார். அப்படிசொல்
லியே அதிககோபத்துடன் வருவாயானால் வா

வாவென்று சொன்னான். சொன்ன ராவணன் பேரிலே, வேதங்களைபொத்த தோள்களையுடைய அனுமான் ; ஒரு பெரியமலையையெடுத்து வீசியெறிந்தார். அந்தப் பருவதமானது ஆகாசத்திற்படர்ந்து வருகின்ற மேகங்களையெல்லாம் எரித்துவிட்டு நெருப்புகளை வீசிக்கொண்டு, அதிகவேகமாய் வருகிறதைக்கண்டு, ராவணன் பத்துப்பாணந் தொடுத்து ஆயிரங்கூறுக்கிவிட்டான். அதைப்பார்த்ததேவர்கள் பயந்துநடுங்கினார்கள். அனுமான் பின்னையொருபருவதத்தைப் பறித்துத் தமதுதோள் பலங்கொண்டுவீசியெறிந்தார். அந்தமலையானது இடியைப்பார்க்கிலும், அதிகவேகமாய்ப்போய் அவனுடையதோளி லணிந்திருக்கின்ற வாகுவலயத்துடன்கூடத் தானும் பொடியாயுதிர்ந்துவிட்டது. அதுகண்டு அனுமான் அதிக கோபாக்கினியுடனே வேறொரு பருவதத்தைப் பேர்த்தார். அப்படிப்பேர்க்கின்ற அனுமானுடைய கையிலேயும், தோளிலேயும், பத்துப்பாண மழுந்தும்படி ராவணன் எய்தான். அவைவந்து சரீரத்திலே அழுந்தஅதற்கு ஆயாசப்படாமல் மிகுந்ததைரியத்துடனே நின்றார். அதைக்கண்டு தேவர்கள் இப்படி யார்தானிருப்பார்களென்று ஆச்சரியப்பட்டு, ஆரவாரித்தார்கள். அனுமான்பின்னு மொருமராமரத்தை கையிலேயெடுத்து வேரோடே சுழற்றிவிட்டார். அப்படிவிட்ட அந்த மராமரம் ராவணனுடைய தேர்ச்சாரதியின் தலையைத் துணித்து எறிந்துவிட்டுப் பக்கத்திலுள்ள ராக்ஷசர்களையும், அடித்துக் கொன்றுவிட்டது. வேறொரு சாரதிவந்து ரதத்திலேறினான். அப்போது கடல் பொங்கினதுபோலக் கோபங்கொண்ட ராவணன் நூறுபாணம் பிரயோகம் பண்ணினான். அத்தனையும்வந்து சரீரத்திலழுந்தவே ! ரத்தஆறு பெருகும்படியாய், மாருதிமெய்ம்மறந்து சரீரம்நொந்தார். அதுகண்டு ராவணன் சொல்லுகிறான். குரங்குகளே ? கல்லுமரமுங்கொண்டு கைகளினாலேயும், வாய்ப்பேச்சினாலேயும், மயிர்வளர்ந் திருக்கின்ற தோள்களினாலேயும், ஊசிப்பல்லுகளினாலேயுமா ? என்னை ஜெயிக்க வெண்ணியிருக்கிறீர்கள். உங்களை ஒருபொருளாய் நான்வில்லெடுத்து நின்றால், வெகு பலவந்தர்களைப்போலச் சௌரியங்காட்டமாட்டீர்களாவென்றுசொல்லிப் பல்லைக் கடித்து நெருப்புப் பறக்க நகைத்து வில்லைவளைத்துக் குரங்குச் சேனைகளின்மீது பிரளயகாலத்து இடிக்குச்சமானமான பாணங்கள் ஒன்றைப்பார்க்கிலு மொன்றதிகமாய், ஆயிரங்கோடிபாணம் பிரயோகித்தான். அந்தப்பாண வருஷத்தால் சண்டமாருதத்தினாலே, கடலலைகள்போங்கிவழிகிறதுபோல வானரங்கள் துன்பப்பட்டதுகள். இப்படித் தம்முடையசேனைகளை வருத்தப்படுத்தின, ராவணனுடைய வில்வல்லமையையும், வானரங்கள் பட்டபாடுகளையும், படைத்தலைவர்கள் செய்தகாரியங்களையும், இளையபெருமாளாகிய லக்ஷ்மணர்கண்டு நம்முடைய பாணத்துக்கே இவன் லக்ஷியமானவன், இன்றைக்கு இவனை அதஞ்செய்வோ மென்றெண்ணி தனுசோடுகூடின மேருமலையைப்போலவந்து எதிர்த்தார். அப்படிஎதிர்த்த ராஜாதிராஜனாகிய தசரதமகாராஜ குமாரரான லக்ஷ்மணர் வில்லைக் குணத்தொனிபண்ணினார். அதைக்கேட்ட ராவணனுடைய நிலையை யென்னவென்று சொல்லப்போகிறேன் ; அந்தக் குணத்தொனியைக் கேட்டுப் பிரளயகாலமேகக் கூட்டங்களினிடியென்று மூன்று லோகத்தவர்களும், நிச்சயித்து நடுங்கினார்கள். சத்துருக்க ளெல்லாரும், சிங்கத்தின் தொனியைக்கேட்ட யானைகள்போலப்பயந்து திமிக்கிட்டார்கள். அந்தத்தொனியைக்கேட்ட ராவணன், தன்பக்கத்தில்நின்ற ராக்ஷசர்கள் மனதுமுறிந்து கலங்கினதன்மையையும், மஹாவீரரான ஸ்ரீராமபிரானுடைய திருத்தம்பியாகிய இளையபெருமாளுடைய வில்லின்நாணோசையையும்அறிந்து, தன்பத்துத்தலைகளையும் அசைத்து, இவனும் ஒரு மனிதனோவென்று ஆச்சரியப்பட்டுக்கொண் டிருக்கும்போது லக்ஷ்மணப் பெருமாளுடைய வில்லிலிருந்து புறப்படுகிற பாணமழைகள் ரதங்கள்பேரிலும், குதிரைகள்பேரிலும், யானைகள் பேரிலும், ராக்ஷசர்கள்பேரிலும், மென்மேலும்வந்துபாய்ந்து, எங்கும் ரத்தப்பிரவாகமாக்கிவிட்டதுகள். சிலபாணங்கள் முகங்களிற்பட்டுக்கீழ்நோக்கி யுடலிலுருவித்தேரினுடையபார்களைப் பிளந்து, அச்சினைமுறித்துக், கீழ்லோகங்களையும், உருவிச்சென்றும், ஓய்வில்லாமலோடினதுகள். அப்போது பத்துக்கோடி ராக்ஷசர்கள், யானை - குதிரை - தேர் - இவைகளைப்படை முன்னணியாக்கிப் பற்பல ஆயுதங்களைப் பிரயோகம் பண்ணிக்கொண்டு, ஒருமனுஷன் நம்முடைய அரசனுடனெதிர்த்தால், நமக்குள்ள சௌரியம் என்னப் பயன்படப்போகிற தென்று சொல்லிக்கொண்டு, தம்முடைய தரித்திரம் ஹதமாகும்படியாகக் கொடுக்கிற ஒருவனை அநேகதரித்திரர்கள்போய்ச் சுற்றிக்கொண்டதுபோல, ராமானுஜனைச்சுற்றி வளைந்துகொண்டார்கள். அப்படி சுற்றிக்கொண்டு அந்தராக்ஷசர்கள் எறிந்ததுகளும், எய்ததுகளும்ஆகிய எல்லாஆயுதங்களையும், லட்சுமணர்சிலபாணசரங்களினாலேயழித்துப், பின்னும்ஓயா

மல் பாணங்களைப்பொழிந்து, அந்த ராக்ஷசர்களைசஂஹரித்தார். அப்போதுராக்ஷசர்களுடைய உயிர்களையுண்டு, எமனும் தெவிட்டிப்போனான். சமுத்திர மெல்லாம் ரத்த ஆறுகளால் நிறைந்து எதிர்த்தது. அந்த ரத்த ஆறுகளையோடவொட்டாமல் பிணங்கள் மலைபோலக்குறுக்கேமறித்துக்கொண்டதுகள். இப்படி இளையபெருமாளாகிய லக்ஷ்மணர் எய்கிறபாணங்களினாலே ராக்ஷசர்களுடைய தலைகளெல்லாம் அற்றதுகள். வயிரம் பற்றிய கால்களெல்லாமற்றதுகள். மலைபோன்ற தோள்களெல்லாமற்றதுகள். மார்புகளெல்லாம் அற்றதுகள். அவர்களுடைய வீரநிலைமையெல்லாமற்றதுகள். பலங்களெல்லாமற்றதுகள். வளைந்தவில்லுகளெல்லாமற்றதுகள். அவர்கள்கற்றிருந்தயுத்த வகைகளெல்லாமற்றதுகள். தேர்களெல்லாந் துணிந்ததுகள். குதிரைக்கூட்டங்களெல்லாம் துணிந்ததுகள். செவந்தகண்களையுடைய மேகம்போன்ற யானைகளெல்லாந் துணிந்ததுகள். வீரர்களுடைய பாதகண்டாமணிகளெல்லாந் துணிந்ததுகள். கழுத்திலே தடிபோலக்கிடக்கிற மாலைகளெல்லாந் துணிந்ததுகள். கருவித்துநின்றிருந்த அவர்களுடையநிலையெல்லாங் குலைந்துபோனதுகள். அவர்கள்செய்கிற போர்களெல்லாஞ் சின்னபின்னப்பட்டுவிட்டது. பூர்வத்திலே ஜெயம்பண்ணின கீர்த்திகளுமழிந்துபோய்விட்டதுகள். மலைப்பாம்புபோன்ற கடினமான கால்களையுடைய ராக்ஷசர்கள் விழுந்தார்கள். அவர்கள்பேரில் புரவிகள்விழுந்ததுகள். அதுகளின் பேரிலே யானைகள் விழுந்ததுகள். அதுகளின் பேரிலே ரதங்கள் விழுந்ததுகள். அதுகளின் பேரிலே ராக்ஷசர்தலைகள் விழுந்ததுகள். நிணமும், ரத்தங்களுமா யந்தரணக்களத்திலே கொஞ்சமாகிலும், வெளியில்லாமல் இந்தப்படியேஒன்றின்மேலொன்றாகவிழுந்து மாண்டுகிடந்ததுகள். அப்போது அந்த ராமானுஜர் வில்லிலே அம்பு தொடுக்கின்றதையும், பிரயோகிக்கின்றதையும், ஒருவருங் காணவில்லை; அந்தஅம்பு வரிசை வரிசையாய்ப் போகின்ற அடுக்கையுங் கண்டவர்களில்லை; அது வேகமாய்வந்துபட்டு வீழ்க்கின்றபிணக்குப்பல்களின் பத்திகளைமாத்திரமே? அக்கங்கே கண்டார்கள். அந்தஅனேகாவேக சரவேகமாய் லட்சுமணர்சரங்களைப் பிரயோகம்பண்ணினார். பர்வதங்கள்போல யானைகளும் - குதிரைகளும் - ரதங்களும் - யாளிகளும் - சிங்கங்களும் - மற்றவைகளும் - நிறைந்துவந்த வைகளுக்கு, ஒரு அளவில்லை; அவ்வளவும், வந்ததிரத்து சிறிதுநேரமாகிலும் நிற்கவில்லை; எல்லாம் அந்த ரணகளத்தில் பிணமாய்க் கிடந்ததுகள். அனேகராக்ஷசர்கள் சூலங்கள் - வேல்கள் - வில்லுகள் முதலான ஆயுதமெடுத்து, லட்சுமணர்பேரில் பிரயோகம் பண்ணினார்கள். அதெல்லாம் அவருடைய பாணத்தினால் ஒன்றுநூறு துண்டங்களா யற்றுப்போனதேயல்லாமல், ஒன்றாகிலும் தப்பவில்லை; அப்போது ராக்ஷசசேனைகள் நிலைத்து நிற்கமாட்டாமல்பின்னிட்டு ஓட்டமெடுத்து வழிகளிலே பந்துக்களுடைய தலைகள் தங்கள் காலிலே இடறுவதினால் ஓய்ந்துவிழுந்து மாய்ந்ததுகள். அப்படியாகவே! ராவணன் அந்த லட்சுமணருடைய அம்புகளைப்பார்த்துவடவாமுகாக்கினிபோல மனம் கொதித்துக் காற்றுக்குச்சமானமான, குதிரைகள் பூட்டியிருக்கின்ற தன்தேரை யதிவேகத்துடன் செலுத்திக்கொண்டுவந்து லட்சுமணருடன் எதிர்த்தான். அப்போது கூற்றுவனுக்குப் பித்தேறினதுபோலக் கொல்லுகின்ற லட்சுமணர்-கோபமும், தாமும் வேறென்றுபேதம் தோன்றாதபடி ராவணனைக்கிட்டிவந்து நான் காத்துக்கொண்டிருந்த பிராட்டியானா; என்காவலைத்தப்பி மோசம்பண்ணி, எடுத்துக்கொண்டுவந்த திருடா! இன்றைக்குநீ தப்பிப்போகமாட்டாயென்றுசொல்லி, அக்கினிச்சுவாலையாகபெருமூச்சுவிட்டுத் தலைகளினோட்டைப் பிளக்கின்ற அக்கினிக்குச்சமானமான பாணங்களை ஒன்றின்பின்னொன்று அடிக்கடி அடுக்கடுக்காய்ப் பிரயோகித்துப் போர் செய்தார். அப்படியாகப் பொழிந்த பாணங்களெல்லாம் தன்பேரில் வாராமல் நடுவே முறிந்துபோகும்படியாக, ராவணன் அதிகூர்மையான பாணங்களினாலேதடுத்தான். அதுகண்டு லட்சுமணர் லெகுவான பாணங்களான படியினாலே அறுத்தாய், இனியறுப்பாயென்று மேகம்பொழிகிறதுபோல சரமாரிகளாய்ப்பொழிந்தார். அச்சமயத்தில் ராவணன் சரற்கால மழையைப்போல அஸ்திரங்களைப் பொழிந்து லட்சுமணர்விட்ட பாணங்களை விலக்கி, லட்சுமணர் மறுபடியும்பாணப்பிரயோகஞ் செய்யவொட்டாமல் அவருடைய அக்ஷய அம்புறாத்தூணியை அறுத்துத் தள்ளினான். அத்தருணத்திலே இளைப்பாறியிருந்த அனுமான் கண்களில் அக்கினிப்பொறிபறக்கவந்து பொய்ப்போர் செய்யாதே செய்யாதேயென்று அந்த ராவணனுடைய தேருக்கு முன்னாக மறித்து நின்றுகொண்டு இந்தயுத்தத்தைவிட் வேறொரு நல்லயுத்தமிருக்கிறது அதன்விபரத்தைக் கேளென்று சொல்லுகிறார். நீ சொர்க்கமத்திய பாதாளமென்னும் மூன்று லோகத்தையும்ஜெயித்து இளையாமல் மிகுந்த பலத்துடனே தேவேந்திரனுடையகீர்த்தியை

யழித்துப்போட்டாய், திக்குவிஜயம் பண்ணினாயானாலும் இன்றைக்கு உனக்கு அபஜெயம் வருமென்று சொல்லி, அந்த ராவணனுக்கெதிரில் கையைத்தூக்கி அந்தக்கை திருவிக்கிரமருடைய திருவடியைப்போல எல்லாலோகங்களையும் மூடிக்கொண்டுவளர்கின்றதை எங்கும் வெற்றிகொண்டு கொடிகட்டியிருக்கிற அந்த ராவணனுக்குக் காட்டி, வில்லாயுத முதலாகிய ஆயுதபரிக்ஷையெல்லாம் வெகுசமர்த்துடனே கற்றிருக்கிறாய், இருபது கைகளுடனே யிருக்கிறாய், நீ மிகுந்த பலசாலி, யுத்தத்தில் கைவந்தவன், மேலும் நல்ல வீரனாயு மிருக்கின்றாய், என்கைக்குமுன் னில்லு, பார்ப்போ மென்று நின்று, அக்கினியைப்போலச் சுவாசமிட்டுக்கொண்டு, உனக்குச் சமான மில்லையென்று மிகுந்த ஆண்மையுடனே யிருந்தாய், இதுமாத்திரமா? சிவனிடத்திற்பெற்ற வாள்வல்லமையும், சப்தலோகாதிபத்தியமும், சப்தபிராகாரங்களையுடையலங்காராஜ்யவல்லமையும்; உன்தைரியமும், ஒருவருமொப்பில்லாம லாளுகைசெய்கிற தன்மையும், உன்தோள்வல்லமையும், உன்பிரதாபமும், எல்லாம்என் னொருகுத்தினாலே நாசமாக்கிவிடுகிறேன். பலவார்த்தைகள் சொல்லியென்ன ! கைலாசபர்வதத்திற்கும், செவ்வரக்கைப்போன்ற கண்களையுடைய அஷ்டதிக்கஜங்களுக்கும், அசையாத அதிகபலமுள்ள இருபது தோள்களுள்ள மார்புமுடையவனே ! குரங்கினுடைய கையினாலே குத்துகிறதைப் பொறுத்துக்கொள்ளு, இப்போது நான் குத்துகிற குத்துக்கு நீ சாகாமலிருந்தாயேயானால் பிறகு உன்னுடைய இருபதுகையினாலேயும் என்னைக் குத்து, அதுக்கு நான் சாகாமலிருந்தேனேயானால் அப்பால் உன்னுடனே எப்போதும் எதிர்த்துப் போர்செய்கிற தில்லை என்று திருவடியாகிய ஆஞ்சநேயர் சொன்னார். அதற்கு ராவணன் சந்தோஷப்பட்டு நல்ல சௌரியவந்தன் சொல்லுகிறபேச்சுசொன்னாய், நீ பலசாலியேசரி என்னெதிரே வேறொருவர் நிற்பார்களோ ? நீ வந்து நின்றாயே ! உனக்கு இந்த உலகத்திலாவது மற்றெங்கேயாவது சமானமுண்டோ ? உன்கையிலொரு ஆயுதமுமில்லாமல் நீ யொருவனாய் முன்னே எங்கள் பந்துக்களை யெல்லாம் கொன்று, தேரின்மேலேறி வில்லைவளைத்துக்கொண்டு மிகுந்த சேனைகளுடனேவந்த என்முன் தனியே வந்து நின்றாயே உனக்குச் சமானமானவர்களாரிருக்கிறார்கள். நீயே சொல்லையா, நீ இப்படி நின்றபோதே அந்த மும்மூர்த்திமுதல் மூன்றுலோகங்களிலுமுள்ள தேவர்களும், தானவர்களும், மற்ற வீரர்களும், பித்துப்பிடித்தல்லாமல், எதிரேநின்று மார்பில் குத்தென்று நிற்கத்தக்கவர்களாரிருக்கிறார்கள். இந்தஆச்சரியம் வெளியில் சொல்லத்தக்கதல்ல ; எனக்கு இருபதுகைக ளிருக்கின்றதுகள், அஷ்டதிக்கு யானைகளும் தோற்றதென்ற புகழுங்கொஞ்ச முண்டு ; இரண்டுகைகளை யுடைய நீ என்முன் னிப்படிசொன்னாய், இனிமேல் என்யுத்தமானது எனக்கு வெற்றியைத்தரத்தக்கதல்ல, எட்டுத்திக்குகளையுஞ் ஜெயித்த என்கீர்த்தி யழியும்படியான ஒரு இகழ்ச்சி முன்னேயே உண்டாயிருக்கின்றது. என் உயிருக்குச் சமானமான அதிகாயனென்னும் புத்திரனைத் தரையில் தேய்த்து, ரத்தவெள்ளம் லங்கையெல்லாம் பரவச்செய்தாய். அந்த ரத்தம் இன்னமுலரவில்லை, இப்படியிருக்க நீ என்முன்னின்று இவ்விதமாய்ச் சொன்னாய், நீசொன்னது இசைவானதுதான். இது வீரர்களுக்குப் பொதுவானதுவே, நீ இப்போது பாணித்ததே சரி ; வேறே பேச்சென்னத்துக்கு உன்சொல்லுக்குப் பின்னிட்டுத் தலைகுனிய மாட்டேன். இந்த உலகங்களெல்லாம்பார்க்க என்மார்பிலே நீ குத்தென்று ராவணன் சொன்னான். அந்த வார்த்தையைக்கேட்ட அனுமான் சௌரியவந்தனென்றுமெய்ச்சி, வீரகர்ஜ்ஜிதத்துடன் அவன்தேரின்மேற் பாய்ந்து, கண்ணிலே நெருப்புச்சிதறப்பார்த்து, அவன்மார்பிலேதரித்திருக்கிற ஆபரணங்களுடன்கவசங்களெல்லாம்பொடிப் பொடியாய்ச் சிதற வச்சிரம்போலிருக்கின்ற தம்முடைய கையா லோங்கிக் குத்தினார். அப்போது, பர்வதங்களிலெல்லாம்மணலுதிர்ந்தது. ராவணன்கண்களில் அக்கினிஉதிர்ந்தது. அவன் தலைகளிலிருக்கிற மூளைகள் தயிர்போலத் ததும்பிக்குழம்பினதுகள். ராக்ஷசக்கூட்டங்களுக்கெல்லாம் பிராணன் கழன்றுபோய்விட்டது. எல்லாவானரங்களுக்கும் மயிரும்பல்லுகளு முதிர்ந்துவிட்டதுகள். மேகங்கள் மழையைக்கக்கினதுகள். அந்தராக்ஷச குலாதிபனுடையகைகளிலும், மற்றராக்ஷசவீரர்களுடைய கைகளிலும் பிடித்த வில்லுகளிற்பூட்டின நாண்களெல்லா மறுந்ததுகள். சமுத்திரம் நிலைகுலைந்தது. சப்தகுலபர்வதங்களும், அதிர்ந்து கல்லுகளை சிந்தியதுகள். சூரியக்கிரணங்களுமுதிர்ந்ததுகள். திக்கெஜங்களுடையபல்லுகளுமுதிர்ந்ததுகள். சகலருடையஆயுதங்களுந் தரையிலேவிழுந்ததுகள். ராவணனுடைய மார்பிலே நெருப்புப்பொறி பறந்தது. அனுமானுடையகைக் குத்துப்படவே ? ராக்ஷசாதிபதியான ராவணனுடைய மார்பிலே பூர்வத்தில் அஷ்டகஜங்களுடைய தந்தங்கள் அழுந்தி முறிந்ததெல்லாம், கீழேபலபலவென்று உதிர்ந்து

போச்சு. அன்னுக்கட்டியிருந்த கவசத்திலமுத்திவைத்தரத்தினங்களெல்லாம்பேர்ந்து திக்குனிதிக்குகளில் சிதறி, ஆகாசத்திலிருந்து நக்ஷத்திரங்களுதிர்ந்து விழுவதுபோல விழுந்தனுகள். அவன்கண்களில பொறியெழும்பியது. அப்போது பிரளயகாலத்துச் சண்டமாருதக்காற்றடிக்க, அலைந்து தள்ளாடிச் சாய்ந்த மகம்மேரு பர்வதம்போல ராவணன்சாய்ந்தான். அதைக்கண்டு தேவர்கள் சந்தோஷித்து ஆர்ப்பரித்துத் திருவடியாகிய ஆஞ்சநேயர்பேரிலே புஷ்பமாரி பொழிந்து வாழ்த்தினுர்கள். ராக்ஷசர்களெல்லாம் பயந்தார்கள். வானரர்களெல்லாம் ராவணன் தோற்றுப்போனுனென்று, சரீரம் புளகாங்கிதமாய்க் கூத்தாடினுர்கள். அப்போது ராவணன் மலைகளிலிருந்து யோகாப்பியாசம்பண்ணி சுவாசவாயுவி லிலையயறிந்த, தபோதனர்கள் கைவந்தசித்தியால், தங்கள் தேகத்தைவிட்டு, மற்றொருதேகத்திற்புகுந்து, அந்தத்தேகத்துக்கு மாறுபாடுவந்த காலத்தில், தங்கள் பழயதேகத்தை யடைவதுபோலவும், அந்தத்தேகத்திலனுபவிக்கக்கூடாத இஷ்டவிஷயங்களை மற்றொரு தேகத்தையடைந்து அநுபவித்துவிட்டு, மறுபடியும் பூருவதேகத்தை யடைவதுபோலவும், மூர்ச்சைதெளிந்துபார்த்துபெருமூச்சுவிட்டுப் பேசும்போதெல்லாம்ரக்தங்கக்கிக்கொண்டுவாயுபுத்திரனைப்பார்த்து, ஒருவருஞ் சமானமில்லாதவீரனே! என்னைச் சின்னுபின்னப்படுத்தினுய், இனியென்னுடனே யுத்தஞ்செய்யமாட்டாயல்லவா? என்று எதிரேநெருங்கி வந்து வரிசையாகத் தோள்களையுடைய ராவணன் சிலவார்த்தைகள் சொல்லுகிறுன். பலமென்பதும், அது உண்டென்பதும், உன்னிடத்திலேதானிருக்கின்றது, ஓ்வீரனே! மற்றவர்களெல்லாம் பேடிக்குச் சமானமானவர்கள். என்னை மூர்ச்சிக்கும்படி குத்தியபடியால் உன்பலத்தை இந்தச் சப்தலோகங்களிலும் நிறைத்தாய், பிரமதேவன்வந்து சலிக்கக்கடவாயென்றுசபித்தாலும்சலியாதவன் நான்,வருத்தமென்கிறதை இதுபரியந்தம் அறிந்தவனல்லாத என்னை அதையறியப்பண்ணினுய். ஓ!ஜயசாலியே! இன்னம் ஒருவார்த்தைஇருக்கிறது சொல்லுகிறேன்கேள்; உன்மார்பிலே பிரளயகாலத்திடிபோல என்கையால் ஒருகுத்து குத்துகிறேன்; அதற்குத்தப்பிப் பிராணனுடனிருந்தாயேயானுல் உனக்குச் சமானமானவர்கள் இந்த மூன்றுலோகங்களிலும் ஒருவருமில்லை, நீயே இன்றைக்கும், மற்றென்றைக்கும், உள்ளவன் உனக்கு வேறே பகையுமில்லை யென்று சொன்னுன். அதற்கு அநுமான் எப்போது என்கைக்குத்தினுல் சாகாமல் நின்று பேசினுயோ? அப்போதே நீ என்னை ஜெயித்தவனல்லவா? நீநல்லசமர்த்தன்,மிகுந்தபலவான் என்று எதிரேநடந்து அவன் சமீபத்திலேபோய், உன்கடனை நீ வாங்கிக்கொள்ளென்று மார்பைக் காட்டிநின்றுர். அப்படிமிகுந்த உற்சாகத்துடனின்ற ஆஞ்சநேயருடைய மார்பிலே, பல்லை இறுக்கிக் கடித்துக்கொண்டு, பிலத்துவாரம்போன்ற பத்துவாய்களையும் மடித்து இருபதுகண்களிலும் நெருப்புப்பொறிபறக்கக் கைகளை முறுக்கிப் பலவிரல்களுநம் நெரிய வீசி அஷ்டதிக்குகளும், போதாதென்னும்படி நீட்டி ஓங்கி இருபதுகையினுலேயும் குத்தினுன். அந்தக்குத்துப்படவே பிரளயகாலத்தில் சமுத்திரத்தினுல் மூடப்பட்டுப் பூமியழிந்தகாலத்திலும், அழியாத சிரஞ்சீவிகளெல்லாரிலும் வல்லமையுடையவரான ஆஞ்சனேயர். அந்த ராவணனுலே பூருவத்திலே சலித்த கைலாயம்போல மெய்சலித்துப் பதைத்தார். அப்படியநுமான் சலிக்கவே! தேவலோகமெல்லாஞ் சலித்தது. தர்மஞ்சலித்தது. சத்தியமொழிசலித்தது. பின்னையும், தவமும், வேதமும், நீதியுங், கருணையும், சகலமுஞ் சலித்ததுகள். அப்போது வானரவீரர்களனைவரும், எக்காலத்திலே ஆளுக்கொரு பருவத மெடுத்துக்கொண்டு, ஆகாசத்தில் வெளியில்லை யென்னும்படியாய்நிறைந்து பிரளயகாலத்தில்உலகங்களையெல்லாமழிக்க மேகங்கள்சொரிகிறதுபோல ஆயிரங்கோடிக்கு மதிகமான அந்தப்பருவதங்களை ராவணன்மேலே யெறிந்தார்கள். அதுகண்டு தேவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். வானரவீரர்கள் மிகுந்தகர்வத்துடன் மலைகளையெறிந்து ஆகாசத்தி விடமில்லாமல் ஒருவர்க்கொருவர் நெருங்கி விலகாமல் நிறைந்து நின்றபடியால் சூரியனுமறைந்து உலகமெல்லா மிருண்டது வானரர்களெறிகிறமலைகளினுல் இனிராக்ஷசர்கள் நசுங்கிப்போய் விடுவார்களென்று நினைத்துத் தேவர்களெல்லாம் ஆகாசத்தில்வந்து சூழ்ந்துகொண்டார்கள். வானரர்கள் எறிந்தமலைகளொன்றுடனொன்றுதாக்கி யுடைபட்டு,இடிகள்போல நெருப்புப்பறக்கும்படி ஒன்றோடொன் றுராய்ந்துகொண்டு, கோதண்டத்தினின்றும் புறப்படுகின்ற அம்புகள்போலவும், சிலாவருஷம் போலவும், பூமியில் விழவே ராக்ஷசசேனைகள்பயந்தோடத்தலைப்பட்டதுகள். அந்தப் பர்வதராசிகள்போய் விழுவதினுல் சமுத்திரங்களுஞ்சுவறிப்போய்விட்டதுகள். உலகமெல்லாம் இன்றைபதினம் கல்லால் முழுகிப்போய் விடுமென்ற பெருந்தொனி யுண்டாயிற்று. அதைக்கேட்ட ராவணன்மிகுந்தகோ

பங்கொண்டு, தேவர்களால் புகழ்பெற்றிருக்கின்ற தன்வில்லை வளைத்து ஆயிரமாயிரங்கோடி பாணங்களைப் பிரயோகஞ்செய்து அக்நனைமலைகளையுஞ்சில்லுச்சில்லாயுடைத்துக் கீழேதள்ளினான். அம்புகளினாலே துண்டுகளாக்கப்பட்ட பருவதங்கள் ராவணனைவிந்திருந்தமலைகள் துண்டுதுண்டாயறுந்துவிழவும், யானைகளெல்லாந்துண்டங்கள்படவும், ஆளிகள்-சிங்கங்கள் பெரியகொடிஞ்சிகளுடன்கூடிய தேர்கள் எல்லாம் சின்னாபின்னமாய் நசுங்கிப்போகவும் விழுந்ததுகள். தேவர்கள் ராவணனுடையபாணம் பாயும் விதமும், மலைகளொன்று நூறாயிரமாக முறிந்தவிதமும், மலைகளிடியுண்டு பொடிப்பொடியாய் நொறுங்கினவிதமும் கண்டு, இப்படியாக இந்தக்கொடியவன் வில்வித்தை கற்றானேயென்று பயந்து கைகளை விரித்தார்கள். ராவணனுடையபலத்தை நாசப்படுத்துகிறோமென்று வானரவீரக்கூட்டங்களெடுத்தெறிந்த மலைகளையெல்லாம் அவனுடையபாணங்கள் பொடியாக்கிவிட்டதுகள். அதனால் சுற்றிலுமிருந்த கடலெல்லாந் தூர்ந்துபோய்விட்டது. ரணகளத்தில் நின்றவர்கள் தேகத்தில்படிந்த புழுதிகளையெல்லாம் அவர்கள்தேகத்திலிருந்து வழிகிற ரக்தவெள்ளங் கழுவிவிட்டுப் பூமியையுந் துடைத்துக்கொண்டோடினது. அப்போது ராவணன் இந்தக் குரங்குக்கூட்டங்களிப்படிச்செய்கிறபடியா லிவைகளையெல்லாங் கொன்று, இந்த இரண்டு மனிதரையு மித்தக்ஷணமே வெல்லுகிறேனென்று அதிககோபத்துடனே பத்துக்கையிலேயும், பத்துவில்லையெடுத்துக்கொண்டு பத்துக்கையினாலும் பிரளயகாலத்து மேகம்போல சரமாரிகளாய்ப் பொழிந்தான். பத்துவில்லிலேயும் கையொன்றுக்கு ஆயிரமாயிரம் பாணங்களாகத் தொடுத்து எய்கிறபோது ஆகாசம், பூமி, சமுத்திரம் திசைகளெங்கும் அம்புகளாய் நிறைந்துவிட்டது. அந்த ரணக்களமானது ரக்தத்தினாலே அந்திவானம்போலே செவந்தது. வானரங்கள் பந்திபந்திகளாகமடிந்துவிழுந்ததுகள். பிணங்கள்மலைமலையாகக் குவிந்திருந்தபடியால் அவற்றை மலைகளென் றெண்ணி மேகங்கள் வந்து கவிந்ததுகள். நீலன் பட்ட அம்புடன் கீழேவிழுந்தான். அனலனும் மரணமூர்ச்சையாய்விழுந்தான். கவையன் அம்புதைத்து மூர்ச்சை யடைந்தான். காலகோடி விஷத்துக்குச் சமானமான அம்புடனே அங்கதன் மூர்ச்சையானான். சூலாயுதம்போன்ற முச்சிரபாணத்தால் சாம்பவன் சுருண்டுவிட்டான். மற்றவானரவீரர் மார்பில் அம்புகள் தைத்தபடியால் தங்கள் வெற்றிபெற்ற வீரங்களும், ஆண்மையான செய்கைகளும் குறைந்துபோனார்கள். சூழ்ந்திருந்த வானரப்பெருஞ்சேனைகளெல்லாம் சின்னாபின்னப்பட்டு மெலிந்துபோய்விட்டதுகள். மீதியான வானரங்களோடிவந்து முறையிட்டார்கள். இளையபெருமாள் கோபங்கொண்டு ராவணன் விட்ட நூறுகோடி, நூறுநூறாயிரகோடியான பாணங்களையெல்லாம் தமது அஸ்திரங்களால் அறுத்து அவன்கையிலே வைத்திருந்த பத்துவில்லையும் இரண்டிரண்டாகமுறித்துப்போட்டார். அதைக்கண்டு தேவர்கள் சந்தோஷித்து ஆரவாரித்தார்கள். ராக்ஷசர்கள் மெய்வியர்த்து, மனம் வெதும்பினார்கள். முனிவர்களெல்லாம் புஷ்பமாரிகள் பொழிந்தார்கள். லட்சுமணருடைய திருத்தோள்களைப்பார்த்துப் புகழ்ந்து பாடிக்கொண்டு தருமதேவதை வந்து சேர்ந்தது. ராவணன் இளையபெருமாளைப்பார்த்து, உன் யுத்தவல்லமையும் நன்றாயிருக்கின்றது, உன் யுத்தசாதுரியமும் நன்றாயிருக்கின்றது, உன் குறிப்பும் நன்றாயிருக்கின்றது, உன்கைவேகமும் நன்றாயிருக்கின்றது, உன்வித்தியா சாமார்த்தியமும் நன்றாயிருக்கின்றது. உன்னாண்பிள்ளைத்திறமையும், அதுபோலவே உன்மேனியழகும் நன்றாயிருக்கின்றது, என்று கரகம்பம்பண்ணி உனக்கு நியேசமானமென்று சொல்லி, ஆரணியத்தில் அன்றைக்கு கரனையும் அவன்சேனைகளையுங்கொன்ற உன்தமயனும், இந்திரனைத் தன்வல்லமையால் தேவலோகத்தில் ஜெயித்த என்மகனும், நானுங்கூடச் சரியல்லோ மானாலிந்த லோகத்திலே உனக்கு எதிராரிருக்கின்றார்கள் என்று சொல்லி இவனை வில்லினாலே நாம் ஜெயிக்கமுடியாது. இவனைத் தாமசியாமலின்றைக்கே கொல்லவேண்டுமென்று நினைத்து, உதட்டைப் பல்லினாலே யழுத்திப் பிர்ம்மா கொடுத்த வேலாயுதத்தைத் தன்பலங்கொண்டெடுத்து லட்சுமணர் பேரிலே யெறிந்தான். அதுவருகிறபோது லட்சுமணர் அநேகம் அம்புகளைக்கொண்டு தடுத்தார். அந்த அம்புகளையெல்லா மெரித்துப் பொறியாயுதிர்த்துவிட்டு அக்கினிகளைக் கக்கிக்கொண்டு அதிவேகமாய்வந்து லட்சுமணருடைய மார்பிலே பாய்ந்தது, பாயவே பராபுத்திமானாகிய இளையபெருமாளும் அந்தப்பெரிய ரணக்களத்திலே சோர்ந்து விழுந்தார். அதுகண்டுபயந்து வானரங்களோட்டமெடுத்ததுகள். தேவர்கள் நீங்கி உணர்வழிந்துபோனார்கள். ரிஷீஸ்வரர்கள் மனம் பதைத்தார்கள். ராக்ஷசாள் சமுத்திரத்திற் கொட்டிப் பாகக் கொக்கரித்துச். சந்தோஷித்தார்கள், பூமிசுழன்றது. சூரியனுடையபிரகாசமு மந்த

காரப்பட்டது. அப்போது ராவணன் இளையபெருமாளைப்பார்த்து, இவன் வேலுக்குப் பயப்படவுமில்லை, சாகவுமில்லை, மூர்ச்சித்திருக்கிறான், இவனை யெடுத்துக்கொண்டுபோய் விடுவோமென்றெண்ணித் தேரைவிட்டிறங்கி கால்நடையாக ரக்தப்பிரவாகத்திலே ஓடிவந்து மூன்று ருத்திரமூர்த்தியினுடைய வெள்ளியங்கிரியையெடுத்தது நம்முடையபராக்கிரமத்துக்கு அவமானமாச்சேயென்று நாணப்பட்டு அந்தநாணந்தீரும்படி அஷ்டகுலாசலங்களுக்கும் சிறந்த மகமேருவாகிய பொன்மலையை இப்போ தெடுக்கிறவனைப்போலவிலக்ஷித்துக்குச் சமானமான மனதையுடைய ராவணன் இருபதுகைகளாலுமூன்றி இளையபெருமாளை யெடுத்தான். தமக்கியற்கையான மேஷித்து கல்யாணங்கெடாமல் சாக்ஷாத் ஸ்ரீராமமூர்த்தியே? அந்தப் பிதாப்பாரதாரியாகிய ஸ்ரீயப்பதியென்று தம்முடையதிருவுள்ளத்தில் தியானித்துக்கொண்டு மூர்ச்சித்திருக்கின்றாரானதால், திக்குப்பாலகனைநடுங்கச்செய்து, கைலாசத்தையெடுத்த ராவணன் கைகளுக்கு அந்தராமானுஜர் எடுபடவில்லை, அப்போது பத்துத்தலையுடைய தசமுகனென்கின்ற ராவணன் ஒருகடலையொத்திருந்தான். அவன் கைகளுதயபருவதங்களை யொத்திருந்ததுகள். துளபமாலிகாதாரரான ஸ்ரீராமருடையதிருத்தம்பியாகிய இளையபெருமாள் அந்தப் பர்வதத்திலே உதிக்கின்ற பாலசூரியனை ஒத்திருந்தார். அப்படி இராமாநுஜனுடைய திருமேனியை எடுக்கப் பலமில்லாதவனாய் ராவணன் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தான். அப்போது மூர்ச்சைதெளிந்த அநுமாரோடிவந்து ராவணனை ஒருஇடியிடித்துத்தள்ளிவிட்டு, லக்ஷ்மணனைக் கையிலேதாங்கி யெடுத்துக்கொண்டு அதிவேகமாய் அப்பாலே போம்போது ஸ்வரூபத்தியானமொன்றுக்கு மாத்திரம் இளையபெருமான் ஆண்டவனென்று சொல்லுந்தன்மையையுடையவராக விருந்தாலும், அல்பென்னும் பக்தியால் ஒருகுட்டியைப்போலவும், ஆஞ்சநேயர் அந்தக்குட்டியைத்தழுவிப்போகின்ற மந்தியைப்போலவும் பிரகாசித்தார்கள். இவ்விதமாய் லட்சுமணர் சற்றுநேரத்திற்குள்ளாக மூர்ச்சைதெளிந்து எழுந்திருக்கும்படித்தூக்கிக்கொண்டு கையும், காலும், திருக்கண்களும், செந்தாமரைப்பட்ஷத்திற்குச் சமானமாகப்பிரகாசிக்கின்ற ஸ்ரீராமபிரானுடைய சந்நிதிக்குப்போனார். அப்போது ஸ்ரீகோதண்டதீக்ஷாகுருவும் யானையின்பேரிலே போருக்குப்போகின்ற ஒருசிங்கம்போல ராவணன்பேரில் எதிர்க்க நடந்தருளினார். தேவதைகள் புஷ்பமாரி பொழிந்தார்கள். ராவணனுந் தன்தேரைவிட்டுக்கொண்டுவந்தான். அவன் ரதத்திலேயும் ஸ்ரீகாகுஸ்தகுலதிலகர் கால்நடையாகவும் எதிர்க்கிறதைஅநுமானாகிய திருவடியானவர்கண்டு முன்னால் பரிசுத்தத்தை யடையும்படிதந்த கங்கையைச் சிரத்திலே தாங்கியமகாநுபாவர், அந்தக்கங்கையைத்தந்ததிருவடி பாவிகளுடைய போர்க்களத்தில் நின்றுசிரமப்படக்கண்டு சகிப்பாரோ! மனம்பொறுமல் மிகுந்த பரிவுடனேவந்து சுவாமீ! அவன் ஆயிரங்குதிரைகட்டின தேரின்பேரிலேறிவந்து எதிர்க்கத் தேவரீர் பாதசாரியாக எதிர்க்கிறது சுலபமாகக் காணும், அடியேன் சிறியேனானாலும் என்னுடைய தோளின்மேலேறி யருளவேண்டுமென்று பற்பலவிதத்தில்பிரார்த்தித்தார். அப்படி பிரார்த்திக்க, அநந்தகலியாணகுணபிராமனும் நல்லதுநல்லதென்று பருவதத்தின்பேரிலேதாவியேறுகிற ஒருராஜசிம்ஹம்போல அநுமானுடைய தோளிலேறவே, தேவர்கள்பல்லாண்டுபாடினார்கள். ஈன்றகன்றைத்தாங்கியெடுத்த தாயைப்போல மாருதி சந்தோஷித்துக் களித்தார். திருக்குறளான ஸ்வரூபமாய் உலகத்தையளந்தவருடைய திருவடியை அப்போது அநுமான் செவ்வையாகப்பார்த்தும் பரிசித்தும், சிந்தித்தும், அறிந்து சுமக்கக்கிடைத்ததேயென அதிசயமடைந்தார். அதுஅறிந்து எப்போதும் உரிமையாக அவரைத் திருத்தோளிலெடுக்கிற அந்தக் கருடபகவானும் ஸ்ரீராமபிரானைத் திருத்தோளில் எழுந்தருளச்செய்துகொண்டு ஆநந்தக்கூத்தாடுகின்ற ஆஞ்சநேயருடைய பாக்கியம் இப்போது நமக்குக்கிடைக்கவில்லையேயென்று நாணினார். ஆதிசேஷனும் தலைநடுங்கினார். அப்போது அந்த அநுமான் திருப்பாற்கடல்போலப் பிரகாசித்தார். ஸ்ரீராமர் அந்தத் திருப்பாற்கடலிலே வாசமாயிருக்கிற ஸ்ரீமகாவிஷ்ணுவான புருஷோத்தமனைப்போல விளங்கினார். ஆனாலும் அந்தப் பரமபுருஷோத்தமனைப்போலிவர் யோகநித்திரைசெய்யாமல் வீற்றிருக்கிற படியினாலே அந்தமாருதி வேதமும், ஸ்ரீராமர் அந்தவேதத்தினுடைய முடியிலேயிருக்கிற போதசொரூபமான ஸ்ரீஹரியும்போலப் பிரகாசித்தார்கள், மேலும் அந்த அநுமான் ஞானம்போலவும், ஸ்ரீராமர் அந்தஞானத்துக்கு மேலேயிருக்கிற பரமபதம்போலவும் காணப்பட்டார்கள். அண்டங்களையெல்லாம் உண்டு வயிற்றிலடக்கின, அந்தப் பகவானைத் தாங்கிக்கொண்டிருந்து பலவிதமாகச் சாரிகைதிரிகிற அநுமானுடைய தோள் வெண்மையாயிருக்கிற படியால் அந்தமகாமேருபர்வதத்தையும் சமா

ணமாகச்சொல்லக்கூடாது. அப்படி தோன்று கிற அனுமானையும் அவர்தோளிலே சேவை சாதிக்கிற சக்கிரவர்த்திதிருமகனான கோதண் டராமனையும் கண்டு, ரிஷிஸ்வரர்கள் பல்லா ண்டு சொன்னார்கள், தர்மதேவதையுங் கையை யெடுத்துக்கொண்டு ஆனந்தநிர்த்தனமாடியது. சிவன், பிர்ம்மா, உபேந்திரனாகிய விஷ்ணுமுத லானசகலமானதேவர்களும் இந்தராமராவணர் களுடையயுத்தம்பார்க்கும்படியாகவந்தவர்கள் அச்சத்தோடுசோர்ந்தார்கள், அப்போது ஸ்ரீரா மன் கோதண்டத்தையெடுத்து குணத்தொனி பண்ணினார், அந்தத்தொனி பிரளயகாலத்திலே சகல ஜீவராசிகளையும், தன்வாயிலே போட்டுக் கொள்ளுகிறபோது ருத்திரன் கொக்கரிக்கும் தொனிபோ லிருந்தது. ராக்ஷசர்களும் இ யக்கர்முதலாகிய அனைவரும் பிராணனும்போ காமல் நிற்கவும், மாயாமல்சோர்ந்து நாவுலர் ந்து கலங்கி மிருகங்கள்போல அறிவுநீங்கி ந டுங்கினார்கள். பதினாலுலோகமுங் குலைகுலை ந்து பிரமதகணங்களுக்கு இறைவனாகிய சிவ னும், பிர்ம்மாவும், தலைநடுங்கினார்கள். அந்த ச்சமயத்தில் ராவணன் பிரளயகாலாக்கினிபோ லச் சமுத்திரநீரையுங் குடிக்கத்தக்க வைகளும் திக்குகளெல்லாம் அளக்கத்தக்கவைகளும், பூ மியையும்ஆகாசத்தையுந் தொளைக்கத்தக்கவை களுமாகிய ஏழுபாணந்தொடுத்து எய்தான். அந்த ஏழுபாணத்தையும், பதினாலுதுண்டமா க அறுத்துத்தள்ளிப், பின்னும் அஞ்சுபாணங் களைக் கோதண்டத்தில்பூட்டிக் காலாக்கினியுந் தீயும்படியான அக்கினி வீசிக்கொண்டுபோக ஸ்ரீராமர்பிரயோகம் பண்ணினார். அந்த அ ஞ்சுபாணத்தையும், அஞ்சுபாணத்தினால் ஆ காசத்திலேயே விலக்குவித்து அம்புகளை ஆ கர்ன்ன பரியந்தமாக நாணையிழுத்துராவணன் விட்டான். வேதமுதல்வராகிய ஸ்ரீராமபிரா னாரும், பத்து அம்புகளையெய்து அந்தப்பத் தம்பையும் அறுத்துத்தள்ளினார். அவன்சமீ பத்திலேயிருக்கிற அநேகராக்ஷசர்கள் பிரயோ கம்பண்ணின ஆயுதமழைகளையுஞ் சில அம் புகளினாலே அறுத்துத்தள்ளி அவர்களுடைய யானைகளையுஞ் சுட்டெரித்து, அவர்களது தலை களையும் அறுத்து, மலைமலைகளாய்க் குவித்து, அவர்கள் பிரயோகம்பண்ணின ஆயுதங்களை யும், ராவணனெய்கிற அம்புமழைகளையும், வா னரர்கள் பேரில்வந்து படாமல் மறுத்து அந் த ராக்ஷசர்களது தலைகளையும் துண்டித்தார். அப்போது அனுமானானவர் பூமியிலேயிருந் தாரென்று பார்த்தால், ஆகாசத்திலேயிருப்பா ர். மறுபடியும் ஒருக்ஷணத்திலே அந்த ராவ ணனுடைய எல்லா முகங்களுக்கு மெதிரே நே

ராகநிற்பார். அங்குவந்தவஞ்சகரான அந்த னை ராக்ஷசர்களுடைய முகத்துக் கெதிரேயும் பிரகாசிப்பார். அதிவேகமாய் ஸ்ரீராமனுடை ய அம்புக்கு முன்னேயும் போவார். மனதுக் கும் முன்னேயும்போய் நிற்பார். அப்பிரகா ரம் இடசாரி வலசாரியாகச்சுழன்றுதிரியும்போ து, அந்தரணக்களத்திலே எங்குங்கவந்தங்களா டினதுகள். அவைகளுடனேகூடப் பேய்களு மாடிப் பாடத்தலைப்பட்டதுகள். யானை - தே ர் முதலானதுகளை யிழுத்துக்கொண்டு பலரக் தஆறுகள் கடல்போ லெங்குமோடினது. அந் த ரணக்களத்தில் தேர்களெல்லாம் சக்கரங்க ளோடுகூட அஞ்சுருவாணிமுறிந்து உடைபட் டுப்போயின. யானைகளுருண்டுபோயின. கு திரைகளெல்லாம் துண்டங்களாய் விழுந்தன பேய்களும் ரணக்களத்தில் கூட்டங்கூட்டமா யடைந்ததுகள். ராக்ஷசர்களெல்லாந்தேரிழந் து, சிலையிழந்து, ஆனையிழந்து, குதிரையிழந் து, தங்கள் சௌரியமும், கவசமும், பிடித்துவ ந்த துவசமும் மார்பிலே தரித்துவந்த வெற்றி மாலைகளுமிழந்து, பிறகு தங்கள்தலைகளுமிழ ந்து போனார்கள். அந்தச்சமயத்தில் அநேக ராக்ஷசஸ்திரீகள்வந்து தங்கள்புருஷர்களுடைய தலைகளைத் தேடிப்பார்த்து, விகார சொரூப முள்ள அரக்கர்களுடைய தலைகளும், யானை- குதிரைகளுடைய தலைகளும், பேதந்தோன்று மல் சிதைந்து குழம்பிக்கிடக்கிற படியால் மயங்கி யானைத்தலையை இதுதான் என்புருஷ ன் தலையென்றும், குதிரைத்தலையை இதுதான் என்கணவன்தலை யென்றும், இவ்வாறாக எடுத் து உடற்குறைகளோடு பொருத்திப்பார்த்துத் தழுவிக்கொண்டு அழுதுமாண்டார்கள். ஸ்ரீ ராமபாணமான காலனானது ஒன்று பத்து நூறு ஆயிரமாகத் தலைகளையறுத்துக் குவித்து ம், அதன்விசைபோயாமல் திரிந்துக்கொண் டு அநேககோடி சேனைகளையும் உருவிச்சென் றது. தன்தேருடனே ராவணனொருவனிற்க, ம ற்றங்குள்ள சேனைகளெல்லாங் கொலையுண்டு போகவும், ராக்ஷசர்களுடைய வாய்கள் ஆர்ப்ப டங்கினதுகள். கண்கள் அக்கினிகளைக் கக்கிக் கொண்டு பார்க்கின்ற அவரவர்கள் அகங்காரங் குலைந் தலைந் தடங்கினதுகள். அவனுடன் வந்த ரதகஜதுரகபதாதிக ளெல்லாம் மாண்டு, பிணங்கள் மலைமலைகளாய் மேகமண்டலமுதல் ஆகாசபரியந்தம் உயர்ந்து கிடக்கிறதைப் பல திசைகளிலுங்கண்டு, ராவணன் சர்ப்பம்போல ச்சீறிக்கோபித்து, அதிசீக்கிரமாகவில்லிலே இ ரண்டுபாணங்களைத் தொடுத்துத் தோளளவும் வாங்கி, ஸ்ரீராமமூர்த்தியினுடைய மரகதரத்தி னம்போன்ற இரண்டு திருத்தோள்களிற்போ

யுறுத்தும்படியாய்ப் பிரயோகம்பண்ணினான். அதுகண்டு ஸ்ரீராமர் புன்னகைசெய்து ஒருதிவ்வியாஸ்திரம்வாங்கிப் பிரயோகித்து, ஊழிக்காலத்துச் சண்டமாருதக்காற்றானது மந்திரகிரியை முறித்துவிட்டதுபோல அந்த ராவணன்கையில் பிடித்திருந்தவில்லைத் துண்டித்துவிட்டார். துண்டித்தமாத்திரத்தில் நிமிஷத்தில் ராவணன் மறுவில்லெடுத்து நாணேற்றி ஆக்ரமித்து அம்பைத் தொடுக்குஞ்சமயத்தில் அதையும் எம்பிரானாகிய ஸ்ரீராமமூர்த்தி ஒருதெய்வீகம்பொருந்திய அஸ்திரத்தைவிட்டு நாசப்படுத்திவிட்டார். அவ்வளவிலே நில்லாமல் அதிவேகமாக அந்தராவணனுடைய ரதத்திலே கட்டியிருந்த அநேககுதிரைத்தலைகளையு மறுத்தெறிந்தார். அந்தக்காலத்தில் அதிகபலம்பொருந்திய ராவணன் பின்னொருவில்லில் அஸ்திரமெடுத்துப் பிரயோகஞ்செய்யயத்தனித்தான். அதை அவன் எடுக்கவொட்டாமல்கணைகளாலே ஸ்ரீராமமூர்த்திதடுத்தார். அவனுடையகுடையுங் கொடியும், பாணங்களும், கணைகளாலே துணிந்து விழும்படியாக அறுத்துத்தள்ளி அவனுடைய அதிகபிரகாசமான கவசத்தையுமறுத்துவிழத்தள்ளினார். இதுவுமன்றி அந்தராவணனுக்குமேலுமேலும் யுத்தகளத்தில்வருகிற மேசமத்தேர்களை வரவொட்டாமல் அதியுக்ரமான பாணங்களால்விலக்கி நாசப்படச்செய்தார். அப்போது எமனுங்கையெடுத்துக்கொண்டு ஆடும்படியாக, அந்த ரக்தவெள்ளமோடுகிற ரணகளத்தில் அந்தத்தேரைவிட்டுக் குதித்தான். குதித்தபோது பிரகாசித்துக்கொண் டிருக்கிற அவன் கிரீடங்களின்மேல் சிலபாணங்களை யெய்தார். அந்தப்பாணம் முன்னாலே சூரியன்பேரிற் பாய்ந்த அனுமானைப்போல அதிகவிசையாகப் போயவன்கிரீடத்தைப்பலமேருமலைகளைத்தள்ளிக்கொண்டு போவதுபோலத் தள்ளிக்கொண்டுபோய்ச் சமுத்திரத்திலே போட்டுவிட்டது. அந்த ராமபாணமானது இழைக்கப்பட்ட ரத்தினங்களையெல்லாம் திக்குவிதிக்குகளில் சிதறும்படியாகப்பண்ணிக் கிரீடங்களைக்கடலிலே தள்ளினபடியால், வாயுபகவானால் முறிப்பட்ட மேருவின்கொடு முடிகள்பறிபுண்டு கடலில்விழுந்ததுபோலவும் அந்தமகுடங்கள் பிரகாசித்தன. பின்னையும், ஸ்ரீராமருடைய கோதண்டத்தினின்று புறப்பட்ட அம்புகளோடு பறியுண்டுபோய்க் கடலில்விழுந்த அந்தமகுடமானவைகள், பரிவேடத்துடன் கூடிய சூரியர்கள் தங்களைவாயால் கௌவிக்கொண்ட கிரஹஸர்ப்பங்களுடன் சமுத்திரத்தில் விழுந்ததுபோலவு மிருந்தன. ஓர்விசைசெய்து மனவைக்குள் தன்கிரீடங்களையிழந்த அந்தத் தாத்துமா வானவன் சூரியனை இழந்த பகலைப்போலவும்; சந்திரனை இழந்த ராத்திரியைப்போலவும், பொலிவிழந்து காணப்பட்டான். இதுவரையிலும் தன்னோடு சண்டைசெய்தவர்களிடத்தி லெல்லாம் வெற்றிபெறுவதேயல்லாமல், இந்தஸ்ரீராமரிடத்தில் தோற்றதுபோல ஒருவரிடத்திலும் தோற்றறியாத வல்லவனான இந்தராவணன்; சகலபாக்கியமும் பெற்றுப் பராக்கிரம முள்ளவனானாலும், வித்துவான்களுக்கு அபசாரஞ்செய்ய அவர்கள்மனதுநொந்து வசைபாடித் தூஷணித்தால், அவன் எப்படி நல்கீர்த்தியுஞ் செல்வமு மிழந்துபோவானோ? அப்படி, எல்லா மிழந்தவனானான். தருமந்தப்பி நடக்கிறவர்களுக்குரிய விப்படிதான் முடியுமென்று உலகஞ்சொல்லும்படியாய் முகங்கருகிப்போய் கால்விரலாலே நிலத்தைக்கீறிக்கொண்டும், தலைகள் குனிந்து தரையைப்பார்த்துக்கொண்டும், முகத்தில் சிறிதும்பவிஷுமில்லாமல் வெறுங்கைகள் தொங்க- விழுதுகள்தொங்குகின்ற ஒருஆலமரம்போல நின்றான். அந்தப்பிரகாரம்நின்ற ராவணனை கிருபாநிதியான தாசரதிபார்த்து வெறுங்கையுட னிருக்கின்றவனைக்கொல்லலாகாதென்று திருவுளத்திலெண்ணி, அவனைப்பார்த்து ஓ ராவணா! உன்னுடைய அக்கிரமம் இன்றைக்கு அழிந்துவிட்டதுபோலு மிருக்கின்றதென்று சொல்லிச் சில வார்த்தைகள் சொல்லுகின்றார். தருமசிந்தையுள்ளவர்க ளெவர்களானாலும் அவர்களுக்குச் செயமாகுமேயல்லாமல், தேவர்களானாலும் அதர்ம்மத்தினாலே ஜெயமடையமாட்டார்கள். என்கிற நீதிவாக்கியத்தை உன்மனதிலே வைத்துக்கொண்டு, ஐயோ பாவி! நீ இப்போதே ஓட்டமா யோடி உன் பதியையடைந்துவிடு. இன்னம் க்ஷணநேரமாத்திரம் என்னுடன் மாறுகொண்டு எதிர்த்து இருப்பாயேயானால் உன்பிராணன் போய்விடும், அது உண்மையாகவிருந்தாலும் அப்படிநானினைத்தவனல்ல, நீதனியனானபடியினாலே மனமிரங்கினேன். உன்குலத்தாருடனேயும், உன் உறவின் முறையாருடனேயும், ஆயுதங்களுடனேயுமோ? அல்லாமலும் உன்னால் என்னென்ன ஆயுதங்கள் சம்பாதித்திருக்கின்றனவோ! அவைக ளெல்லாவற்றுடனேயும் யுத்தத்துக்குவர இஷ்டமிருந்தால் வரக்கடவாய். அல்லது உனக்கு அவ்வளவு பலாபலத்துடன் வருவதற்கு சக்தியில்லையாகில் எங்கேயாவதுபோய்ப் பதுங்கிக்கொள்வாயாக. அற்பமிருத்தியுஞ் செய்கிற ஓ ஹீனகுணவானே? நீ சிறையில்வைத்திருக்கிற சீதையைக்கொண்டுவந்துவிட்டு உன்தம்பியாகிய விபீஷணனை இந்தலோகத்திற்குத் தெய்வமெனநினைத்து ராக்ஷசர்களுக்கெல்லாம்

ராஜாவாகப் பட்டங்கட்டிவைத்து, நீ அவனிட்ட வேலைச்செய்துகொண்டிருப்பாயானால், உன் தலையை என்பாணத்தினாலறுத்துப் பூமியிற்றள்ளமாட்டேன். அப்படிக்கல்லவென் றுயுத்தஞ் செய்ய உனக்குத்தேகவலுவிருந்தால், உன்பலமெல்லாங்கொண்டு என்னெதிரே நின்று சண்டைசெய்து மாணமடைந்து சுவர்க்கலோகத்திற்குப்போய் அங்குண்டான சகலருக்கும் தலைவனாகப் பேரெடுத்திரு. இனி நீபிழைத்திருப்பாயென்று மனதிலாசைவையாதே ! நீபிடித்துவளைத்துநின்ற வில்லும்முறிந்தது. தேருமழிந்தது. நீ கொண்டுவந்தபெருங் கூட்டமான சதுரங்கசேனைகளெல்லாம் நாசமாய்விட்டதுகள். நீயு மிளைத்துப்போய் விட்டாய். உனக்கு நல்லசண்டைசெய்து பார்க்கவேண்டுமென்று விருப்பமிருந்தால், ஆண்பிள்ளைத் தன்மையையுடைய ஓ ராவணா ! உன்க்குதவியா யமைந்திருந் தலைகளெல்லாம், சண்டமாருதக்காற்றி லகப்பட்ட பூளைப் பூப்பறக்கிறது போலப் பறந்துபோய்விட்டதை நீ உன்கண் முன்னாகக் கண்டிருக்கின்றாயே ? ஆகையால் நீ இன்றைக்குப்போய் நாளைக்குவாவென்று கோசலதேசாதிபதியான ரகுகுலோத்தமர் மிகுந்த கிருபையுடனே ராவணனுக்குச் செலவு கொடுத் தனுப்பிவிட்டார்.

இராவணன் முதனாள் யுத்தப்படலம் முற்றிற்று.

.............

## கும்பகர்ணன்வதைப்படலம்.

அப்போது ராவணன் திக்கஜங்களுடனே போர்செய்து ஜெயம்பண்ணின மார்பினுடையபலமும், கைலாயபர்வதத்தையெடுத்த புஜபலமும், ரிஷிகளுக்கெல்லாம் வேதங்களை அத்தியயனம் பண்ணுவித்த நாவினுடைய சாதுரியமும், வெற்றிமாலையைத்தரித்துப் பிரகாசிக்கின்ற கிரீடங்கள்பத்தும், சங்கரன் கொடுத்தவாளும், தன்னுடைய சௌரியங்களும், ரணகளத்திலேயே இழந்துவிட்டு, வெறுங்கையுடனே திரும்பிப்போய் லங்கையைச்சேர்ந்தான். தேவர்களை வெற்றி கொண்ட திரிலோகாதிபதியான ராவணன் இவ்விதமாக நிராயுதபாணியாய் அபகீர்த்திகூடத்தொடர்ந்துவரக் கால்நடையாகச்சென்று நகரம்புகுந்தபோது சூரியனும் அஸ்தமனமானான். அன்றலர்ந்ததாமரைமலரையொத்த முகங்களையுடைய வண்டோதரி முதலான ஸ்திரீகள் கண்களெல்லாம் வாள்போலவும், தம்பிள்ளைகள் வார்த்தை அந்தராமபாணம்போலவும், நவக்கிரகங்களாகிய கோள்களையெல்லாம் ஒரேவிடத்தில் சிறைவைத்தாண்டுவந்த ராவணனுக்கு அன்றைக்கு ஸ்திரீகளுடைய ஸ்தனங்கள் தன்னுடைய வெறுந்தோள்போல பார்க்கவெறுப்பாகவுமிருந்தன. திசைகளையும் பாராமல் அந்தப்பட்டணத்தையும்பாராமல், எதிர்கொண்டுவருகிற தன்சிநேகிதர்களையும் பாராமல், சேனுசமுத்திரங்களையும் பாராமல், ஸ்திரீகளெல்லாந் தன்னைப்பார்க்கத் தான் பூமியைப் பார்த்தப்படியே போனான். மந்திரிகளாகிய பந்துக்களும், தன்பெண்சாதிமார்களும், சேனைத்தலைவர்களும், உறவின்முறையார்களும், மனந்திகைத்து ஒன்றும்பேசாமல் சித்திரப்பிரதிமைகள்போலநிற்க. ஒருவருமில்லாமல் தான்மாத்திரம் ஒருமதயானை தன்கொட்டாரத்தில் போவதுபோலத்தன் மாளிகையிற்போய்ச் சேர்ந்தான். அவ்விடத்தொரு பொற்சிம்மாசனத்திற்போ யுட்கார்ந்து ஆயாசத்தைத்தீர்த்துக்கொண்டு, எதிரே நின்றிருந்த ஒருகாவற்காரனையழைத்து நம்முடையதூதர்களை அழைத்துவாடா வென்று ஆஞ்ஞாபித்தான். அந்தக்ஷணமேஅவன்போய் மனகதியென்றும், வாயுவேகனென்றும், மருத்தனென்றும், மேகனென்றும், பேரினையுடைய நான்குதூதர்களைக்கூப்பிட அவர்கள்வந்து நின்றார்கள். அப்படிவந்து நின்றவர்களைப் பார்த்து இந்தக்ஷணமேநீங்கள்ஓடி நம்முடையராக்ஷசசேனைகள் எங்கெங்கே யிருக்கின்றதோ ! அங்கங்கே விரைந்துபோய் அவைகளையெல்லா மழைத்துக்கொண்டு, ஓடிவாருங்கள், இன்னும் சப்தசமுத்திரம், சப்ததீபங்கள், அளவற்ற பர்வதங்கள், பாதாளலோகம், சக்கிரவாளகிரியாகிய இவைகளிலிருக்கிற ராக்ஷசர்களென்கிற பெயருள்ளவர்களை யெல்லாம் ஒருவரை விடாமல், அதி சீக்கிரமாக அழைத்துக்கொண்டு வாருங்களென்று உத்தரவு கொடுக்கவே ? அந்தத் தூதர்கள் அந்த ஆக்கினையைச் சிரசாவகித்து ராக்ஷசர்களைத்தேடிக்கொண்டு போனார்கள். முறைமுறையாய் ராவணனுக் கேவல் செய்துகொண்டிருக்கிற, சுவர்க்கமத்திய பாதாளமென்கிற மூன்றுலோகத்தவர்களும், ராவணனுடைய கருத்தின்னதென்று தெரியாமையால் என்ன அபாயம்நேரிடுமோவென்று மனம்பதைத்து அழுதுகொண்டு நின்றார்கள். அவ்வாறு இவர்களிருக்க. ராவணன் தோல்வி யென்னும் வேலானது இரண்டுபக்கங்களிலுங் குத்துவதி

ருல் வேடனெய்த அம்புதைத்த உடனுடனே சாய்ந்த யானையைப்போல ஒரு புஷ்பமெத்தையின்மேரில் சாய்ந்து, முன்னே ஸ்ரீராமபிராட்டியாரிடத்திலேவைத்த நினைவு நிறைந்திருக்கிற நெஞ்சில் தோல்வியினாலுண்டான வெட்கமும் நிறைந்தபடியால், பிறருக்குள் ளுண்டாவது அவ்வெட்கத்தை மறைத்துக்கொள்ளுகிறதற்கும் இடமில்லாமல் தோன்றிய வியசனமானது, மனதைச்சூழ்ந்துகொள்ளவே? தன்னுள்ளமானத்தை வெளியிற் கக்குகிறதைப்போலப் பெருமூச்சு விடத்தலைப்பட்டான். சுவர்க்கலோகம் - பூலோகம் - எல்லாவற்றையுந் தன்கையால் தோல்வியடையப்பண்ணித் தாம் நகைத்தவன்; ஸ்ரீராமலக்ஷ்மணர் முதலான பகைஞர்கள் சிறியமனிதர்களென்று வெட்கப்படவில்லை? மிதிலையிற்பிறந்த ஜானகியானவள் சிரிப்பாளென்கிறதற்குமாத்திரம் மிகுந்த வெட்கமுற்றுச் சோர்ந்து கிடந்தான். அவன் சோர்ந்து கிடக்கும்போது, வயதுசென்றதனால் வில்லைப்போல்வளைந்து கூனியதேகத்தையுடைய அவன் பாட்டனாகிய சுருணையுள்ள மாலியவானென்கிற ராக்ஷசன். ராவணன் படுத்திருந்த மெத்தையின்பக்கத்திலே ஒரு ஆசனத்திலிருந்துகொண்டு லங்காதிபதியினுடைய இருப்பைநன்றாயுற்றுப்பார்த்து, அப்பா பேரப்பிள்ளாய்! பட்டாற்றெரியும் பறையனுக்கென்பதுபோலிருக்கிறதே! நீ உன்மனதும், தோளும், வாடியிருக்கிறாய். ஒருநாளும்வாடாத தம்பாபலத்தையுடைய என்னையனே! என்ன நடந்தசெய்தி! சொல்லென்றுகேட்க, ராவணன் அதிகமான மனக்கவலையுடனே காந்தியெரிகிற கண்களையுடையவனாய்ப் பதைபதைத்துப் பருத்தநெருப்புத்திவளிகள் காற்றடித்து வருவதுபோலப் பத்துமூக்குகளிலும் அதிகக்காற்றுவப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, பாகு - அமிர்தமிதுகளை நக்கினாலும், சுவைதெரியாதபடி வறண்டநாவுடனே பாட்டனைப்பார்த்துச் சொல்லுகிறான். ஐயா! என் உயிருக்குயிராகிய பாட்டனே! கூட்டங்கூட்டமாக ரிஷிகளும், தேவர்களும்; நாமுமிருவராயில் ஒருதேகம்போலப் பேதமற்றிருந்தோமே! அப்படிப்பட்ட நம்முடைய குலத்துக்குப் பங்கமும், பழியும் வந்துநேரிட்டது, குழந்தைச் சந்திரனைத்தரித்த அந்தத் திரிபுராந்தகன் முதலாகத் திரிலோகத்தவர்களும் நமக்குக்கூட உபபலமாகவந்து எதிர்த்தாலும், பாட்டா! என் பெருஞ்சேனையெல்லாம் அந்த இளையவனான லக்ஷ்மணன் வில்லை வளைத்துப் பாணப்பிரயோகஞ்செய்தால் அவனுக்கேபோதாது. இப்படி அதியுக்கிரமாகப் போர்செய்கின்ற அநேகவெள்ளம் ராக்ஷசவீரர்களுடைய ஆவியைப் பயப்படும்படி ஸ்ரீராமன் கவர்ந்தகாலத்திலும், அந்தஅவமானத்தையெல்லாம் என்முதுகின்மேல் சுமத்தினகாலத்திலும், அந்தமனுஷனுக்குக்கொஞ்சமாகிலும் கோபம்வரவேண்டாமா? அது பரிச்சிதமில்லையே, முன்னாலே கூனிமுதுகிலே உண்டைவில்லு தெறித்தபோது அது எப்படி விளையாட்டாக விருந்ததோ! அதேபிரகாரம் இன்றைக்கு மிருந்தது. அம்பானது அவன் கையைவிட்டுப் புறப்பட்டால் உலகங்களிலெல்லாந் திரிந்துகொண்டிருக்குமேயல்லாமல் ஊழிக்காலமானாலும் ஒயுமென்று சொல்லக்கூடுமா? பிரளயகாலாக்கினியையுந் தீய்க்கும், போகுந்திசைகளையுந்தீய்க்கும், மகமேருவைப் பிளக்கவேணுமென்றாலும், ஆகாசத்தைக் கிழித்துக்கொண்டு அப்பாற்போகவேணுமென்றாலும், இந்தப் பூமியைக்கிழித்து ஊடுருவிப் போகவேண்டுமென்றாலும், இந்தச் சமுத்திரஜலத்தைக் குடிக்கப்புறப்பட்டாலும், அதற்கு லக்ஷியமாகுமா? அவைகளுடைய வல்லமைக்கு மகம்மேருவும், உலகங்களும், ஆகாசமும், சப்தசமுத்திரங்களும், அநேக கோடிகளாகவிருந்தாலும் அப்போதாவது போதுமா? அவன் வில்லில் நாணைப்பூட்டி வளைக்கிறதும், அம்புதொடுக்கிறதும், தேவர்களுக்கும் பார்க்கமுடியாதென்றால், இன்னம் மற்ற எவர்கள் தான் தெரிந்துசொல்லப்போகிறார்கள். ராக்ஷசரைச் சம்ஹரிக்க வேண்டுமென்று அவனினைத்தாலேபோதும், உலகமெல்லாம் அம்புக்கூட்டங்களாக நிறைந்துபோகும். இந்த இருநூறுவெள்ளஞ்சேனைகளையும், யானை, குதிரைகளையும், ராக்ஷசர்களையும் தலைகளையறுத்தறுத்துத் தள்ளினதேயல்லாமல்சரீரங்களிலே தடைபட்டதுண்டா? நல்ல வித்துவான்கள் நாவில் பொருள்களைக் குறித்து அமைக்கப்பட்டதும் ஞானத்தைமனத்தின்கண் விளைவிப்பதுமான சொற்களைப்போலவும், அச்சொல்லாலமைந்த செய்யுட்களினது மோனை, எதுகை, இயைபு, முரண், அளபெடைமுதலியதொடைகளைப்போலவும், அத்தொடையினளவை நீக்கி அந்தந்த சுரத்துக்கமைந்த சுதிகூட்டி; மந்தரம், மத்திமம், தாரம் முதலானவழியிற்பாடப்படும் அளவுக்கடங்காத பண்களைப்போலவும், குன்றக்கூறல் முதலிய குற்றங்களற்ற தன்மை, உவமை முதலாகிய பற்பலஅலங்காரங்களைப்போலவும், அளவிடக்கூடாத பெருமையையுடையதாக விருந்தது. அந்தக்காகுத்தனுடைய பாணங்கள் இந்திரனுடைய வச்சிராயுதமும், சிவனுடைய மந்திரச்சத்தியுள்ள முத்தலைச் சூலா,

யுதமும், விஷ்ணுவினுடைய சக்கராயுதமும்
ஆகிய இவைகளெல்லாம் வருகிற வேகத்தைப்
பார்த்தேன், அதற்குமிதற்கும் வெகுதாரதம்மி
யமிருக்கிறது. இந்தமனுஷினுடைய அம்பை
ச் சகிக்கமாட்டாமல் நான் அதிகமாய் நொந்
துபோனேன். என்னை யல்லாமல் வேறே
யாராவது அதைக் கண்ணாலாவது பார்க்க
மாட்டுவார்களோ ! சுடுகாட்டில் பேய்க்கண
ங்களுடனே வாசம்பண்ணுகின்ற தன்மையை
யுடைய சிவபெருமானுடைய எட்டுத்தோ
ளும், இந்திரனுடைய இரண்டுதோளும், சர்வ
லோகங்களையும் தன்வயிற்றி லடக்கி வைத்துக்
கொண்டிருக்கின்ற விஷ்ணுவினுடைய ஆயிர
ந்தோள்களும், இந்தமனுஷினுடைய ஒருவிர
லின்வல்லமைக்கு ஈடுகொடுக்கமாட்டுமோ ? கொ
டுக்கமாட்டாது. திரிபுரங்களைச் சுட்டெரித்
த பலம்பொருந்திய அந்த மேருவில்லும்,
இந்த வீரனுடைய வில்லுக்குமுன்னே அம்
பென்றுசொல்லவுங்கூடுமா? கூடாதாகையால்
அதற்கு இணையாகச்சொல்லுகிறதற்கு வேறே
யொரு பொருளுங்கிடையாது. வேதந்தப்பி
னும், அவனுடைய வில்லிலிருந்து வருகி
ற அம்புகள் தப்பமாட்டாதுகள். மஹா
வீரர்களுக்குள்ளே அந்த விஷ்ணுவானாலும்
கார்த்தவீரியனுக்குச் சமானமாக மாட்டா ரெ
ன்று நான் எண்ணியிருந்தேன். அப்படிப்
பட்ட கார்த்தவீரியனும் இந்த மனிதனுடைய
தம்பியின்பாததூளிக்குஞ் சரியாகமாட்டா னெ
னால் அவர்களெதிரே கலங்காத சித்தத்தை யு
டையவர்களாக நிற்கத்தக்க வல்லமைசாலிகள்
யாரிருக்கின்றார்கள். மேலும், அவனுடைய
பாணங்கள் புறப்படுகிறபோது நாலுமுகமாக
ப் புறப்பட்டு பிரமதேவனுக் கொப்பாகவும்,
ஓடுகிறகாலத்தில் காலாயிரம், முடியாயிரம்,
கையாயிரமுள்ள விஷ்ணுவுக்கு நிகராகபல
வாகவும், அது சத்துருக்கள்படையைச் சேர்ந்
தபோது அவர்களை நிச்சேஷமாகச் சம்ஹரி
த்துப் பிரளயகால ருத்திரமூர்த்தி யென்று
கண்டோர் சொல்லும்படியாகவும் இருக்கும்.
அதன் பெருமையைச் சொல்லுகிறதற்கு எத்
தனைகாலம் செல்லும், அற்பத்திலே நம்மால்
சொல்ல முடியத்தக்கதோ ? ஐயா ! மாலிய
வானே ? அந்தப்பாணங்கள் மேலே ஆகாசத்
தையுந்துடைத்துக்கொண்டு வருமானால் அது
களின்வல்லமைக்கு வேறேசாக்ஷியும் நான்சொ
ல்லவேண்டுமோ? நானென்னென்று சொல்லமா
ட்டுவேன், அந்த மனுஷினுடைய வில்லானது
கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, பூமி, ஆகா
சம், மற்றஇடங்கள் இந்தத் திசைகளிலெந்தத்
திக்கிலிருந்ததோ ! இடதுகையிலிருந்ததோ !
அல்லது வலதுகையிலிருந்ததோவென்று இன்
னம் நினைத்துநினைத்துப்பார்க்கின்றேன். அது
என்மனதுக்குத் தோற்றப்படவில்லை. அதி
ருக்கட்டும், அவனுடைய வாகனத்தின்பெரு
மையை நான் என்னவென்று தெரிந்து சொல்
லப்போகின்றேன். அந்தக்கருடனும்யுத்தத்தில்
இப்படி மூனைந்து இடசாரி வலசாரி வலசாரி
இடசாரியாகத் திரியமாட்டான். அந்த ஸ்ரீரா
மன் காற்றின்மேலேதா னேறியிருந்தானோ!
கனலின்மேலேதா னேறிவந்தானோ! கூற்று
வன்மேலேதா னேறிச் செலுத்தினனோ வென்
று லப்படிக் கில்லையே ? ஒருகுரங்கின் பே
ரிலேதா னேறியிருந்தான். அது பெருமை
யுடைய தல்லவென்று சொன்னால் புத்தி ஹீ
னமல்லவோ ! ஆகையால் அநேகமாகப்பே
சித் திரிகிறதி லென்னவுண்டு ; சாந்தத்திற்கா
கப் பூலோகத்தா ரெல்லாம் கொண்டாடுகி
ன்ற அந்தச் சீதையானவள் இந்த ஸ்ரீராம
னுடைய மேனியையும், அவனுடைய செய்
கைகளையும் கண்டகண்ணுக்கு மன்மதனும் நா
னும், மற்றவர்களும் நாயென்று மதிக்கத்தானு
வோமா? இந்திரன், விஷ்ணு, சிவன், ப்ரம்மா
வாகிய இந்தப் பலஹீனர்களாலல்லாமல், இந்
தமனிதர்களால் நமக்கு நாசகாலம்வந்து முடி
ந்தாலும், நல்லதே! நாம்நல்ல பகையாளியைத்
தான் பெற்றோம். இதுதான் இன்றைக்கு நடந்
தசேதியென்று சொல்லக்கேட்டு பாட்டனாகிய
மாலியவான் ஐயா! ராவணா? இந்தச்சேதியெல்
லாம் உனக்கு நான் முன்னமே தானேசொல்
லியிருந்தேனே! அதற்குநீ என்பேரில்வீணாய்
க் கோபம்பண்ணிக்கொண்டாய், அதுவல்லாம
லும் உன்தம்பியாகிய விபீஷணனும் எத்தனை
யோ நல்லபுத்திகளை உனக்குச்சொன்னான். அ
தையுங்கேளாமல் கோபித்துக்கொண்டு அவனை
யும் துரத்திவிட்டாய், எல்லாவிதத்திலும்உனக்
குநம்பும்படியான எதுக்களைப் படித்துப்படி
த்துக்காட்டியும், அதுகளையெல்லாம் மெய்யெ
ன்றுகேட்டாயில்லையே! அப்பாராவணா! உன்பே
ச்சுக்குக்குறுக்கே பேசுகிறவர்களு முண்டோ?
அக்கினியையும், மின்னலையுந் தோற்கடிக்கும்
படியானவேலாயுதத்தையுடையஹேராவணே
ஸ்வரா! உண்மையையறிந்தவர்கள் தீர்க்காலோ
சனைசெய்து சொன்னபோது, வருத்தப்படத்
தக்க வைகளானாலும் அதைக் கேட்காமற்போ
ய்விட்டாய். இப்போது அந்த ஜகன்மாதவா
கிய சீதாபிராட்டியைக் கொண்டுபோய் வி
ட்டுவிட்டால், நீ பிழைத்துப்போவாய். அப்
படிச் செய்யாவிட்டால் உன்னுடையகிளைகளு
ம், சுற்றமும், வெற்றியும், உரிமையும், கல்வி
யும், செல்வமும், சேனையும், இவை முதலான

வைகளுடன்கூட நீயும் மாண்டுபோகிறது நி
ச்சயம், நிச்சயம். என்னுடைய வார்த்தையை
ப் பொய்யென்று யோசனை செய்யவேண்டா
ம். நாளை நீயே காணப்போகின்றாய் என்
று மாலியவான் சொன்னான். அதைக்கேட்டு
மாயைசெய்கிறதிலே அதிசமர்த்துள்ளவனு
ன; மகோதரனோடிவந்து அப்படியாகச்சொ
ன்னமாலியவானைப்பார்த்துக்கண்களிலே நெரு
ப்புப்பொறிபறக்க. என்ன சின்னவார்த்தைகள்
பேசுகிறீரென்று சொல்லிவிட்டுப்,புத்திமயங்
கிக்கிடக்கிறராவணனுக்குச் சிலதகாதபுத்திகளை
ச்சொல்லுகிறாய். ஆராகிலுமொருவர் ஒரு
காரியத்தை இது நன்மையென்று பிடித்தால்
அதனாலே ஜெயம்வந்தாலும், அல்லது அப
ஜெயமாகி மரணம்வந்தாலும், அதைவிடாமல்
முழுமையும் சாதிக்கிறதே உத்தமர்களுடைய
செய்கையாகும், சொன்னசபதம் தவறினவ
னுக்கல்லவோ ! இம்மையிற்பழியும் மறுமை
யில் நரகமுமுண்டாவது. திரிபுரங்களெரிந்து
போம்படி ஒரு அம்பைப்பிரயோகம்பண்ணி
ன சிவனும், உலகமெல்லா மோரடியாக அ
ளந்தடக்கின அந்த மாகாவிஷ்ணுவும், உன்
னோடு யுத்தஞ்செய்து தோற்றுப்போயிருக்க,
இந்த மனுஷனுடைய போருக்கு நீ பயந்தி
ருக்கிறாய்போலக் காணப்படுகிறதே ! இதெ
ன்ன விந்தையா யிருக்கின்றது; கைலாச
கிரியை வேரோடுபேர்த்தெடுத்த மகானுபாவ
னே ! ஒருவேளைவென்றவர் தோற்பார். தோ
ற்றவர்வெல்லுவார். எல்லாருக்கும் மேலாயி
ருந்தவர்கள் தாழ்வார்கள். தாழ்ந்திருப்பவர்
கள் உயர்வார்கள். இது பிரபஞ்சநீதியெ
ன்று உணர்ந்தவர்கள்தானே! ஞானவான்களெ
ன்றவர்கள். சாமார்த்தியத்திற்குக் கரையுண்
டா ? அற்பமனிஷர்கள்செய்கின்ற யுத்தத்தை
ப் புகழுகிறாய்போலுமிருக்கிறதே ? நம்சி
தையை விட்டுவிடுவோமேயானால் நமக்குவந்
த இந்த பொல்லாங்குகளெல்லாம் நீங்கிவிடும்
இல்லாவிட்டால் யுத்தஞ்செய்து பிராணனைவி
டவேண்டும் இவ்விரண்டு மல்லாமல் வேறேஒ
ரு உபாயஞ்செய்கிறதில் பிரயோசனமில்லை.
அழியாத பெருமையையுடைய ஓ ராவணேஸ்
வரா ! நீ இந்தப்பிரகாரமாக இவ்விடத்தில்
தாமசமாக விருப்பதென்ன ? உன்மனதிற்
கொண்டிருக்கின்ற கவலையை இப்போதே
லக்ஷியஞ்செய்யாமல் விட்டுவிடு. இன்னம்
சற்றுந்தாம தாமசஞ்செய்வாயானால் பனிமூ
டியிருக்கின்ற சிறிய சமுத்திரஜலத்தைச் சூரி
யனுடைய கிரணம்போல லங்காபட்
டணத்தையும், நம்மையும், கனிகளையுடைய வி
ருக்ஷங்களுக்குச் சமானமாக்கி இந்த வானர

சேனைகளெல்லாம்கூடிக்கொண்டு துவம்சம்பண்
ணிப்போடும். நீவருத்தப்பட்டுக்கொண்டு சோ
ர்ந்து இருப்பது தகுதியோ ? இந்தத்துன்ப
த்தைவிட்டுவிடு. முன்னாலே சர்வலோகநாயகர்
களான திரிமூர்த்திகளும் உனக்குத்தோற்றுப்
போய்விட்டபிறகு, சமஸ்தமான தேவர்களும்
உனக்கு ஏவல்செய்யும்படியாக, இந்தத் திரி
லோகங்களையும் ஏகச்சக்ராதிபதியாய் ஆண்
டுவருகின்றாய். அப்படிப்பட்ட நீ புல்லினு
னியில் ஒட்டிக்கொண்டிருக்கின்ற பனிநீர்த்து
ளிக்குச் சமானமாகிய இந்த அற்பமனிதர்க
ளை ஒருலக்ஷியம்பண்ணி உனக்கு இளையவனு
ன கும்பகர்ணனை ஒருதிரணமாக நினைந்து
இகழ்ந்துவிட்டாயே ? இதுவென்ன ஆச்சரி
யம்! நீ அந்தக் கும்பகர்ணனை வரவழைத்து,
இந்த மனிதர்கள்பேரில் சண்டைக்கனுப்புவி,
மிகுந்தபயங்கரமான மலையையொத்த அந்தக்
கும்பகர்ணனுடைய சொரூபத்தை அவர்கள்
பார்த்தமாத்திரத்தில் எங்கேயாவதுஓடி யொ
ளித்துக்கொள்ளுவார்கள். அப்படிக்கில்லாம
ல்எதிர்த்து சண்டைக்குநிற்பார்களானால், ஒரு
வருடைய சகாயமுமில்லாமல் அந்தக் கும்ப,
கர்ணன் மாத்திரமே ! சடைமுடியாளர்களா
ன அந்த மனிதர்களுடைய உயிரைப் பரிக
ரித்துப் போடுவான், என்று இந்தப் பிரகாரம்
மகோதரன் சொல்லக்கேட்டு, ராவணனுடன்
பட்டு, சமஸ்தமுந்தெரிந்த ஓ மகோதரனே !
உன்னைப்போலச் சமயோசிதமாக எல்லாவற்
றையுஞ் சொல்ல வல்லவர்களி யாரிருக்கின்றார்
கள். நீ சமஸ்தகாரியங்களையும் அறிந்திருக்கின்
றாய், மேலும் நீ என்னிடத்தில் வைத்திருக்கின்
ற அன்போ இவ்வளவவ்வளவல்ல; ஆகையினா
லே நல்லஉபாயம் சொன்னாயென்று மனம்
பேதித்து நமக்கு ஐஸ்வரயத்தினத்தால் கெடுதி
காலம்வந்து நேரிடுமேயானால் மதியில் வே
றொன்றினாலே தடுக்கக்கூடுமோ ! நீசொன்
னது நல்லகாரியமென்று சொல்லிப், பின்பு எ
ன் தம்பியாகிய கும்பகர்ண னிடத்திற்குப்
போய் அவனை இங்கே அழைத்துவாருங்களெ
ன்று கர்ணக்கடூரமாக நியமித்தமாத்திரத்தில்,
எமதூதர்கள் தேடிக்கொண்டுபோகிறதுபோ
ல, நாலுதூதர்கள்புறப்பட்டுப்போய்,மலைகளை
ப்பார்க்கிலும் பலம்பொருந்திய உயர்ந்ததோ
ள்களை யுடையவனான கும்பகர்ணனுடையவெ
ற்றிபொருந்திய அரண்மனையிற் சேர்ந்து, ம
லைக்குச்சமானமாகிய அந்தக் கும்பகர்ணன்சய
னித்துக்கொண்டிருக்கிற பள்ளியறையின் மே
கமண்டலத்தையளாவிய வாயிலில் நுழைந்து,
ஐயா, கும்பகர்ண மகாராஜனே ! நீ விழித்
துக்கொள்ளக்கடவாய்,விழித்துக்கொள்ளக் கட

வாயென்று தங்கள்கையிலே பிடித்துக்கொண்டிருக்கின்ற இருப்புலக்கையினாலே தலையிலடித்துச், செவியிற்குத்திப், பின்னும் அநேகக் கொடுங்கன்மனனான கும்பகர்ணன் நித்திரை செய்கிறதைக்கண்டு, கோபமுற்றுச் சொல்லத் தொடங்கினார்கள். எந்தக்காலத்திலும் அழிவில்லாத ராக்ஷசர்களுடைய இன்பமான மாயவாழ்க்கையெல்லாம் அழிந்து போகப் போகும்படி, உன்தமையனான ராவணன் புத்திபூர்வகமாய்த்தெரிந்து தீமையைச் சம்பாதித்துக்கொண்டான். நீ இன்றைக்கு உயிர்நீங்கிமாண்டுபோவதே நிச்சயம். இன்னம் உனக்கு உறக்கமேதுக்கு எழுந்திருக்கக்கடவாய். என்று பற்பலவிதங்களைச்சொல்லிப் புறட்டிப் புறட்டியெழுப்பி,நித்திரைசெய்கின்ற ஐயா! கும்பகர்ண மகாராஜனே? உங்களுடையமோசமான வாழ்வெல்லாம் அழிந்துப்போகிறதை இன்றைக்குப்பாரும், எழுந்திருமெழுந்திரும். காற்றாடியைப்போல கிறுகிறுவென்று சுழன்றுகொண்டுவந்து எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்ற யமதூதர்கள் கையிலே நீ நன்றாய்ச் சயனித்துக்கொண்டு உறங்கப்போகிறாய் - உறங்கப்போகின்றாய் யென்று பற்பலவிதமாகச்சொல்லி எழுப்பவும், தங்களுடைய வல்லமையினாலே எழுந்திராததைக்கண்டு, திரும்பி ராவணனிடத்திற்குப் போய் ஐயா ராவணேஸ்வரா! வாசனையோடுங்கூடிய மாலையையணிந்த மார்பையுடையவனான உமது தம்பியாகிய கும்பகர்ணன் எழுந்திருக்கவில்லை; என்று சொல்லக்கேட்டு, ராவணன் குதிரை-யானை-யாளி-முதலானவைகளில் ஆயிரமாயிரமாகயேவி,மிதிக்கவிட்டெழுப்புங்கள்என்றுநியமித்தான். அந்தப்பிரகாரம்அவர்கள் அந்தச்சேனைகளைக்கொண்டு மிதிக்கச்செய்தும்,அவன்எழுந்திராததினாலே, மறுபடியும்போய்ராவணனுக்குத்தெரியப்படுத்த,மிகுந்தசாமர்த்தியமுள்ளவர்களானநீங்கள் உங்கள் சைனியங்களோடுங்கூடப்போங்களென்று அந்த ராக்ஷசமல்லர்களை ஏவினான். அந்தப்பிரகாரமாக மஹாபலமுள்ள வீரர்களான லக்ஷம்பேர் ராக்ஷசமல்லர்கள் ஓடிப்போய் ராவணனுடைய மனதிலுள்ள வருத்தம்நீங்க, இன்றைக்கு இவன் வானரர்களைச்செயித்துக் காரியத்தை நிறைவேற்றுவானென்று அவனையெழுப்ப நினைத்து, மலையைப்போலும் உயர்ந்து நீண்ட தோள்களையுடைய அந்தக்கும்பகர்ணன் சயனித்துக்கொண்டிருக்கின்ற வெற்றிப்பிரதாப மாளிகையில் நுழைந்தார்கள். அந்தப்படி நுழைந்த மிகுந்தபலமுள்ள வீரர்கள், கும்பகர்ணனுடைய திறந்தவாயினிலிருந்து புறப்படுகின்ற சண்டமாருதத்தையொத்த சுவாசத்தி லகப்பட்டுக்கொண்டு வருகிறதும் போகிறதுமாய், உழன்றுநிலைப்படைந்து தத்தளித்து, அந்தச் சுவாசத்திலிருந்தும் தப்பித்துக்கொள்ளக்கூடாமல், ஒருவர்கையை யொருவர்பிடித்துக்கொண்டு தங்களுக் குண்டாகிய அளவில்லாத பலத்தினாலே நெக்கிக்கொண்டு, அந்தப்பெரிய சுவாசத்தைக் கடந்துபோய், அவனுடைய பெரிய நித்திரையை எழுப்புகிற நிமித்தமாக மறுபடியும் வேறொருவாயிலில் நுழைந்து, நாமெல்லாரும் இன்றைக்கு இவனை எழுப்புகிறதற்கு என்னஉபாயஞ் செயலாமென்று அவனுடைய பெரியவாயையும், மூக்கையுங்கண்டு உடல்நடுங்கி அவனைக்கிட்டித் தொடுகிறதற்கும் பயந்து அவனுடைய பெரியகுகைக்குச் சமானமாகிய காதில்-சங்கு - தாரை - பூரி - முதலாகிய நாதங்களால், உகாந்தகாலபேரிடியைப்போலகோஷமுண்டாகச்செய்தும்.அநேககோடிதண்டாயுதங்கள்-சம்மட்டிகள்-குந்தாயுதங்களிவைகளை வழங்குவதில் சாமர்த்தியமுள்ளவர்களெல்லாருங் கூட்டங்கூட்டமாகக்கூடிக், கும்பகர்ணனுடைய தாடையிலும், சந்துமுட்டுகளிலும்,மார்பிலும், தலையிலும், பலங்கொண்டமட்டும் ஓங்கியடித்தும், குத்தியும், மொத்தியும், எற்றியும், கையோய்ந்து மெய்களைத்து சக்தியற்றுநின்று ராவணனுக்குத் தெரிவிக்க, அவன் பெரியகுதிரைப் படைகளையெல்லாம் அதிசீக்கிரத்தில் கூட்டங்களாகக்கொண்டு போகும்படிநியமித்தான். அந்தப்படியே அவர்கள் சவாரிசெய்யத்தக்க ஜோடினைகளோடு ஆயிரங் குதிரைகளை ஆயிரம்பாகர்கள் வேகமாய்ச்செலுத்திக் கொண்டுவந்து பெருந்தூக்கங்கொண்டு உறங்குகிற கும்பகர்ணனுடைய அகன்றமார்பின்மீது வருத்த முண்டாகும்படியாகயேற்றி, அந்தக்குதிரைகளை நடத்துவித்தும், ஓடச்செய்தும், மிகுந்தவேகத்துடனே வையாளிபோகச்செய்தும், அயர்ந்து தூங்குவதற்கு உடம்புகால் குத்துவதுபோல நினைத்துக்கொஞ்சமும் உணர்ச்சியடையாமல் அப்படியே தூங்கிக்கொண்டிருக்கக்கண்டு, விரைவாயோடிப்போய், நெருங்கிய புஷ்பங்கள் கட்டியிருக்கின்ற வெற்றிமாலையையணிந்த ராவணனுடைய வீரகண்டாமணிதரித்த பாதத்தில்விழுந்து, ஐயா ராவணேஸ்வரா! கும்பகர்ணனை எழுப்பும்படியான உபாயங்களில் வொன்றல்ல அநேககடினமான விதங்களெல்லாம் செய்து எங்களுக்குக் கையும், மெய்யும், பலமும், குதிரைகள் கால்களும் ஓய்ந்துவிட்டதே யொழிய, அவனை எழுப்பும்படியாக

எங்களா லாகவில்லை, அவனை எழுப்பத்தக்க உபாயங்களுண்டாயிருந்தால் எங்களுக்குச் சொல்லவேண்டுமென்ன. ராவணன் அவர்களைப் பார்த்து சக்கரங்கள்பூட்டி மணிகளால் அலங்கரித்திருக்கின்ற பெரியதேர்ப்படைகள் தன்மீது பெயர்ந்துவருகிறகாலத்திலும், உடல் அசையாதவனும், அதிகபலம்பொருந்திக் கட்டழியாதச் சூலத்தினாலும், மழுவினாலும், வாளினாலும், சம்மட்டியாலும், ஓங்கிக்குத்தி - வெட்டி - எறிந்து - அடிக்கும்படி அடித்த போதிலும், தன்னுடைய நடையையும், அசையாதவனுமான என்தம்பியாகிய கும்பகர்ணனை நீங்க ளெவ்விதத்தினாலாவது நித்திரையைப் போக்கி, அழைத்துவாருங்களென்று உத்தரவுசெய்தான். அந்தவார்த்தையைக் கேட்டமாத்திரத்தில், அந்த ஆயிரம் ராக்ஷசமல்லர்களும் அவனுக்குத் தெண்டனிட்டுப்போய் அதிகபலத்தினாக நித்திரைசெய்கின்ற கும்பகர்ணமகாராஜனைக்கிட்டி நின்று, இரண்டுகன்னத்திலும் நீண்ட இருப்புலக்கைகளைக்கொண்டுகைகொண்டமட்டுக்கும் ஓங்கியோங்கி யடித்தார்கள். அப்படி யடித்தபோது மூன்றுலோகத்தவர்களும் நடுங்கும்படியாகவும், அஷ்டதிக்குகளிலு மிருக்கின்ற பலம்பொருந்தியபருத்த கைகளையுடைய எட்டு யானைகளும், பெயராதநகங்கள்தங்கள் நிலையிலிருந்து பெயர்ந்துபோகவும், சந்திரசூரியர்கள் நிலைலடையவும், தாமரைமலரை ஆசனமாகவுடைய ப்ரம்மதேவனும், திருப்பாற்கடலைச் சயனமாகவுடைய விஷ்ணுவும், கைலாசகிரியை வாசஸ்தலமாகவுடையசாம்பசிவனும்ஆகிய இவர்கள் முதலான சமஸ்ததேவர்களும் நடுக்கமுற்று ஏக்கமடையவும், செத்தவனுயிர் பெற்றெழுந்ததுபோல அந்தக் கும்பகர்ணன் விழித்துக் கொண்டான். அப்படி விழித்து மேகங்களைப் பற்றிப் பிழியும்படியான பெரியகைகளையும் ஆகாசத்தை அளவிடத்தக்கப் பருத்தஸ்தூல ஆகாரத்தையும், கடலினும் பெரியதாகிய இரண்டுகண்களையும், அளவிடக்கூடாத பெருமையையுமுடைய கும்பகர்ணனாகிய ராவணசகோதரன், பூலோகத்தையெல்லாம் தமது திருவடிகளா லளந்து விச்வஸ்வரூபங் கொண்டு நின்ற சாக்ஷாத் திரிவிக்கிரம மூர்த்தியைப் போல ஓங்கியெழுந்து நின்றான். அவனப்படியே நித்திரையை விட்டெழுந்தமாத்திரத்தில், உண்ணும்படியாகவறுத்துச் சுட்ட மாமிசங்களோடுகூடக் கள்ளுக்குடங்களையும், வழக்கப்பிரகாரம் கொண்டுவந்து கொடுக்கப் பெற்றுக்கொள்ளாதவனாகித் தன்னுடைய உலர்ந்த கடைவாயைநக்கிக்கொண்டுகளைமாதிலசா முகத்தையுடையவனாய்ப்பிறகு, அறுநூறுவண்டிகளிற் கொண்டுவந்தசோறும், பதினாயிரங்குடக்கள்ளும் தட்டாமலுண்டும், மிகுந்த பசியாறாதவனாய். இரண்டுகண்களிலும், நெருப்புப்பொறி பறக்க ஆயிரத்திருநூறு கறுத்த எருமைக்கடாக்களையும், ஒரு லக்ஷியம் வையாமல் சிறுதீனியாகத் தின்றுவிட்டு, அதுவும் போதாமல் இன்னமும் அதிக ஆகாரங்களைக் கொண்டுவருக கொடுங்களென்று பிரகாசிக்கின்ற இடிகளைப்பிடித்துக் கையினாற்பிசைந்து நெருப்புப் பற்றவைக்கும்படியான மகாகோபத்தை யுடையவனாகிப் படுக்கையிலுட்கார்ந்திருந்து தன் அண்ணனாகிய ராவணனெதிரில் இல்லாததைத் தெரிந்து, பெரியகடலின் அலைகள்நெறித்ததுபோலப் புருவம்நெறித்த நெற்றியை யுடையவனாகியும், குடித்தரக்தம் தன் கடைவாயில் வடியும்படியாக உட்கார்ந்தபடியே தூங்கினான். கடல்போல ரக்தங்களுடனே கலந்தமாமிசங்களை எலும்பும் தோலும் நீக்கி வாரிவாரி உண்ணுகின்ற ஆஹாரம் வேண்டுகிறவனும், சூரியனைப்போலொத்த வஜ்ஜிரக் கங்கணங்களைத் தரித்தப் பருத்தக் கைகளை யுடையவனும், கருங்காலிக்கட்டைபோல வைரம்பற்றிய கால்களில் வீரகண்டாமணியைத் தரித்தவனும், மிகுந்த பசிநோய்க்கு மருந்தாக வேலாயுதமும், இருப்புக்கழுமுட்களும், அரிவாளும் தோல்வியடையும்படியான பற்களைக்கொண்டு யானைகளுடைய கொழுத்தமாமிசங்களைத்தின்கிறவனும், வெறிநீங்காத மிகுந்த கள்ளைக்குடிக்க அதிக ஆசையுள்ளவனும், ஒரு சூலாயுதத்தைப் பிடித்துக்கொண்டிருக்கின்ற உயர்ந்த தோள்களையுடையவனும், சூல்கொண்ட மேகப்போலும் காத்திரமுள்ளதோற்றத்தை யுடையவனும், ராத்திரிபோலும் மேனியையுடையவனும், அந்தகாரம் பொருந்திய மனதையுடையவனும், சத்திக்கின்ற வீரகண்டாமணி தரித்திருக்கின்ற கால்களையுடையவனும், தேகமெல்லாம் நெறிப்புற்றிருக்கின்ற செம்பட்டைமயிரை யுடையவனும், தேவேந்திரனைப் பற்களுதிரும்படியாகவடித்த தனது கையினாலே, சொர்க்கலோகத்துமதிலும் இடிபட்டுப்பூமியில்விழும்படியாகப்பெயர்த்துத் தள்ளினவனும், வயிற்றைப்பிசைந்துக்கொண்டு ஸ்திரீகளெல்லாரும் பயந்துபோய் ஒளித்துக் கொள்ளும்படியாகக் கழுமுனைகளைவரிசையாகவைத்ததுபோலும், பற்கள் காணப்படுகின்ற வாயையுடையவனும்; உடல்கிடந்துநித்திரைசெய்யும்போதும் தேவர்களுக்குமுழுப்பிராணவாயவும் குடலிற்கிடந்திருக்கவொட்டாமல் பயங்கொள்ளச் செய்யத்தக்க வலியை யுடையவ

ளும், பூமியிற்கிடந்தகடல் நின்றதுபோலவும்,
அதன்பேரில் மிகுந்த வெப்பமான வடவாமு
காக்கினி எரிகிறதுபோலவும், கறுத்தமேனியும்
தலையிற் செம்பட்டமயிரு முடையவனும்,
அஷ்டதிக்குகளையும் ஜெயம்பெற்ற ராவணன்
கோபிக்கும்போது மிகுந்த கிரணங்களையுடை
ய சூரியனும், அக்கினியுங்கண்டு மனங்கலங்கி
ப் பதுங்கிப்போடியொளித்துக்கொள்ளும் பெ
ரியமலையினது குகைத்துவாரம்போன்ற மிகு
ந்த நித்திரை மயக்கமுள்ள கண்களையுடைய
வனும், மூக்கில்கள் பொருந்திய பெரியமலை
யில் வசிக்கத்தக்க யானைகள் குடைவரையென்
றுநினைத்துறங்கும்படியான நீண்ட ரோமராசி
யுள்ளமார்பையுடையவனும், வந்துசேர்கின்ற
பிராணிகளுக்குஆதாரமான குகையென்று எண்
ணிப்போய்ப்பாம்புகள் தங்கும்படியான செவி
களை யுடையவனுமாகிய கும்பகர்ணனை நோக்
கித் தூதர்கள் ஐயா! உம்முடைய தமயனாரா
கிய பிரதாபலங்கேஸ்வரர் உம்மையழைத்துக்
கொண்டுவரச்சொன்னார், என்றுசொல்லிய உட
னே பெரியமலைக்குச் சரியொத்த கடினமான
தேகத்தையுடைய கும்பகர்ணன் இலங்கையி
லுள்ளவர்களெல்லாம் கோவென்று சப்திக்க,
அதிவேகமாய்ப் புறப்பட்டுக் கோட்டைவாயி
லில் நுழைந்து, சந்திரமண்டல பரியந்தம் அ
ளாவிக்கொண்டிருக்கிற இராவணனுடையஅர
ண்மனையின் வாசலைச்சேர்ந்து மதில்களாற்சூழ
ப்பட்ட பலநிலைகளமைந்த கோபுரத்தையுடை
ய மாளிகையின் மேல்நிலையில்சயனித்துக்கொ
ண்டிருக்கின்றலங்காதிபதியைக்கண்டு, அநேகம்
பேர்களைக் கொலைசெய்து ஜெயம்பெற்ற வே
லாயுதத்தையுடைய கும்பகர்ணன் ஒருபெரிய
மலைவிழுந்ததுபோலச் சாஷ்டாங்கமாக விழு
ந்து தெண்டனிட்டான். நின்றுகொண்டிருந்த
ஒருமலையானது தன்னிடத்திற் பிரசண்டவேக
த்தோடும்வந்த மற்றொருமலையைத் தழுவின
துபோலத் தசக்கிரீவனாகிய ராவணனானவன்
எழுந்து தனது வல்லமைபெற்ற துணைவனான
இளையதம்பியை இருபதுகைகளினாலும் வாரி
யெடுத்து மார்போடுதழுவித் தன்னுடல்கூட
உட்காரவைத்துக்கொண்டு, ரக்தத்தையும் குட
ங்குடமாக நிறைப்பிவைத்திருக்கின்ற கள்ளை
யுங்குடிப்பாட்டி, நான்குதிசைகளிலும் சூழ்ந்
திருக்கின்ற கடல்களினுரைக்குச் சமானமாகிய
வெள்ளைப் பட்டுவஸ்திரங்களையுடுத்துக், கிரண
க்கூட்டங்களுடன் பலபக்கங்களிலும்ஒளிவீசிக்
கொண்டிருக்கின்றபற்பல ஆபரணங்களைத்தரி
த்து, அதிகபலமுள்ளஇந்திரனானவன் தான்ஏறி
நடத்திக்கொண்டுவந்த ஐராவதமென்கிற யானை
யோடுகூட ராவணனுக்குத்தோற்றோடும்போ
து சோர்ந்துவிழுந்துவிட்டபிரகாசமுள்ள ரத்
தினங்களிழைத்த நெற்றிப்பட்டத்தை வெற்றி
ப்பட்டமாக அவனுடைய நெற்றியிற்கட்டித்,
தேகமுழுதும் மின்னலைப்போலப் பிரகாசிக்
கும்படியாகக், குங்குமச்சேறுபூசப்பட்ட கை
யையுடைய மதத்தகஜம்போலவும், அந்தக்குங்
குமக்குழம்புகலந்த கடல்போலவும்விளக்கும்
படித் தெய்வமணம்வீசுகின்ற செஞ்சந்தனக்
குழம்பை அவனுடம்பெல்லாம் பூசினான். கா
ளகோடி விஷமானது எழுந்துயர்ந்ததுபோ
ல உயர்ந்து ஆகாசத்தையளாவும்படியாகநீண்
ட அவனுடைய மார்பினிடத்தில், ரிஷபவாக
னாருடராய்வந்து, அக்கினிக்குச் சமானமாகிய
நாலுகு தோள்களை யுடைய சாம்பசிவமூர்த்தி
கொடுத்த கவசத்தையணிந்தான்.

இப்படி ராவணன் சிங்காரிக்கும்போது
கும்பகர்ணனுடைய மின்னற்கொடிபோலதி
ண்டு சிவந்திருக்கின்ற புருவமும், ஆகாசத்தைத்
தொட்டுக்கொண்டிருக்கின்ற தோளும், இடந்
துடிக்கக்கண்டு, அண்ணா ராவணேஸ்வரா! என்
னகாரணத்திற்காக இப்படிப்பட்ட அலங்கார
ங்களை ஆரம்பித்துச்செய்கின்றாய் என்று கே
ட்க, ராவணன் தம்பி! மிகுந்த வானரசைனிய
ங்களுடனே இரண்டுமனிதர்கள் கெர்வித்து
நம்முடைய கோட்டையைச்சுற்றி முற்றுகை
போட்டுக்கொண்டிருக்கின்றார்கள். நீபோய்
அவர்களுடைய உயிரைஉண்டு முடித்துவிடெ
ன்றான். அப்போது கும்பகர்ணன் அண்ணா!
பிரகாசிக்கின்ற லட்சுமியைப்போன்ற சீதை
யைக்குறித்து நீ முன்னம் வைத வசைச்சொற்
களால் சண்டை நெருங்கிவிட்டதா? விஷத்
துக்குச்சமானமாகிய கண்களையுடைய அந்தப்
பதிவிரதா சிரோன்மணியை இன்னம் விட்டு
விடவில்லையா? இது உன்னுடைய பிராரப்
தக் கர்மமேயல்லாமல் வேறல்ல. கொடுமை
யான யுத்தம் நடக்கப்போகின்றதோ? பஹா
பதிவிரதையாகிய ஜானகி பிராட்டியினுடைய
துக்கம் இன்னம் தீரவில்லையா? பூலோகமு
தல் சுவர்க்கலோகபரியந்தம் ஓங்கி வளர்ந்திரு
ந்த உன்னுடைய அழியாத பெருங்கீர்த்தியா
னது அழிந்துவிட்டதோ? ராக்ஷசர்களுக்கு
நாசகாலம் வந்துவிட்டதோ? எல்லா மலைக
ளின் வலிமையும், உலகங்களின்வலியையும், இவ்
வளவென்று வரம்பிட்டுச் சொல்லக்கூடுமானா
லும், அளவுசொல்லக்கூடாத ஸ்ரீராமன்தோள்
வலியை நீ வெற்றிகொள்ளலாமென்றது, சீதா
பிராட்டியின் திருமேனியைத்தழுவலாமென்று
வெறுவாய் மெல்லுகின்றையே, அதற்குச்சமா
னமாகும். இந்த இரண்டும் முடியாதகாரியங்க
ள். புலஸ்தியப்பிரம்மாவின்வழியாகமுதலிலே

உத்பத்தியாயி யதார்த்த தர்ம்மங்களைச்செய்து வந்த நம்முடைய குலத்தினிபல்லை அழித்துவிட்டாயே, இப்படிப்பட்ட உனக்கு வெற்றியுங்கைகூடுமோ? உன்னுடைய பலமெல்லாமழிந்துபோருமென்பதற்குச் சந்தேகமென்னவுமில்லை. நிலத்தின்சுபாவ மெப்படியோ அப்படியே, அதைச்சேர்ந்த நீரின்தன்மையுமிருக்கு மென்பதுபோல நம்முடைய ராக்ஷசதர்ம்மமே மேலிட்டுவிட்டதல்லவா? இனி இந்திரனுக்கு அரசும் வெற்றியுங் கொடுத்துவிட்டாய். உன்னையும் உன்புத்திரமித்திர களத்திராதிகளாகிய வளவற்ற பந்துக்களையும் அழித்துப்போட்டாய், அநேகவகையான ராக்ஷசர்களையெல்லாங்கொன்றுநீக்கிவிட்டாய். இனி உனக்கு நல்லகதியு முண்டாகப்போகிறதுமில்லை. உனக்குத் தருமமும் பயந்து ஒளித்துக்கொண்டது. இந்தத் தருமந்தான் உனக்கழியாத மிகுந்த வல்லமையையும், செல்வங்களையும், நல்ல யௌவனத்தையும் கொடுத்திருந்தது. அப்படிப்பட்டதருமத்தைவிட்டு அழியப்போகின்ற உன்னைவேறேயாரொடுத்து நிலநிறுத்தப்போகிறார்கள். அடைக்கலமும், தருமமும், நல்லநடக்கையும், வாக்கு விர்த்தியு முடையவர்களே குறைவில்லாமல் எப்போதும் நிடித்துவாழ்வார்கள். அப்படிக்கில்லாமல் வஞ்சனையும், பாவமும், பொய்யும், நிறைந்திருக்கின்ற நாம் அழிந்துபோகிறதற்கு மொருதாழ்ச்சியு முண்டா? நம்முடைய காலினாலே இந்தக் கருங்கடலைத்தாண்டிக் காற்றைப்போல வரும்படியான குரங்குகளு மிருக்கின்றதுகள். சீதையும் நம்முடைய லங்கையை விட்டுப்போகவில்லை. வாலியினுடைய மார்பைப் பிளந்துகொண்டுபோன அம்பைப்போலொத்த வல்லமையுடைய ஸ்ரீராமபாணங்களு மிருக்கின்றதுகள். அதற்கு லக்ஷியமாக நாமுமிருக்கின்றோம். இனி நடக்கப்போகின்ற காரியங்களுக்கு இனிமேலுமொரு குறையுமுண்டாகுமா? என்று கும்பகர்ணன் இதுபோ லின்ன மநேககாரியங்களைப் படித்துச்சொல்லிப், பின்னும் ராவணனைப்பார்த்து நானுனக்கு ஒன்றுதெரிவிக்கிறேன் அதை அங்கீகரித்துக்கொள்ளுவாயானால் அதனால் மிகுந்த நன்மையுண்டாகும், அதை அங்கீகரித்துக் கொள்ளாவிட்டால் நீ செத்ததாகவே தீர்மானஞ்செய்துகொள்ளு. ஐயா! ராவணேஸ்வரா! சீதாபிராட்டியைக்கொண்டுபோய்விட்டு, ஸ்ரீராமருடையபாதத்தில்விழுந்து உன்னுடையஉண்மையான தம்பியாகிய விபீஷணனோடு சிநேகங்கொள்வதுதான் நீதப்பிப்பிழைப்பதற்குத்தக்க நல்லவழியாகும். அப்படிக் கில்லாவிட்டால் செய்யவேண்டிய உபாயம் வேறொன்றிருக்கின்றது, அதைத்தெரிவிக்கிறேன் கேளாய்! வரிசை வரிசையாக உன்னுடைய சைனியங்களை அவர்கள் பேரில் யுத்தத்திற்கு அனுப்பு, அவைகளெல்லாமழிந்துபோனபிறகு நீமாத்திரம் தனித்தப்பட்டுக்கொண்டிருப்பது நியாயமல்லவே! உன்னுடைய பலமெல்லாங்கொண்டு எதிர்த்து அவர்களோடு யுத்தஞ்செய்வதுதான் காரியசித்திபென்று உபாயம் சொன்னான். அதைக்கேட்டு ராவணன் கும்பகர்ணா! உன்னை நான் கூப்பிட்டது இனிநடக்கப்போகிறகாரியத்தைத் தெரிந்துகொள்ளுவதற்காகவல்ல, அற்பபலத்தை யுடையவர்களான அந்த மனிதர்களைப் போய்க்கொல்லு, என்புத்தியைப்பார்க்கிலும் அதிக அறிவுடைய மந்திரி நீயல்ல, நீஇப்போது அவர்களுக்குப் பயந்து விட்டாய், உன்னுடைய வீரத்தன்மை பயனற்றதாகப்போய்விட்டது. மிகுந்தயலத்தோடு செய்யவேண்டிய யுத்தத்திற்குத்தகுதியான அதிகமாமிசமும், கள்ளுஞ் சாப்பிட்டாய், அதிருக்கட்டும், இப்போது இனிக்கண்ணைமூடிக்கொண்டு, இரவும் பகலுமாக நித்திரைசெய்யும்படியாகப் போய்விடு, நீ சண்டைசெய்யத்தக்க யோக்கியனல்லவென்று மனம் உளையும்படியாகச் சொல்லி, இரண்டு மனிதர்களை வணங்கிக், கூனலான குரங்குகளையும் கும்பிட்டு, வயிறுவளர்த்துப் பிழைக்கிறசெய்கையும், உன் தம்பியாகிய விபீஷணனுக்கும், உனக்குமே தகுதியானதாகும், நானப்படிச்செய்யமாட்டேன் நீஎழுந்துபோய்விடென்று சொல்லிவிட்டு, என்னுடைய தேரையும் ஆயுதங்களையும்கொண்டுவாருங்கள், எல்லாரும் புகழ்த்துசொல்லப்பட்ட எமனும்என்னோடுவந்து எதிர்க்கட்டும், தேவலோகத்திலுள்ளவர்களும், பூலோகத்திலுள்ளவர்களும், இன்னம் மற்றயாவர்களும் கைவல்லமையுடைய இரண்டு சிறுமனிதர்களுடனே சேர்ந்துகொண்டு எல்லாரும் என்னோடு சண்டைசெய்யட்டும், நானே யுத்தத்திற்குப்போகிறேனென்று புறப்பட்டான். அதைக்கண்டு தம்பியாகிய கும்பகர்ணன் அவனுடைய பாதத்தில் விழுந்து வணங்கி, அண்ணா! நான்சொன்னதைப் பொறுத்துக்கொள்ளென்று, பலம்பொருந்திய நீண்ட சூலாயுதத்தை வலதுகையில் தாங்கி ஓங்கிப் பிடித்து நின்று அண்ணா! இன்னமொருவார்த்தை யிருக்கின்றது, நானினிமேல் போய்ஜெயித்துவருவேனென் றெண்ணங்கொள்ளவில்லை, விதியானது என்பிறகே நின்றுகொண்டு பிடரியைப்பிடித்து நெட்டித்தள்ளுகின்றது நான் யுத்தகளத்தி லிறந்துபோய் விடுவேன். நான் இறந்துபோன தன்பிறகாவது

நீ நன்மையைப்பெறும்படிச் சந்தோஷித்துடனே! சொர்ன்னச்சாயையோடுங் கூடியிருக்கின்ற தோள்களையுடைய சீதாபிராட்டியைக்கொண்டுபோய் விட்டுவிடு. என்னை எப்போது ஜெயிக்கின்றார்களோ! பிறகு உன்னையும் ஜெயித்து வெற்றி பெறுவார்களென்பதற்குச் சந்தேகமில்லை. நீ பின்னாலோசனைசெய்கிறது புத்திஹீனமாகும். ஆகையால் சீதாபிராட்டியை இன்றைக்கே கொண்டுபோய் விட்டுவிடுகிறது, உனக்குத் தவத்தைப் பார்க்கிலு மிகுந்த எல்லைத் தருவதாகும். இந்திரனுக்குப் பகைவனாகிய இந்திரஜித்தென்னும் உன்னுடையகுமாரன் ஸ்ரீராமனுடைய தம்பியாகிய லக்ஷ்மணன் பிரயோகிக்கின்ற மந்திராஸ்திரத்தினாலே சாகப்போகிறது சத்தியமாகும். உன்னுடைய சைனியங்களெல்லாம், காற்றிற்பறக்கின்ற புழுதி போலாகப்போகின்றதுகள். ஆகையாலே நீதகுந்தஆலோசனைசெய்து,உனக்குயுக்தமான மார்க்கத்தைச் செய்துகொள்ளு. இன்றைவரையிலும் நானுனக்கு முன்செய்துவந்த குற்றங்களுண்டாயிருக்குமானால் அவைகளையெல்லாம் பொறுத்துக்கொள்ளு. உன்னுடைய முகத்தில் நான்விழிக்கிறது இன்றையோடு முடிந்துவிட்டது, அண்ணா! விடைகொடுவென்று, அந்தஸ்தானத்தைவிட்டுப் புறப்பட்டுத் திரும்பினான். அப்போதுராவணன் இருபதுகண்களினிடத்தும் ரக்தக்கண்ணீர் விட்டழுதான். கும்பகர்ணன் பெண்சாதி-பிள்ளைகள்-உற்றார்-உறவின்முறையார் முதலானயாவரும், துக்கப்பட்டழுதார்கள். அப்படியாக அழுகிறவர்களெல்லாரையும் பார்த்துக் கும்பகர்ணனும் அழுதுகொண்டு,உத்தர கோபுரவாசலைவந்து சேர்ந்தான். கும்பகர்ணனோடுகூட நம்முடைய சேனாவீரர்கள் தங்கள்தங்கள் ஆயுதங்களோடும், ரணபேரிகை முழக்கிக்கொண்டு போகவேண்டுமென்று ராவணன் நியமித்த மாத்திரத்தில், தேவலோகத்தவர்களுடைய வண்டுகள்மொய்த்த கற்பகமாலைசூடிய தலைகளில் சேனாபராகங்கள்படியும்படியாய், ரத-கஜ-துரக-பதாதிகளென்று சொல்லப்பட்ட நால்வகைச் சேனைகளும் புறப்பட்டு வந்ததுகள். தேரின்மீது கட்டியிருக்கின்ற கொடிகளும், யானைகளின்பேரில் பிடித்துக்கொண்டு வருகின்ற துவஜங்களும், முன்னணிப் படைக்கர்த்தர் பிடித்துக்கொண்டு வருகின்ற ஆகாசத்தைத் தாவும்படியான விருதுக்கொடிகளும், ஆகிய இவைகளெல்லாம் ஒன்றோடொன்று நெருங்கிச், சேனாபராகங்கள் போய்ச் சுவர்க்கமண்டலத்திற் படிந்திருக்கின்றமையால், அந்தத்தூளியைத் துடைக்கிறது போலும் ஆகாசமார்க்கத்தி லாடிக்கொண்டு வந்தனவே. அந்த ராக்ஷசசேனைகளுடைய அநேகஆயுதங்கள் ஒன்றோடொன்று தாக்குவதினால் அதுகளினிடத்துண்டாகிய அக்கினிப் பொறிகளும், சேனைத்தலைவர்களுடைய கண்களில் நின்றும் புறப்பட்ட நெருப்புப்பொறிகளும் போய்ப்பட்டு விசாலமான ஆகாசத்திலுள்ள மேகங்களெல்லாந்தீய்ந்து உதிர்ந்து விட்டதுகள். தேர்ப்படைகள் போகிறதினாலும், யானைப்படைகள் செல்லுகிறதினாலும், நெருக்குண்டு, சிந்தூரமப்பிய முகத்தையுடைய மேகம்போன்ற யானைகளுந், தேர்களுஞ் செல்லமாட்டாமல் நிற்க, குதிரைகள் காற்றைப்போல ஓடுவதினாலும்,கொடிப்படைகள் நடக்கிறதினாலும், பின்வருஞ் சேனைகளானவை முந்திப் பூமியில்செல்லுகிறதற்குத் தம்மால் முடியாதென்று ஆகாசமார்க்கமாகப் பாய்ந்து போனதுகள். ஆயிரஞ்சிங்கங்களும், ஆயிரம்யாளிகளும், ஆயிரம்யானைகளும், ஆயிரம்பூதங்களும் பூண்டதும், விசாலமாகிய பூமியை மறைக்கத்தக்கதுமான அதிகபிரகாசமுள்ள ரத்தினங்களிழைத்த ஒரு பெரியதேரின்பேரில் கும்பகர்ணனேறினான். தோமரம் - இருப்புலக்கை-தண்டாயுதம், வேலாயுதம், சூலாயுதம், வல்லயம், வாளாயுதம், மழுவாயுதம், அலாயுதம், வளைதடி - சக்கரம் - வில் - கேடயம் - இன்னும் க்ஷேமத்தில் வைத்திருந்த பற்பலகொடிய ஆயுதங்களையெல்லாம், தலையிற்றூக்கிக்கொண்டு அநேகம் ராக்ஷசர்கள் இரண்டுபக்கங்களிலும் வந்தார்கள். இதுவல்லாமலும், சிலபேர்கள் கள்ளுச்சாடிகளைத் தூக்கிக்கொண்டும்,பக்குவமாகவெந்த மாமிசத்துண்டங்களை நிறைத்து வைத்திருக்கின்ற குறைந்தது ஆயிரம் சகடவண்டிகளை யோட்டிக்கொண்டும் வக்கிரதந்தங்களை யுடையவனான, கும்பகர்ணனுக்குப் பின்னால் கள்ளும், மாமிசமும், மாறிமாறி அடிக்கடி முறைப்படிக் கைநீட்டிக்கொடுத்துக்கொண்டும் வந்தார்கள். அப்போது அதைக்கண்டதேவர்கள் இது இந்தப்பெரிய கூட்டங்களாகிய குரங்குகளினாலே மாத்திரம் ஒழிந்துபோகமாட்டாது. இவன்தின்னுகிற மிகுந்த கொழுத்த மாமிசத்திற்கு இந்த உலகந்தான் போதுமோ? எங்கும் பிணக்காடாகப்போகிறது, யமனுக்கும் ருசிதெரிந்துவிட்டது. இது சும்மாய்ப் போகமாட்டாதென்று தேவர்களெல்லாம் ஓட்டம்பிடித்தார்கள். ஆதிசேஷனுடைய ஆயிரஞ்சிரசுகளையும்விட்டுநீங்கிப் பூமியுடனேகூடப் பர்வதசிரேஷ்டமென்று சொல்லும்படி பெயர்

பெற்றிருக்கின்றபெரியமேருகிரியானது வந்
ததுபோலச் சொர்ன்னமயமாகிய தேரின்
பேரில் உக்கிரமாய்வந்திருக்கின்ற கும்பகர்ண
னை, உயர்ந்ததோள்களையுடைய சக்கிரவர்த்தித்
திருக்குமாரராகிய ஸ்ரீராமர்பார்த்து, அவனு
டைய தேரிற்கட்டியிருக்கின்ற கொடியில் வீ
ணையெழுதியிருக்கிறதோ வென்று பார்த்த
போது, அதில்லாமல் வெற்றிபொருந்திய சி
ங்கமெழுதி யிருக்கக்கண்டு, இவன் ராவணன
ல்லன்; காற்றினு மதிகவேகமாக மனதைச்
செலுத்திப் பார்த்தாலும், அளவறிவதற் கரு
மையான தோற்றமுடையவனாகி யிருக்கின்றா
ன். மேலும், உயிருடைய பொருளல்லவெ
ன்று நினைக்கலாமென்றாலும், ஆபரணங்களை
யணிந்த மார்புடையவனாகவு மிருக்கின்றான்.
இவன்யாரோ? இவனுடைய ஒருதோளோ
டு மற்றொருதோளை ஒரு சேரப்பார்க்கிறதற்
கு அநேகநாள் செல்லும். மேருமலைக்குக்கா
ல்கள் முளைத்ததோ? யுத்தஞ்செய்கிறதற்கிசை
ந்து வந்திருக்கின்ற இவனின்னானென்று தெ
ரியவில்லை. இவன்பெய ரென்னமோ! ரா
வணன்தன்னுடைய நிஜரூபத்தை மறைத்துக்
கொண்டு நம்முடைய வானரசைனியங்களைப்
பயப்படுத்தும் படியாகக் காட்டுகிறதற்குக்
கொண்டமாறுவேஷமோ? இந்தஉரு இன்
னதென்றெனக்குத்தெரியவில்லை. ஆகையால்
இது தன்றாய்த் தெரியத்தக்கதாக விபீஷ
ணா! சீக்கிரமாக நீ சொல்லவேண்டும். என்
று ஸ்ரீராமமூர்த்தி கேட்க; அவருடைய திரு
வடிகளில் சாஷ்டாங்க தெண்டஞ் சமர்ப்பித்
து, ஸ்வாமீ! இவன் மகாபிரதாபசாலியான
லங்கேஸ்வரனுடைய தம்பியும், எனக்கு மூத்
தவனும், மேகத்தையொத்த கறுத்தநிறத்தை
யுடைய யமனுக்குச் சமானமாகிய வீரகண்
டாமணியைத் தரித்தவனும், கூர்மைபொருந்
திய சூலாயுதத்தை யுடையவனுமாகிய கும்ப
கர்ணனென்கிற நாமதேயமுடையவன். இவ
னுடையதன்மை எப்படிப் பட்டதென்றால்,
அருமையானதபசைச் செய்கிறவர்களும், வே
தவேத்தர்களு மானவர்களாலும் தியானிக்கத்
தக்கவரும், கைலாசபதியும், மூல தாமரைப்
புஷ்பத்தில் வீற்றிருக்கின்ற சதுர்முகப்பிரம்
மதேவனும், சிந்திக்கும்படியான சாக்ஷாது
க்ஷீராப்திநாதனான சாட்குண்ய பரப்பிரம்ம
மானவர், யோகநித்திரையைவிட்டு எழுந்திரு
க்கிற காலத்தில் அசுரர்கள் நாசமடைவார்கள்.
இவன் நித்திரைவிட்டு விழிக்கிறகாலத்தில் தே
வர்களைக் கொல்லுவான். சக்கிரதராகிய ஸ்
வாமீ! இவன் அற்ப வாழ்நாளை யுடையவனு
ம், என்தமயனுமான ராவணனுக்கு அமித்த
சகோதரன். ஊழிகால பரியந்தம் நித்திரை
செய்யத்தக்கவன். யமனுடைய உயிருக்கு
யமனாகவிருக்கிறவன். வாயுதேவனைப் பார்க்
கிலும், மிகுந்தவேகத்துடனே நடக்கின்ற கா
ல்களையுடையவன். தேவேந்திரன் முதலான
பேர்களும், தோல்வியடையும்படியாக வெற்
றிமாலையைத்தரித்த ஒப்பற்ற சூலாயுதத்தைக்
கொண்டு அவர்களைக் குத்துவான். நான்கு
கொம்புகளையும், மலைக்குச்சமானமாகிய நா
ன்குகால்களையுமுடைய ஐராவத மென்கின்ற
யானையை அதின்பேரிலிருக்கின்ற தேவேந்தி
ரன் பயந்து விழாமல் இருந்தபடியே இ
ருக்கும்படியாக அந்தயானையைப் பின்னங்
காலிரண்டையும் பிடித்துக் கிறுகிறுவென்று
சுற்றினவன். அல்லாமலும் வடவாமுகாக்கி
னியையும், காற்றையும்பிடித்துப் பிழிந்துசா
றெடுக்கும்படியான சாமர்த்திய முடையவ
ன். மீன்களெல்லாம் அழிந்து நசுங்கிப்போ
கும்படியாகச் சமுத்திரஜலத்திலிழிந்து காலா
ல்நடந்து கரையேறத்தக்கவல்லவன். மாமி
சபக்ஷிடியின் உறுதியினால், மேருவும்நிகரற்ற
மிகுந்தபலமுள்ளவன். அதிகதபங்களைச்செ
ய்ததினால் யாதொருவரும் பெறாத மிகுந்தவ
ரங்களைப்பெற்றவன். பூர்வத்தில் இவன் மதோ
ன்மத்தனாய்த் திரிலோகங்களிலும் சாரியுலாவி
வந்தபோது, பேயையு மிவனுக்குச் சமான
மாகச் சொல்லவொட்டாமல் எல்லாரையும் பி
டித்துக்கொண்டு வந்தான். தொங்குகின்ற
மாலையையணிந்த இந்தக் கும்பகர்ணன் அன்
றைக்குவந்து படுத்து இன்றையவரையிலும்
நித்திரைசெய்துகொண் டிருந்தபடியினாலே,
லோகமெல்லாம் இவ்வளவாவது பிழைத்திரு
ந்தது. இவன்கையில் ஒருசூலமிருக்கின்றது
அது தேவர்களுடைய வாழ்நாளையெல்லாம்
உண்டுவிட்டது. அந்தச்சூலத்தை லோகங்க
ளையெல்லாம் உண்டவனாகிய சாக்ஷாது விஷ்
ணுமூர்த்தியினது சக்கராயுதத்தி னிடமாகவி
ருந்து, காலகோடிவிஷத்தை யுண்டவராகிய
சதாசிவமூர்த்திபெற்று இவனுக்குக் கொடுத்
தார். மின்னலைப்போலும் பிரகாசிக்கின்ற
திவ்வியதேகத்தையுடைய சுவர்க்கலோக வா
சிகளாகியதேவர்கள் அநேகம்பேர், இவனுக்கு
முன்னாக அமர்செய்ய நின்றார்க ளென்றபோ
திலும், அவர்கள் எல்லாரும் முதுகிட்டோட
அவர்கள் முதுகைப் பார்த்தானே யல்லாமல்
அவர்கள்முகத்தில் இவன் விழிக்கவேயில்லை.
இவன் இடியைக்காட்டிலும் கொடியவனான
ராவணனைப்பார்த்து அண்ணா! சீதாபிராட்
டியைக்கொண்டுவந்தது தர்ம்மமல்லவே! அத
னால் நமக்கு உயிர்ச்சேத முண்டாகுமென்

லும், பெரியோர்கள் இரண்டுதரம் புத்திசொல்லுவார்கள். அப்படியல்ல, இவனதற்குமேல் மூன்றுதரமும்சொல்லியிருக்கின்றான். இவன் சொன்ன புத்தியை மறுத்த ராவணனைச் சத்தியமாகக்கோபித்துப் பிராணநாசம் வருமென்பதைத் தெரிவித்தான். அதைக்கேளாததினால் அவனைவெறுத்துத் தான் சாகப்போகிறது நிச்சயமென்று அவனிடத்தில் தனக்குண்டாகிய பாத்தியதையும் முறித்துக்கொண்டு, இதுநமக்குநல்லதல்லவென்று தகுந்தநீதியை ராவணனுக்குச்சொல்லி, இன்றைக்குத்தேவரீருடைய சந்நிதிக்குமுன்பாகவந்தான். என்று விபீஷணாழ்வான் சுவாமியைவணங்கினார். அப்போது அந்தவார்த்தையைக்கேட்டுக்கொண்டிருந்தசுக்கிரீவமகாராஜர்ஸ்வாமீ! அடியேன்ஒரு நல்லநினைவு நினைத்தேன். அதாவது இவனைக் கொல்லுகிறதினாலே நமக்கொரு பிரயோசனமுமில்லை, அவனுக் கிஷ்டமிருந்தால் அவனை நம்மோடு சேர்த்துக்கொண்டு பிறகு நடக்க வேண்டியதைச்செய்யலாம். அப்போது, இந்த விபீஷணாழ்வாருடைய துக்கமும் நிவர்த்தியாகுமென்று சொன்னார். அதற்குச் சக்கிரவர்த்தித்திருமகனார் ஆம் இதுநல்ல யுத்தமமான காரியந்தானென்று சொல்லி, ஆனால், அவனிடத்திற்குப்போய் இந்தக்காரியத்தைச்சொல்லத்தக்கவர்க ளாரிருக்கிறார்களென்று விசாரித்தபோது, விபீஷணாழ்வார் தேவருக்குத் திருவுள்ளமானால் அடியேனேபோய்த் தகுந்த புத்திமதிகளைச்சொல்லி அவனுடைய மனத்திலிருக்கின்ற காடின்னியத்தை இளகச்செய்து, நம்மோடுசேர விருப்பமுள்ளவனாக விருந்தால், அழைத்துக்கொண்டு வருகிறேனென்றுசொன்னார். நீலமேகத்துக்கு ஒப்பாகிய ஸ்யாமளரூபரான ஸ்ரீராகவபிரான் நல்லது அப்படியே அதிவேகமாய்ப்போய்வரக்கடவாயென்று அனுப்பினார். உடனேஅந்த ராக்ஷசசேனை சமுத்திரங்களைத்தாண்டித், தமக்குச் சிறந்த துணைவனான கும்பகர்ணனுக்குச் சமீபமாகப் போனமாத்திரத்தில், வேவுகாரர்கள் ஐயா! கும்பகர்ண்ணமஹாராஜனே! உம்முடைய தம்பியாகிய விபீஷணர் என்னவோ வெகுவிரைவாக உம்மிடத்திற்கு வந்திருக்கிறாரென்று சொல்லக்கேட்டு, அளவில்லாத சந்தோஷத்தைக்கொண்டு எக்களிப்புற்ற, அந்தக் கும்பகர்ணனுடைய பாதங்களில், விபீஷணாழ்வார் தம்முடைய சிரசைச் சேர்த்துத் தெண்டனிட்டார். எதிரேவந்து சாஷ்டாங்கமாகத்தெண்டனிட்ட விபீஷணாழ்வாரைக், கைகளால் வாரிஎடுத்து உச்சிமுகந்து உயிராரத்தழுவி மார்போடணைத்துத் தன்னிரண்டுகேண்களிலும் மழைத்தாரைகள்போல நீரொழுகும்படியாக, அப்பா விபீஷணா! எங்களில் நீஒருவன் பிழைத்துப்போய் புத்திமானாய் வாழ்ந்திருக்கிறாயென்று சந்தோஷிப்பட்டிருக்கின்ற, என்னுடைய சிந்தைமுழுதும் நினைக்கும்படியாகப் புத்தியில்லாதவனைப்போலத் தனித்தவனாய் ஏன்திரும்பிவந்துவிட்டாய். ஸ்ரீராமபிரான் திருவடியை யடைந்து, நீ அபயம் பெற்றவிதத்தையும், தேவர்களும் பெறுதற்கேலாத இகலோகபரலோகாதி ஐஸ்வரியத்தைப்பெற்ற சிறப்பையும், நான் கேள்விப்பட்டு மிகுதியும் மனங்களித்திருந்தேன். சகலசாஸ்திரக்கியானசம்பன்னனான நீ, யமன் தலைவாய்க்கிரையாக எதிர்பார்த்திருக்கின்ற, எங்களிடத்திற்குக் குற்றமுள்ளவனாக ஏன் வந்துவிட்டாய். ஸ்ரீராமகைங்கரியமான அமிர்தபானம் பண்ணுகின்ற நீ ராக்ஷசகீர்த்தியமாகிய விஷமுண்ணவரலாமோ? என்கண்மணியாகிய தம்பீ! நீ ராக்ஷசகுலதர்ம்மத்தை யழித்துவிட்டாய். ஆனபோதினும், உன்னால் இந்தப் புலஸ்திய பிரம்மாவினுடைய வம்சம் மாட்சிமை பொருந்திய புண்ணியத்தையடைந்ததென்று எனது வலதுதோளைப்பார்த்து மகிழ்ச்சியடைந்திருந்த என்னை, இப்போது உன்வருகையாலே துக்கப்படுத்தி, என்னுடையநாவை வறளச்செய்து விட்டாயே! அதை நினைக்கும்போது என்மனது உளைகின்றதே? மகாதர்ம்மிஷ்டர்களான அந்த ராமலட்சுமணர்கள் தங்களையிரைவிட்டபோதிலும் அபயமென்றடைந்த உன்னை, நீக்கிவிடுகிறதற்குச் சம்மதிக்கமாட்டார்கள். அவர்களைவிட்டு விலகினதினாலே நீ மறுமையில் அடையப்போகிற நல்ல பதவியை இழந்துவிட்டாயே! ராமநாமத்தைச்சொல்லிக்கொண்டிருக்கின்றபரியந்தம், இந்தஅற்பப்பிறவியுண்டாகப்போகிறதில்லை. இதுகளையெல்லாம் வேதவேதாந்தங்களால் கற்றறிந்த நீ என்னகாரணத்தினாலே அந்தராமனைப் பிரிந்து இங்கேவந்துவிட்டாய். தர்ம்மமேஸ்வரூபமாகநின்ற சாக்ஷாது ஸ்ரீராம லட்சுமணருக்குத் தாசத்துவம்பூண்டு, அவர்களாலே பாவமலையாய் நிலைபெற்றுநின்ற அக்கியானம், அன்னியதாக்கியானம், விபரீதக்கியானங்க ளாகிற மூன்றையும், இருந்தவிடந்தெரியாமல் மாய்த்துவிட்டு, இன்னும்பலங்கொண்டிருக்கின்ற மற்றப் பாவங்களெல்லாவற்றையும் இந்தப் பிறப்பிலேயே யொழித்துவிட்ட மெய்ஞ்ஞானச்செல்வமுள்ள விபீஷணனே? பிறர்தாரத்தி விச்சைவைத்திருக்கின்ற எங்களை உறவாகப்பெறநினைக்கின்றாயோ? நீநல்லநீதியும், தர்ம்மநிலையான நல்லசெய்கையையும், யதார்த்

தக்கியானத்தையும், நீ செய்த அளவில்லாத தவங்களினாலாகிய ஆசிவஸ்தவாகிய சாக்ஷாது ஸ்ரீய ப்பதியாலேபெற்றுக்கொண்டாய். வேதமுதல்வனான ஸ்ரீராகவமூர்த்தியினுடைய இனிய அமிர்த வாக்கினாலே நீ சிரஞ்சீவிப்பட்டமும் பெற்றாய். இவ்வளவு யோக்கியாதி காரத்தைப்பெற்ற நீ, ஹேயமான ஜாதி தர்ம்மத்தை இன்னமும்விடவில்லைபோலக்காண்கின்றதே? எல்லார்க்குந் தலைவரான ஸ்ரீசக்கிரவர்த்தித்திருமகனார் நாணேற்றிய வில்லையுடையவராய் நிற்கின்றார். அவர்பக்கத்தில் ஒருவராலுந் தடுத்தற்கரிய வல்லமையுடைய இளயபெருமாளும் நிற்கின்றார். மற்றவானரவீரர்களெல்லாம் நிறைந்திருக்கின்றார்கள். எங்களைக்கொல்லும்படியாக யமனும்வந்திருக்கின்றான். அதற்கு இசைவாக விதியுங்கூடி நிற்கின்றது. இனி எங்களிடத்தில் என்னவல்லமையிருக்கக்கூடும். நீஎன் எங்களோடுகூடமாளவந்தாய், புலஸ்தியவம்ஸ குலதிலகமே விபீஷணா! நீ அயோத்தியாபுரிக் கரசர்களாகிய ஸ்ரீராம லட்சுமணர்களுக்கு அடைக்கலமாகி, அவர்களால், உஜ்ஜீவனமடையாமல் இவ்விடத்திற்கு வந்தாயானால் ராக்ஷசர்களாயுள்ள நாமெல்லாம், அந்தராமலட்சுமணர்கள் பிரயோகிக்கின்ற அஸ்திரவருஷங்களாலே மாண்டு லங்காபட்டணமுழுதும் பாழாய்விடப்போகிறதே! பின்பு கையிலே எள்ளுந்தண்ணீரு மெடுத்திறைத்துப் பிதுர்யாகக்கடமையை நிறைவேற்றத்தக்கவர்களாரிருக்கின்றார்கள். அப்படிப்பட்டவர்கள் ஒருவனா யெனக்குக் காட்டு பார்ப்போம். ஒருவருமில்லையே! இங்கேஇருக்கின்ற பாவிகளாகிய ராக்ஷசர்களெல்லாம் மாண்டுபோனபிறகு, திருவுறைமார்பனான ஸ்ரீராமபிரானுடனே நீ உன்னுடைய லங்காபட்டணத்துக்குவந்தபிறகு எக்காலத்திலேயும் அழியாதிருக்கின்ற பெரியசெல்வத்தை அனுபவிக்கத்தக்கவனானநீஇங்கே வீணாய்த் தாமசஞ்செய்யாமல் சீக்கிரமாய்த்திருப்பி அவர்களிடத்திற்குப் புறப்பட்டுப்போய்விடு. என்னப்பனே விபீஷணா! என்றுசொன்ன கும்பகர்ணனைப் பார்த்து அண்ணா? நான் உன்னிடத்தில் விண்ணப்பம்பண்ணிக்கொள்ளுகிறதற்கு ஒருகாரியமிருக்கின்றதென்றுசொல்ல, அதென்னவென்று கேட்டான், அதற்கு விபீஷணாழ்வார் சொல்லத் தொடங்கினார். அண்ணா? கும்பகர்ணா! அக்கியான சித்தையையுடைய எல்லாரிடத்திலும் இனிய அருள் சுரக்கின்ற மகாவீரசிகாமணியாகிய ஸ்ரீராமமூர்த்தியினுடையகிருபைக்கு நீபாத்திரமானால், அவர் அபயம்கொடுப்பதொன்றுமாத்திரமோ! இந்த மாயப்பிறவிப்பிணியை மாற்றும் மருந்தாகவுமிருந்து, கீழ்மேலாகமாறிமாறி உருண்டோடுகின்ற சகடத்தினுருளையைப்போல, நின்றநிலையில்நில்லாத இந்தமாயவாழ்க்கையை நீக்கிவிட்டு, மறுமையில்தன்னுடையஜோதியாகியபரமபதத்தையுங்கொடுப்பார். அந்தஸ்ரீராகவப்பிரான் எனக்குக்கிருபைசெய்துகொடுத்த சகல ஐஸ்வரியங்களுங், குறைவின்றிநிறைந்த இந்த லங்காதிபத்தியத்தையும், மற்றெல்லாச் சிறப்பையும் உனக்கு நான்கொடுத்து விடுகிறேன். மேலும், உன்னுடைய ஆஜ்ஞையின்படி எப்போதும் நடந்துகொண்டும் வருகின்றேன். இதைப்பார்க்கிலும் உனக்குவேறே யுறுதிப்பாடு ஒன்றுமில்லை; உத்தமனான அண்ணாவே? உன்பின்னாகப்பிறந்த என்னுடைய மனத்தினிடத்தி லுண்டாகிய துக்கத்தைநீக்கி, நம்முடைய யக்ஷவம்ஸ தர்மத்தையும் விர்த்திசெய்து வாழக்கடவாய். இனி இந்தரணக்களத்தைவிட்டுத்தப்பிப்போகிறதோஅருமை? அப்படிதப்பிப்போனபோதிலும்பிராணனோடே தங்குதற்கானஇடமுங்கிடையாது. ராவணாதிராக்ஷசர்களெல்லாம் வெகுசீக்கிரத்திலேயே நிச்சயமாகச் சாகப்போகிறார்கள். நீயோ நல்லநீதியையும், தர்ம்மத்தையும், அபேக்ஷித்திருக்கின்றாய், ஆனபடியினாலே இன்னுஞ் சிலநாளைக் கிருக்கத்தக்க பிராணனை விருதாவில்மாய்த்துக் கொள்ளவேண்டிய காரணமென்ன? வேதமார்க்கத்திற்குத்தக்க, ஒழுக்கங்களையேகைப்பிடித்துநடக்கவேண்டியதுயாவர்களுக்கும் யுக்தமாகும். வேதவிரோத பாபகிருத்தியங்களைச் செய்வார்களேயானால் அப்படிப்பட்டவர்கள் தங்களிலும் சிறந்தவர்களானாலும், உடன்பிறந்தவர்களானாலும், உறவின்முறையார்களானாலும், தாய்தந்தையர்களானாலும், அவர்களை வைதீகதர்ம்ம ஒழுக்கத்தில்நிற்பவர்கள் மதிப்பார்களோ? அந்த நியாயங்களையெல்லாம்நீநன்றாயறிந்திருக்கின்றாயல்லவோ? அப்படிப்பட்ட உனக்குநான் சொல்லவேண்டியதென்னவிருக்கின்றது. சத்தியத்தைப் பின்பற்றி நடக்கும்போதும், அந்தஉத்தமர்களைப் பாபமானது பின்றொடர்ந்து வருத்துமோ? பிள்ளைகளும், வித்தியாப்பியாசஞ் செய்துவைத்த உபாத்தியாயர்களும், கொண்ட பெண்டிரும், இனியஉயிர்க்குச்சமானமாகிய சிநேகிதர்களும், இடுக்கண்வந்தபோ துதவிசெய்தவர்களும், மேலுந்தம்மைவந்தடுத்தவர்களும், ஆகியஇவர்களிடத்தில் வைக்கும்அன்பு, துக்ககரமான சம்ஸாரபந்தத்தையுண்டாக்குமென்று அத்தியவசாயம்பிறந்த முமுக்ஷுக்கள் துறந்துவிடுவார்கள். வைதீகதருமமொன்று

மாத்திரமே இகத்துக்கு நன்மையைச்செய்வதும், பரத்திற்கு அனுகூலமா யிருப்பதுமாகும். அண்ணா கும்பகர்ணா ? ஒருவன் அகிருத்தியத்தைச் செய்ய அவனுடன் யாதொருதீங்குஞ்செய்யாத மற்றொருவன் மரணமடைகிறது நியாயமோ ! அல்லது அநியாயமோ ! நீயே ஆலோசித்துப்பார். நீ நன்மைதீமையை நன்றாய்ப்பகுத்தறியும் தன்மை யுடையவனல்லவோ ? தபசிரேஷ்டராகிய ஸ்ரீபரசுராமர், பெற்றதாயாகிய ரேணுகாதேவியானவள் ; பாபகிருத்தியத்தைச் செய்ததனாலல்லவோ ! தர்மத்தைநோக்கி, அவளைக் கொன்றுவிட்டார். துஷ்கிருத்தியத்தைச் செய்த தன்பிதாவாகிய பிர்ம்மதேவனுடைய தலைகளி லொன்றைக்கிள்ளி யெறியும்படியாக மூன்றுகண்களையுடைய உமாநாயகராகிய சிவனானவர் முற்காலத்திலேற் பட்டாரல்லவா? பகைவருடலைப் புண்படுத்திப் புலால்நாற்றம் வீசுகின்ற சூலாயுதத்தைக் கையிற்றாங்கிய மகாவீரசிகாமணியே ! இம்மையில் மகாபாபிஷ்டியாய்ப் பலருமிகழும்படி யிருந்து, மறுமையில் ரௌரவாதி என்னத்தக்க நரகத்தில் வீழ்வதற்கும் புத்திமான்கள் பிரயத்தனப்படுவார்களா ? தேகத்திலகழலைக்கட்டி புறப்பட்டால், அதைச்சத்திரமிட்டுக் கெட்டரத்தத்தைநீக்கிவிட்டுக்,காரம்வைத்துச்,சுட்டுப்,பூச்சுமருந்தினா லந்தப்புண்ணையாற்றித், துன்பத்தை நீக்கிக்கொள்வார்களல்லவா ? வாசனை வீசுகின்ற பூவிதழ்களால்தொடுத்த மாலையையணிந்த மார்பினையுடைய அண்ணா கும்பகர்ணா ! மிகுந்த புத்திமான்கள் உரைத்து உடலிலேபூசிப் பரிமளிக்கச் செய்யவேண்டிய வாசனைதிரவியத்தைவீணாகக் கடலிற்கொண்டுபோய்க் கரைத்து அழித்துவிடமாட்டார்களே ! ஆகையால் உன்னுடைய தமயனான ராவணனைப் பிராணன்போகாமல் காப்பாற்றலாமென்றால், அதற்கேற்ற ஒரு நற்குணமாவது அவனிடத்திற் காணப்படவில்லையே ! இனி வேறொருவழியாய்த் தர்மத்தை விருத்திபண்ணலாமென்றாலும் அதையும் நிறைவேற்ற அவன் இடங்கொடுக்கமாட்டானே ! அஷ்டதிக்குப்பாலகர்களும், பலதிசைகளிலுள்ளவர்களும், சிரிக்கும்படியாக ரணக்களத்திலே ராக்ஷசர்களுடைய பிராணன்களெல்லாம் போய் விடப்போகின்றன. அப்படிபோனபிற்பாடு அவர்களுக்கு நரகமேயன்றி வேறொன்றும் சித்திக்கமாட்டாதே ? நீ மிகுந்தபலத்தைக்கொண்டு, மேலுலகங்களையெல்லாம் ஜெயித்தாயே ! அங்கேயாவது வசித்துக்கொண்டிருந்தாயா ! இல்லையே இந்தப் பூமியில்வந்து நீஇறங்கி; இன்றையவரைக்கும் உன்னுடைய யௌவனவயதெல்லாம் வீணாய்ப்போகும்படியாக நித்திரைசெய்தா யென்றதல்லாமல் அதனாலேனும் ஒருலாபத்தையடைந்திருக்கின்றாயா! ஒன்றுமில்லையே ! நீ என்னபிரயோசனத்திற்காகத் தர்மத்தைவிட்டு உயிரைமாய்த்துக்கொள்ளுகிறதற்குஏற்பட்டாய் அண்ணா! திருவையும், மறுவையும், மார்பிலுடையவரும், சாக்ஷாத் ஜெகத்ரக்ஷகரும், தைத்தியாரியுமாகிய ஸ்ரீராமருடைய காருண்ணியத்தினால் உன்னுடைய அக்கியானமாகிய நித்திரையும் நீங்கி, எல்லா ஐஸ்வரியச்சிறப்பையும் அடைந்துவாழ்வாய். மேலும் சிரஞ்சீவிப்பட்டமும் பெறுவாய். ஏகசக்கிராதிபதியாய். அரசுசெய்துகொண்டிருப்பாய் எல்லா உரிமையும் உன்னதேயாகும், உனக்கு ஒருகாரியமும் அருமையாகமாட்டாது. அதுகளுக்கெல்லா மிதுவேதகுந்த நல்லகாலமாகவுமிருக்கின்றது, அண்ணா ? தேவதேவனான சக்கிரவர்த்தித்திருமகனார்கொடுக்க லங்கையின் ஐஸ்வரியங்களெல்லாம் பெற்றுக்கொள்ளுவாய். எப்படிப்பட்ட வர்களுக்கும், நீ கீழடங்கியிருக்கவுமாட்டாய். யாரும்உன்னை வருத்தப்படுத்தவுமாட்டார்கள். திரிமூர்த்திகளுக்குந் தலைவரான, ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே ! காகுஸ்தவம்சோத்பவரா யவதரித்துத் தர்மமுமூவதையும், காக்கும்படியாக வந்திருக்கின்றார். உனக்குப்பிள்ளைகளாக விருக்கின்றபேர்களும், உன்கூடப்பிறந்த எனக்குப்பிள்ளைகளாக விருக்கின்றபேர்களும், நம்முடைய யக்ஷவம்சத்திற்கு முடிவுகாலத்தை ஆலோசித்தவனான ராவணனுடைய பிள்ளைகளுடனே சிரேஷ்டத்தைப்பெற்றுத் திரிந்துகொண்டிருப்பார்களல்லவோ? துஷ்கிருத்தியத்தைச் செய்து அதர்மவானென்று கண்டோர்பழித்துச் சொல்லாமல் நல்லபுத்தியினாலே தர்மவானென்று பேர்பெற்று வாழக்கடவாய். இதுவரையிலும் ராக்ஷசர்களிடத்தில் வெறுப்புற்றிருந்த மகாரிஷிகளெல்லாரும் இனிமேல் கருணையுடையவர்களாக இருப்பார்கள். சுவர்க்கமத்திய பாதாளமென்று சொல்லப்பட்ட திரிலோகத்திலும், இனிப்பகையு முண்டாகப் போகிறதில்லை. இனியுனக்கு மரணமுமுண்டாகுமென்று பயப்பட வேண்டியதுமில்லை ராக்ஷசர்களைவருத்தப்படுத்திக்கொண்டு பகைவர்களாயிருக்கின்ற தேவர்களெல்லாரும் நட்புடையவர்களாகப் போகிறார்கள். இப்படிப்பழம்பழுத்துத் தின்னத்தக்ககாலத்தில் மரத்தைவெட்டி, அதுதுளிர்த்துப் புஷ்பிக்கவேண்டுமென்று நினைத்திருக்கின்றவர்களைப்போ

லப் பிரயோசனத்தை இழந்துவிடலாமோ? மேலும், உன்னிடத்திற் நாமென் எல்சொந்த அபிப்பிராயத்தின்படிக்கு வரவில்லை. அந்த வேதமுதல்வனாகிய ஸ்ரீராகவபிரானே தாம் என்மீது வைத்திருக்கின்ற கிருபையினாலே உன்னிடத்திலும் தயையுடையவராய் உன்னை யழைத்து வரும்படிடாக என்னை அனுப்பினார். நான்வந்தகாரிய மிதுவேயாகும். ஆனபடியினாலே, அந்தச்சக்கிரவர்த்தித் திருமகனுடைய க் காணும்படியாகத் தர்மத்திற்குப்பிசகிநடவாமல் இப்போதே என்னுடன்கூடப் புறப்பட்டுவரக்கடவாயென்று அவனுடைய அழகு பொருந்திய இரண்டுபாதங்களிலும் சாஷ்டாங்கமாகவிழுந்தார். அழகிய மலர்மாலையை த்தரித்து ரத்தினங்களிழைத்துப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற கிரீடமானது பூமியில் படியும்படியாக நமஸ்கரித்து இரண்டு பாதங்களையும் தம்முடைய கைகளினால் பிடித்துக்கொண்டு புலம்புகிற மேருமலைக்குச் சமானமாகிய தோள்களையுடைய விபீஷிணனுடைய க்கும்பகர்ணன் வாரியெடுத்து மார்போடணைத்து அக்கினிஜொலிக்கின்ற கண்களினிடத்தில் வெவ்விதாகிய ரக்தநீர் தாரைதாரையாகச் சொரியும்படியாகத் தம்பியைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினன். நீரினலெழுதிய கோலத்தைப்போலச் சிறிதுபொழுதே தோன்றும் அற்பவாழ்க்கையைவிரும்பி என்னை இத்தனைக்காலமளவாக வளர்த்ததுமன்றி, இப்போது போர்க்கோலமுஞ்செய்து யுத்தத்திற்கு அனுப்பின ராவண னிமித்தமாக நான் என்னுடைய உயிரைக்கொடுக்காமல், ஸ்ரீராமமூர்த்தியினிடத்தில் அடைக்கலமாகப் போய்ச்சேரமாட்டேன். நல்ல மாலைகளைத் தரித்து அழகுபொருந்தியிருக்கின்றதிருமேனியையுடைய தம்பி விபீஷிணா? என்னுடைய உயிரைக்காக்கவேண்டுமென்று உனக்கு இஷ்டமிருந்தால் மேகத்தைப்போலச் சிறந்த அழகுபெற்றிருக்கின்ற திருமேனியையுடையவரான அந்த ஸ்ரீராமமூர்த்தியைச் சீக்கிரமாய்ப்போய்ச் சேர்ந்துகொள்ளக்கடவாய். மூலதாமரைபுஷ்பத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிருஷ்டிகர்த்தாவான பிரமதேவருடைய பொய்யாவரத்தினாலே நீஎப்போதும்நிலைபெற்றிருக்கின்ற தர்ம்மமார்க்கத்தை யடைந்துகொண்டாய். இந்தலோகமுள்ள வரைக்கும் அழியாமல் சிரஞ்சீவியாகவு மிருக்கப்போகிறாய். இந்த லோகமுழுமைக்கும் நீயே சர்வாதிபத்தியமு முடையவனாக விருக்கிறாய். உனக்கே அந்த அடைக்கல மென்பது தகுதியாகும். அகிருத்தியத்தைச்செய்கிற மூத்தவனிமித்தம் மரணமடைகிறது அதிகஇழிவைத் தரத்தக்கதேயாயினும் அதுவே எனக்கு மேலானகீர்த்தியாகும். புத்திஹீனனாகிய ஒரு எஜமானன் கெடுநினைவைநினைத்தால் அந்தக் கெடுதியை நீக்கி, அவனைத் திருத்தக் கூடுமோ னாலல்லவோ? அவனைச்சேர்ந்தமற்றவர்களுக்கு நல்ல சுபக்ஷேமமுண்டாகும். அப்படி அவனைத்திருத்தக்கூடாவிட்டால் குடிகளுக்கு க்ஷேமத்துடனே வாழும்படியாகவும் நேரிடுமோ? போர்த்தொழிலைச் செய்கிறதற்கு உரியவர்களான விவேகமற்ற தலைவர்கள் மடிவதற்குமுன்னே மடிந்துவிடுதலே அவர்களுடைய சேனைகளுக்கு உரியதாகும். தும்பைமாலையைத் தரித்துக்கொண்டிருக்கின்ற வீரசிகாமணியாகிய ஸ்ரீராமபிரானுடைய நீ யைவீசுகின்ற அஸ்திரமானது சம்மரிக்கும் போது தன்னைச்சூழ்ந்த கொடிய ராக்ஷசசேனைகளோடும், மற்றபந்துக்களோடும், தேவர்கள் முதலாகிய மற்ற யாவர்களும் தோத்திரஞ்செய்யத்தக்கவனாய்த், தானே ஏகச்சக்கிராதிபதியாய் இந்த மூன்றுலோகத்தையு மாண்டவன்,உடன்பிறந்ததம்பிமார்களும், தன்னோடு மடியாமல் தான்மாத்திரம் தனித்து ரணக்களத்தில் மாண்டுகிடக்கத்தகுமா? வெற்றியில் தனக்குச் சமானமில்லாமல் உயர்ந்தவனாகவுமிருக்கின்ற ராவணன் தன்னுடையபல த்திற்குக் குறைந்தவர்களுடைய கையினால் மாண்டபோதும்பெண்மானுக்குச்சமானமாகிய விழிகளையுடைய பார்வதியை வாமபாகத்தில் வைத்திருக்கின்ற நங்குலதெய்வமாகியசாம்பசிவமூர்த்தியானவர் எழுந்தருளி யிருக்கின்ற பெரியகைலாசமலையை நடுங்கும்படியாகப் பெயர்த்த ராவணனுடைய திரண்டதோள்களை யமன் தனதுபாசத்தினால் கட்டியிழுத்துக்கொண்டு போகும்போதும்,முன்னமேல தனக்குத்தோல்வியடைந்து தலைமறைவாய்த் திரிந்துகொண்டிருக்கின்ற அந்தயமனுடைய பட்டணத்துக்கு வெட்கமில்லாமலும் ஒருவருந் துணையில்லாமலும் தனித்துப்போகும்படியாக விட்டுவிடுகிறது நமக்கு நல்லதாகுமா? மேலும் எமனையும் யுத்தத்தில் தோற்கடித்து வெற்றிபெற்றிருக்கின்ற நான் செம்பினால் கட்டப்பட்டிருக்கின்ற மதில்களாற் சூழப்பட்ட சிரேஷ்டமாகிய லங்காதிபத்திய ஐஸ்வரியவானான ராவணேஸ்வர னுடைய தங்கையாகிய சூர்ப்பநகையின் கச்சணிந்த முலையையும் மூக்கையு மிதழோடு சேர்த்தரிந்த பகைவர்களாகிய அந்த மனிதர்களைப்புகழ்ந்துகொண்டு,நாணமென்னும் அம்பினாலே தைக்கப்பட்ட புண்கொண்ட நெஞ்சையுடை

யவனுக அவர்களைக்கும்பிட்டுக்கொண்டு உயி
ர்வாழ்ந்திருக்கவுமாட்டேன். அப்பா,தம்பி!
விபீஷணு ? அனுமானையும், வாலிபுத்திரனு
கிய அங்கதனையும், சூரியகுமாரனுகிய சுக்கிரீ
வனையும், அழகிய பொன்போன்ற கோதண்
டத்தையுடைய ஸ்ரீராமனையும், நீலனையும், சா
ம்பவந்தனையும், பழங்களைத்தின்னும் விருப்
பத்தினுல் காட்டிற்றிரிந்துகொண்டு ஜீவிக்கி
ன்ற குரங்குச்சேனைகளாகிய பிரளயகாலச் ச
முத்திரத்தையும், ஒருமிக்கச்செயித்துப்பனி
க்கூட்டமெல்லாம் வற்றும்படிச்செய்து இந்
த உலகத்தைச் சுற்றிவருகின்ற சூரியனுக்கொ
ப்பாக உலாவிவரப்போகிறதைச் சற்றே நீ
பார்த்துக்கொண்டேயிரு. காலகோடி விஷ
த்தைப்பார்த்தோடின தேவர்களைப்போலக்
குரங்குகளெல்லாம் சின்னபின்னப்பட் டோ
டும்படியாக, மேருமலையானது தன்னுடைய
கையிலே ஒருசூலாயுதத்தைப்பற்றிக்கொண்டு
அவர்களைப் பின்றெடர்ந்தோடிவருகிறதைப்
போலொத்த தோற்றத்தைக் காட்டிக்கொண்
டு, கருங்கடலோடவும், வடவாமுகாக்கினியோ
டவும், சண்டமாருதக் காற்றோடவும், லோக
மெல்லாம் காலமுடிந்தோடவும்,காற்றுடியை
ப்போலச் சாரிகைசுற்றித்திரியப்போகிறேன்.
அதை நீ பார்த்துக்கொண்டேயிரு. போர்
க்களத்தில் சற்றும் பயப்படாமல் வந்து என்
கண்ணெதிரே அகப்படுகின்றவர்கள் நீலம
லையும் மேருமலையுமென்று ஒப்பிட்டுச் சொ
ல்லும் படியான சிறப்புடையவர்க ளாகிய
ராமலக்ஷ்மணர்க ளென்கிற இரண்டுபேர்க
ளுந்தவிர மற்றெவர்களா யிருந்தபோதினும்
அவர்களில்பயத்தால் செத்தவர்கள்போகட்டு
ம், உயிரைச்சுமந்துகொண்டு திரிகின்ற எல்லா
ரையும் ஒருவராவது தப்பித் திரியும்படியாக
விடாமல் கொன்றுவிடுவேன். யாவரும்வண
ங்கும்படியான யோக்கியதையுடைய தம்பி!
விபீஷணு ? இனி தாமசஞ்செய்யாதே என்
சொல் சிரசாகவகிக்கத்தக்கதென்று கேட்பா
யானல் சீக்கிரமாகப்போய் அவர்களோடுகூ
டி யிருக்கும்படியாக நட்பைத்தேடிக்கொள்
ளக் கடவாயாக. இனிஏதேனு மொருவார்த்
தை சொல்லுவாயானுலும், பொல்லாங்காய்மு
டியுமென்று நீ யோசிக்கக்கடவாய். அப்ப
னே விபீஷணு ? நீசீக்கிரமாய்ப்போய்விடு
பிறகு, இந்தப்போர்க்களத்தி லிறந்தபேர்க
ளுக்கெல்லாம் நிலைபெற்றிருக்கின்ற வேதவித்
துக்களாகிய ப்ராம்மண்ணிய தேவனுயிருக்கி
ன்ற ஸ்ரீராமபிரானிடத்தில் உனக்குவேண்டிய
வைகளைப்பெற்று அவர்களுக்கு உண்மையுள்
ளவனுகி யிருந்து எங்களுக்குச் சாஸ்திரவிகி
தமான உரிமைக்கடன்களைச்செய்து, நாங்கள
டையத்தக்க துக்கசாகரமாகிய நரகத்தைய
டையாத விதமாக அனுவாராதபடி காத்துக்
கொள்ளக்கடவாய். எக்காலத்திலும், அழியா
மல்சிரஞ்சீவியாக இருக்கப்பெற்ற பாக்கிய
வானே விபீஷணு ? அழிந்துபோகிறதாய்க்
காணப்படுகிறதும், ஆரும்காலத்தில் அழியா
ததாய்முடியும். அழிந்துபோகத்தக்ககாலத்தி
ல் சூழ்ந்துநின்று பலஉபாயங்களைச்செய்து
காப்பாற்றினபோதிலும் அதுநசிக்காமற்போ
காது. இது சத்தியமாகும், மாச்சரியமற்ற ஆ
லோசனை யுடையவர்களில் உன்னிலுமுயர்ந்
தோர் யாரிருக்கின்றார்கள். இது உனக்குத்
தெரியாததல்லவே ! ஆதலால் நீ என்மரண
த்தைப்பற்றி வியசனப்படாமல் போய்விடு.
எங்கள்நிமித்தம் நீ துன்பப்படவேண்டாமெ
ன்று சொல்லி மறுபடியும், அவனைவாரியெடு
த்து மார்புடனே இறுகத்தழுவிநின்று இர
க்கமுற்று அழுது கண்ணீரும் கண்ணுமாய்
வெகுநேரம் செவ்வையாக உற்றுப்பார்த்து,
எமதுசெல்வமே என்னுயிர்த்துணையே தம்
பி விபீஷணு ? உனக்கும் எனக்கும் இன்
றையோடு உடன்பிறப்பென்கின்ற ஆசையா
னது நீங்கிவிட்டதல்லவாவென்று கும்பகர்ண
ன் சொல்லியபோது, வெற்றிபெற்ற மிகுந்த
பலமுள்ளவரும், அதிகுண விசேஷருமான
விபீஷணுழ்வான் அவனுடைய பாதங்களில்
விழுந்து நமஸ்கரித்தெழுந்து, தமது தமைய
னுகிய கும்பகர்ணன் தம்முடையபோதனைக்
கிசையாமையால் கண்ணும், முகமும், மன
மும், சொல்லும், அதிகச்சோர்வடைந்து, வச்
சிரதேகமும் வாட்டமுற்று, இன்னம் எதை
யாவது சொல்லுகிறதினுலே அவனுக்குக்கோ
பமுண்டாகும். அதனுல் மிகுந்த பொல்லாங்
குநமக்குவிளையும்,இனிக்காரியமில்லை திரும்பி
ப்போய்விடவேண்டுமென்று அபிப்பிராயமு
ற்று, அந்த ராக்ஷசசைனியங்களெல்லாம் கை
யெடுத்துக் கும்பிடும்படியாக திரும்பிநடந்
து, ஸ்ரீராமர் சந்நிதானத்தைநோக்கிப் புறப்
பட்டார். அப்படிப்போகின்ற விபீஷணுழ்
வானைப்பார்த்துக் கும்பகர்ணன் வஞ்சகசுபா
வமுள்ள வாழ்க்கையையுடைய நம்மை இவன்
கைவிட்டு ராக்ஷசஸ்வபாவத்தையும் விட்டுவிட்
டான். முலைப்பால் மணமாறுதகுழந்தைப்பரு
வமுள்ள இவன் இவ்வளவுபெருந்தன்மையான
நல்லகுணமுடையவ னுனேயென்று தான்
மிகுந்த ஆச்சரியப்பட்டுப் பித்துக்கொண்ட
வனைப்போலச் சித்தப்பிரமையடைந்து தெ
ளிந்து பெரியவெள்ளநீரையுடைய சமுத்திர
த்தில் விழுகின்ற ஆற்றுநீருக்குச் சமானமாக

த் தன்னிரண்டு கண்களிலிருந்தும் நாலாதாரையாக ரத்தநீர்பெருகிப்பாயும்படியாக நின்றுகொண்டிருந்தான். இந்த நிலைமையில் கும்பகர்ணனிருக்க, ஸ்ரீராமருடைய சந்நிதானத்திற்சேர்ந்த விபீஷிணாழ்வான், சுவாமிக்குத் தெண்டன்சமர்ப்பித்துச், சர்வலோககாரணபூதரான ஒசுவாமீ! கடைத்தேறும் படியானவர்களுக்கல்லவோ! வைதிகதர்மமார்க்கமும் நல்லொழுக்கமும், சத்தியமுமுண்டாகப்போகின்றன. அடியேனாலானமட்டும், சொல்லவேண்டிய புத்திமதிகளையெல்லாம் திருஷ்டாந்தப்படுத்திச் சொல்லினேன். அவனுக்குக்கொஞ்சமாவது ராவணனைவிட்டு வருகிறதற்குமனதில்லை; ராக்ஷசகுலாபிமானமவனைவிட்டு நீங்கவில்லையென்று சொல்லக்கேட்டு, நீலமேகஸ்யாமளரூப ஸ்ரீராமமூர்த்தியானவர், கத்தரித்தமைத்த சடைமுடியைச்சற்றே அசைத்துத் தம்பீ விபீஷிணா! உன்கண்முன்னாக உன்தமையனாகிய கும்பகர்ணனை இறக்கும்படி அஸ்திரப்பிரயோகஞ்செய்து துண்டித்தறுத்துத்தள்ளுகிறது அழகல்லவேயென்று, அவனை அழைத்துக்கொண்டு வரும்படி நானும் உனக்குச் சொல்லி யனுப்பினேன். இதைவிட நான் உனக்குச்செய்யும் உபகாரம் இப்போது வேறென்ன விருக்கின்றது. பிராரப்த கர்மத்தை யாவர் விலக்குவார்களென்று இப்படி இனியவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே ராக்ஷசச் சேனைகளென்கின்ற பெரியசமுத்திரமானது வானரசேனைகளாகிய கடலைச்சூழ்ந்து முற்றுகைபோட்டுக்கொண்டு யுத்தஞ்செய்யத் தொடங்கினபோது அந்தச்சேனைகளால் எழும்பிய தூளியானது சுவர்க்கமத்திய பாதலமென்கிற மூன்று லோகங்களையும்மூடிக்கொண்டு சமுத்திரத்தையும் தூர்த்துவிடத்தொடங்கினது. நாலுபக்கங்களிலும்குதிரைகளும், யானைகளும், ஓடித்திரிந்ததுகள். சக்கரங்களைப்பூட்டியபலம்பொருந்திய தேர்களோடினதுகள். மலைகளையெல்லாம் பெயர்த்துக்கொண்டு, பல ரத்த ஆறுகளோடினதுகள். கவந்தங்களெழுந்துகூத்தாடினதுகள். ஒருவர் கொலையுண்ணும்போது இந்தஉடலின் ரத்தமாமிசங்கள் உனக்கெனக்கென்று பேய்கள்ஒன்றோடொன்று பந்தயம் போட்டுக்கொண்டதுகள். விருதுக்கொடிகள் பறந்ததுகள். ஆகாசமார்க்கத்தில் மாமிசபட்சணிகளாகிய பருந்து, கழுகு, முதலியவை பறந்ததுகள். வானரவீரர்கள் மேருமலைக்குச்சமானமாகிய தங்கள்தோள்களினாலே எறிந்த மரங்களினாலேயும், மலைகளினாலேயும், ராக்ஷசர்களாலெய்யப்பட்ட சூலாயுதத்தினாலும், வேலாயுதத்தினாலும், இருவகைச் சேனைகளும், மொத்துண்டுமூளையும், மாமிசமும், ரத்தமும், எலும்பும், கொழுப்பும், சிதறுண்டு பலதிசைகளிலும் விழும்படியாகக் கோரதந்தங்களையுடைய இராக்ஷசர்களிற் சிலர் தங்கள் தங்கள் கையில் பிடித்திருந்த வாளாயுதத்துடனே எழும்பி குழைந்து மாண்டுபோனார்கள். சிலவானரர்கள் ரத்தவெள்ளத்திலமுழ்ந்தி மாண்டுபோனார்கள். சிலராக்ஷசர்கள் அநேக ஆயுதங்களைப் பிரளயகால மேகத்தைப்போல வானரர்கள்பேரில் எவினார்கள். சில வானரர்கள் மலைகளைப்பெயர்த்து யுகாந்தகால இடியைப்போல ராக்ஷசர்கள்மீது மோதினார்கள். சில ராக்ஷசர்கள் வானரர்களை வாரியெறிந்தார்கள். சிலவானரர்கள் ராக்ஷசர்களைக் கையிற்பிடித்துப் பிசைந்துகொன்றார்கள். சில அரக்கர்கள் வானரர்களை நிந்தித்துப்பேசினார்கள். சிலபிலவங்கவீரர்கள் அரக்கர்களை அடித்துத் துன்பப்படுத்தினார்கள். இந்தப்பிரகாரமாக இருநிறத்தாரும் பற்பலவிதமான யுத்தங்களைச் செய்யும்போது எதாய் முடியுமோவென்று தேவர்களெல்லாரும் பயந்து நடுக்கங்கொண்டார்கள். புசலடிக்குங்காலத்தில் காற்றுமுன்னும், மழைத்தாரை அதன்பின்னும், மழைத்தாரைமுன்னும், காற்று அதன்பின்னும், ஆகஒன்றையொன்று மாறிமாறித் துரத்துவதுபோலக் காணப்படும் விதமாக ராக்ஷசவீரர்களை வானரவீரர்களும், வானரவீரர்களை ராக்ஷசவீரர்களுமாக ஒருவரையொருவர் மாறிமாறித்துரத்திப் பின்னிடைந்துபோய்விடாமல் எதிர்த்துநின்று சண்டைசெய்கிறதைப் பார்த்து தனக்கு வேண்டிய சகல ஐஸ்வரியங்களையும், தேவலோகத்திலிருக்கவிடாமல் பறித்துக்கொண்டு மறுபடியும் அவைகளில் தேவர்களுக்கு இச்சையுண்டாகாதபடித் தன்னுடைய உதிரந்தோய்ந்த சூலாயுதத்தைப் பார்த்துக்கொண்டேயிருக்கின்றவனான கும்பகர்ணன் வானரசேனைகளின்பேரில் தன்தேரைச்செலுத்திக்கொண்டு யுத்தத்திற்குவந்தான். ஊழிக்காலத்திற் புறப்படுகின்ற சண்டமாருதத்தில் உலகங்களகப்பட்டுத் துன்பப்படுவதுபோல, வானரங்களென்று சொல்லப்பட்டவைகளி லநேகம் சேனைத்தூளியி லகப்பட்டும், ரத்தக்கடலில் மூழ்கியும், முகபடாத்தையணிந்த மஸ்தகத்தையுடைய யானைகள்காலிலும், அவற்றோடு தொடர்ந்துவந்த கும்பகர்ணனுடைய தேர்க்காலிலும் அகப்பட்டும் மாண்டதுகள். இம்மட்டிலே போகாமல் கும்பகர்ணனானவன் தன்மீது மலைகளைக்கொண் டெறிகின்றவை

ளும், தன்தேரின்முன்பாகவந்து குதிக்கிற
வைகளுமான வானரங்களிற் சிலவற்றை இர
ண்டுகைகளினாலும் பிடித்து, ஒன்றுடனே ஒ
ன்றைமோதியும், சிலவானரங்களைக்காலினாலே
தேயும்படி யுதைத்தும், சிலவானரங்களைக் கா
லின்கீழ்ப்போட்டு நசுக்கியும், சிலவானரங்க
ளை வாயில் மென்றுமென்று உமிழ்ந்தும், சி
ல வானரங்களைக் கையினால் கும்பல்கும்பலா
ய் வாரியெடுத்து, முந்திரிகைப் பழத்தினின்
றும் கொட்டையைத்திருகிப்பிட்பதுபோலத்
தலைகளைத் திருகிப்பிட்டெறிந்தும். சிலவா
னரங்களைப் பல்லினால் கடித்து கடித்துக்
கொன்றும், மிகுந்த பலாட்டியனான வசந்த
னென்கிற வானரவீரப் படைத்தலைவனைப் பி
டித்து நசுக்கி, அவனுடைய ரக்தத்தைவாரித்
தேகத்தில் சந்தனம்போலப் பூசிக்கொண்டா
ன். இப்படிச் செய்ததல்லாமலும் சிலவான
ரவீரர்களை கையிற்பிடித்து சமுத்திரத்தில்
தோய்த்துத்தோய்த்து எடுத்தான். சிலவான
ரவீரர்களைப் பூமியிற்போட்டுத் தேய்த்துவி
ட்டான். சிலவானரவீரர்களைச் சமுத்திரசு
லத்தில் அமிழ்த்திவிட்டான். சிலவானரவீர
ர்களை நெருப்பில் இறக்கும்படி எறிந்துவி
ட்டான். சிலவானரவீரர்களைத் தன்னுடை
ய தேரிலறைந்தான். சிலவானரவீரர்களை எ
ட்டுத்திக்கினும்போய் விழும்படி வாரித்தூவி
னான். சிலவானரவீரர்களைப் பிடித்து மரத்
தூர்களில் வீசியடித்தான். சிலவானரவீரர்
களைக் கிறுகிறுவென்றுசுழற்றி மலைகளில்மோ
தினான். இதைக்கண்டு தேவர்களெல்லாரும்
பயந்து பறந்தோடிப் போனார்கள். எங்கே
பார்த்தாலும் வானரப்பிணக் கும்பல்கள் நி
றைந்துவிட்டதுகள். கழுகுபருந்து முத
லான பறவைகளெல்லாம் எட்டுத்திக்குகளும்
தோன்றாதபடி நெருங்கிப்பறந்ததுகள்.மலை
களையெல்லாம் பிடுங்கி எறிந்து எறிந்துகுரங்
குகள்குறைத்ததுபோலவே, குரங்குச்சேனைக
ளையெல்லாம் யமனும் பயப்படும்படியாகக்
கும்பகர்ணன் கொன்று குறைத்துப் போட்
டான். அப்போது மிகுதியான வானரசே
னைகள் இனிமேல் நாம் கும்பகர்ணன்மேலன்
றி மற்றொருவர்மேலும், மரத்தையாவது ம
லையையாவது பிடுங்கி யெறியப்போகிறதில்
லை. ஆயினும்,இன்றைக்கே நாம் ஜெயமடை
யப்போகிறோம். சத்துருக்களெல்லாம் இ
ப்போதே முடியப்போகிறார்களென்று தங்
கள் ஊக்கங்கொண்டு அடித்தவைகளும், வி
ட்டெறிந்தவைகளுமான மரங்கள் - மலைகள்-
வேர்கள் - கட்டைகள் - காலிலகப்பட்ட புற்
பூண்டு முதலிய எல்லாவற்றையும் கும்பகர்
ணன் தனதுபெரியதோள்களினாலே தாங்கின
ன். அப்படித் தாங்கினபோது இவர்களால்
வீசப்பட்ட வைகளெல்லாம் பொடிப்பொ
டியாய் யுதிர்ந்துபோய்விட்டதுகள். அதை
க்கண்டு வானரவீரர்கள் இனி இவன்மீது எறி
யத்தக்கவைகளும், வாரி அறையத்தக்க வைக
ளு மொன்றுமில்லையே யென்று சொல்லிப்
பல்லொடு பல்லை நறநற வென்று கடித்துக்
கொண்டு இவனை நாமெல்லாரும் சுற்றிநின்று
அடிக்கலாம் வாருங்களென்றுசொல்லி ஒருமி
க்கப்போய்ப்பாய்ந்து,குருவிக்கூட்டங்கள் ம
லையைமோதுகிறதுபோலக் கும்பலாய்த்தாவி
க்கூடிக் குதித்துக் குதித்துக்கொண்டுபோய்
க் கும்பகர்ணன்மேல் விழுந்து பிடித்துத் த
ங்கள்கைகளுந் தேய்ந்து போகும்படியாகக்
குத்தியும்,பலம்பொருந்தியபற்களினால் கௌ
விக் கடித்தும், கூர்மைபொருந்திய நகங்க
ளினால் சதைச் சதையாய்க் கிள்ளிப்பார்த்து
ம், அவனுக்குக் கொஞ்சமும், துன்பந்தே
டாததைக்கண்டு நம்மாலொன்றும் ஆகமாட்
டாதென்று அவனைவிட்டு இழிந்து ஓட்டம்
பிடித்தார்கள். அப்போது ஊழிக்காலத்தி
ல் லோகத்தையெல்லாம் சுட்டெரிக்கும்படி
யாக வருகின்ற பிரளயகாலாக்கினியைப்போ
ல நீலனானவன்,பூமியில்வேரூன்றிப்பதிந்துநி
ற்கிற ஒருபெரியமலையை உகாந்தகாலமேகத்
தைப்போலக் கையினால்பேர்த்தெடுத்துக் கு
ம்பகர்ணனுடையதேகத்தின்மீதிலெறிந்தான்.
அதைக்கும்பகர்ணன் ஒருசூலாயுதத்தைக்கொ
ண்டு பொடிப்பொடியாய்நொறுக்கிவிட்டுச்சி
ரித்துக்கொண்டுநின்றான். அதைக்கண்டுநீலன்,
இன்னுமொரு மலையைத்தேடிப்பிடுங்கியெறி
ந்தபோதிலும் அதுவும்இப்படியே துகள்து
களாய்ப்போய்விடப்போகிறதென்று ஆலோ
சித்துத், தன்னுடைய புஜங்களையே ஆயுதமா
கக்கொண்டு கும்பகர்ணனுடைய தேருக்கெ
திரேயோடி அஷ்டகாசஞ்செய்துநின்றுகொ
ண்டு பிரகாசிக்கின்ற கடல்நீர்வற்றிப்போகும்
படியாகவும், மேகத்திலுள்ள இடிகள் உதிரு
ம்படியாகவும், பூலோகத்தவர்களெல்லாம் ந
டுக்கங் கொள்ளும்படியாகவும்,பலதரம்கைக
ளால்ஓங்கித் திடீர்திடீரென்றுகுத்தியும், கால்
களினால் எட்டியுதைத்தும், கையும்சலித்துக்,
காலுமோய்ந்து,மனதுந்திகைத்து,நெய்யைச்
சொரிந்த அக்கினியைப்போலக் கோபத்தால்
சுவாலித் தெரிந்துகொண்டு இருந்தான். அப்
படிநீலன் வெறுங்கையோ டிருக்கிறானென்
று, கூர்மைபொருந்திய சூலாயுதத்தைப் பிர
யோகிக்கிறதற்கு வெட்கமுற்று அவன் இளை
த்து உயிர்சோர்ந்துவிழும்படியாகக் கும்ப

கர்ணன் தனது இடதுகையினால் ஒருகுத்துக்குத்தினான். அப்போது நீலன் சோர்ந்துவிழுந்ததைப் பார்த்துக்கொண்டிருந்த அங்கதன் சக்கிரவாள கிரியைப்பார்க்கிலும் நீண்ட ஒரு பெரியபாரமான மலையைப் பூமிதேவியானவள் முதுகை ஆற்றிக் கொள்ளும்படியாகப் பிடுங்கி, இன்றைக்குக் கும்பகர்ணன் மரணமடைந்தானென்று ஏழுலோகத்தவர்களும் மகிழும்படியாக, அவன்பேரில் விட்டெறிந்தான். அதைக்கும்பகர்ணன் தன் ஒருதோளினாலே தாங்கினான். தாங்கினமாத்திரத்தில் அந்தமலையானது அநேகம் சுக்கல் சுக்கலாயும், துண்டுதுண்டாயும், பாளம் பாளமாயும், பொடிப்பொடிவிழுந்தது. அதைக்கண்ட வானரசேனைகளெல்லாம் இனி எங்களுக்கென்ன சக்தியிருக்கின்றது, இவனோடெதிர்த்துச் சண்டைசெய்ய எங்களால் முடியாதென்று பயந்து ஓட்டம்பிடித்தார்கள். அந்தச்சமயத்தில் அங்கதன் மிகுந்தகோபத்துடனே மிதித்தஅடிமாறாமல் ஒன்றியாய்நின்றான். அப்போது கும்பகர்ணன் இந்திரனுடைய வச்சிராயுதத்தையும், எமனுடைய தண்டாயுதத்தையும், ஜெயிக்கத்தக்கதும், சமானமற்றவலியையுடையதுமான ஒரு இருப்புலக்கையை அதிகவேகங்கொண்டு இடதுகையினாலெடுத்து அங்கதனுடைய உயிரைவாங்கக்கடவாயென்று உச்சரித்து வீசியெறிந்தான். அங்கதன் தேவர்களெல்லாரும்தன்னைஸ்தோத்திரம்பண்ணும்படியாகத்தனதுபலம்பொருந்தியகையினாலே அந்த முசலாயுதத்தைப் பிடித்துச் சுழற்றிக்கொண்டு மேகத்தில்தோன்றுகின்ற இடியானது ஒரு பர்வதத்தை அக்கினிமூட்டியெரிக்கிறதுபோல மிகுந்த வல்லவனான கும்பகர்ணனை அடித்து, அவன் உடல்முழுமையும் உதிரமயமாகும்படிச்செய்து உயிரைமடிப்பேனென்று கண்களில் அக்கினிபறக்கக் கர்ஜ்ஜித்துக்கொண்டே கும்பகர்ணனுடைய விருதுக்கொடிகள்கட்டிய பெரியதேருக்கு முன்பாகத் தாவிக்குதித்துப்போய் அவனெதிரே நெருங்கி நின்றான். நின்ற அங்கதனைக் கும்பகர்ணன் நெருப்புப்பறக்கப் பார்த்து என்னிடத்தில் சாகும்படியாகவந்த நீ வானரசேனைகளுக்கெல்லாம் தலைவனான சுக்கிரீவனோ? அல்லது அவனுடைய குமாரனோ ? அல்லது என்னுடைய ஊரில் நெருப்பிட்டுக் கொளுத்திவிட்டு மிகுந்த வெற்றிபெற்றுக்கொண்டு போனவனோ ? நீயார் உன்னுடையபெயரென்ன சீக்கிரமாகச் சொல்லுவாயென்று கேட்கக் கும்பகர்ணனை அங்கதன்பார்த்து, உன்னுடைய தமையனான ராவணனை வாலினாற்சுற்றிக் கட்டிக்கொண்டு நான்குதிக்குகளிலும் தாவிச் சூலாயுதத்தைக் கையிற்கொண்ட சாம்பசிவமூர்த்தியினுடைய திருவடித்தாமரைகளில் வணக்கஞ்செய்த மஹாவீரனான வாலிபுத்திரனும், உன்னையும் அப்படியேஎன்வாலில்கட்டிக்கொண்டு ராக்ஷசர்களாகியசத்துருக்களை எதிர்த்து நிற்கின்ற தசரதகுமாரருடைய திருவடிகளில் வணங்கும்படியான ஐஸ்வரியத்தைப்பெற்றவனுமாகிய அங்கதன் நானே ஆமென்றுசொல்லக்கேட்டு,உன்தகப்பனைமறைந்திருந்தோர் அம்பினாலே உயிர்போக்கினஅபகாரிகளுக்கு வருத்தப்படுத்துகின்ற பகையைச்செய்துகாட்டாமற் போவாயேயானால் உன்னை யுலகத்தவர்கள் நிந்தனைசெய்யமாட்டார்களா ? அப்படிச்செய்தாயேயானால் என்னைப்போல வகையற்ற வீரர்களும், உன்னை ஸ்தோத்திரஞ்செய்வார்களல்லவா? நல்லது அதிருக்கட்டும், நீ இங்கேவந்தது என்னை உன்வாலினாலே கட்டியிழுத்து ஸ்ரீராமனிடத்திலேகொண்டுபோய் வைக்கிறதற்காகவல்ல ? தேவேந்திரனுடைய மார்பிலேகுத்திக்கூறிட்டிருக்கின்ற எனது மூவிலைச்சூலாயுதத்தினுச்சியானது,உன்முதுகைத்தடாரித்துக்கொண்டு போகும்படியாகவும்,என்னைக்கட்டுகிறதற்குரியதாகச்சொன்ன உன்னுடையவாலைப்போலஎன்கையினால் உன்னைத்தூக்கி அந்தக்கழுவில்போடவுந்தான்வந்தாயென்று கும்பகர்ணன்சொன்னமாத்திரத்தில்,அங்கதன்கண்களில் அக்கினிப்பொறிபறக்கும்படிபார்த்து மலையின்மீது இடியிடித்துவிழுந்ததுபோலப்பிரதிதொனியுண்டாகத்தக்கதாகவும், உலகத்தவர்களெல்லாம் நெஞ்சு நடுங்கும்படியாகவும், தனது அழகு பெற்று விளங்கும் பெரியகையினாலே இருப்புலக்கையைக்கொண்டு ஓங்கி யடித்தான். அடித்தவுடனே வஜ்ஜிரதண்டத்திற்குச் சமானமாகிய அந்த இருப்புலக்கையானது அநேகந் துண்டுகளாய் முறிந்து விழுந்துவிட்டது. அப்படி அந்த இருப்புத்தண்டத்தைத் தனதுகையை உயர்த்தித்தாக்கிப் பொடியாகச்செய்த கொடியவனான கும்பகர்ணனைப் பார்த்துக் கொன்றுவிடுகிறேனென்று பூமிகுழியும்படியாகக் குதிக்கின்ற அங்கதனை அதிக பலமுள்ளவனான கும்பகர்ணன்கோபித்து தேகத்திற் புண்வடுப்படும்படியாகஓங்கி யொருகுத்துக் குத்தினான். அந்தக்குத்துப்பட்ட மாத்திரத்தில் அங்கதன்மரணமூர்ச்சையடைந்து பூமி படீரென்று வெடிக்கும்படியாக மடாலென்றுவிழுந்தான். அதைக்கண்டு உடனே அனுமான்வந்துகுதித்தார். குதித்து அந்தக்கும்பகர்ணன் மூர்ச்சித்துவிழுந்த அங்கதன்பே

ரில் மறுபடியும் தன்கையிலுள்ள அதிக பலமாகியஉயர்ந்தசூலாயுதத்தை மார்பிற்கு லக்ஷியம்வைத்து எறிய யத்தனித்ததைக்கண்டு, விரைவில் ஒருமலையைப் பறித்துக்கொண்டுவந்து அந்தக்கும்பகர்ணனுடைய விசாலம்பொருந்தியமுழுநெற்றியின்பாதிப்பங்கில்பாய்ந்து பொத்துக்கொள்ளும்படியாகவீசி ஸ்ரீராமபிரானைவாழ்த்திக் கர்ஜ்ஜித்தார். அது கும்பகர்ணனுடைய தலையிலேபோய்ப் பொத்துக்கொண்டு அவனுக்கு மற்றொருதலை யிருந்தாற்போலநின்ற அந்தமலையைத்தானேகும்பகர்ணன்கையினால்பிடுங்கிக்கொண்டு வாயுபுத்திராகிய அனுமானுடைய வச்சிரமலைக்குச்சமானமாகியமார்பிலே,உலைக்களத்தில் வேக்காடுற்றஇரும்பின்மீது தீப்பொறிகள்சிதறத்தாக்குகின்றசம்மட்டிக்குச் சமானமாக, நெருப்புப்பொறிகள்சிதறத்தக்கதாய் எறிந்து,தானுந்தன்னுடைய தோளைக்கொட்டிக் கர்ஜ்ஜித்தான். அந்தச்சமயத்தில் முன்னோடிப்போன வானரர்கள் மறுபடியும் பயப்படாமல்வந்து வாலிபுத்திராகிய அங்கதனை எடுத்துக்கொண்டு போனார்கள். அந்தமலையைச்சிறிதும் லட்சியம்பண்ணாமல் ஆஞ்சநேயர் ஆகாசம்முழுதையும் விழுங்குகிறதுபோல மறைத்துக்கொண்டிருக்கின்ற ஒருபெரியமலையைப்பறித்துக் கையிலேந்திநின்று ஒருவரும் சமானமில்லாத பலமுள்ளவனான கும்பகர்ணனைப் பார்த்து,இந்தமலையை உன்மேல் எறிகின்றேன் க்ஷணநேரத்திற்குள்ளாக நீ நசுங்கிமாண்டுபோகப்போகிறாய், அப்படிக்கில்லாமல்நீசீக்கிரத்தி லிதைத்தடுத்துவிடுவாயேயானால் உன்னுடைய சக்தியின்வல்லமையை நான் அறிந்து மெச்சிக்கொள்ளுகின்றேன், அதன்பிறகு உன்னுடன் சண்டையும்செய்யாமல் திரும்பிப்போய் விடுகிறேன். உலகத்திலே மகாவீரனென்கிற ஒருபெரும்புகழையும் நீயடையக்கடவாயென்று அஞ்சனையிளஞ்சிங்கம்சொல்லக்கேட்டு, மலைக்குகைதிறந்தாற்போலப்பிளப்பாகிய வாயைத்திறந்து, கும்பகர்ணன் நகைத்து நீ எறிகிறமலையை அப்படியே எறி;அது என்மேல் படுகிறகாலத்தில் கொஞ்சமாவது இளைப்படைவேனேயானால் உனக்கு நான் தோற்றுப்போனவனேயாவேன். என்னுடைய பலமும், அற்பமானதாக நினைக்கத்தக்கதென் றிப்படி இருவரும் சபதம்பண்ணிக்கொண்டார்கள். அப்போது ஆஞ்சநேயர் நீ சமர்த்தனானால் அடா கும்பகர்ண! என்னோடே எதிர்த்துநில்லு, சமர்த்தில்லாவிட்டால் உயிர்தப்பியோடிப்போய் விடென்று சொல்லித் தமது பெருங்கையினாலே குறிப்பிட்டெறிந்த அந்தவச்சிரமலையை அதிக உக்கிரத்தோடு கும்பகர்ணன் தனது தோளில் தாங்கினான். அம்மலை யவன்தோளில் பட்டமாத்திரத்தில் படவொன்று அநேகம்சுக்கல்சுக்கலாய்ப் போய்விட்டது. அந்தச்சப்தத்தைக் கேட்டு, உலகத்தவர்கள்மனந்திடுக்கிட்டார்கள். அவனுடைய தேகமோ கொஞ்சமும் கன்றி இளைக்கமடையாமல் இருக்கிறதை ஸ்ரீராமதூதர்கண்டு இவனுடைய வல்லமை இவ்வளவென்று ஒருவராலும் அளவிட்டுச் சொல்லிமுடியாது.மேருமலையைச் சமானப்படுத்திச் சொன்னாலும், வல்லமையிலும், அழகிலும், அதை நிகர்சொல்லக்கூடாத வெற்றியும், சுந்தரமும் பெற்ற தோள்களையுடைய ஸ்ரீராமமூர்த்தியின் பாணங்கள்தாம் இவனைப்பிளந்தாற் பிளக்குமென்று சொல்லிவிட்டுத் திரும்பிப்போய் விட்டார். எழுபதுவெள்ள வானர சேனைகளுள் இதுவரையிலும் இறந்தவர்கள்போக மற்றவர்கள் எல்லாம் இன்றைக்கே இவனுடைய வலதுபாரிசத்திலுள்ள முக்கழுச்சூலத்தால் குத்துண்டு கருவற்றுப்போவார்கள், இறந்துபோனவர்களுடைய உதிரமாமிசங்களால் நிறையப்பட்டு ஒரேநாளையில் இந்த லோகமுழுவதும் நாசமடைந்து வேறுபட்டுப் போகுமென்று தேவர்களெல்லாம் கலங்கி நெஞ்சு பொருமி நடுநடுங்கினார்கள். கும்பகர்ணனையெதிர்த்து வானரர்கள் குத்தினார்கள். அப்படிக் குத்தினாலும் தங்கள்கை சலித்துப் போய்விட்டார்களேயல்லாமல் அவனைத்தோற்கடித்தவர்களொருவருமில்லை, அவனைநோகச் செய்தவர்களும் ஒருவருமில்லை. கும்பகர்ணன் தானொருவனுமே போர்க்களத்தில் ஒருகுரங்கினது அடிச்சுவடுங்காணவொட்டாதபடி அடித்துத்துரத்தி, தேவர்களைச் செயித்த தன்னுடைய வீரத்தையும்,கீர்த்தியையும், மறுபடியும் புதுக்கினவனாகி,குரங்குகளெல்லாம் பெருங்கூட்டங்களாக ஓடிப்போய் விட்டதுகளே. ஆதலால்அந்தரிஷ்களாக விருக்கிற இரண்டுமனிதர்கள் இங்கில்லையே! இன்னமொருலங்கைஇருக்கிறதென்று நினைத்து,ஒருவேளை அங்கேபோகிறதற்குப்போனார்களோ? அவர்களெங்கேயிருக்கின்றார்கள் எங்கேயிருக்கின்றார்களென்று; உரத்தசப்தத்தோடு கூப்பிட்டுக்கொண்டு, தேவர்களும் பயங்கொள்ளத் தன்னுடையதோள்களைத் தட்டிக்கொண்டு பேரிடிமுழக்கம்போல வீரகர்ஜ்ஜிதஞ்செய்தான். அதைக்கேட்டு யமனும்பயந்து நடுங்கிப்போனான். அதிவேகத்துடனே மோதிவருகின்ற அலையைப்போலும் தாவி வந்த எழுபது வெள்ள வானர சைனியக் கூட்டங்

களுக்குள் கும்பகர்ணனால் இறந்துபோன
வைபோக, உயிருண்டாயிருந்தவைகளெல்லா
ம் ஒட்டம்பிடித்த படியினாலே, ரணக்களத்தி
லொருவரும் இல்லாமல்வெற்றுவெளியாயிரு
க்கிறதைப்பார்த்துச், சந்திரோதயகாலத்திற்க
டல்பொங்கி வருகிறதுபோல வானரசேனைக
ளால்அடியுண்டு குறைபட்டுப்போன ராக்ஷச
சேனாசமுத்திரமானது ரணகளத்தைமறுபடி
யும் வந்து சூழ்ந்துகொண்டது. அப்போது
குன்றுகளையும், மலைகளையும், பர்வதங்களையும்,
விருக்ஷங்களையும், பறித்தெறிந்து வெற்றிபெ
ற்றிருந்த வானரப்பெருஞ்சேனைகளில் பாதி
க்கதிகமாகமாண்டுபோய்விட்டதேயென்று வி
யசனப்பட்டுக்கொண்டிருந்த தேவர்களுங்க
ண்டு சந்தோஷிப்படும்படியாகச் சுமித்திரை
இளஞ்சிங்கமாகிய இளையபெருமாள் ஒருவ
ரே தனித்துப்போய்க் கும்பகர்ணனோடு எதி
ர்த்துநின்று வில்லைக் குணத்தொனி பண்ணி
னார். அந்தத்தொனியால் திடுக்கிட்டுக் கைகால்
கள் நடுங்கி அநேகராக்ஷசர்க ளிறந்தபடியினா
லே, ராக்ஷசஸ்திரீகள் தங்கள் கழுத்திற் கட்டி
யிருந்த பொற்றாலிகளையெல்லாம் அறுத்து
த் தரையில் எறிந்துவிட்டார்கள். இடியிடி
த்ததென்று சுவர்க்கலோகமுழுதும் நடுங்கின
து. அஷ்டதிக்குகளெல்லாம் செவிடுபட்டு
ப்போய் விட்டதுகள். பேய்க்கூட்டங்களெ
ல்லாம் கையிற்பிடித்துத் தின்றுகொண்டிரு
ந்த மாமிசங்களை எறிந்துவிட்டு இரண்டுகை
களையும் தட்டிக்கொண்டு கூத்தாடினதுகள்.
லக்ஷ்மணப்பெருமாள் வேகத்தோடும் பிர
யோகித்த பாணங்கள் வெகுநாளாய் ஆகார
மில்லா திருந்தபடியினாலே சீறிக்கொண்டு கு
ம்பகர்ணனைச் சிறைப்படுத்தி உலைக்களத்தில்
வெந்த இரும்புபோல அக்கினியைக் கக்கிக்
கொண்டு, ராக்ஷசர்களுடையதேகத்தில்நுழை
ந்து, அவர்களுடைய ரக்தத்தையெல்லாம் பா
னம்பண்ணி விட்டதுகள். சிலஅஸ்திரங்கள்
சமுத்திரத்திற் கொப்பாகவந்த ராக்ஷசர்களு
டைய தலைகளைக் கொய்துகொண்டு போன
துகள். சிலபாணங்கள் அவரவர்களுடைய
அறுபட்ட சிரங்களில்தைத்து அவைகளை அ
ஷ்டதிக்குகளிலும் கொண்டுபோய் எறிந்த
துகள். சிலஅம்புகள் அறுந்ததலைகளை விழ
வொட்டாமல் வேகமாய்க் கொண்டுபோவதி
னால் இந்த அம்புகளுக்கும் தலைகளுண்டென்
னும்படியாக இருந்தன. அக்கினிமயமாக
இருக்கின்ற சிலகணைகள் மதபடாத்தோடு த
லையைக் கத்தரித்து மலைக்குச்சரியொத்த யா
னைகளுடையதேகத்தி லூடுருவிப்போய், ரண
க்களத்தில் யுத்தஞ்செய்கின்ற ராக்ஷசர்களு
டைய அநேகந்தலைகளைச் சிந்திக்கொண்டு, கு
கையில் நுழைகின்ற பெரியமலைப் பாம்பைப்
போலப்பக்கங்களிலுள்ள மலைகளிற்போய்நு
ழைந்துகொண்டதுகள். அநேகக்கூட்டம் கூ
ட்டங்களாக மின்னல்கள் ஓடுகிறதுபோல வி
ரைந்துபோய் எதிர்முகமாக இருக்கின்ற கூ
னர்களாகிய ராக்ஷசர்களுடைய முகத்தில்நு
ழைந்து, அந்தமுகத்தில் நுழைந்ததுபோல
வே கூன்வளைந்த முதுகின் பின்புறத்தி
லிருக்கின்ற ராக்ஷசர்களுடைய பிடர்க்குள்
ளும் சமவேகத்தோடும்பாய் நுழைந்தன.
தோல்போர்த்திருக்கின்ற பேரிகைகளிலும்
தைத்ததுகள். சங்கையூதுகின்றவர்களுடைய
குவிந்தவாயிலும் சங்கைப் பிடித்திருக்கின்ற
கைகளிலும் பாணங்கள் அபரிமிதமாகப்
போய்ப் பாய்ந்ததுகள். யானைகளுடையக
ழுத்திற்போய்ப் பொத்தியதுகள். தேர்களி
ற்கட்டியிழுக்கின்ற மிகுந்தவேகமுடைய கு
திரைகளின் தலைகளிலும்போய்ப் பதிந்ததுக
ள். இவைகளைப் பார்த்துக்கொண்டிருந்த ரா
க்ஷசர்களில் ஒருவரையும்விடாமல் அவர்அவர்
களுடையகண்களிலெல்லாமுருவியதுகள். இ
ந்தப்பிரகாரமாக எல்லாவிடங்களிலும், லக்ஷ்
மணர்விடப்பட்ட பாணமயமாகநிறைந் திரு
ந்ததுகள். பாணங்கள்பட்டு யானைகளெல்
லாம் தந்தங்கள் முறியுண்டதுகளும், வாலறு
பட்டதுகளும், தீப்பறக்கின்ற கண்களிழ
ந்ததுகளும், துதிக்கைத் துணிந்ததுகளும்,
ரணகளத்தில் பிரவேசித்த கொடுமையான
முன்னங்கால்கள் தறிபட்டதுகளுமாய்க் கொ
டுமுடியோடு மலைகளுருண்டதற் கொப்பாக
ப் பூமியில் முண்டங்களாய்ப் புரண்டதுகள்.
வரிசை வரிசையாக எப்போதும்பிரயோகிக்க
ப்பட்டுக்கொண்டே இருக்கிறபடியினாலே அ
ஷ்டதிக்குகளும் நிறைந்திருக்கின்ற லட்சுமண
ருடைய பாணங்கள் பூமியந்தர சுவர்க்கமெ
ன்று சொல்லப்பட்ட அந்தந்த இடங்களிலு
ம் தைக்கிறதினால் - பூமியிலும் - ஆகாசத்தி
லும் - குளம்புகளைவைத்து நிற்கமாட்டாமல்
குதிரைகள்மயங்கிச் சாய்ந்தவைகளும், மார்
பில்தைத்துப் பிளத்தலினாலே மாண்டுபோ
னதுகளுமாயொழிந்ததுகளே யல்லாமல்ஒரு
குதிரையாவதுதப்பிப்பிழைத்துப்போகவில்
லை. மாந்தளிருக்குச் சமானமாகிய அச்சவடி
வும் உதிரந்தோய்ந்து செந்நிறமும் கூர்மை
யுமுடைய பாணங்கள், தேரிற்பூட்டிய குதி
ரைகளைக்கொன்றுதள்ளி, இரண்டுகுதையும் வ
ளையும்படியாக வில்லைப் பிடித்துக்கொண்டி
ருக்கின்றதலைமையான ரதிகர்களையும், பாகர்க
ளையும், அறுத்துத்தள்ளி விட்டபடியினாலே,

அளவில்லாமல் பெருகுகின்ற ரத்தப்பெருவெள்ளத்தினால் இழுப்புண்டு போனதுகளேயல்லாமல், கொடிகள்கட்டிய பெரியதேர்கள் போகவேண்டிய கிரமப்பிரகாரம் ஓடினவைகளுமல்ல, ஓர் நிலையில் நின்றவைகளுமல்லவாயின. செங்கடலுக் கொப்பாகிய ரக்தவெள்ளத்தில் மிதக்கின்ற ராக்ஷசர்களின் தலைகள் அகன்றவாயையுடைய வைகளாய்ப் பரிசுகளை ஒத்திருந்ததுகள். தோண்டப்பட்ட கண்ணின் குழிகளும், அறுபட்ட மூக்குகளும், அகப்பைகளுக்குச் சமமாக விருந்தன. கழுத்தோடேகூட அறுப்பட்டிருந்ததலைகள் ஒரோபாணத்தினால் வரிசைவரிசையாய்க் கோப்புண்டு தெப்பங்களுக்கு நிகராகவிருந்தன. அக்கினியைக்கக்குகின்ற கொடியபாணமானது நெற்றியிற்பட்டமாத்திரத்தில், யானைகள் தங்களைக்கொத்துகின்றஅங்குசங்களுடனே கலவியில்விருப்பங்கொண்டு அதிகவேகத்துடனேமேற்றவிசுகளை நீக்கினதுகளாய், ராக்ஷசர்களோடு எதிர்த்து யுத்தஞ்செய்துகொண்டிருக்கின்ற வானரசைனியங்களுக்குநடுவே, கறுத்தமேகத்தைப்போல நுழைந்தோடினதுகள். ராக்ஷசர்களடித்துக்கொண்டுவந்த வெள்ளி உடுக்கைகள் கிழிந்து பூமியில் குத்திட்டாற்போலவிழ, அதினுடைய வட்டமான வாயிற்படிந்து விழுந்திருக்கின்ற வெண்சாமரைகள், ஸ்ரீராமருக்குச் சீக்கிரத்தில் வெற்றியுண்டாகப் போகிறதென்று நல்ல முகூர்த்த நாளைக்குறித்து முளைகள்வார்த்திருக்கின்ற பாலிகைக்குச்சமானமாய் இருந்ததுகள். வேனிற்காலத்திற்குரிய மன்மதனைப்போல வடிவழகுள்ள இளையபெருமான்விட்ட கொடியபாணங்களினாலே கீர்த்திபெற்ற வாளாயுதம்போன்ற வக்கிரதந்தங்களையுடைய ராக்ஷசர்களாயுதங்களெல்லாம் அள்ளுண்டு போனபோன திசைமுழுதிலும், நெருப்புப்பற்றியெரிந்து வானமீன்களெல்லாம் ஒருமிக்க ஆகாசத்தில் நின்றும் பூமியில் விழுந்ததுபோலப் பலபலவென்று உதிர்ந்ததுகள். அரத்தினால் ராவப்பட்டுக் கூர்மைபெற்ற நீண்டபாணங்களால், சேணத்துடனே ஓடுகிற குதிரைகளுடைய காலறுப்புண்டதுகள். அக்கினிமயமான விருதுக்கொடிகள் அறுப்புண்டதுகள். அலங்காரமாகிய பெரியதேர்களெல்லாம் அழிந்துபோய்விட்டதுகள். நல்வினை தீவினைகளுக்குக் காரணமாகிய அகங்காரமமகாரங்கள் யதார்த்தக்கியானத்தைநீக்கிவிட்டாலும் அந்தப்பாபத்தைவீரத்தன்மையானது நீக்கிவிடு மென்பதைத் திருஷ்டாந்த பூர்வகமாகப் பார்த்தோம். எப்படியென்றால், இளையபெருமாளோடு எதிர்த்து யுத்தஞ்செய்து மரணமடைந்த ராக்ஷசவீரர்கள் இரக்கமற்றவர்களாயும், தர்மத்திற்கு விரோதஞ்செய்தவர்களாயு மிருந்தபோதிலும், வீரவான்களாக இருந்தபடியினாலே அவர்கள் வீரஸ்வர்கலோகத்தையடைந்தபோது ரம்பாஸ்திரீகளெல்லாரும் அவர்களிடத்தில் அதிகவிருப்பமுடையவர்களாய், அவர்கள்தேகத்தைத் தழுவிக்கொண்டார்கள். மேகதாரைகள்போலப் புறப்பட்ட கொடுமையான சிலபாணங்கள் வடவாமுகாக்கினியைப்போலவும், சண்டமாருதத்தைப்போலவும், உலகங்களையெல்லாம் மூடிக்கொண்டு, சுவாலையுடனே வேகமாய் வந்தபோது, கொடியபாபகிருத்தியத்தையுடைய ராக்ஷசர்களெல்லாம் அந்தப் பாணங்களைத் தடுக்கமாட்டாமல் மரணமடைந்தார்கள். இந்தப்பிரகாரம் மரணமடைந்த எல்லாரும் ஒருமிக்க சுவர்க்க மடைந்தார்களேயானால், வீரர்களடையத்தக்க அந்தச்சுவர்க்கத்தைப் பார்க்கிலும், பெரியதொன் றிருக்கிறதாகப் புத்திமான்கள் சொல்லமாட்டார்கள். லக்ஷுமணராலே விடப்பட்ட பாணங்கள்ராக்ஷசர்களிலொருவனை இரண்டுமூன்னங்கைகளை அறுத்தும், மற்றொருவனைச் சிரந்துணித்தும், வேறொருவனை வீரகண்டாமணிகட்டிய பாதங்களை வெட்டியும், சிலர் தோள்களைப் பிளந்தும், இந்தப்பிரகாரமாக ராக்ஷசர்களையெல்லாம் அவயவக்கண்டனைகள் செய்தபடியினாலே மறுபடியும் சம்ஹரிப்பதற்குச் சத்துருக்களில்லாமல் வெறுமையானதுகளாய்ச் சிலபாணங்கள் ரணகளத்தைச் சுற்றிச் சுற்றித் திரிந்தும், கொடுக்கத்தக்கவள்ளலைக் காணாமையால் பிரயோசனம்பெறாத அநேக யாசகர்களை யொத்திருந்ததுகள். சில ராக்ஷசர்களைச் சிரங்களையும், சில ராக்ஷசர்களைச் செவிகளையும், சிலபேர்களை நாசிகளையும், சிலபேர்களைக் கைகளையும், அநேகம்பேர்களைக் கண்களையும், சேதித்தமையால் பூமியினிடத்துத் தாதாக்கள்கொடுக்கின்றபொருளளவுக்குத்தக்கபடி தண்டமிழ்ப்புலவர்களால் செந்தமிழ்ச் செய்யுட்களியற்றிமுடித்ததற்கொப்பாகவுமிருந்தது. தருமதேவதையினுயிர்க்குச்சமானமாகிய இளையபெருமாள்பிரயோகித்தஅஸ்திரங்கள்படுகிறதினாலே நாமிங்கிருப்போமானால் இறந்துபோவோம். நம்முடையராஜனாகிய கும்பகர்ணனும், இன்னஞ் சற்றுநேரந்தான் இந்தரணகளத்தில் நிற்கப்போகிறானென்று, ஓடிப்போக யத்தனித்துப்போகிறதற்கு வழிதெரியாமல் கூட்டங்கூட்டமாய்ப்பயந்து நான்கு திசைகளிலும், ரக்தவெள்ள மோடுவதுபோலச் சிதறி, ஓட்டம்பிடித்தார்கள். அப்

போது புலஸ்தியபௌத்திரனான கும்பகர்ணன் யுத்தகளத்தில் மாண்டவர்களான ராக்ஷசர்களுடைய பரிதாபஸ்திதியையும், லட்சுமணர்செய்த வில்வல்லமையையும் ஆலோசித்து, திரிபுரசம்ஹாரகர்த்தாவாகிய சிவசங்கரமூர்த்தியும், இந்த இளையபெருமாளுமே வில்வீரர்கள். வேறொருவரு மிவர்களுக்கொப்பாகமாட்டார்களென்று, ஒருதரத்திற்காயிரந்தரமு மெடுத்துச்சொல்லிப் புகழ்ந்துகொண்டு விசாலமாகிய தேர்த்தட்டின் பல இடங்களிலும் சாரதிகளிருந்து செலுத்துகின்றதும், வாயுவேகத்திற்கும், மனோவேகத்திற்கும் மிஞ்சினவேகமுள்ளதுமான ஆயிரஞ்சிம்ஹங்கள்பூண்ட ஸ்வர்ணமயமாகிய மேருகிரியையொத்த தேரை நடத்திக்கொண்டுவந்து ரணரங்கத்தில் நின்றான். அப்படிநின்ற வக்கிரதந்தங்களையுடைய கும்பகர்ணன் தொளையிட்ட நுகங்களில் அநேகசிம்ஹங்கள் பூண்டிழுக்கின்ற தேரிலிருந்து வில்லைவளைத்து யுத்தஞ்செய்தபோது, இளையபெருமாள் பாதசாரியாய் யுத்தஞ்செய்வது மேம்பாடாயிருக்கமாட்டாதென்று ஆஞ்சநேயர் ஆலோசித்து, சமயோபாயநிஷ்டராய் அவருக்குமுன்னேவந்து ஸ்வாமீ ! தேவரீர்அடியேன்மீது ஆரோகணித்து யுத்தஞ்செய் தருளுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொள்ளச், சுமித்திரை இளஞ்சிங்கமாகிய லட்சுமணரும், அப்படியே வாயுபுத்திரராகிய சிறியதிருவடியின்மீது எறியருளினார். தேவர்களாசீர்வதித்தார்கள். வானரவீரப் பெருங்கூட்டம் ஜயா விஜயீபவவென்று ஆர்ப்பரித்தார்கள். ஆஞ்சநேயருடைய திருத்தோள்கள், ஆயிரம் பரிகள்பூண்ட கும்பகர்ணனுடைய ரதத்தினும்விசாலமாகப் பூரித்தனகள். தமக்குச்சமானந்தாமேயல்லாமல் வேறொருவரு மில்லாத ஆஞ்சநேயருடைய திருத்தோள்மீது அதிதேஜஸ்மயமான இளையபெருமாள் எழுந்தருளி விளங்குகின்ற காட்சி, மேருமலையானது கயிலாசமலையின்மீதிருந்து பிரகாசித்ததுபோனிருந்ததேயல்லாமல், அதற்குச் சமானமாகச் சொல்லுகிறதற்கு வேறொன்று உலகத்திற்கிடையாது. இவ்விதமா யெழுந்தருளிய லட்சுமணப் பெருமாளுக்குச் சமானமாகயுத்தஞ்செய்ய வேண்டுமென்று கும்பகர்ணன், அநேக அஸ்திரங்களை நிறைத்து வைத்திருக்கின்ற அம்புறுத்தூணியை முதுகிற்கட்டிக்கொண்டு பருத்ததோள் வல்லமைக்குத்தக்கதும், இந்திரனும் வெட்கப்படத் தக்கதுமான ஒருபெரியமலைக்குச் சமானமாகிய வில்லைக் கையிற்பிடித்துக்கொண்டு இளையபெருமாளைப்பார்த்து, நீ ஸ்ரீராமன் தம்பி. நான் ராவணேஸ்வரன் தம்பி. நாமிருவரும் யுத்தஞ்செய்ய நிற்கிறோம். நம்முடைய யுத்தத்தைப் பார்க்கிறதற்குத் தேவர்களெல்லாம் ஆகாசத்தில்வந்து பரவியிருக்கின்றார்கள். சமஸ்தமான வீரர்களும், பாரம்பரியமாயனுசரித்துவந்த யுத்த மரியாதைக்குத் தக்கவைகளைச் சொல்லி யாவருமொப்புக்கொள்ளத்தக்க யுத்தத்தைச்செய்யலாம். நானிப்போது கேட்கிற கேள்விக்குத் தகுந்தஉத்தரஞ்சொல்லக்கடவாயென்று சொல்லுகின்றான். அநேகதவஞ்செய்து எங்களுடன்பிறந்த சூர்ப்பநகையென்றொரு பெண்ணானவள், யாதொரு குற்றமுஞ் செய்யாதிருக்கவும், அவளுடைய மூக்கை வெகுகோபங்கொண்டு அறுத்தது உங்களுக்குத்தகுமா ? அப்படியறுத்த உன்வெற்றிப் பிரதாபத்தையும், அவளுடைய அளகபாரத்தைப்பற்றி இழுத்தஉன்கையையும், இதோ அறுத்துக் கீழேதள்ளப்போகிறேன் தப்பித்துக்கொள்ளென்று சொன்னான். ராத்திரியையொத்த கறுத்தமேனியையுடைய கும்பகர்ணன் அப்படிச்சொன்னதைக்கேட்டு, மல்லயுத்தத்தினு லுயர்ந்த தோள்களையுடைய லட்சுமணப்பெருமாள் அடாகும்பகர்ணா ? உங்களுக்கு மாறுத்தரம் எங்கள்வில்லினாற் சொல்லும்படிக் கற்றிருக்கிறோமேயல்லது வீரலக்ஷணத்துக்கு நாண முண்டாகும்படிச், சொல்லினால் சொல்லுகிறதற்கு நாங்கள் சாஸ்திரங்கள் படிக்கவில்லையென்றுசொன்னார். அதைக்கேட்டு ஆகாசமிரண்டாய்ப் பிளந்துவிடுமென்றும், மேருமலைபூமியுடனே இரண்டாய்க்கிழிந்துவிடுமென்றும், தேவர்களெல்லாம் மனந்திகைப்படையும்படியாகக் கும்பகர்ணன் தனதிரண்டுகண்களிலும் அக்கினிப்பொறிகள்பறக்கப், பதினெட்டு அக்கினிமுகாஸ்திரங்களை யொன்றாகத்தொடுத்து, இளையபெருமாள்மீது பிரயோகித்தான். அஷ்டதிக்கஜங்களுடைய தந்தங்கள் தன்மார்பில்பாய்ந்துப் பதியும்படி எதிர்த்து அவைகளைத்தோற் கடித்தவனும், தேவர்களுடையவல்லமையை யொடுக்கினவனும், இடிக்குச் சமானமாகிய கொடுங்கோப முள்ளவனுமான ராவணன்தம்பியாகிய கும்பகர்ணன்விட்டபதினெட்டுப் பாணங்களையும், இளையபெருமாள் வில்லைவளைத்து நாணேறிட்டு, அதில்நாலுபாணங்களைப்பிரயோகித்து அறுத்தெறிந்தார். அந்தப்பாணங்களை அறுத்தமாத்திரத்தில் கும்பகர்ணன் தேவர்களை யெல்லாம் மடக்கடித்ததும், ஆயிரமுகமுள்ளதும், பிரம்மாவினிடத்தில் பெற்றதுமான ஒருகொடிய அஸ்திரத்தையெடுத்

து வில்லிற்பூட்டி லட்சுமணா? உனக்கு வல்லமையுண்டானாலிந்த அஸ்திரத்தை அறுத்துவிடு பார்ப்போமென்று இளையபெருமாள் மீது பிரயோகித்தான். அது பார்த்தபார்த்த திசைகளிலெல்லாம் பாணவருஷங்களைப் பெய்கிற மேகத்திற்கொப்பாக அக்கினியைப் பொழிந்துகொண்டு வருகிறதைப் பார்த்து, இளையபெருமாள் அதற்குத்தக்கதின்னதென்றுதெரிந்து ஒருதேவாஸ்திரத்தையெடுத்துப் பிரயோகஞ்செய்து, அந்தசகஸ்திரமுகாஸ்திரத்தை அறுத்துக் கீழே வீழ்த்தினபோது அது இரண்டாயிரந்துண்டுகளாக விழுந்துவிட்டதுகள். அதைக்கண்டுஉடனேகும்பகர்ணன், பன்னிரண்டுபாணங்களைத்திருமேனியிலழுந்தும்படிஅநுமான்மீதும் வேறேஇரண்டுபாணங்களைஇளையபெருமாள்மீதும்பிரயோகித்துப் பின்னும்,நூறும்ஐம்பதுமாகத்தொடுத்துஒருக்ஷணநேரத்திற்குள்ளாகஎட்டுத்திக்கையும், ஆகாசம்,பூமியையும்,பாணமயமாய் மறைத்துவிட்டான். அந்தப்பாணங்களையெல்லாம்இளையபெருமாள்பாணங்களைக்கொண்டே அறுத்துப்,பின்னும் கும்பகர்ணனுடைய தேரை இழுக்கும்படி யங்கங்குப் பூட்டிய குதிரைகள், யாளிகள், பெரும்பூதங்கள்,இதுகளெல்லாவற்றையும் துண்டு துண்டு கண்டங்கண்டமாய்த்துணித்து, அவன்தேரையும்பொடிப்பொடியாகச் சிதைத்துவிட்டார். அப்படிச் சூரியனைச்சூழ்ந்தப் பரிவேட மழிந்தது போலத் தேரழிந்து,அந்தத்தேரைச் செலுத்திக்கொண்டுவந்த சாரதிகளு மழிந்தார்கள். நீர்கொண்ட மேகக்கூட்டத்தி னிடத்திலுள்ள பெரிய வானவில்லானது அழிவுற்றதுபோலக் கும்பகர்ணன்கையிற் பிடித்திருந்தநெடிய வில்லும் இரண்டுதுண்டாய் முறிந்துவிழுந்தது. ஏறியிருந்த தேரழிந்து, பிடித்தவில்லும்முறிந்து, கருங்கடலானது பொங்கிவந்ததுபோலத் தோற்றுகின்ற கும்பகர்ணன் பூமியில் பாதசாரியாய்நின்று இந்த லக்ஷ்மணனுடைய உயிரை இதோ பானம் பண்ணுகின்றேனென்று புறப்பட்டுத் தானிந்தமூன்றுலோகத்தையும் ஜெயித்ததற்கு அடையாளமான பிருதாக மூன்றலகுடனே தன்கையிற் பிடித்திருக்கின்றதும், யமனுக்கு நிகரானதுமான சூலாயுதத்தை யெடுத்தான். தேவர்களெல்லாம் இளையபெருமாள்செய்த யுத்தவேடிக்கையைப் பார்த்து இவர் அஸ்திரங்களை எடுத்துத் தொடுத்துப் பிரயோகிக்கின்ற காவேகத்தைஅறிந்துக்கொள்ளக் கூடாமையால் இந்தத் தேரிற் பூட்டியிருந்த பிடரிமயிரினையுடைய கொடிய சிம்ஹமுதலாகிய கூட்டங்களை அஸ்திரப்பிரயோகஞ்செய்து கொல்றாரோ? அல்லது உயர்ந்த மந்திரோச்சாடனஞ்செய்து சபித்துக்கொல்றாரோ? என்று மனக்களிப்போடு ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அந்தத்தருணத்தில் பூமிபிளக்கும்படியாகப் புறப்பட்ட பிரளயகால வெள்ளம்போலத் தோன்றுகின்ற கும்பகர்ணன் தேரில்லாமல் கீழே பதாதியாய் நிற்க, நாம் வாகனத்தின்மீதிருந்து சண்டைசெய்கிறது வீரலக்ஷணத்திற்குப் பழியாகுமென்று ஆஞ்சநேயருடைய விசாலமாகிய திருத்தோள்களைவிட்டுத் தாமும் கீழே குதித்துப்போய் இளையபெருமாளும் கும்பகர்ணனோடு எதிர்த்துநின்றார். இந்த இரண்டுபேருமிப்படி எதிர்த்து நிற்கிறதருணத்தில் கும்பகர்ணனுக்கு உதவியாக ராவணனால் அனுப்பப்பட்ட சேனைகள் முன்னழிந்த சேனைகளினு மிருமடங்கதிகமாய்ச் சமுத்திரத்தைப்போலக் கோஷித்துக் கொண்டுவந்து, சுமித்திராதேவியின் இளஞ்சிங்கமாகிய இளையபெருமாளைச் சுற்றிக்கொண்டு கர்ஜ்ஜித்தன. அதைக்கண்டு தேவர்களெல்லாம் திப்பிரமைகொண்டு ஓட்டம் பிடித்தார்கள். இளையபெருமாள் கும்பகர்ணனைவிட்டுஇவர்கள்பக்கமாய்த்திரும்பி,ராக்ஷசசேனைகளெல்லாம் ஏககாலத்தில் தம்மீதுபிரயோகித்த ஆயுதங்களை அதிகசாதுரிய சக்தியினால் துண்டு துண்டாய் அறுத்தெறிந்து, மிகுந்த கோபத்துடன் அவர்களை யெல்லாமொருபக்கமாகச் செல்லவிட்டுக் கருங்கடல் போன்ற அந்த ராக்ஷசசேனைகளுக்குள்ளேநுழைந்து கொடுங்கண்களைப்பெற்ற அவர்களுடைய அன்றலர்ந்தமுருக்கம்பூவையொத்தசெம்பட்டமயிர்த் தலைகளையறுத்துமலைமலையாகக்குவித்து அணைகட்டிச்,செம்மையுருக்கினாற்போலொத்த ரத்தவெள்ள ஆறுகளோடவும் அந்தப் பிரவாகத்தினால் அத்தலைகள் கடலிற்போய் விழும்படியாகவுஞ்செய்தார். யானைகளுடைய துதிக்கைகளும், குதிரைகளின் கால்களும், காற்றைப்போலோடுகின்றதேர்களின் சக்கரங்களும், ராக்ஷசர்களுடைய தலைகளும் அறுந்து, அவர்கள் தேகத்தி லெழுகின்ற ரத்தவெள்ளமானது ரணகளமுழுதிலுஞ் சுழியிட்டுக்கொண்டோடி, ராக்ஷசர்களுடைய பிணக்குன்றுகள் நால்குபக்கங்களிலும் தடுக்கின்றபடியால், அதுகளைத்தாண்டிப்போகிறதற்குக்கூடாமல் தேங்கி நின்றுவிட்டது. ராக்ஷசர்களுக்கு வெற்றியையுண்டாக்கின வாளாயுதம், எழுவாயுதம், தண்டாயுதம், வேலாயுதம், அஸ்திரங்கள், மழுவாயுதம், வச்சிராயுதம், இவைமுதலிய இன்னம் அநேகஆயுதங்

களை லட்சுமணரெய்தபாணங்கள் ரணக்களமுமுழுவதும் சுற்றிச்சுற்றியோடித் துண்டிக்கிறபடியினால் அதுகள்கூட்டங்கூட்டமாய்முறிந்து துண்டுதுண்டுகளாய்க்கீழேவிழுந்துவிட்டதுகள். ராக்ஷசர்கள் பூண்டிருந்த குண்டலங்களும், கிரீடங்களும், முத்தாரங்களும், புஷ்பமாலைகளும், வீரத்தண்டைகளும், தோள்வளைகளும், கைக்கடகங்களும், ஆகிய இவை முதலிய ஆபரணங்களையெல்லாம், அவைகளை அணிந்திருந்த அவையவங்களுடனே கண்டதுண்டங்க ளாகும்படிப் பாணங்கள் சேதித்துவிட்டபடியால், அவை பூமியில்விழுந்து சூரியமண்டலத்துக் கெதிர்த்தட்டாகப் பிரகாசித்துக்கொண்டிருந்தன. விசாலமாகிய குண்டலங்களையும், சாமரைகளையும், நீண்டபிருதுக்கொடிகளையும், அம்புபூட்டியெய்யும் விற்களையும், கேடகங்களையும், மயிற்பிச்சங்களையும், பாணங்கள் வாரிக்கொண்டுபோனதுகள். ரக்தவெள்ள ஆறுகளில் பேய்க்கூட்டங்கள் வரிசைவரிசையாய் நீந்திக்கொண்டு வந்து கரைகளில் கும்பல்கும்பலாய் நின்றிருந்ததுகள். இந்தப்பிரகாரமாக யுத்தம்நடந்துவருகிற சமயத்தில் நீண்ட வக்கிரதந்தங்களையுடையவனான கும்பகர்ணன் வேறொருபக்கத்தில் நின்று அந்த ரணரங்கத்திலேயே சூரியகுமாரரான சுக்கிரீவமகாராஜருடனே யுத்தஞ்செய்துகொண்டிருந்தான். அதைத் தேவர்கள் பார்க்கக்கூடியயுத்தமாயிருக்கிறதென்று எல்லாரும் கூட்டமாய்ப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். சஹஸ்ரகோடி கிரணங்களையுடையசூரியபுத்திரரானசுக்கிரீவமகாராஜர்தீப்பொறிபறக்கின்ற கண்களையுடையவராகவும், புகையெழும்புகின்ற வாயையுடையவராகவும், மிகுந்த கோபமுற்று ஆகாசத்தையளாவிய ஒரு பெரிய மலையைப்பறித்து, இத்தோடேகும்பகர்ணனுடைய பலம்பொருந்திய தோள்கள் அற்றுப்போய் விட்டனவென்று யாவரும் நினைக்கும்படியாக வீசியெறிந்தார். எறிந்தபோது அந்த மலையிலிருந்து பூமியிலிறங்கி வந்த செம்பொன்மலைபோலிருக்கின்ற மதத்தயானைகளும், ராக்ஷசசேனையிலுள்ள யுத்தப்பழக்கமுள்ள யானைகளும், ஒன்றோடொன்று சண்டைசெய்ததுகள். அந்தப்பெரிய மலையிலிருந்து பறப்பட்ட மலைப்பாம்புகள் ராக்ஷசர்களுடைய கூட்டங்கள்சிதறுண்டு நடுங்கும்படி அவர்களைக் கவ்விப்பிடித்தன. யானைகளும் பெரும்பாம்புகளும் வசித்திருந்த ஒரு பெரியமலையை எடுத்தெறிவாரானால் இவரால் பெயர்த்தெறியக்கூடாத ஒருபெரியமலையும் உலகத்திலுண்டா ? இப்படிப்பட்ட பராக்கிரமமும் சௌரியமும்உள்ளவரால் பறித்தெறிந்தஅத்தன்மையான பெரியமலையைக் கும்பகர்ணன் தனது உள்ளங்கையினால் பந்தைப்பிடிக்கிறதுபோலப் பிடித்தான். அப்போது ராக்ஷசவீரர்களெல்லாம் அந்தக்கும்பகர்ணனை வாழ்த்தினார்கள். அவன் அந்தமலையை ஒருகையினாற் பிடித்துத் தனது மிகுந்தபலத்தினால் நீறாய்நொறுங்கிப் போகும்படிப்பிசைந்து, ஏ குரங்கே! நீ மிகுந்தபலங்கொண்டு பேர்த்தெடுத் தெறிந்த மலையை நீயேயெடுத்துக்கொள்ளென்று சுக்கிரீவமகாராஜருக் கெதிராகவே காற்றில்தூற்றினான். அவனுடையபலத்தைக்கண்டு தேவர்கள் திடுக்கிட்டு நடுங்கினார்கள். சுக்கிரீவர் இன்னமொரு பெரியமலையைத் தேடிக்கொண்டு வருவோமென்றுநினைத்துக்கொண்டிருக்கின்ற சமயத்தில்கும்பகர்ணன் அதிகசந்தோஷித்துடனே நிறைவான தவசிரேஷ்டர்களுடைய சத்தியவாக்கைப்போலத் தவறிப்போகாத வல்லமையுள்ளதாய்த் தன்கையிற் பிடித்திருந்த சூலாயுதத்தை எடுத்து இந்தக்குரங்கைக் கொல்லக்கடவாயென்று உபமந்திரித்துச் சுக்கிரீவமகாராஜர்பேரில் எறிந்தான். அந்தச்சூலாயுதமானது எட்டுத்திக்கிலும் புகைபரப்பிச் சீறிக்கொண்டு வருகிறதைக் கண்டவர்கள் எல்லாம் ஐயோ! இன்றைக்குச் சுக்கிரீவ ரிறந்துபோனார் இறந்துபோனாரென்று பெருங்குரலிட்டு அழுதுபுலம்புகிறதைத் தருமபரிபாலகரான ஆஞ்சநேயர்கேட்டு, அதைச்சும்மாப்போகவிடுவாரோ! ஹூமென்றுபாய்ந்து ஆகாசமார்க்கமாய்ப் போகின்ற அந்தச் சூலாயுதத்தை யெட்டிப்பிடித்து, இரண்டுதுண்டாகமுறித்தெறிந்து விட்டார். அப்படிமுறித்த சூலத்தின் ஓசையானது, சீதாபிராட்டியாருடைய திருமணக்காலத்தில் தமதுதிருவடியையே சித்தோபாயமாகப் பற்றின, சகலசேதனர்களையும், நித்தியவிபூதியாகிய பரமபதத்தையடையும்படிச் செய்கிறவரான சாக்ஷாது ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியானவர், தத்துவநிச்சய ஞ்ஞான பூரணரான ஸ்ரீசாம்பசிவமூர்த்தியினுடைய வில்லையொடித்தபோதுண்டான பெரிய வோசையைப்போலப் பூமியில் சுவர்க்கமெல்லாம் செவிடுபடும்படியாக ஒலித்தது, கும்பகர்ணன் அந்த ஆஞ்சநேயருடைய வல்லமையைக் கண்முன்னாகப்பார்த்து, ஆஹா! சபாசு உன்னுடைய வல்லமையைநினைக்கவுஞ் சொல்லவு மடங்கினதல்ல ஒருவராலும்முடியாத காரியத்தை முடிக்கவல்லவன் எல்லா லோகங்களிலும்பார்த்தால் நீ ஒருவன்தா னிருக்கின்றாய், இப்போது நீசெய்த இந்தச்செய்கை

யினாலே உனக்குச்சமானமாயிருக்கின்றார்கள்.
என்னுடன் யுத்தஞ்செய்ய விருப்பமுண்டா
னால், நீஎப்படிச் சொல்லுகிறாயோ! அப்படி
ப்பட்ட யுத்தத்தைச் செய்கின்றேன் சண்டை
செய்யவாஎன்றுகும்பகர்ணன் கூப்பிட்டபோ
து, முன்னால், இனியுன்னோடுசண்டைசெய்கி
றதில்லையென்று சபதஞ்செய்துவிட்டு இப்
போது சண்டைக்குவருகிறேனென்று சொல்
லுவது அசத்தியமாகுமல்லவா? ஆகையால் அ
ப்படிச் செய்பத்தகாதென்று சத்தியவந்தரா
ன அனுமார்சொல்லிவிட்டுத் திரும்பிப்போ
ய்விட்டார். பிறகு,கும்பகர்ணன் நிராயுதனாய்
ரணகளத்தைவிட்டுப் போகாமல் ஒருபுறத்தி
ல் நிற்கக்கண்டு, சுக்கிரீவமஹாராஜர் அவனுட
னே மல்லயுத்தஞ்செய்ய இசைந்து அவனை இ
டித்துக் காலாலுதைத்துக் கைகளாலோங்கிக்
குத்தினார். கும்பகர்ணன் நீ நல்லவீரன்தா
ன் ஆயினுமின்றையோடு உன்னுடைய கர்
வமெல்லா மொடுங்கிப்போகப்போகிறதென்
று உலையிலுருக்கினசெம்பைப்போலச் செவ
ந்தகண்களை யுடையவனாய்க்கோபங்கொண்டுசு
க்கிரீவமஹாராஜனை நெருங்கிப்பிடித்து அவ
னைத்தப்பிப்போகாதபடிக்கட்டிமார்புடனே
சேர்த்துநெரிக்கச், சுக்கிரீவமஹாராஜர் அவன்
கையைவிடுவித்துக்கொண்டு,பின்பு,ஒருவனை
யொருவர் பற்றுவதற்காக இடம்வலமாய்க் கி
றுகிறுவென்று சாரிகைசுற்றினார்கள். சுற்றுகிற
வேகத்தினால் இவ்விருவரையுமின்னாரின்னாரெ
ன்றுதேவர்களுங்காணமாட்டாமற்போனார்கள்
இந்தப்பிரகாரமாக வெகுநேரம் ஒருவர்கைக்
கொருவரகப்படாமல் தப்பித்திரிந்து பின்பு,
ஒருவனையொருவர்நெருங்கிப் புஜங்களால்தா
க்கியும், கைகளால் குத்தியும், கால்களா லுதை
த்தும், தலைகளால் மோதியும், முஷ்டியா லிடி
த்தும், அநேகவகையானயுத்தங்களைச்செய்து,
கண்களில்புகையெழும்பித்திகுதிகென்றுநெ
ருப்புப்பற்றி எரியும்போது அந்தத்தீயால்இ
டிகளுந்தீய்ந்துபோய்விட்டதுகள். சற்றுநே
ரமாவது, ஒருவனை யொருவர்விட்டு நீங்கிச்
சோர்ந்துநிற்காமல்,கண்களில்ரக்தந்தெறிக்கு
ம்படி ஒருவர்மீதொருவர்சீறி யொருவனை
யொருவர்பற்றி முறைமுறையாய் மல்லுயுத்
தஞ் செய்தார்கள். அப்போது கும்பகர்ண
ன் சுக்கிரீவமகாராஜனைச் சகிக்கக்கூடாதவித
மாய்த் தனது நீண்டகைகளினால் கட்டியிறுக்
கினபோது, சுக்கிரீவமஹாராஜர்மயங்கி மன
ஞ்சோர்ந்துமூர்ச்சையடைந்தார். அத்தருண
த்தில் கும்பகர்ணன் இன்றையோடு சண்டை
முடிந்துபோக வேண்டுமானால், இந்தமாளா
தசேனையைச் சிதறடிக்கத்தக்க ஒரு உயர்ந்த
உபாயந்தேடவேண்டும், அதற்கிந்தக் குரங்கை
க்கொண்டுபோய் விடுவதினும், வேறொருபா
யமு மில்லையென்று, சுக்கிரீவனை மார்பிலணை
த்துக்கொண்டு லங்கையைநோக்கிப் போகத்
தொடங்கினான்.

அப்போது வேடன் நாயைவருத்தப்ப
டுத்திப் பிடித்துக்கொண்டு போகும்போது,
குஞ்சுகளலறிக் கூக்குரலிடுவதுபோல மனங்க
லங்கிக் கையோடுகைபறைந்துகொண்டும்,பெ
ருமூச்சு விட்டுக்கொண்டும், வானரக்கூட்டங்
களெல்லாம் ஓவென்றழுதார்கள். ராக்ஷசர்க
ளும், தங்களுக்குச் செயமுண்டாயிற்றென்
று பெருங்கோஷ மிட்டார்கள். தேவர்களெ
ல்லாம் நாவறண்டு, நெஞ்சந்திடுக்கிட்டார்கள்.
வானரவீரர்களெல்லாம் மனமுருகி, ஐயோ !
நம்முடையராஜா கண்கள்மூடித் தோள்வலி
யிழந்து உயிருமடங்கிவிட்டாரோ என்கின்
ற அங்கலாய்ப் புடையவர்களானார்கள். கும்
பகர்ணன் விசாலமாகிய ஆகாசத்தினிடமாய்வ
ருகின்றராகுவென்னுங் கரும்பாம்பைப்போ
லவும், சூரியகுமாரனென்று சொல்லப்படுவதி
னால்சுக்கிரீவமகாராஜர் அந்தக்கரும்பாம்பினால்
விழுங்கப்பட்டுஒளிமழுங்கியசந்திரனைப்போ
லவுந் தோன்றினார்கள். மேலும் அந்தச்சுக்கிரீ
வமஹாராஜர் கும்பகர்ணனுடையகருநிறஉட
லுக்குள்மறைந்து கொஞ்சம்பிரகாசித்தும்,ம
ற்ற பாகமறைந்தும்,மேகத்துக்குள்மறைந்து
காணப்படுகின்றசந்திரனுக்கொப்பாகவு மிரு
ந்தார். பின்தொடர்ந்துசெல்கின்றவானரவீர
ர்களில் கருங்கடலைத்தாண்டின நீண்டதிருவ
டிகளையுடைய, ஆஞ்சநேயர் உன்னோடுநான்
எதிர்த்துச் சண்டைசெய்வதில்லையென்று மு
ன்னால் அந்தக்கும்பகர்ணனோடுசபதஞ்செய்
ததை நினைத்து,அவனை எதிர்க்கக்கூடாமல் ஐ
யோ!இனி என்னசெய்யப்போகிறோமென்று
தமது கையைப் பிசைந்துகொண்டு கும்பகர்
ணன் பிறகேபோனார். சிலவானரங்கள் சஹஸ்
திரதிருநாமங்களையுடையவரானஸ்ரீராமபத்திர
ருடையசந்நிதானத்திற்கோடிப்போய்ஸ்வாமீ
சூரியகுமாரராகிய சுக்கிரீவனைக்கும்பகர்ணன்
கையினா லிறுக்கிக் கட்டினகட்டுடனே கொ
ண்டுபோய் விடுகிறானே, இனி எங்களுக்குத்
தலைவனொன்று, யாரை அழைக்கப்போகிறோ
மென் றழுது சொன்னார்கள். இந்தவார்த்தை
யைக் கேட்டமாத்திரத்தில்,ஸ்ரீராமர் வடவாமு
காக்கினியினு மிகுந்த செவப்பான கண்களை
யுடையவராய்,உலகங்களை யெல்லாஞ் சுட்டெ
ரிக்கத்தக்க அஸ்திரங்களையும்,வில்லையுங் கையி
லெடுத்துக்கொண்டு, ஒருக்ஷணநேரத்திற்குள்
ளாக லங்கைகோட்டைவாயிலில் வந்துசேர்

ந்து, ஒருவேளை என்னருமைத்துணைவனான சுக்கிரீவனை, என்னுயிரைப்பிரித்துக்கொண்டுபோகிறதுபோல ஒருவராலும் பேதிக்கக்கூடாத அரணிப்பையுடைய இந்தலங்கைக்குள் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டால் வெகு கெடுதியுண்டாய்விடும். ஆகையால் அஸ்திரவருஷிம் பொழிந்து சரக்கூடங்கட்டி எல்லாவழிகளையும் அடைத்துவிடவேண்டுமென்று ஆகாசமார்க்கங்களை யெல்லாம் பாணப்பந்தலிட்டு மூடிவிட்டார். அப்போது பாணங்களினால் அஷ்டதிக்குகளும் மறைந்ததுகள். பிரகாசிக்கின்ற சூரியகிரண சோதியும், பூமியிற்பிரகாசியாமற்போனது. ஆகாசமுழுவதையும், மேகங்கள் மறைத்ததுபோலப் பாணப்பந்தல்மறைத்ததனால் கிரகநக்ஷத்திரங்களும் நடக்கமாட்டாமல் நின்றுவிட்டதுகள். அப்போது மனோவேகத்திலுமதிகவேகமாய் ஆகாசமார்க்கத்திற் போகின்ற கும்பகர்ணன் சுற்றிலும் பாணமதிலிட்டிருக்கின்றதனால் தன்னினைவை முடிக்கிறதற்கு முடியாமல், வழிதேடித் திரியும்போது, திருமுகமும், திருவாயும், திருக்கண்களும், திருக்கைகளும், திருவடிகளும், ஆகிய தாமரைமலர்க்காடுபூத்து ஸ்வர்ணமயமான கோதண்டமென்னும் இந்திரதனுசுடன் மண்டிலமாக மின்னலை வீசிக்கொண்டுவந்த மேகத்துக்குச் சமானமாய்ப் பிரகாசிக்கின்ற ஸ்ரீராமமூர்த்தியைக்கண்டு, வாலையடித்துக்கொண்டு குபுகுபென்று புகையெழும்பவும், இதழ்கள் துடிக்கவும், புருவங்கள் நெறித்துநிற்கவும், கண்களில் நெருப்புப்பொறி பறக்கவும், கர்ஜித்த கர்ஜனையைச் சகிக்கமாட்டாமல், மலைகளெல்லாம் நெக்குவிட்டுப்போனதுகள். இந்தப்பிரகாரமாகக் கும்பகர்ணன் ஸ்ரீராமனைப் பார்த்து: நீ அந்தக் கவந்தனைப்போலவும், வலியிழந்து செடிகளிலுள்ளபக்ஷிகளைப் பறித்துண்டுயிர்பிழைத்திருந்த வாலியைப்போலவும் நினைத்து, என்னோடு சண்டைசெய்ய வந்தாயோ? அல்லது இந்தக் குரங்கினுடைய உயிரைக்காக்கவந்தாயோ? என்று கேட்டுப், பின்னுஞ் சொல்லுகின்றான். உன்தம்பியாகிய லட்சுமணனைக்கோபிக்கவில்லை. அவனுக்கு வாகனமாயிருந்து தம்பிபோற்பறந்தவனான அந்தக்குரங்கையும் கோபிக்கவில்லை. அபஜயப்பட்டுப்போன வாலியினுடைய பிள்ளையையுங் கோபிக்கவில்லை. நான் யுத்தகளத்திலேவந்து உன்னுடனே சண்டைசெய்யநினைத்து அவர்களுடன் போர்செய்வது நமக்கு அழகல்லவென்று, உன்னை அந்தரணக்களமுழுதுந் தேடினேன். உன்சேனையெல்லாம் என்னைக்கண்டு பறந்து ஓடிவிட்டதுகள். உன்தம்பியும் என்னைப்பார்த்து ஒருபக்கமாயொதுங்கிப் போனான். அனுமானுமென்னோடு யுத்தஞ்செய்ய மாட்டேனென்று போய்விட்டான். இவனொருவன்மாத்திரம் அறிவில்லாமையால், கர்வித்துப் போர்செய்ய வந்தான், இவனைமாத்திரம் லேசாயெடுத்துக்கொண்டுவந்துவிட்டேன். இவனைக்காக்கவேண்டுமென்று வந்தாயேயானால் உன்னைக் காணும்படி, என் அதிருஷ்டமே என்கண்முன் கொண்டு வந்துவிட்டது. உன்னுடனே நான் செய்யவேண்டிய யுத்தமாதிரிகளை யெல்லாஞ் செய்து என்தமயனுக் குண்டாயிருக்கின்ற மோக இச்சையின் தடையையும் நீக்கி விடுகிறேன். நீநல்ல வீரனானால், தேவர்கள்முன்னிலையி லிந்த அற்பக்குரங்கை நான் கட்டியிருக்கிற என்கைப்பிணிப்பை உன்வில் வல்லமையினால் அவிழ்த்துவிடு, அப்படி இவனை விடுவிப்பையேயானால், சீதையுஞ் சிறைவிட்டுவந்தவளே யாகுமென்று சொல்லக்கேட்டு, ஸ்ரீராமர் நகைத்து, என்னுடைய உயிர்போன்ற துணைவனான சுக்கிரீவனைப் பிணித்துக்கொண்டிருக்கின்ற உன்னுடைய மலையினுமுயர்ந்த தோள்களை அறுத்துத்தள்ளாவிட்டால் உனக்குநான் தோற்றவனே, இனிவில்லும் பிடிக்கிறதில்லையென்று சொன்னார். பிறகு கும்பகர்ணன் அஸ்திரங்களினாலாகிய பலம்பொருந்திய அந்தமதிலை மூட்டுவிட்டுப்போகும்படிச் செய்கிறதற்கு யத்தனப்பட்டான். அப்படி யத்தனப்படவே மழுங்காத கூர்மையுள்ளவைகளான இரண்டு பாணங்களைத் தொடுத்துக் கும்பகர்ணனுடைய விசாலமான நெற்றியைப்பிளந்தார். அதனால்வழிந்த ரக்தவெள்ளம் அவன்தேகமுழுமையும்வழிந்து, செந்நிறமாய்க்காணப்படவும், நெற்றியில் ராமபாணமானது பிரகாசிக்கவும், அதனால் கிரணபூரணனான சூரியனுதயமாவதற்கு முன்னதாக உதிக்கின்ற அருணோதயம்போலக் கும்பகர்ணன்தோன்றினான். மலையிலருவியாறொழுகுவதுபோலக் கொப்புளித்துக் குபுகுபுவென்று வழிகின்ற, ரக்தவெள்ளமானது சுக்கிரீவமகாராஜருடைய முகத்தையும், மூடிக்கொண்டமாத்திரத்தில் தமது சோகம்நீங்கி, நித்திரித் தெழுந்தவரைப்போல உணர்வடைந்து, கும்பகர்ணனுடைய நெற்றியில் அதிகப் பிரகாசத்துடன் ஜொலிக்கின்ற பாணத்தைப்பார்த்து, இதுஸ்ரீராமபாணமென்று யூகித்தறிந்து அஞ்சலித்த கையராய்ச் சுற்றிப்பார்த்தபோது ஜ்ஞானபூரணர்களான பிர்ம்மருத்திரேந்திராதிகளுக்கெல்லாம் காரண பூதரா யிருக்கின்ற ஸ்ரீராமமூர்த்தி நிற்கிறதைக்கண்டு, அதிக

மானமும், வெட்கமு மடைந்து, கும்பகர்ணனுடைய நாசியையுஞ், செவியையும் வேருடன்பறித்துக்கொண்டு,குதிரொன்றுபாய்ந்து தமது வானரசேனையைவந்தடைந்தார். அப்போது வானரர்களெல்லாம் மங்களம்பாடினார்கள். சப்தமேகங்களுங் கர்ஜ்ஜித்தனகள்.யாவருந் தங்கள்தங்கள் பொருள்களை தானங்கொடுத்துக்களித்தானந்தக்கூச்சலிட்டார்கள்.மீன்களால்நிறைந்த சமுத்திரமும், மற்றவஸ்துக்களும்,பிரதித்தொனியுண்டாகும்படிக் கோஷித்தனகள். தேவர்களும், தர்மதேவதையும் ஆசீர்வாதஞ்சொல்லிச் சப்தித்தார்கள்.மகாகோபியான கும்பகர்ணனுடைய கையிலிருந்து வெளிப்பட்ட சுக்கிரீவனைச்,சந்தோஷித்துடன் வந்து சேரப்பார்த்த ஸ்ரீகோதண்டபாணியாகிய சக்கிரவர்த்தித் திருக்குமாரரும், தம்முடைய தேவியாகியஜானகிப்பிராட்டியானவர், லங்கையின் சிறையிலிருந்து வந்துவிட்டாற்போல ஆநந்தித்தார். ஸ்ரீராமபாணமானது கும்பகர்ணனுடைய நெற்றியைப் பிளந்து, மார்பி லுருவிப்போனபடியால்,கும்பகர்ணன் மூர்ச்சை யடைந்து சித்திரப் பிரதிமைபோலிருந்து விட்டான். அப்போது அவனுடைய செவியையும், மூக்கையும், கையிற்பறித்துக்கொண்டுபோன சுக்கிரீவ மஹாராஜர் வானரசேனைகளிற்போய்ச் சேர்ந்தார். அப்படிபோகாமல் அவனுடைய கைக்கட்டுக்குள்ளேதானே தங்கியுமிருப்பாரோ ! சுக்கிரீவர் தங்கியிராமல் போனவுடனே கும்பகர்ணன் மூர்ச்சை தெளிந்து தன்கையிலிருந்த வானராதிபதிபோய் விட்டானென்கிறதையும், தன்னுடைய பெரியமலையையொத்த மூக்கும், செவியும் அறுந்து வெட்டவெளியாய் வெளிச்சென்றிருக்கிறதையும், தேகமெல்லாம் ரத்தவெள்ளம்மூடி வழிகிறதையும்பார்த்துச்,செவந்த பதுமராகமலையின்மேல் மழைபெய்யும்போதுதாரைதாரையாகநான்குபக்கங்களிலுஞ்சலங்கோத்துக்கொண் டருவியாறுகளிழிந்தாற்போலத்தேகமெல்லாம்ரத்தமொழுகாநிற்க'இவ்வளவென்று அளவு செய்யப்படாத துக்காக்கிராந்தனாய்த் தான் சண்டைக்குவந்து எல்லாவிதத்தாலும் பேடித்தன்மையேயடைந்ததினாலும், மனம் மிகவும்நொந்து, மூக்குங்காதுகளும் புண்பட்டு எப்படி ரத்தநீர்சொரிகின்றதுகளோ ! அப்படியே ரத்தநீரைச்சொரிகின்ற குழிந்தகண்களினால் தன்னைப்பரிகாசஞ்செய்து போகின்றதேவர்கள் முகத்தைப்பார்ப்பான். அறுந்துபோன தன்னுடைய மூக்கைத் தடவிப் பார்ப்பான். தனக்குமுன் கழிந்துபோன நாள்களிலுண்டான சுகங்களையும், வெற்றியையும் நினைப்பான். பிறகு, பூமியைப்பார்த்துச் சற்றுநேரம் ஆலோசித்துச், சீச்சீ நமக்கென்ன இப்படிப்பட்ட அவமானம் வந்ததேயென்று மனக்கொதிப்படைவான். இந்தப்பிரகாரமாகக் கும்பகர்ணன் பெருங்கோபங்கொண்டு என்முகத்தை நான் கண்ணாடியிற் பார்க்கிறதற்கு முன்னதாக இந்த ஸ்ரீராமனுடைய முகமும் இப்படியே மூக்கும், காதும், அறப்புண்ணைப் பார்க்கிறேன். இது சத்தியமென்று சபதஞ் செய்துகொண்டு, பொன்கட்டிய கேடகத்தை இடதுகையிற் பிடித்து யுத்தத்தில் வெற்றிப்பிரதாபத்தைப்பெறச்செய்ததாகிய வாளாயுதத்தைவலதுகையிலெடுத்தான். ஆயிரம்பேய்கள் சுமந்துகொண்டு வந்துகொடுத்த அந்த கேடகத்துடனும், இரண்டாயிரம் பேய்கள் தூக்கிக்கொண்டுவந்து கொடுத்த சமானமில்லாத அந்த வச்சிரவாளாயுதத்துடனும் புறப்பட்டு, இடதுகையிலுள்ள அந்தக் கேடகத்தை ஒரு சுற்றுச்சுற்றினான். அப்போது அதனுடைய காந்தியினாலும், வேகத்தினாலும், ஆகாசத்திலுள்ள நக்ஷத்திரங்களெல்லாம், ஒளிமழுங்கி நிலைதளர்ந்துவிட்டதுகள். தேவர்களெல்லாரும், குடர்குழம்பிப்போனார்கள். அந்தக் கும்பகர்ணன் கோபித்தபோது அவனாசியில் நின்றும், செவியிலிருந்தும்,ரத்தங்கள் தாரைதாரையாய்க் குபுகுபுவென்று வடிந்தனகள். வாளாயுதத்தை ஒருகுலுக்குக்குலுக்கிக் கிறுகிறென்று ஒருசுழல்சுழற்றினான். அதனால் நக்ஷத்திரங்களெல்லாம் பலபலவென்று பூமியிலுதிர்ந்துவிடுவதுபோலக் காணப்பட்டதுகள். பூமியும் அதைச் சுமந்துகொண்டிருக்கின்ற ஆதிசேஷனுடைய உச்சியும், நடுங்கும்படியாகப் பெருங்கர்ஜ்ஜனைசெய்து ஆயிரங்கிரணங்களோடுங்கூடிய சூரியன் சூழ்ந்துவருகின்ற மேருமலைக்குச் சமானமான அந்தக்கும்பகர்ணன் தன்கேடகத்தை வீசியெறிந்தபோது, அதிலிருந்து புறப்பட்ட காற்றானது வானரர்களினுடைய பெருங்கூட்டங்களை யொருமிக்க வாரிக்கொண்டுபோய் அஷ்டதிக்குகளிலும் வீசியெறிந்தது.மேலும்அங்குள்ள பொருள்களெல்லாவற்றையும் வாரிக்கொண்டுபோய் எறிந்ததினால் கடல்களையும் மேடுசெய்துவிட்டோடினது.அப்படிவீசியெறிந்தகேடகத்தை ஆயிரந் திருநாமங்களையுடைய ஸ்ரீராமர்பார்த்துக்கொண்டேயிருந்தார். பார்த்துக்கொண்டிருக்கும்போதே, அவருக்குந்தெரியாமல் கும்பகர்ணன் எங்கேயென்று கைநீட்டினான்.அப்படி யவன்கைநீட்டிக் கேட்கிறதற்குள் ஒரு க்ஷணநேரத்தில் இரண்டாயிரம் பேய்களால்

கமந்துகொண்டுவந்து கொடுத்த வேறொரு கேடகத்தைக் கையில்பிடித்துக்கொண்டான். கையிலுள்ள கேடகத்தின் காற்றினால் வாரியெறியுண்டும், காலினால் மிதித்துத் துவைக்கப்பட்டும், பிரகாசம்பொருந்திய வாளாயுதமாகிய எமனால் துணிபட்டும், இன்னும் பலவகையாலும் இன்னுயிரிழந்தமாய்ச் சண்டமாருதக்காற்றினால் அலைக்கப்பட்ட கடலுக்கொப்பாகச் சிதறுண்டு, வானரப்படைகளெல்லாம்மாய்ந்துபோய்விட்டனகள். இந்தப்படி கும்பகர்ணன்மேலிட்டுவந்ததும், அவனுக்கெதிர்ப்பட்ட வானரங்களெல்லாம்நசுங்கிச் சின்னாபின்னப்பட்டதும், அந்தவானரங்களினுடையதேகத்திலிருந்தொழுகுகிற ரத்தவெள்ளங்கள் பூமியிலோடிவடிந்து,ஆதிசேஷனுச்சியிலும்சேறுபட்டதும், ஆகிய இந்தச்செய்கைகளெல்லாம் ஒருக்ஷணமாத்திரத்திற்குள்ளே முடிந்துவிட்டது. இதைக்கண்ட பிரம்ஹாவினுடைய அம்சபூதரான சாம்பவர், ஸ்வாமியைப்பார்த்து, இதைக்காட்டிலும் வேறேயொரு இக்கட்டு மினிவரப்போகிறதில்லை, இப்போதிவனை நீர் தடுக்காதிருப்பீரானால் வானரசேனைகளையெல்லாம் தேவரீரே யொடுக்கி,ராக்ஷசர்களையெல்லா பலங்கொள்ளும்படிச் செய்ததொன்று ஒருநிந்தனையான பெயர்சம்பவிக்கும், இப்படித் தேவரீர் வேடிக்கைபார்த்துக்கொண்டிருக்கலாகாதென்று முடுக்கினார். ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியும், வானரசேனைகளழிந்ததையும், கும்பகர்ணனுடைய அதிவீரிய பிரதாபவெற்றியையும், அவன் சக்தியையும் நினைத்து, இனிநாம் சும்மா இருக்கிறது தகாதென்று திருவுளங்கொண்டு, இன்றைக்கு மறைந்துகொண்டிருந்த எமனை இவன்கண்முன்னாக நிறுத்தி இவனைக்கொல்லுகின்றேனென்று சபதம்பண்ணிக்கொண்டு, அந்தக்கும்பகர்ணனுக்கெதிராகவந்துநின்று ஆறிடிகளுடனே யேழாமிடியுமுண்டோ? வென்னும்படி அதிகவேகமுள்ளவைகளான பாணங்களை ஸ்ரீராமர் பிரயோகித்தமாத்திரத்தில், அவைகளையெல்லாம் அதிருட்பவித்தியாவானான கும்பகர்ணன், பருந்துதிர்க்கின்ற சிறகுகளைப்போல ஆகாசத்திலேயே பறந்துபோகும்படித் தன்னுடையவாளினால் நொறுக்கிவிட்டான். புருஷோத்தமரான ஸ்ரீராமபத்திரர் பின்னுங் கோடைக்காலச் சூரியனைப்போல, அதிகூர்மையான பாணங்களை அவன்மீது பிரயோகித்தார். அவைகளையும் தன்கைக்கேடகத்திலேயே சிந்திச் சிதறிப்போகும்படித் தட்டிவிட்டான். அப்போதுதசரதகுமாரரானஸ்ரீரகுநந்தனர்,புன்சிரிப்புக்கொண்டு,வேறேயொரு அஸ்திரப்பிரயோகம்பண்ணினார். அது கருடபகவானைப் போலவந்து கும்பகர்ணன் கையில் வெகுகொடுமையுடன் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற அதிபலமுள்ள வாளாயுதமாகியசர்ப்பத்தைத் துண்டுதுண்டாய்ப் பொடித்தெறிந்துவிட்டது. அதைக்கண்டு தேவர்களெல்லாம்சந்தோஷகோஷமிட்டார்கள். அந்த வாளாயுதம் முறிந்தும் முறியவில்லையென்று நினைக்கும்படி வேறொருவாளாயுதத்தை அதிவேகமா யெடுத்துக்கொண்டும், எல்லாரையும் முடித்துவிட்டேன் முடித்துவிட்டேனென்று சொல்லிக்கொண்டும், வடவாமுகாக்கினியும் அவியும்படியாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டும்,ஸ்ரீராமருக்குமுன்பாக வந்துநின்றான். புருஷசிம்ஹமாகிய ஸ்ரீராமபிரானனவர் அந்தவாளாயுதத்தையுந் துணித்துப், பொன்மயமான கேடகத்தையுமழித்து,அவன்மார்பிலணிந்திருக்கின்ற நல்லவலுவுள்ளகவசத்தையும், மின்னலைப்போல ஒளியைவீசிச் சத்துருக்களாகிய சர்ப்பங்களுக்குப் பயங்கரத்தையுண்டாக்கத்தக்க கொடியபாணங்களால் அறுத்துநீக்கினர். அதுநடக்கின்றசமயத்தில்,ஆகாசமார்க்கத்தில் நின்று வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்த தேவேந்திரனுடனே தேவர்களெல்லா மோட்டமெடுக்கவும், சமுத்திரமுந்தத்தளித்துத் தன்னிலைகெடவும், ராவணனால் உதவியாக அனுப்பப்பட்ட ராக்ஷசப்பெருஞ்சேனைகள்வந்தன. அப்போது ஸ்ரீராமரும் இந்தக்கும்பகர்ணனைக்கொல்லுவதற்குத் தகுந்தசெய்கை இதுவாமென்று ஆலோசித்துக்கொண்டு, வில்லை ஊன்றிநின்றார். பலதீவினைகள் பரவினகாலத்தில் ஒருநல்வினையானது பெருகிவந்ததுபோல ராக்ஷசசேனைகளுக்கு முன்னே நடந்து ரணகளத்தில் ஸ்ரீபகவான் விளங்கினார். நாலுபக்கங்களிலும்,குதிரைப்படைகளும், தேர்ப்படைகளும், பதாதிப்படைகளும், யானைப்படைகளும், துணையாக வந்துசூழ்ந்ததைக்கண்டு, ஆச்சரியசேஷ்டரான ஸ்ரீராமர் அடா கும்பகர்ணா ! சீக்கிரமாக நீங்கள் யாவரும் அழிந்துபோகும்படியாக வரக்கடவாயென்று கூப்பிட்டார். நெற்றிப்பட்டத்தையுடைய மதயானைகளும், குதிரைகளும், குதிரைகளாலும், யானைகளாலும், இழுக்கப்படுகின்ற சக்கரங்கள்பூட்டிய தேர்களும் நிறைந்திருக்கின்ற பதினாலுகோடி ராக்ஷசசேனைகளும், போர்செய்யத் தொடங்கினதுகள். மகாபிரளயகால சம்மாரமூர்த்தியான ஸ்ரீராமரும், அவர்களுக்கெதிராக விளங்கினார். அப்போது கும்பகர்ணன் எமனையும் அவனுக்குரிய காலத்தையும், அதற்கு வேண்

டிய பாபங்களையும், அவைகளுக்குப் பிறப்பிடமான ராக்ஷசப்படைகளையும் அணிவகுத்து நிறுத்தி, இந்தப் பூலோகத் தவர்களையும், பாதாளலோகத் தவர்களையும், சுவர்க்கலோகத் தவர்களையும், தன் னுனியினாலே தொட்டு நக்கிவிடும்படியான கொடிய ஒரு சூலாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு யுத்தகளத்திலெதிர்த்து நின்றான். இப்படி இருவரும் மூண்டு நிற்கையில் ஸ்ரீராமமூர்த்தி வில்லைவளைத்து நாணேற்றிட்டு அஸ்திரப் பிரயோகம் பண்ணினாரென்பதையும், இல்லையென்பதையும் தெரிந்திலர். அந்த ரணரங்கத்தில் கவந்தங்கள் கூத்தாடினதுகள். அல்லாமலும் தேவர்களும் மரங்கள் கிடக்கின்றனவோ ? மலைகள் கிடக்கின்றனவோ ? என்று பிரமிக்கும்படியாகக் கைகளற்றுக் கிடந்ததுகள். மெய்களற்றுக் கிடந்ததுகள். பாணங்கள் தைத்துக்கொண்டு சிரங்கள் கிடந்ததுகள். இவற்றைமாத்திரம் கண்டார்களேயல்லாமல் அவர்களுயிர்கொண்டு திரிய ஒருவரும் பார்க்கவில்லை. ரணக்கள முழுவதும் மேடிட்டுக் கிடக்க அவர்கள் கொண்டுவந்த ஆயுதங்களில் இற்றுப்போகாதவைகளையும், முறிந்து மீறுபாய்க் கிடவாத வைகளையும், நடுவே முறிந்து ரணகளமுழுதும் தூர்ந்து கிடவாதவைகளையும், துணிக்கப்படாதவைகளையும், வெந்து நெருப்பை யிறைத்துக்கொண்டு வெறுஞ்சாம்பலாகாதவைகளையும், ஒன்று நூறாய் அற்றுப் போகாத வைகளையும், ஒருவருங் காணவில்லை. யானைகளுடைய விசாலமான மஸ்தகத்திற் பாய்ந்த பாணங்கள் உருவிச்சென்று பாதிதேகத்தைப் பிளந்துகொண்டுபோக, அதனாற் பெருக்கெடுத்துப் பூமியில்வடிந்து தேங்கிய ரக்தவெள்ளத்தில் குடல்களெல்லாஞ் சரிந்துவிழும்படியாகத் துதிக்கைகளுடனே இரண்டுதந்தங்களுந் துணிபட்டும், முன்னங்கால்க ளறுபட்டும் பூமியில் விழுந்து கிடந்ததுகளே யல்லாமல், நடந்துதிரிந்த யானைகளையொருவராவது பார்க்கவேயில்லை. மணிகட்டிச் சப்திக்கின்ற தேர்களில் ஒளி இழந்தவைகளாயும், பிருதுக்கொடி யற்றதுகளாயும், சூரியகிரணங்களைப்போலப் பிரகாசிக்கின்ற கூர்மையானஅம்புகளால் உடல்பிளப்புண்ட அநேகக் குதிரைகள் கட்டினதுகளாயும், வரிசைவரிசையாய் அச்சுக்களுடன் அஞ்சுருவாணி யற்றதுகளாயும், ரணகளத்தில்சரிந்துகிடக்கிற வெண்மையானகொழுப்பில்வழுக்குண்டு தலைகீழாய் விழுந்துபூமியிலாழ்ந்ததுகளாயும் கிடக்கவேகண்டார்களல்லாமல் அந்தத்தேர்கள் ஸ்ரீராமபாணங்களாற் பிளக்கப்படுகிறபோ தொருவருங் காணவில்லை. வந்த குதிரைகளெல்லாம் ஆடலொழிந்தவைகளும், வளைந்த கழுத்தற்றவைகளும், அனுமானிக்கிற குரல்களை யற்றதுகளும், கால்களற்றதுகளும், கோபக்கண்களையுடைய யானைகள் கூட்டமாய் மாண்டு பிணமலைகளாய்க் கிடக்கையால், அப்பிணங்களைமூழ்த்தித்தேங்கிய ரக்தவெள்ளச்சுழிப்புகளில் அகப்பட் டடித்துக்கொண்டு போகின்றவைகளுமாகக்கண்டார்களேயல்லாமல் ரணகளத்தில் குதிரைகள்நின்று திரியக்கண்டவர்க ளொருவருமில்லை. வேதமுதல்வராகிய ஸ்ரீராகவப்பிரானவர் எய்கின்ற அஸ்திரப்பிரயோக வேகத்தின் விசேஷத்தைக் கணிதசாஸ்திரத்தால் திருஷ்டாந்தப்படுத்தி அளவிட்டுச் சொல்லவேண்டிய தென்னத்திற்கு? தேவர்களும், ரணகளத்தில் ராக்ஷசர்க ளென்னப்பட்ட கொடியவர்களை வீரஸ்வர்க்கத்திலும் இவ்வளவின வொன்றுக்கண்டிலர். ஆயினும், இந்த ரணக்களத்தில் அவரவர்கள் தங்கள் நாயகன்மார்களைத் தேடிக்கொண்டு வந்த பெண்சாதிமார்களைத்தான் ஒருவாறுகண்டார்கள். அந்தராக்ஷசர்களுடைய மலையினும் பெரியதேகக்குவியலையும் ஒருவருங்காணவில்லை. பனிக்கூட்டம் சூரியனுதயமான மாத்திரத்தில் எப்படி அழிந்துபோகுமோ அதுபோல ராக்ஷசப்படையெல்லாம் ஸ்ரீராமமூர்த்தியால் மாண்டுபோனது. ராக்ஷசர்கள் கோபங்கொண்டார்க ளென்று பயந்து நடுங்கின தேவர்களெல்லாம், யாவரையும் ஜெயம்பெற்றுக் கர்வித்திருந்தராவணன் இனி நாசமடைந்து விட்டானென்று நெஞ்சம் பூரித்தார்கள். ராக்ஷசர்களெல்லா மிதைக் கண்டு துக்கமடைந்தார்கள். அப்போது பரமதயாளுவான ஸ்ரீராமச்சந்திரப்பிரபுவானவர் ஐயோ! கும்பகர்ணன் தனித்தவனாய்ப் போனானே யென்று அவன் முகத்தைப்பார்த்து, ஒருவார்த்தை சொல்லுகின்றார். அடா கும்பகர்ணா! உன்வாளாயுதத்துடனே உனக்குப் பெருந் துணைவராகவந்த சேனைகளையுமிழந்துபோய் நீயொருவன் மாத்திரம் நிராயுதனாய் நின்றுவிட்டாய். நீ நல்ல தர்மவானான விபீஷணாழ்வானுடன் பிறந்தாய், ஆனபடியா லுனக்குயிர்பிச்சைகொடுக்கின்றேன் இன்றைக்குப்போய் நாளைவருகின்றாயோ? அல்லாவிட்டா லிப்போதே சண்டைசெய்து உன்னுயிரைக் கொடுக்கின்றாயோ ? நீ எதை ஆலோசித்து முடிவுசெய்திருக்கின்றாய். உன்னபிப்பிராயத்தைச் சொல்லக்கடவாய். நானுன் தம்பியாகிய விபீஷணாழ்வானைக் கொண்டு அழைப்பித்தும், நீங்கள்செய்தபாவவினை முடியாதபடியால் உனக்குணர்வுவரவில்லை. நியமதர்ம

ராஜா நியமித்த ஆஜ்ஞையின்படி நிற்கின்றாய், உன்னுடைய ஆயுள்நாளெல்லாம் உன்நித்திரையிலேயே கழிந்துபோய்விட்டது. இப்போது வருத்தப்பட்டுச் சாகவேண்டியவனாக இருக்கின்றாய். உன்மனதில் தோற்றுவதைச் சொல்லென்றுகேட்கக், கும்பகர்ணன் சொல்லுகின்றான். மற்றகாரியங்களெல்லாம் நிற்கட்டும், பெருமையும், மானமும், வீரமார்க்கவழுவில்லாத வெற்றியுள்ள நீதியும், குலதர்மமுதலாகிய எல்லாக்கிரமங்களையுமுடைய உங்களால், எங்களைவிட்டுவந்து தன்பெரியசெவியும், மூக்கும் அறுப்புண்ட என்தங்கையாகிய சூர்ப்பநகையைப்போல என்முகத்தை நான் யாருக்குக்காட்டி உயிர்வாழ்ந்திருப்பேன். எங்களால் தேவர்கள் தங்கள் ஒழுக்கங்கெட்டு ஒளிமழுங்கிப்போனார்கள். அதை நினைக்கும்போதே மனது வருத்தமாயிருக்கின்றது, அவ்வருத்தத்துடனே மகாலக்ஷ்மிக்குச் சமானமுள்ள அழகும் கற்பும்வாய்ந்த பிறன்மனையாகிய சீதையைச் சிறையிலிருப்பது தகாதென்று தம்பிதச்சொல்லிய பெரியோர்வாக்கை ராவணன்கடந்தானேயென்கிற வியாகுலத்தை எப்போதும் அநுபவிக்கிறதான் என்செவியையும், மூக்கையுமிழந்த பிறகும் லங்கைக்குப் போமென்று ஒருக்காலுமுடியாது. என்தமையனைக் களிப்பிக்கவும், என்தங்கையினுடையமானத்தைக் காப்பாற்றவும், உங்கள்கால்களையும், தலையையும், என்கைவாளாயுதத்தால் வெட்டி உங்களுயிரையும் போக்குகிறேனென்று சபதஞ்செய்துவந்த நான் தேவர்களெல்லாம் பரியாசஞ்செய்யும்படி ராவணன்முன்பாக, என் தங்கையாகிய சூர்ப்பநகை அலறிமோதிவிழுந்ததுபோலத்தலையில்கையைத்தூக்கிவைத்துக்கொண்டு கண்ணீர்ரத்தநீராய்வடியும்படியாக அழுது கூவிக்கொண்டுவிழுவேனோ! சுவர்க்கமத்தியபாதாளமென்கிற இந்தமூன்றுலோகங்களுக்கும் நீயே தனித்தலைவனென்று பிறரால் சொல்லப்பட்டிருந்தும், நிந்தை இன்னதென்று ஆராயத்தக்க கருத்துடைய சேவகனாய்வந்தவன் அல்லவோ ? வீரர்களுடைய கடமையை நீயேன் ஆலோசிக்கவில்லை. யுத்தகளத்திலே அதிவீரர்களான உங்கள் தலையை வாளினுலறுத்து மீண்டும் ஒட்டவைத்தால் ஒட்டிக்கொள்ளுமோ ? யுத்தத்துக்கென்று உத்தேசித்துப் புறப்பட்டுவந்த நான் அந்த உத்தேசத்தை உன்சொல்லால் கைசோரவிட்டுத் திரும்பிப்போய் விடுவேனோ ? வீரர்களுக்குப் பொருத்தமானதைச் சொன்னாயில்லையென்று சொல்லித் தன் வலதுகையிலிருந்த சூலத்தை இடதுகையில் மாற்றிக்கொண்டு அவ்வலதுகையால் எதிரேநின்றஒரு மலையைப் பூமியின்குடலைப்பிடுங்குவதுபோலப் பேர்த்தெடுத்து ஆகாசமெல்லாம் நெருப்பாய்ச்சொரியும்படியாக ஸ்ரீராமருடைய திருமுடிக்குக்குறிப்புவைத்துத் தலையைமுறித்துவிடென்று வீசியெறிந்தான். அதைப்பார்த்த யாவரும் ஸ்ரீராமர்மீதுபட்டுவிட்டதென்றே சொல்லும்படியாய் அது நெருங்கிவந்த மாத்திரத்தில், இடிக்குச்சமானமாகிய அந்த மலையைச் சமஸ்தலோககாரணபூதரான ஸ்ரீராமசந்திர மூர்த்தியானவர் கைலாச பதியினுடைய பேனியிலணிந்திருக்கின்ற பஸ்பத்துக்கொப்பாகத் தூளாகச் செய்துவிட்டு, மறுபடியும் அவன்மீது அஸ்திரப்பிரயோகஞ்செய்ய யத்தனிக்கிறதற்குள்ளாகக், கும்பகர்ணன் இடதுகையிலிருந்த சூலாயுதத்தை வலதுகையிற் பற்றினான். அப்படிப் பற்றுவதற்குள்ளாக சுவாமியானவர் பாணங்களை அடுத்தடுத்துப் பிரயோகித்துத் தினைப்போதுக்குள்ளாக அந்தச் சூலாயுதத்தை அவன் கையிலிருந்தபடியே துண்டுதுண்டாய் விழச் சிதைத்துவிட்டுப், பின்னும் இடியையுஞ் சுட்டெரிக்கத்தக்கதுகளும், அலைகளையுடைய சமுத்திரநீரை வறளஉண்டுவிடத்தக்கதுகளும், மேருமலையு மூடுருவிக்கொண்டு ஓயாமல் ஆகாசமுழுவதையும் கடக்கத்தக்கதுகளும், தவறாத உண்மைக் கொப்பானவைகளுமான பாணங்களை இரண்டுகுதையும் ஒன்றோடொன்று தாக்கும்படியாக வில்லைவளைத்துத் தொடுத்துவிட்டார். அக்கணைகள்போய்ப் பாலநேத்திரனாகிய சம்புமூர்த்தியால் கொடுக்கப்பட்ட கவசத்தைப் பேதித்துக்கொண்டுபோகமாட்டாமல் அதன்மேல் மோதிநிற்கிறதைச் செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய சக்கிரவர்த்தித் திருக்குமாரர் கடாட்சித்து, ஓஹோ இது சங்கரனால் கொடுக்கப்பட்ட கவசமென்று யூகித்துணர்ந்து சிவாஸ்திரத்தைத் தொடுத்தெய்தார். அது பட்டமாத்திரத்தில் அந்தக் கவசமானது அள்ளுகழன்று மேருமலையைச் சூழ்ந்துவருகின்ற சூரியன் பூமியில் விழுந்து விட்டதும்போலத் துண்டு துண்டாய்க் கீழேவிழுந்து விட்டது. அப்படி மிகுந்த பிரகாசத்தையுடைய கவசமானது நொறுங்கி யுதிர்ந்தமாத்திரத்தில் கும்பகர்ணன் இரண்டுகண்களிலும் அக்கினியைச் சிந்தித்தனதுதோளைத் தட்டிக்கொண்டு கர்ஜ்ஜித்து அநேகரை ஜெயம்பெற்ற ஒரு வச்சிரதண்டத்தைக் கையிலெடுத்து இந்த வானரசேனையை யெல்லாம் சூழப்பாக்கி விடுகிறேனென்று பூமியை அம்மியாகவும், அந்த நெடுந்

தண்டத்தைக் குழலியாகவும், வானரங்களைச் சுண்டாங்கிப் பொருளாகவுங்கொண்டு கிரமக்கிரமமாயனைக்கத்தொடங்கினன். அப்போது ஸ்ரீராமபாணங்களில் ஆயிரம்பாணங்கள் ஆகாசமெல்லாம் பறந்தோடினதுகள். ஆயிரம் பாணங்கள் கும்பகர்ணன்மீது பாய்ந்ததுகள். ஆயிரம்பாணங்கள் அவனுடைய பெரியமலைபோல் நமார்பைச்சல்லடைக்கண்களாய்த் திறக்கப்பட்டதுகள். ஆயிரம்பாணங்கள் அங்குமிங்குமாய்த் திரியப்பட்டதுகள். ஆயிரம் பாணங்கள் அவனுடலில்தைத்து உருவிப் போகாம உள்ளேயே மறைந்து கொண்டதுகள். ஆயிரம்பாணங்கள் அவனை எதிர்த்துக் கொண்டு வரப்பட்டதுகள். இப்படியாக ராமபாணங்கள் அவனை வருத்தினபோதிலும் அவன் கர்ஜ்ஜனையிட்டுக்கொண்டு காற்றாடியைப் போலே கிறுகிறென்றுசாரிசுற்றிவந்தான். அப்போது நீலமேகம்போன்ற ஸியாமளமேனியையுடைய ஸ்ரீராமர் அவனைப்பார்த்துஇவன் கையில் தண்டாயுத மிருக்குமேயானால் நம்முடைய வானரஸைனியங்க ளிருக்கமாட்டாதென்று நினைத்துப், பத்துக்கூரிய பாணங்களை வரிசையாகத் தொடுத்து, எய்தமாத்திரத்தில் அந்த வச்சிரதண்டமானது துணிக்கை துணிக்கையாய் வெட்டுண்டது. பெரிய வீரகண்டாமணியைத் தரித்தக் கும்பகர்ணன் வடவாமுகாக்கினியைப்போலப் பொங்கி வுட்டாகார ஸ்வர்ன்னகேடகமொன்றையும் ஒருகூரிய வாளாயுதத்தையும் கையிலெடுத்துக் கொண்டான். அப்படியவன்வாளைக் கையிலெடுத்தவுடனே வானரவீரர்களெல்லாம் தைரியங்குறைந்து நாலாபக்கங்களிலும் காலெடுத்தோடத் தலைப்பட்டார்கள். தேவர்களெல்லாம் வருத்தமுற்றுத் தலைகாட்டாமல் மறைந்துகொண்டோடினார்கள். என்சபதத்தை நிறைவேற்றிக்கொண்டுதான் திரும்புவேனென்று கும்பகர்ணன் சொல்ல, அதைக்கேட்டுஸ்ரீராமமூர்த்தியானவர் கும்பகர்ணனுடைய மலைபோன்ற தோளை, அதுபிடித்திருக்கின்ற வாளாயுதத்துடனே துணித்துவிடக் கடவாயென்று தேவர்களெல்லாம் வாழ்த்தும்படியாக, ஒருபாணத்தை எய்தார். அப்போது லங்கைக்கும், ராவணனுடையதலைக்கும், கணக்குமுடிந்து விட்டதென்று பாவமானது மனந்திடுக்கிட்டது. நல்வினையானதுஆநந்தித்துக்கொண்டோங்கிவளர்ந்தது. ராக்ஷசர்களெல்லாம் தேகம்வெயர்த்து, மஹா கொடுமையான யுகாந்தகாலச் சமுத்திரத்தின் அலையைப்போல மனங்கலங்கினார்கள். இப்படியாகும்படி கும்பகர்ணனுடைய வலதுகையானது தேவேந்திரனுடைய மேனியிலுள்ள கண்களுக்கொப்பாக அம்புகளால்கிழிபட்ட புண்களுடனே வாளாயுதத்துடனே அற்றுவிழுந்தது. அதிகவீரனான அந்தக் கும்பகர்ணனிடத்தில் பிச்சைகேட்டு வாங்கினார்களேயானாலல்லது வேறேயும் வீரர்களுண்டென்று சொல்லுவதற் கொருவராலு முடியாது. அப்படிப்பட்ட வீரனான கும்பகர்ணன் குருத்துத்தோளளவாக அறுந்து வீழ்ந்த வலதுகையை இடதுகையிலெடுத்து, வீரகர்ஜ்ஜனையை இட்டுக்கொண்டு வானரப்படையிற் பிரவேசித்து அடித்தபோது, வானரக்கூட்டமெல்லாம் பல்லை இளித்துக்கொண்டு ஓட்டம் பிடித்ததுகள். மஹா தாதாவான ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி காத்துக்கொண்டு நிற்கும்போதே வானரசேனையைக் கொள்ளை கொள்ளையாக யமலோகம் அடையும்படி மூன்னிலும் மூன்று மடங்காகச்சிதைக்கின்ற குறிப்பைப்பார்த்து இந்த வானரசமுத்திரம் இன்றையோடு நாசமாய்விடுமென்ற துக்கத்தினு லுயிர்வாடி, இருக்கும் கையைப் பார்க்கிலும், அறுந்தகைக்கே மூன்றுலோகத்தாரும் பயந்தார்கள். தன்னைக்கண்டு வானரப் பெருங்கடலானது முதுகுகாட்டி யோடவும், யானைப்பிணங்கள் மேலே மிதக்கும்படி இவன் தோளிலிருந்து வழிந்து ரக்த ஆறுகளோடவும், ஆகாயமார்க்கத்தில் தேவர்களெல்லாம் பயந்தோடவும், துண்டுதுண்டாக லங்கையிலுள்ள பொருள்களும், மலைகளும், கடலும் நிலைகுலைந்து பின்றொடர்ந் தோடிவரவும், மேகங்களெல்லாம் சின்னபின்னப்பட்டுச் சிதறிப்போகவும், கும்பகர்ணனானவன் ஆண் சிம்ஹம்போன்ற மஹாவீரரான ஸ்ரீராமனைநோக்கி அதிவேகமாக ஓடினான். சிதறுண்ட தேவர்களெல்லாம் ஸ்ரீராமனைநோக்கி சுவாமீ ! இந்த ஒருகையையும், இப்போதே அறுத்து விடவேண்டு மென்று பிரார்த்தித்து வணங்கிநிற்க, இவனுக்குத் தோல்வியடைந்து கைக்கெட்டாமல் ஒளிந்துநின்று, இவன்வாழ் நாள்முடிவையும், பயத்தினால் மறந்துவிட்ட யமனுக்கு இப்போது இவன்காலம் முடிந்ததோ இல்லையோ என்ற சந்தேகமும், ஒருவேளை எதிர்ப்பட்டாலென்ன பொல்லாங்கு வருமோ வென்றிருந்தபய சந்தேகமும் நீங்கும்படி, நித்தியஜெயப்பிரதாபரான ஸ்ரீ ஜானகீநாயகர் ஒருதிவ்விய பாணத்தினாலே அந்த இடதுகையையு மறுத்து வேறொரு சேதுகட்டினதுபோலச் சமுத்திரத்திலே விழச்செய்தார். அப்போது அவன் அணிந்திருக்கிற வச்சிரரத்னகங்கணம்

விருத்தாகாரமாகத் தோன்றுவதினால் வஜ்ஜிரமலைக்குச் சமமான புஜமானது, தேவர்களெல்லாம் பாற்கடலில் அமுதமுண்டாகும்படிக் கடைந்த அந்தக் காலத்தில் சந்திரனென்கிற பெருந்தறியிற் சேர்த்திருந்த மந்தரகிரியைப்போலவும், அல்லாவிட்டால் வெள்ளைநிறமாகிய வாசுகியென்கின்ற சர்ப்பராஜனால் சுற்றிக்கட்டிய அந்தமலையைப்போலவு மிருந்தது. மேலும், தன்னிறத்துக்குத்தானே ஒப்பான பெருங்கடலில் விமர்செய்த படியினாலும் நெருங்கிய ரேகைகளையுடையதான சொர்ன்னமய இறகுகளின் கப்பிசையால் மூடிக்கப்பட்ட செய்கையாலும், நிர்விகாரியான ஸ்ரீயப்பதியி னவதாரமான ஸ்ரீராம மூர்த்தியின் நியமனப்படி நடந்ததன்மையினாலும், கூர்மையான ஸ்ரீராமபாணமானது பெரியதிருவடிகளாகிய கருடபகவானைப் போலவும், அந்த உயர்ந்ததோளானது அக்கருடபகவான் அநாயாசமாக எடுத்துவந்து கடலிலிட்ட மந்தரகிரிக்குச் சமானமாகவு மிருந்தது. இப்படி இரண்டுதோளு மற்றபின்பு கும்பகர்ணன் உலகத்தை யளவிட்ட திருவிக்கிரமமூர்த்தியானவர் தினந்தோறுஞ் சூரியன் சுற்றிவருகின்ற மேருமலையை உள்ளே தடைத்து ஒருபறையாக்கி ஒரு நீண்டகுறுந்தடியை வலக்கையிலேந்தி அடித்து முழக்கினாற்போலப் பெருங்கூச்ச லிட்டுக்கொண்டு வானரசேனா சமுத்திரத்தைத் தலையுந், தோளும், சதையும், எலும்புமாகச் சின்னாபின்னமாய் ரக்த ஆற்றினுடன் பெருக்கெடுத்தோடக் கலக்கிவிட்டான். நிலம் - நீர் - தீ - காற்று என்னும் பூதங்கள் நான்கும் அசுரவடிவாகி ஒருவராலும் கொல்லுதற்கிசையாத பெரியதோற்றத்தைப் படைத்துவந்ததைப்போலச், சீவகோடிகளை யெல்லாம் சம்ஹரிக்கிறவனும், பிரளயகாலத் தெமனுக்கொப்பாகக் கோபமுற்று, சங்கிராமவீரர்களுக்குத் தலைமை பெற்று, யாதொரு விஷயங்களிலும் தனக்குத்தானே சமானமானவனென்கின்ற பிரபலமுற்று, வாழ்வுற்றிருந்த கும்பகர்ணனுடைய மலைபோன்ற கனத்த வலதுகாலை விஜயகோதண்ட பாணியாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர், தன்னுடைய வடித்துக்கூரிட்டுப் பகைவர்களுதிரத்திற்காய்ச்சித் தோலைவிட்டுப் பொற்கட்டு வஜ்ஜிரக்கட்டுகளிட்டுச் சிறப்புற்றோங்கிய மயிலிறகு கொக்கிறகைச் சொருகிட்டு விளங்கத்தக்க அதிகதீக்ஷண்ணியமுள்ள ஒரு கூர்மைபொருந்திய பாணத்தினால் தெறப்பதறச் சிதறத் தக்கதாக அறுத்துப் பூமியில் விழும்படியாகச் செய்தார். அப்போது கும்பகர்ணன், அழகுபெறத்தக்கதா யொன்றுடனொன்று சேர்த்து வரிசைவரிசையாக அமைத்துவைத்ததுபோற் பிரகாசிக்கின்ற, தந்தபந்திகளென்கின்ற நக்ஷத்திரக்கூட்டங்களோடு சம்பந்தப்பட்டு முதன்மை பெற்றிருக்கின்ற இளமைதங்கிய வெள்ளிய மூன்றாம்பிறைச் சந்திரனைத் துண்டிட்டு வைத்ததுபோலச் சொலிக்கத்தக்க, கூனலாகிய இரண்டுவக்கிரதந்தங்க ளிரண்டு கடைவாயினும் தோன்றும்படியான வாயிலிருந்து, ரத்தவெள்ளமானது மலையிலிருந்து தாரை தாரையாகப் பெருக்கெடுத் தோடிவருகின்ற அருவிநீரைப்போலக் குமீர்குமீரென்று பாய்ந்து வருவதினால், மாலைப்போதில் காணப்படுகின்ற செக்கர்வானம்போலவு மிருந்தது. இந்தப்பிரகாரம் கும்பகர்ணன் தன்னுடைய அகண்டவாயைத் திறந்துகொண்டு, தன்னொருகாலிழந்தமையால் மற்றொருகாலினால் நடக்கத்திடமில்லாமல் குந்திக்குந்திப் பூமி குழிபடும்படியாகவும், கடல்நீர் கொதித்துக்கொப்புளித்துத் தத்தளித்துக்கலங்கி வழியும்படியாகவும், அதிவேகமாயோடி வானம்பாடிப் பறவையைப் போலவும், பந்தைப்போலவும், விசைகொண்டு பூமியிலிருந்தெழும்பி ஆகாசமார்க்கமாகத் தாவிக்குதித்து நின்று, தனதிரண்டு பக்கங்களிலுமுள்ள அநேகம்பெரிய மலைகளையும், குன்றுகளையும், மரங்களையும், மற்றுமுண்டான எல்லா வஸ்துக்களையும் கையிற்பறித்தெடுத்துக்கொண்டு, இடசாரி வலசாரி வலசாரி இடசாரியாகச் சுற்றிக் கற கற வென்று சுழற்றிக்கொண்டு சூராவெளிக் காற்றைப் போலத் திரிந்து, கட்டுக்கடங்காத மதயானையைப்போலக் கண்களிற் றீப்பரக்கத்தக்கதாக ஆக்கிரமித்துக்கொண்டு வானரப் படைகளின்மேல் தாவிவந்தான். அப்போததைக்கண்ட எம்பெருமானாகிய, உத்தண்டசண்டப் பிரசண்ட பிரபல கோதண்ட தீக்ஷாகுருவான ஸ்ரீரகுநந்தனர், தனக்கினியளாகிய பூமி பிராட்டியினது தலைச்சுமையாகிய பெரியபாரமானது நீங்கிப்போகவும், வேதங்க ளளவில்லாத சந்தோஷத்தினாலாநந்தக் கூத்தாடத் தக்கதாகவும், பொன்னுலக வாசிகளென்கின்ற தேவர்களுடைய மனத்துயரந் தொலைந்து போகும்படியாகவும், ராக்ஷசர்களென்கின்ற விஷப்பூண்டுகள் வேரற்றுச்சாகத்தக்கதாகவும், அக்கினிமுகாஸ்திரத்தையெடுத்து அதற்குச்செய்யவேண்டிய மந்திரா குதிகளைக் கிரமப்படிக் கொடுத்துத் தொடுத்துவிடுத்தார். அப்படி தொடுத்த அக்கினிமுகாஸ்திரமானது அதிவிரைவாகப்போய் அந்தக் கும்பகர்ணனுடைய இடதுகாலையு மறுத்துத்தள்ளினது. அப்பால்,

சிறிய குன்றுகளுக்குச் சமானமாகிய இரண்டு கால்களுங், கைகளும் அறுபட்டும், பெரிய மேருகிரியையொத்த ஸ்தூலதேகமும், லக்ஷம் பாணங்களால் சல்லடைக் கண்களாகவும், சில்லிசில்லியாகவும் தொளைபட்டும், சற்றும் வியசனமில்லாமலும், பயப்படாமலும், திடச்சித்தத்தை யுடையவனாய் முன்னிலு மதிககோபங்கொண்டு, மூகமென்கின்ற கறுத்த ஆகாயத்தில் கோபாக்கினியான மின்னலானது ஜொலிக்க, பேரோசையாகிய இடிமுழக்கம்போல இடைவிடாமல் கர்ஜ்ஜனை செய்துகொண்டிருக்கின்ற கும்பகர்ணன், தன்னிரண்டு கைகளும் காலு மறுப்புண்டதனால், பூமியில்விழுந்தபடியே உருண்டுபோய்க் குகைக்கொப்பான வாயினாலே, அங்கேகாத்திரமாயோங்கி வளர்ந்திருக்கின்ற மலைகளைக் கவ்வி, வாள்போன்ற பற்களினால் நறநறவென்றுகடித்துச் சுக்கல் சுக்கலாகப் போம்படிச் சிதைத்து, உமிழும்போது தனக்குள்ளடங்காத கோபாக்கினியாலுண்டான சுவாசக்காற்றானது அந்த மலைப்பொடிகளை நான்கு திக்குகளிலுங் கொண்டுபோய் எறிவதினால் அங்கங்குள்ள அனேகவானரசேனைகள் நசுக்குண்டு மாய்ந்துவிட்டதுகள். இதல்லாமலும் கும்பகர்ணனானவன் மேலுமேலு மதிகரிக்கின்ற பெருங்கோபத்தினால் கண்களென்கிற பொறிகளி லிருந்து அபரிமிதமாகப் பறக்கின்ற தீப்பொறிகளானவை எட்டுத்திக்குகளிலும்போய்ப்பாய்ந்து தீய்க்கும்படியாகப்பார்த்து, எட்டாத ஒருபொருளை எளிதிற் றுறட்டுக்கோல் கொண்டு கிரகித்துக் கொள்ளுகிறது போல முத்துக்களைச் சொரிகின்ற மூங்கில்கள் வளர்ந்தடர்ந்திருக்கின்ற ஒரு பெரியமலையை அதனுச்சியோடு தன்வாயுதட்டினாற்பற்றி வேரறக்களைந்து பறித்தெடுத்து கழுகு - காக்கை - பருந்து முதலியபறவைகள் வட்டமிட்டுப் பறக்கவும், நாய் - நரி - யோரிகள் - ஊளையிடவும், பேய்க்கணங்கள் நடிக்கவும், உதிரந் தோய்ந்திருக்கின்ற ரணகளமெல்லாம் நிலைகுலையும்படி பெரிய பிலத்துவாரம்போன்ற வாயில்வைத்தூதி ஆக்கிரமித்தட்டகாசஞ்செய்த போது, முன்னம் வேதங்களுக்கு மெட்டப்படாத பரப்பிர்ம ஸ்வரூபமாகிய ஆதிமூலமே யென்று ஓதிவணங்கிய யானையினது வேதனையை நீக்கும்படியாக முதலையைச் சம்ஹரித் தாதரித்த எம்பிரானாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் மதுகரங்கள் மதுவுண்டு கீதங்களைப் பாடி வாசஞ்செய்யும்படி முகைவிழ்ந்து மகரந்தப்பொடிகளை வீசுகின்ற செந்தாமரை மலர்போன்ற தமது திவ்வியதிருக்கண்களால் கடாட்சித்து மிருந்த ஆச்சரியமுற்று இந்தக் கும்பகர்ணனானவன் கைகால் முதலானவை தறிபட்டுத் தரையில் வீழ்ந்தும், அதிக ஆங்காரத்தோடு, பயமென்பதைக் கடக்கவோட்டி, வீரவைராக்கியத்தைப் பாராட்டி, வானர சைனியங்களைத் திக்குமுக்காடும்படி வாட்டித், தனக்குண்டான வல்லமையைக்காட்டி, நிற்கின்றானே இவனன்றோ வல்லவனென்று மூக்கின்மேல் விரலை வைத்துச் சபாசென்று மெச்சினார். அந்தச் சமயத்தில், உலகத்தைச் சூழ்ந்துகொண்டிருந்த விருள் போன்ற பெரும்பனிக் கூட்டமானது சூரியகிரணங்களைக்கண்டு நீங்குவதுபோலச் சக்கிரவர்த்தித் திருமகனாருடைய கோடிசூரியப் பிரகாசம்பொருந்திய அழகிய முகாரவிந்தத்தைக்கண்ட கும்பகர்ணனுக் கப்போது நல்ல விவேகம்பிறந்து, தானவராக்ஷசகுல சம்ஹாரமூர்த்தியும், கௌசலகுமாரரும், மலைகளஞ்சத்தக்க பருத்துயர்ந்த திருத்தோள்களையுடையவருமாகிய புருஷோத்தம ஸ்ரீராகவபிரானைப்பார்த்து ஐயோ! இந்த உத்தமருடைய கையிற்பற்றியிருக்கின்ற வில்லின் வல்லமைக்கு என்னைப்போன்ற சுத்தவீரனே ? கைகாலறுந்து சூழ்ந்துவந்த சேனைகளிழந்து வேறோருதவியு மில்லாமல் காற்றிற் பஞ்சுபோலப் பறந்து போவேனேயானால், என்தமயனாகிய ராவணன் இந்தச் சுந்திரமூர்த்தியை வெல்லுவானென்று சொல்லவும் படுமோ! அல்லவென் றொருவேளை அவனுக்குதவியாக ஆயிரம் ராவணர்கள் வந்தெதிர்க்கக் கூடுமானாலும் அத்தனைபேர்களுடைய பிராணனையும், அவர்களுக் குதவியாகச் சேனைகளெத்தனை வந்ததோ ! அத்தனைப்பேர்களுடைய உயிரையும், இவன்கைக்கோதண்டமானது கூற்றுவனுலகத்திற்குடியேற்றிவிடாமல் சும்மாவிட்டு விடப்போகிறதோ ! நான் அதன்பெருமையை என்னென்று சொல்லப்போகின்றேன். அளவில்லாத அகண்ட அயிஸ்வரியத்தைப்பெற்று வாழ்வுற்றிருக்கின்ற இந்தராவணன் காமநோய்த் தலைக்கேறித், தூண்டா விளக்கைத் தீண்டும்படிவந்த விட்டிற் பூச்சியானது தன்னுடைய பலங்குறைந்து சாவதுபோலச், சீதையென்கின்ற நெருப்பைக் கொண்டு சிறையிட்டபோதே அவனுடைய வாழ்நாள் குறைபட்டதே ? இனி ராமபாணத்திற்குத் தப்பி ஒருக்காலும் பிழைக்கப்போகிறவ னல்லவே என்று பற்பலவிதமாகக் கும்பகர்ணன் மனத்தில் நினைத்து, அதிக துக்காக்கிராந்தனாய்ப், பரிதபித்துச் சித்திரப்பொடியையும், செம்பஞ்சையும்போ

ன்ற சிவந்த உயிர ஆறுன து பலதிசைகளிலும் போய் அங்கங்குள்ள மிக்கபலம்பொருந்திய பெரியதேர்களையும், யானைகளையும், குதிரைக ளையும், சிங்கங்களையும், வாரிக்கொண்டோடுகி றதைப்பார்த்து உடல்வேர்த்து ஒவெல்ஞர்த் துச் சித்தங்கலங்கி அந்தக் கலக்கம் ஒருவித மாகத்தெளிந்து சுவாமியினுடைய வல்லமை யைக்குறித்து அளவில்லாதசந்தோஷ சாகரத் தில் மூழ்கினவனான சூர்ப்பகரிணை் தனக்கெ திரே சேவைசாதிக்கின்ற கருங்கடல் வண்ண னும், கிருபாசமுத்திரனுமான ஸ்ரீரகுநாயக னுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துச் சிலவார்த்தைகளை வணங்கிச் சொல்லுகிறான்.

கவி.

புக்கடைந்தபுறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க, மைக்கடங்காமதயானை வாள்வேந் தன்வழிவந்தீர், இக்கடங்களுடையீர் நீ ரெம்வி னைதீர்த்தும்முடைய, கைக்கடந்தானுயிர்கா ப்பக் கடவீரொங்களைக்கட்டால் ......... (௧)

நீதியால்வந்ததொரு நெடுந்தருமநெறியல லால், சாதியால்வந்தசிறு நெறியறியானென் றம்பி, ஆதியாயுனையடைந்தானரசருருக்கொ ண்டமைந்த, வேதியாவின்னமுனக் கடைக்கல நான்வேண்டினேன்...................... (௨)

வெல்லுமாநினைக்கின்ற வேலரக்கன்வேரோ டும், கல்லுமாமுயல்கின்று னிவனென்றுங்கரு வுடையான், ஒல்லுமாறியலுமே னுடன்பிறப் பின்பயனேறான், கொல்லுமாலவனிவனைக் கு றிக்கோடிகோவிந்தா ..................... (௩)

தம்பியெனநினைந்திரங்க றவிரத்தானவ ன்றந்த, நம்பியிவன்றனைக்காணிற் கொல்லுமி றைநல்காலல், உம்பியைத்தானுன்னைத்தா ன னுமனைத்தாரொருபொழுதும், எம்பிபிரியல னுகவருளுதியால்வேண்டினேன்........(௪)

மூக்கிலாமுகம்வந்து முனிவர்களுமமரர்க ளும், நோக்குவார்நோக்காமுன் றொருசனை யாவென்சழுக்கதை, நீக்குவாய்நீக்கியபின் னெ டுந்தலையைக் கருங்கடலில், போக்குவா யிது வெனக்கு வேண்டுகின்ற பொருளென்றுன்.

வசனம்.

ஒருவேடுவனால்வருத்தப்பட்டுத் தன்னை அடைக்கலம் புகுந்த ஒருபுறுவின் நிமித்தமா கத் துலையேறினவனும், மேகத்திற்கும்பெய் தமுடியாத மதம்பெய்கின்றயானைச்சேனையு டையனுமாகிய வெற்றிபொருந்திய கூரிய வாளாயுதத்தைத் தாங்கிய சிபிச்சக்கிரவர்த்தி வ ம்ஸத்தில்வந் தவதரித்த ராமலக்ஷ்மணர்களே! சிபிச்சக்கிரவர்த்தி செய்ததுபோல பல அன் பின்கடமைகளைச் செய்யவல்லீர்கள். உங்க ளுடைய திருக்கைகளால் செய்யவேண்டிய கடமையாவது, எங்கள் குலமுழுமையையும், உங்கள்பாணத்தால் தொலைத்து விடுவீர்களே யானால் எங்களுடைய இருவினைகளையு மொழி த்து நிரதிசயாநந்த பரந்தாமத்தை யடையும் படிஎங்களையாட்சிக்குங்கடமையுடையீரா வீர்கள். இதுவேயாம். வேதமுதல்வனாகவும், க்ஷத்திரியகுலத்தில் அவதரித்த அந்த வேதப் பிரதியாத்திய வஸ்துவுமாகிய ஓ ஐயனே? கோதண்டக் கையனே ? எம்மை ஆண்டருளு மெய்யனே? என் றம்பி விபீஷணன் சகலாத் மாக்களுக்கும் செய்யவேண்டிய நீதியாயமை ந்த வேதமார்க்க தருமத்தை அநுசரித்த வனே அல்லாமல் எங்கள்சாதிக்குரித்தியமாகிய அற்பமார்க்கத்தை அநுசரித்தறியான். அவன் வேதமார்க்காநுசாரியாதலால், உன்பக்கலிலே அடைக்கலம்புகுந்தான். அந்த அடைக்கல மானது யாதொருபின்னத்தையும் அடையா மலிருக்கவேண்டு மென்பதையே இன்னமும் நான்வேண்டுவது. ஆகையால், எல்லாலோகங் களுக்கு மேலாகிய பரமபதநாட்டி லிருந்து அந்த அழியாத வீட்டைத்தருகின்ற வைகுந் தா! முகுந்தா! கோவிந்தா! தேவரீரை வெல்ல வேண்டு மென்று நினைத்து, வெறு வாயை மெல்லுகின்றவனும், வேலாயுதத்தை த் தாங்கியவனுமான என் தமயன் ராவணன் இந்த விபீஷணன் உங்களுடன் சேர்ந்து, அ வர்களை அடியோடு வேரற்றுப்போம்படிச் செய்யக் கருத்துற்றிருக்கின்று னென்கின்ற வெண்ணங்கொண்டு கறுவிக்கொண்டிருக்கின் று னானதால், இந்த உத்தமனான விபீஷணன் மாத்திரம் தனியா யவன்கண்ணி லகப்படுவா னேயாகில் சகோதரவாஞ்சையென்ப தென் னளவு மில்லாமல் கொன்று விடுவான். கிரு பாமூர்த்தியாகிய எம்பெருமானே அந்த விபீஷணனை எப்போதும் மறவாமல்திருவுள் ளத்தில்வைத்துக் காத்தருளவேண்டும். இதல் லாமலும் இந்த ராவணாதிராக்ஷசர்கள் மாயாரூ பிகளானதால் எவ்வகைப்பட்ட உருவமெடுத் தேனும் கொல்லச் சித்தமாய்க் காத்துக்கொ ண்டிருப்பார்க ளென்பது யான்மாத்திரஞ் சொல்லப் பாத்திரமோ தங்கள் திருவுள்ளத்தி ற்கே விசதப்படத்தெரியவருமே, ஆகையால் ஓ சுவாமீ! உம்முடைய திருவடியை நம்பி யிருக்கும் தம்பியாகிய இளையபெருமாளையா வது உம்மையாவது அல்லது வாயுபுத்திரனா கிய ஆஞ்சநேயனையாவது என்தம்பியாகிய

விபீஷணன் பிரிந்திருக்கவொட்டாமல் பாது
காக்கவேண்டிய வரமொன்றும், மேலும் மூக்
கறுப்புண்ட முகமென்று என்னைத் தேவர்க
ளும், ரிஷிகளும்பார்த்துநகைப்பார்கள் ஆத
லால் அவர்கள்வந்து பாராமுன்ன மிப்போ
தே காலதாமதஞ் செய்யாமல் உம்முடைய
திவ்வியாஸ்திரத்தாலே என்கழுத்தைத் துணித்
து தலையைக்கருங்கடலிற் கொண்டுபோய் வி
ழச்செய்ய வேண்டுமென்ற வரமொன்றும்,
ஆகிய இந்த இரண்டுவரமாத்திரமே அடி
யேனுக்குக் கொடுத்தருள வேண்டுமென்று
கும்பகர்ணன் பிரார்த்தித்துக் கொண்டான்.
அப்போது சகத்திரக்ஷகராகிய எம்பெருமா
ன் இவன் வேண்டுதலுக் கிசைந்து அப்படி
யே யாஞ் செய்விப்போமென் றழியா வரங்
கொடுத்து, உடனே தனது வஜ்ஜிரவாகுவலய
கடகங்களைத் தரித்திருக்கின்ற அழகிய இரண்
டுதோள்களும் பூரிக்கக் கோதண்டத்தைக் கை
யிலெடுத்து நாட்டி, விஷித்தயிலத்திலூட்டிக்,
காய்ச்சித் துவையலிட்டுச், சாணையிலரட்டிக்,
கூரிட்டுத் தங்கக்கட்டுகள் பொற்கட்டுகளிட்டு
கொக்கிறகு இம்மாம்பக்ஷி யிறகுகளைப்பூட்டி
ய அதிக கூர்மைபெற்றிருக்கின்ற ஒரு திவ்வி
யாஸ்திரத்தைத் தொடுத்து நாணை காதளவும்
இழுத்து, கும்பகர்ணனுடைய சிரசுக்குலக்ஷி
யமாய்ப் பிரயோகித்து துணித்துப் பிறகு
அந்தத்தலையை அதிவேகமுள்ள வாயுவாஸ்தி
ர மொன்று விடுத்துக் கடலிற்கொண்டுபோ
ய் விழுத்தும்படியாகச் செய்தார். அந்தப்
பிரகாரமாகக் கும்பகர்ணனுடைய மலைபோ
ன்ற தலையானது கடலில்விழுந்தபோது அதி
ல் வாசஞ்செய்துக்கொண்டிருந்த மகரமச்சி
யங்கள்முதலான எல்லாச்சீவகோடிகளும் தட்
டுக் கெட்டு கலங்கி நசுங்குண்டு கடல்நீர்ப் பெ
ருக்கெடுத்து நான்கு திக்குகளிலும் போய்ப்
பரவினது. அப்போதுஅங்கேகும்பகர்ணனு
டைய தலை புகைஎழும்பிக்கொண்டிருக்கின்ற
வாயிலும், மூக்கிலும், காதிலும், கண்களிலும்,
நீர்கோத்துக் கொண்டதனல் கடலில் மூழ்கி
விட்டது. அதைக்கண்ட தேவர்களும், ரிஷிக
ளும், வேதமார்க்க நிஷ்டாநுபவர்களும், தேவ
தாஸ்திரீகளும், தாங்கள் நெடுநாளாய்க்கொண்
டிருந்ததுன்பம் நீங்கி அமிர்தத்திற்கொப்பா
ன அளவில்லாத தேவகானங்களைப்பாடி ஆன
ந்தக்கூத்தாடினார்கள். அன்றியும், முன்னங்கும்
பகர்ணனுக்குப்பயந்து தோற்றோடிப்போ
ன வானரவீரர்களெல்லாம் மறுபடியும் ஸ்ரீ
ராமரிடத்தில்வந்து சேர்ந்தார்கள். இது இப்
படியிருக்க, இக்கேகும்பகர்ணன் மடிந்துவி
ழுந்ததைக்கண்ட ராக்ஷசவீரர்களெல்லாம்ரா
வணனிடத்திற்கோடி ஐயா! உம்முடைய த
ம்பியாகிய அதிகபராக்கிரமசாலியான கும்ப
கர்ணமகாராஜன் ஸ்ரீராமபாணத்தால் மடிந்
தானென்றுசொல்லும்படியாகப்போனார்கள்.

கும்பகர்ணன் வதைப்படலம்

முற்றிற்று.

## மாயாஜனகப்படலம்.

.........

### கவி.

அவ்வழி கருணன்செய்த பேரொழி லாண்
மையெல்லாம், செவ்வழி புணர்வுதோன்றச்
செப்பினஞ் சிறுமைதீரா, வெவ்வழி மாயை
யொன்று வேறிருந் தெண்ணிவேட்கை, இவ்
வழி யிலங்கைவேந்த னியற்றிய தியம்பலுற்
றும்.......................... (க)

### வசனம்.

அவ்விடத்தில் கும்பகர்ணன் போர்
செய்த மிகுந்த அழகுள்ள பராக்கிரமங்களை
யெல்லாம், வைதீகமார்க்க மெய்ஞ்ஞானப்ப
டி சொல்லினோம், இனி தீமைகள் நிறைந்த
துன்மார்க்கமாகிய ஒருமாயையைத் தனியே
யிருந்து ஆலோசித்துக் காமாந்தகாரத்தால்
பிரதாப லங்கேசுவரன் இவ்விடத்தில் செய்
ததைச் சொல்லத் தொடங்கினோம். ராவண
னவன் தனதுமந்திரிகளில் தனது குடிக்
கொரு கேடனாகவிருக்கின்ற மகோதரனென்
பவனுடைய முகத்தைப்பார்த்து உடலம்வே
ர்த்து, ஐயா! எனது மனதுக்கிசைந்த மந்
திரியாகிய மகோதரா! நான்சீதையைக்கூ
டிக்குலாவி மனக்குறையைத் தீர்த்துக்கொள்
ளத்தக்க நல்லஉபாய மின்னதென் றென்றை
நாடி அன்புநீடிச்சொல்லி எனதுஉயிரை நிலை
நிறுத்திக் காப்பாற்றக் கடவாயென்று பரிதா
பத்துடன் கேட்கவே? அதற்கு மகோதர னி
சைந்து, சுவாமீ ராவணேஸ்வரா! உமது புச
ந்தானே இருபதும்பூரித்துமருவும்படிப்பக்
குவமாக மாயமொன்றின்றைக்கே நானுண்டு
பண்ணி, அந்தச்சீதையை உனது பக்ஷத்தில்
தானேயாகும்படி செய்விக்கின்றேன். அதெ
ப்படியென்றால், மருத்துவனென்பவனை உரு
த்தெரியாமல் அந்தச் சீதைக்குத்தகப்பனான
ஜனகராஜனைப்போ லுருவைமாற்றிக் கட்டிப்
பிடித்துக் கொண்டுவந்து அவள்முன்னே வி
டுவோமாகில் அப்போதே அவள்கண்டுபயத்
து திடுக்கிட்டு வலியத்தானே வந்து அணைய

மாட்டாளோ? அனைவாள் ஆகையால் இதுவே
தகுந்த உபாயமாகும், இந்த உபாயத்தாலுன
துமனோரிக்கையை நிறைவேற்றுகிறேனென்று
சொன்னதைக் காமநோயால் மனவருத்தப்ப
ட்டுக்கொண்டிருக்கின்ற ராவணன் கேட்டுத்தி
டீரென்றெழுந்திருந்து மகோதரனை மார்பி
னகத்தழுவி என் அருமைத்தோழனே? உன்னு
டைய கருத்தின்படியாக அதிகதீவிரத்தில்செ
ய்வாயென்று சொல்லி உத்தரவு கொடுத்தனுப்
பிவிட்டு, பாபிஷ்டர்களான ராக்ஷசர்களென்
கின்ற இருட்கூட்டத்தை நாசப்படுத்துந் தூ
ண்டாவிளக்கை யொத்துப் பிரகாசிக்கின்ற சீ
தாபிராட்டியார் மகோதரனுடைய மாயவஞ்
சனைகளுக்குப் பயப்படுகின்றாரோ ! இல்லை
யோ ! அதைக்காணும்படியாகப் பலராகங்க
ளைப் பாடத்தக்க வண்டினங்கள் மொய்த்து
வாசனை வீசுகின்ற புஷ்பங்களால் நிறைந்த
அசோகவனத்தை நோக்கிப்போய், நித்தியா
நந்தத்தைத் தருகின்ற ராகத்தை யொத்த
சொற்களையுடைய ஸ்ரீகளுக்குள்ள சுந்தரமா
ன அவயவங்களை யெல்லாம் ஒவ்வொன்றாகக்
கூட்டியமைத்து அளவிடுதற்கு அருமையா
ன நற்குணங்களையெல்லாம் ஒன்றுசேர்த்துச்
செய்த சித்திரப்பிரதிமைபோ லெழுந்தரு
ளியிருக்கின்ற சீதாபிராட்டியாரைத் துன்பப்
படுத்துகிறவனான ராவணன் அவளைக் கண்
ணாரக்கண்டு மின்னலைப்போன்ற தன்பத்துக்
கிரீடங்களும் தகத்தகாயமாய்ப்பிரகாசிக்கவும்,
இருள்போன்ற இருபதுதோள்களிலு மணி
ந்திருக்கிற வைர்ணமயமாகிய மாலைகளான
வை நீலமலையிலிருந்து அருவியாறுகள் விழு
கிறதுபோலப் பிரகாசிக்கவும், மதத்துக்களி
த்த யானையும் வெட்கப்படநடந்து ஒருவிள
க்கானது மற்றொருவிளக்கைத் தாங்கிவருகிற
துபோலவும், மின்னல்கள்வரிசையாய்ச் சர்ப்
பத்தைப்போலச் சுழல்கின்றஇடையானது
வருத்தமுற, கொங்கையாகிய மலையைச்சுமந்
துசஞ்சரிக்க இளமைதங்கிய மூன்றாம்பிறைச்
சந்திரனையும், சேற்கண்டையையும், வாளையும்,
வில்லையும், பழிக்கத்தக்க நெற்றியையும், கண்
களையும், புருவத்தையு முடைய தேவமாதர்
கள் முன்னும் பின்னு மணியணிபாகச் சூ
ழ்ந்துக் கைகளில் விளக்கைப் பிடித்துக்கொ
ண்டுவரவும், கட்டியக்காரர்கள் இரண்டுபக்கங்
களிலும் எச்சரிக்கைப்பராக்கென்று இடிமு
ழக்கம்போலச் சொல்லிக்கொண்டுவரவும், வெ
குவிநோதா டம்பரத்துடனேபோய், அங்கே
சீதாபிராட்டியாருக்கெதிரில் போட்டிருந்த
பொற்சிம்மாசனத்தின்பேரில் சந்திரவட்டக்கு
டைகவிபவும், தேவர்களைச்சிறையிலிட்ட வெற்
றிபொருந்திய தோள்கள் பூரிக்கவும், பாதங்
களில் வீரகண்டாமணியசையவும், இருமரு
ங்கிலும், ரம்பாஸ்திரீகள் சாமரைவீசவும், உ
டைவாளைத்தாங்கிய ஒரு ராஜசிம்ஹம்போல
உட்கார்ந்தான். அந்தப்படி வீற்றிருந்த ராவ
ணன் சீதாபிராட்டியாரைப்பார்த்து ஓ பெண்
களுக்கெல்லாம்நாயகமே? உனக்கு அடிமையா
யிருக்கின்ற என்மீதென்றைக்கு, நீஇரக்கம்வை
த்துக் காக்கப்போகின்றாய், துன்பப்படுத்துகி
ன்ற கொடியோனான சந்திரன் என்றைக்குச்
சூரியனைப்போல வேறுபாடில்லாமல் காணப்
படுவான் நெஞ்சில் சற்று மிரக்கமற்ற ப
ஞ்சபாணனாகிய மன்மதனென்னும் பாதகன்
வஞ்சனையால் தன்னைக் கெஞ்சக்கெஞ்ச என்
மீதுவிடுகின்ற பாணங்களுக்கு நான் என்றை
க்கு லக்ஷியமில்லாம லிருக்கப்போகிறேன்.
அல்லாமலும் வஞ்சனையுள்ளவனாகிய நான்
பெண்வடி வுற்றிருக்கின்ற நஞ்சாகிய உன்
னை என்னுட்கொண்டிருப்பதால், அதைமாற்
றிக்கொள்ளும்படியான உன் யோகாமிர்தத்
தைவிரும்பி நாளுக்குநாள் மெலிந்துவாடுகின்
ற என்னுடையசிந்தையைவிட்டு நீங்காமல் எ
ப்போதும் குடியாயிருக்கின்ற உன்னை நினை
யாமல் ஆவியைவிட்டு நீங்குகிறதற்கும் பயந்
திருக்கின்றேன், ஓ தேவாமிர்தம்போன்ற
சீதா ! நானுனக்கடைக்கலமல்லவோ என்
னை மன்மதனுக்குத் தோற்கும்படிசெய்து, ச
ந்திரனைக்கொண்டு என்மனத்தைச்சுட்டுப் பு
லிபோற் சீறிவருகின்ற தென்றற்காற்றினால்
மோதும்படிச்செய்து வச்சிரமலைக்குச் சமா
னமான இருபதுதோள்களையும் மெலியவிட்
டாய். ' அல்லாமலும் தேவர்கள் என்னிடத்தி
ல்கொண்டிருந்த பயங்கரத்தையுங் கெடுத்
தாயே ? ஆகிலும் இந்தமட்டோ டென்னை வி
ட்டுவிடுவையோ ! அல்லது இன்னமென்ன
துன்பங்களைவிளைத்துப் பின்பு உன்மனவயிர
ந் தீரப்போகின்றனையோ ! அதை அறியே
லேன் என்னுடைய மனோரம்மியமானசீதா !
லோகங்களி லிருக்கின்ற பெண்களெல்லாம்
நீயேயாகவும், அவர்களுடைய யெல்லாப்பெ
யர்களு முன்பெயராகவும், என்னுடையபார்
வையெல்லாம் நின்மேலாகவும், பார்த்தவிட
ங்களிலெல்லாம் மன்மதனுளனவு மிருக்கச்செய்
து, அவனுடைய பஞ்சபாணங்களால் என்
மேனிமுழுவதுந் துளைபடும்படிப் பார்ப்ப
து, உனக்கழகல்லவே ? அப்படியானால் என்
னால் சகிக்கக்கூடுமோ! மேலும் இந்திரன்முத
லிய தேவர்களும், மற்றவெல்லாச்சீவர்களும்,
பயப்படும்படியாக இந்தத் திரிலோகங்களை
யும் ஏகச்சக்கிராதிபதியாக அரசுசெய்கின்ற

எனக்குச்சகலரும் பயந்து நடப்பார்களே ய
ல்லாமல் நான் யாருக்காகிலும் பயந்து உயிர்
பெற்றிருந்ததுண்டோ ? ஒருபெண்ணிடத்
தில்வைத்த ஆசைநோயானது, இப்போதிரா
வணனைக்கொன்றதென் றுலகத்தார் சொல்லு
வார்களேயாகில் என்னுடைய ஆண்மையான
து வியர்த்தமாய்ப் போய்விடுமல்லவோ! மே
லும் உன்னுடைய ஆசையா லின்னஞ் சிலநா
ள் கழியுமேயாகில், இந்தக் காமநோயானது
என்னுடைய ஆவியைக் கொள்ளை கொண்டு
போகும். அப்போது யாதொருபலனுமற்ற
நாய்ப்பிறவியையல்லவோ நானடையத்தக்க
து. அன்றியும் நான் ஆயிரம்பங்கதிகமாக
என்னனுபவத்திற் கண்டு தெளிந்திருக்கின்ற
இந்தக் காமியத்தைக்குறித்துச் சாஸ்திரக்கியா
னிகள் காமப்பகுதியென்று ஒருபிரிவையேற்
படுத்தி அக்காமப்பகுப்பைபத்தென்று சொ
ல்லி யிருப்பதும் பொய்யல்லவோ ! குற்றம
ற்ற நல்ல செல்வத்தைப்போலவும், அமிர்தத்
தினும் இனிமையாகயிருக்கின்ற சீதா ! இந்
த உலகத்திற்பிறந்த என்னையாதொருபிரயோ
சனமு மடையாதவனுக்கவோ ! நீ பெண்பி
றந்தாய். உன்னுடைய அழகுக் கீடுபடத்தக்க
என்னுடைய மானமானது என்னைக்கொல்ல,
நானுன்னை மறந்ததுபோலப்போய் இறந்தஉ
யிரானது பிழைக்கத்தக்க சஞ்சீவிமருந்தான
உன்னால், எப்போது மிறந்தும் பிழைத்தும்வ
ருகின்ற என்னுடைய அருமையை இங்கே அ
றியத்தக்கவர்க ளாரிருக்கின்றார்கள். முற்கா
லத்தில் தன்மீது மோகங்கொண்டுவந்த சுவர்
க்கலோகத்தரசனாகிய, இந்திரனைக்கூடிச் சுகி
த்திருந்த கௌதமரிஷியினுடைய பத்தினி
யான அகலிகையென்பவளுக்கு இந்த உலகத்
தில் கீர்த்தியில்லாமற் போய்விட்டதா ! இ
ல்லையே. அன்னம்போலொத்த மெல்லிய ந
டையையும், குயிலுக்குச்சமானமாகிய சொ
ல்லையுமுடைய பெண்ணணங்கே நீகேட்பயா
க, நான் உன்மேல்கொண்ட காமநோய்க்கு அ
ழகிய குமுதமலரையொத்த உனது செவந்த
வா யமிர்தமேமருந்தல்லாமல் அதை நீக்கிக்
கொள்ளுவதற்கான வேறொருமந்திரமும் ம
ருந்து முள்ளதோ ! என்று பற்பலவிதமாக
முறையமிட்டுக்கொண்டு ராவணனெழுந்துநி
ன்று நீலமலைகளுங்கண்டு நாணும்படியான
தன்னுடைய இருபதுகைகளையும், தலையின்
பேரில் கூப்பிக்கொண்டு ஒரு சூரியனைப்பத்
தாகப் பங்கிட்டதுபோலப் பிரகாசிக்கின்றப
த்துக்கிரீடங்களும், பூமியிற்படிய லோகமா
தாவாகிய சீதாபிராட்டியினுடைய தாமரைம
லர் போன்ற இரண்டு பாதங்களிலும் போய்
விழுந்தான். அப்போது பிராட்டியார் புலி
யைக்கண்ட மானைப்போலப்பயந்து நடுநடுங்
கி நீலோற்பலம்போல்ற கண்ணீராறாய்ப்
பெருகும்படியாக அழுதுகொண்டு சிலசொ
ல்லத்தொடங்கினார்.

என்னவென்றால், அடா பாவி ! நானுனை
க்குப் பச்சைநாவி, உனக்குப்பொல்லாதகால
ஞ் சமீபித்ததால் நாளையே போகப்போகிற
துன்னாவி. இப்போது நான் சொல்லுகிற
தைக்கேளென்று அங்கிருந்த ஒருசிறியதுரு
ம்பைப்பார்த்துச் சொல்லுகின்றார். ஓராவ
ணத்துரும்பே ? கற்பென்னும் பதிவிரதா
தயத்தைப் பூண்டிருக்கின்றவர்களை இகழ்ந்
துபேசுகிறதினால் பழிபாவ முண்டாகுமென்
பதைச் சற்றும் யோசித்தாயில்லையே ? உன்
னுடைய துண்டரீகமுள்ள நெஞ்சைப்பிளந்
தும் வஞ்சகரான உன்பந்துக்களுடனே நாச
மாய்ப்போகும்படிச் செய்யாவிட்டால் என்
னுடைய கற்பினிலைமைக்கும், தர்மதேவதை
யின் வல்லமைக்கும், என்னபெருமையுண்டா
கப்போகின்றது. தேவதாநிர்ணயப்படிக் கிவ்
வுலகில் வாழ்வுற்றிருக்கின்ற மாமிசதேகங்கள்
தோறும் உயிருமவற்றுக்கேற்ற நல்லுணர்வு
முண்டாயிருக்கின்றனவன்றோ! அதை நீ எவ்
வளவுமறியாயோ ! குகைபோன்ற உன்னு
டைய பிளந்தவாயினால் தகாதவார்த்தைகளை
ப் பேசக்கேட்டும் உன்னை நாசப்படுத்தாமற் சு
ம்மாயிருப்பதானால், நீதா னென்னசொல்ல
மாட்டாய், என்னசெய்யமாட்டாய், மேலும்சு
வர்க்கலோகத் தரசனாகிய இந்திரனையும், சத்
தியலோகவாசியாகிய பிர்ம்மதேவனையும், தி
ரிபுராந்தகனாகிய சாம்பசிவ மூர்த்தியையும்,
ஸ்ரீவைகுண்டபதியாகிய விஷ்ணுமூர்த்தியை
யும், அவரவர்களுக்குள்ள வல்லபங்களையும், நீ
பார்த்திருந்தும், நீ அவர்களோடு சண்டை
செய்தேன் செயம்பெற்றேனென்று மனப்
பால்குடித்துச் சொல்லுகின்ற உன்னுடைய
கட்டுக்கதைகளைச் சுட்டுவிடக்கடவாய், ர
ணக்களத்திற்குப்போய் அங்குண்டாண வீரர்
களையெல்லாம் பார்த்துவந்தே னென்றுஞ்
சொல்லுகின்றாயே ? அது உண்மையா யிரு
க்குமாகில் அவ்விடத்திருக்கின்ற என்னுயிர்
போன்ற நாயகராகிய சக்கிரவர்த்தித் திருக்கு
மாரர் தம்முடைய கோதண்டத்தை நாணே
றிட்டு உன்தலையைத் துணித்துவிடாம லிருப்
பாரோ ! ஆனால் அவருக்கு நீ பயந்தோடி
வந்து விட்டாய்போலக் காணப்படுகின்றது.
அன்றியும், இதுவரையில் நான் ஆகாரமென்
பதில்லாமலும், அபிமானத்தினால் உயிரைமா
ய்த்துக் கொள்ளாமலும், நாணமுற்று மிருந்த

வருந்தப் பட்டுக்கொண்டு உன் கண்ணெதி
ரே வாழ்வுற்றிருக்கிறேனென்று நீ நினைக்கப்
போகின்றாய். அப்படியல்ல நல்லொழுக்க
த்தையே ஆபரணமாகத்தரித்திருக்கின்ற நீ
லமலைபோன்ற அழகிய திருமேனியையுடை
ய புண்ணியவந்தரான என் நாயகனைக்காண்ப
தற்கும், போர்க்களத்தில் என்னுடையகொழு
ந்தனான இளையபெருமாளானவர் பின்னே
காவலாகநிற்க தம்மோ டெதிர்த்து வருகின்ற
உன்பத்துத்தலைகளையும், பற்றுக்களையும், சி
ன்னாபின்னப் படுத்திச் சிதறிப்போகவடித்து
வெற்றிபெற்ற பிறகு என்பத்தாவான கர்த்தா
வின் திருமுகதரிசனஞ் செய்வதற்கு மெ
ன்றே நீ நிச்சயமாக நம்பக்கடவாய். ஐயோ!
ராவணத்துரும்பே ? எனக்கும் என்னுடை
ய நாயகராகிய அந்தலோகாராட்டிரனுக்கும்
உடலிரண்டேயல்லாம லுயிரொன்றென்று நீ
உன்மந்தபுத்தியைநீக்கி யுணர்ந்து கொள்ளு
வாய், செந்தாமரை மலர்போன்ற கண்களையு
டைய ஒருநீலமலையானது, வில்லைப்பிடித்து
க்கொண்டு பார்த்தபார்த்த பேர்களுடைய ம
னத்தை வெட்கமடையும்படியாகச் செய்வது
போலவிளங்கும் பெருமைபெற்ற புருஷோ
த்தமர் என்றுபகரல்லவோ! அதைநீயோசித்து
ப்பாரென்றுசொல்ல, ராவணன்கேட்டுத் திடு
க்கிட்டு இருபதுகண்களிலும், அக்கினிச்சுவா
லையானது வீசும்படியாக யமனைப்போல அ
திக கோபங்கொண்டு, லோகமாதாவாகிய சீ
தா பிராட்டியைப்பார்த்துச் சொல்லுகிறான்.
ஓ பெய்கல்நாயகமே ! நீபுகழ்ந்துபேசுகி
ன்ற அந்தராமன் என்னைக்கொன்றுவிட்டுஉன்
னைமீட்டுக்கொண்டு போனபின்பு அவனுட
னுயிரொத்து வாழலாமென்று நினைத்திருக்கி
ன்ற உன்னெண்ணத்தை நான் பார்க்கின்றே
னென்று புன்னகைகொண்டுசொல்லி, இ
திருக்கட்டும். மின்னற்கொடிபோன்ற இடை
யையுடைய சீதா ! இந்தஉலகத்தில் உன்னின
த்தார்முதல் மற்றெவர்களாகட்டும், தேவர்க
ளாகட்டும், புனத்துழாய் மாலையைத்தரித்த அ
ந்தவிஷ்ணுவென்று நீசொல்லுகின்ற ராமனு
கட்டும், என்னுடனெதிர்ப்பார்களேயானால் அ
வர்களையெல்லாம் வேரோடு அதஞ்செய்து
போடேனோ! நீஇதை நாளையேகாணப்போகி
ன்றாய். முன்னமொரு குரங்குவந்து எதோ
பலுகிப்போன அந்தச் சொல்லைநம்பி, அவர்
கடலாரும் சமுத்திரத்தை யணையிட்டுக்க
ட்டி லங்கையைக்கிட்டி வளைத்துக்கொண்டா
ர்களென்று நீ மனமகிழ்ந்திருப்பாயேயானா
ல், நானுமென்னைச்சேர்ந்தவர்களும் என்ன
மூடர்களோ ? அந்த நினைவைமறந்துவிடு.

மேலும் என்முன்னாகத் தோன்றுகின்ற எப்ப
டிப்பட்ட வஸ்துக்களானாலும், அதுகளெல்லா
ம் விளக்கின்முன்வீட்டிற்பூச்சிபோ லழிந்து
போய்விடுமல்லவா ?. அதிகபராக்கிரமசாலி
களான வெற்றிபெற்ற சில ராக்ஷசவீரர்க
ளை அயோத்திக்கும், மிதிலாபுரிக்குப்போய்
அங்குண்டான உன்பந்துக்களையும், மாமிமா
ர்களையும், உன்னைப்பெற்ற அப்பன் ஜனகரா
ஜனையும், கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு
வரும்படியாகவும், அல்லவென்று அவர்கள்
எதிர்ப்பார்களாகில் அப்படிப்பட்டவர்க ளு
டைய தலைகளையறுத்துப் பச்சையுதிர மொ
ழுகும்படியாக என்னுடைய கண்முன்பாகக்
கொண்டுவரும்படியாகவும், ஆக்கியாபித்தனு
ப்பி யிருக்கின்றேன். என்றிப்படியாகப் பய
முறுத்தச், சீதாபிராட்டியார் இது என்னகா
லக்கேடா யிருக்கின்றது, நெருப்புக்குச் சம
மான என்னை மாயவஞ்சனைசெய்து கொண்டு
வந்து வைத்திருக்கின்ற சண்டாளர்களுக்கு
எந்தக்காரியந்தா னருமையாகப் போகிறதெ
ன்று, பற்பலஆலோசனைகளைச்செய்து பெரு
மூச்சுவிட்டு ஐயோ ! இங்கே இப்படியாக
வென்று என்தலையி லெழுதிய கபடனாகிய
பிர்ம்மதேவர் அங்கே என்மாமிமார் முதலா
னவர்களுக்கு மிப்படியே யெழுதியிருக்கமா
ட்டாரோ? ஆகையால் அவரும் நம்மிடத்தில்
நல்லகிருபையுடையவராகத்தா னிருக்கின்றார்
ஒருகாலத்திலும் தருமம் பொய்த்துப்போ
காதென்று உலகத்தார்சொல்லுவார்களே, அந்
தவார்த்தையும் பொய்த்துப்போகும் படிக்
குத், தருமமும் பொய்த்துப்போ யிற்றோ
வென்று, சீதாபிராட்டியார்கண்களில் நீர்தாரா
தாரையாய்ப் பெருகும்படியாகப் புலம்பிக்
கொண்டிருந்தார். அப்போது மகோதரன்
மருத்துவனென்பவனை ஜனகராஜனைப்போல்
ரூபிகரித்துக்கையிற் கயிறிட்டுக் கட்டிக்கொ
ண்டு அதிகவேகமா யோடிவந்து காலகோடி
விஷத்திற் கொப்பானவனும், தீக்கண்ணனு
மான ராவணனுக்கு முன்னே விடுத்தான்.
அதைச்சீதாபிராட்டியார்பார்த்து, இதைமாய்
கையென்றறியாதவராய் நெருப்பில் விழுந்த
தாயைக்கண்ட குஞ்சுபோலச் சகியாதவராகி
உடல்பதைத்துக் கைகளைநெரித்து முகத்தி
லிரண்டுகைகளாலும் மோதியறைந்துகொண்
டு நெய்சொரிந்த நெருப்பை மிதிக்கக்கூடா
மைபோலத்தமது தாமரைமலர்போன்றபாத
ங்களைப்பூமியில்படியவையாமல், பதைபதை
த்துஉள்ளும்புறம்புங்கொதித்துக்கீழேவிழுந்
து புலம்பத்தொடங்கினார். அதெப்படி யெ
ன்றால், ஓ தெய்வமே தெய்வமே ! சத்திய

மென்பது மறைந்துவிட்டதோ! என்னுடைய பதிவிரதாதர்ம்மமானது இந்தவுலகத்தைச் சுட்டுவிடுமே? இந்தவஞ்சகர்களாகிய ராக்ஷசர்களுக்குத்தானே ஆண்மையிருக்கத்தக்கது. மற்றவர்களுக்குக் கிடைக்கத்தக்க தல்லவோ! அதப்படியானல் நான் பிழைத்திருப்பேனென்று நம்பத்தக்கதோ! என்று புலம்பிய எம்மாதாவாகிய சீதாபிராட்டியார் அங்கே வந்திருக்கின்ற மாயாஜனகனைப்பார்த்து ஐயா, என் பிதாவே பிதாவே! பெரிய தவத்தைச்செய்து எல்லைப்பெற்று அருமை பாராட்டி வளர்த்த உமக்கு இப்போதென் பொருட்டு வந்த பொல்லாங்கு மிதுவோ! தர்ம்மமேஸ்வரூபமாகப்பெற்று எல்லாவுயிர்களுக்குந் தாயுந்தந்தையுமாகிவந்தமாதவசிரோஷ்டரோ! வந்த விருந்தினர்களுக்கு முன்னே யமுதளித்துப் பின்னுண்ட பாக்கியவானே! அளவற்ற நல்லதவங்களைச்செய்த என் அப்பனே! உனக்குச் சத்துருக்களாகவிருந்த எல்லாரையும் வென்று வெற்றிபெற்றிருக்கின்ற நீர், இந்த அற்பர்களாகிய ராக்ஷசர்கள் கையிலகப்பட்டுக்கொண்டது பூர்வம்செய்தமாதவசேஷமோ! இவ்வுலகத்தில் உன்னைப்போல யாகஞ்செய்தபேர்களு மிருக்கின்றார்களோ! மதுரமாகிய தேனொழுகுகின்ற வாடாதவெற்றிமாலையைத்தரித்த உத்தமனான என்னப்பனே! மகா பாபாத்துமாக்களாகிய இந்த ராக்ஷசர்களால் வச்சிராயுதத்திற் கொப்பாகிய உன்னுடைய தோள்கள்கட்டப்பட்டதென்ன அநியாயம். இதை இந்த பாபிஷ்டிக் கண்ணினாற் பார்த்திருந்தும், ஆவியைப் போக்காமலிருப்பது மென்ன ஜெனனமாகுமென்று பற்பலவாகச்சொல்லி, உயிரிழந்த சித்திரப் பிரதிமைபோல மூர்ச்சையடைந்து, ஆகாசத்திற்றோன்றுகின்ற மின்னற்கொடியானது பூமியில்வந்து படிந்ததுபோலச்சொர்ன்னமயமாகிய திருமேனியானது மண்படியும்படியாகப் புரண்டு செவந்த இதழையுடைய சீதாபிராட்டியார் வாய்திறந்து பெண்மயில்போல் அழுது புலம்பி, என்னைப் பாணிக்கிரகணஞ்செய்த என்பிராணநாதராகிய ஸ்ரீராமமூர்த்தியினுடைய அயோத்தியாபுரிக்கு, என்னும்வந்தவரல்லாத நீர் அடியேனைச்சிறையிருப்பில் காணவேண்டுமென்று நீருஞ்சிறைபட்டு வந்தீரோ! வேதவரம்பைக்கடவாதவமிசத்தவர்களுடைய சந்ததியிற்பிறந்த ஐயா மஹாராஜரோ! பலமுள்ளஇறகையுடைய கருடபகவான்மேல் வாஹனமாக ஆரோகணித்துவருகின்ற சாக்ஷாது ஸ்ரீயப்பதியானவர், தம்மை ஆசிரயித்தவர்களுக்கு மாயக்கட்டாகிய இந்த அற்பப்பிறவியை நீக்குவாரென்று புத்திமான்களெல்லாம் நிச்சயித்திருக்கின்றார்கள். இப்படியிருக்க, எல்சிறையை நீக்கும்படியான ஸ்ரீசக்கிரவர்த்தித் திருக்குமாரரை இன்னும் வரக்காணவில்லை, என்னிமித்தமாகக் கட்டுப்பட்ட உம்முடைய சிறையை நீக்கத்தக்கவர்கள் இந்த லோகத்தில் யாரிருக்கின்றார்கள். இந்தக் குணஹீனர்களிடத்தில் அதர்ம்மவழியான பகையைப்பெற்றீரோ! ஐயா, எதிர்த்து நின்று அம்புகள்பட்டு மாண்டு வீரசுவர்க்கம்பெற்றீரோயானாலும் பெருமை உண்டே! உலகத்திலுள்ள வீரத்தால் உயர்ந்த க்ஷத்திரியர்களெல்லாம் பரிகாசிக்கும்படி யானீரோ! அல்லாமலும் எந்நாளும் நிலைநிற்கும்படியான பாவத்திற்கு மூள்ளாய்விட்டீரோ! இந்த நஷ்டம் உம்மாலுண்டாயிற்றென்று நினைக்கலாமென்றால், உம்மாலல்ல, பாபியாகிய என்னைப் பெண்ணாய்ப்பெற்றீரோ அதனாலுண்டாயிற்று. இப்படிப்பட்ட பேறுபெற்றவர்கள் நம்மையல்லாமல் யாரிருக்கின்றார்கள், நானிறந்துபோகாம லுயிருடனிருந்து சத்துருக்களையெல்லாம் நாசமடையக்கண்டபோதிலும் நானொருசுகமும் கண்டவளுமல்ல. உங்களெல்லாரையும் வருத்தப்படுத்தி நாசமாக்கிவிட்டு அயோத்தியின் ராஜவமிசங்களுடைய கீர்த்தியையெல்லாம் பிடாரியைப்போல உண்டுவிட்டு, என்னுயகனைக் கொல்லுங்களென்று இந்த லங்கையி லொருகொடியபகையைச் சம்பாதித்துவைத்து என்பிதாவாகிய உம்முடைய மலைபோலத்திரண்ட தோள்களையும், பாசத்தாற் கட்டியிருக்கவுங்கண்டேனே! இப்படி புகுந்த வீட்டிற்கும், பிறந்த வீட்டிற்கும், அழியாத துக்கத்தைக் கொண்டுவந்து விட்டவள் நானல்லவோ! நானென்ன சாமானியமானவளோ! கொஞ்சமாவது என்னிடத்திற் கிருபையென்பது துண்டோ! இனிநானுயிருடனிருக்கலாமோ? அப்படிச் செத்தபோதிலுமென்ன, அளவில்லாத உயர்ந்த யாகங்களை முன்செய்து என்னை வேண்டுமென்று பெற்றுக் காப்பாற்றிக் கரையேற்றின என் பிதாவாகிய உம்மைக்கைவிலங்கிட்டுப் பற்றிஇழுத்து உம்முடைய மேனி புழுதியிற் புரளுகிறதைக்கண்டேன். அல்லாமலும், என்னைமணம்புரிந்து செய்யுஞ்சடங்குகளை முடித்து, மந்திர விதிப்படி பாணிக்கிரஹணம்பண்ணின பிராணநாயகருக்கு மிந்தத் துன்பத்தைச் சொல்லாமலே முடிந்துபோகின்றேனே! தெரியாது, ஐயோ என்தாயே! எனக்குப் பெரியோர்களாயிருக்கில்றவர்களே! என்னருமையான உயிர்போன்ற தங்கைமார்களே! என்

னைப்பெற்றெடுத்த நம்முடைய தகப்பனுருக்
கு இந்தத் துன்பம்வந்ததை நீங்கள்கொஞ்ச
மாவது இமேலாகித் துணர்ந்தீர்களில்லையோ ?
அல்லது உங்களுக்கு யேதேனும் துன்பம்
வந்துவிட்டதோ ? அல்லது கூடவேநீங்களும்
வந்து வழியிலேறந்துபோனீர்களோ ? இந்தச்
சண்டாளர் மேருமலைக்கு மூயர்வாகப்போய்
ஆகாசமார்க்கமாய் வந்தபோதிலும், அகழாற்
சூழப்பட்ட காவலையுடைய மிதிலாபுரியினு
ள்ளே நுழைகிறதற்கு முடியாது. அப்படிக்
கில்லாமல் ஒருவேளை போர்க்களத்தில் பிடித்
துக்கொண்டு வந்துவிட்டாலும், வேறேயொ
ரு மோசஞ்செய்து என்னைப்போலக் கொண்
டுவந்துவிட்டாலும், ஜனகமகாராஜனை ராக்ஷ
சர்கள் பிடித்து லங்கைக்குக் கொண்டுபோய்
விட்டார்களென்று தெரிவிக்க அநுமானிருக்
கிறனு ? உங்களுக்கு யாரறிவிக்கப்போகிறூர்
கள். சத்தியமாக இந்த ஜனகமகாராஜனைக்
கொண்டுவந்த சண்டாளர்கள் சத்தர்மத்தைச்
செய்து வல்லமைபெற்றிருக்கின்ற என்மை
த்துனராகிய பாதமகாராஜனையும், அவர்க்கி
ளைய சத்துருக்கமகாராஜனையும் கொண்டுவரு
கிறதற்குச் சந்தேகமில்லை. ஐயோ ? அவர்
கள் பிறந்து ஒருசுகமுங்காணுத குழந்தைக
ளாச்சே ஐயோ தெய்வமே ? விரதங்களை
யநுஷ்டித்து தர்ம்மமார்க்கத்தில் நிலைநிற்கி
ன்றவர்களுக் குண்டாகிற நன்மை யிதுதா
னே ? இதோ வானரசைனியங்கள் சமுத்திர
த்தை யணையிட்டதென்றும், சமுத்திரத்தைத்
தாண்டிவந்து லங்கைக்கோட்டைமதிளை முற்
றுலகைப்போட்டுக்கொண்டதென்றும், சத்து
ருக்களைச் சம்ஹரித்ததென்றும், சிலர்வந்து
சொன்ன வார்த்தைகளைக் கேட்டுக் கேட்டு
அடைந்திருந்த சந்தோஷத்தை வேறொரு
மோசத்தைச்செய்து சிதைத்துவிட்டது என்
ஊழ்வினையே யென்று பெருமூச்சு விட்டு
மனந்திகைத்து மூர்ச்சையடைந்து மறுபடி
யும் மூர்ச்சைதெளிந்து சீதாபிராட்டியாரழு
துகொண்டிருக்கும்போது, தேவர்களுடைய
வல்லமைகளையெல்லாம் பயத்தா லொளிக்கச்
செய்யத்தக்க வெற்றிவாளைக்கையிற்பிடித்துக்
கொண்டிருக்கின்ற துராத்துமாவாகிய இரா
வணன் அதிகமனமகிழ்வுடனே சீதாபிராட்டி
யாரைக் குளிர்ந்தமுகமாய்ப் பார்த்து இவள்
அதிக துக்கத்தைச் சகிக்கும்படியான கடின
இருதயமுடையவளல்லள். இவளையுஞ் சமா
தானப்படுத்தித் தானும் தன் எண்ணப்படி
சந்தோஷிக்கலாமென்று தன் துன்மதியாலெ
ண்ணிச் சிலவார்த்தைகள் சொல்லுகிறான்.—
ஹே சீதாய், உன்னைச்சேரவேண்டுமென்கிற

ஆசையால் நினைக்கிறதற்குஞ் சகிக்கமுடியா
து இந்தப் பெரியதுன்பத்தைச் செய்துவிட்
டேன். இந்தத் தப்பிதத்தைப் பொறுத்துக்
கொள். இனி மிதிலாபுரியிலுள்ளவர்களை வே
றறக்கொல்லுகிறதில்லை. இவனிறந்தாலு மிவ
னுக்குமறுபடியும் பிராணனுண்டாகச்செய்கி
றேன். அம்ஸபக்ஷிக்குச்சமமாய் நடக்கின்ற
சீதையே ! தேவலோகமானாலும், இந்தப்ப
தினாலு லோகமானாலும், இந்தப்பெரியலோக
மூன்றிலுள்ள எல்லாரசாக்ஷியேயானாலும், இ
ந்த வெற்றிமாலையையணிந்த உன்பிதாவாகிய
ஜனகராஜனுக்கே சொந்தமாக்கி விடுகிறேன்,
என்றால் சஹிக்கக்கூடாத காமநோயை நீக்கி
விடுவாயேயானா லுன்னையே தெய்வமாகவண
ங்கி உன்னுத்திரவின்படி நடக்கிறேன். அப்
படியல்லாமல் இந்த லங்காபட்டணத்தை இ
வனுக்குக் கொடுத்துவிட்டு வேறேயோரிட
த்தி லிருக்கும்படி நியமித்தாலும், அப்படி
யே இருக்கின்றேன். எல்லா ஐஸ்வரியங்களை
யும், கொடுக்கும்படியான சங்கநிதிமுதலிய
மூன்று நிதியங்களையுங்கொடுத்துவிடுகிறேன்.
குபேரனிடத்தில் நான் ஜெயித்துப் பறித்துக்
கொண்ட புஷ்பகவிமானத்தையும், பொதுவா
யேறும்படிக் கொடுக்கின்றேன். தேவர்களை
யெல்லாம் வெற்றிகொண்ட இந்த வாளாயுதத்
தை வேண்டுமென்றுகேட்டாலும், கொஞ்சமா
வது தடையின்றிக் கொடுத்துவிடுகிறேன். இந்
திரன் சூட்டிக்கொண்டிருக்கிறதேவசாம்பிராச்
சியகிரீடத்தை அந்தத்தேவர்களெல்லாம், இவ
னை வணங்கும்படியாக மந்திரவிதிப்படியே
இவனுக்குச்சூட்டித்தேவஸ்திரீகளெல்லா மிவ
ளுக்கு அடிமைவேலைசெய்யும்படியாக நானு
ம் இவனிட்ட ஊழியங்கேட்டு நிற்கின்றேன்.
உன்னுடைய அழகிய பவளம்போன்ற திரு
வாயால் கிருபையாக ஒரு சிறுவார்த்தைசொ
ன்னாலும்போதும். என் தகப்பனைப்பெற்ற
பாட்டனைப்பெற்ற மூப்பாட்டன், இந்தலோ
கங்களையெல்லாம், சிருஷ்டித்தபிர்ம்மதேவர்
அவர்தாமேவந்து கேட்ட வரங்களையெல்லாங்
கொடுப்பார். மற்றதேவர்களெல்லாம் கிங்க
ரர்களாய் அடிமைசெய்வார்கள் தேவாமிர்தத்
தோடுபிறந்த லக்ஷ்மியே நீயல்லாமல் அவ
ள் வேறேயில்லை அப்படியிருந்தாலும், அவ
ளும் உனக்கு அடிமைசெய்வாள் தேவர்களு
ம், அறிவாளரும், மற்றபெரியோர்கள் யாவ
ரும் தாமேயோடிவந்து உம்முடையபிதாவா
கிய இவருடைய பாதத்தில் விழுந்து சொன்
ன ஏவலைச்செய்வார்கள். சித்திரப்பாவையொ
த்த நீ இவனுக்குப் பெண்ணாய்ப் பிறந்ததி
னுல் இத்தனைநா ளொருபிரயோசனத்தையும்

காணவில்லை இன்னமும் அப்படி யிராமல்
இப்போதே எல்லாநன்மையையும் இவரடை
யப்போகிறார். இந்த மூன்றுலோகச்செல்வ
த்தையும், உன்னியமனப்படி யாருக்குவேண்
டுமோ ! அவர்களுக்குக் கொடுப்பாய், என்
நெஞ்சிலுள்ள இச்சையைமாத்திரம் நிறை
வேற்றவேண்டுமென்று, ராவணன் சொல்லக்
கேட்டுச், சீதாபிராட்டியார் எதிரேகிடக்கிற
அந்தத் துரும்பைப்பார்த்து, அடா துன்மா
ர்க்கத்துரும்பே ? இந்த ஐஸ்வரியங்களை
யெல்லாம் பெறப்போகிறவன் இந்திரனுகு
ம், உங்கள்பொய்வாழ்வான இந்த லங்காரா
ஜ்ஜியமுழுவதையும்,விபீஷிணாழ்வான் பெறப்
போகிறான். தேவதேவராகிய ஸ்ரீசக்கிரவர்த்
தித் திருக்குமாரருடைய திருக்கரத்திலுள்ள
திவ்வியாஸ்திரங்கள் உன்மார்பைச் சின்னபி
ன்னப்படப் பிளக்கப்போகின்றதுகள். அ
ந்த நீலமேகஸ்யாமளரூபரான ஸ்வாமியி
னுடைய திருவடிகள் வைக்கிறதற்கு என்த
லை உரிமையா யிருக்கின்றது. உன்னைப்பா
ர்த்துச் சிரித்துக்கொண்டே சக்கிரவர்த்தித் தி
ருக்குமாரருடைய நாம முத்திரித்திருக்கின்
ற பாணங்கள் உன்மார்பில்புகுந்து சல்லடை
க்கண்களாய்த் தொளைக்கப் போகின்றன.—
அடாதுரும்பே ? உனக்குத் தகுந்தபுத்தி
சொல்லப்போகிறவைகள் ஸ்வாமியின் கோத
ண்டத்திற்பூட்டிய நாணிலிருந்து மலைகளெல்
லாம்நடுங்கிப் பொடிப்பொடியாய் உதிரும்
படிப் பிறக்கப்போகிற திவ்விய நாணோசைக
ளே ? அடாதுரும்பே ? யாவருஞ்சொல்
லிக்கொள்ளுகிறவார்த்தையு மொன்றிருக்கின்
றது. அதைச்சொல்லுகிறேன்கேள். காக்கை
கள் தங்கள் மூக்குகளால் உன்கண்ணைக்குத்தி
க் கிளறும்படியாகச், செந்தாமரை மலர்போ
ன்ற கண்களையுடைய சுவாமியின் கோதண்ட
த்திலிருந்து புறப்படப்போகின்ற பாணங்க
ள் வரப்போகிறதுகள். பிறகுஉன் அழகுள்ள
மாலைக ளணிந்திருக்கின்றமார்பை எக்களித்
துக்கொண்டு புலால் நாறுகின்ற பிசாசங்க
ளெல்லாம் தழுவப்போகிறதுகள். எங்கள் சு
வாமியினுடைய நாமமுத்திரித்திருக்கிற பல
ம்பொருந்திய திவ்வியாஸ்திரங்களினலேகோ
ரதந்தங்களையுடைய பெரியவாய்களோடுங் கூ
டிய உன்தலைகள் சின்னபின்னப்பட்டுச் சித
றி நீயு மாண்டுபோனாயென்கிற சமாசாரத்
தை திவ்வியதுளசி மணிமாலிகாதரனை என்
அருமைப்புத்திரன் ஆஞ்சநேயன்வந்து சொ
ல்லப்போகிறான். அதைத்தான் நான்விரும்
பிக் கேள்விப்படப்போகின்றேன். கேள்வி
ப்பட்ட பேர்களுக்கெல்லாம் சந்தோஷகர
மாயிருக்கப்போகிறது. ரணகளத்தில் உன்
மகன் இந்திரஜித்துவினுயிரை எங்களிளைய
பெருமாள் பிரயோகிக்கப்போகிற பாணங்க
ள் உண்டுவிட,அவனுடலை நாய்கள்தின்ன, ஐ
யோ ! என்மகனிறந்தானே யென்று நீபுல
ம்பி ஓவென்றலறியழுகிறதை எல்லாருங்கே
ட்டுச் சந்தோஷிப்பட்டுச் சொல்லுகிறவார்த்
தையை நீகேட்கப்போகிறாய். அடா ஈனஜன்
மத்துரும்பே ? என்று சீதாபிராட்டியார்
சொல்லக்கேட்ட மஹாதுஷ்டனை ராவண
ன் அக்கினி பறக்கும்படிக் கண்களைவிழித்து,
பலம்பொருந்திய தன்கைகளைமுறுக்கி, இத
ழில் பல்லழுந்தக்கடித்துச் சீதையின்மேற்
பாயும்படி யோடினபோது, துஷ்டமந்திரி
யாகிய மகோதரன், ராவணனைத்தடுத்துத் த
ன்தகப்பன் வேண்டிய புத்திசொன்னு வி
தைவாள், நீர் கோபிக்கவேண்டாமென்று ச
மாதானப்படுத்தத் திரும்பிவந்து அங்கிருந்த
ஆசனத்தின்மீது உட்கார்ந்தான். பின்பு உ
யிர்போனவனைப்போலத் தரையில்விழுந்து
கிடந்த மாயாஜனகன்சீதாபிராட்டியைப்பார்
த்து, அம்மா ! நீ இந்தராவணன் இஷ்டப்
படி இசையாவிட்டால் என்னையும், என்குலத்
தையும், நீயே கொன்றுவிட்டவளாகிறா யென்
றிப்படிப்பட்ட சிலவார்த்தைகளைச் சொல்லத்
தொடங்கினான்.

அம்மா சீதாய், தாமரைப் புஷ்பத்தின்
மேலிருக்கின்ற சரஸ்வதியும்,தன்னை அடையும்
படிவிரும்பி முயல்கின்ற எல்லாருக்கும் உரி
யவளாக விருக்கிறபடியினலே யல்லவா ! அ
வளுக்குப் பொதுமகளென்று பெயருண்
டாயிருக்கின்றது. இது உனக்குத் தெரியா
தா ! பாவியாகிய நான் பெற்றபெண்ணே!
உன்னிமித்தமாக என்னுயிர்போவது, உன
க்குநல்லதோ ! சிறையிலகப்பட்டு வருத்த
ப்படுகிற நீதேவர்களுக்கெல்லாம் ராஜனான இ
ந்தராவணனுக்குப் பட்டபத்தேவியா யிரு
ப்பது. உனக்குப் பொல்லாததோ ! என்
னை என்பந்துக்களுடனே மிகுந்த ஐஸ்வரிய
த்தை அனுபவிக்கும்படி உயிர்வாழச்செய்து
உன்னையும், இந்தக்கொடிய சிறையிலிருந்து
ம் விடுவித்து இன்பமடையச் செய்யக்கட
வாய் என்தாயேயென்று சீதாபிராட்டியாரு
டைய திருவடிகளுக்கருகே வீழ்ந்து, இடியு
ம்உதிரும்படி ஓவென்றலறுவதைக்கேட்டுச்,சீ
தாபிராட்டியார், அரிகரீ சதுமுக பஞ்சமுக
தெய்வங்களுக்குத் தெய்வமே ! என்றுசொல்
லித் தமதிரண்டுசெவியையும் கெட்டியாய்மூ
டிக்கொண்டு புழுங்கிப் பெருமூச்சுவிட்டு, உ
யிர்சோர்ந்து அழுது மிகுந்த கோபத்துட

னே தர்ம்மிஷ்டரான என்பிதா ஜனகராஜா!
நீதியானவார்த்தை சொல்லுவாரோ யல்லாமல்,
உயிரை இச்சித்து இப்படிப்பட்ட வார்த்தை
களைச் சொல்லமாட்டாரோ! இது என்னவிபரீ
தமென்றுபயந்து,கிளியைப்போல வாய்குழ
றிச் சிலமொழிகள் சொல்லுகின்றார். தர்ம்ம
ம் அழியவும், முறைமை மாறவும்,க்ஷத்திரியவ
ம்சத்திற்கடுத்த வீரதன்மை நாசமாகவும், ச
த்தியகுலைவும், நிந்தைஉண்டாகவும், வே
தசாஸ்திர நியமம் க்ஷீணித்துப்போகவும்,
ஆசாரம் பிழைபடவும், தேவர்களும், முனி
வர்களும், சம்மதித்துவந்த புகழ்நீங்கவும், இ
ப்படிப்பட்ட துர்வார்த்தையைச் சொன்னு
ய். நீ என்பிதாவாகிய ஜனகராஜனுவாயோ!
தங்கள் வம்சமெல்லாம் அழியநேரிட்டாலு
ம், தங்கள்தங்களுரிமையானவாழ்க்கை க்ஷீணி
த்துப்போனாலும், நெஞ்சைப் பிளக்கும்படி
அக்கினியைக் கக்கிக்கொண்டு வேலாயுதம்வந்
து சின்னாபின்னப் படுத்தின போதிலும்,
பெரியோர்கள்சொன்ன ஆஜ்ஞையின்படிவா
ழ்வார்களேயல்லாமல், முறைமைகெட்டு அத
ர்ம்மிகளாய்ப் பிழைக்கிறசண்டாளர்களுக் குட்
பட்டு வாழ்கிற க்ஷத்திரியர்களு முண்டோ!
ஐயோபாவம், நீயும், உன்பந்துக்களும், இந்
தப்பூலோகமும், அழிந்துபோனாலும், நான்மு
றைமைகெட்டு உயிர்வாழ்ந்திருப்பேனு? வ
ச்சிரமலைக்குச் சமமான பலமுள்ள திருத்
தோளினிடத்தில் சுதரிசன ஆழ்வானைத்தாங்கி
ய ஆயிரந்திருநாமங்களையுடைய சாக்ஷாது
ஸ்ரீயப்பதியாகிய ஸ்ரீராகவபிரானுக்கு அநந்
நியசேஷமாயிருக்கிற நான் என்னுயிரைக்கா
க்கும்பொருட்டு இந்தநாயையும் மறந்தாவ
து கடைக்கண்ணாலேனுந் தொடுவேனு! அந்த
ஸ்ரீகோதண்டபாணி யல்லாமல் அன்னியபுரு
ஷர்க ளென்னருகேவந்தால் விளக்கில்விழும்
விட்டிற் பூச்சியைப்போல மாண்டுபோகமா
ட்டார்களோ! இராஜசிம்ஹத்துடன் வாழ்
ந்திருக்கின்ற பெண்சிம்ஹம் சலதாரைச்
சேற்றைத்தின்று சீவிக்கின்ற ஒரு சிறுநரிக்கு
ட்டியோடும் வாழ்ந்துகொண் டிருக்குமோ!
இவன்நாயினுங் கடைப்பட்டவனுச்சே? நல்
லது நீ எனக்குத்தகப்பனுவாயே? ஆனபோ
து வெற்றிமாலையைபணிந்த வீரசிகாமணியா
கிய என் ஸ்வாமியினுடைய கோதண்டத்து
க்குப் பல்லாண்டுகூறி அந்தவில்லால் நாம் இ
ருவரும் மீட்கப்படுவோமானுல் மீளுவோம்.
மீட்கப்படாவிட்டால் பிராணனை விட்டுவிடு
வோம், நமக்கென்ன குறைவந்துவிட்டது. அ
ப்படிக்கில்லாமல் தகாதசொல்லைச் சொன்ன
வனென்று ஒரு நிந்தைவார்த்தையைத் தே
டிக்கொண்டா யென்று, சீதாபிராட்டியார்
சொல்லக்கேட்டு, ராவணன் அப்படியா ஆன
தாகட்டும், இனிநடக்கிறபடி நடக்கட்டும், இ
தோ உன்கண்முன் னிற்கின்றனே? இவன
ல்லவே? உன்னைப்பெற்ற ஜனகராஜன். இந்
தக்ஷணத்தில் இவனைக்கொன்று உயிர்குடித்
து விடுகிறேனென்று தன் உடைவாளையுருவி
க்கொண்டான். அப்போது சீதாபிராட்டியா
னவர் அந்தத் துரும்பைப்பார்த்து, அடா து
ரும்பே! நீ என்னையுங் கொல்லப்போகிற
தில்லை, அல்லாமலும், இவனையுங் கொல்லப்
போகிறதில்லை, இப்போது நீயுஞ்சாகப்போ
கிறதில்லை, இந்த உலகையும் அழிக்கப்போ
கிறதில்லை, கொல்லுந்தொழில் உங்களுக்குண்
டாகுமா! நானிந்தத்துன்பத்தை நீங்கி அ
ழியாதகீர்த்தியை யடையப்போகிறேன், நீ
யோ! என்பிராணநாயகர்விடுந் திவ்விய
பாணங்களால் உன்பந்துசகிதமாய்க் கொல்
லப்படப் போகிறுயென்று, சீதாபிராட்டியா
ர் சொன்னார். அப்போது மகோதரன் ரா
வணனைப்பார்த்து, தேவைஸ்வரியமுள்ள திரி
லோகநாயகனுன, ஹே ராவணேஸ்வரா! இ
ந்த ஜனகன்மே லென்னதப்பிதம் இவனு
லானமட்டும் வேண்டினனே? இவனைக்கொ
ல்லுகிறது உமக்கொருலக்ஷியமோ! நமக்
குப்பகையாய் வந்திருக்கின்ற அந்த ராமல
ட்சுமணர்களை ஜெயித்துவிடுவோமானு லிந்
தச்சீதைக் கப்புறம்போக்கடி யெங்கே இப்
போது தகப்பனைக்கொன்றுல் அதைநினைத்
துக்கொண்டு இவள் எப்போதும் துன்பப்ப
ட்டுக் கொண்டிருப்பா ளல்லவாவென்று தடுக்
க, ராவணன் கோபமாறினவனைப்போல அ
ங்கிருந்த ஆசனத்தின்மீது உட்கார்ந்த உட
னே மலைபோலுயர்ந்து வளர்ந்தகும்பகர்
ணன் ஸ்ரீராமபாணத்தால் இறந்தானென்
று வானரவீரர்கள் கர்ஜ்ஜித்துச்சொன்ன
சப்தமானது தேவர்களுடைய ஆனந்தகோ
ஷத்துடனே வந்து ராவணன் செவியில் நு
ழைந்தது. அப்படிவந்து நுழையவே ராவ
ணன் தம்மோடு வேறுபட்ட தேவலோகத்தா
ருக்கும், வானரசேனைகளுக்கும், பலம்அதிகரிக்
கிறதற்குக் காரணம் வேறொன்றுமில்லை. அந்
தரணக்களத்தில் நிற்கின்ற அந்தஇரண்டுமனி
தர்களுடைய வில்லிற்பிறந்த நாணோசையின்
தகுந்தவல்லமையே யென்பது எனக்கு நன்
ருய்த் தெரிந்திருக்கின்றது. என்தம்பியாகிய
கும்பகர்ணனுக்குஉதவியில்லாமல் தனித்திரு
க்கும்படியான சமயம்நேரிட்டுவிட்டதென்று
மனதில்துக்கமடைந்தான். அந்தச் சமயத்தில்
தோற்றுப்போன ராக்ஷசசேனையைக் கடலிற்

ளையாக்கிவிட்டுப் பறந்துவருகிறவனைப்போல ஒருதூதன்வந்து, ராவணன் செவியில் மெள்ள உம்முடையதம்பி கும்பகர்ணமகாராஜர் வரிசை வரிசையாக வானரவீரக் கடலையெல்லாம் சிதறடித்துவிட்டபின்பு, அவனைராமன் தன்னுடையபாணத்தால்கொன்றுவிட்டானென்றுசொன்னான். அதைக்கேட்டு ராவணனானவன் பரிவேடத்துடனே கூடித்தோன்றுகின்ற சூரியனைப்போல, வெற்றிமாலையைத் தரித்திருக்கின்ற பத்துக்கிரீடங்களும், தரையில் விழுந்துருளப் பூமியில் வேரூன்றிநின்றமராமரமானது தன்பருத்த பலகிளைகளுடனே வேர்பறிந்து மண்மேல்விழுவதுபோலத் திடூரொன்று வீழ்ந்து, ஒருவரையொருவர் பிரிகிறதென்ற துன்பந் தாங்கள் பிறந்தநாள் முதல் இன்றுவரையிலும் ஒருநாளுமடையாமல் உயிரொன்றும், உடலிரண்டுமாய்ப் பிரியாதிருந்தவன் இன்றைக்குத் தன்னிமித்தமாகத் தம்பி இறந்துபோனானென்று அறிவுமயங்கிப் பரவசப்பட்டுசமஸ்தலோகங்களும்,செவிடுபடும்படிப் புலம்பத்தொடங்கினான்.

கவி.

தம்பியோதானவராந் தாமரையின்காடுழக்கும், தும்பியோநான்முகத்தோன் சேய்மதலைத்தோன்றலோ, நம்பியோவிந்திரனை நாமப்பொறிதுடைத்த, எம்பியோயானுன்னையிவ்வுரையுங்கேட்பேனோ ..............(௧)

மின்னிலையவேலோனே யானுன்விழிகாண, நின்னிலையூழென்றெனுயிர்பேணிநிற்கின்றேன், உன்னிலைமையீதாயினோடைக்களிறுந்திப், பொன்னுலகமீளப் புகாரோபுரந்தரனார் ................................ (௨)

வன்னெஞ்சாநீயென்னை நீத்துப்போய்வானடைந்தாய், இன்னஞ்சிலரோ டொருவயிற்றின்யார்பிறப்பார்,மின்னஞ்சுவேலோய் விழியஞ்சிவாழ்கின்றார், தந்நெஞ்சுதாமே தடவாரோதானவர்கள் ........................... (௩)

கல்லன்றோநீராடுங்காலத்துக்காறேய்க்கும், மல்லொன்றுதோளாய் வடமேருமானுடவன், வில்லொன்றுநின்னை விளிவித்துளதென்னும், சொல்லன்றோவென்னைச் சுடுகின்றதுதோன்றால் .................................. (௪)

மாண்டனவாஞ்சூலமுஞ் சக்கரமும்வச்சிரமும், தீண்டினவோவொன்றுஞ் செயலாற்றாவான்றெறித்து, மீண்டனவாமானுடவன் மெல்லம்புமெய்யுருவ, நீண்டனவாமின்னமுய்யநின்றாராந்தோணோக்கி.................... (௫)

நோக்கறவுமெம்பிமார் மாளவுநொய்திலங்கை, போக்கறவு மாதுலன்றன் பொலிறவுமென் பின்பிறந்தாள், மூக்கறவும் வாழ்ந்தேனொருத்திமுலைகிடந்த,எக்கறவாலின்ன மினோனுவுனையிழந்தும்.................. ... (௬)

தன்னைத்தான்றம்பியைத்தான் றானைத்தலைவனைத்தான், மன்னைத்தான் மைந்தனைத்தான் மாருதத்தின்காதலைத்தான், பின்னைக்கரடிக்கிறையைத்தான்பேர்முடித்தாய், என்னத்தான் கேட்கிலே னென்னானவாறிதுதான்...... (௭)

எழைமகளீ ரடிவருடவீர்ந்தென்றல், வாழுமணிபரங்கிற்பூம்பள்ளிவைகுவாய்,சூழுமலகைத் துணங்கைப்பறைதுவைப்பப், பூழியணைமேற்றுயில்றனையோபோர்க்களத்தே(௮)

செந்தேன்பருகித் திசைதிசையு நீவாழ, உய்ந்தேனினியின்று நானுமுனக்காவி, தந்தேன்பிழையேன் றனிப்போக்கத்தாழ்க்கிலேன், வந்தேன்றொடர மதக்களிறே வந்தேனால்.

வசனம்.

ஐயோ ? தம்பீ கும்பகர்ணா ! தானவர்களாகிய தாமரைக்காட்டை மிதித்து நசுக்கிவிடும்படியானமதயானையே! பிரம்மபுதல்வருடையகுமாரனுக்குப் பிள்ளையாகப்பிறந்த புத்திரமணியே! அரக்கர்குலபுருஷசிரேஷ்டனே! தேவேந்திரனுடைய பெயரைச் சுவடு தெரியாமல் மறைய அடித்தஎன்பின்பிறந்தவனே? நானுன்விஷயத்தி விந்தவார்த்தையுங்கேட்டுச் சகிப்பேனோ ? இவ்வடிவாய் மின்னலைப்போற் பிரகாசிக்கின்ற வேலாயுதத்தையுடையவனே ! நீ இப்போதடைந்த நினதுநிலையாகிய மரணத்தை உன்கண்முன்பாக நானடைதல் முறைமையென்றிருந்தேன். அப்படிப்பட்ட நான் இனி உயிர்வைத்துக்கொண் டிருக்கமாட்டேன். உன்னுயுள் நிலை இப்படியாய்விட்டால் தேவேந்திரனார் ஐராவதயானையை நடத்திக்கொண்டு இனித்தம்முடைய சுவர்க்கலோகத்திற்கு மறுபடியும்போய்ச் சேரமாட்டாரோ?அப்பா தம்பீ கும்பகர்ணா! கடின இருதயத்தையுடையவனாகி என்னைவிட்டுவிட்டுநீ மாத்திரம்போய் வீரசுவர்க்கமடைந்தாய்.இன்னொருதரம் நம்மில்ஒருதாய்வயிற்றில்யார்பிறக்கப்போகிறார்கள். மின்னலுமொளியில்தோற்றுவிடத்தக்க வேலாயுதத்தையுடையவனே ! உன்கண்முன்வரப் பயப்பட்டு உயிர்வாழ்ந்திருந்த தானவர்கள் எல்லாம் இனித்தங்க ளிஷ்டப்படி எல்லா இடங்களையும் கடிதிற் பிடித்துக்கொள்ளமாட்டார்களா ! மல்லயுத்தத்தில் தேர்ந்த தோளையுடையானே! நீஸ்நாநஞ்செ

ய்புங்காலத்தில் உன்காலைத்தேய்க்குங் கல் மே
ருமலையல்லவா? உன்னை ஒருமனிதனுடையவில்
லானது கொன்றுவிட்டதென்று மிந்த அற்
பச்சொல்லல்லவா எமது அரசனே என்னைச்
சுட்டெரிக்கின்றது. ஆயுதங்களிலெல்லாம் சி
றந்திருக்கின்றவைகளான சிவன்கைச்சூலமும்,
விஷ்ணுவின் சக்கரமும், இந்திரனுடைய வஜ்
ஜிராயுதமும், உன்மேல்வந்த காலத்தில் உன்
னைத்தொட்டனுகளா! ஒன்றுஞ் செய்யமாட்
டாமல் ஆகாசத்திலேயே தெறித்து மீண்டு
போய்விட்டனுகளே! அப்படிக்கிருக்க ஒரு
அற்பமனிதனுடைய மெல்லியஅம்பு உன்மீத
கத்தினுருவித் தடாரித்து விட்டதா! தங்கள்
தோள்வலியைப் பார்த்துங்கொண்டு அவர்
கள் பிழைத்திருக்கிறார்களாம். என்தம்பியார்
பார்க்கிறதற்கு மில்லாமல் மாண்டுவிடவும்,
க்ஷணத்தில் இந்த லங்கையை அவர்கள் கைப்
பற்றிக்கொள்ளவும், என்மாமனுகிய மாரீச
னிறந்துபோகவும், என்தங்கையாகிய சூர்ப்ப
நகை மூக்கிழந்துபோகவும், நான்மாத்திரம்
ஒருபெண்ணினுடைய போகத்தையிச்சித்து
அந்த ஆசையால் உன்னையிழந்தும், இன்ன
மிருக்கமாட்டேனு? அந்த ஸ்ரீராமனையும்,
அவன் தம்பியாகிய லக்ஷ்மணனையும், அந்தக்
குரங்குப்படைக்குத் தலைவனுன நளனையும்,
அப்படைக்கு ராஜனுன சுக்கிரீவனையும், அவன்
மகனையும், வாயுபுத்திரனுன அனுமானையும்,
இன்னம் ரேடிக்கிறைவனுன சாம்புவனையுங்
கொன்று, அவர்கள் வேலா மாய்த்துவிட்டா
யென்று நான் கேட்காமல், இப்படிக்கேள்
விப்பட்டேன். இதென்ன காரியமாய்முடி
ந்தது? அப்பா கும்பகர்ணு! இலங்கைப்
பெண்கள் கால்பிடிக்கவும், குளிர்ந்ததென்றல்
வீசுகின்ற ரத்தினமயமான பள்ளியறையில்
நித்திரைசெய்துகொண்டிருப்பாய் நீ இப்
போது பேய்களெல்லாஞ் சூழ்ந்துகொண்டு
முழங்கைகொட்டி விலாவிற்புடைத்துக்கூத்தா
டுகிற ஓசையைக் கேட்டுக்கொண்டு, ரணக்கள
த்தில் பழுதிமெத்தையின்மீது தூங்குகின்று
யோ ஐயோ? தம்பீ! நீ அஷ்டதிக்குகளையும்
ஜெயித்துச் செவந்தனைக் குடங்குடமாகக்
குடித்துக் களித்து வாழ்வுற்றிருக்கின்றதை
நான்கேட்டு இதுவரையிலும்பிழைத்திருந்தே
ன். இனி இன்றைக்கே என்னுயிரை உனக்குக்
கொடுத்துவிட்டேன். இனிப் பிழைக்கமாட்
டேன். நீமாத்திரம் தனியாய்மாண்டுபோக
நான் தாமசித்திருக்கமாட்டேன் ஒப்பற்ற
யானைக்குச் சமானமானவனே இதோவந்துவி
ட்டேன், வந்துவிட்டேனென்று, தன்சத்தம்ஆ
காசப்போய்முட்டும்படி இவ்விதமாகச்சொல்

லிக்கூவி, சானகிப்பிராட்டியாரைக்கொண்டுவ
ந்து சிறையிட்ட தனது தீச்செய்கையினுலே
நேரிட்ட போரில் கும்பகர்ணன் மாளவும்,
அதுநிமித்தமாகத் தன்னையும், மற்ற அரக்கர்
களையும் அழும்படித்தானே செய்துகொண்ட
எதுவினுல் அழுவிப்போனென்று பொருள்
படத் தனக்கிட்ட இராவணனென்கிறபெயரி
ன் காரணத்தைத் தோற்றுவித்தான்.

இப்படி இவன் அழுவதைக் கேட்டுக் கொ
வ்வைக்கனிபோன்ற இதழ் துடிக்கவும், திரு
மேனியெல்லாம் மயிர்க்கூர்ச்செறியவும், கய
ல் மச்சியம்போன்ற திருக்கண்கள் குளிர்ப்ப
டையவும், தமக்குள்ளே நெஞ்சம் பூரித்து,
திருமுலைக்குடம்விம்மி, திருமேனிவாடினவா
ட்டம் நீங்கித்தழைத்து மனமுவந்து, போன
உயிர்திரும்பி, மாறுப்படாத கற்பினையுடைய
அந்தச்சீதாபிராட்டியார்இவ்வாறு ஆனந்திக்க
அதுபார்த்து அவருக்குத் தோழியாகப் பக்க
த்தில்நிற்கின்ற திரிசடையடைந்த சந்தோஷ
ம் யாவரால்சொல்லி முடியப்போகிறது. கு
ம்பகர்ணனுடைய, பார்க்கவும்பீகரகாரமான
தோள்களையு முன்னொருகாலத்தில்கண்டு பய
மடைந்திருந்த சீதாபிராட்டியார், அவனைத்த
ம்முடைய ஸ்வாமீ! ஒருவராலுந்தடுக்க மு
டியாத பாணத்தால் கொன்றுவிட, அந்த
வார்த்தையைக்காதாரக்கேட்டு அமுதபானம்
பண்ணினதுபோல உடல்பூரித்தார். அப்போ
துகண்டவர்கள் இவர் முன்னைய சீதாபிராட்டி
யாரல்ல, வேறொருவராக்குமென்று நினைக்கு
ம்படியானுர். ராவணன் அதியுக்கிரகோபங்
கொண்டு இந்த அழியாத உலகத்தில் என்தம்
பியின்பிணத்துடனே அந்த இரண்டுமனிதர்
களையும், மற்றவானரங்களையும்கொன்று பிண
க்காடாக அழித்துவிட்டு என்றைக்கும் இற
வாத மும்மூர்த்திகளையும் அழியாத அமிர்த
பானம்பண்ணின தேவர்களையும் பிடித்துக்
கொண்டுவந்து சிறையில்போட்டு விடுகிறே
னென்று புறப்பட்டான்.

அப்போது மந்திரிகள் சமாதானஞ்செ
ய்யக் கொஞ்சங்கோபமாறி இதோ இந்தக்ஷ
ணமேபோய், அந்தமனிதர்களைக்கொன்று அ
வர்கள் ரத்தத்தால் என்தம்பிக்கு திலதர்ப்ப
ணஞ் செய்கிறேனென்று அஷ்டதிக்குகளையு
ஞ் ஜெயித்தவனுன ராவணன்கண்களில் அக்கி
னிசொரியும்படிச் சிறிக்கொண்டு சிங்காரவன
த்தைவிட்டுப் புறப்பட்டுப்போனுன். பின்பு
மகோதரன் இந்தகதியே நமக்குமுண்டாகப்
போகிறது. கும்பகர்ணன் பேய்களுழலுகின்
ற ரணக்களத்திலே மாண்டுபோனுனே யென்
று, மெய்பதைத்தவனுய், அங்கிருக்கிற ராக்ஷ

சர்களுக்குக் கண்சாடைகாட்டி மாயாசனகனை வேறொருபக்கத்தில் கொண்டுபோய் வையுங்களென்று போக்குக் காட்டிவிட்டுப் போய்விட்டான். நல்லவாசனையுள்ள புஷ்பங்களில் படிகிறவிதம்போல வண்டுகள்படிந்துபாடாமல், துகள்படிந்து எல்லா மொருசடைபற்றிச் சுமையாகச் சுற்றிவைத்திருக்கிற பூங்குழலையுடைய சீதாபிராட்டியாரிடத்திலுள்ள அன்பினாலே அவளைத் தேற்றும்பொருட்டு, விபீஷணாழ்வான் புத்திரியாகிய திரிசடை யென்னும் பாக்கியவதி தேவாமிர்தத்திற் கொப்பாகச் சொல்லுகின்றாள். அம்மா சீதாபிராட்டியாரே! உம்முடையதந்தைஎன்று சொல்லி உமக்குமுன்பாக உருவுமாறிவந்தவன் அளவில்லாத மாயையால் கொடுந்தொழில் செய்வதே சுபாவமாகவுடைய மருத்தனென்கிற பெயருள்ள ஒருராக்ஷசனுகும். இவன் உம்முடைய தகப்பனாகியஜனகமஹாராஜ ரல்லனென்றுசொன்னாள். அதைக்கேட்டுச் சீதாபிராட்டியார் அவளுடைய வார்த்தையை அமிர்தகந்தடவைகேட்டு, யதார்த்தமாயிருப்பதையறிந்துச் சந்தோஷித் திருக்கின்றவரான படியால், இப்போதுந் தமக்குண்டாயிருந்த சம்சயமும், துக்கமும், மனவருத்தமும், நீங்கி ஆறியிருந்தார். இங்கிருந்து புறப்பட்டுப்போன லங்காதிபதியான ராவணன் தன்னுடைய வீரர்களைப்பார்த்து, ஓவீரர்களே! நீங்கள் என்னுடைய சேனையையும், ஆயுதங்களையும், உதவியாகக்கொண்டுபோகிறீர்களேயல்லாமல் அந்தக் குரங்குவீரர்கள் சூழும்படியாகவந்த மனிதர்களுடைய வேகமுள்ள வில்வல்லமையை நீக்கிவந்தீர்களில்லை. நீங்கள் என்னெதிரேமாத்திரம், நாங்கள் அவர்கள் படைபெடுத்துவந்திருக்கிற இடத்திற்குப்போய் எல்லாரையுங் கொன்றுவிட்டு வந்துவிடுகிறோமென்று சொல்லுகிறீர்கள். இப்படிப்பட்ட நீங்கள் என்தம்பி கும்பகர்ணனைச் சாகாமல் தடுத்தீர்களா? அல்லது உங்களுயிரை அவனுடனே போக்கிவிட்டீர்களா? நீங்கள் நல்லவீரர்க ளென்று பெயரைமாத்திரம் வைத்திருக்கின்றீர்களே! நானிந்த மூன்று லோகங்களையும் கொடுமையுடனுண்டுவேற்றதற்கு உங்களுதவியொன்று மில்லையே? நீங்கள் இந்தப்பெரிய ஐஸ்வரியங்களை அடைந்திருக்கிறதும், நான்அடைந்த வெற்றியினால்தானே! அந்தக்கடனுக்காவது உங்களுயிரை என்பொருட்டுக் கொடுத்துவிட்டீர்களா? எங்களுக்கு வல்லமை யில்லையென்று சொன்னாலுஞ் சொல்லுங்கள். நானேதனித்து யுத்தத்திற்குப்போய்,அவர்களைத் தோற்படைந்துபோகும்படித் துரத்தி வெகுகாலமாய் யமனுடைய கலப்பையைப்போலச் சத்துருக்களுடைய உயிரைத் தாகசாந்தி பண்ணிக்கொண்டிருக்கிற என்னுடைய கூர்மையான வேலாயுதத்தின் முனை அந்தமனிதர்களுடைய முதுகில் பொதிந்து உருவும்படிச் செய்து, அவர்களைஎன்கண்ணால் பார்க்கிறேன். இனிஉங்களை ஒன்று கேட்கிறேன், நீங்கள் அந்தமனிதரோடு சண்டைசெய்து, வெற்றி பெறுகிறோமென்றீர்களேயானால் சண்டைக்குப் போங்கள். அல்லதுஎங்களுயிரையெல்லாம் இங்கேயே உன்முன்னேகொடுத்து விடுகிறோமென்றீர்களேயானாலும் அப்படியேசெய்துவிடுங்கள். இவ்விரண்டில் உங்கள் அபிப்பிராய மென்னவென்று வெகு கோபத்துடனே கேட்டான்.

மாயாஜனகப்படலம்

முற்றிற்று.

அதிகாயன்வதைப்படலம்.

ப்ரம்மதேவனே கோபித்தபோதிலும், தன்னைஜெயிக்கமுடியாத வீரனான அதிகாயனென்றுபெயருள்ளவனும், ராவணனுடைய இளையகுமாரனுமான ஒருவன் அதிகமானமும், வெட்க முற்றுச் சந்திரனையுந் தோற்கடிக்கத்தக்க வெற்றிக்குடையுடைய ராவணனை நிந்தித்து, ஹேமகாராஜாவே! சுவர்க்கலோகத்தாரும் பயப்படட்டும், பூலோகத்தாரும் பயப்படட்டும், அகடிதகடன சமர்த்தனான அந்த மஹாவிஷ்ணுவும் பயப்படட்டும், யுகாந்தகாலாந்தகனான அந்த உமாநாயகனும் பயப்படட்டும், அவர்களுடனே நீரும்பயந்திரென்று சொல்லும், அப்படிக்கில்லாமல் என்னைப்பயந்ததாகப் பொதுவாய்ச் சொன்னீரே? அது உமக்குத்தகுமா! மிகுந்தகொடிய யுத்தஞ் செய்தவர்களும், அதிகபலாஷ்டிகர்களுமான தானவர்களை நான் கட்டிக் கொண்டுவந்து, உமக்குக் கொடுக்கவில்லையா? உங்களை ஓடஅடித்த தேவர்களை நான் குலாலசக்கரம்போலச் சுற்றியடிக்கவில்லையா? உலையிற்காய்ச்சிச்செய்யப்பட்ட ஆயுதங்கள்கையிலிருந்தும் ஒருகுரங்கின்காலில்தேய்ப்புண்டுமாண்டுபோன அக்ஷனைப்போலவும், சிலபாணங்களால் மாய்ந்துபோன உன்தம்பியாகிய கும்பகர்ணனைப்போலவும், அந்தச் சிறுமனிதர் கள்வாய்ப்பிலுக்காலே தங்களுக்குப்பலமிருக்

றிறதாக ஏமாற்றினதற்கு உடன்பட்ட மற்றொருதம்பியாகிய விபீஷிணனைப் போலவு மா எல்லோரினைத்திருக்கிறீர். ஐயா நான் போய், எதிரிகளோக்கிட்டிச் சண்டைசெய்து, அந்தக் கர்வங்கொண்ட வானரசேனைகளையெல்லாம் சூழ்ந்துகொண்டு, அவர்களுடைய தலைகளைவெட்டிப் பூமியில்தள்ளி அந்த இரண்டு வில்வீரர்களையும், பின்கட்டாய்க் கட்டிக்கொண்டு வருகிறேன் பார்த்திரும். உம்முடையதம்பியாகிய கும்பகர்ணனுக்கு முடிவையுண்டாக்கின ஸ்ரீராமனுடைய தம்பியாகிய லட்சுமணனைக்கொன்று, அவனண்ணன் மெய்பதைக்கும்படியான துன்பத்தைச்செய்யாவிட்டால்,லோகப்பிரசித்தரான உமக்குப் பிறந்தபிள்ளை நானுவேனோ! நீர்என்னைச்சேனாசமுத்திரத்துடனே அதன்நடுவாகச் சண்டைக்குப்போவென்று நியமித்தாலும்,அல்லது நீமாத்திரம்தனியாய்ப்போவென்று உத்தரவுகொடுத்தாலும், நல்லதுதான். உம்முடைய மனதிற்கிசைந்தபடியே விடைகொடும், விடைகொடுமென்று அதிகாயன்கேட்க, ராவணன் அந்தவார்த்தையைக்கேட்டு, அப்பா அதிகாயா! நீ நன்முயாலோசித்துச்சொன்னாய், நீ அந்தலக்ஷ்மணனுடைய உயிரைவாங்கிவிடுவாயேயானால், நான் மற்ற இராமனென்ற பெயரையுடையவனைச் சேதித்து முடிக்கிறேன். அப்பா சொர்ணமயமான வீரகண்டாமணியைத்தரித்த அதிகாயனே மூவாயிரகோடி பதாதிகள் - யானைகள் - தேர்கள்-குதிரைகள் - இவைகளின் காவலுக்குள்ளாக இருந்து சண்டைசெய்யப் போவென்று அளவில்லாத சேனைகளுடனே யேவினான். தேவர்களாலும் வெல்லுதற் கேலாத பலமுள்ளவர்களான அபிசுயிஷ்ட கும்பனென்பவனும், நிகும்பனென்பவனும், மற்றொருசொர்ணவீரகண்டா மணியையுடைய அதிவீரனாகிய அகம்பனும், செம்பொன் மயமான தேரிலேறிக்கொண்டு முன்னும் இரண்டு பக்கங்களிலும் வர, சிவபெருமானேறி நடத்தும்படியான நந்திக்கொப்பானவைகளாய் வார்பூட்டப்பட்டுச் சண்டையிருந்தால் தமக்கும்வீரமிருவனான ஆயிரங் குதிரைகள்பூட்டின தேரில், மஹாகொடியவனான அதிகாயனேறிக்கொண்டுவந்தான். இன்னும், ஆயிரங்குதிரைகள்பூட்டிய ஆயிரஞ்சேமத்தேர்கள் பின்னாலேவரக்,கொல்லும்பயத்தைக் காட்டுகின்ற ஒருகோடிப் பெரியமதத்த யானைகளுடனே, ஐம்பது அறுபிர குதிரைவெள்ளக்களும்,உதவிச்சேனையாகப் போனதுகள். யானையைக் காட்டிலும் வேறுபட்டுக் கறுத்துப் பெருத்துக் காணப்படுகின்ற தேகத்தையுடைய அதிகாயன், அநேகவகையான ஆயுதங்கள் சூரியனைப்போல ஒளிவீசித்தோன்றவும், பலபலபாஷைகளினால் சௌரிய வார்த்தைகளைப் பேசுகின்ற வீரர்கள் சுற்றிக்கொண்டுவரவும், யுத்தமேற்கொண்டுபோனான். அஞ்சனமையைக்குழைத்துப் பூசினதுபோலக் கறுத்த தேகத்தையுடைய யானைகளும், அளவில்லாத தேர்களும், மலைக்குகைகளிலிருந்து பிரதித்தொனி உண்டாகும்படி சப்தித்ததுகள். ராக்ஷசவீரர்களுடைய வில்லின் ணுசையான து கடலும்பொங்கிக் கொதிகொள்ளும்படியொலித்தது. ரணபேரிகைகள் மேகங்கள் பயந்தடங்கும்படி முழங்கினதுகள். ராக்ஷசசேனாவீரர்கள் சுவர்க்கலோகத்தாரெல்லாம் நடுங்கும்படிக் கர்ஜ்ஜித்துக்கொண்டு நடக்கும்போது, பூமியும் அடியோடே பெயருமென்னும்படிக் காலடி எடுத்துவைத்தார்கள். தங்கள்சேனாபாரகத்தால் கடலையு மேடிடும்படித் தூர்த்துவிட்டார்கள். இவர்கள்வருகிறதைப்பார்த்துத் தேவர்கள்பயந்து வேர்த்துப்போனார்கள். காலெடுத்தோடுகின்ற மதத்தயானைகளின் வேகத்தால் பின்றொடர்ந்து போய்ப் படைமுன்னணியின் கொடியிற்படிந்து மின்னுகின்ற மேகங்களெல்லாம் ஓடுகின்ற அந்த மதத்த ஆண்யானைகளுக் குரிய பெண்யானைகளைப்போ லிருந்தன. அங்குசங்களால் குத்துண்ட மதயானைகளிலிருந்து பெருக்கெடுத்து ஒன்றுக்கொன்று மாறுமொழுகுகின்ற மதநீராற்றில் குதிரைகளும், அந்த யானைகளும் படிந்து சேறுடினதுமல்லாமல், வெகுவிசாலமாகப் பரவிவருகின்ற சேனைகளும் அச்சேற்றிற் படிந்ததுகள். சூரியனைச் சூழ்ந்து பரிவேடம் போவதுபோலத் தேர்கள் போனதுகள். மின்னிக்கொண்டு மேகக்கூட்டங்கள் வரிசைவரிசையாகப் போவதுபோல முகபடாமணிந்த யானைகள்சென்றதுகள். சிலகுதிரைகள் பூமிமார்க்கமாக ஓடின, ஓட இடம்பெறாமல் சிலகுதிரைகள் ஆகாசமார்க்கமாகப் பறந்ததுகள். இந்தப்பிரகாரமாகவந்த அதிகோபிஷ்டனான அதிகாயன், ஸ்ரீராமனென்கின்ற மத்தயானையானது, கவளீகரித்துத் துக்சப்படுத்தின ரணக்களமுழுவதையும் பார்த்துப், புண்பட்ட தன்நெஞ்சு புழுங்கிப் பரவசப்பட்டுக், குதித்துமலைக்குச் சமமானவலதுதோளோடிடது தோளும்வெட்டுண்டு கருங்கடல் கிடப்பதுபோல கிடக்கின்ற தன்சிறியதந்தையி னிலையைக்கண்டு,அவனுடையதலையைக்காணுமல்மனவெறுப்படைந்து, பலம்பொருந்திய பாணங்கள் பாய்ந்த

படியே கிடக்கிற்றதைக்கண்டு இதுஉயர்ந்தமலையுமல்ல, அஷ்டதிக்கஜத்திலொன்றி னுடலுமல்ல, பெரியசமுத்திரமுமல்ல,ஒருவரும்வெல்லுதற் கேலாதிருந்த என்தகப்பனாகிய கும்பகர்ணனுடைய தேகமேயென்று நிச்சயித்து, உயிர்சோர்ந்து, பெருமூச்சுவிட்டுச், சீச்சீ, இதுகளைப்பார்க்கவா நானிவ்விடம் வந்தேன். அதிபலாட்டியராக விருக்கின்ற அந்தமனிதர்களை நான்கொலைசெய்து என்னுயிர்கொண்டு போகாவிட்டால் இந்தத் துன்பத்தை நீக்கி விடுவேனே? என்று மிகுந்த கோபத்தையுடையவனாகி, இப்படிச்செய்த அந்த ஸ்ரீராமனுடைய தம்பியை இவ்விதமே கொன்று, பின்பு அந்த ஸ்ரீராமன்படுந் துன்பத்தைக் கண்டு, என் துக்கந் தணிகிறேனென்று ஒரு சபதவார்த்தையை யாவருக்குந் தெரியப்படுத்தி, மயிடனென்கிற ஒருதூதனை யழைத்து, நீ அதிவேகமாய்ப்போய்லட்சுமணனைக்கண்டு, அதிகாயனென்கிற மஹாவீரன், பிரதாபலங்கேஸ்வரனுடைய கனிஷ்டபுத்திரன், ஒருவருமெதிரில்லாதஜெயசாலி,இப்படிப்பட்டவன், தன்தகப்பனாராவணன் தம்பியாகிய கும்பகர்ண னிறந்தானென்று அழுது மனத்துயர்படுகிறதை நீக்குகிறதாக, உன்னோடும் உன்னுடைய சைனியங்களோடுஞ் சண்டை செய்யும்படி நிச்சயம்பண்ணிக்கொண்டு, ரணகளத்தில்வந்து நிற்கின்றான். உன்னெண்ணமென்னவென்று கேட்டுவரும்படி என்னை யனுப்பினானென்றும், மஹாவீரனான அவன்நெஞ்சங்கொதித்துக்கொண்டு இருக்கின்றான். இனி நாளைக்காகட்டும், நாளையி னன்றைக்காகட்டுமென்று சொன்னால் பொறுக்கமாட்டான். உன்னைத் தன்சிறியதகப்பனைப்போலக் கைகால்க ளற்றுக் களத்திலுருளும்படி அஸ்திரப்பிரயோகம்பண்ணப்போகிறதாய்ச் சபதம் பண்ணிக்கொண் டிருக்கின்றானென்றும், அவன் கொன்றவனொருவனாக இருக்கக் கொல்லாத மற்றொருவனைக்கொல்ல எண்ணங்கொள்வது பொல்லாங்கா யிற்றேயென்று நினைக்கின்றவனல்ல. கொஞ்சமாவது தருமமென்பதை நினைக்கமாட்டான். நீ என்னைத் தூதனென்று அலக்ஷியம்பண்ணாதே? நானும் அந்த யுத்தத்திற்சேர்ந்த வீரன்தானென்றுஞ் சொல்லு. உனக்குவல்லமையிருந்தாலென்னோடுகூடவே வாவென்று அழைத்துக்கொண்டு வரக்கடவா யென்று சொல்லி. ஓ மயிடனே! என்தந்தையாகிய ராவணனுடைய துக்கம் ஆறும்படி அந்தலட்சுமணன் இதோ வந்தானென்று அழைத்துக் கொண்டு வந்து என்னெதிரே விடுவாயானால்,உனக்குவிருப்பமான வஸ்துக்களையெல்லாம் என்னைக்காட்டிலும்உனக்கார்கொடுக்கப்போகிறார்கள். ஐயா புத்திமானாகிய மயிடனே! சண்டைசெய்ய வேண்டுமென்ற ஆசையினால் புகழ் சம்பாதிக்கிறவர்களான அந்தஇரண்டுமனிதர்களையும், பின்னும் எதிர்த்துச்சண்டைசெய்து, நமனுடைய சிறைச்சாலையையடைய விருப்பமுள்ளவர்கள் யாரிருந்தாலும், அவர்களெல்லாரையும் வாருங்களென்று கூப்பிடு, அப்படி நீ கூப்பிடுகிறதினால் அந்த லட்சுமணனென்று சொல்லப்பட்ட சிம்ஹம் வருவானேயானால், அவனைத்தேவர்களெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கும்படி பலபல துண்டுகளாய் வெட்டிவிட்டு, உன்னையு மவனுக்கீடாக இராஜபட்டங்கட்டி,ஒருஇராஜாவாக்கிவிடுகிறேன். அல்லாமலும் தேவலோகவாசிகளும்,வித்தியாதரர்களுமாகிய அவர்களுடைய நாயகிமார்களானதேவாமிர்தத்தையொத்த ஸ்திரீகளாலும் திவ்வியகானம் பாடுகின்றவர்களாலும்,ஒருவருமிதுவரையி லுண்ணாதமாமிசமும், எண்ணாயிரஞ் சாடிக் கள்ளும், உனக்குக் கொடுக்கும்படிப் பண்ணுகின்றேன். சூரியனுக் கொப்பாகப் பிரகாசிக்கின்றவைகளும், நூற்றொன்றாகப் பொறுக்கி யெடுத்தவைகளும், அதிக தேஜஸ்ஸையுடையவைகளும், தேவர்களால் கப்பங்கட்டினவைகளுமான அநேகஆபரணங்களும், அளகாபுரிக்குத் தலைவனான குபேரனால் வரிசை யனுப்பப்பட்ட நவநிதிகளும்,உனக்குப் பரிசாகக் கொடுக்கின்றேன். இன்னும் எப்போதும் மேகதாரைபோல ஒழுகிக்கொண்டிருக்கின்ற மதஜலத்தில் மொய்த்த வண்டுகளும், பருந்துகளும், சுற்றிப்பறக்கும்படியான முகத்தையுடையவைகளும்,ஒருநாளுங் கோபமாறாத செவந்தகண்ணை யுடையவைகளுமான யானைகள்நூறாயிர மூனக்குநான்கொடை கொடுக்கிறேன். வண்ணத்துக்கொருவிதமாகத் தங்கத்தாற்செய்யப்பட்ட தேர்களும், உயர்ந்த தேவலோகத்திலும் சமானமில்லாதவைகளான ரத்தினகிண்கிணி மாலைகளால் அலங்கரிக்கப் பட்டவைகளும், பூமியில் கால் தோயாமல் ஆகாயத்தில் பறப்பவைகளுமானகுதிரைகளும், அநேகங் கொடுக்கிறேன். நவரத்தினங்களைக் கும்பல்கும்பலாக கோக்கப்பட் டிருக்கின்றவைகளும், மூட்டைமூட்டையாகத் தங்கக்காசு விலைபெற்றதுகளும்,சந்திரனுக்கொப்பான வெண்பட்டுகளால் தைக்கப்பட்ட நீல அங்கிகள் அநேகாயிரங்கொடுக்கின்றேன். ஐயா, பொன்மயமாகிய வீரகண்டாமணியை யணிந்த மயிடவீரனே! ஊசியாற்றைக்கப்பட்ட இன்னும் உன்மன

திரிச்சிக்காத வைகளில் எல்லாவுடைகளும்
உனக்குப்பரிசாகக் கொடுக்கின்றேன், நீ சந்
தோஷிமாகப் போய்வாவென்று சொன்னமா
த்திரமே, மல்லயுத்தத்தால் மோதுண்டு, காய்
ப்பேறித் திரண்ட தோள்களையுடைய மயிட
னென்கிற ராக்ஷசவீரன் தூதுபோகச் சம்மதி
த்துப் புறப்பட்டுப்போய்ச், காகுஸ்த வம்
சோத்பவராகிய ஸ்ரீராமபிரானுடைய சந்நி
தியைச்சேர்ந்த சமயத்தில், அதிவேகத்துட
ன் வானரவீரர் எதிரோங்கிவருவதை இந்த ம
யிடன்கண்டுபயந்து-ஐயா ! ஒருசந்தோஷ
சமாச்சாரஞ் சொல்லவந்த தூதுவனுமென்
றான். அதைப்பரமகிருபாளுவும், வேதமு
தல்வனுமாகிய ஸ்ரீசக்கிரவர்த்தித் திருக்குமா
ரர்கேட்டு, இவன் இனியழிந்து போகப்போ
கின்ற தன்னுடைய எஜமானன் சொன்னவா
ர்த்தையைச்சொல்லவந்தவன், இவன்மற்றொ
ன்றும் நினைத்துவந்தவனல்ல. சும்மாவந்தது
தானுகையால் இவனை ஒன்றுங்கோபியாதேயுங்
களென்றுவிலக்கி, நீவந்தகாரியமென்ன சொ
ல்லென்று ஸ்வாமிகேட்டபோது, அந்த மயி
டன் ஐயா, வில்வீரசிகாமணியே ! அந்தக்கா
ரியம் உமது தம்பியாருடன் சொல்லவேண்
டிய தென்றுசொல்ல, அதைக்கேட்டு ராஜாதி
ராஜரான ஸ்ரீராமபிரானுன வீரருடைய திரு
த்தம்பியாரான இளையபெருமாள், என்தமை
யனிடத்துச் சொல்லக்கூடாததை என்னிடத்
திலே சொல்லு, சொல்லு அதென்னடாவென்
றுகேட்க, ஐயா, சொர்ண விக்கிரஹம்போ
லத் தேககாந்தியுள்ளவரே ! ராவணனுடைய
இளையகுமாரன் அதிகாயனென்பவன், அநே
ககோடி சைனியங்களுடனேகூட தாக்கும்ப
டி வெகுகோபத்துடன் மேருமலைபோல் ர
ணக்களத்தில்வந்து, என்மீது சண்டைக்குவா
என்றுசொல்லிக்கொண்டுநிற்கின்றான். அவன்
மீதுநீர்எதிர்க்கவலியுண்டானு லென்னோடுகூ
டவேபுறப்படும். சையபருவதம்போல உரு
வத்தையுடைய கும்பகர்ணனாகிய தன்சிறியத
கப்பன் தேகத்தை உம்முடைய பிராதாவான
ஸ்ரீராமனெப்படிக்கால்வேறு கைவேறு தலை
வேறுகவெட்டி யெறிந்தாரோ ! அப்படியே
உம்மையும், வேகமாய் இந்தரணபூமியில் செ
ய்யப்போகிறதாய்ச் சொல்லச்சொன்னான். எ
ன்கொன்றவனைவிட்டுக் கொலைசெய்யாத என்
னைத்தேடிக்கொண்டுவந்து நிற்கின்றீரென்று
கேட்பீரேயானால், தன்பிதாவான ராவணன்ப
டுந்துக்கத்தைத், தன்சிறியதகப்பனைக்கொன்
ற அந்த ஸ்ரீராமனும் படவேண்டு மென்கிற
விருப்பத்தைக் கொண்டு வந்தானு மென்று
சொல்லிவிட்டு, மறுபடியும் அந்த மயிடன்

ஓ தேவலோகத்துள்ளவர்களே ! பூலோகத்
திருப்பவர்களே ! இன்னும் மற்ற யாவர்க
ளும் இந்த வார்த்தையைக் கேளுங்கள், அதி
காய னென்பவன் இந்த இளையவீரனுடன்
சண்டைசெய்யப்போகிறான் இவருக்குஉதவி
யாக யார்வந்தாலும், அவர்களுடனும் போர்
செய்வான். வரவிருப்ப முள்ளவர்களெல்
லாம் வரலாமென்றுஞ் சொன்னானென்று
சொல்லி, இளையபெருமாளைப்பார்த்து நீர்பு
றப்படுகிறதா யிருந்தால் என்னோடு புறப்படு
மென்று, எரிகின்ற மழுமுனைபோலக் கர்ணக
டோரமாகச் சொல்லக்கேட்டு, ப்ரபத்திபண்ணு
ம்பாக்கியமுடையவர்களெல்லாம் வணங்கி, உ
ஜ்ஜீவிக்கும்படியான திருவடித்தாமரைகளையு
டைய சர்வலோகசரணிரான ஸ்ரீரகுநந்தனர்.
தம்பீ லக்ஷ்மணா ! இவனோடுகூடவே புறப்
பட்டுப்போய்வருவாய், தாமசிக்க வேண்டா
மென்று நியமித்தமாத்திரத்தில், அதைக்கே
ட்டுச் சுகுணசீலரான விபீஷணாழ்வான், ஸ்ரீய
ப்பதியான ஸ்வாமிசந்நிதியில்வந்து சாஷ்டா
ங்கமாகத் தண்டஞ்சமர்ப்பித்து, ஸ்வாமீ ! நா
மெல்லாரும் இளையபெருமாளுடன் போக
வேண்டும், பிறகு இவரோ அந்த அதிகாயனெ
ன்கிற வில்வீரனுடன் யுத்தஞ்செய்யட்டும்.
ஏனென்றால், அவன் அழியாதமுதல்வனான
பிரம்மதேவனைநோக்கி, ஒருபெருந்தவஞ்செ
ய்து பெற்றவரத்தினால், தேவர்களும், அசுரர்
களுமான பெரியவீரர்கள்சேர்ந்து செய்தச
ண்டையிலும், அவன்செத்தவனுமல்லன், கொ
ஞ்சமாவதுமனஞ்சலித்தவனுமல்லன், அதிகப
லமுள்ளவனாகவு மிருந்தான். மேலும் உமா
நாயகராகிய திரிநேத்திரருடனே? அந்தக்கயி
லாசமலையை வேரோடு பறித்தெடுத்தவனான
ராவணனே ? தன்னிலும் இவனைமஹா வ
ல்லவனென்றும் ப்ரம்மருத்திரேந்திராதி ச
மஸ்ததேவதா சமூகங்களுடனே மேருபரு
வதத்தைப் பேர்த்தெடுக்க வல்லவனென்றும்
நினைத்து, அதற்கேற்ற ஆஹாரங்களெல்லாம்
கொடுத்து வளர்த்தான். இன்னுமிவன் அந்த
க்ஷீரசாகரத்தை அந்த விஷ்ணுவும், வாசுகி
யும், மந்தரகிரியும், அதைப்பற்றி யிழுத்துக்
கடைய மற்ற தேவர்களும், வேண்டாமலே
தன்காலினாலே கலக்கிச் சற்றுநேரத்திற்குள்
ளே ஆலாலவிஷத்தையும், அமிர்தத்தையு மு
ண்டாக்கிவிட வல்லனாக்கும். பிரளயகாலத்தி
லும் சிறந்த மஹா பிரளயகாலத்தில் அழியா
தவைக ளென்னும்படியான அஷ்டதிக்குகளி
லும் நின்று லோகத்தைத் தாங்கிக்கொண்டி
ருக்கின்ற பருத்தமஸ்தகங்களையுடைய யானை
களை அவன் தோள்வலியால் தள்ளுவானென்

பது ஒருபெருமைமையோ ? சக்கிரவாளகி ரியையும், தன் உள்ளங்கையால் தன்னும் வல்லமையுடையவனுக்கும். வெகுகால வரையி லும் கண்ணிமைக் கொட்டமாட்டான். விஷிக ண்டரான சங்கரமூர்த்தியானவர், அக்கினிக க்குகின்ற சூலாயுதத்தை அவன்மேற் பிரயோ கித்தபோது, அதை அவன்கையில் பிடித்து க்கொண்டு, இந்தச்சூல முன்னுடைய சூலம ல்லவாவென்று அலக்ஷியமாய்ப் பேசினவ னுக்கும். இவன்தன்னோடுபகைத்த தேவர்க ளுடைய ஊரைப் புகையெழும்படிச் சுட் டெரிக்க வந்தகாலத்தில், வெற்றிமாலையைத் தரித்த அந்த விஷ்ணுமூர்த்தி பகைவர்க ளாகிய இவன் சேனைகளுடைய உயிரை உண் ணும்படி விடப்பட்ட சக்கரத்தையும், தன் வில் வல்லமையினால் தடுத்துவிட்டவனுக்கும். உயிருள் ளவைகளைப்போலொத்த ஆயுதங்க ளா யுள்ளவைகளையெல்லாம் இவர்கள்மீது அதிககோபங்கொண்டு இந்திரன் பிரயோகி த்தபோது, அவைகளையெல்லாம் இவன்திரும ணலைப்போலப் பொடிசெய்துவிட்டு, அவ னுடைய வஜ்ஜிராயுதத்தையும் தன்பாணங்க ளினால் கீழேதள்ளிவிட்டான். இவன் வேத சாஸ்திரங்களெல்லாம் கற்றிருக்கின்றான். ரு த்திர னிடத்தில், தேவர்களுடைய ஆயுதங்களை அவர்கள் வல்லமைகொண்டு, இவன் முன்னின் று பிரயோகிக்கக் கூடாதபடியான வரமும் பெற்றிருக்கின்றான். மேலும் அதிகசக்தியும் பெற்று யுத்தத்தைவிட நல்லதென்றுமற்றொ ன்றை யறியமாட்டான். அதிசூரனுயிருக்கின் றான். அதர்மமல்லாமல் வேறேயொரு நன் மையென்பதை இவன் அறியவேமாட்டான். யுத்தமல்லாமல் வேறொரு ஆபரணமு மணி யமாட்டான். யுத்தத்தில் வலியில்லாதவர் களைக்கண்டால், அவர்கள்மேல் ஆயுதத்தை எ றிந்து அவர்களுடைய அரியஉயிரை வேறுப டுக்கமாட்டான். பலத்தைக் காட்டிலும், கீர்த்தி யேஉயர்ந்ததென்று விரும்புகின்றவ னுக்கும். தேகத்தைவிட்டு உயிர்போகின்ற காலத்திலு ம், வஞ்சகர்களே தன்னோடெதிர்த்தாலும், தன்தேசத்தவர்கள் செய்யப்பட்ட அந்த தந் திரங்களையெல்லாம் அவர்கள் செய்தபோதி லும், தான்அந்தமாயச்செய்கைகளைச் செய்கி றதற்குக் கொஞ்சமாவது நினைக்கமாட்டான். மேலும் இவன் பிறப்பின் வரலாற்றைக்கேளு ம், ஸ்வாமீ ! வானவர்களுடைய லோகத்தை த் தங்கள் கைவசப் படுத்திக்கொண் டிருந்த மதுகைடவர்களென்கிற இரண்டு அசுரர்கள் முன்னொருநாள் அதிக வஞ்சகர்களாய்ச், சக்ராயுதத்தைத் தரித்தவரான விஷ்ணுமூ ர்த்தியினிடத்தில் பகைகொண்டு திருப்பா ற்கடலுக்குப்போய், ஓய் விஷ்ணுவே ! எங்களோடு நீர் சண்டைசெய்ய வாருமென் றார்கள். அப்படியே நல்லது வாருங்களெ ன்று நியமித்தார். அவர்களும் சண்டைக்குப் புறப்பட்டார்கள். தங்களோடுபோர்செய்யச், சூரியன் ஆயிரங் கரங்களுடனே வந்தாலும், அக்கரங்களை முறைமுறையாகக் கழித்துவிட் டுப் பரிகாசம் பண்ணும்படியான அவ்வீரர் கள், அதிகபகைகொண்டு போர்செய்தார்கள். அந்தப்போரி லநேகநாள் கழிந்துபோய்விட் டதுகள். தங்களுக்குத் தாங்களே சமானமாகி ய அந்த மதுகைடவர்கள் தனித்தங்கத்தைப் போலப் பிரகாசிக்கின்ற திருமேனியையுடை ய அந்த விஷ்ணுவைப்பார்த்து, புகழுடைய வர்களென்று பலரை எடுத்துப் பேசுவதினால் பயனென்ன, யாவர்களாலும் மதிக்கத்தக்க பு ருஷோத்தமனே ! உன்னைப்போல இனி வே றொருவரும் உண்டோ ? என்று சந்தோஷி த்துச்சொல்லி, நாங்கள் ஒவ்வொருவரோ ! இந் த ஏழுலோகங்களையு முன் மேழ்ந்து விடு வோம். இப்படிப்பட்ட எங்க ளிரண்டுபேரு டன் நீ இத்தனைநாள் சமயுத்தஞ்செய்தாயே! நல்ல கெட்டிக்காரன்தான், உனக்கென்ன வர ம்வேண்டும் உன்மனதின்படிகேள், அவற்றை நீகேளாததற்கு முன்னமே கொடுத்தும் விட் டோமென்றார்கள். அவர்கள், உனக்குவேண் டியபடி நல்லதை நாங்கள் கொடுக்கிறதற்கு என்ன வேண்டுமென்று கேட்டமாத்திரத்தில், சர்வநியந்தாவாகிய அந்தப்பகவான், உங்களை நான் ஜெயித்தேனென்கிறதற் கீடாக உங்களை ஒடுக்கும்படியானவரம் எனக்குக் கொடுக் கவேண்டுமென்று கேட்டருளினர். அதற்கு ஒழுக்கப்படி நடக்கின்ற நீதிமான்களான அந் த மதுகைடவர்கள் நாங்கள் வேறோரிடத்தி லும் சாகமாட்டோம். உன்னுடைய தொடை யி லிறந்துபோவோம். நீ துணிவாக எங்கள் சமீபத்தில் வருவாயானால், எங்கள் சொற்படி நடத்திக்கொள்ளென்று வரங்கொடுத்தார்கள். அந்தவரம் பெற்றவுடனே விஷ்ணுவானவர், மேலுலகங்கள் கீழுலகங்களெல்லாங்கடந்து, எ ட்டாதபடி தம்முடைய இடதுதொடையை நீட்டினர். மதுகைடவர்கள் ஊழ்வினைப்படி அந்தத் தொடையிலேறி நின்றார்கள். அப் போது, அந்த விஷ்ணுமூர்த்தியானவர் தம து கையால் வலிய கதையை எடுத்துச் சுற்றி யடித்தார். அந்த அடிபட்டு இருவருமடிந் தார்கள். தன் வாணுள்முடிந்த மதுவென்ப வனுடைய மாமிசம்பட்டபடியால் இந்தப்பூ வுலகமெல்லாம் மேதினியென்று பெயர்பெ

ந்றது. அவர்களில் மதுவென்பவன்தான் இப்போது தன் வாலுங்கழிந்து மாண்டுபோன தேகவல்லமையுள்ள கும்பகர்ணன். இரும்புக்கிரியையொத்த கால்களையுடையவனுன, கைடபனென்பவன்தான், இந்தக் கூரியவேலாயுதத்தைக் கையில்வைத்திருக்கிற அதிகாயனென்பவன். நானறிந்த பூர்வோத்திர மிவ்வளவுதான் ஸ்வாமீயென்று, விபீஷிணுழ்வான் சொன்னதையெல்லாங்கேட்டு, நல்லகாரியஞ்சொன்னுய் தம்பீ! விபீஷிணுவென்று, மின்னல் நாணிப்பறக்கும்படியாக நகைத்துச்சொல்லுகின்றார். தம்பீ விபீஷிணுழ்வானே! எண்ணுயிரகோடி ராவணர்களும், சுவர்க்கலோகத்தாரும், மற்றலோகத்தாரும், திரிமூர்த்திகளும், ஒன்றுசேர்ந்து வந்தெதிர்த்தபோதிலும், இந்த லட்சுமணன் வில் வித்தையின் பெருமையை நீ உன் கண்ணுல் பார்க்கப்போகிருய். சுவர்க்கலோகத்தார் தானென்ன, பூலோகத்தார் தானென்ன, அந்த சாக்ஷாது விஷ்ணுவாலுல் தானென்ன, வில் வீரர்களுக்குள்ளே நானேதா னுகட்டும், பிரமதகணத்தலைவனுகிய ருத்திரமூர்த்தியும், தேவாதிபதியாகிய இந்திரனு மாகிலுஞ்சரி, என்தம்பி எல்லாரையுந் தோற்கடித்து விடுவான். இவன் தன் வில்லில் கையைவைத்தானேயானுல், தேவாஸ்திரங்களாகட்டும், கோபமென்பதாகட்டும், பலமென்பதாகட்டும், குற்றமற்ற வீரமேயாகட்டும், மற்றவைகளேயாகட்டும், இவனுக் கெதிரேநிற்கவல்லமையுள்ளவைகளுமுண்டோ? இதை நீயே பார்க்கக்கடவாய்அப்பா விபீஷிணு! அந்தப் பெரியதேஹத்தையுடைய அதிகாயன் தன் பாணத்தோடுகூடவே! ஆகாயவனாயிலும்போய் இப்பூமியில் விழுந்தபோது, காக்கைப் பருந்து கழுகு முதலானவைகள் இவனைப்பிடுங்கித்தின்பதை நீயும் இலட்சுமணனுடனே பார்ப்பாயாக. என்றைக்குஎந்தேவியைவஞ்சனைசெய்து எடுத்துக்கொண்டுபோனனே! அன்றைக்கே அந்த ராவணனும், அவனைச்சார்ந்த இவனுமெல்லாரும், முடிந்து விட்டார்கள். அவன் தன் பாரதந்திர சொரூபங் குறையமாட்டேனென்றிருக்கிறபடியால், இதுவரையிலு மெல்லாரும் உயிரோடிருக்கின்றார்கள். ஒரு நீருடன் மற்றொரு நீ ரெதிர்த்துக்கூடாமல் நிற்குமோ? அதுபோலத், தர்மத்துடன் தர்ம்மமே! எதிர்த்துப் பகைசெய்யுமோ? இந்த மூழு துஷ்டர்களுடனே தேவர்களும் போர்செய்யமாட்டார்களே! அப்படிப்பட்ட யுத்தத்தை நமேதிட்டுக் கொண்டுவந்தது, தர்மத்தைக்கொண்டு ஜெயிக்கவந்தோமேயல்லாமல், வேறொருவருடைய உதவியினுலா ஜெயிக்கவந்தோம். தம்பீ! இவர்களோடு யுத்தஞ்செய்து ஜெயம்பெறத்தக்கவர், அந்த ருத்திரமூர்த்தியொருவர், அவரல்லாவிட்டால் லக்ஷ்மிபதியாகிய அந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவாலாக வேண்டும், அல்லது இந்தலோகங்களைச் சிருஷ்டித்தபிர்ம்மதேவர்முதலான எல்லாராலும் முடியாவிட்டால், சமானமற்ற வல்லமையுடைய தர்மசொரூபியாகிய இந்த இளையபெருமாளொருவரேயாகும். இவருமல்லாவிட்டால் நானுகட்டும், மற்றவர்கள் யாராகட்டும், இவர்களோடு சண்டைசெய்யமுடியுமா! கும்பகர்ணனோடு வந்தது ஓராயிரவெள்ளஞ். சேனையா! எவ்வளவோ சேனைகள்வந்தன. அவ்வளவுசேனையையும் ஒரு க்ஷணத்திற்குள்ளாகக்கொன்றவர் இவரேயல்லாமல், வேறே யாராவது கொல்லக்கண்டாயா! நீயும் கூடவேயிருந்தாயே? அந்த மஹாதுஷ்டர்களையெல்லாம் கொல்லப்போகிறவருமிவரே! அவர்களைக்கொன்று ஜெயமடையப் போகிறவருமிவரே! அந்தவீரர்களுக்கு மேலிட்டு நிற்கப்போகிறவருமிவரே! நான் வரவில்லை. இவரோடுகூட நீமாத்திரமேபோவென்று அனுப்பினுர்.

அப்போது இளையபெருமாளாகிய லட்சுமணர் பெருமாளுக்குத் தாம் சேஷமாயிருப்பதையும், பெருமாள் நியமனமே தமக்கு உத்தாரகமென்பதையும், பாரதந்திரிய சொரூபத்தையும் பிரகாசப்படுத்தப், பெரிய பெருமாளாகிய தமதாசாரியரை வாசிக காயிக மானசிக மாகிய, மூன்றுபிரகாரத்தாலும், தெண்டன்சமர்ப்பித்து, அதிபுத்திமானுகியவிபீஷிணுழ்வான் மாத்திரமே சத்தியபூர்வகமாகப் பின்தொடர்ந்துவர, அதிகாயன் வந்துநிற்கிற ரணக்களத்தில்வந்து அந்தத் தூதுவனுடனே பிரவேசித்தார். அப்போது வானரசேனுசமுத்திரமானது, தென்கடலின்மீ தெதிர்த்து வடகடல் வந்ததுபோல இராக்ஷசசேனைக் கடலையெதிர்த்தது. அப்படி எதிர்த்த வானரசேனைகளின்பேரில் அதிகாயனுடைய- யானைப்படை- தேர்ப்படை- குதிரைப்படை - காலாட்படை யெல்லா மொருமிக்கச்சேர்ந்து போர்செய்ய யத்தனித்தனகள். முன் பகியாக்கத்தாற்சேறுபட்டுச் சறுக்கலுண்டாயிருந்த அந்த ரணக்களம் இப்போது இருதிறத்தாருடைய சேனைகளும் மிதித்தலினுலேகாய்ந்து செவந்தபுஷ்பத்தின் மகரந்தப்பொடியைப்போலச் செந்தூளியெழும்பி ஆகாசத்தை யெல்லாம் மறைத்துவிட்டது. இடிக்குச் சமமான பேரிகை முழக்கத்தாலு

ம், சங்குதொனியினிடிமுழக்கத்தாலும், வீரகர்ஜ்ஜித ஓசையாலும், பயங்கரமாய் வளைந்த வில்லின் சப்தத்தாலும், நடுக்கமுற்றுச் சமுத்திரகோஷமும், அடங்கிப்போய் விட்டது. பாகர்களாகிய ராக்ஷசர்கள் மரணமடையும்போதெல்லாம், மலையினின்றும் பூமியில் விழுகின்ற அருவியாற்றைப்போல ரக்தத்தைக் கக்கிக்கொண்டு விழவும், மரங்களிலிருந்து முதிருகிற இலைகளைப்போலப் பிருதுக்கொடிகளறுந்து விழவும், மலைகள்மீது பாய்கிறதுபோலப் பெரியயானைகளின் தலைகளின் மேல் பல வானரங்கள் குதித்துப் பாய்ந்ததுகள். பல மர்க்கடங்கள் கூட்டங்கூட்டமாக மலைகளைப்பிடுங்கி யெறிந்தபோது, அவற்றிலிருந்து தேனருவிகள் கீழே ஒழுகிவரும்படி மதஜலங்கள் ஒழுகுகிற யானைகளின்மீது அம்மலைகள்மோதி, ஒருயானைமற்றொருயானையுடன்தாக்கி விழுவதுபோல, மலையும் யானையுமாக இரண்டும் கீழே விழுந்ததுகள். பல குரங்குகள் அரக்கர்களுடைய சில குதிரைகளைக் கைகளாற்குத்தின. சில குதிரைகளை நசுக்கிவிட்டன. சில குதிரைகளைக் கைகளா லிறுக்கிப் பிடித்துத் தூக்கின. சில குதிரைகளைத் துண்டுதுண்டாக்கிவிட்டன. சில குதிரைகளை முன்னங்கால்வேறு பின்னங்கால்வேறு தலைவேறாகப் பல்லினாற்கடித்து எறிந்துவிட்டன. சில குதிரைகள் வானரங்களுதைத்த உதையால் ரக்தங்கக்கிக்கொண்டு துடிதுடித் திறந்தன. பல பிலவங்கங்கள் மோதினபோது, சண்டமாருதக்காற்றடிக்க அதனால் மேகங்களொன்றோடொன்று மோதுண்டு ஒதுங்குண்பதுபோல, ஒட்டமெடுத்தயானைகள் ஒன்றோடொன்று தாக்கி தந்தங்கள் முறிபட்டு, அவைகளிலுள்ள முத்துக்கள் பலபலவென் றுதிர்ந்தது, இந்தப் பிரகாரமாக யானைகளிறந்து, சத்துருக்களை மிதித்துத் துவைக்கின்ற வஜ்ஜிரத்தூணையொத்த கால்கள்முறிபட்டு, யமபாசம்போன்ற வால்கள் அறுபட்டு, அவற்றின்பேரிலிருந்த பாகர்களும் இறந்தார்கள். வானரவீரர்கள் மரங்களையும், கல்லுகளையும், மலைகளையும், வாள்போன்ற பற்களையுடைய மலைப்பாம்புகளையும், ராக்ஷசர்களேறிவந்த யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் வாரி வீசினபடியால் ஓங்கிவளர்ந்திருக்கின்றபெருங்காட்டைப்போல ஆகாசமுழுவதுங்காணப்பட்டது. வானரத்தலைவர்கள் மலைகளைப்பிடுங்கியெறிய அவைகள் ஆகாசமெல்லாம் பரவிச்சென்று கடலில் மேகம்படிவதுபோல ராக்ஷசசேனைகளின்பேரில் விழுந்ததுகள். வானரவீரர்கள் ஓடமாட்டாமல் கால் சறுக்குண்ட குரூரராக்ஷசவீரர்களைப்பிடித்து மழுவாயுதம், வேலாயுதம், வாளாயுதம், இவைகளைப்பிடித்துக் கொண்டிருக்கின்ற தோள்களோடுமடக்கி, அவர்கள் பெரியதேகத்தை சேரச் சேர்த்துப்பிடித்து, அவர்களுடைய ரக்தவெள்ளத்திலேயேமூழ்த்திக்கொன்று, அப்பிணங்களை அவ்வெள்ளத்துடன் ஓடும்படிச்செய்தார்கள். அதிக பலவந்தர்களான அளவில்லாதவானரங்கள்ரக்தப்பெருக்குகளில் நீந்தி நீந்திக் கையிளைத்து, யானைப்பிண மேட்டின்மீது ஏறிநிற்க. அவைகள் அந்த ஆற்றில் அடித்துக்கொண்டு போனதினால், அவைகளுடனேபோய்க் கடலில் விழுந்திறந்ததுகள். சேற் கெண்டைகளுடனெழும்புகின்ற அலைகளையுடைய ஆற்றில் தடியைநீட்டிப் பிடித்துப்போகின்ற குருடர் கூட்டம்போலக் கால்கள் கால்களாய்ஓடுகின்ற ரக்தப்பிரவாகத்தில் வானரவீரர்கள்ஒருவர் வாலை யொருவர் பிடித்துக்கொண்டு வரிசை வரிசையாக இறங்கி நடந்துபோனார்கள். ராக்ஷசசேனைகள் பலமுறை வானரசேனைகளின்மீது பாய்ந்து ஆயுதங்களாலடிக்க, அவ்வாயுதங்களை விலக்கி விலக்கி வானரங்களுடையகைகள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தேய்ந்துச் சிதைந்துச் சின்னபின்னமாய் மாமிசங்களாகாசமுட்டச்சிதறுண்டு, அநேகவானரங்களிறந்தன. இப்படி வானரசேனைகள் வருத்தப்படுவதை இளையபெருமாள்பார்த்து பயப்படாதேயுங்கள் பயப்படாதேயுங்கள் என்று அவர்களுக்குத்தைரியம் பிறக்கும்படியான வார்த்தைகளையெல்லாஞ்சொல்லி, அவர்களுக்கு ஊக்கமுண்டாக்கித் தம்முடைய கையிலிருக்கின்றதும், எமனுக் குயிர்ப்பிச்சை கொடுப்பதுமான வில்லில் நாணேற்றிக் குணத்தொனி செய்தார்.

அந்த நாணோசையானது சாஸ்திரங்களெல்லா மூழ்கிவிட்டாலும், ஸ்தூல பூதங்கள்சூக்ஷ்ம பூதத்திலும், அச்சூக்ஷ்ம பூதங்கள் தன்மாத்திரையிலும், அந்தத் தன்மாத்திரைகள் கிரமக்கிரமமாய்ப் பிரகிருதியிலுமொடுங்கியும், பிர்ம்ஹகல்பம் முடிந்தும், காரணமாத்திரமுடியாத அந்தக் கடசிகாலத்தில் ஸ்வதப்பிரமாணமான நான்குவேதங்களும், ஸ்ரீயப்பதியினுடைய குணங்களை, பல்லாண்டு பாடி எங்குமாகக் கோஷித்துக்கொண் டிருப்பதுபோல எங்கும் நிறைந்தது. உடனே அந்தவில்லிலிருந்து அநேகம்பாணங்கள் புறப்பட்டதுகள். அவைகள் எண்ணிறந்த ராக்ஷசர்களுடைய தேகங்களையெல்லாமூடிச் சல்லடைக்கண்களாகத் தொளைத்து, ஆகாசமுட்டப் பிணக்காடுகளாக நிறைந்துவிட்டதுக

ள். அவர்கள் மார்புபிளந்து புறப்பட்ட ர
க்தவெள்ளங்கள் கடலை நிறைத்துவிட்டதுகள்.
மின்னும் அந்த அம்புகள் யானையின் துதிக்கை
களையறுத்துத் தேர்வீரர்களுடையஉயர்ந்தகி
ரீடங்கள் தரித்திருக்கின்ற தலைகளைத் துண்டித்
து குதிரைகளின் கால்களைத் துணித்து, அவை
களின் மீதேறிவந்த ரத்தநிறக்கண்களையுடைய
பாகர்களது தேகங்களைச் சின்னாபின்னங்களா
ய்ச்செய்து, வில்லுகளை இரண்டிரண்டாகமு
றித்து, வேலாயுதங்களை பொடித்து, வீரர்க
ள் அணிந்திருந்த பிரகாசமுள்ள கவசங்களை
ப்பேதித்து, அவர்கள் மார்புகளைப்பிளந்து,
தேகங்களை மலையைப்போல நொறுக்கி, கு
திரைகளை உருவிப்போய், அவைகள் பூண்டி
ருந்த தேர்களையுடைத்து, யானைகளை எமனை
ப்போலக் கொன்றதுகள். ஸ்ரீலட்சுமணபா
ணத்தால் துண்டிக்கப்பட்டு, விசையுடனே ஆ
காயத்திற்போய்த் தோன்றுகின்ற வெற்றியா
னைகளின்வளைந்த வெள்ளைத் தந்தங்கள் லோ
கவிருத்திக்கு முற்றின காலத்தில் ஆகாசத்
திலிடமாக இருந்த அநேக மூன்றாம்பிறைச்
சந்திரர்களைப்போலப்பிரகாசித்துக்கொண்டி
ருந்ததுகள். துஷ்ட ராக்ஷசர்களுடைய பெ
ரிய தலை இரண்டு அக்கினிசொரிகின்றகண்களை
யுடைய மூன்றாம்பிறைச் சந்திரர்களைக் கவ்
விக்கொண்டு தொங்குகின்ற குண்டலங்களா
கிய மின்னல்களுடனே, சந்திர மண்டலம்
ஆகாசத்திலிருந்துநழுவி மண்ணில்விழுந்து
கிடக்கிறதுபோலக் கிடந்ததுகள். கூர்மை
யான தந்தங்களையுடை யவைகளாயும், துதிக்
கை குறையுண்டு ரணக்களரக்தவெள்ளத்தில்கு
ப்புற்று விழுந்துகிடக்கின்ற யானைகள், இந்த
ப்பூமியைப் பேர்த்தெடுத்த ஆதிபுருஷவரா
கமூர்த்தியை யொத்திருந்ததுகள். புண்பட்டு
உயிரிழந்த குதிரைகள், பூட்டிய பூட்டுகளவிழ்
ந்து தலைகீழாய்விழுந்த பெரிய தேர்க்கூட்
டங்கள், புண்ணியவசத்தாலே சுவர்க்கத்தைய
டைந்திருந்து அது குறைபட்டு அந்தச் சுவ
ர்க்கத்திலிருந்து பூமியில்விழுந்த தெய்வ வி
மானம்போ லிருந்ததுகள். ஸ்ரீராமாநுஜரு
டையபாணம் சம்ஹரித்தபடியால் தம்மிடத்
திலிருந்த உயிரானது விட்டு நீங்காத பாபங்
களை முற்றநீக்கி அடைகிறதற்குத் துர்லப
மான மோக்ஷத்தை யடைந்ததென்று, தேக
மாகிய சுமைகள் சந்தோஷித்தால் கூத்தா
டுகிறதைப்போல ராக்ஷசக் கவந்தங்கள் கூத்
தாடினதுகள். நாற்பத்தெண்ணாயிர வீரர்
களிறந்தா லொருகவந்தங் கூத்தாடுமென்கிற
பிரமாணம் யதார்த்தமே! அது யதார்த்தமா
னால் கோடிக்கு மேலாகக் கவந்தங்கள் கூத்
தாடினபோது, இறந்த வீரர்களுடைய தொ
கை இவ்வளவென்று எவராலாயினும் சொல்
லிமுடியுமோ? முடியாது. யானையின் ரத்தப்
பிரவாகமும், ராக்ஷசர்களுடைய உதிரவெள்
ளமும், மற்ற குதிரைக்கூட்டத்தின் செந்நீரா
றும், காட்டிலும், மலையிலும், பெய்த மேக
வருஷங்களா லுண்டாகிய பெருவெள்ளத்தை
ப்போலப் பரந்தோடி, தெய்விக கங்காநதி
யைப்போலச் சமுத்திரத்தில் விழுந்தன. லட்
சுமணருடைய பாணங்கள்பட்டுத் தலைகளறுந்
த அநேகராக்ஷச உடற்குறைகள் யானைக்கழுத்
திலுள்ள கயிற்றில் கால்கள் கோத்தபடியே
யானைமேல் அங்குசங்களைக்கையிற்பிடித்திரு
ந்து அந்தயானைகளைக்கொத்தி யோட்டுகின்ற
துகள். பலமுள்ள பாணங்கள்பட்டுக் குதிரை
வீரர்களுடைய தலைகள்அறுந்துங்கீழேவிழா
மல் முண்டங்கள் கையில்வாளைப்பிடித்துக் கு
திரைமே லிருந்தபடியே கூத்தாடினதுகள்.
ஸ்ரீமத்வேதமார்க்க மஹாரிஷிகளுடையசாப
வார்த்தைகளைப்போன்ற பாணங்கள் தேர்வீ
ரர்களுடைய தலைகளைஅறுத்து நீக்கிவிடவும்;
அம் முண்டங்கள் கூட்டமாகக் கையில் பிடித்
துவளைத்து அம்புதொடுத்துக்கொண்டிருந்த
கை யோயாமல் வேகமாய்ப் பாணப்பிரயோ
கம் பண்ணிக்கொண்டே யிருந்ததுகள். ஸீ
தாபிராட்டியாரென்கிற ஒரு யமனை ராக்ஷசர்
கள் தேடிக்கொண்டபடியினாலே, தங்களையு
ம், தங்கள்தகப்பனையும், தமையன்மாரையும்,
தம்பிமாரையும், குமாரர்களையும், பேரர்களை
யும், மருமகர்களையும், சண்டமாருதக் காற்
றைப்போல அதி வேகமாய்ச்சென்று, ஒரே
பாண முருவிக்கொண்டு போனபடியினாலே
அவர்கள் யாவரு மாண்டுபோனார்கள். லட்சு
மணரால் பிரயோகிக்கப்பட்ட பாணங்கள்
பாய்ந்து, அறுந்து உருண்டு கிடக்கின்றபெ
ரியதலைகளைக் கழுகுகளில் சில கவ்விக்கொள்
ள அவைகளில்வைத்திருக்கிற ஆசையால் வே
றே சில கழுகுகள் சகியாமல் கோழிகளைப்
போல ஒன்றோடொன்று எதிர்த்துச் சண்
டைசெய்ததுகள். ஆயிரக் கணக்காகவும், ஆ
யிரகோடிக் கணக்காகவும், வருகின்ற அக்கினி
முகபாணங்கள்மனோவேகமாய்ப்போய்ப் பா
ய்கின்றபடியினாலே ராக்ஷசர்களுடைய உட
ல்கள் மாய்ந்து நசிக்க, அவ் வுடல்களிலுள்ள
உயிர்களைப் பிடிக்கிறதற்கு யமதூதர்களும்,
ஓடி ஓடிக் கால்கள் ஓய்ந்துபோகின்றார்கள்.
லட்சுமணருடைய பாணங்களால், மேருமலை
யையு மசைக்கும் வல்லமை யுள்ளவர்களான
ராக்ஷசர்கள் உடற்சுமைநீங்கி மாண்டு துடிக்கி
ன்றதைக்கண்டு இளையபெருமாளுடைய வல்

லைமைக்காகத் தேவர்கள் தங்கள் தலைகளைக் கு
னுக்கினார்கள். ராக்ஷசர்களுடைய பிணமலை
களின்பாரத்தால் பூமிதேவியு முதுகுநெளி
ந்து வருந்துகின்றவ ளாயினாள். இப்படிப்ப
ட்டசமயத்தில் தாருகனென்னும் பெயரு
டையவனும், மேருவுக்குச்சமமான தேகத்
தையுடையவனும், வடவா முகாக்கினியினும்
கொடியவனுமான ஒருராக்ஷசன், யுத்தமே த
னக்கு விளையாட்டாகக்கொண்டு தேரேறி வி
ல்லைப்பிடித்து அதிஉக்கிரங்கொண்டுவந்து எ
திர்த்துநின்று, இளையபெருமாள்மீது அக்கினி
மயமான அநேக அம்புகளைப்பிரயோகிக்க,அ
வைகளெல்லாம், அவன் முன்னால் பெற்றிருந்
த வரங்களைப்போல ஆகாசம்பூமிமுழுவதும்
எள்ளிடஇடமில்லாமல் மூடிக்கொண்டதுகள்.
அதுகளை இளையபெருமாள் அதிதீக்ஷணமான
சில பாணங்களால் இருந்த இடந்தெரியாமற்
போகப்பண்ணினார். அந்தப் பாணங்களில்
ஒன்று அவனுடைய தலையையு மறுத்து விட்
டது, அந்தப் பருத்ததலையானது, வெகுவேக
மாய் மலையிலிருந்து மேகம் எழும்பினது
போல ஆகாசமார்க்கத்திற்போயும் கர்ஜ்ஜித்
தது. அந்தச் சப்தத்தைக்கேட்டு அவனுயி
ரைப் பிடிக்கும்படிவந்த தூதர்களே அல்
லாமல் யமனும் பயந்தான். அவனிறந்தபிற
கு காலனென்பனும், குலிசனென்பவனும்,
காலசங்க னென்பவனும், மாலனென்பவனு
ம், மருத்தனென்பவனும், கனிச்சியென்பவ
னும்,வெகு வேகமாய்வந்து லக்ஷ்மணனை எ
திர்த்துத் துர்ப்பாஷைகளைப்பேசிச் சூலாயு
தத்தையும், பாசத்தையும், வேலாயுதத்தையு
ம், அடுக்கடுக்காய்ப் பிரயோகித்தார்கள். அப்
படி யவர்கள் எறிந்தவைகளும், வீசினவை
களுமான அநேக ஆயுதங்களையெல்லாம், ல
ட்சுமணர் துண்டுதுண்டாக்கி, அந்தத் துஷ்
டர்களுடைய பெரியதலைகளையுமறுத்து, அ
வர்களுக் குதவியாகவந்த ரத கஜ துரக பதா
திகளையுஞ் சின்ன பின்னமாய்ச் சிதறிப்போ
கும்படிச் செய்தார்.

அந்தச் சமயத்தில் அதிகாயனுடைய
சேனாவீரர்கள் ஐம்பத்தாறாயிர மதயானைக
ளைச் செலுத்திக்கொண்டு, லட்சுமணனைச் சூ
ழ்ந்து அவரவர்கள் பலபல ஆயுதங்களை மே
க வருஷம்போல வருஷித்தார்கள். அல்றியு
ம் வானரசேனைகளி லொருவராவது, அப்புற
ம் போகவொட்டாமல் சூழ்ந்து பெருங்கூட்
டமாக மலைகளைப் பெருங்கைகளில் கொண்டு
வீசியெறிந்தும், ஆயுதங்களால் நொறுக்கியு
ம், கர்ஜ்ஜிப்பினால் வானரர்களைக் கலங்கிப்
போகும்படியுஞ்செய்தார்கள். அந்த ராக்ஷச
வீரர்களாலே எறியப்பட்டவைகளும், எய்ய
ப்பட்டவைகளும், இடியோசை யுண்டாகும்
படி ஒன்றையொன்று கிட்டித்தாக்கி, அதி
வேகமாய்ச் சமுத்திரம் பொங்கிவந்ததுபோ
லவும், உகாந்தகாலமேகம் மூடிக்கொண்டது
போலவும், லோகமுழுதும் நெருங்கியபடி
யால் பூமி ஆகாசம் திக்குகளெல்லாம் மறைந்
துவிட்டதுகள். இதுகளையெல்லாம் லட்சு
மணர் தம்முடைய பாணங்களா லறுத்தறுத்
துத்தள்ளி,ஆயுதங்களைப் பிடித்துக்கொண்டி
ருக்கின்ற கைகளைத் துண்டுதுண்டாக்கிக் கன்
னமதம், கபோலமதம், பீஜமதமென்கிற மு
ம்மதங்களையுடைய அவர்கள் யானைகளையும்
அம்புகளால் எய்துகொன்றார். மேலும் ப
த்துப்பாணங்களால் மலைபோன்ற யானைக
ளுடைய தந்தங்களும், துதிக்கைகளும்அற்று,
வலிய தலைகளும் அறுந்து,மேகங்களைப்போ
லச் சுருண்டு விழ்ந்ததுகள். லட்சுமணர் ஒவ்
வொருவருக்கு ஒவ்வொருபாணம் பிரயோகி
க்கவே ! இடியையொத்த அந்தப் பாண
ங்கள்பட்டு யானைக்கழுத்துக் கயிற்றில்மாட்
டியிருக்கின்ற பாகர்களுடைய இரண்டுகால்க
ளுமற்று, ஆயுதப்பிரயோகஞ் செய்கின்ற ரா
க்ஷசர்களும் விழுந்தார்கள். மதங்களைப் பொ
ழிந்துகொண்டு யானைகளு மலைகளைப்போ
ல விழுந்ததுகள். சில யானைகள் மேற்ற
விசும், அத்தவிசை இறுக்கியபடிக் கசைவா
ர்களுள்ள மார்பும்பிளப்புண்டு,இடிபோல் மு
ழங்கும்படி வல்லமை யுள்ளவைகளாகிய
கூரியபாணங்கள் நுழைந்து முதுகிலுருவி
னபடியினாலே மதங்களைப் பொழிந்துகொ
ண்டு திக்குவிதிக்குகளாகக் கருமலைகளைப்போ
ல் விழுந்துகிடந்ததுகள். கொடிகள்முறிந்து
அங்கங்கேபற்றியெரியத்தக்கதாக அக்கினி யா
ஸ்திரங்கள் தேடிக்கொண்டுபோகின்றபடியா
ல்யானைகள் அறுபட்டு, அந்தயானைகளைச் செ
லுத்தினவர்களுடைய தலைகளு மறுபட்டது
கள். அதனால் கண்குழிந்த பேய்கள் காற்று
ள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டுமென்
று சும்மாயிராமல், தங்களுக்கு வேண்டிய ம
ட்டும் பிணங்களைக் கொள்ளைகொள்ளையாய்வா
ரிக்கொண்டதுகள். லட்சுமணர் பலங்கொண்
டு விடுகின்றபாணங்கள் மழையினு மிகுதியா
கவந்து படுகின்றபடியால்இடிவிழுந்தமலைக
ளைப்போலக் கூட்டங் கூட்டமாக உருளுகின்
ற யானைகளுடைய ரத்தவெள்ளமானது, கறு
த்த யானைக்கூட்டத்தோடு சிவந்தநிறமுள்ள
யானைக்கூட்டம் போரிட்டதுபோலக் கடலி
ற்போய் விழுந்ததுகள். சிலயானைகள் தங்க
ளைச்செலுத்தும் பாகர்கள் மாண்டபடியால்

ஒழுங்காய்ச் செல்லாமல், ஆலகால விஷத்தையும், இடியையுமொத்த கோபத்தையும், ஓசையையும், உடையதுகளாய், மதமேறி வெறிகொண்டு மதஜல மழைபோலச்சொரிய ஒன்றோடொன்று எதிர்த்துச் சண்டை செய்ததுகள். இவ்வாறு சுமித்திரை இளஞ்சிங்கம் பாணங்களை எய்து கும்பப்படுத்துவதினால், சில யானைகள் கால்களற்றன. சில கஜங்கள் துதிக்கையிற்றன. சில யானைகள் வால்களறுந்ததுகள். சில கரிகள் குடல்சரிந்ததுகள். சில குஞ்சரங்கள் தோல்வழுக்குண்டு போனதுகள். சில வேழங்கள் மழையைப்போல வீறிட்டு, விளாதடிகளைப்போன்ற தந்தங்களொடிந்ததுகள். ராக்ஷசவீரர்கள் எட்டு திக்குகளிலும் நிறைந்து, பதினாறுவகையான ஆயுதங்களையும், அவரவர்கள்விட்டவிட்டபடியே லக்ஷ்மணர்பாணங்களால் அவர்களும் அறுந்தார்கள். அவர்களாயுதங்களுமுறிந்ததுகள். தீயைச் சொரிகின்ற கண்களையுடையவர்களாயும், பெரிய தேககாத்திர முள்ளவர்களாயும், கோபமுற்ற வீரவார்த்தைகளைப் பேசுகின்றவர்களாயும், லட்சுமணர்மீது கடல்புரண்டு வருவதுபோலவந்து, அநேகதுஷ்ட ராக்ஷசர்கள் அறுபத்தாறுயிரம் யானைகளை அக்கினியைப் போலச்செலுத்தி, அநேக சித்திர விசித்திரமாக அஸ்திரப்பிரயோகம் பண்ணிக்கொல்லுகின்ற வீரத்தொழிலையுடைய லட்சுமணரைப்பார்த்து, இனிஇந்தயானைகளை உன்னுடைய அஸ்திரங்களால் கொல்லு பார்க்கலாமென்று சொன்னார்கள். மேகங்களினாலே மூடப்பட்ட செவந்த கிரணங்களையுடைய சூரியனைப்போல அந்த யானைக்கூட்டங்களுக்குள் மறைந்து விளங்கிய வீரசிகாமணியாகிய இளையபெருமாள் இந்திர தனுசுக்குச் சமானமாகிய வில்லைவளைத்தார். வளைத்தமாத்திரமே யானையாகிய மேகங்களெல்லாம் சிதறுண்டு தலைகால்கள் நடுங்கிக்கொண்டு பூமியில்விழுந்ததுகள். மோக மிகுதியால் செவியடியில் மதமழையைப் பொழிகின்றவைகளும், மலையையும், கடலையுமொத்த தேகங்களையுடையவைகளும், கண்களில் திரள்திரளாக நெருப்பைச் சொரிகின்றவைகளுமாகிய யானைகளில் சில முதுகு பிளந்தன. சில மஸ்தகம் திறந்தன. சில பலம்பொருந்திய துதிக்கையற்றன. இப்படி பலவாறாகச் சின்னபின்னப்பட்டும் தமக்குண்டாகிய மதமாத்திரம் நீங்கவில்லை. சில யானைகள் ஊழிகாலச் சண்டமாருதம் மோதுவதினால் தன்னளவுக்குள்ளாகவே அலைகளை வீசிக்கொண்டிருக்கின்ற சமுத்திரநீர் கரைபுரண்டு வருவதுபோல எண்ணுக்கடங்காமல் பலங்கொண்டு விசையாகப் புறப்பட்ட பாணங்கள் முகபடாமணிந்த மஸ்தகத்தில் பட்டுருவப், பூமியில் பெய்கின்ற மேகஜலத்தைப்போல மதஜலத்தைப் பொழிந்துகொண்டே மாண்டதுகள். சிறகுகளுடனே மிகுந்தவேகமாய்ப் பறந்துகொண்டிருந்த பருத்தமலைகள், தேவேந்திரன் கூர்மழுங்காத வஜ்ஜிராயுதத்தினால் வீசப் பக்கங்களில் பறந்துபோவதற்கிசைந்த சிறகுகளற்று விழுந்தாற்போல மூன்றாம்பிறைச் சந்திரனுக்கொப்பாக நெற்றியில் அர்த்த சந்திர பாணம்பட்டு சிலயானைகள் மடிந்ததுகள். சூரியனுக்குச்சமமாகிய பாணங்கள்பட்டுக், கோபமாறாமல் வேகமாய்க் குமுறுகின்ற மேகத்திற் கொப்பாகக் கர்ஜ்ஜிக்கின்ற அநேக யானைகள் ரணக்களத்தில் பின்வாங்காமல் நிற்கவும், பல பாணங்கள்பட்டு, அளவிறந்த யானைகள் பிளப்புண்டு, அவற்றில் நின்றும் ஒழுகி அலைமோதி ஓடுகின்ற சிவந்த ரக்தப்பிரவாகத்தில் முழுகிய மலைகளைப் போலக் கடலிற்போய் விழுந்ததுகள். சில யானைகள் தங்கள் கண்களில் கூர்மையான பாணங்கள்வந்து தைக்கிறதைக் கண்டு இவ்வள வவ்வள வென்ற கோபத்துடனே கும்பல்கும்பலாகப் பூமியும் பொடிப் பொடியாய் நெரிந்துபோகும்படி திக்குத்திசைதெரியாமலோடி ராக்ஷச சேனாசமுத்திரத்தை மிதித் துழக்கிவிட்டதுகள். இளையபெருமாள் ஒரு பிரயோகத்தில் ஆயிரங் கூர்மையான பாணங்களை மேகம் பொழிகின்ற ஆயிரந்தாரைகளைப்போல எய்வதினால், அப்பாணங்கள்பாய்ந்து இரண்டாயிரம் மதயானைகளிறந்துவிழுமேயானால், அவருடைய கரவேக சரவேக வில்வித்தையை ஆராய்ந்து நிச்சயிப்பதற்குத் தேவர்களாலு முடியுமோ? தேர்கள்முறிந்து, பானைகளறுந்து, சண்டைசெய்கின்ற கோபமுள்ள வீரர்களிறந்து, விசயலட்சுமி நிர்த்தனஞ் செய்கின்ற ரணக்களத்தில் குதிரைக்கூட்டங்கள் பொரிந்து, இவையெல்லாம் நாலுபக்கத்திலும் மோதுகின்ற யானையின் ரக்தப் பிரவாகத்தில் அகப்பட்டு, அப்புற மிப்புறம் போகாமல் போர்க்களத்திலே தேங்கிநின்று விட்டதுகள். இப்படி அறுபத்தாறுயிர மதயானைகளும் ஒருநாழிகை செல்வதற்குள்ளே துண்டு துண்டாய்ச் சிதைந்து, குவியல்குவியலாகக் கிடந்த படியினாலே மேலாகத்தாரால் மலைகளோ? யானைப்பிணக்கூட்டமோ? என்றறியக்கூடாதவைகளா யிருந்ததுகள். பிரத்தியேகமாயிருந்த ஒருகோடியானைகளை ராவணன் அந்த அதிகாயனுக்குத் துணையாக அனுப்பினான். மு

ன்ன மொருகோடி யானைகள் பட்டதுகள்,
வருகின்ற வழியெல்லாம் மதநீ ராறாய்ப் பெ
ருக்கெடுத்தோட, இப்போது வந்த யானைக
ளை ராக்ஷசவீரர்கள்,இடியையொத்த அம்புக
ளைப்பொழிகின்ற இரண்டு குதையையுடை
ய இந்திர தனுசுக்குச் சமமான வில்லைக் கை
யிலே வைத்திருக்கின்றவெற்றிபெற்ற சிம்ஹ
த்திற் கொப்பாகிய இளைய பெருமாளுக்கு
முன் செலுத்திக்கொண்டு வந்தார்கள். இ
ந்த லோகத்தி லெத்தனை மலைகளுண்டோ!
அத்தனையையும் உருவத்தால் தோற்கடிக்கின்
றவைகளும், ஒன்றுக்கொன்று ஒப்பா னவை
களுமான அந்த யானைகளெல்லாம் லட்சுமண
ரைவந்து கும்பல் கும்பலாய் நாலுபக்கமுஞ்
சூழ்ந்துக்கொண்டதுகள். அந்த அளவில்லாத
வடவா முகாக்கினியைப்போலக் கோபிக்கின்
ற யானைகளெல்லாம் அவருடைய வில்லிலிரு
ந்து புறப்பட்டபாணங்களால் சில தலையற்ற
துகளும். சில கால்களற்றதுகளும். சில உடல்
பிளந்ததுகளுமாய் மாண்டதுகள். முப்பத்
தாறு யோசனைதூரமட்டும்,நான்கு திசைகளி
லும், மதயானைகளி னுடைய சஞ்சாரமே யா
கிவிட்டதென்று யாவரும் பயந்தார்கள். வான
ரக் கூட்டமெல்லாம் நசுங்கிக் குழம்பி அந்த
ப் பூமியே வேறுபட்டுப் போய்விட்டது.
பேய்க்கூட்டங்கள் வால்பக்கமிது, தலைப்பக்
கமிது,என்று தெரியாமல் யானைப்பிணங்களை
மலையைத் தூக்கிக்கொண்டு போகிறதுபோ
லத் தூக்கிக்கொண்டு போயினதுகள்.பக்கங்க
ளில் அலைவீசிக்கொண்டிருக்கின்ற ரக்தக்கட
லுடனே சிதைந்து மாண்டுபோன சேனைக
ளை வாரிக்கொண்டு மதஜல ஆறுகள் பலபல
வாய்ப் பாய்ந்தன. லட்சுமணர் ஒரு பாணத்
திற்கு ஒருயானை இறந்து விழும்படியாக அக்
கினியைக் கக்கிக்கொண்டு இடியைப்போன்
றவைகளும், யமனைப்போன் றவைகளும், மு
ருகனதுவேலுங்கண்டு நாணத்தக் கவைகளு
ம்,கடலையும் வற்றடிப் பவைகளுமான பாண
ங்களால், மேகம்போல மதஜலத்தைப்பொ
ழிகின்ற யானைகளைப், பதினாயிரம்,பதினாயிர
மொவ்வொரு பத்தியாகக்கொன்றார். இந்தப்
பிரகாரமாக இளையபெருமாளுடைய பாண
ங்கள் யானைகளைத் தேடித்தேடிக் கொல்லுகி
ன்றதைக்கண்டு,யானைபோல உயர்ந்து காணப்
படுகின்றபடியால் மலைகளும் பயந்ததுகள்.
யானைபோலக் கறுத்துக் காணப்படுகின்றபடி
யால் மேகங்களும் நடுங்கினதுகள். சோலை
களும் அஞ்சினதுகள். மற்ற பெரிய பொரு
ள்களும் தங்கள்நிலை மாறினதுகள். திக்கஜங்
களும் தங்கள் ஸ்தானம்விட்டு நழுவினதுக
ள். கடலலைகளும் துடிதுடித்ததுகள். சி
வ புத்திரராகிய ஐந்துகையுள்ள விநாயகரும்
தாம் யானை யுருப்பெற்றிருக்கின்றமையாலி
ராமாநுஜருடைய பாணம் தம்மையும் கொ
ல்லுமோ வென்று ஒடுங்கிட்டாரென்றால் மற்
றவைகளைப்பற்றிப் பலவாறு சொல்லவேண்
டியதென்ன. விற் குதைகளிற் பூட்டியிருக்
கின்ற நாணோசையானது, கடலைத் தத்தளி
க்கும்படிச்செய்து, சுவர்க்க லோகமெல்லாம்
கிடுகிடாயமான மாக்கிவிட்டது. அந்தவில்லி
லிருந்து புறப்பட்ட பாணங்கள் வேகமு
ள்ள ராக்ஷசவீரர்களுடையதலைகள்,உடல்களி
லெல்லா முருவினதுகள். அந்தப்பாணங்
கள்பட்டு மத்தகஜங்கள் இடி விழுந்தமலைக
ளைப்போல் அடிசாய்ந்து விழுந்ததுகள்.
இப்படிப்பட்ட சமயத்தில் ஆஞ்சநேயர்
ஏழு சமுத்திரம்போல் வந்து ராக்ஷசர்களால்
ஏவிய மிகுந்தயானைகள் மடியத்தக்க ஒருசெ
ய்கையைச் செய்கிறேனென, ஏ வீரர்களே!
துள்ளிக் குதியாதேயுங்களென்று சொல்லி
வேல்பாய்வதுபோலப் பாய்ந்துவந்து வீர
கர்ஜ்ஜனைசெய்து கண்களில் தீப்பொறி பறக்
க ஒருபெரிய மதயானையைப்போலக் காண
ப்பட்டு, அஜசங்காரிதேவர் முதலியோரை
உபத்திர வஞ்செய்து கொண்டிருந்த இரணி
யன்முதலிய அசுரவர்க்கங்களை நாசமாக்கும்ப
டி அவதரித்த ஆதிநரசிம்ஹம்போல அதி உ
க்கிரங்கொண்டு ஸ்ரீராமநாம ஸ்மரணைபண்ணி,
யமதண்டம்போன்று வளர்ந்திருந்த ஒரு ம
ராமரத்தைப் பிடுங்கி, இருப்புத் தடிபோன்
ற நீண்ட துதிக்கைகளையுடைய மதயானைக
ளெல்லாம் ஒருமிக்க மாளும்படியாக, ஊழி
க்காலத்தில் பெரும்பூதங்களும், உகாந்தகால
மேகமும் கலந்து அழிக்கும்போது,மலைகளி
ன்மீது பேரிடி விழுவதுபோலச் சாடினார்.
அப்படிச் சாடுகிற காலத்தில்,தம்முடைய கா
ல்மிதியில் பல யானைகளும், நடக்கும்விசை
யிற் பல யானைகளும், வல்லமையிற் பலயா
னைகளும், உதையிற் பல யானைகளும், கா
ல்தட்டுதலிற் பல யானைகளும், வாலாற்பல
யானைகளும், வால்நுனியாற் பல யானைகளு
ம், வாய்ச்சொல்லின் வேகத்தாற் பல யானை
களும், கைவீசுதலிற் பல யானைகளும், ஓரி
டத்தி லிருந்தோரிடத்திற் குதிக்கிறதினாற் ப
ல யானைகளும், குத்துகிறதினாற் பல யானைக
ளுமாளும்படிக் கொன்றார். சில யானைகளைப்
பற்றி யிழுத்தும், சில வற்றைப் பிளவுபிளவா
கப் பிளந்தும், சில வற்றை நகங்களாற்
கீறியும், சில வற்றைப் பனைமரத்தைப் பற்
றி முறிக்கிறதுபோல துதிக்கைகளைப்பற்றி

முறித்தும், சில வற்றைக் கையால் குடைந்தும், சில வற்றைக்கிழித்தும், சில வற்றைத் துண்டித்தும், சில வற்றைப் பல்லாற்கௌவியும், சில வற்றை மத்திட்டுக் கடைவதுபோலக்காலால்கடைந்தும், சில வற்றைத் துண்டந் துண்டமாகக் கடித்தும், சில வற்றைப் பற்றிக் குண்டுக்கட்டாக வளைத்தும், சில வற்றை பொடித்தும், சில வற்றினுடைய நீண்ட தந்தங்களை பிடுங்கியுங் கொன்றார். சில யானைகளைக் கைகளினால் வாரி வாரிச் சமுத்திரத்தி லெறிந்தார். சில யானைகளை இழுத்துச்சுற்றி யலையச்செய்து உருட்டினார். சில யானைகளைப் பூமியிற்போட்டு அரைத்துவிட்டார். சில யானைகளைப் பிடித்துப் பூமியிலறைந்தார். சில யானைகளைக் குடலைப் பிடுங்கினார். சில யானைகளைச் சுவர்க்கலோகத்தில் விழும்படி வீசினார். சிலயானைகளை மிதித்துத்துவைத்தார். சில யானைகளை முகத்திலுதைத்தார். அநேக யானைகளை மலைப்பாம்பைப்போல தம்முடையவாலினாலே சுற்றிவளைத்துக்கட்டி பாகர்களுடனே வேகமாய் மலைமேல் மோதியடித்துக் கொன்றார். முன்னே தம்மேல்வந்த யானையைத் தோலுரித்துக்கொன்ற சாக்ஷாது சிவபிரானே! நாம் என்பதற்குத் திருஷ்டாந்தமாகத் தம்முடைய பெரியவாயில் அநேக யானைகளைப் போட்டு உதப்பினார். இப்படி ஒருக்ஷணப்பொழுதுக்குள் ஆயிரம்யானைகளைச் சிங்ஹத்தைப்போலக்கொன்றார். அப்படிக் கொல்லும்போதே சைய பருவதத்தினுமுயர்ந்த நூறாயிரம் மதயானைகள் அதிக வேகத்துடனே ஆஞ்சநேயருக் கெதிராகவந்தனகள். அவைகளையெல்லாம் உருமாய்ந்து இன்னபொருளென்று தெரியவொட்டால் உழவுநிலத்துச் சேற்றைப்போலாகும்படித் துவைத்தார். இப்படி ஆஞ்சநேயர் க்ஷணப்பொழுதுக்குள்ளாக அந்தயானைகளில் லக்ஷம்யானைகளைக் கொன்றார். மற்றவைகளையெல்லாம் இளைய பெருமாள் அர்த்தசந்திரபாணத்தினால் கொன்றுவிட்டார். இதைக்கண்டு ராக்ஷசர்களெல்லாம், அதிக பயங்கொண்டு திக்கு விதிக்குகளாக ஓட்டம்பிடித்தார்கள். யானைப்பிணங்கள் தங்கள்மேல் விழுந்தபடியால் அதிலகப்பட்டு நசுங்கிப்போன ராக்ஷசர்களும், நசுங்கிப்போகாம லுயிர்தப்பியிருந்த ராக்ஷசர்களும், உடல்நெருங்கி புழுக்கத்தால்வெந்து ஒழிந்துபோனார்கள். மற்றவர்களெல்லாம் தாம் தாமேறிவந்த தேர்களையிழந்து பாதசாரிகளாக முன்னேபோக அதைப்பார்த்து, அதிக கோபங்கொண்டு தேவாந்தகனென்பவன் ஒருவனாய் ரக்தவெள்ளத்தி லங்கங்கே பிணங்கள் மலைமலையாகக் குவியப்பெற்று அதி பயங்கரமாய்த் தோற்றுகிற அந்த ரணக்களத்திலே தனித்தேர் விட்டுக்கொண்டு வந்தெதிர்த்து, அக்கினிக்குச் சமானமாகிய சில பாணங்களை அனுமான்மீது பிரயோகித்துத் தேகத்தைச் சல்லடைக்கண்களாய்த் தொளைத்து, இடியைப்போலக் கர்ஜ்ஜித்தான். அப்போது அனுமானும் ஒருபெரிய மரத்தைப் பிடுங்கி அடா! இதோ உன்னுயிர் போய்விட்டதென்று அவன்மேல் விட்டெறிந்து அஷ்டகாசஞ் செய்துநின்றார். அதைக்கண்டு தேவாந்தகன் அக்கினியைப்போலப் பிரகாசிக்கின்ற கூர்மையானபாணத்தை அந்த மரத்தின் வேகத்தை அடக்கக் கடவாயென்று பிரயோகித் தந்தமரத்தைத் துண்டாக்கிவிட்டால். அதைக்கண்டு வானரகுலத்தி லொருசிங்ஹம்போலிருக்கின்ற அனுமான் வேறொரு மலையைப்பிடுங்கியெறிய, அது தன்மேல்பட வரும்போது, அது தன்மேல் படுதற்குள்ளாகத் தேவாந்தகன் அந்தமலையைப் பாணத்தால் உடைத்துவிட்டுச் சந்தோஷித்தான். ஆஞ்சநேயர் அதிக கோபங்கொண்டு வில்வி லம்பைப் பூட்டிக்கொண்டிருக்கின்ற அந்தத் தேவாந்தகன்மீது புறாவின்மேல் ராஜாளிப் பாய்வதுபோற் பாய்ந்து, அவன்கையிற் பிடித்திருந்த பெரிய வில்லைப்பறித்துத் தேவர்களெல்லாம் பல்லாண்டுகூறும்படி அதை அநேக துண்டுகளாக முறித்தார். அவருடைய வல்லமையைக்கண்டு வெகுகோபமாய்த்தேவாந்தகன்ஒருதோம ராயுதத்தையெடுத்துத் தேவர்கள் பயப்படும்படி அனுமானுடைய இடது தோளில்மோதிக்கர்ஜ்ஜித்தான். அதைக்கண்டுஸ்த்ரீமோகத்தைநீக்கி, இந்திரிய ஜெயம்பெற்ற ஆஞ்சநேயர் அதிக கோபங்கொண்டு அவனுடைய தோமரத்தைப்பிடுங்கி, இடி யிடித்தாற்போலமோதி, அவன்தேரையுடைத்துச், சாரதிதலையைச்சிதைத்துத், தேவர்களுக்கு முகமலர்ச்சியை யுண்டுபண்ணினார். அப்போது அந்தக் காலாந்தகன் ஒருசூலாயுதத்தை யெடுத்துப் பிரயோகிக்கும்படித் தொடங்கினான்.

அவனை ஆஞ்சநேயர் ஒரு இமைகொட்டு முன்னமே அவன்மேல் எதிர்த்துப்பாய்ந்தார். காலகோடி விஷத்தைப் பார்க்கிலுங் கொடியவனான அந்தத் தேவாந்தகனும், எதிர்த்துநின்றான். அனுமான் யமனுடைய தண்டாயுதத்துக் கொப்பான தம்முடையகையால் அவன்பிடர்மூலத்தில் ஒரு குத்துக்குத்தி, அவனுடைய தலையையடச்சி உயிரையொடுக்கினார். அதை அதிகாய னெதிரேநின்று

பார்த்துக்கொண்டிருந்து, வடவாமுகாக்கினி
யைப்போற்சீறிப் புண்ணிலிருந்து வழிவது
போ லிருகண்ணிலிருந்து ரக்தவெள்ளம்
பொழியும்படியாக இப்போதே உன்னுயி
ரையுண்டுவிடுகிறேன், உன்னை இனி விடமாட்
டேனென்று சொல்லிக்கொண்டே தன் தே
ரைவேகமாய் விட்டுக்கொண்டு அம்பு வருவ
துபோலவந்தான், அனுமானும் அப்படியே
சலியாமல் நின்றார். அந்த அதிகாயன் வரு
ம்போது, முன்னிட்டசேனை பின்னிடவும்,
பின்னிட்டசேனை முன்னிடவும், பிரிந்துநின்
றவர்களெல்லாம் ஓடிவந்து ஒன்றாய்ச் சேர்ந்
தார்கள். இப்படி அதிகாயன் மேருமலை
போலேயிருக்கின்ற அனுமானை வந்தெதிர்த்
துப் பொன்மலையையும் முறிக்கும் வல்ல
மையோடு தோன்றிச் சொல்லுகின்றான்.—
நீ என்னுடைய தம்பியாகிய அக்ஷகுமாரன்
தனித்து வந்தவனை வெட்டாற் தரையில்
போட்டுத் தேய்த்து நசுக்கிக் கொன்றுவிட்
டுக் கடலைத்தாண்டி ஓடிப்போய் விட்டபடி
யினாலே தப்பிப்பிழைத்துப் போனாய். இ
ப்போதுவந்து நடுவேநுழைந்து தேவா
ந்தகனையுங்கொன்றாய். அதைப்பார்த்து எதிர்
த்துவந்தேன். உனக்கு ஆயுள்நாள் முடிந்து
விட்டபடியால் இன்றைக்கு அகப்பட்டாய்.
இன்றைக்கு நீதப்பினால் இனி என்றைக்கும்
உன்னோடு நானெதிர்க்கிறதேயில்லை. நீ யெங்
களை அனேகவிதமாய் வருத்தப்படுத்தியிருக்கி
ன்றாய். இந்தலக்ஷ்மணனையும், உன்னையும்வெ
ற்றிபெறாமல் வியர்த்தமாய்ப்போகாத என்
பாணவருஷித்தால் கொன்றாலல்லாமல் நான்
திரும்பிப்போகின்றதில்லை. இதை நீகேட்டியா
ய்நம்பு, இந்தவார்த்தை தப்பமாட்டாது. தப்ப
மாட்டாதென்று, தன்னிரண்டுகையையும் பி
சைந்து மேகங்கர்ஜ்ஜித்ததுபோலச் சப்தித்
துச்சிரித்தான். ஆஞ்சநேயர் ஒய் குகையிலிரு
க்கின்ற சிம்ஹத்தையொத்த அதிகாயனே!
என்னை அப்படியே நீ கோபிக்கலாம், உன்பி
ன்னேநிற்கின்ற திரிசிரனென்பவனையும், உன்
னோடுகூடப் பூமியிற்போட் டரைத்துவிடும்
படியாகக் கூப்பிடென்று சொன்னமாத்திர
த்தில், அதுகேட்டுத் திரிசிரனென்பவனும்,
ஆமாம் நீ சொன்னது மெய்தானென்று
கோஷித்துக்கொண்டு வந்துசேர்ந்தான்.—
ஸ்ரீராமதூதரும் சாம்புசிவாம்ச பூதருமாகி
ய ஆஞ்சநேயரும் அவர்களுடனே எதிர்த்து
உங்களில் சாகாதவர்களெல்லாம் பலமுள்ளவ
ர்கள்தானென்று சொல்லிக்கொண்டு வாய்
மென்றுகொண்டு பக்கத்தி லிருக்கின்றவர்க
ளுக்குள்ளே நுழைந்துபோய்த் தேர்மேல்
பாய்ந்துகுதித்துத் தம்முடைய பலத்தால் ச
முத்தமேகங்கள் மூடிக்கொண் டிருக்கின்ற
மலைபோன்ற அரக்கத் திரிசிரனைப் பிடித்துத்
தூக்கிப் பூமியில்மேற்போட்டுக் காலால்மிதி
த்து அரைத்து, அந்த ராக்ஷசர்களுடைய ப
ழியை வாங்கும்படிக்கொன்று மேற்கு வாச
லிலும் போர்நடக்கின்றதென்று, ஒரு இமை
ப்பொழுதுக்குள்ளாக அவ்விடம் போய்ச்
சேர்ந்தார்.

அப்போது அதிகாயன் நின்றபடியே நி
ன்று இன்னது செய்யவேண்டு மென்பதுந்
தெரியாமல் கண்களில் கண்ணீரும், அக்கினி
யும், சொரியும்படியாகப் பரிதபித்துக் கோ
பித்துநின்று, இந்த அனுமான் எதிர்த்து நிற்
பானேயானால், பார்வதியை இடப்பாகத்தி
லுடைய ருத்திரமூர்த்தியு மெதிர்த்துநிற்கச்
சக்தியுள்ளவனல்ல னென்றுசொல்லி அதிக
கோபத்துடனே கையைஅலைசத்து, நாமொரு
காரியத்திற்குவந்து வேறொரு செய்கையில்நி
ன்று முயல்கிறது வீரலக்ஷணமல்ல. மஹாவீ
ரர்களுக்குள்ளெல்லாம் உயர்ந்த வீரனான இ
வனைப் பிறகுபார்த்துப் பேசலாமென்று, தன்
தேரை இளையபெருமாள்மீது செலுத்தும்
படிச் சாரதிக்கு நியமித்துத் தேரோசை கட
லொலியைக் கெடுக்கவும், வில்லி நாணோசை
மேக கர்ஜ்ஜிதத்தை அடக்கவும், யுத்தசன்னத
த் தொனியும், பேரிகை முழக்கமும், அஷ்ட
திக்குகளையுஞ் செவிடுபடுத்தவும், கிண்கிணி
மாலை சப்திக்கும்படியாக, வீரகண்டாமணி
யைத்தரித்த அதிகாயன் சேனைகளுந் தானு
மாகவந்து நின்றான். தேவர்களெல்லாம் ப
ல்லாண் டிசைக்கும்படியாக இளையபெருமா
ளும் அவனோடு எதிர்த்துவந்து நின்றார்.—
அதைக்கண்டு வாலிபுத்திரனாகிய அங்கதன்
அதிவேகமாயோடிவந்து வில்வீரர்களுக்குத்
திலகம்போலிருக்கின்ற சுமித்திரை இளஞ்சிங்
கமே! இராமாநுஜனே? அதிகாயன் தேரின்மே
லேறியிருக்கத் தேவரீர் பாதசாரியாய் அவனோ
டுநின்று யுத்தஞ்செய்வதழகல்லவே! அடியே
ன் தேவரீருடையதிருமேனியைத் தாங்கவல்ல
மையற்ற அற்பனாயிருந்தபோதிலும், கிரு
பைசெய்து அடியேனுடையதோளின்மேலேறி ய
ருளவேண்டுமென்றுபிரார்த்திக்கஸ்ரீராமமூர்
த்தியின் திருத்தம்பியாகிய இளையபெருமாள்
நல்லதென்று அந்த அங்கதன்தோள்மீது தம
து திருவடிக்கமலங்களைவைத்தேறியருளினார்.
பெரியதிருவடியாகிய கருடனைப்போல அங்
கதன், இளையபெருமாளைத் தாங்கிநின்ற வல்
லமையைநோக்கித் தேவர்களெல்லா மனங்கு
ளிர்ந்து புஷ்பமாரி பொழிந்தார்கள். ஆயிர

குதிரைகள்பூட்டி இடியைப்போலச் சப்திக்கின்ற அந்த அதிகாயன் தேர்போன திசைகளெல்லாம் அங்கதனும் காற்றடியைப்போலச் சாரிபோடுவான். அந்தத்தேர் மேலேஎழும்பினால் தானும்மேலேபோவான் அது கீழே இறங்கினால் தானும் கீழேவருவான். அது ஆகாசத்திற்போனால் தானும் ஆகாசத்திற்போவான். இந்தப்பிரகாரமாகஅங்கதன் கடல் நீரெல்லாம் அக்கினிமயமாகக் கொதிப்பெழும்படிக் கலக்கினான். அந்தச் செய்கையைப்பார்த்தவானர வீரர்களெல்லாம் ஆனந்தமுற்று ஆர்ப்பரித்தார்கள். தேவர்களெல்லாம் இந்த அங்கதனுடையசெய்கை அந்தக் கருடபகவானுக்குமுண்டா யிருக்கமாட்டாதென்று தங்கள் கைகளைவிரித்தார்கள். பிறகு இளையபெருமாளுடைய சரமாரி, அதிகாயனுடைய யானைகள் மீதும் குதிரைகள்மீதும் வதைத்ததுகள். ராக்ஷசர்கள்பக்ஷத்தில் மேககர்ஜிதத்திலும் மூன்றுமடங்காகப் பேரிகை முழங்கினதுகள். வேணுநாதங் கோஷித்ததுகள். பெரியதேர்கள் ஒலித்ததுகள். குதிரைகள் அனுமானித்ததுகள் தவளச்சங்கங்கள் தொனித்ததுகள். வில்லின்குணத்தொனி அதிர்ந்தது. வீரகண்டாமணியும், ரத்நாபரணங்களும், கலகல வெனச் சலித்ததுகள். வீரர்களுடைய அதட்டுதலும், அவர்களுடைய சிம்ஹநாதமும் இடித்ததுகள். அதிகாயனுடைய யானைகளிறக்கவும், பதாதி வெள்ளமாளவும், காற்றுக்கொப்பான குதிரைகள் மடியவும், இவைகளைப் பார்த்து யமன் பயப்படவும், தங்க மிழைத்ததேர்கள் எரிந்து போகவும், ரணக்களமெல்லாம் வெளியிடமாய் போகவும், அவ்விடத்திலுள்ளவைகளெல்லாம் பொடிப்பொடியாய் விடவுமாக இளையபெருமாள் பிரயோகித்த பாணம் பெருமாரியாய்ப் பாய்ந்ததுகள். அப்போது திரிலோக நாயகராகிய ஸ்ரீரகுநந்தனருடைய திருத்தம்பியார் எதிர்நிற்கின்ற ராவணனுடைய மகனைநோக்கி, உன்னுடைய அபிப்பிராய மென்ன? உன்சேனையெல்லாம் சின்னபின்னப்பட்டுப் போனால் போய் விடுகின்றாயா? அப்படிக் கில்லாமல் சண்டைசெய்யத் தெரிந்து நீ மாத்திரம் நின்று என்னோடு போர்செய்கின்றாயா? சொல்லென்று கேட்க, யமனைக்காட்டிலுங் கொடியவனான அதிகாயன் என்னோடுகூட வந்தவர்கள் உன்னோடு சண்டைசெய்கிறவர்களல்ல எதிர்த்திருக்கின்றவர்களும், பார்க்கும்படியாகவே வந்தவர்கள் வேறல்ல, இப்போது போர்செய்வ தெல்லாம் உன்பிணத்தை காக்கைகள் காக்கும்படிச் செய்யத்தானே. நானுன்னைக்கூப்பிட்டது, இதற்காகத்தானென்று சொல்லிப், பின்னும் உன்னை அந்தப் பார்வதியே காக்கட்டும், அல்லது அந்த உமையவளை இடது பாகத்திலுடைய ருத்திரபகவானே காக்கட்டும், தேவர்க ளெல்லாரும் காக்கட்டும், ஏழுலோகத்தவர்களுங் காக்கட்டும், யாவர்காத்தபோதிலும் உன்னுடையஆயுசு இன்றோடு முடிந்து விடுமென்று சொல்லித் தன்சங்கத்தைத் தொனித்து, மூங்கிலுருவங் கொண்டிருக்கின்றயமனாகிய தன்வில்லை வளைத்துக் குணடங்காரம்பண்ணி, இடியைப்போலச் சிம்ஹநாதமுஞ் செய்தான். அப்படி அதிகாயன் சொல்லக்கேட்ட இளையபெருமாள் புன்சிரிப்புச் சிரித்து, நீ சொன்னபடி எனக்கு ஒருவருந் துணைவரமாட்டார்கள். நானொருவனுமே உன்னோடு சண்டை செய்து தோற்றாலுந் தோற்கின்றேன், என்னை நீ ஜெயித்து விட்டாயேயானால் முன் நீ சொன்ன தேவர்களையெல்லாஞ் ஜெயித்தவனே யாவாயென்று சொல்லி, மின்னலைப் போலப் பிரகாசிக்கின்ற ஒருபாணத்தை வில்லில்தொடுத்துப் பிரயோகித்தார். அதை மலையை அவமதிப்புச் செய்யும்படியான தோள்களையுடைய அதிகாயன், ஒரு அக்கினிபாணத்தைத் தொடுத்து ஆகாசத்திலேயே துண்டாக்கி விட்டுக், கண்ணில் விஷமுள்ளதான குக்குடசர்ப்பம்போன்ற பதினாறுபாணத்தைப் பிரயோகித்து லக்ஷ்மணா ! இந்தப் பாணங்களை விலக்குப் பார்ப்போமென்று கர்ஜ்ஜித்தான். இளையபெருமாளானவர் அவனெய்த பாணங்களை யெல்லாம் தமது பாணத்தாலே முறித்துவிட்டு, மேருவையும் பிளக்கவல்ல பாணங்களை அநேகமாகப்பிரயோகித்தார். குபேரனை எதிர்த்து யுத்தஞ்செய்தவனான அதிகாயன் அவைகளையெல்லாந் துண்டு துண்டாக்கி விட்டுக், கூர்மையான சிலபாணங்களை இளையபெருமாள்மீது பிரயோகித்தான். அவனெய்த பாணங்களையெல்லாம் இவர் அக்கினி முகாஸ்திரங்களால் பொடிப் பொடியாக்கி வீரகர்ஜ்ஜனைசெய்துகொண்டிருக்கின்ற அந்த அதிகாயனைப்பார்த்துக் கோபித்துத் தெய்வத்துக்கொப்பான சிலபாணங்களைப் பிரயோகிக்க அவைகள் தவறாமல் அவன் அணிந்திருந்த கவசத்தை இரண்டாய்ப்பிளந்து விட்டதுகள். அப்படி அந்தப் பாணங்கள் அதிகாயனுடைய கவசத்தைப் பிளந்துகொண்டு அவன்மார்பில் நுழைந்த மாத்திரத்தில் அவன் மூர்ச்சையாய்த் தேரிற்சாய்ந்து சோகமாகிக்கொண்டிருந்தான். அவ்வளவு நேரத்திற்

குள்ளே அவனுடைய சேனைகளையெல்லாம்
இளையபெருமாள் கோடிகோடியாகப் பாண
ங்களைப் பிரயோகஞ்செய்து துண்டந் துண்
ட கண்டங் கண்டமாய்ச் சிதைத்துக் கொன்
றார். இப்படிப் பக்கத்திலிருந்த சேனைக
ளெல்லாம் மாண்டவிதத்தையும், அவர்களை உ
ருவிக்கொண்டு போகின்ற அம்புகளை இவ்வ
ளவென்று தொகைசெய்யக் கூடாதவிதத்தை
யும் பார்த்துச் சேனைக்கு நடுவேநின்று தான்
அடைந்திருந்த சோகந்தீர்ந்தும் தீராமையு
மாயிருக்கும்போதே அதிகாயன் வில்லைக்கை
யிலேபிடித்து, அதிககோபத்துடனே மேக
வருஷத்திலு மூன்றுபங் கதிகமாக பாணவ
ருஷங்களை சாசரவென்று பொழிந்து நிறை
த்தான். அப்போது ஆகாசமெல்லாம் அம்பு
கள். ஆகாச எல்லையெல்லாம் அம்புகள். பூ
மியெல்லாம் அம்புகள். மலைகளெல்லாம் அ
ம்புகள். போர்க்களத்தில் நின்றவர்கள் தே
கமெல்லாம் அம்புகள். அவர்களுயிரெல்லா
ம் அம்புகள். சமுத்திர நீரெல்லாம் அம்புக
ளாக்அதிகாயன் நிருமித்துவிட்டான். அதனால்
அஷ்டதிக்குகளுமறைந்துவிட்டன. தேவர்க
ள் மனம் பயத்தா லிருண்டது. அதுபோல
வே சூரியகிரணங்களு மழுங்கிவிட்டது. சூ
ரியனுமறைந்து இருண்டுபோனான். பூமி
முழுதும் பாணநிறைத்து அதிர்ந்தது. ஆ
காசமும் பாணங்களால் நிறைந்துவிட்டது.
அந்தப் பாணங்கள் கக்கிக்கொண்டு வருகிறதீ
யும், அவை ஒன்றுடனே ஒன்று தாக்குதலா
லுண்டாகிறதீயும், ஒருசேரப்பற்றி லோக
மெல்லாம் புகையாய் நிறைந்துவிட்டது. இ
ன்றோடே வானரசேனையெல்லா முடிந்து
போய் விடுகின்றதல்லவா! இந்த அதிகாய
னை ஸ்ரீராமருடைய திருத்தம்பியார் ஜெயிக்
கமாட்டுவாரோ? இவர்கற்ற வித்தையெல்
லாம் யமனுக்கு ஆகாரமாய்விட்டதோ? கொ
ல்லுகிறதற்கு இந்த அதிகாயன் கற்றவித்தை
தா னெப்படிப்பட்டதா யிருக்கின்ற தென்
று தேவர்களெல்லாம் பயந்து தத்தளித்தார்
கள். அவன் அங்கதகுமாரனுடைய நெற்றி
மீதும், அவன்தோள்மேலும், அவன்மார்பி
லும் ரணமயமாம்படி பாணத்தைப் பிர
யோகித்துப், பின்னும் மூன்றுபாணங்களை
இளையபெருமாள்மீதும் ஏவிவிட்டுத், தன்
வீரசங்கத்தை யெடுத்துப் பூரித்துத் தேவர்
களுடைய தலைகள் நடுக்கங் கொள்ளும்படி
அஷ்டகாசஞ் செய்தான். அங்கதனுடைய
தேகத்தில் அம்புபட்டு மலையிலிருந்து அரு
வியாறு ஒழுகுவதுபோல ரத்தவெள்ள மொ
ழுகுவதை இளையபெருமாள்பார்த்து; ஆயிர
ம் பாணங்களினால் அதிகாயனுடைய குதிரை
களின் தலைகளை அறுத்து அந்தக் குதிரைச்சா
ரதியையும் சிதைத்து, அவன் பிடித்திருந்த
வில்லையு முறித்தெறிந்தார். உடனே வேறொ
ரு வில்லை வளைத்துக்கொண்டு அப்போர்க்களத்தி
ல எதிர்த்துநின்ற அதிகாயன்மீது இளையபெ
ருமாள் அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்
தார். அதைக்கண்டு அதிகாயனும், அக்கினி
யாஸ்திரத்தை விட்டான். இரண்டஸ்திரங்க
ளும், ஒன்றோடொன்று எதிர்த்துப் போர்
செய்துகொண்டிருந்ததுகள். மேலும், இ
ளையபெருமாள் இடிக்குச் சமமான வேறே
அக்கினி முகப்பாணங்களை தொடுத்துவிட்
டார். அவைகள் அதிகாயன்மார்பில்பட்டு உ
ருவினதுகள். அதற்குக் கொஞ்சமாவது ம
னஞ்சோராமல் மிகுந்த வல்லமையுடனே
மழையைப்பார்க்கிலு மூன்றுமடங் கதிகமா
கப் பாணங்களை வீரஅஷ்டகாசஞ்செய்து
அதிகாயன் பிரயோகஞ் செய்தான். அந்த
ப் பாணங்கள் பின்னே நின்றவர்கள் முன்
னே நின்றவர்களைக் காணத்தக்கதாகத் துவார
ங்க ளுண்டாகும்படி தேகமுழுவதுஞ் சல்ல
டைக் கண்களாகத்திறந்து விட்டதுகள். இந்த
ப்பிரகாரமாக அதிகாயன் மூர்ச்சியாமலும் உ
யிர்மாளாமலும், வில்லைவளைத்துப்பொன்கட்
டின ஈர்க்குளுள்ள அம்புகளைஇடியைப்போ
லப் பிரயோகஞ்செய்துகொண்டிருக்கக்கண்
டு, பயங்கரமானபாணங்களைப் பிடிப்பிடியா
யெடுத்தெடுத்து நாணிற் பூட்டிவில்லை இருகு
தையும் பொருந்தவளைத்துச் சரவருஷமாய்
ப்பொழிந்துகொண்டு நிற்கின்ற லட்சுமண
ப் பெருமாளண்டை வாயுதேவன் தரிசனை
யாகிநின்று, ஐயா இளையபெருமாளே? இவ
ன்பிரம ஹஸ்திரத்தா லல்லாமல் ஒருநாளு
ஞ் சாகமாட்டா னென்று சொல்லிவிட்டு ம
றைந்து போனான். லட்சுமணர் அதைக் கேட்
டு, நல்லதென் றங்கீகரித்துப் பிரம்மாஸ்தி
ரத்தை பயத்தைத்தருவதாய் மின்ன லெறிக்
கின்ற இரண்டு பாணங்க ளுடன் சேர்த்துப்
பிரயோகித்து விட்டார். அந்த அஸ்திரமா
னது மலையிலு முயர்ந்த தோள்களை யுடை
ய அதிகாயனது தலையை அறுத்துக்கொண்
டு போகின்றதை ஆகாசத்தில் நின்று தேவர்
களெல்லாம் பார்த்துப் புஷ்பவருஷங்களை வ
ருஷித்து எங்கள் துக்கமெல்லாம் இன்றோ
டேபோய்விட்டதென்றார்கள். ராக்ஷசர்களெ
ல்லாம் ஒருவரையொருவர்கூவி அலறிக் கொ
ண்டு நான்கு பக்கங்களிலும் ஓட்டம் பிடித்
தார்கள் வானரர்களோ? அதிகாயனுடைய பா
ணவருஷத்தால் வருத்தப்பட்ட துக்கமும்

நம்மாலதா னிவர்களுக்கு ஜெய முண்டாகப்
போகின்றதென் றிருந்தகருவமும் நீங்கிப்
பிரமித்தார்கள். வெற்றிபெற்ற வில் வீரரான
இளைய பெருமானும் அங்கதன் தோளைவி
ட்டுக் கீழே குதித்தார். இளையபெருமானு
டைய அதிகவல்லமையுள்ள வெற்றியைக்கண்
ட விபீஷணர் ஆச்சரியப்பட்டு, அந்தரமார்
க்கத்தில் சித்த வித்தியாதரர் முதலான தேவ
சமூகங்களின் கோஷிக்கின்ற ஆநந்தகோஷத்
தைக்கேட்டு, மந்திரசித்தினையைப்போல இவரு
டைய வில்வல்லமை இப்படிப்பட்ட தானால்,
இந்திரசித்துக்கு முடிவுகாலம் நெருங்கி
விட்டதென் பதற்குச் சந்தேக மில்லையெ
ன்று நிச்சயம்பண்ணினார். இப்படிச் சாதுக்
கள் யாவரும் சந்தோஷித்தவரா யிருக்கும்
போது, பராவீரனான என்றமையன் அதிகா
யனிறந்தபோதும், இந்திரசித்துடைய முடிந்
து விட்டதென்று பூமியைசாந்தழியாமல் அ
நாயாசமாய் யுத்தஞ்செய்த உன் தோளைப்பார்த்
தும், கட்டித்தவராத உன்வில்லைப்பார்த்தும்,
நான்சும்மாய்ப்போய் விடுகிறது கூடாது போ
காதே போகாதே? என்று கூவிக்கொண்
டு தன் வாளாயுதம் பளபள வென்று மின்னு
ம்படி வீசி நராந்தகனென்பவன் தேரினி
ருந்து குதித்துக் கண்களில் அக்கினிபறக்கக்,
கோபம் வரவர அதிகரிக்கப், பூமி குழி
ந்து போகப் பாய்ந்தோடிப் பகற்காலத்தி
லே, சூரியன் தன் பரிவேடத்தோடு பிரகாசி
க்கிறதுபோல இடதுகையில் கேடகத்தைப்ப
ற்றிக்கொண்டு, சூல்கொண்ட மேகத்தில் மி
ன்னல் மின்னினதுபோல வாளானது பிரகா
சிக்கும்படி வீசிக்கொண்டுவந்து நின்றான்.
அப்போது வானரவீரர்கள் அவன்மீது விரு
க்ஷங்களையும், கல்லுகளையும், மலைகளையும், வாரி
வாரி வீசினார்கள். அப்படி எறிந்தவைக
ளெல்லாம், துண்டு துண்டு, சில்லுசில்லாக, எ
ட்டு திக்குகளிலுஞ் சிதறிப் போகும்படி ந
ராந்தகன்தன் கைவாளாயுதத்தினால் அறுத்துத்
தள்ளி வானரங்கள் பிடித்திருந்த கொடியையு
ம் இரண்டுகைகளையும் தலைகளையும் உள்ளேசு
ருக்கிக்கொண்டு நீர்மேற்பாசி ஒதுங்குவது
போலத் தன்னைக்கண்டு ஒதுங்கிப் பதுங்கும்
படிப்பாய்ந்து வானரசேனைக்குள்ளே நுழை
ந்தான். அதை அங்கதன்பார்த்து ஒருபெரி
யவிருக்ஷத்தை வேகமாய்ப்பறித்து உதட்டை
மடித்துச் சிரித்துக்கொண்டு இளைய பெருமா
னுடைய பாணவேகத்திலும் கடுவேகமாய்ப்
போய் அந்த நராந்தகன்மீது மோதினான்.—
அப்படி மோதின அங்கதன் கையிற் பிடித்த
அந்த விருக்ஷஞ் சழுவதைப் பார்த்தும்
பாராததற்குமுன் அதை அவன் தன் கைவா
ளாயுதத்தால் ஆயிரந் துண்டுகளாகக் கண்டித்
துவிட்டான். அப்போது வெறுங் கையுட
ன்நின்ற அங்கதன் நாம் சும்மாயிருப்பது வீ
ரமல்லவென்று ஒரு விருஷபம் போவது
போல ஒரு க்ஷணத்துக்குள் விஷம் பொங்கி
னதுபோலக் கொதித்து அவன் வீசினவாள்
வீச்சளவுக்குள் இடிப்பாய்ந்ததுபோலப் பா
ய்ந்து, அவனை வாளாயுதத்துடன் சேர்த்துப்
பிடித்துக்கொண்டான். அந்த வல்லமையைக்
கண்ட தேவர்கள் ஓகோவென்றுசப்தித்துக்கூ
த்தாடி இப்படிப்பட்ட மல்வித்தை இவனுக்
கேயல்லாமல் சிவபெருமானாகிய ருத்திரனுக்
குமுவராதென்றார்கள். அப்படி அவனைக்கட்டி
ச்சேர்த்துப் பிடித்து அவனை ஒரு குத்துக்குத்
தி அவன் பிடித்திருந்த வாளாயுதத்தைத் தன்
கூருள்ள நகங்களையால் பற்றிப் பிடுங்கிக் கொ
ண்டு அவனுடலையே! அந்த நராந்தகனைச்சரி
யிரண்டு கூறாய்த் துண்டுபட்டு விழும்படி ஒ
ருவீசுவீசித் தேவர்களும் ஆச்சரியப் படும்
படி, வீரகர்ஜ்ஜனை கர்ஜ்ஜித்தான். பின்பு, ஆதி
கூர்மருடைய முதுகின்மீது வைத்துக்கடை
ந்து தேவர்கள் அமிர்தங்கொண்ட மந்தரகிரி
யாகிய மத்தையொத்த தோள்களை யுடையவ
னும், நிறைந்த மஸ்துள்ளகள்ளில் ஊமத்தை
யைக்கலந்து குடித் தவனைப்போல மிகுந்த
மயக்கத்தை யுடையவனுமான மத்தனென்
றபெயருள்ளவன் ஒரு பெரிய மதயானையின்
மீது ஏறிக்கொண்டுவந்து அங்கதனை யெதி
ர்த்தான். அவனேறிவந்த யானையின் வேகத்து
க்குவாயுவேகத்தையு மொப்பிடலாகாது. அத
ன் முழக்கத்திற்குக் கடல்முழக்கமும் ஒப்பா
க மாட்டாது. அது கொல்வதுபோல யம
னுங்கொல்லத் தக்கவனல்லன். அதன் கொ
டுமைக்கு இடியும் சமமல்லாவிட்டால் பின்
பெதை யொப்பிட்டுச் சொல்லத்தகும். அ
தன் கோபத்திற்கு முன்னே கோபமென்
ற ஒருகுணமும் வேறேயில்லை. இந்தக் கா
ரியங்களிலெல்லாம் இதற்கு இதுவே ஒப்
பாகுமல்லது வேறொன்றைச் சொல்வது எ
ன்ன பிரயோசனப்படும் அதனுருவத்துக்
குச் சரியாகச்சொல்லத்தக்க மலையும் வேறொ
ன்றில்லை. வானரவீரர்கள் அதிகவேகமாக எ
றிய மேலும் மேலுமாகவந்து வீழ்கின்ற கூ
ட்டங் கூட்டமான மலைகளெல்லாம் அந்த
யானைப்பாகர்கள் வில்லில்பூட்டித் தெறிக்கி
ன்ற வில்லுண்டைக்கும் சமமாகமாட்டாது
அவர்கள் வீசுகின்ற ஆகாசத்தை யளாவிய
விருக்ஷங்களெல்லாம் அந்தயானையின் மதஜ
லத்தில் மொய்த்துக்கொண்டிருக்கின்ற வண்

டுகளைத் தூரத்தூங் குஞ்சம்போல் இருந்தன
வென்று சொல்லினும் ஒவ்வாதுகள். அந்தயா
னை முறித்துத்தின்னுங் கருப்புக்கொப்பென்
றுகொண்டால் கொள்ளலாகும். முன் இளைய
பெருமாள் வில்விற்பூட்டியெய்த அம்புகளா
ல், அந்த ராக்ஷசர்களுடைய ரத கஜ துரக ப
தாதிகளாகிய நால்வகைச் சேனைகளு மென்
ன பாடுபட்டனோ ? அந்தப் பிரகாரமே !
இந்த வானர சேனைகளில், சில கவிகள் அந்த
யானையினுடைய காலிற்பட்டு மாண்டதுகள்.
சில வானரங்கள் பருத்த துதிக்கையிற்பட்டு
இறந்ததுகள். சில குரங்குகள் யமனுக்கொ
ப்பாகிய வாலில் அடிபட்டு அழிந்ததுகள்.
சில மந்திகள் பார்க்கப் பயங்கரமான நீண்ட
தந் தங்களால்குத்துண்டு செத்ததுகள். இப்ப
டித் தன்சேனையெல்லாஞ் சின்னபின்னப்பட்
டுப் போகிறதை அதிக தயையுள்ள வள்ளல்த
ன்மையுள்ள அக்கினிபுத்திரனாகிய நீலனென்
னும் வானரவீரன் அங்கிருந்த ஒரு மராமர
த்தைப் பிடுங்கிச் சக்கராயுதம்போலச் சுழற்
றிக்கொண்டு வந்தான். அதைக்கண்டு அந்த
மஸ்தனுக்குப் பின்துணையாகவந்த பெருஞ்
சேனையெல்லாம் ஓட்டமெடுத்ததுகள். அப்
படித் தன் சேனைகள் பின்னிட் டோடுவதைக்
கண்டு அந்த மஸ்தனென்பவன் நேராகப்பன்
னிரண் டம்புகளைஎய்து, அந்த மராமரத்தை
த் துண்டாக்கி விழுத்தினான். மறுபடியும்
நீலன் வேறொரு மலையைப்பிடுங்கி மஸ்தன்
மேல் விட்டெறிந்தான். அதை அவன் யானை
யைக்கிட்டி நெருக்கி நாறுபாணத்தால் ஆ
காசத்திலேயே பொடிப் பொடி யாக்கிவிட்
டான். பிறகு வேறே மலையைத் தேடிக்கொ
ண்டுபோக யத்தனித்த நீலனை அப்படிப்
போகவிடாமல் மேருமலையைச் சுற்றிவளைந்
த கார்க்கோடக சர்ப்பத்தைப் போன்ற தன
து தும்பிக்கையை நீட்டி, மிகுந்த கோப
முள்ள அந்த யானையானது தேவர்களும்
பயந்து நடுங்கும்படிப் பிடித்தது. பிடித்த
மாத்திரத்தில் நீலனென்பவன் பராக்கிரமமு
ம் மிகுந்த சக்தியும், உயிரும் ஒடுங்கிப்போ
ய் விட்டானென்று யாவரும் நினைத்து இரக்
கப்பட மூர்ச்சித்திருக்கும்போது, வளைந்து
வஜ்ஜிராயுதம்போ லிருக்கிற தந்தங்களினாலே
அவனைக்குத்தும்ப டி யானையானது யத்தனித்
த அந்தச்சமயத்தில்அதன் துதிக்கையும்,தலையு
ம், சிதறிப் போகத்தக்கதாகக் குதியொன்று எ
ழும்பிப்பாய்ந்து போய்விட்டான். ராக்ஷசர்க
ளெல்லாம், அதைக்கண்டு நடுங்கினார்கள். தே
வர்கள் இவனுடைய வீரம் நன்றாயிருந்தது,
நன்றாயிருந்ததென்று சொல்லிக் களகளவெ
ன்று சிரித்தார்கள். அப்படி நீலன் பூ
மியில் வீழ்ந்தான் வீழ்ந்தானென்று சொ
ல்லுகிறதற் குள்ளேதானே தலையுடைந்து அதி
லிருந்து வடிகிற ரக்தவெள்ளத்தில் பெரியம
லைபோல முண்டமான யானைவீழ்ந்தது. வீழ்
ந்தவுடனே மஸ்த்தன் ஆகாசமார்க்கத்தில் பா
ய்ந்து நின்று அர்த்தசந்திர பாணங்களை ம
ழைபோலச் சொரிந்தான். அவன் சொரிவ
தைக்கண்டு நீலன் அந்த யானைமுகத்தி லிரு
ந்த தந்தங்களைப்பிடுங்கி அதிக வேகத்துட
னே மஸ்த்தன்மீது வீசியெறிந்தான். அ
வைகளை அவன் ஒரு அம்பினாலறுத்துத் தள்
ளிவிட்டு, வேறோரம்பை மலையையொத்த
புஜத்தையுடைய நீலன் மார்பில்பதிய எவினா
ன். அந்தப் பாண மெய்தகாலத்திற் குள்ளாக
நீலனால் யானை சாகவில்லையென்று சொல்லும்
படியாக மஸ்த்தன் வேறொரு மலைபோன்ற
பெரிய யானையின்மே லேறிக்கொண்டு வாயு
வேகமாகச்செலுத்திவந்தான். நீலன் அதைக்க
ண்டு குதியொன்று அந்தமஸ்த்தன்மீதுபாய்ந்
து அவனைக்கைவில்லுடனேமதங்கொண்டயா
னைக்கெதிரே ரணக்களத்தில் விழும்படியாக
த்தள்ளினான். அப்படி விழுந்தவன் கீழேயி
ருந்து எழுந்து நிற்கிறதற்கு முன்பாக அ
ந்த யானையானது மஸ்த்தனைத் தன்னுடைய
ஆளென்றுதெரியாமல் கீழேதள்ளி காலாலு
தைத்துத் துதிக்கையாற் சுற்றிப் பற்றித் தூ
க்கி இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக,இ
ழுத்திழுத்தலைக்கழித்தது. அதைச் சகிக்கமா
ட்டாமல் மஸ்த்தன் தன் யானையைத் தானே
ரணக்களத்தில்கொன்று வீழ்த்தினான். அப்
படி அந்த யானையைக்கொன்று தன்பெ
ரிய கையாலே பூமியில் தள்ளி மின்னலைப்
பார்க்கிலும் பிரகாசிக்கின்ற கோரதந்தங்களை
யுடைய மஸ்த்தனது கோபத்தைப்பார்த்துப்
பொன்னுங் கறுப்பா யிருக்கிற தென்னத்தக்
கதாகக் கண்களில் நெருப்புப்பொறிபறக்க நீ
லன்பாய்ந்து மஸ்த்தனுடைய கைகளைப்பற்றி
முறுக்கி அவனுடைய மார்பிலொரு குத்துக்
குத்தினான். அந்தக் குத்துப் பட்டவுடனே !
மஸ்த்தன் மாண்டுபோனான். அப்படி உன்
மத்தனுடைய வஜ்ஜிர மலைபோன்ற மார்பில்
இடிபோன்ற கையானது தாக்கின வல்லமை
யைப் பார்த்தும், அந்த உன்மத்த னேறிவந்த
யானைமாண்டு போனதைக்கண்டும், தன்ஜ
ன்மஸ்வபாவத்தாலும், தருமத்தைக் கடந்து
நடந்த பாவத்தின் ஏற்பாட்டாலும் வயமஸ்த
னென்கிற மற்றொரு ராக்ஷசவீரன் அதிக உக்
கிரங்கொண்டு ஒரு பெரிய தேரின்மேல் ஏறி
வந்தான். பொய்யைக்காட்டிலும் பெரிய தே

கந்தை யுடையவனும், மலையைக்காட்டிலும்,
பருத்த தோள்களை யுடையவனும்,மஹாகொ
டிய வல்லவனும், வில்வீரனுமான அந்த வ
யமஸ்தன் வந்து, வீரகண்டாமணி காலில் க
ணீர்கணீரென்று சப்திக்கச் சேனைகள் சிங்க
நாதஞ்செய்ய ஆயிரம்பேய்களிழுக்கும் படி
யான அந்தப் பெரிய தேரிலிருந்து மிகுந்த
ஆர்ப்பாட்டஞ் செய்கிறதும்,லோகத்தைக் கிடு
கிடாயமானமாய் அதிரப்பண்ணுகிறதும், இ
டியைப்போலச் சுற்றுமுற்றும் பார்க்கிற
தும், இறந்த ராக்ஷச வீரர்களைப்பார்த்து இ
வர்களெல்ல அற்ப பலவந்தர்க ளென்று
நிந்திக்கிறதும், அஸ்திர வருஷிஞ் சொரி
கின்றதும், வானரசேனைகளைப் பின்தொ
டர்ந் தோடுகிறதுமாக இருந்தான். இவ
னுடைய தைரியத்தைப் பார்த்து இவனோ
டு ஒருவருமேற்க இல்லையே ! நாம் எ
திர்க்கலாமென்று விருஷபனென்கிற வானர
வீரன் அவனுக்கு முன்வந்துநின்றான். அவ
னைவயமஸ்தன்பார்த்துச் சிரித்து நீயென்
னைக்கெவ்வளவு?வெகுசிறியவன்?உன்னைச் செ
யிக்கிறதினாலே எனக்குப் பிரயோசனமென்
ன,ஆனால் உங்களையெல்லாம் நான்தான் கொ
ல்லப்போகிறேன்,இப்போது பிரம்ஹாவேவ
ந்து என்னுடனெதிர்த்தாலும் நானெதிர்க்க
மாட்டேன். எங்கள் சக்கிரவர்த்தியாகிய பிரதா
ப லங்கேஸ்வரனுடைய குமாரனான அதிகாய
னைக் கொன்றவனெவனோ அவனைக்கொன்றுவி
ட்டுப் பின்பு குரங்குகளின்மீது கோபிப்பே
ன் என்றான். அதைக்கேட்டு விருஷபன் கொ
ஞ்சமும் அஞ்சாமல், அடா பைத்தியக்கா
ரா ! நீ உன்வாயா லெவ்வளவு உளறினாயோ !
அவ்வளவு வல்லமையும் உனக்கிருக்குமானால்,
பசியுண்டு வாழும்படியான சொற்பபலமுள்
ளப்பல்களைத் துணைக்கூட்டிக்கொண்டு வந்த
தினாலேயே!உன்பவுஷியந்தெரியவில்லையா?த
குந்த மருந்தைத்தேடிச் சாப்பிடாத நோயா
ளியைப்போல,நீ உன்னுடைய வல்லமையெ
ல்லாம் என் முன்பாகவே ஒப்பந்துபோய்விட
ப்போகின்றாய்பார். ஓடிப்போக வேண்டுமா
னாலோடிப்போ? ஓடாமல் என்னோடெதிர்த்
தாயானால் உன்னோடு நான் அநாயாசமாக வி
ளையாடிச் சண்டைசெய்கிறேன். என்றதைக்
கேட்டு அதிக கோபிஷ்டனாய் வயமஸ்தன்
தன் கையிற்பிடித்த பொன்னாற்செய்த குதை
யையுடைய வஜ்ரவில்லைப்போலவே தன் பு
ருவத்தையும் வளைத்து விருஷபன் மார்பில்
பத்துப் பாணங்களைப் பிரயோகித்தான்.—
அந்தப் பாணங்கள்பட்டு ஊற்றெடுத்து ரக்
தவெள்ளம் பாயும் மார்பை யுடையவனா

ன,விருஷபனென்பவன் அதிவேகத்துடனே
பொற்கலசமமைத்து விருதுக்கொடிகட்டின
அந்தத்தேரைத் தனது பெரிய கையால் பிடி
த்துத் தூக்கிவிட்டெறிந்தபோது பச்சைக்கழு
ற்காய்போன்ற கண்களையுடைய பேய்களெல்
லாம்பறந்துபோய்விட்டதுகள். சமுத்திரமுக
மாய் ஆகாசத்தில் ஓடுகின்ற மேகமானது ஒரு
மிக்கக்கொட்டிய மழைநீரைப்போல தேரிலி
ருந்து விழுகின்ற தேகத்தையுடையவனாகிய அ
ந்த வயமஸ்தன் அந்தத்தேருடனேகூடக் க
டலில்வீழ்ந்து தன் சிலையுங், கலையும், மற்ற
ஆயுதங்களும், ஆபரணாதிகளும், அந்தக்
கடல் நீரில் அமிழ்ந்துவிட்த்,தான் மாத்திரங்
கட்டையைப்போல அம்மணமாய் மேலெ
ழும்பி, அதிக கோபத்துடனேவந்து பூமியி
ல் குதிக்கிறதற்கு முன்பாகவே அடா சண்டா
ளா!நீ அப்படியேபோய்ச் சொர்க்கத்தை அ
டைந்துவிடு, என்று தானும் ஆகாசத்தில் பா
ய்ந்து,இருளைக் கட்டிப் பிடிக்கின்ற சூரியனை
ப்போல அந்த ராக்ஷசனை மலையிலும் வலிய
தோள்களையுடையவிருஷபன்கட்டிப்பிடித்து
இறுக்கினபோது,இடைவெளிவிட்டு வளர்ந்த
பற்களையுடைய பிலம்போன்ற வாயின்வழியா
க ரத்தங் குபுகுபென்று கக்கிக்கொண்டு உயி
ர் மேலேபறக்க,இந்திர தனுசோடுங்கூடிய க
ரிய மேகத்தைப்போல அவன் தேகமாத்திர
ம் பிணமாய்க் கீழேவிழுந்து விட்டது. இந்
தச்சண்டை இப்படியிருக்க, வானராதிபதி
யான சுக்கிரீவமஹாராஜரும்,தேவர்களை வெ
ற்றிபெற்றிருந்த கும்பனென்கிற ராக்ஷசவீர
னும் எதிர்த்து யுத்தகளத்துக்கு ஒரு அலங்
காரமாக நல்ல மல்லுயுத்தஞ்செய்து இருவ
ரும் ஆயிரந்தரம் இடசாரி வலசாரி சுற்றிச் சு
ற்றி, மஹாராஜா மராமரத்தையும்,கும்பன் த
ண்டாயுதத்தையுங் கொண்டு இரண்டு மலைக
ள் போர்செய்வதுபோலச் சண்டைசெய்தா
ர்கள். அதைக்கண்டு தேவர்கள் சிரமும், கர
மும்,நடுக்கமெடுத்தார்கள். இப்படியாக வா
னராதிபதியும் ராக்ஷசவீரனும், ஒருவரையொ
ருவர் எதிர்த்து அவரவர் தன்தன் மேனி
யில் ஒழுகுகின்ற ரத்தங்களை வழித்தெறிந்து
கண்களில்வழியாக அக்கினிப்பொறிகளைக் கு
புகுபென்று சொரிந்தும், அணிந்திருக்கிற
வெற்றிமாலையும், வீரகண்டாமணியும், சப்தி
க்கஉலாவியும், போர்செய்கின்ற இரண்டு சிம்
ஹங்களைப்போல ஒருவரையொருவர் கைக
ளினாலே அறைந்தும் சண்டைசெய்கையில் த
ண்டாயுதத்தைச்சுற்றி அந்த ராக்ஷச வீரன்
அண்டங்களெல்லாம் வெடித்ததுபோலச் ச
ப்தமுண்டாகும்படிச் சுக்கிரீவ மஹாராஜனை

யோங்கி யடித்தான். அடிக்கவே வானராதி பதிகண்டு தன் கையிலுள்ள மராமரத்தால், அந்தத் தண்ட அடியைத்தாங்கினார். அப்போது அந்த மராமரமோ?சின்னாபின்னமா யுதிர்ந்துபோய் விட்டது. பின்பு சுக்கிரீவமஹாராஜர் உன்னைக் கொன்றுவிடுவேனென்று சொல்லி, அதிக உக்கிரமாய்ப் புறப்படுகிற சமயத்தில் நினையாதபிரகாரமாய்நீலனென்கின்றவானரவீரன் மலைக்குச்சமமான ஒரு பெரியதண்டாயுதத்தைக் கொண்டுவந்து கொடுத்தான் அந்தத் தண்டைக் கையிலெடுத்துக் கொண்டு அண்டமும்,பூமியும், கிடுகிடென்று நடுங்கும் படியாகக் கர்ஜ்ஜித்து,அந்தப் பித்தனை வயமஸ்த்தனுடைய தோளிலும், மார்பிலும், அடித்துப் பிளந்தார். அதைக்கண்டு ராக்ஷசர்களெல்லாம் நடுங்கிப் பயந்தார்கள். அப்படிச் சுக்கிரீவ மஹாராஜரால் அடியுண்ட ராக்ஷசன் மிகுந்த அக்கினிமயமாய் மின்னுகின்ற இடிவிழப்பெற்ற பெரியமலையைப் போல அயர்ந்து நின்றதைக் கண்டவர்களெல்லாம் இவன் முடிந்து போவானென்று நினைக்கும்போது சொர்வுநீங்கி இதோ உன் தோள் முறிந்து விட்டதென்று சொல்லி ஓங்கிச் சுக்கிரீவர்தோளில் அடித்தான். அப்படிதோளில் அடியுண்டசூரியபுத்திரரான சுக்கிரீவமஹாராஜர் உடனே சோகம்நீங்கி இளையபெருமாளுடையபாணம்போல வேகமாய்ப் பாய்ந்து வயமஸ்த்தனைக்கிட்டி யாளிக்கொப்பான அவனுடைய மார்பில் கதையினாலே மோதினார். இப்படிச் சுக்கிரீவ மஹாராஜரும் வயமஸ்த்தனும் ஒருவனை யொருவர் கதையால் ஆயிரங்கோடி யடிகளுக்கு மேலும் அடித்துப் போர் செய்கிறதைக்கண்டு, தேவர்கள் இவர்களில் யார்ஜெயம் பெறுவார்களென்று பார்க்கும்படி நெருங்கிவந்து நின்றார்கள். இருவரும் கதைகளை இடியுடனே இடி தாக்ினது போல மோதவே! இரண்டு கதையும் பொடிப்பொடியா யுதிர்ந்து விட்டதுகள். பிறகு இருவருங் கைச்சண்டை செய்யத் தொடங்கி, மதத்த இரண்டு பெரிய யானைகளைப்போலப் போர்செய்து பத்துத் திக்குகளுஞ் செவிடுபடும்படி பலதரங் குதித்துக் கட்டிப் பிடித்தும், திரண்ட தோள்களால் மோதித் தாக்கியும், கைகளினால் குத்தியும், ஒருவர்மார்புடன் ஒருவர் மார்பை முட்டியும், சண்டை செய்கிறபோது சுக்கிரீவ மஹாராஜர் தம்முடைய பலமுள்ள கையை நெருக்கி, முஷ்டி பிடித்துக் கொல்லும்படியாகக் கொல்லன் சம்மட்டியால் புடைக்கிறதுபோல திடீரென்று அவன் மார்பில் குத்தவே! உலையிலுருகிக் காய்ந்த இரும்பு நசுங்குவது போல உடல் நசுங்கியும், மலை பிளவுபட்டதுபோல மார்பு பிளந்தும், அப்படியா இனிச் சண்டைசெய்யக்கூடிவாவென்று அந்தவயமஸ்தனியிறந்து சிரிக்கிறதைக்கண்டு,சுக்கிரீவர் ஐந்துதலைநாகம் வளையில் நுழைவதுபோலத் தமது கையை அவன் வாயில் நுழைத்து நீர்த்துப்பையைப் போன்ற நீண்டநாவை அவ னுயிருடனேகூடப் பறித்து விட்டார். வயமஸ்த னிறந்த உடனே நிகும்பனென்கிற பெயருள்ள ராக்ஷசவீரன் கண்களில் தீப்பறக்க வந்து இனி நீங்க ளெங்கே தப்பிப் போகப்போகிறீர்க ளென்று குதித்துக் கொண்டிருக்க,அங்கத குமாரன் அவனை வந்தெதிர்த்து மிகுந்த கோபத்துடனே இதுவரையிலும் ஒருவருஞ் செய்யாதயுத்தங்களெல்லாஞ் செய்கிறபோது, விஷத்திலுங் கொடியவனான நிகும்ப னென்பவன், கையிலொரு சூலாயுதத்தை யெடுத்துக் கொண்டு குத்தவந்தான். அதற்கு அங்கதன் ஸ்ரீதாளவிருக்ஷத்தைப் பறித்துக்கொண்டு, ஒரு நீலமலையை மேருமலையானது எதிர்த்துவந்ததுபோல வந்து தடுத்தான். தடுக்கவே நிகும்பன் சூலாயுதத்தை யெடுத்தெறிய யத்தனிக்கையில் அதை இப்போதே முறித்து விடுகிறேனென்று அங்தேன் பிரவேசிக்கிறதற்கு முன்னதாக,அந்த இருவருடைய எண்ணங்களையுந் தெரிந்த மாருதியென்னும் வாயுபுத்திரர் ஆகாசத்தி லிருந்து நெருப்புப்பொறி விழுந்ததுபோல வந்துகுதித்து, ஒருவராலும் தடைபடாத சூலாயுதத்தை விருஷபத்துக்குச் சமமான அங்கத குமாரன்மீது அதிக கோபத்துடனேவிட யத்தனித்த அந்த நிகும்பனைத் தம்முடைய இதழ்விரிந்த தாமரைமலரையொத்த திருக்கை அறையினாலே கொன்றுவிட்டு, மறுபடியுந் தம்முடைய இடத்திற்குப் போய்விட்டார். இறந்தவர்கள் போக மீதியான ராக்ஷசர்களில் இனி வானரர்களைத் தடுத்துப் போர்செய்கிறவர்களில்லாமையை நினைத்து ஒருநாளும் பிராணத்துடனே முதுகுகாட்டி ஓடாத ராக்ஷசர்கள் ஓட்டம்பிடிக்க வழிதேடினார்கள். வானரர்கள்ளா?பெரியவிருக்ஷங்களைப் பிடுங்கியடித்து, ராக்ஷசர்களைத் தப்பிப் போகாதபடிக் கொலை செய்தார்கள். அதிலும்தப்பி ஓடுகிற சமயத்தில் ஒருவ ரொருவர் முட்டின நெருக்கத்தால், அநேகராக்ஷசர்கள் மேலேவிழுந்து தங்கள்பின்னே ஓடிவருகிறவர்களுடைய கால்மிதியால் மிதியுண்டு இறந்தார்கள். கோடிபேர்களுக்கதிகமாகவே வானர வீரர்களுடைய கைக்குத்தினால் வருந்திப் புண்பட்ட தேகத்து

டோடினார்கள். பாடிப்பதியாகிய ரணகளத்தில் நின்றவர்களில் கணக்கில்லாத ராக்ஷசர்கள் வாடிநின்று போனார்கள். சில ராக்ஷசர்கள் தண்ணீர் தண்ணீரென்று கேட்டுக்கொண்டே யோடினார்கள். சில ராக்ஷசர்கள் தங்களுக்கு உதவியாளரில்லாமல் பயந்தோடி தடாகங்களி லொன்றுதற்கும் நீரில்லாமல் தாக வெப்பத்தால் நாவுலர்ந்து உடல் சோர்ந்து விழுந்தார்கள். சிலர் கண்ணீர் சொரிந்து உயிர்கலங்கி அழுது தங்கள் கால்வழியே ஓடுகிற தண்ணீரால் பூமி நனையும்படி தங்களூரைப் போய்ச் சேர்ந்தார்கள். சில ராக்ஷசர் ஆகாசத்தில் தாவிப்போய் மேலும் தாவச் சக்தியில்லாமல் பூமியில்விழுந்து மாய்ந்தார்கள். சிலர் பூமியிலேயே பெரிய மலைகளைப்போலக் குத்துயிராய் மாண்டுகிடந்தார்கள். அளவில்லாத ராக்ஷசர்கள் இருண்ட மேனியில் அதிகம் புண்பட்டவர்களாய்த் திக்கு விதிக்குகளா யோட்டம் பிடித்தார்கள். சில ராக்ஷசர்கள் தங்களுக்கு அறிமுகமானவர்களைக்கண்டு ஐயா! இந்த அம்புகளைப் பிடுங்கி விடுங்களென்று கிட்டவரப் பிடுங்கினமாத்திரத்தில் உயிர் நீங்கிக் கீழேவிழவும், இப்போது விழுந்தவர்கள் இவர்களென்றும் முன்னேவிழுந்து கிடக்கிறவர்கள் இவர்களென்றும், தேகமெல்லாம் புண்பட்டிருக்கிறபடியால் அடையாளந் தெரியாமல் வியசனப்பட்டு, உபசரிக்கவந்த ராக்ஷசர்களும் மனதைரியங் குறைந்துபோனார்கள். சில ராக்ஷசர்கள் குதிரைக் காலுதைபட்டு விழுந்து உடல்பதைத்தார்கள். சிலர் யானைக்காலி லகப்பட் டுருண்டு போனார்கள். சிலர் தேர்க்காலி லகப்பட்டு அப்படியே நசுங்கிப்போனார்கள். இப்படி நெருப்புப்பட்டுவெந்த வீட்டி லகப்பட் டவர்களைப்போல யுத்தகளத்திலேவந்த ராக்ஷசர்களெல்லா மாண்டுபோனார்கள். சில ராக்ஷசர் பயந்து வானர வேஷம்பூண்டு பூமியின்வழியாகவந்தவர்களைத் தேகத்திற்புண்பட்டுப்போகிற ராக்ஷசர் பலபேர்போய்ப் பார்த்து, இங்கே குரங்குகள் வருவதென்னவென்று கோபத்திலும் அவர்களோடு சண்டைசெய்ய இப்படியுஞ் சில ராக்ஷசர்க ளிறந்தார்கள். சில ராக்ஷசர் கீழேவிழுந்து பிராணம்போகும் சமயமாயிருக்கும்போது தங்க ளிரண்டு கண்களையுந் திறந்து பக்கத்தில் வியசனப்பட்டுக்கொண் டிருக்கின்ற தங்கள் சிநேகரைப்பார்த்துக், குடிக்கக் கொஞ்சந் தண்ணீர்கொடுக்கவென்றுகேட்க கொண்டுவந்து கொடுக்கிறதற்குள்ளாக மாண்டுபோனார்கள். சிலர் கொண்டுவந்து கொடுத்த தண்ணீரைக்குடித்துக்கொண் டிருக்கும்போதே விக்கி நடுவில் பிராணன் நீங்கினார்கள். சிலர் குடித்தானவுடனே மாண்டுபோனார்கள். சில ராக்ஷசர்களை அவர்கள் தகப்பன்மார் தூக்கிக்கொண்டு வீட்டிற்குப் போகும்போது வழியிற் பிராணனைவிட அவர்களை விட்டெறிந்து விட்டுத் தாங்கள்மாத்திரமே ஊர்போய்ச் சேர்ந்தார்கள். சிலர் ரத்தங் கக்கிக்கொண்டு கண்விழி பிதுங்கித் தங்கள் ஊர்த்திசை இன்னதிசை யென்று தெரியாமல் சுற்றிச் சுற்றித்திரிந்து, அவ்விடத்திலேயே உயிர்நீங்கி மாண்டார்கள். இந்தப்பிரகாரமான அவஸ்தையை யடைந்து மாண்டவர்கள்போக மிகுதியுஞ் சில ராக்ஷசர்கள் அதிம்போடி லங்காபட்டணத்தைச் சேர்ந்தார்கள். இந்தச் சண்டையைப் பார்த்துக்கொண்டிருந்து ஓடிவந்த தூதுவர்கள் மழையைப்போலக் கண்ணீர் சொரியும்படியாக வீரகண்டா மணியைத்தரித்த ராக்ஷச வீரர்களுக்கெல்லாம் ராஜாவான ராவணேசுவரனுடைய பாதத்தில் வீழ்ந்தார்கள். அப்படி வீழ்ந்த தூதுவர்களை ராவணன்பார்த்து, என்ன சமாச்சாரம் நடந்தது, சொல்லுங்களென்றுகேட்க, ஐயா ராவணேசுவரா! நீர் அனுப்பின சேனைகளில் திரும்பிவந்தது, மேருவுக்கு அணுவளவும் போதாது. நடந்த யுத்தத்தில் அதிகாயன் முதலான ராஜகுமாரர்களெல்லாம் தங்களாவியை ஒப்பித்து விட்டார்களென்று சொன்னதைக்கேட்டு, ராவணன் அதிக துக்கத்துடனே அழுது இறந்தார்களேயென்ற வெட்கமுள்ள கோபமும், வருத்தமும், ஒன்றுக்கொன்று சமுத்திரம்போலப் பொங்கிவழியப் பூமியின்மீது மாய்ந்துமாய்ந்து கண்களில் நெருப்பும், நீருஞ் சொரியும்படியாகப் பெரிய கடல்போல் விழுந்து திக்குகளைப் பார்ப்பான். அந்தத் திக்குகளைக் காத்துக்கொண் டிருக்கின்ற தேவர்களைப் பார்ப்பான். தங்கள் தங்கள் தந்தைமார்கள் அண்ணன்மார்கள், தம்பிமார்கள், நாயகர்கள், மைத்துனர்கள், சிநேகர்கள், இறந்தனர்களென்று ராக்ஷசஸ்திரீகளும், புருஷர்களும், அழுகிற கூக்குரல் இலங்கா பட்டணமெங்கும் எழும்பியதைக்கேட்டுத் தனக்குச் சம்பவித்த பழையநாமத்தை அடிக்கடி நினைப்பான். வெற்றிபெற்றுத் தன்கையி லிருக்கின்ற வாளாயுதத்தை நோக்கிப் பார்ப்பான். அவ்வாளாயுதத்தைப் பிடித்துப் பிசைகின்ற கையைப் பார்ப்பான். புகைந்து தீயும்படியாக மீசையையும் பார்ப்பான். ஆசையில் மூழ்கினவனைப்போல சிரிப்பான். மறுபடியும் அழுவான். அவ்வளவு வெட்கமுற்றுத்

நிலைகளை யிறங்கிக் கொள்ளுவான். பூமியை பேர்த்தெடுக்கலாமா வென்று நினைப்பான். ஆகாசத்தை எல்லாம் சுருட்டிவிடலாமாவென்று நினைப்பான். உலகத்தில் கணிதசாஸ்திரத்தால் கணிக்கப்பட்ட சகலஜீவகோடிகளையும் இந்தக்ஷணத்திலேயே கொன்றுவிடலாமாவென்று நினைப்பான். ஸ்திரீகளென்று சொல்லப் பட்டவர்களை யெல்லாம் மௌந்துவிடலாமா வென்று நினைப்பான். ஆறுப்புண்ணிலே நெருப்பு வைத்ததுபோல மானத்தினால் மனம் புழுங்குவான். அப்போது அங்கிருந்தவர்களெல்லாம், ஒருவரும் வாய்பேசாமலும், மூச்சுவிடாமலும், மனஞ்சகியாமலும், நடுங்கினதேகத்தை யுடையவர்களாகி, அழுதுகொண் டிருந்தார்கள். இப்படி யிருக்கும்போது காடுபோலிருக்கின்ற தோள்களையுடைய ராவணனுக்கு முன்பாக அக்கொடியோனுடைய பெண்சாதியும், அதிகாயனுடைய தாயுமான தானியமாலியென்கின்ற பெயருடையவள் மகனே மகனே யென்று ஓயாமல் கூவி, முட்டி மோதி அழுது கொண்டுவந்து மலைச்சிகரங்களின்மீது இடி விழுந்ததுபோல வளையல்களும், ரத்ந ஆரங்களும் சப்திக்கும்படி ஸ்தனங்களின்மீது கையால்படேர்படேரென்றறைந்தும், மலைக்குகைதிறந்தாற்போல ஆவென்ற வாயைத் திறந்தும், தலையென்ற மலைச்சிகரத்தில் கட்டிமுடித்திருந்த செம்பட்ட மயிர்க்கூந்தல் அவிழ உலையிலுருகின செம்பைப்போல அருவிக்கொப்பாக நீரொழுகுகின்ற செவந்த கண்களையுடையவளாய் ராவணன் கால்மேல் விழுந்து மெருகிடப்பட்ட அங்குள்ள தளவரிசையெல்லாம் பொறுக்குப் பொறுக்கா யெழும்பும்படிப் பெரிய மலைப்பாம்பைப்போலப் புரண்டு புரண்டு அடக்கக்கூடாத துக்கத்தையடைந்து, தானிருவனாயினும் அழுதவர்களையுங் கண்ணால்பார்த்து அறியாதவளாகையால் இவ்விதமாய்ச்சொல்லி யழவேண்டுமென்பதுந் தெரியாமல் ராவணனைப் பார்த்து, மரியாதையில்லாமல் ஐயோ துஷ்டாவென்றுஞ் சொல்லத்துணிந்து, துக்கசாகரத்தின் கரையைக்காணாமல் புலம்பத் தொடங்கினள்.

கவி.

மாட்டாயோ விக்காலம் வல்லார் வலிதீர்க்கு, மீட்டாயோவீர மெலிந்தாயோ. தோளாற்றல், கேட்டா யுணர்த்திலையோ வென்னுவாயும் ளோயோ, காட்டாயோ வென்னுயிரைக் கண்மணியைக் காட்டாயோ ........... (க)

இந்திரற்குந் தோலாத நம்மகனைப் பெற்றூயென், நந்தாத்து வாழ்வாரும் மேத்துமகளியற்றேன், மந்தரத்தோ ளெம்மகனை மாட்டா மனிதன்றன், உந்துசிலைப்பகழிக் குண்ணக் கொடுத்தேனே .................... (உ)

அக்கனுலந்தா னதிகாயன் றூனுலந்தாய், மிக்கதிறத் துள்ளார்க ளெல்லாரும்விடினர், மக்களினின்றுள் ளால்மண்டோ தரிமகனே, திக்குவிசய மினியொருகாற் செய்யாயோ.(ங)

ஏதையா சிந்தித் திருக்கின்று யென்னிறத்து, கோதையார் வல்லரக்கர் பட்டாரைக் கூவாயோ, பேதையாய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ, சீதையா லின்னம்வருவ திலைவேயோ ............................ (ச)

உம்பி யுணர்வுடையான் சொன்ன வுரைகேளாய், நம்பி குலக்கிழவன் கூறநயந்தோராய், கும்ப கருணனையுங் கொல்வித்தாய் கோமானே, அம்புக் கிரையாக்கி யாண்டா யரசையோ ............................ (ரு)

வசனம்.

ஓலங்கேஸ்வரா ! இப்போதே அந்த ராமலக்ஷ்மணருடைய வல்லமையை நீக்குகிறதற்கு உன்னால் முடியாதோ! என்பிள்ளையை நீ மீட்டுக்கொண்டு வரமாட்டாயோ! உன்வீரம் குறைந்து போனாயோ! அந்த மனிதர்களுடைய தோள்வல்லமையைக் கேட்டும், அறியாமற்போனாயோ! நான் புலம்பி அழுது சொல்லுகின்ற என் சொல்லையுங் கேளாயோ! என்னுயி ரெங்கே யிருக்கின்றதென்று காட்டமாட்டாயோ! என் கண்மணியெங்கே என்றுங் காட்டமாட்டாயோ! இந்திரனையுஞ் செயிக்கும்படியான நல்ல பலமுள்ள புத்திரனைத் தானியமாலி பெற்றிருக்கின்றாளென்று தேவர்க ளெல்லாம் புகழும்படியாயிருந்த என்களிப்பு இன்றைக்குப் போய்விட்டதே. மந்தரகிரிபோன்ற தோள்களையுடைய என்மகனை சத்திரியற்றமனிதன் வில்லைவளைத்தேவின அம்புக்கு ஆகாரமாக்கி விட்டேனே? அக்ஷயகுமாரன் மாண்டான், அதிகாயனு மாண்டுபோனான், அநேக பலமுள்ள பிள்ளைகளெல்லாம் மாண்டுபோனார்கள்.— உம்பிள்ளைகளில் இப்போதிருக்கிறவன் மண்டோதரியின் பிள்ளையான இந்திரஜித்து மாத்திரந்தானே ? இன்னெருதரமு முன்போலத் திக்குவிஜயஞ் செய்யமாட்டாய் அல்லவா ! ஐயா என்ன நினைத்துக்கொண் டிருக்கின்றாய், வெற்றிமாலையைத்தரித்த அநேக வ

மியவர்களான ராக்ஷசப் பிள்ளைகளில் இற
ந்துபோனவர்களைக் கூப்பிடமாட்டாயோ !
புத்திரவாஞ்சை மோஹத்தால் பிடிக்கப்ப
ட்டவனே ? நீயும் பிழைக்கும்வழி யறிய
ப்போகிறாயோ ! சீதையாலே இன்னம்
உனக்கு நேரிடப்போகிற தீங்குகள் கொ
ஞ்சமோ ? அநேகம் உண்டு. உன்னிளை
யதம்பி வெகுபுத்திமான். அவன் சொன்னபுத்
தியை அப்போதே நீகேட்டாயா ? எல்லாந்
தெரிந்த குலவிருத்தரான, உன்பாட்டனார்
சொல்லியும் அதைவிரும்பி யாலோசித்தாயி
ல்லையே ? அதி பலாட்டிய னென்னும் உன்
மூத்த தம்பியான கும்பகர்ணனையும் கொல்
லுகிறதற்குக் காரணமாயிருந்தாயே ? ராஜகு
மாரனாகிய அதிகாயனையும்,அம்புக்கு இரையா
க்கிவிட்டாயே இனி நீ யரசாட்சி செய்வதும்
அப்படி யப்படிதானென்று இப்படிப் பல
விதமாய்ச்சொல்லி அதிகாயா அதிகாயா! வெ
ன்று உரத்துக்கூவிக் கன்றிழந்த பசுப்போ
லக் கதறியழுகின்ற தானியமாலியைப், பக்க
த்தில்நின்ற ஊர்வசியும், மேனகையுங்கூடி
யெடுத்துக்கொண்டு, மலைபோல் உயர்ந்து
பெரியதா யிருக்கின்ற மாளிகையில் கொண்டு
போய்ச்சேர்த்தார்கள். அந்த நகரத்தில் அந்த
ப்புர ராக்ஷச ஸ்திரீகளெல்லாம்,இழவுகொண்
டாடவந்து தங்கள் தங்கள் பிள்ளைகளை யிறந்
ததுபோல அழுதுபுலம்பினார்கள். மற்ற மனி
தஸ்திரீகளுடைய நிலையைச் சொல்லவேண்டி
யதென்ன தேவஸ்திரீகளும், தங்கள் வாயைத்
திறந்து ஓவென்று அழுதார்கள். ராவணனு
டைய அரண்மனையிலுள்ள பரிசாரஸ்திரீக ளெ
ல்லாரும் உலகமுடிவில் பிரளயத்தைக் கண்டு
யாவரும் ஒருமிக்க உத்கோஷிப்பதுபோலக்
கோஷித்தார்கள். லங்காபட்டணத்தில் உ
ள்ளவர்களெல்லாம் அழுத குரலோசை பூர
ணச் சந்திரோதய காலத்தில் சமுத்திரம் இ
ரைத்ததுபோல இருந்தது.

அதிகாயன் வதைப்படலம்.
முற்றிற்று.

---

## நாகபாசப்படலம்.

---

வாள்போன்ற கண்களையுடைய ராக்ஷச
ஸ்திரீகள் பெருக்கூட்டமாய்க்கூடித் தலைவி
ரித்து ஒருவரை யொருவர்கட்டி மாரடித்துக்
கொண்டு அழவேண்டிய தென்னவென்று ச
த்தேகித்து மேகத்திடிபோல இந்திரசித்து
புறப்பட்டு அதட்டுகிறது முன்னவர்களை
வெற்றி பெற்ற ராவணன் மறுபடியும், அ
வர்களுடனே போர்செய்து அவர்களுக்குத்
தோற்றுப்போனானோ ! அல்லாவிட்டா லி
றந்துபோனானோ ! முன்னாலே லங்கையை
ச் சுட்டுவிட்டுப்போன அனுமான் மறுபடியு
ம், லங்கையை சூழ்ந்த சமுத்திரத்துடனே
பேர்த்துவிட்டானோ ! இப்படி அழுகிறத
ற்குக் காரணமென்ன வென்று நினைத்து க
ண்ட கண்ட ராக்ஷசர்களை லங்கைக்குவந்த வ
ருத்த மென்னவென்று கேட்க, ஒருவருஞ்
சொல்லுகிறதற்குக் கூடாமல் மெய்நடுங்கி
வாய்குழறிப் பேசத்தெரியாமல் நின்றார்கள்
அப்போது இந்திரஜித்து நல்லது, தன் சா
ரதியைத் தேனாச் சீக்கிரமாய் ராவண
னுடைய மாளிகைக்கு 'ஓட்டென்று சொல்
லி, ஒரிமைப் பொழுதுக்குள்ளாக வந்துசே
ர்ந்து, ராவணன்உயிருடனிருக்கக்கண்டு கிலே
சம்விட்டுக் கும்பிட்டு, ஐயா ! இவ்விடத்தில்
நேரிட்ட துன்பமென்ன வென்று கேட்டான்
அதற்கு ராவணன் அப்பா மஹாவீரனே? உ
ன்னுடையதம்பிமாரை யமனும் பயமில்லாம
ல்கொண்டுபோய் விட்டானே ! கும்பன் - நி
கும்பன் - அதிகாய னிந்த மூன்றுபே
ரும் சுவர்க்கலோக மடைந்தார்க ளென்றுஞ்
சொல்லிச் சொல்லாததற்கு முன்னே, அ
க்கினியையு மெரிக்கும்படியான கோபக் க
ண்களை யுடையவனாகிப் பல்லா லுதட்டைக்க
டித்து ஆகாசத்தைப் பார்த்து, எல்லாரு மி
றந்துபோனார்களா ?என் ஆமிருந்த வக்கம் பி
டித்துநின்று வில்லாளரை விரல்தொட்டு எ
ண்ணுமிடத்து முதலில் எண்ணநிற்கும்படி
யான வீரவானான இந்திரஜித்து ராவணனைப்
பார்த்து அவர்களைக் கொன்றவர்கள் யாரென்
றுகேட்க,அதிகாயனென்பவனை லக்ஷ்மணன்
கொன்றானும். மற்றவர்களை நம்முடைய ஊ
ரில் நெருப்புவைத்துக் கொளுத்தின ஆஞ்ச
நேயனும்,மற்ற வானரவீரர்களுங்கொன்றார்
களாமென்று, கொன்றைப் பூமாலையைத் த
ரித்த ருத்திரமூர்த்தியினுடைய கயிலாச கிரி
யை வேரோடுபேர்த்துச் சாய்த்த மஹாபல
வானான ராவணன் சொன்னான். அதைக்
கேட்டு வலியசேனையையுடைய அந்த மனி
தர்களுடைய வல்லமை யுனக்குத் தெரிந்திரு
ந்தும்,அதிகாயன் முதலானோரை அவர்கள்
மேல் போர்க்கு நீ அனுப்பினபடியால் நீ
யே அவர்களைக்கொன்றாய், அவர்களல்ல கொ
ன்றவர்கள் ஐயா ராவணேஸ்வரா ! என்னையாவ
துபோகச்சொல்ல உனக்கு எண்ணம்வராமல்
போச்சே யென்றுசொல்லி. வெகுநேர மா
லோசித்து அதிக கோபத்துடன் பெருமூச்
சுவிட்டு ஐயா! முன் அக்ஷயகுமாரனைப் பூமி

யிற்போட்டுத் தேய்த்துவிட்ட அனுமானை,இப்படி செய்விக்கிறதற்குத் தானே சத்துருக்கள் சொன்ன சொல்லைச் சொல்லவந்த தூதுவனென்று கொல்லாமல் விட்டுவிட்டாய். நம்முடைய ஊருளவு சத்துருக்களிடத்திற்குப் போகின்றதே யென்று பின் ஆலோசனை செய்யாமற் போனாயே ? ஆலோசனையில்லாதவனே இனி நீ பிள்ளை யுதவியில்லாமற் போய்விட்டாய், உன்வாழ்க்கையும் அழிந்துபோய் விட்டது. நான் சும்மா நினைத்துப்பேசியும், ஆலோசித்து மென்ன என் தம்பியைக் கொன்றவனை அந்த ரணக்களத்திலேயே அவனுயிர்வேறு - உடல்வேறாக நீக்கினாலல்லாமல் வெகுகாலமாக நம்முடைய வசத்திலிருந்த இந்த லங்காபட்டணத்திற்குத் திரும்பி வரமாட்டேன், இந்த வாழ்வுமெனக்கு வேண்டாம், அந்த வானரப் பெருஞ்சேனையைப் பிளவு பிளவாய்ப் பிளந்து நிணச்சேறுப்படஅரைத்துவிட்டு,அந்த லக்ஷுமணனையுங் கொல்லாமற் போவேனானால், என்னெதிரே வருவதற்கும் பயந்து என்னாஜ்ஞை மீறாத செந்தாமரை மலர்போன்ற கண்களை யுடையவனான விஷ்ணு முதலான தேவர்களெல்லாருஞ் சிரிக்கக்கடவர்களென்றும், ஒருவராலுஞ் ஜெயிக்கமுடியாத ஸ்திரமான உயிரையுடைய என்தம்பியாகிய அதிகாயனைக்கொன்ற அந்த மனிதனுடைய ஊற்றெடுக்கும் படியான ரக்தவெள்ளத்தைப் பூமிதேவி குடிக்கும்படிச் செய்யாமற்போவேனே யானால், என்னோடெதிர்த்த இந்திரனிரண்டுதரமல்லவா ! எனக்குத் தோற்றுப்போனான். அப்படியல்ல, அவனுக்கே நான்தோற்றவனாகக் கடவேனென்றும், நாகபாசத்தையும், பாசுபதாஸ்திரத்தையும் கொண்டு, மூன்றாம்பிறைச் சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடைய நமது குலதெய்வமாகிய அந்தச் சங்கரதேவன் எனக்குக் கற்பித்த தேவ யாகத்தைச்செய்ய யத்தனித்துத் திரிகிற நான், இப்போது அவர்களுயிரை உமக்குக் கொடாமற் போவேனே யானால், என்னுயிரை நான்றுகொண்டு விட்டுவிடுவேன். அதுவுமாயினும் நான் உணவும் உண்ணுகிறதில்லை எனக்குத் தேவாமிர்தம்போ லிருந்த என் தம்பியினுடைய அருமையான உயிரைப் பறித்துவிட்ட அந்தக் கொடியவனை யமனுக்கு விருந்தாகக் கொடாமற்போனால், பிறகு கையில் வில்லைப்பிடித்துத் தேவகூட்ட மெல்லாஞ் சிரிக்கத் திரும்பிவந்து இந்தப்பூமியி லிருந்தேனானால், நான் ராவணனுக்குப் பிறந்தவனல்ல, அதனாலெனக்குண்டான ராவணியென்ற பெயருமில்லாமற் போகக்கடவது என்றும், சபதஞ்செய்துகொண்டான். அப்படி இந்திரஜித்துஞ் சொல்லக்கேட்டு ராவணன், என்னப்பா இந்திரஜித்தே ! நீ இந்த லேசானகாரியத்தைச் செய்து என்விசனத்தை நீக்குகிறதற்கு உனக்கு முடியாத காரியங்களும் உண்டோ ? பெருங் குதையையுடைய நீண்ட வில்வீரனே ! உன்னை இந்த அற்பர்கள்மீது எதிர்க்கும்படி அனுப்புவேனேயானால் எனக்கே என்மீது கோபமுண்டாகுமே ? ஆதலால் நானிப்படிப்பட்ட துக்கத்துக் குட்பட்டேனென்று சொன்னான். தேவர்களை யெல்லாஞ் ஜெயித்துச் சொர்க்கலோகத்தை வெற்றிபெற்றவனான இந்திரஜித் தென்பவன் அவ்வாறுசொன்ன ராவணனை வணங்கி மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற கூர்மையுள்ள வாளாயுதத்தையுங் கையிற் பிடித்துக்கொண்டும், ஒன்றினாலும் அறுபடாததும், ஊடுருவப்படாததுமான கவசத்தைத் தரித்தும், சத்துருக்களுடைய முதுகையுருவிப் போம்படியான அம்புறாத்தூணியை முதுகில்வலித்துக் கட்டியும்,வலியகுதைகளையுடைய வயிரமான வில்லை இடதுகையில் பிடித்தும் நின்றான். அவன்பிடித்தவில் ஆதியில் பிரம்ஹதேவன் வஜ்ரமலையை யெடுத்துப் பகைவர்களா லொருகுறைவும் நேரிடாதபடிக்கு இந்திரனுக்காகச் செய்துகொடுத்த வில்லாகும். அப்படிப்பட்ட வில்லை இவன் அந்த இந்திரனை அடித்துக்கட்டிச் சிறையில்வைத்து அவன்கையிலிருந்து பிடுங்கிக் கொண்டான் தோளிற்கட்டின அம்புறாத் தூணியோ வென்றால், அந்தக்காலத்தில் சிம்ஹம்போன்ற பலமுள்ளவனான இவன் அவ்விந்திரனிடத்தி லிருந்து பறித்துக்கொண்டான். அது சப்த்தசாகர ஜலம்வற்றினாலும், அம்புகள் குறைவுபடாததும், கொடிய கண்களையுடைய பேயும். யமனு முண்ணும்படியான ஆகாரமுள்ள தொம்பைக் கூடுபோன்றதுமானது. அந்தத் தூணியிலுள்ள அஸ்திரங்களோ?அவன் முன்புதேவர்களுடன் சண்டைசெய்தபோது மெய்ச்சி அவர்கள் கொடுத்தவைகளும், மேருவை வில்லாகவுடையவரான ருத்திரமூர்த்தி கொடுத்தவைகளும் பிரம்ஹதேவர்கொடுத்தவைகளும், இதுவரையில் வெற்றியல்லாமல்தோல்வியைக் கொடாதவைகளுமானவைகள். இவை அல்லாமல் இன்னும், அநேக ஆயிரகோடி ஆயுதங்களை ஆராய்ந்து பார்த்தெடுத்துக்கொண்டு, லக்ஷம் யாளிகளும், அதிகபலமுள்ள லக்ஷம் ஆண்சிங்கங்களும், பூட்டினதும், லங்கைக்குச்

சமமாக அவ்வளவு விசாலமானதாகச் செய்யப்பட்டதும்; தேவர்களும், அதன்வல்லமை இவ்வளவென்று அறியக்கூடாததும், பொன்னையும் சமானஞ் சொல்லவரியதான நிறத்தையுடைய ஸ்ரேஷ்டமான கருடனையும், மின்னலைத் தோற்கடிக்கும்படியான பிரகாசமுள்ள மழுவாயுதத்தையுடைய சிவமூர்த்தியின் விருஷபத்தையும், முன் யுத்தசமயத்தில் பின்றொடர்ந்து போனதும், அந்தத் திரிமூர்த்திகள் முதலானவர்களை யெல்லாஞ் ஜெயித்து மேன்மையடைந்தபோது, இந்த மூன்று லோகங்களிலும் அவர்கள் வாகனங்களிரண்டுந் தன்னைப் பின்றொடர்ந்து வரும்படியாகத் தான் தோல்வியடைந்து மூவ கொல்லாததும்; வயிரப்பதித்த கைகளையுடைய தானவர்களுடைய ம்தெறுமாயிரங்களை யெல்லாந் தேய்த்துவிட்ட சக்கரங்களை யுடையதும், துதிக்கையுடைய அஷ்டதிக்கஜங்களைத் துரத்தினதென்று சொல்வதோ பெருமை, அதிக வீரத்தன்மையைக்காட்டி எதிர்த்துநின்ற இந்திரனைத் தாக்கிவிட் டெறிந்தகாலத்தில் அவன் மல்லாந்து விழும்போது அவனுடைய முதுகைத் தேய்த்துத் தழும்புண்டாக்கின சிகரத்தையுடையதும், சமானமற்ற வல்லமையைக் காட்டின இந்திரனுடைய அழியாத பெரும்புகழானது நீங்கும்படி, அவனுடைய பெரியதோள்களைப் பாசக்கயிற்றால் கட்டின ஜெயப்பிரதாப சாலியான இந்திரஜித்தென்பவன் வந்தானென்று சொல்லிக்கொண்டு பேய்கள் சப்திக்கத்தக்கதாக ஆடிக்கொண் டிருக்கின்ற நீண்ட பெருங்கொடி கட்டியிருக்கின்றதுமான தேரிலேறி, அந்தத் தேருக்கொப்பான ஆயிரம் செந்தேர் பின்வர மனதில் யுத்தப்பிரீதியுடையவனும், ஒருநாளும் யுத்தத்தில் தேவர்களை முதுகிடச் செய்தானேயல்லாமல் முகத்தைப்பார்த்து யுத்தஞ்செய்தறியாதவீரனுமான இந்திரஜித்து வந்தான். அந்த ராவணகுமாரனான இந்திரஜித்துடனே வந்த சேனைகளை இவ்வளவென்று சொல்லமுடியாது. ஆயினும் இது வால்மீகிபகவான் தமது ஞானதிருஷ்டியால் சொன்னகதையாகையால் அவர் நாற்பதுவெள்ளஞ்சேனையென்று கணக்கிட் டிருக்கின்றார். அவ்வளவு சேனைகள் சூழ்ந்துவரவும், தூமாக்ஷனென்பவனும், வெகுகாலமாய்ச் செய்தயுத்தத்திலும் தோலாமல் வெற்றிபெற்ற மஹாபார்ச்வனென்பவனும், இந்திரஜித்துவின் தேர்வண்டியைத் தொடர்ந்து காவலாய்வரவும், சந்திரவட்டக் குடைமேலே நிழலிட்டுக்கொண்டு வரவும், பெரிய சங்கத்தொனி முழங்கவும், கேட்க பயங்கரமாக அஷ்டாதச வாத்தியங்கள் நாலு கடலுஞ்சேர்ந்து சப்திக்கிறதுபோலச் சப்திக்கவும், ஆயிர மாயிரகோடித் தேர்வீரர்கள் உள்ளணி சூழ்ந்துவரவும், இரண்டாயிர மாயிரகோடி யானைவீரர்கள் புறவணி சூழ்ந்துவரவும், அதற்குமுன் அநேகமாயிரம் குதிரைவீரர்கள் போகவும், படைமுகத்தில் சேனாவீரர்கள் யுத்தக்கடலைப்போலச் செல்லவும், இந்தப்பிரகாரமாக இந்திரஜித்து ரணகளத்தை நோக்கிக்கொண்டுவந்தான். அப்போது இளையபெருமாள் ராவணன் புதல்வனான அதிகாய னிறந்தபடியால் ராவணனாவது, அவன் வராவிட்டால் தேவேந்திரனை வெற்றிகொண்ட இந்திரஜித்தாவது யுத்தத்திற்கு வருவார்களென்று ரணகளத்தைவிட்டு நீங்காமல் அங்கேயே நின்றிருந்தார். அப்படி நின்றிருந்தவர் இவன் வருகிறதைக்கண்டு இவன் யார்சொல்லக்கடவீர் விபீஷணரே யென்று கேட்க, விபீஷிணாழ்வார் ஸ்வாமீ! இவன் மஹாபலவந்தனும், தேவேந்திரனை யுத்தத்தில் ஜெயம்பெற்றவனுமான, இந்திரஜித்தென்பவன். இன்றைக்குக் கடினமான சண்டை நடக்கும், எங்களாண்டவரே! அடியேன் ஒரு விண்ணப்பஞ்செய்து கொள்ளுகின்றேன். இவனோடுகூட மஹா வீரவான்களெல்லாம் துணையாய் வருகின்றார்கள்.— நம்மோடு கூடவுந் தகுந்ததுணைவர்களை வைத்துக்கொண்டு சண்டைசெய்வது நல்லது, தேவரீ ரெல்லாந்தெரிந்த மஹானுபாவர் நீர்க்காலோசனை செய்யவேண்டும், ஆஞ்சநேயர் - சாம்புவர் - சுக்கிரீவமஹாராஜர் - தாரையின் புத்திரராகிய அங்கதர் - நீலன் - என்பவர்களாகிய வீரர்கள் நம்முடன் நிற்கும்படியாக பாபாஹிதரும், வீரப்பிரதாபமே திருவாபரணமாக வுடையவருமான ஸ்வாமீ! தேவரீர் இவனோடு சண்டைசெய்வதே தகுதி, அநேகாயிரந் தேவர்களெல்லா முதவியாயிருக்கவும், அளவில்லாத தேவசேனைகளுடன் கூடிக்கொண்டு தேவேந்திரன் இவனோடு செய்தபோது, அவர்களையெல்லாம் இவன் நிமிஷநேரத்தில் தோற்கடித்துத் துரத்திவிட்டான். தேவேந்திரன் அமிர்தபானம் பண்ணினவனாகையால் அந்தப் பலத்தைக்கொண்டு தன் உயிர்தப்பிப் பிழைத்தோடிப்போனான். இந்திரனுடைய மலைபோன்ற தோள்களை இவன் நாகபாசத்தாற் கட்டினான், ஆஞ்சநேயனையும் அந்தப் பாசத்தால் தான் கட்டினான். இந்த இரண்டுகாரியமும் லோகப்பிரசித்தமான காரியம். இதுவுமல்லாமல், இவனுடைய தனுர்வித்தியா சாமர்த்தியத்தை

எப்படிப் பட்டவர்களாலும் தடுக்கமுடியா
து, ஸ்வாமீயென்று விபீஷிணுழ்வான் வண
ங்கிச்சொல்ல, அதைக்கேட்டு இளையபெரு
மாளும், நல்லது உம்முடைய மனம்போலச்
செய்யக்கடவீர் விபீஷிணரே யென்ற மாத்
திரத்தில், ஆஞ்சநேயர் இளையபெருமாள்மீ
து இந்திரஜித்து எதிர்த்து வந்தானென்று
தாமேவந்து சேர்ந்தார். அங்கத குமாரர்
முன்னமே ஸ்வாமியுட னிருந்தார். மற்ற
வீரர்களெல்லா நம் வந்து சேர்ந்தார்கள்.
சங்குகளுடன்கூடிய சமுத்திரத்துக் கொப்
பான வானரசேனைகளுடன் சுக்கிரீவமஹா
ராஜர் முன்னேறி நடந்தார். வானரசேனை
யும், ராக்ஷசசேனையும், வடசமுத்திரம், தெ.
ன்சமுத்திரமென்னும், இரண்டு பெரிய சமு
த்திரங்களும், சண்டைசெய்ய விரும்பிப்
பொங்கிச் சப்தித்துக்கொண்டு வருவது
போல மிகுந்த கோபத்துடன் ஒன்றை ஒ
ன்று எதிர்த்து நின்றதுகள். தேவர்கள் எல்லா
ரும் தம்பதி சமேதர்களாய்த் தேவலோகத்
தைப் பாழாகப்போட்டுவிட்டு இன்றை
க்கு நம்முடைய கண்ணினாலும், மனத்தினா
லும், ஆலோசனையினாலும், நன்றாய்ப் பார்
த்திருந்தோமானால் சந்தோஷி மடையலா
மென்று வந்து ஆகாசமார்க்கத்தில் நிறை
ந்தார்கள். அப்போது இரண்டு பக்ஷத்
துச் சேனைகளும், போர்செய்யத் தொடங்
கினபோது, அந்தவீரர்கள் கர்ஜ்ஜித்த வீரகர்
ஜ்ஜனையும், சமுத்திரம்போன்ற சங்கத்தொ
னியும், ரணபேரிகை முழக்கமும், ஒன்றுசே
ர்ந்து ஒலித்தபடியால் தேவேந்திராதி தே
வர்களெல்லாம் தங்கள் செவிகளைக் கைகளால்
பொத்திக்கொண்டார்கள். யுத்தவீரர்கள் ஒ
ருவரை யொருவர் அடியுங்கள் - பிடியுங்க
ள் - எறியுங்கள் - எய்யுங்கள் - என்று சொ
ல்லுகின்ற சப்தமும், வில்லில் நாண்பூட்டி
ச்செய்த குண்டங்கார ஓசையும், பிரளயகா
ல இடியைப்பார்க்கிலும், மூன்றத்தனைக்
கோஷமாகப் பிறந்ததுகள். மலைகள்பட்டு
ம், மரங்கள் பட்டும், யமனுக்கொப்பான வே
லாயுதந் தைக்கவும், வில்லிலிருந்து புறப்ப
டுகிற அம்புகள் தைக்கவும், ராக்ஷசரும் வான
ரருமாகிய. வீரவான்களுடைய ராத்திரியை
யொத்தவையும்,பகலையொத்தவையுமான தே
கங்களெல்லாம் அழிந்ததுகள். இந்தப்பிரகார
மாக இரண்டுசேனையும்,ஒன்றையொன்றுதோ
ற்கடிப்பதினாலே பூமியும் இரண்டாய்ப் பிள
க்க யத்தனித்தது. முசலாயுதங்களாலும், விரு
க்ஷங்களாலும், ஒருவரையொருவர் அடிக்க, த
லைகள் சிதறுண்டுபோன வானரங்கள் இளைய

பெருமாளுக்கு ஜெயமுண்டாகக் கடவதென்
றுவாழ்த்திக்கொண்டே விழுந்ததுகள். ராக்ஷ
சர்களுடைய கொடியதேகங்கள் கழுத்துட
னே தலைகளில்லாமல் ரணகளத்தில் கூத்தாடி
னதுகள். தலைவெட்டுண்டு நரம்புகள்வலிக்க ர
க்தத்தைக் கொப்புளித்துக்கொண் டிருக்கி
ன்ற வானர வீரர்களுடைய பலத்த தேகங்க
ளெல்லாம், காடெல்லாம்வெந்து மடிந்து
பிறகு நிற்கின்ற அடிக்கட்டைகள் மாத்திர
மெரிகிறதுபோ லிருந்ததுகள். சிலவானர
ங்கள் ராக்ஷசர்களைப்பிடித்து அவர்களுடை
ய பெரியதோள்களை முறித்ததுகள். சில
வானரங்கள் அரக்கர்களைக் காலாலெட்டி யு
தைத்ததுகள். சில வானரங்கள் நிசாசரர்க
ளை நெட்டித்தள்ளினதுகள். சில வானரங்க
ள் அந்தத் துஷ்டர்களைப்பிடித்துத் துண்டு
துண்டாய்க் கடித்துக்கொன்று விட்டதுக
ள். சில வானரங்கள் அந்தப் பாவிகளைக் க
ழுத்தறுந்துபோகும்படி கைகளால் வாரிய
டித்ததுகள். சில வானரங்கள் ராக்ஷசர்களை
ப் பூமியிற்போட்டுத் தேய்த்து விட்டதுக
ள். சில வானரங்கள் வீரசிம்ஹநாதஞ் செய்
ததுகள். ராக்ஷசர்களில் சிலர் வாளாயுதங்க
ளினால் வானரங்களினுடைய வீரகண்டாம
ணிதரித்த கால்களைத் துணித்துவிட்டார்கள்.
சிலர் தலைகளை வெட்டித்தள்ளினார்கள். சி
லர் தோள்களைவெட்டி யெறிந்தார்கள். சி
லர் உடலை இரண்டு துண்டமாகத் தறித்துப்
புழுதியிற் புரட்டினார்கள். யமனைப்போல
த்திரியும், வானரங்கள் விருக்ஷங்களினால் ரா
க்ஷசர்களுடைய மலைபோலுயர்ந்த தலை
களைச் சிதறடித்தார்கள். சிலருடைய உயி
ரைப்போக்கி விட்டார்கள். சிலருடைய கை
களும், கால்களுமுறிந்து விழும்படிமோதி
னார்கள். சில கரடிகள் அக்கினிப்பொறிகளைக்
கக்குகின்ற கண்களை யுடையதுகளாய்ப் ப
லம்பொருந்திய தலையும், பிடித்த மரங்களு
டனே கைகளும் அற்றதுகளாயும், தேகத்தி
ல் வஜ்ரவேலுருவும்படி எதிரிலுள்ள ராக்ஷசர்
களுடைய கழுத்தைத் தாவிக் கடித்துக்கொ
ண்டு அதுகளுடனேகூட மாண்டுபோனது
கள். சில கரடிகள் மலைகளைப்பேர்த்து இ
டியோடுகூடின மேகத்தையொத்த தந்
தங்களையுடைய கரியயானைகளின் மஸ்தக
ங்களைப்பிளந்து அவற்றிலுள்ள மூளைகளை
த்தின்று தங்களுடையபசியாறினதுகள். மலை
களிலும், பெரியதேகங்களை யுடையவைக
ளான வானரங்களில் சில மதத்தயானைகளின்
மீதும், சில குதிரைகளின்மீதும், மணிக
ள்கட்டியிருக்கிற தேர்களின்மீதும், எதிரி

கள் கைகளிற்பிடித்திருக்கிற வாள்களின்மீ
தும், விலங்குகளின்மீதும், ராக்ஷசர்களுடை
ய செம்பட்டமயிர்த் தலைகளின்மீதும், தா
விக் குதித்தவைகள். ராக்ஷசர்கள் தண்டாயுத
ங்களைக்கொண்டு அடித்துக்கொல்ல உடை
ந்த தலையை விதிரெறிந்தும். வாள்களினு
லே துண்டுதுண்டாய்ப்போன தேஹங்களை
வாரிக்கொண்டும், அங்குள்ளமலைகளைப் புர
ட்டிக்கொண்டும், போகின்ற ரக்தவெள்ள
மானது குரக்குப்பிணங்களை யெல்லாம் ச
முத்திரத்திற் கொண்டுபோய் சேர்த்துவிட்
டது. ஆஞ்சநேயர் தமது திருக்கரத்தால்
வஜ்ரதண்டங்கொண்டு ராக்ஷசசேனையைமோ
தி அடித்தபோது உடல்நசுங்கி, இவை மேக
த்துக்கொப்பான கொடியென்றும், இவை பி
டரி மயிர்களையுடைய பலவகையான குதிரை
களென்றும், இவை வில்லுகளென்றும், அம்பி
வையென்றும், இவை வாளென்றும், இவை த
ண்டாயுதமென்றும், இவை கோபத்தையுடை
ய மதயானையென்றும், இவை தேரென்றும்,
வேறு பிரித்தறியக்கூடாமற் போய்விட்டது
கள். அங்கதன் ஒருபெரிய விருக்ஷத்தைப் பி
டுங்கிச் சாடினபோது அநேகந்தேர்கள் - கு
திரைகள் - யானைகள் - ராக்ஷசர்களென்று
சொல்லப்பட்ட அளவிறந்தசேனைகள் ய
மனுஞ் சுற்றித்திரிந்து உயிர்களெங்கேனுந்
தப்பி யிருக்கின்றனகளோ வென்று இர
ண்டு கைகளினுலும் பிரேதங்களைக்கிளறித்
தேடிப்பார்க்கும்படியாக அழிந்து போ
ய்விட்டதுகள். அஷ்டதிக்கி லுள்ளவர்களும்
அந்த நாற்திசைகள்தோறும், நின்று யானை
கள் - தேர்கள் - குதிரைகள் - எல்லாவற்
றையும், வானரவீரர்கள் சம்ஹரிக்கிற ரண
க்களத்தைப்பார்த்துத் தேவர்களுடனே சொ
ன்னதாவது, முன்னே அசுரர்கள் சண்டை
செய்கிறதைப்பார்த்து, இன்னார் ஜெயம
டைவார்கள், இன்னார் தோற்பார்களென்று
நிச்சயித்து மஹரிஷிகள் சொன்னதுபோல
வானரங்களுக்கு ராக்ஷசர்கள் தோல்விய
டைவார்களென்று சொன்னார்கள். இப்படி அ
வர்கள் சொல்லிக்கொண் டிருக்கும்போதே
ராக்ஷசர்கள் படையெடுத்துவர, அதைக்கண்
டு வானரர்களெல்லா மோட்டமெடுத்தார்கள்.
வானரவீரர்கள் அதைக்கண்டு அவர்களை யோ
டவொட்டாமல் தடுத்தார்கள். மறுபடியும்,ரா
க்ஷசர்கள்வானரங்களைச்சமுத்திரம்போலச் சூ
ழ்ந்துமடித்தார்கள். அதைப்பார்த்து வானர
ங்கள் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். அப்
போதும் வானரவீரர்கள் அவர்களை ஓட ஒட்
டாமல்தடுத்து நிறுத்தினார்கள். பிறகு நீலனெ

ன்கிற வானரவீரன் சூலாயுதமும், மழுவாயுத
மும், கையிலே தாங்கிக்கொண்டு நாலு
தோள்களுடனே பிரளயகாலத்தில் உலகங்க
ளையெல்லாம் சம்ஹரிக்கும், ருத்திரமூர்த்தி
யைப்போல நின்றவிடத்தைவிட்டு நின்று வ
ந்த ராக்ஷசர்களையெல்லாங் கொன்றுகொ
ண்டே யிருந்தான். இப்படி அநேகர் உ
யிர்மாய்வதினால், யமன் தன் கிங்கரர்களுட
னே பாசத்தைக் கையிற்பிடித்தபடியே அ
ந்த இடத்தைவிட்டு அப்புறம் போகாமல்நி
ன்று உயிர்களைப் பிடித்துக்கொண் டிருந்தா
ன். வேறொருபக்கத்தில் சுமுதன்-வாயுதேவ
னைப்பார்க்கினும், வருணதேவனைக் காட்டினு
ம், அதிகமாகவும், அக்கினிதேவனுஞ் சமான
மாகாவென்று சொல்லும்படியாகவும், ஆ
யுதமொன்று மில்லாமல் இரண்டு கைவல்ல
மையாலே செய்கின்ற யுத்தத்தின் பெருமை
யை விரித்துச்சொல்ல வேண்டியதென்ன,
யமனுந் தன்பதவியையும், இவன் பிடுங்கிக்
கொள்ளுவானென்று நடுங்கிப் பயப்படும்ப
டி தன் கையிலகப்பட்ட ராக்ஷசர்களை யெல்
லாம் கொன்றான். மற்றொருபக்கத்தில் இட
பனென்ற வானரவீரன் சமுத்திரஞ்சூழ்ந்த
பூமியிலுள்ள மரங்களுக்குள் ஸ்ரீசக்ரவர்த்தித்
திருமகனுரெய்த பாணமுருவிப்போன நெ
ருங்கிய கிளைகளையுடைய எழு மராமரங்கள்
மாத்திரம் யாவர்களுக்கும் அடையாளந்
தோன்றுவதற்காக நின்றன. மலைகளில் மேரு
மலையும் அஷ்டகுலாசலங்களுமே சாஸ்திர நி
ச்சயத்திற்காக நின்றன. மற்ற மரங்களிலு
ம், மலைகளிலும் ஒன்றுவது அவன்கைக்கு
த் தப்பினவைகளில்லை. இந்தப் பிரகாரம் எ
ல்லாமரங்களாலும், எல்லாமலைகளாலும், அ
நேக ராக்ஷசர்க ளிறந்துபோனார்கள். குதி
ரைகள் - மதயானைகள் - தேர்கள் - இ
வைகளையுடைய வக்கிர தந்தங்களோடுகூடிய
வீரர்களும், பாம்பினுங்கொடியவர்களுமான
ராக்ஷசர்கள் பல்கிப்பெருகுவதனு லுண்டா
கியபயம், இன்றைமுவனாயினுந்தான். இப்
போது மதகிலிருந்து ஒடிவதுபோல ரத்த
ங் குபுகுபென்று ஒழுகும்படிச் சாம்பவ
ன் பெரியவிருக்ஷங்களைச் சுற்றிச் சுழற்றிக்
கொல்ல எல்லா ராக்ஷசர்களு மாண்டுபோக
ப் போகிறார்களென்று தேவர்களெல்லாம்
பேசிக்கொண்டார்கள். போர்செய்கின்ற கு
திரைகளாகிய அலைகளும், தேர்களாகிய கப்ப
ல்களும், மதங்கொண்ட யானைகளாகிய கொ
ம்பன் சுறுமீன்களும் ஓடிப்போகவும், நெ
ருங்கிய ஆயுதங்களாகிய மீன்கூட்டங்க
ளெல்லாம், சிந்திச் சிதறிப்போகவும், கரு

ங்கடலைக் கலக்குகின்ற மத்தைப்போல ராக்ஷசசேனை சமுத்திரத்தைப் பனசனென்கிற ராக்ஷசவீரன் சின்ன பின்னப்படக் கலக்கிவிட்டான். மயிந்தனென்கிற வானரவீரனும், அவனுக்கிளையவனாகிய துமிந்தனென்கிற வானரவீரனும், முன் மேகங்களைக் கிழித்துச் சின்ன பின்னப்படுத்தி ஆகாசத்திற்பறந்துபோன ஜடாயு மஹாராஜனாயும், அவர் சகோதரரான சம்பாதியையும்போல, ராக்ஷசர்களை யெல்லாஞ் சின்ன பின்னப்படுத்தி விட்டார்கள். கவையனென்னும், வானரவீரன் ராக்ஷசக்குட்டையைக் கலக்குகின்ற மதயானையைப்போ லானான். கேசரியென்னும், வானரவீரன் நின்றபடியே நின்று வந்த வந்த ராக்ஷசர்களையும், அவர்கள் சேனைகளையுங் கொன்றுவிட்டான். இந்தப் பிரகாரமாக வானரவீரர்கள் முன்வைத்தகாலைப் பின்வைய்யாமல் ராக்ஷசப் பிணங்களை மலைமலையாகக் குவித்து, அஷ்டகாசஞ் செய்து போர்செய்கிறபோது ஓடிப்போன வானரக்கூட்டங்க ளெல்லாம்வந்து ஒன்றாய்க்கூடிப் போர்க்குப் புறப்பட்டதுகள். அதைக்கண்டு ராக்ஷசசேனை முழுவதும் தங்குதரியில்லாம லோட்டமெடுத்தது. பின்பு இந்திரஜித்து ஒருவனாய்நின்று போர்செய்ய யத்தனித்தான். ஆபரணங்களைத்தரித்த மலையைப்போலத் தோள்க ளிரண்டுபக்கத்திலும் பூரித்துயர, மிகுந்தபலமுள்ள தூண்கள்போல நெறித்து விரலில் விரற்புட்டிலிட்டு அந்தவிரலால் ஆகாசமெல்லாம் வெடிபடவும், திக்குகளெல்லாஞ் செவிடுபடவும், அஷ்டகுலாசலங்களும் நெக்குவிடவும், மஹாவீரத்தோடு வரிசை வரிசையாக வில்லைக் குணத்தொனிபண்ணிச் சமுத்திரஞ் சூழ்ந்த லோகங்களை யெல்லாம் நடுங்கும்படிச் செய்தான். சமுத்திரத்தைப்போல அஷ்டகாசஞ் செய்து உயர்ந்தசேனை வேகமாய்ச் செலுத்தும்படிச் சாதிக்குத் திட்டஞ்செய்து அங்கதன் முதலானவர்களெல்லாம் பயப்படவும், தேவர்களெல்லாம் நடுக்கங் கொள்ளவும், அதிககோபத்துடனே சங்கபாலன் - குளிகன் - பதுமன் - மகாபதுமன்- வாசுகி - அனந்தன் - தக்ஷகன் - கார்க்கோடன் என்ற அஷ்டநாகங்களும், தங்கள் பற்களிலிருந்து அக்கினிமயமான விஷங்கக்கினாற்போல அதிகவேகமாய் இடியையும் தோற்கடிக்கும்படியான கொடியபாணங்களை நாலாபக்கங்களிலும்தூற்ற. வானரவீரர்கள் சுற்றிலும் கவிந்துகொண்டு வீசினமலைகளும், மரங்களும், இந்திரஜித்து விடுகிறபாணங்கள்பட்டுப் பொடியா யுதிர்ந்தும், துண்டு துண்டாய் முறிந்தும்போயின. வானரர்களுடைய தலைகள் அநேகமாய் அறுபட்டு ஆகாசத்திற்போய் சின்ன பின்னமாய்ச்சிதறிப் பூமியில்வீழ்ந்து மண்ணில் புதைந்து போனதுகள். வானரவீரர்கள் இந்திரஜித்துவின்வில்லிலிருந்துபுறப்படுகின்ற பாணங்கள் போவதைக்கண்டு நடுங்கிகோபத்தால் பேர்த்தெறியும்படித் தூக்கினமலைகள் தங்களுக்கேபாரமாகும்படி ஒடுங்கிநின்று விட்டார்கள். சில வானரர்கள் முந்திப்போய் நெருக்கினபோது அவர்கள் கொண்டுபோன மலைகளும், அவர்களுடையமார்பு மூடுருவும்படியாக இந்திரஜித்துவின் பாணங்கள் நுழைந்ததுகள். ஒரு முகூர்த்தகாலத்துக்குள் ஒரு வெள்ளவானரங்கள் மாண்டதுகள். சில வானரங்கள் கழுத்தும், கையும், நீண்டகால்களும், வால்களும், அநேகத் துண்டங்க ளானதைக்கண்டு,வானரர்கள் உருக்கு ஸ்தம்பம்போன்ற தோள்களினாலே அடித்தும், குத்தியும், உயர்ந்தமூங்கில்கள் வளர்ந்திருக்கின்ற பெரியமலைகளைப் பேர்த்தெறிந்தும், தாமும் அந்தமலைகளுடனே பூமியில் விழுந்துபோய் விட்டார்கள். வானரர்களுடைய தலைகளை அரிந்துகொண்டுபோன இந்திரஜித்துவின் பாணங்கள் சூரியனைப் போலப்போய்ப் புற்றில்நுழைந்த நீண்டபாம்மைப்போல நாகலோகம் அடைந்து விட்டதுகள். ரணகளமுழுவதும் மேடுபள்ள மில்லாமலும் வெற்று வெளியா யிருந்தபடியால் அதில்பரவினரக்தங்கள் ஒரு சமுத்திரத்துக் கொப்பா யிருந்ததுகள். இந்திரஜித்து எய்தபாணங்கள் வானரர்கள் விழித்துப்பார்த்தால் அந்த விழியில் பாய்கின்றதுகள். நிற்பார்களானால் அவர்களுடையமார்பில் பாய்கின்றதுகள். திரும்பி யோடுவார்களே யானால் முதுகிற் பாய்கின்றதுகள். ஆகாசத்தில் பாய்ந்தார்களானல் அவர்கள் மேனியைக் கிழிக்கின்றதுகள். நீண்டகால்களையும், கைகளையும், அசைத்தாலும், வாயாற்பேசினாலும், மனதால் நினைத்தாலும், அந்தந்த அவயவங்களிற் பாய்கின்றதுகள். இந்தப் பிரகாரமாக மலைகளையொத்த தேஹங்களை யுடையவர்களான வானரர்கள்,உடல்முழுவதும் பாணம் நுழைந்ததுகள். நெருங்கிவருகின்ற பாணவருஷித்தால் மூடப்பட்ட இடத்தைக் கண்டார்களே யல்லாமல் வெறுமையா யிருக்கிற இடத்தை ஒருவரும் அறியார்கள், அஸ்திரப் பிரயோகஞ் செய்யும்போது நெறித்திருக்கிற வில்லினோசையே யல்லாமல் வேறோசையு

ங் கேட்கவில்லை, வானரர்களென்று பேசாது
ந்த சேனைகளெல்லா மாண்டுபோய் விடுகின்
றதுகளென்று சொல்லுகின்ற வானரர்களைப்
பார்த்தும், தேவர்கள் அதிகமாய்க் கலக்
கமடைந்தார்கள். வானரர்களெல்லாம் அ
நேக கண்ட துண்டங்களானதைக்கண்ட
அந்தத் துஷ்டனான இந்திரஜித்து தன்னோ
டெதிர்த்து வரத்தக்கவர்கள் வேறொருவரு
மில்லாமையால் பாணப் பிரயோகஞ் செ
ய்யாம லிருந்தான். அப்போது சூரியகு
மாரனான சுக்கிரீவ மஹாராஜர் இந்திரஜித்
துவோடு சண்டைசெய்ய வேண்டுமென்ற
ஆசையால் ஆகாசத்தில் பரவியிருக்கின்ற
மேகங்களெல்லாம் சின்ன பின்னப்படும்படி
உயர்ந்திருந்த ஒரு மராமரத்தைப் பிடுங்கி, இ
ந்திரஜித்துத் தன் சேனைகளெல்லாம் மாண்டு
உயிர்விடும்படிப் போர்செய்ததனால் அதிக
கோபங்கொண்டிருப்பாற் கடலைக்கடைந்
து தேவாமிர்தங்கொண்ட வாலியைப்போல்
ஒதுங்கிநின்ற அந்த இந்திரஜித்துவைக்கிட்டி,
அவனுக்கு உபபலமாகவந்து சூழ்ந்துகொ
ண்டிருக்கின்ற சேனாசமுத்திரமெல்லாம் கா
ல்தளர்ந்து பின்னிட்டோடும்படி மராமரத்
தைக் கிறுகிறு என்று சுற்றியடித்தார். அ
தைக்கண்டு ராக்ஷச வீரர்களெல்லாம் பயந்
து நடுங்கினார்கள். இப்படிச் சுக்கிரீவர் ஒ
ரு மராமரத்தைக்கொண்டு தன்னைச் சூழ்ந்
து நின்ற படைகளைச் சின்னபின்னப் பட்
டோடத் தும்சம்பண்ணுகிற வீரத்தைக்கண்
டு சபாஷ் நல்லவீரன்! நல்ல வீரனென்று ஆ
ச்சரியப்பட்டு, இந்திரஜித்து அதிவேகமாய்ச்
சுக்கிரீவமஹாராஜருடைய நெற்றியி லிரண்டு
பாணமும்,மார்பில் அஞ்சுபாணமும், விஷத்
தைப்போல எய்து அவர்கையில் பிடித்திரு
ந்த மராமரத்தையும், துண்டு துண்டாய்
நொறுக்கிப் பொடியாக்கிவிட்டான். அதை
க்கண்டு உடனே ஆஞ்சநேயர் ஆலகாலவிஷ
ம்போலக் கோபங்கொண்டு புகுந்து லோக
ங்களெல்லாம் நடுங்கும்படித் தமதுதோளைத்
தட்டிக்கொண்டு இடிபோல கர்ஜித்து இந்
த க்ஷணமே இந்திரஜித்து இறந்துபோவான்.
என்று யாவரும் நினைக்கும்படியாக ஒருபெ
ரியமலையைப்பேர்த்து அவன்மீது எறிந்தா
ர். அது அவன் பிரயோகித்த பாணங்களினு
ல் தூளி தூளியாய்ப் பறந்துபோய் விட்ட
து. அப்போது இந்திரஜித்து ஆஞ்சநே
யரைப்பார்த்து, அடா! சற்றே நில்லு நில்லு
உன்னை நினைத்துக்கொண்டுதான் சண்டைக்
குவந்தேன், கையில் வில்லெடுக்காமல் உன்
வீரத்தைச் சொல்லிக்கொண்டு விளையாடி
க்கொண் டிருக்கின்றாய். இந்த மலைகளைக்
கொண்டும், மரங்களைக்கொண்டுமா, என்
னை ஜெயிக்கப்போகிறாயடா வென்று சொ
ல்லக்கேட்டு மேருமலை யல்லாமல் வே
றொன்றுடனும் சமானப்படாத திருந்தோ
ள்களையுடைய ஆஞ்சநேயர் அடா அற்ப
னே! வில்லெடுத்துச் சண்டைசெய்ய உ
ரியவர்கள் வேறே இரண்டு வீரசிகாமணிக
ளிருக்கின்றார்கள். அதை இல்லறாகோ நா
னைக்கோ பார்க்கப்போகிறாய், நாங்கள் ம
லையு மரங்களு மெடுக்கத்தக்கவர்களா யிரு
க்கின்றோம், பிரகாசிக்கின்ற ஆயுதங்களை யெ
டுத்துக்கொண்டுவந்த இந்திரன் முதலான
பேர்கள் தம்முயிலாக்கொண்டு உனக்குத்
தோற்றுப்போவார்கள். நாங்கள் கையிலே
புல்லெடுத்துக்கொண்டு வந்தவர்களல்ல சி
லயுத்தஞ் செய்யத்தான் வந்திருக்கின்றோம
டா இந்திரஜித்தே! உனக்கு என்னோடு ச
ண்டைசெய்ய விருப்பமா? அல்லது லக்ஷ்ம
ணரென்ற திருநாமமுள்ள எங்களாண்டவரு
டனே சண்டைசெய்யவிருப்பமா? அப்ப
டிக்கு மில்லாவிட்டால் உங்களப்பனான ரா
வணனுடைய தலைகளை வெட்டித்தள்ள எழு
ந்தருளியிருக்கின்ற மஹாவீரராகிய சக்கிர
வர்த்திப் பிரானுடனே போர்செய்ய விரு
ப்பமா? நீ யெப்படிக்கேட்டாலும், நாங்கள்
தடைசொல்ல மாட்டோம் அப்படியேசெ
ய்வோம் என்றுசொன்னார்.—அதைக்கேட்டு
நீசொன்ன அந்த லக்ஷ்மண னெங்கே யிரு
க்கிறான், அந்த ஐப்பேதை என் தம்பியாகிய
அதிகாயனென்கிற சிக்கக்குட்டி வந்தா லவ
னைக்கொன்று தன்னுயிரைப்போல ஒரு கீர்
த்தியைச் சம்பாதித்தானல்லவா! அப்படிப்
பட்டவனோடு சண்டைசெய்து அவனைக்
கொன்று என்கோபந் தணியவந்தேன், அ
ந்தப்படியே யல்லாமல் லோகங்களை யெல்
லாம், ஒடுக்கி விடும்படியான என் பாணங்க
ளைப் பிரயோகித்து . உங்களைமாத்திரமா
கொன்றுவிட்டுப் போய்விடுவேன். என் சே
னைகளானவர்களை யெல்லாம் அப்புறம்போ
கச்செய்துவிட்டு நானும் என்வில்லும் இந்த
ஒரேதேரிலிருந்து உங்களை யெல்லாம், த
லையறுத்து விடப்போகிறேன், இதுசத்திய
ம். எல்லாரும் வாருங்கள் உங்களுடனே தே
வர்களையும், இந்தப் பூலோகத்தி லுள்ளவர்க
ளையும், உங்களுக்கு உபபலமாய் அழைத்துக்
கொண்டு வாருங்கள், இன்றைப் பகற் பொழு
துக்குள்ளே ஜெயம்பெற்று விடுகிறேன்.
என்றுசொல்லித் தொளாயிரம் பாணங்களை
வில்லிற்பூட்டி, அநுமான்மீது பிரயோகஞ்

செய்தான். அவைகள் மேருபருவதம்போல நின்றிருக்கின்ற அந்த ஆஞ்சநேயர் மேனிமுழுதும், கும்பல் கும்பலாய்ப்போய்த் தைத்தமாத்திரத்தில், பல்லை நற நற வென்று கடித்து அதிககோபத்துடனே பக்கத்தில் நிற்கின்ற ஒரு பிரம்மாண்டமான மலையைத் தூக்கிக்கொண்டுபோய், இந்திரஜித்துவுக்கு முன்பாக நின்றுகொண்டு அவனைப்பார்த்து, அடா துஷ்ட ராவணசிசுவே! லோகத்தில் யானைகளெவ்வளவுஉண்டோ அவ்வளவு மொன்றாய்க்கூடினாலும் உருண்ட கால்களையுடை சிம்ஹம் ஒன்றுக்கு முன்னின்று அதைவெல்லுமா ? எங்களாண்டவராகிய ஸ்ரீராமசந்திரருடைய திருத்தம்பியார் வருமளவும் நீ நிற்கமாட்டாய். நீ அஸ்திரப் பிரயோகஞ் செய்வதற்குள்ளாக முந்தி இது உன்னுடைய பிராணனையுண்டுவிடும். வில் வல்லமையால் காக்கக்கூடுமானால் காத்துக்கொள்ளடா பார்க்கலாம் என்று, ஆஞ்சநேயர்விட்ட மலையானது, அஷ்டதிக்கஜங்களினுடைய தந்தங்கள் பதிந்த திரண்ட தோள்களையுடைய ராவணன்மகனான இந்திரஜித்து மார்பில் தரித்திருக்கின்ற வஜ்ஜிரகவசத்தில் ஒருமலைமீது மற்றொருமலை தாக்குண்டதுபோலவும், நெருப்பில்வெந்த இரும்பு சம்மட்டியாலடித்தபோது பொறிப் பொறியாய்ச் சிதறிப் போவதுபோல்வும், உடைந்து இடிந்து மாவாய் நாலாப்பக்கங்களிலுஞ் சிதறிவிழுந்ததுகள். எறிந்தமலை மேல்லவிழுந்து சிதறிப்போனதைக்கண்டு கோபங்கொண்ட சிம்ஹத்தைப்போல வஞ்சகனாகிய இந்திரஜித்து அதி உக்கிரமான செருக்குடனே லோகத்தை மேருமலையுடனே பேர்க்கத்தக்கவரான வாயுபுத்திரராகிய அனுமானுடைய வெற்றிமாலையைத் தரித்திருக்கின்ற மார்பிலும், தோளிலும், உருவத்தக்கதாக ஆயிரம் பாணங்களைக்கொண்டு அழுத்தினான். ஒரேவிதமான அந்த ஆயிர பாணங்களும் போய்த் தைத்தமாத்திரத்தில் ஆஞ்சநேயர் மேருமலையானது சண்டமாருதக்காற்றில் அசைந்ததுபோல மேனிநடுங்கி தேகமெல்லாம், ரக்தப்பிரவாகமொழுகச் சற்றே இளைப்பாய் நின்று சிரமபரிகாரம் பண்ணிக்கொள்வதற்குள்ளாக அதிபலாட்டியனான நீலனென்கிற வானரவீரன் வந்து இந்திரஜித்துவை நெருக்கி, ஒரு நீலமலையைத் தனது பெரியகையினாற் பேர்த்து இந்திரஜித்துவின்மீது ஆகாசத்தில் அக்கினிசெல்வதுபோல அதி வேகமாய்ப்போய் விழும்படி எறிந்தவுடனே, யமனெறிந்த சூலத்துக்கொப்பான அந்தமலை க்ஷணகாலத்துக்குள் வந்தது தெரியாமல், சிந்திச் சிதறிப் போகும்படி வலிய வில்லையுடைய அந்த இந்திரஜித்து அம்புகளைக்கொண்டு உடைத்துவிட்டான். உயிரோடுநின்ற வானரங்களெல்லாந் திக்குவிதிக்குகளாக ஓட்டம்பிடிக்கவும், தேவர்களுடைய மனமும், பிராந்தியடையவும், மேருமலையினு மூன்றுபங்கு பலமுள்ள நீலனுடைய தேகமெல்லாம் சல்லடைக் கண்கள்போலத் திறந்துபோகவும், ரக்தப்பிரவாக மொழுகவும், அக்கினியும் பயங்கொள்ளும்படியான வாயையுடைய சர்ப்பசாலங்களுக் கொப்பான பாணங் பாயும்போதெல்லாம் நீலன் கிடுகிடென்று தேகம் நடுங்கினான். அப்போது வாலிபுத்திரனான அங்கதகுமாரன் பார்த்தபேர்களில் சிலர் மேருதான் மேருதானென்று சொல்லவும், சிலர் யூகித்து அதுவல்ல அதுவல்லவென்று சொல்லவும், அங்கே உள்ளமலைகளையெல்லாம் வேரோடுபிடுங்கி இந்திரஜித்துவின் மார்பின்மேலும், தோளின்மேலுமாகக் குறிப்பிட்டு எறிந்தான். அவைகளெல்லாம் இந்திரஜித்துக்கையில் வில்லிருக்கிற பரியந்தம், கிட்டச்சேருமோ ? அல்லது நடுவேதான் வருமோ ? அப்படிவந்தபோதிலும், தப்பிப்போய்விடுமோ? கொடியபாணங்களினால் அங்கதன்விட்ட மலைகளையெல்லாம் பொடிப்பொடியாய் நொறுக்கி விட்டான். அந்த அங்கதனுடைய நெற்றியின்மீதும், உயர்ந்த தோளின்மீதும், நீண்ட மார்பின்மேலும், கால்களிலும், புற்றில் நுழைகின்ற சர்ப்பத்துக்கொப்பாக இந்திரஜித்துவின் புகைகின்ற பாணங்கள் நுழைய நுழைய, அலைகுலைந்து பல்லைக்கடித்துக் கைகளைப்பிசைந்து கண்களில் நெருப்புப்பறக்க வாட்டமுற்று, ரக்தம்வடிய அங்கதகுமாரன் மயங்கிப் பூமியில்சோர்ந்து விட்டான். அப்படியே மற்றவீரர்களுடைய மார்பின்மேலும், தோள்களின்மேலும், மழைத் துளிகளைப்போலக் கொடிய பாணவருஷங்கள் தைத்தபடியால் அவர்களெல்லாரும் உடல்நடுங்கினார்கள். வானரசேனைகளெல்லாம் மாண்டதுகள். உயிருள்ளவைகளெல்லாம் நாலுதிக்குகளிலும் பறந்துவிட்டதுகள். அப்போது இளையபெருமாள் அவனுடைய வீரத்தன்மையைக்கண்டு மனங்கொதித்துச், கண்களில் அக்கினிஜொலிக்கும்படியாக விபீஷணாழ்வானைப்பார்த்து விபீஷணரே! இந்தத்துஷ்டனை நான் மாத்திரமாய்நின்று கொல்லவிடாமல், நீர் நம்

ருடைய வானரர்களையெல்லா மழைத்தா ஒடிப்போலவர்கள்போக நின்ற வானரவீரர்களெல்லாம், இவ்வளவு பெருஞ்சேனைகளுடனே ரத்தவெள்ளத்தில் உழைக்கு மாண்டு போகும்படியாக செய்தது பெருந்தப்பிதமாய் முடிந்ததே! என்று சொல்லக்கேட்டு விபீஷிணாழ்வாரும் ஸ்வாமீ! அது மெய்தான், இந்தச் சண்டாளனுக்கு முன்பாக ஆயிரங்கோடி தேவர்கள் யுத்தத்திற்குவந்து சேர்ந்து, இவன்கையி லடிபட்டுப் போனார்களே யல்லாமல் இவனை அவர்கள் ஒன்றுஞ் செய்யவேயில்லை. தேவரீர் இவனைக்கொன்றா லல்லாமல் அடியேங்களும், இந்த உலகமும் பிழைக்கமாட்டோம். அடியேங்களுக்குப் பிராணபிக்ஷை கொடுக்கவேண்டும் ஸ்வாமீ! என்று பிரார்த்தித்தார். அதைக்கேட்ட இளையபெருமாள் இந்திரனுடனே வருகிற ஸ்வர்ணமய மேகத்தைப்போல இந்திரஜித்துவுக்கு முன்பாகவந்து நின்றார். அவரைப் பார்த்து ராவணகுமாரன் சாரனைநோக்கி இவன்தானோ பரதனுக்குத் தமயனான ஸ்ரீராமனுடைய தம்பியென்று கேட்க, அவன் ஐயா! ஆம் இவன்தான் நீர்கேட்ட லக்ஷ்மணனென்றுசொல்ல அதைக்கேட்டு, அந்தத் துஷ்டன் இளையபெருமாள்மீது தான் யுத்தத்திற்குப் புறப்படுவதற்குமுன்னே, அவன்பின்வந்த ராக்ஷசர்கள் இளையபெருமாளைப் பார்த்து எங்கள் ராஜகுமாரனான அதிகாயன் ஒன்றியாய்வர, அவனைக்கொன்று போட்டாயே! இப்போது எங்களிடத்தில் அகப்பட்டுக்கொண்டாய். இனி யெங்கள் கண்முன்னே யெங்கேதப்பிப் பிழைக்கப்போகிறா யென்று சொல்லிக் கண்களில் அக்கினிசொரிய அடர்ந்து அந்த நூறுகோடி ராக்ஷசர்களும், தங்கள் ரதங்களையும், நர்த்தனம் பண்ணுகின்ற குதிரைகளையும், யானைகளையும், செலுத்திக்கொண்டு வந்துநெருங்கி லக்ஷ்மணரைச் சூழ்ந்து மூடிக்கொண்டார்கள். அப்படிச் சூழ்ந்து கொண்டவர்களை யெல்லாம் ஸ்ரீராமருடைய திருப்பாதுகைகளைத் தமது திருமுடியில் தரித்துக்கொண் டிருக்கின்ற பரதாழ்வாருடைய திருத்தம்பியான இளையபெருமாள் கிரமக் கிரமமாக, தேர்களையும், குதிரைகளையும், யானைகளையும், ராக்ஷசர்களையும், துண்டு துண்டாக்கி வெற்றிமாலையைத் தரித்தார். அப்போது சப்தலோகங்களும் கிடுகிடுத்து நடுங்கினதுகள். இளையபெருமாளுடைய அஸ்திர அதிர்ச்சியால் இடிவிழுந்து மணல்களா யுதிர்வதுபோல மலைகள் உதிர்ந்ததுகள். பூமியும் பாளம் பாளமாய் வெடித்ததுகள். அறுப்புண்டு கிடக்கின்ற ராக்ஷச பிரேதங்களின்மீது ஆகாசத்திலெழும்பிப்போன தலைகள் பலபல வென்று சிந்தியதுகள். ரத்தபிரவாஹங்கள் நாலுபக்கங்களிலும் ஓடினதுகள். தேவர்கள் கைகளை விதிர்த்தார்கள். இப்படிக் கொடியசண்டையை விளைத்தும், லக்ஷ்மணர் பிரயோகித்த பாணங்கள் வேகமாறாமல் தூரத்தில் யுத்தசந்நத்தர்களா யிருந்த ராக்ஷசர்களுடைய மார்பிலும் பட்டுருவினதுகள். சில பாணங்கள் உலக முழுமையும் பரவினதுகள். சில பாணங்கள் ராக்ஷசர்களுடைய பிருதுக்கொடிக் காடுகளைச் சுட்டெரித்ததுகள். சில பாணங்கள் குதிரைகளையெல்லாந் துணித்ததுகள். சில பாணங்கள் யானைகளை யெல்லாம் கண்டங்கண்டமா யறுத்தெறிந்ததுகள். யமனைப்போலக் கண்டகண்ட ராக்ஷசர்களையெல்லாங் கொன்றதுகள். சாகின்ற ராக்ஷசர்களை யெல்லாம் கணக்கிடலாமென்று வந்த தேவர்கள் பொறிகலங்கி முடிவு காணமாட்டாமல் ஒருவராலுந் தடுக்கமுடியாத அஸ்திரவருஷங்கள் செய்கின்ற செய்கையை நினைத்து லட்சுமணருடைய வில்லி னிடத்தில்தானோ சப்ததமேகங்களும் மழைவருஷிக்கக் கற்றுக்கொண்டதுகளென்று ஆச்சரியப் பட்டார்கள். யானைக்கூட்டங்களின் பத்திகளில் நுழைந்து ஒவ்வொருபாணம் அந்தந்தவரிசை யானையின் தலைகளை யெல்லாம் அறுத்துக் குப்பல் குப்பலாக குவித்துவிட்டது. மலைக்குச் சமமாகவந்து சுற்றிக்கொண் டிருக்கின்ற கர்ஜ்ஜனையையுடைய வீரர்களுடைய சேனுபாரக மெவ்வளவோ அவ்வளவு உண்டோ? இளையபெருமாளுடைய பாணத்தொகைகள். அப்படிப்பட்ட பாணங்கள் தோற்றத்தில் பருத்த ஆகாரமுள்ளவைகளும், மாமிசங்களையே உண்டுதிரிகின்ற தன்மையையுடைய சிறைகளோடுங்கூடிய வைகளுமா யிருக்கின்றன வென்றுபார்த்துத் தேவர்களும் திகைத்துப்போகும்படிக் காணப்பட்டு, ஆகாசமுழுவதும் வெளியில்லாமல் மறைத்து, இறங்கும் கழுகுப்பக்ஷியைப்போலச் செத்த ராக்ஷசப் பிணத்தின்மீது பற்றிப்படிந்துக்கொண் டிருந்ததுகள். இந்திரஜித்துவினால் மாண்ட வானரசேனைகள் முப்பத்தைந்து வெள்ளத்திற்கு மேலாக ரணகளத்தில் விழுந்துகிடக்க, அதுகளை மலைபோன்ற தலைகளெல்லாம் அறுந்துமாண்ட வஞ்சகர்களான ராக்ஷசர்களுடைய தேகங்கள்மூடி மறைத்துக் கொண்டதுகள். ரத்தவெள்ளங்கள் அவைகளை முழுத்தியோடிச் சமுத்திரத்தில் போய்விழுந்ததுகள்.

ராக்ஷசர்களில் அநேகர் கையற்றார்கள். அநேகர் காலற்றார்கள். அநேகர் கழுத்தற்றார்கள். அநேகர் கவசமும் கவசம்பூண்ட மார்புமற்றார்கள். அநேகர் வயிறுகிழிந்து குடல்களற்றார்கள். அநேகர் ஓடிவந்த வேகமற்றார்கள். அநேகர் ஒருவரை யொருவர் கூப்பிடவுஞ் சக்தியற்றார்கள். அநேகர் மத்த யானைகளும், தேர்களும், குதிரைகளும் கொண்டுவந்த மற்றவைகளுமிழந்து தாங்கள்மாத்ரந் தப்பிப்பிழைத்துப் புகலிடந்தேடி யோடிப்போனார்கள். வற்றினகடலி லிருந்த மலையைப்போலத் தன்னைச் சூழ்ந்திருந்த எல்லாருமாள, தான்மாத்திரமாய் ராவணன்புத்திரனான இந்திரஜித்து அதிககோபத்தால் துடி துடித்துப் புருவத்தை நெரித்துத் தன்மனம்போல அதிவேகமாய் ஓடும்படியான தேருடனேவந்து இளையபெருமாளை எதிர்த்தான். இதற்குள் ஆஞ்சநேயரும், மூர்ச்சை தெளிந்து இளையபெருமாளைவந்துசேர்ந்து ஸ்வாமீ, இளையபெருமாளே! அடியேன்தோளின்மீது தேவரீர் எழுந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்த மாத்திரமே சிம்ஹம் போன்ற பலவந்தரான இளையபெருமாளும், அப்படியே யேறியருளினர். அதைக்கண்டு தேவர்களெல்லாம், பல்லாண்டுகூறினார்கள். அந்தஇருவரும், காளியைப்போ லொத்தவைகளும், யமனைப்போல் கொல்லுகின்ற வைகளும், அக்கினிக்குச் சமானமாகிய அதியுஷ்ணமுள்ள வைகளுமான பாணங்களை ஒருவர்மே லொருவர் மேகத்தின்மீது வேறொருமேகம், எதிர்த்து மழையை வருஷித்தாற்போலப் பொழிந்தார்கள். இருவரும், தங்களுடைய வில்லில் இடி யிடித்தாற்போலக் குணத்தொனி பண்ணினார்கள். அவைகள் அஷ்டதிக்குகளையுஞ் செவிடுபடுத்தி விட்டதுகள். அஷ்டகுலாசலங்களும், பத்தல் பத்தலாய் வெடித்துப் பிளந்து விடுவதுபோலானதுகள். ஆகாசமெல்லாம், பொறி யெழும்பினது. லோகமுழுவதும், அக்கினியைக் கக்கிக்கொண்டு ஒருவர்பாணங்களை ஒருவர்பாணங்கள் கூர்மையான வாயால் கவ்விக் கடித்துக் கொண்டதுகள். ஒருவர்விட்ட அம்பை யொருவர்விட்ட அம்பு அறுக்கமாட்டாமல் அக்கினிப்பொறிகளைச் சிதறி ஆகாசமார்க்கத்தில் வெந்துகரிந்து விழுந்ததுகள். அதைக்கண்டு தேவர்களும், மனோதைரியங் குறைந்து ஏங்கிப்போனார்கள். உலகமெல்லாம் அதிர்ச்சியுற்றது. கடல்பொங்கி மேலெழும்பினது. அண்டமெல்லாங் கடல்கலங்கினதுபோலக் கலங்கினது. பிசாசுகள் பூட்டின இந்திரஜித்துவின் தேரும், அநுமானும், அநேகவிதமாகச் சாரிசுற்றவும் லங்காபட்டண முழுவதுங் கிறுகிறென்று சுழன்றது, அக்கினி முகாஸ்திரங்கள் லோகங்களையெல்லா மூடிக்கொண்டதினாலே இளையபெருமாளும், இந்திரஜித்துவும், இருக்கின்றார்களோ? இல்லையோவென்று தேவர்களு மறியமாட்டாமற் போய்விட்டார்கள். தனுர்வேத சாஸ்திரமும், நாண்பூட்டிய வில்லைக் கையிலுடைய இவர்களுடைய சாமர்த்திய மட்டேயல்லாமல், வேறொருவருடைய சாமர்த்தியத்தை எடுத்துக்காட்டி இந்த மட்டுக்குந்தானென்று சொல்லக்கூடுமோ? பலத்தினளவுக்குமுடிவில்லை ஆகாசத்திலும் பெரியதாகுமென்று சொல்லித் தேவர்களும், இந்த இரண்டு வீரர்களுடைய வல்லமையான செய்கையைப் பார்க்கமுடியாதென்று காட்சிப்பிரமாணத்திற்கும், சந்தேகம் புகட்டினார்கள். இந்த இரண்டுபேர்களுடைய செய்கைகளையும் பார்த்த கற்பகப்பூமாலை யுள்ள கிரீடங்களைத்தரித்த தேவர்களெல்லாம், இவர்களிப்போது என்ன செய்தார்கள். முன்னென்ன செய்தார்களென்று ஒருவரை யொருவர் வினவுவார்கள். தங்களில் இப்படி முன்யுத்தஞ் செய்தவர்கள் யாரென்றுகேட்பார்கள். முன்னேஇப்படி யுத்தஞ் செய்தவர்களுமுண்டோ? இனிமேலு மிப்படி யுத்தஞ் செய்யப் போகிறவர்களில்லை. பயங்கரத்தை யுண்டாக்குகின்ற இன்னவீரர் இன்னதிசையி லிருக்கின்றார்களென்றுந் தெரிந்துகொண்டார்களில்லை. இப்படி யவர்கள் செய்கிற ஒருசெய்கையை யாவது தேவர்களும், உணர்ந்தவர்களல்லர். வக்கிரதந்தங்களையுடைய இந்திரஜித்து ஆயிரகோடி பாணங்களைப் பிரயோகித்தான். இளையபெருமாளும், ஆயிரகோடி பாணங்களைத்தொடுத்து அதுகளை யறுத்துத்தள்ளினார். இந்திரஜித்து ஆயிரகோடி நாகபாணத்தை எய்தான். லட்சுமணர் ஆயிரகோடி நாகபாணங்களால் அதுகளையும் அறுத்தெறிந்தார். இந்திரஜித்து கூட்டங் கூட்டமாகக் கோடி கோடி அம்புகளைத் தொடுத்தான். ஸ்ரீராம சகோதரரும், கூட்டங் கூட்டமாய்க் கோடி கோடி அம்புகளைவிட்டு அதுகளைக் கொய்துவிட்டார். ராவணபுத்திரன் மறுபடியும், ஒரு கோடி கோடி வாளிகளை அதிககோபத்துடனே ஏவினன். வீரசிகாமணியாகிய இளையபெருமாளும், மறுபடியும், ஒரு கோடி கோடி வாளிகளைக்கொ

ண்டு அதுகளைத் தடுத்துவிட்டார். இந்திரஜித்து கோடி கங்கபத்திரக் கணைகளைப்பிரயோகித்து விட்டான். இளையபெருமாளும், ஒருகோடி கங்கபத்திரக் கணைகளைக்கொண்டு அதுகளைத் துண்டாக்கிவிட்டார். லட்சுமணர் கோடி அர்த்தசந்திர பாணங்களைப் பொறுக்கிப் பிரயோகித்தார். இந்திரஜித்துவும் கோடி அர்த்தசந்திர பாணங்களினால் அதுகளை நீக்கிவிட்டான். இந்திரஜித்து கோணத்தலையம்புகளைக் கோடிகோடியாகத் தொடுத்தான். தசரதகுமாரரும் கோணத்தலையம்புகள் கோடி கோடியெய்து அதுகளைத் துண்டாக்கி வெட்டிவிட்டார். இளையபெருமாள் கோடி மொட்டம்புகளை அநேகந் தடவைகளாகப் பிரயோகித்து நிறைத்துவிட்டார். இந்திரஜித்தும் கோடி மொட்டம்புகளை யாவருங்கண்டு பயப்படும்படி எய்தான். தசமுகப்புத்திரன் கமலமுகப் பாணங்களை அரைக்ஷணத்துக்குள்ளாக அடுக்கடுக்காய்ப் பிரயோகித்துப் பிரயோகித்துச் சிம்மநாதம்பண்ணினான். அரவிந்த லோசனராகிய ஸ்ரீராமமூர்த்தியின் திருத்தம்பியாரும் கமலமுகப் பாணங்களை அரைக்ஷணத்திற்குள்ளாக அநேகமாகப் பிரயோகித்து அவன்விட்ட வைகளையெல்லாம் அடித்து நொறுக்கி உதிர்த்துவிட்டார். வளைபல்லுடையவனான இந்திரஜித்துக் கோடி வஜ்ரமுகாஸ்திரத்தை எவினான். பரிசுத்தராகிய இளையபெருமாளும், கோடிவஜ்ர முகாஸ்திரத்தை ஏவி அவைகளையெல்லாம் நொறுக்கிவிட்டார். லட்சுமணர் கோடி திரிமுகாஸ்திரங்களை வேகமாய்ப் பிரயோகித்துவிட்டார். அங்க பலாட்டியனான இந்திரஜித்துவும் கோடி திரிமுகாஸ்திரத்தை விட்டு அதுகளையெல்லாம் தடுத்துவிட்டான். இந்திரஜித்து அஞ்சுகோடி அஞ்சலியாஸ்திரங்களைப் பிரயோகித்து வீரகர்ஜ்ஜனைசெய்தான். இளையபெருமாளும் அஞ்சுகோடி அஞ்சலியாஸ்திரத்தைப் பிரயோகித்துவிட்டார். இளையபெருமாள் கோடிக்ஷுராஸ்திரத்தை வில்லிற்பூட்டிப் பிரயோகித்தார். இந்திரஜித்துவும், கோடி க்ஷுராஸ்திரத்தைத் தொடுத்து அதுகளையெல்லாம் அடித்துவிட்டான். இந்தப்பிரகாரமாக இந்திரஜித்துவும், இளையபெருமாளுமாக ஒருவரெய்யவும், அந்தப்பாணங்களை மற்றொருவர் கொய்யவும், உலகமெல்லாம் அம்புக்காடுகளாய் விட்டதுகள். சப்திக்கின்ற சமுத்திரம், அம்புகள் சொரிகின்ற நெருப்புப் பொறிகளாலே நீர்வற்றிப் போய்விட்டது. இரண்டுவீரர்களுக்கும் மூண்ட கோபமானது தங்கள் தங்கள் கைத்தொழிலை ஒருவருக்கொருவர் காணுந்தோறும் மேலுமேலும் அதிகரித்ததேயல்லாமல் கொஞ்சமாவது தணியவில்லை. இப்படிப் போர்செய்யும்போது இந்திரசித்து அனுமான் விழிப்பழம்போலத் தேகங்கிழிந்து, மூர்ச்சையடையும்படியாக, அவருடைய உருண்ட உருக்குத்தடிபோன்ற தோளின்மீது, ஆயிரம்பாணங்களைத் தூவி; உகாந்தகால மேகமானது இடிகளைக்கக்குவதுபோல ஆயிரத்து நானூறு பாணங்களாலே லட்சுமணருடைய மார்புக்கவசத்தைப் பிளந்தான். அதைக்கண்டு தேவர்களெல்லாம் இந்திரசித்துவை முந்திவிட்டானென்று தங்கள் முகம்வாடி, கம்மலையிலிருந்து அருவியாறோடுவதுபோல இளையபெருமாளுடைய அழகிய திருத்தோளில் நின்றுப், ரத்தவெள்ளமொழுகுவதைக்கண்டு துக்கித்தார்கள். வைதிகமார்க்காநுசாரிகளாகிய முனிவர்களும், பெரியோர்களும், இந்த ராக்ஷசனே? வில்வீரர்களில் சிரேஷ்டமானனென்று பயந்து நடுங்கினார்கள். அப்போது சகலசாஸ்திரங்களையுங் கற்றறிந்த லட்சுமணர் அதிககோபங்கொண்டு கையிலுள்ளவில்லில் பதினாயிரபாணங்களைப் பிரயோகித்து, க்ஷணப்பொழுதில் அவன்தேரிற் பூட்டியிருந்த பிடர்மயிரையுடைய சிம்மங்களையெல்லாம் வேறுவேறாய்க் கூறிட்டுப், பிருதுக்கொடியையும் அறுத்துத்தள்ளி, அதிக கொடூரமான பதினாயிரம் அம்புகளையேவி, அந்த இந்திரசித்து அணிந்திருந்த கவசத்தைச் சின்னபின்னப் படுத்திவிட்டார். அப்படி இளையபெருமாள் பாணங்கள் பட்டமாத்திரத்தில் காளமேகத்தில் சூரியகிரணங்கள் பிரகாசிக்கிறதுபோல இந்திரசித்துவின் தோளின்மீதும், மார்பின்மீதும், பொருந்தியிருக்கின்ற கவசத்தைச் சுற்றிலும், நீள நீளமாகப் பவளக்கொடிகள் எதிர்ப்படர்ந்ததுபோல அம்புகள் தைத்த வாய்களிலெல்லாம் ரத்தம் தாரைதாரையாய் ஒழுகிவடிந்தது. பொன்மயமான பெரியதேரிற்பூட்டிய சிம்மங்கள் மாண்டபோதும், பிரகாசிக்கின்ற வெற்றிக்கொடியுடனே சாரதியும், அறுந்து வீழ்ந்தகாலத்திலும், தன்னுடையமார்பில் பாணங்கள் தங்குதடையில்லாம லிருந்தகாலத்திலும், இன்னகாரியம் நடந்ததென்று அறியாதவனாகி இந்திரசித்து ஒருவார்த்தை சொல்லுகிறான்.

இந்த லட்சுமணனே நாராயணனாகவேண்டும், இவன் நாரனல்லாவிட்டால், அந்த ஸ்ரீராமன் நாராயணன் அல்லவென்று சொல்லலாம், அப்படி அல்லாவிட்டால் இவனைச் சிவனென்

றும், அந்த ஸ்ரீராமனைப் பிரம்மா வென்றுமாவது சொல்லலாம். அவர்களுமல்லாவிட்டால் லோகத்தில் ராஜவம்சத்தில் பிறந்து வாழ்கிறவர்களுக்குள் தனுர்வித்தியா சாமர்த்தியத்தில் இந்தமனிதர்களுக் கொப்பாக வேறே அரசர்களு மிருக்கின்றார்களா என்று வாயில் நெருப்பைக் கக்கிக்கொண்டு தேகமுழுவதும் ரத்தம்வடிய, எரிகிறநெருப்பில் நெய்வார்த்ததுபோலக் கோபமதிசரித்து உயிர் போனாலும் மெய்யோயாதவனாகி, அதி சீக்கிரமாய் ஒரிமைப்பொழுதுக்குள்ளே ஆயிரங் குதிரைகள்கட்டிய வேறொரு தேரிலேறி திக்குவிதிக்குகளெல்லாம் பாணத்தொனிகள் நிறையவும், ருத்திரமூர்த்தியும் உடல்நடுங்கவும், ஆயிரகோடி திவ்வியபாணங்களைப் பிரயோகித்து ஆகாசமெல்லாம் வெளியில்லாமல் மறைத்துவிட்டான்.

உடனே இளையபெருமாளும் ஆயிரபாணங்களைப் பத்தி பத்தியாய்ச் சித்திர விசித்திரமாகப் பிரயோகித்து, அந்தந்தப்பாணங்களைச் சின்னபின்னஞ்செய்து ராவணபுத்திரனாகிய இந்திரஜித்துவின்மேலும் ஆயிரபாணங்களைப் பிரயோகித்தார். அந்த ஆயிர பாணங்களும் வந்து தைத்த உடனே அக்கினியில் நெய்சொரிந்ததுக் கொப்பாகப் பொறுக்கமுடியாத கோபமூண்டு கொடிய துஷ்டனான அந்த இந்திரஜித்து அதிவீர சிரேஷ்டரான இளையபெருமாள் சென்னியின்மீது நூறுபாணங்களைப் பிரயோகித்தான். இளையபெருமாள் நெற்றிமேல் அந்த ஒருநூறு பாணங்களும் தைத்தகாலத்திலும் கொஞ்சமும் ஆயாசப்படாமல், அந்தத் துஷ்டன் மார்பினிடத்தில் அதிகுரூரமான நூறுபாணங்களைச் செலுத்தினர். அப்பாணங்கள்பட்டு உதிரம் ஒழுகுவதற்குள்ளாக ரத்தினங்களிழைத்த பொற்சக்கரம் அச்சோடு முறிந்துபோகவும், ஆயிரங்குதிரைகளும் சின்னபின்னப் பட்டுப்போகவும், கொல்லுகின்ற வேறொரு யமனைப்போல வாயுபுத்திரரான ஆஞ்சநேயர் ஒரு உதைஉதைத்து அவன்தேரை நொறுக்கி விட்டார். மறுபடியும் இந்திரஜித்து ஆயிரம் பேய்களைப்பூட்டியதும் ரத்தினங்களிழைத்ததுமான வேறொரு தேரின்மேல் ஒரு க்ஷணப்பொழுதுக்குள்ளே ஏறினன். அதையும் இளையபெருமாள் தமது கையிலுள்ள ஐம்பதுபாணத்தால் சிதைத்துத் தள்ளினார். இப்படி இந்திரஜித்து தேரேறுகிறதும், இளையபெருமாள் அதைச் சிதைக்கிறதுமேயல்லாமல் அவன் வேறேயுத்தஞ் செய்யவேயில்லை. இளையபெருமாளும் இந்தப்பிரகாரமாக ஒருநூறுபாணங்களால் அவனுடைய ஆயிரந்தேரையும் ஒருநாழிகைக்குள் சின்னபின்னம்பண்ணித் தகர்த்துப்போட்டார்.— இதைக்கண்டு தேவர்களெல்லாம் பல்லாண்டு பாடி ஆனந்தகர்ஜ்ஜனைசெய்து கற்பகப்புஷ்பங்களை வாரியிறைத்து, சுமித்திரை இளஞ் சிங்கமாகிய ராமாநுஜனை வணங்கி, இதற்கு முன் ஊசலாடிக்கொண்டிருந்த மனமுங் களித்து மேலுத்தரியத்தையும் விசிறியெறிந்து ஆனந்தத்தாண்டவஞ் செய்தார்கள். அந்தச் சமயத்தில் பத்துலக்ஷம் ராக்ஷசர்கள் இந்திரஜித்துவுக்குத் துணையாகவந்து லக்ஷ்மணருடனே போர்செய்யும்படியாக எக்கலிப்புடன் ஒன்றாய்க்கூடி முந்தியெதிர்த்துத்தேர் வீரரும், அதிவேகமுள்ள குதிரைவீரரும், செவந்தமுகத்தையும், கறுத்தமேனியையுமுடைய யானைவீரரும், மேகம்போலக் கர்ஜ்ஜிக்கின்றவர்களும், வீரகண்டாமணியைத் தரித்தவர்களும், பூமியாகாசமெல்லாம் அளாவும்படியாக ஒருவரைஒருவர் பேரிட்டழைத்துச் சாக்கிருதைசாக்கிருதையென்று எச்சரிக்கைபண்ணிப் பேரிமுழக்கத்துக்கொப்பாகப் பேசிக்கொண்டு வந்தார்கள். பார்த்தபார்த்த திக்குகளிலெல்லாம் சப்த்தமேகங்களும் கவிந்த ஆகாசமாய்த் தோன்றும்படிநிறைந்த அவர்கள்கூட்டத்தின் ஓசையும், அஸ்திரசஸ்திரங்கள் ஒன்றுடனொன்றுபட்டுச் சப்த்திக்கின்ற சப்த்தமும், ஒன்றாக்கூடி சுவர்க்கலோகத்தையுஞ் செவிடுபடுத்தி விட்டன. அவர்களது சேனைகளில் ஆளிகள் சப்த்தித்ததுகள், சிம்ஹங்கள் கர்ஜ்ஜித்ததுகள், பேய்கள் கூவினதுகள், யானைகள் வீறிட்டதுகள், அதிரதர்-மஹாரதர் - சமரதர் - அர்த்தரதர் - நெருங்கி எய்தபடியால் பாணங்கள் எங்கும் நிறைந்ததுகள். இவ்வளவு சேனைகள்வந்தும், ரணக்களமெல்லாம் பிணமய்மா யிருப்பதினல் சேனுபராக மெழும்பவேயில்லை. அவர்கள் கொண்டுவந்ததும், சிம்ஹங்கள் பூட்டித்தாவுகின்றது மான தேரின்மீது இந்திரனைச் செயம் பெற்றவனை மேக நாதன் ஏறிச் சரமாரியாக வருஷித்துத் திக்குவி திக்குகளெல்லாம் நிறைத்துவிட்டான். * அந்தி வானம் போலச் சொர்ன்ன மயமான திருமேனியை யுடைய இளைய பெருமாள் அவைகளை யெல்லாம் தூம்ச மாக்கிப் போட்டார். பின்னு மந்தப் பாணங்கள் பட்டுச் சூழ்ந்து வந்த ராக்ஷசர்கள் வீசுகின்ற வைகளும் - எய்கின்ற வைகளும், எறிகின்ற வைகளும், உதிர்ந்து பொ

டிப் பொடியாய்ப் போய் விட்டதுகள். ஆயிரந் தலைகள் ஒவ்வொரு பாணத்திலுமேலே உருண்டு கிடந்ததுகள், குடல்கள் பாம்பைப்போல் கிடந்ததுகள், பலம்பொருந்திய மதயானைகள் குன்றுகள்போல் கிடந்ததுகள், தேர்களெல்லாஞ் சின்னபின்னப்பட்டுச் சிதறிப்போய் விட்டதுகள், பலவகையான ஆயுதங்கள் மேடிட்டுக் கிடந்ததுகள், அவ்வாயுதங்களையுடைய வீரர்கள் கருங்கடல்போல் ரணக்களத்திற் கிடந்தார்கள். குண்டலங்களும், முத்தாரங்களும், பூமாலைகளும், கண்ட சரங்களும், வீரகழல்களும், மெய்க்கவசங்களும், சண்ட மாருதக் காற்றடித்தபோது மேகங்களில் நின்றும் மின்னல்கள் வீழ்ந்ததுபோல லக்ஷ்மணருடைய பாணங்கள் பட்டு வீழ்ந்ததுகள். இந்திரஜித்து எய்த பாணங்களை இளையபெருமாள் தமது அம்புகளாலே நாசமாக்கிவிட்டுத் தம்மோடெதிர்த்துப் போர் செய்கின்ற கண்டர்களாகிய ராக்ஷசர்களுடைய தலைக்குப்பல்களென்னும் மலைகளையமனுக்கும் இரக்கந் தோன்றும்படியாகக் குவித்தார். வில்வீரராகிய அந்த இளையபெருமாள் ஆரோகணித்திருந்த, ராக்ஷதர்களுக்கு யமனுக் கொப்பாகிய ஆஞ்சநேயர், தம்முடைய வாலால் சிலராக்ஷசதர்களைச் சுற்றிக்கட்டி வாரித்தூவுவார், சிலரைக் கால்களால் மிதிப்பார், சிலரை நெட்டித் தள்ளுவார், சிலரை ஆகாசத்திலெடுத்து எறிவார், சிலரை எதிரேபோய் அறைவார், சிலரைக் காலாலெட்டி யுதைப்பார், இப்படிச் செய்து விட்டு வீர கர்ஜ்ஜனைசெய்வார். இளைய பெருமாளேறி யருளிய மத்தகஜம்போன்ற அந்த அனுமான் சிலர் பிராண பீதியடையும்படி உறுமிப் பார்ப்பார், சிலர் கை கால் விதிர்த்துப் பிராண விடும்படிக் கோபிப்பார், சமுத்திரத்தை யானைகளால் தூர்த்து விடுவார், இரலைப் தேரையுங் கொட்டி நின்று அஷ்டகாசஞ் செய்வார், ஆயிரந் தேர்களைத் தமது உள்ளங் கையால் பற்றி யிழுப்பார், வீர சிகாமணியாகிய இளையபெருமாள் விருப்பங் கொண்டேறின ஆண் சிம்ஹத்துக்கொப்பாகிய அந்த வாயு புத்திரர், குதிரைகளையும், யானைகளையும், ஆயுதங்களைப் பிடித்திருக்கிற ராக்ஷச வீரர்களையும், புஷ்பத்தைப் போலவும், ஜலத்தைப் போலவும், அலங்காரமான தனியைப் போலவும் வாரி வாரித் தூவுவார், சில சேனைகளை அள்ளி உள்ளங் கையில் வைத்து நசுக்கி வருத்தப் படுத்துவார், அந்தச் சமயத்தில் தேவாமிர்த முண்டாகும்படி கடைந்த காலத்தில் பிறந்த விஷத்தைப் பானம் பண்ணின கைலாச பதியானவர் திரும்பி வந்தது போல அந்தந்த இடங்களில் மூர்ச்சையாய் வீழ்ந்து கிடந்த சுக்கிரீவ மஹாராஜர் - அங்கதன், நீலன், முதலான- சத்துருசம்ஹாரர்களான பலாட்டியர்கள் மூர்ச்சை தெளிந்து சுற்றுப்பார்த்து இளையபெருமாள் யுத்தத்தில் நிற்கிறதைக்கண்டு நாமிருந்தும் இவரைச் சண்டைக்கு விடத்தகுமா வென்று நெருப்புப் பறக்கக் கோபித்து அதிக உக்கிரமாகப் புறப்பட்டு வந்து லக்ஷ்மணரைச் சேர்ந்து கொண்டு மாறி மாறி மலைகளையும், மரங்களையும், நூறும், ஆயிர மாகப் பறித்தெறிந்து ராக்ஷச சேனைகளை அனாத்தக் கொல்லத் தலைப் பட்டார்கள். அநேக ஜாதிகளான மரங்களையும், மலைகளையும், பகைவர் மேல் செலுத்தும் படிப் பறித்துச் சுமந்துபோய் வீசி யெறிந்த போது அது பட்டுப் பதாதிகளாகிய ராக்ஷசர்களுடைய தேர்களெல்லாம், கடைச்சல் தொழிலைச்செய்கின்ற கம்மாளர்களுடைய பட்டடைச்சக்கரம்போலச்சுழன்றதுகள். வாலிபுத்திரனாகிய அங்கதப்பெருமான் ஒரு மலையைப் பிடுங்கித் தேர்மேல் வந்த இந்திர ஜித்துவைப் பார்த்து அடா துஷ்டா! தப்பித்துக் சொள் 'இது தான் உன்னுடைய 'உயிரை வந்து குடிக்கப் போகின்றதென்று சொல்லி ஆகாச பரியந்தம் அளாவும்படி நெருப்புப்பிறக்க வீசி யெறிந்தான், அநியாயஞ் செய்த ராவணனுடைய சிரையழித்து விட்டது போலத் தேவர்களுடைய சுவர்க்கலோகத்தை நாசப்படுத்தின உயர்ந்த தோள் வல்லமையை யுடைய இந்திரஜித்துவின் தேரை யொரு இமைப்பொழுதுக் குள்ளாகச் சிதைத் தழித்துவிட்டுப் போயினது. அப்போது தேவர்களெல்லாம் அதைக்கண்டு, பெருமையுடன் வந்து எங்கள் கண்மணியாகிய அங்கதன் தன் பாட்டன் இந்தத் துராத்து மாவினது கையிற் பட்ட பழியை நீக்கிவிட்டா னென்கிற சந்தோஷத்தால் ஆர்ப் பரித்துக் கூத்தாடினார்கள். இந்திரஜித்து அழிந்த தேரைவிட்டு ஆகாசத்தி லெழும்பி க்ஷண நேரத்திற்குள் வேறொரு ரதமேறி ஹே அங்கதா! போய்விடாதே நில்லென்று சொல்லிக் கையிலுள்ள பாணங்களை மழைபோல் வருஷித்து அதிககோபத்துடனே எதிரே நின்று அங்கதனைப்பார்த்து உன்னுயிரைக் கொடுத்து விட்டுப்போ என்றுசொன்னான். அப்படிச் சொன்ன இந்திரஜித்து வெண்பவனை மற்ற வானர வீரர்க

ளெல்லாம் வந்து சூழ்ந்து வரிசை வரிசையாகப் போர் செய்யத் தொடங்கி விருக்ஷங்களையும், கற்களையும், இறந்த ராக்ஷசர்களுடைய தலைகளையும், தேர்களையும், குதிரைகளையும், பலம் பொருந்திய யானைத்துதிக்கைகளையும், அம்புகளையும், வாரி வாரி இந்திரஜித்துவின் பாண வேகமும் பின்னிடும்படி வீசி யெதிர்த்தார்கள். அந்தச் சமயத்தில் ஸ்ரீ சர்வேசுரனாகிய ஸ்ரீராம பிரானுடைய கைங்கரிய விஷயத்தி லீடுபட்டுத் தமது ராச்சியத்தையும், வாழ்வையும், நித்திரையையும், நீக்கின மஹானுபாவராகிய லக்ஷ்மணப் பெருமாள் ஆயிர ஆயிரக் கணக்காக வஞ்சனையுள்ள ராக்ஷசர்களுடைய உயிர்களைத் தேவர்கள் நினைவிற்கு மெட்டாத தற்கு முன்னே போக்கிவிட்டார். யானைகளும், பெரிய தேர்களும், தன்னுயிர்க்குச் சமானமாகிய ராக்ஷசக் காலாட் படைகளும், குதிரைகளும், மாண்டுபோன விதத்தை இந்திரஜித்து நினைத்து வெற்றியிழந்து அக்கினியைப்போலக் கொதித்துத் தன்தேரின் சக்கரப் பக்கத்தினின்று, தேரைக் காத்துக் கொண்டிருந்த மஹாபாரிசுவன் தூமாக்ஷன் என்கிற இரண்டு பேரோடும், பெருஞ் சேனையோடும், ரணக்களத்துக்கு வந்து அந்த ரக்த வெள்ளத்தி லிருந்து தன் தேரைச் செலுத்த மாட்டாதவனாகி வாய் பேசாமல் மரம்போல் நின்றான். ஆகாசத்தில் பரவி யிருக்கின்ற கருமேகங்களை யொத்த இருளை யோட்ட வல்லதும், ஆகாசத்தில் பறக்கவல்லதுமான தனது தேர் செல்ல மாட்டாமலும் அந்தப் பிணமலைகளையே தாண்டமாட்டாமலும் போய்விட்டது. அப்போது இந்திரஜித்து தன்பக்கத்திலிருக்கிற அந்த இரண்டுபேர்களுடைய முகங்களை யுற்றுப்பார்த்துப் பார்த்தீர்களா, ஒரு வில்லையுடையவன் மஹாவீரர்களான நம்முடைய நாற்பதுவெள்ளஞ் சைனியங்களையுங் கொன்றுவிட்டு நிற்கின்றவித மென்னவென்று கேட்டான், அதைக்கேட்ட அந்த இரண்டு வீரர்களும் ஐயா! இந்திரஜித்துவே! அதைரியப்படாதேயும், நீருமப்படியே நாற்பது வெள்ளஞ்சேனை யழியும்படியாகக் கொடிய பாண வருஷங்களைப் பிரயோகஞ்செய்துதானிருக்கிறீர் உனதுசண்டையும்அதற்கொப்பாகுமென்று தைரியஞ்சொன்னார்கள். ஆஞ்சநேயர்மீது ஆரோகணித்தருளிய அந்திபோலும் சுவர்ணசாயையை யுடைய இளையபெருமாள் இந்திரஜித்துவுக்கெதிரேவந்து பத்துலக்ஷபாணங்களைப் பிரயோகித்தார், அவைகளையெல்லாம் அவன் பாணங்களைப்பிரயோகித்து வரிசையா யெல்லாவற்றையும் பொடிசூரணப்படுத்திப் பின்பு ஆறுமேழும் அறுபது மெண்பதும், நூறும் ஆயிரமுமாகப் பாணங்களைச்செலுத்தி எதிர்த்த வானரவீரர்களையெல்லாம் மூர்ச்சையாக்கிச் சிலரைப் பூமியில் விழச்செய்தான். சூரியகுமாரர் முதலான வானரவீரர்களெல்லாம் ரக்தப் பிரவாகத்தில் மூர்ச்சித்துவிழுந்து ஒதுங்கினமாத்திரத்தில் எதிரிலிருந்த ராவணி யென்கிற ராவணகுமாரனை லக்ஷியப்படுத்தி மூங்கிற்காடெரிகிறதுபோல அவன் மேனியெல்லாம் ரக்தமய மாகும்படி ஸ்ரீகோதண்ட தீக்ஷா குருவின் திருத்தம்பியாகிய இளையபெருமாள் கொடுமையான பாணங்களைத் தூவிவிட்டார். அந்தப் பாணங்கள்பட்டு இந்திரஜித்து அதிக வருத்தமடைந்தான், அவனுடனிருந்த மஹாபாரிசுவனும், தூமாக்ஷனும் நடுக்கங்கொண்டார்கள், அளவில்லாத ராக்ஷசசேனைகளெல்லாம் மடிந்ததுகள். இந்தப் பிரகாரமாகச் சரவருஷங்களால் தேர்களும், யானைகளும், குதிரைகளும் மாண்டு ரணக்களத்தில் கிடந்ததுகள். அவைகளை அந்த மஹாபாரிசுவனும், தூமாக்ஷனும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். மற்ற உள்ள ராக்ஷசர்களில் ஒருவராவது அந்த ரணக்களத்தில் நில்லாமல் உயிர்தப்பியோடிவிட்டார்கள்.

அப்படி ஓடிப்போன ராக்ஷசர்களில் சிலர் நாவுலர்ந்து தண்ணீரைஉண்ணும் ஆசையால் தேடும்போது எதிர்ப்பட்டமேகங்களைப்பிழிந்து குடித்து உடலிலுள்ள புண்களில் ரக்தம் பெருவாரியாயொழுகி ரணவலிகொண்டு கீழேவிழுந்து மாண்டார்கள். சிலர்மாத்திரந் தோற்றோடினார்கள். சிலர் தேகமெல்லாம் பாணங்களால் சல்லடைக்கண்களாய்த் தொளைபட்டு வழியிற்சாகாமல் பெண்சாதிமார்களைக் கூவிக்கொண்டுபோக, அவர்களுமிவர்களைக்கண்டு தங்கள் செம்பட்டமயிரவிழ்ந்துசோரக் கதறிக்கொண்டுவந்து இருவரும் கற்பகப்புஷ்பங்கள்பரப்பிய படுக்கையைச்சேர்ந்து ஒருவரையொருவர் கட்டிச்சேர்த்தபடியே இருவரும் பிராணன் நீங்கினார்கள். சிலர் அம்புகள்தைத்த மார்புடனே தங்கள் சொந்தக் கிரஹங்களைச்சேர்ந்து தங்களை வந்து காலைக்கட்டித் தடுத்துக்கொண்ட பிள்ளைகளைப்பார்த்து இவர்களை நீங்கள்காப்பாற்றுங்களென்று அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் முதலாகிய சுற்றத்தாருக்குச்சொல்லி, அந்தப்பிள்ளைகளைக்கனிவாய்ப்பார்த்துவந்து

பக்கத்தி லிருக்கின்ற யமனையும்பார்த்துத் தங்களுயிரை நீக்கினார்கள். சிலர் பெண்சாதி பிள்ளை தாய்தந்தை முதலிய தங்கள் பந்துக்களைப்பார்த்து எங்கள் உடலின் புண்களைப்பார்த்தீர்களா? செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீதசரதநந்தனர் திருத்தம்பியாருடைய சாமர்த்திய மிப்படிப்பட்டதா யிருக்கின்றபடியினாலே இந்த லங்காபட்டணம் க்ஷணத்துக்குள்ளாக வெறுமே போய்விடும். இந்திரஜித்து மரணமடைகிறதற்குள்ளே நீங்களெல்லாரும் பெருவிருக்ஷங்களுள்ள காடுகள் மலைகள் முதலான இடங்களிற்போ யொளித்துக்கொண்டு பிராணனை ரக்ஷிக்கும்படிச் சீக்கிரமாய்ப் புறப்பட்டுப் போங்களென்று புத்தி சொல்லிவிட்டுப் பிராணனை விட்டார்கள். மலையையொத்த கடினமானதேகத்தின் மருமஸ்தானத்தில் ஸ்வாமியின் பாணம் ரக்தபானம் பண்ணிப் பொத்துக்கொண் டிருக்கும்படிப் போன சிலராக்ஷசர்கள் இந்தப்பாணத்தைப் பிடுங்கினால் பிராணன் போய்விடுமென்று பினாகலந்த பாலைப்போல மனம்பேதலித்து மந்தாதிகாரிகளாகிய மற்றவர்களுக்குச் சொல்லத்தகாத திருமந்திரோபதேசத்தைப் பெற்ற பிரபந்நர்களைப்போலத் தங்களுக் குள்ளேயே பெருமூச்சுவிட்டு வருத்தப் பட்டுக்கொண்டு மௌனமா யிருந்து விட்டார்கள். சில சில ராக்ஷசர்கள் தேர்மீதும் போகார், குதிரை மீதும் போகார், செவந்த கண்ணையுடைய மேகம்போன்ற யானைமீதும் போகார், காலாலுங் காற்றைப்போல வேகமாய் ஓட மாட்டார்கள். ஊருக்குள் நுழையவொட்டாமல் காவலிட்டிருக்கிறபடியால் வெட்கமுற்று லங்கைக்குள்ளும் போகார்கள். உயிரின் மேலிருக்கிற ஆசையால் ரணகளத்திலும் நிற்கமாட்டார்கள். இப்படி நடுநடுங்கித் திக்குமயங்கி கண்டவிடங்களில் ஓடிப்போய் விட்டார்கள் அப்போது இந்திரஜித்து தனக்கு நேரிட்டவருத்தத்தை நினைத்து இந்த லக்ஷ்மணனை இப்போதே கொன்றுவிடுகிறேனென்று அதிக கோபத்துடனே அநேக பாணங்களை வருஷித்தான். அதைக்கண்டு பாணவருஷங்களைப் பொழிகின்ற பொன்னிற மேகத்துக் கொப்பான இளைய பெருமாள் யமனுக்குச் சமான மாகிய பாணங்களி னாலே அவன் மார்பி லணிந்திருந்த கவசத்தைச் சின்னபின்னப் படுத்திக் கிழித்துத் தள்ளி விட்டார். அப்போது மஹா பாரிசவனும், தூமாக்ஷனுமாகிய இரண்டு தேர் வீரர்களும், அனுமான் மீதும், இளைய பெருமாளுடைய மார்பின் மேலும், தோளின் மேலும், லக்ஷியம்வைத்து அநேக பாணங்களைத் தூவினார்கள். அவர்கள் பாணங்களைப் பெய்த உடனே - லக்ஷ்மணர் அந்த இரண்டுபேர்களுடைய வாகைமாலை சூடின விற்களையும், அச்சுப் பூட்டின தேர்களையும், அந்தத் தேரைச் செலுத்துகிற சாரதிகளுயிரையும், குதிரையின் பிராணனையும், துச்சப் படுத்திவிட்டார். வில்லிழந்த அந்த இரண்டுவீரர்களும், இரண்டு வஜ்ர தண்டங்களைக் கையில் பிடித்துக்கொண்டு இடிகள் வருவதுபோல ஓடிவந்து அஞ்சநேயரைக் கிட்டிக் கண்களில் அக்கினிப் பொறி பறக்க மோதியடித்தார்கள். அடித்த உடனே தம்முடைய மிகுந்த பலம்பொருந்திய கைகளால் அந்த இரண்டு முசலங்களையும் பறித்துக்கொண்டார். அந்தத் தண்டங்கள் அவர்கையில் சிக்கிக்கொண்டதை அந்தத்துஷ்டர்கள் பார்த்து இனி நாம் செய்வதொன்று மில்லை, இனி யவன் நம்மை யடித்துக் கொன்றுவிடுவானென்று பயந்து தாமிருவராயினும் ராவணனிடத்தில் உண்ட செஞ்சோற்றுக்கடனையும் பாராமல் தங்களுயிரையே பெரிதென்று அதற்கே உதவிசெய்ய ஓடிப்போனார்கள். அந்தச்சமயத்தில் குளிர்ந்த தென்றற்காற்றடிக்கிறதினாலும், அவர்களாயுசுக்கு முடிவில்லாமையாலும், யமன்வந்து அவர்களுயிரைக் கிரகிக்கத்தக்க குறிகளில்லாமையாலும், முன்னே அடைந்த மூர்ச்சைதெளிந்து ஆயாசமும், வருத்தமுமாறி அதிக ஊக்கமும், பலமும்பெற்று எழுந்துவந்து அங்கதகுமாரன், குமுதன், நீலன், சாம்பவன், சுக்கிரீவமஹாராஜர், மயிந்தன், அவன்தம்பி துமிந்தன், சதவலி, பனசன், அவன்தமையன்முதலான யானைகளுக்கும் சிம்ஹங்களுக்கும்ஒப்பான வீரர்களெல்லாம், மலைகளைப்பேர்த் தெடுத்துக்கொண்டு தேவர்களெல்லாம்வாழ்த்திப் பல்லாண்டுசொல்லவந்து வீரகர்ஜ்ஜனைசெய்து, அத்தனைபேர்களும், ஏககாலத்தில் இடிகளைப் போலவும், மின்னலைப்போலவும், மலைகளை இந்திரஜித்துவின்மேல் பிரயோகித்தார்கள். அதிசயமான வில்வீரனாகிய இந்திரஜித்து இந்தமலைகளெல்லாமோ நம்முடன் யுத்தஞ்செய்யத் தக்கவையென்று சிரித்து, அதுகளையெல்லாஞ் சின்னபின்னமாகத் தன் அம்புகளால் சிதறஅடித்தான். மறுபடியும் மரங்களையும், மலைகளையும், கல்லுகளையும், மழையைப்போல வருஷித்து, வானரவீரர்களெல்

லாம் நெருங்கினார்கள். அப்படி நெருங்கியதைப்பார்த்தும் திரமான மனமும், கைவில்லும், அம்புகளும், தனக்குத் துணையாகத்தானொருவனே அச்சமின்றி நிற்கின்ற நிசாசரனாகிய இந்திரஜித்துவின்மேல் விரக்கமுற்றவனைப்போலச் சூரியன் அஸ்தகிரியின் மீதிறங்கினான். ரிக்கு, எஜுர், சாம, அதர்வண மென்கின்ற வேதங்களும், மநு முதலான தருமசாஸ்திரங்களும், பஞ்சமஹா யஜ்ஞங்களும், யாகங்களும், அந்தச் சீதரனே என்றும், தெய்வத்தன்மையுள்ள மஹாரிஷிகளுடைய பிரயோசனமும் அந்நாரணனே என்றும் அறியாமல் நித்திய நிர்விகார அப்பிராகிருத திவ்ய தேஜோமயமாயும், ஆயுதராஜமாயும், சாக்ஷாத்து தம்முடைய திவ்யாஜ்ஞையின்படி சகலலோகங்களிலும் பிரவேசித்து அங்குள்ள துஷ்டர்களையெல்லாம் சம்ஹரிக்கின்றவராயு மெழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீசுதரிசனாழ்வானைத் திருக்கரத்தில் தரித்தருளிய ஸ்ரீயப்பதியே சகலலோக காரணமான வஸ்துவென்று நினையாத அறிவினர்களுடைய மனம்போல அஷ்டதிசையும் அந்தகாரமாய் விட்டது.

அப்போது விபீஷணாழ்வான் ஸ்வாமி! இந்தச் சர்ப்பத்துக் கொப்பானவனை இன்னுங் கால்நாழிகையிற் கொன்றால் தான் அவனிறப்பா னில்லாவிட்டால் ராக்ஷசர்களுடைய மாயகாலம் வந்துவிடும், அப்புறமிவன் ஆகாசத்திற்பாய்ந்து நம்மை மோசம்பண்ணி வெல்லுவா னென்று சொன்னார். அப்போது இளையபெருமாள் எல்லா வானர வீரர்மேலும், அனுமான்மீதும், அனேககோடி பாணங்களைப் பிரயோகித்துக் கொண்டு காலம் பார்த்துக்கொண் டிருக்கின்ற வில்வீரனான இந்திர ஜித்துவை இனிக் கொன்றுவிடவேண்டுமென்று அவனுடைய சித்திரத் தேரைச் சில திவ்விய பாணங்களால் நொறுக்கிவிட்டார். அந்தத்தே ரழிவதற்கு முன்பாக இனிநா மிங்கிருந்தால் லக்ஷ்மணனுடைய அம்பினால் வருத்தப்பட்டுச்சாகவேண்டுமே, இவர்கள் ஜெயித்தோ மென்று கர்விப்பார்களே! இப்படி உயிர் தப்பிப் போகாதபடி நாகபாசத்தாற் கட்டி விடுகிறே னென்று விழித்து விழிக்கிறதற்கு முன்னே வில்லும் அம்பறுத் தூணியுமாய் ஆகாசத்திற் பாய்ந்தான். பொன் மயமாகிய திருமேனியை யுடைய இளையபெருமாள் இவனுடனே யாவரும் புகழும்படியான சாமர்த்திய வித்தையைச்செய்து கொண்டிருக்கவும், இவன் வேறே யென்ன மோசக் கருத்தை நினைத்துக்கொண்டு ஆகாசத்தில் மறைந்தான் என்னவிளையப்போகிறதோ வென்று பயந்து தேவர்களெல்லாம் ஓடிப்போனார்கள். கையில் வில்லைப் பிடித்தவனும், முதுகில் அம்பறுத் தூணியை இறுகக் கட்டினவனும், தன்னுள்ளே பொங்கிக் கொதிக்கின்ற கோபத்தை யுடையவனும், அக்கினி மயமாய்ச் சுவாசம் விடுகிறவனும், பொல்லாங்கைச் செய்பவர்களுக் கெல்லாம் குருபீடமானவனும், மாயங்களை தனக்கு ஐஸ்வரியமாகத் தேடிவைத்திருக்கிறவனுமான இந்திரஜித்து நல்ல இருட்டில் ஆகாசத்திலுள்ள மேகத்துக்கு மேலே போய் மறைந்து கொண்டான். குறைவில்லாத தபங்களைச் செய்ததினாலும், அனேகதானங்களைச் செய்ததினாலும், அஜ்ஞானப்பிணிப்புகளை யறுப்பவர்களான பிரம ருத்திரேந்திராதியர்க ளிடத்தில் தான் பெற்ற வரத்தினாலும், தன்னுடைய ராக்ஷசப் பிறப்பினாலும் மந்திர உருவினாலும், அணுவைப் போலச் சிறியதான ஒரு சூக்ஷ்ம தேகத்தையு முடையவனாகி, பிரம்ம ருத்திரேந்திராதியர்களாலும், அவர்களுடைய உயர்ந்த தோள்களையும், இறுக்கிக் கட்டித் தள்ளினா லல்லாமல் மீளாத நாகபாசப் படையை உபமந்திரித்து எடுத்தான் - இங்கே இந்திரஜித்து மறைந்து போனதைக்கண்டு வானர வீரர்கள் சண்டைக்குப் பயந்து ராவண புத்திரன் ஓடிப் போய் விட்டானென்று நினைத் தார்ப்பரித்தார்கள். இளைய பெருமாளும் அப்படியே திருவுளங் கொண்டு சிரித்தார். இவர்களெல்லாம் இந்திரஜித்து மாயையைச்செய்வானென்பதை அறியாதவர்களாய்ப் போர்த்தொழிலை நீங்கிநின்றார்கள். இளையபெருமாளும் ஆஞ்சநேயருடைய திருத்தோளைவிட்டிறங்கித் தமது கையிலிருந்த பலம்பொருந்திய வில்லை அங்கதகுமாரனுடைய கையில் கொடுத்து முதுகி லிறுக்கி யிருந்த அம்பறுத் தூணியையும் முதுகு வரையிலும் பாய்ந்திருந்த அம்புகளையெல்லாம் வரிசையாய்ப் பிடுங்கிவிட்டுக் கைகால்களை யுதறி இளைப்பாறிக்கொண்டு அதிமானுஷிய சேஷ்டிதராகிய தாம் மேல்நடப்பதை சிறிதும் உணராதவரா யிருந்துவிட்டார்.

அப்படியா யிருக்கும்போது இந்திரஜித்துவாகிய சண்டாளோத்தமன் அந்தக் கொடிய நாகபாசப்படையைப் பிரயோகித்துவிட்டான். அது அஷ்டதிக்குகளிலுமுள்ள இருட்டையெல்லாம் ஓட்டி, அக்கினியைக் கக்கிக்கொண்டு ஓடிவந்து இளையபெ

குமாருடைய இரண்டு வயிரத்தோள் மலைகளைவருத்தமுண்டாக்கிக்கட்டிவிட்டது. இப்படி ஸ்ரீரகுகுலோத்தமருடைய திருத்தம்பியாருடைய திருத்தோள்களை நாகபாசங்கட்டியதை நாரத-வால்மீகிமுதலான மஹாரிஷிகள் வெளியிட்டிருக்கின்றார்கள் என்று ஸ்ரீமத்கம்பநாட்டாழ்வார் கவியில்கூறினார் இதைத்தாம் கூறுவதாகச் சொல்லவும், திருவுளங் கலங்கினர்போலும், இப்பாசம் இறுக்கிக்கட்டின போதும், பொல்லாங்குகள் விளைந்த போதும், மனந் திகைத்து நின்றாரோ யல்லாமல் இது இந்திரஜித்துவின் மாயையென்று உணராமலும் மனதில் கொஞ்சமாவது வியசனப்பட்டு அதைரிய மடையாமலும் அதற்கு ஒடுங்கி யாதொன்றுந் தோற்றாமல் சுற்றி ரணக்களத்தைப் பார்ப்பார். மறுபடியும் ஆகாசத்தைப் பார்ப்பார். மற்ற வானர வீரர்களையும் கோரதந்தங்களை யுடைய அந்த நாகபாசங்கள் வஜ்ரஸ்தம்பம்போலவும், மலைகளைப்போலவும், பெரியனவா யிருக்கின்ற வானரவீரர்களுடைய தோள்கள் முறிந்துபோயின முறிந்து போயின வென்று சொல்லும்படி யிறுக்கிக்கட்டின மாத்திரத்தில் தெளிவுள்ள தைரியமான மனமயங்கிச் செய்வதின்னதென்று தெரியாமல் உழைந்துக்கொண்டிருந்தார்கள். அப்போது வாயு புத்திரராகிய ஆஞ்சனேயர் வஞ்சனையுள்ள சொற்பப் பையலாகிய அந்த இந்திர ஜித்துவை ஒருக்ஷணநேரத்துக்குள்ளாக ஆகாசத்திற் பாய்ந்து தேடிப் பிடித்துக்கொண்டு வருகிறேனென்று உக்கிரங் கொண்டபோது, வாலியினுடைய வாலால் ராவணன் தோள்களை கட்டினதுபோல நாகபாச மானது அநுமானுடைய வஜ்ரபருவதம்போன்ற தோள்களை இறுக்கிப் பிணித்தது. இந்தப் பிரகாரமாகக் கட்டுண்ட வானர வீரர்களெல்லாம் வருத்தம்பொறாமல் மலைகளைப்போலக் கீழேவிழுவார்கள், பூமியிற் புரளுவார்கள், தலைகளை மேலெடுத்துக் கண்களில்அக்கினிபறக்கப்பார்ப்பார்கள், வாய்களைச் சுழற்றிப் பூமியி லடிப்பார்கள், வாய் மடித்துப் பல்லைக்கடித்து ஆண்சிம்ஹத்துக்கொப்பான கோதண்டபாணியின் திருத்தம்பியாரைப் பார்த்து உள்ளங்கொதிப்பார்கள், பக்கத்தில நிற்கின்ற விபீஷணாழ்வானுடைய முகத்தைப் பார்த்து ஐயா! இதை நீக்கிக் கொள்ளும்படியான உபாய மேதேனுமுண்டோ வென்று கேட்பார்கள், லோகமெல்லா மூடிக்கொண் டிருக்கின்ற ராத்திரிகாலத்தைப் பார்த்துக் கோபிப்பார்கள்.—

இளையபெருமானுடைய மலைபோன்றதிருத்தோள்களைப்பார்த்து ஐயோ! நம்முடைய கண்முன்பாக ஸ்வாமி இப்படி வருத்தப்படலாமோவென்று கோபச்சிரிப்புச் சிரித்து, நிர்ப்பயர்களாய் அழுவார்கள். இதை யார் நீக்கவல்லவர்கள் ஆஞ்சநேயராகிய உபகாரகர்தாம் நீக்கவல்லவர். அவராவது தப்பிப்பிழைத்தாரோவென்றார்கள், இளையபெருமாள் வருத்தப்படுகிறதைப் பார்த்து, இதுதானு நமக்குவந்த பிரயோசனமென்று துக்கித்து ஸ்ரீராமபிரானுணவ ரிவருடைய இக்கட்டைப் பார்ப்பாரோவென்று துக்கித்தார்கள். இந்தச்சமயத்தில் நடந்த பொல்லாங்கை யென்னென்று சொல்லப்போகிறேன். அந்த மகாதுராத்துமாவான இந்திரஜித்து மின்னல்கள் ஓடுகிறதுபோலவும், ஆகாசத்திலிருந்து இடிகள் விழுகிறதுபோலவும், அநேகமானபொன்கட்டிய பாணங்களைப் பிரயோகித்தான். அவைகளெல்லாம் புகைபரப்பி அக்கினிகளைக் கக்கிக்கொண்டுவந்து யாவருங் குட்புற்றுக் கிடக்கிறபடியால் முன்னேமுதுகிற்பாய்ந்து பின்னே மார்பிலுருவிப்போய்விட்டதுகள். மலைகளின்மீது வருஷகால மேகத்தைத் தடுத்துப் பிரசண்டவாடைக்காற்று மோதினபோது அந்தமலைகள் பேர்ந்து அங்கங்கே தட்டுமாறி விழுந்துவிடுவதுபோல அம்புகள்பாய்ந்தமாத்திரத்தில் மலைபோன்ற தோள்களையுடைய வீரர்களெல்லாம் பூமியில் அலைகுலைந்து சாய்ந்துவிட்டார்கள். எங்கும் ரத்தவெள்ள மோடினது, ஆஞ்சநேயர் தேகத்தில் ஆயிரகோடி அம்புக்கு மதிகமாகப் பாய்ந்தபோதும் கொஞ்சமும்லக்ஷியஞ்செய்யாமல் கண்களில் நெருப்புப்பொறி பறக்கப்பார்த்துத் தமது ஆண்டவருடைய திருத்தம்பியாருக்குச் சம்பவித்த துக்கமானது தம்மைச் சுட, அதைப்பொறுக்கமாட்டாமல் பயந்து நடுங்கினார். மற்றவீரர்களெல்லாம் இடிபோலப்பாணங்கள் நூறும் ஆயிரமுமாகத் தேகத்தில் நுழைந்தவுடனே ரத்தம் பெருகி ஆறுபோலோட மூர்ச்சையாய்விழுந்துபோனார்கள். அங்கதப்பெருமான்மாத்திரம்அநேகபாணங்கள் தேகமுழுவதுந் தைத்திருந்தபோதிலும் சோர்வடையாமல் சும்மாயிருந்தான். சூரியகுமாரன் சுக்கிரீவமகாராஜர் கழற்காய்மேலுள்ள முட்களைப்போல உடலெல்லாம் அம்புகள் தைப்புண்டு கண்களில் நெருப்புப்பொறி பறக்கவும், மூங்கிற்காடு பற்றியெரிவதுபோலத்தேகத்தில் மயிர்களெல்லா மெரியவும், ரத்தக்கடலுக்குள்ளே உதிக்கின்ற தன்

பிதாவாகிய சூரியனைப்போலிருந்தார். ஈடுமெதிப்பு யில்லாத ஸ்ரீராமருடைய திருத்தம்பியாகிய இளையபெருமாள் கொடியநாகபாசத்தாற் கட்டுண்டு வெப்பமான பாணங்கள் தொளைக்கின்ற திருமேனியை யுடையவராய் உணர்வுடனேயிருந்து வருத்தப்பட்டு, லோகபாச மயக்கம் மூலப்பிரகிருதியாலென்று அதனைக்கடந்தவர் இந்தநாகபாசத்தைச் சகிக்கமாட்டாதவராய் அறிவுசோர்ந்து மூர்ச்சையானார். திருமேனியில் தைத்திருக்கின்ற அக்கினிமுகப் பாணங்களெல்லாம் கிரணங்கள்போலவும் வழிந்து அலைவீசுகின்ற கடல்போன்ற ரத்தம் - வெயிலைப்போலவும், இருட்டைத் துரத்தும்படியான மிகுந்த பிரகாசத்தையுடைய இளையபெருமாள் கேதுவென்ற சர்ப்பத்தினால் பற்றப்பட்டு ஆகாசத்திலிருந்து பூமியில்வீழ்ந்த சூரியனுக்கொப்பாகவுந் தோன்றினார். இந்தப்பிரகாரமாக இளையபெருமாள் மூர்ச்சையடைந்தார். மற்றவர்களெல்லாம் மூர்ச்சையாய்ப் பூமியில் வீழ்ந்து கிடந்தார்கள். தன்னம்புகளால் அவர்கள் தேகத்தையெல்லாம் மூடிவிட்ட இந்திரஜித்தும், முன்னே இளையபெருமாளுடைய பாணங்களால் சல்லடைக்கண்களாய்த் தொளைபட்டு வருத்தமுற்று வாயால் ரத்தங்களைக் கக்கிக்கொண்டு எல்லாரையுங் கொன்று விட்டு வருகிறேனென்று நான் சொன்ன சபதத்தை முடித்துவிட்டேன். நம் முடற்புண்ணையும் வருத்தத்தையும் நாளைக்கே யாற்றிக்கொண்டு வந்து மற்ற காரியங்களையு முடித்து விடுவோமென்று நினைத்தான். அவனுக்கு இரண்டுபக்கங்களிலும் நின்று இரண்டு பேர்கள் இன்றையோடு மனிதர்களுடைய உயிர் வாழ்க்கைபோய்விட்டதென்றும், குரங்குச்சேனையெல்லாம் மாண்டுவிட்டதென்றும், மங்கலங் கூறிக்கொண்டுவரத் தம்பிதாவான ராவணனுடைய மாளிகையைப் போய்ச்சேரும்படிப் புறப்பட்டு உகாந்தகால மேகத்தைப்போல அஸ்திர வருஷங்களைப் பொழிந்து கொண்டிருந்த இளையபெருமாளை விட்டு நீங்கியும், கச்சிறுக்கிய பருத்த ஸ்தநங்களையும் முத்தையொத்த சிறுதந்தபந்திகளையுமுடைய ராக்ஷச ஸ்திரீகளினது கருங்கண்களாகிய பாணங்கள் தனது தோள்களில் தைத்துப் பாயும்படியான மன்மத யுத்தம் நீங்காதவனாகியும், பத்துக்கோடி ரத்தின தீபங்களையேந்திக்கொண்டு குற்றமற்ற தேவலோக ஸ்திரீகளும், நாகலோக ஸ்திரீகளும், பூலோக ஸ்திரீகளும், பல்லாண்டு பாடிக் கொண்டு வரவும், ராக்ஷசஸ்திரீகளெல்லாம் ஆரத்தி சுற்றி வாழ்த்திக் கொண்டு சூழ்ந்து வரவும் போய், ராவணனைக் கண்டு ரணகளத்தில் நடந்த காரியங்களை யெல்லாம் அவனுக்குத் தெரியச்சொல்லி ஐயா! வெற்றிபெற்றேன் நீ இனிமேல் துக்கிக்க வேண்டாம், இன்றைக்கு நான் வெகு வருத்தப்பட்டேன், என் தேகப்புண்களை யெல்லாம் சீக்கிரத்தில் ஆற்றிக்கொண்டு மற்ற காரியமெல்லாம் பின்னால் சொல்லுகிறேனென்று அவனைத் தேற்றிவிட்டுத் தன்மனதிலிருக்கின்ற வருத்தத்தை நீக்கிக் கொள்ளும்படியாகத் தன்னுடைய மாளிகைக்குப்போய்ச் சேர்ந்தான்.

இவ்விடத்தில் விபீஷிணாழ்வான் அதிக துக்கத்துடனே தானின்னது செய்யவேண்டுமென்று அறியாதவராகி மத்தினாற்கடைந்த தயிரைப்போல மனம் பேதித்து மயங்கி ஐயோ! அவ்விடத்திலேயே துஷ்டனான ராவணன் என்னைக் கொல்லாமற் போனானே, தயவில்லாத நானேயானாலும் நான்றுகொண்டிறவாமற் போனேனே, மஹா தைரியவான் நான் என்று வந்து பூமியில் விழுந்து புரண்டு நாகபாசத்தினாலே என்னாசாரியருடைய திருத்தம்பியார் கட்டுண்டார். அதுபோலவே என்னட்பினர்களான வானரவீரர்களெல்லாரும் கட்டுண்டுபோனார்கள். நானொருவன் மாத்திரம் இறவாதிருக்கின்றேன். சக்கரவர்த்தி திருக்குமாரர் என்னை யென்ன நினைப்பாரோவென்று சிந்தித்து மனோ உஷ்ணத்தால் தீந்தமலர்மாலையுடைய மார்பராய் வாயைத் திறந்து கதறி என்னை ஸ்வாமியானவர், இவன் கூடவேயிருந்து மோசம் பண்ணிக் கொல்லச்செய்தானென்பாரோ! கூட அழைத்துக்கொண்டு போய்த் தம்மகனுக்கு வெற்றி யுண்டாகும்படிச் செய்தானென்று சொல்வாரோ! இப்படிப்பட்ட பொல்லாங்குகளெல்லாம் இவனே தருந்த மூலமாய் நமக்கு விசுவாசம்வர நடந்து காட்டினானென்று நினைப்பாரோ! என்று புத்திமான்கள் தங்கள் கல்வியின் அளவே தாங்கள் சொல்லும் வார்த்தையுமென்பதுபோலத் தம்முடைய உள்ளத்தினளவு புலம்பித் தமது கண்ணீரைப் போல உயிரையுஞ்சோரச்செய்து பின்னுஞ் சொல்லுகிறார், அந்தச்சண்டாளனாகிய இந்திரஜித்து போர்செய்தபோது சமானமில்லாத இந்தத் தண்டாயுதத்தினாலே அவனைத் தேரோடு நசுங்குப்படிக்கொன்று என்மனதின் சுத்தத்தையாவது இவருக்குத் தெரிவிக்காமற் போனேனே அல்லது அவனைக்கையில்

சாகாமலும் போனேனே, மெலிவடையாம
லும்போனேனே, இனியாருக்கு நானுறவான
வனுவேன். கொஞ்சமுந் தலையில்லாமல்
சும்மா அழுதுகொண்டிருக்கின்றேனே, இவ
ர்களைச்சேர்த்து அவர்களுடன் சண்டை
செய்து கூடவே மாண்டுபோகவேண்டும்,
அல்லது பிழைத்தால் கூடப்பிழைத்து உள்
ளங்கை நெல்லிக்கனிபோல எல்விசுவாசத்
தைக்காட்டாமற்போனேன், அல்லது பிறகா
வது மாண்டுபோகவில்லை. நான் துஷ்டகாரி
யத்தைச் செய்யாதிருமேல அவனுக்குநல்
லவனுகாமற் போனேன், அபயங் கொடுத்
தாண்ட இவருக்கும் ஆகாமல் குத்தினவனை
யுங் குத்தாண்டவனையுங்கொன்ற இருமுனை
யிலுங் கூர்மையுள்ள சூலத்தைப்போல இரு
வரையுங் கெடுத்துவிட்டவனுனேனென்று
பலவிதமாய்ப் புலம்பிக்கொண்டழுது துக்
கிக்கின்ற விபீஷணுனவனைப்பார்த்து அனல
னென்ற ராக்ஷசமந்திரி ஐயா! இனிநடக்கவே
ண்டியகாரியங்களையெல்லாஞ் செய்யவேண்
டியவர் நீர் நினைவில்லாதவர்களைப் போல
நீரும் புலம்பலாமோவென்று அவனைத் தே
ற்றிப் பின்னுஞ்சொல்லுகின்றான். நீரிவ்விட
த்தி லிவர்களைக் காத்துக்கொண்டிரும் அடி
யேன்போய்ப் பெரியபெருமானுக்குச்சொ
ல்லுகிறேனென்றுபுறப்பட்டுப்போய்த்தர்ம
மேல்வடிவமாயுள்ள ஸ்ரீராமருடைய திரு
வடித் தாமரைகளில் விழுந்து ரணக்களத்தில்
நடந்த சமாசாரங்களையெல்லாம் விவரமாக
விண்ணப்பம் பண்ணினான். அதைக்கேட்டு
சஹஸ்திர நாமங்களையுடைய ஸ்ரீரகுநந்த
னர் துக்கசாகரத்திலழுந்தி ஒன்றும்பேசாம
லுந் தமது நிலைமையையும் அறியாமலும்,
உயிருஞ்சோராமலும்,கண்ணீர்விடாமலும்,
லோகத்தி லுள்ள ஒன்றையும் பாராமலும்,
லோகத்தைப் பஸ்மீகரணம் பண்ணிவிடாமலு
ம் கோபங் கொண்டு தமது திருக்கையால்
லோகத்திலுள்ள எல்லா வஸ்துவையும் வாரி இ
றைத்துவிடாமலும், அழுது ஏங்கிப் பிராண
னுள்ளவனைப் போலவே யாவருக்குங் கா
ணப்பட்டு மனம் புழுங்கி பெருமூச்சு விட்
டுத் துக்கித்து இவ்விடத்திருந்து செய்யத்த
க்க தொன்றுமில்லை யென்று திடமாயெழு
ந்து வேகமாய் மடமடவென்றோடிப்போய்
ச் சத்துருக்களைத் துரத்தியடித்த ரணக்களத்
தை நெருங்கி விஷமும், மேகமும், நெருக்க
டமும், இவைமுதலான மற்ற நீலநிறமுள்ள
வைகளை யெல்லாம் ஒருமிக்கச் சேர்த்துப்
பிடித்ததைப் போலவும், காலமுழுதுஞ்சேர்ந்து
மே லோகமெல்லாம் வருஷித்ததுபோலவும்
இருட்படல மூடியிருந்த அந்த ராத்திரி கா
லம் அப்படியிருக்க. ஆயிரந்திருநாமங்களை
யுடைய ஸ்வாமியானவர் அதிகஜ்ஜோதிஸ்ஸூ மா
ன அக்கினியாஸ்திரத்தைத் தம்முடைய கோ
தண்டத்திற் பூட்டிப் பார்த்துவிட்ட மாத்திர
மே பகையாகிய இருள் நீங்கியோடும்படிச்
சூரியனுதித்தது போல லோகமெல்
லாம் வெளிச்சமா யிருந்தது. அப்போது
ஆயுதங்கள் தைத்த பிணமலைகள் பலபலவாய்
ரக்தப் பிரவாகத்தில் காணப்பட்ட கடல்
பொங்கி முடைநாற்றமுள்ள பிரம்ம கபால
த்தைக் கையிலுடைய ருத்திரன் லோகத்தை
யெல்லாம் அழித்து உண்ணுகின்ற யுகாந்த
காலத்தில் சமுத்திரஞ் சூழ்ந்த லோகம்போ
ல ரக்தம் பிரவகிக்கப் பிணமயமா யிருக்கி
ன்ற ரணக்களத்தைப் பார்த்து அந்தப்பெரு
மலைகளுக்கும் ரக்தப் பிரவாகத்திற்கும் நடு
விலும், திணமுள்ள சேற்றிலேயும் ஆயுதநெ
ருக்கினுள்ளும், புலால் நாற்றமுள்ள அந்தக்
களமுழுவதும் அரைக்ஷணத்துக்குள்ளாகஓடி
ப்பார்த்து ஒரு மங்கலமான இடத்தில் இளைய
பெருமா ளிருக்கக்கண்டு ஸ்வாமியானவர் அவ
ர்மீது விழுந்து தம்முடைய திருமார்பிலு
ரும்படித் தழுவி அப்பா தம்பீ ? இனிநானு
ன்னைவிட்டுப் பிழைக்கமாட்டேனென்று ஆவி
சோர்ந்து உருகிக் கண்களில்தாரைதாரையாக
க் கண்ணீர்பெருகி ஆகாசத்தில் மழையைப்
பெய்து கொண்டு சூரியனைச் சூழ்ந்து நின்ற
நீலநிறமானமேகத்துக்கொப்பாக இருந்தார்.
கையுங்காலும் உதைத்து உழைத்துக் கொண்
டார், பெருமூச்சுவிட்டார், உருகிப்போவா
ர். புத்திமயங்கிப்போவார், செய்யவேண்டி
ய காரிய மின்ன தென்றறியார், லக்ஷ்மணா
லக்ஷ்மணாஎன்றழைப்பார், தமது திருக்கை
யால்வாயையும், மூக்கையும், மூடிக்கொண்டு
சும்மாயிருப்பார், ஐயா ! லக்ஷ்மணா பிழை
ப்பாயோ என்றுசொல்வார், யாவர்க்கும் பிற
ந்தவர்போற் காணப்படும் பிறவாதவரான
சர்வலோக சரணியர் தமது தாமரை மலர்
போன்ற திருக்கைகளால் லக்ஷ்மணருடை
ய பாதங்களைத் தடவிப்பிடிப்பார், தொடை
யை மெல்லெனக் குத்துவார், பரிசுத்தமான
தாமரைமலர் போன்ற அவருடைய கண்கள்
திமிட்டுகிறதோ வென்று பார்ப்பார், மார்
பைத்தொட்டுப்பார்த்து நெஞ்சத் துடிக்கிற
தென்று சொல்லுவார், ஆகாசத்தைப் பார்ப்
பார், லக்ஷ்மணனைத் தூக்கித் தமது திருத்
தொடைமேல் வளர்த்திக் கொள்வார், மறுப

டியும் பூமியில்வளர்த்தவார், அந்தத்திருடன் போய்விட்டானே என்பார், வானரவீரர்களையெல்லாம் பார்க்கும், ஆதிசங்கல்பத்தை நினைப்பார், தமது திருத்தோளிலுள்ள பெரியவில்லைப் பார்ப்பார், அம்புகளை யெடுத்துப்பார்ப்பார், இந்தலோகத்தில் என்னைப் போல் இந்தத்துன்பத்தை யடைந்தவர்கள் வேறே யாராவதுண்டோ என்பார், எனக்கு நேரிட்ட இந்த எளிமைத்தனம் பெரியதென்பார், எல்லா அளவைப் பிரமாணங்களையுந் தாண்டிநின்றவர் தமது வில்லை நோக்குவார், நாகபாசக் கட்டைப் பார்ப்பார், விடியாத ராத்திரியைப் பார்ப்பார், ஆகாசத்திலுள்ள தேவர்களைப் பார்ப்பார், பூமியை வேருடனே பேர்த்துவிடுகிறே னென்பார், தமது திருப்பவளம்போன்ற இதழைக் கடிப்பார், பெரியோர்களுடைய சாஸ்திரசம்மதியைப் பார்ப்பார், தம்மைப்போலத் தமது புகழை விரும்புந் திருத்தோளை யுடையவர், அப்பா தம்பி - விபீஷிணா ? இந்திரஜித்துக்கு மிளையபெருமாளுக்கும் சண்டை நேரிட்டதென்று என்னைச் சீக்கிரமாக அழையாமற்போனாயே! இந்தத் தேவாஸ்திரத்தைத் தொடுத்த அந்த இந்திரஜித்துவின் தலையுடனிதையுந் துணித்துஉயிரை வாங்கிவிடுவேனே! என்னை யனியாயமாய்க் கெடுத்துவிட்டாயே! என்று எக்காலத்துங் கெடாதவரான ஸ்ரீராமர் அருளிச்செய்தவார்த்தையைக்கேட்டு அழுதுகொண்டிருந்த விபீஷிணாழ்வான் ஸ்வாமி அந்தச் சண்டாளன் யுத்தத்திற்குவந்து, சண்டைசெய்வானென்பதை அடியே னறியமாட்டேன். அவன் வந்து யுத்தத்தில் நின்றகாலத்திலும், அவனே தோற்றுப்போவானென்றே யுணர்ந்திருந்தேன். இந்தமாயம் இந்தத் தெய்வத்தன்மையுள்ள நாகபாசத்தால்வந்ததேயல்லாமல் வேறொன்றாலல்ல, நம்முடைய இளையபெருமாள் அதிகாயனுடைய தேகத்தை முண்டமாக்கி வெற்றிபெற்றுத் திரும்பாமல், லங்காதிபத்தியத்தைப் பெற்றவனான ராவணன் யுத்தத்திற்குவருவானென்று எண்ணிக்கொண்டிருக்கும்போது அவனுடைய பிள்ளையாகிய இந்தப்பையல் நாற்பதுவெள்ளம் சேனையுடனேவந்து நம்முடைய நாற்பது வெள்ளம் வானரசேனைகளின்மீது பாணங்களைப் பிரயோகித்து அவைகளைக் கொன்று வானரவீரர்களைத் துரத்திப் பெருஞ் சண்டைசெய்து அவர்களை மூன்றுதரம் பூமியில் மூர்ச்சையாய் விழும்படிச்செய்தான். பிறகு ஆயிரஞ்சிம்ஹங்கள்பூட்டிய தேரின்மேலேறி ஆண்சிம்ஹத்துக் கொப்பான இளையபெருமாளோ டெதிர்த்தான். இளையபெருமாள் அநுமான்மீது ஆரோகணித்தருளி அவனுடைய ஆயிரந்தேரும் பொடிப்பொடியாகும்படித் தம்முடைய வில்வலமையைக் காட்டிப் பிறகு அவனுடனேவந்த நாற்பது வெள்ளஞ் சேனையையும், சூரியனைக்கண்ட பனிபோற்கொன்று அவனுக்குப் பலமாய் வந்த மஹாபாரிசுவனென்பவனையும், தூமாக்ஷனென்பவனையும், பதாதியாய்த் துரத்திவிட்டு இனியென்ன இருக்கிறது இவனுமிறந்தானெனத்தக்கதாக, அநேகதிவ்வியபாணங்களை அந்தச்சண்டாளனுடைய மார்பிலெய்து பாணம்பட்டுப்பிளந்த இடமெல்லாம் ரத்தமொழுகும்படி நின்றவனை, இவன் சேனையெல்லாமுடிந்து ஒருவனாய்ச்சோர்ந்து நிற்கின்றான் தப்பிப்போவானேயானால் ஏதேனும் வஞ்சனைசெய்வான் என்று லோகமெல்லாங் கீர்த்திபரவச்செய்திருக்கின்ற ஸ்வாமிக்குச்சொன்னேன் சூரியனும் அஸ்தமனமானான். லோகமெல்லாம் மாயமா யிருண்டுவிட்டது. வஞ்சகனான இந்திரஜித்து தன்னுடைய மாயவரத்தினாலே ஆகாசத்திலேபோய் ஒளித்துக்கொண்ட பிற்பாடு நாகபாசத்தை வீசி நம்முடையகூட்டத்தையெல்லாம் சோரும்படிப் பண்ணினானென்று அம்புபட்டுத் தொளைப்பட்ட புண்ணுடையவரைப்போல அழுதகண்ணும் தொழுதகையுமாய் நின்று விண்ணப்பம்பண்ணி, பின்னும் ஸ்வாமீ எங்களாண்டவரே ! இவர்களெல்லாரும் பிராணன்போனவர்களல்லர், கட்டினபாசம் அறுந்தால் புல்லினுனிபோன்ற பாணங்களுக்கு வருத்தப்படமாட்டார்கள். தேவரீர் புலம்பி மனஞ்சலித்துத் துக்கிக்கவேண்டாம். தருமத்தை யொருநாளும் பாவம் வெல்லமாட்டாதென்றார். அதைக்கேட்டு ஸ்வாமி விபீஷிணாழ்வானைப்பார்த்து இந்தஅஸ்திரங்கொடுத்த தேவர்களார் ? இதன்பெயரென்ன, இது தீரும்படியான உபாயமேது, உனக்குத்தெரிந்ததையெல்லாம் விவரமாய்ச் சொல்லென்று கேட்க, விபீஷிணாழ்வான் ஸ்வாமீ மஹாபாக்கியம் அப்படியே விண்ணப்பம் பண்ணுகின்றேன். சக்கரவர்த்தித் திருக்குமாரரே இது முன்னே இந்தலோகத்தைச் சிருஷ்டித்த பிரமதேவர்செய்த யாகத்தி லுண்டானது இதைக் கயிலாசபதியாகிய காமதஹனர் அந்தப்பிரமதேவரைநோக்கித்தபஞ்செய்து வாங்கிவெற்றிபெற்றார். அவரை நோக்கி இந்தச்சண்டாளன்அதிககொடுமையானதவசைச்

செய்து பெற்றுக்கொண்டான். இது ஊழிக்காலத் தீயைக்காட்டிலும் மிகுந்த வல்லமையுடையது இது நாகபாசமென்று பேருள்ளது, இதனுடைய வல்லமைதான் ஆயிரங்கண்களையுடைய தேவேந்திரனுடைய வச்சிரத்தோள்களை யிறுக்கிக்கட்டினது. வேறேயொன்றை யாலோசிப்பானேன் முன்னால் உதயமானவர் லங்கைக்கு வந்தபோதும், இதனால் அவருடைய தோள்களையு மிறுக்கினது. மேலும் தேவர்கள் சொர்க்கலோக ஐசுவரியத்தை யிழந்ததும், இதனால் தான். இந்நாகபாசம் தானேவிட்டால்தான்விடும், அல்லாவிட்டால் பிரமலோகமுதலான லோகங்களெல்லாம் அழிந்தாலும் இது நீங்கமாட்டாது. அப்படியிருக்க இந்தப்பூலோகத்தைப்பற்றிப் பேசியென்ன. மாயிலங்களெல்லாம் சுமன்று உயிர்நீங்கினால்தானேவிட்டுவிடும், வேறே யிதற்கு உபாயமில்லை. தேனொழுகுகின்ற திருத்துழாய்மாலையைத்தரித்த ஸ்ரீரகுநந்தனே! இதன்வரலாறு இப்படிப்பட்டதாகுமென்றார். அப்போது தேவர்களுடைய துன்பங்களையெல்லாம் தீர்க்கும்படி அவதரித்தவரான பெரியபெருமாள் அப்படியானால் இந்த அஸ்திரத்தை இப்படிப்பட்ட துஷ்டர்களுக்குக் கொடுத்த தேவர்கள்மேலெறிந்துப் போகட்டுமா? இந்த லோகத்தையெல்லாஞ் சாம்பலாகச் சுட்டுவிட்டு, நானு முடிந்து போகட்டுமா? லங்கை சின்னபின்னப்படியாகப்போய் அந்த ராக்ஷசர்களுடைய வமிசங்களுடனே கருவறுத்துப் போகட்டுமா! நான்செய்யவேண்டியதைத் தகுந்த ஆலோசனையுடனே சொல்லக்கடவாய். இந்த நாகபாசத்தைக் கொடுத்தவர்கள் தாமே யென்னெதிர்வந்து இரங்கி வேண்டிக்கொள்ளும்படியான மார்க்க முண்டானால் கோபந்தணிகிறேன் இல்லாவிட்டால் முப்புரங்களை யோரம்பிலேச்சுட்ட ருத்திரமூர்த்தியைப்போல் இந்த மூன்றுலோகங்களையும் சுட்டு ஒருநொடியிற் சாம்பலாக்கி அழித்து விடட்டுமா! என்னருமைத் தம்பியாகிய லக்ஷ்மணன் இறப்பானானால் பிறகு - விபீஷணா! என்னை ஒருவேளை ராவணனே புகழ்ந்தாலுமென்ன! பழித்தாலுந்தானென்ன! தர்மந்தானென்ன! என்னை நம்பி வந்த என் சிநேகர்களைக் காட்டிலும், தேவர்களானாலும், இந்த லோகத்தி லுள்ள ஜீவர்களானாலும், எனக்கு நல்லவர்களாவார்களோ? என்றுசொல்லி ஒருதம்பிடன் இப்படிப்பட்ட துன்பத்தைச் சேர்த்ததற்கு நானு லகத்தை யெல்லாம் ஜெயித்து நாசம் பண்ணுகிறது கிரமம் அல்லவே யென்று துக்கித்து இருந்து இருந்து ஆலோசித்து, ஆலோசித்துப் பெருமூச்சு விட்டுத்தமது திருத்தம்பியாரைப்பார்க்கிலும் மற்ற வானரவீரர்களிடத்தில் தமக்குண்டான அபாரதயவால் பெருஞ்சோகமுற்று வேதமாகிய அங்குசத்தின் நிலையில் நிற்கின்ற இரண்டு துதிக்கையை யுடைய பெரிய யானைபோன்ற ஸ்வாமி யானவர் மறுபடியும் இளையபெருமாளுக்குச் சமீபமாய்வந்து அவருடைய மலைபோன்றதும் வெற்றிபெற்றதுமான திருத்தோள்களைப் பிணித்திருக்கிற நாகபாசத்தைப் பலதரம் உற்றுப்பார்த்து, இது என் தம்பியைக் கொன்றுவிட்டதானால், நானுமுடனே மாய்ந்து விடுவேனென்று நினைப்பார். இந்தப் பிரகாரமாக ஸ்ரீராமமூர்த்தி துக்கிக்கிறதைக்கண்டு தேவர்களெல்லாம் ஸ்வாமியை வந்து பார்த்துப் பயந்து இதுபோய் என்னமாய் முடியப் போகிறதோவென்று பரிதபிக்கின்ற சமயத்தில் ஸ்வாமி துக்கிக்கின்றதைப் பார்த்துக் கொண்டு தேவர்களுடனே நின்ற பெரிய திருவடியாகிய கருடாழ்வான் அதிக வேகத்துடனே தமது பக்தியின் நிமித்தமாக மனந் திடுக்கிட்டுத் தமது பாரதந்திரிய ஞானமுந் தட்டுமாறி ஸ்வதந்திரம் பாவித்து ஸ்வாமியினுடைய இத்துக்கத்தை நீக்கிவிடுகிறேன் என்று நல்ல இருள்நிறைந்த மத்திய ராத்திரியில் ஸ்வாமிக் கெதிரில் தோன்றும்படியாக, ஒருகாலத்தும் சலனப்படாத திருவுள்ளம் சோர்ந்து நடுங்குகின்றவரும் தடுமாறாத தைரிய மிழந்தவரு மாகிய ஸ்வாமியானவர் லங்கையை ராவணனுடனே அழிக்காமல் கிருபையுடனே யிருக்கின்ற தன்மையைக்கண்டு ஆச்சரியப்பட்டுத் தமதுவேகத்தால் மேருமலையும் பூமியுங்கிடுகிடென்று நடுக்கங்கொள்ளவும், லோகமெல்லாம் தேஜோமயமாய்ப் பிரகாசிக்கவும், கண் இமிட்டாத நிர்ஜரங்களும், அதிக பிரகாசத்தைப் பார்க்கமாட்டாமல் கண்ணை மூடிக்கொண்டு பயந்து நடுங்கவும், சண்ட மாருதக் காற்றை வீசுகின்ற சிறகை யுடையவராயும், அநேககோடி காததூரம் கடைநின்று தோற்றுகின்ற செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களினிடத்தில் தாரைதாரையாகக் கண்ணீர்சொரிந்து அநேகவிதமாக துக்கப்படுகின்ற ஸ்வாமியினுடைய சரியதிருமேனியைக் கண்டு அதிக சந்தோஷ சித்தராயும், குளிர்ந்த கடலானது தத்தளித்து அலைகளெறியவும்

லோகத்தை மூடிக் கொண்டிருக்கின்ற இருளிருந்த இடந்தெரியாமலோடி விடவும், தமது இறகை மடக்கிக் கொண்டு ரணக்களத்திலெழுந்தருள, வேதபுருஷன் பல்லாண்டு பாடவும், லோகத்திலுள்ளவர்களெல்லாம் தம்மைச்சேவித்தப்பாபநிவாரணராகவும், பிணித்துக்கொண்டிருக்கின்ற நாகபாசமெல்லாம் சின்னபின்னப்பட்டுப் பலஹீனப் படவும், இருளையடக்கிப்பிரகாசத்தை விளைத்துத்திக்குகளிலெல்லாங்கிரணங்களைச்செலுத்திச்சந்திரனுக்கு ஒளியைக் கொடுத்துச் சொலிக்கின்ற கிரணங்களை யுடைய பகலை உண்டாக்கி ஒளிவிசுகின்ற கிரீடங்களுடனே, பூமியின் மத்தியிலிருக்கின்ற மேருமலையின் மீது விளங்குகின்ற சூரியனைக்காட்டிலும் மூன்றுமடங்கதிகமா பிரகாசிக்கவும், ஒளிவிசுகின்ற நவரத்தினங்களுடனே சாம்பூநதம், கிளிச்சிறை, சாதரூபம், ஆடகமென்கிற பொன் வகைகள் பிரகாசிக்கும்போது, தமக் கியல்பா யுள்ள பிரகாசத்தைக்கொள்ளாமல், அந்தரத்தினப்பிரகாசங்களினாலே வேறொருவிதமான ஒளியையுடைத்தாய், மின்னலினாலே யுண்டான ஒரு மழையானது மேலுலகத்திலிருந்து பூலோகத்தில் விழுந்ததுபோலவும், சூரியன் தெற்கே யுதித்து வடக்கே வருகிறது போலவும், தோன்றப்பட்டு அநேக நாக ரத்தினங்களைக் கொண்டும், மின்னல்களைக்கொண்டும், செய்ததுபோலப் பிரகாசிக்கின்ற திவ்வியாபரணங்கள் ஒளிவீசவும், வெயிலை வீசுகின்ற பீதாம்பரத்தை தரித்துத் துளசிமாலை திருமார்பில் அசையவும், தாம்பெருமானை வெகுநாள்பிரிந்த துக்கம்நீங்கும்படியாகவும், ஸ்ரீராமருடைய திருமேனியைக் கண்டு சிரசின்மீது இரண்டு கையையுங் கூப்பித் தொழுது கொண்டு ஸ்வாமி ரணக்களத்தில் யாவருடனுங் கலந்து நிற்கிறபடியால் அவர் திருவடிகளில் மாத்திரம் தனியாகச் சேவிக்கக் கிடையாமல் அவர் துக்கித்துக்கொண் டிருக்கிற நிலைமையை நினைத்துநினைத்து நெஞ்சழிந்து, இந்தப் பதினாலுலோகமுந் தொழும்படியான திருவடிகள் பூமியில் தோயாமல் இறங்கி வரும்போதே அடிக்கடி ஸ்வாமியை நினைந்து வணங்கி.

## கவி.

வந்தாய்மறைந்து பிரிவால்வருந்து ........ *
மயர்வான முதலோர் ........ *
தந்தாதைதந்தை பிறவாபிறந்து ........ *
விளையாடுகின்ற தனியாய் ........ *
சிந்தாகுலங்கள் களைவாய்தளர்ந்து ........ *
துயர்கூர்தலென்ன செயலோ ........ *
எந்தாய்வருந்த விறைவாவருந்த ........ *
லெனவின்னபன்னி யழுவான் ........ (க)

தேவாதிதேவர் பலராலுமுந்தன் ........ *
திருநாமமோது செயலால் ........ *
மூவாததாரு மூலமேழோடேழு ........ *
மரசாளுமேன்மை முதலா ........ *
மேவாதவின்ப மவைமேவிமேவி ........ *
நெடுவீடுகண்டு முடிவார் ........ *
ஆவாய்வருந்தி யழுவாய்கொலாரிவ் ........ *
வதிரேகமாயை யறிவார் ........ (உ)

எழுவாயெவர்க்கு முதலாகிநீரே ........ *
டிடையாதியெங்கு முளையாய் ........ *
வழுவாதெவர்க்கும் வரமீயவல்லை ........ *
யவரால்வரங்கள் பெறுவாய் ........ *
தொழுவாய்தொடர்ச்சி தொடராததன்மை ........ *
யுருவாய்மறைந்து துயரால் ........ *
அழுவாயொருத்த னுளைபோலுமாரிவ் ........ *
வதிரேகமாயை யறிவார் ........ (ங)

உன்னெக்கவைத்த விருவர்க்குமொத்தி ........ *
யொருவற்குமுன்மை யுளையாய் ........ *
முன்னெக்கநிற்றி யுலகொக்கவொத்தி ........ *
முடிவொக்கிலொன்று முடியாய் ........ *
என்னெக்குமில்ன செயநேறவெண்ணி ........ *
யிருளொக்குமென்றும் விடியா ........ *
தன்னெப்பதேசொல் பிறிதேகொலாரிவ் ........ *
வதிரேகமாயை யறிவார் ........ (ச)

வானுளளித்தி முடியாமனிற்றி ........ *
வருநாளிறத்தி மறையாய் ........ *
பேறுயுனக்கோர் பொருள்வேண்டுமென்று ........
பெறுவானருத்தி பிடியாய் ........ *
ஊனுயுயிர்க்கு முயிராகிநிற்கு ........ *
முணர்வாகிபெண்ணி லுருவாய் ........ *
ஆனாதிமற்றை யலியாதியாரிவ் ........ *
வதிரேகமாயை யறிவார் ........ (டு)

தானந்தமில்லை பலவென்றுமொன்று ........ *
தனியென்றுமொன்று தவிரா ........ *
ஞானந்தொடர்ந்த சுடரென்றுமொன்று ........ *
நயநந்தொடர்ந்த வொளியால் ........ *
மானந்துறந்த பதமென்றுமுன்னை ........ *
மறைநாலுமந்த மறியா ........ *
ஆனந்தமென்று மயலென்றுமாரிவ் ........ *
வதிரேகமாயை யறிவார் ........ (சு)

கின்றது. தேவரீருக்கொப்பாகச் சிருஷ்டித்தருளின அஜசங்கரர்களுடனே தேவரும் உபேந்திரனென்னுந் திருநாமங்கொண்டு அவர்களோடு சமமுற்றிருக்கின்றீர். அவ்வாறிருந்தும் அந்தப்பிரமஹ ருத்திரர்களுக்குத் தேவரீருடைய நிலைமை இப்படிப்பட்டதென்றுசொல்லுந்திறில்லை. பிரஹ்மாமுதல் பிபீலிகை முடிவாகிய சமஸ்தசேதனு சேதனங்களையுங் கிரமமாய்நிறுத்தி, எல்லாவற்றிற்கும் நீரே காரணபூதரென்கிறதற் கடையாளமாக முந்தி எழுந்தருளி யிருக்கின்றீர். பின்னும் பஞ்சபூத மயமான லோகத்தோடு அந்தர்யாமித்துவமாய்க் கலந்து அந்தந்தப் பூதஸ்வரூபத்தை யொத்திருக்கின்றீர். அந்தந்தப்பூதங்களின் யதார்த்ததன்மையை யூகித்துப்பார்க்குமிடத்தில் ஒவ்வொருபூதங்களும் ஆகாமல் பிரத்தியேகமா யெழுந்தருளுவீர். அடியேனைப்போன்றவர்கள் தேவரீருடைய இவ்விதமான செய்கையை அறியவேண்டுமென்று நினைப்பார்களேயானால் தங்கள்அறிவெல்லாம் அந்தகாரமூடி ஒருநாளும் விடிவடையமாட்டார்கள். இந்தமாயையானது உமக்குச்சமானமானதோ ? அல்லது உமக்கு வேறானதோ ? இதையாரறிய வல்லவர்கள். லோகத்திலுள்ள யாவர்களுக்கும் அவரவர்களுக்குத்தக்கபடியே வாழ்நாளைக் கொடுக்கின்றீர். அவர்களுக்கு அந்தர்யாமியாய்நின்றும், அவர்களுடைய ஆத்துமாக்கள் தேகத்தைவிட்டுப் பிரியும்போது தேவரீர்மாத்திரம் விட்டுப்பிரியாமல் பூர்ணமா யெங்குந்நிறைந்திருக்கின்றீர். எல்லாக்காலங்களையுங் கடந்துநிற்கின்றீர். தேவர்மாத்திரம் நீங்கமாட்டீர். உமக்கு இன்னபொருள் வேண்டுமென்று ஒரு பொருளையும் வைத்துப் போற்றமாட்டீர். அந்தப்பொருளில் நீர் இச்சைவைக்கவும்மாட்டீர். பஞ்சபூத பஞ்சீகரணமான தேகமெல்லாம் தேவரீரேயாய் அந்தத்தேஹத்துக்குள்ளிருக்கின்ற உயிராகி, அவ்வுயிருக் கந்தர்யாமியாகிய அந்தராத்துமாவாகி, நிலைபெற்ற உணர்வுமாகின்றீர். பெண்ணுகின்றீர். ஆணுகின்றீர். அவ்விரண்டுமல்லாத அலியாகின்றீர். நான்குவேதங்களும் தேவரீரை எண்ணிலடங்காத பலவாகிய ஸ்வரூபமென்று ஒருதரஞ்சொல்லுகின்றது. ஏகமாகியஸ்வரூபமென்று ஒருதரஞ்சொல்லுகின்றது. நீங்காதஜ்ஞானப்பேரொளியாகிய ஸ்வரூபமென்று ஒருதரஞ்சொல்லுகின்றது. கண்ணுக்குப் புலப்படுவதான வெளியின் அளவைக்கடந்த பரமபதஸ்வரூபரான தேவரீரை முடிவில்லாத ஆநந்தஸ்வரூபரென்றுஞ் சொல்லுகின்றது. அவ்வாநந்தத்தை விளைவிப்பதான வஸ்துவென்றுஞ் சொல்லுகின்றது. இவ்வித உம்முடைய மாயையை அறியவல்லவர்கள் யாவர். செய்யத்தக்க தொழிலின் கூட்டங்களையெல்லாம் சேதநர்களுக்குக் கரசரணுதி யவயவங்களைச் சிருஷ்டித்தபோதே அவற்றோடுடாதியிலேயே யுண்டாக்கினீர். ஒன்றிலும் விருப்பமின்றி அத்தொழில்களையெல்லாம் கர்த்தாவாய் அந்தராத்துமாவா யிருந்து செய்கின்றீர். நினைவால் பிராப்தியாகின்ற மனதிலுள்ள ஆசைகளையெல்லாம் முடிப்பித்து, அந்தமனதுக்ககோசரமாகியே யிருக்கின்றீர். நாரதாதிகளாய் மஹாரிஷிகளுடனிருந்தே அவர்களால் தியானித் தறியத்தக்கவராகின்றீர். அவ்வாறே உபேந்திராதியாய்த் தேவர்களுடனிருந்தே அவர்களுடைய இடையூறுகளில் புறம்பேயிருக்கிற வஸ்துவைப்போலத் தியானித்தடையும்படி யெழுந்தருளி யிருக்கின்றீர். இந்த மஹாரிஷிகளையும், தேவர்களையும், பெருமூடர்களாகச்செய்து, அவர்களுடன் தேவரீருந் தெரியாதவரைப்போலவே யெழுந்தருளியிருக்கின்றீர். உம்முடைய இப்படிப்பட்ட வேறுபாடான மாயையை யாரறிவார்கள், மாறுபடாத வேதத்தினுச்சியில் எழுந்தருளியிருக்கின்ற தேவரீரைப் பாவவசமான தேகசம்பந்தத்தா லுண்டாகின்ற சம்சாரிகள் அறிவற்றுத் தேவரீருடைய யதார்த்த நிலைமையை விட்டுத் தங்கள் பந்துவான சம்சாரியென்று தங்கள் வாய்வந்தபடி பேசிக்கெட்டுப் போவார்கள். சாஸ்திரங்கள் நியமித்த சம்பந்தப்படி பிழைபடாத நீதியைப்புறக்கணியாமல் உம்மிடத்தில் அபிமானங்கொண்டிருக்க வேண்டியதிருக்க, அப்படிப்பட்ட அபிமானங்கொள்ளாத ஞானசூநியர்களுக்கே கையாளாயு மிருக்கின்றீர்.— அந்தநிலைமாறி ஓரவதாரத்தில் ராஜதிருக்கோலமுங் கொண்டருளுகின்றீர். இவ்வித லீலையை யாரறிந்து தெளிவார்கள். யுத்தத்தில் ஆயுதங்களைப் பிரயோகிக் கின்றவர்களும், அந்த ஆயுதங்களால் காயப்படுகின்றவர்களும், இவ்விரண்டு காரியங்களையும் பார்த்து இரக்கப்படுகின்றவர்களும், தேவரீரேயாயிருக்கின்றீர். அதுஉண்மையான தென்கின்ற நிலைமை தேவரீருடைய சர்வ காரணத்துவ சர்வரக்ஷகத்துவங்களால் பரிஷ்காரமாய் வெளியாகிறது. உம்மைவிட்டு நீங்கினவர்களால் நீக்கப்பட்ட ஜ்ஞானப்பொருளுடனே தேவரீரும் அவர்களைவிட்டு நீக்கிநிற்கின்றீர். அப்படி நீக்

கிலிருந்தும், அவ்வஞ்ஞானிகளுடனே அவர் களைப்பிரியாமல் அவர்கள் கடைத்தேறும் வழியைப்பார்த்துக்கொண்டு அவர்களையறியாமல் அவர்களுடனே அந்தர்யாமித்துவத்தால் வசிக்கின்றீர். அநந்நிய பிரயோஜனரும், ஏகாந்த பக்தரு ஸாமோபாய நிஷ்டருமான இரண்டதிகாரிகளும் அறிந்துகொண்டப்ரபத்தி மார்க்கமு நீர்தவரிராகவே நிற்கின்றீர். ஆதலால் தேவரீருடைய இவ்வித ஆச்சரிய நிலைமையை யாவரறிவார்கள். ஆயிரந் திருநாமங்களை யுடைத்தா யிருக்கின்றீர். காரண காரியமாய்ச் சம்பந்தித்திருக்கின்ற சராசரங்களி லெல்லாம் நிலைகொண்டு நித்தியமா யிருக்கின்றீர். இவற்றிற்கு வேறும் அவதரித்து நித்தியமா யிருக்கின்றீர். இந்தரஹஸ்யங்களைஒருவருக்குந்தோற்றுவிக்கிறதில்லை.பரமபாகவதர்களாலவெளியிட்ட உமது ரஹஸ்ய நிலைமைகளை அவர்கள் வாக்கியத்திலதைவுநேரிட வொட்டாமல் அவற்றி லடங்கி நிற்கின்றீர். உம்முடைய ஸ்வருபத்தைத் தியானிப்பவர்களுக்குச் சங்குசக்கர தாரியாய்ச் சேவை சாதிக்கின்றீர். லோகமே உமக்குத் திருமேனியென்று உரிமைபாவிக்கும்படி விராட்டு ரூபமாய் எழுந்தருளியிருக்கின்றீர். அத னுண்மையை ஆராய்ந்தால் அதற் கவயமாகிய சராசரங்க ளெல்லாமும்அவயவியாகிய தேவரீர் அல்லவா? அப்பிரமேயபாவாகதேவனுகவும் எழுந்தருளியிருக்கின்றீர். தேவரீருடையஇவ்விதக்கபடநாடகமாலையை அறியவல்லவர்யாவர் ஸ்வாமி! தேவரீருடைய ஸ்வருபநிலையையெல்லா மறந்தவராய்ப் போலவும் காணப் படுகின்றீர் தேவரீருடைய முயற்சிகளி லெல்லாம் உம்முடைய ஸ்வருபத்தை மறவாதவராய்ப் போலவே யெழுந்தருள் கின்றீர். அம்முயற்சியிலும் ஒவ்வொரு காலங்களில் கொஞ்சம் மறந்தவராய்ப் போலவுங் காணப்படு கின்றீர். நாட்டைவிட்டுக் காட்டை யடைந்து லோக வியாபாரங்களை யெல்லாம் விட்டுத் துறந்தவராய்ப்போலவுங் காணப்படுகின்றீர். பந்து சம்பந்த துக்கத்தைக்காட்டி அந்த வியா பாரத்தை நீங்காதவராய்ப் போலவும் காணப்படுகின்றீர். தேவரீர் இன்ன நிலைமையில்நிற்கின்றவரென்றுநிர்மாணிப்பதற்குஅடங்கமாட்டீர். சராசரங்கள் அவயங்களைப் பெற்றுப் பிறந்து தேவர் திருவடிகளில் அத்திபவசித்த மனமானது தமோற்ற மடையாத உமதடியார்களைப் பாவ உலகத்திலிருக்காமலிருக்கச் சிருஷ்டி செய்கின்ற பரமாத்மனே! தேவரீருடைய அரியதாம்மைச்சின நிலைபெறச் செய்வதற்கு உமது அகணித மாயாலீலையை ஆரறியவல்லவர்கள். சகலசப்த ஸ்வருபமாக எழுந்தருளியிருக்கின்றீர். அந்தச் சப்தார்த்தமுந் தேவரீரேயா யிருக்கின்றீர். தேவரீருடைய குணப்பிரகாச பகவதப் பிரமாணமான வேதபுருஷனால் ஒருகுணமுங் கடைகாண நிச்சயித்தறியப் படாமல் நிற்கின்றீர். அப்படிப்பட்டதேவரீர் திருக்கரத்தில் ஒரு வில்லைப் பிடித்துக்கொண்டு யாதொரு வருத்தமும் சத்துருக்களுக்குத் தோற்ற வொட்டாமல் எழுந்தருளியிருக்கின்றீர். பகைவர்களையெல்லாம் யுத்தத்திற்கு அழைக்கின்றபாஞ்சசந்நியாழ்வானைத் திருக்கரத்தி லுடைத்தா யிருக்கின்றீர். ராக்ஷசர்களை யெல்லாம் கொல்லத் திருவுளங்கொண்டிருக்கின்றீர். அவர்களுக்கந்தரியாமியாய் அவர்களுடனே கொலைப்பட்டு மிருக்கின்றீர் பாபப் பகைவனே உமது மாயையை அடியேன் இவ்விதமென்று அறிய மாட்டேன். தேவரீர் ராத்திரியுமா யிருக்கின்றீர். பகலுமாகிறீர். இந்த அபாரமான அற்புதத்தை யறியத்தக்கவர்கள் யாவர் என்றுநினைத்து நினைத்துப் பலவாறாக ஸ்தோத்திரம் பண்ணி மனங்கரைந்து மிகுந்த அக்கினிமயமானசோதியானது அந்தராத்திரி களையெல்லாம் துரத்திவிடப் பொன்மயமான மேருமலையைப் போல் ஒளி வீசிக்கொண்டு எதிரே நிற்கின்ற பெரிய திருவடியாகிய கருட பகவானைக் கடாக்ஷித்து நிலைபெற்ற புகழையுடையவராகிய ஸ்ரீ சக்கரவர்த்தித் திருக்குமாரர், இவர் யார் தேவபுருஷராயிருக்கின்றார் இவரை யாவரென்று நின்று நினைத்துக்கொண்டிருக்கும் போது உயரப் பறந்து வட்டமிட்டு ஸ்வாமியை வலமாகச் சுற்றிவந்து இந்த சப்தலோகங்களையும் மூடிமறைக்கும்படியானசிறகையுடையவ ராகிய கருடபகவான், ஸ்வாமியின் சந்நிதியில் நின்று பலகோடியாயிரகாதவழியிலும் தமது சிறகின் காற்றைவீச, அந்தச்சிறகிலிருந்து புறப்பட்ட காற்றானது தலைச் சகிக்கிறதற்குச் சக்தியில்லாத நிலத்திலிடத்தில் யாவர்க்குஞ் சுககரமுண்டாகும்படிக்குளிர்ந்து வீசிக் கொண்டு இருபையுடல்போக எல்லாருடலையுங் கட்டியிறுக்கி யிருந்த நாகபாசமானது சின்னபின்னப் பட்டுச் சிதறிப் போனது. அவர்கள் தேகத்திலுள்ள புண்களும், வடுக்களும், பஞ்சேந்திரியங்களையும் அவித்து, நல்ல ஸ்வருப ஞானத்துட னிருப்பதும் அன்றிச்சாஸ்திர தர்மத்தின்படியேநடந்தும்வருகின்றநிஷ்டனும் தளராமுயற்சி யுள்ளவனுமான ஒருவனை நடு

வில் அபுத்திபூர்வமா யடைந்த குறைவானது எப்படி அவனைப்பற்றாமல் நசித்துப்போய் விடுமோ அதுபோலக் கண்ணுக்குத் தோற்றாமல் மறைந்துபோனதுகள். தருமமார்க்கத்தைத் தப்பாத செய்கையற்று நடக்கின்ற தன்மையர்களா யிருக்கின்றபடியால் இடியையொத்தகொடுஞ் செய்கையையுடைய துஷ்டர்களான ராக்ஷசர்கள் மாத்திரம் பிழைக்கவில்லை - ஸ்ரீராமலக்ஷ்மணர்களாகிய பெரியோர்களுடைய கைங்கரியத்தில் நிலைபெற்றிருக்கின்ற வானர சேனை சமுத்திர மெல்லாம் கருடபகவானுடைய ஸ்பரிசம்பட்ட படியினாலே மூலதாமரச புஷ்பத்தி லெழுந்தருளி யிருக்கின்ற பிரம்மதேவர் கடைசியில் சிருஷ்டித்தவைகளைப்போல ஸ்ரீயப்பதியின் கிருபையால் மரண மூர்ச்சை தெளிந்தும் உயிர் பெற்றும் எழுந்திருந்து நிலைத்து நின்றார்கள். மஹா பாதகனான இந்திரஜித்து பிரயோகித்த நாகபாச மானது தாமரைக் கொடியின் நூலைப் போலச் சின்ன பின்னப் பட்டதென்று சொல்ல வேண்டிய தென்ன மேகத்தைத் தோற்கடித்த புன் சிரிப்பையுடைய ஸ்ரீராம பிரானுடைய திருவடித்தாமரைப் பிரீதியர்த்தமாக அநேக தானங்களைக் கொடுக்கின்ற வெண்ணைநல்லூர்ச் சடையப்ப முதலியாருடைய சகோதரர் சரராம முதலியாரைச் சேர்ந்த லோகத்திலுள்ள வேதபாராயண பரர்களும், வித்துவான்களு முதலானவர்களுடைய பசிப்பிணியானது பறந்துபோனதுபோல ஒழிவிட்டது. அப்போது இளையபெருமாள் எழுந்து ஸ்ரீராமமூர்த்தியினுடைய திருவடிகளில் வந்து வணங்கி நின்றார். அப்படிநின்ற லக்ஷ்மணனை அதிக கிருபையுடனே ஸ்வாமி தமது திருவாபரணங்களுடன் கூடிய திருமார்பி லிறுகத் தழுவி நமக்கு அதிக வருத்தத்தை விளைவித்த விதியானது மறுபடியுங் கிருபைசெய்ததென்று சந்தோஷித்து தமது பிராண பந்துக்களுக்குச் சமானமாகிய சுக்கிரீவமஹாராஜர், ஆஞ்சநேயர், சாம்பவர், முதலான துணைவர்களும் மூர்ச்சை தெளிந்து ஸ்வாமிதிருவடிகளில் தண்டன் சமர்ப்பிக்க அவர்களையும் பிராண பூர்வகமாகக் கடாக்ஷித்து, தமது திருக்கையால் அணைத்துக்கொண்டு மூன்றாம்பிறைச்சந்திரனைப் போன்ற வக்கிர தந்தங்களை யுடையவரான கருடபகவானுக்கு முன்பாகவந்து அவதாரவடிவத்திற் கேற்றபடி மரியாதையுடன் அவரைப்பார்த்து, பிரமருத்திரேந்திராதி சமஸ்ததேவர்களுடைய அறிவுக்குமெட்டாத ஸ்ரீராமமூர்த்தியானவர் சொல்லுகின்றார். ஐயா! நீர்யாரோ நாங்கள் பூர்வத்திற் செய்த தவப்பயனால் வந்து எங்கள் பிராணனையும் வாழ்வையுங்கொடுத்தீர், எங்களால் நீரொருநன்மையாவது பெற்றீரில்லை, இப்படிப்பட்ட உபகாரியாகிய உமக்கு நாங்களென்ன உபகாரஞ் செய்யப்போகின்றோம், புத்திமான்களா லோசிக்குமிடத்தில் நீர்செய்த உபகாரத்திற் கீடானபொருள் வேறே யொன்றுண்டோ! இப்படிப்பட்ட இருண்டகாலத்தில் நீர் கிருபைகொண்டுவந்து தயவுசெய்யத்தக்க மஹைஸ்வரிய முள்ளவரானால் உமக்கில்லாத வஸ்துவு முண்டென்று வாயாலேனுஞ் சொல்லலாகுமோ? ஐயா, எங்களை நீரெப்போதும் பார்த்தவருமல்ல, இன்றொன்று சொல்லவுங் கேட்டிருக்கவுமாட்டோம், நீர் எங்களால் ஒருநன்மையும் பெற்றவருமல்ல, நீரெப்போதும் பிறர்க்குக் கொடுக்குந் தன்மையுள்ளவராக இருக்கின்றீரேயல்லாமல் ஒருவரிடத்திலொன்றுபெறும்படியான குறை யுமக்குண்டாகமாட்டாது, உண்டுஇல்லையென்னும்படியா யிருந்த எங்களுயிரைக் கொடுத்த மஹாநுபாவரே! எங்களுடனே உமக்குமுன்னெப்போதும் ஒருசிநேகமுமில்லையே, அப்படிப்பட்ட உமக்கு நாங்கள் செய்யத்தகுந்தகாரிய மென்னஇருக்கின்றது நீரே யாலோசித்துச் சொல்லும், என்னக்கேட்ட பக்ஷிராட்டாகியகருடபகவான் ஸ்வாமீ! தேவரீருக்கும், அடியேனுக்கும், நித்தியமான பழைய உறவிருக்கின்றது. தேவரீர்த ராக்ஷசநிரசனம்செய்துமுடித்தபிறகு, அதை அடியேன்வந்து விண்ணப்பம்பண்ணிக்கொள்கின்றேன். வஞ்சமாயப்பிறவியை அறுக்கின்ற புருஷோத்தமரே! அடியேனுக்குவிடை கொடுத்தருளவேண்டுமென்று அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார்.

நாகபாசப்படலம்-முற்றிற்று.

## படைத்தலைவர் வதைப் படலம்.

கருடபகவான் போய்விட்டபிறகு, கோதண்ட தீக்ஷாகுருவாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் இவர் நம்முடைய பிராணனை யுபகரித்துத் தமக்கு ஒருபிரயோசனமும் விரும்பாமல் போய்விட்டாரோ! கிருபாவான்களுடைய செய்கை இப்படித்தானிருக்கும், பெருந்தன்மையாளர்களுடைய உபகாரமெல்லா

ம், பிரதியுபகாரத்தை விரும்பமாட்டாது. எனென்றால், மேகமானது மழைபெய்து உபகரிக்கிறதைப்பெற்றும், லோகமானது அதற்குப் பிரதி உபகாரஞ்செய்கிற துண்டாயிருக்கின்றதோ? என்று உபகாரலக்ஷணத்தைப்பற்றி யாவர்க்கு முணர்த்தினார். அப்போது ஆஞ்சநேயர் ஸ்வாமிதிருவடிகளில் தெண்டன் சமர்ப்பித்து, ஸ்வாமி! இந்தத் துஷ்டராக்ஷசர்கள் லங்கையில்போய் இளையபெருமாள் இறந்துபோய் விட்டாரென்று சொல்வார்களேயானால் அந்தவார்த்தையைச் சர்வலோகமாதாவான சீதாபிராட்டியார் கேட்டுத் துக்கப்படுவார். ஆகையால் நாங்கள் யாதொரு துக்கமும் - அடையவில்லை யென்பதற்கு அடையாளமாக எல்லாருஞ்சேர்ந்து, சந்தோஷகர்ஜனை செய்கிறோம், இதைக்கேட்டால் சந்தோஷித்திருந்தே மெய்மறந்து, நித்திரைசெய்கின்ற ராக்ஷசவஞ்சகர்களும், இறந்த வானரர்களெல்லாம் பிழைத்துக்கொண்டார்கள் என்று திடுக்கிட்டுப் பெரும்பயம் அடைவார்கள் என்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். அதைக்கேட்ட. சக்கரவர்த்தித் திருக்குமாரர் நல்லது அப்படியேசெய்யுங்களென்று விடைகொடுத்தார். அப்போது சுக்கிரீவமஹாராஜர், சாம்பவர், ஆஞ்சநேயர், அங்கதர் முதலாகிய வானரவீரர்களெல்லாம், சமுத்திரங்களெல்லாம் நடுங்கித் ததளிக்கவும், ஆதிசேஷனுடைய முடியும் கூச்சமடையவும், அண்டகோளமானதுவெடிபடவும், லோகத்தவர்களெல்லாம் அதிகஏக்கமடையவும், மேகங்களெல்லாம் கருவுயிர்த்து சிதறுண்டு பூமியில்விழவும், மலைகள் கிழியவும், அஷ்டதிக்குகளும் கிழிபடவும், கொல்லென்று சப்தித்தார்கள். அப்போது சாமுத்திரிகை சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட எல்லாலக்ஷணங்களினுங் குறைவற்ற திருமேனியையுடைய சீதாபிராட்டியாரிடத்தில் தனது மனஞ்செல்லவும், கண்ணுறக்க மில்லாமலும், மோகதாபத்தால் நெஞ்சுவெந்தும், சிவனுடைய சூலாயுதமும் தைக்கமாட்டாத மார்பை மன்மதபாணங்கள் சின்னபின்னமாய்க் கிழிக்கவும், பெருமூச்சுவிட்டுக்கொண்டு படுக்கையிற்கிடந்த ராவணன் அந்தச்சப்தத்தைக்கேட்டான். பிதாவின்வாக்கியத்தைச் சிரசாக வகித்துக்கொண்ட, தவவுருவம்பூண்டவரும், தர்மமூர்த்தியும், பாபங்களையெல்லாம் போக்கிப் பாவனமாக்குகின்ற திருநாமமாகிய ஸ்ரீராமராமாக்கிய சக்கரவர்த்தித்திருக்குமாரரும் அகலாதசீதாபிராட்டியாரும், அங்குச் சீதாபிராட்டியாரை நினைத்து புத்திகெட்டு அதிகபேதையாயிருக்கின்ற ராவணனும் அல்லாமல் அந்த ராத்திரியில் லங்காபட்டணத்தி லுள்ளவர்களில் நித்திரையில்லாதவர்களொருவருமில்லை. ஆகையால் அந்த ஓசையைக்கேட்ட ராவணன் ஆயுசிஹமானது இடியோசையைக்கேட்டுப்பயந்ததுபோலவும், சமுத்திரமானது சிறிக்கொண்டு பொங்கினதுபோலவும், படுக்கையைவிட் டெழுந்திருந்து யுத்தத்தில் எல்லாருமிறந்துபோனார்களென்றுசொன்ன வார்த்தை வெகு உறுதியா யிருப்பதுபோலவேயிருக்கின்றதென்று கையோடுகையறைந்து மாலையணிந்திருந்த இருபதுதோள்களும் குலுங்கும்படியாய்ச் சிரித்து, ஸ்ரீராமன் வில்லினுடைய ஓசை யுகாந்தகால இடியைப்போலஇடித்து இரைகின்றது, அண்டகோளம்வெடிபடும்படிலக்ஷ்மணனுடையவில்லின்குணத்தொனிஅதிர்கின்றது, அந்த அனுமானுடைய வீரஅட்டகாசமானது என் இருபது செவியுங்கிழிய அடிக்கின்றது, சுக்கிரீவனுடைய சிங்கநாதம் இந்தலோகங்களையெல்லாம் மூடிவிடுகின்றது, அங்கதன் அதோ சப்திக்கின்றான், ஆகாசத்தி லுள்ள தேவர்களெல்லாம் ஆர்ப்பரிக்கின்றார்கள், அக்கினியம்சமான நீலன்முதலான மற்றவீரர்களெல்லாம் தனித்தனியே சிறிக்கொண்டு கர்ஜ்ஜிக்கின்றஓசையானது அண்டத்துக்கப்புறமும்போய் முட்டுமென்பதற்குச்சந்தேகமில்லை. எல்லாருந்தர்மதேவதையி னுதவியால் நாகபாசக்கட்டுகள் விடுபட்டார்கள். என்றுசொல்லித் தன்படுக்கை மெத்தையைவிட் டெழுந்து ஒன்பது கோடி ராக்ஷசர்கள் வந்து தன்னைச் சூழ்ந்து வரும்படியாகவும், கோடிபேர்கள் ஸ்திரீகள் ஸ்வர்ண்ன விளக்குகள் பிடித்துக் கொண்டு வரும்படியாகவும், ராவணன் தன்பெரிய அரமனையைவிட்டுப் புறப்பட்டு இந்திரஜித்தவின் அரண்மனையைச் சேர்ந்தான். அப்போது தங்கள் புடவைகளை வாரிச்சுருட்டிக் கொண்டவர்களும், அவிழ்ந்து விழ்ந்த கூந்தலை யுடையவர்களும், மேல்மூச்சு வாங்கிவிடுகின்றவர்களும், ஆகாசத்தை முட்டிய ஸ்தனங்களை யுடையவர்களும், உறக்கம் நீங்காத கண்ணையுடையவர்களும், தள்ளாடின நடையையுடையவர்களும், கொடிபோல வளைந்த இடையை யுடையவர்களுமான ராக்ஷசஸ்திரீகள் தூக்கத்தால் சோர்ந்து விழ்ந்து கொண்டு, ராவணனுக்குத் தீச்சகுனமாக எதிர்

கொண்டுவந்தார்கள். குடித்த மதுபானமும்
உறக்கமும், தங்கள் நாயகன் மார்வத்து பு
ணர்வதாகக் கண்டகனவும், பண்ணிசைவினைந்த
கானப்பாட்டுகளும் தம்மைத்தள்ளத் தட்டு
மாறி, மதர்த்துக் கள்ளங்களைக் கற்று மீனை
ப்போலப் பிறழுகின்ற பெரியகண்களையுடை
வரும், திறப்பதுமாகத் தேவஸ்திரீகளெல்
லாம் கால்களில் சதங்கை சப்திக்கும் படி
யாக ராவணன் முகத்தில் விழிக்காமல் மறை
ந்துபோய் விட்டார்கள். மேகத்திற்கு நீலச்
சாயங்கூட்டி நல்ல பரிமளப்புகையை ஊட்
டிஅங்கங்கேசுருட்டியபுஷ்பங்களை அணிந்து
இடக் கிடையூறுகப் பிரஹ்மதேவர் சிருஷ்
டித்த பெருங் கூந்தலையும், பெருங்கண்களை
யும், செவந்த வாயையும், உடையவர்களான
அநேக ஆபரணங்களைத்தரித்த மானிட ஸ்தி
ரீகளெல்லாம்நித்திலாமயத்தகத்தால் அந்தந்த
இடங்களில் பதுங்கிவிட்டார்கள். தேனையும்,
கரும்பையும்,வெல்லப்பாகையும், அமுதையு
ம்,ஒத்தசொல்லைத்தேடி அமைத்தும்,மானையு
ம்,கயல்மச்சியங்களையும், வாளாயுதத்தையும்,
நீலோற்பலபுஷ்பங்களையும்,ஒத்திருக்கின்ற க
ண்களைச் சம்பாதித்துவைத்தும்,உயர்ந்தநட
க்கைகளையும்அதற்கொப்பான நல்லமார்க்கங்
களையும்கொடுக்கத்தக்க சிறந்தநகரத்திலுள்ள
வரான பிரஹ்மதேவர்சிருட்டித்தஸ்திரீகள்
அநேகம்பேர்கள் ராவணனுடனேபோனார்க
ள். அப்போது வானரவீரர்கள் சப்திக்கின்ற
ஓசையானது செவிகளில்நுழைந்தமாத்திரத்
தில் தன்னிடத்திலகப்பட்ட ஜீவன்களைத்தப்ப
விடாத ஆண்முதலைக்கொப்பான பலமுள்ள
ராக்ஷசர்களெல்லாம், சிம்ஹ கர்ஜ்ஜனையைக்
கேட்டயானைகளைப்போலஇருந்தஇடத்திலே
யேஉழைத்துக்கொண்டார்கள். ராக்ஷசஸ்திரீ
களெல்லாரும்இடிமுழக்கங்கேட்டபுற்றிலுள்
ள பாம்பைப்போலக் கர்ப்பங்கலங்கிநடுங்கி
விட்டார்கள். மேலேசொல்லிய பிரகாரமாக
ராவணன் இந்திரஜித்து படுத்திருக்கின்ற ஸ்
வர்ன்ன உப்பரிகையில் சரேலென்று போய்
ச் சிம்ஹநாதத்தினால் சங்கடப்பட்டுச் சோர்ந்து
விழுந்து கிடக்கின்ற கருக்கொண்ட மேகம்
போன்ற யானைக் கொப்பாக லக்ஷ்மண ரு
டைய பாணவருஷங்களால் தேகமெல்லாம்
சல்லடைக்கண்களாய்த் தொளைக்கப்பட்டுள்
ள புண்களில் ரத்தந் தாரைதாரையாக வழிந்
து கொண்டு கிடக்கின்ற இந்திரஜித்துவைப்
பார்த்தான். அப்படி ராவணன்வந்து பார்
த்தபோது இந்திரஜித்து எழுந்திருந்து தகப்
பன்காலில் விழுந்து கும்பிட மாட்டாமல் ப
டுத்த படுக்கையிலேயே இரண்டு கைகளையும்
வருத்தப்பட்டுத் தூக்கிக் கும்பிட்டான். அ
தைக்கண்டு ராவணன் மனங்கலங்கி அப்பா
குமாரனே ! வெகு வருத்தப்பட்டுக்கொண்
டிருக்கின்றாயே! உனக்குச்சம்பவித்தசங்கட
மென்ன! உன்னையார்என்னசெய்தார்களென்
று கேட்டான். சிப்பற்றிக் குத்தலெடுத்துக்
கொண்டிருந்தபுண்களையுடையஇந்திரஜித்து
ராவணனைப்பார்த்துச் சொல்லத் தொடங்கி
னான். ஐயா, அந்தலக்ஷ்மணனுடையபாண
ங்களில் அநேகஅம்புகள் என்முதுகையும் த
டாரித்துப்போனதுகள். அநேக அம்புகள்
என்தேகத்திலுள்ள ரக்தமெல்லாம் குடித்து
விட்டதுகள். என்மார்பி லணிந்திருந்த கவ
சத்தையும் துண்டுதுண்டாய்ச் சிதறடித்து
விட்டதுகள். பிறகு அநேகபாணங்கள் என்
தேகத்தைச் சக்கைச்சக்கையாய்ப்பேர்த்தெ
றிந்துவிட்டதுகள். சிலபாணங்கள் என்கண்க
ளிலும்வந்து நுழைந்துவிட்டதுகள்.உடனே
என் மாயையால் தப்பித்துக்கொண்டு ஓடிவ
ந்துவிட்டேன். ஐயா, நான் இந்திரன், விரு
ஷபவாகனரூடரான ருத்திரமூர்த்தி, மிகுந்
தபலமுள்ள கருடவாகனரூடரான அழகிய
ஸ்ரீமகாவிஷ்ணு, சூரியன் முதலான தேவர்க
ளெல்லாங்கூடி என்னோடெதிர்த்து யுத்தஞ்
செய்தபோதும் இவ்வளவு துன்பப்படவில்
லை, இப்படி யொருநாளு முன்னேடு நான்
சொன்னதுமில்லையல்லவா? மந்தரகிரிக்குச்
சமமான தோள்களையுடைய ஐயா, ராவணே
ஸ்வரா ! அந்த மனிதர்களுடைய வல்லமை
க்கு ஒருவரம்புசொல்ல என்னாலுமாகாது, எ
ன் அஞ்சாம்பாட்டனாகிய பிரஹ்மதேவனா
லுமுடியாது. நான்சொன்ன இவ்வளவுவல்ல
மையும் அந்த லக்ஷ்மணனுடைய வல்லமை
யாக்கும். வெற்றிமாலையைத்தரித்த மார்பை
யுடைய ஐயா, ஸ்ரீராமனுடைய பராக்கிர
மத்தை நினைப்போமேயானால் நம்முடைய
பிராணன்களோடு மாத்திர முடிந்துபோகா
து. சம்பவித்தகாரியங்களைப்பார்த்து உணர
வேண்டுமே யல்லாமல், நமக்கு வெற்றியே
உண்டாகுமென்று நினைப்பதுதகாது. என்று
சொல்லி, இப்போது நிறைவேறியிருக்கிற
தன்மையை யுணராதவனான இந்திரஜித்துப்
பின்னுஞ் சொல்லுகின்றான். ஐயா, நானிப்
போது அந்தவெற்றியாளனான லக்ஷ்மண
னையும், குரங்குவீரர்களையுங்கொன்றது நாக
பாசத்தினாலும், என் மாயாவல்லமையினாலு
மேயன்றி என்சொந்தபலத்தினாலே யல்ல
வென்று நினையும். இன்னும் ஸ்ரீராமன்மாத்

நிரம் தப்பி நிற்கின்றான். மேல்நடக்கிறபடி நடக்கட்டும் என்றுசொல்லிக்கேட்டு ராவணன் இந்திரஜித்தைப்பார்த்து அப்பா! வீரகண்டாமணியைத்தரித்த காலையுடைய குமாரனே? லக்ஷ்மணனுடைய வஜ்ரவில்லின் நுனியினால் ஆகாசத்தைப் பிளக்கின்றது. சப்தமேகங்களின் கர்ஜனையடங்கவும், சமுத்திரத்தனிக்கவும், அநுமான், சுக்கிரீவன், அங்கதன், சாம்பவன்முதலான வானரவீரர் சண்டைக்களத்தில் சந்திக்கின்றார்களே, அந்தச்சப்தத்தைக் கொஞ்சமும் நீ அறியவில்லை போலிருக்கின்றதே? என்றான். அதைஇந்திரஜித்துக்கேட்டு ஐயா, என்நாகபாசத்தால்அந்த லக்ஷ்மணன் முதலானவர்களெல்லாம் கட்டுண்டார், பிறகு இடிக்குச்சமானமாகிய என்கைப்பாணங்களால் தேகமெல்லாம் சக்கைச்சக்கையாய்ப் பிளந்துபோனார்கள். என் கண்முன்னேயே அறிவுஞ்சோர்ந்து போனார்கள். அப்படிப்பட்டவர்கள் பிழைத்தார்களென்று சொல்லுவது உண்மையோ! அல்லது வேறோ! அப்படியுண்மையானால் அப்பாசத்தைக் கொடுத்த ஐம்முகக் கடவுள் அவ்வளவுசிறியரோ! என்றுசொன்னான். இப்படி ராவணனும் இந்திரஜித்துவும் பேசிக்கொண்டிருக்கும்போதே அங்கேநடந்தகாரியத்தைத் தெரிந்துகொண்டுவரும்படியாய்ப்போன தூதர்கள்வேகமாய்த்திரும்பிவந்துராவணனுடைய பாதங்களில்விழுந்தார்கள். அவர்களைப் பார்த்து ராவணன்நடந்தகாரியமென்னவென்றுகேட்க, அந்தக்கலவிமான்களான தூதவர்கள் சம்பவித்ததைத் தெரிவிக்கத் தொடங்கினார்கள். ஐயா, திரிலோகநாயகா நாகபாசத்தால் கட்டுப்பட்டுப் பாணங்களால் பிளப்புண்டவர்களை அயோத்திநாட்டுக்கு அரசனான தசரதபுத்திரராகிய ஸ்ரீராமன்அர்த்தராத்திரியில் வந்துபார்த்து அழுது பிறகு உலகத்தை யெல்லாம் எரித்துவிடுகிறே னென்று சொன்னபோது ஆகாசத்திலிருந்து கருடன் பறந்துவந்தான். அவன் வந்தவுடனே கூரிய பற்களையுடைய சர்ப்பங்களெல்லாம் சின்ன பின்னப்பட்டுப் போய்விட்டதுகள். அவர்கள் தேகத்தப் புண்களும் ஆறிப்போனதுகள். அவர்கள் மூர்ச்சையும் நீங்கிவிட்டது. அவர்களெல்லாரும் முன்னிலும் அதிக பலமுள்ளவர்களாகி ரணகளத்தில் சூழ்ந்து மொய்த்துக்கொண்டார்கள். இது நடந்த சமாச்சாரமென்றார்கள். அப்போது ராவணன் அவர்களைப்பார்த்து ஒருவராலும் புகழ்ந்துமுடியாத தோள்வல்லமையையுடைய என்குமாரனான இந்திரஜித்து எய்த நாகபாசத்தைக் கருடன் தன்சிறகின்காற்றினாலே கழன்றுபோகும்படிச் செய்தானாம், பார்த்தீர்களா பார்த்தீர்களா! இப்படி வார்த்தை யுண்டானால், ராவண னிந்த மூன்றுலோகங்களையும் ஆளும் வல்லமையுடையவனாயிருக்கிறானென்று யாவருஞ் சொல்லிக்கொண்டு வந்த என் வாழ்வும் நன்றாயிருக்கின்றது. என் வெற்றிப் பிரதாபமெல்லா முடிந்து போய் விட்டதுபோ லிருக்கின்றதே, அப்படியா! இந்தப்பதினாலுலோகங்களையும் உண்டு உமிழ்ந்தவனென்கிற கீர்த்திபெற்றவனான-அந்த விஷ்ணு என்னோடெதிர்த்து யுத்தஞ்செய்தபோது புத்திமயங்கித் திகைத்துப்போனான். அப்போ திவன் அவனுக்கு வாகனமாகத்தானே யிருந்தான். நானிந்தப்பூமண்டலமெல்லாம் ஜெயித்து வெற்றிபெற்றும் வந்தேன், இந்தச் சப்தசமுத்திரங்களும் என்வல்லமைக்குத் ததளித்துப்போய்விட்டது. அப்போதெல்லாம் நீங்கள்சொன்ன இந்தக்கருடன் என்வல்லமையைத் தன்கண்ணால் பார்க்கவில்லைபோ லிருக்கின்றது. கைகளில் நேமியும், சங்கமுஞ் சுமந்துகொண்டிருக்கின்ற விஷ்ணுவினாலே காக்கப்பட்டிருந்த - அந்த விஷ்ணுலோகத்தின்மீது நான் சண்டைக்குப்போய் என்வில்லில் அம்பைக்கோத்துப் பிரயோகித்தபோது சூரியசாரதியாகிய அருணனுடைய தம்பியான இந்தக் கருடனுடைய மார்பிலும், முதுகிலும், தோள்களிலும், அந்தத்தோளிலுள்ள சிறகிலும், அந்தப்பாணங்கள் தைத்திருக்கிறதை மறந்துபோய்விட்டோ இப்போதுவந்தான், இதிருக்கட்டும் இன்றுமெப்படி முடிந்தாலும்முடியட்டும், பயந்து மீதியாய்நிற்கின்றவர்களைக் கொல்லவேண்டியவிருப்பத்தை முடிக்கவேண்டுமல்லவா! அப்பா ஆண்பிள்ளைச்சிங்கமே! நீயே அந்தச்சண்டையைச் செய்யவேண்டும், உன்னுடைய அருமையான சண்டைகளை அவர்கள் பார்த்தமாத்திரத்தில் வெட்கப்பட்டோடிவிடுவார்கள் என்று சொன்னான். அதைக் கேட்டு இந்திரஜித்துத் தன்கருத்தைச் சொல்லத்தொடங்கினான். இன்றைக்கு ஒருநாள்தந்தி யுத்தத்தில்பட்ட சிரமங்களெல்லாம் ஆற்றிக்கொண்டு, நாளைக்கு யுத்தகளத்திற்குப்போய் ஒருக்ஷணநேரத்திற்குள்ளே பிரம்மாஸ்திரத்தைவிட்டு அவர்களையெல்லாங்கொன்று உன்மனதிலுள்ள துக்கத்தை நீக்கிவிடுகிறேனென்றான். அதைக்கேட்டு ராவணன் நல்லதப்பா, அப்படியே செய்யக்கடவாயென்று

சொல்லிவிட்டுப் புறப்பட்டுப்போய்த் தன்னுடைய குளிர்ந்த ரத்தினமாளிகையைச் சேர்ந்தான். பின்பு வானரர்களுடைய வீர ஆரவாரத்தைக் கேட்டு ராக்ஷசர்களெல்லாம் யுத்தபேரிகையை முழக்கிச் சண்டைசெய்ய வேண்டுமென்று இச்சைகொண்டு அதிக ஆக்ரோஷித்துடன் எல்லாரும் ஒருமிக்கக்கூடி மாலையையணிந்த விசாலமான மார்பை யுடைய ராவணனைச்சேர்ந்து எங்களுக்கு யுத்தத்திற்குப்போகும்படி உத்தரவு கொடுமென்று கேட்டார்கள். அப்போது மஹாபாரிசுவனும், தூமாக்ஷனும், எங்களுக்கும் உத்திரவுகொடும் நாங்களும் போகிறோமென்றார்கள், அவர்களை ராவணன் சந்தோஷமாகப் பார்த்து நல்லது போங்களென்று சொன்னான், அதைக்கேட்ட தூதர்கள் மனம்பொறுக்காதவர்களாகி ஐயா, ராவணேஸ்வரா! இவர்களுடைய நடக்கையைச் சொல்லுகின்றோம் கேளும், யானைகளும், குதிரைகளும், தேர்களும், ராக்ஷசர்களும், கூடின சதுரங்க சேனைகளும், யுத்தகளத்திலேபோய் மாளுகின்றது. இந்திரஜித்துந் தனியாய் நின்றான். இவர்களதையுந்நினையாமல் மனிதனுடைய வாளிவாளியென்று வாய்குளறிக்கொண்டுயுத்தகளத்தில் நின்றும், ஓடிவந்து விட்டார்கள் என்றுசொன்னார்கள். அதைக்கேட்டு அக்கினி பொங்கினதுபோலக் கோபமுதிர்ந்து இவர்களுடைய வீரத்தன்மை இப்படிப்பட்டதா நல்லது இவர்களைப் பிடியுங்கள் என்று நியமித்தான். அப்படியே கிங்கரர்கள் போய் அவர்களை பின்கட்டாகக் கட்டிக்கொண்டுவந்து அவனுக்குமுன்பாக நிறுத்தினார்கள். கருநிறத்தையுடையவனான ராவணன் இவர்களைக் கொல்லாதேயுங்கள் - நன்றாய்ப்புடையுங்களென்று சொன்னான். அப்படியே அவர்கள் நன்றாய்க் குமுக்கினபிறகு மறுபடியும் ராவணன் அந்தத் தூதுவர்களைப்பார்த்து இவர்களுக்கு வேறே தண்டனையில்லை, இவர்களுடைய மலைச்சிகரம்போலிருக்கின்ற மூக்கை யரிந்து இவர்களை ஊரைச்சுற்றி யுத்தத்தில் பயந்தோடினவர்கள் என்று யாவருக்குந் தெரியப்படுத்துங்கள். என்பதாகக் கட்டளையிட்டான். அந்தக்ஷணமே அந்தத் தூதுவர்கள் நெய்பூசியவாளாயுதத்தைக் கையிற்பிடித்து அவர்களுடைய உயர்ந்தமலையைப்போன்றநாசியை அறுக்கிறதற்காக ஓடினபோது, மாலியென்பவன் ஐயா, கீர்த்திமானுகிய ராவணா! இப்படிச்செய்கிறது தகுதியல்ல வென்று தடுத்து யுத்தத்திற்குப் பயந்தவர்கள் ஜெயம் பெறாததும், முன்ஜெயம்பெற்றவர்கள் மாண்டிருந்ததும், வழக்கந்தானே! ஆண்பிள்ளைத் தன்மை யுடையவர்களுக்குள் தாழ்வுபடாதவர்கள் யாரிருக்கிறார்கள். நீர் தாரதம்மியமொன்றுந் தெரியவில்லை. இப்போது தங்களிச்சைப்படிச் சண்டைக்குப் போகிறோமென்று வந்தவர்களைக் கோபித்தாய். தேவர்களும், தானவர்களும், சேனையாயிருந்தும்,இந்திரன் உன்னைக்கண்டு நடுங்கினதை நீர் மறந்துபோய்விட்டீரா? அந்த ஸ்ரீராமனென்ன லகுவானவனோ! வருணதேவனை வந்துவணங்கி அவனுடைய கிருபையைப் பெற்றுக்கொள்ளுகிறவனாக்கும் நடுங்கினின்றானே அப்படியிருக்க, இந்தக்குறுநிறச் சூதர்கள் அவனெதிர் நிற்பார்களோ, இதை யாலோசிக்கும்போது இவர்களென்ன சாஸ்திரங்களறிந்தவர்களா, சும்மா முருடர்கள்தானே போகட்டும், இந்திரஜித்துவுடனே நாற்பதுவெள்ளஞ் சேனைகள் போயினவாகவே அவ்வளவு பேர்களும் மாண்டு, இவர்களும் இந்திரஜித்துவும் இந்தமூன்றுபேர்கள்தானே தப்பிப்பிழைத்துவந்தார்கள். நீர் நல்லபுத்திமானுச்சே இவர்களைப்பார்க்க - வீரர்களாயிருந்தவர்கள்யார், தான்விட்டநாகபாசமும் சிந்திச் சிதறிப்போய்விட்டது. தன்னுடன் வந்த நாற்பதுவெள்ளஞ் சேனையும் படுகாரணப்பட்டுப்போய்விட்டது. தன்தம்பியாகிய அதிகாயனும்பட்டுப்போனான். இப்படியிருக்க,யுத்தமுகத்தில் உமதுகுமாரன்போகிறதற்குப்பயந்து சாக்குச் சொல்லுகின்றான் அவனை யொன்றுஞ் சொல்லாமல், வயிற்றுச் சோற்றுக்கு உம்மிடத்தில் உழைக்கிற இந்த அற்பர்களையா நீர் மூக்கையரியப் புறப்பட்டீர். லக்ஷ்மணனென்று சொன்ன மாத்திரத்தில் ராக்ஷசரெல்லாரும் தங்கள் வீட்டுக் கதவுகளையெல்லா மூடிக்கொள்ளுவார்கள். இந்த ஏழுசமுத்திரந்தான் அவர்கள்போய் மறைந்துகொள்ளுகிறதற்கு அவர்களுக்குத் துணையாகுமோ? நாசியறுக்கவேண்டுமானுல் உலகத்திலுள்ளவர்களை யெல்லாமே யறுக்க வேண்டும், அப்படிச் செய்வதற்கு ஊழிசல்வளாயிலுஞ்செய்தாலும் முடியாது. தூதாகவந்த அனுமானுக்குப்பயந்து அன்றைக்கு அவனோடு சண்டைசெய்யமாட்டாமல் ஓடிப்போனவர்கள் ஒருதண்டனைக்கு முட்படாமல்உமதுசேனையில்பாதிக்கதிகமாக நாசியுடனே யிருக்கின்றார்கள்.நீர் சீதையைவிட்டுவிடாதபடியினுலே அந்தராமலக்ஷ்மணர்கள் நம்மிது சண்டைக்குவந்தார்கள். அப்

போது எல்லாச்சேனைகளும் அவர்கள்மேற் சண்டைக்குப்போய் அந்த ராமலக்ஷ்மணர்களைக் கொல்லாமற் போனார்களே யென்று எல்லாருக்கையும் ஒரேநாளில் அறுவென்று சொல்லாமற்போனீரே என்று சொல்லினார்கள். அப்போது ராவணன் தங்கள்மீது கொண்ட கோபாற்றுனென்று தெரிந்தவர்களாகிப் பயந்திருந்து மனத்தைரியப்பட்டு அதிகோபத்துடனே கண்கள் சிவந்து நின்று தங்களுடைய செய்கையையும் நிலைமையுஞ் சொல்லத் தொடங்கினார்கள். ஐயா, ராவணேஸ்வரா! உம்முடைய குமாரன் இந்திரஜித்து அந்த லக்ஷ்மணனுடைய யுத்தத்தில் வருத்தப்பட்டு ஒருபக்கத்தில் ஒதுங்கிவிட்டது மாத்திரமா ஆகாசத்திற்போகத் துரிதப்பட்டு ஒரு மாயையைச் செய்துவிட்டுப் போய்ப்பிழைத்து லங்கைக்குள்வந்து நுழைந்து கொண்டான். நாங்கள் அப்படிவந்துவிடமாட்டோம். இன்றைக்குள் அல்லது நாளைக்குள்ளாக அதிக உஷ்ணமான பெருநெருப்பில் வெந்த செப்புவட்டிலில் விட்ட எண்ணெய்யைப் போல் வற்றிப்போகும்படிப் பிராணன்களை முடித்துவிடுகிறோம். மூன்றுநாள்வரையிலும் வைக்கிறதில்லை. வீரலக்ஷணமெல்லா நன்றாய்த் தெரிந்த ராவணேஸ்வரா! நீரேயிரும், நீர் எங்களை இப்போது போர்க்கு அனுப்பினீர். கொடியயுத்தத்திலே பிரவேசித்தார்கள், எல்லாரையுங் கொன்று விட்டார்களென்று கேள்விப்படுவீரேயல்லாமல் கெட்டுப்போய்விட்டார்கள் என்று கேள்விப்படமாட்டீர் என்று தங்களாவியை முடிக்கவிருப்பங்கொண்டவர்களான மஹாபார்சுவனென்பவனும், தூமாக்ஷனென்பவனும், சொன்னார்கள். அந்தச் சொல்லைக்கேட்டு ராவணன் அவர்களுடனே பத்துவெள்ளம் ராக்ஷசக் காலாட் சேனைகளையும், அவர்களுக்குத்தக்க யானைகளையும், தேர்களையும், குதிரைகளையும், கூடச்சேர்த்து அனுப்பினான். இந்தச்சேனைகளுடனே நெய்சொரிந்து யாகஞ் செய்யக் கண்டால் அதுகளை யெல்லாந் துவம்சஞ்செய்கிறவனான யாககேது சூரியனுக்குப் பகைவனான சூரியகேது, மஹாபிசாசன், வஜ்ரதந்தனென்ற படைத்தலைவர்களும் ராவணனுடைய கட்டளையினால் யானைகளும், தேர்களும், குதிரைகளும், துணையாகவர மலைக்கூட்டங்களைப் போலக் களித்துப் புறப்பட்டுப் போனார்கள். ஆகாசத்தை மறைத்துக்கொண்ட தூளியினால் தேவர்களுடைய கண்களுந் தெரியாமல் போய் விட்டபடியினால் எல்லைக்கடந்து அளவிறந்த சேனையின் தொகையை ஒருவரும் நிச்சயிக்கமாட்டார்கள். சக்கரங்கள் பூட்டிய தேர்களில் கட்டியகொடிகளும், கருமலை போன்ற யானைகளின்மீது பிடித்துக்கொண்டுவருகின்ற கொடிகளும், வெள்ளையலைகளைப்போல்வீசுகின்ற படியினாலும் மேகங்கள் பரவிய ஆகாச நக்ஷத்திர மீனங்களில் அசைகின்ற படியாலும், அந்தச் சேனைகள் பெரிய கடலைப்போ லிருந்தது. உலகத்தைச்சூழ்ந்தபெரியசமுத்திரம் போல முரசங்கள் சப்தித்ததுகள், யானைகள் மேககர்ஜனையைத்தோற்கடித்துக் கடலுடன் பகைகொண்டுமுழங்கினதுகள். குதிரைகள் மேகங்களைப்போலக்கனைத்ததுகள். முகபடாமணிந்த குன்றுகள் நடந்தாற்போல்பெண்யானையின் சுவட்டை மிதித்து ஆண்யானைகள் தொடர்ந்துபோகக் கலவியில்நிமித்தமாகப் பெண்யானைகள் நின்று பிணங்க, அவைகளைத் துதிக்கையாற் றழுவிக்கொண்டு ஆண்யானைகள் நில்லாமல் சென்றதுகள். சிலயானைகள் நீண்ட துதிக்கைகளை ஆகாசத்தில் நீட்டி மேகசலத்தை வாரிவீசிக்கொண்டு போகின்றபடியால் அந்தமேகங்கள் விலகிப்போய்விட்டன. அவை யானைகளால் உண்டுவிடப்பட்டனபோலிருந்தன. அக்கினிகளைக் கக்குகின்ற ஆயுதங்களின் பிரகாசமும் வீரர்கள் தரித்திருக்கின்ற ஆபரணங்களின் பிரகாசமும், தேர்களையும், குதிரைகளையும், யானைகளையும், சிங்காரித்தசிங்காரப்பொருள்களின்பிரகாசமும், கிண்கிணி மாலையின் பிரகாசமும், எங்கும் நிறைந்திருக்கின்றபடியினாலேராத்திரியின்இருளெல்லாம் திக்குவிதிக்குகளாயோடிப் பகலைப்போலிருந்தது. அப்படியாக வந்த சேனைகளை சர்வலோக சரண்யரான ஸ்ரீராம மூர்த்தி எதிர்த்து விபிஷணனை நோக்கி இவர்களில் முன் இங்கேவந்து தன்மாயையால் வெற்றி பெற்றுக்கொண்டு போனானே அவன் வந்தானோ தெரிவிக்கக் கடவாய் என்று நியமிக்கத் தாமசமில்லாமல் ஸ்வாமிக்குத் தெண்டன் சமர்ப்பித்து - ஸ்வாமீ! தசரத நந்தனா? மலைக்குகையிலிருந்த சிம்ஹமானது யுத்தத்தைவிரும்பி அதிகோபங்கொண்டது போலவும், சந்திரப் பிறையை யொத்த தந்தங்களையும், பிளந்தவாயையும் உடைய யானையைப் போலவும் சப்தித்து அக்கினிப் பொறிகளைச் சிந்துகின்ற அம்பறாத்தூணியை முதுகில்கட்டிக்கொண்டு வில்லைக் கையிற் பிடித்துத் தேரின்மீது வருகின்றவன் மகா பார்சுவன் என்ற பேருடைய ராக்ஷசன் அக்கினிச் சுவாலை வீசுகின்ற கோபக்கண்களையுடையவனைப் சத்து

ருக்களுடைய ஆவியை உண்கின்ற ஸ்வபாவமுள்ளவனும், பெரியசமுத்திரத்தை வாயினால் தண்ணீருண்டு விடுகிறவனுமான மற்றொருவன் தூமாக்ஷனென்கிற பேருடையவன், பித்தர்களைப்போலத் தடுமாறிக் கொண்டு வருகிறவனும், சம்பவிக்கின்ற யுத்தத்திற்காக மூவிலைச் சூலா யுதத்தைப் பலம்பொருந்திய தோளில்கொண்டு தன்பிரயாச மெல்லாம் யுத்தமேயென்று நினைத்து இதோ வருகின்றானே இவன் வஜ்ரதந்தனென்கிறபெயருடைய ராக்ஷசன். வாயுவேகத்தையும், மனோவேகத்தையும், பின்னிடச் செய்வதான குதிரையின்மீது மடித்தவாயுடனேயும், சமுத்திரஞ் சப்திக்கிறதுபோலச் சப்திக்கிறவனும், ஆகாசபரியந்தம் அளாவிய ஒரு சூலாயுதத்தையுடையவனுமாக, வருகிற இவன் பிசாசனென்கிற பெயருள்ள ராக்ஷசன், வெள்ளத்தைப்போல முழங்குகின்றவனும், நெருப்பைப் பார்க்கிலும் கொடியவனுமாய்த் தேரில் வருகின்ற இவன் சூரியகேது வென்ற பெயருள்ளவன் ரகதத்தையும், அக்கினியையும், சொரிந்து கொண்டு வருகின்றவன் யாககேது வென்னும் பெயருடைய ராக்ஷசன், செந்நெற்கதிர் பழுத்து வளைந்ததுபோல உயர்ந்து வளைந்த கழுத்தையுடைய குதிரைப் படையுடனே வருகின்றவனும் மூலநோயைக் காட்டிலும் அதிக கொடுமை யானவனும், அதிக தவத்தைச்செய்தவனும், சூலாயுதத்தையுடைய ருத்திர மூர்த்தியுங்கண்டு பயந்துபோகும்படித் தேரில் காணப்படுகின்றவனுமானவன் மாலியென்ற பேருடையவனென்று சொன்னார். அதைக்கேட்டு வானரச்சேனைகள் ஸ்ரீராம மூர்த்தியை ஸ்தோத்திரம்பண்ணி ஆர்ப்பரித்துக்கொண்டு போய் ராக்ஷசசேனையுடனே கலந்து போர் செய்தார்கள். தேவர்களெல்லா மிதைக்கண்டு எங்கும் போக்கிடந் தோன்றாமல் வெயர்த்து உயிர்பதைத்து நடுநடுங்கி நின்றுவிட்டார்கள். வானரர்கள் யுகாந்தகால இடியோடுங் கூடிய சண்டமாருதக் காற்றைப்போல மலைகளைப் பிடுங்கி யெறிந்தார்கள். ஸ்ரீராம ருடைய கோதண்டத்தினின்றும் புறப்பட்ட பாணங்கள் மேகதாரைகளைப்போலச் செல்றதுகள். மலையிலுள்ள மேகங்கள் சிதறினதுபோலராக்ஷசர்களுடைய தலைகளி லிருந்து பற்களெல்லாம் பலபலவென்று உதிர்ந்து வீழ்ந்ததுகள். மதஜலங்களைப் பொழிகின்ற யானைகள் மாளும்படியாகவும், சேணங்களிட்டகுதிரைகளழியவும், பெரிய சக்கரங்கள்பூட்டிய ரதங்களும், தேர்களும் பொடிப்பொடியாய் பூதியவும், போர்க்கு உடன்பட்டுவந்த ராக்ஷசர்களெல்லாம் ஆதிசேஷனுடைய உச்சிப்படப்பட்டுவிழுவதுபோலச் சுருண்டுவிழும்படியாகவும், வானரச்சேனைகளெறிந்த மலைகள் போய்ப் பட்டதுகள். ராக்ஷசர்கள் வேகமாயெறிந்த சக்கராயுதங்கள் வானரங்களுடையமலைக்குச்சமானமாகிய நீண்டதோள்களையும், நிற்கின்ற கால்களையும், உயர்ந்திருக்கின்ற வால்களையும், எறியும்படிப் பேர்த்தெடுத்த மலைகளையும், மரங்களையும், வானரங்களுடைய தலைகளையும், அறுத்துக்கொண்டு போய்விட்டதுகள்.

பூமியைத் தந்தங்களினாற்பிளந்துகொண்டு வருகின்ற யானைகளையும், மனோவேகத்துடன் தாண்டிப்போகத்தக்க குதிரைகளையும் செலுத்திக்கொண்டு வருகின்ற ராக்ஷசவீரர்கள் எறிந்த தோமராயுதங்கள் வானர வீரசிரேஷ்டர்களுடைய தேகங்களைப் பாளம் பாளமாய்ப் பிளந்து விட்டதுகள். வானர வீரர்கள் கலீரென்று ஆர்ப்பரித்துக் கொண்டு எறிகின்ற கற்பாறைகள், சக்கரங்கள்பூட்டிய தேர்க்கொடிகளைச் சிதைத்தும், சாரதியினுடைய வக்கிரதந்தங்களோடு கூடிய பெரியதலைகளை நொறுக்கியும், அந்தச்சண்டாளர்கள் பிடித்திருக்கின்ற விற்களுடனே அவர்களேறிவந்தயானைகளையுங் கொன்றதுகள். ராக்ஷசர்கள் வானரங்களினுடைய தேகத்தில் பாயும் படியாய் எறிந்த சூலாயுதங்கள் - காக்கைகள் பறக்காத உயர்ந்த மலைக்குகையில் பெரும்பாம்புகள் போய்ச் சேர்ந்தாற்போலச் சகடக்ஷணிகளான வானரவீரர்களுடைய தேகங்களில்போய் நுழைந்ததுகள். யானைகள் வானர வீரர்களை வாலைப்பிடித்துப் பூமியில்வாரியறையவும், அதைத் தப்பித்துக் கொண்டு அந்த யானைகளினுடைய பின்னங்காலைப்பிடித்துத் தூக்கி வானரவீரர்கள் மோதுவார்கள். வானரவீரர்கள் யானைகளைக்கொண்டு ராக்ஷசர்களைத்தாக்கவும் வெங்கண்ணராகிய - ராக்ஷசர்கள், வேலாயுதத்தைக் கையிற்கொண்டு எறிவார்கள். வானர வீரர்கள் வேகங்கொண்டு வீசியெறிந்த மலைகள்பட்டு ராக்ஷசக் கருங்கடல் ரணக்களமெல்லாம் மாண்டு கிடந்ததுகள். பாதகர்களாகிய ராக்ஷசர்களுடைய விற்களிலிருந்து பிரயோகிக்கப்பட்ட அம்புகளால் வானரச்சேனாசமுத்திரங்கள் பற்களுடன் கூடத்தலைகள் நொறுங்கி மாண்டுவிழுவார்கள். வானரவீரர்கள் எறிந்த மலையினாலறைப்புண்டு அந்தமலையுடனேகூடத் தீத்தங்கள்வீட்டில்வந்து வீழ்ந்த தங் கணவர்களாகிய ராக்ஷசர்களுடைய வக்கிரதந்தங்களை

யுடைய தலைகளை அவர்கள் பெண்சாதிமார்கள் கிட்டப்போய்ப் பார்த்து அவர்களோடு நெடுநாள் பழகியிருந்தும் தங் கணவர் தலையென்று தெரிந்துகொள்ளமாட்டாமல் இது யாருடைய தலையோவென்று சந்தேகித்திருப்பார்கள். தரித்திரத்தில் வருந்துகின்ற பிறர்க்குக் கொடுத்து உண்ணாமல் அழிந்த செல்வத்தையுடையவர்களைப் போல - யானைகள் மாண்டு போய் விட்டதுகள். பொன்மயமாய்ப் பிரகாசிக்கின்ற தோள்வளையுடைய அச்சுகளெல்லா முறிந்தழிந்ததுகள். குதிரைகளெல்லாம் நடக்கமாட்டாமல் கால்முறிந்து விழுந்தன கள். பாகர்களும் மற்ற ஆள்களும் மாண்டு விடக் கப்பலானதுபாய்விரித்துக் கடலில் நாலுவிதமாக ஓடித்திரிவதுபோல யானைகள் பாகர்கள் மாண்டு, செலுத்துகிறவர்களில்லாமல் ரணக்களமுழுவதும் பரவியிருக்கின்ற ரத்தப் பிரவாகத்தில் கரைசேர மாட்டாமல் உழன்று கொண்டிருந்ததுகள். தங்களாயுதங்களுடனே மேலேறி நடத்திவந்த ரவுத்தர்கள் மடிந்துவிட வாயில் ரத்தங்கக்கிக்கொண்டு ரத்தப்பிரவாகத்தில் அங்கங்கே விழுகின்ற குதிரைகள் சமுத்திரத்தில் அக்கினி கக்கிக் கொண்டு நிற்கின்ற வடவாமுகாக்கினியை யொத்திருந்ததுகள். இப்படிப் போர்விளைகின்ற காலத்தில், தூமாட்சனும், அஞ்சநேயரும், ஒருவரையொருவர் எதிர்த்து யுத்தஞ்செய்தார்கள். மஹாபாரிசவனை வெற்றி மாலையைத்தரித்த அங்கதகுமாரன் தடுத்து யுத்தஞ் செய்தான். பலம்பொருந்திய வில்லையுடைய மாலியென்பவனும், நீலனென்கிற வானரவீரனும், சண்டைசெய்தார்கள். யுத்தத்தில் ஜெயம் பெற்ற பிசாசனென்பவனும், பனசனென்பவனும், கலந்து போர் செய்தார்கள். சூரியனுக்குப் பகைவனான சூரியகேது என்பவனும், சூரிய புத்திரனாகிய சுக்கிரீவ மஹாராஜனும், ஒருவரையொருவர் எதிர்த்துச் சண்டை செய்தார்கள். யாககேதுவும், இளைய பெருமாளும், யுத்தஞ் செய்தார்கள். வீரவானாகிய வச்சிரதந்தனென்பவனும், விருஷபனும், ஒருவரோடொருவர் நேர்ந்தார்கள். கொடுங் கண்களையும், வெண்மையாகிய பற்களையும், உடையவர்களான ராட்சசர்களுக்குள்ளும், வீரசிட்டத்துக்குச் சமானமாகிய வானரர்களுக்குள்ளும், ஒருவீரன் ஒருவீரனைத்தெரிந்து போர்க்களத்தில் யுத்தஞ்செய்யப் புறப்பட்டுத் தேவர்களுங்கண்டு நடுங்கும்படியாக யாவருஞ்சண்டைசெய்தார்கள். இப்படியிரு வகைப்படையுங்கலந்து போர்செய்கிறகாலத்தில் பிரகாசிக்கின்ற வக்கிரதந்தங்களை யுடையவர்களான ராட்சசசேனை பதினுவெள்ளத்தில் ஆறுவெள்ளத்துச்சேனைகளை யுத்தகளத்தில் ஸ்ரீராமர் கொன்றுவிட்டார். மற்ற நாலுவெள்ளத்துச் சேனைகளை லக்ஷ்மணர் தம்முடைய பாணங்களால் முடித்துவிட்டார். அவர்களுடைய ரக்தப்பிரவாஹமானது உப்புக்கடலைச்சேர்ந்து கடல்நீரெல்லாம் உருக்கிய செம்பைப்போல நிறமாறிவிட்டது. அதிலுள்ள மீன் குலங்களெல்லாம் மதர்த்துப் பவளத்துண்டம்போலாய்விட்டன. வெண்மையாகிய முத்துக்களெல்லாம் குன்றுமணியைப்போலத்தோன்றின. அலையெறிகின்ற கடல்நீரெல்லாம் ரத்தமயமாய்- நானுவிதநிறமுள்ள ரத்னங்களெல்லாம் செவந்து போய்விட்டதுகள். மதஜலம்பொழிந்து மலைபோலுயர்ந்திருக்கின்ற யானைகளின் மஸ்தகத்திலிருந்து உதிர்கின்ற முத்துக்களும், கடற்சங்கங்களிற்பிறந்த முத்துக்களும், மற்றரத்தினங்களுடனே வேறுருவந்தெரியாமல் செவந்துபோய்விட்டதுகள். இப்படி வெகு ஆரவாரத்துடன் யுத்தம் நடக்கின்ற சமயத்தில பொழுதுவிடிந்து சூரியனுடைய கிரணக்கற்றையாகிய கைகளினாலே எதிரில்காணப்படுகின்ற இருளாகிய யானைகளையெல்லாங் கொன்று உதிரக்கடலில் ஸ்நானஞ்செய்து புறப்படுகிறவனைப்போல உதயமானான். போர்க்களத்தில் ராட்சசர்களென்கின்ற காடாந்தகார இருட்டை ஸ்ரீராமர் துரத்திவிடவும், புறத்திலுள்ள இருட்டையெல்லாம் சூரியன் துரத்திவிடவும், லோகமானது இரண்டு சூரியர்களை உடையதா யிருந்தாற்போல எங்கும் பிரகாசமுண்டாயிற்று. ராத்திரிமுழுவதும் நிலைத்திருந்த பெரியஇருட்டானது நீங்கினபடியினாலே அலையெறிந்துகொண்டிருக்கின்ற ரக்தசமுத்திரமும் பிணமலைகளும் எங்கும் பரவி நிறைந்து பூமியின்மீது பிரவஹித்துக்கொண்டுவந்தசமுத்திரமும், அதற்கிடையி லங்கங்கே கண்ணுக்கெட்டினவரைக்குந்தோன்றுகின்ற மலையும்போலிருந்தன. ரணக்களமுழுவதும்மூடியிருக்கின்றரக்தவெள்ளத்தி லிருக்கின்ற நிணச்சேற்றில் அம்புகள் தைத்து வீழ்ந்து கிடக்கின்ற ராட்சசர்களுடைய முகங்கள் சூரியோதயத்தில்தடாகங்களிலே தாமரைக்காடானது சூரியகிரணங்களால் மலர்ந்து வண்டுகள்மொய்த்துக்கொண்டிருக்கின்ற தாமரைப் புஷ்பத்தைப்போல காணப்பட்டுக்கொண் டிருந்தன. ரணக்களத்தில் தேர்களும், யானைகளும், குதிரைகளும், சின்னபின்னப்பட்டிருக்கின்றதன்மை லோக

முழ்மலைகளும் பெயர்ந்து போகின்ற யுகாந்தகாலத்தில் சண்டமாருதக் காற்றடித்தபோது, தேவர்கள் ஏறிக்கொண்டு திரிகின்ற விமானங்களும், சூரியசந்திராதிநட்சத்திரங்களும் தாறுமாறுபட்டுப் பூமியில் வந்துவிழுந்து கிடக்கிறதைப்போ லிருந்தது கள். ராத்திரியினுல் சூழப்பட்ட சந்திரனுக்குச் சமானமாகிய முகத்தையுடைய ராட்சசஸ்திரீகள் அக்கினியையொத்த அல்லிப்பூமாலையைச்சுற்றின கூந்தலுடனே வந்து ரணக்களத்தைச்சேர்ந்து மாண்டுபோன தங்கள்நாயகன்மார்களைக்கட்டித் தழுவிக்கொண்டு கிடக்கும்போது அந்த ராட்சசப் புருஷப் பிரேதங்கள் பூங்கொடிகள் சுற்றிக்கொண்டு கிடக்கின்றமராமரத்தையொத்திருந்ததுகள். அசைகின்ற நுண்ணிய இடையையும், மலைபோன்ற ஸ்தநங்களையும் செவ்வானத்தை யொத்த கூந்தலையும், பயங்கரமான பற்களையுமுடைய ராக்ஷச ஸ்திரீகள் ரணக்களத்துக்கு வந்து தங்களுக்குப் பிரியமான நாயகருடைய தலைகளைக்கொடுக்காமல் மல்லாடியோடுகின்றபேய்களைத்தொடர்ந்து பிடித்து இரண்டுகால்களையும் பற்றிப் பிளந்தார்கள். பிரகாசிக்கின்ற சங்குவளைகளையணிந்த கைகளையுடைய ஒரு ராட்சச ஸ்திரீயானவள் தன்னாயகனைத் தேடிக்கொண்டு வந்து ரணக்களத்தில் உடலையும் அடையாளத்தையும் பார்த்துச் சகிக்கமாட்டாதவளாகிக் குடலையும், ஈரலையும், கண்ணையும், சிறுநரிபற்றிப் பிடுங்கப் பொறுக்கமாட்டாமல், பெருமூச்சு விட்டுத் தன்கணவனுடனே தன்பிராணனையுந் துறந்துவிட்டாள். பெரியவாள்போன்ற கண்களையுடைய சில ராட்சசஸ்திரீகள் தங்கள் நாயகர்களுடைய பெரிய தோள்களைப் பெண் ணரியும், கிழ நரியுமாக அதட்டவும் அஞ்சாமல் கொண்டு போகிறதைக்கண்டு தொடர்ந் தோடும்போது மேழயிருக்கின்ற ஆயுதங்கள் செம்பஞ்சூட்டிய கால்களைப் பாளம்பாளமாய்ப்பிளந்துவிடவும், நோவாம லிருந்ததுகள். தங்கள் நாயகன்மார்களிடத்தில் சிநேகித்திருந்தமனதையுடைய சில ஸ்திரீகள் தங்கள் புருஷர்களை மலையைப்போலிருக்கின்ற பிணங்களின் மேலேறித் தேடிக்கொண்டு ஆண்மயிலைப் பிரிந்து மலையின்மேல்திரிந்துலாவுகின்ற பெண்மயிலையொத்திருந்தார்கள். சிலராட்சசஸ்திரீகள் தங்கள் நாயகன்மார்கள் போர்த்தொழிலிற்கொண்ட கோபத்தால் வாயை மடித்துக்கொண்டு உயிர்துறந்து விட்டதைப்பார்த்து, வெண்மையாகியபற்களினாலே இதழைக் கடித்துத் தமது சக்களத்திக்குத் தம் கணவன் கலவிக்குறிப்பை இது காட்டுகின்றனென்று பிணங்கினார்கள். சிலஸ்திரீகள் தலையிழந்து கவிழ்ந்துகிடக்கின்ற தங்கள் நாயகன்மார்களை நெருங்கிப் பார்த்து மூர்ச்சையடைந்தும், உருத்தெரியாமல் வெள்ளைத்தந்தக்கொடியையொத்த தங்கள்பருத்த நகங்களினாலே தோளிற்கீறியிருந்த குறியை அவர்கள் மார்பிலணிந்திருந்த கவசத்தை நீக்கிவிட்டுப் பார்த்துப்பார்த்துத் தங்களுயிரை மாய்த்துக்கொண்டார்கள். சிலஸ்திரீகள்கண்களில்மழையைப்போலக் கண்ணீர்விட்டுக்கொண்டு தங்கள் கணவர்களுடைய வஜ்ரத்துக்கொப்பாகிய தேகத்தைத்தேடிக்கொண்டு ரணக்களத்தில்வந்து ராக்ஷசர்களுடையபிணமலைகளிலிருந்து ஒழுகுகின்ற ரக்தப்பிரவாஹத்தில் அழுந்தித் தங்கள் பிராணனை யிழந்தார்கள்

உயர்ந்த கால்களையுடைய ஆஞ்சநேயரும், தூமாட்சனும் சண்டைசெய்கிறபோது ஒருவராலொருவர் வருத்தப்படவுமில்லை, தோற்கவுமில்லை, ஜெயிக்கவுமில்லை, இருவர்கண்களிலும் அக்கினிப்பொறிகள் சிந்தும்படி நிற்கின்றபோது, மிகவுங்கறுத்த காளமேகமானது கோபித்தாற்போலச் சீறுகின்ற தூமாட்சன் அக்கினிக்கொடியை யொத்த இருபத்தைந்துபாணங்களை அஞ்சநாதேவியின் புத்திரரான அனுமாருடைய தேகத்தின்மீது பிரயோகித்தான். அந்தப் பாணங்கள் தோளில்பட்டுருவினமாத்திரத்தில் ரக்தவெள்ளமானது குபுகுபுவென்று புறப்பட்டது. உடனே ஊழிக்காலமேகம்போலக் கர்ஜித்துக்கொண்டு ஆஞ்சநேயர் அதிககோபங்கொண்டு தூமாட்சனுடைய தேரை அழித்துவிட்டார். அப்படித் தேர் சிதைந்தமாத்திரத்தில் தூமாட்சன் கைவில்லுடனே சூரியன்பிரகாசிக்கின்ற ஆகாசத்தில்வேகங்கொண்டெழும்பினபோது லக்ஷ்மணர்தம்முடையபாணங்களால் அவனுடைய வில்லைமுறித்தெறிந்தார். உடனே வாயுபுத்திரராகிய ஆஞ்சநேயர் அவனைப் பூமியில்தள்ளி மலையினும்பெரிய அவனுடைய உடலத்தை மண்ணில்விழத்தள்ளிக் கதறும்படிக் கடலைத்தாண்டிய பாதங்களைக்கொண்டு உதைத்து அவனுடைய பிளந்தவாயையுடைய தலையைக் கையாற் பற்றித் திருகிக்கிள்ளிக் கடலிலெறிந்து தமது கோபமாறினார். மஹாபாரிசுவனும், அகம்பகுமாரனும் எதிர்த்துத் தீபத்தைப்போலக் கண்கள் எரியும்படியாகக் கோபங்கொண்டு, ஒருவரையொருவர் கொல்லநினைத்துப் புகையெழும்

தை யுடையவரான அநுமானை நீண்ட கண்
டாமணியைத் தரித்தவனான வஜ்ரதந்தன் ஓங்கி
மார்பில் அக்கினிபறக்கும்படியாகக் குத்தி
விட்டுப்போகும்போது, அவனை அநுமான்
இடதுகையினுற் பிடித்து அவன்கையிலுள்ள
கல்வடாயுதத்தைப் பறித்து எறிந்து விட்டுத்
தமது வெற்றிப்பிரதாபமுள்ள கையைக்கொ
ண்டு ஓங்கிக் குத்தினவுடனே வஜ்ரதந்தன்
தேகவல்லமையெல்லாம் முடிந்து இறந்து
போனான். ஓர்பெரியவிருக்ஷத்தைக் கையிற்
பிடித்துச்சுழற்றிக் கொண்டிருக்கின்ற அதி
வேகமுள்ள ஒருஆண்புலிபோன்ற பனசனு
டைய மார்பில் ரக்தம்புரண்டு வழிந்தோடும்
படியாகப் பசாசன் ஒரு தோமரத்தை விட்
டெறிந்துவிட்டு, அவன் மேகத்தின்மீதிருக்கி
ன்றானோ! கடலின்மீதிருக்கின்றானோ! பூமி
யில் நிற்கின்றானோ! சூரியன்மீதுதா னிருக்
கின்றானோ! எதின்மேலிருக்கின்றானோ தெரி
யவில்லை. ஒரு குதிரைமீது ஏறிக்கொண்டு யுத்
தத்திற்குவந்தான். அந்த ஒரு குதிரையானது
நூறாயிரகோடி குதிரைகளோ ? அல்லது ஒ
ருகுதிரையோ ?என்று ஆறாயிரந்தேவர்களும்
நின்று தங்கள் இமையாத கண்ணாலே நிச்ச
யித் தறியக்கூடாதபடி பருந்துக ளுலாவு
கின்ற ரணக்களத்தில் நின்று திரிந்தது. பி
ன்னு மந்த வெற்றிக் குதிரை கண்ணிற்கு
மெட்டாமலோடும். மனோவேகத்திலும் அ
திவேகமாகப்போகும். ஆகாசத்தில் செல்லு
கின்ற காற்றைப் பார்க்கிலும் வேகமாகச்
செல்லும். யுத்தகளத்திற்குள்ளே நிற்கின்ற
தென்று நினைக்கும்போது புறத்தேபோ
ய்நிற்கும். பூமியிற் கால்பாவமாட்டாது. அ
ப்படிப்பட்ட குதிரையின் வட்டாகாரச் சு
ற்றுதலினால் பெரும்புண்ணடைந்தும், அந்
தக்குதிரையுடன் பந்திக்கப்பட்டவனைப்போ
லக் காணப்படுகின்ற பசாசனுடைய கையா
யுதத்தால் ஆயுதப் புண்ணடைந்தும், குரங்
குப்படைகள் குதித்துக்குதித்துப் புறம்பி
லோடிப்போய் விட்டதுகள். ஒருநொடிக்
குள்ளாக இருநூறுவானரங்கள் சிதையும்படி
க்குதிரையோபாயும், சற்றுநேரத்துக்குள்ளா
கக்கூர்மையானவேலாயுதத்தின் நுனியினாலோ
அநேக குரங்குகள் மாண்டுபோகு மென்று
மிகுந்தபலமுள்ள தேவர்களும் பயந்துவிட்
டார்கள். இப்படிஇடியைப்போலவும், அதிக
கோபமுள்ள யமனைப்போலவும், வானரர்க
ளை வருத்தப்படுத்திக்கொண்டு, உழலுகின்ற
கொடுஞ்செய்கையை யுடையவனாகிய அந்த
ப்பசாசனை வில்வீரசிகாமணியாகிய லக்ஷ-
மணப்பெருமாள் வாயுவாஸ்திரத்தைப் பிர
யோகித்து அவன்தலையை அறுத்துவிட்டார்.
தலைஅறுந்தும், அந்தப்பசாசன் குதிரையின்
மேலிருந்தபடியால் பூமியில்விழவில்லை, அவ
ன் கைச்சூலத்தால் குத்துகிறதும், ஓயவில்லை.
அந்தச்சூலமும் கொலைசெய்யாமல நிற்கவி
ல்லை. ஈக்களெல்லாம் நமக்கு இன்றைக்கு
லாபமுண்டென்று ராக்ஷசர்களுடைய பற்
களினிடத்திலுள்ள மாமிசங்களின் மீது வந்
து மொய்த்துக்கொண்டதுகள். தென்திசைக்
கதிபனான யமனுடைய தூதர்கள் ரணக்கள
த்திற்கு உயிர்களைப்பிடிக்கும்படிவந்தார்கள்.
வஞ்சகனான ராவணனுடைய தூதுவர்கள்
ராக்ஷசர்கள் மாண்டார்களென்பதைச் சொ
ல்லுகிறதற்கு லங்கைக்கு ஓடினார்கள்.

படைத்தலைவர் வதைப்படலம்
முற்றிற்று.

## மகரக்கண்ணன் வதைப் படலம்.

போன தூதுவர் ஐயா! ராவணேஸ்வரா ?
நம்முடைய சேனையெல்லாம் முடிந்துபோ
ய் விட்டது. என்று சொல்லுகின்ற சொல்லா
னது செவியில் நுழையும்போதெல்லாம் ல
ங்காதிபதியான ராவணன் மனவெறுப்புடன்
கொடிய நாகத்தைப்போலச் சீறிக்கொண்டு
துக்கிக்கின்ற சமயத்தில் கரனுடையபுத்திரனா
ன மகரக்கண்ணன் ராவணனுடைய நிலைமை
யைக்கண்டு ஐயா! ராவணேஸ்வரா? முன்பாக
என்னுடைய தகப்பனான கரனை நெருங்கின
யுத்தத்தில் கொன்றுவிட்ட அந்த ராமனைவெ
ல்லும்படி யென்னை யனுப்பாமலும் வேறே
யாதும் நினையாமலும் நீ யிப்படி வியசனப்
படலாமா ? நான் போவேனேயானால் அந்த
ஸ்ரீராமன் என்னெதிரே வந்தால் கெடுதியுண்
டாமென்று பயந்து ஓடிப்போய் விடுவான்.
ஐயா திரிபுவனேஸ்வரா? ஆகாசத்திலுள்ளவர்
களாவது பூமியி லுள்ளவர்களாவது என்னை
ஜெயிக்கும் படியான கொள்கையை யுடைய
வர்களோ! அதுஉனக்குத்தெரியாதோ! மேலு
ம் என்தாயார் துக்கசாகரத்தில் மூழ்கினவளா
கி எப்போதுங் கண்ணுங்கண்ணீருமாய் அழு
துகொண்டு தன் மாங்கலியம் வாங்கச்சகிக்க
மாட்டாமல் தன்கணவனைக் கொன்றவனுடை
ய தலைமன்றையில் தன்கடனைக் கழிக்க வே
ண்டுமென்கிறாள். ஆகையால் நீயெனக்குத் த
யைசெய்து உத்தரவு கொடுக்கவேண்டுமென்
று கேட்டான். அந்தவார்த்தையை ராவணன்

கேட்டு அப்பா மகரக்கண்ணா? நல்ல காரியஞ்
சொன்னாய் அப்படியேபோய் உன் பழைய
பகையைத் தீர்த்துக் கொள்ளக்கடவாய் என்
று உத்தரவுகொடுத்தான். அந்தத் துராத்துமா
வான மகரக்கண்ணனும் ராவணனிடத்தில் உத்
தரவுபெற்றுக்கொண்டு தேரேறிவரம்பெற்று
வளர்ந்த தோள்களில் வில்லைத் தாங்கினவனாகி
த்தன் சொந்தமான ஐந்துகோடிசைநியங்கள்
தன்னைச்சூழ்ந்துவரவும், ராவணனால் கொடுக்
கப்பட்ட ஐந்துவெள்ளஞ் சேனைகளும் தன
க்குப் பின்னாக மேகத்தைப்போல ஆர்ப்பரி
த்துவரவும், பேரிகையானது கடலைப்போலச்
சப்திக்கவும், சேனை தூளியால் மேருமலை
யினுடைய சிகரநுனியும் மறைபடும்படிப்
புறப்பட்டான். அவனோடு கூட ரத்தக்கண்
ணனென்பவனையும், சங்கனையும், ராவணன்
பார்த்து நீங்கள் மகரக்கண்ணனுடைய குதி
ரைபூட்டிய தேர்ச் சக்கரத்தில் காத்துக் கொ
ண்டு போகக்கடவீர்களென்று நியமிக்க நல்
லதப்படியே ஆகட்டுமென்று பதாதிமுதலிய
சேனைகளுடனே அனைவருந் தொடர்ந்துவர,
நக்ஷத்திரங்களை நட்புடன் தழுவின சந்திரனை
ப்போல மகரக்கண்ணன் போனான். பல பெ
ருங் கொடிகளைப் பிடித்து ஆகாசத்தி லிட்ட
பந்தலானது சூரியகிரணக் கற்றைகள் முழு
வதையும் மறைத்து லோகத்துக்கு நிழலிடவு
ம், கொல்லத்தக்க கோபத்தை யுடையதான
யானைகள் துதிக்கையால் சமுத்திர நீரையெ
ல்லாம் வாரித் தூவவும், இதைப் பார்த்துச்
செயசாலிகளான வானரவீரர்கள் தங்கள்யுத்
தமுயற்சியைவிட்டுப் பிரமித்து நின்றார்கள்.
யானைகள் முழங்கினதுகள், குதிரைகள் கனை
த்ததுகள், பேரிகைக் கூட்டங்கள் சப்தித்த
துகள், வீரர்கள் கர்ஜ்ஜித்தார்கள். இவைகளெ
ல்லாம் அடங்கும் படியாக சிறு மொத்தை
யோசையானது அண்டப்பித்திகை வரையில்
போய்முட்டினது. காற்றும் நுழைகிறதற்கு
சந்தில்லாமையால் எல்லா ஜீவன்களும் வெந்
துபழுங்கினதுகள். வேகமாய்வந்த சேனைகள்
மூர்க்கப்போர் செய்ததுகள். அடுத்துக்கர்வித்
து நெருங்கி ஒருவரோடொருவர் கைகலந்து
மலையும் வில்லும் கொண்டு வானரத்தலைவர்
களும், ராக்ஷசத்தலைவர்களும், யுத்தம்பண்ணி
னார்கள். ரத்தப் பிரவாகமானது யானைகளை
அடித்துக்கொண்டு போனது. வானரர்களை
நீக்க மலையோ ராக்ஷசர்கள் பந்து போலப்
பிடித்து [illegible] நக்ஷத்திரங்களும்
மேகங்க[illegible]ளைப்படவிசினார்கள்.
அப்படி[illegible]லைகள்பட்டு வான
ரங்கள் காட்டி விடிவிழுந்ததுபோல நசுங்கிப்
போனதுகள் அவைகளைத் தின்னுப்படிக்கவ்வி
க்கொண்டுபோனபேய்கள் வானரங்களென்று
கண்டு வாயிலறைந்து கொண்டு சப்தித்தது
கள். கறுத்தநிறத்தையுடைய ராக்ஷசர்கள் வலி
யகையில்பிடித்திருக்கின்ற வயிரவாளைவானர
வீரர்கள் பலாத்காரமாகப் பிடுங்கி அந்த ரா
க்ஷசர்களையே கொன்றார்கள். வானர வீரர்க
ள் கையிலெடுத்த மலைகளையும், மரங்களையும்,
ராக்ஷசவீரர்கள் தங்கள்கையிற் பிடுங்கிக்கொ
ண்டு வானரர்கள் மீதெறிந்து வெற்றியடைந்
தார்கள். இப்படி யுத்தம் நடக்கிறபோது வ
ண்டுகள் மொய்த் திருக்கின்ற மாலையையணி
ந்த மார்பையுடையவனான மகரக்கண்ணனெ
ன்னும் பெயருடைய இடியைப் போன்ற ப
லமுள்ளராக்ஷசன் பெரியசக்கரங்கள் பூட்டி
யதேரைச், சோலைசூழ்ந்தவயல் நிலங்கள் நிறை
யக் கங்காஜலம் பெருக்கெடுக்கின்ற அயோ
த்தியா நாட்டை யாளும்படியான, மேகம்
போன்ற ஸ்ரீராமருக்கெதிராகக் குரங்குச்சே
னைக ளெல்லாம் மாளும் படி செலுத்
திக்கொண்டு வந்தான். அதைக்கண்டு இவன்
இந்திரஜித்துதானோ என்கின்ற பயங்கொண்டு
வானரப்படை யெல்லாம் - சிந்திச் சிதறிப்
போகவானரத்தலைவர்கள் எல்லாம்மயங்கிச்சு
த்திரப் பிரதிமைபோல அம்புகள்பட்டுமூர்ச்
சையடையச்செய்து வந்து நின்று ஸ்வர்ண
மயமான மகரத்தங்களை வண்டுகள் குடைந்
துண்ணுகின்ற பொன்னரி மாலையையணிந்த
மகரக்கண்ணன் சுந்தரப் பாகுவான ஸ்ரீராம
ரைப்பார்த்து நீ என்னுடைய தகப்பனாகிய
கரனுடைய உயிரைப் போக்கினாய் என்கின்ற
பழைய பெரும்பகையானது உன்தம்பிமார்
மூன்றுபேரிடத்திலும் சேராமல் உன்னொரு
வனிடத்தில் மாத்திரமிருக்கின்றது, அதை இன்
றைக்குத் தீர்த்துவிடுகிறேன் என்று சொன்னா
ன். அப்படி மகரக்கண்ணனாகிய துஷ்டன்
சொன்ன வார்த்தையை கீர்த்திக்கு வாசஸ்தா
னமான திருத்தோளையுடைய ஆண்பிள்ளைச்
சிம்ஹமாகிய ஸ்ரீராமபிரான் நன்றாய்உற்றுக்
கேட்டு நீதானோ? கரனுடைய பிள்ளை உன் பிதா
வைக் கொன்ற பழைய பழியை நீக்குதற்கு
வந்தாய். ஆண்பிள்ளையாக பிறந்த உனக்கு
அது தகுந்த கடமைதானல்லவா? வீரர்களுக்
குத் தகுந்த வார்த்தையே என்று சொன்னார்.
அப்படிச் சொல்லவே - மகரக் கண்ணன்
இடியிடித்ததுபோல வில்நாணைத் தெறித்துச்
சப்தமுண்டாக்கி உன்னோடு என்தந்தை செ
ய்யவேண்டிய சண்டையைச்செய்து முடித்

ன் என்கோபத்தைஆற்றிக்கொள்ளுகிறேனென்றுசொல்லிச்சூல்முறிந்தமேகமான சண்டமாருதத்தால் தூண்டப்பட்டு யுகாந்தகாலத்தில் மேருமலையின்மீது வருஷதாரைகளைப் பெய்ததுபோல ஸ்ரீராமர்மீது அஸ்திரவருஷங்களைப்பொழிந்தான். அவன் எய்த பாணங்களையெல்லாம் ஸ்வாமி சில அக்கினிமுகாஸ்திரங்களை எவித் துண்டுதுண்டாயரித்துதள்ளி,அந்த ஆண்பிள்ளை வீரனுடைய மாலையணிந்த மார்பில் ஒரு அக்கினிப்பாணத்தைப் பிரயோகிக்க,அது அதிக கோபத்துடனே புருவத்தை நெரித்துக்கொண்டு நிற்கின்ற அந்த ராக்ஷசவீரனுடைய மார்பில் போய்ப்பாய்ந்து நின்றது. அப்படி அம்புபாய நடுங்காமல் செவந்த சூரியகாந்திப்பூவைப் போன்ற கண்களை யுடையவனான மகரக் கண்ணன் வாயிற் புகையைக் கக்கிக் கொண்டு தேவகீர்த்தியை யுடைய ஸ்ரீராம ருடைய கவசத்தில் ஆயிரம் வஜ்ரபாணங்களைப் பிரயோகித்து கர்ஜ்ஜித்தான். அதைப்பார்த்துத் தேவர்களெல்லாம் ஆச்சரியப்பட்டார்கள். சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலாதிபதியான ஸ்ரீராமமூர்த்தியானவர் நகைத்து, ஆறு கூர்மையான பாணங்களைப் பிரயோகித்து, மகரக் கண்ணனுடைய பொன்மயமான பெரிய தேரில் கட்டியிருந்த குதிரையின் கால்களை நறுக்கி,அவன்கையிற்பற்றியிருந்தவில்லை இரண்டு துண்டாக்கிப் பாகன்தலையையும் நிலத்தில்விழத்தள்ளினார். உடனே மகரக்கண்ணன் தைத்த பாண மார்பில்நிற்கவும், வாயில் ரக்தம் வடியவும், தான் வரமாகப்பெற்ற மந்திரத்தினாலே ஒரு க்ஷணத்திற் குள்ளாக ஆகாசத்தில் மறைந்து, மேகத்தினிடிகளையும், காற்றையும், அக்கினியையும், ஊழிக்காலத்தில் லோக மெல்லாம் அழியும்போது சொரிகிறதுபோல வருஷித்தான். அப்போது அந்தக் கொடிய இடிகள்விழுந்ததுகள். ஊழிக்காலத்தைக்காட்டிலு மிரண்டு பங்கு சண்டமாருதஞ் சீறிக்கொண்டு புறப்பட்டது. எங்கே பார்த்தாலும் உகாந்த மேகங்கள் கல்மழை பெய்ததுகள். வானரங்களெல்லாம் அதைச் சகிக்கமாட்டாமல் தாம்செய்துநின்ற யுத்தத்தைவிட்டு நாலாபக்கங்களிலும் ஓட்டம்பிடித்ததுகள். இப்படி அஷ்டதிக்குகளிலும் புகைமண்டி நெருப்பைக்கக்கிக்கொண்டு சிலாவருஷம் பொழிவதினால் ஆயிரங்கோடிவானரங்கள் மாண்டுபோனார்கள். அதைக்கண்டு ஸ்ரீராமமூர்த்தியானவர் இதென்னமாயமோ! மகரக்கண்ணன்பெற்ற வரத்தில்பலமாவென்று விபீஷணாழ்வானைக்கேட்க, ஸ்வாமீ! இந்த மகரக்கண்ணன் செய்த தபோவல்லமைக்கு மெச்சி, வாயுதேவனும், வருணதேவனும், அவன்கேட்டதைத் தடுக்காமல் அவனிஷ்டப்படிக்கொடுத்த தெய்வாஸ்திரத்தினாலிப்படி நேரிட்டதென்று சொல்லக்கேட்டு அப்படியா? இதோ ஒருநொடியில் இவைகளையெல்லாம் மாற்றிவிடுகிறேனென்றுசொல்லி,வாயுவாஸ்திரத்தையும், வருணாஸ்திரத்தையும்,யம்ஸ்ரூபமான கோதண்டத்தில்பூட்டி, ராமபாணத்தோடு சேர்த்து ஸ்வாமி பிரயோகித்த மாத்திரத்தில் மகரக்கண்ணனாலே யேவப்பட்ட சிலாவருஷமும், காற்றும், ஆகாசத்தில்நின்றும்வெந்து பெரியகடலில்விழுந்து மாய்ந்துபோய்விட்டன. அத்தன்மையை அந்தமகரக்கண்ணன் பார்த்து, ஆகாசமுழுவதும் தனது உருவம்போன்ற உருவத்தை யுடையவனாகித் தான்மாத்திரம் மறைந்து கோடிகோடியாகச் சூலங்களை வரிசைவரிசையாக எங்கும் பரப்பிவிட்டான். அதை ஸ்ரீராமர்பார்த்து, இது அந்த மகரக்கண்ணனுடைய மாயமாக்கும், என்று விபீஷணாழ்வானைப் பார்த்து, இப்படித் தன்னுடைய மாயத்தால் செய்த அவன் எங்கே பார்த்தாலும் அளவிட்டறியக் கூடாத உருவத்தையுடையவனா யிருக்கின்றான். இதில் எந்தத்தேகம் அந்த மகரக்கண்ணனுடைய யதார்த்தமான தேகமென்று தெரியாதபடி மறைந்திருக்கின்றான். இந்தத் துஷ்டன் விஷயத்தில் என்னசெய்யலாமென்று மனம்வருந்தி, அம்புபட்டவழியே ரக்தஆறு ஒழுகும்படிநின்ற அந்தமகரக்கண்ணன் தன்னைப்போல அளவில்லாத உருவங்களை மாயையால் ஆகாசமெல்லாம் நிறைத்துவிட்டுத் தான்மாத்திர மெங்கேயோ ஒளித்துக் கொண்டிருக்கின்றான் என்றுணர்ந்த தேவதேவராகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் ரக்தமொழுகிவருகின்ற அடையாளத்தைக்கண்டு இதற்கு நேராகத்தான் அந்த மகரக்கண்ணன் ஒளித்து நிற்கிறானென்று அந்தவழியாகவே ராமபாணத்தைப் பிரயோகித்தார். அப்போது அந்த மகரக்கண்ணன் தலையறுந்து பூமியில் வந்துவிழுந்தான். அப்படிக் கூரியதா யிடியைப்போலப்போன பாணத்துடன் அந்த ராக்ஷசனுடைய தேகமானது மேகத்தைப் போல ரக்தவெள்ளத்தைப் பொழிந்துகொண்டு பூமியில் விழுந்தமாத்திரத்தில் அவனால் செய்யப்பட்ட மாயையானது சூரியனுதயமா யிருளையெல்லாம் நீக்கினகாலத்தில் நித்திரைகெட்டு அத்துடனே கனவும் நீங்கினது

போல மாய்ந்துவிட்டது.இப்படிமகரக்கன்னன் பாணவுடனே குருதிக்கண்ணனென்பவன் அழகியகொடிகள்கட்டிய தேருடனே கொண்டைக்காலத்துச்சூரியனுக்குநடுவே தோன்றுகின்ற மேகத்துக்கொப்பான தேககாந்தியையுடையவனும், அக்கினிப்பிரகாசமபிரங்களைப் பொழிந்து கொண்டு சண்டமாருதக்காற்றைப்போல ரணக்களத்தில் வந்தெதிர்த்தான். அவனுடனே பிரிந்த சமுத்திரத்தையேபோல அணையிட்டுத்தடுத்தவனுன நளனென்கிற வானரத்தச்சன்வந்தெதிர்த்தான். அப்படியிருவருமெதிர்த்து நிற்கும்போது அந்தக் குருதிக் கண்ணன் வில்லை வளைத்துக் குணத் தொனி செய்து, அநேக பாணங்களை ஊழித் தீக் கொப்பாக நளன்மீது பிரயோகித்தான். அப்போது கெம்ஹத்துக்கொப்பாக ரணரங்கத்தில் நின்றிருந்த அந்த நளன் ஒருதிண்டமராமரத்தைப்பிடுங்கி அவன்விட்ட பாணங்களை யெல்லாம் பொடிப்பொடியாக்கினன். மறுபடியுமந்தக் குருதிக்கண்ணன் நளன்கையிலிருந்த மராமரத்தைத் துண்டுதுண்டாகப் பாணங்களினுல் தறித்துவிட்டான். அப்படித் தறிக்கவிழ்த்தின அந்தக் கொடியவனைப் பார்த்து, நளனென்கிற வானரவீரன்தன்மார்பை வளைத்துக் குறுக்கியவனைப்போலக் காணப்பட்டு, அந்தக்குருதிக்கண்ணனுடைய சிரசின்மேற்பாய்ந்துகுதித்தான். அதைக்கண்டு தேவர்களெல்லாம், திக்குகளுஞ் செவிடுபடும்படியார்த்தார்கள். எரிகின்ற அக்கினிமலையின்மேல் இந்திரனுடைய நாட்டினுற்போல அந்த காத்திரமான தேகத்தையுடைய குருதிக்கண்ணன் சிரமீது நின்ற அழகுள்ள நளனனவன் ரத்தம்ஒழுகவும், அந்தராக்ஷசனுடையவலியகண்களிலும் மூக்கிலும், செவிகளிலும், மூளை வடியவும், அவன்தலை சக்கைாய் நெரியவும் கால்களால் உதைத்து அந்தக் குருதிக்கண்ணனைப் பூமியிலிருட்டிக்கொன்றான்.

அவனிறந்தமாத்திரமே அக்கினிக்கொழுந்தெழுகிறபடியான கண்களையுடையவனுன சங்கனென்கிற மஹாராக்ஷசவீரன் கையில் வில்லும், அம்பும் பிடித்துக்கொண்டு வெற்றிமாலையுடைய தேருடனே வந்து, அடா! வானரமே! எங்கே தப்பிப்போகிருய் யென்று எதிர்த்தபோது மேருபருவதத்துக்குச் சமமான வல்லமையுள்ள பனசனென்னும் வானரவீரன் அந்தசங்கனுக் கெதிரிற்பாய்ந்தான். பாய்ந்தமாத்திரத்தில் அந்தப்பனசன் தோளிலும், மார்பிலும், அதி தீக்ஷணமான பாணங்களைப்பொருக்கிப்பெடுத்து,இடிக்கொப்பாகப் பதிநம்புகளைப்பதியும்படி அழுத்தினன். அப்படி யெய்தமாத்திரத்தில் அக்கினியில்நெய்சொரிந்ததுபோலக்கோபங்கொண்டு ஒருக்ஷணத்துக்குள்ளாகஅந்தச்சங்கனென்பவனுத் தேரோடு தூக்கினன். அப்படிதூக்கினவுடனேஅந்தச்சங்கன்தேரைவிட்டுக்கீழே குதித்தான்அப்படிக்குதித்தஅவனுடையமேருமலைக்கொப்பானதோற்றத்தையுடைய சிரசின்மீதுஅந்தத் தேரைக்கொண்டு மோதினன். அதுபட்டுக் கீழேவிழுந்தஅந்தச்சங்கன் ஆகாசத்திற்பாய தத்தளித்தபோதுவயிரத்தோளையுடைய பனசன் அந்தச்சங்கனுடைய ரக்தத்துடனே உயிருஞ்சோரும்படித்தள்ளிக் காலாலுதைத்துக்கொன்றான் - இப்படி பூலோகசக்கரவர்த்தியாகிய தசரதமஹாராஜர் புத்திரராகிய ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடைய பாணங்களினலும்,வானரச்சேனைகள் பிரயோகித்த மராமரம் மலைகள் இவைகளினுலும், ராவணனுல் ஏவப்பட்ட பத்துவெள்ளஞ் சேனையும் மாண்டுபோனதுகள். அவர்களோடுகூட மாளாதவர்களான ராவணதூதர்கள் நிராயுதர்களாய் இந்தச் செய்தியைச் சொல்ல ராவணனிடத்திற்கு ஓடினர்கள்.

மகரக்கண்ணன்வதைப்படலமுற்றிற்று.

## பிரம்ஹாஸ்திரப்படலம்.

அந்தத் தூதுவர்களால் கரன்மகனுன மகரக்கண்ணன் மடிந்ததையும், குருதிக் கண்ணன் நளனுல் தலை நெரிந் திறந்ததையும், சங்கனென்பவன் பனசனுல் மாண்டதையும், மற்றப்பத்துவெள்ளச் சேனையும் பூமிக்குப்பாரமாக நில்லாமல் மாண்டு போனதையும் சொல்லக்கேட்டுச் சாஸ்திர நெறிதவறினவனுன ராவணன் சீக்கிரமாக என் குமாரனுன இந்திரஜித்துவை அழைத்துக்கொண்டு வாருங்களென்று அனுப்பினன். அவர்கள் போய் ஐயா, இந்திரஜித்துவே! உன்னுடையதகப்பன் ராவணேஸ்வரன் அழைக்கின்ருனென்றதைக் கேட்ட ராவண குமாரன், திரண்ட தோள்களையுடைய ராட்சசவீரர்கள் போனவர்களெல்லாம் மாண்டுபோனர்களோவென்றான். உன்னையல்லாமல் அனுப்பினவின் திரும்பிவரத்தக்கவர்கள் யாரிருக்கின்றார்கள். அவர்க ளெல்லா மாண்டுபோய் விட்டார்களென் ருர்கள். அதைக்கேட்டு அதிகவேகமாகதந்தகப்பனிடத்திற்குச் சீக்கிரமாகவந்து ராவணனைவணங்கி

ஐயா, பிரதாப லங்கேஸ்வரா! உன்பிள்ளைக ளெவ்வளவு வேகத்தில் மாண்டு போனார்களே யென்று உனக்குக்கொஞ்சமாவது மனவருத் தமுண்டாக வில்லையே! குரங்குகளைத் தவிர ராக்ஷசர்கள் மாண்டுகிடக்கிறதை நீபோயின் றுவது ரணக்களத்தில் பாரும், இனிக் கனத்த குண்டலங்களை யணிந்த சிதையும், தேவர்க ளும், காணப்போகின்றார்கள். என்று சொல் லி வலம்சுற்றிவந்து வணங்கி ஆயிரஞ் சிங்கங் கள் பூண்ட ஆகாசத்தையளாவிய பொன்மய மான கொடித்தேரிலேறிப் போர்ப்பறைமு ழங்க ரணக்களத்தை நோக்கி இந்திரஜித்துப் புறப்பட்டான். அவனுக்கு உதவியாக அறு பதுவெள்ளம் ராக்ஷசப்படைகளும்,யானைக் கூட்டங்களும், தேர்களும், குதிரைகளும், பெருங்கூட்டமாகக் கூடினதுகள். உடுமி, திமிலை, மணி, பலகை, பெரும்பேரிகை, பம்பை, ஜெயபேரிகை, தாளம், தாரை, டக்கை, உடுக்கை, புல்லங்குழல், யானைம ணி, ஊமைச்சகடை முதலிய வாத்தியங்கள் ஒலித்தன. யானைமேற் பறையும், பக்கமணி களும், சமுத்திரம்போலக் கோஷித்தன. குதிரைக் கிண்கிணிமாலையும், தேர் மணிகளு ம், பிருதுக்கொடி மணிகளும், சேனைகளு டைய வீரகண்டைகளும், வெற்றிமாலைக ளும், ஆகிய இவைகளின் முழக்கமும், கேட கங்கள் ஒன்றுடனொன்று படுமோசையும், ஆகாசத்தையெல்லாம் கடல்வளைத்து இரைத் தாற்போல மூடிக்கொண்டதுகள். சங்கோ சையும், குழலொலியும்,ஒலிமிகுத்த எக்காள த்தொனியும், சிறுசின்னநாதமும், ஊதுகுழ லின்ஆரவாரமும், சிம்ஹங்களின் கர்ஜ்ஜனையு ம்,குதிரைகளின் அனுமானிப்பும்,தேர்களின் அதிர்ச்சியும், யானைகளின் இரைச்சலும், மே க முழக்கத்தோடு மாறுபட் டிருந்தன.— வில்லின்நொலியும், வீரர்கள் சப்திக்கின்ற வீர அழைப்பின் ஓசையும், வீரர்கள் அதட்டும் ஆரவாரிப்பும், வீரர்கள்பேசும் வார்த்தையி ன் அதிர்ச்சியும், சுவாசம் விடும்போதுபேசு ம் சத்தமும், திரண்டதோள்களைக் கொட்டு கின்ற பேரோசையும், காலால் பூமியைத்தட் டுகின்ற அரவமும், சமுத்திர இரைச்சலையும றைத்துவிட்டன. நான்குபக்கங்களிலுமுள்ள நான்கு சமுத்திரத்துக்கு ஒப்பான ராக்ஷச சேனைகள் நடப்பதினால் பூமியிலிருந்து மே லெழுந்த தூளியானது ஆகாசத்திற்மேல் தாண்டிப்பறந்தபடியால் அதைப்பார்த்துப் போகாதந்தக் கடலின்மூழ்கிக் களித்திருக்கி ன்ற தேவஸ்திரிகளுடைய பாற்கடலுக்கொ டியாகிய கங்கைநீ ரிருந்து கலங்கினதனது பெருக்கெடுத்தது. ஆயிரங்கோடிவீரர்களுடை தேர்கள்கிரகமண்டலங்களுக்கொப்பாகச்சுற் றிவரத் தேவர்களை நடுங்கச்செய்த இந்திரஜித் து ஒரு பொன்மயமாகிய தேரின்மேலேறிக் கொண்டு, எல்லாக்கிரஹங்களும் சுற்றிநிற்க நடுவே பிரகாசிக்கின்ற நாயகச் சூரியனைப் போலக் காணப்பட்டு, ரணக்களத்தை வந்து சேர்ந்து, தன்சேனையை அன்றில்பக்ஷியைப் போல,இரண்டுசிறகு ஸ்தானத்திலும், முகஸ் தானத்திலும், நேத்திரஸ்தானத்திலும், கண் டஸ்தானத்திலும், தேஹஸ்தானத்திலும், பாதஸ்தானத்திலும்,நகஸ்தானத்திலும்,வா ல்ஸ்தானத்திலும், கிரமமாக நிறுத்தி, அணி வகுத்துத் தான் கருப்பஸ்தானத்தில் நின்று முன் தேவேந்திரன்தோற்றுக் காணிக்கையா கக் கொடுத்துவிட்டுப் போனதும், சப்தச முத்திரங்களினுடைய பலத்தை யொடுக்கி, உகாந்தகாலத்தில் சப்திக்கின்ற பெருங்கோ ஷ்டத்தைத் தன்வயிற்றில் அடக்கிக்கொண் டிருக்கின்றதுமான வலம்புரிச்சங்கைக் கை யிலெடுத்துத் தேவர்களெல்லாந் தலைவெடித் துப் பயங்கொள்ளும்படியாகவும், அஷ்ட திக்குஞ் செவிடுபடும்படியாகவும்,ஊதினான். அந்தச் சங்கத்தொனியைக் கேட்டு, வானரக் கூட்டமெல்லாம் பின்னிடைந்து சிம்ஹநா தங்கேட்ட மிருகங்களெல்லாம் இருந்தவிட ந்தெரியாம லோடிப்போய் விடுவதுபோல ஓடிவிட்டன. அத்தருணத்தில் இந்திரஜித்து பார்வதியை அர்த்தபாகத்தில் வகித்திருக்கி ன்ற ருத்திரமூர்த்தியின் மேருவில்லுக்குச் சமமான தன்வில்லைவளைத்துக் குணடங்கார ம்பண்ணினான். அந்த முழக்கத்தைக்கேட்ட வானரங்களுடைய செவிகள் கிழிந்ததுகள். நெஞ்சம் பிளந்தது. ஓடிவிடும்படிக் கால் கள் யத்தனித்ததுகள். கையில் பற்றியிருந்த மரங்களும், மலைகளும் நழுவி விழுந்தது கள். தேகமெல்லாம் நடுக்கமடைந்தது. வா யெல்லா முலர்ந்து போனது. தேகமயிர்க் கூச்செறிந்தது. இவனாலேயெல்லோருமாமன் றிறந்துபோனோம் என்று சொல்லிவிட்டுச் சூரியபுத்திரராகிய சுக்கிரீவ மஹாராஜனும், வாயுபுத்திரராகிய ஆஞ்சநேயரும், அங்கதகு மாரரும், ஸ்ரீராமச்சந்திரரும், இளைய பெரு மாளும், சூரியசமானமாகிய திருவடிச்சுவட ணிந்த கிரீடதாரியாகியவிபீஷணனும் வான்முத லாகிய வீரர்தவிர மற்றவானரங்களெல்லாம் ஓட்டம் பிடித்தார்கள்.

இப்படி வானரத்தலைவர் நீங்கலாக வானரசேனை சமுத்திர மானது கரையுடைந்தோடும் வெள்ளம்போல ஓட்டமெடுக்க, ஊழிகால சமுத்திர கோஷத்தைப்போல ராக்ஷசசேனைவீரர்கள் வீரகர்ஜனைசெய்து நான்கு திசைகளையு மூடிக்கொண்டு ரணகளத்தில்நின்றார்கள். அப்போது ஸ்ரீராமமூர்த்தியும், லக்ஷ்மணப் பெருமாளும், மேரு பர்வதத்தைத் தோற்கடிக்கத்தக்கவரான வெற்றிமாலையைத் தரித்த ஆஞ்சநேயர் திருத்தோளின் மீதும், அங்கதகுமாரருடைய புஜங்களின் மேலுமாக ஆரோஹணித்துக், கருடவாஹநாரூடரான மஹாவிஷ்ணுவும், விருஷபவாஹநாரூடரான ருத்திரமூர்த்தியும், கையில் வில்லையுடையவர்களாய் ஊழிகாலத்தில் நிற்கின்ற தோற்றத்தைப்போலஅதி உக்ரகோபோத்திதர்களாய் நின்றார்கள். நீலன்முதலான வானரப்பெருவீரர்கள் ராக்ஷசர்களை எதிர்த்து விருக்ஷங்களையும், மலைகளையுங் கையிற்கொண்டு போர்செய்ய யத்நலித்தபோது, இந்தப் பூலோகத்தையும் தேவ லோகத்தையுங் காத்துரக்ஷிக்க தசரதமஹாராஜ புத்திரரான ஸ்ரீராமசந்திரமூர்த்தியானவர் இனிமேல் நடக்கப்போகிற காரியங்களை யாலோசித்து அந்த வீரர்களைத் தடுத்து உங்கள்மீது தேவதாஸ்திரங்களை அந்தத்துஷ்டன் பிரயோகிப்பானேயானால் நீங்கள் அவைகளைத் தடுக்கவல்லவர்களல்ல. அதைத்தடுப்பதற்கு எங்களிடத்தில் விட்டு விட்டு நீங்கள் பின்னால் சற்றேநின்று அந்தப்படைகளை நாங்கள் செய்கிற எங்கள் வில்வல்லமையைப் பார்த்துக் கொண்டிருங்களென்று நியமித்தார். அவர்களும் அவருக்குட்பட்டபடி நின்றார்கள். பிறகு ஆண்தன்மையிற் சிறந்த ஸ்ரீராம லக்ஷ்மணர்களிருவரும் ராக்ஷசர்களுடைய தேரின்மீதும், குதிரைகளின்மீதும், மதபடாமணிந்த யானைகளின் மீதும், ஊழிகால இருட்டை யொத்த ராக்ஷசர்கள் மீதும், அநேக பாணங்களைப் பிரயோகித்தார்கள். அவர்கள் வில்லி லிருந்தும் புறப்படுகின்ற இடிக்குச் சமமான பாணவருஷிகளைக்கண்டு தேவர்களும் நிட்பிரமையடைந்து போனார்கள். அப்போது வீரர்களுக்குள் சிறந்தவீரனான இந்திரஜித்து தேரின்மேல் வில்லைப் பிடித்தபடியே நின்று சேனைகள் மடிந்து விழுகிறதையும், அப்படி மடிந்து பிணங்கள் விழுந்துகிடக்கிற பூமியையும்பார்த்தான். மறுபடியும் அந்தராமலக்ஷ்மணர்களுடைய [illegible] வில்லின் வல்லமையால் சேனைகள் [illegible] மடிந்து விழுகின்ற தென்னும்புத்தலக்ஷணத்தைப்பார்த்தாலிய யானைகள் பட்டுப்போனதுகளோ என்றும். ரதங்கள் முறிந்து போனதோ என்றும். அணிவகுத்து அளவுசெய்து வந்தசேனைகளெல்லாம் மாண்டுபோனதுகளோவென்றும். இப்படி இறந்து போனவர்களைத்தூக்கிக்கொண்டு போகிறதற்கும், ராக்ஷசர்கள் வேறே இல்லையோஎன்றும். ஆகாசபரியந்தமாகப் பிணமலைகளாகக்குவிந்து போனதைக்கண்டுமே நிமயங்கி இங்கேசண்டை செய்கிறபேர்களிருவர்தானே ஆறு விறந்துபோகின்ற சேனைகளைப் பார்க்கும்போது யதார்த்தமான நம்முடைய அறுபது வெள்ளஞ் சேனையையும் ஜயித்துக் கொல்லுகின்றார்களோ! அல்லாவிட்டால், தங்கள் நீண்டவில் வல்லமையால் மாளும்படி யெய்து கொல்லுகின்றார்களோ! எந்த இந்திரஜாலஞ் செய்கின்றார்களோ! என்றுவாய் பிதற்றிக்கொண்டு பாணவருஷிங்களைப் பார்ப்பான். அதனாலொழுகுகின்ற ரக்தஆறுகளைப்பார்ப்பான். ஆகாசத்தை முட்டிக்கிடக்கிற பிணமலைகளின் உயர்வைப்பார்ப்பான். யானைத் தந்தங்கள் அறுப்பட்டு அவைகளில் நின்றும்உதிர்ந்த முத்துக் குவியல்களைப்பார்ப்பான். மாண்டுகிடக்கின்ற யானைக்கூட்டங்களைப்பார்ப்பான். அந்தஸ்ரீராம லக்ஷ்மணர்களுடைய அழகிய திருத்தோள்களைப் பார்ப்பான். பக்கங்கள் விருக்கிற மலைகளைப்பார்ப்பான். அவைகளைப்போல ஆகாசவரையிலுங் குவிந்து கிடக்கின்ற ராக்ஷசர்களுடைய தலைகளைப்பார்ப்பான். அந்த இரண்டு வீர சிம்ஹங்களுடைய பாணவேகங்களைப் பார்ப்பான். அந்தப் பாணங்கள் பட்டு அக்கினிப் பொறிகளைச்சிந்தி முறிந்துகிடக்கின்ற ராக்ஷசர்களுடைய ஆயுதப்பறிகளைப் பார்ப்பான். வில்லுகளைப்பார்ப்பான். அந்த வில்லின் நாணிலிருந்து புறப்படுகின்ற இடியினோசையைச் செவியினாலே கேட்பான். ஆயிரந்தேர்களையும், போர் செய்கின்ற யானைக்கூட்டங்களையும், வெற்றிமாலையைத் தரித்திருக்கின்ற குதிரைத்தொகைகளையும், ராக்ஷசர்களுடைய ஆயிரந் தலைகளையும், சமுத்திரத்துக்கொப்பான ஆயுதக்கூட்டங்களையும், துண்டு துண்டாகத்துண்டித்தும், தமதுவேகங் குறையாமல் அப்புறமும் போகின்ற பாணங்களினுடைய சக்தியை ஆச்சரியப்பட்டுப் பார்ப்பான். அப்படிப்பட்ட பாணங்களுக்கு இவ்வளவென்னுங் கணக்கில்லாத விசாலத்தொகையைப் பார்ப்பான். அறுபதுவெள்ளமான ராக்ஷசவீரர்களுடைய வல்லமைக் கிசைந்த

படி எறிகின்றவைகளும், எய்கின்றவைகளும், சொரிகின்றவைகளும், எற்றுகின்றவைகளுமான ஆயுதங்களெல்லாம் பெருங்காடு வெந்ததுபோலச் சாம்பலாய்ப் போனதுகளேயல்லாமல், அந்தவீரர்களுக்குச் சமீபத்திலும் போகாத லக்ஷணத்தைத் தன் மனப்பூர்வமாய் ஆராய்ந்துபார்ப்பான். வயிற்றைப் பிசைந்துகொண்டு ஓடிவந்து தங்கள் தங்கள் நாயகர்கள் மீது அவரவர்களுடைய மனையாட்டிகள் ஆகாசத்தில் செல்லுகின்ற மேகங்கள் பூமியில் விழ்வதுபோல விழ்ந்து அழுது குழைகின்ற கூட்டங்களைப் பார்ப்பான். பற்களைக்கடித்து இடியைப்போலச் சப்தத்தையுண்டாக்குகின்ற பிளந்த வாய்களோடு கூடிய தலைகளில்லாத முண்டங்கள் கூத்தாடுகின்றதையும், பருந்துமுதலிய பக்ஷிக்கூட்டங்கள் பூமியி லிறங்காமல் ஆகாசத்தில் பறந்துகொண்டிருக்கின்ற விதத்தையும்பார்ப்பான். அங்கதகுமாரர்கள் அநேகம்பே ரிருக்கின்றார்களோ! என்பான். ஆஞ்சநேயர்கள்இந்தலோகமெல்லா மிடமில்லாமல் நிறைந்திருக்கின்றார்களோ! என்பான். இந்த மனிதர்களெங்கே பார்த்தாலும் அங்கே யிருக்கின்றார்களே இரண்டுபேர்தானோ! அநேகம் பேர்களுண்டோ! என்பான். ஆண் சிங்கங்களுக்குச் சமமான அந்த ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடைய வேகமார்க்கத்தை இன்னபடி யென்று தெரியாதவனாகி, ஆரவாரிக்கின்ற தேவர்களைப்பார்ப்பான். அந்தத்தேவர்கள் வருஷிக்கின்ற புஷ்ப வருஷங்களைப் பார்ப்பான். தனக்கு இடந் துடிக்கின்ற தோளைப்பார்ப்பான். பார்த்தபார்த்த திக்கிலெல்லாம், பிணக்காடுகள் பரவி நிற்கின்றதைப் பார்ப்பான். அடித்துக்கொண்டு போகின்ற ரத்த ஆற்றினோடு யானைப் பிணங்கள் மிதந்துபோகின்றதைப் பார்ப்பான்.

இப்படி இந்திரஜித்து தனக்குத் துணையாகவந்த அறுபது வெள்ளஞ்சேனையும், அழிந்துபோனதைக்கண்டு ஆச்சரியப்பட்டு நிற்கவும், ஆயிரங்கோடித் தேர்வீரர்கள்தவிர மற்றவர்களெல்லா மாண்டுபோனதைக் கண்டும் அந்த இந்திரஜித்து நாகபாசத்தால் கட்டின பயத்தினால், ஓடிப்போன வானரர்கள் மனங்கலங்கிமறுபடியும்வந்து ரணக்களத்திற்சேராமல் அங்கங்கே சிதறி நின்றார்கள். ராக்ஷசதளத்தின் அறுபதுவெள்ளச்சேனையும் மடிந்து ஆயிரகோடித் தேர்வீரர்கள் மிகுந்த வல்லமையோடுவந்த போர்க்கோலத்தைக்கண்டு அநுமானானவர் அளவிடமுடியாமல் பூரித்த நமது திருத்தோளைத் தட்டிக்கொண்டு வீர அஷ்டகாசஞ் செய்தார். இடிக்கொப்பாகிய அந்தச் சத்தத்தைக் கேட்டுச் சிலதேர்வீரர்கள் தேரில்நின்றும், மூர்ச்சையாய்ப் பூமியில் விழுந்தார்கள். சில ராக்ஷசர்கள், கையிலுள்ள ஆயுதங்களைக்கீழே எறிந்துவிட்டுப் பாதசாரியாக ஓட்டம் பிடிக்க யத்தனித்தார்கள். மதில்களால் சூழப்பட்ட லங்கா பட்டணத்திலுள்ள ராக்ஷசர்களும் இந்தக் கர்ஜ்ஜனையைக் கேட்டு ரத்தங் கக்கிக்கொண்டு உயிர்சோர்ந்தார்கள். இதைக்கண்டு மேகத்திலும் கரியமேனியை யுடையவனான இந்திரஜித்து அவர்களைப்பார்த்து ஓகோ! நீங்கள் பயந்துபோனீர்கள். இப்போதே போய்விடுங்கள், இந்த கர்ஜ்ஜனைக்குப் பலஹீனப் படத்தக்கவர்கள் இனி யெப்படி கொடிய யுத்தஞ் செய்யப் போகிறீர்கள். நீங்களும் முன் இறந்துபோன அந்த வீரவான்களுடனே இப்போதே மாண்டு போனீர்கள்போ லானீர்கள் என்று கோபித்துக்கொண்டு தனித்தேரை யுடையவனாக ஸ்ரீராம லக்ஷ்மணர்கள்மேலெதிர்த்து வந்தான். அதைக்கண்ட ஆயிரங்கோடித் தேர்வீரரும் கர்ஜ்ஜித்துக் கொண்டு நெருங்கிப் பூமியுங் கிழிந்துபோய்விட்டதென்னும்படியாகவும், திக்கஜங்கள் தலைநடுங்கி மயங்கிப் போய்விடவும், ஆகாச நக்ஷத்திரங்கள் உதிர்ந்துவிடவும், தேவர்கள் மனந் திகைக்கவும், ரணரங்கத்தில் வந்து நின்றார்கள்.

அப்போது, மஹாசாதுரிய வாசகரான இளையபெருமாள் மேகத்திற்குச் சமமான சாதுர்த்தியமுள்ள திருக்கையை யுடையவிரசிம்ஹமான ஸ்ரீராமச்சந்திரப்பிரபுவை நமஸ்கரித்துநின்றுகொண்டு விண்ணப்பம் பண்ணிக்கொள்ளுகின்றார். ஸ்வாமி! உலகத்தாரெல்லா மிவன் வெற்றிப்பெற்றதாகவும், இவனுடைய நாகபாசத்தாற் கட்டுண்டு அடியேன் தோற்றுப்போனதாகவுஞ்சொல்லிக்கொள்ளுகிறார்கள். யதார்த்தமாய் அடியேனும் இஷ்டபந்துக்களான இவர்களை காக்கவுமில்லை, இந்தச்சண்டாளன் கட்டின பொய்க்கட்டை நீக்காமலும் போனேன். இவனைஜெயித்து வெற்றிகொள்ளாமலும் நின்றுவிட்டேன். இவனுயிரையும் போக்காமலுமிருந்தேன். இது எப்போதுந்திராத வசையாயிருக்கின்றது ஆதலால் இந்திரனுக்குப் பகையாளியான இவனுடைய தலையை அடியேனுடைய பாணமானது அந்தரத்தில் அறுத்துத் தள்ளாமற் போமேயானால் அடியேனை யெல்லைதுஷ்டர்களுக்குள்ளும் முதன்மைப் பட்டவனும்

மனித ரெல்லாரிலும் கடைப் பட்டவனும் ஆகக்கடவேன். ஸ்வாமி! ஸ்வர்ண வீரகண்டாமணியை யணிந்த திருவடிகளையும் அழகிய திருத்தோள்களையுமுடைய தேவரீர் சந்நிதிமுன்பாகவே இந்தத் துர்மார்க்க னுடைய தலையை அடியேனுடைய பாணத்தா லறுப்பேனாகில், அடியேன் அடிமைத் தொழிலும் நேர்த்தியப்படுகிறதாகும். இந்தப் பெரிய லோகத்தாரெல்லாம் பார்த்து நிற்கவும் அடியேனுடைய பாணமானது இவனுடைய தலையை அறுக்காமற் போகுமாகில், தேவரீருக்கு அடியேன் செய்கிற நித்யகாமிய கைங்கரிய பிரயோசனமெல்லாம் லோகத்திற்கு உதவாமற் போகக்கடவது என்று சபதஞ்செய்தார்.

அப்படி மஹாவீரரான இளையபெருமான் சபதஞ்செய்யவே தேவர்களெல்லாம் எங்கள் மனவருத்த மெல்லாம் நீங்கிற்றென்று ஆநந்தகோஷ மிட்டார்கள். சமஸ்தமான லோகங்களும் லோகத்துப் பதார்த்தங்களும் ஆரவாரித்ததுகள். நல்ல தருமதேவதையும் பல்லாண்டுகூறி யொலித்தது. யமதர்மராஜனும் கெக்கலிக் கொட்டிக் கர்ஜ்ஜித்தான். செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீராமபிரானும் புன் சிரிப்புள்ள திருமுகத்துடன் தம்பி! இளையவனே! நீ இவ்வளவு ஞானத்துடனே இந்தச் செய்கையைச்செய்ய - ஏற்றுக்கொள்வாயேயாகில், ஸம்ஹாரகர்த்தாவாகிய ருத்திர மூர்த்தியும், ரக்ஷக கர்த்தாவாகிய உபேந்திரநாதரும், தங்கள் தொழிலால் வியர்த்தர்களாய்ப் போய்விட்டார்கள். உன்னால் இனி யெல்லாநடக்கப்போகிறது. என்று ஆசீர்வதித்த ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரனைச் சாஷ்டாங்கமாகத் தெண்டன் சமர்ப்பித்து, ஸ்வாமீ! இந்த அநேககோடித் தேர்வீரர்களால் சூழப்பட்ட இந்த ராக்ஷசக் கூட்டத்தை இதோ கொன்றுவிடுகிறேன். சற்றே தேவர் கடாக்ஷித்தருளுமென்று விண்ணப்பஞ் செய்துவிட்டு அதிக சந்தோஷத்துடனே புறப்பட்டார். அப்போது அந்தக்குமாரன் இடியைப்போலக் கர்ஜ்ஜித்தார். அதைக்கேட்டு மேகங்களெல்லாம் சிதறி உதிர்ந்துபோய்விட்டன. இந்திரஜித்தின் தேர்ப்பூட்டியிருந்த சிங்கங்களும் நடுக்கமடைந்ததுகள். ஸ்ரீயப்பதியினுடைய பாஞ்சஜந்யத் தொனியைப்போலச் சமுத்திரமும் ஆரவாரித்தது. இப்படி இளையபெருமான் யுத்தக்களத்தில் வந்து எதிர்த்துநின்ற மாத்திரத்தில் - வளைதடியும், சக்கரம், ஈட்டி, தோமரம், அதிக டமுள்ள தண்டாயுதம், வேலாயுதம், முசுண்டி, சூலாயுதம், கைவேல், அம்புகள், கன்னக்கோல், இவைமுதலிய ஆயுதங்களையெல்லாம் மேகவருஷத்தின் றிருமடங்காக ராக்ஷசர்கள்வீசியெறிந்தார்கள். அப்போது வசந்தகாலத்துக்குரிய மன்மதனுக்கொப்பான சுந்தரமுள்ள ஸ்ரீராமாநுஜர் பிரயோகித்த பாணவேகத்தால் ஆகாசநக்ஷத்திரங்களெல்லாம் ஒருமிக்க உதிர்ந்துவிட்டதுகள். மேலுலகமும், கீழுலகமும், மறையும்படி வந்த அந்த ஆயுதங்களெல்லாம் துண்டுதுண்டாய் முறிந்து வீழ்ந்ததுகள். ஒருபாணப்பிரயோகத்திற்கு ஆயிரந் தேர்கள் அச்சுமுறிந்து வீழ்ந்ததுகள். அதிற்பூட்டிய குதிரைகளெல்லாம் மாண்டதுகள். சாரதிகளுமிறந்தார்கள். ரதிகர்களுந் தலையறு பட்டார்கள். லோகமெல்லாந் தீயும்படி நெருப்பும், புகையும், மேன்மேலும் பொங்கினதுகள். தேர்த்தட்டின் அடிமுறிந்துவிழுந்ததுகள். தேர் வண்டில்களெல்லாம் அச்சுமுறிந்து போயினதுகள். அம்புகள் பூட்டிய வில்லுகள் ஒடிந்ததுகள். தேர்க் குத்துக்கால்களும், ரதிகர்களுடைய மார்புகளும் பிளப் புண்டதுகள். பிருதுக் கொடிகள் அற்றதுகள். குடைகள் கிழிந்ததுகள். வெற்றிவீரர்களுடைய முடிக ளுடைந்ததுகள். பேரிகைகள் பிறுண்டதுகள். மேகங்களெல்லாங் கரிந்துதிர்ந்ததுகள். பின்னபின்னப்பட்டுத்தலைகால்தெரியாமற் போனபடியால், இவைகள் தேருருப்புகள், இவைகள் தேர்க்குதிரைகள், இவர்கள் ரதிகர்கள், இவர்கள் காலாள்கள், இவர்கள் சாரதிகள், என்று வேறுபாடறிதற்கு எலாமற்போய்விட்டது. தகப்பன்மார்தேரில் பிள்ளைகளுடைய தலைகள்கிடந்ததுகள். பிள்ளைகள் தேரில் பிதாக்களுடைய நரைத்ததலைகள் விழுந்ததுகள். சில தலைகள் குதிபழித்து அம்புடனே அந்தர மார்க்கத்தில் பறந்துபோனதுகள். சிலதலைகள்செவந்த ரத்தஆற்றில் அம்புபாய்ந்தபடியே கொம்பன்சுறுசமுத்திரத்தில் திரிவதுபோல ஓடின. தும்பைமாலையையணிந்த பெரியகைகள் அம்பறாத்தூணியில் நின்றும் எடுக்கின்ற அம்புகளுடனே அறுந்ததுகள். வில்லைப்பிடித்தபடியே இடதுகைகள் அறுந்ததுகள். கூர்மையான பாணங்களினால் அறுப்பட்ட வைகளும், மடியப்பட்டவைகளுமான கொடிகளும், குடைகளும், மற்றவைகளும், விசாலமான கடலுக்கொப்பான ரத்தவெள்ளத்தில் பக்ஷிக்கூட்டங்கள் படிவதுபோலிருந்ததுகள். யானைகளின்மேற் றவிசுகளும், அம்

புகளும், தேர்களும், வளைகின்ற பெரியவில் இகள் முதலான ஆயுதங்களும் கொடிகளும் விறகுகளாகவும், இறந்த ராக்ஷசர்களுடைய கண்களாகிய அக்கினியிற் பாகமான பிணங்களைப் பேய்க்கூட்டங்கள் சந்தோஷித்துடன் எடுத்தெடுத்து விழுங்கினதுகள். லக்ஷ்மணருடைய பாணங்கள்பட்டுச் சில சில தேர்கள், வண்டில்கள், சில்லுச்சில்லாய்ப் பேர்ந்து சிதறிப்போனதுகள். கயிற்றிற் கட்டிய குதிரைகள்மாண்டு பூமியில் தலைகீழாய்ப் புரண்டுவிழுந்ததுகள். சில தேர்கள் ரதிகளும், சாரதியுமடிய வெறுமையாய் ரணக்களத்தில் ஓடித்திரிந்ததுகள். சில ரதங்கள் பிரகாசிக்கின்ற ரத்தினங்கள் ரக்த வெள்ளத்துடன் சேர்ந்து செவந்த கிரணங்களை வீசுகின்றதனால், அளவில்லாத பந்துக்களுடனே ராக்ஷசதுஷ்டர்கள் எல்லாம் துக்கப்பட்டு மயங்கும்படி அக்கினியில் வெந்த லங்காபட்டணத்தின் மாளிகையைப்போ லிருந்ததுகள். இப்படி இருக்கின்ற காலத்தில் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியும், ஆஞ்சநேயனைச் செலுத்திக்கொண்டு வந்து தம்முடைய கோதண்டத்தைவளைத்துச் சோனமாரியைப்போல அஸ்திரப்பிரயோகஞ்செய்தபோது, தேவலோக விமானங்கள்பூமியில் விழுந்துமுறிந்ததுபோலத்தேவர்க ளெல்லாம் சின்னபின்னப் பட்டுத்தேர்வீரர்களும் மாண்டுபோன பின்பு, ராவணகுமாரனை இந்திரஜித்து மாத்திரம் ஒற்றை ரதத்துடனே நின்றான். பலயானைகளும்,குதிரைகளும்பூட்டியதேர்க்கடல்களும்,சிங்ஹங்கள்போன்ற ராக்ஷசவீரர்களும், கூட்டமாய் மடிந்துபோன பிறகு, வில்லோடுங் கூடின ஸ்ரீராம லக்ஷ்மணர்களான இரண்டு வீரர்களையும் பார்த்து, வெகு கோபத்துடனே கொஞ்சமும் அஞ்சாமல் ராவணகுமாரனை இந்திரஜித்து ஹேவீரர்களே! நீங்களிரண்டு பேர்களும் என்னோடு சண்டைசெய்கின்றீர்களோ? அல்லாவிட்டால் உங்களிருவரில் தகுதியான ஒருவர்வந்து உயிரைக் கொடுக்கின்றீர்களோ? உங்கள் சேனைகளை யெல்லாம் சேர்த்துக்கொண்டு போர்செய்து மாண்டு போகின்றீர்களோ? உங்கள் மனதிலுள்ள அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள். அந்தப்படியே உங்களுக்கு ஏற்ற ஒரு உத்தரவு கொடுக்கின்றேன் என்று சொன்னதைக்கேட்டு, இளையபெருமாள் இந்திரஜித்துவைப் பார்த்து, அடா! ராவணகுமாரனே? நீ வாளாயுதத்தாலாவது, பலப்பொருந்திய வில்வித்தையினாலாவது, மல்யுத்தத்தினாலாவது, இன்னும் உனக்குப் பழக்கமா யிருக்கின்ற எல்லாவித ஆயுதங்களினாலாவது, நீ செய்கின்ற போரில் பலங்கொண்டு நீ அபிப்பிராயப் படுகின்ற யுத்தம் ஒன்றல்ல, பலவற்றையுஞ் செய்து உன்னுயிரை வாங்கும்படி சபதஞ் செய்திருக்கின்றேன். இது சத்தியமாகுமென்றுசொன்னார். அதைக்கேட்ட இந்திரஜித்து ஹேலக்ஷ்மணா? உனக்குமுன் பிறந்தவனான அந்த ஸ்ரீராமனை முறைமாற்றி உனக்குத்தம்பியாக்கி உனக்குப் பின்னாலே கொல்லுகின்றேன். அவனுக்குப் பின் பிறந்தவனான உன்னை முன்னே கொன்று உன்னை அவனுக்குத் தமையனாகச் செய்துவிடுகிறேன். இப்படிச் செய்யாவிட்டால் நான் ராவணனுக்குப் பிள்ளையாகப்பிறந்ததினால் பயனென்ன இருக்கின்றது. உனக்கு இலக்குவனென்றபெயர் தகுதியானதென்னும்படிப் பிரகாசிக்கின்ற என்னுடைய பலமுள்ள பாணத்துக்கு உன்னை லக்ஷியமாக்கி விடுகின்றேன். என் பாணத்தை நடுவேநுழைந்து விலக்கி விடுகிறே னென்று விருஷபவாஹனருடரான சாக்ஷாது ருத்திரமூர்த்தியே விலக்கினபோதிலும், அவனையுங்கூட என்வில்லினாற் சின்னபின்னப்படக் கலக்கிவிடுகிறேன். இவைகளையெல்லாம் உன்னண்ணனாகிய அந்த ஸ்ரீராமனும் கண்ணாரப் பார்க்கப் போகிறான். என்னுடன் வந்த அறுபதுவெள்ள ராக்ஷச சேனைகளைக்கொன்று போக்கின நீங்க ளிரண்டு வீரர்களும், மனமிரங்கி வருந்தும்படித் தோஷிக்குரங்குகளின் எழுபது வெள்ளம் சேனையும்மாண்டு ரணக்களம் வெறுங்களமாகும்படி ஒருக்ஷணத்துக்குள்ளாக என்னொரு வில்லாலேயே முடித்து விடுகிறேன். உன் தமையனுடைய பாணத்தாற் கொல்லப்பட்ட கும்பகர்ண னென்கிற பெயருடையவனான ராவணன் தம்பியல்ல நான், அந்த ராவணனுடைய புத்திரனுக்கும். மேலும், நானொரு வீரனுக்கும். என் தம்பிமார்களுக்கும், என் சிறியதகப்பனான கும்பகர்ணனுக்கும், உன்னையும் உன் னண்ணனையுங் கொன்று உங்களிருவர்களுடைய ரக்தத்தினால் திலதர்ப்பணஞ் செய்வதாக நிச்சயித்து வந்திருக்கின்றேனுக்கும். என்று சொல்லக் கேட்ட இளையபெருமாள் அடா! இந்திரஜித்துவே? ராக்ஷசரென்கிறபெயருடையவர்கள் யாராரோ, அவர்களுக்கெல்லாம் அபராதத்தியங்களைச்செய்து ரக்ஷிக்கிறதற்குத் தகுந்த விபீஷிணாழ்வான் எங்களிடத்தில் முன்னமேவந்துவிட்டான். ஒளித்துக் கொண்டிருக்கின்ற உன்தகப்பனாகிய ராவணனுக்கு நீ செய்

யவேண்டிய உத்தரக்கிரியைகளை யெல்லாம் அநேகருக்குத்துடனே அவனே உனக்குச்செய்யப்போகிறானென்றார். இப்படி இருவருஞ் சபதஞ் செய்துகொண்ட பின்பு, இந்திரஜித்து மனங்கொதித்து ஆகாசமும் பூமியும் திக்குகளும் எல்லாம் மறைந்து விடும்படியாகக் கொந்தகடலையெல்லாம் பானம் பண்ணத்தக்க அக்கினி மூகாஸ்திரங்களைச் சோனுமாரியைக்காட்டிலும், இருமடங்கு மும்மடங்காகப் பிரயோகித்து அங்கதகுமாரன்மேல் ஆயிரபாணமும், வாயுபுத்திரராகிய அஞ்சநேயர்மீது அதற்கிரட்டிப்பான பாணங்களும், மற்ற வீரசிம்ஹங்களுக்குச் சமமான வானரவீரர்கள் தேகத்தின்மேல் அநேக பாணங்களுமாகப்பிரயோகித்து,எல்லா விடமும் பாணமயமாகும்படி நிறைத்துவிட்டான்.இப்படி ராவணியான இந்திரஜித்து, ராமாநுஜர்மீதும்,ஸ்ரீராமபிரான்மேலும், மஹாசமர்த்தர்களான வானரவீரர்கள்பேரிலும்,தேகத்தை உளையச்செய்வதான கொடிய பாணங்களைப் பிரயோகித்தான். அவனுடைய வில் ஒரு நாழிகைபரியந்தம் மண்டிலாகாரமான பிறையைப்போல வளைந்து நின்றது. முதுகுப்புறத்திலும்,முகத்திலும், இரண்டு பாரிசத்திலும், அம்புகளை மதியான காலச் சூரியனைப்போல நாலுபக்கங்களிலும் பொழியத்தொடங்கின அந்தஇந்திரஜித்துவின் கை வல்லமையைக்கண்டு தேவர்களெல்லாம் பயந்து கண்ணைமூடி யொடுங்கிவிட்டார்கள்.

இப்படி ராக்ஷசன்விட்ட பாணங்களில்தேஹத்திற் பட்டவைகளையும் படாதவைகளையும் எல்லாம்விலக்கிவிட்டு ஸ்ரீராமசகோதரராகிய ராமாநுஜ இளஞ்சிங்ஹமானவர் அவன் விட்டபட்ட தேவாஸ்திரத்திற்கு அந்தந்தத் தேவாஸ்திரங்களைப் பிரயோகித்து அவைகளையெல்லாம் அந்த அறிவீனன்செய்த பொய்ச்சபத வார்த்தைகளைப்போல நாசமாகும்படிச்செய்து அதிவேகமாய் அவனை யெதிர்த்து நின்றார். ஸ்ரீராம மூர்த்தியானவர் இந்திரஜித்துவின்மேல் பாணப்பிரயோகஞ் செய்தது தர்மமல்ல வென்று வெறுமையாய் இளையபெருமாளைப் பிரியாமல் பின்னாக நின்றருளினர். இளைய பெருமாளும் இந்திரஜித்தும் ஒருவரையொருவர் ஜெயிக்க நேரிடாமல் அவர்கள் பாணங்களெல்லாம் கொள்ளிக் கட்டைகளைப்போல வெந்து ஆகாசத்திற் போய்ச் சேர்ந்து விட்டதுகள். இருவரும் அதிக உக்கிரத்தோடு பாணப்பிரயோகஞ் செய்தமையால் காடுகளெல்லாம் பற்றியெரிந்ததுகள். பெரிய மலைகளெல்லாஞ் சேர்ந்தெரிந்ததுகள். பொன்னுலக மாகிய தேவலோகமும் எரிந்தது. சப்த சமுத்திரங்களுங் கொதித்தெரிந்தது. அருகலிலுள்ள மலைகளும் திகுதிகென் றெரிந்ததுகள். லோகமெல்லாம் ஊழிகாலம்போலச் சாம்பல்பட்டெரிந்தது. அப்போது ஆதிசேஷ சயனத்தைத் துறந்து அயோத்தியாபுரியி லவதரித்த ஸ்ரீரகுநந்தனருக்கு இளையவராகிய லக்ஷ்மணப்பெருமாள் தம்முடைய பாணங்களால் இந்திரஜித்து எவிய பாணசமுத்திரங்களை யெல்லாம், விலக்கிவிட்டு ஆண்முதலை போன்ற அந்த ராவண புத்திரனுடைய தேரை யிழுத்துக்கொண்டு வருகின்ற ஆயிரஞ் சிங்ஹங்களையும், யமனுக்குத் தத்தஞ்செய்து விட்டார். தேரழிந்த மாத்திரத்தில் சேமத்தேர் துணையில்லாமல் பரிவேடம் அழிந்து போகத் தனித்துநின்ற சூரியனுக் கொப்பாக நின்று, தேவர்களையெல்லாம் நாசப்படுத்தித் துரத்திவிட்டவனான இந்திரஜித்து அநேக நிக்ஷண்யமான பாணங்களைப் பிரயோகித்து அழிந்த அந்தத் தேர்மீ திருந்தபடியே, அங்கதகுமாரனுடைய வெற்றித் தோள்களின் மீதும், லக்ஷ்மணருடைய திருத் தோள்களின் பேரிலும், முழுவதும் அழுந்தும்படியாக அளவில்லாத பாணங்களைக் கொட்டித் தனது பலம்பொருந்திய தனிச்சங்கத்தை யெடுத்து வாயில்வைத்து எல்லா லோகங்களும், நிலைதளர்ந்து தத்தளிக்கும்படிப் பொம் பொமென்றூதினன். அப்படிச் சங்கநாதஞ்செய்த தசமுகனுடைய தனிக்குமாரனான இந்திரஜித்து தரித்திருந்த வஜ்ர கவசமானது பொடிப்பொடியாய் உதிர்ந்துபோகும்படி பத்துத் திவ்விய பாணங்களால் நொறுக்கிவிட்டு ஆண் சிங்ஹம் போன்ற லக்ஷ்மணப் பெருமாள் தமது வில்லைக் குணத்தொனி செய்தார். இதைப்பார்த்த நீலமேகஸ்யாமள மேனியரான ஸ்ரீராமர் செந்தாமரை மலர்போன்ற தமது திருக்கண்மலரில் ஆநந்த பாஷ்பமொழுகவும்,இளஞ்சந்திரிகையைப்போலப் புன்சிரிப்புச் சிரித்து, லோகங்களையெல்லாம் பாரணம்பண்ணின தம்முடைய திருவாயைத்திறந்து ஹேவீரர்களே! நீங்கள் அட்டகாசஞ் செய்யுங்களென்று நியமிக்க எல்லாவீரர்களும், லோகங்களெல்லாம் வெடித்துப் போய்விட்டதுகளென்னும்படி ஒருமிக்க வீரநாதஞ் செய்தார்கள்.

இப்படி இருக்கிறதருணத்தில் கண்ணிமைத்துத் திறப்பதற்குமுன்பாக இந்திரஜித்

து ஆகாசத்தில் போய் மறைந்துவிட்டான். இளையபெருமாள் அவனுடைய உருவத்தைக் காணாதவராகி, இவன்தேவர்களுக்குத் துன்பஞ்செய்கிறவனானபடியால், நம்முடைய சேனையையும் அழிப்பான். இப்போது ஆலோசிக்க வேண்டுவதில்லை, பிரம்ஹாஸ்திரப் பிரயோகஞ் செய்துவிடுகிறேன் என்றார். அப்படியே இளையபெருமாள் சொல்வதைக் கேட்டு, ஐயா! தர்ம்மவானே! உனக்குக் கோபம்பிறந்தால் லோகசிருஷ்டி கர்த்தாவான பிரம்ஹாவினுடைய அஸ்திரத்தைத் தொடுத்துவிடாதே? அது இந்தமூன்றுலோகத்தையுஞ் சுட்டெரித்துவிடும். அதை யொருவருந் தடுக்கமுடியாது. என்று ஸ்ரீ சக்கிரவர்த்தித் திருக்குமாரர் அருளிச்செய்யக் கேட்டு, மஹாபுத்திமானான இளையபெருமாள் அதைப் பிரயோகியாமல் நிறுத்திவிட்டார். அப்போது மறைந்துபோய்நின்ற வஞ்சகனான இந்திரஜித்து இவர்களுடைய மனோபாவத்தைத் தெரிந்துகொண்டு, தானந்தப் பிரம்ஹாஸ்திரப் பிரயோகஞ்செய்ய எண்ணங்கொண்டவனாகி, இப்போது நாமிவர்களைவிட்டுப் பிரிந்துபோவது நல்லதாகும் என்று தீர்மானித்துக்கொண்டு போய்விட்டான். இவன் போகிறதைப் பார்த்துக்கொண்டிருந்தவர்களான தேவர்களெல்லாம் கெக்கலிகொட்டிச் சிரித்தார்கள். வானரர்களெல்லாம் இந்த இந்திரஜித்துவினுடைய தேகத்தில் இளைய பெருமாளுடைய தீக்ஷணமான பாணங்கள்பட்டு ஒழுகிவருகின்ற ரத்தவெள்ளமானது மேக வருஷங்களை யெல்லாம் ஒழித்துவிட்டதென்றும்அவனோ எதிர்த்துநிற்கப் பயந்து ஆகாசத்தில்ஓடிப்போய்விட்டானென்றும்நினைத்தவர்களாய் அதியுக்கிரத்தால்பிறந்த சந்தோஷத்துடனே ஆர்ப்பரித்தார்கள். ஓடிப்போனவானரசேனையெல்லாம்சப்திக்கின்றசமுத்திரமானதுரணக்களத்தில்வந்துசேர்ந்ததென்று சொல்லும்படிவந்து சேர்ந்து கர்ஜ்ஜித்துக்கொண்டு இந்திரஜித்துவைப்பின்றொடர்ந்து துரத்தினதுகள். தோல்வியடைந்துபோனஇந்திரஜித்துஒருவருக்குந் தெரியாமல் மந்தரகிரியால் மர்த்திக்கப்பட்ட சமுத்திரம்போலக் கலக்கமடைந்திருக்கின்ற லங்காபட்டணம் வந்து அடைந்தான். இந்திரஜித்து பிரகாசகரமான பிரம்ஹாஸ்திரத்தை இத்தவீரர்களென்மேல்விடுவதற்குமுன்பாக நானே முந்திக்கொள்ளுகிறேனென்று உத்தியோகித்து, மந்திரங்களை யுருப் போடும்படியான யாகஞ் செய்கிறதற்கு ஏற்பட்டிருக்கின்ற தீர்மானத்தை, யுத்தஞ்செய்யத்தக்க தோள்களை யுடையவர்களான ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் நினையாமலும், அவன் வஞ்சனைத்தொழிலையும் மறந்துவிட்டார்கள். சப்தித்த சேனாவீரர்களுடைய ஆர்ப்பரிப்பானது தேவலோகத்தைப் போய் அலைக்கழிவு செய்யவும், சூரியபகவான் இளையபெருமாள்மீது இந்திரஜித்து பிரம்ஹாஸ்திரப் பிரயோகஞ் செய்வதைப் பார்க்கமாட்டேன் முன்னாக நானே மாண்டுபோகிறேனென்று போவதுபோலச் சப்தாவென்னுங் குதிரையாலிழுபடுகின்ற தனது ரதத்துடனே மேலைக்கடலைப்போய்ச் சேர்ந்துவிட்டான். அப்போது புண்டரீகாக்ஷராகிய ஸ்ரீராமர் விபீஷிணாழ்வானைப் பார்த்து ராத்திரியும் பகலுமாகப் பெரும்போர்செய்து வல்லமைபெற்ற நம்முடையசேனைகள் இளைப்படைந்துபோய்விட்டதுகள். இவர்களுக்கு ஆகாரம் வருகிறதற்குத் தாமஸமாய் விடடபடியால் நீயே இவர்களுக்குவேண்டிய உணவுப் பொருள்களைச் சேகரித்துக்கொண்டு வரவேண்டுமென்று நியமிக்க, விபீஷிணாழ்வான் ஸ்வாமி! அப்படியே இதோ அதிசீக்கிரத்தில் கொண்டுவருகின்றேனென்றுநமஸ்கரித்துப்புறப்பட்டுத் தம்முடைய மந்திரிமார்களோடுங் கூடப்போய் ஒருநாழிகைக் குள்ளாக ஓட்டில் சமுத்திரத்தைத் தாண்டினான். அத்தருணத்தில் இளையபெருமாளைப்பார்த்து ஸ்வாமி சொல்லுகின்றார். தம்பி லக்ஷ்மணா! அவன் தேவதாஸ்திரங்களுக்குக் கிரமமாக யதார்த்த பூஜைகளைச் செய்துவிட்டுப் பிறகு தான்வந்து பிரயோகிப்பான். ஆகையால் நானும்போய் அஸ்திரபூஜைகளைச் செய்துவிட்டுவருகின்றேன் நான்வருகிறவரையிலும் நம்முடைய சேனைகளையெல்லாம் பத்திரமாகக் காத்துக்கொண் டிருவென்று ரணக்களத்தை விட்டுப்பாடிக்கூடாரத்தைப்போய்ச் சேர்ந்தார். இந்திரஜித்து ராவணனைக்கண்டு அவ்விடத்தில் நடந்தகாரியங்களையும், தன்மேல் அவர்கள்முந்திப் பிரம்ஹாஸ்திரப் பிரயோகம்பண்ண யத்தனித்திருக்கிற விதத்தையும் அவனெஞ்சி அறுத்தும்படியாகச் சொல்லவே அதைக்கேட்டுமனந்திகைத்து, என்னப்பனே? அப்படியா நாமென்ன செய்யலாமென்றுகேட்க, இந்திரஜித்து ராவணனைப் பார்த்து ஐயா, ராவணேஸ்வரா! தன்னைக் கொல்லுவதற்கு ஒருவர் துணிந்தார்களேயானால் தானுமப்படியே அவர்களை முந்திக் கொல்லும்படி யத்தனிக்கலாமென்று சாஸ்

திரர்கள் சொல்லியிருக்கின்றார்கள். அப்படிப்பட்ட யுத்தத்தை நான் செய்யப்போகிறேனென்பதை அவர்கள் அறியாதபடி மறைவாயிருந்து அந்தப் பிரம்ஹாஸ்திரத்தை விடுகிறதே நன்மையாகும். இது சாஸ்திரவிஹிதமாகும், நான்பிரம்ஹாஸ்திரம் பிரயோகிக்கப் போகின்றேனென்பதை யவர்களறிவார்களேயானால் அந்தப்பிரம்ஹாஸ்திரத்தைக்கொண்டே தடுத்துவிடுவார்கள். என்னை யெதிரிடுவரைப் பார்ப்பார்களேயானால் கொன்றுபோடவும் வல்லவர்களாகும். அந்தந்த போவாக்களான அவர்களுக்குவருத்தமென்பது கொஞ்சமாவது உண்டாகவில்லை. ஆகையால் அவ்விதமாகச்செய்து அவர்கள் வானரை ஒரு க்ஷணநேரத்திற்குள்ளே முடித்துவிடுகிறேன். ஐயா, ராவணேஸ்வரா! என்னையவர்கள் மறந்துபோய்விட்டார்களானதால் அவர்களோடு எதிர்த்து யுத்தஞ்செய்ய, அவர்கள்மீது அளவில்லாத சைநியங்களை ஏறவிட்டு அந்தச்சேனைகளுக்குப் பின்னாக நானின்றுகொண்டு நான் இந்தஅஸ்திரம்பிரயோகிக்கப்போகிறேன். என்றுசொல்ல, ராவணன் கேட்டுத் தனக்கெதிரில்நிற்கின்ற மகோதரனைப்பார்த்து ஐயா, மஹாவீரவானான மகோதரா! நீ யென்மீது தயைவைத்து நூறுவெள்ளஞ் சேனையையும், இதற்குத் தலைவனான அகம்பன் முதலான அளவில்லாத ராக்ஷசர்களையுங்கூட்டிக்கொண்டு சீக்கிரமாகப்போய் அந்தமனிதர்களை நெருங்கிக்கொள்ளைப் பெருஞ்சண்டையைச் செய்து மாயைகளெவ்வளவுண்டோ? அவ்வளவு மாயைகளையும் ஏவி, மஹாகொடிய அந்தகார இருளை யெங்கேபார்த்தாலும் நிரப்பி, நீ யொருத்தன்மாத்திரமே இந்த மூன்று லோகங்களையும் ஜெயம்பெறத்தக்கவன். ஆதலால் நீயே போய் அவர்களைக் கோபித்து அவர்களுயிரைவாங்கி யெனக்குபகாரம்பண்ணவேண்டுமென்று சொன்னான். இப்படி ராவணன் சொல்லக் கேட்டு வாள்போன்றகோரதந்தங்களையுடையவனான மகோதரன் அதிசந்தோஷித்துடனே ஐயா, எப்போது நீர் உத்தரவு கொடுப்பீரோவென்று எதிர்பார்த்திருந்தேன் உத்தரவுகிடைத்தது, இனித்தாமசஞ்செய்யத்தக் கவலேது இதோ புறப்பட்டேனென்று அதிக உற்சாகத்துடன் அவனுடைய மகிமைபோல் தோள்களைத் தட்டி, ஆக்ரமித்துத் தேர்மேல் வந்தேறினான். மலையைச்சூழ்ந்த மதத்த யானைகளைப்போல ராக்ஷசவீரர்கள் மகோதரனுக்கு உபயபக்ஷமாக வந்து சேனைச் சூழ்ந்து கொண்டார்கள். அல்லாமலும் கோடிகோடி நூறாயிரமாயிரம் யானைகளும், அணியணியாக நிற்கிற அந்தந்த அலைகள்தோறும், வாயுவேகத்திலும் அதிவேகமாய் போகின்ற தேர்க்கூட்டங்கள் அளவில்லாதவைகள் வந்து சேர்ந்தனகள். மஹாபலமுள்ளவைகளான அஸ்வப்படைகளுங் கணக்கற்றவைகளாய் வந்து சேர்ந்தனகள். ஆயுதமுஸ்திப்புகளும், உயர்ந்த பருத்த ரத்நங்கள் வைத்திழைத்த ஆபரணங்களும், பிளந்த வாயிலுள்ள கோரவக்கிர தந்தங்களும், இவைகளெல்லாம் அதிகப் பிரகாசமுள்ள சூரியர்களையும், சந்திரர்களையும்போலச்சொலிக்க இவைகளுக்கு மத்திய கண்டமான இருளைப்போல ராக்ஷசச்சேனைகளும், நெருங்கி வந்தனகள். ராக்ஷசர்கள் பிடித்துக்கொண்டு வந்த விருதுக்கொடிகள்கூட்டமிட்டுக் கொழுந்துவிட்டு வளர்ந்ததுபோல ஆகாசத்தைப்போய் முட்டி, இடிகளின் சமுகங்களோடு கூடின மேகஜாலங்களை யெல்லாம் துரத்தி விட்டனகள். அந்த ராக்ஷசர்கள் பூமி குழியும்படிக் காலடிகள் வைக்கு மிடங்களி லெல்லாம் முன்னே யூறிய ரத்தம் கொப்புளித்துப் புறப்பட்டு நிறைந்தது. லோகங்களை மூடிக்கொண்டு பிரம்ஹாண்ட வரையிலும் தூளிசென்று அண்டங்களைச் சிருஷ்டித்தவனான பிரம்ம தேவனுடைய கண்களையும் மறைத்து விட்டது. ஆனைகளாகிய பெரிய மலைகளில் நின்று மொழுகி வருகின்ற மதஜலமென்னும் பெரியநதிகள் குதிரைகளின் வாய் நுரை நீரோடு கலந்து, மரங்களையும், கல்மலைகளையும் அடித்துக் கொண்டு வேகமாய்ப் போய் பெருஞ் சமுத்திரத்தில் சங்கமமானதுகள். அளவில்லாத நக்ஷத்திரக் கூட்டங்கள் ஆகாசமார்க்கத்தில் பிரகாசிக்கிறதைப் பார்க்கும்போது அதிக கோபத்தினால் வாயைமடித்துக்கொண்டிருக்கின்ற வக்கிர தந்தங்களையுடைய ராக்ஷசர்கள் பலங்கொண்டு கையில் பிடித்திருக்கின்ற ஆயுதங்களைச்சுழற்றும்போது அதிலிருந்து உண்டான நெருப்புப்பொறிகள் ஆகாசத்தில் தொத்திக்கொண்டிருக்கின்றதுபோ லிருந்தன. ராவணனால் யுத்தத்திற்கு அனுப்புவிக்கப்பட்ட நூறுவெள்ளஞ் சேனைகளும், லங்கைக்கோட்டை வாசலிலிருந்து புறப்படுகிறதைப் பார்க்கும்போது அகஸ்திய மகாமுனிவர் ஆதியில் சமுத்திர முழுவதையும் பானம்பண்ணி யிருந்ததைப் பானம்பண்ணின கிரமப்படியே மறுபடியும் உமிழ்வதைப்போ லிருந்தது. சந்து- பே

ரிகை-எக்காளம்- தாளம்- ஆகிய, இவைகளின் தொனியும், வீரர்களுடைய சிங்கநாதமும், ஹுண்டங்கார ஓசைகளும், யானைகளுடைய முழக்கமும், குதிரைக் கனைப்பும், பொன் மயமாகிய தேர்களி னுடைய அதிர்ச்சியும், லோகங்களையெல்லாம் விஷ்ணுவைப்போல விழுங்கிவிட்டன. இந்தப்பிரகாரமாக ராக்ஷசப் பெருஞ்சேனைகள் ரணக்களத்தில் சேர்ந்தன.

அவர்களை யெதிர்த்து வானர வீரர்கள் அரக்கர்களாலே வெட்டப்பட்ட இடிக்குச் சமமான ஆயுதங்களையும், பாண வருஷங்களையும், தடுத்து அவர்களோடு ஒருமிக்க ஆர்ப்பரித்தார்கள். கோபித்தார்கள். அநட்டி மலைகளைக்கோடியும், கோடிக்குமேல் கோடியுமாக எறிய மலையொன்றுக்கு நால்வரும் ஐவருமாக ராக்ஷசர்கள் மாண்டார்கள். போர்செய்துகொண்டிருந்த யானைகளும், பாய்கின்ற குதிரைகளும், பொன்மயமாகிய தேர்களும், அழிந்து விழ்ந்தன. ராக்ஷசர்கள் பிரயோகித்த மழு, சூலம், சக்கரம், கலப்பை, வாள், வளைதடி, ஈட்டி, அங்குசம், நீண்டகோடாரி, தண்டாயுதம், நாராசம், வேல், எறிதடி, அம்புகள் இவைமுதலிய ஆயுதங்கள் பட்டு, வானரக்கூட்டங்கள் மடிந்து போனன. முற்கரம், இருப்புலக்கை, முசுண்டி, ஆப்புகள், பிண்டிபாலம், தடி, இருப்புமுள், குறுந்தடி, கவண்கல், இவைக ளெல்லாம் வானரங்க ளேவின மலைகளை நொறுக்கி, அவர்களையுங் கொன்று, ரணக்களத்தில் வீழ்ந்தன. பிரகாசிக்கின்ற கூர்மையான ஆயுதங்கள் ராக்ஷசர்கள் முறைமுறையாக ஏவினதினால் பிணப் பெருமலைகள் அங்கங்கே தடைபட்டுக் கிடக்கிற படியாலும், அழிந்த ரத்த வெள்ளங்கள் நாலாப்பக்கங்களிலு மோடுகிறபடியாலும், ராக்ஷசர்கள்மீது வானரங்கள் எதிர்த்துப் போகமாட்டவில்லை. ராக்ஷசர்களும் வானரங்களின் பேரில் எதிர்கொண்டுவரக்கூடவில்லை. அங்கு யுத்தஞ் செய்துகொண்டிருந்த வானரர்களெல்லாம் பூர்வஜென்மம் தேவர்களானபடியால் தேவலோக மடைந்தபிறகுந் தேவர்களுடனே சேர்ந்து திரிந்தார்கள். அவர்களை ஆலிங்கனஞ் செய்யவேண்டு மென்று மோகங்கொண்டு வருத்தமுற்றிருந்த ரம்பா ஸ்திரீகளெல்லாம் அவர்களைக்கண்டு ஆசைகொண்டு தங்களாவி யொன்றும்படி அவர்களைத்தழுவி அவர்களைப் பிரிந்திருந்த துக்கமுந் தீர்ந்து போனார்கள். ஒளிப்பான மாயமும், வஞ்சனையும், களவும், தங்களுக்கெப்போதுங்கடமையுள்ளவைகளாகக்கொண்டு அன்புமுதலான தருமமார்க்கத்தி லிழியாமலிருந்த ராக்ஷசர்களைப் பெருந்தேவர்களாகச்செய்த, ஞானஸ்வரூபராகிய லக்ஷ்மணப்பெருமானுடைய பாணங்களிலும், பவித்திரமானவைகள் வேறுஞ் சிலவுண்டென்று சொல்வது தகுதியாகுமோ? யமன் தன் தூதுவர்களுடனே அந்தரமார்க்கத்தில் வந்து நின்றான். மூன்றும் பிறைபோன்ற வளைந்த பற்களையுடைய ராக்ஷசர்களும், யானைகளும், தேர்களும், ஆகிய இவற்றின்மீது ஆகாசமு மிடமில்லை யென்று சொல்லும்படி லக்ஷ்மணர் தம்முடையபாணங்களைப் பிரயோகித்து, நான்கு திசைகளிலும், அந்தந்தத் திசைகளி லிருக்கிறதுபோலவே திரிந்துகொண்டிருந்தார். இப்படிப்பட்ட சமயத்தில் வாயுபுத்திரராகிய ஆஞ்சநேயர் கும்பகர்ணனாலே அவ்விடத்தில்போட்டு விடப்பட்டதும், ஆகாசத்தை அளாவிய வஜ்ர மலையைப்போலப் பிரகாசிக்கின்றதும், தேவர்கள் தலையில் அணிந்திருந்த தும்பைமாலையை அறுத்து அவர்களைத்தோற்கடித்துத்துரத்தினதும், ஜொலிக்கின்ற ரத்நமயமாய்ப் பூமியைப் பாரத்தால் நெளியச்செய்வதுமான ஒருதண்டாயுதத்தைக் கையிலெடுத்து தேவர்களெல்லாரும் கர்த்தரே! அதுவல்ல, நெருப்போ!. அதுவுமல்ல என்று நினைக்கும்படி அதிவேகமாய் மிகுந்த கொலைத் தொழிலைச் செய்யும்படியான ஸ்வபாவத்துடனே கோபமே யொரு உருவுகொண்டதுபோல் ஒருவரும் அளவிட்டறியக்கூடாத பெரிய ஆகாரத்துடன், யமனே இந்தரணக்களத்தில் போர்செய்ய வந்தா னென்னும்படி ராக்ஷசர்களைக் கொன்றார். சகல சாஸ்திரங்களுங் கற்றவரான அந்த ஆஞ்சநேயர் கொடுங்கண்ணையுடையதுகளான மதயானைகளின் மேலும், வேகமாயோடுகின்ற குதிரைகளின் மேலும், செலுத்தும் தேர்களின் மீதும்; கூட்டமாகிய ராக்ஷசவீரர்களுடைய தேஹங்களின் பேரிலும், அவர்களுடைய தலைகளின் மேலும், சர்வாந்தரியாமியாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப்போலவும், நான்குவேதங்களாலும், பிரதிபாதிக்கப்படுகின்ற செந்தாமரைக் கண்ணை யுடையவனுகிய திருவிக்கிரம னிவனே யென்று சொல்லும்படியாகவும், ரணக்களமெல்லாஞ் சுற்றித்திரிந்தார். தம்மே லெதிர்த்துவந்தவர்களையும், தமது கையில் கிடைத்தவர்களையும், கண்களில் அக்கினிபொறிபறக்கும்படி கழித்தெறிந்து, அந்தப் போர்க்களமெல்லாஞ் சேருகும்படி ராக்ஷசர்களையெல்

லாம் நசுக்கி, அவர்க ளுருவங்களையும் அழித்து விட்டார். இவருடைய விக்கிரம வடிவத்தைக்கண்ட தேவர்களெல்லாம் திரிலோகங்களையு முன் மூன்றடியா லளந்த அந்தச் சாக்ஷாத்காரி திரிவிக்கிரம வென்று சந்தேகித்தார்கள். அந்த மகாகபியினுடைய மஸ்தகங்களாகிய ... ஆவகளி லிண்டாகிய முத்தங்களை ... படியவும், மேகங்கள் சஞ்சரிக்கின்ற ஆகாசத்தைப்போய்த் திருமேனி முட்டவும் விளங்கி, ஆஞ்சநேயர், யுகாந்தகாலத்து சம்பவிக்கும்போது சண்டமாருதம் அடிக்க, அதனால் நக்ஷத்திரங்களெல்லாம் உதிர்ந்து தொத்திக்கொண்டு பிரகாசிக்கின்ற மேருமலையானது, சூரியர்களால் சூழப்பட்டிருக்கின்றதை யொத்திருந்தார். பூமியையும், ஆகாசத்தையும், இடித்துவிட்டாரென்று யாவரும் நினைக்கும்படியாகத் தமது பாதங்களால் பூமியை ஒரு உதை உதைத்துக் கிளம்பிக் கடல்போல் நிருக்கின்ற ராக்ஷசப் பெருஞ்சேனையைத் தூளாய்ப் போகும்படிச் செய்து கும்பகர்ணனுடைய அந்தப்பெருந் தண்டாயுதத்தைத் தமது வல்லமையுடன் கையிற்பிடித்து யானைகள், தேர்கள், குதிரைகள், முதலாகிய யாவையும், குழம்பிப்போகும்படி யடித்து அவற்றி லேறிவந்தவர்க ளுயிரைப்போக்கி வீரகர்ஜ்ஜனை செய்து தமது மனக்கோபத்தை மாற்றிக்கொண்டார். ஆயிரம் யானைகளை ஒருநாழிகைப்பொழுதுக்குள்ளாக ரக்தவெள்ளமாயோடும்படி அரைத்து அநேகாயிரஞ் சிம்ஹங்களைப்போல எதிர்த்துவந்த வெற்றிபெற்ற ராக்ஷசவீரர்களையெல்லாம் காலினாலெற்றி ஒருவருமிவ்வளவு பலமுள்ளவரென்றறியவொட்டாமல்கொல்லுகிறதற்குப் புறப்பட்ட திக்கஜம்போல அந்த ரணரங்கமெங்குந் திரிந்துகொண்டிருந்தார். தேர்வீரர்களையும், குதிரைவீரர்களையும், விருஷபத்தைப்போலவும், சிம்ஹத்தைப்போலவும், வருகின்றவர்களையும், மேகம்போலக் கரிய நிறத்தை யுடையவர்களையும், மழையைப்போலக் குமுறுகின்ற கர்ஜ்ஜிதத்தை யுடையவர்களையும், அநேகவிதமான யுத்த சாஸ்திர சமர்த்தர்களையும், எங்குஞ்செயம்பெற்றுக் கீர்த்திவந்தர்களா யுத்தஞ் செய்வந்து தம்மைச்சூழ வளைந்தவர்களையும், தம்மை யெதிர்த்துவந்த எல்லா ராக்ஷச வீரர்களையும், வீரசுவர்க்கம் அடையும்படியாகக் கதையைச் சுழற்றி அடித்து, நசுக்கி விட்டார். சுக்ரீவமஹாராஜர், நீலன், அங்கதப்பெருமான், சாம்பவான், மைந்த பனசன், முதலாகச் சொல்லப்பட்ட வானரவீரர்கள் எல்லாம், மிகுந்தகோபவெறிகொண்டவர்களாகி, போர்க்களத்திற்புகுந்து ஒருவரையொருவர் சாராதவர்களாகி, ராக்ஷசப் பெருங்கடலில் மறைந்து நின்றார்கள். இப்படி பெருந்தொகுப்பாகக் கூடியிருக்கின்ற ராக்ஷசப்பெருவெள்ளத்தை அப்படி அப்படியே வாரிவாரி யெறிந்துகொண்டு நகாயுதத்தினாலே, இரணியாசுரனை மார்பைப் பிளந்து கொன்ற நரசிம்ஹ மூர்த்தியானவர், நடந்ததுபோல மிகுந்த ராக்ஷசச்சேனைக்கடலில் அழுந்தி தமது தண்டாயுதத்தினாலே ராக்ஷசர்களை யெல்லாம் கொன்று திரிகின்ற வாயுபுத்திரரானவர் வீரசம்பத்தையுடையவனான அகம்ப னென்னும் ராக்ஷச வீரனை யெதிர்கண்டார். முன்னால் தாருகாசுரனென்னும் பெயரையுடையனாகி, வில்வீரரான சுப்பிரமணியரோடெதிர்த்து, அவருடைய வெற்றிவேலால் மாண்டுபோய், இப்போது அகம்பனென்னும் பெயரையுடையவனாகப்பிறந்த அந்தராக்ஷசன் இவரைப் பார்த்து, மலையை யொத்த ஆயிரங்கழுதைகள் பூண்டுமனோவேகத்தினுமதிவேகமாய்ப்போகத்தக்க பெரியதேரையும் வில்லையுமுடையவனாய்வந்துதேவேந்திரனும், சத்ருக்களை சம்ஹரிக்கின்றசக்ராயுததாரியாகிய ஸ்ரீவிஷ்ணு மூர்த்தியும், முப்புரங்களை முன்னெரித்த ருத்திரமூர்த்தியுந்தவிர மற்றவர்களிந்தக்குரங்குடனே யுத்தஞ்செய்யக் கற்றார்களே யானால், யமனுக்கிரையாவார்கள். ஆகையால், இந்தக் குரங்கை நான் தடுக்காமற் போவேனே யானால், இந்தச் சப்த சமுத்திரங்கள் சூழ்ந்த பூலோகத்திலுள்ள ராக்ஷசர்களென்னும் பெயரை யுடையவர்களை யெல்லாம் இக்குரங்கே மாய்த்து விடுமென்று மாமிசத்திற் பழகினதுகளான அவ்விரவருஷிங்களைப் பொழிந்துகொண்டு அதிககோபத்துடனே யெதிர்த்து வந்தான்.

நக்ஷத்திர மண்டல மளவும் உயர்ந்திருக்கின்ற பலம் பொருந்திய தோள்களை யுடைய ஆஞ்சநேயரும், வேகமாக எதிர்த்துவந்தார். ரத கஜ துரகபதாதிகளும் நெருங்கிப்பகைத் துதிக்க, உகாந்தகாலமேகமும், ஊழித்தீயும், சண்டமாருதமும், பொங்கிவந்த பிரளய சாலம்போல வாரிட்டிருக்கிய வீரக்கழலையுடைய அகம்பன் நெருங்கிவந்த உடனே வஜ்ரமலையைப்போன்ற திருத்தோள்களையுடைய ஆஞ்சநேயர் சிரகிறென்று தண்டா யுதத்தைச் சுற்றி அவனுள்ளதியப்பட்டவைகளும்விசப்

பட்டவைகளும், பிரயோகிக்கப் பட்டவைகளும், எய்யப் பட்டவைகளும், சொரியப் பட்டவைகளும், ஆகிய எல்லா ஆயுதங்களும், கிரமக்கிரமமாக முறிபட்டுச் சிதறிப்போகும்படிச் சுழற்றித் தண்டத்தினாலே தூள் தூளாக்கித் தேவர்கள் சந்தோஷிக்கவும், ராக்ஷசர்கள் வருத்தமுறவும், கற்றிருக்கிற தண்டாயுத வித்தையைக் காட்டினார். உகாந்தகால சண்டமாருதத்தினாலும், அசையமாட்டாத மேருவையொத்த ஆஞ்சநேயர் அகம்பன் பார்த்துக்கொண்டிருக்கும் போதே பத்துக்கோடி யானைகளையும், கடிவாளம்பூட்டிய குதிரைகளையும், மூன்றாம் பிறையையொத்த வக்கிரதந்தங்களையுடைய ராக்ஷசக் கூட்டங்களையும், ஏர்க்கால்கள் பூட்டிய தேர்க் கூட்டங்களையும், பொடிப் பொடியாய் நொறுக்கிக் கொன்றுவிட்டார். அப்போது அகம்பன் ராக்ஷசர்கள் மாண்டுகிடக்கின்ற படுகளத்தைப்பார்த்து வாயிலும் கண்ணிலும் அக்கினியுடன் புகையை கக்கிக்கொண்டும், விருதுக்கொடி கட்டியிருக்கின்ற தேரைச் செலுத்திக்கொண்டும், பாணவருஷங்களை மழையிலும் மூன்றுபங் கதிகமாகப் பிரயோகித்துக்கொண்டும், அதிவேகமாய்வந்து மலையைப்போலமோதி, மேகத்தைப்போலக் கர்ஜ்ஜித்தான். அப்படி அகம்பன் இடியைப்போன்றவைகளும், நெருப்புப் பொறிகளைக் கக்குகின்றவைகளும், இரண்டு பக்கத்திலும் கழுகைப்போலச் சிறகுகளை யுடையவைகளும், தேவர்களுடைய மார்பைப் பிளந்தவைகளும், பொன்வடிம்புகட்டினவைகளும், நீண்ட கணுக்களை யுடையவைகளுமான பாணங்கள் அனுமானுடைய தோளின்மேலும், மார்பின்மேலும், அபரிமிதமாகச் சொரியப்பட்டுத் தோன்றினதுகள். அவ்விதமாக மார்பிலும் தோளிலுந் தைத்த பாண வாய்களின்வழியாக ரத்த தாரைகள் வடியத் தேஹமெல்லாம் நடுக்கங்கொண்டு நிற்கின்ற வாயுபுத்திரரானவர் அந்த வருத்தம் நீங்குவதற்கு முன்பாக அகம்பனுடைய தேரிற்பூட்டியிழுக்கப்பட்ட கழுதைகளையும், தேர்த்தட்டையும், சின்னபின்னப்படுத்திச் சாரதியையும் மாண்டுவிழும்படித் தமது கைத் தண்டத்தினால் மோதியறைந்தார். கல்லினாலே செய்து வைத்ததுபோலுந் தேஹத்தை யுடையவனான அந்த அகம்பன் பார்த்து, வில்லினாலேயவனை ஜெயிக்கிறது அருமையென்று மல்யுத்தப் பழக்கங் கொண்ட தோள் வல்லமையினாலே தெய்வத்தச்சனுடைய சிற்பவேலைபால் செய்ததான ஒருபருங் கொடிய தண்டத்தைக் கையிலெடுத்துக்கொண்டு கடலைப்போலக் கர்ஜ்ஜித்து இம்முறைக்கு இவனை வென்றுவிடுவேன். மேற்றி வாழ்வையுடைய ஸ்ரீகாகுத்தனான ராவணேஸ்வரனை வெற்றியாளனாக்கி அந்த இரண்டு மனிதர்களையும் வெறியவர்களாக்கித் தேவர்களுக்குப் பெருந்துக்கத்தையுண்டாக்கி விடுகிறேனென்று மாருதியைக் கிட்ட நெருங்கினான். அவரும் நல்லது வாவென்று சமீபித்து வந்து ஒருவரையொருவர் முட்டித்தாக்கினார்கள். இடசாரி வலசாரியாகத் திரிந்தார்கள். ஒவ்வொருவரும் வீரகர்ஜ்ஜனை செய்தார்கள். அவரவர் தங்கள் தங்கள் புஜங்களைத்தட்டினார்கள். ஒருவரையொருவர் கிட்டினார்கள். ஒருவரையொருவர் மேலேதூக்கித் தள்ளினார்கள். மேலேதூக்கிக் கிறுகிறென்று சுற்றினார்கள். ஒருவரையொருவர் முட்டி விலகினார்கள். மறுபடியுங் கிட்டி நெருங்கினார்கள். பின்னும் நீங்கிச் சற்றே யாயாச முற்றார்கள். ஒருவரையொருவர் தட்டினார்கள். கட்டித்தழுவினார்கள். ஒருவர்மேல் ஒருவர் பாய்ந்தார்கள். தரையிற் குதித்து ஒருவரையொருவர் கிட்டினார்கள். ஒருவரையொருவர் பற்றினார்கள். ஓங்கி அறைந்தார்கள். அந்த அடியை ஒருவர் கீழுமேலுமாகக்கட்டிக் காத்தார்கள். ஒருவரையொருவர் கொல்லமுடியாமல் ஒருவரையொருவர் ஒட்டிநின்றார்கள். ஒருவரையொருவர் தாக்கி, வட்டமாகச் சுற்றி முட்டினார்கள்.

இப்படி இருவரு மல்யுத்தஞ்செய்து கருநிறத்துடனே பகைகொண்ட நிறத்தையுடையவனான அகம்பனுடைய வஜ்ரத்தையொத்த மார்பில், பொய்யுடன் பகைகொண்டு நின்ற தர்ம்மகுணவானான ஆஞ்சநேயர் பாய்ந்து தண்டத்தினால் மோதியடித்தபோது துஷ்டனான அகம்பன் அந்த அடியைத் தன் தண்டத்தினால் தட்டி விலக்கினான். அப்படி விலக்கின மாத்திரத்தில் அவனுடைய கையு முறிந்து, தண்டாயுதமும் பொடிப்பொடியாய்ப் போர்க்களத்தில் விழுந்துவிட்டது. வலதுகையுடனே தண்டாயுதமு மிற்று விழுந்தவுடனே கடலைப்போலக் கலங்கிநடுங்கின தேகத்துடனேநின்ற அந்த அகம்பன் பலம்பொருந்திய தன் இடதுகையாலோங்கி அநுமானுடைய வெற்றிமாலை யணிந்த திருமார்பில் அடித்தான். அந்தஅடியானது வஜ்ரமலைமேல்விழுந்த இடியைப்போலிருந்தது. அப்போது ஆஞ்சநேயர் அப்படியடித்த அகம்பனைப் பார்த்துத் தமது கையில் இடிக்குச்

சமமான தண்டத்தைப்பிடித்திருந்தும், அத
னாலே யவனை யடித்தால் அதர்மமாகும்.
வெறுங்கையாய் நிற்கின்றானென்று உதட்
டை மடித்துத் தானும் அவனைப்போலவே
இடதுகையால் அகம்பனுடைய மார்பிலே
குத்தினார். குத்தினமாத்திரமே முன் குடித்
திருந்து கக்குகிறதுபோல ரக்தத்தைக்குபு
குபென்று பெருவெள்ளமாய்க் கக்கினான்.
பின்னையுந்த இடதுகையாலேயே ஓங்கிக் கன்
னத்திலோரறை யறைந்து கீழே தள்ளி அவ
னுயிரை வீர சுவர்க்கத்தில் வசிக்குந் தேவர்
களுடனே சேர்த்துவிட்டார். மற்றராக்ஷசர்
கள் காட்டிலுள்ள மிருகங்களும், யானை
களும், சிங்கத்தைக்கண்ட தன்மையைப்
போலக் கூட்டமாய்வந்தவர்களெல்லாம்சின்
னாபின்னப்பட்டுத் திக்குவிதிக்குகளாக ஓட்
டம்பிடித்தார்கள். இப்படி யொருபக்கத்தில்
அநுமான்கையால் அகம்பனும் மடிந்து, ம
ண்மேல் விழுந்துவிட்டான். அவனுடன்வந்
த ராக்ஷசசேனைகளும், மாண்டுபோனார்கள்.
வானரவீரர்க ளெல்லாம் திரும்பி விட்டார்
கள். மற்றொருபக்கத்தில் இளையபெருமாள்
வருஷிக்கின்ற அம்புகளால் யானைகள் கட்டி
யிழுக்கின்ற கொடிகள் கட்டின தேர்களும்,
துதிக்கைகளை யுடைய யானைகளும், குதிரை
களும், மாண்டுபோனதுகள். இப்படிப்பட்
ட சமயத்தில் மேருவுக்குச் சமமான திரள்
தோள்களையுடைய ஆஞ்சநேயர் வானரவீர
ர்கள் சப்திக்கின்ற சப்தத்தையுங் கேட்டா
ரில்லை. இடியின் ஓசையையும் அடக்கத்தக்க
தான லக்ஷ்மணருடைய வில்லின்றோசை
யையுங் கேட்கவில்லை. வீரர்களின்றிருக்
கின்றது சம்பவித்த தென்று மறியவில்லை.
தமக்கு ஒருவரும்வந்துசொல்லுவாருமில்லை.
இதனால் அதிக வியசன முற்றார். விசாலித்தி
ருக்கின்ற ராக்ஷசசேனைகள் தெற்கு மேற்கா
கக் கடலைப்போ லிருக்க, எழுயோசனைக் கப்
பால் அங்கதகுமாரன் போனான். அவனுக்கு
அப்பால் பதினான்கு யோசனையில் சுக்கிரீவ
மஹாராஜர் போயிருந்தார். அதற் கப்பால்
இருபத்தெட்டு யோசனைதூரத்தில் ஸ்ரீராமா
நுஜர் எழுந்தருளி யிருந்தார். மற்ற வானர
வீரர்கள் நான்கு யோசனை தூரமும் ஐந்து
யோசனை தூரமுமாக யுத்தஞ் செய்து கொ
ண்டு போயிருந்தார்கள். இப்படி இவர்களைக்
காணாமல் வாயுபுத்திரர் லக்ஷ்மணப்பெரு
மானுடைய வெற்றியைப் போலச் சூழ்ந்
தவர்களாகி, இரண்டு ருத்ர சதத்திற்
கப்புறத்தி லிருந்தார்கள். மற்ற வானரசேனை
கள் நீர்மேற் பாசிபோல ராக்ஷசசேனைகளு
க் கிடையிடையே கூடி நின்றார்கள். இப்படி
இருக்கவும், இளையபெருமாள் எங்கே யெழு
ந்தருளி யிருக்கின்றாரோ? அவ்விடத்திற்கு
வேகமாய்ப் போகவேண்டுமென்று ஒருவரு
த்தமான துயனதை யெழுப்ப, ஊழிக்காற்
றைப்போலப் போகும்போது தேகங் களை
திருவிடவும், அந்தக் களையை யாற்றிக்கொ
ண்டு, இந்தப் பிரகாரமாகத் தமது தேகத்தி
ல் அநேகவித துச்சகுனங்கள் கண்டதுகள்.
ஆனைத் தந்தங்களையும், மயிற்பிச்சங்களையும்,
பூமாலைகளையும், ரத்னங்களையும், முத்துமா
லைகளையும், வாரி வீசிக் கொண்டு மீன்களைப்
போல அங்கு மிங்கும், ஆயுதங்கள் பிரகாசிக்
கப் பெரிய குடைகளை அடித்துக் கொண்டு
ஓடுகின்ற ரக்த ஆறுகளைக்கண்டார். திக்குவிதி
க்குகளாகப் போட்டுப் போரிடுகின்ற ராக்ஷச
ர்கள்மீது பிரயோகித்த அம்புகள் அரசர்கள்
தலைகளை யறுத்து ஆகாசத்தில் வீச, அவைகள்
அண்டப் பித்திகையில் முட்டிப் பெருங்
கோஷ்ட மிட்டுக்கொண்டு லோகமெல்லா ம
திரும்படியாக ஊழிக்காலத்தில் பொழிகின்ற
சிலாவருஷம்போல விழுகின்றவைகளைக்கண்
டார். பெரிய வேலாயுதத்தைக் கையிற்பிடித்
திருக்கின்ற ராக்ஷசர்கள் எவின ஆயுதங்கள்
லக்ஷ்மணர் விட்ட அம்புகளால், துண்டு து
ண்டாகி, அக்கினிப் பொறியுடன் நக்ஷத்திர
ங்கள் ஆகாசத்திலிருந்தும், இருளோடும்படி
விழுவது போலவும், கானகத்தில் பற்றின
நெருப்பைப்போலவும் நாலாபக்கங்களிலும்
சுடுகின்றதைக்கண்டார். தயாளுவான லக்ஷ்
மணப்பெருமாளுடைய பாணங்கள் ஆகாச
முழுவதும் ஜொலித்துக் கொண்டு அக்கினி
களைக் கக்கித்தேவர்க ளெல்லாம் பார்க்கும்ப
டியாக இருட்டைத் துரத்தி மசானத்தில் நிர்
த்தனம் பண்ணுகின்ற எட்டுத் தோள்களை யு
டைய சாம்பசிவ மூர்த்தியி னுடைய சுருண்
ட சடைக் கற்றையைப் போலப் பிரகாசிக்கி
ன்றதைக்கண்டார். நெய்விட்டுக் கொளுத்த
ப்பட்ட நெருப்பைப்போல ராக்ஷசர்களு
டைய மலையையொத்த தேஹத்தில்நின்றும்
ரக்தம்வடியக் கவந்தங்கள் கூட்டங்கூட்டமா
க ராத்திரிக் காலத்திற்குக் கைவிளக் கேற்றின
துபோல ஆடுகின்றதைக்கண்டார். ரதிகர்கள்
மாண்ட தேர்களும், பிரம்ஹகல்ப பரியந்த
ம் எண்ணித் தொகைசெய்தாலும் முடியமா
ட்டாத இலக்கமுள்ள வீரர்களில்லாமல் திரி
கின்ற யானைகளும், குதிரைகளும், ரக்ஷிக்கி
ன்ற ராஜனில்லாத நாட்டிலுள்ள குடிகளைப்

போலத் திரிகின்றவைகளைக் கண்டார். இதழ்
விரிந்த பூமாலையைத் தரித்த திருமார்பை யு
டைய இளையபெருமாள் பலம் பொருந்திய
அஸ்திர வருஷ்டிகளை மேகத்தைநக்காட்டிலும்,
மூன்றுபங்கு அதிகமாகப்பிரயோகித்துயுத்த
ஞ்செய்ய அழிந்துமாண்டராக்ஷசர்களுடைய
தேகமலைகளையும், ரத்தக்கடல்களையும், முறிந்
து கிடக்கின்ற ஆயுதக்காட்டையும், கண்டார்.
ஊழிகாலச் சண்டமாருதம்போல அதிவேக
மாய் லக்ஷ்மணரைத் தேடிக்கொண்டு போ
கின்ற ஆஞ்சநேயர் ரத்தக்கடலை யெல்லாந்
தாண்டினபோது, பிரம்ஹாண்டத்தையும் கி
ழித்துவிட்டது, கிழித்துவிட்டது,என்னத்தக்
க வில்லின்றோசையைக் கேட்டு லக்ஷ்மண
ரிருக்கின்ற இடத்தைக்கண்டுபிடித்த சந்தோ
ஷத்தினாலே யுகாந்தகாலத்துப் பெரும்புறக்
கடலின் கோஷத்திலு மிரண்டுபங்கதிகமாகக்
கர்ஜ்ஜித்தார். அநுமானுடைய அட்டகாசத்
தைக்கேட்ட இளையபெருமாள் ஆஞ்சநே
யர்வந்துவிட்டார். மற்ற வீரர்களுடைய ச
மாச்சாரத்தை விசாரிக்கலாமென்று மனம
கிழ்ந்து திரும்பிப்பார்ப்பதற்கு முன்பாகச்
சமீபமாகவந்து லக்ஷ்மணரை வணங்கினார்.
வணங்கின ஜெயப்பிரதாபரை இளையபெரு
மாள் கட்டித்தழுவி ஐயா, அநுமானே! நம்
முடைய வானரசேனையெல்லா மெங்கே!
சூரியகுமாரனை சுக்கிரீவர் நம்மைப்பிரிந்த
விதமென்ன!அங்கதப்பெருமானெங்கேயிரு
க்கிறான். மிகுந்த இருளா யிருக்கிறபடியால்
இந்த ராக்ஷச சேனைக்கடலில் நடந்ததொன்
றும் எனக்குத் தெரியவில்லை. அதனைச் சொ
ல்லக்கடவாயென்று வினவ, அஞ்சனை குமா
ரர் தமது சிரசில் கையைக் கூப்பிக்கொண்டு
நின்று ஸ்வாமீ! ராமாநுஜரே? போனவீர
ர்கள் போய்ச்செய்த விதமும், போனது ம
ல்லாமல் யுத்தத்தில் அவர்கள் பெற்ற தொன்
றும் அடியேனுக்குந்தெரியாது. நடந்த கா
ரியங்கள் போனவீரர்கள் வந்தால்தான் தெ
ரியும் என்று சலசமுத்திரத்தையும், ஐந்திர
வியாகரணக் கடலையுந் தாண்டின ஆஞ்சநே
யர் விண்ணப்பப்பண்ணிப் பின்னும் லக்ஷ்
மணரைப்பார்த்து ஸ்வாமீ! ஒரு உபாயமிரு
க்கின்றது. இது மனமயக்கத்தைத் தரத்தக்க
ராத்திரிகால மானதால் நம்முடைய சேனைக
ளைப் பலவாறுகப் பிரிந்துபோகச்செய்தது.
சத்துருக்களான ராக்ஷசர்களுடைய தந்திர
மாக்கும். இதைத் தேவரீர் திருவுளங்கொண்
டு தேவதாஸ்திரங்களா லிந்த இருட்டைப்
போக்கினலல்லாமல், தேவரீருடைய அடி

யார்களான வானரர்கள் தேவர் திருவடியை
அடையமாட்டார்க ளென்று விநயமாகச்
சொன்னார். அதைக்கேட்டு இளையபெருமா
ள் அப்படியா நல்லது,இதோ நீர்சொன்னபி
ரகாரஞ்செய்கின்றேனென்று சஹஸ்தி ராபி
தான ரான ஸ்ரீராமமூர்த்தியை நமஸ்கரித்து
ஸ்தோத்திரஞ்செய்து கருந்த பாணங்களைப்
பொறுக்கியெடுத்து அவைகளையும் மேருவி
ல்லியான சாப்பவமூர்த்தியினுடைய பாசுப
தாஸ்திரத்தையும் உபமந்திரித்து, மின்னல்
போலும் பிரகாசிக்கின்ற கோரதந்தங்களு
டைய ராக்ஷசர்கள்மீதுபிரயோகித்தார்.மூன்
றுகண்களையுடைய சங்கரன்ஆயுதத்தைப் பிர
யோகித்துவிட்ட மாத்திரத்தில் அதுமூங்கித்
காட்டிற் பற்றின வடவா முகாக்கினியைப்
போல ராக்ஷசர்களி லொருவராவது தவறிப்
போகாதபடி ஒருக்ஷணத்துக்குள்ளாக ராக்ஷ
சர்களைத் தேடித்தேடிக் கொன்றுவிட்டது.
சமுத்திரஞ் சூழ்ந்த திக்கிலுள்ள இருட்டை
யெல்லாம் நாசமாக்கிவிட்டது. தேவர்களும்
பிரமை நீங்கினார்கள். அப்போது மகோதர
ன் இந்த லக்ஷ்மணன் தேவாஸ்திரப்பிரயோ
கஞ்செய்தபடியினாலே நம்மால் செய்யப்ப
ட்ட பெருமாயைத் தொழிலெல்லாம் நீங்கி
விட்டதென்று மறைந்துபோய் விட்டான்.
வானரவீரர்க ளெல்லாம் வீர அட்டகாசஞ்
செய்துகொண்டுவந்து இளையபெருமானு
டைய திருவடியைச்சேர்ந்து நர்த்தனம் ப
ண்ணினார்கள். வானரவீரர்களில் ஒருவருக்
கும் ஒருதுன்பமில்லாமல் வந்துசேர்ந்ததை
க்கண்டு சந்தோஷங்கொண்டு, தேவதேவரா
ன ஸ்ரீராமபிரா னுடைய திருத்தம்பியார்
தமது திருவுளத்தி லிருந்த சந்தேகம் நீங்கி
னார். காவலாகவந்த வானரசேனைகளெல்லாம்
கலீர்கலீரென்று ஆரவாரித்துக் கொண்டுவந்
து இளையபெருமாளைச் சேர்ந்ததைக்கண்டு
தேவர்கள் புஷ்பமாரியைப்பெய்தார்கள். ரா
க்ஷசசேனை நூறுவெள்ளமும் மாண்டு, அகம்
பனு மடிந்து, மகோதரனும் ஓடி மறைந்து
போனபடியால், ராக்ஷசதூதர்கள் ஓடி, லங்
காதிபதியான ராவணனையடைந்து, நடந்த
காரியங்களைச் சொன்னார்கள். நீங்கள் மாத்தி
ரந் தப்பி வந்தீர்க ளாக்கும். நூறுவெள்ளஞ்
சேனையையும், அதைச்சேர்ந்த ரத கஜ துரக
பதாதிகளையும், ஒருவில்லையுடையவ னெவ்வள
வுசிக்கிரத்தி லெப்படிகொன்றுவிடுவான், மு
டியமாட்டாதே யென்று ராவணன் கேட்கக்
கொன்றைப்பூமாலையை யணிந்த ருத்திரமூர்
த்தியினுடைய அஸ்திரத்தினுல் முடிந்ததென்

றார்கள். அப்படியா! அப்போது முடியத்
தருமென்றான். ஸ்ரீராமன் யுத்தத்திற்கு வர
வில்லை, ஒருமலைமேற்போயிருக்கிறான். உன்
தம்பியாகிய விபீஷணன் அவர்கள்சாப்பிடக்
கந்தமூலபலாதிகள் கொண்டுவரப்போனான்.
எங்களாண்டவனே? நடந்தகாரிய மிருவாக்
கும் என்றார்கள். மகோதரன் எவ்விடத்தி
லிருக்கின்றானென்றான். அவன் ஆகாசத்தில்
மறைந்து நிற்கின்றானென்றார்கள். அப்படி
யாமுடிந்ததுநல்லஅழகாயிருக்கின்றதென்று
ராவணன் சிரித்தான். அப்போது ராவணபு
த்திரனான இந்திரஜித்து இதுதான் தகுந்த
காலமென்று ஒரு ஆலமரத்தி னிடத்திற்குப்
போனான். மூலயாகத்திற்குவேண்டிய கலப்
பைகளைக்கொண்டு அக்கிரமிகளான ராக்ஷச
மறையவர்கள் வந்தார்கள். பிறகு யாகஞ்செ
ய்ய யத்தனித்து, அம்பிருல் சமிதைகள்சே
ர்த்து அக்கினியில் தும்பைப்பூவும், காரெள்
ளுஞ் சொரிந்தார்கள். கறுத்த வெள்ளாட்டி
ன்கொம்பும், பல்லும், ரத்தமும், மாமிசமு
ம், வரிசையாகப் பெய்து, எண்ணெயால்
ஓமம் வளர்த்தார்கள். ஓமாக்கினியானது வ
லஞ்சுழித்துக்கொண்டு மேலெழும்பி நல்ல
வாசனையைவீசி, அநேக நல்லகுறிகளை ஒழு
ங்காயுண்டாக்கத் தங்கள்ஜாதி ஸ்வபாவமாய்த்
தோன்றுகின்ற கொடுமையுடனே நிறைந்து
நமக்கு நன்மைவிளையப் போகிறதென்று
பத்திமயங்கி மேலெழும்பி மாயையின் வல்
லமையால் ஆகாசத்திற் போய்ச் சுவர்க்கத்தி
லுள்ள தேவர்களுடைய பார்வையும், அவர்
களுடைய மனதும் அறியாதபடி வழுக்கு
நிலமான மேக ஜாலத்துக்குள் மறைந்தான்.
இவன் வந்தது முனீஸ்வரர்களும் அறியார்
கள். பொல்மையமான கிரகங்களும், நக்ஷத்
திரங்களும், அறியாதுகள். அந்தப்பிரகாரமா
க ஒளிந்து நின்றான். இந்திரஜித்து வந்ததை
மகோதரன் தெரிந்துகொண்டு, ஒரு சூது
செய்ய நினைத்து இந்திரனைப்போல வேஷங்
கொண்டு போய் மிகுந்த பலமுள்ள ஐராவ
தத்தின் மேலேறிக் கொண்டு ரிஷிகளையும்,
தேவர்களையும், சேர்த்துக் கொண்டு லக்ஷ்
மணருடன் சண்டைக்கு வந்தான். இவர்க
ளைப் பார்த்தவுடனே வானரர்கள், இவர்கள்
ராக்ஷசர்களுமல்லர்! மனிதருமல்லர்! குரங்
குகளுமல்லவே! இந்த லோகத்தில் வாழ்கின்
ற ஜாதியாருமொன்றுமல்லவே! இவர்கள் என்
ன ஜாதியார்! யுத்தத்திற்கு வந்திருக்கின்றார்
களென்று பயந்து ஓடிவிட்டார்கள். நான்கு
தந்தங்களையும், பார்ப்போம் [illegible]
முள்ளதுமான ஐராவத மென்னும் யானையி
ன்மே லேறிவந்தபடியா லவனிந்திரனாகவே
ண்டும், மற்றவர்களெல்லாம்தேவர்களாகும்,
மிச்சமானவர்கள் ரிஷிகள், இவர்க ளெல்லா
ம் சண்டைசெய்ய வேண்டு மென்று கோபி
த்து வருவதற்கு நாமென்ன பொல்லாங்கு
செய்தோ மென்று பயந்தார்கள். அப்போ
து சக்கரத்தையுஞ் சங்கையும் நீக்கிக் கைகளி
ல் வில்லையும், அம்பையுங் கொண்டு வல்ல
மையுடைய செந்தாமரை மலர்போன்ற தி
ருக்கண்க ளுள்ளவரான, ஸ்ரீராம மூர்த்திக்
குத் திருத்தம்பியான இளையபெருமாள் அநு
மானுடைய முகத்தைப்பார்த்து ஹே ஆஞ்
சநேயனே! ரிஷியீஸ்வரர்களும், தேவர்களு
ம், நம்மீது எதிர்த்துவரும்படி நாமென்ன
பொல்லாங்கு செய்தோம் சீக்கிரமாகச்சொ
ல்லக்கடவாயென்று சொல்லிக்கொண் டிரு
ந்தார். இப்படி யிருக்கிறசமயத்தில் லக்ஷ்
மணருடையதிருமேனியில் இந்திரஜித்து நா
ன்முகனுடைய அஸ்திரத்தைப் பிரயோகம்
பண்ணிவிட்டான். அதிலிருந்து அநேககோ
டிகோடியாகப் பாணங்கள்புறப்பட்டு மேரு
மலையின்மேல் குருவிக்கூட்டங்கள் மொய்த்
துக் கொண்டதுபோல வாயா லளவிட்டுச்
சொல்லக் கூடாதவைகளாய் லக்ஷ்மணர்
பேரில்வந்து பாய்ந்ததுகள். இப்படி கோடி
கோடி நூறாயிர பாணக் கூட்டங்கள் லக்ஷ்
மணர் மேனியை யெல்லாம் மூடிச் சுற்றிக்
கொள்ளவே வேறு ஒரு செய்கையுஞ் செய்
யத் தோற்றாமல் பொறி கலங்கி அறிவடங்க
குதிரையும், யானையும், அம்புதைத்தபோது
ஒடுங்குவதுபோல ஒடுங்கிவிட்டார். அத்தரு
ணத்தில் ஆஞ்சநேய ரிதென்ன இந்திரன்வந்
து இப்படிப்பட்ட செய்கையைச் செய்தா
ன். இனி தாமசமென்ன இவனேறிவந்த யா
னையுடன் வாரிப் பூமியிலறைகின்றேனென்று
எழுந்தமாத்திரமே அநுமானுடைய தேஹ
த்திலும், ஆயிரங் கோடி கோடி பாணங்கள்
பாய்ந்தமாத்திரத்தில்நினைவுஞ்செய்கையுமற
ந்து பூமியில்விழுந்தார். சுக்ரீவமஹாராஜ
ரும், ஒரு பொன்மலையானது சுற்றிலுமுருக்
கமலரைப் பூத்துக்கொண் டிருப்பதுபோல
ரத்தம்வடிய வேகத்துடனேபாணங்கள்அங்க
ங்குவந்துபாய, உருக்கின செம்பைப் போ
லச் சிவந்த கண்ணையுடையவராகிப் பூமியி
ல் விழுந்தார். அங்கதகுமாரரும், பதினாயிரம்
பாணங்கள் தைக்க இடியுண்ட ஆண் சிம்ஹத்
தைப்போலப் பூமியில் விழுந்தார். அதிக பு
கழ்பெற்ற சாம்பவரும், அநேக பாணங்கள்

வந்து மார்பையுந் தோளையுஞ் சல்லடைக்
கண்களாய்த்தொளைக்கப்பூமியில் சாய்ந்தார்.
நீலனும், ஆயிரங் கூரிய பாணங்கள் தேஹத்
தில் பாய்ந்து வருத்தப்படுத்தக் காலனுர் த
ரிசனஞ் செய்பவனுய்ப்போய்விட்டான். வி
ருஷபனும் சுவர்க்கமடைந்தான்.விஷேம்போ
ன்ற பாணத்தால் பனசனு மடிந்தான். அம்
புவடிவாய்வந்த யமனுல், குமுதனு மாண்டு
போனுன். சமுத்திரத்தை அணையிட்ட நள
னும் ஆயிர பாணத்தினுல் சோர்ந்து விழ்ந்
தான். வாலிக்குச் சமமான பலவந்தர்களான
மயிந்தனும், அவன் தம்பியு மிறந்துபோனு
ர்கள். யமனுக்குச் சமமான கவயனும் ஆகா
சம்போய்ச் சேர்ந்துவிட்டான். கேசரி யெ
ன்பவனும், வரிசை வரிசையாய்த் தைத்த
பாணங்களினுல், பூமியிற் சாய்ந்தான். மற்ற
வானர வீரர்க ளெல்லாரும், வடித்த கூரி
யபாண வருஷிங்களால், முழுதுந் தீர்ந்
தார்கள். குபுகு பென்று இரைச்சலிட்டுக்
கொண்டு புறப்பட்ட ரக்தப் பிரவாகம் ச
முத்திரத்துடனே பகைத்துக்கொண்டு எதி
ரேற ஒருபாணத்துக்கு ஆயிரங் குரங்காகப்
பிரம் ஹாஸ்திரம் அவரவர்களுடைய தே
ஹத்தில் பாணங்களைக்கொட்டி மறைக்க, அ
வைகளை நீக்குவதற்கு ஒரு அடைக்கலமும் கி
டையாமல் இடியையொத்த அந்தப் பாண
ங்களால் பூமியில் வலிய மூளைகளை யடித்த
துபோல வானரங்கள் மடிந்து போனதுக
ள். தேவஸ்திரீகளெல்லாமிதைக்கண்டு தங்கள்
நீலோற்பலம்போன்ற கண்களை மூடிக்கொ
ண்டு தலையை வளைத்து வியசனப்படப் பூ
மியிற் கிடக்கின்ற லக்ஷ்மணர் முதலானவர்
களை ரக்தங்கள் நாலா பக்கத்திலுஞ் சுற்றிக்
கொள்ளப் பவளக்காடுபடர்ந்த பாற்கடலைப்
போலிருந்தது.அந்தச் சேனைக்கடலிலிருந்த
இருப்பிப்படியிருக்க இறந்த வானரங்களு
டைய உயிர்களெல்லாம் ஆகாசத்திற்போய்ச்
சேர்ந்தன. தேவர்கள் புது விருந்தினரைக்கா
ண்பதுபோலக் கண்டு மிகுந்தகளிப்புடனே
அவர்களை உபசரித்து நீங்கள் மறுபடியும், பூ
லோகத்திற்குப் போங்க ளென்று உத்தரங்
கொடுத்து, நீங்கள் லோகசிருஷ்டி கர்த்தாவி
னுடைய அஸ்திரத்தினுல் உபசாரஞ்செய்
யப் பட்டீர்களே யல்லது அது உங்களைக்
கொல்லத்தக்க தல்ல, கோதண்டபாணியாகி
ய ஸ்ரீராம மூர்த்தியினுடைய அடியவர்களு
க்கடியவர்களும், பிறவிக்கடலிற் சம்பந்தப்
படுத்தாத பரமபதப் பிராப்தியை அடைவா
ர்களாக்கும். நீங்கள் நம்முடைய காரியத்தை
ச் செய்கிறதற்காகப் பூலோகத்திற்குப் போ
னீர்கள். உங்கள் பிராணங்களெல்லாம் எங்க
ளுடைய அமிசந்தான். தேகமாத்திரம் அவ
தாரானு குணமாக வானர ராணீர்கள். செந்
தாமரைக் கண்ணரான எம்பெருமானுக்காக
ரணக்களத்தில் மாண்டீர்கள். நீங்கள் எங்கள்
நாயகர்க ளாக்கு மென்று தேவர்க ளெல்லா
ஞ் சொன்னுர்கள்.

இப்படி இருக்க இந்திரஜித்து வானரர்க
ளுடனேலக்ஷ்மணன் மாண்டுபோனுன். ரா
மன் இப்பொழுது வராமற் போனுனென்று
சொல்லித் தன்னுடைய வெற்றிச் சங்கத்தை
வாயில்வைத் தூதிவிட்டுச் சீக்கிரமாய் ஓடிப்
போய் ராவணனைச்சேர்ந்து, யுத்தகளத்தில்
நடந்த சமாசாரத்தை யெல்லாம் விபரமா
கச் சொன்னுன். அதுகளை யெல்லாங்கேட்ட
ராவணன் அப்படியா?ராமன்இறக்கவில்லையா
யென்றான்.அதைக்கேட்டஇந்திரஜித்து ஐயா,
ராவணேஸ்வரா ! அவன் எங்கேயோ போ
யிருக்கின்று னில்லாவிட்டால் தம்பியாகிய
லக்ஷ்மணனை நான்கொல்லவும், சிறந்த அவ
னுடைய நண்பர்களைவதைக்கவும் சேனைகளை
யெல்லாம் அழிக்கவும் மறைந்துவிடுவானே?
அவன் மஹாவீரனுச்சேயென்றான். அதைக்
கேட்ட ராவணன் அப்பா ! அரும்புத்திர
னே ! நீசொன்னது யதார்த்தமே யென்று
சம்மதித்தான். பிறகு இந்திரஜித்துவும் தன்
அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான். ராவ
ணனுத்தரவினுல் மகோதரனும் போய்விட்
டான். இப்படி இருக்க, சர்வலோகேஸ்வர
னுன ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியும், ரணக்களத்
திற்குவந்து ஓரிடத்தில் நின்று இருளாயிருந்
தபடியினுலே விண்வீழ் கொள்ளி போ
லப் பிரகாசிக்கின்ற அக்கினியாஸ்திரத்தைப்
பிரயோகித்து இருட்பிழம்பை யெல்லாம்
கவளீகரிக்கும்படி நாசப்படுத்தி, வெறுவெ
ளியா யிருக்கின்ற ரணக்கள விசாலத்தைத்
திடுக்கென்று பார்த்துத் தமது திருவடித்தா
மரைகள் வருத்தமுறும்படி வேகமாயோடி
நான்குதிக்கிலும் முறைமுறையாகச்சென்று
பார்த்துத் தமது இரண்டு திருக்கரத்தாலும்
திருமுகத்தி லறைந்து ரக்தக்கண்ணீர்பொழி
ந்து களத்தில்நமைந்துவானரவீரர்கள்தனித்
தனிக் கிடக்கிறதைக்காண்கிறபோது முதலில்
சுக்கிரீவமஹாராஜனைக் கண்டு, செந்தாமரை
மலர்போன்ற கண்களில் தாரைதாரையாகக்
கண்ணீரொழுகும்படியாக வெகுநேரம் நி
ன்று பெருமூச்சுவிட்டு, அப்பா! சுக்கிரீவா?
உனக்கும் இப்படி ரணக்களத்தில் மாண்டு

கிடக்கிறாருமோ? என்று மனந்தளர்ந்து பக்கத்தில் அநுமானைப்பார்த்துவிட்டார். கடலைத்தாண்டிப்போய் அரக்கரையும், அசோகவனத்தையும் கலக்கச்செய்து, என்துக்கத்தைமாற்றி, நானிருக்க நீ எனக்குபகாரஞ் செய்தது தெரிக்குத்தானோ! ராக்ஷசனுடைய அற்பமான வில்லிலிருந்து புறப்பட்ட பாணங்கள் உன்னுடைய தேகத்தின்பலத்தைக் கடந்துவிட்டதா! என்று துக்கப்பட்டழுதார். அப்பா! வாயுகுமாரா? உன்விஷயமாகத் தேவர்கள் கொடுத்த வரங்களும், ரிஷிகள் கொடுத்த ஆசீர்வாதங்களும், பிறகு ஜானகிகொடுத்த சிரஞ்சீவிப்பட்டமும், பொய்த்துப்போய்விட்டதுகளோ! மகாவீர பிரதாபசாலியே? உனக்கு இந்த அற்பச் செய்கைவந்தது என்னுடைய பாவவினையா லல்லது வேறல்ல வாகும். இப்படிப்பட்ட கொடும்பாவியான என்னைப்போல யாரிருக்கிறார்கள். அற்பவிருத்தியமான ஈனராஜ்யத்தை அபேக்ஷித்து என்னபிரயோஜனத்தை யடைந்தேன். முதலில், பெற்ற தகப்பனைக் கொன்று அழிந்தேன். பிறகு ஜடாயுவையுங் கொன்றுவிட்டேன். அம்மட்டிலும்விடாமல் இவ்விடத்து இத்தனைபேர் வீரர்களையுங் கொன்றுவிட்டேன். கொடுந் தொழிலுக்கு இவ்வளவுதானென்று சொல்லத்தக்க ஒருவரம்பும் உண்டாகுமோ, ஐயா? விளைத்தி தமையனைக்கொன்று தம்பியாகிய சுக்கிரீவனுக்குவானராஜ பதவியைக்கொடுத்தது, எல்லாரையும் ஒருமிக்கச்சேர்த்துக் கொல்லுவதற்குத்தானோ? பொறுமையுடையவனாகிய உங்களையிப்படிப்பட்ட துன்பத்துக்குள்ளாக்கினேன். உடக்கமையச்செய்க நானோ பிறந்தேன். விருந்துக்கூட்டங்களுக்குப்போக மற்றொருவிருந்தினைச் சேர்த்துப்போக்க கடைக்கண்ணில் நெருப்பைக்கக்கிக்கொண்டிருக்கின்ற அந்தகனை யொக்கிற பாவியைக்கண்டு ஐயோ, அபுதங்களை விளைவிக்கின்ற பாவியானநான் பழியைப்பார்த்து அடைக்கலம் புகுந்தவர்களை ரக்ஷிக்கின்றதாகும் நன்று யிருக்கிறது நன்றியிருக்கிறது என்று கண்ணீர் விட்டார். தேகத்தில் பதிந்து கிடக்கின்ற அம்புகளுடைய கிரணக் கற்றைகளைப் பரப்பிக்கொண்டிருக்கின்ற ரத்த வெள்ளத்திற் பாப்பாசமைக்கின்ற பவழபொருந்திய துதிக்கையின் மீது சயனித்திருப்பது போல வானரக்கடலின் மத்தியில் துயில் கின்றவனைப்போற் கிடக்கின்ற தம்பியைக்கண்டு மனங்கொதித்து உயிர் சோர்ந்து முழுதும் புகைந்தார். நீலரத்தினம்போன்ற திருமேனியும் மனதைப் போல வருத்தித்தர்ம சொரூபியான ஸ்ரீராமர் தமது திருக்கண்களைக்கையால் மூடிக்கொண்டு மயங்கி பூமியில்வீழ்ந்து இடியுண்டசாய்ந்தமராமரத்திற்குச் சமமானார். ஒருநாழிகைவரையிலும், மூச்சுவிடாமலும்,உணர்வடையாமலும், தேஹத்தில் வியர்வுகாணாமலும், கண் விழியாமலும், தேவர்களுங் கண்டு தெளிவடைந்தாரோஇல்லையோவென் றஞ்சும்படி திருக்கைகளும், திருவடிகளும்,அசையாமலும் கருணையாற் பிறந்தவ ராகையால், உயிர்மாத்திரம் பிரியாம லிருந்தார். இப்படிவியசனப்படுகின்ற ஸ்ரீராம மூர்த்தியைத் தாங்குவாரொருவருமில்லை. இளைய பெருமாளைத் தழுவி யணைத்துக்கொண் டிருக்கின்ற கைகளைப் பிணிப்பவிழ்த்து வாங்குவாரு மொருவருமில்லை. சொல்லால் தேறுதலை சொல்லுவாருமில்லை. சிநேகர்களா யுள்ளவர்க ளெல்லாம் மாண்டுபோய் விட்டார்கள். ஆகையால் தனியான ஸ்ரீராமனை யார் துயரந்தீர்க்க வல்லவர்கள். கவந்தங்களில் கழுத்தில்லாமையால் தங்கள் நாயகனைக்காணாமல் தேடித் தேடித் திரிகின்ற செவந்த கண்களையுடைய ராக்ஷசிகளும், பிணங்களைக்கண்டு சந்தோஷங்கொண்டு திரிகின்ற பேய்க்கூட்டங்களையும், நரிகளுடைய பந்திகளும் அல்லாமல் வேறொருவரும் களத்திலே யில்லாமல் தாம்மாத்திரமே தனியாய் நின்றார். தேவலோக ஸ்திரீகளெல்லாம் தங்கள் வயிற்றைப் பிசைந்துகொண்டு, அழுகின்றகண்ணீரைச் சோனைமாரியைப்போலச் சொரிந்தார்கள். தேவர்களெல்லாருஞ் சோர்ந்தார்கள்.மற்ற அசரசரங்களும், இரக்கமுற்றன. இவைகளெல்லாம் ஞானநாயகரான ஸ்ரீராமருடைய திருமேனியேயாதலாலிப்படித் துக்கப்பட்டதுகள். மூலதாமரைப் புஷ்பத்தி லெழுந்தருளி யிருக்கின்ற சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்ஹதேவருக்கும், மூன்றுகண்களையுடைய சங்கரமூர்த்திக்கும்,ஸ்ரீராமரிடத் துள்ள அன்பால் திருமுகங் கருகி ஒளியிழந்து போகுமே யானால், மற்ற தேவர் களுக்குச் சம்ப வித்த துக்கத்தைச் சொல்லவேண்டிய தென்ன! ஸ்வாமிக்குப் பகையானவர்களும், பாவமும், அவரிடத்திலுள்ள பரிவால் அழுதுவிட்டதுகள். அப்

போது ஸ்ரீராமமூர்த்தியும், சுற்றுணர்வடை
ந்து சுவாசம்விட்டுத் திருக்கண்களை விழித்
துத் தமது திருத்தம்பியாரை யுற்றுப் பார்
த்து நம்முடைய தம்பி பரமபதம் அடைந்
தான். இனித்திரும்பமாட்டான் என்று மன
ம் புழுங்கி புண்ணிலே நெருப்பைக் கொ
ளுத்தினாற்போலத் துன்பமுற்றுப் புலம்பத்
தொடங்கினார்.

## கலி.

எந்தையிறந்தான் யானுமிருந்தே னுல
கெல்லாம், தந்தனெனென்றுங் கொள்கைத
விர்ந்தேன் றமியில்லேன், உய்ந்துமிருந்தாய்
நீயெனநின்றே னுனைகாணேன், வந்தனெ
னையா வந்தனெனையா வுயிர்வாழேன் ... (௧)

தாயோநீயே தந்தையுநீயே தவநீயே,
சேயோநீயே தம்பியுநீயே திருநீயே, போ
யோநின்று மென்னையிகந்தாய் புகழ்பா
ராய், நீயோயானு நின்னினுநெஞ்சம் வலி
யேனோ................................(௨)

ஊறுநின்ற புண்ணுடையாய்பா லுயிர்
காணேன், ஆறுநின்றே னுவிசுமந்தே னழிகி
ன்றேன், எறேயினீனு மூய்யினுமுய்வெ னி
ருகூறுப்க், கிறுநெஞ்சம் பெற்றெனனன்
றே கெடுவேனே... ...................... (௩)

பயிலுங்காலம் பத்தொடுநாலும் படர்
கானத், தயில்கின்றேனுக் காவனநல்கி யயி
லாதாய், வெயிலென்றுன்னுய் நின்றுதளர்ந்
தே மெலிவெய்தித், துயில்கின்றாயோ வின்
றிவுறக்கந் துறவாயோ.................. (௪)

அயிராநெஞ்சு மாவிபுமொன்றே யெ
னுமச்சொல், பயிராவேலைப் பாதகனேற்கு
ம் பரிவுண்டோ, செயிரோவில்லா வுன்னையி
ழந்துந் திரிகின்றேன், உயிரோநானோ யாரி
னியுன்னோ டுறவையா.......................(௫)

வேள்விச்சேகி வில்லுமிறுத்தோர் விட
மம்மா, வாழ்வித்தும்மென் றெண்ணினென்
முன்னே வருவித்தேன், சூழ்வித்தென்னைச்
சுற்றினரோடுஞ் சுடுவித்தேன், தாழ்வித்தே
னோ வித்தனைகேடுந் தருவித்தேன்...... (௬)

மண்மேல்வைத்த காதலின்மாதா முத
லோர்க்குப், புண்மேல்வைத்த தீயெனத்துன்
பம் புகுவித்தேன், பெண்மேல்வைத்த காத
லினிப்பே ருகள்பெற்றேன், என்மேல்வை
த்தே னென்புகழ்யானு மெனினியேனோ.(௭)

மாண்டாய்நீபோ யானுருபோது மு
யிர்வாழேன், ஆண்டானல்ல னுன்னைமந்தோ
பரதன்றான், பூண்டாரெல்லாம் பொன்றுவர்
துன்பம் பொறையாற்றார், வேண்டாவோ
தா னல்லறமஞ்சி மெலிவுற்றால்......... (௮)

அறந்தாய்தந்தை சுற்றமுமற்றும் மெ
னையல்லால், மறந்தாயென்று மெய்மறவா
தா யுடன்வந்து, பிறந்தாயென்னைப் பின்பு
தொடர்ந்தாய் பிரிவாற்றாய், இறந்தாயுன்னை
க் கண்டிருந்தே னெளியேனோ.........(௯)

சான்றோர்மாதைத் தக்கவரக்கன் சிறை
தட்ட, ஆன்றோர்சொல்லு நல்லறமன்றான்
வசமானால், மூன்றாய்நின்ற பேருலகொன்
றாய் முடியாவேல், தோன்றோவென் வில்வ
லிவீரத் தொழிலம்மா...................... (௧௦)

வேலைப்பள்ளக் குண்டகழிக்கும் விரா
தற்கும், காலிற்செல்லுங் காகமணிக்குங் கர
னுக்கும், மூலப்பொத்தல் செற்றமரத்தேழ்
முதலுக்கும், வாலிக்கும்மே யாயினவோ
வென் வலியம்மா........................ (௧௧)

இருந்தேனுனு மிந்திரசித்தே முதலாய,
பெருந்தேராளைக் கொன்றுபிழைக்கப் பெ
றுவேனோ, மருந்தேநீயே கொல்லுதியென்
னும் வலிகொண்டேன், பொருந்தேனுனிப்
பொய்ப்பிறவிக்கும் பொறையல்லேன்(௧௨)

மாதாவுந்தஞ் சுற்றமுதாடு மறையோ
ரும், எதாலேரோ வென்றுதளர்ந்தே யிறவா
தாத், தாதாய்காணச் சாலநினைந்தேன் றனை
காணப், போதாயையா பொன்முடியென்
னைப் புனைவிக்க ........................ (௧௩)

பாசமுமுற்றச் சுற்றியபோதும் பகை
யாலே, நாசமுமுற்ற போதுநடந்தே னு
டனல்லேன், நேசமுமற்றார் செய்வனசெய்
தே நிலைநின்றேன், தேசமுமற்றேன் கோந்
றநலத்தைத் தெரியாதோ...............(௧௪)

கொடுத்தேனன்றே விடணனுக்குந் த
லமானும்,முடித்தேர்செல்வம் யான்முடியா
தே முடிக்கின்றேன், படித்தேனன்றே பொய்
ம்மைதுடிக்குப் பழிபெற்றே, ஒடித்தேனன்
றே யென்புகழ்தானே புனைவுற்றேன். (௧௫)

## வசனம்.

எம்பிராவாகிய தசரதமஹாராஜாவிறந்தார் அப்போதே இறவாமலிருந்தேன், லோகமெல்லாவற்றையும் பரதனுக்குக் கொடுத்துவிட்டேன், இனிக்கொள்ளவேண்டியதையுந் தவிர்த்துப்போனேன், யான் தனிமையிருக்கமாட்டேன், நீ பிழைத்திருக்கிறாயே யென்றிருந்தேன், இப்போதெனக்குத் துணையாகவார்த்தை சொல்வாரொருவருமில்லை. அப்பா, லக்ஷ்மணா! வந்துவிட்டேன் வந்துவிட்டேன் இனி நானுயிருடன் வாழமாட்டேன், எனக்குத் தாயும் நீயே! தகப்பனும்நீயே! நான் செய்யுந் தவமும் நீயே! என்பிள்ளையும் நீயே! எனக்குத் தம்பியும் நீயே! என் ஐஸ்வரியமும் நீயே! அப்படியாயிருந்த நீ என்னை நீக்கிவிட்டுப் போய்விட்டாயே! புகழையும் நினைத்தாயில்லையே! நிமைத்திரமோ என்னைவிட்டு நீங்குகின்றவன், உன்னைவிட்டு நீங்கி நிற்க, உன்னைக்காட்டிலும் என்னெஞ்சு வலிமையுள்ளதோ? அப்பா தம்பீ! ரத்தம் ஊறுகின்ற புண்ணுடைய உன்னிடத்தில் உயிரைக்காணேன் இவ்வளவு சகிப்புடனே உயிரைப் பொறுத்துக்கொண்டு அழுகின்றேனே! அப்பா, புருஷசிம்ஹமே! நானின்னும் பிழைத்தாலும் பிழைத்திருப்பேன் அல்லவா? ஆ! கெடுவேன். இருபாதியாய்ப் பிளப்புறாத நெஞ்சையுடையவனாக இருக்கின்றேனல்லவா? ஆ! கெடுவேன். இந்தப்பதினாலுவருஷமாக விசாலித்திருக்கின்ற காட்டில் எனக்குண்ணத்தக்க கந்தமூல பலாதிகளைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு ஒன்றுமுண்ணாமல் ஸ்வாமிகாரியாநுகூல விருதநிஷ்டாபரனாயிருப்பவனே? எப்படிப்பட்ட காலத்திலும் வெயிலென்று லக்ஷியம்வையாமலிருந்த நீ இப்போது மனந்தளர்ந்து, தேஹங்களைத்து, நித்திரைசெய்கின்றாயே? இன்றைக்கிந்த நித்திரையைவிட் டெழுந்திருக்க மாட்டாயோ? நீனுந்தேஹமானமனதும், உயிரும், ஒன்றுமென்கிற சாஸ்திரங்கள் என்னிடத்தில் விருத்தியாகாத காலத்தில் பாதகனாகிய என்னிடத்திலும் அன்பண்டாகுமோ? வழுவிலா வடிவை செய்வேனென்ற பாரதந்திரஜ்ஞானத்தில் கொஞ்சமும் பிசகாத உன்னை இழந்தும் உயிருடனே நிற்கின்றேனே? இப்போது சுவதந்திர நிசுபமான உயிரோ! உனக்கு உறவாயிருக்கின்றது. நானே உனக்கு உறவாயிருக்கின்றேன் தம்பி லக்ஷ்மணா! ஜனகமஹாராஜாவின் யாகத்திற்குப்போய் ருத்திரனுடைய வில்லையுமொடித்துச் சீதையென்கிற ஸ்திரீமானது நமக்கு நல்வாழ்வையுண்டாக்குமென்று முன்னே நினைத்தேன். பிறகு காட்டிற்கு என்பின்னால்வரச்செய்தேன். இப்போது என் பந்துவர்க்கங்களுடனே அந்த ஸ்திரீத்தால் கடைப்பண்ணினேன், அது என்னை விட்டு நீங்கினபிறகாவது போகட்டுமென்று சும்மாவிருந்தேனா! இவ்வளவு பொல்லாங்கையுஞ் சம்பாதித்துக் கொண்டேன், பூமியின் மேலே வைத்த ஆசையினாலே என் மாதாமுதலானவர்களுக்கும் புண்மேல் தீயைவைத்தது போன்ற துன்பத்தை யுண்டாக்கினேன்-பெண்மேல் வைத்த ஆசையினாலே இந்தப் பெரிய லாபங்களையும் பெற்றுக்கொண்டேன். என் புகழை யாவரு மதிக்கும்படியாய்ச் செய்துவிட்டே னல்லவா? நானென்ன சாமானியனோ நீயோமாண்டுபோனாய் இனி யானோ ஒருபோதும் உயிருடனே வாழமாட்டேன். ஐயோ! பரதனும் இந்தப்பூமியை ஆளாமற் போனானே! அவனை யாசிரயித்திருக்கின்ற பேர்களெல்லாம் இந்தத் துன்பத்தைக்கேட்டு மாண்டு போவார்கள். நான் தர்ம்மத்துக்குப் பயந்து தாழ்ந்திருந்ததற்கு இவ்வளவு உண்டாக வேண்டாமா? தர்ம்மமும், தாயும், தந்தையும், பந்துக்களும், மற்ற ஐஸ்வரிய சுகசந்தோஷாதிகளும், அர்த்தமாக என்னையே குறியிட்டுக்கொண்டு அவைகளை வாசனையோடு மறந்து விட்டவனே! சத்தியத்தில் கொஞ்சமேனும் பிறழாதவனே! எனக்குத் தம்பியாகப் பிறந்து என்னையேபின்தொடர்ந்து என்னைப் பிரியச் சஹியாதவனே, இப்படிப்பட்ட நீ இறந்துபோக உன்னைப்பார்த்து மென்பிராணனோடிருக்கின்றேனே, நானென்ன லகுவானவனா? நடுநிலைமையுள்ள ஒப்பற்றஸ்திரீயை இந்தராக்ஷசன் சிறையிட்டுத் தடுக்கவும், பெரியோர்களுடைய நீதிவாக்கியங்களும், தர்ம்மதேவதையும், அவனுக்கு வசப்பட்டுப் போகுமானால், இந்த மூன்றுலோகங்களும் ஒருமிக்க அழியவேண்டும், அப்படி யழியா விட்டால், என் கோதண்டத்தின் வீரப்பிரதாபம் வெளிப்படாமல் போய் விடுமோ, இந்தச் சமுத்திரமாகிய அகழ்ப் பள்ளத்திற்கும், விராதனுக்கும், காற்றைப் போல ஓடின காகாசுரனுடைய கண்மணிக்கும், கரனுக்கும், பாதாள தவாரத்தை வேரால் அடர்த்திய எழுமாரத்திற்கும், வாலிக்கும், மாத்திரமா என் வில் வல்லமை செல்லுமது. ஐயோ! நானப்போதே யிருந்தேனானால், இந்திரஜித்து மு

தலான பெருந்தேர் வீரர்களைக்கொன்று பிழைக்க விடுவேனோ? நீ சொல்லுகிறேனென்று சொல்லக் கேட்ட படியிருந்தேனே, அப்பா! என் பிராணநாதா மருந்தே சொல்லக் கடவாயென்று மனத்திடங் கொண்டேன் உன்னோடு பொய்யாகப்பிறந்தேனே பிறந்ததாகவுடன்படவு மாட்டேன் - நான் உடற்பாரத்துக்கும் தகுந்தவனல்ல, நம்முடைய தாய்மார்களும், பந்துக்களும், அயோத்தியா நாடும், நம்மை ஆஸ்ரயித் திருந்த ப்ராமஹணர்களும், நம்மை என்ன மானார்களோ என்று துக்கமுற்று அழிந்து போகிறவர்களை அப்படி அழிய வொட்டாமல் அவர்களைப் போய்க் காணவேண்டுமென்று என்னப்பனே லக்ஷ்மணா? நினைத்துக்கொண்டிருக்கின்றேன். நாம்போய் இந்த அயோத்தியா நாட்டை ஆளலாம் என்னைப் பொன்முடி சூட்டப் புறப்பட்டு வரக்கடவாயையா - அப்பா? உன்னை நாகபாசஞ் சூழ்ந்து கட்டின போதும், சத்துருக்களாலே நாசமுற்றபோதும், நானுன்னுடனே கூட நில்லாமல் அப்புறம் போய் விட்டேனே! அந்தப் பகையாளிகளைப்போலவே நானுஞ் செய்துநிலைத்து நிற்கின்றேன் இந்தத்தேசத்திலுள்ளவர்களெல்லாம்என் வெற்றிப் பிரதாபத்தை ஆலோசிக்க மாட்டார்களா? விபீஷிணாழ்வானுக்கு லங்காபட்டணத்தை யாளும்படியாக முடிசூட்டி அங்குள்ள வாழ்வெல்லாம் அவனடையும் படியாக அன்று வரங்கொடுத்தேனே, அந்த வரத்தின்படி முடியாமல் இதோ நான் முடிந்து போகப் போகின்றேனே? நான் பொய்யை யல்லவோ சொன்னேன் - வாக்குப் பொய்யாத சூரிய மரபிற்கும் ஒருபழியைச் சம்பாதித்துக்கொண்டேனே? உணர்வில்லாத நான் என்புகழை நானேகெடுத்துக்கொண்டேனல்லவா? என்று இவ்விதமாகச் சொல்லிக்கொண்டுஏக்கமுற்று அழுது பெருமூச்சுவிட்டு நடுவிற்போய்விட்டேனே யென்று அறிவுடனே இந்திரியங்களெல்லாஞ் சிறை படும்படி இறந்து விடுவேனென்று சொல்லித் தம்பியை ஆசையுடனே கட்டித்தழுவிக்கொண்டு ஒன்றும்ஆலோசியாமல் தன்னை மறந்து மூர்ச்சையாய் விட்டார். இப்படி மானுஷிய சேஷ்டிதராகிய ஸ்ரீராம மூர்த்தியானவர் மூர்ச்சை யடைந்ததைத் தேவர்கள் பார்த்துத் தங்கள் கண்களில் அறைந்து கொண்டு அழுது அதிக துன்பமுற்று இனியெவ்வாறு முடியப்போகிறதோ வென்று ருஷி குலிந் தி ஒருவராலும்நிச்சயித்தறிகிறதற்கு எட்டாத பெரியவனே! எங்கள் பொருட்டல்லவோ இப்படி வருத்தப் படுகிறீர். உனக்குந் துன்பமுமுண்டோ என்று அதிக பரிவுடனே சொல்லத் தொடங்கினார்கள்.

## கவி.

உன்னையுள்ளபடியறியே ... ... *
முலகையுள்ளதிறனறியேம் ... *
பின்னையறியே முன்னறியே ... *
மிடையுமறியேம்பிறவாமல் ... *
நின்னைவணங்கிநீவருத்த ... ... *
நெறியினிற்குமதுவல்லால் ... *
என்னையடியேஞ்செயற்பால ... *
தின்பதுன்பமில்லோனே ... (௧)

அரக்கர்குலத்தையொறுத்தெம்மை ... *
யடிமையாக்கியருளாயென் ... *
திரக்கவெய்மேற்கருணையினு ... *
விசையாவுருவமினைவெய்திப் ... *
புரக்குமன்னர்குடிப்பிறந்து ... *
போந்தாயறத்தைப்புலாதீர்ப்பான் *
கரக்கநின்றேநெடுமாய ... ... *
மெமக்குங்காட்டக்கடவாயோ. (௨)

ஈன்றெம்மிடுக்கண்டுடைத்தளிப்பா ... *
னிரங்கியரசிற்பிறந்தாய் ... *
மூன்றுமுலகந்துயர்தீர்த்தி ... *
யென்னுமாசைமுயல்கின்றேம் ... *
ஏன்றுமறந்தோமவனல்லன் ... *
மனிசனென்றேயிதுமாயம் ... *
போன்றதில்லையாளுடையாய் ... *
பொய்யும்புகலப்புக்காயோ ... (௩)

அண்டம்பலவுமனைத்துயிரு ... *
மகத்தும்புறத்துமுளவாக்கி ... *
உண்டுமுமிழ்ந்துமளந்திடந்து ... *
முள்ளும்புறத்துமுளையாகிக் ...*
கொண்டுசிலம்பிதன்வாயி ... *
னூலாலமையக்கூடியற்றிப் ... *
பண்டுமின்றுமமைக்கின்ற... ... *
படியையொருவாப்பரமேட்டி. (௪)

துன்பவிளையாட்டிதுவேயு ... *
முன்னைத்துன்பந்தொடர்வின்மை...*
இன்பவிளையாட்டாமெனினு ... *
மறியாதொருத்திடருற்றால் ... *
அன்புவிளையுமருள்விளையு ... ... *
மறிவுவிளையுமவையெல்லாம் ... *
முன்புபின்புநடுவில்லாய் ... ... *
முடித்தாலன்றிமுடியாவால். ... (௫)

களுக்குண்டாகிய துன்பம் ஒழியாமல் வருத்தப் படுகிறோம், ராமா நுஜருக்குத் துணையாயெழுந்தருளின ஸ்வாமி! தேவரீர் இந்த மாயத்தை நீக்கி எங்களுக்கு அநிலவக் கிருபை செய்ய மாட்டீரோ-என்று இப்படிப் பலவாறுகச் சொல்லிப் பிரஹ்ம ருத்திரேந்திராதி இமையா நாட்டமுடைய தேவர்களெல்லாம் துக்கப் பட்டார்கள். தாம் பூர்வ தீர்மானத் திருவுள்ளத்தின்படி துன்பத்தை யடையத்தக்க மனுஷிய தாரத்திற் கிசைவாக அம்பின் பெருக்கத்தின் பொருட்டு ஸ்வாமியும், மரண மூர்ச்சையாய் விட்டார். அற்பர்களான ராக்ஷசத் தூதர்கள் ராவணனிடத்திற்கு ஓட்டமாய் ஓடிநின்றார்கள். ராவண னிவர்களைப்பார்த்து எங்கே வந்தீர்கள் தூதர்களே யென்று கேட்க, அப்போது ராக்ஷசதூதர்கள் ஐயா, பிரதாப லங்கேஸ்வரா! பகைத்துச்செய்கின்ற போர்க்களத்தில், உன்னுடையகுமாரன் இந்திரஜித்துவினுடைய பெரும்பாணங்களால் வானரர்களும், வானர வீரர்களும், பூமியில் விழுந்து மடிய, ஸ்ரீராமனுக்குத் தம்பியாக வந்தவனு மிறக்க அந்தத்துக்கத்தைக்கண்டு அதிகவியசன மடைந்துஅந்தஸ்ரீராமனுமடிந்துபோய் விட்டான். உன் பகை இன்றோடு முடிந்து விட்டதையா என்று சொன்னார்கள்.

பிரஹ்மாஸ்திரப்படலம்

முற்றிற்று.

## சானகிகளன்காண்படலம்.

துர்ம்மார்க்க சீலனான ராவணன் இந்த சமாசாரத்தைக் கேட்டு, தூதர்கள் பொய் சொல்லமாட்டார்க ளென்ற நம்பிக்கையால் பொங்கமாய் விளைந்த சந்தோஷ சித்தனாகி, அவர்களுக்கு அநேக நிதிகள் ஆசை நீங்கும் படியாகக்கொடுத்து, நமக்கு ஜெயமுண்டாயிற்றென்று நகரமுழுதுக்குந் தெரியும்படியாகவும், எண்ணெயிட்டு மூழ்கும்படியாகவும் சொல்லி, யானைமேல் முரசறையச்செய்யுங்களென்று நியமித்தான். அந்தப் பிரகாரமாகவே அவர்கள் நடப்பிக்க, மறுபடியும் ராவணன் மருத்தனென்கின்ற ராக்ஷசனை யழைத்து, அடா மருத்தனே! நீ சீக்கிரமாயோடி ரணக்களத்தில் மடிந்து கிடக்கின்ற ராக்ஷச பிரேதங்கள் எல்லாவற்றையும் பொறுக்கி எடுத்துக் கடலி லெறிந்துவிடு, இந்தக் காரியம்உன்மனததித்ததேயல்லாமல்வேறொருவரறிந்தால் உன்தலையை வெட்டிவிடுவேன். முதலில் இதன் காரியத்தைச் செய்யக்கடவாயென்று அனுப்ப, அவன்போய் ராக்ஷசர்களுடைய உடல்களையெல்லாம் எடுத்துக் கடலில் எறிந்துவிட்டான். பிறகு சீதாபிராட்டியாரைப்புஷ்பகவிமானத்திலேற்றிக்கொண்டு போய் மனிதருக்கும், வானரர்களுக்கும், சம்பவித்த செய்கைகளெல்லாம் காட்டுங்கள் அப்படி தனது சுயக்கண்களால்பார்த்தாலல்லாமல் தன்மனதில் சந்தேஹம் நீங்கமாட்டாது, கொண்டுபோங்க ளென்று நியமிக்க, ராக்ஷசஸ்திரீகளெல்லாம் கூட ஆரவாரித்துக் கொண்டு வரும்படியாகச் சீதாபிராட்டியாரைப் பெரும்போர்க்களத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அப்போது ஸ்ரீராமமூர்த்தியின் திருமேனியையேயல்லாமல்வேறொருவரையும்பாராத சீதாபிராட்டியார் ரணக்களத்தைத் தமதுதிருக்கண்களால்கண்டார். விஷபானம் பண்ணினவர்களைப்போலத் தேகமும், அறிவும், சுவாசமும், சோர்ந்து தாமரைப்புஷ்பமானது அக்கினியில்வீழ்ந்தபோது எப்படிப் போய்விடுமோ? அப்படியே துன்பமடைந்து சகிக்கமாட்டாதவராகிவிட்டார். பிராட்டியார் அடைந்த பெருந்துக்கமானது லோகத்தி லெல்லாவற்றையுங்காட்டிலும், அதிகமாகும் அல்லவோ?

### கவி.

மங்கையழுதும்வானாட்டு ... ...*
மயில்களழுதார்மழவிடையோன் *
பங்கிலுறையுங்குயிலழுதாள் ... *
பதுமத்திருந்தமாதழுதாள் ... *
கங்கையழுதாளுமடந்தை ... ... *
யழுதாள்கமலத்தடங்கண்ணன் ...*
தங்கையழுதாளிரங்காத ... ... *
வரக்கிமாருந்தாமழுதார் ... ...(க)

நினைப்புமுயிர்ப்பும்நீத்தாளை ... *
நீராற்றெளித்துநெடும்பொழுதின் ...*
இனத்தினரக்கர்மடவார்க ... ... *
ளெடுத்தாருயிர்வந்தேங்கினாள் ...*
கனத்திநிறத்தான்றனைப்பெயர்த்துங் *
கண்டாள்கயலைக்கமலத்தால் ... *
சினத்திநிலைப்பாளெனக்கண்ணைச் ...*
சிதையக்கையாம்மோதினாள் ... (உ)

அடித்தாண்முலைமேல்வயிறலைத்தா ...*
ளழுதாடொழுதாளனல்விழுந்த *
கொடித்தானென்னமெய்சுருண்டாள் ... *
கொதித்தாள்பதைத்தாள் குலைவுற்றாள் *

திருக்கன்னங்களைத் திருக்கரங்களால் அறைந்துகொண்டும், ஸ்தனங்களின் மீது அடித்துக்கொண்டும், வயிற்றைப் பிசைந்தும், அழுது ஸ்வாமியைத் தொழுது, அக்கினியில் விழுந்த பூங்கொடியைப்போல, உடல் குழைந்து, மனம்புழுங்கிப் பதைத்து, குலைந்து நடுநடுங்கி, மீனைப்போல மயங்கிச் சோர்ந்து சுழன்று துள்ளி அதிக வருத்தமுற்று உயிர் வாடி கைகால்களை உதைத்துதறினார். அந்தப் புஷ்பக விமானத்தின்மீது இடியொன்று விழுந்தார். கிடுகிடுவென்று புரண்டார். தேஹமெல்லாம் வெயர்த்தார்.மெய்மறந்தார். வெதும்பினார். மறுபடியு மெழுந்தார். உட்கார்ந்தார். தாமரை மலர்போன்ற கைகளை நெரித்துக் கொண்டார். சிரித்தார். அழுதார் ஓ! கொழுநனேயென்றார். அயோத்திநகரத்துள்ளவர்களுடைய கோமானே யென்றார். சுவர்க்கமத்திய பாதாள வாசிகளெல்லாம் வணங்குந் திருவடித் தாமரைகளை யுடைய ஆண்டவனே யென்றார். மூர்ச்சையானார். ஒட்டினை சொல்லிக் கொண்டு அழத் தொடங்கினார். உன்னிடத்திலே உறுதியான காதல்கொண்டிருந்தாரோ வேறோரிடத்தில் சயனிக்க மாட்டாரோ ஐயோ! பாவி சீதையே இப்படி அநந்ய ராகமாயிருந்த நீ இப்போது பாபகிருத்திய தேகங்களுக்கு இயல்பாய் நடத்திக்கொண்டிருக்கின்றவர்களாகிய ராக்ஷசர்கள்வசத்திலோ சேர்ந்து விட்டாய் ஐயோ! தர்ம்மதேவதையே நீயுங் கொடுமைசெய்ய ஏற்பட்டையே இதுதானோ உன்னை நான்நம்பியிருந்த எனக்குச்செய்த கிருபை பெரியோர்களுடைய வாக்கியத்தையும், வேதநியமத்தையுமே யல்லாமல் வேறுகதியை உடையவர்களல்லாத எங்களையோ துன்பப்படுத்த வந்தாய் விதியே சத்தியமா யினி உன்னைநான் நம்பமாட்டேன் நம்பமாட்டேன் நீ கொடுமையைக் கொண்டிருக்கின்றாய், அப்படிக் கில்லாமல் எங்கள்மனதைச் சோதிக்க விளையாடுகின்றாயோ, ஐயோ! யமதர்ம்மராஜனே, அதிக பாபிஷ்டியான நானித்தப் பதங்குறையைப்பார்த்துச் சகிக்க மாட்டேன். என்னுயிரைக் கொண்டுபோ? உனக்கு இது முறையாகுமா! முறையாகுமா! அடியேனுடைய பிராணாதாரமே! ஓ கிருபாமூர்த்தியே! விடியாத இருளில் என்னை உட்படுத்தி விட்டீரோ? அடியேன் மிகுந்த ஆசையுடனே இதுவரையிலு மென் பிராணனை விடாமல் காத்திருந்தது. இப்போது தேவரீர் உடைத்தாயிருக்கின்ற புண்ணான திருமேனியை ரணக்களத்தில் வந்து சேரும்படியாகத் தானோ! பூலோகத்தவர்களுடைய பிராணஸ்தானமா யிருக்கின்றவரே! சுவர்க்கலோக வாசிகளுக்கும் சக்தியா யிருக்கின்றவரே! அடியேனுடைய நேத்திரஸ்தானமானவரே!தேவாமுதமானவரே! கருணாமூர்த்தியே! மிதிலாபுரியை அடைந்து அக்கினி சாக்ஷியாகப் பாவியாகிய அடியேனுடைய கையைத் தேவரீர் பற்றினது தேவரீருடைய பிராணனுக் கிப்படிப்பட்ட பொல்லாங்கு வரத்தானோ? தாமரைப்புஷ்பத்தில் வசிக்கின்ற ஜெய லக்ஷ்மீ நாயகரே,வேதப்ரதிபாத்திய வஸ்துவே, தேவரீருடைய மாதாவாகிய கௌசல்யா தேவியானவர் இனி பிழைக்கப்போகிறதில்லை. அதுபோலவே இளையவர்களு முயிர்வாழமாட்டார்கள். உன்னபடி இப்படிப்பட்ட செய்கைகளை யநுபவிக்க வேண்டுமென்று கொடுமையையுடையவளாகிய கைகேசியினுடைய எண்ண மிருந்ததோ! மதத்தயானைக் கொப்பாகிய ஸ்வாமி! அந்தக் கைகேசி உம்மை நகராளுகையை விட்டுவிடென்ற மாத்திரமே, பிரதி உத்தரஞ் சொல்லாமல் மான்கள் முதலான மிருகங்களெல்லாம் பற்றி யெரியும்படியான காட்டிலேவந்து உம்மோடு எதிர்த்துவந்த கவந்தன் முதலானவர்களைக் கொன்று ஜெயம் பெற்ற ஸ்வாமி! அடியேனுக்கு எள்ளளவும் அன்பில்லாமல் போய்விட்டதே! காட்டினிடத்தில் வந்த வஞ்சமுள்ளமானைப்பார்த்து, என் பிராணபதமான நாயகரே! இன்றைய தினம் இந்தமானைப்பிடித்து எனக்குத்தாரும், இது மற்றவர்கள் வளர்க்கிறமானை ஒத்ததன்று. ஆதலால் அபூர்வமாகிய இந்தமானை எனக்குத் தாருமென்று வருத்தத்தோடு தேவருடைய அடியாளாகிய நான் பிடிவாதஞ் செய்து நின்றது இந்த உயுத்தகளத்தில் உம்மைக் கொலையுண்ணச் செய்வதாகிய நிமையைக் குறித்துத்தானோ? ஐயா, அதிக புத்திமானான இளையபெருமாளே! நீர் ஊழ்வினையாலே, நடக்கிறதற்கு யோக்கியமில்லாத காட்டுவழியில் எங்களுடனே வந்த நாளையில் உமது தாயார் சுமித்திராதேவியார் அப்பா குமாரனே? உன் தமையனுக்கு ஏதேனு மிக்கட்டு நேரிடுமேயானால், உன் அண்ணனுக்கு முன்னாக உன் பிராணனை விட்டுவிடென்று ஆஞ்ஞாபித்தாரோ? யாதொருவாக்கியப்படி அந்தக் கிரமத்தில் நின்று முன்னே மாண்டு போனீரோ! உம்முடைய பிராதாவாகிய பெருமானுக்கு நித்திராதல்பத்தினபொருட்டுப் புஷ்பங்களும், தளிர்களுங் கொண்டு வந்து

கொடுப்பீரோ அப்படிப்பட்ட நீர் சத்துருக்களுடைய கூர்மையான பாணங்களிலுமேலணையாகிய படுக்கையின் மீது சயனித்துக் கொண்டீரோ! ஓ சக்கிரவர்த்தி திருக்குமாரரே நெய்சொரிந்து வளர்க்கத்தக்க யாகங்களை அநேகமாகச் செய்து நிறை வயல்கள் சூழ்ந்து நிறைந்திருக்கின்ற அயோத்தியா நாட்டை ரக்ஷிக்கும் படியான நீர் அடியேனுடைய மேனியைத்தொட்ட படியினாலே வேதமாரிகளுடைய ஜோதிஷிலமையும் பொய்யாய் விட்டதுகள். என்று துக்கப்பட்டு கூர்மையான வாளாயுதத்திலும், பிளவுண்ணமாட்டாத மனதை யுடையவளாக அழுகின்றேன். இனி நான் என் துக்கத்தை ஆற்றிக்கொள்ளும்படி ஸ்வாமியின் திருமேனியின்மீது விழப் போகின்றே னென்று புறப்பட்ட சீதாபிராட்டியாரைத் திரிசடையானவர் தடுத்தப் பக்கத்தில் சூழ்ந்து நிற்கின்ற வக்கிரதந்தங்களையுடையவர்களான ராக்ஷசஸ்திரீகள் அயர்ந்திருக்கின்ற சமயம்பார்த்துச் சித்திரப் பிரதிமைபோன்ற சீதாபிராட்டியாரை வாரியெடுத்துக் கட்டிச்சேர்த்துப் பிடித்துக் கொண்டிருக்கின் றவளைப்போலப் பிராட்டியாருடைய திருச்செவியைக் கிட்டி ராவணன் முன் மோசமாக மாயமானை அனுப்பின விதத்தையும், மாயாஜனகனை யுண்டாக்கினதையும் இந்திரஜித்து மறைந்துபோய்நாகபாசத்தை விட்டு கட்டினதையும், கட்டவிழ்ந்துபோன தன்மையையும், அம்மா ஜானகிபிராட்டியே! நீ ஆலோசனைசெய்து நினையாமலும், துர்ம்மார்க்கர்களான இந்த ராக்ஷசர்கள்-செய்துவருகின்ற பெரு மாயங்களை யெல்லாம், தெரியாமலும் வீணிலே பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ளும்படி நினைக்கலாகுமா? அம்மா-அடியேன் தேவரீரிடத்தில் விண்ணப்பம் பண்ணிக்கொண்ட கனவுகளையும், தேவரீர் கண்ட சகுனங்களையும், உம்முடைய கற்பையும், தண்டாயுதங்களும், வாளா யுதங்களும், உடையவர்களாயிருக்கின்ற ராக்ஷசர்களுடைய பாப கிருத்தியங்களையும், தர்ம்மஸ்தாபகரும், தேவதேவோத்தமருமான ஸ்ரீரகுநந்தனருடைய சௌரியபிரதாபத்தையும்,நீர்மறந்துவிடலாமோ! அம்மாதம்முடைய ஸ்வாமிக்கு இந்தச்சண்டாளர்களாலேமரணமுண்டாகுமோ? அம்மா சக்கரதரரானஇந்த ஸ்வாமியினுடைய திருமேனியில் ஒருபாணமாவதுபட்டுப் புண்ணுண்டான திருப்பதைத் தேவரீர் காணவில்லையோ? இளைய பெருமானுடைய திருமுகமண்டலமானது இன்னமும் பிரளயகாலசூரிய பிம்பத்தைப் போலப் பிரகாசிக்கின்றபடியால் அவருடைய பிராணனுக் கெனய்வந்ததென்று திருவுள்ள மயங்கவேண்டாமம்மா? யாகஜநிலதையான சீதாபிராட்டியாரே! ஸ்ரீராமமூர்த்தியானவர் மரணமா யிருப்பாரேயானால் இந்தப்பதினாலுலோகமுந் தீய்ந்துபோயிருக்கும். அதுவுமல்லாமல் சூரியனும் திசைமாறித் தெற்குவடக்காய் நடப்பான். தெய்வம் பொய்த்துவிடும். பிரஹ்மாவும் அவன்சிருஷ்டி உயிர்களுமெல்லாம் மாண்டு போய்விடும். அவைகளெல்லா மிருக்கின்றபடியால் ஸ்ரீராமலக்ஷ்மணர்களும் ஜீவந்தர்களாகவே யிருக்கின்றார்கள். தர்ம்ம தேவதையும் இருக்கின்றதம்மா, அம்மா தேவரீர் வரமாக அருளிய சிரஞ்சீவிப்பட்ட வாயுபுத்திரராகிய ஆஞ்சநேயருக்கு மரணமில்லை யல்லவா? அவருடைய பிராணனுக் கேதேனும் சலன முண்டானால் தேவரீருடைய கற்புநிலைக்கு மாறுபா டுண்டாகும் அல்லவா? நன்மை சிறப்புமு திருக்குமோ அம்மா, இவர்கள் மூர்ச்சையாகி யிருக்கின்றார்கள். அதுபிரஹ்மாஸ்திரத்தின் செய்கையாகுமம்மா, அது இதோ நீங்கிவிடப்போகின்றது. தேவர்களுடைய எண்ணமுந் தவறிப்போகுமோ! தேவர்க ளெல்லாம் தங்கள் சொர்ணமயகரகமலங்களைச் சிரசின்மேற்கூப்பிக்கொண்டு திருமூர்த்திகளைக் கண்டா லெப்படிப் பயபக்தி சிரத்தை யுடனே நிற்பார்களோ, அப்படியே இளைய பெருமாளையும் ஸ்வாமியையும் கண்டு தோத்திரஞ்செய்தார்கள். மறந்துவிடவில்லை அதை யடியேன் கண்ணாரக் கண்டேனம்மா, நீர் பயப்பட வேண்டாம். ஒரு சிறுகிணற்றில் கடல்நீ ரெல்லாம் அடங்கிவிடுமோ, அதுபோலிந்த அற்பர்களிடத்தில் இந்தத்திவ்யபுருஷர்கள் அடங்கிவிடுவார்களோ, அம்மா இன்னுமொரு திருஷ்டாந்தஞ்சொல்லுகின்றேன். மங்கலியமில்லாதவர்களையும், உயிரில்லாதவர்களையும், இந்ததேவ விமானம் பொறுக்க மாட்டாதம்மா, இந்தத் திருஷ்டாந்தத்தினாலே தேவரீர் துக்கப்படாம லிருக்க வேண்டுமம்மா, என்று திரிசடை சொன்ன வார்த்தையைக்கேட்டு மூன் சந்தேஹித்தவளைப் போல அவதார யியல்பாயிருந்த சீதா பிராட்டியார் கொஞ்சஞ் சோகம் நீங்கி உயிர்கொண்டு திரிசடையைப் பார்த்து அம்மாவிபீஷணருடைய புத்திரியே நீ இது வரையிலுஞ் சொன்னவைகளெல்லாம் ஒன்றுந் தவறாமல் சித்தித்ததை அநுபவமா யறிந்தபடியினாலே உன்னையே

எனக்கு ஆதார தெய்வமாகக்கொண்டு இந்த வைக்காலம் பிழைத்திருந்தேன். அப்படியே இன்றும் இன்றைய ராத்திரி வரையிலு மிருக்கின்றேனம்மாதிரிசடையே,நானெப்போது பெருமானைப் பிரிந்தேனோ, அன்றைக்கே மரணமுண்டாய் விட்டது. என்னுடைய வெட்கமெல்லாமும் நீங்கிவிட்டேன். இல்லாளுக்குரிய நன்மைகளையும் ஸ்திரீகளணிந்திருக்கத்தக்க ஆபரணங்களையும், அன்றைக்கே நீக்கிவிட்டேன். ஸ்ரீகோதண்டபாணியும் நீலமேகவண்ணருமான, என்னுடைய பிராணநாயகரை மறுபடியும் பார்க்கலாமென்ற ஆசையானது தடுத்தபடியினாலே என்னுயிரை இத்தனைநாள் வைத்திருந்தேன். துர்ப்பலமான இந்தத்தேஹத்தை நீக்கிவிடுகிறது எனக்கொரு லக்ஷியமாஎன்று தாமரசபுஷ்பத்தைநீக்கிமிதிலையில்வந் தவதரித்த ஸீதாபிராட்டியார் சொன்னார். அப்படி ஸ்ரீராம ருடைய திருமேனியை நோக்கிக்கொண் டிருக்கின்ற திருக்கண்களையுடைய ஜானகி பிராட்டியை ராக்ஷச ஸ்திரீகளெல்லா மிரண்டு பக்கத்திலும் நின்று இரண்டுகைகளையும் பிடித்துக் கொண்டு புஷ்பக விமானத்தைச்செலுத்தி எதார்த்தமான பிராணனை இந்த லோகத்தில் விட்டுவிட்டுப்பலாத்காரமாய் விதியைக்கடந்து பொய்யான உடலை ஆகாச மார்க்கமாகக்கொண்டு போகின்ற யமதூதர்களைப்போல அசோக வனத்திற்குப்போனார்கள்.

சானகிகளன்காண்படலம்
முற்றிற்று.

---

## மருத்துப்படலம்.

---

ஸீதாபிராட்டியார் போய்விட்ட பிறகு ஸ்ரீராமமூர்த்தி நியமித்தபடிக் கந்தமூல பலாதிகளைக் கொண்டுவந்த லங்காதி பதியான விபீஷிணாழ்வான் அந்த ஆகாரங்களைப் பர்ணசாலையில் வைத்துப் போட்டுத் தாம் ரணக்களத்தில்வந்து சேர்ந்து இந்த லோகங்களையெல்லாஞ் சிருஷ்டிக்கும் படியாய்ச்செய்த பிரஹ்மாவினுடைய சாபம்பட்டுமோய்ந்தவர்களைப்போல யுத்தஞ்செய்து சோர்ந்திருந்த வானர வீரரெல்லாம் மாண்டுகிடக்கிறதைக்கண்டு விஷத்தைப் பானம் பண்ணினவரைப்போலப் பித்துக்கொண்டுமயங்கி நடந்தவிதமொன்றும் அறியாமல், கண்கலங்கி மனங் கொதித்து மெய்யுளைவடைந்து பெருமூச்சுவிட்டு ஆவியுண்டோ இல்லையோ என்னும்படியாக மூர்ச்சையாகியிருந்திருக்கின்ற பேய்க்கூட்டங்களும், நாய்களும்,நரிகளும், தாரமாய் ஓடிவிடும் படியாகச் சமீபித்து வந்து இளைய பெருமாளைக் கட்டித்தழுவினபடியே விழுந்துகிடக்கின்ற ஸ்ரீராம மூர்த்தியை மதியிற்கண்டு நடுக்கிட்டு எலும்புபன்பதும், உடலெல்பதும், உயிரொன்பதும், ஆகிய இவைகளைச் சினேகத்திற் கிசைந்ததாகச் சொல்வதெல்லாம் பின்னிட்டதேயாகும் அப்படிக்கல்லவென்று அதன் நிலையை மாற்றி முன்னாக இருந்தவைக ளென்று சொன்னாலும், முழுதுமாராய்ந்து பார்த்தபோது அந்த நட்புக்குக் காரணமான அன்பென்று சொல்லப்பட்ட தத்துவத்தி னியற்கையைத் தேவர்களு மறிந்தவர்க ளல்லாதவர்களானார்கள். ஏனென்றால், விபீஷிணாழ்வானைப்போல அந்தத்தேவர்கள் துன்பமடையவில்லை,அவ்வளவு துக்கமடைந்தவரா யிருந்தாலும் இந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களுக்கு அழிவு உண்டாகாதென்று தெரிந்த ஞானவானா யிருக்கின்றபடியினாலே, தமது பிராணனை விடவில்லை. புலம்பவு மில்லை. ஆனால், பெருமானுக்கு இவ்வளவு வருத்தம் வந்ததே யென்று அழுது மிகவு மனங் கொதித்து ஸ்வாமியினுடைய தேஹத்தில் காயமொன்று மில்லாமையால் மனம் நடுங்காமலும், பயப்படாமலுமிருந்தார். மிகுந்த பலாஷ்டிகனான இந்திரஜித்து பிரஹ்மாஸ்திரப் பிரயோகஞ்செய்தான். அதனால், இளைய பெருமாளுக்குத்துன்பமுண்டான்து அந்தத் துன்பத்தைச் சகிக்க மாட்டாமல் பெருமாள் மூர்ச்சையானார் என்ற நுட்பக்கருத்தைத் தெரிந்துகொண்டு இதற்கென்ன உபாயஞ்செய்து இதை நீக்கலாமென்று ஆலோசித்து, ஸ்வாமியினுடைய திருவுளத்தில் பெருந்துன்ப முண்டாயிருக்கின்றது, அதனால் மூர்ச்சையானார் இந்த மூர்ச்சை தெளிந்த பிறகு ஸ்வாமியின் திருவுள்ளத்தை யறிகிறது நம்மால் முடியுமோ, இளைய பெருமாளுக்குப் பொல்லாங்குண்டானால், ஸ்வாமி தம்முடைய பிராணனை வைத்திருக்கமாட்டார். மாய வாழ்வை யுடைய அந்தத் திருட்டுப்பயலா ஜெயம்பெற்றுப் போயிருக்கின்றான். என்று கண்களில் நின்றும் தாரைதாரையாகக் கண்ணீர்பெருகவிட்டுக்கொண்டு அந்த நாகம் போனது போலவே பிரஹ்மாஸ்திரமும் இன்றைக்கே நாசமாகப் போகிறது, இளைய பெருமாளுக்கும் ஒரு துன்பமில்லை. விசால மான இந்த ரணக்களத்தில் மாண்ட வானர சேனைகளெல்

லாம் பிழைத்துக் கொள்ளுவார்கள். அந்த மஹாநுபாவிட நிசாசரனும் ஜெயம்பெறுவானென்று மனத்திடங்கொண்டு ஸ்வாமி மூர்ச்சை தெளிவதற்கு முன்பாக இப்போதே உதவி செய்யத்தக்க ஆளையாளர்கள் மரணமடையாமலிருப்பார்களென யானால், தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வருகின்றேனென்று ஒரு கொள்ளிக்கட்டையைக் கையிலெடுத்துக் கொண்டு ரத்தக்கடலின் சேற்றில் நடந்து சுற்றிப்போனார். வானையமடித்து இரண்டு கையையும் பிசைந்துகொண்டு தமது செவந்த திருக்கண்களில் அக்கினிப்பொறிகள் பறக்க மேருமலையைப்போலத் தோள்கள் மேகமண்டலத்தை யளாவும் படியாக ஆயிரகோடி யானைப்பெருமை மெத்தையின் மீது இருந்த கோப முடையவரான ஆஞ்சநேயரென்கின்ற பெருங்கடல் இடக்கிறதைக் கண்டு தமது கண்களில் நீர் சொரியும்படிப் பார்த்து உயிரிருக்கின்றதென்பதை ஊகித்தறிந்து தேஹத்தில் பதிந்திருக்கின்ற அம்புகளை ஒவ்வொன்றாக மெல்லமெல்ல உபாயமாய் வாங்கி மேகஜலங் கொண்டு வந்து அவருடைய முகத்தைக் கழுவிக் குளிரச் செய்தபோது முன்போலே சுவாசம் பிறந்தது. பிறகு ரோமராசிகள் சிலிர்த்து வெயர்த்தனகள். கண்களை விழித்தார். தேஹத்தை மெல்ல அசைத்தார். வாயில்நீரூறினது. தூங்கிவிழித்தாற்போலக் கொட்டாவியுண்டானபோது, ஸ்ரீராம நாமத்தை மறவாமல் ஜபித்தார். அதைக்கண்டு தேவர்களெல்லாம் ஆரவாரித்தார்கள் அப்போது விபீஷணாழ்வான் ஆநந்தபாஷ்பம் பொழிந்து மிகுந்த அன்புடனே ஆஞ்சநேயரைக் கட்டித் தழுவினார். அந்த விபீஷணரை வாயுபுத்திரரும் அன்புடனே சேர்த்துத்தழுவி ஐயா ? சிரேஷ்டவானே ஸ்வாமி! பாங்கா யெழுந்தருளி யிருக்கின்றாரோ என்று வினவ அதுமப்படியே திடகாத்திரரா யிருக்கின்றா ரென்று விண்ணப்பஞ் செய்தார். அதைக்கேட்டமாத்திரமே இத்தமூன்றுலோகங்களையும் தாங்கும் படியான தமது திருக்கைகளைக் குவித்து தெண்டனிட்டு நிற்கின்ற ஆஞ்சநேயரைப் பார்த்து ஐயா ? ஸ்வாமியானவர் தம் திருத் தம்பியார் மீதுவைத்த அன்பினாலே மூர்ச்சையாய்க் கிடக்கின்றார். இனித் தெளிந்தெழுந்திருந்தால் ஸ்வாமி திருவுள்ளமெப்படி முடியுமோ தெரியாதேன்றார். நீவிர் சாம்பவனெவ்விடத்திருக்கின்றானென்று கேட்க, அடியேனுக்கு அவனெங்கேயுள்ளானென்றுந் தெரியாது. அவரிறந்துபோனாரோ,உயிரோடிருக்கின்றாரோ, தெரியாது. நானிப்போது தான் வருகின்றேனென்றார். அதைக்கேட்ட வாயுபுத்திரர் அவருக்கு மரணமில்லைஅவரெங்கே யிருக்கின்றாரென்று பார்க்கலாய்வாரும், அந்தச்சாம்பவனாக் காண்போமானால் வெற்றி பெறத்தக்க ராக்ஷசர்களுக்கெல்லாம் ராஜசிரேஷ்டராயிருக்கின்ற விபீஷணாழ்வானே நம்மை மறுபடியும் வாழச் செய்யத்தக்க யத்தனங்களை நிறைவேற்றுவதில் வல்லவராக்கும்.என்றுசொன்னமாத்திரத்தில் விபீஷணாழ்வான் ஐயா? அப்படியானால் நாம் சீக்கிரமாகப் போகலாம்வாருமென்று கொஞ்ச தூரம் அந்த இருளிற் போனார்கள். சாம்பவனைத் தங்கள் நல்விதி வசத்தால் அவ்விடத்திற் கண்டார்கள். அதிக வார்த்திகத்தினாலும், பிரஹ்மாஸ்திரம் பட்ட நோவினாலும், தேஹத்தி லுண்டான காயவருத்தத்தினாலும், மூச்சொடுங்கி ஒன்றுந்தெரியாமல் மயங்கின மனதையுடையவராயிருந்தும், இந்த ஆஞ்சநேயரும், விபீஷணாழ்வானும், வருகின்ற சத்தடியை வச்சிரமுஷ்டியை யுடை யவ ரான சாம்பவர் தம்முடைய செவிகளால் கேள்விப்பட்டு வருகின்றவர்கள் விபீஷ ணாழ்வானோ என்னை அடிமை கொண்ட ஸ்ரீராம மூர்த்தியோ, அநுமானோ ஐயோவென்று இரக்கமுற்றுக்கிருபை செய்யும் படியாக வருகின்ற தேவர்களோ, மஹாரிஷிகளோ,பகைவர்கள் நம்மைக்கொன்றுவிட்டுப்போனபடியால் அப்பகைவர்கள்வரமாட்டார்கள். நம்மை ரக்ஷிக்கத்தக்கவர்களே வருவார்களென்று நினைத்துத் தம்முடைய ஆயாசந்தீர்ந்து தமதருகில் வந்து நின்று மலையில் விழும் அருவி போலக் கண்ணீர் சோரும்படி அழுது கொண்டிருக்கின்றவர்களை உணர்ந்து கண்ணை மூடினபடியே ஐயா, குணபூர்ணர்களாய் வந்து என்னருகில் நிற்கின்றவர்களே, நீங்கள் யாரென்று கேட்ட, சாம்பவருடைய வாக்கியத்தைக்கேட்டுப் பிழைத்தோம் பிழைத்தோமென்று சந்தோஷித்த விபீஷணாழ்வானுடைய வார்த்தையைக் கேட்டு ஐயா ! விபீஷணாழ்வானே, உம்மோடுகூட நிற்கின்றவர் யாவரென்று கேட்டபோது ஆஞ்சநேயர் ஐயா, வெற்றியாளரே, உமக்கு மங்கலமுண்டாகக்கடவது அடியேன் அநுமான் இதோ தண்டனிட்டேனென்று சொல்லக்கேட்டு ஐயா, மகாநுபாவா மாருதியே இனியெல்லாரும் பிழைத்தோம் என்று மிகுந்த களிப்புடனே ஓங்கி உச்சாகங் கொண்டு நின்று ஐயா, இந்திரஜித்து எவினை

அ, பிரஹம்மாஸ்திரமே யான போதிலும், வேதத்திற்கும் வேதம்போ லெழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீராம மூர்த்தியை ஒன்றுஞ்செய்யமாட்டா தென்றும்படியான அவருடைய வல்லமையை ஆதியிலேயே தெரிந்திருக்கின்றேன். இப்போது அந்தச்சர்வ லோகநாயகரான ஸ்ரீராமமூர்த்தி என்னசெய்கின்றார். அதைத்தெரிவியுமையா, என்றதைக் கேட்டு அக்னிதேவிபுத்திரர் எம்பெருமானே! சாம்பவரே? ஸ்வாமியானவர் இளைய பெருமாளுக்குத் துன்பமுண்டானதென்று மிகுந்த துக்கத்துடன் மூர்ச்சையா யிருக்கின்றாரென்றார். அதைக்கேட்ட சாம்பவர் உள்ளதுதான். இளையபெருமாளுக்கு ஏதேனும் வருத்தமுண்டாகக் கண்டாராகில் தாம் சகிப்பாரோ! இருவருடனு மொன்று, இருவருயிரு மொன்று, மூல வஸ்துக்களான சேஷி சேஷிர்களென்ற இரண்டுபேரும், நாராயணனென்ற ஒருவர்தாமே? அந்த நிலைமையிருக்கட்டும், மேருமலையை யொத்த தோள்களையுடைய வாயுபுத்திரரே! க்ஷணப்பொழுதுக்குள்ளாகப் போய்ச் சஞ்சீவியைக் கொண்டு வரவேண்டும், நம்முடைய எழுபது வெள்ள வானரசேனையும், ஸ்ரீராம மூர்த்தியும், இளைய பெருமாளும், இந்த மூன்று லோகத்தவர்களும், தர்ம்மதேவதையும், ஸ்வதப்பிரமாணமான வேதமும், உம்மால் வாழ்வடைந்ததுகள். ஐயா? அதிக பலாஷ்டிகரான ஆஞ்ச நேயரே, தாமசியாமல் நான் சொன்னபடியே சஞ்சீவியைக் கொண்டுவரப்போகக்கடவீர். ஐயா, மாருதியே? அந்தச் சஞ்சீவியானது எங்கேயிருக்கின்றதென்றால் இந்தச்சமுத்திரத்தைத்தாண்டி, வடமுகமாய் ஒன்பதினாயிரம் யோசனைதூரம் போனீரோயானால் இமவத்பருவதத்தைச்சேர்வீர் அந்த மலையினுடைய விஸ்தாரம் இரண்டாயிரம் யோசனை யுள்ளது.. அதைக் கடந்து ஒன்பதினாயிரம் யோசனை தூரம் போவீரோயானால், ஏமகூட பருவதத்தை யடைவீர், ஹேசிரேஷ்டரோ? அந்தமலைக்கு அப்புறம் வடக்கே ஒன்பதினாயிரம்யோசனை தூரம்போனால் நிஷதகிரியிருக்கின்றது. அதைத் தாண்டி ஒன்பதினாயிரம்யோசனைதூரம்போனால் சகலபர்வதங்களுக்கும் பெரியதான மேருவாசலமாகிய வடகிரியிருக்கின்றது. அந்தமலையின் விசாலத்தைத் தாண்டிப்போகவேண்டுமானால் பலமென்பதைத் தோற்கடித்த இரண்டு புஜங்களை யுடைய ஆஞ்சநேயரே முப்பத்திரண்டாயிரம் யோசனை தூரம் போகவேண்டும். மேருவைத்தாண்டி அப்புறம் ஒன்பதினாயிரம் யோசனைதூரஞ்சென்று நெருங்குங்கால் நீலகிரியைக்காண்பீர் அந்த நீலகிரிபருவதம் இரண்டாயிரம்யோசனை உயரமுள்ளதாக இருக்கின்றது. ஐயா, வாயுகுமாரரே? அதற்கு நாலாயிரம்யோசனை தூரத்தில் சஞ்சீவி தங்கியிருக்கின்ற கருமலையைக்காண்பீர். அதைக்கண்டமாத்திரமே எங்களுடைய இந்தத்துன்பத்தை முடித்துவிடுவீர். எப்படியென்றால், அந்த மலையின்மீது இறந்தவர்களைப் பிழைப்பிக்கின்ற அமிர்த சஞ்சீவியென்ற ஒரு மருந்திருக்கின்றது. தேஹம் துண்டுதுண்டாய்ப் பிளந்தாலும் பொருந்தச்செய்யும்படியான மருந்தொன்றிருக்கின்றது. ஆயுதங்கள் பதிந்திருந்தால் அதைவிலக்கும் மருந்தொன்றிருக்கின்றது. உரு வழிந்துபோனால் மறுபடியும் அந்த உருவத்தையே கொடுப்பதான ஒருநல்லமருந்திருக்கின்றது. ஆகையால் ஐயா, நீர் அவ்விடத்திற்குப்போய்க் கொண்டுவர வேண்டுமென்று அறிவில் அதிகசிரேஷ்டரானசாம்பவரானவர் வேண்டிய அடையாளங்களைச்சொல்லி ஐயா, இந்தச் சஞ்சீவிமருந்தை அநேக தேவர்கள் காத்துக்கொண்டிருக்கின்றார்கள். அதுவுமல்லாமல் ஒருவர்க்கும் அடங்காததாய் நெய்பூசிய வழிகளையுடையதான ஒருசக்கரஞ்சுழன்றுகொண்டிருக்கின்றது. பொய்க்குச்சமீபத்துஞ் செல்லாத அநுமானே? நீ செய்ய வேண்டிய அநுஷ்டானங்களில்பொதுத்தன்மையைச்செய்து, உன்னைச் சூக்ஷ்ம சரீரியாகச்செய்து போகாவிட்டால் உன்கண்ணுக்கு அகப்படாமல் அந்த மருந்துகள் மறைந்துவிடும். ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்று வேண்டிய தந்திரங்களை யெல்லாஞ்சொன்னார். அதைக்கேட்டு ஆஞ்சநேயர் ஐயா; அடியேனுக்கு இப்போதே விடைகொடுத்தருளுவீரானால் இதுவரையில் இறந்தவர்களும் பிறந்தவர்களானார்கள். எம்முடைய ஸ்வாமிக்கு யாதொருபொல்லாங்கும்இடையூறும் வாராதபடி நீங்கள்போய்ச் சமீபமாயிருந்து உபசாரஞ்செய்து ஆறுதல் சொல்லிக்கொண்டிருங்கள். இதோபோய்வருகிறேனென்று அவர்களிடத்தில் விடை பெற்றுக்கொண்டு அவர்களைவிட்டு அண்டமுகடுவரையும் ஓங்கி இரண்டு தோள்களும், இரண்டுதிக்கை யளாவ விஸ்வரூபங்கொண்டு, ஆகாசமுழுதும் வளர்ந்து வேதம்போல நிறைந்து, கிரஹங்களும், நக்ஷத்திரங்களும், கோத்தமணிமாலைபோல வரிசையாய் மார்பில்தோன்

றவும், ஒருபிரானுக்கு மற்றொருபிரான் ஆயி
ரமேயாசனை விஸ்தாரமுமில் லாயாவருஞ்சொல்
லிக்கொள்ளவும், ஒருபாதத்துடன் மற்றொரு
பாதத்தைப் பெயர்த்து வைக்கிறதற்கு லங்கா
பட்டணமும் போதாமற் போய்விடவும் பெ
ரியகைகளினிரண்டு நுனிகளும் ஆகா
ரத்துமற்போகவும் வளர்ந்தார். அதிகவிசைகொ
ண்டுபுறப்பட்ட அநுமானுடையவிஸ்வரூப
த்தின் பெருமை இவ்வளவாகும். வாலைவீசிக்
கைகளையுதறி, வாயையுந் திறந்துகொண்டு
கொண்டு பெரியகாலை நிலத்தில் பதியும்
படியூன்றி, மார்பை விசாலித்து விரித்துக்
கொண்டு திருக்கழுத்தைக் கொஞ்சமுன்சுரு
க்கித் திருமேனியிலுள்ள ரோமங்களும் குறு
கியும் நெறித்துநிற்க, விசைகொண்டு எழும்
பினபோது அந்த லங்காபட்டணமானது
அந்த சமுத்திரத்தில் முழுகிப்போகின்ற
கப்பலைப்போல கிடுகிடென்று சுழன்றது.
இவருடைய வேகத்தால் குலாசலங்களெல்
லாம் பாளம்பாளமாய்ப் பிளந்துவிடும்போ
லிருந்தது. சமுத்திரம் பாதாளங்களிலு
ங்கால்கிறித்துப்பாய்ந்தது. மேருகிரியும், மேற்
கிலும், மின்னல் மின்னினது. மலைகளும்,
மரங்களும், மற்றவைகளும், எழும்பி விழுந்
தன. தேவவிமானங்கள் ஆகாசத்திலேபோ
ய் இலையைப்போல மோதுண்டு விழுந்தன
கள். சமுத்திரங்குதித்து மேலேறித் திக்குக
ளிற் சிதறினதுகள். இந்தப்பிரகாரமாக அநு
மான்பார்த்தார். அப்பொழுது பெரியமலை
களெல்லாம் அவருடைய வேகத்தாற்பெயர்
ந்து பின்றொடர்ந்து வடமுகமாய்ச் சாய்ந்
து விழுந்ததுகள். அவர் தேஹத்திற் பிறந்த
சண்டமாருதக் காற்றினால் அவருடைய பிதா
வாகிய வாயுதேவரும் மனந்தளர்ந்து ஓய்ந்
துபோனாரென்று தேவர்களெல்லாம் பேசிக்
கொள்ளும் படியாக ஆகாச மார்க்கமாய்ப்
போகின்ற வேகத்தினால் கடல்நீர் வற்றிப்போ
யினது. மேகங்கள் கிழிந்து போனதுகள்.
பெருங்காடுகளெல்லாம் வெந்து, கரியாய்ப்
போய்விட்டதுகள். முன்னொற்றோடவும்,
அதின்பின்னே கடக்கோடவும், காற்றைப்
போலச் செல்கின்ற அஞ்சநேயருடைய திரு
மேனியானது மின்னலைப்போலவும், உள்ளங்கு
ழைந்துபோகும்படிபோகின்ற அஞ்சநேய
ருடைய உருவத்தைப்பார்த்து எல்லாத்தேவ
ர்களும் இவர்நம்முடையபலத்தை முன்னே
காட்டுகிறபோதே அந்தக்கடலால் சூழப்ப
ட்ட லங்காபட்டணமென்னும் ராக்ஷசர்கள்
வசிக்கின்ற கோட்டை, சமுத்திரத்திற் சேர்ந்

துவிட்டார். இனி நம்முடைய துக்கமே பறி
புண்டு போய்விட்டதென்று பேசிக்கொண்
டார்கள். இந்தப்பிரகாரமாக ஆஞ்சநேயர்
மேகமண்டலத்தைத் தாண்டிச் சூரியர்களு
ம், சந்திரர்களும் நின்ற மண்டலங்களைக் கட
ந்து நக்ஷத்திரங்கள் வாழுகின்ற அந்த எல்லை
யையுந் தாண்டிப்போக, சாம்பிராச்சியங்க
ளை யுடைய தேவர்களுக்குப் புகலிடமான
சுவர்க்கலோகத்தைத் தாண்டிப்போய் மூல
தாமரைப் புஷ்பத்திற்பிறந்த பிரஹ்மலோ
கமின்னங் கொஞ்சத் தூரந்தா னிருக்கின்ற
தென்னும்படியாக உயர்ந்த விஸ்வரூபத்து
டனே புறப்பட்டுப்போனார். இவரைப் பார்
த்த சுவர்க்கலோக வாசிகளான தேவர்கள் இ
வர் வெற்றிபெற்ற கருடபகவானுக்கும், ஸ்ரீ
யப்பதி வசிக்கின்ற பரம பதத்திற்குப் போ
கின்றாரென்றார்கள். சிலசிலபேர்கள் பிரஹ்
மதேவர் தாம் தம்முடைய லோகத்திற்குப்
போகின்றாரென்றார்கள். சிலர்சிலர் இவர் மூ
ன்றுகண்களையுடைய ருத்திர மூர்த்தி யென்
றார்கள். சிற்சிலர் தமக்குத் திருவுள்ளமான
திரு உருவத்தைக் கொண்டு இந்தப் பிராகிரு
த பூமியில் விளையாடுகின்றவர் ஸ்வதப் பிர
மாணமான நான்கு வேதங்களும் எட்டுதற்க
ரிய திருவுருவ முள்ள ஸ்ரீயப்பதியே என்
றார்கள். இவருடைய திருமேனியின் அள
வைத் தெரியக் காணலாமென்று இமைகொ
ட்டாமல்பாக நமது கண்ணறிவைச் செலுத்தி
னாலும், இன்னுங் காணுகிறதற்கு முடிவுபட்
ட அளவுடையவராகக் காணப்படவில்லை இவ
ர் பரமபதத்திற்குப் போகிறவராய் காணப்
படுகிறாரென்று அநேக தேவ கணங்கள் சொ
ல்லிக் கொண்டார்கள். சிலதேவர்கள் இது உ
ருவ மென்றார்கள். கிலர் இது உருவல்ல ஒளி
யென்றார்கள். சிலர் இந்தப் பிரகாச முள்ள
மேனி அருவென்றார்கள். சிலசில பேர்கள் இ
து எல்லா அண்டங்களுக்கும் மேலாக இருந்
துகொண்டு இந்த அண்டங்களெல்லாம் உண்
டாகிறதற்குக் காரணமா யிருக்கின்ற வஸ்து
வென்றார்கள். சிலசில பேர்கள் இது காற்றுக்
கதி தேவதை யென்றார்கள். இந்தப் பிரகார
மாக எல்லாக் காரியங்களையும் நிச்சயித்தறிய
வல்ல புத்திமான்கள் இந்த ஆஞ்சநேயருடை
ய விஸ்வரூபப் பிரகாரத்தை இன்னபடியெ
ன்று தெரிந்துகொள்ளச் சக்தியற்றவர்களா
ய் விட்டார்கள். தாமரை மலர்மேல் வாசமா
யிருக்கின்ற பிரஹ்மாவினுடைய அண்டம்
வரை உயர்ந்து மத்திய ஆகாசமெல்லாம் தம்
முடைய உருவத்துக் குள்ளடங்கி மறைந்து

போரும்படி யாகவும், மேரு மலைபோன்ற
தோள்களின் வீச்சினால் அண்ட பித்திகைதே
யும்படியாகவும், விசைகொண் டெழும்பின
அந்த வாயுகுமாரருடைய திருமேனியிற் பி
றந்த கோஷத்தைக்கேட்டுத் திக்குப்பாலகர்
களுடைய தலைகளெல்லாம் நடுநடுங்கினது
கள்.— அண்டகோள மெல்லாங் கிழிந்து
போம்போ லிருந்தது. மஹாபலிச் சக்கிர
வர்த்தியானவர் வாமன மூர்த்திக்கு மூன்
றடிமண் கொடுத்தபோது அவர் தமது
சிறிய பாதத்தால் லோகங்களை அளக்கும்ப
டி நீட்டினநாளில் கற்பகப்பூமாலையை அணி
ந்த தேவர்களும், மஹாரிஷிகளு முதலான
பெரியோர்கள் யாவரும் தங்களுக்குரிய வே
தங்களைப் பாராயணம் பண்ணிக் கோஷித்த
துபோல ஆஞ்சநேயர் விஸ்வரூபங்கொண்
ட அந்தநாளிலும், லோக மெல்லாம் வேத
கோஷமாக இருந்தது. தேவர்களும், முனி
வர்களும், சித்தர்களும், அவரவர்களுடைய
தேவி மார்களும், சுவர்க்கமத்திய பாதாளத்
தி லுள்ளவர்களான மற்றவர்களும், ஆநந்த
த்துடனே ஒருமிக்கச் சேர்ந்து மொய்த்துக்
கொண்டு ஆஞ்சநேயர்மீது தாவினரத்தினங்
களும், சந்தனங்களும், சுகந்தப் பொடிகளு
ம், பலவிதப்புஷ்பங்களும், மேலேபடிந் தி
ருக்கப் புஷ்பங்களால் நிறைந்த தேவ கற்பக
விருக்ஷத்தைப் போல அஞ்சனை திருக்குமா
ரர் ஆகாச மார்க்கமாய்த் தாவிப் போனார்.
இந்தப் பிரகாரமாகச் சென்று வாயுகுமாரர்
இமவத்பருவதத்தைச் சேர்ந்தார். அங்கிரு
க்கின்ற இமையாநாட்ட முடையவர்களான
தேவர்களும், யாகாதிகளை யுடைய முனிவர்
களும், இன்னுந் தர்ம்மமார்க்கத்தைச் சேர்ந்
தவர்களெல்லாம், ஐயா? ஸ்ரீராமதூதரே! உம்
முடைய காரியம் அனுகூலமாகக்கடவதென்
று வாழ்த்தினார்கள். அதைத்தாண்டி அப்புற
ம் உமாநாயகர் வஸிக்கின்ற கயிலாசகிரியை
க்கண்டு சந்தோஷமுற்று ஈசானதிக்கில் தோ
ன்றுகின்ற அந்தமழுவாளி நிறைந்துவஸிக்கி
ன்ற அந்தமலையைக்கண்டு தாமரைமலர்போ
ன்ற தமது திருக்கரங்களைக்கூப்பித் தண்டனி
ட்டுப் போகின்ற ராமதூதனைக் கயிலாசபதி
யான பரம சிவனானவர் மிகுந்த அன்புட
னே கடாக்ஷித்துப் பார்வதிதேவிக்குக்காட்டி
இவர்தான் எனதுஅம்சபூதரானமாருதி என்
னும் நாமதேயர் என்றார். அதைக்கேட்டுப்
பார்வதி அப்படியா இவரெல்லாகாரணமாயி
ந்துவந்தாரென்று உமையவர் கேட்க மஹா
தேவ ராஜராகிய ஸ்ரீராம மூர்த்தியின் தூத
ரிவர் இப்போது சஞ்சீவிமருந்தின் பொரு
ட்டு வந்தார் வஞ்சகர்களான லங்காவாசிகளா
செய்யும் பொலலாங்கை நீக்கப் போகிறது
சத்தியம் ஆகையால், பெண்ணே நாம் நா
ளைக்கு மகாயுத்தம் நடக்கப் போகிறது பார்
க்கலாமென்றார். பிறகு ஆயிரயோசனை தூர
ம் கடந்துபோய் ஹேம கூடத்தைச் சேர்ந்
து அவ்விடத்தில் முடிவில்லாத சந்தோஷங்
களை அனுபவித்துக்கொண்டிருக்கின்ற தேவ
சமூஹங்களைக் கண்டு அப்புறம் அங்கிருந்து
சங்கரத்தைப்போலப் பாய்ந்து நிஷத பருவ
தத்தி னுச்சியில் குதித்தார். அளவில்லாத சா
ஸ்திரங்களைப்பயின்ற அறிவாளர்க ளுடைய
பார்வைக்கும், கிருபா வான்களான தேவர்க
ளுடைய மனதிற்கும் எட்டப்படாத வேக
முடையவராய் ஆஞ்சநேயர் அந்த நிஷதபரு
வதத்தைக் கடந்து, இந்தப்பூலோகத்திற்கும்
அஷ்டதிக்குகளின் நிலைமைக்கும், பிரஹ்ம
லோகத்திற்கும் அளவைக் கருவியாக இருக்கி
ன்றமேருகிரியின்மீதுபாய்ந்தார். நிமைகொ
ட்டாத கண்களை யுடையவர்களான தேவர்க
ளாலும் இதனிலைமை இப்படிப்பட்ட தென்
று அறியக்கூடாத அந்த வடமலைக்கு மேலே
போன வாயுகுமாரர் நாவலந்தீவென்று சமு
த்திரத்தால் சூழ்ந்தபூவளாகத்தில்மூன்றுலோ
கத்தவர்களும் கொண்டாடு கிறதற்குக் கார
ணமான தெய்வத்தன்மையுள்ள சம்பூநாவல்
விருக்ஷத்தையுந் தமது திருக்கண்களாற்கண்டு
அந்தமலையினுச்சியில் லோகங்களை யெல்லா
ம்படைத்த சிருஷ்டி கர்த்தாவினுடைய திவ்
விய நகரத்தைக் கண்டு அந்த நகரத்தின் மத்
தியில் சஹஸ்திர இதழ்களோடு கூடிய மூல
சொர்ணதாமரைப்புஷ்பத்தின்மீது நான்கு தி
ருமுகங்களுடனே கூடிய பிரஹ்ம தேவர்
எழுந்தருளி யிருப்பதைக்கண்டு இரண்டுகை
யுங்கூப்பித் தண்டனிட்டு அந்தத் தாமரைப்
புஷ்பத்திற்கு ஈசான்யதிசையில் ஆயிரஞ் சூ
ரியர்கள்வீசுகின்ற கிரணங்களைப்பரப்பினது
போலச் சடைகளைப் பரப்பிக்கொண்டு ஐந்
து சூரியர்கள்போல ஐந்து திரு முகங்களைக்
காட்டி மூன்று லோகத்தவர்களும் இறைத்த
புஷ்பங்களுடனே அர்த்தநாரி பாகனுய் எட்
டுத் திருத்தோள்களுட னெழுந்தருளி யிருக்
கின்ற ருத்திரமூர்த்தியைக் கண்டு வணங்கப்
பிறகு தில்லைக் காந்தார விருக்ஷத்தின் அடி
யில் அந்தந்த இடங்களில் தேவர்களெல்லாம்
வணங்கும்படியாகவும், மஹாரிஷிக ளெல்
லாம் பெருங்கோஷம் நிறையும்படி பிரஹ்
ம்ம சூத்திரங்களால் பல்லாண்டுகூறவும் பூமி

பிராட்டியார், பெரியபிராட்டியாரோடும்,
திருத்துழாய் மலர்ந்த கிரீடதாரியா யெழு
ந்தருளியிருக்கின்ற சகல காரண மூலவஸ்து
வாய்ச் சுவர்லோகபாலகராய் வீற்றிருக்கின்ற
ஸ்ரீயப்பதியைக்கண்டுசேவித்து அப்புறஞ்சத்
தியலோகமென்பாகிய வெற்றிகருடையானது
திருமேனிப்படியாகவும், ரம்பைமுதலிய சுந்தர
வதிகள் அழகியகையிற்கொண்டசாமரைகளா
ல் தென்றற்காற்றை வீசிக்கொண்டிருக்கவும்,
சுவர்க்கலோகவாசிகளான தேவர்களெல்லாம்
வந்தடிவணங்கி நிற்கவும், தேவதுந்துமி முழ
ங்கவும், இவ்வளவு வைபவத் துடனே தே
வேந்திர னெழுந் தருளி யிருக்கிற நிலை
மையையுங் கண்டு அவனையுங் கைகூப்பிக் கும்
பிட்டுவிட்டு அப்புறம் புஷ்பித்துக்கொண்டி
ருக்கின்ற கற்பக விருக்ஷத்தும் கொப்பாகச்
சொர்ணசிகரங்கள் பிரகாசிக்கும் படியாகத்
தேவர்களுக் கிருப்பிடமான மேருவின் சிக
ரப் பிரதேசத்தில் மூன்றுலோகத்தாருங் கு
டும்படியாக அஷ்ட திக்குகளையும் ரக்ஷி
த்துக் கொண் டிருக்கின்ற திக்குப் பால
கர் அந்தந்தத் திசையில் நிற்கின்ற நிலைமை
யையுங்கண்டு வணங்கி அந்த மலையை விட்டு
அப்புறம்போன அனுமான் உத்தரகுருக்ஷே
த்திரத்தை யடைந்து அவ்விடத்தில் சூரியன்
கிரணங்களைப் பரப்பிக்கொண்டு இருளைத்து
ரத்தி உதய யான செக்கையைப் பார்த்துப்
பொழுது விடிந்து விட்டது. இவ்வளவு தா
னே எக்வேகப் பெருமான் மூர்ச்சை தெளி
வதற்கு முன்பாகப் பாதிராத்திரிக்குள்ளாகச்
சஞ்சீவி மருந்தைக் கொண்டுவந்து மரணம
டைந்தவர்கள் துன்பத்தையெல்லாம் நீக்குகி
றேனென்று சபதம்பண்ணி வந்தேனே! இப்
போது சூரிய உதயமாய்விட்டதே! நான் நிச்
சயித்தபடி செய்யமாட்டாமற்போனேனே
இனி நான் செய்யப்போகிறதென்ன இருக்கி
றது என்று சமான ரஹிதரான ஸ்ரீராம
னுதர் அதிகதுக்கமுற்று ஆலோசித்துப் பார்
க்கும்போது சூரியன் தமக்கு இடப்பாகத்தி
ல் உதயமானதைக் கண்டு சூரியோதயம் மே
ற்குத்திக்கிலுண்டாவது சம்பவிக்க மாட்டா
தென்று நிதானித்து, இப்போது விடிய
வில்லை. மேருபர்வதத்திற்கு வடபால் சூரி
யன் பிரவேசித்தால் மேற்பாரிசத்தில் உதய
மாகுமென்று சாஸ்திர ஞர்கள் சொல்லு
வார்கள் அல்லவோ, அப்படியே இந்த வட
பாரிசத்தில் சூரியனுதயமானான். தென்பாரி
சத்தில், இப்போது அந்த அர்த்தராத்திரியெ
ன்று தமது துக்கம் நீங்கி - தின் டெய்வகு

வராய்த்தோன்றி அழியாத ஆயுளைப் பெற்று
ஒருவருக் கொருவர் உள்ளமும், உயிரும்போ
ல ஒன்றுகி அளவில்லாத இன்பங்களை அனுப
வித்துக் கொண்டு புண்ணிய தம்பதிகளாய்
வாழ்ந்திருப்பவர்களுடைய சஹஸ்திரபத்தி
ர கமலம் போன்ற கமல நாட்டையுங் கண்
ணுற்றுக் கண்டார். அக்கினிச் சுவாலை போற்
பிரகாசிக்கின்ற சடாபாரத்தையுடைய ருத்தி
ரமூர்த்தியும், பிரஹ்மதேவரும், பதினாறு
வயதுடைபெண்ணுகிய லக்ஷ்மீ தேவியைத் தி
ருமார்பில் தரித்திருக்கின்றவரான விஷ்ணு
மூர்த்தியும், எழுந்தருளி வாழ்கின்ற காணியெ
ன்றும், வெற்றிமாலையைத்தரித்தகிரீடதாரியா
கிய சோழமகாராஜனும், தியாகமே விளையா
ட்டாக உடைய சடையப்ப முதலியாரும், வ
சிக்கின்ற காவிரிநதிசூழ்ந்தநாடென்றும்சொ
ல்லுகிறசோழதேசத்திற்கொப்பான வளப்ப
முள்ள அந்தஉத்தரகுருநிலத்தைக்கண்ணுக்க
ழகாகப்பார்த்து அப்புறம் போனார். விசால
மானமேருபர்வதத்தின்மேலேறி நடக்கும்ப
டியான யோக்கியரும், இப்பிறப்பிலேயே பி
ரஹ்மபட்டம்பெற்றவருமாகிய ஆஞ்சநே
யர்எல்லாலோகங்களையும். திருவிக்கிரமாவதா
ரத்தால் அளவிட்டபெரியபெருமானுடைய
திருமேனியைப்போலக் கறுத்துத் தோன்று
கின்ற நீலகிரியைக் கண்ணால்பார்த்து ராத்திரி
யுங்குறைந்து போகும்படிக் கறுத்து விளங்
குகின்ற அந்த நீலமலையைத் தாண்டிப் போ
னபிறகு மேருமலைக்குச் சமமான திருத்
தோள்களை யுடைய ஆஞ்சநேயர் மஹாவி
வேக ஞானமுள்ளவரான சாம்பவர் தமக்
கு உபதேசித்த சஞ்சீவி பர்வதத்தைக்கண்டு
தூரமாக நின்று அம்மலை முழுவதும் சூரிய
னும் பிரகாசத்தில் குறைவடையத்தக்க அந்
தச் சஞ்சீவி மருந்துகள் எரிந்துகொண்டிரு
ப்பதைக்கண்டு இதுதான்சாம்பவர்சொன்ன
அடையாள மென்று குறிகொண்டு அந்தமலை
யின்மீது பாய்ந்தார். பாய்ந்தமாத்திரத்தில்
அந்த மலையானது பாதாளத்தில் மறைந்து
விட்டது. அந்த மலையைக் காத்திருக்கின்ற
தெய்வங்கள் நடுங்கி அதிக கோபத்துடன் வ
ந்து அனுமானைப் பார்த்து நீ யாவன் ? நீ
இவ்விடத்திற்கு வந்த காரண மென்னவென்
று கேட்க, அந்தத் தேவதை களுக்குத் தாம்
வந்த காரியத்தைத் தெரியச் சொன்னார். அ
தைக்கேட்ட அந்தத் தேவதைகள் ஐயா ? உம
க்கிது வேண்டுமானால், செய்யவேண்டிய கிர
மப்படி செய்து உமக்கு வேண்டிய மருந்
தை ஒன்றும் நோகச் செய்யாமல் எங்களிட

த்திலிற்காட்டும் நாங்கள் கொடுக்கின்றோமென்று அவனை வாழ்த்திவிட்டு மறைந்துபோய்விட்டார்கள். பிறகு செந்தாமரைக் கண்ணனான சாட்குண்ணியமூர்த்தியினுடைய சூரிய சக்கராயுதமானது தரிசனையாகி, அதுவும் மறைந்துவிட்டது. இனி நாம்இவர்களைக்காண நம்மால் முடிகிறதாக இல்லை. காலந் தாமசமாகிறது என்று ஆஞ்சநேயர், நினைத்து அந்தச் சஞ்சீவி மலையைத் தம்முடைய வஜ்ர சமானமாகிய திருத்தோள்களால் பூமியில் நின்றும் பேர்த்துக் கையிலேந்தி ஆகாச மார்க்கமாகப் போக வேண்டுமென்று உலகத்துக்கெல்லாந் தாயைப் பார்க்கிலும், மிகுந்த தயையுள்ளவரான அனுமான்ஆயிரம்யோசனை விசாலமாகப் பருத்து மேலே ஆயிரம் யோசனை தூரம் உயர்ந்து பூமியில் ஆயிரம் யோசனை ஆழ்ந்து நிற்கின்ற அந்தச் சஞ்சீவி பர்வதத்தை ஒருக்ஷணப் பொழுதுக் குள்ளாக ஒருபந்தைத் தூக்குவதுபோல அலக்ஷியமாகத் தூக்கினார். இவ்விடத்தில் ஆஞ்சநேயரிவ்விதமா யிருக்க. அவ்விடத்தில் விபீஷிணாழ்வானும்சாம்பவரும்அதிவேகமாய் ரணக்களத்தில்மூர்ச்சித்துக்கிடக்கின்றஸ்வாமியினிடத்திற்குப்போய்த் தங்கள் கைத்தலங்களால் அவருடைய திருவடித்தாமரைகளைப் பிடித்துக்கொண்டிருக்கும்போது, அந்நிய ஸ்திரீகளுடைய மனதை வேருடனேநீக்கி ஒருநாளுங் காணாதவைகளும், எல்லா ஜீவகோடிகளும் பெற்றுக்கொள்ளும்படியான கருணையெல்லாந் தாமேகொண்டவைகளும், சமஸ்தவரங்களையுங் கொடுக்கின்றவைகளுமான கொடுமையென்பது ரவலேசமுமில்லாத இரண்டு தாமரைப்புஷ்பங்களையொத்த தர்ம்மமயமாகிய திருக்கண்களைத்திறந்து கரடிக்குத் தலைவரான சாம்பவரும், மிகுந்த புகழையுடையவரான விபீஷிணாழ்வானும், அழுதகண்ணர்களாயுந் தம்முடைய திருமுடியைத் தாங்கிக்கொண்டும், கூப்பினகைகளையுடையவர்களாகியும், ஏக்கமுற்றுத் தமக்குப் பக்கத்திலிருக்கின்றவர்களைக் கடாக்ஷித்து, அப்பா விபீஷிணா ? உன்னையனுப்பினகாரியத்தை நிறைவேற்றிக்கொண்டு வருத்தமில்லாமல் வந்தாயோ என்று வினவிப்பின்பு அதிக கீர்த்திமானான சாம்பவனைப் பார்த்து ஐயா? சாம்பவா பிழைத்து வந்தாயோ என்று கேட்டருளி ஐயா? பொய்யில்லாதவர்களும், அதிகபுத்திமான்களுமானவிபீஷிணசாம்பவர்களே! நமக்குஇப்படிப்பட்ட அழிவுநேரிட்டதேமசயிக்கைபற்று உயிரிழந்த நம்முடையஇளையவன் முதலானயாவர்களும் பிழைக்கவில்லையே இவர்கள்பிழைக்கும்படியாகச்செய்யும்உபாயமுண்டாயிருந்தால் சொல்லுங்களேன். சீதையென்கின்ற ஒருபெண்ணால் மனமறுக்கமடைந்து அறிவிழந்தவனுடைய தம்பிதத்தால்நேரிட்ட ஈனத்தனத்தை நானென்னென்றுசொல்லப்போகிறேன். இந்தலோகமுள்ள பரியந்தம் பெருப்பழியான ஒருகதையைநிலைநிறுத்திவைத்துவிட்டேன். என்தம்பி? அண்ணா! மாயமானிதுவென்று சத்தியமான நல்ல உறுதிகளான வார்த்தைகளைச்சொல்லியுங்கேளாமல் ஒருபெண்வார்த்தையைத் தடுக்கமாட்டாமல் போனபடியா லிந்தப்பழிஆணியாக நின்றுவிட்டதையா அன்பர்களே! அதிருக்கட்டும், ராவணனைக்கண்களால்கண்டு அவனோடு யுத்தஞ்செய்து என்வல்லமையைக்காட்டி,அவனுயிரைவாங்காமல் விட்டுவிட்டு நான் பூர்வத்திற்செய்த பாவவினையால் எல்லாருடைய பிராணன்களையு மிழக்கும்படிப் பண்ணினேன். பிறகு இந்திரஜித்துவந்து யுத்தஞ்செய்தபோது லக்ஷ்மணன் தேவதாஸ்திரப்பிரயோகம்பண்ணி அவனைக் கொன்றுவிடுகிறேனென்று சொன்ன நல்லகாரியத்திற்கும் இசையாமல் எனக்கு இவ்வளவு அழிவுநேரிடுவதற்கிருக்கிற ஊழினால்தடுத்துவிட்டேன். மேலும், என்னுடைய பாவம் என்னைச் செயங்கொண்டபடியால் நானிந்த ரணக்களத்தில் லக்ஷ்மணனோடு நிற்காமல் ஆயுதங்களுக்குப் பூஜைசெய்ய வேண்டுமென்று நினைத்துப்போய்விட்டேன். அதனால், நம்முடைய சேனைகளெல்லாம் அழிந்து போய்விட்டன. லக்ஷ்மணனுமிறந்துபோனான். நானும் ராக்ஷசர்களைச் செயிக்காமற் போய்விட்டேன். இனி இவ்விடத்திலிருந்து இப்படிப் பலவீனத்தன்மையைச் சொல்லிக் கொள்ளவேண்டியதில்லை, இந்தரணக்களத்தி லிறந்துபோன அதிசூரவான்களான என்பிரியவாளர்களையெல்லாம்காணும்படிதேவலோகத்திற்குப்போய்ப் பிறக்கிறதேநல்லது இல்லாவிட்டால் காணமாட்டேன். என்தம்பியையும், என் இஷ்டபந்துக்களையும், இழந்தபிறகு துஷ்டர்களான ராக்ஷசர்களையெல்லாங் கொன்று அஸ்திரப்பிரயோகஞ்செய்து, ராவணனுடைய உயிரைவாங்கித் தேவர்களுக்குதவிசெய்து, நான் அடையப்போகிற லாபமென்ன! என்தம்பி இறந்தபிறகு மற்றவர்களாலெனக்காகவேண்டியதென்ன இருக்கிறது. எனக்குப்பெருங்கீர்த்தியென்னத்துக்கு, ராஜரீக மென்னத்துக்கு, வீர மென்னத்துக்கு,

னேயாளர்களான பந்துக்களென்னத்துக்கு, தர்ம்ம மென்னத்தாக்கு, சாஸ்திரக்கேள்வியென்னத்துக்கு, உண்டாகிறலாபமென்னத்துக்கு, வேதவிதிப்படி நடக்கிற தென்னத்துக்கு, எனக்குப் பிரபுத்துவ மென்னத்துக்கு, என்னுடைய இரக்கத்தையும் பாழாக்கி, லக்ஷ்மணனையும் இழந்து, ராக்ஷசர்களை யெல்லாங்கொன்று வீரத்துவத்தைக் காட்டுவேனேயானால் பெருந்திருடனாம், வஞ்சகனுமாகிவிடுவேன். இனி மாண்டுபோவதே யல்லாமல் வேறேசெய்யத்தக்ககாரிய மேதேனுமிருக்கின்றதோ! மேலான தகப்பனை யிழந்தாய். பிறகு சடாயுவென்பவரும் மாண்டார். எனக்கு மிகுந்த அன்புள்ள இஷ்டர்களும் மடிந்தார்கள். தன்னை யெல்லாவிதத்திலும் காத்துக்கொண்டிருந்த தம்பியும் இறந்தான். சீதையையிழந்துபோனேன். இப்படியிருந்தும், சந்தோஷத்துடன் இருக்கின்ற மனவல்லமையுள்ளவர்களெல்லாஞ்சொல்லிக்கொள்ளுவார்களே! நான் ராக்ஷசர்களையெல்லாம் வென்று மூலவேரறக்கொன்று அயோத்தியைச் சேர்ந்து, சற்குணவானும் துணைவருமான தம்பியை இழந்து நான்மாத்திரம் உயிருடனே வந்துவிட்டேனென்று ராஜ்யபாரஞ்செய்கிறது மிகவும்நன்றாயிருக்குமல்லவா? இவ்வளவு ஐஸ்வரியமும், இந்தலோகத்திலவாகவே நின்றுவிடும்ஆனபடியால், இவைகளைச்சொல்லவும் வேண்டாம் இப்போதே யென்பிராணனை என்தம்பியுடனே முடித்துவிடுகிறே னென்று உறுதியாய் ஸ்வாமி சொன்னதைக்கேட்டு, ஜாம்பவர் ஸ்ரீராமருடைய திருவடிகளில்விழுந்து தண்டனிட்டு ஸ்வாமி! அடியேனுக்கொருவிண்ணப்பமிருக்கிறது. தேவரீர் உமது பிரபாவத்தை யாதுகாரணத்தாலோமறந்து அறியாமலிருக்கிறீர். அடியேன் முன்னமே தேவரீருடைய வல்லமையைச் சிறிது அறிந்திருக்கிறேன். அதை இப்போது அடியேன்சொல்லுவது புநருக்தமாகும். ஏனெனில், தேவரீருடைய பிரஹ்மா ருத்ரேந்திராதி தேவர்களும் சொல்லத் தவிக்கிறார்கள், தேவரீர் பிறகு உம்முடைய அருந்[illegible] குணங்களையெல்லாந் தெரிந்[illegible] போகிறீர். ஸ்வாமி இப்போது இந்திரஜித்துவிட்ட ஆயுதம் பிரஹ்மாஸ்திரமென்று தெரிந்துகொண்டோம். [illegible] நீலபெருமான்முதல் [illegible] வானரவீரர்கள் [illegible] [illegible] ரணகளத்தில் [illegible] வெற்றியினுலே தெரிகின்றது. எங்களாண்டவரே! இது சத்தியமானவாக்காகும், அந்தப் பிரஹ்மாஸ்திரம் ருத்திரேந்திராதி தேவர்கள்மீதும், தானவர்கள் பேரிலும், விட்டபோதிலும், அவர்கள் பிராணன்களை யெல்லாம் உண்டுவிடும். தேவரொருவனை மாத்திரம் ஒன்றுஞ்செய்யமாட்டாது. ஆதலால் தேவரிடத்திற்குவராமல் மறைந்துவிட்டது. இது பிரஹ்மாஸ்திர மென்பதற்கு வேறு சாக்ஷியும் வேண்டுமோ? இப்படியானபடியால் அதிசபலவந்தரான அஞ்சனகுமாரர் மூர்ச்சைதெளிந்தார். அவர் எல்லாருடைய துன்பங்களையும் நீக்கும்படியான வல்லமையுள்ளவர். எல்லாரையும் பிழைப்பிக்கும்படியான சஞ்சீவி மருந்தைக்கொண்டு ஒருக்ஷணப்பொழுதுக்குள்ளாக வருகிறேனென்று வாக்குத்தத்தம் பண்ணிவிட்டு வடக்கேபோயிருக்கின்றார். அவரிப்போது இமவத்பர்வதத்தைக் கடந்து மேருமலையைத் தாண்டிச் சஞ்சீவிமலையைக்கண்டார். இனிஒருக்ஷணப்பொழுதுக்குள்ளாக வந்துசேர்வார். ஆதிமூலவஸ்துவே! தேவர்கொண்ட துன்பத்தை நீங்கியருளவேண்டும் மன்மதாகாரரான ஸ்வாமீ! அந்தமருந்தை அடியேனும் என்பிதாவான லோகசிருஷ்டி நாதரான பிரஹ்மமாவும், சிவனும், சக்ராயுத பாணியாகிய உபேந்திரனும் அல்லாமல் மற்ற தேவதானவமனிதர்களில் ஒருவரும் அறியும் வல்லமையுடையவர்களில்லை. அந்தச் சஞ்சீவிமருந்துகள் க்ஷீரசாகரங் கடைந்து அமிர்தமுண்டாக்கினகாலத்தில் அதனுடன்கூட உற்பத்தியானதுகள். நிலமேகஸியாமளரூபரான ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியினுடைய சக்ராயுதமானது அவற்றையொருவரும் அபகரித்துக்கொள்ளவொட்டாமல் காத்துக்கொண்டிருக்கின்றது. அதுகள் உத்தரகுருக்ஷேத்திரத்திற் கப்பா லிருக்கின்றதுகள். சுவர்க்கலோகத்தி லிருப்பவர்களும், அதைப்போய்ப் பார்த்துவந்தவர்கள் அல்லர். சர்வலோகசரண்யரான எங்களாண்டவரே! அந்தச்சஞ்சீவிமருந்து உண்டான காலமுதல் அதுகளையாரும் கையால் தொடவில்லை. அமிர்தத்தோடுகூட உண்டான வல்லமையால் சுவர்க்க, அந்தர, மத்திய, பாதாளம் என்று சொல்லப்பட்ட லோகங்களை ஆதியில் சிருஷ்டித்த பிரஹ்மதேவ ரிறந்தபோதிலும், அவருடையபிராணனையும், மறுபடியும் உண்டாக்கிவிடும். அதுகளில் சல்லியகரணியென்றும் ஒன்று தேஹத்தில் பதிந்திருக்கின்ற ஆயுத முனைகளை நீக்கி

விடும். முறிந்த அவயவங்களைச் சேரும்ப
டிச்செய்யும் சந்தானகரணியொன்று. போ
னஉயிரை மறுபடியும் திருப்பும் மிருதசஞ்
சீவநியொன்று. மேனியழிந்தவர்களுக்கு ம
றுபடியும் அந்தமேனியை உண்டாக்கும்
சமனியகரணியொன்று. இப்படி நான்குமரு
ந்துகளிருக்கின்றதுகள். ஸ்வாமீ மூலகாரண
வஸ்துவானவரே! அந்தமருந்துகள் நிச்சய
மாகவரப்போகின்றதுகள். வாயுகுமாரர்தர்ம்
மமே தமக்கு அதுகளைக்காட்ட, அவற்றைக்
கொண்டுவரப் போகின்றார், தவிரமாட்டார்.
தேவரீர் வருத்தப்படவேண்டாம், அவருக்கு
அது அருமையல்ல, என்று வணங்கிச் சாம்ப
வர்சொல்லவே, அகங்கார மமகாரங்களை யா
வருக்கும் நீக்கி ரக்ஷிக்கின்றவரான ஸ்ரீராம
மூர்த்தி மிகுதியும் சந்தோஷித்தவரைப்போ
லத் தோன்றி, ஓய் சாம்பவரே? அனுமான்
மேருமலையி னப்புறமாகப் போய்ப் போக
பூமியிலுள்ள நல்லசஞ்சீவிமருந்தைக்கொண்
டுவருவானென்றுசொன்ன, இந்த நல்லவார்
த்தைக்குச் சந்தேகமுண்டாகமாட்டாது என்
று நினைக்கின்றேனென் றருளிச்செய்துகொ
ண்டிருக்கையில் வடக்கில் ஒருபெருங்கோஷ
டம்உண்டாவதைக் கேள்விப்பட்டார்கள். ச
முத்திரமெல்லாம் மேலெழுந்து அலைவீச,ம
லைகளெல்லாம் அங்கங்கேபறியுண்டு, ஆகாசத்
திலெழும்பி, இறையுண்ணும்படியாகவருகிற
சண்டமாருதம் வடதிசையிலிருந்து புறப்ப
ட்டதாக ஒரு பெருமயக்கந் தோன்றினது.
நக்ஷத்திரக்கூட்டங்களெல்லாம்நிலைமாறி உதி
ர்ந்துவிழவும், சூரியமண்டிலமானது சந்திர
மண்டிலத்தைப்போலக் குளிர்ந்து, மேகங்க
ளுடன் கூடிக்கொள்ளவும், தன்னிடத்துள்
ள மான் பயமடையவும், அமுதமுழுமையு
ம் கலங்கின கள்ளைப்போல் எங்கும் வீசின
துகள். மலைகளும், மரங்களும், வேரோடு
பறியுண்டு, ஆகாசமட்டுமெழும்பி மறைந்து
மூடிக்கொண்டு சமுத்திரத்தை யெல்லாம்
தூர்த்துவிட்டதுகள். ஸ்ரீராம விபீஷண சா
ம்பவர்களுடைய துக்க நீங்கத்தக்கதாக அனு
மான் அட்டஹாசஞ்செய்து சப்தித்தார்.
ஆண்சிம்ஹத்துக்குச் சமமான வாயுபுத்திரர்
கர்ஜ்ஜித்த பெருங்கோஷமானது மேகங்கள்
நக்ஷத்திரங்கள் முதலான ஆகாசத்தி லுள்ள
வைகளும், கடல் மலை மர முதலான பூமியி
லுள்ளவைகளும், பிரதித்தொனி கொள்ளும்
படியாகச் செய்துவிட்டது. திருப்பாற்கட
லைக் கடையும்படி யத்தனித்தபோது அதிகப்
பிரகாசம்பொருந்தியமந்தரகிரியைக்கொண்

டுவரவேண்டும் ஸ்வாமி நியமித்தமாத்திரமே
அதையெடுத்துவருவதுதம்வலிக்கு அற்பமென
பதுபோலவெடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கமா
ய் வந்த சமானமில்லாத வல்லமை யுடையவ
ராகிய கருடபகவானைப்போலக் காணப்பட்
டார். லோகத்தைத் தாங்கிக்கொண்டிருக்கின்
ற ஆதிசேஷனுடன் . சபதமிட்டுக்கொண்டு
போராடி மேருவின்சிகரமாகிய லங்கையைத்
தன்வல்லமையால் பேர்த்துக்கொண்டுவந்த
தம்முடைய பிதாவாகிய வாயுதேவனுக்குச்
சமமாகவுந்தோன்றினார். இதைக்கேட்ட சாம்
பவர் இதோ அனுமான்வந்துவிட்டார் ஸ்வா
மி யென்றுசொல்லி முடிகிறதற் குள்ளாகப்
பாய்ந்துவந்து தம்முடையபாதத்தைப் பூமி
யில்வைத் தானினார். அந்தத் தெய்வத்தன்
மையுள்ள சஞ்சீவி பர்வதமாத்திரம் இந்தச்
சண்டாள ராக்ஷசருரில் வருவதற்குக் கூடா
மல் ஆகாசத்திலேயே அந்தரமாகநின்றுவிட்
டது. ஆஞ்சநேயர்மாத்திரமே ரணக்களத்தி
ற்குவந்து சேர்ந்தார். அந்தச்சஞ்சிவிமருந்தி
னுடைய காற்றுவந்துவீசினவுடனே தேவர்
களெல்லாம் ஆசிர்வதிக்க, இதுவரை புதிதாக
வந்திருந்த சேஷவிருத்தியாகிய புண்ணியங்
களைச்செய்த மஹாத்துமாக்களான வீரர்க
ளெல்லாம் அதிக தேசசும், மிகுந்த வல்லமை
யும், பேரழகும் அடைந்தவர்களாகி யமனை
ஜெயித்து ரணக்களத்தில் கிடக்கிற தங்கள்
தங்கள் பூர்வதேஹத்தைவந்து சேர்ந்துகொ
ண்டார்கள். ராக்ஷசர்களுடைய தேஹமெல்
லாவற்றையும் மருந்தன்முதலான ராக்ஷசர்க
ளே கொண்டுபோய்க் கடலில் போட்டுவிட்
டபடியினாலே அவைகளெல்லாம் கடலில்
மறைந்து ஒழிந்துபோய்விட்டன. மற்றவை
களில் யுத்தத்தால்மாண்டும் பட்டுப்போன
மரங்களெல்லாமும் உயிர்பெற்று வாழ்வடை
யுமேயானால் குரங்குக்கூட்டங்கள் ஜீவன்பெ
ற்றதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? இளை
யபெருமாள் திருமேனியில் பதிந்திருந்த
பிரஹ்மாஸ்திர அம்புகள்எல்லாம் கழன்று
விழுந்துவிட்டதுகள். கடுத்துக் கொதித்துக்
கொண்டிருந்த அங்கமெல்லாம் குளிர்ப்ப
டைந்தது. மூடியிருந்தகண்கள் கழலவிட்ட
துகள். மூர்ச்சைதெளிந்து அறிவுவந்து, இப்
படியாவரும் எழுந்தமாத்திரமே சப்தசமுத்
திரங்களும் கோஷித்ததுகள். இந்தப்பேரோ
சை லக்ஷ்மணப்பெருமானுடைய திருச்செ
வியில்வந்து நுழையவும்,தேவர்கள்பலரும்
கூடிய ஆரவாரத்தைக்கேட்டு வருத்தம் நீங்
கி எழுந்திருந்தார். அப்படி உயிர்பெற்று

வருந்தத் திருத்தம்பியாரைக் கண்டமாத்திரத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர் பூரித்த தமது திருத்தோள்களால் தழுவிக்கொண்டு துக்கம் நீங்கினார். லோகத்தில் யாவருக்கும் உண்டாயிருந்த வருத்தமெல்லாம்போய் மயக்கமொழிந்தார்கள். ரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலானபேர்கள் நர்த்தனம் பண்ணினார்கள். கின்னரர்கள் சப்தஸ்வரங்களுள்ள வீணைகளை மீட்டித் தேவாமிர்தமுந் தோற்றுப்போகும்படி பாடினார்கள். லோகத்தவர்களெல்லாம் சந்தோஷ நர்த்தனம் பண்ணினார்கள். மஹா ரிஷிகளெல்லாம் வேதபாராயணம் பண்ணினார்கள். வேதபுருஷர் கோஷித்தார். வேதியர்களுடைய திருநாளம் விருத்தியானதுகள். தர்மம் ஓங்கிவளர்ந்தது. தேவர்களுடைய மனது குளிர்ந்தது. பிரஹ்மாஸ்த்ரமானது ஸ்வாமியைச்சுற்றிவந்து வணங்கி ஸ்வாமீ! தேவரீருடைய திருத்தம்பியார் பிழைத்துவிட்டார் இனி என்னால் அவருக்கு ஒருவிதகஷ்டமும் உண்டாகப்போகிறதில்லை, அதற்குத் தேவரீரிடத்தில் அடியேன்வராமையே சாக்ஷியாகும் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டது. அப்போது தேவர்கள் ஆநந்தகோஷமிட்டபடியாகத் தாயினு மிகுந்த அன்புடையவராகிய ஆஞ்சநேயனைச் சகலலோக நாயகராகிய ஸ்ரீராமபிரானானவர் அதிக சந்தோஷத்துடனே திருக்கண்களில் ஆனந்தபாஷ்பம் பொழியத்தக்கதாக மனமுருகித் தமது திருமார்பு இறுகத்தழுவினபோது ஆஞ்சநேயர் ஸ்வாமியினுடைய திருவடிகளில் வணங்கினார். அப்படிவணங்கின வாயுகுமாரனைப்பார்த்து அப்பா நல்லபிறப்பால் பிறந்த அருமையனே! நாங்களெல்லாம் முன்னுமே தசரதமஹாராஜருக்குப் பிறந்து அதிக துக்கத்தால் இந்தரணகளத்தில் மாண்டுபோய்விட்டோம். இப்போது மறுபடியும் உன்னுடைய வயிற்றில் நானும் இளையபெருமாளும் சுக்ரீவன் முதலான யாவரும் பிறந்தோம். ஐயா, வேதங்களைநிலைநிறுத்தின பிரதாபசாலியாகிய அஞ்சனை புத்திரனே? நாங்களெல்லாம் அழிந்துபோக எங்கள் பிராணங்களை யெல்லாம் உபகரித்த உன்னுடைய உபகாரத்துக்கு எங்களுயிரைத்தான் உனக்குப் பிரதிபலனாகக் கொடுத்தபோதிலும், அந்த உபகாரத்துக் கீடாகுமா? எங்களைப் பத்திரமாகக் காப்பாற்றி எங்கள்பங்கமெல்லாம் நீக்கி, எங்கள் வம்சங்களை யெல்லாம் நீயே ரக்ஷித்தாய், என் தம்பி மேற்பட்ட அம்புகளாலே அவன்மாண்டதால் இந்த ஏழுலோகமும் மாண்டதுபோல்காணப்பட்டது நானுன்னுபகாரத்துக்குப்பிரதியென்ன சொல்லப்போகிறேன். ஒருக்ஷணப்பொழுதுக்குள்ளாக நீஉதவிசெய்தாயே எங்கள் எல்லாரையும் இன்றைக்கு மாண்டுபோகவொட்டாமல் எங்கள்வாழ்நாளை எங்களுக்குஉதவிசெய்தாயானதால் நீ யொருக்காலும் வருத்தமும் நோயுமில்லாமல் சிரஞ்சீவியாக என்னாசிர்வாதத்தால் சந்தோஷமாக வாழ்ந்திருக்கக் கடவா யப்பா என்று ஆசீர்வதித்தார். மற்றபேர்களும், அநுமானுடையஉதவியால் தங்கள்தங்கள் உயிர்களைப்பெற்று மிகுந்த அன்புடையவர்களாய் அவரைச் சூழநின்று வணங்கி வாழ்த்தினார்கள். அப்போது சுக்ரீவமஹாராஜர் அங்கதர் முதலானவர்களைப் பார்த்துத் தாம் அந்தச்சஞ்சீவியை மலையுடனே கொண்டுவரவேண்டியதற்கு நேரிட்ட முகாந்தரங்களை யெல்லாஞ் சொன்னார். அதைக் கேட்ட சாம்பவர் வாயுகுமாரனைப்பார்த்து ஐயா, அதிபலவந்தரான ஆஞ்சநேயரே? நீர் கொண்டுவந்து உதவின சஞ்சீவிபருவத மிங்கேயே இருக்குமானால் பொய்யாளர்களான ராக்ஷசர்களில்மாண்டவர்கள்பிழைத்துக்கொண்டே யிருப்பார்கள். ஆகையா லிந்த மலையைக்கொண்டுபோய் மறுபடியும்அவ்விடத்தில் வைத்துவிட்டுவரவேண்டும் என்று நியமித்த உடனே அநுமான்கேட்டு, ஆம் இது மிகவும் நல்லபுத்திதானென்று அங்கீகரித்துக் கொண்டு இதோ ஒருநாழிகைக் குள்ளாகக் கொண்டுபோய் வைத்துவிட்டு வருகிறேனென்று அந்தத் தெய்விகமலையை மறுபடியுந் தூக்கிக்கொண்டு ஆஞ்சநேயர் வடதிசையை நோக்கிச்சென்றார்.

மருந்துப்படலம்
முற்றிற்று.

---

## களியாட்டப்படலம்.

ஸ்ரீராமர் சன்னிதியி லிப்படி நடக்க, லங்கையில் ராவணன் பிரஹ்மாஸ்திரத்தால் எல்லாரு மிறந்துபோனார்க ளென்று தன்னை யறியாத சந்தோஷங்கொண்டு கின்னர கந்தருவர்கள் தேவகானங்களைப்பாட, கண்கள் என்கிற கெண்டைமச்சியங்களை முகத்திலுடையவர்களான ஸ்திரீகள்கள்ளுண்டு மயங்கி யாடுகிறதைப் பார்த்துக்கொண் டிருந்

நால். ரம்பைகள் வித்தியாதரஸ்திரிகள், ரா
க்ஷசஸ்திரீகள், தானவஸ்திரீகள், நாகலோக
ஸ்திரீகள், யக்ஷஸ்திரீகள், சித்தஸ்திரீகள்,
இவர்களெல்லாங் கூட்டங்கூட்டமாகவந்தார்
கள். மேனகை, திலோத்தமை, ரம்பை,
ஊர்வசி முதலாகிய தேவஸ்திரீகளுடைய
பாதச்சிலம்புகள் கலீர் கலீரென்று சப்திக்
கும்படியாகவும், தேவதுந்துபியும், சங்கங்
களும், முருடுவாத்தியங்களும், முழங்கும்
படியாகவும், நர்த்தனம் பண்ணினார்கள்.—
புஷ்பமாலைகளைத் தரித்திருக்கின்ற சுருண்ட
குழல்களும், தொங்கிக்கொண் டிருக்கின்ற
குண்டலங்களும், சுருண்ட இதழ்களோடுகூ
டிய சொர்ன்னபுஷ்பங்களும், நெற்றித் தில
கமும், பிரகாசிக்கச் செவந்த இதழ்களினால்
மறைந்திருக்கின்ற முத்தையொத்த தந்தபந்
திகளும், தாமரை மலர்போன்ற செவந்த
கண்களும், காடுகளினாலே மூடப்பட்ட சந்
திரனைப்போல அளகபாரம் சோர்ந்துவிழ,
முகங்களும் விளங்கிக்கொண் டிருந்தனகள்.
இளங்கிரணங்களை வீசுகின்ற தந்தபந்திக
ளுடைய இளஞ்சந்திரிகையும், மிகுந்த ஒளி
யை வீசுகின்ற ரத்நாபரணங்களுடைய இள
வெயிலும், சொர்ணம்போலப் பிரகாசிக்கி
ன்ற தீபங்களையுந் தோற்கடிக்கும் படியான
தேஹ காந்திகளும், பிரகாசிக்கின்ற படியி
னாலே, அந்தப் பிரகாசங்கண்டு அவர்களிடத்
தில் மோகங்கொண்டு மயங்கித் திரிகின்றவர்
களைப்போலவே, ராத்திரிகாலமும் மயக்கங்
கொண்டு அங்கங்கே தத்தளித்து மறையும்ப
டியாய் விட்டது. பெருங் கல்விச் செல்வ நி
றைந்த குற்றமற்ற வழியிலே நடந்து முத்தி
ன்பயனாகிய அதனர்த்தத்தைஅனுபவித்துப்
பெரியோர்களுடைய சாஸ்திரத்தில் பழகித்
தேர்ந்தும், பின் பிரயோசன மோக்ஷநெறி
யை உபதேசித்தும் அதில் விசுவாசங் கொள்
ளாத அறிவீனனைப்போலவும்,வஞ்சகனாயிரு
க்கு மொருவன் கற்பனை செய்த மாறுபாட்
டைப் போலவும், குடித்த கள்ளினுடைய
வேகமானது அவர்களுடைய தேஹ முழுவ
தும் நிறைந்துவிட்டது. ஒவ்வொருவரும் அ
டிக்கடி சிரித்தார்கள். தேஹத்தில் வெயர்
வை யுண்டாயினது. இதழ் துடித்தது. முல்
லைபரும்பையொத்த பற்கள் வெளியே தோ
ன்றின. வேல்போன்ற கண்கள் கடை செ
வந்தன. புருவங்கள் வளைந்தன. வாய் வெ
ளுத்துப் போனது. அளகபாரம் அவிழ்
ந்து அவர்களுடைய அவயவங்களை மறைத்
துக்கொள்ளவும், தரித்துக் கொண் டிருந்த
சேலையும், மேகலா பரணமும், சிலம்புக ண
ணிந்திருக்கின்ற மாந்தளிர் போன்ற பாதங்க
ளின்மேல் நழுவி விழுந்துவிடவும், ஸ்திரீக
ளெல்லாம் மயங்கிச் சோர்ந்து விட்டார்கள்.
கோர்த்த மணிகளாலாகிய மேகலா பரணங்க
ளும், வஸ்திரங்களும், அவிழ்ந்து உதவாம
ல் இழிமக்களைப்போல அவர்களை அவமானப்
படுத்த யத்தனித்தன. அவர்களுடைய அளக
பாரமானது - தம்மைச் சேர்ந்தவர்களுக்கு
எவ்வித இக்கட்டு வந்த போதிலுந் தாங்கள்
செய்யத்தக்க பெரிய உபகாரமே செய்வது
போல அவர்களுடைய மானத்திற்குப் பங்
கம் வரவொட்டாமல் காப்பாற்றினது. மன்
மதன் தூணியிற் போட்டு விட்ட அம்பைப்
போலத் தங்கள் காமசேஷ்டையைச்செய்து
மாந்தர்களை மயங்கச் செய்து கொலைத்
தொழிலைவிட்டுச் சொருகின கண்களையுடை
ய ஸ்திரீகள்பாடும் பாணிதப்பித் தாளமாத்தி
ரையுங் கடந்து தந்திரிவழியே குரலைச்சோக்
காமல் சுதியழிந்த மார்க்கமாய்ச் சுரமழிந்த
பாடலைப் பாடினார்கள். புல்லங் குழலினால்
பாடும்பாட்டிற்கு நயமாய்ப் பாடாமல் அ
தன் சுதிக்கு விரோதமாகக் கனசுதியைக்கொ
ண்டு அந்தச் சுதியை மாற்றிக் குறைவில்லாத
ருசியையுடைய பாலின்மேல புளித்த தேனைக் க
லந்தாற் போலக் கள்ளுண்ட மயக்கத்தால்
வெடித்தகுரலால் எச்சுச்சுதியிற்பாடினார்கள்
ஆரியக்கூத்தில் எல்லா வேடிக்கைகளையுங் க
ண்டபோகளுக்கு இந்திரஜால வித்தையைக்
காட்டுவதுபோலப் பாடும்பாட்டின் பாவனை
களைத் தங்கள் அவய வங்களாற் காட்டுஞ் சம
ர்த்தர்களான ஸ்திரீகள், தங்கள் கண்களால்
பதாதி வீரர்களைக் காட்டி, வாயால் யானை
யை வெளியிட்டு, கைகளின் அபி நயத்தால்
தேரின் வடிவத்தைக் காட்டிப் பின் நடக்கப்
போகிற கெடுதிக்கு உற்பாதமாக விருந்தார்
கள். முன் அழுவதைப்போலக் காட்டிப் பி
ன் சிரிப்பார்கள். பாடி ஆடுகின்றவர்களை வ
ணங்குவார்கள். தாம் பாடுவதையும் ஆடுவ
தையும் விட்டுத் தூங்குவார்கள். பவளம்போ
ன்ற வாயில் சொன்னவழிய விடுவார்கள். ம
யக்கத்தால் சோர்ந்து ஒருவர்மேல் ஒருவர்
விழுவார்கள். கண்கள் உறங்கத் திமிர்விட்டுக்
கொண்டு போய்ச் செத்த உருவத்தின் மாதி
ரியாய்க் கள்ளுண்ட மயக்கத்தால் விழுவது
போலத் தங்களுள்ளத்திலுள்ள நினைப்பைத்
தங்கள்செய்கையால்உணர்த்தினார்கள். எல்லா
ஆசைகளையும் நீக்கி அகங்கார மமகாரங்களை
க் கொடுத்த சுத்தமான மனதையுடையவர்க

ளான ரிஷிகளுக் கெல்லாம் மயிர்க் கால்கள் தோறும், காமதிர் காத்து வல்லிகளைப் போலப் பிறழுகின்ற நோக்கத்தையுடைய ஸ்திரீகளின் சிறந்த நீலோற்பலத்தையொத்த கண்கள் செந்நிறமாய் மாறவும், செவந்த இதழ்கள் வெண்மையாய் விடவும், கங்கணங்கள் பூண்ட கைகள் இருட்டு ராக்ஷசர் களுக்கு முடி வுண்டாகின்ற தென்று தெரிவிக்கவும், செண்பக மலர்போன்ற மேனி யெல்லாம் ஒளி மாண்டு செத்த தேஹத்தைப்போலப்போயிவிட்டது. சேல்கெண்டை, யமன், வேல், மன்மத பாணம், என்று இவைகளை யொத்ததாயிருந்த போதிலும், அவைக ளுடைய லக்ஷணங்களை யெல்லா மிழந்துவிட்ட பெரிய கண்களையுடையவர்களான ஸ்திரீகள் தங்கள் ஸ்தனங்களின் மீது அசைந்து கொண்டிருக்கின்ற சொரிந்த தாலிக் கயிற்றையும், காஞ்சியென்னும் மேகலா பரணத்தையும், வஸ திரத்தையும், கிளர்ந்த மேகத்திற்குச் சமமாகிய அளகபாரத்தைச் சேர்த்துக் கட்டினார்கள். முத்தொளிறுத் தவிர வேறொன்றையுஞ் சமானஞ் சொல்லப் போகாத தந்தபந்திகளையுடைய ஸ்திரீக ளிந்தப் பிரகாரமாக அலங்கோலப்பட் டிருக்கின்றதைக் கண்குளிரப் பார்த்துக் கொண்டு அரசிருந்த போது, வானரவீரர்கள் ஆரவாரித்த பேரோசை யானது மகோந்நதனான அந்தராவணனுடைய இருபது செவிகளிலும் வந்து நுழைந்தது. அப்படி அந்த வானர வீரர்கள் ஆர்ப்பரித்த ஓசையானது வந்து நுழைந்த உடனே நாட்டியங்களும், கள்ளுண்ட மயக்கமும், தாளமாகப் பாடுகின்ற பாட்டுகளும், மத்தளத்தில் கதியும், பவளம் போன்ற வாயையுடையவர்கள் பிணங்கும் பிணக்கும், அவர்கள் கடைக்கண்பார்வையும், அவர்களுடைய கொஞ்சமொழியும், எல்லாம் ராவணனுக்கு வாடின புஷ்பத்தைப்போல வெறுப்பாய் விட்டன. யானைகளுடைய மதமொடுங்கவும், குதிரைகள் உறங்கிவிடவும், ராக்ஷசர்கள் பயங் கொள்ளவும், வீரகண்டா மணியைத் தரித்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடைய தெய்வத்தன்மைபொருந்திய வில்லின் குணத்தொனியானது பாற்கடல்கடைந்தபோது பிறந்த பேரோசையைப்போலத் திடுதிடென்று ஒலித்தது. முத்துக்களைத்தோற்கடிக்கும்படியான தந்தபந்திக ளமைந்த வாயையுடைய முகங்களுள்ளவர்களும், தங்கள் கண்களென்கின்ற வேலாயுதத்தால் குத்துகின்றவர்களுமான ஸ்திரீகளின் கூட்டங்கள் ராவணனுடையகண்களுக்கு வானரவீரர்களுடைய கூட்டங்களைப்போலத் தோற்றினார்கள். மந்தரகிரியால் மறுக்கமடைந்த கடலைப்போலத் தம்மனது கலங்கி தன்முகங்களாகிய பத்துச் சந்திரர்களுக்கும், அன்றைய ராத்திரியானது பகலைப்போலிருந்தது. தூதுபோய் வண்டிலிருபமாய்வந்தராக்ஷசர்கள் ராவணனுடைய மாலையில் மீதுபோயேறிப் பகையாளிகள் ஒரு துன்பமுமில்லாமல் பிழைத்தார்களென்றும் இன்னும் அங்கேநடந்த சேவுக்காரியங்களை யெல்லாம் விவரமாகச்சொன்னார்கள். இதையுங்கேட்டுக் கொதிகொதிக்கின்றமனதுடனே சம்பகப்பூப்பந்தலைவிட்டு மந்திராலோசனை மண்டபத்திற்கு வந்துசேர்ந்தான்.

களியாட்டப்படலம்

முற்றிற்று.

## மாயாசீதைப்படலம்.

இப்படி ராவணன் ஆலோசனைச்சபைக்கு வந்தவுடனே இந்திரஜித்து, மகோதரன்முதலான மந்திரிகள், விருத்தர்கள், பின்னும் மந்திராலோசனைக்கு வரத்தக்கவர்கள் எல்லாம்வந்து ராவணனைச்சூழ நிறைந்தார்கள். நடந்தகாரியங்களை யெல்லாம் ராவணனே அவர்களுக்கு விவரமாகத் தெரிவித்தான். அப்போது மாலியவான் இந்த லங்கையிலிருந்து ஒரு க்ஷணநேரத்திற்குள்ளாக மேரு பர்வதமும் பின்னிடும்படிப்பாய்ந்து வல்லமையுள்ள சஞ்சீவிமருந்துள்ளபர்வதத்தைக் கொண்டுவருகிறதற்கு வல்லவன் வெற்றிமாலையைத்தரித்த தோள்களையுடைய அநுமானேயாகவேண்டும். ஏனென்றால், சமஸ்தமான லோகங்களுக்குங் காரணவஸ்துவான ஸ்ரீராமமூர்த்தியையும், புருஷகார பூதையான பிராட்டியையும், உள்ளபடிகண்டிருக்கிற மஹாநுபாவனுகையிலே நம்முடைய சேனைகளில் மாண்டுபோனவைகளை யெல்லாம் கடலிற்கொண்டுபோய்ப்போடாமல் ரணக்களத்திலேயே யிருக்கச் செய்திருப்போமேயானால்அவர்களெல்லாமிந்தச் சஞ்சீவிக் காற்றுப்பட்டுப் பிழைத்துவிடுவார்களல்லவா? எப்போதுபிரஹ்மாஸ்திரம்பழுதுபட்டுப் போய்விட்டதோ! இனி அவர்களுக்கு ஒரு இடையூறுமுண்டாகமாட்டாது. இந்தலங்கையென்ற மலையை இந்தச் சமுத்திர மத்தியிலிருந்து பெயர்த்துப் பூமியிழியும்படி யெறிந்தால் அதைத்தடுக்கிறதற்கு நம்மிலாரிருக்

இன்றார்கள். நாமவர்களுடனே சண்டைசெய்ய முடியுமோ? அந்த அநுமான் மேருமலையைப் பிடுங்கிக்கொண்டுவந்து இந்தஊரின்மேலே யெறிவானானால் அதை விலக்குகிறதற்கு ஒருவராலாகுமோ! இந்த அநுமான் லோக சிருஷ்டியின் முறைமையைக் கெடுத்து மாற்ற வேண்டுமானாலு மாற்றிவிடுவான். ஆதியும், அந்தமும், அபூர்த்தியும், இல்லாத ஸ்ரீமந்நாராயணனுடைய கலியாண குணங்களைச்சொல்லவற்றிற் குற்றமற்ற வேதங்களால் கூறுகின்ற மூர்த்திகள் மூன்று பேர்களென்பது ஆலோசியாமல்தான் சொல்லி வைத்ததோ? அநுமானோடு சேர்த்து நாலு மூர்த்திகளென்றே நாமெல்லாம் அங்கீகரிக்க வேண்டும், இறந்து போனவர்களெல்லாம் இறந்து போனவர்களாகவே போக வேறே பிறவி பிறந்தவர்களைப்போலிருக்கிற நாம் பிழைக்க வேண்டிய மார்க்கத்தை மறந்து போனோமே ஆனபோதிலும் இனியாவது ஜானகியை மரியாதையுடனே கொண்டு போய் விட்டுத் தர்ம்ம சீலர்களான ஸ்ரீராம லக்ஷ்மணர்களை அடைக்கல மடையலாம், ஐயா! ராவணேஸ்வரா? என்றுசொல்லிப் பின்னும் மேல் விளையுங் காரியங்களை யெல்லாம் நன்று யறிந்தவனான மாலியவான் ராவணனைப் பார்த்து ஐயா! ராவணா? இந்தச்சமுத்திரத்தைப் பானம் பண்ணவல்லவர்களாய் ஆகாசத்தையும் பூமியையும்ஒன்றாய் மறைக்கும் படியான ஆயுத வல்லமையுள்ளபெரிய ராக்ஷசவீரர்களெல்லாம்இறந்துபோனார்கள். இன்னம் இந்தலங்கையும்நீயும், உன்பிள்ளை இந்திரஜித்து ஒருவனுமேதான் இருக் கின்றீர்கள். வேறே வீரர்களென்று சொல்லும்படி யானவர்கள்யாரிருக்கின்றார்கள். ஒருவரைக் காட்டு பார்ப்போம், இனிநாம் வெற்றி யடைவோமென்பது கனவிலும் நினைக்கப் போகாது. சூலாயுதத்தைக் கையிலுடைய உமாபதி யாகிய ருத்திர மூர்த்தியைக் கயிலாச பர்வதத்துடனே பேர்த்தெடுத்த வெற்றித் தோள்களையுடைய ராவணேஸ்வரா? ஒரு பாணத்தால் வாலியைச் சுவர்க்கத்தி லேற்றிச் சமுத்திரராஜனை ஜெயித்துக்கும்பகர்னனைமாளும்படிச் செய்தஅந்தஸ்ரீராமனை மழையிலுண்டாகும் குமிழிக்குச் சமமான இந்த ராக்ஷசர்களோ, போர்க்களத்தில்வெல்லச்சமர்த்தர்கள்.என்று சொன்னமாலியவானுடையயதார்த்த வார்த்தையைராவணன்கேட்டுக்கண்களில்அக்கினிப் பொறி பறக்கப் பார்த்து ராக்ஷசர்களெல்லாம் மாண்டாலுஞ்சரி நம்மிடத்திலுள்ள அளவில்லாத ஆயுதங்க ளெல்லாம் அழிந்தாலுஞ் சரி மிகுந்த அழ குடையவளான அந்தச் சீதையை என் ஆசையைக் கெடுத்து மறுபடியும் விட்டு விடுகிறதற்காகவா? நான் சிறைபிடித்துக் கொண்டு வந்தேன். என் பிள்ளைதானென்னத்திற்கு, மற்ற பந்துக்கள் தானென்னத்திற்கு, பயந்து உயிர்வாழவேண்டுமென்று எண்ணி யிருக்கின்ற நீங்க ளெல்லாரும் பிழைத்துப்போய்விடுங்கள். நாளைக்கு நான் ஊழித்தீயைப் போலப் புறப்பட்டு மனிதர்களையும், குரங்கு களையும், சிந்தச் சிதறடித்துப் போடுகிறேன் என்றான். அப்போது இந்திரஜித்துத் தகப்பனைப் பார்த்து ஐயா, உமக்கு அங்கீ கரிக்கக் கூடுமானால், எனக்குத் தெரிந்த காரிய மொன் றிருக்கின்றது. நான் பிரஹ்மாஸ்திரத்தை அக்கினி முன்னிலையிற் பூசைசெய்து அந்த ஸ்ரீராமன் மீதும் பிரயோகித்தேன். அது அவனுடைய மேனியைத் தொடாமலே வந்துவிட்டது. ஆகையால் அவன் மனிதனல்லன், தேவனுமல்லன், ரிஷியுமல்லன், விபீஷணன் சத்திய மாகச் சொன்னயானெனதென்னும்செருக்கற்றவர்களால்தியானிக்கப்படுகின்ற ஸ்ரீயப்பதியே? இப்படி யவதரித்தானென்று சந்தேகமில்லாமல் தெரிந்து கொண்டேன். அது நிற்கட்டும் அதைச் சொல்லுகின்றதுவீரலக்ஷணத்துக்குப் பொருந்தாது. வருகிறது வரட்டும் ஐயா வீரவானே இன்னொரு தந்திர மிருக்கின்றது. நான் நிகும் பலைக்குப் போய் அந்த யாகத்தைச் சீக்கிரத்தில் செய்து முடித்தால் நம்முடைய சேனைகளெல்லாம்பிழைத்து நமக்கு உண்டாயிருக்கின்ற துன்ப மெல்லாம் நீங்கிவிடும் என்றான். இதைக்கேட்ட ராவணன் ஆம் அது நல்ல காரியந்தா னப்பா அப்படியே பரிவாய் நிகும்பலை யாகஞ் செய்யக் கடவாய் என்றான். இந்திரஜித்து, அந்த யாகம் நான் செய்கிறதை உன் தம்பி விபீஷணன் அவர்களுக்குச்சொன்னால் அந்தப்பகையாளிகள்வந்து நான்செய்கிற யாகத்தை முடியாதபடி அழித்துவிடுவார்களேயென்றான். அதற்குராவணன்அவர்கள்வராதபடிச் செய்கிறதற்கென்ன உபாயம்பண்ணலாம்என்றான்.இந்திரஜித்து ஐயா? ராவணேஸ்வரா, ஜானகியைப்போல ஒரு ராக்ஷசியை ஏற்படுத்திக் கொண்டு போய் அநுமான் கண் முன்னிறுத்தி என் கைவாளால் அந்த மாயா சீதையைக் கொன்றுவிட்டு என் சேனையோடுங்கூட அயோத்திக்குப் போகிறேனென்று வழிகாட்டிவிட்டுப் போய்விட்டால் அவர்களெல்லாம் அந்தத்

நாக [illegible] இறந்துபோய் விட்டான். இனி நமக்கிடத்தி லிருப்பதினால் பிரயோஜனமில்லை. அவ்விடத்தில் நம்முடைய தம்பிமார்களும், தாய்மார்களும், மற்ற பந்துக்களும், நம்முடைய பட்டணமும் அழிந்துபோய் விட்டதே என்கிற வருத்தத்தினால் [illegible] சேனையும், தாங்களுமாய்ப் போய் விடுவார்கள். அப்படி யவர்கள் போகவிட்டாலும், அனுமானையாவது அவ்விடத்தில் கண்டு நடந்த காரியத்தைத் தெரிந்து கொண்டாமலே யல்லாமல் தங்கள் வியசனத்தைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள். அதற்குள்ளாக நான் நிகும்பிலைக்குப் போய் யாகத்தை முடித்துக்கொண்டு அதிலுண்டாகிற ஆயுதங்களினால் அவர்களையெல்லாம் கொன்று உனக்கு வெற்றியை உண்டாக்குகிறேன். என்று சொல்லக் கேட்டு ராவணன் அப்படிச் செய்கிறது நல்லதென்று சமாதானப்பட்டான். சீதா பிராட்டியைப்போல மாயஞ்செய்து கொண்டுவருகிறதற்கு இந்திரஜித்துப் போனான். இவ்விடத்தில் இப்படியிருக்கச் சுக்கிரீவ மஹாராஜர் ஸ்ரீராமமூர்த்தியைத் தண்டன் சமர்ப்பித்து ஸ்வாமி ! இந்த லங்கைக்கோட்டையைச் சீக்கிரமாகச் சுட்டுவிடுகிறோமென்றார்கள். ஸ்ரீராமரும் அதற் கிசைந்து அப்படியே செய்யுங்களென்றார். பதினெழு வெள்ள வானர சேனைகளும், ஆளுக் கொரு கொள்ளிக் கட்டையைக் கையி லெடுத்துக் கொண்டு சுக்கிரீவ மஹாராஜருடனே புறப்பட்டுப் பாய்ந்து லங்காபட்டணக் கோட்டையைப் போய்ச் சேர்ந்து கோட்டை வாயிலில் வெள்ளை நிறத்த மேகங்கள் மின்னல்களை வரிசைவரிசையாக மின்னிக் கொண்டு நுழைகிறதுபோல அங்குள்ளவர்க ளெல்லாம் பீதியடையும்படியாகவும், நாலு பக்கங்களிலும் இந்த லங்கைக்கு நாசகாலம் வந்து விட்டதென்று சொல்லத்தக்க தாகவும், வானர சேனைகள் ராத்திரியில் நக்ஷத்திரங்கள் பூமியில் விழுகிறதுபோல அளவில்லாத கொள்ளிக் கட்டைகளை வீசியெறிந்தார்கள். யானைகளை யொத்த வானரங்கள் வீசியெறிந்த அந்தக்கொள்ளிக்கட்டைகள் ஸ்ரீராமமூர்த்தி சமுத்திரத்தில் விடுத்த அக்கினி யாஸ்திரங்களைப் போல வஞ்சகனான ராவணனுடைய லங்கையின் மீது மேலும்மேலும்போய் விழுந்தன. இப்படி நெருப்புக் கொள்ளிகள் லங்கைக்கோட்டை மீது நெருங்கின உடனே லங்கா பட்டணமானது ஸ்வாமி பிரயோகித்த அஸ்திரங்கள் பட்டுச் சமுத்திரம் வேகிறது போல வெந்தது. பெருங்காட்டில் நெருப்புப்பற்றி யெரிகிறபோது அதில் வாசஞ்செய்திருந்த பக்ஷிசாதிகள் சப்தித்துக்கொண்டு ஆகாசத்திலே மூழ்கினதுபோல லங்கையிலுள்ளவர்களெல்லாம் பெருங்கூச்சலிட்டுக் கொண்டு அந்தரத்தி லெழும்பிப் போனார்கள். மூன்று லோகத்தவர்களாலும், நித்திய சூரியர்களாலும், வணங்கும் படியான வில்வீர சிகாமணியாகிய இளையபெருமாளும், ஸ்ரீராமமூர்த்தியும் நிபத்துக்குச் சமமான சிலபாணங்களைப்பிரயோகிக்க லங்கையிலுள்ள மாடகூட கோபுரங்களெல்லாம் மலைகளைப்போல இடிந்துவிழுந்தன. இங்கே யிப்படி நடந்துகொண்டிருக்கும் போது, தம்முடைய திருக்கைகளைச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு போய் மருத்துமலையைப் பேர்த்தெடுத்துக் கொண்டு வந்து மறுபடியும் அதை மேருமலைக் கப்புறத்தில் வைத்து விட்டு வரப்போன ஆஞ்சநேயர் வந்துசேர்ந்து வீரகர்ஜ்ஜனை செய்தார். அந்த ஓசையைக் கேட்ட அந்த லங்கைப் பட்டணத்தி லுள்ளவர்கள், சிறகுகளையுடைய கருடபகவான் சிறுவதைக் கேட்ட பாம்புக்குலங்களை யொத்துப் பயந்தார்கள். இப்படி மேற்கு வாசலில் வந்துசேர்ந்த வாயுபுத்திரருக்கு முன்பாக எல்லாத் தந்திரங்களிலுஞ் சமர்த்தனும் யமனையுஞ்செயம்பெற்றுச் சொட்டுப் போட்டவனுமான இந்திரஜித்து வந்து சானகியைப் போல ஒருமாயப் பெண்ணை உண்டாக்கி அவளுடைய தலைமயிரை இடதுகையில் பற்றி வலதுகையி லொருவாளை யுருவிக்கொண்டு அதிக கோபத்துடனே சில சொற்களைச் சொல்லத் தொடங்கினான். நீங்கள் இவள் நிமித்தமாக வந்து இவ்வளவு சண்டை செய்தீர்கள் அல்லவா, இப்போது என் பிதாவாகிய ராவணேஸ்வரன் ! இவளை வெறுத்துத் தள்ளிவிட்டான். நானிவளுடைய ஆவியை இதோ உண்டு விடப் போகிறேனென்று சொன்னதைக் கேட்ட ஆஞ்சநேயர் புத்திமயங்கி பரவசப் பட்டு அந்த மாயா சீதையைப்பார்த்து இவர்தானே நாம்கண்ட சீதாபிராட்டியார் ஐயோ, நம்முடைய வாழ்வு போய் விட்டதேயென்று மனம் வெயர்த்து அதைத் தடுக்கிறதற்கு வேண்டிய ஒரு உபாயமுந் தோற்றாதவராகி, உயிருண்டோ இல்லையோ வென்னும்படி வாயுலர்ந்து மூர்ச்சையடைந்து தெளிந்து இனிச் செய்கிறதற்கு வேறே செயலில்லை நிதிவார்த்தையைச் சொல்லலாமென்று நினைத்து ஐயா, உயர்

ந்த யக்ஷகுலத்தில் பிறந்து நல்ல குணமுடையவனு யிருக்கின்றும்ப, ஒரு பெண்பிள்ளையைக் கொல்லுகிறது நீங்காத பழியான தல்லவா? பிரஹ்மவம்சத்தில் நாலாந் தலைமுறையா யிருக்கின்றாய், மேலும் சாஸ்திரங்களை யெல்லாந் தீரக் கற்று மிருக்கின்றாய், ஒரு பெண் பிள்ளையை வதை செய்கிறது பென்ன பழி யென்று நீயறிய வில்லையா! பூலோகத்தாரெல்லாம் வருத்தப்படுகின்றார்கள். தேவர்களெல்லாம் நடுங்கிக்கண்கூச்சம் அடைகின்றார்கள். அதுகளை நீகண்ணுலேயா வதுபார். உனக்குத் கொஞ்சமாவது இரக்கமென்பதில்லையே பெண்கொலைசெய்கிறது பெரும்பழி யல்லவா? உன்பிதா வெறுத்துவிட்டபடியினலே என்னிடத்தில் கொடுத்துவிட்டுப்போய்விடு, அப்படிச்செய்வாயேயானல் இந்த மூன்றுலோகமும் உனக்கு வசமாய்விடும். நல்லவெற்றியை நீயறியவில்லையோ? அற்பக்காரியத்தைச்செய்கிறதினுல் புகழுக்கு அழிவுண்டாகும் என்று சொல்லக் கேட்ட இந்திரஜித்து எந்தகப்பனுக்கு வேண்டாத இவளை உன்கையில்கொடுப்பேனேயானுல் எனக்குப்புகழுண்டாகுமா? இவளை யென்வாளால் வெட்டி யெறிந்து விடுகிறேனென்று கோபித்துப் பின்னும் அடா குரங்கே! இவள் போய்விட்டாள் உங்களுக் கிவளிடத்தி லாசைவேண்டாம், உங்களுக்கு அயோத்திவேண்டுமானு லதைக் காத்துக்கொள்ளுங்கள்போங்கள். அதை இதோகரியாகச் சுட்டுவிட்டு வரப்போகிறேன். அங்கேயிருக்கின்ற தம்பிமார்களும், தாய்மார்களும், மேதவர்கள் விலக்கினபோதும் பிழைக்கவிடமாட்டேன். அக்கினியைப்பொழிகின்ற என்னுடைய பாணங்களினுல் அவர்களெல்லாம் மாண்டுபோய்விட்டார்களென்று நம்புங்கள். இப்போதேபோகின்றேன் வேகமாய்ப்போகிறதற்குப் புஷ்பகவிமானத்தில் போகப் போகிறேன் அவர்கள் தப்பிவிடுவார்களென்று நினைக்கவேண்டாம் என்னுடையபாணங்கள் லகுவானவைக ளல்லவாக்கும் என்று வேகப்பட்டான். அப்போது அந்த மாயாசிதையானவள் ஐயா, எங்களாண்டவரே! என்னைக்கொல்லாமல் கிருபைசெய்து விட்டுவிடும் என்று அநேகவிதமாகக் கெஞ்சிக்கேட்கவும், கொஞ்சமும்இரங்காமல் தன்கைவாளினுல் அவளை ஒரேவீச்சாக வீசிவிட்டுக் கடலைப்போலுஞ் சூழ்ந்துவருகின்ற சேனையுடனே புறப்பட்டுத் தெற்கிலிருந்து வடக்குமுகமாகப் பொன்மயமான புஷ்பகவிமானத்திலேறிக்கொண்டு இந்திரஜித்துப்போய்விட்டான். இதைக்கண்ட வாயுகுமாரர் ஒன்றுந்தோற்றாமல் பிரமித்து மனஞ்சோர்ந்து மேருமலைசாய்வதுபோலமூர்ச்சித்துக் கீழே விழுந்துவிட்டார். அப்படிப்போன இந்திரஜித்துத் திரும்பி நிகும்பலைச்சாலைக்குப்போய்விட்டான். ஆஞ்சநேயர் உயிர்வாடி, உடல் சோர்ந்து, மனங்கலங்கித் தளர்ந்து, அன்னை நீதுக்குச்சமமான சீதாபிராட்டியாரே யென்பார். பெண்களுக்கு அருங்கலநாயகமே யென்பார். என்தாயேயென்பார். கொஞ்சமாவது தெய்வ அருளில்லையோ என்பார். ஐயோ! இந்த அற்பக்காரியத்தைச்செய்யக் கண்டும், பாவியாகிய என்னுடைய மனது பின்னப்பட்டுப் போகவில்லையே என்பார். இப்படியாக ஆஞ்சநேயர் தன் பலமெல்லாம் ஒடுங்கி எழுந்திருந்து இந்திரஜித்துவின் மேல் பாயநினைப்பார். மிகுந்ததுக்கத்தினுல் தள்ளாடிக் கீழேவிழுந்து பெருமூச்சுவிட்டு அழுது புலம்புவார். ஒருபக்கமாய்ப்போய் வருத்தப்படுவார். நெருப்புப் பறக்கும்படி மூச்சுவிடுவார். உடல்நடுங்குவார். தலைமேற் கையைவைத்துக்கொண்டு பூமியில் மோதி விழுவார். இப்படியாகப் புலம்பத்தொடங்கினுர்.

## கவி.

முடிந்ததுநந்தமெண்ண ... ...*
மூவுலகிற்குங்கங்குல்... ... *
விடிந்ததென்றிருந்தேன்மீள ... ... *
வெந்துயரிருளின்வெள்ளம் ... *
படிந்ததுவினையின்செய்கை ... ...*
பரந்ததுபாவிவாளால் ... *
தடிந்தனன்றிருவையன்றே ... ... *
தவிர்ந்ததுதருமமம்மா. ... (௧)

பெருஞ்சிறைக்கற்பினுளைப் ... ... *
பெண்ணினைக்கண்ணிற்கொல்ல *
இருஞ்சிறகற்றபுட்போல் ... ...*
யாதுமொன்றியற்றலாற்றேன் ... *
இருஞ்சிறையழுந்துகின்றே ... *
னெம்பிரான்றேவிபட்ட ... ...*
அருஞ்சிறைமீட்டவண்ண... ... *
மழகிதுபெரிதுமம்மா... ...(௨)

பாதகவரக்கன்றெய்வப்... ... ..*
பத்தினிதவத்துளாளைப் ... *
பேதையைக்குலத்தின்வந்த ... ... *
பிழைப்பிலாதாளைப்பெண்ணைச் *

மைவிட்டு நீங்கி அடியேனுடைய உடலிறை
ந்து அற்பஉயிர்கழியாமற்போனேன். உம்
மைப்பிடித்துக்கொண்டுவந்து நின்ற அந்தத்
திருட்டுப்பயலைக் கொல்லுகிறதற்குப் பின்
னிட்டுப்போனேன். உம்மையென்னெதிரே
கொல்லும்படிப் பார்த்துக்கொண்டிருந்தே
ன். இப்படிப்பட்ட நான்கலத்திற் போட்ட
வென் சோற்றை யுண்டுகொண்டிருந்து பி
ழைக்கும்படியாக இருக்கிறேன். நான்சாமா
ன்யமானவனே! ஒருவனிருக்கின்றேனே!
என்று நின்று அழுது அந்தத்திருட்டுப்பயல்
அயோத்திக்குப் போகிறேனென்று சொன்
னான். அப்படியே போயுமிருக்கிறான். நா
மவனைத் தொடர்ந்துபோனால் நம்முடைய
ஆண்டவனுக் கிங்கே நடந்தகாரியந் தெரி
யாது, நாம் வந்ததும், அறியமாட்டார். இ
னி நாமென்னசெய்யலாம் என்று இரக்க
முற்றுத் தெளிந்து நல்லது நடந்தகாரியங்
களை லோகநாயகரான சக்கரவர்த்தித் திரும
கனாரிடத்தில் விண்ணப்பம் பண்ணிவிட்டு
மாண்டுபோகின்றேன். இல்லாவிட்டால் அவ
ராலோசனைபண்ணி நியமித்தபடிச் செய்கி
றேன். வேறே தீர்மானம் ஒன்றுமில்லை யெ
ன்று அழகிய பருத்த திருத்தோள்களையுடை
ய வீரசிகாமணியாகிய தசரதகுமாரருடை
ய திருவடிப் பக்கல்சேர்ந்து, ஆண்சிம்ஹத்
துக் கொப்பான ஸ்ரீராமபிரானுடைய வீ
ரகண்டாமணியை யணிந்த திருவடிகளிலே,
தேஹமும், மனதும், கண்களும், உயி
ரும் வாடி, பெருங்குரல் கொண்டழுது
பெருமூச்சு விட்டுக்கொண்டு, தேஹமெல்
லாங் கண்ணீரருவி யாறுக ஓடும்படி பெரு
மலைபோலவீழ்ந்தார். வீழ்ந்த ஆஞ்சநேய
ரைப் பெரியபெருமாள் கடாக்ஷித்து நடந்
ததென்ன சொல்லென்று கையைப்பற்றித்
தூக்கினபோதுஞ் சகிக்கமாட்டாமல் மிகுந்
ததுன்பங்கொண்டு ஸ்வாமீ! வருத்தப்பட்
டுக்கொண்டிருந்த சீதாபிராட்டியாரை அந்த
ராக்ஷசன் கூரியவாளாயுதத்தால் வெட்டியெ
றிந்துவிட்டானென்று சொல்லிப்போட்டுப்
பூமியில் வீழ்ந்து புரண்டுபுரண்டு அழுது
மூர்ச்சித்துத் தேஹம் அசையவில்லை, மூச்
சுவிடவுமில்லை, கண்ணுஞ்சிமிட்டவில்லை, கண்
களில் நீருஞ்சொரியவில்லை, ஒன்றும்பேசவு
மில்லை, அழுது தேம்பவுமில்லை, அழுது பூமி
யில்விழவுமில்லை, சாகவுமில்லை. இப்படிஆஞ்
சநேயருக் குண்டான துன்பமென்னத்தின
லென்று தேவர்களுக்குந் தோற்றவில்லை.
ஆஞ்சநேயர் சொன்னவார்த்தையைக் கேட்
ட மாத்திரத்தில் வானரசேனைகளெல்லாம்
துடித்து அறிவுசோர்ந்து பெரிய வாடைக்
காற்றில் அகப்பட்ட விருக்ஷங்களைப்போல
நடுங்கிக் கற்பகவிருக்ஷம்போ லெழுந்தருளி
யிருக்கின்ற ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியின் திரு
வடித்தாமரைகளின்மீது மலைகள் விழுந்தது
போல வீழ்ந்தழுதார்கள். மஹாவீரரான
ஸ்ரீராமர் சித்திரப் பிரதிமைபோல் அறிவு
சோர்ந்து தமது நண்பர்கள் முகத்தையும்
பாராமல் இளையபெருமாள்கேள்விக்கும் பி
ரதியுத்தரங்கூறாமல் பித்தர்களுஞ் சகிக்கமு
டியாத அபிமானமென்கிற வேலாயுதம் மா
ர்பில்தைக்க, உயிரிழந்தவனைப்போலப் பூமி
யில் சாய்ந்து வீழ்ந்தார். இப்படி வீழ்ந்த
ஸ்ரீரகுநந்தனருடைய தன்மையைப் பார்த்
தும், தங்களுக்குநேரிட்ட வெட்கத்தைநினை
த்தும், தலையெடுத்தோங்கின தருமம் மறு
படியும் அழிந்துவிட்டதே யென்று ஆலோ
சித்தும், வாய்ச்சொல்லும், மனமும், கண்க
ளும், திருமேனியும், சோர்ந்து வாடித் தா
யையிழந்த கன்றுக்குட்டியைப்போல் இளை
யபெருமாளும் பூமியில் வீழ்ந்துவிட்டார்.
பிறகு எல்லாம் அறியத்தக்க ஜ்ஞானமுள்ள
வரான விபீஷணாழ்வானும்நடுங்கி சம்பவித்
தவருத்தத்தி னுண்மையைத் தெரிந்துகொள்
ளாமல் அந்தச்சிறுபயல் இவர்களை நம்மால்
ஜெயிக்கமுடியாது. நமக்கு இவ்வளவு நாச
முமிவளால்தான் சம்பவித்தது என்று கொ
ன்றாலுங்கொல்லுவான் என்பதாக மனதில்
சந்தேகங்கொண்டு குளிர்ந்தநீரைக்கொண்டு
ஸ்வாமியின் திருமுகத்தில் தெளித்துத் திரு
மேனியைத் தொட்டு உணர்வுண்டாகும்படி
யான எல்லா உபாயங்களையுஞ்செய்து திரு
வடித் தாமரைகளையும், திருக்கரங்களையும்,
திருமேனியையும் பற்றி வருடினமாத்திரத்
தில், வேதங்களுங் கண்டுணர அரியவரான
பரவஸ்துவானவர் திருக்கண்களை விழித்து,
சுவாசம்விட்டார். அப்போது இளையபெரு
மாள் ஊற்றெடுத்துக் கண்ணீரொழுக மன
மழிந்து தக்கதைநினைத்து ஆற்றமாட்டாமல்
வருத்தப்பட்டுக்கொண்டிருந்தாரேயன்றி அ
ந்தப்பிரமையை மாற்றவுமில்லை, தம்முடை
யமானத்துக்கு உயிரேமுடிவாக ஹீனம்வந்
திருந்தும், தமையனைத் தேற்றும்படி நினை
த்துத் தமது சிலஅபிப்பிராயங்களைச் சொல்
லத்தொடங்கினார். தனக்கு அழிவுகாலம் ஊ
ழ்விதிப்படிவந்து சம்பவித்தால் அல்பனா
யிருக்கின்றவன் துக்கசாகரத்தில் மூழ்குவது
ஸ்வபாவம் தேவரீருக்கு இதுபழிப்பாகுமல்

லவா ? நம்முடைய குடிக்கே ஒரு குறைவு வந்தாலு மென்ன! நாமெத்தனை கூட இந்தமூன்றுலோகங்களையும் நாசப்படுத்திப் போடாமல் அறிவில்லாதவர்களைப்போல நாமென்பேயாய்விடலாமோ? ஸ்வாமீ! பிராட்டியாரோ பெண்பிள்ளைமேலும் ஒருதவிப்புமில்லாதவள் தவப்பெண், தர்ம்ம பதிவிரதாதெய்வம், அல்லாமலுந் தேவரீருடைய தேவி, சாக்ஷாத்துமஹாலக்ஷ்மி, இப்படிப்பட்ட பிராட்டியாரை மஹாசண்டாளனான ராக்ஷசப்பயல் கையால் தொட்டுக் கொண்டுபோனயா ருஞ்சிறைக்கோட்டும் வருத்தப்படவேண்டிய தென்னத்திற்கு இன்னமும் உயிர் வைத்துக் கொண்டிருக்கவோ ? அல்லது தேவரீருடைய பெருமையிருமேலோ? இனி நமக்குத் தர்ம்மத்துடனே சிநேகமும் உண்டாகுமோ? இனிநமக்கு ராக்ஷசர்க ளென்ன! தேவர்க ளென்ன! பிராஹ்மணர்களென்ன! குருக்கள்மாரென்ன! மஹாரிஷிகள்தாமென்ன! இனிவேதத்திலபடியான ஆசாரமென்ன! துஷ்டர்கள் வல்லமை யுடையவர்களாகி, யோக்கியர்கள் அழிந்துபோவார்களேயானால் இந்த மூன்று லோகத்தையும் அக்கினியால் சுட்டெரிக்காமல் சும்மா இருப்ப தென்ன காரணம். இந்த எழுலோகங்களும் ஒழுங்காகத் தர்ம்மங்களைச் செய்துகொண்டு விர்த்தியாகும்படி இருக்கின்றனவோ! தேவர்களின்னமும் பிராணனுடனே இருக்கவோ! தர்ம்மமு மின்னமிருக்கின்றதாக நாம்வணங்கிக்கொண்டிருக்கின்றதோ! இன்னமும் மழையும் பெய்யவேண்டுமோ! நாம் சோர்ந்துவிழுந்து அழுது கொண்டிருக்கின்றதோ! நம்முடையவில்வல்லமை வெகு அழகா இருக்கின்றது. ஸ்வாமீ! இந்த லங்கையில் நுழைந்து ஒரு க்ஷணத்துக்குள்ளாக அதைச் சாம்பலாக்கிவிட்டு அந்தராக்ஷசப்பயல்போன திசைகளையெல்லாம் சுட்டெரித்துத் தேவலோகங்களையெல்லாங் கொளுத்தி முடித்து விடக் கூடிய நாம் வெறுங் கையைத் தலையின் மேல் வைத்துக் கொண்டு எளியவர்கள் போலத் துக்க முற்றழுதுபோமானால் லோகத்திற்குச்சிறுமையாய் முடிந்துபோகாதோ! தேவரீர் அயோத்தியி லிப்படியே தர்ம்மத்தையேபார்த்து ராஜமுடியைத் துறந்துவிட்டுக் காட்டிற் றுவந்து பிராட்டியாரை அந்தவஞ்சகன் பிடித்துக்கொண்டுபோக வரம்பைக் கெடுக்காம லிருந்து உயிர்வைத்துக்கொண் டிருந்தோம். இப்போது இவ்விடத்திலிப்படிப்பட்ட துன்பத்தையடைந்து சும்மா இருந்போமானால் ராக்ஷசர்கள் நம்முடைய எளியதன்மையைப் பார்த்து நம்மைச் சிறையில் விலங்கிட்டுவைத்து அடிமைசெய்யும்படியாகவுஞ் சொல்லமாட்டார்களா! நாமிப்போது நம்முடைய ஆவியைப் போக்குவோமேயானால் சீதையை அவர்களுக்குமுன்பாகவே கொண்டுபோய் வாலினுலே கொன்றவர்களைக் கொல்லும்படியான வல்லமை இல்லாதவர்களாய் வெட்கப்பட்டிறந்துபோனார்கள் என்று சொல்லுவார்கள். ஆகையால் தர்ம்மத்தைப் பார்க்கிறதற்கு இதுகாலமல்ல ஸ்வாமீ! தேவரீர் அறிவில்லாதவர்களைப் போலத்தாமசித்திருக்கின்றது என்னகாரியம் என்று சொன்னார். இப்படி இளையபெருமாள் சொல்லவே, சூரியகுமாரரான சுக்கிரீவ மஹாராஜர் கனவுகண்டவரைப்போலத் திடுகென் றெழுந்திருந்து இனி யாலோசித்துக் கொண்டிருக்கலாமோ! விளக்கில்விழுகின்ற விட்டிலைப்போல ராவணனுடைய அரண்மனையிற்போய் அவனுடைய மார்பிற்போய்க் குதிக்கலாம் வாருங்களென்று சொல்லி, லங்கையைப்பேர்த்துப்பாவிகளாகிய ராக்ஷசர்களென்றுபெயருள்ளவர்களையும்அவர்கள் பெண்டுகளையும், பாலுண்கின்ற குழந்தைகளையும், அவர்களுக்குப் பந்துக்களா யிருக்கின்ற யாவரையும், ஒருமிக்கக் கொன்றுவிடுவோம். அதற்காக நம்மேல் யுத்தத்திற்குவந்து விலக்குவார்களேயானால் அந்தத்தேவர்களுடைய சொர்க்கலோகத்தையும் பேர்த்துப் பூமியில்போட்டுவிடுகிறோம், தர்ம்மத்தையினிக்கெடுத்துவிடுகிறோமென்று புறப்படுவதானால் .ஸ்வாமீ ! நாமிங்கே யிருந்து வருத்தப்பட்டுக்கொண் டிருப்ப தென்னத்திற்கு இந்த லோகமூன்றையும் அழித்துக் காற்றடியைப்போலச் சுற்றித்திரிந்து நமக்குதவிசெய்யாம லிருந்த தேவர்களுடைய வமிசங்களையுங் களையறுத்து விடுகிறோமென்று லங்கையின்மேல் 'பாய்கிறதற் கெத்தனித்தார். மற்ற வானரவீரர்களும், நம்முடைய ராஜனுக்கு முன்னதாகப்பாய்ந்துபோய் ராக்ஷசர்களையெல்லாம் அவர்கள்வசிக்கின்ற வீட்டுடனே பெயர்த்து இன்றைக்கே பூமியிலழுந்து கொன்றுவிடுகிறோம் என்று புறப்பட்டார்கள். அப்போது ஆஞ்சநேயர் இன்னொருகாரியமிருக்கின்றது, அதிவஞ்சகனை இந்திரஜித்து அயோத்தியின்மீது புறப்பட்டுப்போனானென்றுஞ் சொன்னார். தாய்மார்களும், தம்பிமார்களுந் தவஞ் செய்துகொண்டிருக்கின்ற அயோத்தியா நகரத்துக்கு

இந்திரஜித்துப்போயினான் என்று சொன்ன வார்த்தை ஸ்ரீராமருடைய திருச்செவியில் நுழைந்த உடனே முன்னிருந்த வேதனைக்காட்டானது பின்வந்த துன்பமாகிய நெருப்பினால்வெந்து சீதையினிடத்திலுண்டான துக்கம் நீங்கினார். ஆழ்ந்ததிருப்பாற்கடலில் நித்திரை நீங்கி வந்ததுபோல முன்னேய துன்பக்கடலிலிருந்து கரையேறிக் கொழுந்துவிட்டெரிந்துகொண்டு புறப்பட்ட கோபாக்கினியும், பயமும், மனதிலழுந்த உழுந்தருளும் அவ்வளவுபொழுதும் தாமசிக்காதமுயற்சியையுடைய ஸ்வாமி ஒன்றுந்தோற்றாமல் மயங்கி ஐயோ? எல்லாபத்தியான சீதையுடனே மாத்திரம் தீர்ந்து விட்டதா இல்லையே சூரியவம்சத்தை வேரோடு முடிப்பதாக மூண்டு கொண்டதே இன்னம் இது யாரையைப் பற்றப்போகிறதோ தெரியவில்லையே? ஐயா, இதை மாற்றி விடும்படியான முயற்சியும் உண்டாகுமோ என் தம்பிமார்களும் பிழைப்பார்களோ, நினைக்கிறதற்கு முன்னாகப்போகும்படியான புஷ்பக விமானத்தி லேறிப்போனானே தன்னுடைய கொடுஞ் செய்கையை ஒரு க்ஷணத்துக்குள்ளாகமுடித்துக்கொண்டு வந்துவிடுவானே, ஐயோ? நான்பிறந்த வீடும் அங்கே சாம்பலாய்ப் போய் விட்டது. இங்கே பெண்சாதியும் மாண்டு போனாள் இன்னம் எனக்கு என்ன சம்பவிக்கப்போகிறதோ தெரியவில்லை நான் மாண்டும் போகாம லிருக்கின்றேன், என் தீமையானது தகப்பனாருக்கும், சடாயு வென்ற பிதாவுக்கும் தனிமையா யிருந்த சீதைக்கும், யமனைக்காட்டிவிட்டும், அவ்வளவோடு முடியாமல் அந்த யமனுக்கு, பேதைப் பெண்களாய்ப் பிறந்து எங்களைப் பெற்ற தாய்மார்களையும், யாதொரு குற்றமுஞ்செய்யாத அருமைத்தம்பிமார்களையும், ஊராரையும், நாட்டாரையும், காட்டிவிட்டதே, ஐயோ? அந்தப் பரத சத்துருக்கர்கள் தங்களுக்கு இப்படி வருமென்று முன்னறிந்தவர்க ளல்லவே, அப்படி ஒருவேளை இந்தச் சண்டாளனோடு எதிர்ப்பார்களே யானால், இவன் நாகபாசத்தாலே கட்டியும், பிரஹ்மாஸ்திரத்தினால் எவியும், கொன்றுவிடுவானே யானால், அந்தப் பக்ஷிராஜனான கருடன் வரமாட்டானே சஞ்சீவிமருந்தைக் கொண்டு வருகிறதற்கு இந்த வாய்வு குமாரனும் அங்கில்லையே, வேறேயார்! அவர்களுக்குயார் சஞ்சீவியைக்கொடுக்கப்போகின்றார்கள். அப்பா ? ஆஞ்சநேயா ! ஆகாசமார்க்கமாக அயோத்திக்குத் சீக்கிரமாகப்போய்ச் சேரும்படியான உபாய முண்டானால் சொல்லு, இங்கிருக்கிற தெல்லாஞ் செத்தாலுஞ் சாகட்டும் லங்கையில் சண்டையும் நிற்கட்டும், அந்த இந்திரஜித்து என்கிற துஷ்டனுடைய கண்களைக் காகங்கள் தின்னும்படியாகச் செய்த பின்பு மறுபடியும் வந்து என் எண்ணத்தை முடித்துக்கொள்ளுகிறேன். என்று சொன்னதைக்கேட்ட இளைய பெருமாள் சுவாமியை நமஸ்கரித்து சுவாமி பரதாழ்வாரை யுத்தத்தில் கட்டும்படியாகநாகபாசத்தை விடுகிறதற்குத் தக்கவன் இந்த இந்திரஜித்தாவோ? அந்தப் பரதாழ்வான் இந்தச்சத்துருக்களுக்குமுன்பாகவருவாரானால் இந்தமூன்று லோகமுந் தீய்ந்துபோகமாட்டாதோ? தேவரீர் துக்கசாகரத்தில் மூழ்காதேயும், அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருளும் இந்தத் துஷ்ட வஞ்சகன் பிரஹ்மாஸ்திரத்தைக் கொண்டு கட்டித் தள்ளுகிறதற்கு அடியேனென்று நினைத்தருளினீரோ, பரதாழ்வானை அப்படி எண்ண வேண்டாம். அந்த இந்திரஜித்து அவர் கைப்பாணத்தால் அவனுடைய சேனைகளுடன் மடிந்து பூமியில் தலைகீழாய்க் குத்துண்டு விழப்போகிறதைத் தேவரீரே கடாக்ஷித் தருளப் போகிறீர். என்று வெகு கோபத்துடன் சொன்னார். அப்போது அநுமான் கைகூப்பிக்கொண்டு ஸ்வாமீ அடியேன் சிறுதோளின் மீது தேவரீருடைய திருக்கைக்குத் துணையாக இருக்கின்ற கோதண்டத்துடனே எறியருளும் வாயுதேவனும் பின்னிடும்படி இந்தக்ஷணத்திலே தானே அயோத்தியாபுரியைச் சேருகிறேன். இன்னு மிடமுண்டா யிருக்குமானால் அந்தக்ஷணத்திலே எல்லாத்திக்குகளையுஞ் சுற்றிவருகிறேன் அதுவுமல்லாமல் அடியேன் மாத்திரமே போய் அந்தப் பகையாளியைக்கொன்று என் பகையையுந்தீர்த்துக்கொள்ளுகிறேன். அடியேன் அப்போதே அவனை யேன் கொல்லமாட்டாமற் போனேனே யானால், சீதாபிராட்டியாரைக் கொல்லுகிறே னென்று பிடித்துக்கொண்டு வந்தான். அவனுக்கு நீதி வார்த்தையைச் சொல்லி விலக்கிக் கொள்ளலாமென்று நினைத்தேன். அவன் அக்கிரமமாய்ப் பேசிக்கொண் டிருந்தான். அப்புறம் வாளால் வீசிவிட்டான். அதைப்பார்த்துச் சகிக்காமல்மூர்ச்சையாய்ப் பூமியில் விழுந்து உணர்வற்றுப்போனேன். அப்போது அவன் வேகமாய்ப்போய்விட்டான். அப்படிக்கில்லாமல் சந்தேதிர்ப்பானானால் அந்தத்துஷ்டனாகிய சனன் உயிர்தப்பிப்போவானோ? ஸ்வாமி தாமசிக்க

வேண்டிய தென்ன! துழாய் மாலை தரித்த
திருத்தோளை யுடையவர்களே, நீங்களிரண்டு
பேரும் அடியேன்மீது எதியருளுங்கள். அ
வனுடைய புஷ்பகவிமானம் அயோத்திக்கு
ப்போய்ச்சேருவதற்கு முன்பாக அடியேன்
போய்ச்சேர்ந்து அவன் வரவு யெதிர்பார்த்
துக்கொண் டிருக்கிறேன் என்றார். நல்லது
அப்படியே எழுங்கோ மென்று ஸ்ரீராம ல
க்ஷ்மணர்கள் புறப்பட்டவுடனே விபீஷிணா
ழ்வான் தண்டன் சமர்ப்பித்து ஸ்வாமி அடி
யேனுக்கொரு விண்ணப்ப மிருக்கின்றது.
அடியேன் அந்த துக்கத்தால் நடுங்கி மனந்
தெறமாட்டாதசெய்கையால் மயங்கித் திகை
த்துப்போய் விட்டேன். இப்போது அடி
யேனுக்குக் கொஞ்சம் நினைவு தோன்றினது.
அவன் செய்தது மாயமென்று சந்தேகிக்கின்
றேன். மஹாபத்தினியாகிய லோகமாதாவை
அந்தப் பாவி கையால் தொட்டுக் கொல்லு
வானானால், இந்த மூன்றுலோகமும் வெந்து
சாம்பலாய்ப்போக மாட்டாவா? அதுஅப்ப
டி யிருக்க அவன் அயோத்தியை நோக்கிப்
போனது தந்திரமா யிருக்கின்றது. அதைச்
சற்றுநேரத்துக் குள்ளே தெரிந்துகொள்ள
லாம். அடியேன் இமைப் பொழுதுக் குள்
ளாகப் போய் பிராட்டியா ரிருக்குமிடம்
போய் ஆராய்ந்து தேடிப்பார்த்து உள்ள
தை அறிந்துவந்து சொன்ன பிறகு ஆகவே
ண்டியதைச் செய்யலாமென்று விண்ணப்ப
ம் பண்ணிக்கொண்டார். பெரியபெருமாளு
ம் அதும் இது தகுதி யானதுதான் என்று சொ
ன்னார். பின்பு விபீஷிணாழ்வான் அந்தர்மார்க்
கமாய்ப்போய் வண்டி னுருவத்தைக்கொண்
டு ஸ்ரீராமபிரானுடைய திருவுளவேகத்தைப்
போலப் போய் அசோக வனத்தைச் சேர்ந்
தார். ஆவியுண்டோ இல்லையோ என்னும்படி
யான துயரத்துடனெழுந்தருளி யிருக்கின்ற
சித்திரப்பிரதிமையை யொத்த பிராட்டியா
ரும், என்னுடைய துக்கத்தை என்னுயிருட
னே தீர்த்துவிடுகிறேன் என்று சிந்தைகொ
ண்டிருந்ததைத் திரிசடைசமாதானஞ்சொல்
ல மறுபடியுந்தேறிவந்தபோது சப்தமேகங்
களும், உகாந்தகாலத்தில் குமுறுவதுபோல
வானரவீரர்கள் சப்தித்த ஓசையைத் தேவா
மிர்தம்போலக்கேட்டு உயிர்தரித்திருந்தவரு
மாகிய சீதாபிராட்டியாரைக் கண்களாரக்கண்
டு தரிசித்து வஞ்சனை செய்துவிட்டுப்போ
னானென்று நினைத்து அளவில்லாதசந்தோஷ
த்தையுடையமனத்தராகித் துக்கமற்றதிருந்து
இந்திரஜித்து நிகும்பலைக்குப்போய் யாகஞ்
செய்ய யத்தனித்தானென்று ராவணனுடை
ய சேனைகள் கூட்டங் கூட்டமாய் யாகக்கல
ப்பையையும், விறகுகளும், நெய்யும், கொண்
டுபோகிறதைப் பார்த்து, யாகத்தை முடிப்
பானேயானால் ராக்ஷசர்களுக்கு ஒருகுறைவு
மில்லாமல் செத்தவர்களை யெல்லாம் பிழை
ப்பிப்பானென்று ஆலோசித்துத் தேவர்களை
யெல்லாம் இமிசை பண்ணின இந்த இந்திர
ஜித்துத் தந்திரஞ்செய்த என்ன மிப்படியா
கவா யிருந்தது. நன்றாயிருக்கின்றதென்று. நீ
ர்மானித்துக்கொண்டு ஸ்ரீராமருடையதிருவ
டித்தாமரைகளில்தமது முடியைத்தாழ்த்திவ
ணங்கி ஸ்வாமி! சக்கிரவர்த்தித்திருக்குமாரரே?
லோகமாதாவாகிய பிராட்டியார் க்ஷேமமாக
எழுந்தருளி யிருக்கின்றார். அடியேன் கண்
ணாரக் கண்டேன், அருந்ததிக்குச் சமமான
மஹா பதிவ்ரதையாகிய அந்த அம்மாளுக்
கும் அழி வுண்டாகுமோ? அந்த ராக்ஷசன்
நம்மை வருத்தப் படும்படியாக மாயஞ்செ
ய்துவிட்டு நிகும்பலைக்குப்போய் யாகத்தை
முடித்துக் கொண்டு நம்மை கருவறுக்க யத்
தனப்பட்டானென்று விபீஷிணாழ்வான் சொ
ன்னவுடனே எழுலோகங்களும் சேர்ந்துவா
ழ்த்தினாற் போலச் சப்த சமுத்திரங்களும்
ஒருமிக்கப் புறப்பட்டு சப்திக்கின்ற சப்த
மோ, அல்லவோ வென்று தேவர்களுஞ் சந்
தேகிக்கத் தக்கதாக வானரக் கூட்டங்களெல்
லாம் கர்ஜ்ஜித்து மலைகளெல்லாம் பொடிப்
பொடியாகும்படி எழுந்து கூத்தாடினதுக
ள். வீரசிகாமணியாகிய ஸ்ரீராமபிரானும் சீ
தா பிராட்டியார் இறந்துபோக இல்லையென்
று சந்தேகம் நீங்கி விபீஷிணாழ்வானைத் தேக
மும் ஆசையும் உயிரும் சேரத்தழுவி ஐயா?
விபீஷிணா! இந்தத் துன்பம் போகிறது ஒரு
அருமையோ,என் பங்கில் நீயிருக்கிறாய், தெ
ய்வ மிருக்கின்றது, வாயுபுத்திர னிருக்கின்றா
ன். நாம் செய்த தவமு மிருக்கின்றது. வேத
மும் பொய்த்துப் போகவில்லை என்று சொ
ல்லக்கேட்ட விபீஷி ணாழ்வான் ஸ்வாமியை
வணங்கி இந்திரஜித்து அந்த நிகும்பலை யாக
த்தை முடிப்பானே யானால், அவனை யாரும்
வெல்ல மாட்டார்கள். ராக்ஷசர்களுக்கே ஜெ
யமுண்டாய்விடும், ஆகையால் தேவரீர் நிய
மனஞ் சாதித்தால் இளையபெருமாளுடனே
போய் அவனுயிரையும் வாங்கி யாகத்தையும்
சிதைத்து விடுகிறே னென்றார். அதைத்திருச்
செவி சார்த்தின சக்கரவர்த்தித்திருக்குமாரர்
நல்லது அப்படியே செய்யுங்களென்றுசொ
ல்லிப் பின்னுஞ்சொல்லுகின்றார்.

மாயா சீதைப்படல முற்றிற்று.

# நிகும்பலையாகப்படலம்.

ஸ்ரீராமமூர்த்தி இளையபெருமாளை ஆலிங்கனஞ்செய்து, தம்பி லக்ஷ்மணா! அந்த இந்திரஜித்து உன்மேல் பிரஹ்மாஸ்திரத்தைப் பிரயோகிப்பானேயானால் அப்போது நீ யந்த பிரஹ்மாஸ்திரத்தைப் பிரயோகித்து அதைக் கண்டித்துவிடு, அப்படிக்கில்லாமல் நீ அந்த அஸ்திரத்தைத் தொடுத்து விடாதே அப்படித் தொடுத்து விட்டாயேயானால் தேவலோகம், பிரஹ்மலோகம், பூலோகம், எல்லாம் நாசமாய்விடும். ஆனதால் முந்தித் தொடுத்துவிடாதே மேலும் பாசுபதாஸ்திரம், நாராயணாஸ்திரம், இவைகளை அவன் உன்மேற் பிரயோகிப்பானேயானால் அவைகளையும், அந்தந்த அஸ்திரங்களாலே நீக்கும்படியான விதத்தைச்செய்து நீக்கிப் பிறகு உன்வில்வித்தையின் வல்லமையினாலே அந்த இந்திரஜித்துவின் ஆவியை உண்டுவிட்டுவரக்கடவாய் அப்பா? பிரதாபசாலியே! அவனென்னென்ன மாயங்களைச் செய்கிறானோ அதுகளையெல்லாம் குறிப்பாய்ப் பார்த்துக்கொண்டிருந்து அவைகளையெல்லாம் வேரறக்களைந்துவிடு. விசாலமான தர்ம்மசிந்தையைக்கொண்டு பலவகையான பெரும்போர்களையுஞ்செய்து வருத்தப்படாமல் சமயம்பார்த்துத் தேவர்களுக்குக் கூற்றுவனைப் பிறந்திருக்கின்ற அந்த இராவணியைக் கொன்றுவிடு ஐயா? யமனுக்கொப்பாயிருக்கின்ற லக்ஷ்மணா? அவன் பதறிக் கோபங்கொண்டு அநேககோடி பாணவருஷங்களைப் பெய்து வேகத்துடனே உன்பாணங்களை விலக்கினபோதும், மெலிந்தபோதும், தனுர்வேதத் தேர்ச்சியையுடைய லக்ஷ்மணா? முன்னால் அவன் அம்புபூட்டி யெய்கின்ற வில்லை முதலாவது வெட்டியெறிந்துவிட்டுப் பிறகு அவனைக் கொன்றுவிடு, அவன் அம்புதொடுக்கிறதற்கு முன்பாக உன்வில்லில் அம்பைப் பூட்டிக்கொண்டு அவனெந்தத் துறைகளில் பாணங்களைப்பிரயோகிக்கின்றானோ அந்தந்தத் துறையிலேயே அவைகளை நீக்கிவிடு. அவன் வேகமாய்ப் பிரயோகித்தாலும், தாமசமாய்ப் பிரயோகித்தாலும், பராக்காயிராமல் அவைகளைக் குறிப்பாகப்பார்த்து அந்தந்தவேகத்துக்குத் தக்கபடி நீயும் அஸ்திரப்பிரயோகம்பண்ணு, பதமுத வில்வீரனே என்று அவருக்குவேண்டிய எல்லா உபாயங்களும், அந்த உபாயங்களுக்குவேண்டிய மந்திரங்களும் உபதேசித்து அவைகளோ விசையத்துடனேயேற்றுக் கொண்ட பிராத்தியுடாயிய இளையபெருமாளைக் கடாக்ஷித்து, தம்பி லக்ஷ்மணா? இந்தச் சமஸ்த அண்டங்களும் தாமாயிருந்தும், தம்முடைய அளவில்லாத குணப்பிரபாவங்களைத் தாமே அறியமாட்டாத சகலகாரணபூதரான ஸ்ரீயப்பதி யானவர், பிடித்துக்கொண்டிருக்கின்ற வில்லைக்காட்டி, இது பெருந்த பலமுள்ள வில்லாக்கும் இதை நீ பெருந்த தைரியத்துடனே பிடித்துக்கொள். இந்த வில்லினுடைய வரலாற்றைச் சொல்லுகிறேன்கேள். இதைப்பற்றித் தமிழ்ப்பாஷையை வெளியிட்டதனால் தமிழ்முனியென்று பெயர் பெற்ற அகஸ்தியமஹாமுனிவர் சொன்னதுகளையெல்லாம் நீ சித்திரப்பாவைபோலிருந்து விவரமாய்க் கேட்டிருக்கின்றாயல்லவா? ஆயிரந் திருத்தோள் ஆயிரந் திருமுடியை யுடைய விராட்டாகிய மஹாவிஷ்ணுவினுடைய திருமேனியிற் பிறந்த பிரஹ்மாமூட்டிய யாகத்தினாலே யஜித்துப்பெற்ற வில்லாக்கும் இது என்று சொல்லித் தம்முடைய கவசத்துடனேகூடக் கொடுத்துத் தம்முடைய அம்பறுத்தூணியும் கொடுத்து, இன்னும் வேண்டிய பல உறுதிகளை யுபதேசித்து மேருமலையைப்போலப் பிரகாசிக்கின்ற இளையபெருமாளைக் கட்டித்தழுவினார். அப்படித் தழுவின உடனே சுவர்க்கலோகத்தில் வசிக்கின்றவர்களான தேவர்களெல்லாம் இனி யெங்களுடைய துக்கமெல்லாம் நீங்கிப்போய் விட்டதென் றுநந்தித்தார்கள்.— தேவர்கள் பல்லாண்டுகூற, தேவஸ்திரீகள் வாழ்த்தி, ஆசீர்வதிக்கப் பார்வதியை இடதுபாகத்தி லுடைய சந்திரசடாமகுட தாரியாகிய, சங்கரமூர்த்தி திரிபுரமெரிக்கக்கோபித்துப் புறப்பட்டது போல இந்திரஜித்தாகிய பகைவன்மேல் யுத்தத்திற்குப் போகிறதற்காகத் தோன்றினார். அப்போது ஸ்ரீராமர் அப்பா, தம்பி! வீரசிகாமணியே? மாருதிமுதலான வானரவீரர்களை உனக்குத் துணைவர்களாக அழைத்துக்கொண்டு போய் வருவாயாக வென்று விடைகொடுத்தருளின போது தர்ம்மசீலராகிய இளையபெருமாள் தமது ஆசாரியராகிய பெரிய பெருமாளுடைய திருவடித் தாமரைகளைத் தமக்குள்ளும் புறத்துமாகத் திருமுடியில் சூடிக்கொண்டு அழகிய மேகம்போலத் திருமேனியை யுடையவராய்ப் பிரிவை எண்ணி அழுது கண்ணீர் பூமியில் புரண்டோடும்படி நெஞ்சழி

ந்தரிக்கிற பெரியபெருமாளை இளையபெருமாள் சுற்றிவந்து தெண்டனிட்டு வஜ்ரமலைபோலிருக்கிற வில்லை இடதுகையிற் பற்றிக்கொண்டு இந்திரஜித்தின்மேல் அதிககோபங்கொண்டு அவனுடைய தலையைக்கொண்டு வருகிறேனென்று ஸ்வாமியினிடத்தில் விண்ணப்பம்பண்ணிப் புறப்பட்டுப்போனார். காட்டிலும் தம்மைப்பிரியாமல் எல்லாகாரியங்களையுஞ்செய்த திருத்தம்பியார்மிருந்தவேகத்துடன் சென்றபோது, தேஜஸ்ஸைவிட்டுப்பிரியாத ஒளியைப் போல அவர்தமது திருக்கண்களுக்கு மறைவான உடனே, குழந்தையாயிருந்தபோது தாம் விஸ்வா மித்திரருடைய யாகத்தைக் காக்கிறதற்காகப் போனஅன்றையதினம் தமது பிதாவாகிய தசரத மஹாராஜர் எந்த நிலையிலிருந்தாரோ; அந்த நிலையைத் தாமு மடைந்திருந்தார். வானர சேனைக்கதிபதியான சுக்கிரீவ மஹா ராஜா முதலான வானர வீரர்கள் எரிகின்றகொள்ளிக் கட்டையைக் கையி லுடையவர்களாய்க் காட்டு வழிகளும் மலைகளும் கிழிபடும் படியாக அதிக வேகத்துடனே போய்நிகும்பலையைச் சேர்ந்தார்கள்.

ஒரு ஆலிலையின்மீது லோகங்களைதமக்குள் ளேயொடுக்கின ஒருகாரணவஸ்து வானவர்சயனித்துக்கொண் டிருக்கிறதுபோல இந்திரஜித்திருக்கிறதையும், அந்தவஸ்துவின் திருமேனி சுற்றி யிருந்த ஆலிலையைப் போல ராக்ஷசக் கருங்கடல் சூழ்ந் திருக்கின்றதையும், இப்படி ராக்ஷசச் சேனைகள் சக்கர ரூப ஸ்தம்பம் நாட்டிக் கொண்டு காவலா யிருந்ததையும், அந்தத் துஷ்டன் மத்தியில் ஓமாக்கினியுடனே கூடி யிருந்து வடவாமுகாக்கினியுடனேகருங்கடலானது நின்றதுபோலிருந்ததையும், நீர்க்கடலுடனே மற்ற கடல்களெல்லாஞ் சூழ்ந்துகொண் டிருக்கின்றதுபோல, மேகங்களையெல்லாம் தூரத்தி உயர்ந்திருக்கின்ற தேர்களும், குதிரைகளும், கொடிப்படைகளும், ஆயிரகோடி அணிஅணியாய் ஆயிர யோசனை விஸ்தாரமாக விரிந்திருக்கின்றதையும், பொற்றேர்களும், குதிரைகளும், யானைகளும், காலாள்களும், அளவில்லாமல் இந்திர ஜித்துவின் ஆக்ஞைப்படி வியூகம்வகுத்து, லோகத்தை வளைந்து ஆயிரங் கடல் சூழ்ந்திருக்கின்றது போ லிருக்கின்றதையும், கண்டார்கள். ராக்ஷசர்களுடைய மேனியின்மீது ஆகாசத்தை யெட்டிக் குத்தப்படியாக தெறித்துக் கொண்டிருக்கின்ற செம்மயிர்க் காடானது நீல மேகத்துக் கொப்பாகிய திருமேனியை யுடைய ஸ்ரீராமமூர்த்தியானவர் சமுத்திரத்தின்மீது அக்கினியாஸ்திரங்களைப் பிரயோகித்ததுபோலக் காணப்பட்டது. அந்த ராக்ஷசர்கள் இளையபெருமாளையும், வானரவீரர்களையும் பார்த்து வில்லுகளெல்லாம் குணத்தொனி யில்லாமல் மேகத்தில்தோன்றிய இந்திரதனுசைப்போ லிருந்தது. சங்கங்கள் சமுத்திரத்தில் வாழுமுயிர்களைப்போல நிச்சப்தமா யிருந்ததுகள். பேரிகைகள் கர்ஜ்ஜிக்காத மேகங்களைப்போலே ஒலியாமலிருந்ததுகள். மிருந்தபலம்பொருந்திய ஸ்ரீராமருடைய நியமனத்தால் ஒலியடங்கிப் போன பெருங்கடல்போலிருந்தராக்ஷசச்சேனையை நெருங்கி மெலி வடையாத வானரவீரர்கள் ஆகாசமுங் கிழிபட்டுப் போகும்படி ஆரவாரித்தார்கள். அப்படி சப்தித்த வானர சேனைகளுக்கு எதிராகராக்ஷசர்களும் சப்தித்து வானர வீரர்களை வந்து சூழ்ந்து கொண்டார்கள். பேரிகைகள் முழங்கினதுகள். வானர வீரர்கள் மலைகளைக்கொண்டு ராக்ஷசக் கடலை தூர்த்துவிட்டார்கள். ராக்ஷசர்கள் சூல்கொண்ட மேகம் வருஷிக்கின்ற நீர்த்தாரைகளைப் போல அம்புகளைப் பிரயோகித்தார்கள். ராக்ஷசர்கள் ஆயுதங்களைப் பிரயோகித்தபடியால் அவைகள் வானர சேனைகளின்மீது தடாகத்தில் அன்னங்கள் படிந்ததுபோல வந்து படிந்ததுகள். ராக்ஷசர்கள் விட்ட அம்புகளும், மழுவும், வளைதடி முதலானவைகளும், வானரர்களுடைய பற்களும், தலைகளும், உடல்களும், பூமியில் விழும்படியாகச் சென்று அவர்கள் விட்ட மலைகளையும், மரங்களையும், சின்னபின்னங்களாய்ச் செய்ததுகள். மேலுமேலும் ராக்ஷசர்கள் அம்புகளையும், மழுக்களையும், இருப்புலக்கைகளையும், கொழுக்களையும், வேல்களையும், வளைதடிகளையும், வீசினதினால் வானரங்களுடைய வால்களும், தலைகளும், உடல்களும், வயிறும், கால்களும், கைகளும், சின்ன பின்னப் பட்டுத் தலையில் விழுந்ததுகள். இப்படி ராக்ஷசர்களுக்கும், வானரர்களுக்கும், கைகலந்து யுத்தம் நடக்கும்போது விபீஷணாழ்வான்வெற்றிவீரராகிய இளையபெருமாளைப்பார்த்து ஸ்வாமி ? தேவரீரிப்படி தாமசித்துக் கொண்டிருப்பது நீதியோ! சீக்கிரமாயெழுந்தருளி இந்த யாகத்தைச் சிதையாமற் போவீரானால் இந்த ராக்ஷசக்கடலை நாம் ஜெயிக்கமாட்டோம் என்று விண்ணப்பம் பண்ணிக்கொண்ட போது அந்தர மார்க்கத்தில்

தேவர்களும், அசுரர்களும், பிரஹ்மாவும், அழியாதவருன அச்சுதனும், சிவனும், மூன்று லோகத்துக்கும் நாயகருகிய தேவேந்திரனும்,மற்றுமுள்ள யக்ஷகின்னர கந்தருவாதிகளும், ஆகிய இவர்களில் இந்த யுத்தம்வேடிக்கையைச்செவ்வையாகப் பார்த்தவர்கள் ஒருவருமில்லை, இருவகையாருடைய சேனைகளும் எதிர்த்துநின்றதுகள். அணியணியாக எதிர்த்துநின்றவானரப்படைகளின்மீது மூன்றும்பிறைச்சந்திரனையொத்த வக்கிரதந்தங்களையுடைய ராக்ஷசர்களும் எதிர்த்துநின்று பலவிடங்களிலும் அவரவர்களுக்கு ஆயுதங்களா யுள்ளவைகளெல்லாம், இருபடைகளிலும் பிரவேசித்ததுகள்.அப்போதுஇளையபெருமாள் அந்தச்சேனைக்குள் நுழைந்து கூர்மையான பாணங்களை வருஷித்தார். அதனுல் ராக்ஷசர்கள் இந்த லோகத்தைவிட்டு யமனுடைய பட்டணமாகிய வைவஸ்த புரியைப்போய் அடைந்தார்கள். மதங்கொண்ட யானைகளும், தேர்களும், குதிரைகளும், நூறுயிர கோடியாக ரணக்களத்தில் மடிந்ததினுல் பெருக்கெடுத்தோடின ரக்தக்கடலில் மேடுண்டாகும்படியாக ராக்ஷசர்கள் விட்ட அம்புகளைத் துண்டு துண்டாக்கிக் குவித்துவிட்டார். யானைகளினுடைய முன்னங் கால்களாலே தோண்டிய குழிகளில் அக்கினிபற்றி யெரிவது போன்ற செம்பட்ட மயிர்களையுடையராக்ஷசருடைய தலைகள்விழுந்து அநேகயாககுண்டத்துக் கொப்பாக இருந்ததுகள். லக்ஷ்மணப்பெருமாளுடைய வில்லிலிருந்துபுறப்பட்ட பாணங்களால் பிளக்கப்பட்டதுகளாய் யானைகள் ரக்தங்களைப் பொழிந்துகொண்டு உடலும், வயிறும், மலைகளையும், சுனைகளையும், ஒத்திருந்ததுகள். சில பாணங்கள்பட்டு உதிர்ந்தபற்கள் மின்மினிப்பூச்சிகளுக் கொப்பாயிருந்ததுகள். அறுந்துவிழுந்த தலைகள் அம்பு தைத்திருப்பதினுல் பாம்புள்ள புற்றுக்களை யொத்துப் பூமியிற்கிடந்ததுகள். மேகவருஷம்போன்ற பாணங்கள் பாய்ந்ததினுல் அறுந்து ரக்தக்கடலில் வீழ்கின்ற கொடிகள் சமுத்திரத்தில் மேகங்கள் படிவதைப் போ விருந்ததுகள். சில பாணங்கள்பட்டுக் காம்பற்று உதிரக்கடலில் விழுந்து மூழ்கின்ற சத்துருக்களுடைய குடைகள் கேதுவாகிய செம்பாம்பினுல் விழுங்கிய சந்திரனுக் கொப்பாக இருந்ததுகள். சில பாணங்கள்பட்டுப் பெரிய யானைகள் துதிக்கையும், கால்களும், அறுந்து ரக்தக்கடலில் அடித்துக் கொண்டு போகின்றதுகள். அவை உயிரில்லாதபடியால் அந்த ரக்தத்தில்மிதந்து சமுத்திரத்திலுள்ள முதலைகளுக் கொப்பாக இருந்ததுகள். அக்கினிமுஸாஸ்திரம்பட்டு யானைமேற் போர்வைகள் எரிவதினுல் மூங்கிற்காடுகள் நெருப்புப்பற்றி வேகின்ற மலைக்குச் சமமா யிருந்ததுகள். சமுத்திரத்துக் கொப்பான ராக்ஷசர்களைக் கரடிகள்சேர்ந்து அவர்களுடைய தலையின்மீதுள்ள மண்டையோட்டைப்பேர்த்துத் தரையில் தள்ளுவதைப் பார்க்கும்போது மலையின்மேலுள்ள புற்றை நகங்களினுல் பேர்த்தெறிகிறதைப் போலிருந்ததுகள். லக்ஷ்மணருடைய பாணங்கள் மழையைப்போல வருகிறபடியினுலே ரதத்திற்கட்டிய குதிரைகளும், யானைகளும், தடிமாறுந்தோறும் ராக்ஷசவீரர்களாகிய சாரதிகள் தங்கள் தலையிற்சூடிய பூமாலையில் மொய்த்த வண்டுகளோடு கீழே விழுந்து இறந்தார்கள். ராக்ஷசர்களுடையதேஹங்கள்துண்டுதுண்டா யறுப்பட்டபடியினுலே ரத கஜ துரக பதாதிகளாகிய அங்கங்கள்நிறைந்திருக்கின்ற யுத்தகளத்தில் அந்தந்த இடங்களிலே ஓடுகின்ற ரக்தவெள்ளங்கள் யாவரும்பழிக்கும்படியாக எலும்புகள்எங்கும்பரவி அலசினதுகள்.இளையபெருமாள் ராக்ஷசசேனைகளைப் பாணவருஷங்களினுலே தம்முடைய பிதாவானவர் ஒரோ தேரைச்செலுத்திக் கொண்டு அநேகந்தேரை நடத்திக்கொண்டு எதிர்த்துவந்தஅசுரர்களுடைய பேரணியைக்கொன்று விட்டதுபோல அஸ்திரப்பிரயோகஞ்செய்து கொன்றுவிட்டார். மலய மாருதம் அடித்ததினுல் மலைகளும், மேகங்களும், வான நக்ஷத்திரங்களும், அழிந்து போனது போல ராக்ஷசர்களுடைய தலைகளும்,தேஹங்களும், அஸ்திரங்களும், ஓமகுண்ட அக்கினியில் பலபல வென் றுதிர்ந்ததுகள். மதயானைக்குச் சமமாகிய இளைய பெருமாள் சம்ஹரிக்கிறபடியினுலே ஆகாசத்தை முட்டி உயர்ந்திருக்கின்ற ராக்ஷசர்களுடைய பெருந்தலைகள் ஒன்றோடொன்று தாக்குண்டு வேத மந்திரங்களை நிறைய உருச் செபித்து ஸ்தாபனம்பண்ணின பூரண கும்பத்தை உடைத்துப்போட்டதுகள். யானைகளை வாரிக்கொண்டு தாமரைக்கு ஒப்பாகாத முகத்தோடுங்கூடிய ராக்ஷசர்களுடையதலையை உருட்டிக்கொண்டு ஓடுகின்றரக்தப்பெருவெள்ளமான துஇந்திரஜித்துவளர்த்துக்கொண்டிருக்கின்ற ஓமாக்கினியை அவித்துவிட்டுப் போனது லக்ஷ்மணர் பிரயோகித்த பாணங்கள் செப்பட்டமயிரையும், விரக்தமலையுமுடைய ராக்ஷ

க்கட்டும். இந்திரஜித்து மனிதருக்குத் தோற்றுப்போனானென்று இழிவானவார்த்தையை என்னெறிமேறின்று யாவருஞ்சொல்லுவதினாலே நம்முடைய குலத்தினுடைய பெருவல்லமையும் ஒழிந்துஅழிந்துபோய் விடுமல்லவா? தேவலோகத்திலே யிருக்கின்ற தேவர்கள் இந்திரஜித்துக்குமனிதர்களிடத்தில் சண்டைசெய்யமுடியாது.இவன்வல்லமைதேவேந்திரனிடத்தில் மாத்திரந்தான் செல்லுமென்று பரிகாசம்பண்ணும்படிக்காகவோ, மந்திரவிதிப்படியான யாகம் அழிந்துபோய் விட்டதேயென்று மனம் நொந்து நாம் வருந்தப்படுகிறது. இந்தப்பிரகாரமாக இந்திரஜித்து சொல்லிக்கொண் டிருக்கும்போது, வானரவீரர்கள் பெரியமலைகளையும், மரங்களையும், ராக்ஷசப்பிணங்களையும், இறந்த யானைகளையும், வீசியெறிந்து அவனைச் சூழ்ந்திருந்த சேனைகளைச் சின்னபின்னப்படச் சிதறடித்தார்கள். ராக்ஷசர்கள் அந்த அடியைச் சகிக்கமாட்டாமல் ஒருவர்கீழே ஒருவர் நுழைந்து பதுங்கினார்கள். லக்ஷ்மணருடைய பாணங்கள் வந்து பாய்கிறபடியினாலே அவரவர்கள் அங்கங்கே பதுங்கிக் குடலழிந்து, உடல்பிளந்து, மதமொடுங்கின யானைபோலக் கோபமாறினார்கள். லக்ஷ்மணருடைய பாணங்களும் வானரவீரர்கள் வீசிய மலைகளும், மரங்களும், உகாந்தகால சண்டமாருதம் அடித்தபோது மழைத்தாரைகளுடனே மேகங்கள் விழுவதுபோல ராக்ஷசசேனைகளின்மீது படிந்ததுகள். அப்போது ஆஞ்சநேயர் ஒரு மராமரத்தைப் பிடுங்கிக் கடலுக்குச்சமமான ராக்ஷசப் பெருஞ்சேனைகள் சின்னபின்னப்பட்டுச் சிதறிப்போகும்படி மோதிஅடித்துத் துரத்திவிட்டு இந்திரஜித்துக்குச் சம்பமாகப் போய் அவனுக்கு மிகுந்தகோபமுண்டாக்கத்தக்க சிலவார்த்தைகளைச்சொன்னார்.அடா!இந்திரஜித்துவே? நானுன்னைக் கெஞ்சிச் சொன்ன வார்த்தையொன்றையுங் கேட்டா யில்லையே! அப்படியே ஜானகியை வாளினாலே வெட்டி விட்டாயோ? குபேரனிடத்தில் பறித்துக்கொண்ட புஷ்பக விமானத்தின்மே லேறிக்கொண்டு ராக்ஷசசேனைகள் சூழும்படியாக வடக்கு முகமாய் அயோத்தியா புரிக்குப்போனாயோ? ஒன்று இரண்டல்லவே கோடிகோடியான வஞ்சனைத் தன்மையும் பொய்யுங் கற்றிருக்கிறாயே? அடா ராவணக்குட்டியே! கடலைப்போல ராக்ஷச சேனைகளைச் சக்கரயூகங் கட்டி நீ நடுவே எங்களுக்குத் தெரியாம லிருந்துவிட்டா யல்லவா? எங்களிளையபெருமாளுடைய வில்லினோசையை நீ கேட்கவில்லையோ! நீ அயோத்திக்குப் போய் அங்கிருக்கின்றவர்களைப் பந்துக்களுடனே கொன்றுவிட்டு எப்போது இவ்விடம் வந்தாய்! உன்னுடைய யாகமுடிந்துவிடிந்ததல்லவா? உன் காரிய மெல்லாம் அநுகூலப் பட்டுப் போன தல்லவா? விசாலமாகிய இந்தப்பூலோக மெல்லாம் பாது காத்துவந்து தாங்கிக்கொண் டிருக்கின்ற ஆதிசேஷனைக்காட்டிலும் நீண்ட திருத்தோள்களையுடைய எங்கள் பரத மஹாராஜரும், யாதொரு குற்றமுமில்லாத மஹாசத்தியசந்தனருமானவரை நீபார்த்து உன்வில் வல்லமையை அவரிடத்தில் காட்டி மறுபடியும் உன்உயிர் தப்பிப்பிழைத்துவந்தாயோ.? இதுவெகு ஆச்சரியமா யிருக்கின்றது. சுவர்க்கலோகத்தி லிருந்த சம்பராசுரனைச் சம்ஹரித்துத் தேவர்களுக்கு உபகாரஞ்செய்தவரான தசரதமஹாராஜாவுக்குத் திருக்குமாரராய் அவதரித்த குணபூர்ணரும், தமக்கு முன்னவதரித்த மூன்று திருத்தமையன்மார்களுக்கும், நான்காமவனென்னும் திருத்தம்பியுமாய்ச் சத்துருக்களை அழிக்கின்ற காரணத்தால் ஸ்ரீசத்துருக்கமஹாராஜனென்று திருநாமம் பெற்றவரை நீபார்த்து உன்வில்வீரத்தைக் காட்டினாயோ? அடா! ராவணியே? எங்களிளையபெருமாள் பிரயோகித்த அக்கினிமயமான பாணங்கள் உன்னுடைய உடலில் ரத்தம்வடியச்செய்த காயத்திலும், செவிகளிலும், வாயிலும், கண்களினிடத்திலும் பாய்ந்து சல்லடைக்கண்களாய்த் தொளைக்க அந்த அடிபட்டு ஓடிப்போய் லங்கையில் நுழைந்து இப்படிப்பட்ட வஞ்சனைகளை அபரிமிதமாய்ச் செய்துகொண்டு வருகின்ற உன்வல்லமையெல்லாம் இன்றோடே நாசமாய்விடப்போகின்றது. நாகபாசமும், பிரஹ்மாஸ்திரமும், பாசுபதாஸ்திரமும், விஷ்ணுசக்கரமும், இன்னும் மற்று முள்ள தேவாஸ்திரங்களும், எதெதை நீயும், உங்கப்பனும், உன்னைச் சேர்ந்தவர்களும், எங்கள் மேல் பிரயோகிக்க இச்சிக்கின்றீர்களோ! அவைகளுக்கு நாங்கள் பயந்துபோய்க் கூசிக்கிடக்கிறோமா! உங்களைக் கருவறுக்கிறதற்கு இளையபெருமாளாகிய யம னிதோவந்திருக்கின்றார். அடா! இந்திரஜித்தே? நீங்கள் தேவர்களிடத்தில் பெற்றிருக்கின்ற வரங்களும், நீங்கள் கற்றிருக்கின்ற மாய வஞ்சனைகளும், உயர்ந்த தேவர்க ளிடத்தில் நீங்கள் வாங்கி யிருக்கின்ற தேவதாஸ்திரங்களும், உங்

கள் தேஹவல்லமையும், நிலைத்திருக்கின்ற
தை நீங்களே பார்த்திருக்கின்றீர்க ளல்லவா?
உங்களை நாங்கள் உயிருடனே தலைகளையும்
துண்டிட்டு விடுகிறோமென்று சொன்னதில்,
நாங்க ளேதாவது மாறுபட்டுப் போனோ
மோ? கண்டத்தில் விஷமுள்ளவரான ருத்திர
மூர்த்தியும், பிரம்மாவும், பாற்கடலிலே
ஆதிசேஷ சயன முள்ளவரான விஷ்ணு மூர்
த்தியும், தங்களுடல் நடுங்காமல் வந்து உங்
களுக்கு உதவிசெய்தபோதிலும், நீங்கள் மர
ணமடையப் போகின்றது சத்திய மாகும்.
உங்களுக் கிடந் துடிக்கின்ற தல்லவா? நீங்க
ளினி உயிர்பிழைத் திருப்பீர்களோ? நீயே
சொல்லக் கடவாய்? உன்னை இன்றைக்குக்
கொல்வேனென்று சபதம் பண்ணிக் கொண்
ட வில்வீரசிகாமணியாகிய இளையபெருமா
ன் இதோ சமீபமாக வந்து உன் சேனையை
முழுவதும் கொன்று உன்னையுஞ் சீக்கிரமா
ய்ச் சண்டைக்கு வாவென்று அழைக்கின்
றார். அவர் வில்லினுடைய யானது நீ செ
ய்கின்ற ஓமத்துக்கு மந்திரமாகிய கிரியை
யென்று நினைத்திருக்கின்றாயோ? இந்த மூ
ன்று லோகங்களையும் ரக்ஷிக்கின்ற ஸ்ரீராம
பிரானுக்குத் திருத்தம்பியாகிய லக்ஷ்மண
னுடைய சண்டையின் பெருமையைப் பா
ர்க்கிறதற்குத் தேவர்கள், முனிவர்கள், மற்ற
எல்லா லோகவாசிகளுமான சகலர்களும் வ
ந்து நிற்கின்றார்கள். இனி க்ஷணப்பொழுது
ந் தாமதிக்கப்படாது. நீங்கள் மாண்டு போ
வது சத்தியந்தா னல்லவோ? என்று சொன்
னார். அந்த வார்த்தைகளை இந்திரஜித்து கே
ட்டு அக்கினி மயமாகச் சுவாசித்து வெற்றி
மாலையை அணிந்ததோள்களில் மின்னல்பற
க்கப் பிளவாகிய வாயில் நெருப்புப்பறக்கச்
சிரித்து, எனெதிரே வந்து இந்தவார்த்தை
கர்வித்துச் சொன்னது என்னத்தினாலே, எ
ன்னை நீங்களே இகழ்ந்தீர்களென்று பின்
னுஞ் சொல்லுகின்றான். என்னோடு செய்த
எல்லாச் சண்டையிலும் பட்டு மாண்டுபோ
ன நீங்கள் அந்த ஒழுங்கை இழந்து நடந்த
சண்டையை யெல்லா மறந்து போனீர்க
ளோ? நீங்கள் சாகிறதற்கு இப்படி ஆசைப்
பட்டிருக்கின்றீர்கள். நீங்கள் எல்லாரும் மா
ண்டால் உயிர்பெற்றுக் கொள்ளும்படியான
சஞ்சீவிமருந்து வைத்திருக்கின்றாயோ, இந்
த லக்ஷ்மண னாகட்டும், இவன் அண்ணன் ஸ்ரீ
ராம னாகட்டும், இன்னுந் தம்பிரவர்களெல்
லாரும் வந்து விலக்கினாலும், குரங்குகள் கூ
ட்டம் கூட்டமாக மாளப்போகின்ற தென்று
டைய வெற்றியையும், அதைக்கண்டு இந்த
மனிதர்கள் அடையப் போகின்ற வருத்தத்
தையும் தேவர்களும், ரிஷிகளுமே பார்க்கப்
போகின்றார்கள். என் கையிலிருக்கின்ற வில்
லும், என்னுடைய தோள்களும்இருக்க, மா
மிசமயமான தேஹிகளான ஜீவன்களும் பி
ழைக்கப் போகிறதுகளோ, எங்கேபோயொ
ளித்துக் கொண்டாலும், விடாமல் கூனலா
கிய குரங்குகளுடனே இந்த ராம லக்ஷ்ம
ணர்களாகிய மனிதர்களைக் கொன்று தப்பி
யிருக்கின்ற தேவலோகத்துக்கும்போய் அங்
கே தேவ உருவம் பெற்றிருக்கின்ற உங்களைக்
கொன்றுவிடுவேன். சஞ்சீவிமருந்தாலும் பி
ழைக்க மாட்டீர்கள். நான் செய்த யாகம்
இப்போது அழிந்து போய்விட்ட படியினா
லே ஜெயம்பெற்றதாக வாய் வீரம் பேசிக்
கொள்ளுகின்றீர்கள். அப்படி யொன்றும்
பேசவேண்டியதில்லை. நான் சண்டைக்கு வ
ருகிறதற்குத் தாமசப் படவுமில்லை. உங்களை
ஒவ்வொருவராகத் தலைகளை அறுத்தெறிகிற
தற்குத் தக்கவீரன் என்கையிலிருக்கின்ற பா
ணங்களா யிருக்கின்றதுகள் அல்லவா? உங்க
ளைப்போல நான் வாயினால் வீரம் பேசமா
ட்டேன். நீங்க ளெனக்கு முன்னும் வெற்றி
யைக் கொடுத்து விட்டுப் போயிருக்கின்றீர்
கள். ஆத்திரப்பட்டால் வெற்றியுண்டாக மா
ட்டாது. நான் கோபித்துப் புறப்பட்ட கா
லத்தில் ஒருதரமாவது என்னோ டெதிர்த்து
நிற்கமாட்டீர்கள். இன்னமு நீங்கள் மாண்டு
போகப்போகின்றீர்களோ! வெற்றிகொள்ளப்
போகின்றீர்களோ! நில்லுங்கள் நில்லுங்களெ
ன்று கண்களில்நெருப்புப்பொறிபறக்கப்பா
ர்த்து மின்னலைப்போலமின்னுகின்ற கவசம
ணிந்துஅம்பறாத்தூணிகட்டிவிரல்களில்பொ
ன்மயமான விரல்புட்டில் அணிந்து வில்லைக்
கையில் தாங்கி வஜ்ரபருவதத்துக்குச் சமான
மாகிய தேரின்மேலேறி வில்லைக் குணத்தொ
னிசெய்து சங்கநாதம் பண்ணினான். இந்த
ஆடம்பரங்களைக்கேட்டுத் தேவஸ்திரீகளெல்
லாம் கன்களில் அறைந்து கொண்டார்கள். ஒ
ருக்ஷணத்துக்குள்ளே எல்லாரையுங்கொன்று
விட்டவ னல்லவோ? என்று தேவர்க ளெல்
லாம் மனங்கலங்கினார்கள். கயிலாச பதியும்,
பிரஹ்மதேவனும், மறுபடியும் இன்றைக்
குச் சண்டை நேரிட்டது என்றார்கள். முப்
பத்துமுக்கோடி தேவர்களும், சமஸ்த மா
ன ரிஷிகளும், தம்முடைய தபோ பலத்தி
னால் இந்திரஜித்து செய்த நிகும்பலை யாகம்
தவறிப் போய் விட்டது. அப்படி தவறிப்

போனபடியினாலே இந்தச் சண்டாளப் பையல் இனிப் பிழைக்கமாட்டான். இப்போது இவனை அழைத்துவந்தது விதியேயல்லாமல் வேறல்ல. லக்ஷுமணப் பெருமாளுடைய அம்பினாலே இவன்மாண்டு ரணக்களத்தி லுழைக்கப் போகிறதை நாம் காணப் போகிறோமென்று எக்களித்தார்கள். இந்திரஜித்து வில்லின் குணத்தொனி செவிகளில் வந்து நுழைந்த வுடனே வானரர்கள் தங்க ளாண்மையும் கையிலெடுத்துநின்ற மரங்களும் மலைகளும், மறுபடியும் பூமியில் சோர்ந்து விழவிட்டார்கள். நாமு மிறந்து போனோமென்றுபயந்து ஓட்டம்பிடித்தார்கள். வானரசேனாதிபதிகள் மாத்திரம் தைரியங்கொண்டு நின்றார்கள். மற்றவர்களெல்லாம் உகாந்த கால சண்டமாருதத்தால் நாலு பக்கங்களிலும் பொங்கிவழிந் தோடுகின்ற சமுத்திர ஜலத்தைப்போல ஓட்டம்பிடித் ததைக் கண்ட ஆஞ்சநேயர் அவ்விடத்திலிருந்த ஒரு பெரிய மலையைப் பேர்த்து எடுத்தார். அப்போது யமனுக்கும் யமனான இந்திரஜித்து அடா! குரங்கே? நில்லு நில்லு வாய்மதம் பேசி மலையைப்பேர்த்தெடுத்ததுதேவர்கள்பார்க்கும்படி என்னை இந்த ரணக்களத்தில் கொன்றுவிடலாமென்றோ?நல்லகாரியஞ்செய்தாய்உன்னைக் குரங்கென்றுசொல்லுகிறது தகும், நல்லவன்தான் வாவா என்று கூப்பிட்டான். இப்படி வில்வீரர்களுக்குள்ளே அதிவீரனான இந்திரஜித்துவுக்கு முன்பாக மலையைப்பேர்த்து எறிய எதிர்த்து நிற்கின்ற அனுமானைப் பார்த்துத் தேவர்கள் இந்த மல்லுத்த வீரருக்கு என்னதைரியம் அப்பாவென்றுஆச்சரியப்பட்டார்கள். வாயு தேவன் பார்த்துத் தன் பிள்ளையின் பலத்தைக் குறித்து நடுங்கினார். ஆஞ்சநேயர் அந்தமலையை ஆகாசத்திலும், அஷ்டதிக்குகளிலும், நெருப்புப்பொறிகள் சிதறும்படியாக இந்திரஜித்துமீது வீசியெறிந்தார். அநேக இடிகள் ஒன்றாய்ச்சேர்ந்துகொண்டு வருகின்ற ஒரு பெரிய இடிமலையைப்போல வருகிற அதன்சேஷ்டைகளைக் கண்டு லோகத்தவர்களெல்லாம் மனநடுங்கினார்கள். ராக்ஷசகூட்டங்கள் அதைப்பார்த்துச் சின்னபின்னப்பட்டுப்போனார்கள். அப்போது மேருவைப்போலப் பருத்ததோள்களையுடைய இந்திரஜித்துத் தன் குண்டலங்கள் மிகுந்த சாஜ்ஜொல்யமாய்ப் பிரகாசிக்கும்படியாக வீரஅஷ்டகாசஞ்செய்து அஸ்திரப்பிரயோகம்பண்ணி வாயுபுத்திரர் ஆகாசமார்க்கமாக எறிந்த அந்தமலையைத் தூளாக்கி உதிரும்படிப் பண்ணிவிட்டான். தேவர்கள் அதைக்கண்டார்களேயல்லாமல் அவன் அஸ்திரப்பிரயோகம் பண்ணினதை யொருவரும்பார்க்கவில்லை. மறுபடியும்வேறேயொரு மலையைப்பேர்த்து வீசும்படி யத்தனித்த ஆஞ்சநேயருடைய வஜ்ரமலைக்குச்சமமான மார்பிலும், அதிவேகமாய்ப் போகின்ற காலிலும், கைகளிலும், கழுத்திலும்,கண்களிலும், இந்திரஜித்துப் பிரயோகிக்கப்பட்ட விஷத்தில் தோய்ச்சஓட்டின அக்கினிமுக பாணவருஷங்கள்வந்து பாய்ந்ததுகள். அப்போது அனுமான் மூங்கில்காடுகள் வளர்ந்திருக்கின்ற மலையைப்போலப் பக்கங்கள் தோற்றுகின்றபடியினாலும், எதிரிலுள்ள ராக்ஷச இருட்டைப் பகைத்துப்பாய்கின்ற தன்மையினாலும், கிரணங்களைப்போல இந்திரஜித்து விட்ட பாணங்கள் பிரகாசிக்கின்ற படியினாலும், உதயகிரியில்தோன்றுகின்ற சூரியனுக்குச்சமானமாக இருந்தார். இந்தப்பிரகாரம் வாயுபுத்திரர் சோகமானவுடனே அங்கதகுமாரர்முதலான வானரவீரர்கள் அதிககோபத்துடனேவந்து இந்திரஜித்து முன்வந்து சேர்ந்தார்கள். சுக்கிரீவமஹாராஜரும்வந்து எதிர்த்தார். இந்திரஜித்து அவரைப்பார்த்து மிகுந்த கோபத்துடனே சொல்லுகின்றான். சிம்ஹத்தினுடைய போருக்குமுன்பாக வந்தபோது இதுயானையை எதிர்க்குமேயல்லாமல் ஒரு அல்பக்குரங்கைத் தொடர்ந்துவருகிறதுமுண்டோ? லேசான உங்களைக் கொன்றதனா லெனக்கென்ன லாபம். சற்றுநேரம் எதிர்த்து என்னோடு சண்டைசெய்ய வல்லவனான அந்தராமனுடையதம்பியைக் காட்டிக்கொடுத்து நீங்கள் பின்னிட்டுப்போகாமல், என்கோபத்துக்கு ஈடுபட்டு வீணாயென் செத்துப்போகிறீர்கள். சோர்ந்துவிழுந்தபோனஅனுமானைநீங்கள் பார்க்கவில்லையோ?அவனைப்பார்க்கிலும் நீங்கள்பலமுள்ளவர்களோ என்கையில் வில்லிருக்க, அந்த வில்லுக்குப் போத பலங்குறைந்து போய்விட்டதா? இந்தவில்லால்முன்னடிபட்டவர்களல்லவோ! நீங்கள் அப்போதில்லாமல் இப்போது என்னபலத்தைப் பெற்றுவந்தீர்கள். அந்தமனிதனைக்காட்டிக்கொடுத்துப்போட்டு நீங்கள் வாசம்பண்ணுகின்ற மலைகளைத் தேடிப்பிழைத்தோடிப்போங்கள் என்றுசொல்லிஇளையபெருமானை நோக்கிவருகிறதைப்பார்த்து மலைகளையும், மரங்களையும் எடுத்துக்கொண்டு வந்தார்கள். வந்தஅந்தவானரவீரர்களுடைய கூட்டங்களின்மீது மேருமலையைப் உருவிப்

போகத்தக்க பாணங்கள் ஓய்தலில்லாமல் கோடிகோடியாகப் பாய்ந்தனுகள். எல்லாரும்வருத்தமுற்றுச் சகித்தெய்த்துப்போய்விட்டார்கள். அப்போது விபீஷணாழ்வான் இளையபெருமாளைப் பார்த்து ஸ்வாமீ! தேவரீருடைய சைநியமெல்லா மாண்டுபோகின்றதே இப்போது பாணவருஷங்களைப் பிரயோகிக்கின்றதல்லவோ வெற்றி, அந்த இந்திரஜித்து என்னுங் காளமேகம் செய்த யாகம் அழிந்துபோய்விட்டது. இனிஅவனைப்பிழைக்கவொட்டாதபடி ஹதஞ்செய்ய வேண்டுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். இளையபெருமாளும் போர்க்களத்துக்கு வந்து இந்திரஜித்துவைச் சந்தித்தார். அப்போது சாக்ஷாத் சிவபிரானுடைய அம்சமாகிய அநுமான் சோர்வுநீங்கி முகமலர்ச்சியுடனே ஓடிவந்து லக்ஷ்மணர் சந்நிதியில் நின்று என் ஆண்டவரே அடியேனுடைய இரண்டு தோள்களின்மீதும் எழுந்தருளக் கடவீர் என்று விண்ணப்பஞ்செய்ய இளையபெருமான் நல்லதென்று திருவுளம் உவந்து ஆஞ்சநேயர் திருத்தோளின் மீது எழுந்தருளினார்; வாயுகுமாரரும் தேவர்களுடைய துக்கங்களைத் தீர்க்கின்றதுபோலச் சந்தோஷமுற்றுச் சாரிகை திரிந்தார். ஆயிர மேகங்க ளொன்றாகக் கூடினதுபோலக் கருநிறமுள்ளவனாகிய இந்திரஜித்து ஆயிரங்குதிரைகள் பூட்டிய உயர்ந்த தேர்மீது எறினான். இருவரும் ஒருவரோடொருவர் எதிர்த்தார்கள். ஆஞ்சநேயரும், சஹஸ்திர நாமாங்கிதரான திருவிக்கிரமனைப்போல அஷ்ட திக்குகளிலும் சுற்றித் திரிந்தார். அப்போது பதினுன்கு வருஷமாக நித்திரைநீக்கிப் பெருமாள் கைங்கரியமே தமக்குத் தாரகமாக எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீராமாநுஜர் அக்கினிக்கொப்பானவைகளும், சத்துருக்களுடைய பிராணனே தமக்கு ஆகாரமா யிருக்கின்றவைகளும், எங்குந்திரிகின்ற பேயைப்போலத் திரிகின்றவைகளும் பகையைப்போலவருத்தப்படுத்துகின்றவைகளும், நோயைப்போலத் துன்பப்படுத்துகின்றவைகளும், தவறுத பிரகிருதியமான ஊழ்வினைக் கொப்பானவைகளும், மழுவை யொத்தவைகளும், பேய்க்குத் தாய்போலிருக்கின்றவைகளுமாகிய சில பாணங்களைப் பிரயோகம் பண்ணினர். இந்திரஜித்துவும் அந்தந்த அம்புகளை அந்தந்த அம்புகளாலேயே துண்டாக்கிவிட்டு ஆகாசமுழுவதையும் அஷ்டதிக்குகளையும், சப்த சமுத்திரங்களையும், மூடிக்கொள்ளும்படியாக உகாந்தகாலத்தில்பெய்கின்ற மேகவருஷம்போல லோகத்தில் இவைகளல்லாத வேறென்ன பாணங்களிருக்கின்றனுகள் என்னும்படியாக எல்லாவித அம்புகளையும், புங்கானு புங்கமாகப் பிரயோகித்தான். அவைகளை யெல்லா மிளையபெருமாள் பொறிகளைப்போலப் பறந்தோட அந்தந்தப் பாணங்களாலேயே தடுத்துவிட்டார். அப்போது இந்திரஜித்துத் தனது தேரை ஆயிரவித சாரிகளோடும்படிச் செய்தான். அப்போது அநுமானும் பலசாரிகை திரிந்தார். இப்படி இந்திரஜித்துவின் சக்கரம் பூண்ட தேரினாலும், வெற்றிபெற்ற ஆஞ்சநேயருடைய திருவடிகளினாலும், சிறுகுன்றுகளும், மேருமலைகளும், மரங்களும், சிறுபுல்லும், எல்லாஞ்சாம்பலாய் அந்தச்சாம்பலும் தோற்ருத விதமாகத் தேர்போனவழி வாயுபுத்திரரும் அநுமான்போனவழி இந்திரஜித்துவின்தேருந் திரிந்தனுகள்:

இவ்விதமாய் இரண்டுவீரர்களும், இன்னர் இன்னரென்று அவ்விடத்திலுள்ள யுத்தவீரர்களுந்தெரிந்துகொள்ளாமல்சாரிகைசுழன்று பாணங்களைப் பொழிந்தார்கள். இவர்களைப் பார்த்துத் தேவர்களும் திரிலோகத்திலும், ஒருவீரரும் இவர்களுக்குச் சமமாகமாட்டார்களென்று சந்தோஷித்தார்கள். லக்ஷ்மணப்பெருமாளும் இந்திரஜித்தும் மோதுகின்ற ஒருகடலுடனே மற்றொரு கடல்வந்து எதிர்த்தாற்போலச் சண்டை செய்தார்கள். ஆகாசத்துக்கு வருவதாகப் பாணங்கள் வருகின்றன என்றுதேவர்களும் தங்கள்கண்களாலும், மனத்தாலும், அவைகளை வேறுபிரித்தறியக்கூடவில்லை. அவைகளுக்கு ஒருகணக்கிடலாமென்றுநினைத்தும்இவ்வளவென்றுதொகையுஞ்செய்ய முடியவில்லை. அவைகளுக்கு நடுவே காற்றும் நுழையக்கூட வில்லை. அந்தப்பாணங்கள் அவரவர்களுடைய தேகங்களிற் புண்செய்கின்றதுளேயல்லாமல்வேறென்றுஞ் செய்யவில்லை. அஷ்டதிக்குகளும் அக்கினிமயமா யெரிந்தனுகள். அவரவர்களுடைய வில் குணத்தொனியானது இடியைப்போல எங்கும் நடுங்கச்செய்துவிட்டது. மேகங்களில் நிறைந்திருக்கின்ற இடியையும் இருவருடைய பாணங்களும், உருவிப் போய்விட்டனுகள். நக்ஷத்திரங்களெல்லாம் சிந்திப்போனதுகள். லோகமெல்லாம் புகைமண்டிப்போனது. திக்குகளெல்லாம் வெடித்துப்போனதுகள். எங்கேபார்த்தாலும்இடிகள் வீழ்கின்றதுபோலவில்லின் குணத்தொனி பெருங்கோஷமாக ஒலித்தனுகள். இரண்

டுவீரர்களும் பல்லை நற நற வென்று கடித்தார்கள். அவர்களுடைய பாணங்கள் ஆகாசத்தை ஊடுருவிக்கொண்டுபோய் அக்கினிப் பொறிகளைக் கக்கினதுகள். தேவர்களெல்லாரும் இதுகளைப் பார்த்தார்கள். கடல்களெல்லாம் வற்றிப்போய்விட்டதுகள். மலைகளெல்லாம் பிளந்துபோய் விட்டதுகள். சூரியனுடலிலும் நெருப்புப்பற்றினது. மரங்களெல்லாம் வெந்ததுகள். ரத்தக் கடலெல்லாம் வற்றினது. எங்கும் எரி பற்றினது. பாணங்கள் துண்டுபட்டுக் கடலைத் திடர்படுத்திவிட்டது. லோகமுழுவதும் கிறுகிறுவென்று சுழன்றது. அக்கினிகளை வீசுகின்ற கூர்மையாகிய பாணங்கள் .இருவலகச்சேனைகளும் ஒட்டமெடுக்கும்படியாக எங்குஞ் சுற்றினதுகள். லோகத்திலுள்ள ஜீவகோடிகளெல்லாம் தந்தம் இடங்களைவிட்டுச் சிதறித் திக்குவிதிக்குகளாகப் போனதுகள். யானைகளும் குதிரைகளும் குரங்குகளும் அழிந்து கடலைப்போல ரத்தவெள்ளம் ஓடத்தலைப்பட்டது. அநேகர் கொலையுண்டு மரணமடைந்தார்கள். சக்கரவர்த்தித் திருத்தம்பியாகிய இளையபெருமாள் பிரயோகிக்கின்ற பாணங்களில் சிலபுகையைப் பரப்பிக்கொண்டு பறந்ததுகள். சிலநெருப்பைச் சொரிந்துகொண்டுபோனதுகள். சிலலோகமெல்லாம் புகையாய் எரிந்தோடினதுகள். சில ஒன்றுநூறாய் விரிந்தோடினதுகள். சில இடசாரியா யோடினதுகள். சிலவலசாரியா யோடினதுகள். சிலநெருங்கி யோடினதுகள். சில விரிந்தோடினதுகள். சிலஅஷ்டதிக்குகளிலும் பாய்ந்தோடினதுகள். ஜலமுகாஸ்திரங்களையும், அக்கினிமுகாஸ்திரங்களையும், பர்வதாஸ்திரங்களையும், மேகாஸ்திரங்களையும், இடியாஸ்திரங்களையும், சமுத்திராஸ்திரங்களையும், சூரியாஸ்திரங்களையும், கைலாசபதியாகிய ருத்திரமூர்த்தியி. னுடைய சிரங்களையொத்த பஞ்சமுகாஸ்திரங்களையும், மேருமுகாஸ்திரங்களையும், இந்திரஜித்துப் பிரயோகித்தான். இப்படி லக்ஷ்மணர் இந்திரஜித்து இருவர்களுடைய தேஹ காவலான கவசங்களிலும், பலம்பொருந்திய தோள்களிலும், முகங்களிலும், வஜ்ர சமானமாகிய மார்புகளிலும், கால்களிலும், காமினியாகிய ஸ்திரீகளுடைய கடைக்கண்களைப்போலக் கூர்மையாகிய பாணங்கள் பதிந்து பாய்ந்திருந்ததுகள். எத்தநாளையிலாவது தேவர்களானாலுஞ் சரி, தானவர்களானாலுஞ் சரி, இவர்களைப்போல யுத்தஞ்செய்த வீரர்கள் யாருண்டாயிருந்தார்களென்று தேவர்களெல்லாம் இந்த இரண்டுவீரர்களையும் புகழ்ந்து, ஸ்தோத்திரம்பண்ணி ஆரவாரித்தார்கள். இந்த இந்திரஜித்தும், இளையபெருமாளும், ஒருவருக்கொருவர் எதிராக கிருஷ்ணபக்ஷ திரயோதசியிலும், பூர்வபக்ஷ திரிதிகையிலும் தோன்றின மூன்றாம்பிறைச் சந்திரர்களைப்போலப் பொன்மயமான தங்கள் வில்லுகளை வளைத்தார்கள். இந்த இரண்டுவீரர்களுடைய பாணங்களும்பாய்ந்து,லோகமெல்லாம் வெந்ததுகள். கடல்களெல்லாம் வெந்ததுகள். தேவர்களெல்லாம் நாவுலர்ந்து யுகாந்தகால மின்று வந்துவிட்டதோ வென்று சந்தேகித்தார்கள். குணத்தொனியைக் கேட்டுத் திக்கஜங்களெல்லாம் நெஞ்சுநொந்துபோனதுகள். ஆகாசமெல்லாம் நக்ஷத்திரங்களை யுதிர்த்துவிட்டது. சூரியன்கிரணங்களை உதிர்த்தான். பூரணச்சந்திரன் தன்னிடத்திலுள்ளமானை இழந்துபோனான். மேகங்களெல்லாம் மழையைச்சொரிந்தது.அஷ்டகுலாசலங்களும் முடிகுலைந்துபோனது. லோகத்திலுள்ளஜீவகோடிகளுக்கெல்லாம் தேஹத்தைவிட்டு உயிர்கழிந்து போகும்போலாய் விட்டது. அப்போது அஷ்டதிக்குகளைச்செயம்பெற்ற ராவணனுடைய குமாரனான இந்திரஜித்து கூர்மையான பத்ரப்பாணங்களை இளையபெருமாளுடைய திருமேனியில் எய்தான். இளையபெருமாள் தம்முடையவில்லை வளைத்து இந்திரஜித்துவின் கவசமுந் தேஹமும் ஊடுருவிப்போகும்படி சில அக்கினிமுகாஸ்திரத்தைப் பொழிந்தார். இந்திரஜித்து தேவர்களை முன்னந்தொடர்ந்து துரத்திக்கொண்டு அறுத்தவைகளான சிலசாஜ்ஜொலியமாய்ப் பிரகாசிக்கின்ற பாணங்களைப் பொறுக்கி யெடுத்து வேகமாய்ச் செலுத்தி ஆஞ்சநேயருடைய திருத்தோள்களின்மீது பிரயோகித்தான். அவைகள்பட்டு ரத்தவெள்ளஞ்சொரிகின்ற மலையையொத்த அனுமானுடைய திருமேனி சூரியனைப்போலச் செவந்திருக்கின்றதை இளையபெருமாள் பார்த்து மிகுந்த கோபத்துடனே இந்திரஜித்து எறியிருந்த தேரை வேறொருபக்கத்திற்கும் போகவொட்டாதபடிக் குதிரைகளையும்,வண்டில்களையும் சிதைத்துவிட்டு, இருளைக்கெடுக்கின்ற சூரியகிரணங்களைப்போலச் சரவருஷங்களைப் பொழிந்தார். இந்திரஜித்துவின தேர் அழிந்தமாத்திரத்தில் அதைக்கண்டதேவர்கள் .மிகுந்த சந்தோஷித்துக்கொண்டு கோவென்று ஆரவாரித்தார்கள். பிரஹ்மருத்தி

சேந்திராதி மூவருந்தேவர்களும் சந்தோஷித்தார்கள். அதைக்கண்டு இந்திரஜித்து மிகுந்த கோபமுற்றுக் கூரியவைகளாய் வெவ்வேறு தேஜஸ்மேலேறிப் பத்துப்பாணங்களை இளையபெருமாள் திருத்தலையில் பிரயோகித்தான். அதுகளிபட்ட உடனே லக்ஷ்மணர்துடித்துச்சோர்ந்து சோகமாறிப்பிறைமுகாஸ்திரங்களைப் பிரயோகித்தார். அதுகளை அவன் விலக்குகிறதற்கு முன்பாக விருஷப வாகன ரூடரான ருத்திரமூர்த்தியானவர் கர்வங்கொண்டு எதிர்த்து வந்த யமனைப் பாதத்தாலே மார்பிலே தட்டி யுதைத்ததுபோல இந்திரஜித்துவின் மார்பிலே ஒரு பாணத்தை எவினார். அந்தப்பாணம் ராக்ஷசனுடைய கவசத்தையும், அவன் மார்பையும் தாரித்துக்கொண்டு போனவுடன் அவன் பரவசப்பட்டுச் சோகமடைந்தான். அதைக்கண்டு தேவர்கள் ஆரவாரித்தார்கள். மறுபடியும் இளையபெருமாள் மகிமையான காலத்துக்கூரியனுக்கொப்பான ஒரு பாணத்தைப்பிரயோகஞ்செய்து அவனுடைய விருதுக்கொடியை யறுத்துத்தள்ளி இன்னுஞ்சிலபாணங்களைக்கொண்டு அவனுடைய வஜ்ரமயமான தோள்களையுஞ் சின்னபின்னப்படத் தொளைத்துவிட்டார். அதுபட்டு, இந்திரஜித்துவின் தேஹத்திலிருந்து ரக்தவெள்ளமானது அக்கினிமயமாய்க் குதிகொண்டு ஒழுகிவரச் சலனமுற்றவடமேருபர்வதம்போலக்களைத்துச் சாய்ந்து மறுபடியுஞ் சோகந்தெளிந்து பக்ஷிகள்மாமிசத்துக்காகச் சுழலமிட்டுக்கொண்டிருக்கின்ற சில பாணங்களைப் பிரயோகித்தான். அவைகள் போய் இளையபெருமாளுடைய கவசத்தில்நுழையாமல் கீழே பலபலவென்று உதிர்ந்து போனதைக்கண்டு சிங்கங்கள்பூட்டிய தேரையுடைய இந்திரஜித்து அதிககோபங்கொண்டு மறுபடியும் ஆயிரம்பாணங்களை இளையபெருமாளுடைய திருமார்புக்குக்குறிவைத்து எவினான். அதுகளை ராமானுஜர்குறிபார்த்துச்சிலதிவ்யபாணங்களால் முறித்தெறிந்து சில பாணங்களை அவனுடைய தேஹத்தில் ஊன்றச்செய்து சிலபாணங்களை அவன் வில்லின் நாணறும்படிப் பிரயோகித்தார். அப்போது இந்திரஜித்துத் திகைத்து இளையபெருமாளுடைய வில்லைப்பார்த்து இந்த வில்லென்ன விஷ்ணுவினுடையதோ? சிவனுடையதோ? அல்லது பிரஹ்மாவினுடையதோ? என்று சந்தேகித்து அவருடைய கவசத்தையும் பேதிக்கமாட்டாமல்தன்னிடத்திலிருக்கின்ற பாணங்களெல்லாம் அவரை ஜெயிக்கமாட்டாமையைக்கண்டு மனமயங்கிப்போனான்.

அந்தத்தன்மையை அவன் சிறிய பிதாவான விபீஷணர்கண்டு இளையபெருமாளைக் கிட்டிவந்து அவர் திருமுகத்தை உற்றுப்பார்த்து ஸ்வாமி! அடியேனுடைய ஒரு சிறு விண்ணப்பத்தைக் கேட்டருளவேண்டும் - இவன் எப்படிப்பட்ட தேவர்களையும், போரில் வெற்றிபெற்றவனுக்கும். இப்படிப்பட்டவனிப்போது மனந்தளர்ந்து பித்துக்கொண்டுபோனான். இனி இவன் பிழைக்கப்போகிறதில்லை, ஸ்வாமீ! என்றார். அப்போது இந்திரஜித்து யமனைப்போலக் கோபித்து வில்லில் வேறு நாணிபூட்டி நாணேறிட்டுக் குணத்தொனி ஏழுலோகத்தையும் போய் முட்ட அதிகவேகங்கொண்டு இதைத்தடுத்துவிடு பார்ப்போமென்று வாயுவாஸ்திரத்தைப் பிரயோகித்தான். இளையபெருமாளும் அதற்கு வாயுவாஸ்திரத்தைக்கொண்டே தடுத்துவிட்டார். அவன் மறுபடியும் அக்கினியாஸ்திரத்தைத் தொடுத்தான். இவர் அந்த அக்கினி யாஸ்திரத்தைக் கொண்டே தடுத்துவிட்டார். ராக்ஷசன் வருணாஸ்திரத்தைத் தொடுத்தான். இளைய பெருமாளும் அந்த அஸ்திரத்தைக்கொண்டே தடுத்துவிட்டார். அந்தத் துஷ்டன் சூரியாஸ்திரத்தைப் பிரயோகித்தான். தர்மிஷ்டரான ராமானுஜரும் சூரியாஸ்திரத்தைக் கொண்டே தடுத்துவிட்டார். நல்லது லக்ஷ்மணா! இத்தனை அஸ்திரங்களையுந்தடுத்தாயே? இந்தஅஸ்திரத்தைத் தடுத்துவிடுவாயோ வென்று சமுத்திராஸ்திரத்தைச் செலுத்தினான். அடா! இந்திரஜித்தே நான் வேறொன்றும் எவவில்லை. அந்த அஸ்திரத்தைக்கொண்டேதடுக்கின்றேனென்றும் தொடுத்து நீக்கினார். இனிக்கொல்லத்தக்க அஸ்திரத்தைத் தொடுக்க வேண்டுமென்று நினைத்துப் பிரஹ்மாஸ்திரத்தைப் பிரயோகித்து ஹேலக்ஷ்மணா! இனி மாண்டுபோனாயென்று சொன்னான். அந்தரமார்க்கத்தில் நின்றவர்களான மழுவாயுத தரனான ருத்திரமூர்த்தியும், பிரஹ்மாவும், தேவ ரிஷிகளும், பிரஹ்ம ரிஷிகளும், தேவேந்திரனும், மற்ற மற்ற தேவகணங்களும், மனம் நடுங்கி இனி மேலும் இளையபெருமாளுக்கு இந்த அஸ்திரத்தினால் மரணமுண்டாகாமல் போகக்கடவது என்று ஆசீர்வதித்தார்கள். உகாந்த காலத்தில் லோகங்களையெல்லாம் அழிக்குப்படியானவடவாமுகாக்கினியோடு தவாசாதித்யர்களுடைய பிரகாசத்தைக்காட்டி ஜ்வலிக்குந்த

கிரணங்களைவிசித்கொண்டுசேமானமில்லாமல் வருகின்றதை இளையபெருமாள்பார்த்து இவன் இந்தப் பிரஹ்மாஸ்திரத்தைத் தன்வல்லமையால் மீட்டுக்கொள்ளவுமாட்டான். தடுக்கவுமாட்டான். நாம் மாண்டுபோவோமென்றுவிட்டான். இனிநாம் நம்முடைய நிலைமையைக்காட்டாமற் போனோமானால்தகுதியல்லவென்றுசஹஸ்திரகமலவாஹனாகியபிரஹ்மாவினுடைய அஸ்திரத்தைத்தொடுப்பதாகத்திருவுள்ளங்கொண்டு பிரயோகித்தார். தாம்விட்ட பிரஹ்மாஸ்திரமே தகுந்த அஸ்திரமாகும் எனென்றால் தேவலோகத்தை மன்னித்து, பூலோகத்தை மன்னித்து,இந்தச்சத்துருவினுடன்மாத்திரம்நீபோராடக்கடவாயென்றும், அவன்விட்ட பிரஹ்மாஸ்திரத்தை மாத்திரம் மாற்றிவிடக் கடவாயென்றும் ஆக்கியாபித்து விட்டாரேயல்லாமல் தம்முடைய தேஹத்தை அழிக்கவந்தபோதும்தர்ம்மத்தையழியாமலிருக்கின்றாரோ என்று தேவர்களெல்லாம் ஆநந்தித்தார்கள். இடியேறு வந்து எதிர்த்தகாலத்தில் அதற்கு எதிர்ப்பாக வேறு நெருப்பைப் பிரயோகித்தால் முன் வந்த இடிமாய்ந்துவிட்டதுபோலராக்ஷசன் விட்ட அஸ்திரத்தை மாய்த்துவிட்டு ஸ்ரீராமபிரானுடைய திருத்தம்பியார் விட்ட அஸ்திரமானது சப்தலோகங்களையுஞ் சுட்டெரிக்கும்படியான பெருந்தீயைப்போல ஆகாசத்தை எல்லாமூடிக்கொண்டு நிறைந்துநின்றது. அந்தஅஸ்திரமானது எங்கும்படராதபடி சூரியகுலதிலகராகிய இளையபெருமாள் வேறொரு அஸ்திரத்தைத் தொடுத்து அதன்மீது விட்டார். அது ஒருவிஷம் மற்றொருவிஷத்தைத் மாய்த்து விடுவதுபோல அந்த அஸ்திர வேகத்தை மாய்த்து விட்டது. தேவர்களதைக்கண்டு வெற்றிபெற்ற இந்த இளையபெருமானுக்கு இனி மேலுமேலுமாகக் கைகூடாத நன்மைகளும் இருக்கின்றதுகளோ? என்று மனத் தைரியங் கொண்டு சந்தோஷிப்பட்டார்கள்.

அப்போது மூன்றுகண்களையுடைய சிவ பெருமானவர் தேவர்களைப் பார்த்து, ஓ ! தேவசமூகங்களே ? நீங்களிவருக்கு இது முடியாதகாரியமல்ல வென்று நிச்சயந்தெரியாமல் சொன்னீர்கள். யதார்த்தப்பொருளைச்சொல்லுகிறேன்கேளுங்கள்என்றுசொல்லத்தொடங்கினார். நாராயண நரரென்ற திருநாமங்களை யுடையவர்களாய் நமக்கெல்லாம் மூலமும் முதற்காரணவஸ்துவுமாய்ப் பாவ வினைகளையெல்லாம் கழித்த ஞானிகளும், தம்மை ஆராய்ந்து அறியவிடாத ஒரு மஹாமாயையினாலே தம்மைமறைத்துக்கொண்டு நாம் பாராயணம் பண்ணுகின்ற நான்குவேதங்களையும் கடந்த புராண புருஷர்களாகும். இவர்கள் அறிவுக்கு மெட்டப்படாமல் அப்பிரமேயர்களா யிருந்தவர்கள் தர்ம்மமார்க்கம் கெட்டுப்போகப் போகிறதென்று இந்த லோகத்து மனுஷியர்களைப் போல வந்து அவதரித்து அந்தத் தர்ம்மத்தை நிலைநிறுத்துவார்கள். ஆகையால் அதர்ம்மிகளான இந்தராக்ஷசர்களை வேரறக்களையும்படித் திருவயோத்தியில் தசரதமஹாராஜாவின் தபோமகிமையால் அவருக்குப் புத்திரர்களாக அவதரித்து அந்தஅவதார ரஹஸ்யங்களை ஒருவருந்தெரிந்துகொள்ளக்கூடாத விதமாய் நடித்துக்கொண்டிருக்கின்றார்கள். ஜீவகோடிகளிலெல்லாம் நிறைந்து யாவரும் ஸ்தோத்திரிக்கத்தக்க ஒருவனென்ற ஈசுவரனை யாவருக்கும் வெளியிடுகின்ற,சந்தேகிக்கவேண்டாத நிச்சய நிலையையுடையவரான நரனாகும் இவர். அந்தஸ்ரீராமனே வென்றால், இந்த லோகமெல்லாவற்றிலும் தயிரில் தோய்த்த பிரைபோலக்கலந்து அவைகளுக்கு உத்கிருஷ்டஆதாரஸ்தானமாயிருக்கின்ற நாராயணனும், வேதபுருஷனும் புகழ்ந்து சொல்லுதற்கு முடியாத சகலகாரணபூதனுமாகும், இதுமூலரஹஸ்யம் என்று அறியுங்கள். பெரியபாற்கடலிலே சயனித்துக்கொண்டிருந்தவரும், இவர்தான். முன்னால் நாம் நம்முடையகுறைகளைச் சொல்லிக்கொண்டபோது துர்ப்பாக்கியர்களான ராக்ஷசர்களைக் குலத்துடனே களைந் தெடுத்துக் கொன்று சுபாக்கிய தர்ம்மத்தை ஸ்தாபனம்பண்ணுகிறதற்குத் திருவுளங்கொண்டவரு மிவர்கள் தாம். என்று பாஹியகுதிருஷ்டிகளான மாயா சப்பந்திகளைச் சம்ஹரிக்கின்றவரான கொன்றை மாலிகாதர சடாமகுடரான ருத்திரமூர்த்தி வெளியிட்டுச்சொல்லியருளினார். அப்போது தேவர்கள் நாங்க ளிந்த ரஹஸ்யங்களெல்லாவற்றையும் அநுபவசித்தமாய் அறிந்திருந்தும், அவருடைய மஹாமாயாப் பிரயோகத்தாலே எங்களுக்குஅவையெல்லாம் தெரியாமல் மறந்துபோனோம். இப்போது, ஹேசிவபெருமானே உம்முடைய அநுக்கிரகத்தால் உபதேசித்த வாக்கியத்தைப்பற்றினதினாலே எங்களுக்குள்ள சந்தேகமுமுழுவதும் நீக்கினோம். இனிஎங்களுடைய சத்துருக்களையெல்லாம் ஜெயித்துவிட்டுச் சந்தோஷமாய் வாழ்ந்தோம். எங்கள்வருத்தங்களை

கடந்தோம். ஐயா, பக்தபாப விமோசனு என்று வணங்கித் தெண்டனிட்டார்கள். இப்படியிருக்க, வக்கிரசித்தங்களையுடைய இந்திரஜித்து நாராயணாஸ்திரத்தையெடுத்து இளையபெருமானைப்பார்த்து நீ இந்த அஸ்திரத்தைத் தப்பித்துவிடுவாயேயானால் உங்களை யெதிர்த்து யாரிதிற்கவல்லவர்கள் யாரிருக்கின்றார்கள். நீ இதைத் தப்பித்துக்கொள்ள மாட்டாமென்பவர்க்கும் அடைந்துமேபோவாய் இது தப்பாமற்கொல்லும் என்றுசொல்லி லோகங்களெல்லாம் நிலைகலங்கித் தமோமயப்படியாகப் பிரயோகித்துவிட்டான். அதைக்கண்டு தேவர்களெல்லாம் தங்க ளிரண்டுகைகளையும் சிரசின்மேற்கூப்பிக்கொண்டு தங்களைக் காத்துக்கொண்டார்கள். அப்படியே வானரர்கள் முதலாகிய மற்றவர்களும், அப்படியே சிரத்திற் கரத்தைக்குவித்து வாய்திறவாமல் தயங்கிநின்றார்கள். பழுதுறாமல் போவதும் யாவர்களையும் சம்ஹரிப்பதுமான அந்த நாராயணாஸ்திரம் வருகின்றதை இளையபெருமான்பார்த்து சாக்ஷாத் சக்கரதாரனை ஸ்ரீயப்பதியே என்று தியானித்து எதிரே நடந்துபோனார். எந்தலோகங்களையும் சுட்டெரிக்கும்படிச் செல்லுகின்ற தெய்வத்தைத் தெரிந்தவரும், ஒருவராலும் விலக்க அரிதாகிய மூவுலகுமுதற்காரணவஸ்துவின்அஸ்திரமென்றறியாநிற்கின்றவருமான ஸ்ரீராமாநுஜர்மீதுபோகாமல் விலகி வலங்கொண்டு சுற்றி அந்தர மார்க்கமாய்ப் போய் விட்டது. லோகமெல்லாம்நிறைந்துவந்தநெருப்பும்அவிந்துபோனது. புகையும்நீங்கிப்போய்விட்டது. அப்படிப்போனவாய் நாராயணாஸ்திரம் போய்விட்டதைக்கண்ட தேவர்களெல்லாம் இளையபெருமானை ஸ்தோத்திரம் பண்ணினார்கள். வானரவீரர்களெல்லாம் ஆநந்தக்கூத்தாடினார்கள். தேவஸ்திரீகளெல்லாம் நாட்டியமாடினார்கள். மஹாரிஷிகளெல்லாம் ஐயா, இளையபெருமானே ? லோகங்களையெல்லாம் ரக்ஷித்தீரென்று கொண்டாடினார்கள். தாமரசோற்பவனான பிரஹ்மதேவரும், மழுவாயுதபாணியும், வாய்திறையப் புகழ்ந்தார்கள். இதை இந்திரஜித்துப்பார்த்து இவனுரோவென்று சந்தேஹித்து இவன் அந்த அஸ்திரத்தின் முதன்மையான உடையவனென்று நினைத்து, ஆராயிருந்த போதிலும் இருக்கட்டும். இனிநான்ஆலோசிக்கமாட்டேனென்று நினைத்துச் சிவாஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணி அவனைக் கொன்றுவிடுகிறேனென்று புத்திபண்ணி, [illegible]ய பிரமதேவன் சிருஷ்டித்த லோகங்களையெல்லாம் ஒரேநாளில் ஒருமுகூர்த்தியானத்திலே சம்ஹரிக்கின்ற ருத்திரமூர்த்தியினுடைய பாசுபதாஸ்திரத்தைத் தொடுக்கிறதாக, இந்திரஜித்து எண்ணியிருப்பதை அறிந்து மேலே வாசமாயிருந்த கணங்களெல்லாம் பாய்ந்துவிட்டது. லோகமெல்லாம் இனி நம்மை க்ஷணநேரத்துக்குள்ளாக அழித்துவிடுவானே! இந்தச் சண்டாளனென்று மயங்கிவிட்டதுகள். இந்தஅஸ்திரத்தைச் சிவபிரானுடையதாமே, நம்மீது கருணைகொண்டு கொடுத்ததல்லவா ? இதற்காக அநேகம்பேர்கள்பலகாலமும் தவஞ்செய்தும் அவர்களுக்குக்கொடாமல்உனக்குக்கொடுத்தேனென்று அந்த ருத்திரமூர்த்தியே சொல்லி யிருக்கின்றாரே ! ஆகையா லிது இந்த லக்ஷ்மணனுடைய உயிரை வாங்குமோ என்று சந்தேகிக்கவேண்டிய தில்லை. அல்லாமலும் நாமே இதை முன்னால் சத்துருக்களின்மீது விட்டபோதும் இதற்கெதிராக நின்றவர்கள் ஒருவருமில்லையல்லவா ? என்று தைரியங்கொண்டு ராவணியானவன் அந்தஅஸ்திரத்துக்குமான லக்ஷமாகப் புஷ்பம், தீர்த்தம், சந்தனம், நைவேத்தியம், தூபம், இவைகளைக்கொடுத்து இந்தலக்ஷ்மணனுடைய உயிரைக் கொண்டுவாக்கடவாயென்று அனுசந்தித்து அதிககோபத்துடனே பெரியவில்லில் பூட்டிய நாணியைத் தோள்புரளவாங்கி ஒருவிதத்தாலும் தடைபடாத வல்லமையுள்ளதான பாசு பதாஸ்திரத்தைப் பிரயோகித்து விட்டுவிட்டான். அப்போது அந்தப் பாசுபதாஸ்திரமானது, சூலாயுதங்களையும், மழுக்களையும், சுட்டெரிக்கும்படியான பாணங்களையும், அக்கினியையும், விஷத்தையும், சர்ப்பங்களையும், நிரிடி நெருப்பிடிகளையும், அநேகமய ஸ்வரூபங்களையும், கரும்பூதங்களையும், பெரும்பேய்க் கூட்டங்களையும், லோகமெல்லாம் நிரப்பிக்கொண்டு ஒரு பக்கத்திலே வடவாமுகாக்கினியையும், மற்றொருபக்கத்திலே லோகங்களையெல்லாம் பின்தொடர்ந் தழிக்கும்படியான சூறைப்பெருங்காற்றையும் உடையதாய்ச் சப்தசமுத்திரங்களுக்கும் அப்புறமா யிருக்கின்ற பெருப்புறக் கடல்வந்தது போலவும், அந்தச் சமுத்திரத்தில் வாசமாயிருந்த பேரிருள் மூடிவந்ததுபோலவும் வந்தது. அதைக்கண்டு இந்தஅஸ்திரம் பழுதாக மாட்டாது லக்ஷ்மண னிறந்துபோனானென்று பயந்து தேவர்களெல்லாம் ஓட்டம் பிடித்தார்கள். ரிஷிகளெல்லாம் பறந்தார்கள்.

வானரங்கள் பட்ட பாட்டைக் குறித்துச்
சொல்லுகிற ததிசயமோ? சூரியசந்திரர்கள்
சதிமாதினர்கள். இந்தத்திரிலோகமுழுவதும்
சுழன்றதுகள். அதைப்பார்த்து விபீஷணும்
வான் உயிர்நீங்கும் அவ்வளவு பயத்துடனே
மனத்திடுக்கிட்டு இந்த அஸ்திரத்தை நீக்கும்
படியான உபாயங்களும் உண்டாகுமோ?
ஓ! ஸ்வாமீ? வீரர்க்குள்ளே முதன்மையான
இளையபெருமாளே, ஸ்வாமீ! சக்கரவர்த்தித்
திருக்குமாரனே?என்று கூப்பிட்டார். அதற்கு
இளையபெருமாள்சிரித்தார். வெற்றிமாலையை
த்தரித்த பலவான்களான வானரவீரர்களெல்
லாம் இளையபெருமாளுடைய, திருவடிநிழ
லி லொதுங்கி ஸ்வாமீ! தேவரீருக்கு அபயம்
அபயம் என்றுகூவினர்கள் கூவின எல்லாரை
யும் பயப்படாதேயுங்கள் உங்களெல்லாருக்
கும் அபயங் கொடுத்தோமென்று தமது தி
ருக்கரத்தால் ஆதரித்து இந்தப்பூலோக சுவர்
க்கலோகத்தார் படுகின்ற பயங்களை நாமறிந்
தோம், இனிநாம் இதைச்சும்மாவிடப் போ
கிறதில்லை. சிவபிரானுகிய பஞ்சமுகனுடை
ய அஸ்திரத்தையே தொடுக்கின்றேனென்று
நிச்சயித்து, அந்தப் பாசுபதாஸ்திரத்தை எ
டுத்து இந்திரஜித்துவிட்ட அஸ்திரத்தை மா
த்திரம் அழித்துவிடக்கடவாய் லோகத்துக்
குவேறே ஒரு உபத்திரவமும் செய்யவேண்
டாமென்று உபமந்திரித்து அதனுள்வேறொ
ரு அக்கினிமுகாஸ்திரத்தைச் சேர்த்துச் செ
லுத்தினர். அதுபோய் அந்த அஸ்திரத்தினு
லுண்டாகிய எல்லா விபரீதங்களையும் ஒருக்ஷ
ணப்பொழுதுக் குள்ளாக விழுங்கிவிட்டது.

அப்போது தேவலோக வாசிக ளெல்லாம்
ஆரவாரித்தார்கள். பூலோகவாசிகளும், ஆர்ப்
பரித்தார்கள். தேவதுந்துமி முழங்கினது.
சப்த சமுத்திரங்களும் கோஷித்ததுகள். சப்
தமேகங்களும் முழங்கினதுகள். சாஸ்திரங்
களுடனே கணிதாதிதேவதையும் சப்த மிட்
டது. வானரர்களெல்லாம் கர்ஜ்ஜித்தார்கள்.
ஜெயவிஜயீபவ என்று சதாபல்லாண்டு கூ
றிக்கொண்டிருக்கின்ற ஆகாசவாணியும், தர்ம
மதேவதையும், ஒலித்தன. மற்றவர்களெல்லா
ரும் அதிகோஷமாகச் சப்தித்தார்கள். உகாந்
தகாலத்தில் லோகங்களையெல்லாம் சம்ஹரிக்
கின்றவனுடைய பாசு பதாஸ்திரத்தை மயங்
காதபடி தெரிந்து அதை மாய்த்துவிடவும் வ
ல்லவனுனே என்றெண்ணிக்கொல்லும் யம
னிலுங் கொடியவனுன இந்திரஜித்து மனத்
திகைத்துப்போனன். குறையாத வெற்றியா
ளர்களான வானரவீரர்க ளெல்லாம் இவர்

சாக்ஷாது விஷ்ணுவாமிசம் என்பதைத் தெரி
ந்துகொண்டார்கள். தேவதாஸ்திரங்கள் விய
ர்த்தமாய்ப் போய் விட்டதுகளென்று வெட்
கப்படாமல் நமக்குப் பாணப் பிரயோகம்
பண்ணுகிற சாமர்த்தியம் இருக்கின்ற தல்ல
வா? என்று விசைகொண்டு கைச்சமர்த்தால்
சிலபாணங்களைவாரி விதைத்துவிட்டான். அ
வைகளெல்லாம் மிகுந்த ஜ்ஞான ஸ்வரூபரா
ன இளைய பெருமாளுடைய பருத்ததோள்க
ளின்மீதும், கதற் கட்டியின்மீதும், பாய்ந்
ததுகள். சுக்கிரீவமஹாராஜர் முதலான ம
ஹாப்லாட்டியரான வெற்றிவீரர்கள்கையோ
யாமல் மலைகளை வருஷமாகப்பெய்து ராக்ஷ
சசேனைகளைத் தும்சம்பண்ணிக்கொண்டிருந்
தார்கள். இளையபெருமாள் சதகோடிபாணவ
ருஷங்களை ராக்ஷசர்கள் இனிப் பிழைக்கமாட்
டார்களென்று சொல்லும்படிப் பிரயோகித்
தார். அப்போது இந்திரஜித்துத் தன் சிறியபி
தாவாகிய விபீஷணுழ்வானைப்பார்த்து நிந்தி
க்கத் தலைப்பட்டான். ஓய்! சிற்றப்பா? உன்
கையிலே பலம்பொருந்திய ஒரு தண்டத்
தை வைத்துக்கொண்டு மனிதர்களுக்குத் தா
பூந்து ராக்ஷசமுறைமைமாறிப் புரட்டுக்கார
னைப்போலப் புகழ்ந்து புத்தியில்லாத அடி
மைகளைப்போலத் தொழுது அவர்களுக்குப்
பிறகே நின்று கொண்டு தப்பட்டையைப்
போலச்சும்மாச்சொல்லிக்கொண்டிருந்ததை
யே சொல்லிக்கொண் டிருக்கின்றுயே? உன்
தலையை அறுத்தெறிந்து போடுவேன் பழியா
குமேயென்று விட்டுவிட்டேன். எல்லார்கண்
ணுக்குத்தோற்றும்படியான உயர்ந்தஆசனத்
தின்மீது வீற்றிருந்து மும்மூர்த்திகளும் பய
ந்து ஒதுங்கித் தெண்டனிட்டுச் சொன்னப
டிக் கேட்கவும்,திரிலோகத்தாரும்வந்து காலி
ல்வணங்கவும்,மகதைஸ்வரியசம்பவித்தாலு
ம், எல்லாரையும் அழிக்கும்படியான ஆயுதத்
தைக் கையில்வைத்திருக்கின்ற புருஷர்களெல
லாம்வெட்கிப் பழிக்கத்தக்கவனுக இந்த வாழ்
வை யாராவது நயந்தவர்களாக நீகண்டாவ
துகதையிற்கேட்டாவ திருந்ததுண்டா. ஓ சிற்
றப்பா? நீ ரிருக்குமட்டும் மீன்க ளிருக்கும்,
நீர்போனல் மீன்களெல்லாம் ஒருமிக்க மா
ண்டுபோகும், அதுபோல ராவணனுடனே
ராக்ஷசக்கருவெல்லாம் மாண்டுபோகப் போ
கின்றார்கள். தவறமாட்டார்கள். லங்காபட்ட
ண மிருக்கின்றது நீ யொருவ னிருக்கின்றாய்,
நீராஜ்சந்தி செய்கிறதற்கு உன்னோடுகூட யா
ரிருக்கின்றார்கள். முன்னுல் உலகத்தை யெல
லாம்பெற்ற தேவபிதாவாகிய பிரஹ்மாவி

ன் தகப்பனுன விஷ்ணுவை யுத்தத்தில் தோற்கடித்து, சுப்பிரமணியருடைய பிதாவாகிய சங்கர மூர்த்தியைக் கைலாச மலையுடன் பேர்த்து ஒருகையில் தூக்கின வெம்பிதா! ராஜரீகஞ்செய்தது உன்னைப்போல மனுஷிய சஹாயத்தைக்கொண்டுதானு? அந்தப்பிரஹ்ம வம்சமான பிராஹ்மண குலத்துக்கெல்லாம் தனித்தலைவனுயிருக்கின்ற உன்னைத்தேவர்களெல்லாம்வணங்குவார்கள். நீமனிதர்களுக்கு அடிமையாகி ராவணனுடையசெல்வமெல்லாம் ஆளப்போகிறாய்? உனக்கென்னமானமிருக்கின்றது. எங்களுடனேகூட பெருமையெல்லாம் அடங்கிவிடப்போகிறது. உங்கள் தங்கையைமூக்கறுத்தவர்களுக்குநீவேண்டிய உளவுகளையெல்லாஞ் சொல்லிக்கொடுத்தும், இகழ்ச்சியையுண்டுபண்ணியும், பிரகாசத்தை விளைக்கின்ற ஆயுதங்களைக் கையிலுடைய உங்கள் தமையனை எங்களோடு கூடக்கொல்லும்படிப் பண்ணி எங்களுக்கு இதுவரையிலுந் தோற்றுக்கிடந்த யமனாலே எங்கள்குலத்தையெல்லாம் ஜெயிக்கச்செய்தும், நீயடையப்போகிற வாழ்வைக்காட்டிலும் தரித்திரமுற்றிருப்பதே மேலாகும் அல்லவா? சித்திரமெழுதி அழகுபெற்றிருக்கின்ற பலமுள்ளதோள்களையுடைய ராவணன் ஸ்ரீராமனுடைய பாணத்தினாலே நிலப்புழுதியே தனக்குப்பாயாகப் புரண்ட காலத்தில் நீயுப்புரண்டு அவன்மேல் விழுந்து அழப்போகின்றாயோ? நீயுங்கூட அவனுடனே சண்டைசெய்யப் போகின்றாயோ? அல்லது அவனைவாழ்த்தித் தொழப்போகின்றாயோ? வெற்றிபெற்ற தோள்களையுடைய சிற்றப்பா! என்னசெய்ய நிச்சயித்திருக்கின்றாய் மாமிசத்துடனே கூடினதேஹத்திலிருந்து நீங்கிப்போனஉயிர் மறுபடியும் சஞ்சீவியால்பெற்று மனிதர்களுக்குள் லங்காதிபதியான ராவணேஸ்வரனைச்செயிப்பவர்களுமுண்டா? நீயும் அவனுடைய செல்வத்தையெல்லாம் ஆளும்படியாகத்தகுந்தவனுவாயோ? அந்தராவணன்விடுகின்ற பாணத்துடனே சுவர்க்கம்போயடையப்போகின்றுய் அல்லவா? நான்பழிக்காக முன்பின்பார்க்கிறேனென்றான். அந்தவார்த்தைகளையெல்லாஞ் செவிகொடுத்துக் கேட்ட விபீஷணுழ்வான் மாலையணிந்த முடியை அசைத்துச் சிரித்து அப்பா இந்திரஜித்தே! பாவம் எப்போதுங் கெட்டது. தர்மமே உயர்ந்ததாகும். நான் தர்மத்தைத் துணையாகப் பற்றுவேனே யல்லாமல் பாவத்தை துணையாகக் கொண்டு மாயாப்பழியுடனே உயிர்வைத்திருக்கமாட்டேன். பொய்யைப்பகைத்து விட்டுவிடுவேனேயல்லாமல் மெய்யில் கொஞ்சமேனும் தவறமாட்டேன். லங்காதிபதியாகிய ராவணனெப்போது தவறிநடந்தானே? அப்போதே யவனுக்குத் தம்பியாக நான் பிறக்கவேயில்லை நானிதுவரையிலும் கள்குடித்தவ னல்ல? பொய் சொன்னவனும் அல்ல? பலவிதமாக ஒருவரிடத்திலும் ஒன்றும் அபகரித்துக்கொள்ளவில்லைமாயமானவஞ்சனையை நான் நினைத்ததேயில்லை.இதுவரையிலும்என்மேல்குற்றஞ் சொன்னவர்க ளொருவருமில்லை. நீமுதலானபேர்களெல்லாம் பார்த்திருக்கின்றீர்கள் அல்லவா? பெண்பிள்ளையின் பொருட்டுத் தவறிநடந்தவர்களைத் துறந்துவிட்டதினாலே என்மீது பிழையென்று சொல்லத்தகுமோ அப்பா! திரிலோகத்தாரும் ஸ்தோத்திரஞ் செய்யத்தக்க முதற்காரண வஸ்துவும், எல்லார்க்கு மூத்ததேவதேவனுன ஸ்ரீராமமூர்த்தியினுடைய தேவியும், கற்பிற்சிறந்தவருமான சீதாபிராட்டியாரை மனவருத்தப் படுத்துவது தகாதென்று மாத்திரந்தான் சொன்னேன். அதற்குஉன்தகப்பன் என்னைக்கோபித்து அப்புறம்போய்விடு என்று கட்டளையிட்டபிறகுதான் வந்தேன் அப்படியிருக்க நான் நரகத்தை யடைவேனு? நல்லது அதிகக்குரூரிகள் ஆயுததர்ம்மத்தைப்பாராமல் விருப்பத்தை விரும்பி மாளுகின்ற உங்களுக்கே கீர்த்தியுண்டாகட்டும். மோக்ஷமும் உங்களுக்கேகிடைக்கும். ஒழுக்கமாய் நடந்து பெரியோர்கள் நியமித்த அனுஷ்டானப்படித் தர்மத்தைப் பின்பற்றுகின்ற என்போன்றவர்களுக்கே நிந்தை யுண்டாகட்டும். நரகமும் எங்களுக்கே கிடைக்கட்டும். அப்பா! இந்திரஜித்தே! தர்மத்தைப் பாவம்வெல்லமாட்டாதென்கிறதைஅறிந்திருந்தபடியினாலே ஞானமார்க்கத்திற்கும் இதுவே தகுதியென்று நினைத்துத் தேவதேவரான ஸ்ரீராமமூர்த்தியை அடைக்கலம்புகுந்தேன் இதைக்கண்டுஎன்னையெல்லாரும் புகழ்ந்தாலும் சரி, இகழ்ந்தாலுஞ் சரி, நான் அஷ்ட அயிஸ்வரிய போகங்களையனுபவித்தாலும் சரி, அவைகளை யிழந்தாலுஞ்சரி, எனக்கு அவைகளிலே என்னமில்லை என்று சாந்த சீலரான விபீஷணுழ்வான்சொன்னூர். ஓ சிற்றப்பா! நீ அடையப்போகிற சிறப்புகளெல்லாம் என்கையிலிருக்கின்ற அர்த்தசந்திர பாணத்தாலழிந்துபோகின்ற சிறப்பே யல்லாமல் வேறல்ல. நீ என்னைவிட்டு எங்கே தப்பிப்போகப் போகிறுயென்று இடியினுங்கொடியவனுன இந்திரஜித்

து எல்லாவற்றையுமறிந் தெரியத்தக்க வேகமுள்ள சிறகுகளோடுகூடிய ஸ்ரீகருடாழ்வாருக்கு ஒப்பான ஒரு அர்த்த சந்திர பாணத்தை வில்லிலே தொடுத்து விபீஷணாழ்வானுடைய ரத்னாபரணங்களணிந்த கழுத்துக்குக் குறிவைத்து எய்துவிட்டான். அந்தப் பாணமானது இடியைப் போலவும், அல்லது விஷபானம் பண்ணவரான திரிநேத்திர சங்கரமூர்த்தியினுடைய சூலாயுதம்போலவும், வேகங்கொண்டு வருகிற தன்மையைப் பார்த்து விபீஷணாழ்வான் இதோ முடிந்துபோனார் முடிந்துபோனாரென்று சொல்லிக்கொண்டிருக்கின்ற தேவர்கள் பார்க்கும்படியாக இளைய பெருமாள் தம்முடைய திருக்கையிலுள்ள ஒருபாணத்தால் அந்தப் பாணத்தைத் துண்டாக்கிக் கீழேதள்ளினார். அந்தப்பாணந் துண்டுபட்டுப் போனமாத்திரம்யமனுக்கு யமனான இந்திரஜித்து ஒருவேலாயுதத்தை யெடுத்துப் பிரயோகித்து விட்டான். அது ஒரு சூரியன் வருகிறதுபோல வருகின்றதைக் கண்டு நாலுமூன்றும் ஏழாகிய லோகத்தாரெல்லாம் நடுக்கமுற்றனர். உடனே தனுர்வித்தியா சாமார்த்தியரான லக்ஷ்மணப்பெருமாள் அதையுந்துண்டாய் விழும்படி வெட்டித் தள்ளினார். அப்போது விபீஷணாழ்வான் தம்மீது இந்திரஜித்து வேலாயுதத்தைப் பிரயோகித்தானே யென்று அதிககோபங் கொண்டு பாதசாரியாகத் தானே வாயுவேகமாய்ப்போய்த் தம்முடைய தண்டாயுதத்தினாலே இந்திரஜித்துவின் தேரைச் செலுத்திக் கொண்டிருந்த சாரதியையும், தேரிற் பூட்டிய குதிரைகளை யெல்லாம் கொன்று அவனுடைய துடிப்பையும் மாற்றிவிட்டார். அப்படி அழிந்து தேரின்மேலிருந்துகொண்டு இந்திரஜித்து கோடி அம்புகளைப்பிரயோகித்து விபீஷணாழ்வான் தோள்களின்மேலும், லக்ஷ்மணப்பெருமாள் திருத்தோள்களின் மீதும், மற்ற வானர வீரர்களுடைய மார்பின் மீதும், ரத்தவெள்ளம் பெருக்கெடுக்கத் தக்கதாகச் செய்து அண்டங்களெல்லாம் கிடுகிடென்று நடுங்கும்படி வீர அஷ்டகாசம்பண்ணி வேறோர் தேரின்மீதேறியல்லாமல் யுத்தஞ்செய்வது தகாதென்று நிச்சயித்துக்கொண்டு பார்த்தகண் ணிமைப்பதற்கு முன்னம் ஆகாசத்தில் மறைந்துவிட்டான் என்னும் ஒரு சாமர்த்திய வார்த்தையை யாவரும் சொல்லத்தக்கதாக மேகத்தில் மறைந்துபோய் ராவணனிடம் போய்ச் சேர்ந்தான்.

நிகும்பலையாகப்படலம்முற்றிற்று.

## இந்திரஜித்துவதைப் படலம்.



இங்கே வானரவீரர்கள் இந்திரஜித்து ஆகாசத்தில் மறைந்துவிட்டானே! முன்போல ஏதேனும் மோசஞ்செய்வானென்று கண் கலங்கிச் சந்தேகித்துக்கொண்டிருந்தார்கள். அத்தருணத்தில் தேஹமெல்லாம் சல்லடைக்கண்களைப்போலத்தொளைக்கப்பட்டபண்களிலே ரத்தமொழுகத் தக்கதாகப்போய் எதிரேநின்ற, மஹாசூரனென்று யாவருங் கொண்டாடும்படியிருந்த இந்திரஜித்துவை ராவணன்பார்த்து அப்பா! உன்னுடைய நிகும்பலையாகம் முடிவுபெறாமல் அழிந்துபோனதென்பதை உன்தோள்களிலே அபரிமிதமாய்ப் பதிந்திருக்கின்ற அம்புகளே யெனக்குத்தெரிவித்தது. கருடனைக்கண்டு படத்தையொடுக்கின பாம்பைப்போல ஒருநாளும் பின்னிடையாத வல்லமையுள்ள தேகம் நடுங்கி அதிகவருத்தமுற்றிருக்கின்றாய்,மகனே! மகனே! நீ நடந்தகாரியத்தைச் சொல்லென்றுகேட்ட தகப்பனான ராவணனை இந்திரஜித்துப்பார்த்து ஐயா, பிரதாப லங்கேஸ்வரா! நான்செய்த மாயவஞ்சனைகளை யெல்லாம் உன்தம்பியாகிய விபீஷணன் சூரியனைக்கண்ட இருளைப்போல ஓடச்செய்தான். அந்த உதவியினாலே லக்ஷ்மணன் தன்னுடைய சேனைகளுடனே கூடவந்து சூழ்ந்துகொண்டு நான்செய்தயாகத்தைச் சிதைத்துவிட்டு மிகுந்த கோபங்கொண்டு வெகு சமர்த்துடனே யுத்தத்துக்கு எதிர்த்து நின்றான். நானப்போது பிரஹ்மா விஷ்ணு ருத்திரரென்று சொல்லுகின்ற மூன்று தேவர்களுடைய அஸ்திரங்களையும் பிரயோகித்தேன். அவைகளையெல்லாம் அந்தஸ்ரீராமன் தம்பி தடுத்துவிட்டான். சமஸ்த லோகங்களையும், சகலதேவர்களையும், சிருஷ்டித்த தேவதேவோத்தமரான சாக்ஷாது நாராயணமூர்த்தியினுடைய அஸ்திரமானது நிராயுதனாய் அஞ்சலித்துக்கொண்டு நின்ற அந்த லக்ஷ்மணனை வலஞ்சுற்றிவந்து போய்விட்டதேயானால் அதைக்காட்டிலும் வல்லமைபெற்றது லோகத்திலே வேறே அஸ்திரமும் இருக்கின்றதோ! ஐயா, நம்முடைய குலத்தில் பூர்வந்தொட்டுச் செய்துவந்த பாவத்தினாலேயே இந்த மாளாத பெரும்பழியைச் சம்பாதித்துக்கொண்டாய். கோபிப்பானேயானால் இந்த மூன்றுலோகங்களையும் அந்த

லக்ஷ்மணனை ஒருவனே முடித்துப் போடு
வான். நெருங்கின யுத்தம் நடக்கும்போது
முதலில் லோகமெல்லாம் அழிந்துபோகு
ம் என்ற அநுதாபத்தினாலே அவன் என்
மேல் பிரம்மாஸ்திரத்தை விடவில்லை. ஆ
கையால் நான் இருவனாயினும் ஜெயம்பெ
ற்றுவந்தேன். நானே அந்த அஸ்திரத்தை
முறைப்படியும் பிரயோகித்தேன். அப்போதும்
அந்த அஸ்திரத்தை மாத்திரம் தடுத்துவிட்
டான். இன்னமும் பகைவர்களுக்குப் பலம்
விருத்தியாகின்றது. அவர்கள் தங்கள் சொந்த
பலத்தாலே நம்மைக்கொல்லுகிறதற்கு நிச்
சயித்திருக்கின்றார்கள். அதற்காக நான்பயந்
து வந்தேனென்று திருவுளப்படாதேயும்.
நீ அந்தச் சிறையிடத்தில்வைத்த சீதையை
விட்டுவிடுவாயேயானால் அந்த ராமலக்ஷ்ம
ணர்கள் கோபமாறிப் போய்விடுவார்கள்.
நீ அவர்கள்விஷயத்தில் செய்த அபசாரத்தை
யும் பொறுத்துக்கொள்ளுவார்கள். நான்
உன்னிடத்திலுள்ள பக்ஷத்தினாலே சொல்லு
கின்றேனே யல்லாமல் வேறொருகாரணத்தி
னாலும் அல்லவென்று லோகங்களை யெல்லா
ம் கலங்கச்செய்த மஹாவீரனான இந்திரஜி
த்துச் சொன்னான். இப்படிஅவன் சொன்ன
வுடனே லங்காதிபதியாகிய ராவணன் தன்
பத்துமுகங்களிலும் வக்கிரதந்தங்கள் பிரகா
சிக்க, இருபதுதோள்களும் குலுங்கச்சிரித்
து அப்பா இந்திரஜித்தே! நீஇனிமேல் இந்
தச்சண்டைக்குப் போகமாட்டாய்போலே
யிருக்கின்றது. மயங்காதே! நீ மனிதர்களுக்
காகப் பயப்படவேண்டாம். வருத்தப்படவு
ம் வேண்டாம். நான்போய் என்ஒரு வில்லா
லே அந்த மனிதர்களைச்செயித்து உனக்கு
வெற்றியுண்டாக்கி வைக்கின்றேன். முன்னே
இறந்தவர்களெல்லாம் இன்றுமிருக்கின்றவர்
கள் இந்தப்பகையை முடித்துவிடுவார்களெ
ன்று நினைத்திருந்தார்கள். பின்புள்ளாரெல்
லாரும்போனவர்கள்ஜெயம்பெற்றுக்கொண்
டுவருவார்களென்று நினைத்திருக்கின்றார்கள்.
இன்றும் நீபோய் அந்தமனிதர்களை ஜெயம்
பெற்றுக் கொள்வா யென்று நானினைக்க
வில்லை.நானே இந்தப்பகையைத்தேடிக்கொ
ண்டது.நானே இவர்களை ஜெயம்பெறுவேன்
அல்லதுவேறொருவனாலும் அதைப்ப நானினை
க்கவில்லை. அடா இந்திரஜித்தே! நீ புத்தி
யில்லாத வார்த்தைசொல்லுறாய்.இந்தலோகங்க
ளெல்லாம் அழிந்தாலும் அழியாத பெருஞ்
சரித்திரமானது என் பகையுடனேநிலைநிற்கும்
படியாகத் தேவர்கள் கண்ணுக்கிடாக நீர்ப்
புதம்போன்ற இந்தத்தேகத்தை விட்டாலும்
விடுவேனேயல்லாமல் எனக்கிருபதுதோள்
களிருக்கவும், என்பிராணனேரொத்த சீதையை
விட்டுவிடுவேனோ! நானொருவேளை தோல்வி
யடைந்தபோதிலும் வேதமுள்ளபரியந்தம்
அந்தராமன்பேர் நிற்பதுபோல என்பேரு
ம் நிலைநிற்குமல்லவா! வீரம்எப்போதாவது
தவிர்ந்துபோகப்போகிறதா! இன்றுள்ளவர்
கள் நாளைக்கிறப்ப தென்பது யாவர்க்கும்
பொதுவல்லவா! புகழொன்று மாத்திரந்
தான் நிலையாய் நிற்கும். நான்சீதையைவிட்
டுவிட்டபோதிலும் தேவர்களெல்லாம் லே
சாய் நினைத்துவந்து என்னைக்கட்டுவார்களே
யல்லாமல் திரிலோகபயங்கரனான ராவண
னென்று எள்ளளவாவதுஉள்ளம்நடுங்கிப்பய
ப்படப் போகின்றார்களா? அல்லவென்று
நானிறந்தாலும் அற்பத்தி லிறந்துபோகமா
ட்டேன். நானிந்தத் தச திசைகளையும் வெற்
றிபெற்றவீரனென்று நீ யறியமாட்டாயா!
வீண்வார்த்தைகளைப் பலவாய்ச் சொல்லிப்
பிரயோசனமென்ன, நீ உன் அரண்மனையை
ப்போய்ச்சேர்ந்து உன்தோளில் பதிந்திருக்
கின்ற அம்புகளையெல்லாம் வாங்கிப் பெரிய
யுத்தத்திலேபட்ட வருத்தத்தைத் தீர்த்துக்
கொண்டு இந்தராத்திரியைச் சுகமாய்க் கழித்
துக்கொள் - போவென்று சொல்லிப் போ
ட்டு நீண்டபற்களை யுடைய புலியானது
மிகவுஞ் சீறிக் கோபித்து எழுந்தாற்போல
ராவணன் சிம்ஹாசனத்தை விட்டெழுந்திரு
ந்து என்னுடைய தேரைக்கொண்டு வாருங்க
ள் கொண்டுவாருங்களென்று ஆர்ப்பரித்தா
ன். அப்படிப்புறப்பட்ட ராவணனை மாண்
டுபோகிறதற்குச் சமீபித்தவனான இந்திரஜித்
து அவனுடையகாலில்விழுந்து என்பிதாவே
என்மீது உனக்குண்டான கோபத்தை நீக்கி
யருளவேண்டும். நீ கொண்ட உறுதியை நிலை
நிறுத்தி யிருக்கின்றாய், நானோ அப்படி நிலை
நிறுத்தாமற்போனேன்.பிறகுஇனிஉனக்குண்
டாகப்போகின்ற நன்மையை நீயேபார்க்கப்
போகின்றாயென்று சொல்லிவிட்டுத் தேவர்க
ளிடத்தில் பறித்துக்கொண்ட ஒரு திவ்யரதத்
தின்மேலேறித் தானதுவரையிலும் வெளி
யிடாமல் மறைத்து வைத்திருந்த ஆயுத மந்தி
ரங்களையும், இன்னுந் தன்னிடத்திலுள்ள ஆ
டையாபரணங்களையும், தேவர்கள் தனக்கு
அடைக்கலப் பொருளாகக் கொடுத்திருந்
தவைகளை யெல்லாமும் விரும்பினபேர்களு
க்கெல்லாந் தானஞ் செய்துவிட்டுத் துஷ்ட
னான ராவணனைக்கடைக்கண்ணால் பார்த்துப்

பார்த்து இரண்டுகண்களிலுந்தாரைதாரையா யநீர்பெருகும்படியாக யுத்தகளத்தை நோக்கிப்போனான். அப்போது லங்கையிலுள்ளராக்ஷசர்களெல்லாம் எழுந்து அதிவேகமாயோடிவந்து ஐயா ? வெற்றி மாலையைத் தரித்த தோள்களையுடைய இந்திரஜித்தே ! உன்னைவிட்டுப் பிரியமாட்டோம், உன்னோடு கூடவே நாங்களும் இறந்துபோகிறோமென்றார்கள். அதைக்கேட்ட இந்திரஜித்து, அப்படியல்ல நீங்களெல்லாம் நம்முடைய எஜமானனான ராவணனைக் காத்துக் கொண்டிருங்கள். நீங்கள் மனங்கலங்க வேண்டாம் இன்றைக்கே அந்த மனிதர்களை ஜெயித்து விடுகிறேனென்று சொல்லி அவர்களைச் சமாதானஞ் செய்த போது அவர்களில் சிலர் வணங்கினார்கள். சிலர் வாழ்த்தினார்கள். சிலர் தன் வடிவத்தைப் பார்த்துதம் வாயுலர்ந்து நின்றார்கள். சிலர் பெருமூச்சுவிட்டார்கள். சிலர் மனமுருகினார்கள். பயந்து இளைத்துகொண்டுவந்துபார்க்கின்ற ராக்ஷசஸ்திரீகளுடைய கடைக்கண்களென்கின்ற வேலாயுதம் பாயும் யுத்தத்தை ஜெயித்து வெகுவியசனத்துடனே புறப்பட்டுப்போனான். இப்படி இந்திரஜித்துப் போகும்போது அவ்விடத்தில் இளையபெருமாள் பிடித்த வில்லுடனே ஆகாசத்தைப் பார்த்து ஹே விபீஷணனே ? அந்தத் துஷ்டன் ஓடிப்போனான்போலே யிருக்கின்றது. இருந்தானேயானால், ஏதாவது செய்வானல்லவா ? ஒன்றையுங் காணோமே யென்றார். இப்படிச் சொல்லிக் கொண் டிருக்கும்போது, ஆயிரங் குதிரைகள்பூட்டிய தேரினுடைய இரைச்சலைக் கேள்விப்பட்டார். அந்தத்தேரானது,வழியிலகப்பட்ட மலைகளெல்லாம்பொடிப்பொடியாய் நெரியும்படியாகவும், உச்சியில் பொன்மயமாகக் கட்டப்பட்டகொடிகள் மேருமலையின் சிகரங்கள் உருளும்ஓசைபோலவும்,இடியைப்போலவும்,சப்திக்கவும்,அலங்கரிக்கப் பட்டரத்தினங்கள் மின்னலைப்போலப்பிரகாசிக்கவும், கடலைப் பானம்பண்ணுகின்ற வடவாமுகாக்கினியானது வெளிப்பட்டு வருகிறதுபோல லோகங்களெல்லாம் திக்குவிதிக்குகளாகப் பறந்தோடும் படியாகவும், சமுத்திரமெல்லாஞ் சுழன்றிடத்தக்கதாகவும், லோகங்கள் அடுக்கழியவும், சூரியசந்திரர்கள் கதிமாறவும், வானரசேனைகள் குடல்கரியவும், அஷ்ட குலாசலங்கள் நிலை தடுமாறிப் போகவும், பூமிகிழிந்து பாளம் பாளமாய்க் கிழிப்பட்டுப்போகவும், அந்தவெடிப்பின் வழியாகச் சர்ப்ப ராஜனிடத்திருந்து புறப்பட்ட விஷத்தைப்போல இருள் பரவி நிற்கவும், ஆதிசேஷனுடைய படம் நசுங்குண்ணவும், எ திருள்ள அந்தஇருளானது பட்டம் பகலைப்போல வெளிச்சமாகவும்வந்துசேர்ந்தது. ராக்ஷசர்களெல்லாம் ஒருமிக்கச்சேர்ந்து ஆரவாரித்தார்கள். இதைக்கேட்டுத்தேவர்கள் பயப்பிராந்தர்களானார்கள். வானரர்களெல்லாம், வெயர்த்து மனமயங்கிப்போனார்கள். அந்த சமயத்தில் யுத்தவீரனான இந்திரஜித்துபாணவருஷங்களாய்ப் பொழிந்தான். அதைக்கண்டு சிரேஷ்டராகிய இளையபெருமாள் அந்தராக்ஷசனுக்கு நேராகவேகங்கொண்டு நடந்து அஷ்டதிக்குகளுஞ்செவிடுபடும்படிதக்கதாகவில்லைக் குணத்தொனிசெய்து பாணப்பிரயோகம் பண்ணினார். அப்போது லோகமெல்லாம் புகைமண்டி அக்கினிபற்றி யெரிந்தது. விபீஷணாழ்வான் இளையபெருமாளைப் பார்த்து ஸ்வாமீ இனித்தேவரீர்இவனைவிட்டு விட்டால் வெற்றிமாலையை அணியமாட்டீரென்று வணங்கிச்சொன்னார். அதைக்கேட்ட சுந்தர புருஷராகிய ஸ்ரீராமாநுஜர் வில்லைக் குணடங்காரம்பண்ணி லோகமெல்லாம் தத்தளிக்கவும், அஷ்டகுலாசலங்களும் மனமுதிரவும், பூமியைத் தாங்கிக்கொண் டிருக்கின்ற ஆதிசேஷனும் திடுக்கிடவும், இடிக்குச் சமமான பாணங்களை அடுக்கடுக்காப் பிரயோகித்தார். இப்படி இருக்கும்போது இந்திரஜித்துவிட்ட அக்கினி முகாஸ்திரங்களாலே, வானரர்கள் கண்ட கண்ட இடங்களில் சிதறி யோட்டம் பிடித்தார்கள். இளையபெருமாள் பிரயோகித்த அனல்முகப் பாணங்கள், அக்கினியைப் பார்க்கிலும் எரிந்துகொண்டு சம்ஹரிக்கத் தலைப்பட்ட படியினாலே ராக்ஷசர்களெல்லாம் திக்குவிதிக்குகளாகச் சின்ன பின்னப்பட்டு ஓட்டம்பிடித்தார்கள். லோகமுழுவதும் அக்கினிமயமாய் நிறைந்த படியினாலே இருதிறத்தார்சேனைகளும் எண்ணத்தொலையாதபடி மாண்டார்கள். இளையபெருமாளும் இந்திரஜித்தும் ஒருவரையொருவர் குறிப்பிட்டுப்பிரயோகிக்கின்ற அஸ்திர வருஷங்கள் அக்கினிமழைபோலவும், இடிமழைபோலவும்பாய்ந்தன. இப்படிஇந்திரஜித்து விடப்பட்ட பாணங்களை இளையபெருமாள் விடுகிறபாணங்கள் அங்கங்கே தண்டு துண்டாக்கிக் கொண்டுபோய் அவனுடைய உடலிலுள்ள ரத்தங்களைப் பானம்பண்ணின. இந்திரஜித்துவின் பாணங்கள் இளையபெருமாளுடைய கவசத்தைப் பேதிக்கமாட்டவுமில்லை,அதைக்கிழிக்கவுங்கூடாமற்போ

னதுகள். ஆஞ்சநேயருடைய திருமேனியிலேமாத்திரம் புற்றில் நுழைகின்ற பாம்பைப்போல நுழைந்தனகள். அப்போது இளையபெருமாள், விசித்திரக் கோப்பான இந்திரஜித்து அணிந்து கொண்டிருக்கின்ற கவசமானது, சின்னபின்னப் பட்டுப் போகும்படி அநேக கூர்மையான பாணங்களைப் பிரயோகித்தார். அதைக்கண்டு இந்திரஜித்து தேஹமெல்லாம் சல்லடைக் கண்கள்போலத் தொளைக்கப்பட்டதனால் கண்களில் அக்கினிபொறிபறக்கத்தக்கதாகக்கோபித்துவினபாணங்கள் இளையபெருமாள் மேற்படாமல் ஆகாசமார்க்கத்திலேயே ஒய்ந்து போகிறதைக்கண்டு தேவர்கள் சந்தோஷித்தினாலே ஒருதோள் ஆயிரந்தோளாகப் பூரித்தார்கள். அதைப்பார்த்து இந்திரஜித்து இனி நாம் வில்லாலிவனை ஜெயிக்கிறதற்கு முடியாது என்பதை யறிந்து, பிரஹ்மாவின் புத்திரரும், தனதுபாட்டனுமாகிய புலஸ்தியபிரஹ்மாவினிடத்திலேவாங்கினதும் சூரியனுக்குச்சமமானபிரகாசமுள்ளதுமானஒருவேலாயுதத்தைஅதிகவேகத்துடனே வல்லமை கொண்டு மேகத்துக்கொப்பாக வீசியெறிந்தான். அந்த வேலாயுதமானது அதிகசாஜ்ஜுவல்யமாய் வெளிப்பட்டது அதைஇளையபெருமாள் கடாக்ஷித்து, சப்தரிஷிகளுடைய சொல்லைப் பார்க்கிலும் வல்லமையுள்ளதான ஒரு அக்கினிமுக பாணத்தினாலே இரண்டுதுண்டாக முறிப்பட்டு விழும்படிச் செய்து பின்னும் அனேகபாணங்களைப் பிரயோகித்தார். அவைகள்ஆணியறைந்ததுபோல இந்திரஜித்துவின் தேஹ மெல்லாம் ஆயிரமாயிரமாய் நுழைந்து புண்படுத்தி ரத்தவெள்ளம் பூமியில் வழிந்தோடச்செய்தனகள். இந்திரஜித்துவின் கைகள் பாணங்களையெடுக்கிறதற்குப் போகிறதைக்கண்டு சூரியவமிசோத் பவரான இளையபெருமாள் சிலபாணங்களைப் பிரயோகித்து அவன்முதுகிற் கட்டியிருந்த அம்பறாத் தூணியையும், அதிலுள்ள அம்புகளையும், துண்டுதுண்டாகும்படி அறுந்தெறிந்து இவனுக்குத் தேரிருக்குமானால், இவன்பலங் குறையாது பாணங்களால் குதிரைகளும், இறக்கமாட்டாதுகள். அலங்கரித்திருக்கின்ற மணிவடங்களுந் துவிபடமாட்டாதுகள். இந்தத்தேர் மிகவுஞ்சிறப்பான நிலைமையுடையதென்று தெரிந்து ஒரு பாணத்தைப் பிரயோகஞ் செய்து சாரதியினுடைய மலைபோன்ற தலையை யறுத்துப் பூமியி லுருட்டிவிட்டார். அப்போது இந்திரஜித்துவினுடைய தேரானது - ஒருவருக்குஞ்செலுத்துதற் கில்லாமல், தவஞ்செய்து பஞ்சேந்திரியவிஷயங்களிலிழுப்புண்டு வருத்தப்படுகிறவனுடைய மனதைப் போலவும், மேனியை மினுக்கிக் காமத்தைவிலைப்படுத்தித் தந்திரத்தால் பொய்ப்போகங் காட்டுகின்ற வேசைகளினுடைய கற்பைப்போலவும்,பலவழிப்பட்டு ஓடத் தொடங்கினது. அதைக்கண்டு இந்திரஜித்து அந்தக்குதிரைகளை இசைவின்படித் தானே செலுத்திக் கொண்டு தன் தேஹத்தையே,அம்பறாத்தூணியாகவைத்துப் பதிந்திருக்கின்ற அம்புகளைப் பறித்தே, இளையபெருமாள் மீதும், அநுமான்மீதும், மற்ற வானரங்கள்மீதும், அநேகமாகப் பாணப் பிரயோகஞ் செய்து தேவர்களும் நடுங்கத்தக்கதாக அட்டகாசஞ் செய்தான். அப்போது தேவர்கள் வீரரென்றுசொல்லப்பட்டவர்களுக்கெல்லாம் முதன்மையாக நிற்கிற வீரனுக்கு மிவன். வீரர்களுடைய தன்மை இவனொருவனிடத்திலேதானிருக்கின்றது. சூரரென்று சொல்லப்பட்டவர்கள் மரணமாகிற காலத்திலும், தங்கள் அறிவுமாற மாட்டார்கள். இந்த இரண்டுபேர்தான் வில்வீரரென்னத்தக்கவர்களென்று தெய்விக கற்பகப்புஷ்பங்களை வருஷித்தார்கள். இளையபெருமாள் இவனேதன்மீதுபாய்ந்திருக்கின்ற அம்புகளையேபறித்து நம்மீதெய்கின்றான்.அப்படியெய்வதில் கையுந்தடுமாறவில்லை. மனமும் உயிரைப்போலக் கலங்கவில்லை தேஹத்தில் கோடிகோடியாக அம்புகளைப் பிரயோகிக்கவும், கொஞ்சமேனுங் கண் சிமிட்டவுமில்லை. இவன்மாண்டுபோனா லிவனோடே ஆண்பிள்ளைத்தனமும் போய்விடுமென்று அவன் சாமர்த்தியத்திற்கு மெச்சினார். அப்போது விபீஷிணாழ்வான் இளையபெருமாளை வணங்கி ஸ்வாமி ! இவன் தேரைச் செலுத்திக் கொண்டு ஆகாசத்தில் மறைந்து போனாலும் போவான். செய்துகொண்டிருக்கின்ற யுத்தத்தினை விட்டு எதாவது மாயஞ்செய்தாலும் செய்வான். மேகத்தில்மறைந்து வஞ்சனைசெய்தாலுஞ்செய்வான். இவன் பகற்காலத்தி லல்லாமல் ராத்திரியிலிவன் மாளமாட்டான் என்று விண்ணப்பம்பண்ணிக்கொண்டார். லங்காதிபதியானராவணசகோதர ரிப்படிச்சொல்லக் கேட்டராமாநுஜர்அவன் இதோசாகப்போகிறானேயல்லாமல் இனியெங்கே தப்பிப்போவான்அவனெங்கேபோனாலும்என்பாணமும் அங்கேபோகுமல்லவா ? இவன் பலமெல்லாமொடுங்கிப் போனான். இனித்தாமச மில்லை இப்போதே நாமிவனை வெற்றிகொள்ளலாம்.

என்றுசொல்லிக்கொண்டிருக்கும்போது இந்திரஜித்துவின் ரத்தத்தைப்போலச் செக்கர்நிறமானது திசையெல்லாம்படரும்படியாய் அவன் தேஹத்தில் பதிந்திருக்கின்ற அம்பைப்போல நெருங்கிய ஆயிரங்கிரணங்களைவீசிப் பிரகாசிக்கின்ற தேரில் தோன்றுகின்ற சிறப்புடனே இந்திரஜித்து ஆகாசத்தில்மறைந்து துரநின்றாற்போலச் சூரியன் உதயமானான். இனிப்பொழுதுவிடிந்தது, சூரியனும்விளக்கைப்போலே மேலேபிரகாசித்தான். ராக்ஷசர்களாகிய இருட்டும் மாண்டுபோய்விடும். மாயமெல்லாங்குறைந்து வலியுங்கெட்டு இந்திரஜித்துமினி மரணமடைந்துவிடுவானென்று தேவர்கள் சுவர்க்கமெல்லாம் நிறையும்படி கல்லென்று ஆரவாரித்தார்கள். அப்போது பின் விளைவை யறிந்த விபீஷணாழ்வான் லக்ஷ்மணனைப்பார்த்து - ஸ்வாமீ! கூர்மை மழுங்காத சூலாயுதத்தையுடைய சங்கரமூர்த்தியானவர் கிருபைசெய்து கொடுத்த இந்தத்தேரழியாதவனாயினும், இவன் பிடித்திருக்கின்ற வில் முறியாதவனாயினும், இவன் மரணமாக மாட்டான், இது சத்தியமாகுமென்று சொன்னார். அதைக்கேட்ட இளைய பெருமாள் இந்தப்பச்சைக் குதிரைகளும், சாகமாட்டாதுகள். கொடிகுடை மொட்டுக்கொடுங்கை தட்டுச்சக்கரம் அச்சுமுதலாகிய பல உறுப்புகளுடன் கூடியதேரும் ஒழிய மாட்டாதென்பதைத் திருவுளத்தில் நினைத்து வில்வித்தையின் ஆசாரியரான ஸ்ரீராமாநுஜர் தமதுவல்லமையினால், அந்தத்தேரின் ஆணிகளை வேறுபடுத்தி அச்சுவேறு சக்கரம் வேறாக கழலும்படிச்செய்து விட்டார். அப்படித் தேர்த்தட்டு விலகிக் கீழேவிழ்ந்த உடனே அதில்கட்டியிருந்த குதிரைகளெல்லாம், ஒரு மரமானது கோடரியால் வெட்டுண்டு கிளைவேறு முதல்வேறாகி விழ்ந்தபோது அதில் வாழ்ந்திருந்த பக்ஷிகளெல்லாம், பலாயனப்பட்டுப் பறந்துபோவதுபோலப் பலவாறாக ஓட்டம் பிடித்ததுகள். அப்படி அழிந்ததேர்த்தட்டிலிருந்த இந்திரஜித்து அங்கிருந்த ஆயுதங்களையெல்லாம் வாரிவாரி இளைய பெருமாள்மீது வீசியெறிந்தான். அவைகளையெல்லாம் ஸ்ரீராமாநுஜர் தம்முடைய திவ்விய பாணங்களால், துண்டு துண்டாக்கி விட்டார். உடனே அவன் ஆகாசத்தில் பாய்ந்து மூன்று லோகங்களும் கிழிபட்டுப் போகும்படியாகக் கர்ஜ்ஜித்தான். அப்போது அவனை யொருவரும்பார்க்கவில்லை. அவன் கர்ஜ்ஜனையைமாத்திரமேகேட்டார்கள். அப்படிக் கர்ஜ்ஜித்து மல்லயுத்தத்தில் தேர்ந்த தோள்களையுடைய இந்திரஜித்துத் தான்பெற்றவரத்தின் வல்லமையினாலே ஆகாசத்தி லிருந்து மலைகளை வருஷிக்கும்போது வானரவீரர்கள்ஓடிப்போவதற்குத் திக்குத் திசை தெரியாத படியினால் தலைகளும், உடல்களும், நசுங்கிப் பூமியில் விழுந்தார்கள். எங்கே பார்த்தாலும் சிலா வருஷமேயல்லாமல் இந்திரஜித்து ஆகாசத்தில் மறைந்து காணப்படா திருந்த படியினாலே இளையபெருமாள் சமஸ்த திக்குகளிலும் நிறைந்து நின்ற ஆச்சரியசேஷ்டிதரான ஸ்ரீமஹாவிஷ்ணுவின்வடிவத்துக்கொப்பாகத் திவ்யபாணங்களை யோயாமல் பிரயோகித்துக்கொண் டிருந்தார். அந்தப்பாணங்களே எல்லாத்திக்குகளிலும் நிறையவே யுத்தஞ்செய்யும் வல்லமையிழந்து கறுத்தமேகங்களின் கூட்டத்துக்கு மத்தியில் ரத்தமேகமானது இருப்பதுபோல நின்ற இந்திரஜித்துவி னுருவத்தைலோகமெல்லாம் நிறைந்திருக்கின்ற சர்வவியாபகமூர்த்தியான இளையபெருமாள்பார்த்து இவன்கையில் பிடித்திருக்கின்ற வில் முறிய மாட்டாதேபோனாலும், இவனுடைய கையை அறுத்துத்தள்ளாவிட்டால் இந்தச்சண்டை முடியாதென்று திருவுளங்கொண்டு தம்முடைய வில்லைவளைத்து அதில் சகல கலைகளோடுங்கூடிய சந்திரனுக் கொப்பாகிய ஒளியுள்ள அர்த்தசந்திரபாணத்தைப் பூட்டி விலையுயர்ந்தரத்னாபரணங்களைத்தரித்தஅவனுடைய கையானது பூமியில்விழும்படி அறுத்தார். அந்த அர்த்தசந்திரபாணம்பட்ட மாத்திரத்தில் வில்பிடித்திருந்தகையானது; அமோகமான பெருங்காற்றடித்த போது பிரளய காலமேகமானது, ஆகாசத்தில் போட்ட பச்சைவில்லுடனே கீழேவிழுந்ததுபோல விழுந்தது. பூமியைச் சுமந்துகொண்டிருக்கின்ற கார்க்கோடகசர்ப்பமானது தன்வாயினால் சந்திரனைக் கடித்துக்கொண் டிருக்கின்றது போல விரல்கள ழுந்தப் பிடித்திருக்கின்ற வில்லுடனேகூட வீரபுருஷனாகிய இந்திரஜித்துவின் இடதுகையானது கீழேவிழுந்து மரங்களும், மலைகளும், பொடியாகவும், குரங்குகள்நசுங்கிப்போகவுந் துடித்தது. அப்போது அந்தரமார்க்கத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்த தேவர்களெல்லாம் இந்திரஜித்துவின் கையானது சூரியன் நடுங்கும் படியாகவும், சந்திரன் பயப்படும்படியாகவும், மேருமலை சிதறிவிழும்படியாகவும், அறுந்து விழுந்துவிட்டதே வாழ்நாளிப்படியிருக்க இந்தச்சூத்திரத்துக் கொப்பான ஜீவவாழ்க்கையைச் சி

போரிற் சிக்கின்றதென்ன காரணமென்று ஆச்சரியப் பட்டார்கள். தர்மதேவதைக் கொப்பான பலத்தையுடைய லக்ஷ்மணப் பெருமானுடைய அம்பினாலே ராவண குமாரனுடைய வஜ்ரத்தை யொத்த கையானது அறுந்ததைப் பார்த்த ராக்ஷசர்களெல்லாம் தங்கள் தலைகள் அறுந்தாற் போலப் பயந்தார்கள். அப்படி இந்திரஜித்துவின் கையற்ற உடனே வானரக்கூட்டங்கள் ஆரவாரித்து மின்னலைப்போன்ற வக்கிரதந்தங்களை யுடைய ராக்ஷச சேனைகளை யெல்லாம் திரும்பி வாராதபடி கைகளினாலும், பற்களினாலும், விருக்ஷங்களினாலும், பெரிய மலைகளினாலும், ஸ்வர்க்க லோகத்திற்குப் புறக்குடியேற்றி விட்டார்கள். அப்படியிருக்கச், கார்கால மேகத்தைப்போலக் கறுத்த நிறத்தை யுடையவனான இந்திரஜித்து செவந்திருமேனியும் காலகண்டனுமான ருத்திரமூர்த்தி மிகுந்தகிருபையுடனே கொடுக்கப் பெற்றுக்கொண்ட சூலாயுதத்தை யெடுத்து எறியும்படியாக எண்ணங்கொண்டு இளையபெருமாளுக்கு முன்னே வந்து நின்று இந்தச் சூலாயுதத்தினாலே உன்னைக் கொன்றுவிட்டல்லாமல் நானிறக்கப் போகிறதில்லை யென்று சொன்னான். சண்டமாருதக்காற்றைப்போலவும், இடியைப்போலவும், வடவா முகாக்கினியைப் போலவும், ஊழி காலத்தில் வந்த யமனுடைய உருவத்தைப் போலவும், கொல்லுகிறே னென்று வாயாற் சொல்லிக் கொண்டு எதிரே நின்ற இந்திரஜித்துவைப் பார்த்து. இனி இவனைத் தலை யறுக்க வேண்டிய காலஞ் சமீபித்து விட்டது என்று அயோத்தியா புரியின் மஹாராஜரான ஸ்ரீராமச் சந்திரருக்குத் திருத்தம்பியாராகிய தர்ம ஸ்தாபகரான இளைய பெருமாள் வேதங்களையெல்லாங் கைகண்ட மஹாரிஷிகளாலே வணங்கும்படியான ஸ்ரீயப்பதியே, இந்த ஸ்ரீராம னென்று சொல்லத்தக்க தர்மஸ்வரூபியா யிருப்பாரானால், இந்த வக்கிரதந்தங்களையுடைய இந்த ராக்ஷசனைக் கொல்லக்கடவதென்று ஒரு அர்த்தசந்திர பாணத்தை வில்லிற்பூட்டி ஆகர்ணபரியந்தமாக இழுத்துவிட்டுவிட்டார். அந்த அர்த்த சந்திரபாணமானது விஷ்ணுவின் சக்கராயுதமும். இந்திரனுடைய வஜ்ராயுதமும், நெற்றியில் நெருப்புக் கண்ணை யுடையவருடைய பாசுபதாஸ்திரமும், பிரம்மாஸ்திரமும், தோற்றப்போகத் தக்கதாக அக்கினியைக் கக்கிக் கொண்டுபோய் இந்திரஜித்துவினுடைய தலையை அறுத்தெறிந்து பூமியில் தள்ளத் தேவர்கள் கற்பகப் பூமாரி பெய்யத் தக்கதாகப் பிரகாசித்தது. அறுந்த அந்தத் தலையானது உயர எழும்பி ஆகாசத்தைப் போய் முட்டுகிறதற்கு முன்பாக இந்திரஜித்துவினுடைய முண்டமானது பிடித்த சூலத்துடனும் உடலில் தைத்திருக்கின்ற பாணங்களுடனும் சண்டமாருதத்தால் அடியுண்ட மேகமானது மின்னலுடனும் இடியுடனும் நிலத்தில் விழுந்தது போல விழுந்தது. ஆகாசத்தில் பிரகாசிக்கின்ற இரண்டு சந்திரர்களைப்போல மின்னுகின்ற இரண்டு குண்டலங்களுடனேயும் சுருண்ட தலை மயிருடனேயும், சூரியனுக் கொப்பான செவந்தகண்களுடனேயும், சூரியமண்டலமானது, பூமியில்விழுந்ததுபோல இந்திரஜித்துவினுடைய தலையானது நிலத்தில்வந்துவிழுந்தது. உயிர்போனகாலத்தில் உள்ளேயிருந்த உணர்வும் இந்திரியங்களும் அந்தக் கரணங்களுஞ் சிதறுண்டு போவதுபோலக் கூர்மையான பற்களையுடைய ராக்ஷசர்கள் தங்கள்தலைவனிறந்த உடனே போர்க்களத்தி லிருக்கச் சக்தியற்றவர்களாய்த் தங்க ளாயுதங்களை விட்டெறிந்து மிகுந்த பிரகாசத்தையுடைய லங்காபட்டணத்தை நோக்கி ஓட்டம் பிடித்தார்கள். வில்வீரர்களுக்குள்ளே அதிகச்ரேஷ்டனான இந்திரஜித்து இறந்தமாத்திரத்தில் இனி ராவணனுக்கு லங்காதிபத்தியஞ் செல்லமாட்டாதென்ற சந்தோஷத்தினாலே தேவர்களெல்லாம் உடுத்திருந்த வஸ்திரத்தைக் களைந்து மேலேயெறிந்து ஆரவாரித்தபோது, அந்தத்தேவர்களெல்லாம் கொல்லாவிரதிகளான சமணர்களுடைய நிருவாணதேவகூட்டங்களை யொத்திருந்தார்கள். வரங்களைக் கொடுக்கின்ற தேவர்களும், மான்மழுடமருகசூலந்தாங்கியசதுர்ப்புஜராகியசங்கரமூர்த்தியும்தேவேந்திரன் முதலான மற்றதேவர்களும், தங்களை மறையாமல்மிகுந்த கிருபையுடையவர்களாய் பூலோகத்தாருக்கெல்லாந்தெரியும்படியாகத்தரிசனையானார்கள். அவர்களுடையதிவ்விய தேஹங்களைவானரர்களெல்லாம்தங்கள்கண்களாரக் கண்டார்கள். தர்மத்தில் நிலைத்து நிற்கின்றவர்களுக்கு அழிவென்பதொருநாளுமில்லையென்ற பெரியோர் வார்த்தை சிறப்படைந்தது. ராக்ஷசர்களுடைய பாணங்கள்பாய்ந்ததினாலே மாண்டு கடலைப்போல் கிடந்த வானரப் பிரேதங்களெல்லாம், தேவர்களுடைய ஆசீர்வாதத்தால் உயிர்பெற் றெழுந்தன. தேஹத்தைவிட்டு மாண்ட இந்திரஜித்துவின் தலையை மிகுந்த சந்தோஷத்துடனே வாலிகுமாரனான அங்கதகுமாரன் கையில் தூக்கிக்

கொண்டு முன்னே போனான். தேவர்கள்
வாரிவாரி இறைக்கின்ற புஷ்பப்பந்தலுக்குள்
ளாக ஆஞ்சநேயர் மீது இளையபெருமாள்
எழுந்தருளினார். அப்போது ஸ்ரீராமமூர்த்தி
யானவர் பூரித்ததோள்களை யுடையவரும், எ
ங்கும் நிறைந்த புகழை யுடையவரும் அதிக
சந்தோஷ முட்கொண்ட திருவுள்ளத்தை யு
டையவருமாய், தேவர்கள்நிமித்தமாகப்பாற்
கடலைக்கடைந்த வாலிபுத்திரனாகிய அங்கதன்
தனது கையில்தூக்கிக்கொண்டு வருகின்ற இ
ந்திரஜித்துவின் தலையைக்கண்டு ராத்திரிகால
சந்திரனிடத்தி லுண்டான களங்கத்தைப்
போல எனக்குண்டான பழியானது போக
மாட்டாதென்று புலம்பிக் கொண்டிருந்தே
ன். இப்படிப்பட்ட எனக்குத் தர்மதேவ
தை கிருபைசெய்தபடியினாலே இப்போது
அந்தத்துன்பம் நீங்கிவிட்டேன். இதைக்காட்
டிலும் செல்வம் வேறே பெறப் போகிறே
னோ? இனி எனக்கென்னகுறை? தெற்கில் க
டல் சூழும்படி லங்கையைக்காத்துக்கொண்
டிருக்கின்ற அற்பத்திருட்டுப்பயலான ராவ
ணன்பெற்றபிள்ளைஎன்னும்இந்திரஜித்துவை
லக்ஷ்மணன்கொல்ல, அவனுடைய தலையை
யெடுத்துக்கொண்டு நீ முன்னேவந்த படியி
னாலே ஹே வானரயுவராஜ்யாதிபதியே? இனி
நான்தலையெடுத்துப் போனேன், சத்திரப்பி
யுமாய்விட்டேன். தேவர்களெல்லாம் தலை
யெடுக்கும்படியாகவும், சமுத்திரஞ்சூழ்ந்த
பூலோகத்தாரெல்லாம் பிழைக்கும்படியாக
வும், தேவேந்திரன் பெருமையடையும்படி
யாகவும், வேதபுருஷன் விருத்தியடையும்
படியாகவும்ஆச்சு, எப்போதுந் தேன்துளித்
துக்கொண்டு வாடாமலிருக்கின்ற வெற்றிமா
லையையணிந்த ஹே அங்கதகுமாரா? தேவர்
களையெல்லாஞ் ஜெயித்த இந்த இந்திரஜித்து
வின் மாமிசமுள்ள தலையை நீகையிலே தூக்
கினையே அப்பா என்று சந்தோஷங் கொண்டா
டினார். முன்னே இளையபெருமாள்போனது
முதற்கொண்டு புத்திமயங்கி எழுந்தருளி யி
ருக்கின்றவரும், அதிக மாயமே தன் ஸ்வ
ரூபமாகக்கொண்டிருக்கின்ற இந்தராக்ஷசனை
சத்தியமே ஜெயஞ்செய்து தர்மமே ரக்ஷிக்க
வேண்டுமென்று விரதங்கொண் டிருக்கின்ற
வருமாகிய ஸ்ரீரகுநந்தனர், தம்முடைய வர
வை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கின்ற பர
தாழ்வானைப் போலப் பக்தி யுடையவரான
இளைய பெருமாள் வருகின்ற விதத்தைக்
கடாக்ஷித்தார். திரும்பி எழுந்தருளுகின்ற
துஷ்ட இந்திரியங்களைத் தியஜித்தவ ராகிய
தமது திருத்தம்பியார்மேல் வைத்த திருக்க
ண்களாகிய தாமரையி னிடத்தில் கண்
ணீரானது தாரைதாரையாகவடிந்தது. அந்த
க்கண்ணீர் அன்பின் கண்ணீரோ, அழுகண்
ணீரோ, ஆநந்தபாஷ்பமோ, எலும்புகளெ
ல்லாம்உருகிவெளிப்பட்டுவருகிறகிருபாவாரி
யோ, அதை இன்னதென்று நிச்சயித்துச்
சொல்லுகிறதற்கு யார்தரமாகும். அப்படி
யெழுந்தருளி, ஸ்ரீசக்கரவர்த்தி திருக்குமாரர்
திருவடித்தாமரைகளில்இளையபெருமாள்தம்
முடையதிருக்கண்களில்வடிகிறநீரும்சந்தோ
ஷமும், எக்களிப்பும், அதிகரிக்கும்படியாகத்
தண்டனிட்டுச்செம்பட்டமயிர்க் கற்றைகளை
யுடையதும், பிரகாசிக்கின்றவக்கிரதந்தங்கள
ழுந்தும்படியாகஉதட்டை மடித்துப்பிளந்த
வாயை யுடையதுமான இந்திரஜித்துவி னு
டையதலையை ஸ்ரீபாதகாணிக்கையாகச்சமர்
ப்பித்தார். அப்போதுஸ்வாமியானவர்இளைய
பெருமாள் தமது திருவடியில்வைத்த அந்த
த்தலையைப் பார்ப்பார். தமது திருத்தம்பி
யாருடைய வீரலக்ஷ்மி எழுந்தருளி யிருக்
கின்ற திருத்தோள்களைக் கடாக்ஷிப்பார். எதி
ரே சேவித்துக்கொண்டிருக்கின்ற வாயுபுத்தி
ரனைக் கடாக்ஷிப்பார். இளையபெருமா னு
டைய திருக்கரத்திலிருக்கின்ற வில்லைக்கடா
க்ஷிப்பார். தேவர்களானந்திக்கின்றதைக்கடா
க்ஷிப்பார் இளையபெருமாள்இந்திரஜித்துவை
ச் சம்ஹரித்த கொலையைத் திருவுள்ளத்தில்
நினைப்பார். பிறகு மிகுந்த ஆநந்தத்தால் ஒ
ன்றும்பேசாம லெழுந்தருளித் தமது திருவ
டித்தாமரைகளில் தெண்டன் சமர்ப்பித்துக்
கொண்டிருக்கின்ற இளையபெருமாளுடைய
திருமேனியில் தைத்த அம்புகளின் வழியா
யொழுகுகின்ற ரத்தங்கள் காளமேகத்தில்செ
வ்வானநிறங் கலந்தது போலவும், கருமாணி
க்கமலையின்மீது சூரியோதயமானதுபோல
வும், தமது திருமேனியில் தோயும்படியாக
வாரித்தழுவித் திருத்தம்பியாரைக் கடாக்ஷித்
து, அப்பாதம்பி! கொட்டாரத்திற்கட்டியிருக்
கின்ற மத்தகஜங்களை திக்குகள்தோறுங்காவ
ல் காக்கத்தக்கதாக ராஜ்ஜியாதிகாரஞ் செலு
த்தும் ஜனகமஹாராஜர் தபோபலத்தாற்
பெற்றெடுத்த சீதையும் இனி என்னிடம்வந்
து சேர்ந்ததுபோலச் சந்தோஷமடைந்தே
ன். வாசனையோடுங்கூடிய மூலதாமரைப்பு
ஷ்பத்தி லெழுந்தருளி யிருக்கின்ற பிரஹ்ம
மாவினாலே சிருஷ்டிக்கப்பட்ட இந்தப்பூ
லோகத்திலே தம்பியையுடையவர்கள் படை
க்கஞ்ச மாட்டார்க ளென்ற ஆப்தவாக்கியத்

னை நீயே திருஷ்டாந்தப் படுத்தினாய் என்று திருவாய்மலர்ந்தருளி இளையபெருமாள்திருத்தோளில்கட்டித் தாங்கியிருந்த அம்பறாத்தூணியை அவிழ்த்திறக்கித்திருத்தோளையும்திருமார்பையு மறைத்து அணிந்திருந்த கவசத்தைத் தான் பிணிப்பை விடுவித்துக் கழற்றி யுத்தத்தில் அம்புகள்தைத்ததனாலுண்டாயிருந்த புண்களைத் தமது திருத்தோள்களால் பலதரம் ஒத்தி ஆறும்படிச்செய்து தமது திருத்தம்பியாருடைய திருமுகத்தைக்கடாக்ஷித்து அப்பா! புருஷதிலகமே! இப்போது நீ அடைந்த இந்தவெற்றி உன்னுடையதுமல்ல? மிகுந்த பலமுள்ள அநுமானென்னும் நாமதேயமுள்ள நம்முடைய ஸ்நேகனுடையதுமல்ல? வேறேயெந்தத் தேவவரப்பிரசாதத்தினுடையது மல்ல? இந்த விபீஷணாழ்வால் சம்பாதித்ததாக்கும், என்று புகழ்ந்து சொல்லிவிட்டுச் சந்தோஷமாக ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரரெழுந்தருளியிருந்தார்.

இந்திரஜித்துவதைப்படலம்
முற்றிற்று.

## இராவணன் சோகப்படலம்.

இப்படி யிருக்குஞ் சமயத்தில் ராக்ஷசத் தூதர்கள் ரணகளத்திலுள்ள ரக்தக்கடலைவருத்தமுற்றுத் தாண்டியோடிக் கறுத்த அன்றிற் பெட்டைகளைப்போல ராக்ஷசஸ்திரீகள் அவரவர்கள் வீட்டுத் தெருமுற்றங்களில் கூட்டங்கூட்டங்களாய் நின்று இன்றையோடு லங்கை அழிந்துபோய் விட்டதென்று அழுதுகொண்டிருக்க ராவணனுடைய கொலுமண்டபத்திற்குப்போய்த் தங்கள் வாயும் பல்லுகளும், மனதும், நடந்துவந்தபாதங்களும், உயிரும் நடுங்கும்படி நின்று ஐயா! ராவணேஸ்வரா? உன்னுடைய குமாரன் இன்றைக்கு இந்தப் பூமியை விட்டுச் சுவர்க்கப் பிராப்தியாய்விட்டான். என்று மிகுந்த பயத்துடனே சொன்னார்கள். அதைக்கேட்டுப் பக்கத்தில் நின்றிருந்த தேவர்களும், மஹாரிஷிகளும், நர்த்தனம் பண்ணிக் கொண்டிருந்த ரம்பையூர்வசி முதலான பேர்களும், இன்றைக்கு லோகம்அழிந்துவிட்டதென்று துக்கத்துடனே நாலாபக்கங்களிலு மோடி யொளிந்துக் கொண்டார்கள். ராவணன் கண்களில் நின்றும் அக்கினிபற்றி யெரியப்படிக் கோபங்கொண்டு தன்கையில் வாளையுருவிச் சேதிசொன்னதூதுவர்களை ஒரோவிச்சாகவிசிப தின்றுவிட்டு இருபதுகைகளும் அலைகளைப் போலச்சோர்ந்துவிழும்படியாக ஒருபெருஞ்சமுத்திரம்போல கீழேவிழுந்தான் அவன் வாயினிடத்திலிருந்து பெருமூச்சுப் புறப்பட்டது. கண்களில் அக்கினிப்பொறிகள் இந்த உலகத்தைச் சுட்டெரிக்கத்தக்க ஊழித்தீயானது லோகமெல்லாம் பரவும்படிப் புறப்பட்டதுபோலப் புறப்பட்டன. படங்களையுடைய ஆதிசேஷனும் அந்த ஆதிசேஷனால் சுமக்கப்பட்ட பூமியும் நிலைபெயர்ந்து கிறுகிறுவென்றுசுழலும்படியாகத் தேஹத்தைப் புரட்டிப்புரட்டி விஷக்கடலைப்போலக்கோஷித்து இந்திரஜித்துவைக்கொன்றுவிட்டார்களேஎன்று அக்கினிக்கொட்பாக அதிகதீக்ஷணமான கோபமும், பிள்ளையினிடத்தில் வைத்திருந்த அன்பும், தோன்றும்படியாக இருபதுகண்களிலும், உருக்கினசெம்பைப்போல ரத்தக்கண்ணீருற்றெடுத்தோடப் பற்களை மலைகளும் பொடிப் பொடி யாகும்படி நெறநெறவென்று கடித்து - இடி இடித்தது போலக் கைகளை மோதிப்பெரிய மலையிலிருந்து கடல்நீர்புறப்பட்டதுபோலப்பத்துவாயிலுமிருந்து சொள்ளுநீர் வடியத்தக்கதாகப் புலம்பத்தொடங்கினான்.

### கவி.

மைந்தவோவெனும் மாமகனேயெனும் *
எந்தையோவெனு மென்னுயிரோவெனும் *
முந்தினேனுனை நானுளெனோவெனும் ... *
வெந்தபுண்ணிடை வேல்பட்டவெம்மையான். (௧)

புரந்தரன்பகை போயிற்றன்றோவெனும் *
அரந்தைவானவ ரார்த்தனரோவெனும் ... *
சரந்தைசூடியும் பாற்கடற்கள்வனும் ... *
நிரந்தரம்பகை நீங்கினரோவெனும். (௨)

நீறுபூசிய நேமியுநீங்கினார் ... ... *
மாறுகுன்றொடு வேலைமறைந்துளார் ... *
ஊறுநீங்கின ராயுவனத்தினோ ... *
டேறுமேறியுலாவுவரென்னுமால். (௩)

வானமானமும் வானவரீட்டமும் ... *
போனபோன திசையிடம்புக்கனர் *
தானமானவை சார்கிலர்சாருவ ... *
னானமானுடர் வென்றிகொண்டோமெனும்.

கெட்டதூதர் கிளத்தினவாறெரு ... *
கட்டமானுடன் கொல்லவெல்காதலன் *
பட்டொழிந்தனனேயெனும்பல் முறை *
விட்டலமுக்கு முழைக்கும்வெதும்புமால். ௫

எழுமிருக்கு மிளைக்குமிரக்கமுற் ... *
றழுமரற்று மயர்க்கும்வியர்க்கும்போய் *
விழும்விழிக்குங் கிடக்குந்தன்மேனியால் *
உழுதிலத்தை யுருளும்புரளுமால். (ரு)

ஐயனேயென மோர்தலையானினம் ... *
செய்வெனேயர செனனுமங்கோர்சிரம் *
கையனேனுனைக் காட்டிக்கொடுத்தநான் *
உய்வெனேயென் றுரைக்குமங்கோர்சிரம்.

எழுவிற்கோல மெழுதியகைகளால் ... *
தழுவிக்கொள்கலை யென்னுமங்கோர்தலை *
உழுவைப்போத்தை யுழையுயிருண்பதே *
செழுவிற்சேவக னேயெனுமோர்சிரம். (அ)

நீலங்காட்டிய கண்டனுந்தேமியும் ... *
மேலுங்காட்டி லெறிந்தபடையெலாம் *
தோலுங்காட்டத் துரந்தனமீண்டபின் ... *
ஓலங்காட்டிலை யோவெனுமோர்சிரம். (கூ)

காகமாடு களத்திடைக்காண்பெனே ... *
பாகசாதனன் மௌலியொடும்பறித் *
தோகைமாதவ ருச்சியில்வைத்தநின் ... *
வாகைநாண்மல ரென்னுமற்றோர்தலை. (கo)

சேலியற்க ணியக்கர்தந்தேவிமார் ... *
மேலினித்தவிர் கிற்பர்கொல்வீரநின் ... *
கோலவிற்குரல் கேட்டுக்குலுங்கித்தம்... *
தாலியைத்தொட லென்றுமற்றோர்தலை (கக)

கூற்றமுன்னெதிர் வந்துயிர்கொள்வதோர் *
ஊற்றந்தானுடைத் தன்றெனையும்மொளித் *
தேற்றவெவ்வுல குற்றனையெல்லையில் ... *
ஆற்றலாயென் றழைக்குமங்கோர்தலை. (கஉ)

இன்னவாறழைத் தேங்குகின்றனெழுந் ... *
தன்னுமாத்திரத் தோடினனூழிநாள்... *
பொன்னின்வானன்னபோர்க்களம்புக்கனன்
நன்மகன்றன தாக்கையைநாடுவான்... (கந)

தேவரோமுத லாகியசேவகர் ... *
எவரும்மூட னேதொடர்ந்தேகினர் ... *
மூவகைப்பெ ருலகும்முறைமையும் ... *
யாவதாகுமென் றெண்ணியிரங்குவார். (கச)

அழுதவாற்சில வன்பினர்போன்றடி ... *
தொழுதவாற்சில தூங்கினவாற்சில ... *
உழுதவானைப் பிணம்புக்கொளித்தவால் *
கழுதும்புள்ளு மரக்கனைக்காண்டலும். (கரு)

கோடிகோடி குதிரையின்கூட்டமும் *
ஆடல்வெந்றி யரக்கர்தமாக்கையும் ... *
ஓடையானையுந் தேருமுருட்டினான் ... *
நாடினான்றன் மகனுடலெலாம்... (கசு)

மெய்கடந்த விழிவழிநீருக ... ... *
நெய்கடந்த கனல்புரைநெஞ்சினன் ... *
மொய்கடந்த சிலையொடுமுரிமாக்... *
கைகிடந்தது கண்டனன்கண்களால்... (கஎ)

பொங்குதோள்வளை யும்பொழிபுட்டிலோ *
டங்கதங்களு மம்புமலங்கிட ... *
வெங்கணுக மெனப்பொலிகின்றதைச் ... *
செங்கையாலெடுத் தான்சிரஞ்சேர்த்தினான்.

கற்றிண்மார்பிற் றழுவுங்கழுத்தினில் ... *
சுற்றுஞ்சென்னியிற் சூட்டுஞ்சுழல்கணே *
டொற்றுமோக்கு முருகுமுளைக்குமால *
முற்றுநாளில் விடுநெடுமூச்சினன்... (ககூ)

கைகண்டான்பின் கருங்கடல்கண்டன்ன *
மெய்கண்டானதன் மேல்விழுந்தானரோ *
பெய்கண்டாரை யருவிப்பெருந்திரை ... *
மொய்கொண்டார்திரை வேலையைமூடவே.

அப்புமாரி யழுத்தியமார்பைத்தன் ... *
அப்புமாரி யழுத்தியவாக்கையில் ... *
அப்பும்வாரி யணைக்குமரற்றுமால் .. *
அப்புமாநுற்ற தியாவருற்றாரோ... (உக)

பறிக்குமார்பிற் பகழியைப்பன்முறை ... *
முறிக்குமூர்ச்சிக்கு மோக்குமுயங்குமால் *
எறிக்கும்வெங்கதி ரோடுலகேழையும் *
கறிக்கும்வாயினிட் டென்றெனக்காந்துவான்.

தேவரோடு முனிவருஞ்சிரியோர் ... *
எவரோடு மிடமின்றிநின்றவர் *
மூவரோடு முலகொருமூன்றுடன் ... *
போவதேகொல் முனிவெனும்பொய்மலான்

கண்டிலன்றலை காத்தியமானுடர் ... *
கொண்டிறந்தன ரென்பதுங்கொண்டவன் *
புண்டிறந்தன நெஞ்சன்பொருமலன் ... *
விண்டிறந்திட விம்மியரற்றினான்... (உச)

[வேறு.]

நிலையுமாதிரத் துநின்ற ... ... *
யானையுநெற்றிக்கண்ணனும் ... *
மலையுமேயெளியவென்றான் ... *
மறித்ததற்குமதிந்தமைந்தன் ... *

னே யெம்பான். ஒருவாயால் நீல நிறத்தை
க் காட்டிக்கொண்டிருக்கின்ற கண்டத்தையு
டையவனுன கயிலாசபதியும், சக்கரதரனு
ன விஷ்ணுவும், அபரிமிதமாக எறிந்த ஆயு
தங்களையெல்லாம் தோற்கடித்துத் துரத்தி
விட்டாயே அப்படி துரத்தித் திரும்பிய நீ
அவர்களுக்கு உன்னுடைய வீரகர்ஜனை
யை இனிக் காட்டமாட்டாயோ என்பான்.
ஒருவாயால் இந்திரனுடைய கிரீடத்தைப் ப
றித்த உன்விசயத்தைக்கண்டுசந்தோஷிங்கொ
ண்ட தபசிரேஷ்டர்கள் உன்தலையின்மேல்
வைத்த வெற்றிமாலையை இப்போது காகங்
கள் ஆடுகின்ற யுத்தகளத்தில் காண்பேனே
என்பான். ஒருவாயால் அப்பாவீரசிகாமணி
யே! உன்னுடைய வில்லின் குணத்தொனி
யைக்கேட்டு நடுங்கிய யக்ஷர்கள் தங்கள் பெ
ண்சாதிமார்கள் தங்கள் தாலியைக் கையில்
பிடித்துக்கொள்ளுவதை யினி நீங்கிவிடுவார்
களோ என்பான். ஒருவாயால் அப்பா இந்
திரஜித்தே! யமனும் உன்னெதிரேவந்து உ
ன்னுயிரைக் கைப்பற்றும்படியான வல்ல
மையுடையவ னல்லவே பின்னை யெனக்கு
ஒளிப்புக்காட்டிக்கொண்டு உனக்கு விருப்
பமான எந்தலோகத்திற்போய் மறைந்திரு
க்கின்றாய் அளவில்லாத பலமுடையவனுன
இந்திரஜித்தே வா வா என்றழைப்பான். இந்
தப்பிரகாரமாக ராவணன் தன்புத்திரனைக்
கூவிக்கொண்டு அழுது எழுந்திருந்து நினைக்
கிறதற்குள்ளாக ஓடி, தன் னரும்புத்திரனுகிய
இந்திரஜித்துவின் தேஹத்தைத் தேடும்படி
யாக ஊழிக்காலத்தில் பொன்னிறமா யிருக்
கின்ற ஆகாசத்துக்கொப்பான ரணக்களத்
தை வந்துசேர்ந்தான். தேவர்கள்முதலாகிய
தன்னுடைய கிங்கரர்களும் மற்றெல்லோரு
ம் ஐயோ! இந்தமூன்றுலோகங்களும், அவைக
ளின் முறைமைகளும், எவ்விதமாய்ப் போ
குமோ என்று நினைத்துப் பரிதபித்தவர்களா
ய்க் கூடத் தொடர்ந்து வந்தார்கள். இப்படி
ராவணன் ரணக்களத்திற்கு வந்ததைக்கண்ட
மாத்திரத்தில் அங்குப் பிணங்களைத் தின்கிறத
ற்குவந்திருந்தபேய்களும், பக்ஷிகளும், அன்
புடைய சினேகர்களைப்போலச் சிலஅழுதன
கள். சில ராவணன்பாதத்தில்வீழ்ந்து வெகு
பரிதாபங் கொண்டவைகளைப்போலத் தொ
ழுதனகள். சிலபேய்கள் துன்பத்தால் சோம்
பினதுகள். சிலபேய்கள் பயத்தால், யானைப்
பிணங்களுக்குள்ளே புகுந்து ஒளித்துக்கொ
ண்டனகள். வந்த ராவணன் கோடிகோடி
யுள்ளபிணக்கூட்டங்களையும், யுத்த வெற்
றியாளர்களாகிய ராக்ஷசர்களுடைய பிணங்
களையும், முகபடாமணிந்த யானைகளையும்,
முறிந்து விழுந்திருக்கின்ற தேர்களையும், புர
ட்டிப்புரட்டி நாள்முழுவதும் தன்குமாரனு
டைய தேஹத்தைத் தேடிப்பார்த்து, அசத்
தியநோக்கமுள்ள கண்களில் கண்ணீர் பெரு
க்கெடுத்தோட நெய்விட்டெரிகின்ற அக்கி
னியைப்போலக் கொதிக்கின்ற மனதுடனே
அதிகபலமுள்ள வெற்றிவில்லைப் பிடித்தபடி
யே இந்திரஜித்துவின் வல்லமையுள்ள கை
அறுந்துகிடக்கின்றதைத் தன்கண்ணுரக்கண்
டு, பெரியபாகுவலயமும், அம்புகளைப்பொ
ழிகின்ற விரற்புட்டிலும், தோள் அலங்காரத்
துடனே தைத்த அம்புகள் பிரகாசிக்க, அக்
கினிமயமான கண்களையுடைய கார்க்கோட
க சர்ப்பம்போலக் கிடக்கின்ற அந்தக்கை
யைத் தன் செவந்தகையால்தூக்கித் தன்தலை
யின்மேல் வைத்துக்கொண்டு, ஊழிகாலச்
சண்டமாருதத்தைப்போலப் பெருமூச்சு
விட்டுக்கொண்டு அந்தக் கையை மலையை
யொத்தத் தன்மார்பில் சேர்த்து அணைப்பா
ன். கழுத்தில்வைத்துச் சூழ்ந்துகொள்ளுவா
ன். மறுபடியுந் தன்தலையில் அணிந்து கொ
ள்ளுவான். கழலுகின்ற கண்ணி லொற்றிக்
கொள்ளுவான். முகர்ந்து மனமுருகுவான்.
பிறகு தூக்கிப்பான். கையைப் பார்த்த பி
றகு கறுத்தகடலைப் பார்த்ததுபோல இந்
திரஜித்துவின் தேஹத்தைக்கண்டு கண்ணீர
ருவித் திசைகள் சமுத்திரத்தைக் கவிந்தழு
டும்படியாக அந்தப் பிணத்தின்மேல் விழுந்
து, லக்ஷ்மணருடைய பாணவருஷிங்களால்
மூடப்பட்டிருக்கின்ற இந்திரஜித்துவின் மா
ர்பை ராவணன் கண்ணீரால் நிறைந்திருக்கின்
ற தன்னுடைய உடம்பில் ஒற்றிக்கொள்ளு
வான். வாரி அணைத்துக்கொள்ளுவான். ஓவெ
ன்று அலறுவான். வீரசிரேஷ்டனுகிய அந்த
லங்காதிபதி யுற்ற புத்திரசோகத்தை இந்த
லோகத்தில் வேறொருவரும் அடையவில்லை.
இந்திரஜித்துவின் மார்பில் தைத்திருக்கின்ற
பாணங்களைப் பலதரமாகப் பதித்து அவை
களைத் துண்டுதுண்டாக முறித்தெறிவான்.
மூர்ச்சையாய்ப்போவான். மோந்து பார்ப்
பான். தேஹத்தோடுசேர்த்து அணைப்பான்.
ஜ்வலிக்கின்ற சூரியனுடனே சப்தலோகங்
களையும் வாயில்போட்டு மென்று விழுங்கே
னென்று சொல்லிச்சொல்லிக்கோபிப்பான்.
இடமில்லாமல் ஆகாசமெல்லாம் நிறைந்து
நிற்கின்ற தேவர்களுடனேயும், ரிஷிகளுட
னேயும், உயர்ந்தவர்களான மற்ற யாவர்க

ளுடனேயும், மும்மூர்த்திகளுடனேயும், இந்
தமூன்றுலோகங்களுடனேயும், கோபம்அறு
வாம்று என்றுசொல்லுங் கோபமுள்ளவனுகி
இந்திரஜித்துவின் தலையைக்காணுமல் மிகுந்த
கோபங்கொண்டு அம்மனிதர்கள் தலையைக்
கொண்டுபோய்விட்டார்கள். என்றுதிர்மானி
த்துக்கொண்டு மனதுபுண்பட்ட வியசனமு
டையவனுகி ஆகாசமும்வெடிபடும்படியாக
ஓவென்று அலறியழுது அஷ்டதிக்குகளிலும்,
நிலைத்திருக்கிற திக்கெஜங்களும், நெற்றிக்கண்
ணனுடைய கயிலாசமலையும், என்னால் தோ
ற்றுப் போவதற்கு அலக்ஷியமா யிருந்ததுக
ளேஎன்ன! நான்இறப்பதற்குமுன்இறந்தஎன்
பிள்ளையினுடைய தலையையும், அருமையான
உயிரையும், கொண்டுபோன அந்தமனிதர்கள்
தேஹத்துடனே தலையும்உயிருமுடையவர்க
ளாயிருக்கவும், புலையனுகிய நான் இன்றையவ
ளாயினும் ஆவியைப் பொய்யாய்ச் சுமந்து
கொண்டிருக்கின்றேன் போலிருக்கின்றது. அ
ளகாபுரியை நெருப்புவைத்தெரித்து இந்திர
பட்டணத்தைப் பொருக்கெழுந்து போகு
ம்படித் தூர்த்தியடித்து, மூன்றுலோகங்களை
யும், என் ஒரு குடையின்கீழ் ஆண்டுகொண்
டுவந்த நான், வண்டுகள் தேனுண்ணும்படி
யான வெற்றிமாலையையணிந்த முடியினை யு
டைய தலையையிழந்த என்பிள்ளையினுடைய
தேஹத்தை நரிகள்தின்னும்படிக்கண்டேன்.
நாளுன்று முனைவைக்காட்டினும், பிறரெச்
சிற்கலையைத்தேடிக்கொண்டுபோய்த் தின்னு
கின்ற நாயினுணவு நல்லதாயிருக்குமல்லவா!
ஒருபகையாளியின்மேல் பெருங்கூட்டங் கூ
டிக்கொண்டு என்பிள்ளையுடனே கூடப்போ
ன வீரர்கள் ஒருவராவது மீளாமல் எல்லா
ரும் மாண்டுபோனுர்கள். பகைவர்கள் பக்ஷ
த்தில்ராமலக்ஷ்மணர்களென்கின்ற இரண்டு
தவசிகளும், அவர்களுக்குப் படையாக வந்
த குரங்குகளும், அவர்களுக்குள்ளேயொ
ருவராவது ரணக்களத்தில் மரணமாகவில்லை
யே! இனி ராவணனுடைய வெற்றிப்பிரதாப
வாழ்வு முண்டாயிருக்கின்றதாய் நினைக்கலா
மோ அப்பா இந்திரஜித்தே கந்தர்ப்பஸ்திரீ
களென்ன! யக்ஷஸ்திரீகளென்ன! சித்தஸ்திரீ
களென்ன! ராக்ஷசஸ்திரீகளென்ன! கிளிகள்,
நாகணவாய்ப்புட்களை யொத்த சொற்களையு
டைய மிகுந்த அழகுள்ளவர்களான உன்
சொந்த தேவிமார்களென்ன! இவர்களெல்
லாம்வந்து எங்கள்பிராண நாயகனைக்காண்பி
க்கவேண்டுமென்று, என்னையடைந்து வீழ்
ந்தபோது பயமினையும் வெற்றிகொண் டிருக்
கிற நான் உங்கள்புருஷனை யமன் கொண்டு
போய்விட்டானென்று அவர்களோடுகூட அ
லறியழுவேனே! மஹாவெற்றிப்பிரதாப சா
லியான இந்திரனுடைய செல்வத்தை நான
டையவேண்டுமென்றுகோபங்கொண்டபடி
யே என்னினைவை நிறைவேற்றிக்கொண்டிரு
ந்த நான் சீதையென்கின்ற வொருபெண்
ணின் ஆசையால் எனக்கு நீ செய்யவேண்டி
யதாயிருந்த கடமைகளை நீ முன்னிறந்தபடி
யால் உனக்குநானே அழுது செய்யும்படி
யானேனே! என்னைப்பார்க்கிலும் ஹீனர்க
ளாக இந்தலோகத்தில் வேறே யொருவருமி
ருக்கின்றார்களா என்று இவைமுதலாகிய ப
ல துக்கவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு
அப்பா இந்திரஜித்தேயென்று கூவி இரைந்
து அழுது மிகுந்த ஆசையுடனே இந்திரஜி
த்துவின் தேஹத்தைத் தூக்கிக்கொண்டு ரா
க்ஷசஸ்திரீகளெல்லாரும் புலம்பிப் புரண்ட
ழுதுகொண்டுவரத் தன்னுடைய சொர்ண
லங்கார நகரத்தைச்சேர்ந்தான்.

அப்படி ராவணன் போனதைக் கண்டவர்
கள் புலம்பி அலறுகிற ஓசையானது தசதி
சைகளிலும்போய் முட்டினது. இந்திரஜித்
துவின் தேஹத்தைக்கண்ட ராக்ஷச ஸ்திரீக
ளில் துக்கத்தைச் சஹிக்கமாட்டாமல் குரூர
கிருத்தியத்தையுடைய ராக்ஷசகுலத்தி னியற்
கையின்படியே சிலர்-தங் கண்களைப் பிடுங்கி
க்கொண்டார்கள். சிலர் - தங்கள் கழுத்தினை
அறுத்துக்கொண்டார்கள். சிலர் - தங்கள்மா
ர்பைப்பிளந்து ஈரலைப்பிடுங்கி யெறிந்தார்
கள். சிலர் - தங்கள் நாவை உயிருடனே பிடு
ங்கிக்கொண்டார்கள். அஷ்ட திக்குகளையும்,
வெற்றிகொண்ட புத்திரனுடைய கிரீடத்து
டனே தலை நீங்கின முண்டத்தை ராவணன்
எடுத்துக்கொண்டு போகக்கண்ட ராக்ஷசர்க
ளெல்லாம் சமுத்திரத்துக் கொப்பாகத் தங்க
ள் கண்களிலிருந்து ஒழுகிவருகின்ற அன்பின்
கண்ணீர் வெள்ளமானது பலவழியினு மோ
டிக் கடலில்போய் விழுந்தது. இந்திரஜித்து
க்குப் பிராணபதமாயிருந்த ராக்ஷசஸ்திரீகள்
முதலான பெண்சாதிமார்கள் கூட்டமாகக்
கூடிக்கொண்டு தலையின்மேல் கைகளை வைத்
துக்கொண்டு சித்திரங்களைப்போல விழ்ந்து
புரண்டழுகின்ற ராஜமாளிகையில் ரத்தநீர்
சொரிகின்ற கண்களை யுடையவனுய் ராவண
ன்போய்ச்சேர்ந்தான். அப்போது மயன்கு
மாரத்தியும்இந்திரஜித்துவின்தாயுமான, மண்
டோதரியானவள் கறுத்த அளகபாரமானது
அவிழ்ந்து குதிக்காலில்விழுந்துபுரளத் தாம

லைப்பூவால் தெவ்வனங்குரும்பையை யுடைப்பதும்போலத்தன்கைகளால்முலைகளின்மீது அறைந்து கொண்டு ஆபரணங்களை யெல்லாம் சுமக்கின்றபடியினாலே அகலாத அல்குலேயல்லாமல் இடையுங்கொஞ்சமுண்டோவென்று நினைக்கும்படியாகத் தள்ளாடி தலைமேலே கையை வைத்துக்கொண்டு நெருப்பைமிதிப்பதுபோல அடிபெயர்த்து வைத்துப் பிள்ளைமேலுண்டாகிய ஆசையினாலே வேடன் அம்புபட்டு உயிர்சோர்ந்து மலையின்மீது மயிலானது வீழ்ந்ததுபோல இந்திரஜித்துவின்மேல் சோர்ந்துவிழ்ந்து சுவாசம் விடாமல் அறிவுங்குலைந்து உயிரிழந்து போனாளோ என்று சொல்லும்படியாகத் தேஹம் அசையாமலும், ஒன்றும் பேசாமலும், துக்கியாமலும், வெகுநேரபரியந்தம் அழாமலுமிருந்து பிறகுமெல்லமெல்லச் சோர்வு நீங்கி அறிவடைந்து வாயைத்திறந்து அலறிப் புலம்பத்தொடங்கினாள்.

## கவி.

கலையினூற்றிங்கள்போல ... ... *
வளர்கின்றகாலத்தேயுன் ... *
சிலையினால்ரியைவெல்லக் ... *
காண்பதோர்தவமுஞ்செய்தேன் ...*
தலையிலாவாக்கைகாண ...*
வெத்தவஞ்செய்தேனந்தோ ... *
நிலையிலாவாழ்வையின்ன ... *
நினைவெனேநினைவிலாதேன். ... (க)

ஐயனேயழகனேயென் ... ... *
னரும்பெறலமுதேயாழிக் ...*
கையனேமழுவனேயென் ... ... *
றவர்வலிகடந்தகால ...*
மொய்யனேமுளரியன்ன ... ... *
நின்முகங்கண்டிலாதேன் ...*
உய்வெனேவுலகமூன்றுக் ... ... *
கொருவனேசெருவலோனே... (உ)

தாளரிச்சதங்கையார்ப்பத் ... *
தவழ்கின்றபருவத்தேயும் ... *
நாளணியணிந்துமேவ ... ... *
நடக்கின்றபருவத்தேயும் ...*
வாளரிக்கண்ணினர்கள் ... *
வாழ்த்திடமறுகினேகி ... *
மீளரும்விளையாட்டின்னங் ... *
காண்பெனோவிதியிலாதேன். (௩)

அம்புலியம்மவாவென் ... *
றழைத்தலுமவிர்வெண்டிங்கள் *

இம்பர்வந்தானையஞ்ச ... ... *
லெனவிருகரத்திலேந்தி ... *
வம்புறுமறுவைப்பற்றி ... ... *
முயலெனவாங்கும்வண்ணம் ...*
எம்பெருங்களிறேகாண ... *
வேசற்றேனெழுந்திராயே... (ச)

இயக்கியரரக்கிமார்கள் ... ... *
விஞ்சையரோழைமாதர் ...*
முயற்கறைபயிலாத்திங்கண் ... ... *
முகத்தியர்முருகநின்னை ... *
மயக்கியமுயக்கத்தல்லால் ... ...*
மலரணையமளிமீதே... ... *
அயர்த்தனைபுறங்குவாயே ... *
யமர்பொருதலசினாயோ. ... (ரு)

முக்கணன்முதலினோரை ... ...*
யுலகொருமூன்றினோடும் ... *
புக்கபோரெல்லாம்வென்று ... *
நின்றவென்புதல்வன்போலாம் ... *
மக்களிலொருவன்கொல்ல ... ...*
மாள்பவன்வானமேரு ... ... *
உக்கிடவனுவொன்றூடி ... ...*
யுதைத்ததுபோலுமம்மா. ...(சு)

பஞ்செரியுற்றதென்ன ... ... ...*
வரக்கர்தம்பரவையெல்லாம் ... *
வெஞ்சினமனிசன்கொல்ல ... ...*
விளிந்ததேமீண்டதில்லை ... *
அஞ்சினேனஞ்சினேனச் ... ...*
சீதையென்றமுதாற்செய்த ... *
நஞ்சினாலிலங்கைவேந்த ... ...*
னுளையித்தகையனன்றே. ... (எ)

## வசனம்.

சாஸ்திரங்களில் சந்திரனுக் கொப்பாக நிவளர்கின்றகாலத்திலே அப்பா மகனே! உன் வில்லினாலேஇந்திரனை ஜெயிக்கப்பார்க்கும்படித் தவஞ்செய்திருந்த நான்,உன்னைத் தலையில்லாத முண்டமாகப் பார்க்கும்படி என்ன கெட்ட தவஞ்செய்தேனோ? ஐயோ! நினைவு கெட்ட நான் நிலையில்லாத இந்த உயிர்வாழ்க்கையை இன்னமும் ஆசைப்படுவேனோ? அப்பா என்னையா! அதிக சுந்தரவானே! பெறுதற்கரிய தேவாமிர்தம் போன்றவனே! கையில் சக்கரத்தைத்தரித்தவிஷ்ணுவையும்,மழுவாயுதத்தையுடைய சிவனையும், தோற்கடித்த யமனுக்குச்சமமான வல்லவனே? இந்தமுன்றுலோகத்திற்கும் ஒருவீர சிகாமணியே! மஹாவீரனே! உன்னுடைய தாமரை மலர்

லைக்குவந்து துக்கப்பட்டுக்கொண் டிருப்பாயோ? அதுவுமல்லாமல் அந்த ராமலக்ஷ்மணர்கள், மிகைமாண்டுபோனுலீ இனிநாம் சண்டைசெய்வதினுல்காரியமென்னவென்று போய்விடுவார்கள். அப்போதுஉன்னுல்அவர்களைஜெயிக்க முடியவில்லையென்றுசொல்லுவார்களே அதுவீரவாக்கியமாகுமோ? என்று சொன்னுன். இப்படிமஹோதரன்சொன்னதைக்கேட்டுராவணன் ஓங்கினவாளைப்பூமியிலெறிந்துவிட்டுத் திரும்பித் தன்பிள்ளையைப்பகைவர்கள் கொன்றபழிக்காக அந்தப்பகைவர்களுடைய தலைகளைக்கொண்டல்லாமல் திரும்பிவரமாட்டேன். இந்தமுண்டமான தேஹத்தைத் தைலதோணியில் போட்டு வையுங்களென்றுநியமித்தான். அந்தப் பிரகாரமாகவே அவர்கள் இந்திரஜித்துவின்தேஹத்தை வாசனைத் தயில தோணியில் வளர்த்திவைத்தார்கள். அப்போது ராவணன் சேனைகளையழைத்துக்கொண்டு வரும்படி நியமித்தபிரகாரம்போனதூதர்கள்,நாலுதிக்கிலும்போய் அங்குள்ளராக்ஷசர்களையெல்லாம் அழைத்துக்கொண்டுவந்து ராவணன்பாதத்தில் வீழ்ந்து ஸ்வாமீ நாங்கள் அழைத்துக்கொண்டுவந்த சேனைகளுக்கு இந்த லங்காபட்டணத்தி லிடமில்லையே! இனி யுத்தரவுப்படி நடந்துகொள்ளுகிறோ மென்றார்கள்.

இராவணன் சோகப்படலம்
முற்றிற்று.

## படைகாட்டுப்படலம்.

அப்படித் தூதர்சொன்னதைக்கேட்ட ராவணன் மிகுந்த சந்தோஷங்கொண்டு எழுந்திருந்து வந்த சேனைகள் எங்கே யிருக்கின்றதென்று கேட்டான். அப்போது அந்தத் தூதர்கள் இரண்டுகைகளையுங் கூப்பிக்கொண்டு ஐயா, இன்ன இடத்திலிருக்கின்றதென்று ஒரு இடத்தைக் குறிப்பிட்டுச் சொல்லக்கூடுமோ? சப்த சாகரங்களும் ஊழிகாலத்தில்லோகங்களையெல்லாம் வந்து வளைந்துகொண்டதுபோல வந்திருக்கின்றசேனைக்கு இந்த லோகமே போதா தென்றார்கள். பூமியில் மிதித்து நடக்கின்ற சேனையினுல் எழும்பிய பெருந்தூளி நெருங்கினபடியினுலே ஆகாசமார்க்கமாய் ஏறி மேலும்மேலுமாகக் கற்பமுடிவின் காளமேகத்தைப்போலக் கண்ணுல் பார்க்கவு முடியாமல் லங்காபட்டணத்தை நோக்கி வெகுசேனைகள் வந்தனுகள். வருகின்றவர்கள் கண்விழிக்கின்றதினுலே மேகத்திரளெல்லாம் ஓடிவிட்டன. அவர்களுடைய பேரிகை முழக்கத்தைக்கேட்டு இடியும், அதனோடு நேரொத்துச்சத்திக்கமாட்டாது. நீட்டின ஆயுதங்களும், குதிரைகளும், யானைகளும், தேர்களும் போகும்போது கடல்களெல்லாங் கொதித்து மேலெழும்பிவிடுமேயானுல் அதற்குச்சமானம் வேறதைச்சொல்லலாம், இந்தமூலபலச்சேனைகள் நடந்துபோகின்ற பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் லோகங்களெல்லாம் ஒன்றுடன் ஒன்றுமுட்டி ஒதுங்கிவிட்டதுகள். மேலுலகத்தில் சந்திரனும், நக்ஷத்திரங்களும், தத்தம் நிலைமையை நீங்கிவிட்டதுகள். சூரியனுந் தான் முன்னம்போகின்ற பழையவழியைவிட்டுப் பயந்து விலகிப்போய்விட்டான். ஆகாசத்தையளாவின மேருமலையைப்போலப் பிரகாசிக்கின்ற கோபுரங்களையுடைய லங்கையின் நாலுவாசலுக்குள் நுழைவதற்காக இந்தப் பூலோகமும் பொறுக்கமாட்டா தென்று சொல்லும்படியாக நடக்கின்ற சேனையானது, யமனுனவன் கருங்கடலை வேறோரிடத்தில் சேர்த்துவைப்பதற்குச் சமானமாகஇருந்தது. இந்தச்சேனை நெருக்கமாயிருக்கின்ற லங்கைக் கோட்டைவாசலின்வழியாக நுழையவேண்டுமானுல் அநேகநாள் செல்லவேண்டிவரும் என்று அந்த லங்கையின் மதிலின்மீதேறி எல்லாஅண்டங்களிலு மிருக்கின்ற மேகங்களெல்லாம் ஒருமிக்கக் கலந்ததுபோல லங்காபட்டணத்துக்குள்ளே பிரவேசிக்க யத்தனித்தது. அப்படி சேனைகள் லங்கையை நோக்கி வரும்போது ராவணேஸ்வரன் அந்தச் சப்தசாகரங்களையும், ஒரேகாலத்தில் பார்க்க வேண்டுமென்று ஆசையுற்ற அறிவினைப்போலச் சேனையை ஒரேதடவையில் இவ்வளவென்று பார்க்கவேண்டு மென்ற ஆசையினுலே அலங்காரமான ஒருபெரியகோபுரத்தின்மேலேறிநின்றுன். அப்போது ஒருதிக்கிலிருந்து மற்றொருதிசையைநோக்கிச் சமுத்திரஜலம் போவதையொத்த சேனையை வேதவேதாந்தார்த்தத்தை ஒருமிக்க விரித்துப் போதிக்கின்றவர்களைப்போலத் தூதுவர்கள் ராவணனுக்கு அணியணியாகப் பலதரமாய்க்காட்டி, இன்னதின்ன தென்று சொல்லத்தொடங்கினுர்கள். ஐயா, ராவணேஸ்வரா? இதோவருகின்றார்களே இவர்கள் சாகத்வீபத்தில் வாழ்கின்றவர்கள். தானவர்கள் செய்த யாகத்தில் பிறந்தவர்கள். தேவர்களை யெல்

லாம் ஒருமிக்கத்தோற்றோடும்படி அடித்தவர்கள். மாயைக்கு முதன்மையானவர்கள். மேகமண்டலத்தை அளாவிய தேஹத்தையுடையவர்கள். ஐயா, அதிவீரவானே? இவர்கள் குசத்வீபத்தில் வசிக்கின்றவர்கள். கொலையை விலக்கி யமனுக்குப் பழிப்பையும், சிருஷ்டியை விருத்திபண்ணிப் பிரஹ்மாவுக்குப் பலத்தையும், உண்டாக்கினவர்கள். எப்போதுந் தேவலோகவாசிகளான தேவர்கள் தங்கள் கீர்த்தியையும், ஐஸ்வரியத்தையும், இருப்பிடத்தையும், இழந்துபோனது இவர்களாலேதான். வெற்றியே இவர்களுக் கியற்கையானதொழிலாயிருக்கின்றது. மேரு ராவணேஸ்வரா? இவர்கள் சான்மலித்வீபத்தில் வசிக்கின்றவர்கள். இமையாநேத்திரத்தை யுடையதேவர்களுக்குத் தலைவனான இந்திரனுடைய பொன்னுலகத்தை அழியும்படி யடித்தவர்கள். சந்திரனை ஜடாமகுடத்தில் தரித்த கயிலாசபதியாகிய ருத்திரமூர்த்தி யருளிச்செய்த வரத்தினாலே கிரோஷிடப்பட்டவர்கள். காட்டுத்தீப்போன்ற கோபத்தையுடையவர்கள். ஐயா, திக்விஜயபிரதாபசீலனே! இவர்கள் கிரௌஞ்சத்வீபத்தில்வாசம்பண்ணுகின்றவர்கள். பழயகாலத்தில்மேருமலையை இது தேவர்களுக் கிருப்பிடமா யிருக்கின்றதென்று பேர்த்துக்கொண்டுபோய்ச்சமுத்திரத்தில்போட்டுவிடுகிறதற்கு யத்தனித்தபோது தேவர்களெல்லாம் அலைகுலைய தலைகுலைய ஓடிவந்துஅப்படிச்செய்யவேண்டாமென்று வேண்டிக்கொண்டதினாலே சும்மாவிட்டுவிட்டார்கள். கயிலாசகிரியைப் பேர்த்த புஜபலவீரனே! இவர்கள் பிரவாளத்வீபத்தில் வாழ்கின்றவர்கள். சுக்கிரன்தன்னியல்பழிந்து ஒரு ராக்ஷசக்கன்னிகையைச்சேர்ந்து அவள்வயிற்றிற் பிறந்த பத்துக்கோடி பேர்கள். விளையாட்டைப்போலப் பாற்கடலை வற்றும்படி கொஞ்சநாளுக்குள் குடித்துவிட்ட பலவந்தர்கள் எங்களாண்டவனே? இந்த வக்கிரதந்தங்களையுடைய அளவில்லாதவர்கள்கருங்கடலுக்கப்பால் மந்தமாருதக் காற்றுலாவும்படியான கந்தமாதனமென்ற பருவதத்தில் வாழ்ந்துகொண்டிருக்கின்றவர்கள். மூன்றுல்ஆலகாலவிஷம் பிறக்கும்போது அதனுடன் கூடப்பிறந்தவர்கள். ஐயா, தசகண்டேஸ்வரனே! இவர்கள் சாகரத்வீபத்தில் மலையமே லிணைப்பட்ட பொதிய மலைபோன்று நிலையமாயிருக்கின்றது. அங்கே வசிக்கின்றவர்கள். பிரஹ்மா இவர்களாலே லோகத்துக்கு இக்கட்டுண்டாகுமென் றெண்ணி ஐயன்மாரே! நீங்கள் தயைசெய்து இந்தமலையிலிருங்களென்று யாசித்தபடியினாலே அங்கேயே இருக்கின்றார்கள். ஐயா, பெருங்கீர்த்திமானே? இந்த முஷ்கராயுதத்தையும், சூலாயுதத்தையும், முசுண்டியாயுதத்தையும்,சக்கராயுதத்தையும் வில்லையும், உடையவர்களாய் நிற்கின்ற வீரர்கள், புஷ்கரத்வீபத்தில் வசிக்கின்றவர்கள். விஷத்துக் கொப்பானவர்கள். சப்த சாகரத்திற்கும் தலைவர்கள். எங்கள் தலைவனே? பிசாசம்போன்ற கைகளையுடைய இவர்களை முன்னாலே பிரஹ்மதேவர்பார்த்து இவர்களுக்கு இந்தலோகம்போதாதென்று நீங்கள் சப்தலோகங்களிலும், பாதாள லோகத்திலும், போயிருங்களென்று சொல்ல அங்கே போயிருந்தார்கள். இப்போது உம்மிடத்தில் அன்புடையவர்களாய் அந்தப்பிரஹ்மாவின் ஆக்கினையையுங்கடந்து வருகின்றார்கள்.ஐயா ராவணா? இவர்கள் இறலித்தீவில் விருத்தியடைந்திருந்தவர்கள். யமனைமுன்னாலே தங்கள் தாயார் சொல்லைக்கேட்டுத் தங்கள் வல்லமையால் சக்கரவாளகிரியின்மீது, விலங்கிட்டுப் பலமொடுங்கும்படி வைத்திருந்தார்கள். பிறகு பிரஹ்மதேவன் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதினால் விட்டார்கள். ஐயா, இவர்கள் நிருதியின் வமிசப்பிள்ளைகள். சூரியனுக்கும், தேவர்களுக்கும், எவ்வித பந்துத்துவம் உண்டாயிருக்கின்றதோ? அவ்வளவு உன் வமிசத்தார்களுடனே பாந்தவ்விய முடையவர்கள். ரத்தபானங் கிடையாவிட்டால், இந்தச்சப்தசாகரங்களையும், தாகத்துக்குச்சாப்பிடத்தக்கவர்கள். கறுத்த மேனியர்கள். ஒவ்வொருத்தர் சப்தகுலாசலங்களையும், பேர்த்தெடுக்கும் வல்லமை யுடையவர்கள். ஐயா, லங்காதிபதியே? இவர்கள் ஆதிபுருஷ வராகமூர்த்தியை மோகங்கொண்டு பார்த்தகாரணத்தினாலே அந்த ஸ்திரீகள் வயிற்றில்பிறந்தவர்கள். இந்திரனை ஐராவதமென்கின்ற யானையின்மே லேறவொட்டாம லடித்து அவனை ஜெயித்து வெற்றிமாலை தரித்தார்கள். இதோ பெரிய மலைகளைப்போல நிற்கின்ற கொடுங்கண்களை யுடையவர்களான வெற்றியாளர்கள். ஒருவருக்கும் பின்னிடைய மாட்டார்கள். தாதலத்திலே வாசம் பண்ணுகின்றவர்கள். அவ்விடத்திலிருந்துகொண்டு எந்நேரமும் துஷ்கிருத்தியங்களைச்செய்துகொண்டிருக்கின்றபடியினாலே, ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷனும் - நித்திரையில்லாமல் விழித்தகண் விழித்தபடியே எங்கேயிவர்கள் நம்மை இம்சிக்கவருகிறார்களோவென்று பார்த்

துக்கொண்டேயிருப்பான். இதோ கைகளிலி ருக்கின்ற வாள்கள்பிரகாசிக்கவும், வக்கிரதந்த ங்கள்ஒளிவீசவும், வருகின்றவர்கள், நெற்றிக்க ண்ணனாகிய சிவமூர்த்தி காளியைமோஹித்த போது பெருங்கூட்டமாகப் பேய்க்கூட்ட த்துடனே மிகுந்த கோபத்துடனே பிறந் தார்கள். இதோ வில்லைக் கையிற் பிடித்துக் கொண்டு வடதிசையிலிருந்து வருகின்றவர் கள், பாபம்பிறந்தபோது அத்துடன்கூடப் பிறந்த பழையவர்கள். விளக்கைப் போன்ற கண்ணை யுடையவர்கள். கோபம் பிறந்தால் தாயையும்கொன்று உயிரைவாங்கும் படியா ன சண்டாளர்கள். இவர்கள் பஞ்சமுகனாகிய ருத்திரமூர்த்தி கோபங்கொண்டுலோகத்தை யெல்லாம் சுட்டெரிக்கும்படியாக விழிக்கி ன்ற நெற்றிக் கண்ணில் பிறந்தவர்கள். சூல மேந்திக்கொண்டு நிற்கின்ற இவர்கள் ருத்திர மூர்த்தி யமனுடைய மார்பிலுதைத்தபோ து அவன் கக்கின எழுசமுத்திரத்தை யொத் த ரக்தத்தில் நின்றும் பிறந்த வீரவான்கள். இதோ பெருங்கூட்டமா யிருக்கின்றவர்கள், ஆலகாலவிஷத்திலும், அமுதத்திலும், பிறந்த ராக்ஷசயுத்தவீரர்கள். இவர்கள் வடவாமுகா க்கினியில் வாசுகி விஷத்தைக் கக்கினபோது, அந்த அக்கினியிலிருந்து பிறந்தவர்கள். மே கத்தில் பற்றியெரிகின்ற அக்கினியைப் போ ன்றிருக்கின்ற செம்பட்டமயிரையுடைய இவ ர்கள், ருத்திரன் தேரைச்செலுத்திக்கொண்டு போய்த் திரிபுரங்களையெரித்தபோது அந்த த்தீயில் பிறந்தவர்கள். ஐயா, இவர்களையெல் லாம் தனித்தனியே சொல்லப் புகுந்தால், நி னைக்கவும், குறிப்பிட்டு அறியவும், அளவுபட மாட்டார்கள். இவர்கள் செய்யும் படியான மாயைகளையும், இவர்கள் பெற்றிருக்கின்ற வரங்களையும், தவங்களையும், ஒவ்வொன்றாய்ப் பேரிட்டுச்சொல்ல வேண்டுமானால் ஆயிரம் யுகமானாலும் முடியாது. ஐயா, மஹாதைஸ் வரியவானான லங்கா நாயகனே? இவர்களில் ஒருவனேபோய் அங்கிருக்கின்ற பலவந்தர்க ளான, குரங்குகளையெல்லாம், கெட்டிக்காரர்க ளான அந்தஇரண்டுமனிதர்களையும் ஒருகையி லேலே, வாரியடித்துவிட்டுவருவார்கள், வேறெ ன்ன சொல்லவேண்டும் என்று தூதுவர்கள் சொன்னார்கள். அதற்கு ராவணன் அந்தத்தூ துவர்களைப்பார்த்து இந்தச் சேனைகளுக்குத் தொகை எந்தக்கணக்காகவகுத்திருக்கின்றது. அதைச்சொல்லுங்களென்றுகேட்க, அதற்கவ ர்கள் ஐயா, இவர்களுடையதொகையை ஆயிர ம்வெள்ளமென்றுசொல்லுவார்கள். பைத்திய க்காரர்கள் இவர்களுடையதொகையைச்சொ ல்லுகிறதற்குக் கணக்கில்லை என்றார்கள். அ தைக்கேட்டு நல்லது நீங்கள்போய் இந்தச் சேனைகளுக்கு நாயகர்களை என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு வாருங்கள். அவர்கள் வ ந்தபிறகு, நான்அவர்களுக்குச்சொல்லவேண் டிய காரியங்களையெல்லாமும்மரியாதை வா ர்த்தைகளையும்பேசி, உபசாரத்துடனே தகு ந்த வெகுமானங்களையுஞ் செய்யவேண்டு மென்றான். அப்படியேதூதுவர்கள் அந்தந் தத் திக்குகளுக்குப்போய்ச் சமுத்திரத்தை யொத்த அந்தச்சேனைநாயகர்களைக்கண்டுஉங் களை ராவணேஸ்வரன் அழைத்துக்கொண்டு வரச்சொன்னானென்றுசொல்ல, அந்தச்சேனா திபதிகளெல்லாரும்வந்து ராவணன்பாதங்க ளில் புஷ்பங்களைத்தூவி ஒருவருடைய கிரீட ம்ஒருவர்கிரீடத்தில் மோதுண்ணும்ஓசை ஆ காசத்தை முட்டும்படியாக வணங்கினார்கள். அப்படியவர்களெல்லாரும் வரிசைவரிசையா க வந்தனை வழிபாடுகள்செய்து சந்தோஷித் துடன் ஒருபக்கமாயிருந்தபோது, அதிவீர னான ராவணன் அவர்களைப்பார்த்து உங்கள் வரவு நல்வரவாய் முடியக்கடவதென்று, அ வர்கள் மனதைத் திருப்திகரணம்பண்ணி, உ ங்கள் பெண்டுபிள்ளைகளெல்லாம் க்ஷேமமா யிருக்கின்றார்களோவென் றுபசாரவார்த்தை களைச்சொன்னான். அதைக்கேட்ட அந்தச்சே னாவீரர்கள் ராவணனை வணங்கி ஐயா, திரி லோகாதி பத்தியமுள்ள பிரதாப லங்கேஸ் வரா! பருத்ததோள்களையுடையநீ மிகுந்த த போவல்லமைகளை யுடைத்தாயிருக்கின்றாய். உரியதா யுனக்குவேண்டியவைகளெல்லாவற் றையுமுடித்துக்கொள்ளுகிறதற்குக் குறை எ ன்ன! தேவர்களையெல்லாம் ஓடவிட்டடித்த தைப்பார்த்திருக்கின்றோம், இனியெங்களுக் கென்னகுறை. இதிருக்கட்டும், உன்னிடத்தி லிருக்கின்ற ஸ்திரீகள், பிள்ளைகளெல்லாரும் துக்கப்படாதவ ரொருவருமில்லை. நீயும்அப் படியே அதிகதுக்கமுற்றிருக்கின்றாய். இப்ப டி நேரிடுகிறதற்குக் காரணமென்ன என்று அவர்கள் கேட்க, ராவணன் அவர்களைப்பார் த்துத் தனக்குச் சீதையின்மேலிருந்த மோ ஹத்தினாலே சம்பவித்த காரியங்களை யெல் லாம் விவரித்துச்சொன்னான். இதைக்கேட்ட மூலபலசேனாபதிகள் ஐயா, ராவணேஸ்வரா! கும்பகர்ணனையும், இந்திரஜித்தையும், நம்மு டைய குலத்தவரான மஹாவீரர் முதலிய ராக்ஷசர்களுடைய பெருங்கூட்டங்களை யெ ல்லாமும் வென்றவர்கள். இரண்டு அம்பி

ன் மனிதர்களும், அவர்களுக்குச் சேனையாகிய வானரசேனைகளுமா! இதென்ன ஆச்சரியம்! நீ யெங்களை ஏவலமைத்தது இந்த லோகத்தைச் சேஷனுடைய உச்சியிலிருந்து எடுக்கிறதற் கில்லாமலும், சப்த குலாசலங்களையும், வேரோடு பறிப்பதற் கில்லாமலும், சமுத்திரத்தைக் கையாலள்ளிக் குடிப்பதற்கில்லாமலும் பூவையும், இலைகளையுந்தின்றுகொண்டிருக்கின்ற குரங்குகளின்மேல் ஏவுகிறதற்கா? என்று கையுடனே கையைஅறைந்து இடியிடித்தாற்போலச் சிரித்தார்கள். அந்தக்கோரத் தந்தங்களையுடைய ராக்ஷசர்களைச்சமாதானப்படுத்தி, புஷ்கரத்வீபத்துக்குத் தலைவனான வன்னியென்பவன் அந்தமனிதர்களுடைய வல்லமை யெவ்வளவென்றுகேட்டான். அவன் அப்படிக்கேட்டவுடனே மாலியவானென்றபெருள்ளவன்வந்து இந்தப்பகை நேரிட்டகாரணமும் ராமலக்ஷ்மணர்களுடைய சௌரியமும், அவர்களுக்குத்துணையாகவந்திருக்கின்றவானரவீரர்களுடைய சக்தியுஞ்சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினான். சப்தசாகரங்களையும், சண்டமாருதம்போலத் தாண்டிப்போகின்றவனும், சப்தகுலாசலங்களைப் பேர்க்கும்படியான வல்லவனுமான வாலியினுடைய மார்பை ஸ்ரீராமனென்பவனுடைய ஒருஅம்பு பிளந்தெறிந்துவிட்டது. மேலும் இந்த ஸ்ரீராமன் கறுத்த பெருமலையைப்போலிற கரன், தூஷணன், பிரகாசிக்கின்ற திரிசிரசு என்பவர்களையும், அவர்களுடைய கடலையொத்த சேனையையும், ஒருவில்லால் ஒருநாழிகைக்குள்ளாகக்கொன்று விட்டான். பருத்த தோள்களையுடைய விராதனும், மாரீசனும், அவனால்தான் மாண்டுபோனார்கள். அந்தமனிதர்களுடைய வல்லமையை நீங்கள் வந்துகேட்கிறதென்ன! இந்தப்பெருங்கடல் வேந்தபோது நீங்களெங்கே கொஞ்சமாவது பார்க்கவில்லையோ? அதுவல்லாமலும் கங்காசடாதரனான ருத்திரமூர்த்தியினுடைய பெரியவில்லை அவன் முறித்தெறிந்தபோது அந்த ஓசை உங்கள் செவியில் வந்து கேட்கவில்லையோ? இதுவுமல்லாமல் இந்தலங்கையில் நீயிருங் கொடியவர்களான ராக்ஷசசேனைகள் ஆயிரம்வெள்ள மளவுமுண்டு, அந்தச் சேனையெல்லாம் இந்தராம லக்ஷ்மணர்களுடைய இரணவேலையல்ல யமபுரம்போய்ச் சேர்ந்து இடமில்லாமல் நிறைந்திருக்கின்றது போலிருக்கின்றது. மற்ற வெற்றிவில்லையுடையவனை கும்பகர்ணனைக்கு உங்கள் எஜமானனும், அவன் பெற்ற பிள்ளைகளும், பிரகஸ்தன் முதலான மற்றவீரர்களும், இந்திரஜித்துவுடனே கூட மடிந்துபோனார்கள். இன்றுவரையிலும் நானும் இதோ இருக்கின்ற சிலபேர்களு மாத்திரந்தான் பிழைத்திருக்கின்றோம். எங்களுக்கு மூலச்சேனையாக முந்நூறுவெள்ளஞ்சேனையிருந்தது நீங்கள்வராவிட்டால் அதை இன்றைக்கு யுத்தத்திற்கு அனுப்பும்படி நிச்சயித்திருந்தோம். வீரகண்டாமணியைத்தரித்த அந்த ராம லக்ஷ்மணர்களுடைய வல்லமையையும், வானரப்பெருஞ்சேனைகளுடைய வல்லமையையும் தெரிவிக்கவேண்டுமானால், ஓர் ஒரு குரங்குவந்து இந்த லங்காபட்டணத்தை நெருப்பூட்டியிருந்த கோபிஷ்டனான அக்ஷகுமாரனையும் பூமியில் போட்டுத் தேய்த்துப் பெருஞ்சண்டைசெய்து தூது பேசிவிட்டு ராக்ஷசஸ்திரீக ளெல்லாம் அலறும்படி ராக்ஷசசேனாசமுத்திரத்தையும், இந்தஜலசமுத்திரத்தையும், தாண்டிக்கொண்டுபோய் விட்டது. சமுத்திரத்தை மலைகளைக்கொண்டு அணைகட்டி லங்கைக்குவந்து சண்டைசெய்கிறதற்காகவானரர்கள் மார்க்கமுண்டுபண்ணினதை நீங்கள்பார்க்க வில்லையா? சஞ்சீவிமருந்தை ஒரு நொடிக்குள்ளாக மேருவுக்கப்புறந்தாண்டிப்போய் கொண்டுவரும்படியான எழுபதுவெள்ளம் வானரங்களிருக்கின்றன. இது இருக்கிற காரியம். சாமானிய ஸ்திரீகளைப்போலல்லாமல் பதியேதெய்வமென்று விரதம்பூண்டிருக்கின்ற சீதையென்னுங் கற்புடைய பத்தினியின் சிறை நீங்கத்தக்கதாகவேண்டியமுயற்சிகளைச்செய்து கொண்டுவந்திருக்கின்ற அந்தவில்வீரர்களேஜெயப்பெறட்டும். அல்லது நீங்களே வெற்றிபெற்றாலும் பெறுங்கள். இது நிச்சயமான காரியமென்பதை உங்களுக்குத்தெரிவித்தேனென்று தான்சொல்லவேண்டிய வார்த்தைகளையெல்லாஞ் சொல்லிமுடித்தான். அப்போது வன்னியென்னுஞ் சேனாதிபன் ராவணனைப்பார்த்து ஐயா, நீ இத்தனை ராக்ஷசவீரர்களெல்லாம் மடிந்து போனதைக்கண்டும் என்னகாரணத்தினால் அந்தமனிதர்கள்மேல் யுத்தத்திற்குப் போகாமலிருந்தாயென்றுகேட்க, அதற்குராவணன் மனிதர்களும், குரங்குகளுமென்ற அற்பத்தை நினைத்து அவர்கள்மீது யுத்தத்திற்குப் போவதற்கு வெட்கப்பட்டுக்கொண்டு நின்றுவிட்டேனென்றான். ஆம் அதுமெய்தான். நீ அவர்கள்மேல் சண்டைக்குப்போகிறது தகுதியல்ல. அந்தக்காரியம் எங்கள் கடமையென்று

சொல்லிப்பின்னும்வன்னிசொல்லுகின்றான். ஐயா, ராவணேஸ்வரா! எல்லாந்தெரிந்த உன்னுடையபாட்டன்மாலியவானுடைய அபிப்பிராயம், சீதையைக்கொண்டுபோய்விட்டுவிட்டு அந்தமனிதர்களைச் சமாதானம்பண்ணிக்கொள்ள வேண்டுமென்பது. அது ஆதியிலேயேசெய்யவேண்டும் இனிச்செய்கிறது கெடுதி. இப்போதுஇறந்துபோன இந்திரஜித்துவைநாமினிமேல்காணப்போகிறோம் அந்தச் சீதையைக்கொண்டுபோய்விட்டுவிட்டாலும்யுத்தத்தில்மடிந்துபோன வீரர்களை நாம்மறுபடியும் பெறப்போகிறதில்லை. அதனால்நம்மைஎல்லோரும்ஏளனம்பண்ணுவார்கள். ஆகையால் நாம் அவர்களுடன் யுத்தஞ்செய்து அவர்கள்வமிசத்துடன் கருவறுப்பதே தகுந்தகாரியமென்றுசொல்லிவிட்டு வன்னிமுதலாகிய மூலபலசேனாதிபதிகளெல்லாம், ஐயா, பிரதாபலங்கேஸ்வரா நீரிங்கேயே இரும்.நாங்கள்போய் அந்தமனிதர் குரங்குகளினுடைய சிறுஉடலின் ரத்தங்களைக் குடித்துவிட்டு வருகிறோம். அவர்கள் பலமில்லாத அற்பஜாதிகளானவர்கள்தானே என்று சொல்லிப்போனார்கள்.

படைகாட்டுப்படலம்
முற்றிற்று.

## மூலபல வதைப்படலம்.

அதைக்கேட்டுத்தானவர்களென்கிற மலைகளையெல்லாம் தன்கைவாளாயுதத்தினாலே வெட்டி ஜெயம்பெற்றவீரனான ராவணன் மிகுந்த சந்தோஷித்தனாகி, தானொருபக்கத்தில் போய் வானரசேனைகளையெல்லாம் மாமிசங்களைச்சிதைத்து அவர்களுயிர்களைப் பக்ஷித்துவிடுகிறேன் நீங்கள்போய் ஒருமிக்க அந்த இரண்டு மனிதர்களைமாத்திரங் கொன்றுவிடுங்களென்று ஆஜ்ஞாபித்தான். இப்படி திட்டப்பண்ணின உடனே அந்தச் சேனாதிபதிகள் தங்கள் தங்கள் வாஹனங்களின்மேலேறிக்கொண்டு பெருங்கடலைப்போலிருக்கின்ற தங்கள் சேனையில்போய்ச் சேர்ந்ததை ராவணன்பார்த்து இந்தச்சேனைகளுக்கு முன்னதாக நம்முடைய மூலச்சேனையை அவர்கள்மீது யுத்தத்திற்கு அனுப்புங்களென்று கட்டளையிட்டு, அந்தச் சேனைகள் சென்றபின்பு, தேவர்களுடைய புகழையெல்லா நாசப்படுத்தினவனான ராவணனும், தேர்மேலேறிக்கொண்டு திரிலோகத்தவர்களும்,மகாரிஷிகளும் நடுங்கிப் பீதியடையும்படியாகப் புறப்பட்டு, காயாம்பூப்போலத் திருமேனியையுடையவரான ஸ்ரீராமமூர்த்தியினுடைய சேனைகளின்மீது ஒருபக்கத்தில் பிரவேசித்தான். அப்போது வல்லவர்கள் யானைமீதும்பேரிகையைக்கொட்டி சேனைகளெல்லாஞ் சண்டைக்குப் புறப்படுங்களென்று பலபல திசைகளிலும் அறைந்தபோது மூலபலசேனைகள் பூமியையும், ஆகாசத்தையும், அஷ்டதிக்குகளையும், மொய்த்துநிறைந்து கூட்டங்கூடினதுகள். அந்தமூலபலப் பெருஞ்சேனையினுடைய ஆயுதந்தரித்த தேஹத்தை நெருக்கிச் சுருக்கிக்கொண்டு விஷ்ணுவினுடைய வாமனவுருவத்தைப்போல வருகிறபடியினாலே சமுத்திரமெல்லாம்மறைந்தது, ஆகாசமெல்லாமறைந்தது, லோகத்திலுள்ள ஜீவகோடிகளெல்லாம் மறைந்தது, அந்தமூலபலராக்ஷசர்கள்தருமத்தைவேரோடுவிழுங்கிக் கிருபையைப்பானம்பண்ணிவெற்றிபெற்றவீரத்தையே ஆபரணமாகப்பூண்டு,பாபத்தையே தங்களுக்கு மனைவியாகக் கலியாணஞ்செய்திருக்கின்றவர்களும், மேகத்தைப்போலக் கறுத்தவர்களும்,ஆலகாலவிஷத்தைப்போன்ற மனதையுடையவர்களும், நெருப்புப்பற்றி யெரிகிறதுபோலத் தலைமயிரையுடையவர்களும், யமனும்புகழும்படியானவர்களும், நீளமான கைகளினாலே சமுத்திரஜலத்தை வாரி யிறைத்துவிட்டு, அதிலிருக்கின்ற மீன்களுடனே மகரமச்சியங்களையும் வாயில்போட்டுமென்று விழுங்கிவிட்டு இடிகளைப்பிடித்துக் காதுகளுக்குக் குண்டலம் போலத் தொங்கவிட்டுக்கொண்டு மேகங்களை யுரித்து வஸ்திரமாகப் போர்த்துக்கொண்டு உலாவி கர்ஜ்ஜிக்கின்றவர்களும், குலாசலங்களைப்பேர்த்துப் பல்லாக மேகத்தி லிசைத்து மலைப்பாம்புகளால் கட்டிப்பிணித்திருக்கின்ற வீரகண்டாமணியைத் தரித்தவர்களும், ஆகாசத்தில் பறந்துபோகின்ற கருடனும், காற்றுக்கு நாலத்தனை வேகமுள்ள நடையை யுடையவர்களும், உண்ணும்போது பசிக்கு மாமிசங்கிடையாமற் போகுமானால் திக்கஜங்களையும் பிடித்து வாயில்போட்டுக்கொள்ளுகின்றவர்களும், குடிப்பதற்குத் தாகங்கிடையாவிட்டால் ஆகாசத்தில் படர்ந்திருக்கின்ற மேகங்களை யெல்லாம் பிடித்து வாயில் பிழிந்துகொள்ளத்தக்க விடாயை யுடையவர்களும், பனிகளுறைந்த மந்தரகிரி முதலானவைகளைக் கைகளினாலே யோங்கி அறைந்து குளிரை நீக்கி உஷ்ணத்தை உண்டாக்கும்படியானவர்களும், சந்திரனைப்பிடி

த்து உடம்பைச் சொறிந்து தினவை நீக்கிக் கொள்ளுகிறவர்களும், மலைகளைக் கடைந்து பிடித்திருக்கிற தண்டாயுதத்தையுடையவர்களும், இடியைப்போலக் கர்ஜிக்கின்றவர்களும், சூலத்தையாவது மழுவாயுதத்தையாவது வாளாயுதத்தையாவது அம்புவில்லையுமாவது வேலாயுதத்தையாவது தண்டாயுதத்தையாவது சக்கராயுதத்தையாவது கையில் கொள்ளுவார்களேயானால் யமனையும், விஷ்ணுவையும், சிவனையும், சுப்பிரமணியனையும், ஜெயிக்கும்படி யானவர்களுமா யிருந்தார்கள். அவர்களில் ஒருவனோ இந்த லோகமுழுவதையும் வெற்றிகொள்ளுவார்கள். இரண்டுபேர்சேர்ந்தார்களேயானால் இந்தப்பதினாலு லோகங்களையும் மடங்கடித்து விடுவார்கள். சுற்றித்திரிவார்களேயானால் பூமியும் அவர்களுடனே சுழலும். வருவார்களேயானால் சப்தசமுத்திரங்களும் பின்தொடர்ந்து வரும். மேகங்களெத்தனையோ அத்தனை அத்தனைபதாதிகளா யிருந்தார்கள். பிரம்மாண்டத்துக்குள் விசாலித்திருக்கின்ற மலைகளெத்தனையோ அத்தனை தேர்களுண்டா யிருந்ததுகள். அளவில்லாத குதிரைகளிருந்ததுகள். குதிரைகளெத்தனையோ அத்தனை யானைகளிருந்ததுகள். இப்படிப்பட்ட யானை, தேர், குதிரை, ஆகிய இவைகளைப்பார்க்கும்போது அவைகளுடைய சேணங்களும், மேற்றவிசுகளும், கொடி, குடை, சிகரமுதலிய உறுப்புகளும், பொன்னும், ரத்தினங்களும், அல்லாமல் வேறொன்றினால் அலங்கரிக்கப் பட்டவைகள் ஒன்றுவது கிடையாது. இந்தப் பிரகாரமாக இந்த மூலபலமானது ஆரவாரித்துக் கொண்டு போகும்போது, மேலெழும்பின பவளப்பொடிபோன்ற தூளிகள் நிறைந்து தூர்த்துவிட்டபடியினாலே சமுத்திரமானது நீலநிறமாறிச் செந்நிறமடைந்து யானைமதநீர் வெள்ளங்கலந்தபடியினாலே தனக்குச்சுபாவமாயிருந்த உப்பும் நீங்கிப்போய் விட்டது. எல்லாப்பொருள்களும் அடங்கியிருப்பதால் அந்தச்சேனை மலைகளையும், சமுத்திரங்களையும், மற்றபொருள்களையும், பிரஹ்ம ருத்திரேந்திராதி தேவநிலயங்களையும், மற்ற லோகங்கள் எல்லாவற்றையும், அழிந்துபோகாதபடி உட்கொண்டு மறுபடியும் உமிழ்ந்த தனிப்பொருளாகிய ஸ்ரீயப்பதியினுடைய திருவாய்மலருக்கு ஒப்பாயிருந்தது. அந்தச்சேனை புறப்பட்ட லங்காப்பட்டணத்தின் கோட்டைவாசலின் வழியாக வருகின்ற, மதஜலம் கபோல நிரதயப்பட்டிகாகப் பாய்கின்ற யானைகள், தேர்கள், குதிரைகள், நிறைந்திருக்கின்ற சேனா சமுத்திரத்தைச் சுமக்கக் கூடாமையால் ஆயிரம் சிரங்களையுடைய ஆதிசேஷனும் தாடித்துப்போனான். திருப்பாற்கடலிற் பிறந்த ஆலகால விஷத்தைக்கண்டு சகிக்கமாட்டாமல் ஓட்டம்பிடித்த தேவர்களைப்போல வானரக்கூட்டங்கள் நிற்கிறதற்கு மிடங்கிடைக்க மாட்டாதபடியினாலே ஓடிப்போய் வடதிசையைச் சேர்ந்து நின்றுவிட்டன. சக்கரவாள கிரியினால் சூழப்பட் டிருக்கின்ற சப்தசமுத்திரங்களும் வலைகளுக்கொப்பாகவும், மூலபலராக்ஷசர்களெல்லாம் மான்கூட்டங்களாகவும், யமனும், விதியும், அவர்களுடையபாபங்களும், அவர்களைப் பிடிக்கும் வேடர்களாக லங்காபட்டணத்தி லிருந்து தொடர்ந்துவர, ரணக்களம் வந்துசேர்ந்தார்கள். வீரர்கள் கர்ஜ்ஜித்த ஓசையும், தேர்வண்டில்களினுடைய அதிர்ச்சியும், மேகத்தையொத்த யானைகளின் முழக்கமும், குதிரைகளினுடைய கனைப்பும், அஷ்ட தசவாத்தியங்களினுடைய சப்தமும், ஒன்றாகச்சேர்ந்து அண்டமுங்கிழிபட ஒலித்தன. அந்தமூலபல சேனா சமுத்திரத்துக்கு ஆயுதங்களெல்லாம் மீன்களும், யானைகள் முதலைகளுமாய்விளங்கின. குதிரைகள் அலைகளாகவும், பேரிகையோசைமுழக்கமாகவும், கோபக்கண்களையுடைய ராக்ஷச சேனைகள் அதிகொடூரமான சுறுமச்சியமாகவும், இருந்ததுகள். கறுத்தகுடங்களைப்போலஉருண்டுதிரண்ட தோள்களையுடைய ராக்ஷசசேனைகள்பொற்றலமாகிய சுவர்க்கலோகத்தில் மிதித்து நடக்கின்ற படியினாலேயும், அந்தத்தரையானது யானை மதம்பாய்ந்து ஓடுகிறபடியினாலேயும் சேறாகியும், குழைசேறாகியும், கெட்டுப் போய்விட்டது. அப்படி ராக்ஷச சேனைகளெல்லாம் ஆகாசத்திற் சென்றபடியினாலே சிரத்தின்மேற் கட்டி யிருக்கின்ற அந்த லங்காபட்டணமானது அழிந்து போகாமலிருந்தது. அப்போது தேவர்கள் பூமியைப் பார்த்தார்கள். சமுத்திரத்தைப் பார்த்தார்கள் விசாலமாயிருக்கின்ற ஆகாசமுகட்டைப்பார்த்தார்கள். எட்டுத்திக்குகளையும், பார்த்தார்கள். எங்கும்வெளியென்பது கொஞ்சமாவது இல்லாதிருக்கக் கண்டார்கள். எங்கும் நிறைந்திருக்கின்ற வெற்றிக்கொடிகளையும்பார்த்தார்கள். எல்லாரும் நடுங்கிப்பயந்து நாம்நீங்கலாக இந்தலோகத்திலிருக்கின்ற சராசரப் பொருள்களெல்லாம் ராக்ஷசரூபத்தைப்பெற்று அளவில்லாத ஆயுதங்களையெ

டுத்துக்கொண்டு வந்ததுகளோ ! அப்படிக் இல்லாவிட்டால், அலைகளோடுங்கூடிய சப்த சமுத்திரங்களும், பாபத்தினாலே இந்தத் துஷ்ட ராக்ஷச ரூபங்கொண்டதுகளோ ! என்று சொல்லி, காளகண்டனாகிய சங்கர மூர்த்தியைப்போய்ச்சேர்ந்து ஸ்வாமீ! சம்ஹார கர்த்தாவே ? நாங்களொளித்துப் பிழைக்கும்படியான இடம் அகப்படவில்லையே ? எங்களையெல்லா மிந்தராக்ஷசர்கள் கொன்று தின்றுவிடுவார்களே ? இவர்களுடைய பெருமையை யாரளவிட்டுச் சொல்லப் போகிறார்கள். எங்கள் பலமெல்லாம் இன்றையுடனே முடிந்துபோய் விட்டதென்று ஓடிப்போகிறதற்கு எத்தனப்பட்டு ஐயா, இவர்களி லொவ்வொருவனைக் கொல்லுகிறதற்கு ஆயிரம் ஸ்ரீராமர்கள் வந்து நாற்பது வருஷம் யுத்தஞ் செய்தாலும் முடியாது. அப்படியாவது கொல்லலாமென்றால், நின்று யுத்தஞ் செய்கிறதற்காவது ஒரு வெளியிடம் வேண்டாமா, அதுவு மல்லாமல் முதலாவது நம்முடைய உயிரிருந்தல்லவா, சண்டைசெய்யலாம். எல்லாரையுங்கொன்று விடுவார்களே ! அப்புறம் யாரிவர்களோடு எதிர்த்து யுத்தஞ் செய்யப் போகிறார்க ளென்று வணங்கினார்கள். அப்போதுவிஷகண்டராகியருத்திரமூர்த்தியானவர் அவர்களைப் பார்த்து நீங்களொன்றுக்கும் பயப்படவேண்டாம்இந்தவஞ்சகர்களானராக்ஷசர்களையெல்லாம் ஒருமிக்கச் சர்வசம்ஹாரமூர்த்தியாகிய ஸ்ரீராமபிரான் சம்ஹரித்துவிடுவார். இவர்களையெல்லாம் நாசம்பண்ணுகிற விதியே கொண்டுவந்துவிட்டதென் றருளிச்செய்தார். இப்படியிருக்கும்போதுபுற்றிலிருந்து பெரும்பாம்புகள்புறப்பட்டபோது எங்கள்வலிஅழிந்தோமென்று வேகங்கொண்டு ஓட்டம்பிடிக்கின்ற எலிகளைப்போல வானரசேனாசமுத்திரமானது ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடைய வீரப்பிரதாபத்தையும், ஆலோசித்துப்பாராமல்நடுநடுங்கிப்பயந்து ஓட்டம்பிடித்ததுகள். அப்படி ஓடும்போது சேதுவழியாகச் சிலவானரங்கள் ஓட்டம் பிடித்ததுகள். சமுத்திரத்தைத் தாண்டிப்போகிறதற்குப் புணைகளைத்தேடித்திரிந்ததுகள். சிலவானரங்கள் சமுத்திரத்தில் நீந்திப்போனதுகள். சிலவானரங்கள் இரண்டுஇரண்டாக நீந்திக்கொண்டுபோய் நடுச்சமுத்திரத்தில் முழுகிப்போய்விட்டதுகள். சிலவானரங்கள் எட்டா மரக்கிளைகளில்போ யேறிக்கொண்டதுகள். அநேக வானரங்கள் மலைக்குகைகளில் புகுந்து கொண்டதுகள். இந்தச் சேதுக்கட்டடந்தான் நமக்கு உயிரைக்கொடுத்தது. அந்தராக்ஷசர்கள் இந்த அணையின்வழியாக நம்மைத் தொடர்ந்துவராமல் இதை உடைத்துவிட்டுப் போய்விடலாம். நாமெங்கேபோனாலும் அங்கே ஆகாசத்தில் மார்க்கமாய் வந்துவிடுவார்களே யென்ற பயத்தினாலே பிரஹ்மா சிருஷ்டித்த அஷ்டதிக்குகளிலுஞ் சிதறி யோட்டம் பிடித்தார்கள். சுக்கிரீவமஹாராஜரும், ஆஞ்சநேயரும், அங்கதகுமாரரும், ஸ்ரீராமலக்ஷ்மணர்களை விட்டுப் பிரியமாட்டாதவர்களாகி நின்றார்கள். மற்றவர்களெல்லாம் ஓடிக் கடலுக்கக்கரைக்குப்போய்விட்டார்கள். ஸ்ரீராமபிரான் மூலபலத்தைக் கடாக்ஷித்து ஹே விபீஷணா ? இந்தப் படை இத்தனைநாள் எங்கே யிருந்ததென்று கேட்க,விபீஷணாழ்வான் ஸ்ரீராமபிரானுடைய திருவடித்தாமரைகளில் வணங்கி ஸ்வாமி! எல்லாத் திக்கு களிலும், சப்த "தீவுகளிலும் இருந்தவர்களைத் துஷ்ட ராவணதூதவர்கள்போய் அழைத்தபடியினாலே இந்தச் சேனைக்கடல் வந்துசேர்ந்தது. . கீழேழுலகத்திலிருந்து மேலேறி ஊழிகாலத்துச் சமுத்திரம்போல முன்னாலேவருகின்ற சேனை ராவணனுக்கு மூலமாக இருந்த சேனைகளாகும். இதுதவிர இனி ராக்ஷசர்களென்கின்ற பெயருள்ள ஒருபூண்டுங்கிடையாது, இப்போது இந்த அண்டத்திலுள்ள ராக்ஷசர்களெல்லாம் ஒருவரொழியாமல் தங்கள் பாவங்கள் பிடரியைப்பிடித்துத் தள்ள மாண்டுபோகும்படியான விதியைப் பின்பற்றின புத்தியினாலே தூண்டப்பட்டு வருகின்றார்கள் என்று விண்ணப்பம் பண்ணினார். அதைக்கேட்ட பெரியபெருமாள் சிரித்துக் கோபங்கொண்டு, இவர்கள் படும்பாட்டை நான்காட்டுகின்றேன் சற்றேபார், ஓடிப்போன நம்முடைய வானரசேனைகளைப்பயந்தீர்த்துவிட்டு அழைத்துக்கொண்டுவரக் கடவாய் என்று நியமிக்க அங்கதகுமாரன் வானரங்களை அழைத்துக்கொண்டுவருகிறதற்கு வேகமாய் ஓடி வானரச்சேனையைக் கிட்டி, ஓ வானரர்களே! நான் சொல்லுகின்ற வார்த்தையைச் சற்றே நின்று கேட்டுவிட்டுப் போங்களென்று நல்லவார்த்தை சொல்லியும் செவிகொடாமல் நாங்களொன்றுங்கேட்கமாட்டோம் என்று சொல்லிக்கொண்டே ஓடினார்கள். படைத்தலைவர்கள் மாத்திரம் நின்றார்கள். அப்படித்திரும்பிச் சமுத்திரத்தின் வடகரையிலுள்ள ஒருமலையின்மீது நின்றவர்களைப்பார்த்து நீங்களென்னத்துக்கு ஓடிவந்து விட்டீர்கள் என்று

கேட்க, அவர்கள் ஐயா, உபராஜ்யாதிபதியே! நீ அந்த ராக்ஷசப்பெருஞ்சேனைகள் கூட்டங்கூடிக்கொண்டு வருகிறதைக் காணவில்லையா? நாமெல்லாரும் இறந்துபோனபிறகு என்ன காரியஞ் செய்யப்போகிறோம் உயிரிருந்தாலும் உப்புமாறிப் பிழைக்கலாம் இந்திரஜித்து என்னுமொருவன்செய்த யுத்தத்தில்நாம்பட்டபாட்டை நீ மறந்துபோய்விட்டாயோ? அந்த இந்திரஜித்துங்கூட இவர்களிலொருவனுக்குச் சமமாவானோ? இவர்களொருவராலுஞ் சாகமாட்டார்கள். இவர்களிந்தனைபேர்களை இரண்டுபேர் வில்லைப் பிடித்துக்கொண்டு எப்படித்தடுத்து யுத்தஞ்செய்வார்கள். திரிபுரசம்ஹாரியான ருத்திரமூர்த்தி முதலான தேவர்கள் வரங்களைக் கொடுத்து எல்லாரையும் ரக்ஷிக்கிறவர்களா யிருந்தாலும், இவர்களோடு எதிர்த்து நிற்கமாட்டாதவர்களாய் ஒளித்துக்கொண்டிருக்கிறார்களிப்படியிருக்க, இந்த ராமலக்ஷ்மணர்களாகிய மனிதர்களா! குரங்குகளைக்கொண்டு இந்த ராக்ஷசர்களை ஜெயிக்கப்போகிறார்கள். ருத்திரமூர்த்தியும், சக்கரதாருகிய விஷ்ணுவும், பிரஹ்மாவும், இந்திரனும், ஒன்றுசேர்ந்துகொண்டு ஆயிரகோடி ஊழிபரியந்தம் இவர்களுடன் சண்டைசெய்து இவர்களிலொருவனையாவது கொல்வார்களேயானாலும், வெற்றியாகும். அப்பா, இந்த எழுபது வெள்ள வானரசேனைகளும், ஒரு ராக்ஷசன் நின்று உயிர்வதைக்குத்தான் போதுமோ? நாங்களென்ன தேவர்களைக்காட்டிலும் வல்லவர்களோ? அற்பஜெந்துக்கள்தானே! நீ நன்றாயாலோசித்துப்பார். இந்த லோகங்களையெல்லாஞ்சிருஷ்டித்த பிரஹ்மாவின் ஆயுசுபரியந்தம் கிரமமாக நின்று இவர்களுக்குத் தொண்டுசெய்ய வேண்டி ஆயிரத்துக்கொன்றாக எங்களை அவர்களுக்கு உறையிட்டாலும், அதற்குக்கூட இந்த வானரங்கள் போதுமா? இவர்களுக்குத்தலைவனாக இருக்கின்ற ராவணனுக்குப் பத்துத்தலையும், இருபது கைகளுமுண்டு, அவனொருவனை ஜெயிக்காமலிருக்கிறோம். அப்படியிருக்க, இப்போது மற்றவர்களுக்கு ஆயிரந்தலைகளும், இரண்டாயிரங்கைகளு மிருக்கின்றன. ஐயா, சமுத்திரமணலை எண்ணினாலு மெண்ணலாம், இவர்களை எண்ணத்தொலையாதே! கும்பகர்ணனென்கின்ற ஒருவனுடையஅம்பைச்சகிக்கவும் சக்தியில்லாமலிருக்க, அவன்செய்த கொடுமைதான், நாங்கள்பார்த்திருக்கிறோமே தேவர்களையல்லாமல் அவனுடையவர்களும் உண்டோ? அவர்களே பயப்படுகிறார்களே! தம்பி நீ சிறுபிள்ளை யாகையா லிளங்கன்று பயமறியா தென்பதுபோல ஒன்றியாய் எங்களைத் தேடிக்கொண்டு வந்தாய். அஞ்சநேயருடைய வல்லமையும், சுக்கிரீவருடைய பலமும், ராமலக்ஷ்மணர்களுடைய வில்வீரத் தன்மையும், தங்களுயிரைத் தாங்கிக்கொள்ளவு முடியமாட்டாது. எங்களுக்கென்ன உண்கிறதற்குக் காட்டில் கனிகளும் காய்களு மிருக்கின்றதுகள். இருக்கிறதற்கு மலைக்குகைகளா யிருக்கின்றதுகள். இந்தலோகத்தை மனிதர்களாண்டாலென்ன! ராக்ஷசர்களாண்டாலென்ன! ஒருவருயிருடனேயிருந்தால்தானே புகழையும், ஐஸ்வரியத்தையும், அடையப்போகிறார்கள். அதுபோல எங்களாண்டவனே? நாங்களிருந்தாலல்லவா எங்கள் பிள்ளைகளும், பெண்டுகளும், பிழைப்பார்கள். நீஎங்களைஎங்கேயாவதுபோய்ப் பிழைத்துப்போங்களென்று சொல்லவேண்டிய நீ எங்களைச்சாகும்படியாகஅழைக்கிறாயேஅது தர்மமாவென்றுகெஞ்சினார்கள். அப்புறம்சாம்புவந்தனைப்பார்த்து ஐயா பெரியோனே! சேஷசாயியானஸ்ரீயப்பதியே! இந்தஸ்ரீராமபிரானென்று மூன்றுலோகங்களுக்குச்சந்தோஷமுண்டாகச்சொல்லவில்லையா, அம்பற்புஷ்பத்துக்குப்பகைவனான சூரியனிடத்தில் ஐந்திர வியாகரணங்கற்ற அஞ்சநேயருக் கொப்பான புத்திமானான நீர்தானே எம்மைப்போலொத்தவர்கள் தப்பிதஞ் செய்தால் அவர்களுக்குத்தகுந்த புத்திசொல்லித் தேற்றுவிக்கின்றவரல்லவா அப்படிப்பட்ட நீரோ பயந்தவர்களைப்போல உயிரைக்காப்பாற்றிக்கொண்டீரோ, இனிஎன்னகீர்த்தி? உம்முடைய விவேகத்தினாலே பிரயோசனமென்ன? வீரவான்களாயிருக்கின்றபேர்கள் மரணமடைந்தாலும் தங்கள்வீரங்குறைவார்களோ! நாம்பயந்தபோதே பழியையும் பூண்டுகொண்டோம், இனிஅம்பினாலே ரணக்களத்திலே பிராணனை விடுகிறதேயல்லாமல் பிராணனுடனேயும் இருக்கலாகுமா, மிகுந்தபயமடைந்து விஷத்துக்குச்சமமான தம்மை அமுதத்திற் கொப்பானவர்களென்று திருவுளங்கொண்ட ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தனிமையாக விடுகிறதை விடச் சாகிறதேநல்லதல்லவா! ஐயா, சாம்பவனே, தானவர்கள் வானவர்கள் முதலானவர்களாலே கடையமுடியாத பாற்கடலைக் கடைந்து அமுதங் கொடுத்த வாலியானவன் ஸ்ரீராமபாணமொன்றினாலே மாண்டுபோனதை மறந்துபோன காரணமென்ன, அவரு

டைய பாணத்திறுமேல் சமுத்திராஜன்பட்டபாட்டை நீர் பார்க்கவில்லையா! இவர்களெத்தனைராக்ஷசர்களாயிருந்தபோதிலும், அவர்களிடத்தில் தர்மமில்லையல்லவா! ஆகையால் தர்மத்தை அத்தனைப்பாவமும் ஜெயம்பெறுமென்று நீர் நிச்சயித்திருக்கின்றீரோ, நீரும் பயித்தியக்காரர்களைப்போல் இந்த அவிவேகிகளான வானரங்களுடனே ஓடிவந்துவிட்டது உம்முடையவிவேகத்துக்குத்தகுதியல்லவே! என்றுசொல்லக்கேட்ட சாம்பவர் சற்றுநேரம் வெட்கப்பட்டு வருத்தமுற்றுலோசித்து அங்கதகுமாரனைப் பார்த்து ஐயா, எங்கள் யுவராஜ்யாதிபதியே, இந்த ராக்ஷசர்கள் வரும்போது இவர்களைப் பார்க்கவாவது, இவர்களுக்கெதிரே நிற்கவாவது, அந்த விஷிகண்டனுகிய ருத்திரமூர்த்தியினுல்தானுகுமா, புஷ்பங்களை உண்டு வாழ்ந்துகொண்டிருக்கின்ற கூன்குரங்குகளிவர்களைக்கண்டும் இவர்களுக்கு முன்னிற்குமோ, இவர்கள்மேல் குற்றஞ்சொல்லலாகுமா, தேவர்களும், அசுரர்களும், ஒருவரோடொருவ ரெதிர்த்து முன்னுளையில் சண்டைசெய்தபோது, அவர்களில் யார் என் கண்ணுக்ககப்படாம லிருந்தார்கள். விசாலமான இந்த மூன்று லோகத்திலுள்ள மஹா வல்லவர்களுக்குள்ளும், இவர்களுக்குச் சமானமான கொலை பாதகர்கள் யாரிருக்கின்றுர்கள். இவர்களோடு யமனுகட்டும் பகைக்க மாட்டுவானு? முன்னிருந்த மாலியென்பவனையும், மாலியவானென்பவனையும், பார்த்திருக்கின்றேன். காலநேமியென்பவனைப் பார்த்தேன். இரணியனைப் பார்த்தேன். மதுவென்பவனும், அவன் தம்பி கைடவனும், சமுத்திரத்தைச் சின்னபின்னப்படக் கலக்கினதையும் பார்த்தேன். அவர்களுக்கெல்லாம் இவர்களுக்கிருக்கின்ற வல்லமையில்லையே, இவர்கள் மிகுந்த பலவந்தர்கள். அதிகவரம்பெற்றவர்கள். மாயத்தில் வல்லமை யுள்ளவர்கள். சமுத்திர மணலினு மதிகப் பெருந்தொகை யானவர்கள். இவர்களுடையமனமோ பாவத்தினுமிகுந்தகொடியது. ஆயுதப்பயிற்சியில் கைதேர்ந்தவர்கள். இப்படியிருந்தால் இவர்களைக் கண்டவர்கள் யார்தான்தோல்வியடையாதவர்கள். தேவர்களே இவர்களைக்கண்டு ஓட்டம் பிடித்தார்களே, எப்படியிருந்த போதிலும், ஐயா, சண்டையில் பயந்து முதுகுகாட்டி யோடினுல் மறுமையில் அவசியமாய்நரகமடைவார்கள். நாங்கள் திரும்பிவருகிறோம், ஆனுல் மேகம் போலும் திருமேனியையுடைய ஸ்ரீராமபிரான் சந்நிதியில் எப்படி வெட்கமில்லாமல் முகங்காட்டி நிற்போம், என்ற சாம்புவர் சொல்லக்கேட்ட அங்கதகுமாரன் ஐயா, பகைவர்மேலெதிர்ப் போகிறதும், அவர்களைக் கண்டு சமயம்வந்தால் ஓடிப்போகிறதும், மறுபடியும் எதிர்த்துவந்தவர்களை அடித்துக் கொல்லுகிறதும், வீரவான்களுக் கெப்போதும் ஏற்றகாரியமே, அது நிற்கட்டும். நீர் மிகுந்த புத்திமானுகையால், அடியேன்சொல்லுகிறதைஆலோசித்துக்கேட்கவேண்டும். நீரொன்றுக்கும் பயப்படவேண்டாம். நாமெல்லாம் ஒருமிக்கக் கூட்டமாகப் போய்நின்றுலும், நம்மாலொன்றுஞ் செய்ய முடியாது. சக்கரவாத்திரித் திருக்குமாரரோ? அவர்களோடெதிர்த்து ஜெயம்பெறுவாரேயானுல், நாம்பிழைக்கின்றோம். இல்லாவிட்டால் அவருடனே நாமுமிறந்து போகிறதே நமக்குக் கீர்த்தி. நம்முடையகூட்டமான சேனையெல்லாம் போர்க்களத்தைவிட்டு நீங்கி யிருப்பானேன். நம்மாலே நாமே என்பழியைச்சம்பாதித்துக் கொள்ள வேண்டும் நாம் போகலாம் வாருங்களென்று அங்கத குமாரனும், சாம்பவர்முதலாகிய வானரசேனைகளும், திரும்பிவந்து சேர்ந்தார்கள்.

அப்போது பெரியபெருமாள் மூலபலம் வருகிறதைப் பார்த்து, இளையபெருமாளுக்கு நியமிக்கின்றுர். தம்பீ லக்ஷ்மணு! ராக்ஷசர்கள் தானுகட்டும், அசுரர்கள்தானுகட்டும், எத்தனைபேர்வந்தபோதிலும், நான் வில்லெடுத்தபோது, எரிகிற அக்கினியில் வீழ்ந்தபஞ்சைப்போல நாசமாவார்களேயல்லாமல், நமக்கு இக்கட்டுவரமாட்டாதென்பதை நீ அறிந்திருக்கின்றுய் அல்லவா? நம்முடைய வானர சேனைகள் தங்களை ரக்ஷிப்பவர்களொருவரு மில்லாமையால், பயந்து ஓடிப் போய்த் தங்கள் உறைவிடம் சேர்ந்து விட்டதுகள். ஆனதால், நான்இந்தராக்ஷசச்சேனைகளை யெல்லாங்கொன்று நீங்குகிற பரியந்தம் ராக்ஷசர்கள்யாராவதுவந்து வானரங்களைவருத்தப்படுத்த ஒட்டாமல் நீ அவர்களைப் பாதுகாத்துக்கொண்டிரு. இந்தப்பக்கத்தி லிந்தச்சேனைகளை ஏவிவிட்டு அங்கேயிருக்கின்ற துஷ்டராவணன் வேறே தந்திரம் பண்ணிக்கொண்டு அந்தப்பக்கமாய் வருவானுனுல் வானரங்களை யெல்லாம் கொன்றுவிடுவான் அவனை மிகுந்தகோபமுள்ள வில்வீரனுகிய உன்னையல்லாமல் யார் தடுப்பார்கள். ஆனதால் ஆஞ்சநேயனும், நீயும், சுக்கிரீவராஜனும், சீக்கிரமாக வானரசேனையைகாத்துக்

கொண்டிருக்கும்படியாகப் போங்கள். நீங்கள் என்னைத் தனியே விட்டுப்போகக்கூடாதென்று நினைப்பீர்களே யானால் நாம்தோற்றுப்போய்விடுவோம் என்று சொல்லக்கேட்ட இளையபெருமாள் ஸ்வாமிக்குத் தண்டன் சமர்ப்பித்து ஆண்டவனே! தேவரீர் திருவுளப்படியே நடக்கிறேம் அப்படிக்கில்லாவிட்டால் இந்தச்சேனைகளுக்கு முன்பாக அடியேங்களாலே தேவரீருக்கு என்ன ஒத்தாசை யுண்டாகப்போகிறது. தேவரீரைப்போல அடியேங்களுஞ் சிரசிற் கைகூப்பிக்கொண்டு தேவரீருடைய வில்வீரத்தைப் பக்கத்திலிருந்து சேவித்துக்கொண் டிருக்கின்றேமென்று சொல்லிவிட்டு, இளையபெருமாள் புறப்பட்டபோது ஆஞ்சநேயர் ஸ்வாமியைநோக்கி எங்களாண்டவனே அடியேனை அநுக்ரஹங்கொன்றுவிட்டுவிடாமல் அடியேன் தோளின்மீதேறி யுத்தத்திற்கெழுந்தருளுவீராகில் நல்லதென்று அடியேன்நினைக்கின்றேன். அப்படிக்கில்லாவிட்டால் நாய்போன்ற அடியேன் தேவரீர் பின்னின்று தேவரீருக்குவேண்டிய அடிமைத்தொழிலில் பிழையில்லாமல் நடத்துகின்றேன் என்றார். அப்போது சக்கிரவர்த்தித் திருக்குமாரர் ஆஞ்சநேயனைக் கடாக்ஷித்து ஐயா, அநுமானே! உனக்கு முடியாத காரியமும் இருக்கின்றதோ அதற்காக அல்ல நான்சொன்னது. ராவணன் அந்தப்பக்கத்தில்வந்து இளையவனோடு எதிர்ப்பானேயானால் உன்னுதவியில்லாவிட்டால் அவன் செய்கிற யுத்தத்தில்வெற்றியுண்டாகுமா! அதுவுமல்லாமல் சேனையும் அழிந்துபோய்விடும், அல்லவா? மிகுந்த அழகுள்ள தன்மையினையுடைய இந்திரஜித்தென்பவனுடைய யுத்தத்தில் லக்ஷ்மணன் எதிர்த்து நிற்கும்போது வேறே யாரைக்கொண்டு அவனை வெற்றிபெற்றான். உன்னாலே அல்லவா, வீரர்களுக்குள்ளே மஹா வீரனே! உன்னை ஒருக்காலும் நான் பிரியமாட்டேன். நீயே இவர்களோடு ஜெயம்பெறக் கடவாயென்று நியமிப்பேன். ஆனால் நீ இந்த வானரசேனையைக் காத்து,என்னுடனே அயோத்தியின் சுகத்தையெல்லாம் விட்டுவந்த சிம்ஹத்தையொத்த இளையவனைக்காத்து, வானராதிபதியாகிய சுக்கிரீவனைக்காத்து, தேவலோகத்தாரையும், பூலோகத்தாரையும், வேதமார்க்கத்தையும்விருத்திசெய்யக்கடவாயென்றார்.பிறகு வாயுபுத்திரர் மற்றொன்றுஞ்சொல்லாமல் இளையபெருமாளோடு கூடப்போனார். அப்புறம் பெருமாள் விபீஷணனைப் பார்த்து அப்பா! நீயும் என் தம்பிக்குப்பின்போய் துஷ்டர்களாகிய ராக்ஷசர்கள்செய்யும்மாயத்தைத் தெரிந்து அவைகளைக் கெடுத்து நம்முடைய வானரசேனைகளைக் காக்காமற் போனாயேயானால், நமக்கு வெகு கெடுதியுண்டாகுமென்றார்.அவரும்அப்படியே நல்லதுஎன்று புறப்பட்டார். சுக்கிரீவமஹாராஜரும் தேவரீருடைய ஆஜ்ஞையின்படியே ஆகட்டும்பாக்கியமென்றுஇளையபெருமாள்பின்னேபோனார். மற்ற வானரவீரர்களெல்லாரும் அதுவே நல்லகாரியமென்று வானர சேனையைக் காத்துக்கொண்டு நின்றார்கள்.எல்லாரும் எம்பெருமான் திருவுள்ளப்படி போனபின்பு ஸ்ரீராம மூர்த்தியானவர் தெய்வத்தன்மை பொருந்திய கோதண்டத்தை வளைத்துக்கையில்பிடித்து நாமணிகட்டி மேருமலைக்கொப்பான திருமார்பில் கவசஞ்சாத்தி வேதவாக்கியம்போலக் குறைவில்லாத அக்ஷயத்தூணியையுந் தோளில் வரிந்து கட்டினார். நூறு யோசனை வட்டமாக எள்ளிட இடமில்லாமல் நிறைந்திருக்கின்ற மூலபல சேனையின் முன்னணிவந்து ஸ்வாமியைச் சுற்றிக்கொண்டு பிரயோகித்த ஆயுதங்க ளொன்றொன்று தாக்குண்டு நெருங்குவதைக்கண்டு தேவர்களுடைய தேஹமெல்லாம் நடுங்கிப்போய் விட்டது. சேனுபராகம் எமகூட பர்வதமெல்லாமூடிவிட்டது. அப்போது தேவர்கள், ஸ்ரீராமனைநோக்கி ஹே ஸ்ரீயப்பதியே! அடியேங்களுக்கு ரக்ஷகமாக எழுந்தருளியிருக்கின்ற கவசமே, சமுத்திரத்துக் கொப்பான, ஒருவராலும் அளவிட வொண்ணாத ஸ்வரூபனே? தர்மத்தில்பெருக்கே ? வேத பாராயணர்களுடைய வல்லமையே, இந்தச்சேனைகளின் மேலெதிர்த்துப் போகிறதற்குத் தேவரீரல்லாமல் வேறொருவரால் முடியுமோ, தேவரீருடைய திருவுளப்படியே செய்து முடித்தருளக்கடவீரென்று ஸ்தோத்திரம் பண்ணினார்கள். மஹாரிஷிகள் முதலான பரமவைதீகதர்மமார்க்கத்தை நிறைவேற்றுகின்றவர்கள் பெருமானுடைய தனிமையையும், ராக்ஷசசேனையின்பெருமையையும்,பார்த்துச்சஹிியாதவர்களாய்க் கண்களில் கண்ணீர் பெருக்கெடுக்கத் தக்கதாக அழுதுமனம்பதைத்துப் பாவிகளாகிய எல்லாருந் தோற்றுப்போகக் கடவர்கள். ஸ்ரீ ராமபிரானே, ஜெயம்பெறக் கடவீரென்று மங்களாசாசனம் பண்ணினார்கள். மூலபல சேனையானது, ஸ்ரீராமமூர்த்தியைப் பார்த்து - சபாசு- தனக்கு உதவியாயிருந்தசேனைகளெல்லாம், ஓடிப்போய் ஒரு

வருந் துணையில்லாமல் தனியாய்நின்றும்தம் முடைய பெருஞ்சேனையைக்கண்டு கொஞ் சமும் பயப்படாமல் பாணங்களைப் பொறு த்துக்கொண்டு விரதத்தன்மை குறையாமல் பிரயோகித்துக்கொண்டிருக்கின்றனே இது வே, வெற்றிகொள்வதிலும், சிரேஷ்டமல்ல வா ? மாலியவானெல்லாம் அறிந்தவனுன படியினுலே பொய் சொல்லமாட்டான் அவன் மெய்யேசொன்னுன். திரிபுரசம்ஹா ரியான ருத்திரமூர்த்திக்கும், ஒருதேரிருந் தது. தேவர்களெல்லாஞ் சேனையாகவந்தார் கள். ஆச்சரியபூதரான விஷ்ணுமூர்த்தியா னவர் நம்மைக்கருவறுத்தநாளையில் கருடவா கனத்தின்மீது அநேகதேவகணங்களுடனே வந்தெதிர்த்தார். இவன் தனித்து கால்நடை யாய்வந்து பயப்பட்டொளியாமல் நிற்கின் ருனே, நாம் ரத கஜ துரகம் சிம்ஹம் யாளி முதலானவைகளுடனே மேருமலைக்குச் சம மான தேஹத்தையுடையவர்களாய்ச் சப்த சமுத்திரம்போல வரவும், வாருங்கள் வாருங் கள் என்றழைக்கின்ற இந்தமனிதனுக்கு இந் தலோகத்தில் ஓடிப்போசப் போக்கிடமெங் கே நம்மிடத்தில் நின்றும், எப்படி உயிர்தப் பிப்போகப்போகிறுன் என்று நெருங்கி ஆர் ப்பரித்து ஒருசிம்ஹத்தை அநேகயானைகள் போய் வளைந்ததுபோலச் சூழ்ந்துகொண்ட மாத்திரத்தில் நல்லதாகட்டு மென்று கீழே ழுலோகத்தையும், மேலேழுலோகத்தையும், ஒன்றுகத் திரட்டிச் செய்ததை ஒத்த தன் வெற்றிபொருந்திய வில்லை வேதநாயகரா கிய ஸ்ரீராமமூர்த்தியானவர் குணத்தொனி பண்ணினபோது, ராக்ஷசர்களுடைய மன திலுள்ள கோபமெல்லாம் அடங்கிப்போய் விட்டது. காவலாகவந்த யானைகளுக்கு மத முலர்ந்துபோய்விட்டது. நின்றவீரர்கள் வா யுலர்ந்து போனுர்கள். குதிரைக ளெல்லாம் காலோய்ந்துவிட்டதுகள். ராக்ஷசர்களுடை ய வல்லமைகளெல்லாம் தளர்ந்துவிட்டன. மூலபல சேனைகளே இப்படி யாகுமானுல் ஸ்வாமியின் வெற்றியைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? குதிரைகளும், சிம்ஹங்களும் பூட்டி யிருக்கின்ற சக்கரங்களுடன் கூடிய தேர்களை முறித்துவிட்டு ஓட்டம் பிடித்தது கள். துதிக்கையையுடைய யானைகள் தம்மீ திருந்த பாகர்களை வீசியெறிந்துவிட்டு ஓட் டம் பிடித்ததுகள். எங்குமிந்தப்பிரகாரமாக ஓரார்ப்பாட்டம்பிறந்தது. இப்படி நடந்தகா லத்தில் அந்தச் சேனைகளுக்கு இடந்துடித் த துர்நிமித்தத்தைக் கண்டு தேவர்களெல் லாம் குதித்துக் கூத்தாடினுர்கள். அப்போ து வேதப்பிரதிபாத்திய வஸ்துவான ஸ்ரீரா மமூர்த்தியானவர் ராக்ஷசர்கள்மீது மின்னல் களைப்போலொத்த பாணங்களைத் தொடுத் தார். பின்னும் யாளிகளின்மீதும் அவைகளை ச் செலுத்துகிறவர்களின்மீதும், யானைகளின் மேலும், யானைப்பாகர்கள்மேலும், குதிரை கள்பேரிலும், குதிரைப்பாகர்கள்மேரிலும், வீரவாளிகளுடைய தேர்களின்மீதிலும், வா ளின்மீதிலும், வில்லின்மீதிலும்,பூமியிலிருந் து எழும்பின தூளியின்மீதிலும், ஸ்ரீராமர் அம்புகளை அபரிமிதமாகப் பிரயோகித்தார். மலைகள்விழுந்ததுபோல யானைகள் விழுந்த துகள். அந்தயானைகள்விழுந்ததுபோல வீர ர்களுடைய தலைகள் விழுந்ததுகள். அந்தத் தலைகளைப்போலக் குதிரைகள் கால்முறிந்து விழுந்ததுகள்.குதிரைக்கால்கள் அறுந்துவிழு ந்ததுபோல வில்முறிந்துவிழுந்ததுகள். அந் த வில்லுகளைப்போல வெற்றிக்கொடிகள் மு றிந்துவிழுந்ததுகள். சந்திரர்க ளிற்று விழுந் ததுபோல ராக்ஷசர்களுடைய வக்கிரதந்தங் கள் அறுந்துவிழுந்ததுகள். நாலுபக்கங்களி லும்நாலுபக்கமும்காற்றுவீசும்போது ஆகா சத்திலுள்ள மேகக்கூட்டங்கள் கோடை கா லத்தில் வருஷிக்கிறதுபோல ஸ்ரீராமபாண ங்கள் பாய்கிறபடியினுலே யானைகளும், கு திரைகளும், வீரர்களும், தேர்களும், மாண் டுபோனுர்கள். அதனுல் நாலுபக்கங்களிலும் ரத்தவெள்ளங்கள் ஓடுகிறதைப்பார்த்து அவ ரவர்கள் தைரியமற்றுப்போனுர்கள். மேகங் களுந் தோற்றுப்போகும்படியாக ஸ்ரீராம பிரான் சொரிகிறபாணவருஷங்கள் பாய்வதி னுல் ராக்ஷசர்களுடைய விழித்த கண்களும், கைகளும், வில்லுகளும், வேல்களும், வாள்க ளும், ஆகாசத்தில் சப்திக்கின்ற வாய்களும், நடக்கின்ற கால்களும், தோள்களும், சின்ன பின்னப்பட்டுப் போய்விட்டதுகளேயல்லா மல் அவர்கள் பிடித்திருந்த உறைகழற்றிய ஆயுதங்கள் செய்த தொன்றையும் ஒருவரும் பார்க்க வில்லை. ராக்ஷசர்கள் தொடுத்துக் கொண்டிருந்த அம்புடனே வில்லுகள் துணி ந்து விழுகிறதற்கு முன்பாகத் தைரியங்கொ ண்டெடுத்த வாள்களுடனே தோள்கள் அற் றுவிழுந்ததுகள். உடனே வேகமாய்நடந்து கொண்டிருந்த கால்கள் கண்டங்கண்டங்களா ய்அறுந்ததுகள். இப்படியாகும்போது மிகு ந்தகோபங்கொண்டு அந்த வீரர்கள் என்ன செய்ய மாட்டுவார்கள். வரம்பெற்றதனுல் துணிவுகொண்டு யுத்தத்தில்செலுத்தின குதி

ளாகவில் ஒவ்வொன்றையும் ஸ்ரீராமபாணங்கள் நூறுநூறாய்ப் பாய்ந்து கொல்லுவதினுலே குளம்புகள் துணிபட்டுக் கண்கள் சிதறுண்டு, மேனிகள் அறுந்து மார்பு பிளந்து விழுந்தகுதிரைகளை அல்லாமல் தாவியோடச் சக்தியுள்ளவைகளோ! தேர்களென்று பேர்வைத்துக்கொண்டு வந்த பாபவஸ்துக்கள் செதுக்கலா மென்று நினைத்தால் முறிபடு மாண்டு குப்பைக்குப்பலா யுயர்ந்துகிடக்கின்ற பிணங்களினுலே அப்புறமிப்புறம் நகர்கிறதற்கும் முடியாமற்போச்சுது. அப்படி ஒருவேளை பேர்த்தேயானுல் அபரிமிதமான பாணங்கள்பாய்கிறபடியினுலே ஒன்றுநூறாய் உடைந்துசிதறிப்போனதேயல்லாமல்வேறென்னுஞ் செய்யமாட்டாமல்போய்விட்டதுகள். எட்டுத்திக்கிலுமிருந்த மிகுந்தசமர்த்தர்களான ராக்ஷசர்கள்எல்லாம்ஸ்வாமியைக்கிட்டினவர்கள் ஒருவரும் பிழைத்துப்போனவர்களில்லை வரிவரிசையாக எதிர்த்துவந்த யானைகள் ஸ்ரீராமபிரானுடைய அம்புகள் பாய்வதினுலே வெகுநேரத்திற்குமுன்பாக அம்புபட்டு ஓடிவந்து விழுவதுபோலச் சுருண்டுவிழுந்ததுகளேயல்லாமல் வேறென்னகாரியஞ் செய்யவல்லவைகளாகும். தடாகத்தில்மலர்ந்திருக்கிற தாமரைபுஷ்பத்துக்கொப்பான திருக்கண்களையுடைய சக்கரவர்த்தித் திருக்குமாரர் ஒருபாணத்தைப் பிரயோகிப்பாரே யானுல் அதுநூறுகோடிப்படைகளைச்சம்ஹரிக்கும். ஆகையால் இறந்தசேனைகளைக் கணக்கிடமுடியாமல்பிரஹ்மதேவனும் பிரமித்துப்போய்விட்டான். அந்த யுத்தகளத்தில் மாண்ட சிவாகளைப் பிடிக்கவந்த யமனுக்கும் அந்தப்பாணத்தின் வேக முண்டாகமாட்டவில்லை. ஸ்ரீரகுல வம்சோத்பவராகிய ஸ்ரீராமமூர்த்தி எய்தபாணங்கள் ராக்ஷசர்களுடைய கிரீடங்கள்தரித்த தலைகளைக் கோடிகோடியாக அறுத்துச்சிதறிவிட்டுப் பின்னும் மிகுந்த வேகங்கொண்டு கால்களில் தைத்து ஓடிவதினுலே அவர்கள் வாயிலுண்டாகிற அக்கினியானது கொடிகட்டியிருக்கிறதேரின்மேலும், யானைகளின்மேலும்பட்டுச் சோலை காட்டுத்தீபற்றி யெரிகிறதுபோல எரிந்தன. பாணங்கள்பட்டு முறிந்தவேலாயுதங்களும், வாளாயுதங்களும், முதலான ஆயுதங்கள் மேன்மேலும் மிகுந்தவேகங்கொண்டுபோய்ச் சமுத்திரத்தில்வீழ்ந்து ஜலத்தைக் கொண்டு [illegible] சமுத்திரத்தி லுள்ளமீன்களெல்லாம் மாண்டுமலையில் அழுந்திப்போய்விட்டதுகள். யுத்தத்திலதி ந்தமனென்னுந்திருநாமமுள்ள ஸ்ரீராமமூர்த்தியானவர் எவினதிவ்வியபாணங்கள் சத்துருக்களுடைய ஊரெரிந்ததுபோலவும், பட்டணமெரிந்ததுபோலவும், பிரகாசித்துக்கொண்டு ஓடுகிறபடியினுலே சமுத்திர ஜலம் வற்றினதுபோலவே ரணகளம் முழுவதும், நெருப்பாய்ப்பற்றிக்கொண்டுசத்துருக்களுடைய தேர்களெல்லாம் எரிந்ததுகள். சத்துருக்களுடைய தலைகளுமெரிந்து சிதறிப்போய் விட்டதுகள். பாணங்கள்பட்டு ராக்ஷசர்கள் பிடித்திருக்கின்ற வாள்களும், வேல்களும், அவர்களுடைய தோள்களும், அறுந்துமலைப்பாம்புகளைப்போலத்துடித்ததுகள். யானைகளின் மீதிருந்து யுத்தஞ்செய்ய மத்தளித்த வீரவான்களுடைய மடித்தவாய்களுடனே அவர்களுடைய தலைகள் இடிவிழுந்த மலைக்குலங்கள் போலப் பூமியில் விழுந்து விட்டதுகள். ஸ்ரீராமபாணம் ஒன்றுபாய்ந்தவுடனே ராக்ஷசர்களைதிவந்த கோரமானயாளிகள், சிம்ஹங்கள், ஓட்டம் பிடித்ததுகள். பிணங்களைத் தின்னுகிறதற்குப் பிசாசங்களும், நாய்களும், வந்துசேர்ந்ததுகள். கையில் பிடித்த வாளுடனே ராக்ஷசர்களுடைய நூறுகோடி தோள்கள் அறுந்து போனதுகள். ராக்ஷசர்கள் வைத்துக்கொண்டிருந்த வருணுஸ்திரம், பிருதிவியாஸ்திரம், நாகாஸ்திரம், கட்காஸ்திரம், முதலானவைக ளெல்லாம், சின்னபின்னப்பட்டுப் போய் விட்டதுகள். ஊழிகாலச் சமுத்திரம்போலப் பெருக்கெடுத்துவருகின்ற ராக்ஷசரத்த வெள்ளத்தினுள்ளே சக்கரம்பூட்டிய தேர்களழுந்திப்போய் தேர்வீரர்களும் முழுகிப்போய்விட்டார்கள். பாகர்களுடனே யானைகளழுந்திவிட்டதுகள். குதிரைகள் நீர்ச்சுழியிலகப்பட்டுமாண்டு போனதுகள். புழுதிபட்டுக்கிடந்த ரணகளமுழுவதுஞ் சேறுபட்டுப் போனது. ராமபாணத்தால் எதியுண்ட ராக்ஷசர்களுடைய தலைகள், மேலேயெழும்பினதினுலே தங்களைக்காயப்படுத்துமென்று தேவர்கள்அங்குமிங்குமாக ஓடி ஒதுங்கிப்போனார்கள். சூழ்ந்து விழுகின்ற ராக்ஷசத்தலைகள், சிலாவருஷம் போலமேலேபடுமென்று பூமியில் சஞ்சரிக்கின்றவர்களெல்லாம் வருத்தப் பட்டார்கள். லோகங்களை யெல்லாம் அழித்து விடுவதான யுகாந்த கால வருஷத்துக் கொப்பானதும், சிம்ஹத்துக்குச் சமமானதுமான ராமபாணங்கள், கண்ணைவிழித்துக்கொண்டு ஆகாசத்தில் மொய்த்துக்கொண்டிருந்த பாவிகளாகிய ராக்ஷசர்களுடைய தேஹமெல்லாம்,

கருக்கொண்ட மேகங்கள் விழுகிறது போலவும், ஆகாசத்தில் போகின்ற விமானங்கள் விழுகிறதுபோலவும், பூமியின்மீது விழுந்தனதுகள். இப்படியானபோது மூலபல ராக்ஷசர்களில் சிலர், தெய்வத்தன்மை பொருந்திய ஆயுதங்களைவிட்டார்கள். சிலர், எரிக்கும்படியான பாணங்களை வில்லிற்பூட்டி எய்தார்கள். சிலர், ஆயுதங்களைச் சுழற்றி எறிந்தார்கள். சிலர், ஆயுதங்களாலோங்கிக் குத்தினார்கள். சிலர், மலைகளைக் கைகளில்பேரத்தெடுத்துக்கொண்டு சூழ்ந்துநின்று வீசியெறிந்தார்கள். சிலர், கைப்பிடியாய்ப் பிடித்துக் கொள்ளுகிறோமென்று கோபித்துக்கொண்டு நெருங்கி வந்தார்கள். சிலர், ஆயுதங்களொன்று மில்லாமல் சும்மா வாயினால் மாத்திரம் வைதார்கள். சிலர், அதட்டினார்கள். சிலர், நெருங்கிவந்தார்கள். சிலர், அங்குமிங்குமாகத் திரிந்தார்கள். அநேகம்பேர், ஆர்ப்பரித்தார்கள். அநேகம்பேர், யுத்தஞ்செய்தார்கள். அநேகம்பேர், ஆயுதங்களைப்பிடிப்பிடியாய் வாரிவாரி எறிந்தார்கள். அநேகம்பேர், சூலாயுதங்களை யெறிந்தார்கள். அநேகம்பேர், ராம பாணங்களுக்குப் பயந்து ஒளித்துக் கொண்டார்கள். அநேகம்பேர், கண்களில் நெருப்புப்பொறி பறக்கப்பார்த்தார்கள். அநேகம் பேர், ஸ்ரீராமர்மேலெறிகிறதற்கு மலைகளைப் பேர்த்தார்கள். இப்படியாகச் சூரியனை மேகங்கள் சூழ்ந்து மறைந்துகொண்டதுபோல ஸ்ரீராமரை அநேகராக்ஷசர்கள் சூழ்ந்துகொண்டு தங்கள் தங்கள் ஆயுதங்களைப் பிரயோகம் பண்ணினார்கள். அப்படி அவர்கள்எறிந்த ஆயுதங்களும், எய்த ஆயுதங்களும், எறிகிறதற்கும், எய்கிறதற்கும், கையிலெடுத்த ஆயுதங்களும், பிடித்தஆயுதங்களும், எல்லாம் ஸ்ரீராம பாணம்பட்டு முறிந்து துண்டுதுண்டாய் விழுந்தனதுகள். ஸ்ரீராமரை வந்து சூழ்ந்துவளைந்த - தேரும், குதிரையும், சில்லுச்சில்லுத் துண்டாய் நெரிந்துபோனதுகள். வளர்ந்தமயிர்களுடனே கூடின ராக்ஷசர்களுடைய தலைகள் பலபலவென்று உருண்டதுகள். ராத்திரி விடிந்து சூரியனுதயமானதுபோலச் சூழ்ந்திருந்தராக்ஷசர்கள் மடியவே பருத்ததிருத்தோள்களையுடைய ஸ்ரீராமபிரானும், வேறுபக்கத்தில் திரும்பினார். இப்படி கழனித்தொழிலாளர்கள் தாமரைப் புஷ்பங்களுடனே நெல்லைச் சேர்த்து அறுக்கும்படியான செழிப்பையுடைய திருவயோத்திக்குத் தலைவரான ஸ்ரீராமருடைய பாணங்கள், பெரியோர்களுடைய சொல்லுக்கு அடங்காத அதிஷ்டர்களான வலியராக்ஷசர்கள் தரித்திருக்கின்ற கவசங்களைத் துளைக்கி அவர்களுடைய தேஹங்களைத் துண்டு துண்டாகச் செய்து பிடித்திருந்த வில்லை முறித்து தலைகளை அறுத்து வல்லமையை ஒடுக்கி வெற்றியைக் கெடுத்து அவர்கள் மேலும் மேலுமாக எறிகின்ற மலைகளையும், நொறுக்கி விட்டதுகள். இம்மட்டிலே போகாமல் மரங்களைப் பிடித்துவந்த கைகளையுந் துண்டிட்டுவிட்டதுகள். ஏண்டிருந்த தேவர்களெல்லாம், யானைகள் காலிழந்து போனதுகள். உருவிச்சென்ற அம்பால் வாலறுந்துபோனதுகள். துதிக்கையற்றுப்போனதுகள். கழுத்தறுந்து போனதுகள். டருமமிழந்து போனதுகள். தந்தங்களற்றுப்போனதுகள். என்று பேசுகிறார்களே யல்லாமல், சமுத்திரத்துக்கொப்பான கஜங்கள், ஆசையற்றதுகள். மேகம்போலச் சொரிகின்ற மதமழிந்து போனதுகள். வலியற்றுப்போனதுகள். என்று இந்தத்தொழில்களை ஒருவருங்கண்டு சொல்லவில்லை. ராக்ஷசர்கள், நூறுகோடி வேலாயுதங்களையும், ஆகாசமார்க்கத்தில் பறக்கும்படியாக நூறுகோடி அம்புகளையும், பிரயோகித்தார்கள். கொல்லுதலே தமக்குத்தொழிலாயுள்ள மலைகளுக்கொப்பாக நூறுகோடி யானைகள் நடக்கின்றன. குதிரைகள் பூட்டின தேர்கள் நூறுகோடி ஓடுகின்றன. இவைகளையெல்லாம் ஒரே வீரராய் எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீராமபிரான் சின்னபின்னப் படுத்தினார். ஒரு வில்லாளியான ராக்ஷசன் ஒரே காலத்தில் சப்தலோகங்களையும் நாசமாக்கிவிடுவானுக்கும். அப்படிப்பட்டவர்கள் அளவில்லாதவர்கள் நெருங்கிவந்து பாணவருஷிங்களை, ஸ்ரீராமச்சந்திரர் மீது சொரிந்தார்கள். அவர்கள் பிரயோகம் பண்ணின அஸ்திரங்களெல்லாம், ஸ்ரீராமபாணத்தால் பொடிப்பொடியாவது மன்றி, அந்த ஞானசம்பத்தில்லாதவர்களுடையதலைகள் பெருமலையைப்போல உருள, அவர்கள் பெரியதேஹங்களெல்லாம் சின்னபின்னப்பட்டுச் சிதைந்து போனதுகள். நூறுயிரம் யானை பலமுள்ளவர்களான ராக்ஷசர்கள் ராமபாணம் ஒன்று உருவிச்சென்றபோது தங்கள் பேர்மாறி மலைகளென்னும்படி உடலழிந்துபோனார்கள். ஆறுயிரத் தோள்கள் அறுந்து அதுகளிலிருந்து பொழிகின்ற ரக்தவெள்ளத்தில் அமிழ்ந்தி நீந்திக்கரையேறமாட்டாமல் யானைகள் கூட்டங்கூட்டமாக ரக்த ஆறுகளோடு கடலில் போய் விழுந்து விட்டதுகள். ஏககாலத்திலே லோ

சத்திலுள்ள ஜீவகோடிகளையெல்லாம் பலகாரம் பண்ணும்படியான வல்லமையை யுடைய யமனும், அவனுடைய தூதர்களும், காலனும், இரண்டு காலுடையவர்களாக இருந்த படியினாலே நடந்து ஓடித்திரிய மாட்டாமலினத்தும், அந்த உயிர்களையெல்லாம் பிடித்துக்கொண்டு தங்கள் வைவஸ்வதப்பட்டணத்திற்குப்போக வழிதெரியாமலும் மயங்கிப் போய் விட்டார்கள். மாண்ட யானைகளும், அழிந்ததேர்களும், குதிரைகளும், ஒன்றின் மேலொன்று அடுக்கடுக்காய் விழுந்து ஆகாசத்தைமுட்ட ஓங்கிக் குவிந்ததுகளை யாறுலும், அதிகபலமுள்ள கவந்தங்கள் கூட்டங் கூட்டமாக எழுந்து கூத்தாடுகின்றபடியால் அந்தப் பிணக்குப்பல்களெல்லாம் உயிர்பெற்றதுபோலவே விளங்கினதுகள். மாண்ட ராக்ஷசர்களுடைய ரத்தமானது கருஞ்சூரியனைப்போலே ஜொலித்தருளிய தமது திருமேனியில் தெறித்து, ஊழிகாலத்தில் லோகங்களையெல்லாம் சுட்டு எரித்தன்னும்படியான பிரளயகால சூரியனைப்போலப் பெருமாள், பிரகாசித்தார். பின்னும் சத்துருக்களுடைய தேஹத்திலிருந்து ஒழுகின ரத்தத்தில் குளித்தெழுந்தவரைப்போலவு மிருந்தார். இந்தப்பிரகாரமாக நெருப்புக்குச் சமானமாகவும், இடிக்குச் சமானமாகவும், இருந்த ராமபாணங்கள் அறுக்கிறபடியினாலே தலைவிழுந்து வெகு மாயமுள்ளவர்களான ராக்ஷசர்கள் மாள்கின்றதைப் பார்த்திருந்தும், பின்னேயிருக்கின்ற மற்ற ராக்ஷசர்கள் தங்கள் வல்லமைகுறையாதவர்களாய்த் தங்கள் தேஹத்திலுள்ளேயிருக்கின்றபிராணனைக் கொடுத்துவிட எத்தனித்தவர்களாய் ஸ்ரீராமமூர்த்தியை ஈக்கள் மொய்த்துக் கொண்டது போல மொய்த்தார்கள். ஸ்ரீராமபிரானும், அந்த ஈக்களைக் கொல்லுகின்ற தேனையொத்திருந்தார். இப்படித் தம்மை மொய்த்துக்கொண்ட மின்னணியான மூலபலசேனைகளின்மேல் ஒரு இமைப்பொழுதுக்குள்ளாகத் தம்முடைய வில்லில் பாணங்களைப் பிரயோகித்தெய்து அந்த ராக்ஷசர்களுடலமெல்லாம், கழற்காயைப்போலச் செய்துவிட்டு அவர்கள் தேர்களும், யானைகளும், குழம்பாகும்படி தம்முடைய திவ்யபாணங்களினாலே நாசித்துவிட்டார். அப்போது வந்த ராக்ஷசர்களில் அநேகர் பிராணனை யிழந்தார்கள். அநேகர் ஓட்டம்பிடித்தார்கள். அநேக ருயிர்தப்பிப் பிழைத்தார்கள். அநேகர் வருத்தப் பட்டுப்போனார்கள். வீரர்களான அநேகர் யுத்தக்களத்தைக் கண்டு சந்தோஷிப் பட்டார்கள். அநேகர் நசுங்குண்டு போனார்கள். அநேகர் உருண்டுபோனார்கள். அநேகர் புரண்டுபோனார்கள். அநேகர் பாணங்களால் சாம்பலாய் வெந்து போனார்கள். அநேகர் கரிந்து போனார்கள். அநேகரெழுந்து நின்றார்கள். அநேகர்மேல் விழுந்தார்கள். அநேகர்குடல்சரிந்துபோனார்கள். அநேகர் தலையறுந்துபோனார்கள். அநேகர்திசைதெரியாமல் மாண்டவர்களுக்குமுன்னே எதிர்நடந்துபோனார்கள். ரத்தினகுண்டலங்கள், பாகுவலையங்கள், மகரக்குழைகள், பிரகாசமுள்ள ரத்தினகிரீடங்கள், மணிக்கண்டிகைகள், கவசங்கள், வீரகண்டாமணிகள், ஆயுதங்கள், முதலானதுகள், மாண்ட ராக்ஷசர்களுடையதேஹத்தின்மீது, மேகத்தில்நின்றும் வருகின்ற மின்னல்களைப்போலச் சித்திசித்திப் பிரகாசித்ததுகள். அப்போது மூலபல ராக்ஷசர்கள் ராமன் எதிராகஇருக்கின்றான். எங்கள் பின்னுலேஇருக்கின்றான். எங்கள் முகத்திலிருக்கின்றான். எங்கள் உள்ளத்திலிருக்கின்றான். எங்கள் பக்கத்திலிருக்கின்றான். எங்கள் தலைமேலிருக்கின்றான். தலையின் உச்சியிலிருக்கின்றான். பூமியிலிருக்கின்றான். ஆகாசத்திலிருக்கின்றான். இதென்ன ஆச்சரியம்! இப்படியும் ஒரு மனிதனுக்கு வேகமுண்டா யிருக்குமோ? என்று சொல்லும்படியாகச் சாரியுலாவிவந்தார். இதோ எனக்கெதிரே யிருக்கின்றான். எனக்கெதிரே யிருக்கின்றான், என்று சொல்லும்படி சுவர்ணமயமான கோதண்டத்தைக் கையில் பிடித்தபடியே, அவர்களுடனேயுத்தஞ்செய்தும், அந்தமூலபலப்பெருஞ்சேனைக்கடல் நிலைத்திருந்தபோதிலும், ஒவ்வொருவருக்கும், அவரவர்களுடைய நிழலைப்போல ஸ்ரீராமமூர்த்தியானவர் திரிந்து, ஆழ்ந்தசப்தசமுத்திரத்திலும், ஏழு லோகங்களிலும், அந்தமூலபலச் சேனைக்கடல் நிறைந்திருந்தமையால் அநேக தந்திரங்களை அறிந்துஅதிக மாயைகளை யுடையவர்களாய்ப்பிறந்த அவர்களுடைய உள்ளத்திலு மிருப்பதன்றியும், அவர்களுக்குப் புறத்திலும், வியாபித்திருக்கின்றதன்னுடைய ஸ்வபாவத்தின்படியே எங்கும் ராமனாயிருந்தார்.

இப்படி ஸ்ரீராமர் பலவிதமான சாரிசுற்றி வருகிறதைத் தேவர்கள், பார்த்து ஸ்வாமி சாரிவருகிறாரென்று சொல்லாமல் இன்ன இடத்திலிருக்கிறார் இன்னஇடத்தில்நுழைந்தாரென்று அறியாமல் ஓஹோ ஸ்வாமியானவர் தம்முடைய யதார்த்த நிலைமையை யெடுத்துக்கொண்டு லோகமெல்லாந் தானேயா

ய் நிறைந்துவிட்டார். இனி நம்மை ரக்ஷிப்
பதற்கு, அவதரித்து ராக்ஷச சம்ஹாரஞ்செ
ய்கிற செய்கையை விட்டுவிட்டார் போலே
யிருக்கின்றதென்று சந்தேகித்தார்கள். அப்
போது ஸ்ரீராமமூர்த்தியானவர் சண்டமாரு
தக்காற்றினால் முறிந்துஅடிபட்டுப்பூமியில்வி
ழுந்த மலையைப்போலவும், மரங்களைப்போ
லவும், துஷ்டச்செய்கையையுடைய ராக்ஷசர்
கள் துண்டு துண்டாய் அறுந்துவிழும்படி
அதிவேகமாய்ச் சாரிசுற்றிவந்து பாணங்களை
ப்பிரயோகித்து, ஆகாசத்தை அளந்த திரிவிக்
கிரமமூர்த்தியைப்போல மதத்த யானைகளு
ம், பெரியதேர்களும், வேகமுள்ள குதிரைக
ளும், யாளிகளும், வல்லமை பொருந்திய
சிம்ஹங்களும், அதிகோபிஷ்டர்களானராக்ஷ
சவீரர்களும், ஆகாசமும் மறைந்துபோகு
ம்படி மடிந்து மலைமலையாகக்குவிந்துகிடக்
கிற பிணக்குப்பலின்மீது க்ஷீரசாகர சயனி
யாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் தாவி நடந்
தருளினார். ஆகாசத்தை அளாவிய கொடிக
ளையுடைய யானைகள் ஸ்ரீராமபாணம் பாய்
ந்து மாண்டு ரக்தப்பிரவாஹத்தில் பாய்ம
ரத்தோடுங்கூடிய கப்பல் முழுகுவதுபோல
முழுகினதுகள். ஸ்ரீராமச்சந்திரருடைய அம்
புகளால் அறுபட்டுமேலெழும்பி விழுகின்ற
ராக்ஷசர்களுடைய மலைபோன்றதலைகள், யுத்
தப்பெண்ணான விசயலக்ஷுமி, தன்னுடைய
செங்கையால்அம்மனைக்காயாடுகிறதுபோலி
ருந்ததுகள். வாரிட்டிறுக்கியவீரகண்டாமணி
தரித்த ராக்ஷசர்களுடைய வக்கிரதந்தங்கள்
ஸ்ரீராமபாணங்களால்துணிபட்டு யானையின்
வயிறுகளில்விழுவது, ஆகாசத்திலுள்ள மேக
ங்களுக்குள் மூன்றாம் பிறைச் சந்திரர்கள் ம
றைவது போலிருந்ததுகள். ராக்ஷசர்களுடை
யவக்கிரதந்தங்களும், மதயானைகளினுடைய
வெண்மையாகிய தந்தங்களும், ரணக்களத்
தில் கும்பல் கும்பலாகக் குவிந்து கிடந்து
வெகு காலமாக உதித்து வந்த மூன்றாம்
பிறைச்சந்திரர்கள் பூமியி லுதிர்ந்து கிடக்கி
ன்றவைகளைப்போலவும் தோன்றினதுகள். அ
ளவில்லாத ராக்ஷசர்களிறந்துஅவர்களுடைய
ரத்த வெள்ளச் சமுத்திரம், பூமி யெல்
லாம் நிறைந்து பரவினபடியினாலே சப்ததீ
வுகளி லிருந்துவந்த ராக்ஷசர்க ளெல்லாம்
பூமியில் நிற்கமாட்டாமல் உயர்ந்த மலைகளி
ன்மே லேறிக்கொண்டார்கள். ராக்ஷசர்களு
டைய தேஹத்திலுள்ள பிராணங்க ளெல்
லாம் வீரசுவர்க்கத்தில் நிறைந்து விட்டது
கள். சமுத்திரமெல்லாம்அவர்களுடைய ரக்

தங்களினாலும், ரணக்கள முழுவதும் அவர்க
ளுடைய பிணங்களினாலும் நிறைந்ததுகள்.
தேவர்க ளெல்லாம் ஸ்ரீராமமூர்த்தியினுடை
ய வில்வித்தையைக் கண்குளிரக் கண்டார்கள்.
யுத்தஞ்செய்த ராக்ஷசவீரர்களுடைய ஆயுத
ங்கள் சிந்திப்பெரிய ரக்தப்பிரவாகத்துடனே
கலந்து கடலில் போய்ச் சேர்ந்த படியினா
லே அந்தக்கடலிலுள்ள அநேகமீன்கள் அந்
த ஆயுதங்களினாலே அறுபட்டதுகள். அப்
போது ராவணனுக்கு உதவி செய்பவனாகிய
வன்னியென்கிற மூலபல ராக்ஷச சேனாபதி
மூலபல சேனையைப் பார்த்து ஒருமனிதன்
நம்முடைய சேனைகளைக் கொன்று கொண்
டிருக்க, மலைபோல ஆகாரமுள்ள நாமெல்
லாம் அவனை வெற்றிகொள்ளமாட்டாமல் ப
ல்லைக்கடித்துக்கொண்டுசும்மாயிருக்கலாமா?
அந்தமனிதனுடைய அம்புகள் நம்மீது படு
கிறதற்கு முன்பாகநாமெல்லாம் கூட்டமா
கக்கூடி அவன்மேல் விழுந்தாலும் அவன்மா
ண்டுபோவானல்லவா? காலிறங்கிப் பெய்கி
ன்ற மேகத்துக்குச் சமான மாகிய ராக்ஷசர்
களே நீங்கள் எல்லாம் பிரமை கொண்டு மய
ங்கிப்போனீர்களா! நம்முடைய ஆயிரம்வெ
ள்ளஞ் சேனையும், அடிபட்டு மாண்டுபோன
பிறகு லங்காபட்டணம், யாராள இருக்கின்
றது. ஆகையால் நீங்களெல்லாம் ஒருமிக்க
அந்த மனிதன்மீது பாயுங்களென்று சொன்
னான். அதைக் கேட்ட எழு வெள்ளம் ராக்ஷ
சசேனைகளும், அதிக கோபங் கொண்டு வந்
து ஸ்ரீராமனைச் சுற்றி வளைந்து ஒருமலையி
ன்மீது சப்தமேகங்களும் பெரு வருஷம்
வருஷித்தது போல ஆயுதப் பிரயோகம் ப
ண்ணினார்கள். அப்படி அவர்கள் தம்மீ
து பிரயோகித்த ஆயுதங்களை யெல்லாம்
ஸ்ரீராமபிரான் துண்டுதுண்டாய்த் தறித்து
விட்டுத் தேரும், யானையும், குதிரையும்மாண்
டு பூமியில் விழும்படிக் கொன்று, அவர்கள்
சேனைகளெல்லாம் சின்னபின்னப்பட்டுச் சி
தறிப் போகும்படி அஸ்திர வருஷங்களைப்
பொழிந்தார்.

அப்படி ஸ்ரீராமமூர்த்தி பிரயோகித்தசஹ
ஸ்திரமுகாஸ்திரங்களினால் எங்கும் ரக்தப்பிர
வாகம் நிறைந்துவிட்டபடியினாலே கொள்ளி
வாய்ப்பிசாசங்கள்தீபத்தைப்போல அக்கினி
களைக் கக்கிக்கொண்டுகூத்தாடினதுகள். கொ
ழுப்போடுங் கூடின ரக்தப்பிரவாஹத்தினால்
நிறைந்த பெருங்கடலாகிய செவந்த வஸ்தி
ரத்தையுடையவளும், ரக்தமாகிய சந்தனத்
தைப் பூசிக்கொண்டவளுமாகிப் பூமிதேவி

பிரகாசித்தார். ஸ்ரீராமமூர்த்தியும், செவந்த நிறமாக அலங்கரித்தவரைப்போலத்தோன்றி னார். லவணசமுத்திரம், தேன்சமுத்திரம்,மது சமுத்திரம், தயிர்ச்சமுத்திரம்,பாற்சமுத்தி ரம்,கருப்பஞ்சாற்றுச்சமுத்திரம்,சுத்தோதக சமுத்திரம்,என்றுசொல்லப்பட்ட சப்தசமு த்திரங்களும்,பவளக்கடல்போல'ரக்தத்தினால் நிறைந்து ஸ்ரீராமர் திருக்கரத்திலுள்ள ஒரு வில்லினுடைய சத்துருநோத்திற்குள்ளாக முன் கொண்டபழையபேர்மாறிவிட்டதுகள். ஒரு தொடைக்குக் கோடிஅம்புகள்பிரயோகித்து க்கொண்டு கோதண்டமானது மூன்றும் பிறைச் சந்திரனைப்போல வளைந்தபடியே யிருந்தது. ராக்ஷசர்கள் என்றைக்கு முடிந் தவிடுவார்களோஎன்னும்படியாக அளவற்ற வர்களா யிருந்தார்கள். ராக்ஷசர்களில் சிலர் ஸ்ரீராமர்மேரில் அஸ்திரசஸ்திரங்களைப் பிர யோகிக்கத்தொடுத்தார்கள்.சிலர்ஆரவாரித்தா ர்கள்.சிலர் ஆயுதங்களை எறிந்தார்கள்.சிலர்ஸ்ரீ ராமர் பிரயோகிக்கிற பாணங்களைக்கண்டுதங் கள் வல்லமையுடனே எதிரேவந்து தடுத்தா ர்கள். சிலர் தடுக்கமாட்டாமல் கையசந்து போனார்கள். சிலர் ஓட்டம் பிடித்தார்கள். சிலர் சாய்ந்துவிழுந்தார்கள். மதத்த யானை யைப்போலக் கோபங்கொண்டு வந்தார்கள். சிலர் அண்டம் வெடிக்கும்படி கூவினார்கள். சிலர் அதிகமாய்ச் சீறிவந்தார்கள். சிலர் யுத் தஞ்செய்தார். சிலர் அஸ்திரப்பிரயோகம் பண்ணினார்கள்.

இப்படிப் பலபல செய்கைகளைச் செய் துகொண் டிருந்தவர்களெல்லாம் ஸ்ரீராமர் பிரயோகித்த பாணங்களினாலே துண்டுதுண் டாகி ரணக்களத்தில் விழுந்தார்கள். ஸ்ரீரா மர் தமது கோதண்டத்தில் ஆயிரம்பாணங் களைத்தொடுத்துப் பிரயோகிப்பாரேயானால் அந்தப் பாணங்கள்பாய்ந்து மாளுகின்றரா க்ஷசர்கள், ஆயிரம்பேர்களையல்ல,பதினாயிர ம்பேர்களா யிருந்தார்கள். அந்தப்பாணவே கத்தைக் கண்ணினாலும், மனத்தினாலும், நிச் சயிக்கமுடியாது. ராக்ஷசர்கள் பிரயோகிக்கு ம்படி எடுக்கின்ற கூர்மையான வேலாயுதம், சூலாயுதம், எல்லாம் துண்டுதுண்டாய் முறி ந்ததே அல்லாமல் அவர்களுக்கொருநன்மை யுமுண்டாகவில்லை. ஸ்ரீராமமூர்த்தியானவர் பாணங்களாலே முன்னணியும், அதற்குத் தலையும், இருகைப் பிரதேசங்களும், மகா சேனை வகுத்த ஊசியும் தலைமயாகபடி செய்தார். அந்த அணியை ராக்ஷசர்கள் பே ணிக்கொண்டு வர டக்கத்த போது அவர்கள் உயிரை அந்தப் பாண அணிகளே உண்டு விட்டதுகள். மேலும் அந்தப்பாண ங்கள் அப்படியே அந்தந்தத்திசையை ஊடு ருவி அப்புறமும் இராக்கதர்கள் இருப்பார்க ளானால், அவர்களையும் உருவிப் போகும். ஸ்வாமியையெதிர்த்துவருகின்றராக்ஷசர்களெல் லாம் மடிந்துபோகிறார்களே யல்லாமல்அவ ர்களுக்கு வெற்றியென்பது எவ்விதத்தா லு ண்டாகுமோ தெரியாது. ஸ்ரீராம மூர்த்தியி னுடையபாணங்கள் ஊழித்தீய்க்குச் சமமா க யிருந்ததுகள். மூலபல ராக்ஷச சேனைக ளோவற்றியுலர்ந்தபெருங்காட்டுக்குச் சமமா கவும், யானைகளெல்லாம் நெருப்புப்பட்டு வேகின்ற மலைக்குச்சமமாகவு மிருந்ததுகள். ஸ்ரீராமருடைய பாணங்கள் வீசியெறிந்த வலைக்குச் சமமாயிருந்தது. ராக்ஷசசேனைகள் அந்த பாணங்களினாலே மாண்டு சமுத்திரத் தில் வாழ்கின்ற மீன்களுக்குச் சமமாகயிருந் ததுகள். சக்கரவர்த்தித்திருக்குமாரர்யுகாந்த கால சண்டமாருதத்துக்கொப்பாயிருந்தார். மூலபல ராக்ஷசசேனைகள் அந்தச்சண்டமா ருதத்தால் புழுதியா யுதிர்ந்துபோகின்ற ம லைகளுக் கொப்பானதுகள். ஸ்ரீரகுநந்தனர் சப்தலோகங்களையும் அந்தலோகங்களி லிரு க்கின்ற ஜீவகோடிகளையும், அழிக்கின்ற பிர ளயகால சமுத்திரத்துக் கொப்பாயிருந்தார். மூலபல ராக்ஷசர்கள் அந்தக்கடலில் மூழ்கி ப்போகிற ஜீவப்பிராணிகளைப் போ லானார் கள். ஸ்ரீராமச்சந்திரர் மூலகாரணமாய் நடு வாய் அந்தியமாய் எல்லாப்பொருள்களும் சமூலமும் அடங்கிப்போகின்ற யுகாந்தகால த்திற் கொப்பாயிருந்தார். ராக்ஷசர்கள் அந் த யுகாந்தத்தில் ஆதாரமில்லாமல் மாண்டு போகின்ற சராசரங்களுக் கொப்பா யிருந் தார்கள். ஸ்ரீராமர்ஆலாலவிஷமயமானசப்த சமுத்திரங்களைப்போ லிருந்தார். ராக்ஷசர்க ளெல்லாம் அந்த விஷக்கடலில் அகப்பட்டு மாண்டுபோன மீன்களுக்குச்சமமாக யிரு ந்தார்கள். ராக்ஷசர்கள் வஞ்சனையைச் செய் து விசாலமான பூலோகத்திலுள்ள நன்மை களையெல்லாம் பறித்துண்டு சத்தியங்கெட் டுப்பாவசிந்தனையையுடைய துஷ்டசாதியர்க ளாயிருந்தபடியால்அவர்களைஅழிக்கின்ற ஸ்ரீ ராமபத்திரர் தர்மத்துக் கொப்பாயிருந்தார். ஸ்ரீரகுவம்சோத்பவரான ஸ்ரீராமர் நச்சுப் பொய்கைக்குச் சமானமா யிருந்தார். ராக்ஷ சர்கள் தண்ணீரில்லாதபஞ்சகாலத்தில் அந்த நஞ்சுநீரையுண்டு மாண்டுபோன தரித்திரர் களைப் போலானார்கள்.

'இந்தப்பிரகாரமாக நூறுவெள்ளம் மூலபல ராட்சசசேனையு மாண்டு அவர்களுடைய ரத்தப்பிரவாகமானது சமுத்திரத்தையும், லங்காத்விபத்தையும், பள்ளமேடுதெரியாதபடி மூடிக்கொண்டமாத்திரத்தில் அந்த லங்கைக்குள்ளிருந்த ராட்சசஸ்திரீகளெல்லாம் லங்கைமதிலுக்கு உள்ளும்புறம்பும் தெரியாதவர்களாகிக் கலக்கமுற்று, கால்தளர்ந்து, அலறிக்கொண்டு ஓட்டம்பிடித்தார்கள். இப்படி மூலபல சேனைமுழுவதும் மாண்டுபோனவுடனே நூறாயிரங்கோடி ராட்சசப் படைத்தலைவர்கள், நாலாபக்கங்களிலும் பரவியிருந்தவர்களெல்லாம் நெருங்கி மாண்டு அழிந்ததனால்பெரியமலைபோல ராக்ஷசப்பிணங்கள்ஆகாசத்தை மூட்டியிருக்கவும், ரக்தப்பிரவாகமானது பிரளயகாலக் கடலைப்போலஎட்டுத்திக்கிலும், நிறைந்து நிற்கவுங்கண்டு, ஒருவராலும் தடுக்கமுடியாத கோபங்கொண்டு தங்கள் தங்கள் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு தங்கள் தேர்களையும், மதத்தயானைகளையும், யாளிகளையும், சிம்ஹங்களையும், குதிரைகளையும், நடத்திக்கொண்டு அதிவேகமாய்ப் புறப்பட்டு - மேகத்தையும், இடியையும், ஒத்த ஆயுதங்களையும், அம்புகளையும், எங்கும் நிறையும்படி ஸ்ரீராமர்மீது, பிரயோகித்துக் கொண்டே வந்தார்கள். அப்போது பெரிய பெருமாள் வருகின்றராக்ஷசர்களைநோக்கி அடா ராக்ஷசர்களே! வாருங்கோள்வாருங்கோள்வந்து உங்களுடையபிராணன்களையெல்லாமும், நீங்கள் பெற்றிருக்கின்ற வரங்களெல்லாவற்றையும், எனம்புக் கிரையாகக் கொடுத்துவிடுங்களென்று திருவாய் மலர்ந்துகொண்டே அந்த ராக்ஷச சேனாதிபதிகளெல்லாரும் விட்ட ஆயுதக்கடலையெல்லாந் தடுத்து அவர்களையுந் தனித்தனியே தடுத்தார்.

அப்போது ராக்ஷச சேனாதிபதிகள் ஸ்ரீராமர் பிரயோகித்த பாணங்களையெல்லாம் விலக்கி நெருங்கி ஸ்ரீராம மூர்த்தியை மறைத்து மேகத்திலும்அதிகமாக அம்புகளைப்பொழிந்து திக்குகளையெல்லாம் மூடியிருந்த கருவத்துடனே நெருங்கி வந்தார்கள். அதைக் கண்டு தேவர்கள் திரிநேத்திரராகிய சிவசாம்பவமூர்த்தியைவணங்கி ஸ்வாமி! இந்தராக்ஷசசேனாதிபதிகள் ஒவ்வொருவர்ராவணனுக்கு மூன்றத்தனை வல்லமையுடையவர்களாயிருக்கின்றார்கள். அவர்களுக்கு வலி இவ்வளவென்று ஒருகணக்கில்லை. லோகத்தையெல்லாம்ஒன்றாய் வளைத்துக்கொண்டு அதட்டுகின்றார்கள். ஸ்ரீராமர் ஒன்றியாயிருக்கின்றாரோ ஐயோ? எங்கள் வெற்றியையெல்லாங் கைக்கொண்டவர்களாய் வந்தார்களே. இனி எப்படி முடியுமோ? எங்களுக்குத் தைரியஞ்சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்து ஐயா, ஸ்ரீராமர் பிரயோகித்த பாணங்கள் கிட்டிவருகிறதற்குள்ளாக அதுகளையெல்லாம் விலக்கி, இந்தப் பாவிகளேழுலோகமும் மறைபடும்படி அஸ்திரங்களைப் பிரயோகித்துக்கொண்டு பெரிய மேகங்களைப்போல ஸ்ரீராமனை வளைத்துக்கொண்டார்கள். மேலும் அவரைப் பிடித்துக்கொள்ளுகிறவர்களைப்போலவந்து வைதுவிட்டு அவர்களே விலகிப்போனால்போகலாம் அப்படிக்கில்லாமல் அவர்களெதிர்த்து நிற்பார்களானால், அவர்களை ஜெயிக்கும்படியான வல்லமையை, அந்த ஸ்ரீயப்பதியான மஹாவிஷ்ணுவுக்காகட்டும், உமக்காகட்டும், தடுக்க முடியுமா? முடியாதேயென்று பயந்து விழுந்தார்கள். அப்படி விழுந்த தேவர்களைப் பார்த்து ருத்திரமூர்த்தியானவர், நீங்களினிப் பயப்படவேண்டாம். அந்த ராக்ஷசர்களெத்தனைபேரானபோதிலும், அத்தனைபேரும் நெருப்பிலகப்பட்ட பஞ்சுபோலத் தீய்ந்துபோய்விடுவார்கள் இதைமுன்னாய் நான் உங்களுக்குச் சொல்லியிருக்கின்றேன். விஷமானது அமிர்தத்தை ஜெயித்தபோதிலும், தர்மமார்க்கத்தை வஞ்சனையோடுங்கூடிய பாபமானது ஜெயித்தபோதிலும் பரப்பிரஹ்மமாகிய ஸ்ரீராம மூர்த்தியை அந்த ராக்ஷசதுஷ்டர்கள், ஒருக்காலுஞ் ஜெயிக்கமாட்டார்கள். உயிருள்ளவர்களில் விபீஷணாழ்வானைத் தவிர ராக்ஷசர்களொருவரும் பிழைக்கமாட்டார்கள். ஸ்வாமிக்குக் கிருபையென்பது, உண்டாயிருக்குமேயானால், அது தர்மத்தை விருத்திசெய்யாமலிருக்குமா? இனிமேல்நீங்கள் ராக்ஷசர்களுக்குப் பயந்து ஓடியொளித்துக்கொள்ள மலைக்குகைகளைத்தேடி வருத்தப்படமாட்டீர்கள். இன்றைப்பகலுக்குள்ளாக வானரசேனா நாயகனாகிய சுக்கிரீவமஹாராஜனை அடிமைகொண்ட ஸ்ரீராமச்சந்திரர்இந்தராக்ஷசர்களையெல்லாங் கொன்றுவிடுவார் என்றுசொன்னார். அந்தப்பிரகாரமே சதுர்முகப்பிரஹ்மாவும், சொன்னார். அதைக்கேட்ட தேவர்கள் தங்கள்மனந்தேறினார்கள். அந்தச்சமயத்தில் சக்கரவர்த்தித் திருக்குமாரர் பெருமைபொருந்திய சக்கராயுதத்திற்குச்சமானமாகிய, வெற்றிபெற்றதிவ்யாஸ்திரவருஷங்களை வேகமாய்ப்பிரயோகித்து மலைகளுக்கு நிகரான அந்த ராக்ஷசர்களுடையதலைகளை அறுத்துக்குப்பலாகக்குவித்து

விட்டார். மகராகச்சியங்கள் பொருந்திய சமுத்திரத்தைப்போல ஸ்ரீராமமூர்த்தியை வளைத்துக்கொண்ட ராக்ஷசர்களுடைய மலைகளுக்கொப்பான தேஹமானது செதிப் பூமியிலும் அவர்களுயிர்கள் விரசுவர்க்கத்தையடைய அதனாலே தேவர்களுடைய புராதனநகரமானது இடங்குறுகிப் போய்விட்டது. மற்ற ராக்ஷசர்களெல்லாம் வருத்தப்பட்டார்கள். குதிரைகளெல்லாம் தலையறுந்துவிழுந்தனகள். குதிரைப்பாகர்களுடைய தலைகள் அறுப்பட்டு ரணக்களப் புழுதியில் உருண்டு கிடந்தனகள். அவர்களுயிர்கள்வீரசுவர்க்கத்திலுள்ள அப்சரசுக்களை ஆலிங்கனம் பண்ணிச் சந்தோஷித்தனகள். மலைகளும் அலைமிகுந்து விழுகின்ற கடலும், காடுகளும், நிலமும், தேவலோகமும், எல்லாம் ராக்ஷசர்களுடைய உயிர்களும், அவர்களுடைய தலைகளும், தேஹங்களும், அந்தத் தேஹத்திலிருந்து ஒழுகிவருகின்ற ரத்தப் பிரவாகமுமாய் நிறைந்துவிட்டபடியினாலே ஒரு திக்காவது வெறுமையா யிருக்கவில்லை. இப்படி யுத்தம்நடக்கும்போது ஸ்ரீராமரை எதிர்த்துவந்த ராக்ஷசவீரர்களெல்லாம் மாண்டுபோனவுடனே அவர்களைச் சூழ்ந்துவந்த சேனைகளெல்லாம் ஓட்டம் பிடித்தனகள். அப்போது தேவர்கள் ஸ்ரீராமபிரான்மீது புஷ்பமாரியைப் பெய்தார்கள். அதனாலே மேகவருஷமானது பெய்வதற் கிடயில்லாமல் அந்தரத்திலேயே நின்றுவிட்டது. ஓடிப்போகின்ற சேனைகளை அறிவில்லாத ராக்ஷசர்கள் இடையிலே ஓடவொட்டாமல் தடுத்துக் கண்ணில் அக்கினிபொழியும்படியாகப் பார்த்துத் திரும்புங்கள் திரும்புங்கள்என்று சொல்லி அதட்டிக்கொண்டு யானைகளையும், சிம்ஹங்களையும், குதிரைகளையும், ஸ்ரீராகவபிரான்மீது செலுத்திக்கொண்டு, லோகங்களெல்லாஞ் செவிடுபடும்படியாகவும், மேகங்களெல்லாம் கிழிந்து உதிர்ந்துபோகவும், அஷ்டகுலாசலங்களும் அலைகுலைந்து போகவும், தேவர்களுடைய தலைகள் நடுக்கங் கொள்ளவும், அவர்கள் பிரயோகிக்கின்ற ஆயுதங்கள் இடிகளையும், மின்னல்களையும் நிகர்த்துப்பிரகாசித்து மிகுந்த ஒலியைவிளைத்தனகள். அதைக்கண்டு சுந்தரபாகுவான ஸ்ரீராமர் சந்தோஷம் சந்தோஷம் என்று வெகுகாலமாக பழகின அதிதிகளை எதிர்கொள்ளுகிறதைப்போல அவர்களை எதிர்த்துப்போய் அக்கினிமுகாஸ்திரங்களை, தேவர்கள் புஷ்பமாரிபொழியும்படி மேகம்பொழிவதுபோலப்பொழிந்தார். சூரியனுக்கொப்பாகக் கட்டிய கொடிகள் அனேக இடிகளைப்போலப் படபடவென்று சப்திக்க, எண்ணிறந்த மேருமலைகள் ஸ்ரீராமமூர்த்தியுடனே யுத்தத்துக்குவருவது போல ரதங்கள் அதிவேகத்துடன் அதிர்ந்து கொண்டுவந்தனகள். அந்த ரதங்கள் ஸ்ரீராமபாணம்பட்டு பருத்துகளும், கழுகுகளும் வந்து படியும்படியாக நீறுபட்டுப்போனதுகள். நாலுபக்கத்திலுமுள்ள கடல்களெல்லாம் சுழலவும், உயர்ந்த மலைகளெல்லாம் சுழலவும், சூரியசந்திரர்கள் கதிமாறிவிடவும், குலாலசக்கரம்போல லோகமெல்லாம் சுழலவும், ஸ்ரீராமர் இருக்கிறரென்று சாரிகைசுற்றிவந்தார். பிரஹ்மருத்திரேந்திராதிகளும், தேவர்களும், மஹாரிஷிகளும், சுற்றிச்சுற்றி நர்த்தனம் பண்ணினார்கள். கழுகுகூட்டங்களும், நமனும், ஸ்ரீராமர் திருக்கை வில்லும்,தர்மதேவதையும், ஆனந்தக் கூத்தாடினதுகள். ஸ்ரீராமர் செய்கின்ற இந்த யுத்தத்தின் விசேஷத்தைத் தேவர்களாவது, திரிலோகத்திலுள்ளவர்களாவது, யாரிதை முன்னே அறிந்தவர்கள் ஒருவருமில்லை. பிரஹ்மருத்திரேந்திராதிகளும், தலைநடுங்கினார்கள். வேதபுருஷன் ஸ்வாமியைப்பார்த்துத் தர்மஸ்வரூபமே! காயாம்பூவண்ணனே! என்று சஹஸ்திர நாமங்களைக்கொண்டு ஸ்தோத்திரம்பண்ணினார். ஸ்ரீராமர் பிரயோகித்த ஒரு பாணத்துக்கு சப்தசாகரத்துக்குச் சமமான ராக்ஷசர்களுடைய ரதகஜதுரக பதாதிகளெல்லாம் மாண்டுபோனதுகள். அந்தப்பாண வேகத்தைக் கண்டு தேவர்களெப்படி கைகளை விதிர்த்து நடுங்கினார்களோ! அப்படியே அசுரர்கள் ஓடமாட்டாமல் கதிமாறிப்போனார்கள். ஸ்ரீரகுநந்தனர் எவுகின்ற ஒரு பாணமானது ரத கஜ துரக பதாதிகளை யெல்லாம் ஊடுருவிக்கொண்டு போகின்றதைப் பார்த்தால் அந்தச்சேனைகளின் தொகை இத்தனையென்று கணக்கிடுவதைப்போ லிருந்தது. மாண்டுபோன ராக்ஷசர்களெல்லாம்போக மீதியானவர்கள் இனித்தப்பித்துக்கொண்டுபோய்விடுவார்களென்று அவர்களைப் போகவிடாதபடி ஸ்ரீராமர், பாணங்களைக்கொண்டு மதில்கள் கட்டி வழியை மூடிவிட்டார், மாலியென்பவனையும், மாலியவானையும், மலைபோலுயர்ந்த கைடனையும், மதவையு மொத்தவர்களான கவசங்களையணிந்த தேஹத்தையுடைய ராக்ஷசர்கள், பாணமதிலைக்கடக்கமாட்டாமல் நின்று திகைத்தார்கள். மாண்டுபோனவர்கள்போக மற்ற ராக்ஷசர்களெல்லாம், சப்த

சாகரங்களும், பொங்கிவருகின்ற ஊழிக்காலத்திலே வடவா முகாக்கினி சுட்டுக்கொண்டேவர, எல்லாம்வெந்துமீந்துநிற்கின்ற சில ஜீவன்களைப்போல ஒரு மூலையிலொதுங்கினார்கள். திரிபுர சம்ஹாரியும், அம்சவாகனனும், வஜ்ராயுததரனும், நம்முடைய பலத்தைஅடக்கமாட்டார்கள்.இந்த ஒருமனிதனே நம்முடைய வரங்களையும் அழித்துவிடுவான். நம்முடைய வல்லமையையும் அழித்து விடுவான். நம்முடைய ஆயுசையும் நாசமாக்கிவிடுவான். சமுத்திரத்தினால் சூழப்பட்ட இந்தப்பூமியைப் புரட்டிப் பேர்த்துவிட வல்லவர்களான ஆயிரம்வெள்ளம் ராக்ஷசசேனைகளையும், ஒரு வில்லினாலே ஒருக்ஷணப்பொழுதுக்குள்ளாக எய்து கொன்றுவிட்டானே! இதுவரையிலுந் தேவர்களுடைய ஆயுதங்கள் நம்மீதுவிட்டால் நடுவேயே ஒய்ந்து விழுந்துவிடும். அப்படி ஒய்ந்து போகாதவைகள் நம்மிடத்திற்கு வந்து வலஞ்சுற்றி விலகிப்போய்விடும். இந்த மனிதனுடைய ஒருபாணத்தினால்நம்முடையகோடிபடைகளும்மாண்டுபோகின்றனவே ? இந்த ராக்ஷசப் பிறவிகடைப்பட்டபிறவியாய்ப்போய்விட்டது அந்தரமார்க்கத்திலே லோகங்களையெல்லாம் சிருஷ்டித்த பிரஹம்மதேவன் வந்திருக்கின்றான். விருஷபவாகனாரூடனான ருத்திரமூர்த்தி வந்திருக்கின்றான். மற்ற தேவர்களும் வந்திருக்கின்றார்கள். இவ்வளவு தேவர்கள் வந்தும் அந்த ஸ்ரீயப்பதி யொருவனை மாத்திரம் காணோம். ஆகையால், அந்த மாயக்கள்வனே ! இந்த மனிதனாகவேண்டும். ஆயிரம் வெள்ளஞ் சேனையையும் கொன்றுவிட்டான் இனி கோடி கோடி பேர்களல்ல ? ஒரு பதுமச்சேனை வந்தபோதிலும், இவனுக்குமுன்னென்ன செய்யமாட்டும். போனதுபோக நாம்சிலபேரிருந்து ஆலோசனை செய்வதென்ன ? நானொன்று சொல்லுகிறேன் கேளுங்கள் - இனிநாம் தப்பியோடி ராவணன் முகத்திலே விழிப்போமோ, நாமிவன் கையினாலே மாண்டுபோகப்பயந்து ஓடிப்பழியைக் கட்டிக்கொள்வோமோ, அதுசரியல்ல ? இந்தப் பாவதேஹத்தை இவன்கையில் ஒப்புக்கொடுத்துவிட்டுப் புகழைப்பெற்று இனிப் பிறவாவழியைத் தேடிக்கொள்ளலாம். தப்பி ஓடிப்போகலா மென்று நினைத்தோமானாலும், இந்தப்பாணமழையிலே நீங்கிப்போகிறதற்கு நம்மால்கூடாது. ஆகையால் நாமெல்லாரும் ஒரு முகமாய்ப்போய் நம்முயிரை அந்த மனிதனுக்குக் கொடுத்து விடலாமென்று வன்னியென்பவன் சொல்லி எல்லாரையுஞ் சமாதானம் பண்ணினான். அந்தப்படியே எல்லாருஞ் சமாதானப்பட்டுத் தங்கள் விதிகொண்டுவந்து தள்ளுவதினாலே மலைபோல் ஆகாரமுடைய ராக்ஷசர்களெல்லாம் பெரிய மலைகள் யாவற்றையும் இழுத்துக்கொண்டு ஆறுகளெல்லாம் கடலில்விழுவதுபோலவும், விளக்கினில் விட்டிற் பூச்சிகள் விழுவதுபோலவும், ஆர்ப்பரித்துக்கொண்டு ஸ்ரீராமனை வந்து வளைத்துக்கொண்டு- மழு, தண்டு, அம்பு, சக்கரம், கலப்பை, வாள், வேல், சூலம், வஜ்ராயுதம், ஈட்டி, தோமரம், கழு, கப்பணம் முதலாகிய ஆயுதவர்க்கங்களையெல்லாம் கொட்டத்திற் பதுங்கி யிருக்கின்ற புலிக்குச்சமமான ஸ்ரீராமமூர்த்தியின் மீது பிரயோகித்தார்கள். அதைக்கண்டுதேவராஜாதிராஜனான ஸ்ரீராமமூர்த்தியானவர் காந்தருவாஸ்திரமென்கின்ற தேவாஸ்திரத்தைத் தமது கோதண்டத்தில் பூட்டிப் பிரயோகித்துவிட்டார். அந்தத் திவ்யாஸ்திர மானது சர்ப்ப ராஜனைப் போலவும், கருடபகவானைப்போலவும், புறப்பட்டு மூன்றுகண்களும், ஐந்துமுகங்களும், உடையவைகளாயும், மூன்று கண்களிலும் - நெய்யும் - நெருப்பும்- ஜலமும் - பொழிந்து அஸ்திர வருஷங்களை வருஷித்துக் கொண்டு திரிபுர சம்ஹாரியாகிய ருத்திர மூர்த்தியைப்போலக் காணப்பட்டுப் பத்துக்கோடி ராக்ஷசவீரர்கள் தவிர அவர்களுடனே வந்த ராவணனுடைய மூலச்சேனைகளையெல்லாம் ஒரு இமைப்பொழுதுக் குள்ளாகப் படுசூரணப் படுத்தி விட்டது. மஹாத் விபங்களி லிருந்தும் அஷ்டதிக்குகளி லிருந்தும், பாதாளத்தி லிருந்தும், பலவகையான மலை யரணங்களிலிருந்தும், ராவணனுக்கு உதவிசெய்துகொண்டிருக்கின்றவர்களும், பெரியமேருவைச் சங்கிலியில் கோத்து மார்புக்குப் பதக்கமாக அணிந்துகொள்ளத்தக்க வல்லவர்களும், பிரஹம்மாவினிடத்தில் வேதமந்திரங்கள் கற்று அவைகளை ஜெபிக்கிறதினாலே நாவில் தழும் பேறினவர்களுமான அந்தப் பத்துக்கோடி ராக்ஷசவீரர்களும், ஒருவரையொருவர்பார்த்து இந்தராமன் நம்மிலொருவனைக் கொல்லுவானேயானால் தப்பாமல்ராவணனைக்கொன்றுவிடுவான். நாமெல்லாரும் ஒருமிக்க இவன்மீது எதிர்த்துப்போகலாமோ? அல்லது தனித்தனியே போய்ச் சண்டை செய்யலாமோ? நாம் தனித்தனியே போவோமானால் இவனுக்கு முன்னே ஒருவேனை நிற்கமாட்

டோம், நாமெல்லோரும் ஒன்ருய்க்கூடிக் கொண்டு நம்முடையவல்லமைக்குக் கூடிய யுத்தங்களையெல்லாஞ் செய்யலாம், அப்படிக்கில்லாவிட்டால் இவனை நாம் ஜெயிக்கமாட்டோம் ஜெயிக்கமாட்டோமென்று வலியையின்பவன் சொன்ருன். மற்றவீரர்களெல்லாம் பெரியோர் சொல்லே நல்லது அப்படியே செய்யலா மென்று நிச்சயம்பண்ணிக்கொண்டு எல்லாரும் ஒருமிக்கச் சமுத்திரங்களைப் போல ஆர்ப் பரித்துச் சங்கத்தொனி செய்து தோள்களைத் தட்டினுர்கள்.

இப்படிச் செய்ததினுலே மேகங்களெல்லாம் கிழிந்துமின்னிக்கொண்டுபூமியில்விழுந்தனகள் அப்படி விழுமேயானுல் சுவர்க்கமத்தியபாதாளமென்றுசொல்லப்பட்ட திரிலோகங்களும் பட்டபாட்டை இப்படி யென்று சொல்லவேண்டுமோ? அவ்வாறுஅவர்கள்சப்தித்தமாத்திரத்திலே அவர்கள் வல்லமைகளையெல்லாம் ஒழிக்கும்படி யானவரான ஸ்ரீராமபத்திரர்தம்முடைய கோதண்டத்தைக் குணத்தொனிபண்ணினுர். அது தம்முடையதிருத்தோள்வல்லமையாலேதிக்குகளையெல்லாம்அளவிட்டுஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய பாஞ்சஜன்னியத் தொனியைப்போல லோகமுழுவதும்கேட்டது. அப்போது எல்லாலோகங்களிலும் பெருமைபெற்றிருக்கின்றவர்களும், திரிலோகங்களையும்ஜெயித்தவர்களும், தேவர்களையெல்லாம் புறங்காட்டி யோடச்செய்தவர்களும், யமனைப்போலத் தானவசேனைகளைச் சின்னபின்னப்படக் கொன்றவர்களும், லோகத்திலுள்ள ஜீவகோடிகளையெல்லாம் கொன்றுதின்றவர்களும், வில்வீரர்களுமான ராக்ஷசசேனுபதிகள் எல்லாருமொருமிக்கச்சேர்ந்துகொண்டுவந்து ஸ்ரீராமபத்திரரைத் தெழுவத்தில் சேர்த்துக் கட்டிவிட்டவர்களைப்போல வளைத்துக்கொண்டு ஒவ்வொருவரும் இடிகளைப்போலக்கர்ஜித்துக்கொண்டு யுத்தஞ்செய்ய யத்தனித்தார்கள். அதைக்கண்டு தேவர்கள் மனம்வாடிப்போனுர்கள். ஆகாசமும் தீய்ந்து போகும்படியாக அந்த ராக்ஷசர்கள் பிரயோகித்த ஆயுதங்களிலே இருந்து புறப்பட்ட அக்கினியும், அவர்கள் கண்களிலிருந்து உண்டான நெருப்பும், ஒன்ருகச் சேர்ந்ததினுலே ஏழு லோகங்களும் வெந்து குமுங்கிப்போய்விட்டதுகள். தேர்களினுடைய அதிர்ச்சியும், வீரர்களுடைய அதட்டுதலின் சத்தமும், ரத்தமாலைகளினுடைய ஆரவாரமும், வீரகண்டாமணி ஒன்ருேடொன்று தாக்குகின்ற ஓசையும், வில்லின்நாணேசையும், மேககர்ஜ்ஜனையையும்கடலினுடைய ஆரவார ஓசையையுமொத்திருந்ததுகள். ஒவ்வொருவீரரும்ராவணனுக்குச் சமமான பலமுடையயர்,அவர்களாலே ஜெயிக்கப்படாத லோகங்களில்லை,மிகுந்த தேஜோவல்லமையுமுள்ளவர்கள். இவர்களெல்லாம்வந்து சூழ்ந்தமாத்திரத்தில் சத்துருக்கள்வந்து சேர்ந்தார்களென்று திருவுளத்திலெண்ணித் தர்மசொரூபியான சக்கரவர்த்தித் திருக்குமாரர் அவர்களுக்குமுன் எதிர்த்து வந்துநின்று அந்த ராக்ஷசவீரர்கள் பிரயோகித்த ஆயுதங்களெல்லாம் தம்முடைய அம்பினுலே அறுந்துபோகும்படிச்செய்து உகாந்தகாலமேகவருஷித்தைப்போலஅநேக திவ்வியாஸ்திரங்களைப்பிரயோகித்தார்.அதிக தேஜோமயமாகப் புறப்பட்ட ஸ்ரீராமபாணங்கள், அவர்கள் தரித்திருந்த தம்பைமாலையுடனே அவர்கள் மார்பைப் பிளந்ததினுலே சூரியன் தன் பரிவேடத்துடனே அழிந்து பூமியில் விழுந்தது போல அவர்களேறிவந்த தேர்களுடனேகூட மடிந்துவிழுந்தார்கள். ஸ்ரீராமபாணங்கள் யமனைப்போல பாய்ந்தபடியினுலே இந்திரதனுசோடு மேகமானது பூமியில்விழுந்ததுபோல அந்த ராக்ஷசர்களுடைய கைகள் பிடித்த வில்லுடனே அறுந்து பூமியில் விழுந்ததுகள். சிலராக்ஷசர்களுடைய பலம்பொருந்திய கைகள் ரத்தக்கடலினிடத்தில் கொம்பைக் கவ்விக்கொண்டு மலைப்பாம்பு விழுந்தது போல அம்புகளைப்பிடித்தபடியே விழுந்ததுகள். பூமியைச்சூழ்ந்துநிற்கின்ற கடலில் முகபடாத்தை அணிந்திருக்கின்ற யானைகள் ரத்தவெள்ளத்தினு லிழுப்புண்டுபோய் மின்னலுடனேகூட மேகமானது விழுவதுபோல விழுந்ததுகள். வீரவான்களான ராக்ஷசர்களுடைய வலதுகரங்கள் பிடித்த வாளாயுதத்துடனே ரத்தக்கடலில் கொம்பன் சுறுமச்சியத்தைப்போல விழுந்ததுகள். அந்தரத்தப்பிரவாகத்திலே குதித்துவிழுந்தகுதிரைகள் இறுக்கொப்பாக இருந்ததுகள். ஸ்ரீராமபாணம்பட்டு ராக்ஷசர்களுடைய கேடகங்கள் பதிபட்டு ரத்தக்கடலில் வீழ்ந்ததுகள். அவைகள் கடலாமைக்கொப்பாக இருந்ததுகள். காம்புகளுடனே கொடிகள் அந்தரத்தக்கடலில்வீழ்ந்ததுகள். அவை, பெருங்காற்றடித்து கப்பற்கூம்புகள் கட்டின் பாய்களுடனேகடலில் மூழ்கினதுபோ லிருந்ததுகள். தலையற்றமுண்டமாகத்தண்டாயுதத்துடனே

கூட ரத்தப்பிரவாகத்தில்விழ்ந்த ஒருராக்ஷசனுடைய கால்களும், தோள்களும், துண்டுபட்ட சுருமீனைப்போலத் துடித்தனுகள். பளிங்குக் கற்களால் செய்த சக்கரங்கள்பூண்ட தேரகளானவை, நொறுங்குண்டு, சக்கரம் வேறுபட்டு ரக்தக்கடலில்விழ்கின்றன. அவைகள் பூரணச்சந்திரர்களை யொத்திருந்தனுகள். சில ராக்ஷசர்களுடைய பலம்பொருந்திய மார்பில் தரித்திருக்கின்ற கவசத்தின்மீது கண்களுக்குச் சமமான ஸ்ரீராமபாணங்கள் அளவில்லாதவைகளாய் மொய்த்துக் கொண்டிருக்கின்றனுகள். அவைகள் தேனையுண்ணுகின்ற வண்டுகளுக்கொப்பாக இருந்தனுகள். ஸ்ரீராமபிரானுனவர் பருந்துகள் பறக்கின்ற ரணக்களத்தி லொருவராக ஒருஜாமபரியந்தம் நூறுயிரயோசனை விஸ்தாரதூரம், சாரிகை சுற்றிச் சம்ஹாரம் பண்ணிக்கொண்டு வந்தார். நிற்கின்றவர்களுக்கு முன்புநின்றும், போகின்றவர்களுக்கு முன்பு போயும், ஸ்ரீராமர் சிரிக்கின்றபடியினுலே அவர்களிவனைப் பார்த்து இவன் ராவண குமாரனுகிய இந்திரஜித்துதான் தன்மாயையால் நம்முடைய சேனைகளையெல்லாங் கொன்றுவிட்டான். இந்தராமன் கொன்றுனென்று சொல்லுகிறது தகாதென்றுர்கள். ஸ்ரீராமன் வில்லுங் கையுமாக வந்து இதோ என்னெதிரோ நிற்கின்றுன். இதோ என்னெதிரே நிற்கின்றுன். என்று ராக்ஷசர்கள் கலங்கி நிற்கின்றகாலத்தில் அவர்களில் ஒவ்வொரு அரக்கனும் கொடுங்கோபத்தோடு குரூரமாகிய பாணங்களைக் கண்டகண்ட இடங்களில் எய்வார்கள். ஸ்ரீகோதண்ட தீட்சாகுரு ஒருவன்தானின்று போர்செய்கின்றுனென்று உணரத்தக்க உணர்ச்சி யில்லாதவர்களாய் ஸ்ரீராமபாண பிரகாசத்தால் எங்கும் பிரகாசமாயிருப்பதால் இது இராத்திரியல்ல பகலென்று சொல்லுவார்கள். சில ராக்ஷசர்கள் தம்மவனைப் பார்த்துக் கேட்டீர்களா! இராமன் ஒருவனுண் டென்பது அபத்தம், இராமர்கள் பலபேர் உண்டென்பதே யதார்த்த மென்பார்கள். அந்த ஆயிரம்வெள்ளம் ராக்ஷசர்களில் மலைகளைப்போல நீண்டுயர்ந்து ஒவ்வொருவரும் ஸ்ரீராமபிரான் போலத் தங்கள் கண்களுக்குத் தோற்றுகிற படியால் ஒருவரை ஒருவர் தம் தம் ஆயுதத்தால் கொலைசெய்து உயிர் வாங்கினுர்களே யல்லாமல் ஏகநாயகனுகிய ஸ்ரீரகுகுலோத்தமர் அந்தப் பாபிஷ்டிகளுயிரை வாங்கினது மூன்றோ! இல்லை. ரதத்தின்மேலும், குதிரையின்மேலும், செவந்த கொடுங்கண்ணையுடைய மேகம் போன்ற யானையின் மேலும், பூமியிலும், நிற்க இடம்பெருமல் சமுத்திரத்திலும், ஆகாயத்திலும், இருந்து போர் செய்கின்ற அரக்கர்களை அங்கங்கு இராமர்கள் புகுந்து போர்செய்வார்கள். என்று சொல்லும்படியாக சமஸ்த அண்டங்களிலும், அவ்வண்டங்களுக்குள் சிறந்த பதவிகளிலும், அப்பதவிகளில் உலாவுகின்ற சோதி மூர்த்திகளிலும், அவர்களுடைய பக்கல்களிலும், உடல்களிலும், பிரியாமல் அந்தரியாமியாக நின்ற தசரதநந்தனர், போர்புரிகின்றமையால் ராக்ஷசவீரர்கள் திப்பிரமைகொள்வார்கள். எம் ஐயனுடைய இடதுகையில் தாங்கிய பெரிய கோதண்டத்தின் தலையிற் கட்டிய மணிகள் கணகணவென்று ஒலிக்குந்தோறும், அங்குநின்ற மத்தகஜங்களும், அசுவங்களும், நின்ற நிலையிலேயே நடுங்கி யிறந்தனுகள். இமயகிரிபோல உயர்ந்து காணுகின்ற ரதசமுகங்கள் பூட்டுக்குலைந்து உதிர்ந்தனுகள். அவற்றிலுள்ள ராக்ஷசவீரர்களும், நடுங்கி மாண்டார்கள். எட்டுத்திக்குகளில் உள்ளவர்களும், செவிடுபட்டார்கள். சமுத்திரங்களும், அதிர்ச்சியால் கலங்கிச் சேறுபட்டனுகள். கொல்லுந்தொழிலையுடைய வியாக்கிரமத்துக்குச்சமானமாகிய ராக்ஷசர்களது மனைவிமார்களுடைய கண்களில் நின்றும் களகளவென்று நீர் சிந்திப் பிரவகித்தது. யுத்தத்தில் புருஷசிம்ஹத்துக் கொப்பாகிய ஸ்ரீராமபிரானுனவர் எதிர்ப்போருடைய உடலில் தைக்கின்ற படைகளைத் தாங்கிய கைகளையுடைய ராக்ஷசவீரர்களில் ஒவ்வொருவருக்கெதிரேயும் வளைத்த வில்லுந்தானுமாகக் குதிக்கின்ற வேகத்தாலே அங்கங்குத் தோன்றுகிற படியால் போர்க்களத்தில் மடிந்து வீர சுவர்க்கம் அடைகின்றவர்களுடைய தேர்களும், இங்கு நின்று போர்செய்கின்றவர்க ளேறிவந்த தேர்களும், தாம் ஆரோகணித்தருளிய தேரோ என்னும்படிச்செய்தார். ஆயிரந்தோள்களுங் கூடி இரண்டுதோள்களுடையவராய் அவதரித்தவ ராகையால் யுத்தகளத்தில் எவனேனும் ஒரு ராக்ஷசவீரன் வில்லோடாவது அம்பறுத்தூணியோ டாவது காணப்படுவானேயாகில் அவனுக்கெதிரே எழுந்தருளிமேகங்கள் வருஷிக்கின்ற தாரைகளின் தொகைக்கதிகமாக ஆயிரங்கைகளாலெய்யும் அம்புமாரிகளைப்பெய்வார் ஆயிரம் வெள்ள ராக்ஷசப் பெரும்படை செய்யும்போர்த் தொழில்களை ஒருமுகத்தால்கண்டு அறியவுங் கூடுமோ கூடாதல்லவா ஆதலால்மனிதனுய்அவதரித்த

ஸ்ரீரகுநந்தருக்கு ஒருமுகமேயன்று சொல்லுதல்பொய்யாகும் ஆயிரமென்போமானால் சேனை ஆயிரத்துக்கு மேற்பட்டதாகையால் அதுவுமல்ல அநந்தமுகங்களென்பதே யதார்த்தமாகக் கண்டறிந்தோம். திரிநேத்திரங்களையுடைய சிவனும், நான்முகக்கடவுளும் சேர்ந்து எம்பெருமான் கோதண்டத்தைவளைத்து எய்கின்ற அம்புகளை இவ்வளவென்று எண்ணும்படியாகத்தொடங்கி, அந்தஅம்புகள் கூட்டங்கூட்டமாகப் புறப்படுகின்றமையால் கணக்கிடமுடியாமல் அவ்விருவரும் தனித்தனியாய் நின்றுபார்ப்போமென்று பார்த்துக் கணக்கிடவு முடியாமல் ராமபாணத்தைக் கணிக்க நம்மால் ஆகுமோ ஆகாதென்று சொல்லி ஆச்சரியமடைந்து ஸ்ரீராமபிரானுடைய புஜபலத்தை நினைத்து நினைத்துத்தோள்கள்பூரிப்பார்கள். மற்ற இந்திராதிதேவர்கள் பிரஹ்ம ருத்திரர்களைப் பார்த்து ஓ தேவசிரேஷ்டர்களே! ராக்ஷசசேனைவெள்ளம் ஆயிரமே, கௌசலை புத்திரராகிய நம்பெருமான்விடுகின்ற அம்புகளும் அவ்வளவே யென்று வாய்க்கணக்கிட்டு உண்மையை அறிவோமானாலும் ஒவ்வொரு அரக்கனுடைய உருவையும், நூறுஅம்புகள் போய்த் தைக்கின்றனவே ஆகையால் அம்புகளுக்கோ கணக்கில்லை, அநேகஆயிரமாமெனலாம்படியிருக்கின்றன. இவ்வளவு அம்புகளையும், ஸ்ரீராமபிரானொருவருமே எய்தாரேயென்றுசொல்லி மகதாச்சரியப்பட்டார்கள். அப்படித் தேவர்கள் பேசிக்கொள்வதைக்கேட்ட முனிசிரேஷ்டர்கள் விதிசிவேந்திராதிதேவர்களே? இராட்சச சைநியத்தில் தோன்றுகிற குடைகளுக்கெல்லாம், கொடிகளுக்கெல்லாம், வீரர்கள்கையிற்றாங்கிய ஜெயம்பெற்ற அபாரமாகிய ஆயுதங்களுக்கெல்லாம், எய்யும் அம்புகளுக்கெல்லாம், எறிவந்த யானைகளுக்கெல்லாம், தேர்களுக்கெல்லாம், குதிரைகளுக்கெல்லாம், பின்னணிப்படைகளுக்கெல்லாம், ஸ்ரீகாகுஸ்தவம்சதிலகர் பிரயோகஞ்செய்த அம்புகளுக்கு, சங்கியைகளில் ஏதேனும் ஒருசங்கியை எடுத்துக்காட்ட இவ்வளவென்று நிர்மானிக்கவல்லவர் நம்மில் யாரேனுமுண்டோ? இல்லையே என்று சொன்னார்கள். அதிசௌரியமாகிய யுத்தஞ்செய்கின்ற அரக்கர்களுடைய கண்டத்திலும் கண்டத்துக்குமேல் கபாலத்திலுமாக அவர்களைத் தம்முடைய பாணங்கள் தொடர்ந்து பற்றி புகுகின்ற தன்மையால் ஸ்ரீராமபிரானவர் சமஸ்தசேதனங்களுக்கும் மூலகாரணமாய் நின்று தோற்றுவித்துத் தமக்குத் திருமேனியாய் நின்ற அவ்வுருவங்களை, அவற்றிற்கு ஸ்தானமாகிய பிர்மாண்டத்தை நிரம்ப அம்புகளை எய்து கலக்குகின்றுரென்னும்படியானார். ஸ்ரீதாசரதிக்கு முன்பாக ஓர்பக்கத்திலிருந்த இரண்டுகோடி ராட்சசவீரர்கள் அவருடைய பாணங்களால் உயிரிழந்து அழிந்தமாத்திரத்தில், மற்ற பக்கங்களில் பிழைத்திருந்த நிசாசரர்களெல்லாரும்கூடி இப்படி ராமபாணத்தால் நாம் விருதாவாக அழிந்துபோவது என்னகாரணம், முன்னே தவங்களைச் செய்துபெற்ற தேவதாஸ்திர சஸ்திரங்களை இம்மனிதன் மேல் எறிந்து அந்த ஆயுதங்களால் அவனுடைய உடல்முழுமையு மூடிவிடுவோம் வாருங்களென்று கோபமூண்டு மொய்த்துக்கொண்டு,நாராயணாஸ்திரமுதல் பிரஹ்மாஸ்திரங் கடைசியாகிய தேவதாஸ்திரங்களை ஒருமிக்க எய்தார்கள். எய்தமாத்திரத்தில் பிரஹ்மாண்டமே கீழ்மேலாகும்போலக் காணப்பட்டது. அங்கு கூடியிருந்த சமஸ்த தேவதாசமூஹங்களும் நடுக்கங்கொண்டன. அப்படிப்பட்ட தேவதாஸ்திரங்களைக்கண்டு கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீராமபிரான் புன்சிரிப்புச்சிரித்து, அந்த அஸ்திரங்களை எல்லாம் அந்தந்த அஸ்திரங்களாலேயே துண்டித்துத் தள்ளி மேலும் தாம் அந்த அஸ்திரங்களை ராட்சசர்கள்மேல் எய்தால் அவர்களால் தடுப்பது அருமையாகும், தடுப்பது அருமையானபோது அந்தப் பாணங்களினது சுவாலையாலே உலகமானது வடவாமுகாக்னியில் மூழ்கினதுபோலப் பொரிந்து சாம்பலாய் விடுமேயென்று திருவுளமிரங்கித் தேவதாஸ்திரங்களைத் தொடாமல் குரூரமாகிய அநேக அம்புகளை எய்து உயிர்பிழைத்திருந்த இராக்கதர்களுடைய தலைகளையெல்லாம் இடிவிழுந்தொடிந்த மலைச்சிகரங்களைப்போலக் கீழேதள்ளினார். இவ்வாறு ராமபாணவருஷித்தால் ஆயிரவெள்ளராட்சசர்கள் யுத்தகளத்தில் உயிர் மாய்ந்துவீழ்ந்தார்கள்.வீழ்ந்தவுடனேபூமிதேவியானவள்தான் இதுபரியந்தம் கீழேசமுத்திரக்கரையும் மேலே ஆகாசமும்தொடங்கி, ஒருகோடியோசனைதூரம் சுமந்துகொண்டிருந்த பாரம்நீங்கி குதுகலித்தாள். சமஸ்ததேவர்களும் நம்முடைய சர்வாபீஷ்டத்தையும் முடித்தோமென்று துன்பம் நீங்கினார்கள். அவர்களுக்குள் இந்திரனானவன் தான் வெற்றிமாலையைத் தரித்தாற்போலச் சந்தோஷித்தான்.—

அபௌருஷேயமாயும், நித்தியமாயும், உள்ளவேதங்கள், ராட்சதர்களால் இதுவரையும் அழிந்திருந்த வரம்புகளைப் பெற்றுயர்ந்தன. ராட்சச தேகபாரத்தால் மடங்கியிருந்த ஆதிசேஷனும் இப்போது தலைகளையுயர்த்தி இளைப்பாறிச் சிரமம் நீங்கினான். தாம் அடையவேண்டிய சம்பத்தை, கைகேசியென்னும் சிறியதாய், தம்பியாகிய பரதனுக்குக் கொடுக்கக்கடவாயென்று சொல்லச்சொல்லியபடியே தம்பிக்குக்கொடுத்துவிட்டு அஜசங்கரேந்திராதி தேவர்கள்செய்த தவத்தின்பொருட்டு மூங்கில்கள அடர்ந்தகாட்டில் பிரவேசித்து,வில்லினது தொழிலால் சத்துருக்கள், யாவர்க்கும் துன்பத்தை நீக்கிநின்ற ஸ்ரீராமச்சந்திரனைத் தரிசித்து அவரைத்துதித்து அதனால் அடையும் பாக்கியம் பெறத்தக்கவர்களெல்லாம் மங்களம்பாடி வாழ்த்தி வணங்கினார்கள். கற்பகமலர்களைக் கைகளால் வாரித்தூவிச் சமஸ்ததேவர்களும் வணங்கும்படி, தீப்பொறிகள் நெருங்கிப்பறக்கின்ற செவந்த கண்களையுடைய மூலபலராட்சதர்கள் யாவரையுங் கொலைசெய்து அந்தரணரங்கத்தில் நின்ற சாக்ஷாது ஸ்ரீகோதண்ட தீக்ஷாகுருவானவர், பேய்க்கூட்டங்கள் நெருங்கவும், நரிகள் மொய்த்துக்கொள்ளவும், பாரமான பிரேதங்கள் விளங்கித் தோன்றுகின்ற மசானத்தில் தாம் ஒன்றியாய்நிற்கின்ற கறுத்தகண்டத்தையுடைய சாம்பசிவ மூர்த்தியைப்போல நின்றார். மேலும் சுவர்க்கலோக பரியந்தம் அடர்ந்துவந்த இராக்கதர்கள் யாவரையும் கொன்று சமைந்த திருக்கோலத்தால் மறுபடியும் சிருட்டி திதி சம்ஹாரத்தொழில் செய்யும்படி சர்வசம்ஹாரகாலத்தில் எல்லாவுயிர்களையும் வாரியுண்டருளும் ஊழிமுதல்வனாகிய மாயப்பிரானென்னும் தனது ஒப்பில்லாத மூர்த்தியையு மொத்திருந்தார். துராத்துமாக்களாகிய அரக்கர்கள்நாசமடைந்தபடியால் தங்கள் மனோவியாகூலந்தீர்ந்த தேவர்கள் அள்ளி அள்ளிச் சொரிந்த குற்றமில்லாத மலர்களாலும், சந்தனத்தாலும், யுத்த ஆயாசந்தீர்ந்து மஹாகாருண்ணியராகிய ஸ்ரீராமப்பெருமான் யுத்தகளத்தைவிட்டு, இளையபெருமாளோடு இராவணன்செய்கின்ற ரணரங்கத்தை நோக்கிச் சென்றார். இங்கேநடந்த யுத்தகாரியங்களை யெல்லாம் சொன்னோம். இனிமுன்னேபயந்து ஓட்டம்பிடித்த வானரசேனையின் செயலையும், வைதிகமார்க்க விரோதியாகிய ராவணன்செய்யும் யுத்தகாரியத்தையும், அவனோடெதிர்த்துச் சுமித்திரைச் சிங்கமாகியராமாநுசர்செய்யும் போர்த்திறமையையும், சொல்லத்தொடங்கினோம்.

மூலபலவதைப்படலம்
முற்றிற்று.

# வேலேற்றுப்படலம்.

முன்னே ஓடிப்போன வானரத்தலைவர்களெல்லாம்போனதைரியம்வந்தவர்களாய்நாம்உடலோடுகூடிவாழ்தலையே விரும்பினோம் அதனால்வந்தபழியைநாமேயல்லாமல்வேறுயார்விலக்க வல்லவர்கள்.ஆகையால் நமக்குவந்தபழியை நாமே துடைக்கும்படி பாபிஷ்டர்களாகிய இராக்கதர்களோடு எதிர்த்து இறந்து வீர சுவர்க்கத்தை அடைவோமென்று தங்களுக்குள்ளே தீர்மானஞ் செய்துகொண்டு பாற்கடல் பெருகிவந்தது போல யாவரும் ஒன்றாகத்திரண்டு வந்து தங்கள் தங்கள் சேனைகளோடு கூடவந்து சேர்ந்தார்கள்.

ஆயிரஞ் சக்கரங்களை யுடையதாய் ஆயிரங் குதிரைகள் பூட்டிச் சூரிய மண்டலத்தைத் தனது ஒளியால் பகைத்துவிளங்குகின்ற ரதத்தின்மேலே, தேவர்களைச்செயித்த வில்லும் முதுகில் அம்பறாத்தூணியு முடையவனாய்த் தனதுவீரபிரதாபம் நான்கு பக்கங்களிலும் பிரகாசிக்கும்படிஇராவணன்ஏறி,நூறுகோடி தேர்வீரர்களும், இருநூறு கோடி குதிரைவீரர்களும், பத்துக்கோடி மதவாறு பெருகுகின்ற யானைவீரர்களும், ஆயிரத்து மூந்நூற்றுக்கோடி பதாதிவீரர்களும், ஆண்சிம்ஹத்துக்குச் சமானமாகிய தன்னைச்சூழ்ந்துவரவும், திரிலோகத்திலும் அப்புறத்துள்ள உலகத்திலும், எதிர்க்கத்தக்க வீரர்களுண்டாயிருந்தால் வரலாம், வரலாமென்று அழைப்பதுபோலப் பெரிய ரணபேரியும், தொனிக்கின்ற சங்கங்களும், இடிபோல குமுறுகின்ற எக்காளமும், பதினாலுலோகமும் கேட்கும்படி ஒலிக்கவும், யுத்தகளத்தேவந்து சேர்ந்தான். அப்படிப்பட்ட ராக்ஷசர்களுக்கு ராக்ஷச னென்றும் அசுரர்களும், சற் கருமத்தைச் செய்கின்ற தேவர்களும் செய்த தீவினைப்பயனும், சுத்தவீரர்களது நெஞ்சையும் சுடுகின்ற ஒப்பற்ற நெருப்பென்று சொல்லும் படியாகிய கொடிய ராவணனையும், உயர்ந்த விசாலமாகிய ஆகாயத்தையும், மறைப்பதாகிய ராக்ஷச சேனாசமுத்திரத்தையும், வானரவீரர்கள் கண்

டார்கள். கண்டமாத்திரத்தில் இந்த நெருங்கிய யுத்தத்தில் ஸ்ரீராமகாரியமாக நாமெல்லோரும் பிராணனைவிடுவதே நமக்குச் சுகிர்தமென்று நிட்கெண்டு நமக்குள்ளே அணிவகுத்து நின்று இடிகளுக்குச் சமானமாகிய மலைகளைக் கையில் பேர்த்தெடுத்து எமனும் நடுங்கிக் கொள்ளும்படி தோள்களைக் கொட்டி அண்டகோளங்கள் நிற்கும் நிலையுந்தமோற அட்டகாசஞ் செய்து ஆரவாரித்தார்கள். இதுகண்டு கொடிய ராவணனுடைய சேனைகளும், தம்முயிரை யுத்தத்தில் விடும்படி நிச்சயங்கொண்டு நின்றன. வானர சமுத்திரமும் அரக்கர்களோடு எதிர்த்து நின்றது. வானரவீரர்களும், ராக்ஷச வீரர்களும், தங்கள் கண்களில் நெருப்புப்பொறிகள் பறக்கவும், மலைகளும், ஆயுதங்களும், படுவதினால் நெருப்பில் உருக்கிய செம்பு தெறிப்பதுபோல அவர்களுடல்களினின்றும் இரத்தத்துளிகள் ஆகாயத்தில் தெறிக்கவும், ஒருவருக்கொருவர் நெருங்கிச் சண்டையிடும்போது கடினமாகிய தலைகள் நீங்கிய கவந்தங்கள் துள்ளித் துள்ளி எழுந்து மேலே ஒத்துவதினாலும், வீரர்களுடைய தேஹங்களினின்றும் உதிரத்துளிகள் சிதறி மேகங்களில் படிவதினாலும், ஆகாயமெல்லாம் சூரியோதய மண்டலத்தை ஒத்திருந்தது. அங்கங்கே தலைகளும், உடல்களும், உதிரமும், ஆயுதங்களும், மற்றவைகளும், சிதறிக்கிடப்பதினால் பூமி முழுமையும், யுத்தகளம்போலவே காணப்பட்டது. இறகுகள் கட்டிய அம்புகளால், வானரக்கூட்டங்கள் இறந்துபோய், குத்தித் தின்பவராகிய மாமிசத்தில் நின்றும் ஒழுகும் ரத்தத்தில் முழுகி, ரத்தமொழுகாநின்ற தங்களுடைய உடல்கழிக்கும்படியாக நெருங்கிக் கூரிய ஆயுதங்கள் மேலும்மேலும் படுவதினால், பெருமையாகிய சேனாசமுத்திரத்துக்கு மத்தியில் முடர்கள் மிதக்கும்படி அந்த ரக்தத்திலேயே அமிழ்ந்தார்கள். ராக்ஷச சேனையில், ராக்ஷச ஸ்திரீகள் மேலே விழுந்தழுகின்ற அழுகுரலைக் கேட்டுக் குற்றுயிராய்க் கிடக்கின்ற தங்கள் நாயகராகிய அரக்கர்கள் தங்களிடத்துவைத்த அன்பால் கண்ணைத் திறந்து பார்த்துப் புன்சிரிப்புச் சிரிக்கக்கண்டு அந்த ராக்ஷசஸ்திரீகள் தாங்களும், இறந்த அவர்களுயிரோடு கலந்து, தேகத்தோடு கூடியிருந்த காலத்தில் அநுபவித்த பழமையாகிய சுகபோகம் இப்போதும் உண்டாகவும், காதலர்கள் நினைசெய்வை நினைக்கவும்; சேர்ந்து வீரசுவர்க்கம் அடைந்தார்கள். பதினாலுலோகமும் ஊழிகாலத்தில் நிலைகுலைவதுபோல நடுக்கங் கொள்ளும்படி சம்ஹரிக்கின்ற குரூரமாகிய யுத்தத்தைப் பார்த்த இராவணன் இன்னும் சிறிது நேரம் நாம் தாமசிப்போமே ஆனால் நம்முடைய சேனை முழுமையும் நாசமாய்விடுமென்பதை நினைத்துக்கொண்டு சுற்றிலும் பார்த்தான். பார்த்தபோது ஒருபக்கத்தில் வானரவீரர்கள் எறிகின்ற மரங்களும், கல்லுகளும், ராக்ஷசர்களுடைய வில், வாள், எழுத்தடி, சூலம், அரத்தையும் வாய்மடியச் செய்யும் வேல், முதலிய கூர்மையாகிய ஆயுதங்களை நொறுங்கும்படி செய்யவும், ஒருபக்கத்தில் தேகவலியும், தனுர்வேத வித்தையுமுள்ள இளையபெருமாள் போர்செய்யவும், தீப்பொறி பறக்கின்ற கண்களையுடைய யானைக்கூட்டங்கள் தம்மை யலங்கரித்த அலங்காரங்களோடு துண்டுபட்டு விழும்படியாகவும், பல குதிரைக்கூட்டங்கள் உயிர் சுழன்று விழும்படியாகவும், தேர்க்கூட்டங்கள் சக்கரம் தட்டுகொடுங்கை முதலானதுகள் கழன்று சிதைந்து விழும்படியாகவும், அநுமானும், அவர்பின்னே மற்ற வானரவீரர்களும், நெய்கின்ற குழலும், அதனைத் தொடர்ந்து செல்கின்ற நூலும்போல, அரக்கர் சேனையுட்புகுந்துபோர்செய்யவும்,இவ்வளவென்று அளவு செய்து சொல்லக்கூடாத விஸ்தாரமாகிய நிறைந்த பெரியராக்ஷச சமூஹத்தை,எமனுக்கு விருந்தும் உண்டென்றுசொல்லும்படி கையில் வில்பிடித்துச் சாரிகைதிரிகின்ற வீரராகியராமாநுஜர், தம்அம்புகளால்கொல்லவும்,பராக்கிரமமுள்ள சிம்ஹமும், பின்னிடத்தக்க இடியையொத்த குரங்குகள், தங்கள் பல்லுகளால்ராக்ஷசர்களுடைய உடலைச்சின்னபின்னப்படக் கடித்துக்காயப்படுத்துகின்ற அவ்வளவு அத்தராக்ஷச வீரர்களுடைய ஆயுதங்கள் வானரங்களுடையஉடலைக் காயப்படுத்தாதிருக்கவும்,கண்டுஅதிர்ந்து, கொடியோனாகிய அந்தத்தசமுகன், ஆ! ஆ! நாம் இனிச்சிறிது பொழுது சும்மா இருப்போமாகில், அரக்கர்களுடைய உயிரையெல்லாம் யமன் உண்டுவிட்டு யுத்தகளத்தை விட்டுப்போவான். ஆகையால் நேரிட்ட இந்தக் கொடிய யுத்தத்தை நான் ஒருக்ஷணகாலத்தில் செய்து வெற்றிமாலையைத் தரித்துத் திரும்புவேனென்று அதி கோபித்துடனுகி, வேகத்தால் வாடைக்காற்றை ஒத்தவைகளும், தடையில்லாமல் உருவிப்பாய்வதால் இடியை ஒத்தவைகளும் மலைகளைப் பிளப்பவைகளும், அண்டத்

தைச் சிறு துண்டுகளாகச் செய்பவைகளும், பாய்ந்து திக்குகளை இவ்வளவுதூரமுள்ளவையென்று அளப்பவைகளும், எதிர்ப்பவருடைய உயிரை அபகரிப்பதிஞல், யாவராலும் தடுக்கக்கூடாத யமதூதர்களை ஒத்தவைகளும் ஆகிய கொடிய அம்புகளை அணியணியாக வானரவீரர்கள் மேலே பிரயோகித்து அவர்களை ஹதம்பண்ணினபோது, ராவணன் யாளியைப்போலவும், வானரவெள்ளம் அந்தயாளியை எதிர்த்த நாய்க் கூட்டத்தைப் போலவும், மேலும் ராவணன் நடுராத்திரியில் வந்த பத்திரகாளியைப் போலவும், வானரக்கூட்டம் வெளிநிலத்திலே சிந்திய பூளைமலர்களைப்போலவும் காணப் பட்டார்கள். இவ்வாறு குரூரபாணங்களை பிரதாப லங்கேசுரன் இடைவிடாமல் எய்தபோது, குரங்குகள் எதிர்க்கமாட்டாமல் திக்குவிதிக்குகளாகச் சிதறி ஓட்டமெடுப்பதைக் கண்ட ஸ்ரீரகுநந்தனருடையதிருத்தம்பியார், வானரங்களை ஓடுவதை மரித்து நீங்கள் அஞ்சவேண்டாம் அஞ்சவேண்டாமென்று கருணைசுரந்து திருவாக்களித்து, அஞ்சனபுத்திரருடைய திருத்தோளாகிய தேரில்மேல் ஆரோஹணித்தருளி, எரிந்துகொண்டிருக்குங் கோபாக்கினியை யுடைய ராவணனுக் கெதிரேசென்று எதிர்த்தமாத்திரத்தில், முகத்தில் தீயைக் கக்குகின்ற அம்புகளை நூறுகோடிக்கு அதிகமாகப் பிரயோகிக்க, அதுகண்டு இளையபெருமாள் சீக்கிரமாக வில்லைவளைத்து அவன் தொடுத்தஅளவு அஸ்திரங்களை எய்து காற்றுமுகத்தி லகப்பட்ட பஞ்சிபோலத் திக்குகளிற் போய்த் துண்டு துண்டுகளாகச் சிந்தும்படி ராவணனுடைய அம்புகளை அறுத்துத்தள்ளினர். அறுத்துத்தள்ளின உடனே அவருடைய விசாலமாகிய தோள்களிலும், மார்பிலும், படும்படி பத்து அம்புகளைச் செலுத்தினன். அதனல் சிறிதும் மனந்தளராமல் அதிககோபங்கொண்டு அந்தத் துன்மார்க்க னுடைய தோள்களிலும், நெஞ்சிலும், தைக்கும்படி பத்துக்கணைகளை எய்தார். அக்கணைகள் தைத்ததினல உபத்திரவப்பட்டு மறுபடியும் அம்புகளைத் தொடுவதற்குள்ளாகஇலக்ஷுமணப்பெருமாள் மிகவும் தடுக்கப்படாத விசையாகத் தொடுத்த அம்புகளை, ராவணன் தானும் அம்புகளைப் பிரயோகித்துப் பொடிப்பொடியாகச்செய்துவிட்டு ஓகோ? ஏது மதிகெட்டுவந்து, இந்தச் சிறுவன்கையி லகப்பட்டுக்கொண்டோம் இவன் நம்மைச் சும்மா விடுகிறவனகக் காணவில்லையே ? அம்புகளால் இவனை வெல்லலாமேல்ருல், நம்மால் முடியாதுபோலத் தோன்றுகிறது. திரிலோகங்களையும் வெற்றிபெற்ற நாம் திரும்பிவிடுவோமானல் அதிகப்பழிப்பாய் முடியுமே ? இனி என்னசெய்யலாம் நாம் தேவதாஸ்திரங்களைப் பிரயோகித்தால் அந்தத்தேவதாஸ்திரங்களையே தொடுத்துத் தடுத்துவிட்டு மேலும் அஸ்திரங்களை நம்மேல்எதிகின்ற சமர்த்தனயிருக்கின்றன். இவன் நம்மைமாத்திரமோ! எல்லாவீரர்களையும், அநாயாசமாக வெல்லுவான். சமஸ்தப்பிராணிகளுடைய உயிரையும் வாங்கவல்ல யமனையும் எதிர்ப்பட்டால் உனக்கு எவ்வளவுவல்லமையுண்டென்று அவனுடைய உடலைப்பிடித்துப்பார்க்கவும் வல்லவன். தன்னுடைய தமையனைப்போல எந்தவுலகங்களையும் சுட்டெரிக்குஞ் சாமர்த்தியவான். இவன் யாருக்குந் தோற்கான். நாம் முன்னே சிவனிடத்தில் தவஞ்செய்து பெற்ற மோகனஸ்திரந்தான் இவனை வெற்றி யழியச்செய்யும் அந்தஅஸ்திரத்தைஎவிக் காகங்கள் மொய்த்துக்கொண்டிருக்கின்ற ரணக்களத்தில் சீக்கிரத்திலே விழுந்தள்ளுவேனென்று ஆலோசித்துத் தீர்மானஞ் செய்துகொண்டு அந்த அஸ்திரத்துக்கு வேண்டிய சிவமந்திரத்தைத் தியானித்து மோகனஸ்திரத்தை எடுத்து வில்லில்தொடுத்து, எதிரே நிற்கின்ற ராமாநுஜர்மேல் பிரயோகித்தான். ராவணனவன் உபமந்திரித்துப் பிரயோகித்த மோகனஸ்திரத்தைக்கண்டுசமீபத்தில் நின்றுகொண்டிருந்தவிபீஷணழ்வான் லக்ஷுமணப்பெருமானைநோக்கிச் சுவாமீ!தேவரீர் ஸ்ரீமகாவிஷ்ணு அஸ்திரத்தை எய்து அந்த அஸ்திரத்தை அறுத்துத்தள்ளுமென்று சொல்ல, ஓம் என்று, ஸ்ரீமகாவிஷ்ணு அஸ்திரத்தால் சிவமோகனஸ்திரத்தை அறுத்துத்தள்ளினதைக்கண்டு கோபங்கொண்டு, சமீபத்திலிருந்து இந்த விபீஷணன் “ குலத்துக்கூனம் கோடரிகாம்பு „ என்பதுபோல நம்முடைய சத்துருக்களுக்குச் சமயோசிதமாக உபாயங்களைச் சொல்லிக்கொண்டு வருவதினலே யல்லவோ நமக்கு இவ்வளவுகேடும் சம்பவித்ததென்று தனக்குள்ளேநினைத்துத் தெய்வத்தச்சனகிய மயனென்னுந் தன்மாமன், மகளாகிய மண்டோதரியைத் தனக்குப் பாணிக்கிரகணஞ் செய்து கொடுத்த காலத்தில் கொடுத்ததும், பிரஹ்மாவினுடைய யாகத்தில் உற்பத்தியானதும், சக்கராயுதத்தையும் வச்சிராயுதத்தையும் ஒத்ததும், பாய்ந்து உருவத்தலைப்பட்டால் சுத்தவீரர்களுடை

ய விரப்பிரதாபத்தையும் ஹஸ்திசையையும் கட
ந்து உருவித்தக்கதும், ஆகிய வேலாயுதத்தை
எடுத்து,தன்னெதிரியை இப்போதழித்த தன்
தம்பிமேல் பிராணனை வாங்கும்படி அதிக
விசைகொண்டு எறிந்தான். எறிந்தபோது
விபீஷணாழ்வான் அந்தவேலினுடைய நிலை
மையை எல்லாம் அறிந்தவனாகையால் ஓ ரா
மாநுஜனே! இந்த வேல் என்னுயிரை நாசம்
பண்ணாமற்போகாது அதைத் தடுக்கும்படி
யான உபாயமோ ஒன்றுமில்லை என்று விண்
ணப்பஞ்செய்துகொள்ள, அதுகேட்டு மகா
நுபாவராகிய லக்ஷ்மணப்பெருமாள் அதை
இதோ தடுத்துவிடுகிறேனென்று சொல்லி,
எதிரேநின்று அவரெய்த அம்புகளும், எறிந்த
எல்லா வாயுதங்களும், எப்படிஆய்விட்டதுக
ளென்றால், பரமவைதிக மார்க்கானுசாரியாய்ப்
ப் பரமேகாந்தி நிஷ்டராயுள்ள பாகவத சி
ரோமணியாகிய ஒருமகாபுருஷனை, அவைதி
கமார்க்கானுசாரிகளாகிய துஷ்டர்கள் அறி
யையால் தூஷிக்கும் தூஷணங்கள், அம்ம
காபுருஷனை அடையாததுபோல ராவணன்
எறிந்தவேலை ஒன்றுஞ்செய்யாமற் போய்வி
ட்டதுகள். அங்கே ஆகாசமார்க்கத்தில் பார்
த்துக்கொண்டிருந்த தேவர்களெல்லாம் வி
பீஷணாழ்வான் இந்த வேலுக்குத் தப்பிப்பி
ழையானென்று பரிசுத்தமாகிய மனம் வாடி
னார்கள். அதுசமயத்தில் இளையபெருமாளா
னவர், நாம் எய்தவைகளும் எறிந்தவைகளு
மாகிய ஆயுதங்களையெல்லாம் லக்ஷியம்பண்
ணாமல் வருகின்றவேலானது நம்முடைய தி
ருத்தமையனை அடைக்கலமடைந்த விபீ
ஷணாழ்வானுடைய உயிரைவாங்கும். அப்ப
டி உயிரைவாங்க விபீஷணாழ்வான் அழிவா
னேயானால் சாதுக்களாகிய தேவர்களும் கை
கொட்டி நம்மை நகைப்பார்கள். தம்மை
அடைக்கலமடைந்தவனுடைய உயிரைத் தங்
கள் நிமித்தம் சத்துருவானவன் கொல்லப்
பார்த்துக்கொண்டிருந்தார்களென்கிற பழி
வந்து நம்மை அடைவதற்குமுன்பாக இந்த
வேலை நாமே ஏற்றுக்கொள்வோம், ஏற்றுக்
கொள்வதினால் நமக்குத் தோற்புவந்தபோதி
லும், மகாகீர்த்தி நிலைநிற்கும். இந்தத்தரும
மும் நம்மைச்சேரும். ஆதலால் இனிஆலோ
சிப்ப தென்னஇருக்கிறது. இந்தவேலை நா
னே ஏற்றுக்கொள்வோமென்று எதிரேயோடி
விபீஷணருக்கு முன்னேசென்று தமது தி
ருமார்பைக் காட்டிக்கொண்டுநின்றான். அப்
படிநின்ற ராமாநுஜருக்குமுன்னேயோடி விபீ
ஷணாழ்வான் நிற்பார். அந்த இருவரையும்
விலக்கி நானே இந்த வேலை ஏற்றுக்கொள்
ளுகிறேனென்று அங்கதப்பெருமாள்போய்
நிற்பார். அம்மூவரையும்தடுத்துச் சுக்ரீவம
ஹாராஜரெதிரே நிற்பார். ஆ! ஆ! நன்றாயிருந்
தது ஸ்ரீராமபிரானுக்கு அடிமை நாமனைவரு
மாய்ப்போய்? இந்த வேலை நானே ஏற்றுக்
கொள்ளுகிறேன் நீங்களெல்லோரும் அப்பு
றத்தே போங்களென்று சொல்லித்திருவடிக
ளாகிய அஞ்சநேயர் எல்லாருக்கும் முன்னே
போய்நிற்பர். இந்தப்பிரகாரமாக ஒருவரை
ஒருவர்தடுத்து முன்னேபோய்நிற்கிறதும்,நி
ற்கிறவரைத்தடுத்து மற்றொருவர் முன்னேநி
ற்கிறதுமாகிய இந்தத்துக்ககரசமாசாரத்தை
இப்படிப்பட்டதென்று சொல்லிமுடியுமோ
முடியாது. ஒருவர்முன் ஒருவராக நின்றவர்
களையெல்லாம் நீநில்நீநில்லென்றுவிலக்கிவிட்
டு ஸ்ரீராமாநுஜரானவர், நானேஏற்றுக்கொள்
ளுகிறேனென்றுபோய், தேவர்கள் கண்களி
ல் கைகளால்மோதி அலறைந்து அழவும் அந்
தவேல் தமது முதுகை உருவிச்செல்லவும்
திருமார்பி லேற்றுக்கொண்டார். வேலையே
ற்றுநின்று இளையபெருமாள், சாய்ந்தமாத்தி
ரத்தில் இதுவேநமக்குப் போதுமென்றுசீக்
கிரமாகத்தேரைச்செலுத்திக்கொண்டுபோகி
ன்ற பாபிஷ்டனாகிய ராவணனை அடா! துரா
சாரமுள்ளகள்ளா? நீயெங்கேதப்பித்துக்கொ
ண்டு ஓடுகிறாய் நில்லடாநில்லடா என்றுசொ
ல்லி, எதிரேமறித்துக்கொண்டு புருஷசிம்ஹ
த்தைப் போலச்சீறி விபீஷணாழ்வா னவ
ர் தம்முடைய கையிலுள்ள தண்டாயுதத்தா
ல் தேவர்களுந் தலைநடுக்கங்கொள்ளத் தேரி
ற்கட்டிய குதிரைகளையும் சாரதியையும் வி
ழும்படி மோதியடித்தார். உடனே ராக்ஷச
குலாதிபன்,தேரின்நின்றெழும்பி ஆகாயமார்
க்கத்தில் நின்று அதிகோபத்தோடு கொடிய
பத்தம்புகளை விபீஷணாழ்வானுடைய திரு
மேனியில் பதியும்படிப் பாய்ச்சிச் சமீபத்
தில் நின்ற வாயுபுத்திரர்மேலும் ஆயிரமம்பு
களை எய்து உயுத்தமுடிந்ததென்று குதூக
லத்தோடு இலங்காபட்டணமேநோக்கிச்செ
ல்லும்போது சிரஞ்சீவியாகிய விபீஷணாழ்
வானவர், பலவகையாலும் ஆராய்ந்து சர
ணாகதிசெய்த என்பொருட்டாகச் சர்வலோ
காதிபதியாகிய பாக்கியவானனவர், ரணக்க
ளத்தில் சோர்ந்து விழுந்தனர். அடா! ராவ
ணா? அல்மதி! வஞ்சனைபுத்தியால் நீ எங்கே
ஓடிப்போவது. உன்னைக்கொலைசெய்து உன்
னோடு நானுஞ் சாகிறேனென்று சொல்லித்
தேடித்துப் பின் தொடர்ந்தார். அதுகண்டு

ராவணனானவன், செயமோ எனிட்டசத்திலா
னாகு விபீஷணனென்னும் இந்தச் சாதுப்பி
ராணியைக் கொல்வதினால், இனிப் பிரயோச
ன மொன்றுமில்லையென்று தனக்குள்ளே ஆ
லோசித்துக்கொண்டு, நில்லாமலும் விபீஷ
ணாழ்வானுடனே ஒன்றும் பிரதியுத்தரம் பே
சாமலும், பொன்மதில் சூழ்ந்த தன்னகர
மே போய்ச்சேர்ந்தான். இப்பால் விபீஷ
ணாழ்வானானவர் இரக்கத்துக்கு உருவம்இவர்
தாமென்று கண்டோர் சொல்லும்படியாக
யுத்தகளத்தில் கிடக்கின்ற இளையபெருமாளு
டைய இரண்டு திருவடிகளண்டையில் வா
யைத்திறந்து கதறி அழுது,அளவுசெய்ய மு
டியாத அன்புடையவராய்ப்புலம்பிக்கொண்
டிருக்க, அதையும் இராமாநுஜருக்கு நேரிட்
ட அவஸ்தையையுங்கண்டு வானரசைநியமு
ம், வானரத்தலைவர்களும், துக்கசாகரத்தில்
மூழ்கினார்கள். இவ்வாறு கதறி அழுதுகொ
ண்டிருந்த விபீஷிணாழ்வானானவர், பொன்
னும் கண்டால் இரும்பாகத்தக்க தேககாந்தி
யையுடைய இந்த மேருமலைக்குச் சமான
மானவர், பரமபதித்தபடியால் என்னை அடி
மைகொண்ட கோதண்டதீட்சா குருவானவ
ர் இனி உயிரோடிருந்து வாழார். ஆகையால்
பிராணனோடிருந்து என்னபயன் ?. இந்தக்ஷ
ணத்தில் நானிறக்கின்றேனென்று சொல்லிப்
பிரலாபிக்க, அதுகண்டு சாம்பவர், விபீஷ
ணாழ்வானே சற்றே பொறும்பொறுமென்று
சொல்லி, முன்னே சஞ்சீவி மலையைக்கொ
ண்டுவந்து யாவரையும் பிழைப்பித்த அஞ்ச
னாதேவி புத்திர ரத்தினமிருக்கும்போது நா
மெல்லோரும் உயிருக்காகத் துக்கித்துக்
கொண் டிருக்கமாத்திரம் அறியோம் வேறே
நம்மாலொன்றுமாகாது.இந்தவீரர்களுக்கு
வீரராகிய அநுமானானவர் நினைப்பளவிலே
லோகமுழுதுந்தேடி உயிர் தரத்தக்க நல்ல
மருந்தை இதோ கொண்டுவந்து தரப்போகி
றார். யாவரும் இனையளவுந் துக்கப்படா திரு
ங்களென்று திடஞ்சொல்லி, ஆஞ்சநேயரு
டைய மார்பில் தைத்திருந்த அம்புகளை யெ
ல்லாம் மெல்லெனப்பிடுங்கி ஓமஹாநுபாவ
ரே? நம்முடைய சுவாமியாகிய ஸ்ரீராமபிரா
னானவர் இளையபெருமாளடைந்த இந்தவரு
த்தத்தையுங் கண்டு சகிப்பாரோ? சகிக்கமா
ட்டாரே. நீரும் சீக்கிரத்தில் போய்ச் சஞ்சீ
வியைக்கொண்டுவராமல் இருப்பீரோ இருக்
கமாட்டீரென்றுசொல்லினர். சாம்பவர்சொ
ன்னகருத்தை ஆலோசித்துஅந்தஆஞ்சநேய
ரும் சடக்கென எழுந்து அநேகபிரதேசங்க

ளைக் கடந்துசென்று, முன்னே சஞ்சீவியுள்
ள திசையைநோக்கிப்போய்த் தப்பாமல் ப
லிக்கத்தக்க அந்த நல்லமருந்தை மலையோடு
கொண்டுவந்து மறுபடியுங்கொண்டுபோய்ச்
சரியான அடையாளங்களைத் தாமே குறிப்
பாகப்பார்த்துப் பொன்போலிருந்த இட
த்திலேயே வைத்தார். அதை மறுபடியும் இ
ப்போது கொண்டுவருவதினால் வருத்தமுமு
ண்டோ இல்லை யல்லவா? அப்படி வருத்தமி
ல்லாமலே அந்தச் சஞ்சீவி மருந்தைக் கொ
ண்டுவந்து சேர்ந்தார. சஞ்சீவிமருந்தின் கா
ற்று மேலே படிவதற்கு முன்னேதானே இ
றந்து போனவர்களுக் கெல்லாம் உயிரைத்
தந்து உற்சாகத்தை உண்டாக்கிய தென்றால்,
நொந்தவர்களுடைய நோவைத் தீர்ப்பது
அந்த மருந்துக்கு அற்பமாகுமல்லவா ! ஒரு
நொடிப் பொழுதுக்குள்ளாக ராமாநுஜரா
னவர் இந்திரலோக வாசிகளெல்லாரும் சந்
தோஷங் கொண்டாடும்படி உயிர்த்தெழுந்
தார். எழுந்தவுடனே ஸ்ரீராம கைங்கரிய துர
ந்தர சீலராகிய அநுமானை இரண்டு திருக்கர
ங்களாலும் சேர்த்தணைத்து, என்னப்பனே!
ஆஞ்சநேயா!தாரகமந்திரவாச்சியராகிய ஸ்ரீர
குகுலோத்தமனை அடைக்கலமடைந்த விபீ
ஷணாழ்வானையும், பட்டுருவிச்சென்று அவரு
ம் விழுந்தனரோ, விழுந்தாரில்லை யல்லவா
வென்று வினவி, அவர் தமக்கு ஓரபாயமு
மில்லாமல் தம்மைத் தொழுதுகொண் டிரு
ப்பதைக் கடாக்ஷித்து, பார்ப்பதற்கு முன்
னுண்டாயிருந்த அச்சமும், துன்பமும், சி
றிதும் இல்லாதவராய், வேதவிருத்தா சாரமு
ள்ள ராவணன், தன் புத்திரர் முதலிய பந்
துக்களோடு நாசத்தையடைந்து, சர்வலோ
க சரணியாகிய தம்முடைய அண்ணியார்
சிறையிலிருந்து நீங்கினாற்போலக் குதூஹல
மடைந்தார். சுத்தசத்துவ ஞானிகள், சேத
னனுக்குச் சொரூப தருமமென்னும் பொ
ருளானது, கைங்கரியமே யல்லாமல் வேறல்
லவென்று இப்போது அநுமான்செய்து கா
ட்டிய தன்மையை ஆலோசித்துப் பார்த்தா
ல், இவ்வித பரமகைங்கரிய சீலராகிய அநு
மானைத் தமக்குத் தாஸனாக உடைய ஸ்ரீரா
மபிரானுக்கு, செய்தல் அருமையாகிய காரி
யமும் உண்டோ ? இம்மைமறுமைப் பயன்
களை யோசித்துப்பார்த்தால் தருமமேசெய
ம் அடையும் பாவமே அபசயம் அடையுமெ
ன்று பேசி அங்கிருந்த இளையபெருமாளும்
சுக்கிரீவமஹாராஜரும், விபீஷிணாழ்வானும்,
ஆஞ்சநேயரும், மற்ற வானரப்படைத்தலை

வர்களும் எழுந்து, ஆகாயத்தை அளாவிய அநேக யோசனை பர்வதங்களைக்கடந்து ரத்நாகரத்தைத் தாண்டிச் சென்று ஸ்ரீராமபிரானை தண்டனிட்டு நின்றார்கள். அவர்களைநோக்கி யுத்தம் என்னமாய் முடிந்தது என்று வினாவினர். அதுகேட்டு, அதிமேதாவியாகிய சாம்பவான், சுவாமியினுடைய திருவுளத்துக்கு ஏற்கும்படி, யுத்தத்தில் ரதகஜதுரக பதாதிகளைத் துவம்சப்படுத்தி ராவணன் எய்த மோகநாஸ்திரத்தை விபீஷணனுடைய சொல்லினால் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அஸ்திரத்தை இளைய பெருமாள், பிரயோகித்து அழித்ததையும், அதுநோக்கி அந்தத் தசமுகன், விபீஷணன்மேல் வேலெறிய அதை யானேற்றுக்கொள்ளுகிறேன் யானேற்றுக்கொள்ளுகிறேனென்று, சுக்கிரீவமஹாராஜா முதலானோர் சென்றதையும், அவர்களை விலக்கிவிட்டு இளையபெருமாள் ஏற்றுக்கொண்டதையும், உடனே அநுமானானவர் தாவிச்சென்று சஞ்சீவி கொண்டுவந்ததையும், இலக்ஷ்மணர் உயிர்த்தெழுந்ததையும், மற்றுஞ் செய்திகளையும், சாங்கோபாங்கமாகச் சொன்னார். சொன்னதாகவெல்லாவற்றையும், கேட்டருளி ஸ்ரீராமச்சந்திரரானவர், வாயுபுத்திரனைத் திருமார்போடிறுகத் தழுவி, உன்னை யான் பெற்றிருக்கின்றேன், இனிப் பெறவேண்டியது முண்டோ? நவவியாகரண பண்டிதனே! யாதொரு துன்பமும் அடையாத ஆயுசை அடையக்கடவாயென்று திருவாய் மலர்ந்தருளினார். மேகம் பொழிவதுபோல இரண்டு தாமரசமலர் போன்ற நேத்திரங்களிலிருந்தும், தாரை தாரையாய் நீரொழுக விம்மி விம்மியழுது, உயிர் பரத்திலே செல்லத் தனித்துநின்றவுடலை ஒத்தவராய், மிகுதியும் அன்புள்ளராமாநுஜர்முன்னேயிரிவெங்கிற துன்பத்தைத்தமக்குக் கொடுத்துவிட்டு நிரதிசயானந்த பரமபதத்தை அடைந்த பிதாவாகிய தசரத சக்கரவர்த்தியைக் கண்டாற்போலத் தமது அண்ணனாகிய ஸ்ரீராமபிரானைக்கண்டு நமஸ்காரஞ்செய்து சமீபத்திலே போய்நின்றார். அவ்வாறுநின்றஇளையபெருமானைச்செவ்வையாக உற்றுப்பார்த்து என்னப்பனே லக்ஷ்மணா! நம்மைச் சரணமடைந்த விபீஷணனுக்காக உன்னுயிரைக்கொடுத்த தாதுர்த்தியமானது, நம்முடைய மரபுக்குத் தகுதியானதே. அனபாயினியனீதியைக்கைப்புடையானே! லக்ஷ்மணா! அப்படி உயிர்கொடுக்கத் துணிந்தாயல்லவா, அதற்குச்சந்திரப்பிரமாணம் வேண்டியதில்லை. செய்வதற்கு அடுத்ததேயாகும், முன்னாலே நம்முடைய வம்சத்தில் ஒரு புறாவின் பொருட்டுத் தன்னுடைய தேகத்தை அரிந்து கொடுத்த தெய்வத்துக்குச் சமானமாகிய சிபிச் சக்கிரவர்த்தியும், உனக்கு ஒப்பாகமாட்டானெனின் மற்ற எவர்களை உனக்கு உவமை சொல்லுகிறது. மிகுந்த அருளுடையாரென்பவர்கள் தங்களை அடுத்தவருக்கு ஓராபத்து நேரிடக்கண்டால், தங்களில் ஒன்றுக்குச் சம்பவித்த இடரைக்கண்டு சகியாத பசுவுங்கன்றும்போல இரக்கமடைவார்களல்லவா? என்று சொல்லி, நீலநிறச் சூரியனையொத்த தேககாந்தியையுடைய ஸ்ரீராமமூர்த்தியானவர், தமது திருத்தம்பியார் பூண்டிருந்த கவசமுதலிய யுத்தபூஷணங்களையெல்லாம் ஒவ்வொன்றாக் கிரமமாய்க்களைந்து வில்லை ஆஞ்சநேயர் கையிற்கொடுத்துவிட்டு தலையில்சுருண்டுநீண்டு தொங்குகின்ற கேசத்தால், மேலே மேகந்தவழ்கின்ற மேரு மலையைப் போல விளங்குகின்ற லக்ஷ்மணருடைய ஆயாசத்தை ஆற்றிக்கொண்டிருந்தார்.

வேலேற்றுப்படலம்
முற்றிற்று.

---

## வானரவீரர்களங்காண் படலம்.

---

இந்தசமயத்தில் அளவில்லாதவானரசேனையோடு சுக்கிரீவமகாராஜாவும், ஸ்ரீராமபிரானுக்கு முன்னேநின்று தண்டன் சமர்ப்பித்து, ராக்ஷசசமூக மிகுதியைக்கண்டு வானரசேனாவீரர்கள் நடுங்கித் திகைத்துத் தைரியமிழந்து இன்னது நாம் செய்யவேண்டுமென்பதையும் யோசியாமல் பயமடையும்படியாயும், திரிலோகங்களுக்குள் வசிக்கின்றவர்களிலும் அதிகக்கூட்டமாயும், வடவாமுகாக்கினி பரந்து உயர்ந்து எரிந்து வருவதுபோன்றும், மூலபலம்வந்ததே! அதுஎன்னமாய் முடிந்ததென்று விண்ணப்பம் செய்துகொண்டனர். அதுகேட்டருளிய ஸ்ரீரகுநாயகர், மஹாராஜாவே படைத்தலைவர்களும் நீயுமாக விபீஷணாழ்வானோடு யுத்தகளமேபோய்ப்பாரென்றருளிச்செய்தனர். உடனேவானரவீரர்களெல்லாம், மூலபலம் மடிந்ததைக் காணவேண்டுமென்கிற ஆசையானது, தங்களைத் தூண்டிவிடுதலாலே, சடக்கென எழுந்திருந்து விபீஷணாழ்வானைநோக்கி ஐயா,எழுந்

திருந்து வாருமென்று அழைத்துக்கொண்டு, அதிதுரையாய்ப்போய், கழுகுகளும், பருந்துகளும், பேய்களும், பூதங்களும், மற்ற மாமிச பட்சணிகளும், கூட்டங்கொண்டிருக்கின்ற போர்க்களத்தை, தங்கள் கண்களால் பார்த்தார்கள். பார்த்தமாத்திரத்தில் திப்பிரமையாய் நின்று ஆ! ஆ! இவ்வளவுபேரையும் ஒருவிலுடனே ஸ்ரீராமபிரான், ஒருவர் சகாயமும்வேண்டாமல் கொன்றாரல்லவோ? அதனால் அவர் திருமேனிக்கு என்ன ஆயாசந்தோன்றிற்றோ வென்று கண்ணீர் விட்டு அழுதார்கள். இத்தனைராக்ஷசர்களையும் ஸ்ரீரகுநாயகர் எப்படி கொலைசெய்தாரோ வென்று உடலும் உள்ளமும் நடுங்கினார்கள். ஸ்ரீராமச்சந்திரருடைய கீர்த்தியை வாயாரப் பாடி, ஆரவாரித்து உற்சாகத்தோடு தேகம் பூரித்தார்கள். அவ்விடத்தே ராக்ஷசர்கள் அடைந்திருக்கின்ற கோரத்தைக்கண்டு பயந்தார்கள். இந்தத் துராத்துமாக்கள் நம்முடைய சுவாமியைவந்து எதிர்த்தார்களல்லவா வென்று உள்ளத்தில் மிகுந்தகோபங்கொண்டார்கள். நமது ஆண்டவருக்கு இப்பேர்ப்பட்ட சிரமமும் நேரிட்டதோவென்று துக்கத்தால் உயிர் தடுமாறி, எப்படிக் கிருந்த போதிலும் இவர்கள் யாவரையும் கொன்று முடித்தாரல்லவா வென்னும் சந்துஷ்டியினால் உயிர்நிலைத்து நின்றார்கள். இந்தப்படி அந்தவானரவீரர்கள், அடைந்தவிதங்களை இன்னது இன்னதென்று அறிந்து சொல்ல வல்லவர்கள் யாருண்டு. ஆயிரவருஷமாகப்பார்த்தாலும் நம்மால் பார்க்க முடியாது என்று சொல்லிக்கொண்டு அந்தந்த இடங்களில் பார்க்குந்தோறும் அதிசயித்து நின்றார்களே யல்லாமல் முடியக்காணாதவர்களாய், எழுசமுத்திரங்களும் இராட்சத வுருவங்கொண்டு வந்ததுபோல இந்தப்பாதகர்கள், தோன்றுகிறார்கள். ஹேவிபீஷணாழ்வானே! எங்களால்கண்டுரைக்கூடவில்லை. நீர்தெரிந்து சொல்லவேண்டுமென்று வானரப்படைத்தலைவர்களும், சுக்கிரீவமஹாராஜரும், கேட்டுக்கொள்ள விபீஷணாழ்வான் சொல்லத் தொடங்கினார். நம்மவர்களே! யமன்பிரியாமல் வசிக்கின்ற கூர்மையுடைய ஸ்ரீராமபாணத்தால் இறந்ததுகளாய்க் கீழேவிழுந்து படிந்திருந்த போதிலும் பந்தலைப்போல மேலே காகக்கூட்டங்கள்மொய்த்துக் கொத்திக்கொண்டிருக்கின்ற யானைப் பிரேதங்கள், யுத்தகளத்தில் வெளியில்லாதபடி ஒன்றின்மே லொன்றுவிழுந்து மேகராசிகள் நிறைந்து தவழ்கின்ற உயர்ந்த பர்வதம்போலத்தோன்றுகின்றதைப்பாருங்கோள். அப்புறத்தே, தங்களுடைய செவ்வந்த கண்களா லுருட்டிப் பார்த்தபடி வெற்றிபெறத் தக்க குரூர ராக்ஷசர்களுடைய உடல்களில் ஸ்ரீராமபாணங்கள், எனக்கு உனக்கென்று ஒன்றின்முன் ஒன்று சென்று தைத்து உயிரை உண்டதினால் கிடக்கின்ற அவ்வுடல்களிலே பொத்திய அந்தப்பாணங்கள், சிங்கங்கள் வசிக்க யோக்கியமான பெரிய மலைகளில் நுழைந்து உறங்குகின்ற சர்ப்பங்களைப்போலத் தோற்றுவதைப் பாருங்கோள். நம்மவர்களே! உதிர்ந்துகிடக்கின்ற கோரதந்தங்களின் ராசிகள் மணற்குன்றுகளைப்போலவும், பரந்துவிழுந்திருக்கின்ற கறுத்த உடல்களின்பரப்பு, கருங்கடலைப் போலவும், தங்கள் தங்கள் நாயகன் மார்களைத்தழுவிக் களிப்போடு பிராணனைவிட்ட கற்புள்ள ராக்ஷச ஸ்திரீகளுடைய ஒளியுள்ள முகங்கள், அக்கடலில் பூத்த தாமரை மலர்க்காடடைப் போலவும், அம்முகங்களில் தாவித்தாவி ஆரவாரித்துக்கொத்துகின்ற கழுகுகள், தேங்களைப்பாடிக்கொண்டு மொய்க்கின்ற வண்டுகளைப்போலவும், விளங்குவதைப் பாருங்கோள். நம்மவர்களே? கூரியபாணங்க ளென்னும் இடிவிழுந்தபோது, கட்டிய குதிரைகள் இறந்ததினால், வெள்ளைக்கொடிகள் பாய்களாகவும், அக்கொடிக்காம்புகள் பாய்மரங்களாகவும், பெரியதேர்கள், அடர்ந்து ஓடுகின்றஉதிரமாகிய கடலில் மரக்கலங்களைப்போல மிதந்து செல்வதைப்பாருங்கோள். மும்மதங்களும் பெருகிவழிகின்ற யானைகள், தமதுடலில் அம்புகள்பாய்ந்து உருவிச்செல்கிற காரணத்தால், எழுந்துசெல்ல மாட்டாமல் தேர்களாகிய மரக்கலங்கள் ஓடுகின்ற ரத்த சமுத்திரத்தில், திமிங்கில கிலமென்னும் மீனரசானது, கடலின்மேல்தலையைத் தூக்கித்தூக்கிப் பார்ப்பதுபோலத், தலைமேலே தோன்றுகிறதும் மூழ்கிறதுமாக இருப்பதைப் பாருங்கோள். நம்மவர்களே? யானைகளைப்போலக் குதிக்கின்ற கவந்தங்களோடு கைகளைக் கோத்துக்கொண்டு தாளப்பிரமாணப்படி நடிக்கின்றபேய்கள், அபிநயம் பிடித்தாடுகின்ற நடனத்தைத் தம்முடைய மாணாக்கர்களுக்குக் கற்பிக்கும்படி தாமும் அவர்களோடு கூடிக் காலடைவு போட்டு அபிநயிக்கின்ற பரதசாஸ்திரிகளைப் போலத் தோன்றுகிறதைப் பாருங்கோள். நம்மவர்களே? வெற்றிவீரர்களுடைய கவந்தங்களோடு பொறிகளுடன்பொறிகள் பொருந்தக் கூடிக் கைகளைப் பிணைத்துத் தழுவிக்கொண்டு

நர்த்தனம் பண்ணுகின்ற பேய்கள், இமைக்கின்ற கோடரிபோலக் கூர்மைவாய்ந்த பல்லிடுக்குகளிலே தங்கள் கால்கள் சிக்கிக்கொண்டு நரம்புகளால் தளைக்கப்படுதலால், இக்குவர்த்தகமொடு நடனஞ்செய்ய நம்மாலாகாதென்று கைசோரவிட்டு மெள்ள நழுவிச்செல்கின்ற தன்மையைப் பாருங்கோள். பொன்பட்டம் மின்னலைப் போலப் பிரகாசிக்கின்ற புள்ளிநெற்றியுள்ள தலைமாறிப் பிணமுன்னுக ஒன்றொடொன்றுகால்கள் பின்னிக்கிடக்கின்ற பலயானைகள், தனக்குச்சமானமில்லாத தமது உடலுக்கு இரண்டுபக்கங்களிலும், தலைகளுண்டென்னும்படி விசித்திரமாய்க் காணப் படுகிறதைப் பாருங்கோள். கருங்கடலையொத்த தேகத்தையுடைய கொடியவர்களுடைய அறுபட்ட தலைகளின் ஆவென்று திறந்த வாய்களிலே, இன்னமும் யுத்தத்தில் கோபத்தோடு சிரித்த சிரிப்பும், புகையோடுகோபத்தீயும், விளங்குகின்றமையால் அந்தவாய்கள், பொரித்திரளும் புகையும் அக்கினியும் அமைந்த பலபல ஓமகுண்டங்களைப்போலத் தோன்றுகின்றதைப் பாருங்கோள். மின்னுகின்ற பொன்னாற் செய்த பட்டமணிந்த வெற்றியுத்தஞ் செய்யத்தக்க யானைகளுடைய அறுந்த தலையின் காதுத்தொளையில அடிக்காம்பு பொதிந்துகொண்டு கடைகுழைந்திருக்கின்ற ஒளிபொருந்திய சாமரைகள், தமது கருணைலேசமாத்திரத்தால் அகண்ட ஐஸ்வரியத்தை யடைந்திருந்த சக்ரமாராஜர்கள், செல்வச்செருக்கால் மிக அக்கிரமங்களைச் செய்யத்தலைப்பட்ட மாத்திரத்தில், பாக்கியங்களையெல்லாம் இழந்து, அவர்களும் மாறுவதற்கு ஒருப்பாடமாகச் செந்தாமரைபோன்ற திருமுகமண்டலத்தையுடைய ஸ்ரீமகாலக்ஷ்மி பொற்றாமரைப்பூவில் தலைவணந்து உறங்குவதைப் போலத் தோன்றுந் தோற்றத்தைப் பாருங்கோள். தம்மவர்களே! தங்களுடைய கூட்டங்களோடு சேர்ந்து நின்று யுத்தம்பண்ண விரும்பாமல் தனித்தனியாக முன்னேசென்று அதிகோபங்கொண்டு வந்த யானைகளினது வெள்ளிய தந்தங்கள், ராக்ஷசவீரர்களுடைய உடலில் வடிகின்ற ரக்தப் பிரவாகத்தில் அழுந்தித்தோன்றுகின்றன. அவை, இளஞ்செவ்வானத்தில் மேகராசியின் மத்தியில் விளங்குகின்ற மூன்றாம் பிறைச் சந்திரனைப் போலத் தோன்றுகின்றன பாருங்கோள். அதோகிடக்கின்ற கொடிக்கூட்டங்களின் மேலும், விற்குப்பைகளின்மேலும், அம்புக்குவியல்களின் மேலும், வேல் ராசிகளின் மேலும், குவிந்த தேர்களின் மேலும், யானைகளின்மேலலங்கரித்த அவுதாரிகளின் மேலும், உட்கார்ந்துகொண்டு பூதங்கள், ராக்ஷசர்களுடைய கண்களில் பிறந்த தீப்பொறிகளால் வெந்து பக்குவப்பட்டிருக்கின்ற மாமிசங்களை எடுத்தெடுத்துத் தின்று தேகம்பூரிக்கின்றதைப் பாருங்கோள். மழையாய்ப் பெய்து ஆத்தும வர்க்கங்களைச் சிருட்டிப்பதும், உணவுகளை உண்டாக்கித் தானும் உணவு நீராய்நின்று ரட்சிப்பதும், முடிவில் எங்குங் கோத்துக்கொண்டு அழிப்பதுமாகிய காரணத்தால் முந்நீரெனவும், சகரர்களால் தோண்டப்பட்ட ஏதுவால் சாகரமெனவும் பேர்பெற்றசமுத்திரமும்,ரக்தக்கடலும் ஒன்றுடனே ஒன்று கலந்து பெருகுவதினால்,உதிரவெள்ளத்தோடு வந்த யானைப்பிரேதங்களைத் தமது இனமென்று நினைத்து வந்த சுறாமீன்கள் சமீபத்திலே வந்து தமது இனமல்லாமையைக் கண்டுபயந்து,இவைமலைகளோவென்று சந்தேகித்து,இனமென்று முன்னே தாம்நினைத்ததற்காகநாணித் தமதுஇருப்பிடத்துக்குப்போகின்றனபாருங்கோள் ககனமார்க்கத்தினின்று யுத்தஞ்செய்தவர்களை ஸ்ரீராமபாணமானது சென்று துண்டித்ததனால் அவர்களுடைய பர்வதாகாரமாகிய தேகங்கள், சர்வலோக சரணியர்மீது போர்செய்ய வீராவேசத்தோடு வருபவர்கள்மேல் விழுந்ததினால், அந்தப் பிரேதங்களுக்குள்ளே அகப்பட்டுக்கொண்டு அவற்றினின்று நீங்கச் சக்தியற்றவர்களாய் அவர்கள், கைகால்களை உதறிக்கொண்டுஉபத்திரவப்படுவதைப்பாருங்கோள். மிகுதியும் அடர்ந்து மொய்த்து வந்த ரதகஜதுரகபதாதியென்னும்நால்வகைப்படைவீரர்களது உடலினின்றுந் தெறித்த ரக்ததாரைகள், தனது மேனியில் பட்டதினால் சூரியன் ஆகாசமத்தியில் வந்தவனாயிருந்தும் உதயகிரியின் சிகரத்தில் உதித்தவனைப் போலக் காணப்படுகிறதைப் பாருங்கோள். தங்களுடைய பராக்கிரமமுற்றும் ஓய்ந்த குரூர ராக்ஷசர்கள், துண்டிக்கப்பட்ட காலத்தில் அவர்களுடைய தேகத்திலிருந்து இது ஆறுதானோ என்னும்படி மேலே சென்ற உதிரத்தில் மூழ்கிச் செவந்தநிறமமைந்து வேற்றுருவமாய் நின்ற சந்திரன் வேறே ஒரு சூரியபிம்பத்தைப் போலத் தோன்றுகிறதைப் பாருங்கோள். வானமும் பூமியும் உதிரத்தால் நனைந்துபோகவும், சமுத்திரம் உதிரமயமாகவும், ஓங்கி எழுந்த மஹா ரக்தப்பிரவா

சத்தில், மாமிச பட்சணிகளாகிய பட்சிசால
ங்கள் மூழ்கியெழுந்து விருட்சங்களின்மீது உ
ட்கார்ந்து தமது சிறகுகளை யுதறுவதினால், ரக்
தத்துளிகள் நிரம்பப்பட்டு மலர்ந்த பூக்களி
ல் தேனுண்ணவந்த கறுத்தவண்டுகளும், செ
ய்வண்டுகளாய்க்காம்களும், உத்தியானவனங்
களும், செந்தளிர்களைத் தளிர்த்தது.போலத்
தோன்றும் அதிசயத்தைப் பாருங்கோள். ம
லைகளைக்கண்டாலும் போர்செய்யத்தக்க ம
தங்கொண்ட யானைகளினது இரண்டு தந்தங்
களிலும், உதிர்ந்த முத்துகளையும், அரக்கர்
கள் தரித்துவந்த ஆபரணங்களிலுள்ள நானு
வித ரத்தினங்களையும், வாரிப் பக்கங்களிலே
குவியும்படி அலைகளாலெறிந்து, யானைகளை
த்தடுக்கு மரங்களை உருட்டிக்கொண்டும் கழு
குமுதலிய பட்சிகள் ஆரவாரிக்க, வெண்பட்
டுக்குடையையும், வெள்ளைக்கொடிகளையும்,
சாமரைகளையும், நுரைகளாகச் சுமந்துகொ
ண்டும், பாரமாகிய பிரேதங்களைக் கரையில்
ஒதுக்கிவிட்டுக் கடலோடு சங்கமமாகின்ற
பெரிய செந்நீராறுகளைப் பாருங்கோள். பா
ருங்கோள். வட்டமாகவிசாலித்துக் கிடக்கின்
ற யானைப்பிணங்களே பெருங்கரையாகவும்,
ஒன்றின்மேலொன்றாக அடுக்கிவீழ்ந்த புய
ங்களே கற்களாற்கட்டிய மேடைகளாகவும்,
உயிர்மாய்ந்து உள்ளே கிடக்கிற குதிரைக
ளே அலைகளாகவும், யானைத் துதிக்கைகளே
தவளைகளாகவும், ராக்ஷசஸ்திரீகளுடைய ரக்
தம்படிந்த முகங்களே அந்தத்தண்டுகளில் ம
லர்ந்த செந்தாமரை மலர்களாகவும், சுரு
ண்டு சுருண்டு கிடக்கின்ற குடல்களே தாம
ரை யிலைகளாகவும், நிணங்களே சேறாகவும்,
தேங்கிநிற்கின்ற உதிரமே தீர்த்தமாகவும், அ
நேக புஷ்கரணிகள்போல அவைதோன்றுவ
தைப் பாருங்கோள். பெரிய ஆயுதங்களாகிய
கலப்பைகளா லுழுவதினால் நிணமாகிய சே
ற்றில் உதிரநீர் நிறையத் தேங்கியிருப்பதினா
லும், அந்நீரிலே உழுத எருமைகளைப்போ
ல யானைப்பிணங்கள் கிடப்பதினாலும், விசா
லமாகிய பரம்பிலேதாமரைமலர்களைப்போ
ல் உள்ளங்கைகள் விளங்குதலாலும், நாற்று
முடிகளைப்போலக் கைகள்மாறி நட்டுக்கொ
ண்டு வீழ்ந்திருப்பதினாலும், அந்த இடங்க
ள் நாட்டிலுள்ளவயல்களைப்போலக் காணப்
படுவதைப் பாருங்கோள். தமது திருக்கரத்
திலே பிடித்த கோதண்டத்தினின்றும் பல
இடிபோலக் குணடங்காரவோசை பல உண்
டாகவும், திண்ணிய பர்வதங்களைப் போல
அரக்கர்கள் விழவும், புறப்பட்ட ஸ்ரீரகு நா
யகருடைய பாணங்கள், ராக்ஷசர்களுடைய
உடலை உருவியப்பாலும் போதாமல் பூமியை உரு
விக்கொண்டு நாகலோகத்தைச்சேர்ந்த, துவா
ரத்தின் வழிகள்தோறும் யானைப்பிரேதங்களை
இழுத்துச் சுழித்துக் கொண்டு, பூர்வத்திலே
ஆதிபுருஷவராகப் பெருமானுடைய திருவ
டிக்குளம்புபட்டுப் பூமிபொத்தலாய் அதன
வழியே பாகீரதிநதி ஓடியதுபோல ஓடுவதை
ப்பாருங்கோள். தாரகமந்திர வாச்யனாகிய
ஸ்ரீராமபிரானுடைய பாணங்கள், கஜங்களி
னுடைய தும்பிக்கைகளையும், முன்னங்கால்
களையும், பருத்த கழுத்தையும், அரக்கர்களு
டைய நீண்ட புயங்களையும், மார்பையும்,
கண்டித்ததினால் வேகமடங்காமல் பூமியையு
ம் உருவிச்சென்றனவே அல்லாமல் அந்தயா
னை உடல்களிலும் ராக்ஷசர்கள் தேகத்திலும்
தைத்துக் கொண்டு நின்ற ஒரு பாணமாவ
துண்டோ பாருங்கோள். இந்த மூலபலத்
தில் வந்த குதிரைகளும், யானைகளும், அ
நேகாயிரகோடி யாயினும், அவற்றுள் வி
சேஷமானவைகளைச் சொல்லுகிறேன் கே
ளுங்கோள். இதோ பாகர்களோடு இறந்து
கிடக்கின்ற பத்துக்கோடிக் குதிரைகளும்,
குமுதமலர்போல மணம் வீசும் வாயை
யுடையவைக ளாயும், நர்த்தனத்தில் தேர்ந்
தவைகளாயும், யானையைப்போலக் காணப்
படும் பாரியதேகமுடையவைகளாயும், அமு
தத்தோடு கூடப்பிறந்தவைகளாகும். இங்கே
செத்துக்கிடக்கிறபன்னிரண்டுகோடியானைக
ளும், தேவசிரேஷ்டனாகிய பிரஹ்மதேவன்
முன்னால்செய்த யாகத்திலே பிறந்தவைகள்.
மேலும் மழைமேகமும், சமுத்திரமும், கங்
காநதியும் ஒருகாலத்தில் வறண்டுபோம். அ
ப்படி வறண்டகாலத்திலும் இவைகளோமத
மொழியாது பெய்கின்றவைகளாகும். இவ்
விடத்திலே கோபவெறியாறியும், உயிரொ
ழிந்தும், உதிரமெல்லாம் வடிந்துபோயும்,
ஓயாமல் மதத்தைப் பொழிந்துகொண்டிரு
க்கின்ற பதினாலுகோடியானைகளும், மேக
வாகனனாகிய இந்திரனுடைய திசையிலுள்ள
ஐராபதத்தின் பரம்பரையைச் சார்ந்தவைக
ளாகும். இந்தவிடத்தே பிராணனிங்கிக்கிடக்
கின்ற பத்மமென்னும் கணக்குள்ள யானை
கள், தம்முடைய தேகபாரத்தைச் சுமக்க
மாட்டாமல பூமிசாய்ந்து போவதாயிருக்
தால் அந்தப்பூமியை அநாயாசமாகத்தாங்கித்
தனிச் சுமக்கவல்லதுகள். மற்றயானைகளைப்
போல இமைகொட்டமாட்டாதுகள். சார்வ
பௌமமென்னும் யானையின்வமிசத்திற்பிற

வந்தடைவதுபோல, தான்முன்னேசெய்த த
போபலத்தால் உண்டாகிய எல்லாச்சுகங்களை
யும், எல்லாரும் போதுமென்றமட்டிலனுப
வித்துக்கொண்டிருப்பதைக் கண்டு, குதூகல
மாயிருக்கின்ற இராவணனன்டை ஓடிவந்த
தூதர்கள், நமஸ்காரம்பண்ணி, அவன்காதோ
டுவாய்வைத்து மூலபலசைநியம், மடிந்த வ
ரலாற்றையெல்லாம், தங்கள் உடல்நடுங்கி நா
வுலர்ந்து சுவாசமொடுங்கி இருதயம் நிலைகு
லைந்து கண்களருகி அழுது உள்ளே ஒடுங்குகி
ன்ற சொற்களைப் பலாத்காரமாக வெளிப்ப
டுத்திச்சொல்லுவார்கள். ஐயா, பிரதாபலங்கே
ஸ்வரா? தேவகுலத்தை நாசஞ்செய்த சௌரி
யவானே? தற்காலத்திலேவிருந்துவன்னுகிறரா
க்ஷச வீரர்கள்தான், உயிர்பிழைத் திருக்கிறவ
ர்கள். நீர் ஆக்கியாபித்தபடியேபோன ஆயிர
வெள்ளம் ராக்ஷசசேனைகள், உயுத்தகளத்துக்
குப் புறத்திலேபோய் நின்ற இரண்டுமூன்று
நாழிகைக்குள்ளாக இராமனென்பவன் தன்
ஒருவில்லாலேயே அவ்வளவு சேனைகளையும்,
சின்னபின்னப் படுத்திக் கொன்றான். இப்
போது உன்னுடைய பராக்கிரமத்தாலே தே
வர்களைக்கொண்டு ராக்ஷசர்களுக்குப் பிரபல
கீர்த்தியைத் தரத்தக்கவிருந்தினை நான்செய்
வேனென்று நினைத்துச்செய்கிறாய். இதுசந்
தோஷங்கொண்டாடத்தக்கதன்று. உன்குல
த்தார்க்கெல்லாம், இந்தவிருந்தையே உத்தர
கிரியையில் செய்யும் அன்னபலியாகப் பா
வித்துச்செய்யக்கடவாய். சப்தத்வீபங்களிலும்,
நானாவித பர்வதங் களிலும், வனங்களிலும்,
பாதாளமுதலிய இடங்களிலும், வசித்துவந்த
ராக்ஷசர்களெல்லாம், ஸ்ரீராமனுடைய அம்
புக்குஇரையாய்மடிந்துபோய்விட்டபடியா
லே, இந்தலங்கையில்வசிக்கின்ற சிலராக்ஷசர்
கள்தான் உயிரோ டிருக்கின்றவர்கள் உலகத்
தில் வேறே ராக்ஷசப்பூண்டென்பதே கிடை
யாதல்லவா? என்றார்கள். மற்றவர்கள்செய்
தும்பெறக்கூடாத விருந்துசெய்து அந்தச் ச
ந்தோஷத்தில் மூழ்கியிருந்த ராவணன் தூது
வர்கள் சொல்லிக்கொண்டு வந்த செய்திகளை
யெல்லாம், கேட்டமாத்திரத்தில் உண்டாகிய
துடிப்பும், சோபமும், அவமானமும், தன்
னெஞ்சைப்பிளக்கவும், வேண்டுமென்று செ
வந்தசாயத்தை ஊட்டினதுபோல விளங்கு
கின்ற செவந்தகண்களில் தீப்பொறி பறக்க
வும், பெருமூச்சு அதிகரிக்கவும், சித்தப்பிர
மையடைந்து, எழுதிவைத்த சித்திரத்தைப்
போல ஒடுங்கி அசைவற்றிருந்து விட்டான்.
அப்படி சற்றே யிருந்து தன்னைத்தானே
திடம்பண்ணிக்கொண்டு அடா! தூதர்களே?
படையெடுத்துப்போன ராக்ஷச வீரர்கள்
திரிலோகபயங்கரனான என்னைப்பார்க்கிலும்
பலவந்தர்கள். எப்படிப்பட்ட யுத்தத்திலும்
தோற்றுச் சாகமாட்டாதவர்கள். அவர்களை
இத்தனைபேரென்று புத்தியால் அனுமானித்
துக் கணக்கிடவும்முடியாது, சமுத்திரமணல்
போன்றபெருந்தொகையுள்ளவர்கள். இத்த
ன்மையான ராக்ஷசர்கள், செயம்பெற்றார்க
ளென்று சொன்னீர்களில்லை. செயம்பெற்றார்
களென்னுமற் போனாலும், அபசயப்பட்டு
ஓடிப்போனார்களென்றாவது, யுத்தத்துக்குப்
போகப்பயந்து தங்கள் தங்களிருப்பிடமே
போய்ச்சேர்ந்தார்க ளென்றாவது சொல்லா
மல், இராம னென்னும் ஏக மனுஷியனால்,
இறந்தார்களென்று சொன்ன இந்தச்செய்தி
நடந்தது உண்மைதானோ? பொய் சொன்
னீர்கள்போலத் தோன்றுகிறதென்றான். இவ்
வாறு பாபிஷ்டனாகிய ராவணன் சொன்ன
தைச் சமீபத்திலிருந்து கேட்டுக்கொண்டிரு
ந்த மாலியவான், என்னப்பனே! ராவணா?
இந்த மூலபலத்தை அழித்தலென்பது ஸ்ரீரா
மனுக்கு உரியசெய்கையாகுமோ! நாம் அ
னுப்பிய தூதர்கள் நம்மிடத்திலே பொய்
யையும் சொல்லுவார்களோ? அந்த ஸ்ரீராம
ன், சமஸ்த லோகங்களையும் அழிக்கவேண்டி
னால் எவ்வளவோ காலம் வேண்டுமோ! ஒரி
மைப் பொழுதுக்குள்ளே அழித்து விடுவா
னல்லவா? அவனொருவனாயிருந்து இவ்வளவு
ராக்ஷசப்பெருங்கூட்டத்தை எப்படியழிக்க
க்கூடுமென்பாயானால், விரிந்துகிடக்கிற சரா
சரங்களையெல்லாம் யுகாந்தகாலத்தில் பார்வ
தியை ஏகபாகத்திலுள்ள ருத்திரமூர்த்திஒரு
வனே யல்லவா? தனது சங்கல்பத்தால் டம்
சூரணப் படுத்துவான். இதிருக்கட்டும், தன்
னோடொத்தாரும் தன்னில் உயர்ந்தாருமில்
லாத ஸ்ரீமந்நாராயணன், தனது நிரோதுக
கடாக்ஷத்தால் அளவிடக்கூடாத பல்லாயிர
கோடி அண்டங்களையும், பிரமனுக்குள் அந்
தரியாமியா யிருந்து சிருட்டித்தும், உபேந்
திரமூர்த்தியா யிருந்து பாலனஞ்செய்தும்,
மகேஸ்வரனுக்குள் அந்தரியாமியாயிருந்து
அழித்தும், விளையாடல்செய்கின்றானென்று
நித்தியமாயும், அபௌருஷேய மாயுமுள்ள
வேதங்கள், சொல்லுவதை நாம் ஓதி அறிந்தி
ருக்கிறோ மல்லவா, அந்த ஸ்ரீ ஹரியே!
க்ஷீராப்தி சயனத்தின்மேல் திருக்கண்வளர்தலை
விட்டு, விதிசிவேந்திராதி சாதுக்களுடைய
பிரார்த்தனையால் இராமனாக அவதரித்தா

றென்று விபீஷணன் சொன்னசொல்லென்ன பொய்யோ! சாக்ஷாத் சாட்குண்யபரப்பிரம்மமாகிய அந்தச் சர்வேசுரனுடைய திருவுருவமாகிய பஞ்சபூதங்களில் தேயுவானது, பூமியை விறகாகக்கொண்டு, இந்தப் பூமியிலுள்ள மற்ற சராசரங்களையெல்லாம் நெய்யாகப்பெய்தால், அவைகளெல்லா வற்றையும் உடனே படுநாசப்படுத்திவிடும். இதை நாம் அறிந்திருக்கிறோம், மற்றொரு பூதமாகிய மகா வல்லமையுள்ள வாயுவானது, பர்வதங்களையும் விருக்ஷங்களையும், புல்லுகளையும், பல ஜீவராசிகளையும், மோதியடித்துப் பஞ்சையறச் செய்து கொல்லும். இது விஷயத்தையும் நாம் அறிந்திருக்கிறோம். இப்படி ஒவ்வொரு பூதமே லோகங்களையும், அவற்றிலுள்ள சராசரங்களையும், அழிக்குமேயானால் அவையேஉருவமாகக்கொண்ட ஸ்ரீராமனுடைய பராக்கிரமத்துக்கு, இப்போது நாம் அனுப்பிய மூலபல சைநியத்தைக் கொன்றதை ஒருவரம்பென்று சொல்லலாமோ, அப்பா! ராவணா, முன்னே நீ தேவர்களோடும், அசுரர்களோடும், அநேக யுத்தங்கள் செய்திருக்கிறாயல்லவா, அந்த யுத்தங்களுக்குள் எந்த யுத்தத்திலாவது உன்மேல் ஓரம்பும் தைத்ததுண்டா? இல்லையே. அப்படி நீ செய்த யுத்தத்தில் இந்திரனென்பவன் தன்னுடைய செல்வங்கள் யாவற்றையும் பற்றற, உனக்கே ஒப்புவித்து விட்டதும் யதார்த்தந்தானே. இந்தப்பிரகாரம் நீ செய்த யுத்தபிரதாபம், லோகங்களெல்லாம் வியாபித்தபின்பு எங்கேயாவது ஒரு யுத்தமும் நேரிட்டதுண்டா? இல்லையே. இப்போது நீ ஸ்ரீராமபிரான் பக்கலில் செய்த அபசாரத்தாலே, உன்னுடைய பிரதாபமும், சகோதரபுத்திரர் முதலிய பந்து ஜனங்களும், சாதியார்களும், அழிந்துபோனார்கள். இதென்ன உனக்குத் தெரியாததோ, ஆகையால் இனியாகிலும் நீக்காலோசனை செய்து ஜெகன்மாதாவாகிய சீதா பிராட்டியைக் கொண்டுபோய் விட்டுவிடும்படியான அறிவுக்கிசைந்த காரியத்தைச் செய்து பிழைக்கும் வழியைப் பாரென்று சொன்னாய். என்றுசொன்ன மாலியவானை அதிக கோபத்தோடு பார்த்து, நான் இலக்ஷுமணன்மேல் வேலைப்பிரயோகித்து அவனுடைய உயிரை யமனுக்கு ஒப்புவித்தேன். அவனிறந்துபோன துன்பத்தால் அங்கிருந்த வானரப் படைத் தலைவர்களெல்லாம் அழுதுகொண்டிருக்கிறார்கள். இது சங்கதியை எப்படியும் அறியாமலே வீண்படப்போகிறான் கேள்விப்பட்டபின்பு தேகவாழ்க்கையை வேண்டாமல் பிராணத்தியாகஞ் செய்துகொள்ளுவான். இதுபரியந்தம் அவர்களால் எனக்கு அநேகதுன்பங்கள் நேரிட்டபோதிலும் இப்போது என் பக்ஷத்திலே அல்லவா செயம் என்று சொன்னான். மாலியவானை நோக்கி அதிபௌருஷத்தோடு ராவணன் சொல்லிக்கொண்டுவந்ததைக் கேட்டுக்கொண்டிருந்த தூதர்கள், எங்களாண்டவனே பிரதாபலங்கேஸ்வரா! அது சங்கதி உமக்குத் தெரியாதோ, இப்போது நீர்சொல்லியதெல்லாம் யதார்த்தமே. அநுமானென்பவன் கொண்டுவந்த மருந்தால், உம்முடைய வேல்பட்டிறந்த இலட்சுமணனுயிர்பெற்றெழுந்தான். உடனே அங்கிருந்தயாவரும் சிறிதுபொழுதும் தாமசஞ்செய்யாமல் சடக்கென் எழுந்து இலட்சுமணனோடுசென்று செவந்த தாமரச மலர்போலுங் கண்களையுடைய தசரதராமனைச்சேர்ந்து ஒருவரையொருவர் ஆலிங்கனஞ்செய்துகொண்டு குதூஹலமாகவேயிருக்கின்றார்கள் எங்களுடைய சொல்லில் தேவரீருக்குச் சமுசயமிருந்தால் தம்முடைய நேத்திரங்களாலேயே பார்த்தறியலாம் என்று சொன்னார்கள். அவர்கள் சொன்னசொல்லாலே, இலட்சுமணனைச் செயம்பெற்றோமென்று ஆநந்தித்துக்கொண்டிருந்தமனம், அதிதுக்கத்தோடு நிடுக்கிட்டு, அந்தத்தூதர்களுடைய சொல்லினிடத்தில் நம்பிக்கைவையாமல், அதைக் கண்டறியும்படி சுவர்ணமயமான கோபுரத்தின்மேலேறி, இலங்கையிலிருந்து சுரப்பெடுத்துப் பெருகிச்செல்லுதல்போல அபரிமிதமாகச்சென்ற தனதுசேனைவெள்ளம், அழிந்துகிடக்கின்ற யதார்த்தத்தை உள்ளம்நோவும்படி தனது இருபதுகண்களாலும் பிரத்தியக்ஷமாகக்கண்டும், வயலில் அறுப்பரியும் உழவருடைய மனைவியராகிய பள்ளப்பெண்கள், மதுவுண்டதினால் கண்கள்செவந்துதோன்ற விழித்துப்பார்த்து, நாயகர் அரிகளைக் கைகளாலெடுத்து தலையின்மேல் வைக்கின்ற ஆரவாரத்தைப்போல, ஸ்ரீராமபாணத்தால் தலை அறுப்புண்டுகிடக்கிற ராக்ஷசவீரர்களுடைய மனைவிமார்கள், கருங்குவளை மலரையும், கருநெய்தற் பூவையும், கருமையால் வென்ற தங்களுடைய கண்கள், தாரை தாரையாக நீர்சொரியும்படி அழுவதினால், செங்குமுத மலரைப்போலச் செக்கச்செவேலெனத்தோன்ற, இனிநமக்கார்ஆதரவென்று கைகளைத் தலையின்மேல் வைத்துக்கொண்டு தங்கள்தங்கள் புருஷப்பிரேதங்களண்டையிரு

ர்ந்து, கடலோசையும் அடங்கும்படியாகக் கோவென்று அலறியழுகின்ற ஓசையைத்தன து இருபதுசெவிகளாலும் கேட்டும், அதிக துக்காக்கிராந்தனாய், அந்த யுத்தகளத்துக்கு மற்றொருபக்கத்தே திரும்பியபோது, அளவைக்கடந்த யானைப்பெரும்பிணங்களை எத்திக்கொண்டும், நீராழமட்டும்பூமியைவாட்டி மலைகளைப்புரட்டி அடித்துக்கொண்டும், விரைந்து ஓடுகின்ற ரத்தநதிகளில், புதுவெள்ளநீரில் ஸ்நாநஞ்செய்வதுபோலப் பேய்கள் குதித்துக்குதித்து மூழ்குகின்ற மிகுதியை, துக்கத்தால் தனதுகண்களில்சுரக்கின்ற கண்ணீரைத் துடைத்துக்கொண்டு பார்த்தான். மேலொருபக்கத்தில், ஆகாயத்தை முட்டவுயர்ந்த வலியதோள்களையுடைய தங்கள் புருஷன்மார்கள்மேல் ஸ்ரீராமபாணம் பட்டுத் தொளைத்துச்சென்ற புண்களின்வழியாகப் பேய்கள், கைகளைநுழைத்துக் கொழுப்புள்ள புதுநிணங்களைத் தோண்டித் தோண்டி எடுத்துத் தின்பதைப்பார்த்து, ராக்ஷசகுலஸ்திரீகள், ஐயோ! நம்முடையநாயகன் இறந்துகிடக்கப் பேய்கள் தாறுமாறாகப் பிளந்து மாமிசங்களைப்புசிக்கின்ற கோரத்தை இந்தக்கண்களிருந்த படியாலல்லவோ பார்க்கிறோம் இவை நமக்குவேண்டாமென்று துணிவுகொண்டு, அவர்களில்சிலர்,அங்கேகிடக்கிறவாள்களாலும், சிலஅரக்கியர்கள், வாளெடுக்கும்நேரமும் சகியாமல், கூரியநகமுள்ள விரல்களினாலும், தங்கள்தங்கள்கண்களைப் பேர்த்தெடுக்கிறதைப் பார்த்தான். நம்முடைய நிமித்தம் இத்தனைராக்ஷசர்கள் மடிந்தார்களேயென்கிற துக்கத்தால் பெருகுகின்ற உதிரநீரோடு, இவர்களையெல்லாம் ஒருமனுஷியன் கொன்றானல்லவா வென்கிற கோபத்தால் பிறக்கும் தீப்பொறிகளைக் கொட்டுகின்ற கண்களையுடைய ராவணன், திருக்குருகாபுரியி லவதரித்த பராங்குசபரகாலமுனிவர்கள் திருவாய்மலர்ந்தருளிய தமிழ்கள், முன்னோடு பின்மாறுபடுதலில்லாமல் பரம வேதார்த்தங்களை அபாரமாய்த்தந்து வளர்வதுபோல ஸ்ரீகோதண்டத்திலிருந்தும் ஸ்ரீராமபாணங்கள், புறப்பட்டு நேராகச்சென்று அபாரமாக ராக்ஷசர்களை உருவிக்கொண்டு போனபடியால், அணியணியாக விழுந்து கிடக்கிற அந்த ராக்ஷசவீரர்களுடைய உடலினின்றும் பெருகி ஓடுகின்ற ரத்தவெள்ளம் பாயவே, சங்கமஸ்தானம் நிறைந்து போய், கடலானது தான் உதிரநீரைக் கக்குவது போல ரத்த அலைகளை அதிவேகமாய் வீசி மோதுவதைக்கண்டான். வில்லினாலுண்டாகும் பிளந்து நிலைமாறும்படி ஆரவாரிக்கின்ற வானரசமுத்திரத்தையும், அந்தப்போர்க்களமே நிரம்பும் பிளந்தகுதியும்படி துள்ளித் துள்ளிக் குதித்தாடுகிற கவந்தக் கூட்டங்களையும், கண்களாலும் நிலம்புதைந்துபோம்படி இமையாமல் பார்க்கின்ற தேவர்களுடைய கொண்டாட்டத்தையும் கண்டான். இப்படிப்பார்க்கப்பார்க்க மிகவும்நொந்து நெஞ்சு புண்ணாயினவனாய்க் கோபுரத்தினின்றும் இறங்கி, ஸ்ரீராமபிரானுடைய கோதண்ட பராக்கிரமத்தையும், அவனாலெதிர்த்து மூலபலமெல்லா நிர்மூலமானதையும், நினைக்குந்தோறும், கைகளைவென்று சிரித்துக் கடைவாய்களை நாவுகளால் நக்கிக்கொண்டும், புகைகின்ற பெருமூச்சுவிட்டு, தீப்பொறிகள் பறக்கும்படி கண்களை விழித்துப்பார்த்து, பலபல விதமான நினைப்புடையவனாய்க். கோபாக்கினியானது மேன்மேலும் வளர்வதினால் குரூரமாகிய வார்த்தைகளைப் பேசிக்கொண்டும், வந்து சிம்ஹாசனத்தின்மேல் உட்கார்ந்தான்.

இராவணன்களங்காண்படலம்
முற்றிற்று.

---

## இராவணன் தேரேறு படலம்.

---

அப்பிரகாரமாகவந்து உட்கார்ந்து, சாது ஜனகண்டகனாகிய ராவணேஸ்வரன் பர்வதாகாரமாகிய தேஹத்தையும், மேலெழுகின்ற கரும்புகையை யொத்த புருவங்களையும், நெருப்புத்திரட்சிபோன்ற செவந்த கண்களையும், மகோதரனென்றும் பெயரையுமுடைய, பாபகருமங்களைச் செய்வதில் தனக்குச் சமான மில்லாதவனது முகத்தைப் பார்த்து, உயுத்தத்துக்குப்போய் மாண்டவர்கள்போக, மீதியாய் இந்த லங்காநகரத்துக்குள்ளிருக்கும் ராட்சச சேனாவீரர்கள் யாவரையும் போர்க்கோலம் பூண்டுவரும்படி பறைசாற்றுவிக்கக் கடவாயென்று சொன்னான். அவ்வாறே செய்விக்கிறேனென்று சொல்லிவந்த மகோதரனது கட்டளையால் கொட்டிய போர்ப்பறையோசையைக் கேட்டமாத்திரத்தில், ஆயிரத்து நானூறுகோடி ராக்ஷசவீரர்களாகிய ரதகஜ துரகபதாதி சேனைகள், சமுத்திரம் வற்றியதுபோல தன்னிடத்தில் இனி யொருவீரனும் உண்டென்று சொல்லாதவண்ணம்இலங்காநகரம்பாழாய்ப் போகும்படிக்கூடியதுகள். உடனேபிரதாப

லங்கேஸ்வரனுனவன், தன்குலதெய்வமாயும் மேலாமீஸ்வரராயுமுள்ள பரமசிவனைச்சிவாகமத்திற்கூறிய முறைமைப்படி பஞ்சாட்சரத்தைப் செபித்துத் தன்அரமனையில் ஆத்மார்த்தமாகப் பூசித்தும், தன்னகரத்துள்ள சிவாலயங்களில் பரார்த்தமாக அர்ச்சனை நியதாயாதிக ளேற்படுத்திப் பூசித்தும், நானுவிததானங்களைச் செய்தும், யார்யார் எதையெதை விரும்பினார்களோ அவரவர்களுக்கு அதையதை வெகுமதியாகக்கொடுத்தும், ஒவ்வாங்காமல் செய்கின்ற யுத்தத்துக்கு வேண்டிய அலங்காரங்களைச் செய்துகொள்வதானுன். ஸ்ரீசர்வேசுரனுகிய நாராயணன் அவதாரங்களைச் சிருட்டிப்பதற்குத் தனைக் காரணமாகியபிரமதேவன், யாகத்திலேபடைத்தகவசத்தைப்பூண்டுவந்துயுத்தஞ்செய்துய் ஒருகாலத்தில் இந்திரன்தோற்று ஓடிப்போகவே அவனிடத்திலிருந்து அபகரித்த அந்தக்கவசத்தை, இரண்டுபக்கங்களிலும் அருவிநீராமுழுகின்ற நீலமலையினிடத்தில் அநேக சூரியர்கள் உதயஞ்செய்தாற்போலத் தோன்றும்படி தனது மார்பிற்பூட்டியும், மந்தரகிரியைச்சூழக்கட்டிய வாசுகியென்னும் சர்ப்பத்தைப்போல விளங்கும்படி உடைவாளை, வலதுபக்கத்தில் தொங்கப்பொற்கச்சினுல் அரையில் இறுகக்கட்டியும், கிரகங்கள், மகமேருவைச்சுற்றி அலைந்துபோய் அங்கங்கே கூட்டங்கூட்டமாக நின்றுவிட்டாற்போலப் பிரகாசிக்கின்ற கெம்பரிப்பூணமைந்த கடிசூத்திரத்தை, அரைப்பட்டிகையின்மேல் இறுகப் பற்றித்தும், வேதங்களையே பக்கத்தில் விரித்துவைத்தாற்போல் பிரகாசிக்கிற கருடபகவானுடைய சிறைகளை விரித்ததை யொத்த வெள்ளைப் பட்டாடையை உடுத்து, அதன்மேல் இருபக்கத்திலும் நிலாவானதுவழிந்து ஒழுகுவதுபோல, முறுக்கிய கொய்சகத்தைத் தொங்கச்சாத்தி, அது அசையாமலிருக்கும்படி பொன்னாற்செய்த சர்ப்பாபரணத்தால் சூழ இறுக்கியும், கருமேகக் கூட்டத்தோடு அதனுள்ளிருக்கும் இடிகளைப் புறப்பட்டுச் சேர்த்து, ஆபரணமாகச் செய்ததை யொத்த உடைமணியென்னும் மணிவடமணிந்தும், பொற்றாமரை மலர்போன்ற வடிவமும், குகைக்குளிருந்த சிம்ஹராஜன் சஞ்சரிப்பதுபோல முழக்கமுமுள்ள சதங்கை மாலையைச் சாத்தியும், இடபோகனைப் படப் பாம்புகளைப் போலத் திரேகமச்சனும் படந்தொங்கும்படி ஒலிக்கின்ற பொன்னாற் செய்த வீரகண்டா மணியைத் தரித்தும், சரித்து தொங்குவதுபோல, ஒளியுள்ள செஞ்சாயந் தோய்த்த இலேயை அந்த வீரகண்டைக்கு வலப்பக்கத்தில் அணிந்தும், இருபது கைகளுக்கும் நடுவே பலதலைகளையுடைய ஆதிசேஷனது மிடறுகளில் விஷக்கறை தோன்றுவதுபோலத்தோன்றும்படி மூன்கைத்தோற்கட்டும், விரற்புட்டில்களும் தரித்தும், பனைமரங்களைப் பொன்னிறமுள்ள நாகங்கள் தனித்தனியே சூழ்ந்து வளைந்தாற்போலக்கைகளில் ரத்ந கங்கணங்களைப் பூண்டும், திருப்பாற்கடலைக் கடைந்த மந்தரகிரியைச் சூழக்கட்டிய சர்ப்பராஜனைப்போல விளங்கும்படி தோள்களில் பாகுவலயங்களை அணிந்தும், தன்னேடு போர்செய்து ரக்தமயமாக உடல்குழம்பி யோடிச் சூரியனுதயஞ் செய்தாற்போலச் சிவந்த கிரணக்கூட்டங்களை வீசுகின்ற ரத்நகுண்டலங்களைக் காதுகளில் தொங்கவிட்டும் உதயகிரியில் உதித்த சூரியனுடைய கிரணசாலங்கள், கருங்கடலில் தவழ்வதுபோலக் குங்குமச் சந்தனம் அப்பிய எல்லாத் தோள்களிலும், குண்டலங்களி னெளி வீசிக்கொண் டிருக்க, அவற்றின் பக்கத்தே சந்திரர்களும், நக்ஷத்திரங்களும், வரிசைவரிசையாக நின்று பிரகாசிப்பதுபோல முகங்களின் இரண்டு பாரிசங்களிலும் பெருமுத்து மாலைகளைத் தொங்கவிடுத்தும், இவ்வாறு சர்வா பரணங்களையும் பூண்டவனுய், உதயகாலத்தில் பன்னிரண்டு சூரியர்களும், கிரண ராசிகளை வீசுவது போலச் சாஜ்ஜொல்யமாய்ப் பிரகாசிக்கின்ற பத்து முடிகளின்மேலும், தங்களுக்கு நடுவே அனேக விண்மீன்கள் விளங்கும்படி பலசந்திரர்கள் பிரகாசிப்பதுபோல முத்துக்குடைகள்மேலே கவிந்து நிற்கவும், கருக்கொண்ட நீலமேகங்கள், தவழ்கின்ற ஆகாயத்தில் பத்துப் பெருங்குடங்களிருந்து, அவற்றின்மேல் செவ்வானத்தி னெளிபடர அந்தக் குடங்களுக்கு இருபக்கத்திலும் பிறைச் சந்திரர்கள் முளைத்தாற்போல, பத்துமலைக் குகைகளுக்குச் சமானமாகிய பெரியகடைவாய்கள்தோறும் வளைந்த கோரதந்தங்கள் நிலாவீசவும், பத்துத்திசைகளிலுமுள்ள பத்துயானைகளின் முகங்களிலேயுங்கட்டிய பட்டங்களைப்போல, ஒரு ராசியாயுள்ள பெருமுத்துகளின்னெளி நிரம்பிய வீரபட்டங்கள், நெற்றிகளின்மேல் விளங்கவும், ஊடலிலே இஷ்டநாயகிமார்களுடைய அழகியசிலம்பு சப்திக்கின்ற பாதங்களை யல்லாமல் லோகேஸ்வரர்களே யானபோதிலும் அவர்களு

டைய பாதங்களை எக்காலத்திலும் வணங்கியறியாத தலைகளிலணிந்தபத்துக்கிரீடங்களும், தங்களொளியால் இந்தப் பூவுலகத்திலுள்ள சூரியனை ஒளிமழுங்கச்செய்து மற்றமேலாகங்களிலுள்ள அளவிடப்படாத இருளையெல்லாம் ஓட்டவும், அதியலங்காரவிபவத்தோடு விளங்கி, பாதாளம் பூமி பிரமலோகம் இவைகளிலுள்ள வீரர்கள்யாவரையும் வெற்றிகொண்டு அணிந்த வாகை மாலையையும், அதன் பக்கத்தில், மயில்போலுஞ் சாயலுள்ள யௌவன ஸ்திரீகளுடைய கண்களும் வண்டுகளும், கலந்து மொய்த்துக் கொள்ளும்படி தும்பை மாலையையும்தரித்து, சகரர்களாலே தோண்டப்பட்ட சமுத்திரத்தையும், தினங்களையும், கடல்மணலையும், இவைபோன்ற மற்றவற்றையும், வேண்டியதுகளை எல்லாம்குறைவின்றித்தருகின்ற மந்திரங்களையும், உவமை சொல்லக்கூடாததாகி, ஐம்பெரும் பூதங்களும், அழியுங் காலத்திலும் அழியாத தனது புகழைப்போல அளவுசெய்ய முடியாதஅஸ்திரங்களால்நிறைத்த அம்பறாத் தூணிகளை முதுகில் இறுக்கிக்கட்டி நின்றுன். அப்படிநின்ற ராவணன், கட்டியங்காரனைப் பார்த்துத் தேர் வரக்கடவதென்று உத்தரவுசெய்தான். உத்தரவுசெய்த மாத்திரத்தில் சுவர்க்க, மத்திய, பாதாளங்கள் ஒருமிக்கத் தன்மேல் ஏறினும் நாம் தலையில் முடித்துக்கொள்ளும், பூமாலையைப்போல அந்தத் திரிலோகங்களையும் சுமந்து செல்வதும், ராவணன் நினைத்த இடங்களுக்குக் குதிரைகளைப் பூட்டாமற்படிக்கே ஓரிமைப்பொழுதுக்குள்ளே போகத்தக்க யந்திரங்களமைத்ததும், அமுதத்தோடு திருப்பாற்கடலில் பிறந்த ஆயிரங் குதிரைகளையும், சூரியபகவானுடைய தேரிற்கட்டிய பச்சைக்குதிரையின் வமிசத்திற் பிறந்த குதிரைகளையும், அதிதேவதைகளாகிய அக்கினிபகவானுக் காகவும், வாயுபகவானுக்காகவும், கடல்நீரையும் வற்றச்செய்யத்தக்க வடவாமுகாக்கினியிலும், பிரசண்டமாருதத்திலும், ஜனித்த குதிரைகளையும், கட்டிய சிறப்புடையதும், பூமிமேல் ஓடுவது போலவே ஆகாயத்தின்மேலும்-சமுத்திரத்தின்மேலும்-நெருப்பின்மேலும்-மகோந்நதமான மேருமலையின்மேலும், ஓடத்தக்கதும் அண்டமுகட்டிலுள்ள பிரமனுடைய உலகத்துக்கும் மற்றனைத்துத்தேவர்களுடைய உலகங்களுக்கும், ஓரிமை கொட்டுங் காலத்துக்குள்ளே போய்த் திரும்பத்தக்கதும், எட்டுத்திக்குக் கஜங்களினுடைய மணிகளைப்போலச் சோதிக்கும் ஆயிரகோடி மணிகளையுடையதும், அநேக சூரியமண்டலங்களை மேருமலையின்மேல் குவித்துவைத்தாற்போலப் பிரகாசத்தையும், அண்டங்களையே விலைபெறத்தக்க மதிப்பையுடைய ரத்நங்களை முழுமையும்பதித்ததும், மஹாரிஷிகள் தேவர்கள் முதலானவரும், அண்டாதிபதிகள் யாவரும் கொடுத்தவைகளும், ஒருகாலத்தில் மேலே சொல்லியவர்களே யுத்தத்தில் தோற்றுக் கைநழுவவிட்டவைகளும், உயுத்தத்தில் அதிகுரூரமானவைகளும், கடலின் மணலினும் மிகுந்த தொகையுள்ளவைகளுமாகிய ஆயுதச் சுமைகளையுடையதும், ஜெயத்துக்கு வாசஸ்தானமானதும், உபேந்திரராகிய பாலன கர்த்தாவினுடைய சக்கரமும், நெற்றிக்கண்ணையுடைய சிவனுடைய மழுவாயுதமும், பிரமனுடைய கமண்டலமும், அழிந்தாலும் தானழியாத வலிமையுடையதும், தேவர்களும் முனிவர்களும் சூட்சுமமாகப் பார்த்தும் அறியக்கூடாத நானாவித சித்திரத்தொழில்கள், சத்தியத்தைப்போல என்றும்அழியாமல், பலசெய்யப்பெற்றதும் ஆகிய ரதம்வந்து சேர்ந்தது. அந்தரதத்துக்கு அருச்சனைகிரமப்படி செய்து, இத்தனை பேரென்று அளவுசொல்லக்கூடாத பிராமண ஜனங்கள் யாவர்க்கும் மனத்துக்கும் எட்டப்படாத தானமாகச் சொர்ணங்களையும் ஆடை யணி முதலியதுகளையும் கொடுத்து, ரதத்துக்கு நமஸ்காரஞ் செய்து அதன்மேல் ஏறினான். இப்படி ராவணன், தேரேறியதைக்கண்ட இந்திரன் முதலாகிய சமஸ்ததேவர்களும், இவன்ஸ்ரீராமபாணத்தால் நாசத்தை யடையப்போகிறனென்பதை முன்னேயறிந்தவர்களா யிருந்தாலும், இவனால்பலமுறைதாங்கள்பட்டிருக்கிற யுத்தசிரமமிகுதியால் இனி எதாய் முடியுமோவென்று பயந்துசிதறியோடி, புத்தியும் கண்களும் மழுங்கிப்போய், மனம் திகைத்துநின்று, ஒருவரையொருவர்பார்த்து, நாம் செய்யவேண்டியது என்ன இருக்கிறதென்று பேசிக்கொண்டார்கள். ஐம்புல வாசைகளையும் நிரசித்த மஹாயோகிகளும் பயந்தார்கள். இம்மட்டுந்தானோ? சர்வலோகங்களும் அச்சத்தால் தங்கள் தங்கள் நிலை கலங்கினகள். இப்படி சமஸ்தலோகவாசிகளும், பிராணபீதி யடையும்படி ரதத்தின்மே லேறிய பிரதாபலங்கேஸ்வரன், தன்னருகே நின்ற ராக்ஷசவீரர்களைநோக்கி இன்றுநான் யுத்தத்தில் பிரவேசிப்பதினால் எனக்குத் தோ

தேவ தேவோத்தமா? ராக்ஷஸ குலகாலா? சாதுசம்ரக்ஷகா? எங்களைக்காத்தருளாயென்று சொல்லுகிறவர்கள், பயத்தால் நாவெழாமல் குழறிக்குழறிச் சொல்லிக்கொண்டு நடக்கக்காலெழாமல் அங்கங்கே சுருண்டுவிழுந்து உளைக்கின்ற கூச்சல் அதிகரிக்க, ஆதியிலே விஷ்ணுதேவாதி சமஸ்ததேவர்களும், முனிவர்களும், ராக்ஷசர்களால் துன்பப்பட்டுக் கலங்கி முறையிட்ட காலத்தில், க்ஷீரசாகரத்தில் திருவநந்தாழ்வான் மேலிருந்து யோகநித்திரைநீங்கி எழுந்தாற்போலச் சடக்கெனவெழுந்து, மத்தகஜம்போலக் காணப்படுகின்ற ஸ்ரீராமபத்திர ராணவர், ஒப்பற்ற யமனுடைய விஷப்பாசக் கயிற்றையே கட்டினாற்போலப் பளபளென்று மின்னுகின்ற வாளாயுதத்தைத் திருவிடையில் வலப்பாரிசத்திற்கட்டி, விபீஷணாழ்வானையும், வானரவீரர்களையும் பார்த்து, கற்பின் பூங்கொடியாகிய சானகியினது துன்பத்துக்கும், சுவர்க்கலோக வாசிகள் முதலிய சாதுஜனர்களுடைய துன்பக்கடலுக்கும், இன்று முடிவு உண்டாகுமென்று திருவாய்மலர்ந்தருளி, வேறே ஒரு பரப்பிரமம் உண்டாயிருந்து, அதனுடைய வசத்தில் சகல பிரஹ்ம ருத்திரேந்திராதி சேதனசேதனங்களும், அடங்கியிருப்பதென்பது, எந்த வேதவேதாந்த இதிகாச புராணங்களிலும் இல்லையாதலால், மேலேசொல்லிய சமஸ்த சராசரங்களும், தனது திருவுளப்பாங்கின்படி அடங்கி நடப்பதா யிருக்க, இப்போது, தாம்பூட்டிக்கொண்ட கவசத்துக்குள் தமது திருமேனி அடங்கி யிருப்பதால், சாட்குண்ய பரப்பிரஹ்மமாகிய தம்மினும் அந்தக்கவசம் வேறே ஒரு பரப்பிரஹ்மம் உண்டென்னும்படியா யிருந்தது. அப்படிக் கவசத்தைப் பூட்டியபின், அதிகோபிஷ்டனாகிய நமனுடைய மடப்பள்ளியைப்போலவிளங்குகின்ற அழகியகைகளுக் குவிரற்புட்டில்களும், முன்னங்கைத் தோல்களும்கட்டி, சமஸ்த பொருள்களையும், தன்னிடத்தடக்கி வைத்துக்கொண்டிருக்கும், பூமிபோல விளங்கி, அளவுசெய்ய முடியாத நானாவித அஸ்திரங்கள் நிறைந்த அம்பறுத்தூணியை முதுகில் இறுகக்கட்டி யுத்தசந்நத்தராயினார். சுவாமியினுடைய யுத்தத் திறத்தைக்கண்டு சேவிக்கும்படி வந்திருந்த தேவர்களுக்குள், காளகண்ட திரிநேத்திரராகிய பரமசிவனானவர், ராக்ஷசர்களுடைய சண்டை இன்றோடே முடிவாகின்றது. நம்முடைய ஆண்டவராகிய ஸ்ரீராம மூர்த்தியே வெற்றியடையப்போகிறார். இதற்குச்சந்தேகமில்லை. இனிராக்ஷசவுபத்திரவ பயமென்பது நமக்குக்கிடையாது. நீங்கள் நிர்ப்பயர்களாய், மணிகள்கட்டி வெற்றிச்சக்கரங்கள் பூட்டிப் பொன்னாலமைத்த ரதத்தை, தாரக மந்திர வாச்சியராகிய ஸ்ரீராம பிரானுக்கு அனுப்புங்கோளென்று சொல்லி யருளினார். ஸ்ரீ உமாநாயகராகிய ருத்திரபகவான், சொல்லியதைக் கேட்டு, இது செய்யத் தக்கதே யென்றுசொல்லித் தங்கள் அரசனாகிய இந்திரனுக்குத் தெரிவித்தார்கள். அதுகேட்டு இந்திரன், ஒருக்ஷண காலத்துக்குள்ளே திரிலோகத்தையும், கிரமமாகச் சுற்றிக்கொண்டுவரத்தக்க ஒப்பில்லாத தேரைக்கொண்டு வாருங்கோளென்று உத்திரவு செய்தான். உடனே தேவர்கள், குதுகலமாகச்சென்று ரதசாரதியாகிய மாதலியைப் பார்த்து, நமது ராஜனானவர் தேரை ஓட்டிவரச் சொன்னாரென்று சொல்லினார்கள். தேவர்கள், சொன்னதைக்கேட்டு மாதலி யென்பவன், எழுகுலாசலங்களிலுமுள்ள பலத்தை யெடுத்துச் செய்த கொடிஞ்சும், பிருதிவியிலும் அப்பிலுமுள்ள பலத்தினால் செய்த இருசும், அஷ்டநாகங்களினால் செய்த வடக்கயிறும், வருஷம் அயனம், இருது, மாதம், பக்ஷம், வாரம், நாள், என்று இதுவனாயிலும், நடந்தகாலங்களிலும், இனிவருங் காலங்களிலும், விசாலித்திருக்கின்ற தட்டும், நக்ஷத்திரங்களினால் செய்த மணிமாலைகளும், திக்குகளினாலே அமைத்த பக்கச்சுவர்களும், மேகராசிகளால் இயற்றிய துவஜமும், அஞ்சு பூதங்களினுடைய சத்திகளெல்லாம் ஒன்றாய்த்திரண்டமைந்த பலமும், புல்பூண்டுமுதல் விருக்ஷங்கள்வரையுமுள்ள தாபரங்களாலமைத்த கொடிகளும், ஸ்ரீசர்வேசுரனானவர், சங்குதாங்கிய தமது திருக்கரத்தால் பாற்கடலைக்கடைந்த காலத்தில் உண்டாகிய ஆரவாரமே, தனதிடத்து உண்டாகும், ஆரவாரமும், அவருடைய திருவுந்தியில் முளைத்த மூலதாமரை மலரின் மொட்டே தனக்குமொட்டும், ஐம்பெரும் பூதங்களையும் திருவுதரத்தில் வைத்து மறுபடியும் உமிழ்கின்ற அஷ்டகுண சம்பன்னனாகிய ஸ்ரீஹரி, சயனிக்கின்றசயனமாகிய ஆதிசேஷனை ஒத்த விசாலமும் உள்ள திருத்தேருக்கு, சதுர் வேதங்களாலும், சொல்லப்பட்ட யாகங்களினாலும், எழுசமுத்திரங்களினாலும், எழுமலைகளினாலும், எழுவகைகளினாலும், ஐம்பூதங்களினாலும், மூன்றுதீயினாலும், பெருந்தவங்களினாலும், யாகத்தில் சேர்

கின்ற,அவிர்ப்பாகத்தினுலும், வஜ்ராநோனேந்
திரியங்களினுலும்,கர்மேந்திரியங்களினுலும்
இந்தடைகளினுலும்,நாலுவேதங்களினுலும்
மூன்று காணங்களினுலும், பஞ்சவாயுகளினு
லும், இராப்பகலென்கின்ற இரண்டுபெரும்
பொருட்களினுலும், அவ்வண்ணமே உருவமாகச்
செய்யப்பட்ட குதிரைகளைப்பூட்டிச்சந்திர
சூரிய மண்டலங்கள் அழகுதட்டில் நிற்கும்
படி உயர்ந்த அந்தத்திருத்தேரை சமுத்திர
த்தாற் சூழ்ந்த பூலோகத்தைநோக்கி, ஆகாயமார்
க்கமாக ஓட்டிவந்து தேவேந்திரனுக்கு முன்
பாக அந்தரத்திலேயே நிறுத்தினுன். இந்தத்
தேரை, இதோ பூமியிலேயுந்த யுத்தகளத்திலெ
ழுந்தருளியிருக்கும் ஸ்ரீபுருஷோத்தமராகி
ய ஸ்ரீராமபிரானுர்க்குச் செலுத்தக் கடவா
யென்று கட்டளையிட்டவுடனே, அங்கிருந்த
தேவர்களெல்லாம், அந்தத் தேருக்கு நமஸ்
காரஞ்செய்து, ஓ ரதஸாரதியே! எங்கள்
அரசனுகிய இந்திரனது கட்டளையால் ஸ்ரீரா
மசந்திரரிடத்தில் செல்லுகின்றாயல்லோ?
நீ எங்களுக்கு உபகாரார்த்தமாகச் ஜெயத்
தையே தரக்கடவாயென்று கற்பகமலர்களை
வாரிவாரி யிறைக்கா நிற்கையில், மாதலியான
வன், இடதுகையில் கடிவாளவடத்தைப்பிடி
த்து, வலதுகையில் முட்கோல்கொண்டு நட
த்த, அந்த ரதமானது, மனோவேகத்திலும்
அதிவேகமாய், இருவினைகளுக்கும் விரோதி
யாய்நின்ற மெய்ஞ்ஞான கோசரத்தின் வி
சையமடைந்து, ஆகாயத்தை உருவி,தான்
வருவதைக்கண்டு, நிர்லோகத்தார்களும், கை
களைக்கூட்டித் தண்டன் சமர்ப்பிக்கும்படி
யாகவந்து, அப்பிராகிருதமாகிய ஸ்ரீராம
மூர்த்தியின் பக்கலில்சேர்ந்தது. சத்துச்சித்
தானந்தத்திருமேனியைமறைத்துலீலாமானு
ஷ்ய விக்கிரகஸ்வரூபராய் எழுந்தருளியிருக்
கின்ற ஸ்ரீரகுநந்தனர், அந்தத்தேரைக்கடாக்ஷி
த்து அதிகசோதிர்மயமாயிருப்பதினால் இது
சூரியனுடைய ரதமேல் போமேயானுல், ஒத்
தாவண்டியில்லை. அல்லதுயுகமுடிவில்தோன்
றுகின்ற படவைமுகாக்கினிச் சுடரேல்போ
மேயானுல், வெப்பத்தைக்காணேம், மேரு
மலையேல் போமேயானுல் இவ்வளவுபெரிய
உருவமுடையதல்ல. ஆகையால் திரிமூர்த்தி
களும் எமியுலாவுகின்ற தெய்வவிமானத்தா
னே! யுத்தத்துக்கு ஆயத்தமாயிருக்கிற நம்
மிடத்திலே இப்போது இதுவருவதற்கு என்
னகாரணமென்று தமக்குள்ளே எண்ணி மா
தலியைப்பார்த்து, யாருடைய கட்டளையால்
இரதச்செலுத்திக்கொண்டு நீ இவ்விடத்தில்
வந்தாயென்று திருவாய்மலர்ந் தருளினுர்.
அப்படி அரசர்களுக்கரசனுகிய தசரதபுத்தி
ரர் கேட்டதற்கு, அவ்வளவிலுள்ளதைத்
அறியவல்ல மாதலியானவன், சுவாமியைப்
பார்த்து ஸ்ரீ காகுஸ்தகுல நாயகனே ! இந்த
ரதம், திரிபுரசம்ஹாரகர்த்தாவாகிய சிவமூர்
த்தியும், சதுர்முகப் பிரஹ்மாவும், பூர்வ
காலத்தில் ஆயிரஞ் சூரியர்களுக்கு உவமை
யான ஒளியுள்ளதாகச் சிருட்டிக்கப்பட்டது.
ஊழிகாலத்தில் சமஸ்தவஸ்துக்களும் அழிந்
தாலும் இதுஅழியாமலிருப்பது. எங்கள்நா
யகனே ! இந்திரனுடைய ஏவுதலாலே, தேவ
ரீர்ஆரோகணித்தருளுமென்று ஓட்டிக்கொ
ண்டு வந்தேன். இந்தப் பிரம்மாண்டம்போ
ன்ற அநேக அண்டங்களை இதன்மேலேற்றி
அடுக்கிவைத்து நடத்தினுலும்,சிறிதும்சலன
மில்லாமல் சுமந்துகொண்டு வேண்டிய இட
த்துக்குச் செல்லும். குறுகவேண்டிய இ
டத்தில் குறுகிநிற்கும். உயர வேண்டியபோ
து அதிஉந்நதமாக உயரும். இக்காரியங்களா
ல் சமஸ்த அண்டங்களையும் தனக்குள்ளே
பொருந்த வைத்துக் கொள்ளுகின்ற ஸ்ரீசர்
வேசுரனுடைய திருவயிற்றை ஒப்பாகின்ற
து. தேவரீர் ஸ்ரீஹஸ்தத்தால் பிரயோகி
க்கப்பட்ட பாணத்தைப்போல அதிக வேக
மாய்ப் போகத்தக்கது. பார்வையின்வேகத்
தையும், மனோ வேகத்தையும், சண்டமாரு
தத்தின் வேகத்தையும், கண்டால் அம்மூன்
றையும் தன்னுடைய வேகத்துக்குள்ளே அ
டக்கிக்கொள்ளும். வேகத்திலே ஞானமும்
பின்னிடும்படி அதற்கு முன்னே செல்லும்
பூமியில் ஆகாயத்தில் செல்லுமென்பது இத
ற்கு ஒரு விசேடமல்ல. நீரின் மேலும் தீயி
ன்மேலும் பூமி ஆகாசங்களிற்செல்வதுபோ
லச் செல்லும். சப்தசமுத்திரங்களையும், பதி
னுலு லோகங்களையும், ஒரு கணப்பொழு
துக்குள்ளாக இரண்டு முறை சுற்றிவரும். இ
டையே ! எக்கேனும் நிற்குமென்றாலோ நி
ற்பதல்ல. ஸ்ரீ கோதண்டத்தைக் கையிலேந்
தி உலகங்களைக் காக்கவந்த எம்பெருமா
னே ! இப்படிப்பட்ட திறமுள்ளதேர், இது
வல்லாமல் வேறுமுண்டோ ! தேவர்களும்,
முனிவர்களும், சிவனும், பிரமனும் நம்மு
டைய சுவாமிக்கு விரைவாக அனுப்பென்று
இந்திரனுக்குச் சொல்ல அந்த இந்திரன்,
அனுப்பினுனென்று சொன்னுன். நம்முடை
ய ஐயனுகிய ஸ்ரீராமபிரானுனவர், ராக்ஷசர்
கள் ஏதாவது மாயையால் கற்பித்து அனுப்
பியதோ என்று யதார்த்தமாய்ச் சந்தேகித்த

வரைப்போலக் காணப்பட்டார். காணப்பட்ட மாத்திரத்தில், ரதத்தில் பூண்டுள்ள குதிரைகள், வேதங்களில் பிரதிபாதிரிய மூலகாரண வஸ்துவே, இந்த மாதலி இப்போது சொல்லியவையெல்லாம், சத்தியமே ஒன்றும் பொய்யல்லவென்று வேதமொழிகளைக்கொண்டு சொன்னதுகள். குதிரைகளினுடைய வேதமொழியால் இனிச் சந்தேகமில்லையென்றதேறினவரைப் போலத் தோன்றி, மாதலியைப்பார்த்து நீயார், என்றுவினவ, அவன் கைகளைக்குவித்து நின்று, ஸ்ரீரவிகுலநாயகரே? நானே இந்த மகத்தாகிய ரதத்தைச் செலுத்துகின்ற சாரதி! என்பேர், மாதலியென்றழைப்பார்கள் என்று உண்மை கூறினன். அப்படியவன் சொல்லியதன்மேல், எம்பெருமானனவர், சமீபத்திலிருந்த சுமித்திராதேவி இளஞ்சிங்கமாகிய லக்ஷ்மணனையும், திருவடிகளாகிய அநுமானையும், கடாக்ஷித்து, நீங்கள் இதைப்பற்றி ஆலோசிப்பதென்னவென்று கேட்டருளினர். அவர்களிருவரும், தண்டன் சமர்ப்பித்து வாயைப் பொத்திக்கொண்டுவணங்கிநின்று, எங்களாண்டவனே? நிச்சயமாக இந்திரனுடைய ரதமென்றேதோன்றுகிறதுஎன்றுசொன்னர்கள். தாம், ஸ்ரீகோதண்டத்தைத் திருக்கரத்தில்தாங்கியருளுதல், தனது விர்த்தி நாசமாய்க் கீழே விழுந்து புரண்டு துக்கித்துக்கொண்டிருக்கின்ற பாபவர்க்கங்களெல்லாம், நமக்கு மாதுருஸ்தானமாகிய ராவணனும், செவிலித்தாயர்கள்போல நம்மை வளர்த்து வந்த ராக்ஷசப்பெருங் கூட்டத்தாரும், பற்றற இன்றேடே அழிகின்றார்களல்லவாவென்று உள்ளம் நடுங்கிவாடவும், பரமவைதீக மார்க்கத்தார்யாவரும் சிறப்பாகக்கொள்ளப்பட்ட தருமவர்க்கங்களெல்லாம், களிப்போடு எழுந்துதுள்ளவும், அரக்கர்செய்யும் உபத்திரவத்தால் துக்கித்துக் கொண்டிருந்த தேவர்களும், முனிவர்களும், தங்கள் தங்கள் கைகளைச் சிரஸின்மேல் கூப்பி நமஸ்கரிக்கவும், ஸ்ரீகோதண்டதீக்ஷா குருவானவர், அந்த ரதத்தின்மேல் ஆரோகணித்தருளினர்.

இராவணன்தேரோறுபடலம்
முற்றிற்று.

## இராவணன்வதைப்படலம்.

திருத்தேரின்மேல் எம்பிரானனவர், எதியருளின மாத்திரத்தில் அந்தத் திருத்தேரினது பரிசுத்தமாகிய சக்கரங்கள், செல்லும்படி உருண்டதன்மையை நோக்கிய, அஜசங்கராதி சமஸ்த தேவசமூகங்களும், முனிவர் கூட்டங்களும், இதற்கு முன்னே தேவதைகள் கள்களோடு யுத்தஞ்செய்ய எழுந்தருளும் போதெல்லாம், எதியருளுகின்ற பெரியதிருவடிகளுடைய திருத்தோள்களைச் சிறிதும் நினைத்துத் துதியாதவர்களாய், திருவடிகளாகிய அநுமானுடைய திருத் தோள்களையே இந்தத் திருத்தேருக்குச் சமானமாகச் சொல்லலாமென்று பலவாறு துதித்து, கற்பக மலர்களைத்தூவி, சுவாமியினிடத் துண்டாகிய பிரேமாதிசயத்தால் வாழ்த்துக்கூறத்தலைப்பட்டு, இந்தத்திருத்தேர் யாதோரிடையூறுமில்லாமல் செல்லக்கடவதென்றும், எல்லாப் பலங்களையும் வகிக்கக்கடவதென்றும், சுவாமியை எதிர்த்து நின்ற ராக்ஷசர்களெல்லாம் நாசமாகக் கடவர்களென்றும், லோகேசுவரர்களுக்கும், ஈஸ்வரனுகிய ஸ்ரீராமபத்திரனனவர், செயம்பெறக் கடவரென்றும், ராக்ஷச ஸ்திரீகளெல்லாரும், ஸ்ரீராமபாணத்தால் பிராணனீங்கிய தங்கள் தங்கள் நாயகன் மார்மேலும், பந்து ஜனங்கள்மேலும் விழுந்து கதறி அழக்கடவர்களென்றும், வாழ்த்தி ஆர்ப்பரித்தார்கள். இப்படி சமஸ்த தேவர்களும் ஆர்ப்பரிக்கா நிற்கையில், அந்தத் திருத்தேரானது, யுத்தகளத்தை நோக்கிச் சென்றது. திருத்தேரானது யுத்தகளத்தை நோக்கி வருவதைப் பார்த்த தசமுகனுகிய ராவணன், தனது இருபது கண்களாலும்பார்த்து, இதுவரையிலும் நமக்கு நடுங்கி ஒடுங்கிக் கிடந்த துர்ப்பலர்களாகிய தேவர்கள், இன்றைய யுத்தத்தில், நாம் இந்த அற்பமனுஷியனுகிய இராமன் கையம்பால் மாண்டு விடுவோமென்று நினைத்துக்கொண்டு தேர் அனுப்பினர்கள். இனி எங்கே அவர்கள் தப்பிப் போனர்கள். இப்போது இந்தராமனைச் செயம்பெற்று, அவர்களைத்தண்டித்து ஹிம்சிப்பேன். அது பின்னே யாகட்டுமென்று பற்களை நறநறென்று கடித்து இருபதுவாய்களையும் மடித்துக் கறுவிக்கொண்டு, அடா சாரதி, அதோ கோதண்டத்தைச் சிவந்தகையிற் பிடித்து ரதாருடனாய் வருகின்ற ராமன்மேல் ரதத்தைச் செலுத்தக் கடவா யென்று கட்டளையிட்டான். முன்னே ராவணன் தேர் வருவதைக்கண்டு பயந்தோட்டம் பிடித்த வானரங்களெல்லாம், ஸ்ரீராமர் ராவணனைச் செயமடைவாரென்று நிர்ணயித்துத் தேவர்கள், ரதத்தை அனுப்பினர்கள். ஸ்ரீராம சந்திரர் வெற்றி கொள்வா ரென்பதற்கு இனிச் சந்

யென்கிற பரிக்கு அஞ்சிச் சும்மாவிட்டேனென்று கோபம் ஆகியபின், சாரதியானவன், அவனுடைய கோபத்துக்குப் பயந்து ஸ்ரீராமபிரானுடைய தேருக்கு எதிரே தேரைச்செலுத்தினான். செலுத்தியபோது மகாயுத்தம் நடந்தது, அந்தயுத்தத்தில், கோரமயமாகிய ரத கஜ துரகபதாதி யென்கிற பெருங்கடலானது, ஸ்ரீரகுநந்தனருடைய பாணங்களாகிய வடவாக்கினியால் வற்றிப்போய், மகோதரனென்னும் மஹாபாதக னொருவனுமே நின்று, சுவாமி எழுந்தருளிய ரதத்திற்கட்டிய இடிக் கொடியின் மேலும், தேரின்மேலும், குதிரையின் கடிவாள வடத்தைக் கையிற்பற்றி யிருக்கின்ற மாதலியின் மேலும், ஸ்ரீராமமூர்த்தியினுடைய குவிந்த தோள்களின்மேலும், அதிகவிசையாகப் பாணவருஷங்களைப்பெய்து, ஆகாயமும் பூமியும் கிழிபடும்படி ஆரவாரித்தான். அதைக் கடாக்ஷித்துத் தேவதேவோத்தமனாகிய ஸ்ரீராமமூர்த்தி, புன்னகைசெய்து, அந்தத்தியவன் பிடித்திருந்த வில்லையும், கவசத்தையும், கையையும், தோளையும், கழுத்தையும், ஒவ்வொருபாணத்தா லறுத்துத் தள்ளினார். அறுத்துத்தள்ளின மாத்திரத்தில், தான்சொல்லிவந்த சொல்லொன்றும், தன்செய்கை வேறொன்றும் மாறிப்போய், மகோதரன் முடிந்தான். திரிலோகத்தையும், எட்டுத்திக்கையும், வெற்றிபெற்ற இராவணன், மகோதரன்முடியும்படி பாணப்பிரயோகம்பண்ணி உயிரை அபகரித்ததைப்பார்த்து மனம்பொறுமல், அடா தேர்ப்பாகனே? ராமன்மேல் தேரைச் செலுத்து செலுத்தென்று சொல்லுதலும், அந்தப்பாகனும் அவன் சொன்னபடி ரதத்தைச்செலுத்தினான். தயாசிந்துவாகிய ஸ்ரீராமபத்திரரானவர், மூடுபனிபோலக் கவிந்துகொண்ட இந்தச்சேனைகள்யாவற்றையும் படுசூரணப்படுத்தி இவனைத் தனியனாகச்செய்துவிட்டால், பின்புமனமிளகுவான். அப்படிமனமிளகியபின் நம்மைச்சரணமடைந்து உஜ்ஜீவித்துப்போய்த் தான்பெற்றிருக்கிற வரங்களையும்,ஆயுசுவையும்,பூரணமாக அநுபவிப்பான். முன்னேதானே இவனோடு போர்செய்வோமானால் ஐயோ? இவனிறந்துபோவானேயென்று திருவுளமிரங்கி,இப்படித் தான் செய்துகொண்ட சங்கற்பம் அவனுக்குத் தோன்றாதபடியாகத் தமதுகோதண்டத்தை நாணேயிட்டு, தேர் யானை குதிரை காலாள்கள்மேல் அஸ்திரங்களை எய்தனர். அந்தக் காலத்தில் மஹாபராக்கிரம சாலியாகிய ராவணனுக்கு, சமஸ்தஅண்டங்களையும் முழுக்கடிக்கத்தக்க சமுத்திரங்களும் வற்றிப்போகும்படி வெற்றியுள்ள பிரசண்டவாயுவானது எழுந்து மோதுகின்ற காலத்தில் மேருமுதலாகிய பர்வதங்கள் தள்ளாடி அசைவது போல, பாகுவலயங்களெல்லாம் தெறித்து விட்டுச் சிந்தும்படி இடதுதோள்கள்பத்தும் துடித்தன. ஆகாயத்தில் நின்றும் ரத்தமழை இடைவிடாதுபெய்தன. உலகங்களெல்லாம் நடுங்கும்படி மேகமில்லாமலே குமுறின. பெருமலைகளெல்லாம் பொடிப் பொடியாயுதிரும்படி மின்னுமல் இடிகள் விழுந்தன. சூரியனை ஒளிமழுங்கும்படி பரிவேடங்கவிந்துகொண்டது. தேரிற்பூட்டிய குதிரைகள், நடுங்கின. கைகளிற்பிடித்திருந்த பத்துவில்லுகளும் தாமே நாரிகளற்றன. பத்துவாய்களும் நாவுகளும் ஈரமில்லாமல் உலர்ந்தன. மார்பிலணிந்த நல்லமணமுள்ள மலர்மாலைகள், புலால் நாற்றம் வீசின. தனதுதேரிற் கட்டிய வீணைக்கொடிமேல் கழுகுகளும், காகங்களும், வந்துமொய்த்துக்கொண்டன. தன்னைச்சூழ்ந்துவந்த குதிரைகள் கண்களில் நீரைத்தாரைதாரையாகச்சொரிந்துஅழுதன. பட்டமணிந்து அலங்கரித்துவந்த போர்க்குரிய யானைகள், தறிகளில் கட்டிவைத்தாற்போலச் சோம்பிநின்றன. இப்படிப்பட்ட தேவர்களுக்கு நன்மைகளைத்தரத்தக்க துர்ச்சகுனங்கள் உண்டாயினவற்றைப்பார்த்தும், மனஞ்சிறிதும்தளராமல் ஏமனுஷியனுக்கு என்னைவெல்லவும் முடியுமோவென்று நினைத்தான்.அவ்வாறு நினைத்தராவணனுடையதேரானது வருகின்ற வேகத்தால், உகாந்தத்தில் யாவும் பசையறக்காய்கின்ற சூரியனுடைய வெப்பத்தைச் சகிக்கமாட்டாமல் உயிர்வர்க்கங்கள், ஒதுக்கிடத்தைத் தேடித் தத்தளிப்பதுபோல, இரண்டுபக்ஷத்துச்சேனைகளும், தாங்கள் அணிஅணியாக நெருங்கியிருந்த நெருக்கங் கலைந்து சிதறிப்போயின. அங்குவந்த ராவணன், முடிவாகச் சொல்லப்பட்ட பிரபத்திநிஷ்டையோ டெதிர்த்த யக்ஞாதி கருமத்தைப்போலவும்,மெய்ஞ்ஞானத்தோ டெதிர்த்த அஞ்ஞானத்தைப் போலவும், சுதர்மத்தோ டெதிர்த்த மஹாபாதகத்தைப் போலவும், பராக்கிரமத்தையும் வெற்றியையுமுடைய பெரியதிருவடியோ டெதிர்த்த ஆயிரந் தலைகளை யுடைய சர்ப்பராஜனைப் போலவும், பகற்காலத்தோடெதிர்த்த இராக்காலத்தைப் போலவும், ஐராவத கஜேந்திரத்தோடெதிர்த்த திக்கஜத்தைப்போலவும்,

யகருடையவில்லும், தேவாசுரகண்டகனுகிய இராவணனுடைய வில்லும், மேகத்தினிடத்தே தோன்றுகின்ற இந்திரதனுசுக்கள் இரண்டு உண்டாயிருந்து, அந்த இருவில்லுகளும், மின்னல்களே நாரியாகப் பூட்டப்பட்டு ஒன்றோடொன்று எதிர்த்து நின்றதை ஒத்தன. அரக்கர்குலாதிபன், பெரியவாய்கள் பத்தையும் திறந்து ஆரவாரிக்கின்ற அஷ்டகாசத்தொனியும், ராக்ஷசசேனுவீரர்கள்முறையே நிற்கும்படி அதட்டுகின்ற ஆரவாரமும், வில்லுகளிலுண்டாகின்ற குணத்தொனியும்,அன்றைபதினம், இன்னஇன்ன தொனியென்று அறியும்படியாயும் இருந்தனவோ? சப்தசமுத்திரங்களும், மேகங்களும் ஆரவாரிக்கின்ற முடிவில்லாத பேரிரைச்சலென்றே என்னுவதுகளா யிருந்தன. அவைதிகமார்க்காநுசாரியாகிய இராவணனுடையகண்களில் பிறக்கின்ற தீப்பொறிகளிற் சில, பூமியில் வியாபித்தபோதினும்,அவற்றை மேகதாரைகளுக்கு உவமைசொல்லலாமோ? மேல்நோக்கிப் பறந்த சில நெருப்புப்பொறிகள், ஆகாயத்தில்சென்று திரும்பி விண்வீழ்கொள்ளிகளைப்போல உதிர்வன. செவ்வானத்து மேகங்களினின்றும் பிறக்கின்ற மின்னல்களைப்போலவும், இடிநெருப்புகளைப் போலவும், சிவந்த இருபதுகண்களினின்றும் எழுந்த பல அக்கினிப்பொறிகள், பக்கங்களிற்பரவி எட்டுத்திக்குகளிலும்போய் எதிர்ப்பட்ட பொருள்களைச் சாம்பலாகச்செய்வனவன்றிச்சும்மாப்போவனஅல்ல. பரதாரகமனவிசிஷ்டனுகிய ராவணன், வாய்களைத் திறந்து வீராவேசச்சிரிப்புச் சிரிக்குந்தோறும், ஸ்ரீராமமூர்த்தி ஒருவருமே கலங்காத ஊக்கமுடையவராயிருந்தனர். மற்ற சதுர்த்திசைகளிலுமுள்ள யாவரும் நடுங்குவார்கள். சமஸ்ததேவசமூஹங்களோ சொற்கள்குழறிக் கால்கள் உதறுவார்கள். மேகங்கள், தாங்கள்கொண்ட கருப்பங்கலங்குவன.இலங்காநகரத்துள்ள அரக்கர்கள் கூட்டங்களும்திடுக்கிடும். இப்படிச்சிரித்துச்சதுர்த்தசபுவனங்களையும் வெற்றிகொண்டநான், இந்தச்சிறியவில்லாளனுகிய ராமனை, லக்ஷியம்பண்ணிவில்லைப்பிடித்துப்போர்செய்துகொல்லுதல் என்னுடைய பிரதாபத்துக்குக் குறைவாகுமல்லவோ? ஆகையால், தேவர்கள் உபகரித்த இந்தத் தேரோடுதூக்கி ஆகாயத்தில் சுழற்றிப் பூமியின்மேல் மோதியறைந்து கொல்லுவேனென்று ஆர்ப்பரிப்பான். உடனேமனமிரங்கிச்சற்றுநேரம் இவனோடு வில்யுத்தம்பண்ணிக் கொல்வேனென்பான். மின்னல்களைக்கொண்டு செய்தவைத்தாலொத்த அம்புகளாலே, யுத்தம்இவ்வொருமுடிய ஹேதம்பண்ணி, இந்தராமனைச் சிறைபிடித்துவைப்பேனென்றால், அதுவும் இம்மனிதனுக்கு வெற்றியே யாகும். ரதத்தைக் கைகளாலொடித்துப் பொடிசெய்துவிட்டுப் பிடித்திருக்கின்ற ஒரு வில்லோடு கூடச் சிறைபிடிப்பேனென்று எழுந்திருப்பான். இந்தப்பிரகாரம் எண்ணிப்பதறுகின்றமனத்தையும், இடையிடையே தோன்றுகின்ற கோபத்தையும், அள்ளிவிளைப்பதுபோலத் தீப்பொறிகள்பறக்கின்ற கண்களையும் உடைய கொடியோன்,உயர்ந்தவில்லுகள் வளையும்படி தொடுத்து இடிகளையும், அக்கினியையும், ஒத்தவைகளும், எமனுடைய மார்பினும் நுழையத்தக்கவைகளும், மழையை ஒத்தவைகளும், முன்னொருகாலத்தில் தேவர்கள் பிரயோகித்த அஸ்திரங்களைஎல்லாம் பற்றறும்படிச்செய்த வலியுடையவைகளும், பாற்கடல் கடைந்த மத்தாகிய மந்தரகிரியைச் சுற்றிய வாசுகியென்னும் பாம்பினும்பெரியவைகளும், ஆகிய கொடியதீக்ஷணியமான அம்புகளை இடியோசைபிறக்கும்படி எய்தான். மேருமலையையும் துண்டப்படுத்தி அம்மட்டிலே தங்காமல் பிர்ஹம்மாண்டத்தையும் தொளைத்துக்கொண்டு அப்புறத்தும் போகுமென்று தேவர்களும் சந்தேகங்கொள்ளும்படி, கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீராமபிரானுனவர், ஸ்ரீகோதண்டத்தில் அம்புகளைத்தொடுத்து, வாயுவேகமாக வருகின்ற ராவண பாணங்களை அந்தரத்திலேயே துண்டதுண்டங்களாய் விழும்படித் துண்டித்துவிட்டார். செய்துநிறைவேற்றும் வல்லமை யுடைய ஒருவன், முயன்றகாரியமானது, அவன்முன்செய்த தீவினை நடுவேவந்து இடையூறுபடுத்த அழிந்தாற்போல, ஸ்ரீராமபாணத்தால் தன்னுடைய பாணங்கள் வலியிழந்து அழிந்ததைக்கண்டு, அளவில்லாத அஸ்திரங்களை, யுகமுடிவில் மேகங்கள் மழைக்கா விதங்கிப் பெய்தாற்போலப் பிரயோகித்தான். அந்த அஸ்திரங்கள், ஆகாயம், திக்கு, மலைகள், சமுத்திரம், பூமி, இவ்விடங்களிலெல்லாம் நிறைந்து, ஒருபொருளையும் பார்க்கவொட்டாமல்,எல்லாத்தேவர்களுடைய கண்களுக்குந் தடையாய்நின்று, கணிதசாஸ்திரிகளால் ஏற்படுத்தப்பட்ட கணிதங்களையும் கடந்து, வெயில் பூமியில்காயவொட்டாமல் பரவி இருளை உண்டாக்கி, நிலைக் கக்கினது கள். யானைத் தோலைப்போர்த்த மஹாயுத்த

த்தொழில் வல்ல ருத்திரபகவானும் இப்படிப்புறப்பட்ட அம்புகளைக்கண்டு திகைத்துப் போவாரென்றால், அந்த அம்புகளின் பெருமையைநாமென்னசொல்வது. மற்றுமிரமன் முதலாகிய பெருந்தேவர்களும், முனிவர்களும், பயங்கொண்டு எல்லாரும், இந்தக் கோரத்தைக் கண்களால் பார்க்கமாட்டோமென்று தங்கள் கைகளால கண்களை மூடிக்கொண்டு சும்மாஇருந்துவிட்டனர்கள். அநேக இடிகள், விழும்போது மலைகள், பொடிப்பொடியாய்ச் சிந்துவதுபோல, வானரசேனைகளெல்லாம் சிதறிப்போயின. எல்லாவற்றிற்கும் முதல்வராகிய ஸ்ரீகோதண்ட தீக்ஷாகுருவானவர், அச்செய்கையைக்கண்டு, அதை விலக்க வேண்டுமெனத் திருவுளங்கொண்டு வில்லில்தொடுத்து ஒரு அஸ்திரத்தைப் பிரயோகித்தனர். பிரயோகித்த ஓரம்பானது, தக்ஷிணாக்கினியம், ஆகவநியம், காருகபத்தியம் என்னும் முத்தீயால் யாகங்களிசெய்து, வேத ஒழுக்கத்தில் ஒழுகுகின்ற பிராமணனுக்கு, பஞ்சகாலத்தில் ஒருவன்செய்ததானத்தின் பிரயோசனத்தைப்போல விர்த்தியானது. தானஞ்செய்தவனுடைய பூர்வகர்மங்களெல்லாம், உடனே நசித்துவிடுவதுபோல ராக்ஷசகுல நாயகன், பிரயோகித்த அம்புகளெல்லாம், அந்த ஓரம்பினால் நாசமாயின. ஒருக்ஷணப்பொழுதுக்குள்ளாக லக்ஷம் பாணங்களைத் தேவகுலகாலனானவன் எய்வான். அந்த க்ஷணத்துக்குள்ளேதானே ராக்ஷசகுல வைரியானவர், அவ்வளவுஅம்புகளையும் பிரதி அம்புகள் தொடுத்து அறுத்துத் தள்ளுவார். இப்படி அவன் எய்கின்ற அம்புகள்யாவும் ஸ்ரீராமபாணத்தால் துண்டுதுண்டுகளாய்க் கடலில்போய்விழுந்து நீரைக்குடிப்பதினால் அக்கடலும் சேறுமிச் சற்றுநேரத்துக்குள்ளே நீர்ப்பசையற்று, அங்குள்ள பொருள்களெல்லாம் சாம்பலாகி, அச்சாம்பல்கள் மேடுமேடாய் விளங்கும். தானெய்கின்ற அம்புகளையெல்லாம், காகுஸ்தகுலதிலகர், வில்லில் அம்பு தொடுத்து எய்து துண்டிக்கின்றமையால், மிகுந்தகோபங்கொண்டு, யுத்தத்தில் வல்லவனாகிய ராவணேஸ்வரன், எழுத்தடிகளையும், கோடரிகளையும், தோமரங்களையும், தண்டாயுதங்களையும், இருப்புலக்கைகளையும், சக்ராயுதங்களையும், சூலாயுதங்களையும், இவைபோன்ற மற்ற ஆயுதங்களையும், தனது இருபது கைகளாலும் எய்தெதிர்த்தான். உடலை [illegible]கொண்ட காளமேகம் போன்ற திருமேனியையுடைய ஸ்ரீகோதண்டராமரானவர், வேகத்தால் காற்றையும், தீப்பொறிகளைச் சிந்துவதினால் அக்கினியையும், ஓசையால் இடியையும், ஒத்த அம்புராசிகளைத் தொடுத்தெய்ய, அந்த அம்புகளுள் ஓரம்பானது ராவணன் அபரிமிதமாக எய்த ஆயுதங்களுள் ஆயிரவேல்களைத் துண்டித்தன. ஓரம்பானது, ஆயிர எழுத்தடிகளைக் கண்டித்தன. ஓரம்பானது, ஆயிரகோடரிகளை முறித்தன. ஓரம்பானது, ஆயிர அம்புகளைப் பொடிப்பொடிசெய்தன. ஒவ்வோரம்பானது, ஆயிரசக்கர சூலாயுதங்களைச் சின்னபின்னப்படுத்தின. இந்தப்பிரகாரம் சமயுத்தம் நடக்கிற சமயத்தில் ஸ்ரீராமபாணங்கள், தன்னுடலில்வந்து தைப்பதினால், அம்புகள்பட்டமதயானையைப்போல உள்ளங்கொதித்து, எழுமேகங்களும் ஒன்றாய்க்கூடிப் பெருந்துளிமழையைப் பெய்வதுபோலப் பத்துவில்லையும் வளைத்து அநேக அம்புகளைத்தொடுத்துப் பிரயோகித்தான். இந்த யுத்தத்தைக்கண்டு பிரிதிவிமுதலிய பஞ்சபூதங்களும், பாபிஷ்டனாகிய ராவணன் இன்றுமுடிவானென்று சந்தோஷித்தன. ஆயினும் ஸ்ரீசர்வேசுரனாகிய ஸ்ரீராமபிரான், எய்கிற அம்புமழைகள், எங்கும் வியாபித்தபோதினும் கருணையால் தமக்குக் குளிர்ந்திருப்பதினால், தம்முடைய உருவங்கள் குளிர்ச்சி அடைவன. அதிநீசனாகிய ராவணன், எய்கிற அம்புமழைகள், எவ்விடங்களிலும் சென்று உஷ்ணமாயிருப்பதினால் அப்பூதங்களுந்தம், தமது உருவம் வெப்பங்கொண்டுபோய் அக்கினிமய மாயின. இவ்வாறு இங்கே யுத்தகளத்தேநின்றுப்போலிருந்து, ஸ்ரீகருடபகவான், ஆகாயமார்க்கமாகக் கொண்டுவந்த மந்தரமலை ஸ்ரீஆஞ்சநேயர் கொண்டுவந்த சஞ்சீவிபர்வம், நினைத்த இடங்களுக்குச் செல்லுகின்ற திரிபுரம், கந்தர்ப்பலோகம்இவற்றுள்ஒன்றை, ஆகாயத்தில் கண்டாற்போலத்தோன்றும்படி ராவணனுடையதேரானது, அந்தரத்திலெழுந்துசெல்றது. அங்குநின்றபடி இராவணனானவன், எய்த பாண வருஷங்கள், ஸ்ரீராம சுவாமியினுடைய திருக்கண்களுக்கு முன்பாகவே வானரர்களுடைய உடல்களில் தைத்து உருவிப் போவதினால், இன்றோடு வானரர்கள், ஒழிந்தார்கள் முழுமையும் ஒழிந்தாரல்லர் என்றுசொல்லும்படி அநேக வானரவீரர்கள் பிராணனிழந்தார்கள். அதைக்கடாக்ஷித்த ஸ்ரீராமச்சந்திரர், இளமையாகிய ரிஷபத்தை ஒத்த மாதலி ! நம்முடைய வானரசேனா வீரர்களில் அநேகர் இறந்தனர்கள். இவர்கள் இறக்கும்ப

டி அம்புகளைப் பிரயோகித்த ராவணனுடைய இருபது தோள்களோடு பத்துத் தலைகளையும் இதோ அறுத்துத் தள்ளுகிறேன். நீயும் ரதத்தை ஆகாயமார்க்கத்தில் செலுத்தக் கடவாயென்று கட்டளையிட்டனர். அதுசெய்கிறேனென்று புத்திமானாகிய மாதலியென்பவன், தேரென்று பெயர்வைத்துக்கொண்டிருக்கும் ஊழிக்காற்றைச்செலுத்தச்சந்திரமண்டலத்தின்மேல் சூரியமண்டலம் போர்க்குப் போனதுபோல, ராவணனுடைய தேருக்கு முன்னேவந்து சேர்ந்தது. சேர்ந்த மாத்திரத்தில், மேகக்கூட்டங்கள் சிதறவும், திக்குகளெல்லாம் தளர்ந்து நிலைகெடவும், விண்மீன் திரள்கள் உதிரவும், பெரியமலைச் சிகரங்கள் நெரிந்து பொடியாகிச் சிந்தவும், செல்லுகிற வேகத்தாலுண்டாகிற காற்றால், சமுத்திர நீர் சுழலவும், குலாசலங்கள் யாவும், அண்டமும், நடுங்கவும், குயவனுடைய சக்கரம் சுழலுவதுபோல இரண்டுதேர்களும், ஆகாயத்தில் வலமிடமாகவும், இறங்கிப் பூமியில் இடம்வலமாகவும், சாரிகைதிரிந்தன. இப்படி உழந்து உருளுகிற காலத்துக்குள்ளே எவ்வுலகங்களிலும் சென்று ஒன்றாக நெருங்கியும் உடனேபிரிந்தும்செல்லுவதினால், இதுவளர்கின்றகீர்த்தியையுடைய இறைவனாகிய ஸ்ரீதசரதராமன் தேரென்றும், இது இராவணன்தேரென்றும், தேவர்களாலும் அறியக்கூடாமற்போச்சு. இத்தேர்களின் சிகரங்கள், படுவதினால், உதிராத விண்மீன்களும், சக்கரங்கள் தாக்குவதினால் நெக்குவிடாத மலைகளும், அதிலுண்டாகும் தீப்பொறிகள் சிதறுவதினால் வலிகுலையாத திக்குகளும், அதிர்ச்சியினால் வாயால் ரத்தம் கக்காத உயிர்களும் காணப்படவில்லை. அங்கு கூடியிருந்த தேவர்களில் சிலர், தேர்களிரண்டும் இப்போது இந்திரலோகத்திற் சென்றதுகள் என்பார்கள். அப்படிச் சொன்னவர்களே இல்லை இல்லை சந்திரலோகத்தில் சென்றதுகளென்பார்கள். சிலர், பிரமலோகத்தை யடைந்ததுகள் என்பார்கள். இதோ மந்தரமலையின்மேல் இறங்கினதுகள் என்பார்கள். இத்தினம் உலகங்கள் அழிந்துவிடுமென்று ஏங்கி நாவுலர்ந்து போனவர்களாய்ச் சிலர், போனதேர்கள் திரும்பியதுகளோ என்பார்கள். சிலர் மேகங்கள் தவழ்கின்ற ஆகாயத்திலுள்ள சுவர்க்கலோகம் பிளந்துபோச்சோ வென்பார்கள். சிலர் பூமியில் இறங்கினவோ என்பார்கள். சிலர், இத்தேர்களில் பூட்டியதுகள், குதிரைகளோ அல்ல குதிரைகளானால் இவ்வளவு வேகம் ஏது, ஆச்சரியகரமான காற்றுகள் என்பார்கள் சிலர், தேர்வீரர்கள், பாற்கடல் மத்தியிலிருந்து யுத்தஞ் செய்கிறார்களென்பார்கள். சிலர், ஏழுசமுத்திரத்துக்கும் அப்புறத்திற் சென்றார்களென்பார்கள். சிலர் மேற்குக் கடலிலிருக்கிறார்களென்பார்கள். சிலர், கிழக்குக்கடலிலிருக்கிறார்களென்பார்கள். சிலர், இங்கே வந்தனவென்பார்கள். தேவர்கள் தங்களுக்குள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், ஸ்ரீராமர் எழுந்தருளிய ரதமும், ராவணனேறிய தேரும், சப்த சமுத்திரங்களிலும், சப்ததீவுகளிலும், சப்த குலாசலங்களிலும், சப்தலோகங்களிலும், அண்டப் பித்திகையிலும், ஊழிக்காற்றைப் போல ஓயாமல் திரிந்தன. அப்படித்திரிந்த கடல்களிலும், உலகங்களிலும், தீவுகளிலும், குலாசலங்களிலும், தனக்கு ரக்ஷகமாயிருந்த பொருள்களை எடுத்தெறிந்தாற்போல ராவணன் ஸ்ரீராமசுவாமியின்மேல் எறிந்தபாணவருஷங்களாகவே யிருந்தன. பிரதாபலங்கேஸ்வரன், எறிகின்ற ஆயுதங்களையும், எய்யும் அம்புகளையும், ஸ்ரீராமபாணங்களில் சில, அறுத்துத் தள்ளியதுகள். சில, தடுத்து விட்டன. இம்மட்டிலே தம்முடைய வேகம் அடங்காமல் உலக முழுமையும் சென்று பாய்வன. ஸ்ரீராமச் சந்திரர், ராவணன் அபாரமாக விடுகின்ற அஸ்திர சஸ்திரங்களை அறுப்பதும் தடுப்பதுமே யல்லாமல் வேறொன்றுஞ் செய்திலர். அவ்விருவர்களுடைய தேர்களும், யுத்தம்தொடங்கிய ஏழுநாள், மலைகளும், சமுத்திரங்களும், சந்திராதித்தர்கள் திரிகின்ற மேலுலகங்களும், கீழுலகங்களும், நிலைகுலையும்படி மோதிமோதித்திரிகின்ற சண்டமாருதம் போலப் பேரிரைச்சலோடு இலங்கா நகரமேவந்துசேர்ந்தன. இரண்டுசாரதிகளும், நடத்திய வெற்றியுள்ள தேர்க்குதிரைகள், கடலிலுள்ள மணலினதுதொகைக்கு மூன்றுபங்கதிகமாக எல்லாவிடங்களிலும், சாரிகைதிரிந்ததுகளாயினும் சற்றேனும் இளைக்கவும் இல்லை. இளைப்படைந்து பெருமூச்சுவிடவும் இல்லை. ஸ்ரீராமபத்திரர் எழுந்தருளிய இந்திரனுடைய தேரிற்கட்டியதும், இதற்குமுன்னே நடந்த கொடிய சண்டைகளிலெல்லாம் ஒருவராலும் அறுக்கப் படாததுமாகிய ஆணிடிக் கொடியின்மேல், அதிபிரதாபசாலியாகிய ராவணன், ஒரு அர்த்தசந்திர பாணத்தைப் பிரயோகித்து அதை அறுத்துத்தள்ளினான். உலகத்தில் காய்ச்சின பெரிய இருப்புலக்கையின் முனையைக் குட

திரியினில் தோய்த்தமாத்திரத்தில் அந்நிர்,சுவதிப்போலவும்போலவுமிராவணனால் அறுபட்ட இடைக் கொடியானது சமுத்திரத்தில்வீழ்ந்த மாத்திரத்தில்,அக்கடல் நீர்குறைந்து போனது. ஸ்ரீதசரதபுத்திரர், ஆரோகணித்தருளிய தேர்க்கட்டிய சப்தப்பிரமத்தைப்போல அழியாத குதிரைகளின்மேல்,ராசிராசியாகச் சரங்களைப் பிரயோகித்து, சாரதித் தொழிலில் சித்திபெற்ற மாதலியினுடைய வயிரமார்பில் பன்னிரண்டு அம்புகளை எய்தான். உடனே கட்டுகளமைந்த பத்துவில்லுகளும், விசித்தாகாரமாக வானவில்லைப்போலவும், பிறைச்சந்திரனைப் போலவும், தோன்றும்படி வளைத்துத்தூவிய அம்புகள், ஸ்ரீசானகிபிராட்டி மணவாளருடைய திருமேனியைக் கவிந்து கொண்டமையால், தேவர்களும், சுவாமியினுடைய திருவுருவத்தைக்கண்டு சேவிக்கக் கூடாமற் போச்சு. சேவிக்கக் கூடாமற் போகவே, அதிபராக்கிரம சாலிகளாகியதேவர்களும், தெய்வசகாயராகிய ஸ்ரீராம சுவாமி, இனித் தோற்றுவிடுவா ரென்று தங்களுக்குள் ஒருகருத்துத்தோன்றிப்பயந்துவிட்டார்கள். ராக்ஷசர்க ளெல்லாரும், கோவென்று ஆர்ப்பரித்தார்கள். உலகமே திருவுருவமாயின ஸ்ரீசர்வேசுரனிடத்துத் தமக்குண்டாகிய அன்பினால் பயம்ஜனித்துமேலேயுங்கீழேயுங் காற்றுசஞ்சரித்ததில்லை. அண்டமுங்கலங்கியது. அக்கினியும் தனது வெப்பமும் ஒளியும் அடங்கியது. எழுகடலும், ஆகாயத்தை அளாவும்படி பொங்காமல்தமக்குள்ளே அசைவற்று அடங்கின. சந்திர சூரியர்கள், ஆகாயமார்க்கத்தில் போகாமல் திரும்பினார்கள். மேகங்களும் தங்களிடத்துள்ள நீர் வற்றிப்போனதுகள். திக்குயானைகள் களிப்பு நீங்கின. கடலலைகள் ஒலிக்க அஞ்சின. அங்காரகன், விசாக நக்ஷத்திரத்தை எதிர்ந்தகாலத்தில் உண்டாகும் நடுக்கம் போன்ற நடுக்கத்தைக்கொண்டுமேருவும்குலுங்கியது.வானரங்களும்,வானரப்படைத்தலைவர்களும், சுக்கிரீவ மஹாராஜரும், ஸ்ரீராமாநுஜருந்தங்களுக்குப்பிராணபதமாகிய ஸ்ரீரகுநந்தனனைக் காணாதவர்களாய், உதநாதனுடைய சநிசேஷ்டத்தைக் காணாமல் காட்டுயானைக்கூட்டங்கள் கலங்குவதுபோலவும், திருவணைசெய்த காலத்தில் கடல்மீன்கள் கலங்கியதுபோலவும் கலங்கினார்கள். ஸ்ரீராம பத்திரானவர் தருமநீதியின்படி ரதத்தை செலுத்திக்கொண்டிருந்த மாதலியினுடைய மார்பில் தைத்தபடி இராவணன் எய்த அம்புகளைக்கண்டு, முன்னே இளையபெருமாளுடைய திருமார்பில் வேல் தைத்தது என்று கேள்விப்பட்ட காலத்தில் கலங்கியதைப்பார்க்கிலும், அதிகமாகத் திருவுளங்கலங்கி, நீலநிறமுள்ள ராக்ஷசகுலேந்திரன், எய்த சரங்களையெல்லாம், இமை கொட்டுதற்குமுன்பாகத் துண்டுதுண்டுகளாக அறுத்துத் தள்ளி, அணியணியாக அம்புகளைத்தொடுத்தெய்து, ஆகாயமெல்லாம் பாணவருஷமாக்கிவிட்டார். தேவர்கள் முதலாகிய யாவரும் மனந்தேறினார்கள். மேலும், எல்லாவுயிர்களிலும் பிரியாமல் வசிக்கின்ற ஸ்ரீராமபிரானவர், தூண்களை வரிசையாக வைத்தாற்போல விளங்குகின்றராவணனுடைய தோள்கள்தோறும், வளைந்தபர்வதாகாரமாகிய விற்களின் வலிகுறையும்படி பாணங்களை எய்தனர். அவ்வளவிலே நில்லாமல், திருப்பாற்கடலில் யோக நித்திரையா யிருந்து கொண்டே எல்லாம் அறியவல்ல பரஞ்சோதியாகிய ஸ்ரீதசரதாத்மகர்ராவணனுடையமார்பில் பூட்டியகவசத்தைஉருவிக்கொண்டுரத்தபானம் பண்ணும்படி கிரணங்களைவீசுகின்றசூரிய அம்புகளைப்பிரயோகித்துஉடனேதிக்கின்முடிவுவரையுஞ்சென்றுஅடர்ந்தமேகராசிகள்தனதுமுனைபட்டுச்சிதைந்தோடும்படிமோதுகின்றபரந்தவடிவினதாகிய மொட்டுள்ளவீணை எழுதியகொடியையும்ஒருபாணத்தால்அறுத்துத்தள்ளினர். ஸ்ரீராமபிரானுடையரதத்தில் கொடியில்லாமையைக்கண்டு, சதுர்வேத ஸ்வரூபியாகிய ஸ்ரீகருடபகவான், அத்தேரின்சிகரத்திலெழுந்தருளினர்அதுகண்டுதேவர்கள் ஸ்ரீவேதபுருஷனாகிய வைனதேயன் அதிகோபிஷ்டராய் எழுந்தருளினர். நாம் இனி இந்த யுத்தத்தைப்பற்றி ஒன்றும் யோசிக்க வேண்டியதில்லையென்று ஸ்ரீபக்ஷிராசனை நானாவிதமாகத்துதித்தனர். இந்தச்சமயத்தில், 'தேவகண்டனாகிய ராவணன், போரில் ஒப்பில்லாதவராய், விளங்குகின்ற ஸ்ரீரவிகுலநாயகனை இனித் தான் விடப்போகிற பாணமானது ஒன்றும் செய்யமாட்டா தென்பதை அறிந்தவனாக இருந்தும், தாமசபாணமாகிய சிவாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகித்தான். அக்கினிமயமாகிய முகத்தையும், ரத்தமயமாகிய முகத்தையும், தேவமுகத்தையும், பேய்முகத்தையும், சர்ப்ப முகத்தையும் உடைய அந்தப் பஞ்சமுகாஸ்திரமானது, ஒரு திசையிலிருந்து ஒருதிசைவரையும், வளைந்து காணப்படுகின்ற வக்கிரதந்தங்களை யுடையதாயும் தன்னைப் பிரயோகித்த எசமானன் எதை எதைச் செய்யவேண்டுமென்று நினைக்கிறனோ

அவற்றை யெல்லாம் செய்வதாயும், சூரிய
சந்திரர்களை விழுங்கத்தக்கதாயும், ஒருதிக்
கில் இருளையும்,ஒருதிக்கில் வெயிலையும்,ஒரு
திக்கில் அக்கினிச்சுவாலையையும், ஒருதிக்கில்
மழையையும், ஒருதிக்கில் மின்னலையும்,ஒரு
திக்கில் இடியையும், ஒருதிக்கில் இரவென்
றும் பகலென்றும் சொல்லப்படாத மயக்
கத்தையும், ஒருதிக்கில்கல்மழையையும்,உண்
டாக்கிக்கொண்டு ஏழுலோகங்களிலும், மிகு
தியும் அந்தகாரமே கவிந்துகொள்ளவும்,அங்
குள்ள ஜீவராசிகளெல்லாம் கதறவும்,வருகின்
றதை ஸ்ரீராமநாதனுனவர், கடாக்ஷித்தருளி
அதற்குத்தக்கபடி ஆலோசித்து, சிவமூர்த்
தியினுடைய பாசுபதாஸ்திரத்தையெடுத்து
எய்தனர். அந்தச் சிவாஸ்திரமானது, ஒரு
வன் கனவில் கண்ட பொருள், விழித்தமாத்
திரத்தில் மறைந்தாற்போல அந்த மாயைக
ளெல்லாம், போய்விடும்படி, ராவணன்விட்
டபாணத்தைவிழுங்கிவிட்டது. ஒருவனுக்கு
ஸ்ரீமத்பரமவேதமார்க்கியானம்ஜனித்தமா
த்திரத்தில்,அசுரமோஹனார்த்தமாக உண்டா
ன அவைதிகமார்க்கத்தில் பற்றுவிட்டாற்
போலத் தன்பாணம் அழிந்துபோனதைக்
கண்டு, இருபதுகண்களிலும் தீப்பொறிகள்
பறக்கப் பற்களால் வாயைமடித்துக் கடித்
து, கழுகினிறகுகளை யமைத்த க்ரூரபாண
ங்களை எடுத்து, ஸ்ரீரகுநந்தனருடைய திரு
மேனியி லழுந்தும்படி எய்தான். அசுரர்க
ளுடைய படைகளையும், தேவர்களுடைய
கீர்த்தியையும் நாசப்படுத்தியதும், ராவண
னோடெதிர்த்த வீரர்களுடைய உயிர்களைக்
கொண்டுபோய் யமனுடைய வயிற்றிலிட்டு
நிரப்பியதும், இந்திரனுடைய செயத்தை
முழுமையுந் தொலைத்ததும், ஒருகாலத்தில்
எதிர்த்தபோது தேவர்கள் தங்கள் கையிற்
பற்றியிருந்த ஆயுதங்களைப்பார்த்து, அவம
தித்துச் சிரித்ததும், எந்தலோகங்களி லுள்ள
வர்களையும் வெற்றிகொண்டு பர்வதங்களை
ப் பேதித்துச்சென்றதும், ஆகிய அந்தப்பா
ணமானது, பிராமண்ணியதெய்வமாகிய ஸ்ரீ
ராமபிரானை நோக்கி வருவதைப் பார்த்து,
அங்கங்கேநின்று தேவர்கள் யாவரும், இது
லோகங்களை யெல்லாம் கவளீகரிக்கும்போ
லிருக்கிறதென்று நடுங்கியநடுக்கம், ஒழிந்து
கல்லென்று ஆரவாரிக்கும்படி, ஸ்ரீராமச்சந்
திரர், இடியின்மேல் வடவாமுகாக்கினியைப்
பிரயோகித்தாற் போல அக்கினியாஸ்திரத்
தைப் பிரயோகித்து அறுத்துத்தள்ளினார்.
அறுத்துத்தள்ளின நொடிப்பொழுதுக்குள்

ளே, இராவணனானவன், உயிர்களை அபகரிக்
கிறவிஷயத்தில் யமன், பின்வாங்கிப்போகி
லும் தாம் பின்வாங்காதவைகளும், கடலினி
ரையெல்லாம் வற்றச்செய்பவைகளும், மே
ருமலையையும் பொடியாக்கத்தக்கவைகளும்,
காற்றும் பின்செல்லும்படி முன்னே செல்
லத்தக்கவைகளும், உலகங்களை யெல்லாம்
உருவிப்போகத்தக்கவைகளும் ஆகிய நூறு
கோடி அம்புகளைத் தொடுத்துச் செலுத்தி
னான். அவன்பிரயோகித்ததைக்கண்ட முனி
வர்களில் சிலர், இந்த ராவணனுக்கு என்ன
கைவேகமென்பார்கள். சிலர், இவைபாணங்
களல்ல மாயமோவென்பார்கள். சிலர், இந்த
அம்புகள், பாய்வதற்கு ஆகாயத்தில் இன்ன
மும் இடமுண்டோஎன்பார்கள். சிலர்,முன்
னெயெல்லாம், இவ்வளவுக்ரூரமான யுத்தத்
தை ராவணன் செய்ததில்லை யென்பார்கள்.
இப்படிச் சொல்லிக் கொண் டிருக்கையில்,
சதுர்வேதங்களும், மூலகாரண பரவஸ்து
என்று எடுத்துச்சொல்லப்பட்ட ஸ்ரீராமநா
தனனவர், லங்காநாயகனால் ஏவப்பட்ட பா
ணங்கள் யாவும், கூரிலிருந்து அடிக்குதைவ
ரையும் இருபிளவாகும்படி அர்த்தசந்திர
பாணங்களைச்செலுத்திப் பிளந்துதள்ளினார்.
பிரஹ்மாண்டத்துக்குள்ளே மஹாதபங்க
ளைச்செய்து வரங்களைப் பெற்றவர்களுக்கு
ள்ளெல்லாம் சிறந்தவனாகிய தசக்கிரீவன்,
பலபோர்களிலும் வெற்றி ஒன்றுமேபெற்ற
மயனால் தரப்பட்ட பாணத்தை, ஸ்ரீதசரத
திருக்குமாரர்மேல் வில்லில் தொடுத்துவிட்
டான். பார்த்திருந்த தேவர்களெல்லாரும்,
இவ்வரக்கர் குலேந்திரன், மயாஸ்திரத்தைப்
பிரயோகித்துப் பூமியைச்சுட்டு நிர்மூலப்ப
டுத்துகின்றானே யென்று நடுக்கங்கொண்டு
சுருண்டுசுருண்டு வீழ்ந்தார்கள். வானரங்க
ளும் வானரப்படைத்தலைவர்களும், திக்கு
வி திக்குகளாக ஓட்டம்பிடித்தார்கள். வேத
வேதியர்கள் வணங்குதற்குரிய தெய்வமாகி
ய ஸ்ரீரகுநந்தனர்,இனிப்பூலோகத்தில் மனு
ஷிப்பூண்டில்லாமல் செய்துவிடுகிறேனென்
றுவருகின்ற அந்தப்பாணத்தினுடைய சௌ
ரியத்தை அறிந்து, காந்தர்வாஸ்திரத்தைக்
கொண்டு துண்டங்கள் செய்துவிட்டார்.
பூர்வத்தில் பிரமனால் படைக்கப்பட்டதும்,
இரணியகசிபுஆனவன்,தன்னைக்கொண்டு இந்
தப் பிர்மாண்டத்தைத் தன்வசப்படுத்தின
தும், மதுவென்னும் அசுரன் தன்கையிற்
கொண்டு யுத்தஞ்செய்ததும், சூரபத்மனெ
ன்னும் அசுரன் முற்காலத்தில் தேவர்களை

ஹாதஞ்செய்ததும், மேருமலைக்குச் சமான
மானதும், சூரியனைப்போன்ற ஒளிவீசுவ
தும், உலகத்திலுள்ள தேவமநுஷிய திரியக்
கு ஆகிய சமஸ்தபிராணிகளும் ஒரு யுககால
வளவுயுநின்று உருட்டிதும், ஒருசற்றும் உ
ருளாத கனமுள்ளதும், அநேக தேவர்களு
டைய சிரங்களை உருட்டியதும், சமுத்திரச
லத்தைப் பானம்பண்ணின அகஸ்தியரால்
கொடுக்கப்பட்டதும், ஆகிய கதாயுதமானது
தம்மிடத்து உண்டல்லவா? அதையெறிந்து
ஸ்ரீராமனுடைய உயிரை வாங்குவோமே
ன்று உத்தேசித்து எடுத்து, பத்துத்தலைகளை
யுடைய ராக்ஷசனுனவன், சுற்றி எறிந்தான்.
அந்தக்கதையானது, ஆகாயத்தில் ஆதித்தனை
ப்போல ஒளிவீசிக்கொண்டு, இது பட்டுக்
குடம்போல அண்டமானது, உடைந்துவிடு
மோவென்று சுவர்க்கவாசிகள்யாவரும் நடுக்
கிடவும், ஸ்ரீராமநாதனுடைய யுத்தத்தைக்
கண்டு சேவிக்கும்படிவந்திருந்த சகலதேவர்
களும், இருந்த இடம் தெரியாம லோடிப்
போகவும், மந்தரமலையானது, அதனுடைய
வேகத்தை உணர்ந்து, தன்னை யெடுத்துப்
போகக் கருடபகவான் மறுபடியும் வருகின்
றானோவென்று பயப்படவும், வருகின்றதை
ஸ்ரீராமச்சந்திரஸ்வாமியானவர், கடாக்ஷித்து
த் தேவர்களுக் கரசன், தன்னுயிரங்கண்களா
லும் பார்த்து அளவுசெய்யப்படாத நாம
ளை மொட்டம்பைச்செலுத்தி நூறுதுண்டுக
ளாகத் துண்டித்து உதிர்த்துவிட்டார். 'அது
பார்த்து நம்முடைய தனுர்வேத வித்தியா
சாதுரியத்துக்கு முன்னே இந்தராமனுடை
ய வித்யாசியானத்தைப்பார்த்தால் இவனை
ஒருசிறுகுழந்தையென்றேஎண்ணவேண்டும்.
பேயைப்போல யாதொரு பயனும்படாத
அற்பஆயுதங்களை நாம் எய்வதினால், இந்த ரா
மனும் அவைகளைத்துண்டித்துத் தான் தெரி
ந்துகொண்ட வில்யுத்தத் திறமையைக்காட்
டுகிறான். ஆதலால் அப்படிப்பட்ட ஆயு
தங்களை எய்வதினால் பயனொன்றுமில்லையெ
ன்று தனக்குள்ளே யோசித்துக்கொண்டு,
இந்தமநுஷியனும், இவனுக்குத் துணையாகி
ய பெருஞ்சேனைகளும், இதனால்தான் மடி
யார்களென்று மாயையின் அஸ்திரத்தை
எடுத்து, அதற்குச் செய்யவேண்டிய நிய
மப் பூசைகளைச்செய்து, தன் வம்சதெய்வ
மாகிய சாக்ஷாது பரமசிவனைத் தான் அறிவி
ந்த பயபக்தியோடு ஸ்வாகமத்திற் கூறும்
ப்படிப்படி தியானித்துத்தொழுது, அதிதேவ
தையாகிய ரிஷிகளையும், மந்திரத்தையும் எ
ண்ணி, பத்துத்திக்கிலும் ஆகாயப்பரப்பி
லும் அடங்காத வண்ணமாக வில்லில் தொ
டுத்து, அப்பிராகிருதராகிய ஸ்ரீராமன்மேல்
பிரயோகித்தான். ராவணன் மாயாஸ்திரத்
தைப் பிரயோகஞ்செய்தமாத்திரத்தில், அந்
த அஸ்திரத்தினது மாயாசக்தியால், முன்னே
மடிந்துபோன ராக்ஷசவீரர்க ளெல்லாம்
ஆகாயத்தை யளாவும்படியான உடலோடு
ஆயுஷைப் பெற்று உயிர்த் தெழுந்தார்க
ளென்னும்படி எங்கும் அரக்கர்களாய் நின்
று, ஆரவாரித்தார்கள். இந்திரஜித்தும்,
அவனுக் கிளையோர்களாகிய அதிகாயனும்,
கும்பனும், நிகும்பனும், படைத்தலைவர்க
ளாகிய மகராக்ஷனும், பிரகஸ்தனும், குரு
திரக்கண்ணனும், புகைக்கண்ணனும், வன்
னியும், மற்றவர்களும், மகோதரனும், மற்ற
மந்திரிகளும், மூலபல ராக்ஷசர்களும், ரத
கஜ துரக பதாதிகளும், அவ்விடத்தில் வந்து
நின்று, மேகங்கள் சிந்தும்படிகோவென்று
பேரிரைச்சலிட்டார்கள். ஸ்ரீராமபாணத்தா
ல் உயிர்மாய்ந்துபோனவை, ஆயிரவெள்ள
மென்று அறிவுடையோராலே சொல்லப்ப
ட்ட அவ்வளவு சேனைகளும், ராவணன், சா
க்ஷாது ஸ்ரீருத்திரபகவானிடத்தில் பெற்ற வ
ரத்தால் உயிர்பிழைத் தெழுந்தனவோவென்
று கண்டோர்சொல்லும்படி யுத்தகளமுழு
மையும் நிறைந்துவந்துநின்று, தேவர்களும்
முனிவர்களும் பயந்தோடும்படியாக, முன்
னே ஜெயித்தது எங்களைத்தானோ? நாங்கள்
இறந்துபோவது முண்டோ? அப்படியிற
ந்துபோனதை இன்றைக்குக் காட்டுகிறோம்.
ஸ்ரீராமா! லக்ஷுமணா! சுக்கிரீவா! சாம்ப
வா! அநுமானே! யுத்தத்துக்கு வாருங்கோ
ள் வாருங்கோளென்று, தங்களைக் கொலைசெ
ய்த வீரர்களுடையபெயர்களையிட்டு அழை
த்தன. பூமியை வேரோடு பேர்த்தெடுத்துக்
கொண் டெழுந்தன வென்னும்படியான
தோற்றத்தையுடைய பூதகணங்கள், பர்வத
ராசிகளைப்போல ஒரு பக்கத்தில் காணப்ப
ட்டன. முதலையின் உருவம்போல விளங்கு
கின்ற வளைந்த குண்டலங்கள், காதுகளிலே
பிரகாசிக்கும்படி பேய்க்கூட்டங்கள், ஆகா
யத்தினில் சிறிதிடமு மில்லையென்று சொல்
லும்படியாக காணப்பட்டன. அசத்தாகிய
நெறியில்செல்லாத சதுர்முகப் பிரஹ்மா
வைப்பார்க்கிலும் நல்ல சக்தியுள்ளவர்களோ
டுத் தாமசகுணத்தோடுபிறந்து தருமங்களை
அழிக்கின்ற ராக்ஷசர்கள், போர்க்கள மெங்
கும் வியாபித்துச் சித்திரத்தொழி லமைந்த

முற்றுக்குடைக ளுடையவர்களாய் நின்றார்கள். முன்னே இறந்துபோன ராக்ஷசர்களைப் பார்க்கிலும் இரண்டு பங்கு அதிகமான பெருங் கூட்டத்தர்களாய், சந்திரப்பிளவு போலப் பிரகாசிக்கும் கூரியதந்தங்களையும், அஞ்ஞானத் தொழில்களையும், ஒருவராலும் வெல்லக்கூடாத தேகவலிமையையும் உடைய முத்துமாலை யணிந்த வித்தியாதரர்கள், எல்லாத்திக்குகளிலும், அதிகர்வத்தோடு நெருங்கிநின்றார்கள். தாவுகின்ற சிங்கமும், யாளியும் ஒப்பென்று சொல்லத்தக்கவர்களாகிய ராக்ஷசர்கள் யாவரும், எட்டுத்திக்குகளி லுள்ளவர்களையும், உலகத்தி லுள்ளவர்களையும், போரில் வெல்லும் வலியுடையவர்களாய், வடவாமுகாக்கினியானது, கருங்கடலில்முளைத்தாற்போல விளங்குகின்ற செம்பட்டமயிரும் கறுத்த உடலுமாகத்தோன்றி, ஒளியும் வெப்பமுமாகிய அழகமைந்த இடிகளையும், சுடருள்ள கொடிய படைகளையும், கைகளி லுடையவர்களாய் வந்து நெருங்கினார்கள். இந்தச் சமூகங்களையும் அவைகள் செய்யும் பயங்கர கிருத்தியங்களையும், கண்ட ஸ்ரீமகாலக்ஷ்மி நாயகராகிய ஸ்ரீராமபிரானானவர், மாதலியைப் பார்த்து, இங்கே தோன்றுகின்ற இவைகளெல்லாம், மாயத்தினா லுண்டாயினவோ? இறந்த ராக்ஷசர்களும், அவர்கள் சேனைகளும், விதியினுடைய பலத்தால் உயிர் பிழைத் தெழுந்தார்களோ? பிரஹ்ம்மருத்திரேந்திராதிகளிடத்தில் தாங்கள் பெற்றிருந்த வரங்களினால் உயிர் பெற்றார்களோ! அல்லது பிழைத் தெழுந்ததற்கு வேறே எதுவுமுண்டோ! எனக்கு ஒன்றுந் தோன்றவில்லை. உனக்குள் ஆலோசித்துச் சொல்லக்கூடுமானால், சொல்லக்கடவா யென்று சொல்லினர், அதுகேட்டு மாதலியானவன், சூல்கொண்ட காளமேகம் போலத் திருமேனியையுடைய மாயப்பிரானே? இரும்புத்தொழில் செய்வதில் தேர்ச்சியுள்ள கருமானிடத்தில், ஒருவன் நூல் கோத்துத் தைக்கும் சிற்றூசி, ஒரு பொன்னுக்குக் கோடியென்று விலைகூறி விற்பதுபோல, ராவண னானவன் மற்றெவராலும் நீக்குதல்கூடாதமாயாஸ்திரத்தைப் பிரயோகித்தான். சம்ஹார கர்த்தாவாகிய சிவமூர்த்தியானவர், கூர்மையுள்ள வெண் பற்களையுடைய வாசுகி கக்கிய விஷத்தை, உனது நாமத்தினாயமாகிய, அச்சுத அநந்த கோவிந்த என்னும் திரு மந்திரங்களைப் பிரணவசகிதமாக உச்சரித்து அடக்கியது போலவும், துஷ்கர்ம வியாதிகளையும், அந்த நோய்க்குக் காரணமாகிய வினையையும், நின்னடியார்கள், உனது திருநாமத்தை ஓதி ஒழிப்பதுபோலவும், தேவதாந்தரங்களைப் பற்றற விட்டு நின்னையே பரவஸ்துவென உண்மை ஞானம் பிறந்து நினைக்கும் பரம வைதிக ருடைய பிறப்பு ஒழிவது போலவும், இதோ உம்முடைய பாணப் பிரயோகத்தால் ஒழிந்துவிடப் போகிறது. இங்கே தோன்றுகின்ற எல்லாமும், தசக்கிரீவன், அஜசங்கராதிகளிடத்தில் பெற்ற வரத்தினாலே யாவது, மாயையினாலே யாவது, தனது தவபலத்தினாலே யாவது, அல்லது யதார்த்தத்தினாலே யாவது, உண்டானவைகளா யிருந்த போதிலும் இருக்கட்டும். நீர், கியானாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்வீரென்றுசொன்னான். சொன்னமாத்திரத்தில், சகலவேதங்களும், சிரசினால் வணங்கவும், தேடவும் எட்டப்படாத பரம்பொருளாகிய தாசரதியானவர், யான் எனது என்னும் அகப்பற்றையும், புறப்பற்றையும், ஒழிப்பதற்கேதுவாகிய கியானமய அஸ்திரத்தை விட்டனர். அந்தக்கியானாஸ்திரமானது, புறப்படவும், ராவணனால் விடப்பட்ட மாயாஸ்திரமானது, ஜனனத்துக் கேதுவாகிய அஞ்ஞானத்தால் கவியப்பட்டு ஸ்வரூபகியானமில்லாமல் செய்துகொண் டிருக்கும் வியாபாரங்க ளெல்லாம், ஸ்வரூபகியானம் பிறந்தமாத்திரத்தில் ஒழிந்து விடுவதுபோல ஒழிந்துபோய் விட்டது. அந்தர மார்க்கத்தில் காளகண்டராகிய சங்கரமூர்த்தியும், சக்கரதரராகிய உபேந்திர விஷ்ணுமூர்த்தியும், சதுர்முகப் பிரஹ்ம்ம மூர்த்தியும், ராவணன் முதலில் பெற்ற வரமுதலானதகளை யெல்லாம் ஆலோசித்து, இன்றேடே தேவகண்டகர்களாகிய ராக்ஷசர்களுடைய உயிர்கள், முடிகின்ற காலத்தை எதிர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அந்தத் திரிமூர்த்திகளுடைய கண்களுக்கு முன்னே தானே சமஸ்ததேவர்களையும், வலியடங்கச் செய்யும் பிரதாபகங்கேசுரனானவன், தானெய்த மாயாஸ்திரமானது ஹதமாய்ப் போனதைக் கண்டு, ஆயிர மணிகள் கட்டிக்கோஷிப்பதும், தேவர்கள்கண்டால் வியாகுல மடைந்து நடுங்குவதும், ஆகிய சூலத்தை எடுத்து, சிருட்டிக்கப் பட்ட எல்லாவுயிர்களையும் சுட்டெரிக்கும் வலியுடையதென்று எண்ணி, இமைகொட்டு முன்னே எய்தான். அந்தச் சூலாயுதமானது, வடவாமுகாக்கினியும் வெப்பங்குறையவும், தேவர்களும் வானரங்களும், பட்டோடவும்,

உலகமெல்லாம் தன் அனலே விரியும்படி மூன்றுலகங்களினும் சுவாலைகளை வீசிக்கொண்டு தடைபட்டு நில்லாமல் நயனகோசரத்துக்கும் எட்டப்படாத வேகமுடையதாய் வருவதைக்கண்டு, ப்ரஹ்மருத்திரேந்திராதிகள், நீவர்களுக்கு அபயப்பிரதானங் கொடுக்கின்ற சாணிரமனு? செல்லக்கடவா யென்று உபமந்திரித்து விட்டான். இந்த ஆயுதத்தை நாசப்படுத்த உடைக்க சக்தியுண்டு எங்களிலொருவருக்கும் அடங்கமாட்டாது. மிகவுங் கூர்மையாகிய குரூர சூலமென்னுங் கூற்றுவனை சீக்கிரத்தில் தண்டித்தருளியும் தண்டித்தருளுமென்று வெகுதுக்கத்தோடு பிரார்த்தித்தார்கள். தேவர்களுடைய பிரார்த்தனையைக் கேட்டருளிய ஸ்ரீராமசுவாமியானவர், சிறந்த இடியும் நடுக்கும்படியாயும், பிரசண்டமாருதம்போல அதிவேகமாய்ச் செல்லும்படியாயும், சௌரியமான சில அம்புகளைப் பிரயோகித்தனர். அந்த அம்புகளெல்லாம், இராவணனுடைய சூலத்தை ஒன்றும் செய்யமாட்டாமல், பரமபாகவதர்களைக் குறித்து, ஆலோசியாமல் சிலர் செய்யும் கிருத்தியங்கள் பயன்படாமற் போவதுபோல நிஷ்பிரயோசனப் பட்டன. அதுகண்டு சுவாமி யானவர், தேவதாஸ்திரங்களை ஓயாமல் எய்தும், அவற்றை யெல்லாம் லக்ஷியம் பண்ணாமல், பிரஹ்மசாபத்தைப்போல வருகின்ற சூலத்தினது வலியைக்கண்டு அதைத் தடுக்கவேண்டிய செய்கை இன்னதென்று அறியாதவர்போலத் தோன்றிச் சும்மாநின்றார். சமஸ்ததேவஜனங்களும், ஸ்ரீராமச்சந்திரரானவர், சூலத்தைத்தடுக்கவேண்டியதைப் பற்றி ஒன்றும் நினையாதவராய் ஒன்றுஞ்செய்யாமல் இருக்கின்றாரேயென்று பயந்தனர்கள். தருமதேவதையும், அஞ்சிக் கால்குலைந்தது. மற்ற எல்லோரும் அச்சமுற்றார்கள். யாவரும், தம்முடைய யதார்த்த நிலையை அறியாதபடி மனுஷியனாகப்பிறந்த ஸ்ரீராமபிரானானவர், பார்த்துக்கொண்டிருக்கையில், கூடமாகிய மணியாரத்தால் ஒலியதிகரித்துக்கொண்டு, அக்கினிப்பொறி பறக்க, சுவாமியினுடைய சந்தனமணிந்த திருமார்புக்கு நேரோடிச் சூலமானது உருவிச்செல்வதாய் வந்தபோது, அதிகோபங்கொண்டு உங்காரஞ் செய்தனர். அந்த உங்காரத் தொனியால், பலபல பொடிகளாக நொறுங்கி விட்டது. சூலமானது பொடிப்பொடியாக நொறுங்கி விட்டதைக்கண்ட தேவர்களெல்லாம், போனவுயிர் வந்தவர்களாய், சிறிதும் அச்சமில்லாமல் ஆநந்த பரவசங்கொண்டு ஆரவாரித்தார்கள். ஆரவாரித்துக்கொண்டே கற்பக மலர்களை வாரிவாரிச் சுவாமியின் மேல் இறைத்தார்கள். அதுசெய்தலைவிட்டுத் துள்ளித்துள்ளிக் குதித்தார்கள். அங்கு இருந்தபடியே தெண்டன் சமர்ப்பித்து, இந்த மஹாசூலத்தினது பலத்தைக் குன்றச்செய்ய வல்லவர் நீரே அல்லாமல் வேறொருவருமுண்டோ? சாதுஜனங்களாகிய எங்களுக்குத் துஷ்டர்களால் நேரிடுகிற துக்கங்களையெல்லாம், தகிக்கின்ற தீயைப்போல நின்று ஒழிப்பவரும் நீரே, என்று துதித்துக்கொண்டிருந்தார்கள். தேவர்கள் இப்படியிருக்க, ஜெயமென்பது இனி நம்முடைய பட்சத்திலென்று உச்சாகத்தோடு ராவணன் விட்ட சூலமானது, அழித்தாலல்லாமல் நம்மைவிட்டுப் பேர மாட்டாதென்று உணர்ந்து, ஸ்ரீராமநாதரானவர், உங்காரஞ்செய்துபொடிப்பொடியாய்ச் செய்துவிட்டதை, அவன் கண்டு, திப்பிரமையாய் அசைவற்று நின்று அந்நாளிலே விபீஷணாழ்வானவன் சொன்னது, தனக்கு ஞாபகத்துக்கு வந்து, நாம், மஹாதபங்களைச் செய்துபெற்ற ஒருகாலத்திலும் அழியாத வரங்களையெல்லாம், இந்த ஸ்ரீராமன், பாணப்பிரயோகம் பண்ணி, அநாயாசமாகவே அழிக்கின்றான், ஆதலால், இவன் நம்முடைய கட்டளையைமீறி நடவாத நம்முடைய குலதெய்வமாகிய சாக்ஷாத்சிவனும், பிரமனும், உபேந்திர விஷ்ணுவும், அல்லன், அல்லது, மஹா பிரஹ்மரிஷியென்போமானால் அப்படிப்பட்ட ரிஷியானபோதிலும் நம்முடைய தபோபலத்தை அழிக்கவல்லவன் அல்லன். இவன்தான், சகல வேத வேதாந்தங்களாலும் சொல்லப்பட்ட முதற்காரண வஸ்து வென்று தீர்மானஞ் செய்து கொண்டான். அந்தத் தீர்மானத்தை உடனேவிட்டுத் தன்னுடைய உன்மத்தசுபாவத்தால், யாரோஆனபோதிலும் ஆகட்டும் என்னுடைய ஒப்பற்ற பெயரொன்று நின்று, எந்தப் புவனங்களிலுமுள்ள சுத்தவீரர்களையெல்லாம், அழும்படி செய்து எனக்கு மஹா செயத்தைத் தருகின்றது. இப்படிப்பட்ட கீர்த்தியைப் பெற்றிருக்கிறேன். மூலகாரணப் பொருளினவதாரமாகிய ஸ்ரீராமபிரான், எனக்குநேரேவந்து என்னைக் கொன்றபோதிலும், எல்லாருடைய உயர்ந்த கீர்த்திகளுக்குள்ளும் தலைமைபெற்ற கீர்த்தி எனக்குச் சாஸ்வதமாக இருக்குமென்று திடங்கொண்டு, தென்மேற்குத்திசைப்பாலகனுகிய

நிருதியினுடைய வெற்றியுள்ள நாகக்கணையை நினைத்த மாத்திரத்தில் அதுவந்துசேர்ந்தது. அதைக்கையிற்கொண்டு, எமனுடைய பிருவதையும் அழிக்கும் வில்லிலேதொடுத்து, உலகமுழுமையும் நடுங்கும்படியாயும், இருபது கண்களிலும், தீச்சொரியும்படியாயும், எய்தான். இராவணனெய்த நாகாஸ்திரமானது, பூமியைச்சுமக்கின்ற பிடரையுடைய ஆதிசேஷனும், மனம் அஞ்சும்படியாய், கோடிபடங்களை விரித்து, அவ்வளவு தலைகளை உயரத்தூக்கி, ஆழ்ந்து விசாலமாகிய வாய்களைத்திறந்துகொண்டு, மேருமலையும் சிறியதென்று சொல்லும்படி ஆகாயமுழுமையும் வியாபித்த தேஹத்தையுடையதாகி, தன்னுடைய எல்லா வாய்களிலும், சமுத்திரசலம்போல விஷங்கள் ஒழுகவும், கண்களில் தீப்பொறிகள் சிந்தவும், பேய்களின் வாய்களைப்போல வாய்களிலுள்ள வெள்ளைப்பற்கள், எங்கும் பிரகாசிக்கவும், தான் வருவதைக் கண்டலோகத்தார் யாவரும், இந்தக்கொடிய சர்ப்பபாணமானது, நம்முடைய ஐயனாகிய ஸ்ரீராமபிரானைத் தீண்டாமல் திரும்ப மாட்டாதென்றும், இவ்வளவிலேநில்லாமல், பூமியையும், கடலையும், விழுங்கிக்குடியாமற் போகாதென்றும், தயை தாக்ஷிண்ணியம் சிறிது மில்லாத குரூரனாகிய தசமுகன், இந்தச்சர்ப்பக்கணையைவிட்டுச் சராசரப் பொருள்களையெல்லாம், இப்பொழுதே நாசமாக்கிச் சாம்பலாகச்செய்யும்படி உத்தேசித்தா னென்றும் சொல்லிக் கொண்டு தட்டுமாறிக் கலங்கிக் கொண்டிருக்கையில், அப்படியாகச் சர்ப்பாஸ்திரமானது எங்கும்பாம்புகளாய் உயர்ந்த மலைகளைக் கவ்விக்கொண்டு வருவதை, ஸ்ரீரகுநந்தனர்கண்டு, இது எந்தப்பக்கங்களிலும் பரவிவருகின்றபடியால் யாவருக்கும் பயத்தைத் தருவதாயிருக்கின்றதுஎன்று திருவுளத்தில் நினைத்து, தப்பாமல் ஜெயத்தைத் தருவதாகிய காருடாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகித்தார். இராவண னெய்த நாகாஸ்திரமானது எப்படிப் பலபல வுருவங்கொண்டு வேகமாய் வந்ததோ அப்படியே இந்தக் காருடாஸ்திரமானது, பொன்மயமாகிய மூக்கும், நகங்களும், சிறைகளும், உடைய அநந்த கருடப்பறவைகளாகி, காற்றைப்போலச் சிறைகளைவிசிறி, அதிவேகமாகி ஆகாய முழுமையும் வியாபித்தது. எங்கும் வியாபித்துப் பறக்கின்ற கருடப்பறவைகள், வாய்கள்தோறும் கோபத்தினால் அக்கினிகளைக்கக்கிக்கொண்டு விளங்குவதினால், இலங்காநகரம் சாம்பராய்ப்போகும்படி. தீயை இடுகின்ற மெல்லிய தனித்தனி ஆகாயத்தில் விளக்குகளை எடுத்துச் செல்வதும்போ லிருந்தனகள். கிரணங்களை விரிக்கின்ற ரத்தினராசியாற் செய்தாற்போன்ற உருவத்தையுடைய அந்தக்கருடப்பட்சிகள், நாமனைத்தண்டுகளை அங்கங்கு கவர்ந்துகொண்டு எழுந்தாற்போலச் சர்ப்பங்களைக் கால்நகங்களால் இடுக்கிக்கொண்டு வாய்களால் விழுங்கிவிட்டனகள். அப்போது ராக்ஷசகுல நாயகனானவன், அக்கினி சுவாலையைப்போல வீசுகின்ற சுவாசம்விட்டுக்கொண்டு கோபமுடையவனாய்க் கொதிகொதித்து, சுவர்க்கமும், பூமியும், நிலைபேரும்படி இடிகளையொத்த பாணங்களை அநேகமாகத் தூவினான். அதன்மேல் ஸ்ரீரகுகுலநாயகரானவர், எய்த அம்புகள், ராவணபாணங்களைப் பொடிப்பொடியாய் விழத் துண்டித்துத் தள்ளியும் வேகமடங்காமல், தசக்கிரீவனுடைய மார்பில், அடிக்குறிதையும் தோன்றாதபடி தைத்து நின்றன.

இப்படிச் சமயுத்தம் நடக்குங் காலத்தில் திரிநேத்திர காளகண்டருடைய வெள்ளி மலையைப் பேர்த்தெடுத்த பராக்கிரம சாலியாகிய ராவணனுக்கு, ஸ்ரீராமபாண பிரயோகத்தால் புத்திமயங்கி, தான்கற்றிருந்த தனுர்வேதவித்தையும், மந்திரவித்தையும், மறந்துபோகத்தலைப்பட்டன. தருமதேவதைக்குச் சம்ரக்ஷண கர்த்தாவாகிய ஸ்ரீராமபிரானுக்குப்பராக்கிரமும், வீரமும் அதிகரித்தன. சத்பிராமணர்களாலே ஓதப்பட்ட வேதங்களில் வசிக்கின்ற சச்சிதாநந்த சொரூபராகிய ஸ்ரீகாகுஸ்தகுலசுவாமியானவர், மனுநீதியிலும், வேதமுறைமையிலும் நின்றுநடவாத அசுரகுலத்துக் கிசைவாக முளைத்திருக்கும் பத்துத்தலைகளில் ஒருதலையை அர்த்தசந்திரபாணத்தினால் அறுத்துத் தள்ளினார். பூர்வத்திலே மேருமலையின்சிகரங்களில் ஒன்றை வாயுபகவானானவர், மோதியறைந்தபோது, அந்தச்சிகரமானது சென்று கடலில்விழுந்ததுபோல, ஸ்ரீராமபாணத்தால் அறுபட்ட தலையானது, நெருப்பைக் கக்கிக்கொண்டு போய்ச் சமுத்திரத்தில்விழுந்து அமிழ்ந்தது. பார்த்திருந்த தேவர்களெல்லாம், பூமியில் இறங்கிவந்து இலங்கைமலையானது, நெக்குவிடும்படி மிதித்துக் குதித்து ஸ்ரீராமபிரானைத் துதித்துப்பாடி, உடுத்திருந்த வஸ்திரங்களை ஆகாயத்தில் விசிறியெறிந்து, துள்ளித்துள்ளியாடினார்கள். தேகத்தைவிட்டுக்கழிந்த உயிரானது, முன்செய்ததருமப்பயனால்

அத்தேசத்தையே அடைந்தாற்போல, மறு படியும் அறுந்ததலைக்குப் பதிலாக ஒருதலை முளைத்தது. ஆகையால், சிறந்தது தவமே யல்லாமல் வேறுசெய்கையு முண்டோ? அறுபட்ட தலையானது, அறுபடவில்லையென் னும்படி முளைத்தெழுந்ததலையானது, சிறந்த அழிவில்லாத பேரின்பச் செல்வனாகிய ஸ்ரீ கோதண்ட தீக்ஷாகுருவை, இடிபோலமுழ ங்கித் தூர்ப்பாஷிணங்களால் தூஷிஸித்து அ டைந்தது. மேருமலைச்சிகரம் துண்டிக்கப் பட்டு விழுந்தாற்போல அதிவேகமாய்ச்செ ன்றுவிழுந்து, தன்னுடையவாயிலும், செவி த்தொளையிலும், மூக்குத் துவாரத்திலும், கடலினது நீரையெல்லாம் அடக்கிக் கொ ண்டு, ஆலாலவிஷம்போலச் சுவாலையை வீசு கின்ற விழிகள் பிதுங்கித் தோன்றும்படி கிடந்த தலையும், வீராவேசத்தாலே மேகங் குமுறுவதுபோலக் கர்ஜித்தது. எப்படிப் பட்டதேவர்களோடும்இருவரையும்ஜெயமே பெற்றுவந்த நம்முடையதலைகளிலொன்றை, இந்தஸ்ரீராமன் அறுத்தத் தன்னினலல்லவா வென்று கோபவெறிகொண்டு, நெடுங்கணைக்கி னன் சிறப்பாகச்சொல்லப்பட்ட உயிரெழு த்துகளில் செயற்கையாலல்லாமல் இயற்கை யாகவேதாதமாத்திரையாய்நின்ற அகாரத்து க்குப் பொருளாய் நின்ற ஸ்ரீராகவபிரா னு டைய திருத்தோள்களில் பத்துவிரு அம்பு களை, இடியும் நம்மைப்போல வேறு இடி யு முண்டோவென்று சந்தேகிக்கும்படியாக ஆவரித்து எய்தான். நீசனுகிய ராவணனு க்குத் தலையறுந்தால் மறுபடியும் அத் தலை யை முளைப்பிக்கும் தவமும் உண்டாயிரு ப்பதை அறிந்து, சக்கரதரனுகிய ஸ்ரீராம பிரானுனவர், வில்லைத்தாங்கியிருந்த ராவண னுடையகைகளிலொன்றைப் பிறைமுக அம் பினுல் அறுத்து விழச்செய்தார். சுவாமியி னுடைய அர்த்தசந்திரபாணம்பட்டு அறுந் துவிழுந்தகை, வில்லைப் பற்றியபடியே கிட ந்தது. அக்கையானது, அறுந்த இடத்தில் மற்றொருகை முன்னேதானே யிருந்தது போல ஒருகை உடனேமுளைத்தெழுந்ததை அறிந்தவர்களும் உண்டோ? ஒருவருமில்லை. அவ்வளவு வினாடியிலே பிறந்தது. முன்பாரி சத்தில் முன்னுகளைப்போல மயிர்கள் அடர் ந்து முளைத்திருப்பதும், மின்னற்கொடி யைப் பிடித்திருப்பதுபோல வில்லைப் பிடி த்திருப்பதும் ஆகிய அறுந்தகையை,மஹா பாபியானுகிய ராவணன் எடுத்து, பொன் னுற்செய்த கடிவாளத்தைப் பிடித்துத் தே ரைச்செலுத்திக்கொண்டிருக்கும் மாதலியி னுடைய உயிரை மாய்க்கவேண்டு மென்று எண்ணங்கொண்டு எறிந்தான். எறிந்த அந் தக்கையானது, வேகமாய் வந்து மார்பில் பட்ட மாத்திரத்தில் ஒருகாலத்திலும்சலியா த மாதலியானவன், மனமுடைந்து குலைகுலைந் து, வாயால் குபுகுபுவென்று உதிரத்தைக் கக் கினன். தன்னுடையசத்துருக்களாகிய அசுரர் களைப் போலவே பெற்றுக்கொண்ட தவத் தையுடையவனு யிருந்தபோதிலும், அவ்வ சுரர்களிலும் விசேஷிக்கினனென்று சொல் லும்படி காமரமென்னும்இசையைப்பாடி, ஸ்ரீ கயிலாசபதியாகிய ருத்திரபகவானிடத் தில் அவர்கையிற் பிடித்திருந்த வாளைப்பெ ற்றுக்கொண்டராவணனுனவன், தானெறிந்த கையானதுமார்பிற்பட்டு உதிரத்தைக் கக்கிக் கொண்டு வருந்துகின்ற மாதலியினுடையநி லைமையைக்கண்டு, இவன் பிராணனைவாங்க இதுவே நல்லசமயமென்றறிந்து, தோமரமெ ன்னும் ஆயுதத்தைச் சுழற்றிஎறிந்தான். மாத லியினுடைய உயிர்வாழ்க்கையானது இன் றோடு முடிந்ததென்று தேவ சமூஹ ங்கள் சிதறி ஓடும்படி ராவணன் எறிந்த தோ மராயுதத்தின்மேல், தீனரக்ஷகனுகிய ஸ்ரீகா குஸ்தகுலநாயகர், பஞ்சமுகாஸ்திரத்தைப் பிரயோகித்தனர். அந்தஅஸ்திரத்தால் தோ மரமானது, பொடிப்பொடியா யுதிர்ந்து போனது. சர்வஜ்ஞமூர்த்தியும், சர்வலோக நாயகனுமாகிய ஸ்ரீராமபிரானுனவர் தனுர் வேதத்தில் சொல்லிய விதிப்பிரகாரம் சென் று, நிச்சயமாகச் சிறிதும் ஓய்வடையாமல் வியாபிக்கும்படி அபரிமிதமாக அம்புகளை எய்து, தமதுதிருக்கரத்தின் சாதுரியத்தைக் காட்டத்தலைப்பட்டார்.

இந்தப்பிரகாரம், ஸ்ரீராமபாணங்கள் பா ய்வதினுல், சமுத்திரத்திலும், சமுத்திரஅலை களிலும், பூமியிலும், மலைகளிலும், நாலு திக்குகளிலும், மற்றும் கண்டகண்ட இடங் களிலும், ராவணனுடைய பலபல தலைகள், இடிகள் விழுவதுபோல விழத்தலைப்பட்ட துகள். பர்வதங்களின் மேற்போய் விழுகின் றதலைகள், அந்தப்பர்வதங்கள் பிளவுபட்டுச் சாயும்படிவிழும். அறுபட்டு ஆகாயத்தின் மேல் செல்கின்றதலைகள், அங்குநின்ற தேவ ர்களைக் கலைந்தோடும்படி பாயும். கடலில் போய்ச் சிதறுகின்ற தலைகள், அந்நீரில் சுறு முதலிய மச்சங்கள் உலாவுதற்கும் நீரில்லாத படி ஜலமெல்லாம் செவித்தொளையிலும், மூக்குத்தொளையிலும், வாயிலும் அடக்கிப்

போம்படி சிதறும். ஒருவன் நெடுநாளாகத்
தேடிய புண்ணியங்களெல்லாம், பரம வை
திக சுத்த சாத்துவிகர்களிடத்தில் அபசாரப்
பட்ட காரணத்தால், கட்டற ஒழிந்துபோ
னபின், ஜெயவீரபிரதாபங்களெல்லாம் நீங்
கிப்போய் அபகீர்த்திமுதலியதுகளெல்லாம்
அவனைச் சூழ்ந்துகொள்ளுமல்லவா ? அது
போலவே இந்த ராவணன், ஸ்ரீசர்வேசுர
னுடைய தாசபூதர்களாகிய தேவர்கள் பக்
கலிலும், பரமமுனிவர்கள் பக்கலிலும், சர்
வலோக சரணியாகிய பிராட்டியார் பக்கலி
லும் அபசாரப்பட்டகாரணத்தால் ஸ்ரீராம
பாணமானது, தனதுதலைகளைத் துண்டித்து
த்தள்ளவே, முன்னே இந்தப் பாபிஷ்டனுக்
குப் பயந்து ஒடுங்கிவணங்கிக்கொண்டிருந்
த பிசாசங்களெல்லாம், உதிர்ந்துகிடக்கின்ற
தலைகளைப்பொறுக்கி எடுத்துக்கொண்டு அந்
தத் தலைகளிலுள்ள கண்களைத் தோண்டித்
தோண்டித் தின்னத்தலைப்பட்டதுகள்.

இப்படிச் சகல சேதனுசேதன சுவாமியா
னவர் தலைகளை யறுத்தறுத்துத் தள்ளிக்கொ
ண்டிருக்கச்செய்தேதானே, முளைத்துக்கொ
ண்டேயிருக்கின்ற தலைகளையுடையராவணன்,
தனது இருபதுதோள்களாலும்,வாள்,வேல்,
உலக்கை, வச்சிரம், தண்டம், கோடரிமுதலி
யஆயுதங்களைவாரிவாரி ஸ்ரீராகவபிரானுடை
ய மார்பின்மேல் விட்டெறிந்தான். அப்படி
ஆயுதங்களை ராவணன் விட்டெறியும்போது
சர்வநியாமகனுகிய எங்கள் ஐயனுனவர், இந்
தக்கொடியோனை எப்படி வெல்லலாம், அத
ற்கு நாம் செய்யவேண்டியது என்ன வென்
று ஆலோசித்து, அந்த ராக்ஷசனுடைய உட
லைப் பாணங்களால் சல்லடைக் கண்களாகத்
தொளைத்துவிடுவோ மென்று மிகுந்த கோ
பங்கொண்டு, மேகத்தைப்பார்க்கினும் அதி
க கருமை வாய்ந்த ராவணனுடைய மார்பி
லும், தோள்களிலும், விஷித்தைக் காட்டி
லும் கொடிய கண்களிலும், நாவுகளிலும்,
மற்ற அவயவங்களிலும், பாணங்கள் தைக்
க்கும்படி எய்து, தம்முடையபாணங்களாகி
ய பறவைகள் வசிப்பதற்கு ராவணனுடை
ய தேகமே பஞ்சரமென்று சொல்லும்படி
பொத்திவிட்டார். ஸ்ரீபரந்தாமராகிய கா
குஸ்தர், எய்த அம்புகள், பத்துவாய்கள் நிர
ம்பவுந் தைத்து, இருபது கண்களும் மறை
யும்படி உருவி, மற்ற அவயவங்களி லெல்
லாம் பொத்தி, உதிரம் தம்மிற்படாதபடி வி
ரைவாக அப்புறங் கழன்று அண்டத்துக் கப்
பாலும் சென்று நிறைந்ததுகள். தேவர்க
ளுடைய லோகங்களிலும், தேவ தேவர்களா
கிய திரிமூர்த்திகளுடைய லோகங்களிலும்
தன்னை எதிர்ப்பாரில்லாமையால், சிறிதும் அ
ஞ்சாமல் பெருங்களிப்போடு பவனிவரு
வோனாகிய ராவணன், தன்னுடைய தேகத்
தில் மயிர்க்கால் மயிர்க்கால் தோறும், ஸ்ரீரா
மபாண வருஷங்கள், உயிரும் ஓயும்படி ஊ
டுருவிச் சென்றதினால், எதிர்த்துவந்த சுழு
மச்சங்களும் இறக்கும்படியாக இழுத்துச்
சென்று கடலில் கலந்தோடத் தக்கதாகத்
தேஹத்தில்உதிரப்பிரவாகம் ஒழுகவும், கோ
பம்பிறக்கவும், தன்னால் ஒன்றுஞ்செய்ய மு
டியாமல் நடுங்கி அறிவுகலங்கிப்பரவசமாய்த்
தேரிலிலேதானே முடிசாய்ந்து கிடந்தான்.
அதைப்பார்த்த அஜசங்கரேந்திராதி தேவர்க
ள் யாவரும், தரும தேவதையும், சந்தோஷ
ஆரவாரஞ் செய்துகொண்டு நடனஞ் செய்
தார்கள். பாப கிர்த்தியங்க ளெல்லாம் இனி
நம்மை ஆதரிப்பா ரில்லையே யென்று அதி
துக்க மடைந்து சோர்ந்து விழுந்ததுகள்.
ராக்ஷச சாரதியானவன், நம்முடைய தலைவ
ன் மூர்ச்சித்துக் கிடக்கிறுனதலால் இனி ரத
த்தை நிறுத்துவது தகுதியல்லவென்று நினை
த்து ரதத்தை மெல்லெனத் திருப்பி நடத்தி
ச் சென்றான். தேவர்கள் முதலிய சாதுக்களு
டைய உஜ்ஜீவனார்த்தமாகத் திருவவதரித்த
ஸ்ரீராமசுவாமி யானவர், நம்முடைய சத்து
ருவாகிய இந்தப் பாபிஷ்டன், கைகளில் ஆயு
தங்க ளொன்று மில்லாம லிருப்பது மன்றி,
மெய்ம்மறந்து சோர்ந்து கிடக்கிறான். ஆத
லால் இவன்மேல் ஒரு பாணத்தையும் எய்ய
லாகாதென்று தருமத்தைச் சிந்தித்துச் சும்
மா விருந்தனர். இந்திரசாரதியாகிய மாதலி
யானவன், சுவாமியைநோக்கி, எங்கள் ஆண்
டவனே ? இந்தத் துஷ்டன் மூர்ச்சை தெளி
வானேயானுல், பின்னே ஒன்றுஞ் செய்ய
முடியாது. மூர்ச்சையாய்க் கிடக்கிற இந்தச்
சமயத்திலேயே இவனுடைய பிராணனை
வாங்கவேண்டு மென்று ஸ்ரீராமபிரானை உச்
சாகமாகத் தூண்டினான். அதுகேட்டருளிய
தருமஸ்வரூபியாகிய ஸ்ரீராமநாத ரானவர்,
இவன், எல்லா ஆயுதங்களையும் கைசோரவிட்
டு அறிவுமயங்கிக் கிடக்கின்றான். இப்போ
து நாம், ஆயுதங்களை எறிந்தாலும் அறிந்து
கொள்ள மாட்டான். அப்படி நாம் பாணப்
பிரயோகம்பண்ணி, தருமதேவதைக்கு விசனம்
படி பிராணனை வாங்குவதும், நன்மையோ ?
இவனுடைய யுத்தமோ முடிவாகப் போகி
றது,நீஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம். அவன்

மூர்ச்சைதெளிந்து எழுந்த பின்னேதான்
எதிர்ப்பேன், இதுவே என்னுடைய கருத்
தென்று அருளிச்செய்தார். சுவாமியும், மாத
லியும், வார்த்தையாடிக்கொண்டிருக்கையில்,
மற்றராக்ஷசர்கள்அஞ்சினவர்களாய்இராவண
னுடைய தேரைத் தொடர்ந்து சென்றனர்
கள். அக்காலத்தில் ஸ்ரீரகுநந்தனனைக் கைக
ளைக் கூப்பித் தண்டன் சமர்ப்பிக்காத தேவர்
களும் உண்டோ? யாவரும் தண்டன் சமர்ப்
பித்தார்கள். தண்டன் சமர்ப்பித்துக் கொண்
டிருந்த தேவர்கள் யாவரும், திக்கிடும்படி
யாகப் பிரதாபலங்கேசுரன், நித்திரைதெளிந்
து எழுந்தவனைப்போல, மூர்ச்சை தெளிந்
தெழுந்து, நிர்த்தாக்ஷிணியமும் வஞ்சகமு
முள்ள தனக்கு எதிர்முகத்திலே ரதாரூடரா
ய் ஸ்ரீராமபிரானைக்காணாமல், அதிக கோபத்
தோடு மற்ற மூன்று பக்கமும் திரும்பிப்பா
ர்க்கையில் பின் பக்கத்திலே கண்டு, அடா
சாரதி! சொல்பர்களாகிய தேவர்கள் காணவு
ம், கோதண்டத்தைக் கையில்தாங்கியபடியே
யிருக்கின்ற இராமனுக்குச் சிரிப்புண்டாகவு
ம் தேரைத்திருப்பி ஓட்டிவந்து தப்பு செய்
தாயே! என்னைநினைத்துக்கொண்டு இப்படிச்
செய்துவிட்டாய். அடா! வஞ்சகா? நான் உ
னக்கு ரக்ஷகமாய் நின்று சாரதித்தொழில் மு
தலியவற்றைக் கற்பித்து, யாவரும் பெறக்கூ
டாத அகண்டைஸ்வரியத்தில் நிலை நிறுத்தி
னேன். அதற்குப் பிரதியுபகாரமாக, இப்
போது ராவணன் ஸ்ரீராமனோடு போர்செய்
ய அஞ்சினனென்று சொல்லும்படி பழிச்
சொல்லை எனக்குத் தேடிவைத்தாயல்லவா?
நீயும் உயிரோடு பிழைத்துப்போக இருக்கி
றாயோ! என்று சலித்துக் கோபித்துத் தன்
கையில் ஒரு வாளைப்பற்றிக் கடைக்கண்ணாற்
பார்த்துச் சாரதிமேல் வீசக் கையை உயர்த்
தலும், சாரதியானவன் பொருக்கென எழு
ந்து ராவணனுடைய பாதங்களை முடிமேல்
தரித்துக்கொண்டு, வடவா முகாக்கினியைப்
போன்ற கோபத்தை ஆறக்கடவாய். தேவ
குலகண்டகா? அடியேன் சொல்லிக் கொள்
ளும் விண்ணப்பம் ஒன்று உண்டு. கேட்டரு
ளவேண்டுமென்று கெஞ்சிக்கெஞ்சிச் சொல்
லுகிறான். ராக்ஷசகுல மித்திரா! நீ யுத்தத்
தொழில் மறந்து சோர்ந்து போய் விட்டா
ய். இன்னும் சிறிதுநேரம் அங்கேயே இருந்
து திரும்பாயேயானால், உன்னுடைய உயிர்
இத்தக்ஷணமே நீங்கிவிடுமென்று ஒரு துன்
பம் என்னுடைய இருதயத்தில் ஜனித்து, அ
ந்தத் துன்பத்தைப் போக்கிக்கொள்ளும்ப
டி ரதத்தைத்திருப்பி நடத்திவந்தேனே யல்
லாமல் வேறல்ல. இது சத்தியமாகும். இது
நிற்க, பொதுவாகப் பார்க்குமிடத்தில், தன்
னுடைய தலைவனுக்குச்சோர்வு அல்லதுபிரா
ணாபாயமும், சத்துருவுக்குத் திடவிரத்தியுங்
கண்டால், உடனே சாரதியானவன், தனது
தலைவனுடைய உடலின் சோர்வை நீக்கும்
உபாயத்தை ஆலோசித்துச் செய்யக்கடவ
னல்லவோ? ஆகையால் இப்படிச் செய்தேன்.
நீயே தீர்க்காலோசனை செய்யக்கடவாய். நிர
பராதியாகிய என்னை வாளால் கொல்லுதல்
தகுதியல்ல என்றுவேண்டிக் கொள்ளுதலும்,
சரிதானென்று தானும் ஆலோசித்துச் சாரதி
மேல் இரங்கி அடா! சாரதி! இதிருக்கட்டும்.
தேரை இராமன் மேல் தூண்டி நடத்தென்
று உத்திரவு செய்தான். அப்படியே சாரதி
யும் ரதத்தைத் திருப்பிக்கொண்டு வந்து தார
கமந்திர வாச்சியனாகிய ஸ்ரீராமச்சந்திர சுவா
மிக்கெதிரே நிறுத்தினான்.

அதிவீர பிரதாப லங்கேசுரனானவன், அகி
ல கல்மஷாந்தகார பாஸ்கரரா யெழுந்தருளி
யிராநின்ற ஸ்ரீராகவபிரானை எதிர்த்து நின்று,
யமனுக்குச் சமானமாகிய கோடாகோடி
அம்புகளை எய்து, இவன் பழைய ராவண
னல்லன் புது ராவணன் என்று கண்டவர்க
ளெல்லாம்சொல்லி அஞ்சும்படி முன்செய்
த உயுத்தத்தைப்பார்க்கிலும் மூன்றுபங் கதி
கமான உயுத்தத்தைச்செய்தான். அது பார்
த்தருளி ஸ்ரீகோதண்ட தீட்சாகுருவானவர்,
ஒளியுண்டாயிருந்தால் நெருப்புண் டென்
பதுபோல இந்தக்கொடியோன்கையில் வில்
லுண்டாயிருக்கிறவரையும், இவன் உயுத்தத்
தை ஒழியான். இவன் ஒழியாமல் போர்செ
ய்துகொண் டிருப்பானேயாகில் வெல்லுத
லும் அரிதாகும். என்று திருவுளத்தில் கருதி,
ஸ்ரீமந்நாராயணாஸ்திரத்தை விரும்பி எடுத்
துத் தொடுத்துப் பிரயோகித்து, பூமியைச்
சுமக்கின்ற எட்டு யானைகளையும் செயித்த
ராவணன்பிடித்திருந்த,யாவருக்குந் துன்பத்
தைத் தருவதாகிய வில்லை இரண்டு துண்டுக
ளாகச் செய்துவிட்டார். முன்னேயெல்லாம்
பிரமதேவரானவர் ஆண்டுகொண் டிருந்த
அந்த வில்லானது, சகஸ்திர திருநாமங்களை
யுடைய ஸ்ரீமந்நாராயணனுடைய அஸ்திர
த்தால் துண்டுபட்டு வீழ்தலும், தேவர்கள்
யாவரும், தாம்செய்த பலவாகிய தவத்தால்
பயனைப்பெற்றோமென்று சொல்லிக்கொ
ண்டு உயர்த்து உயர்ந்து குதித்தாடினார்கள்.
உடனே வேறொரு வில்லை ராவணன் பிடித்

தான் உடனே எம்மையனும் அதைத் துண்டித்து விட்டார். இந்தப்பிரகாரம் அந்தக் கொடியோன், எடுத்தெடுத்துப் பிடித்த பதினோராயிரம் வில்லுகளையும் ஸ்ரீராம மூர்த்தியானவர் இடைவிடாமல் துண்டித்துக் கொண்டே வந்தார். இனி வில்லெடுப்பதில் பயனில்லையென்று ராவணனானவன், ஸ்ரீரகுநாதருடைய திருமார்பில் வாசஞ்செய்கின்ற ஸ்ரீமஹாலக்ஷுமியும் இடம்விட்டுப் பெயரும்படி இருப்புலக்கைகளையும், தண்டாயுதங்களையும், வேல்களையும், ஈட்டிகளையும், வாள்களையும், நெருப்பினும் அதிதீக்ஷணியமாகிய தோமரங்களையும், எடுத்தெடுத்து ஸ்ரீராமசுவாமியினுடைய மார்பில் தாக்கும்படிவிட்டெறிந்தான். அந்த ஆயுதங்களை யெல்லாம் அம்புகளை எய்து அறுத்தறுத்து, கடலிலே அங்கங்கே தோன்றுகின்ற திடர்களைப்போல, ஓடுகின்ற ரத்தப்பிரவாகத்திலே துண்டுபட்ட ஆயுதக்குவியல்கள் தோன்றும்படி குவித்தார். தமது திருவடிகளைச்சரணடைந்தவர்களுடைய பாபங்களையெல்லாம் போக்குகின்ற நிர்த்தோஷராகிய ஸ்ரீ காகுஸ்தகுல திலகரானவர், நாம் இப்போது எய்கின்ற பாணங்களைப் போன்ற பாணங்கள், இவன் பிராணனை வாங்க மாட்டாதுகள். கடல்மணலினும் அபரிமிதமாகிய குரூரபாணங்கள், இந்தக் கொடியோனுடைய கண்மணிகளிலும் நுழைந்து ஓடியதுகள். முன்பட்ட காயப்புண்ணின்வழியே தத்துவ தரிசிகளுடைய தியானத்தைப் பார்க்கிலும் அதிககூர்மையுள்ள பல அம்புகள் உருவிச்சென்றன. இப்படிப் பாணங்கள் பாய்ந்து தொளைத்தும், இவனுடைய தைரியபல வீரியங்களில் ஏதேனும் ஒன்று கழிந்ததுண்டோ ? இந்த மஹாபாபிஷ்டனை உயிரோடு வைத்துக்கொண்டு போர்செய்வதினால் என்னபயன் ? நாம் இனித் தாமசஞ் செய்யாமல், ஸ்ரீசர்வேசுரனுடைய திருக்குமாரராகிய பிரஹ்மாவினுடைய அஸ்திரத்தைப் பிரயோகித்துப்பிராணனை வாங்குவோமென்று தமக்குள்ளே தீர்மானித்து, ஆதியிலே மூலதாமரையில் ஜனித்துச் சகலஅண்டங்களையும், சிருஷ்டித்த தேவசிரேஷ்டராகிய பிரஹ்மாவினது அஸ்திரத்தை எடுத்தார். அஜசங்கரேந்திராதி தேவர்களுக்குத் தாம்தயைசெய்த வரத்தைப் பாலனஞ் செய்யும்படி அவதரித்த ஸ்ரீராமசந்திரசுவாமியானவர், எடுத்த அந்தப்பிரஹ்மாஸ்திரத்துக்கு, அர்ச்சனைமுதலியபூசைகளைச்செய்து, ஸ்ரீகோதண்டத்தின் நாணில்தொடுத்து, மந்தரமலைக்குச் சமானமாகியவலதுதோளால்வாங்கித்திரிபுரதகனஞ்செய்யும்படி பூர்வத்திலே சிருட்டித்ததும்,ஆகாயத்தை ஊடுருவிவளர்ந்த கிளைகளையுடைய மராமரங்களைத் தொளைத்ததும்,ஆகமத்திற்சொல்லியபடி சிவபூசாதுரந்தர சீலனாகிய வாலியினுடையமார்பை உருவிச்சென்றதும்,ஆகிய அந்தப்பிரஹ்மாஸ்திரத்தை ராக்ஷசகுலநாயகனாகிய ராவணனுடைய மார்பை இலக்குக்குறித்துப்பிரயோகித்தருளினார். பிரமதேவருடைய மந்திரத்தை ஜெபித்துப் பிரயோகித்தஅஸ்திரமானது, வாயுவால்அறியப்படாத வேகத்தையும், அக்கினியால்அறியப்படாத தீக்ஷணியத்தையும் கொண்டு, நான்குமுகங்களையுடையதாகி, தன்னிடத் துண்டாகின்ற சுவாலையால், சக்கரவாளகிரிக்கு அப்புறத்திலுள்ள பெரும்புறக்கடலும் நீர்முற்றும் சுவறிப்போய் வெற்றவெளியாகவும், யுகாந்தகாலத்துச்சூரியனும், மின்மினியென்று சொல்லும்படியாகத் தன்னிடத்தெழுகின்ற சுடர்களால் உலகத்திலுள்ள அந்தகாரமுழுமையும் நிலைபெயர்ந்தோடவும் சென்று, சுதரிசனத்தானுடைய பூர்ணயிசத்தையும்பெற்று, சுவர்க்கமத்திய பாதாளங்களும், அஷ்டதிக்குகளும் தடுமாற, மஹாவீர பிரதாப லங்கேஸ்வரனாகிய துஷ்டாத்துமாவினுடைய மார்பில்தைத்து, தான் இந்திரியஆசைகளையொழித்து மனத்தை ஒருவழிப்படுத்திப்பெரும்பிரயாசப்பட்டுச்செய்த பெருந்தவத்தையும், சாக்ஷாதுபிரமதேவனும் சாம்பசிவமூர்த்தியும்,மனப்பூர்வமாய்க்கருணைசுரந்துஆதிநாளில் அருளிச்செய்தமூன்றுகோடிஆயுள்நாளையும், தேவதானவமனுஷர் முதலியோரால் ஜெயிக்கப்படமாட்டாயென்று கொடுத்தவரத்தையும், அஷ்டதிக்குப்பாலகர்களையும், லோகேஸ்வரர்களையும், யுத்தத்தில் ஜெயம்பெற்றுவந்த பராக்கிரமத்தையும்,கவளீகரித்து உண்டுவிட்டு மார்பைஉருவி உயிரையும் உண்டு புறத்தேபோய்விட்டது. அப்போது சமஸ்ததேவர்களும், வேதியர்களும், முனிவர்களும், குதூகலத்தோடு ஆசிர்வாதஞ்சொல்லி வாரிவாரி இறைக்கின்ற புஷ்பவருஷம், தன்மேற்படும்படியாக அந்தப்பிரஹ்மாஸ்திரமானது, திருப்பாற்கடலிற்சென்று பரிசுத்தநீராட்டஞ்செய்து திரும்பி, இராவணனுடைய மார்பில்நின்றும் ஒழுகாநின்ற உதிரக்கடலின் அலைகளின்மேற்சென்று, நீலரத்தினபர்வதம்போல விளங்குகின்ற தசரதாத்மஜருடைய அம்பறாத்தூணியில்வந்துசேர்ந்தது. கறுத்த பெருமலை போன்ற தோற்றமுள்ள

ராவணேஸ்வரன் பிராணநீங்கும் சமயத்தில் மாரிகாலத்துச் சூல்கொண்டமேகம் குமுறுவதுபோல இருபதுதோள்களையும் கொட்டிப் பத்துவாய்களாலும் வீரகர்ஜ்ஜனைசெய்து, தும்பைமாலைதரித்த பருவதாகாரமாகியமார்பில் நின்றும், ஆபரணக்கூட்டங்களும், அவற்றி லழுத்திய ரத்தினராசிகளும் சிதைந்து சிந்தவும், இருபதுநேத்திரங்களி லிருந்தும் புகையும், ரத்தமும், பெருகவும், மகோன்னதமான ரதத்திலிருந்து பத்துத்தலைகளும் கீழாகக் குப்புற்று வீழ்ந்தான். அசுர மோஹனார்த்தமாகக் கல்பித்த சாஸ்திரத்தின்வழியேசென்று, பரமவைதிக நெறியைத் தவறிநடந்தராவணாசுரனானவன், ஸ்ரீராமபாணத்தால் குரூரசுபாவமுள்ள சிங்கத்தினது கோபம் போன்ற கோபம் அடங்கவும், மனோதைரியம் ஒடுங்கவும், மாயாதந்திரங்கள் அழியவும் தேவாசுரர்களாகிய சத்துருக்களது வலிகெடும்படி போர்செய்த இருபது தோள்களினுடைய தொழில்கள் நீங்கவும், பரதாரங்களிடத்து வைத்த மோகம் கெடவும், பராக்கிரமம் தேய்ந்துபோகவும், உயிர்நீங்கினனாயினும், அந்தச் சுத்தவீரனுடைய பத்து முகங்களும், மௌன சீலர்களாகிய ரிஷிக் கூட்டங்களையும், தேவர்களையும், மற்றவர்களையும், தங்கள்நிலைகெட்டுத் தலைகுனிந்தோட முடியடித்தகாலங்களில் விளங்கியதைப்பார்க்கிலும், மூன்றுபங்கு அதிகமாகக் களிப்பும் வீரமும் நிரம்பி விளங்கிக்கொண்டிருந்தன. பின்பு சுவாமியானவர், அப்பா மாதலீ? ஆகாயமார்க்கத்தில் செலுத்துகின்ற ரதத்தைப் பூமியில் இறக்குவாயாக என்று கட்டளையிட்டமாத்திரத்தில், மாதலியும், ஸ்ரீராம சுவாமியினுடைய உத்தரவின்படி பூமிமேல் நடத்திவந்தான். உடனே, எவர்களாவது கண்டால் விரும்பத்தக்க சர்வ லட்சணங்களும் அமைந்து அறங்களைவளர்க்கின்ற தாமரசமலர்போன்ற விசாலநேத்திரங்களையுடைய ஸ்ரீரகுகுலதீரரானவர், திருத்தேரைவிட்டு இறங்கியருளி, மாதலியைக்கடாக்ஷித்து, நீ ரதத்தைச் சுவர்க்கலோகத்துக்கு இனி ஓட்டிக்கொண்டு போகக்கடவாயென்று உத்தரவுசெய்துவிட்டு, ஸ்ரீலக்ஷ்மணப்பெருமாளும், சுக்கிரீவ மஹாராஜரும், மற்றவானர சிரேஷ்டர்களும், விபீஷணாழ்வாரும் தன்னைச்சூழ்ந்துவரச்சென்று, ஆகாயத்தைமுட்டவிழுந்து கிடக்கின்ற தசமுகனுடைய உருவத்தை உற்றுப்பார்த்தருளினார். மஹாதபங்களைச்செய்து ஒருவன்பெற்றசெல்வமானது, தன்னைப்பெற்றுக்கொண்டவன் செய்யும் சத்கருமங்களுக்குத் துணையாயிருப்பதுமன்றி, அவன்செய்யும் துஷ்கருமங்களுக்கும் துணையாயிருந்து, அவனுடைய பூர்வசத்கருமம் அற்றமாத்திரத்தில் உடனே அவனைவிட்டு நீங்கிவிடுகின்றநிலையில்லாமையைப் பார்க்கிலும் வேறொருநிலையில்லாமையும் உண்டோ? மேலும் அந்தச் செல்வமானது, நீர்மேல்கிழித்தசித்திரத்தைப் போலும் நிலைமையுடையதல்லவா? பெருந்தவங்களைச்செய்து அகண்டைஸ்வரியத்தை அடைந்து, ஒருவரையும் வணங்கறியாத ராவணனுடைய பத்துத்தலைகளின் மேலும், சாக்ஷாது பரமசிவனானவர் பிரமதகணங்களோடு எழுந்தருளிய கைலாசத்தை ஒருபந்துபோலப் பேர்த்தெடுத்த இருபதுதோள்களின்மேலும் தோள்களின் மேற்புறத்திலும், சாகாமிருகங்களாகிய அநேக, வானரங்கள், தாவித்தாவி ஏறி மலைகளின்மேல் ஏறிநின்று ஆடுவதுபோலக் குதித்துக்குதித்து ஆடினதுகள். சர்ப்பங்கள்நுழைந்து சென்றது போலவும், மேகராசியில் பிறைச்சந்திரர்கள், நுழைந்து சென்றதுபோலவும், ராவணனுடையமுதுகில், திக்குயானைகளினுடைய தந்தங்கள் மார்பில்தைத்து உருவிய தழும்புகளைக்கண்டு, இந்தக்கொடியவன் பிராட்டியார்பக்கலில் அபசாரப்பட்டதனால் தமக்குண்டாகியகோபமாறிப்போய், தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீரகுநந்தனர், புன்னகைகொண்டு, விபீஷணாழ்வான் முதலானவர்களைப் பார்த்து, பார்த்தீர்களா? தன்னுடைய பராக்கிரமத்தால் திரிலோகங்களையும் யதார்த்தமாகவே இந்தத்தசக்கிரீவன் அடைந்தவனானாலும், இன்று என்னுடைய பாணத்தால் இறந்தானென்று நான் என்தோள்களை நோக்கிக்களிக்கின்ற களிப்பானது, இவன்முன்னே எந்த யுத்தத்திலேயோ எதிர்த்துப்பின்வாங்கி முதுகில்தைத்த சில அம்புகளின் வடுக்கள் காணப்படுதலால், அழிந்துபோனதுமல்லாமல், முன்னொரு சுத்தவீரனுக்குத் தோற்றுப்போன ஒருவனை இந்த ஸ்ரீராமன் கொலைசெய்தானென்றுலகத்தார் நிந்திக்கும்படியான அபக்கியாதியையும் தேடிக்கொண்டேன். இந்தராவணன், கார்த்தவீரியார்ச்சுனனால் முன்னொருகாலத்தில் கட்டுப்பட்டானென்று உலகத்தார், சொல்லிக்கொள்ளும் பிரபலமான ஒருவார்த்தையும் உண்டு. அந்தவார்த்தையை நினைத்துநினைத்து என்மனமோ மிகவும்நாணுகின்றது. இதிருக்கட்டும். யுத்தத்தில் இவன்முதுகுகாட்டி ஓடும்படிசெய்த சுத்தவீரனுடைய இரண்டுகை

களும் இருக்கச்செய்தே, நான் வில்லைப்பிடித்து அம்பையெய்து இவனைக்கொன்றேனென்பதும் ஒருவீரமோ? முன்சொன்னபடி நானுமிங்கிற எனக்கு இது முதுகில்பட்ட புண்ணையல்லவோ? இறந்துபோனாலும் உலகத்தில் நிலைத்திருக்கும்படியான பெருங்கீர்த்தியோ இனிஎன்னைச்சேரமாட்டாது. போரில் எதிர்த்துநின்று சிறந்த புண்படச்சண்டைசெய்யத்தக்க சுத்தவீரனானவன், சத்துருக்களெல்லாம் கைகொட்டி நகைசெய்யும்படியாகப் பிராணன்மேல் அன்பைவைத்துப்பிறகிட்டோடினானென்பதுபோன்ற அபகீர்த்தியைத் தேடிக்கொண்டேன். முன்னேசிலவீரர்களிடத்தில்நான்பெற்றஜெயமும்,வியர்த்தமாய்ப்போயிற்றே என்று வீரரசம் தோன்றும்படி சொல்லினர். எல்லாம்வல்லோராகிய ஸ்ரீகாகுஸ்தர். வீரர்களுக்குஅடுத்தவீரரசவார்த்தைகளைஅருளிச்செய்தமாத்திரத்தில் ஸ்ரீவிபீஷிணாழ்வானவர், சுவாமிக்குத் தண்டன் சமர்ப்பித்தெழுந்துநின்று இரண்டுகண்களிலும் நீர் பெருகும்படி பெருமூச்சுவிட்டுக்கொண்டு மனம்பொறுமல் சுத்தவீரர்களுக்குள் சுத்தவீர சிகாமணியே? நீர் நீதியாகப் பேசவில்லையே, தைத்திய ராக்ஷசகுலவைரியே? பூர்வத்திலே ஆயிரந்தோள்களையுடைய கார்த்தவீரியனும் வாலியும், இந்தத்தசமுகனை வெகுஅருமையாகவென்றார்களென்பது, தேவர்களுடைய சாபத்தினாலல்லாமல் வேறல்ல. இந்தத்துராத்துமாவானவன் அஜசங்கரேந்திராதிசமஸ்தசிவர்களும், தாயைவணங்குவதிலும்அதிகமாகவணங்கத்தக்க சர்வலோகநாயகியாகியபிராட்டியார் பக்கலில்பட்ட அபசாரமும், உம்முடைய தாசபூதர்கள் பக்கலில் செய்த அபசாரம் காரணமாகத் தேவரீருக்குண்டாகிய சீற்றமும், இத்தசக்கிரீவனை வென்றதுகள் அல்லாமல் மற்ற எத்தேவர்களாலும் வெல்லவும் முடியுமோ? முன்னே, அவைதிகமார்க்கானுசாரியாகி இவன்பூமி விஸ்தீரணம் எந்தமட்டும் உண்டோ அந்தமட்டும் தனதுதேரைச்செலுத்திச்சென்று, தன்னை எதிர்க்கத்தக்கசத்துருக்களொருவனையுங் காணுதவனாய்,திக்கின்முடிவில் மகம்மேருப்போல நின்ற யானைகளோடு முட்டினான். அந்தத் திக்கஜங்களினுடைய தந்தங்கள் இவனுடைய வச்சிரமலைபோன்ற மார்பில் தைத்து நிற்கும்படி திமிதிமுறித்துக்கொண்டு வந்துவிட்டான். அந்தத் தந்தங்கள் தன்மார்புக்கு அலங்காரமாகவும் வீரபிரதாபத்துக்குறியாகவும் நெடுநாள் அப்படியே வைத்துக்கொண் டிருந்தான். ஒருகாலத்தில் யமதர்மராஜனோடு எதிர்த்து போது அவனெய்தவச்சிரபாணங்கள் இந்தத் தந்தங்களின்மேல் பட்டதினாலும், இதோ நிற்கின்ற தேவரீருடைய தாசராகிய ஆஞ்சநேயர் உயுத்தகளத்தில் குத்தியகுத்தினாலும் திக்கு யானைகளினுடைய தந்தங்கள் முதுகு பரியந்தம் பாய்ந்ததுகள்.

உடனேபாய்ந்ததந்தங்கள் இவருடையகுத்தின் அதிர்ச்சியினால் பலபலவென்று உதிர்ந்துவிட்டதுகள் முதுகிலே தோன்றுகிற வடுக்கள் அவையேயன்றி வேறே ஒருபாணம்பட்ட வடுக்களல்ல. திருப்பாற்கடலில் பிறந்த ஆலகால விஷமானதும் ஸ்ரீருத்திரபகவானை நாசப்படுத்தினபோதிலும், வாசுகிமுதலிய குரூர சர்ப்பங்கள், ஸ்ரீ கருடபகவானை நெருங்கின போதிலும், இந்தப் பிர்மாண்டத்திலேயேஅல்ல,மற்ற எந்தஅண்டங்களிலாவது இவனுக்குச் சத்துருக்களுண்டாயிருந்து அவர்களுடையபாணங்கள் அஞ்சாமல்வந்து இவனை என்ன செய்ய மாட்டும். சர்வ சம்ஹார மூர்த்தியே இந்த முதுகுக்காயங்களுக்கு வேறு காரணமும் உண்டோ இல்லை. இது இருக்கட்டும்,சமுத்திரத்தால் சூழப்பட்ட பூகோள முழுமையும், தன்னுடைய கோரப்பல்லில் அடங்கும்படி ஆதிபுருஷ வராகமாகிய பராபரவஸ்துமுதலிட்ட தேவதேவர்கள்யாவரும், இந்த ராவணனாலுண்டாகும் இடுக்கண்களை என்றைக்கு நாம் நீங்கப்போகிறோமென்று துன்பப்பட்டுக்கொண் டிருந்தார்கள். இப்போது தேவரீருடைய பாணப்பிரயோகத்தால் இந்தச்சாதுசஜ்ஜனகண்டகன் இறந்தானென்பதைத் தங்கள்கண்களாரக்காணும்படி இதோ ஆகாயமார்க்கத்தில் வந்து மொய்த்துநிற்கின்றார்கள் என்று சொன்னார். விபீஷிணாழ்வான் சொல்லியதையெல்லாம் திருச்செவிசார்த்திக் கேட்டருளிய ஸ்ரீராகவபிரான், இந்த வடுக்கள் யானைத்தந்தங்களின் வடுக்களாவென்று, தாம் கொண்ட அவதாரத்துக்கேற்க முன்அடைந்திருந்த சந்தேகமும் நாணமும் நீங்கினவராய், தம்முடைய திருத்தோள்களை நோக்கிக் களித்து, ஸ்ரீவிபீஷிணனே? உயிர்மாய்ந்தவர்கள்மேல் அவர்கள் முன்செய்த குற்றத்தைப் பாராட்டிச் சலஞ்சாதிக்கிறதுதருமமல்ல. அதுபுத்திமான்களுடைய செய்கையுமல்ல. கொன்றாற்போன்ற குற்றஞ்செய்தவனாயிருப்பினும், உயிர்மாண்டவனுதலால் இவன்செய்த தீமைகளை மன்னித்தவனாகி, நீஉங்களுடைய குலாசாரத்துக்குத் தக்கபடி கருமகாண்டத்திற்

சொல்லியவிதிகளை அநுசரித்துப் பிரேதபூசை உத்திரகிரியை முதலியதுகளைச் செய்யக்கடவாயென்று திருவுளம் இரங்கித் தமது கருணையால் சொல்லிக்கொண்டிருந்தனர். அதுசமயத்தில் தம்மைத்தரிசித்து வணங்கும்படியாக அந்தவுலகங்களிலுமுள்ள சமஸ்தசாதுசஜ்ஜனங்களும், பிரமனும் சிவனும் இந்திரனும், மற்றதேவர்களும், வேதங்களால் தோத்திரஞ்செய்துகொண்டு வந்து நிறைந்து முறைமுறையாக விழுந்து சேவித்துக்கொண்டிருந்தனர்கள்.—அவர்களோடு வார்த்தையாடும் படியாகச் சுவாமியானவர் தாம் அப்புறத்தே எழுந்தருளினர். அப்புறம், ஸ்ரீசர்வலோகசரணியராகிய ஸ்ரீராமநாதரானவர் அருளிச்செய்த அருளப்பாட்டின்படி ஸ்ரீவிபீஷிணுழ்வானவர், தம்முடைய ஞானவயிராக்கியத்தால் தடுத்துவைத்திருந்த அன்பும், துன்பமும், நீங்கும்படியாகவும், வானரசைநியமுழுமையும், உலகத்திலுள்ள மனுஷிபசுபக்ஷி முதலிய எல்லாவுயிர் வர்க்கங்களும், அங்குவந்திருந்த எல்லாத்தேவர்களும், முனிவர்களும், தங்கள்தங்களுக்குநேரிட்ட துன்பம்போலத் தம்மைக்கண்டு மனமிரங்கும்படியாகவும், தம்முடையபெருவாயைத்திறந்து கதறி அழுது, வீழ்ந்துகிடக்கிற ஒருமஹாபர்வதத்தின்மேல் ஒருமலைசாய்ந்து விழுந்தாப்போலப் பிரதாபலங்கேசுரன்மேல் விழுந்து புலம்பத் தொடங்கினர்.

## ஸ்ரீவிபீஷிணுழ்வான்

### இரங்கல்.

#### கவி.

உன்னுதே யுயிருண்ணு தொருநஞ்சு சனகியெனும் பெருநஞ் சுலினைக், கண்ணாலே
நோக்கவே போக்கியதே யுயிர்நீயுங் களப்பட்டாயே, எண்ணுதே னெண்ணியசொ லின்றினித்தா னெண்ணுதியோ வெண்ண லாற்றல், அண்ணுவோ வண்ணுவோ வசுரர்கடம்
பிரளயமே யமரர் கூற்றே.............. (௧)

ஓராசை யொருவன்மே லுயிராசைக் குலமகன்மே லுடைய காதல், திராசை பழியெய்ந்தே னென்முனித்த முனிவாறித் தேறினையோ, போராசைப் பட்டெழுந்த குலமுற்றும் பொங்க வுந்தான் பொங்கி நின்ற, பேராசை பேர்ந்ததோ பேர்ந்தாசைக் கரியிரியப் பருவம் பேர்ந்தோய்................(௨)

அன்றெரியின் விழுவேத வதியிவள்கா ணுலகுக்கோ ரன்னை யென்று, ஒன்றிலை தே-

டுந்தோளாய் கூறினே னதுமனத்துட் கொள்ளா தேயே, உன்றனது குலமடங்க வுருத்தமரிற் படக்கண்டு முறவா காதே, பொன்றினையோ விராகவன்றன் புயவலியின் றறிந்துதான் போகின் றுயோ......................(௩)

மன்றலமா மலரானும் வடிமழுவாட் படையானும் வரங்க ளீந்த, ஒன்றலா தனவுடைய முடியோடும் பொடியாகி யுதிர்ந்து போன, அன்றுதா னுணர்ந்திலையே யானுனுமவனுட்டை யனுகிநின்ற, இன்றுதா னுணர்ந்தனையோ விராமனுர் யாவர்க்கு மிறைவ ராதல்..................................(௪)

வீரநா டுற்றுயோ விரிஞ்சனுர் யாவர்க்கு மேலா முன்றன், போரநா டுற்றுயோ பிறைசூடு பிஞ்ஞகன்றன் புரம்பெற் றுயோ, ஆரனு வுன்னுயிரை யஞ்சாதே கொண்டகன்றுரதெலா நிற்க, மாரனுர் வலியாட்டந் தவிர்ந்தாரோ குளிர்ந்தானே மதிய மென்பான்.(௫)

கொல்லாத மைத்துனனைக் கொன்றுனென் றதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து, பல்லாலே யிதழ்மறைக்குங் கொடும்பாவி நெடும்பாரப் பகைதீர்ந் தாளோ, நல்லாருந் தியாரு நரகத்தார் துறக்கத்தார் நம்பி நம்மோ, டெல்லாரும் பகைனுமோ யார்முகத்தே விழிக்கின்று யெளியை யானுய்............... (௬)

போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத் தழுவியவர் பொருமை கூரச், சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந் தம்மோயைத் தெய்வக் கற்பின், பேர்மகளைத் தழுவுவா னுயிர்கொடுத்தும் பழிகொண்ட பித்தா பின்னைப், பார்மகளைத் தழுவினையோ திசையானைப் பணையிறுத்த பரிதி மார்பால்.............. (௭)

### வசனம்.

ஆலோசனையில்மிகுந்த அண்ணுவே அண்ணுவே ? அசுரர்குலத்துக்குப் பிரளயத்தை ஒத்தவனே ? தேவர்கள் குலத்துக்கு யமனை ஒத்தவனே ? விஷமென்பது, தன்னை உண்ணுமற்போனல் உயிரை உண்ணமாட்டாதன்றே ? சானகிபிராட்டியென்னும் பெரிய விஷமானது, தன்னைக்கண்ணுலே பார்ப்பதினலேயே உன்னுடைய உயிரைப் போக்கிவிட்டதே, மஹாபராக்கிரமசாலியாகிய நீயும் உயுத்தகளத்தில் வீழ்ந்தாயே, யோசனையில் சிறந்தவனென்று எம்மை நான் சொல்லிக் கொள்ளவில்லை முன்னே யான் யோசித்துச்

சொன்ன சில புத்திகளை இன்றைய தினமாவது யதார்த்தமென்று எண்ணுகின்றாயோ? ஸ்ரீபரமபதநாதனாகிய ஸ்ரீராகவபிரான்மேல், பிராணனே அவனென்று ஆசை வைத்துள்ள, கற்புடையமங்கையர்க் கரசியாகிய மைதிலியின்மேல், நீ துராகிருதமாக வைத்த ஆசையை நீக்கிவிடு இல்லாவிட்டால் நமக்குப் பழிவந்து நேரிடும் என்றுசொன்ன என்னைக் கோபித்துக் கொண்டாயே அந்தக்கோபம் இப்போது ஆறி நான் சொன்னதெல்லாம் உண்மைதானென்று தேறினாயோ? புருவங்களை நெறித்துப்பார்த்துத் திக்கஜங்கள் நிலைபெயர்ந்தோடச்செய்த சகலலோக பயங்கரனே? யுத்தத்தில் அபேட்சைகொண்டு எழுந்த நம்முடைய குலமுழுமையும் நாசமாகிய பின்னேதானே உன்னுடைய பேராசை நீங்கியது. ஐயனே? இருபதுகுலாசலங்களை ஒத்ததோள்களை யுடையானே? அக்காலத்தில் அக்கினியில் வீழ்ந்து தேகவியோகமடைந்த வேதவதியென்னும் பதிவிரதா ரத்தினமானவர், இப்போது இந்தச் சானகி பிராட்டியினுருவமாக அவதரித் திருக்கின்றார். இவரோ சமஸ்த சராசரங்களையும் பெற்றெடுத்த சர்வஜகந்மாதாஎன்று உனக்குச்சொன்னேன், அதை உன்மனதிற் கொள்ளாமற் போனாயே அதுகாரணத்தால் உன்குலமுழுமையும் ஸ்ரீராமலக்ஷ்மணர்களை எதிர்த்து நின்று நாசமடைந்தது. பின்னேயாவதுஎன் சொல்லை நிசமென்றுநம்பிச் சரணாகதிசெய்யாமலே வியர்த்தத்தில் பிராணனைவிட்டாயே, இன்றைத்தினமாவது ஸ்ரீராம நாதனுடைய புஜபல பராக்கிரமத்தை அறிந்துசெல்கின்றாயோ? மூலதாமரைமலரில் வந்தசதுர்முகனும், சூரியமழுவாயுதத்தைக் கையில் தாங்கிய பஞ்சமுகனும், கொடுத்தருளிய வரங்களில் ஒன்றுந்தவிராமல் எல்லாமும், ஸ்ரீராம பாணத்துக்குமுன்னே உன் பத்துமுடிகளோடும்பொடியாய்ப் பயன்படாமற்போனதுகளல்லவா? அக்காலத்திலே உன்னிடத்தில் யான்வைத்த அன்பின் மிகுதியால் ஸ்ரீராமபிரானைப்பற்றிச் சொன்னதை ஒன்றும் உண்மையென்று அறிந்துகொள்ளாமற்போனாயே, ஸ்ரீராமபத்திரனானவர் லோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரர் என்பதை, அந்தஅவாப்த சமஸ்தகாமனாய்ச்சகலசகத்காரணபூதனாய் எழுந்தருளிய ஸ்ரீசர்வேசுரனுடைய பரந்தாமத்தை யடைந்து நின்ற இன்றைக்குத்தான் தெளிந்தாயோ? நீ இருந்து வந்ததும், சகபிர்மாதி தேவர்களுடைய பதிவிகளுக்கும் மேலாகியதும், இந்தஅண்டங்கள்யாவுந்தினும் மூன்றுபங்கு அதிகப்பெரிதுமாகிய பரமபதத்தை யடைந்தாயோ? நீ உன் குலதெய்வமாக ஆகமவிதிப்படி ஆராதித்துவந்த சந்திரசேகராகிய பரமசிவனுடைய உலகத்தை யடைந்தாயோ? என் அன்னாவே சிறிதும் பயப்படாமல் உனக்குச் சமீபத்தில் வந்து உன்னுயிரைக் கொண்டு போனவர் யாரோ? இதெல்லாம் நிற்கட்டும். சர்வ லோகேஸ்வரியாகிய சீதாபிராட்டியார் பக்கலில் துன்மதியால் நீ விரகங்கொண்டதை யறிந்து உன்னோடு போராடிக்கொண் டிருந்தமன்மதனானவர், தாம் செய்துகொண் டிருந்த போராட்டத்தை இனியாவது விட்டாரோ? அக்கினிச் சுவாலையைப்போலக் கிரணங்களை வீசிக்கொண்டிருந்த பூரணசந்திரனானவன், இப்போது குளிரநிலா வெறிக்கின்றானோ? யாவராலும் கொல்லப்படாத பராக்கிரம சாலியாகிய மைத்துனனை இந்தஸ்ரீராமநாதரானவர் கொலைசெய்தாரென்று உள்ளத்தில் வயிரங்கொண்டு அநேகத் தீய வஞ்சனைகளை ஆலோசித்து, உதட்டை மறைக்கும் படியாக முன்னே நீண்டு தோன்றுகின்ற பற்களையுடைய சூர்ப்பநகையானவள் இப்போதாவது தான் கொண்ட வயிரத்தை நீக்கினாளோ? நீ சானகிபிராட்டியார் பக்கலில் அபசாரப்பட்ட காரணத்தால் சுவர்க்க வாசிகளாகிய நல்லவர்களும், நரகவாசிகளாகிய தீயவர்களும், நம்மோடு பகைகொண் டிருக்கின்றார்களே! புருஷசிரேஷ்டனே! நீ சுவர்க்கத்தையாவது நரகத்தையாவது அடைந்தாயானால் அங்கே யாரோடு உறவாயிருந்து யார்முகத்தே விழிக்கப்போகிறாய். ஐயோ? தனித்தவனாகி விட்டாயே, விசய லட்சுமியையும், சாஸ்திரங்களுக்கதிதேவதையாய் நின்ற சரஸ்வதியையும், கீர்த்தியென்கிற பெண்ணையும் தழுவி நின்று, அந்த மூன்று ஸ்திரீகளும் பொறாமையால் ஊடிக்கொண்டு உன்னை விட்டு நீங்கும்படியாக, எல்லா வைபவங்களுக்கும் இறைவியும், சகல சம்பத்துகளுக்கும் தலைவியும், அஜசங்கராதி தேவர்களுக்குத் தாயும், தெய்வத்தன்மை பொருந்திய கற்புள்ள பெரிய பிராட்டியாரும் ஆகிய ஸ்ரீ சீதாபிராட்டியை, உன்னுடைய துர்ப்புத்தியால் தழுவுதற்காகப் பிராணனையே கொடுத்துப் பழியைப்பெற்றுக் கொண்ட முழுப்பித்தனே? உன்னென்னமெல்லாம் பழுதாகி, இப்போது திக்குயானைகளுடைய தந்தங்களை முறித்துவிட்ட பிரகாசமாகிய மார்பினாலே பூமிதேவியைத்தழு

விருவேயோ! என்று சொல்லிச் சொல்லி யழுதார். இப்படி யழுகின்ற ஸ்ரீ விபீஷணாழ்வானை இரண்டுகைகளாலும் எடுத்துக் கரடிப் படைகளுக்கு அரசனாகிய சாம்பவானானவர், மலைபோலுயர்ந்த பெருந்தோள்களை யுடையானே, விதியினது நிலைமையைச் சிறிதும் அறியாமல் ஓய்ந்து துக்கிக்கின்ற புத்தியும் உனக்கு உண்டோ! சுகமும் துக்கமும் மாறாமல் வந்துகொண்டிருப்பது நல்வினைதீவினைகளினது பயனென்று தெளியாமல் வீணே வருத்தப்படுகிறது நல்லறிவோ! என்று இன்னும் பலபல விதமாகத் தேற்றிக்கொண்டிருந்தார். இங்கே இப்படியிருக்க, மயனுடைய குமாரத்தியாகிய மண்டோதரியானவள், தன்பர்த்தாவினுடைய மரணச்செய்தியைக் கேள்விப்பட்டு, அநந்தலக்ஷம் ராக்ஷச ஸ்திரீகள் தங்கள் தங்கள் கூந்தல்களை விரித்துக் கோவென்று கதறிக்கொண்டு தன்பின்னேவர, நினைப்பென்பதும் மறப்பென்பது மில்லாதவளாய், இறந்து கிடக்கின்ற ராவணனுக்குச் சமீபத்தில் வந்து அவன்மேல் வீழ்ந்தாள். எல்லா உயிர்களிடத்தும் வைத்த கருணையையும், தருமத்தையும் துணையாகக்கொண்டு எல்லா வுயிர்களையும் காக்கின்ற நல்ல வமிசத்திலே பிறந்த சற்புருஷனொருவன், பூர்வகர்மத்தால் நேரிட்ட அபக்கியாதி எங்கும் வியாபிப்பதுபோல, ராக்ஷசஸ்திரீகள் வாயைத்திறந்து அழுதகூக்குரலானது அண்ட முழுமையும் வியாபித்தது. இலங்கா நகரத்தில் உள்ள யக்ஷகின்னரசித்ததானவவித்தியாதரநாகஸ்திரீகளிலும் ராக்ஷச ஸ்திரீகளிலும், சிலர், காலில் அணிந்த சிலம்புகளும், நுபுரங்களும் அழுவதுபோலச் சத்திக்கும்படி கோபுரங்களின் மேலேறிநின்றுபார்த்து அழுதார்கள். சிலர், இந்திரனுடைய பகை இன்றோடே ஒழிந்துபோய்விட்டதல்லவா என்று சொல்லிக் கொண்டு, போக இடம்பெறாமல் ஆகாயத்தின் மார்க்கமாய்ச் சென்றார்கள். சிலர், குண்டல முதலிய ஆபரணங்களும், இடையும், மின்னலைப்போல விளங்கவும், மான்போன்ற கண்களில் நின்றும் மழைபோல நீர்சிந்தவும், அழுகுரலானது இடியோசைபோல தொனிக்கவும், மேகராசிகளைப் போல வந்து வீழ்ந்து அழுதார்கள். சிலர், தலையின் மேல் கூப்பிய கைகளையும், முலைகளின்மேல் ஒழுகி ஓடுகின்ற நீரைச் சொரிகின்ற கண்களையும், உடையவர்களாய் அடர்ந்துவந்து, சமுத்திர அலைகளின் மேல் தாவிவிழுகின்ற அன்னப் பறவைகள் போல ராவணனுடைய நீண்டதோள்களின் மேல் விழுந்து அழுதார்கள். சிலர், தசமுகனுடையதலைகளையும், சிலர், கால்களையும், சிலர், எழுத்தாணிகளை ஒத்த தோள்களையும், சிலர், பர்வதம்போன்ற மார்படையும், சிலர், மற்ற அவயவங்களையும் தழுவிக் கூட்டங் கூட்டமாய் உட்கார்ந்துகொண்டு வீழ்ந்து அழுதார்கள். அவனோடு உடனுடக்கொண்டு இருப்பது தங்களுக்கு வருத்தமென்றும் அவனோடு கூடிவாழ்தலே தங்கள் உயிர்வாழ்க்கைக்குச் சுகமென்றும் நினைத்து இதுவரையும் காலங்கழித்துவந்தசிலஸ்திரீகள், இராவணன்மேல் விழுந்தழஇடம்பெறாமல்ஒருவர்மேல்ஒருவர் விழுந்து அவன்தோள்களைப் பற்றிக்கொண்டழுதார்கள். சிலசில ஸ்திரீகள் முறைபிறழ மொய்த்துத்தழுவிக்கொண்டு, கண்டோர் யாவருக்கும் உள்ளம் நெகிழும்படியாக அழுதழுது, திரிலோகபயங்கரனே? புருஷசிம்ஹமே? அதர்மமாக உன்மனத்திலே வைத்திருந்த சீதையை இன்னமும் மறந்திலையோ? நீ மறந்துவிட்டது யார்த்தமாயிருந்தால், பூர்வத்திலே எங்கள்மேலாசையாயிருந்து பேசியதுபோல உன்வாய்களாகிய மலர்களைத்திறந்து ஏன்பேசவில்லை? பேசாமற்போனபோதிலும் கண்களைத்திறந்து எங்களை ஏன்பார்க்கவில்லை? மற்றொருகிருபையும் ஏன்செய்யவில்லை? இவற்றுள் ஒன்றுஞ்செய்யாம லிருப்பதால் நீயும் இறந்துவிட்டாயோ? என்று சொல்லி அழுதார்கள். சூரியனைப்போல உலகுக்கெல்லாம் தானொருவனே சமர்த்தனென்னும்படி புகழ்பெற்ற மயனுடைய புத்திரியாகிய மண்டோதரியானவள், இருபுறமும் அலைகளை வீசுகின்ற கருங்கடலில் மின்னல் விழுந்தாற்போலப் பிரதாபலங்கேசுரனுடைய உடலின்மேல்விழுந்து, அங்கு சுற்றுப்பக்கங்களிலுள்ள மரங்களும், மலைகளும் தன்னுடைய புலம்பலைக்கேட்டு உருகும்படி வாயைத்திறந்து புலம்பத்தொடங்கினாள்.

## மண்டோதரிபுலம்பல்.

கவி.

அன்னேயோ வன்னேயோ வாகொடியேற் கடுத்ததுவு மரக்கர்வேந்தன், பின்னையோ விறப்பதுமுன் பிடித்திருந்த கருத்திதுவும் பெற்றிலேனோ, முன்னேயோ விழுந்ததுவும் முடித்தலையோ படித்தலைய முகங்காட்டாயோ, என்னேயோ என்னேயோ விராவணனார் முடிந்தபரி சிதுவோபாவம்.....(௧)

வெள்ளெருக்கு மலர்முடியான் வெற்பெடுத்த திரடோளின் மேலுங்கீழும், எள்ளிருக்கு மிடனின்றி யுயிரிருக்கு மிடனாடி யிழைத்தவாறோ, கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியைக் கடுஞ்சிறையில் வைத்தகாதல், உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்பிளந்து தடவியதோ வொருவன்வாளி.......................(௨)

ஆரம்போர் பொருமார்பை யகல்முழைக ளெனத்திறந்தி வுலகிற்கப்பால், ஆரம்போ யினவொருவன் சிலைதுரந்த சரங்களோ போரிற்றோற்றும், வீரம்போ யுரங்குறைந்து வரங்குறைந்து வீழ்ந்தானே வேறேகெட்டேன், ஓரம்போ வுயிர்பருகிற் றிராவணனை மானுடனா ருற்றமீதோ....................... (௩)

காந்தையருக் கணியான சானகியார் பேரழகு மவர்தங்கற்பும், ஏந்துபுயத் திராவணனார் காதலுநஞ் சூர்ப்பநகை யிழந்தமூக்கும், வேந்தர்பிரான் றயாதனர் பணியாலே வெங்கானம் விரதம்பூண்டு, போந்ததுவுங் கடைமுறையிற் புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற்றம்மா.......................(௪)

தேவர்க்குந் திசைக்கரிக்குஞ் சிவனார்க்கு மயனார்க்குஞ் செங்கண்மாற்கும், எவர்க்கும் வலியானுக் கென்றுண்டா மிறுதியென வேமாப்புற்றேன், யாவர்க்கு நீயுழந்த வருந்தவத்தின் பெருங்கடற்கும் வரமென்றோறும், காவற்கும் வலியாரோர் மானுடனா ருளரென்னக் கருதினேனோ .......................(௫)

அனைகடையிட் டமைவுற்ற கோடிமூன்றுயுவும்பே றதிஞரோனும், உனைகடையிட் டளப்பரிய போராற்றல் போராற்றற் குலப்போவில்லைத், தினைகளையிட் டிறப்பரிய வரமென்னும் பாற்கடலைச் சீதையென்னும், பினைகடையிட் டழிப்பதனை யறிந்தேனோ தவப்பயனின் பெருமைபார்ப்பேன்....................... (௬)

ஆனருலகியற்கை யறிதக்காருலகேழுமேழுமஞ்சும், வீரனுருடனுறந்து விண்புக்கார் கண்புக்க வேழவில்லான்,நாரநாண் மலர்க்கணையா னுளெலாந் தோளெலா நையவெய்யும், மாரனார்தனியிலக்கை மனிசனாழித்தாரோ வலத்தினாலே....................... (௭)

[வேறு.]

ஆராவமுதாயலைகடலிற்கண்வளரும்........*
நாராயணனென்றிருப்பேனிராமனைநான் *
ஒராதேகொண்டகல்றாயுத்தமனார்தேவிதன்மேல்
பாராய்நீநில்லுடைய மார்பகலம்பட்டவெல்லாம். (௮)

## வசனம்.

என்றாயே தாயே? மஹாபாதகியாகிய எனக்கு, ராக்ஷசகுல நாயகனார்க்குப்பின்னே இறக்கும்படி நேரிட்டது. இதென்ன ஆச்சரியம்! நான் வேறொன்றை அடையாமற்போனாலும் என்குலநாயகனுக்குமுன்னே இறக்க வேண்டுமென்று எண்ணியிருந்த எண்ணத்தை யாவது பெறுகின்றபாக்கியம் எனக்குஇல்லாமற்போச்சே! இந்த வீரசிரேஷ்டருடைய உடல் முன்னேவிழுந்திருக்கிறது. சொர்னமயமான முடிகளணிந்த தலைகளோ புழுதியில் உருண்டு கிடக்கிறதுகள். ஒகோ சற்றே முகத்தைக்காட்டீரோ! தம்முடையபேரைக் கேட்டமாத்திரத்தில் சகலவீரஜனங்களையும் அழச் செய்யவ தொன்றும் எதுவால் இராவணனென்னும் பெரும்பெயரைப்பெற்ற பராக்கிரம சாலியானவர் இறந்துபோனா ரென்பது என்னஆச்சரியம் !! என்னஆச்சரியம் !! இது எவ்வளவுபரிதாபமான காரியமாயிருக்கிறது? ஆ! ஆ! தனக்குச்சமானமில்லாதஸ்ரீராமனுடையபாணமானது, மார்பொன்றையே பிளந்து செல்லாமல், வெள்ளெருக்க மலர்மாலையைத் தரித்த சாக்ஷாது ருத்திரபகவானுடைய கயிலையை அநாயாசமாகப்பேர்த்த தோள்களுக்கு மேலுங்கீழுமாக எள் தங்குதற்கு மிடமில்லாமல் சின்னபின்னமாகத் தொளைத்திருப்பதை யோசித்துப் பார்த்தால், பிராணாதாரத்தைத் தேடித்தேடித்தான் இப்படிச் செய்தவிதமோ? தேவியாகிய சானகிபிராட்டியை அசோகவனத்தில் சிறைவைத்த ஆசையானது தங்கியிருக்கும் இடத்தைத் தடவிப்பார்த்தவிதமோ? இதென்னவிபரீதமாய்க் காயம்பட்டிருக்கிறதே. ஒப்பற்ற ஸ்ரீராமனுடைய பாணங்கள், மலையில்குகைகள்காணப்படுவது போல மார்பைப்பலதொளைகள்செய்து இவ்வுலகையுங்கடந்து அப்புறத்திலும் சென்றது கள். சகல வீரஜனங்களையும் செயம்பெற்ற பிரதாபலங்கேசுரர், போரிலே தோல்வியடைந்து, தம்முடைய வீரத்தையிழந்து, வலிகெட்டுப், பெற்ற வரங்களெல்லாம் தொலைந்து வீழ்ந்தாரல்லவா? இதென்ன ஆச்சரியத்திலே ஆச்சரியமாயிருக்கிறது. ஒருபாணந்தானோ! என்புருஷிருடைய உயிரைவாங்கியது. எசமனுஷியனுக்கு இப்படிப்பட்டபலமும் உண்டோ இதென்ன அற்புதம். பார்வதிமுதலிய

ஸ்திரீஜனங்களுக்கெல்லாம்சிரசிலேஅணிந்துகொள்ளத்தக்க ஆபரணம்போல விளங்குகின்ற ஜானகிபிராட்டியாருடைய கட்டழகும், அவருடைய கற்பும், உயர்ந்த தோள்களையுடைய இராவணனார் அந்தப் பிராட்டியார் பக்கலில் வைத்த ஆசையும், இத்துன்பங்களுக்கெல்லாம் காரணமாகிய சூர்ப்பநகையானவள் மூக்கை யிழந்ததுவும், ஸ்ரீராமபிரான், தசரதசக்கரவர்த்தியினுடைய ஆக்ஞையால் தவவேஷம் பூண்டு காட்டில் பிரவேசித்ததும், இவையெல்லாவற்றையும் கடைசியாக ஆலோசித்துப் பார்த்தால் இந்திரன்செய்த மஹா பாக்கியமாய் முடிந்திருக்கிறதாகள். எல்லாத்தேவர்களும் திக்குயானைகளும், சிவனும், பிரமனும், உபேந்திரனாகிய விஷ்ணுவும், மற்ற எவர்களும் ஆகிய இவர்களைப் பார்க்கினும் பராக்கிரமசாலியாகிய ராவணனார்க்கும் மரணமு முண்டாகுமோ இல்லையென்றே கர்வங்கொண் டிருந்தேன். எல்லாரைப்பார்க்கினும், நீர் அதிகபிரயாசப்பட்டுச் செய்த அரியதபமாகிய சமுத்திரத்தைக்காட்டிலும், அந்தத்தவங்களால் பெற்ற வரமென்னும் அரணைக் காட்டிலும், வலிமையுடைய மனுஷ்ய னொருவன் உண்டென்று நான் நினைத்தது முண்டோ இல்லையே. ராக்ஷசகுல ராஜ சிங்கமே, உம்முடைய ஆயுள் நாளோ ? மூன்றரை கோடியாகும். புத்திமான்களாலும் அளவிடுதற் கொண்ணாத உமது பராக்கிரமத்துக்கும், போர்ச் சாதுரியத்துக்கும் இவ்வளவென்றுமுடிவில்லை. எல்லையில்லாமல் நீர் பெற்றிருந்த வரங்களென்னும் பாற்சமுத்திரத்தை தம்முடைய விதியானது, சீதா பிராட்டியாகிய மீனைக் குத்தி அழிப்பதனை நான் இதற்கு முன்னே அறிந்திருந்தேனே இல்லையே. அறிந்திருப்பேனேயானால் எவ்விதத்திலும் ஜானகிபிராட்டியை நீர் விட்டு விடும்படி செய்யாமற் போவேனோ செய்தேயிருப்பேன். நீர் பெற்றிருந்த வரங்களின் பெருமையையே கண்டு எக்களிப்புக்கொண் டிருந்தேன். லோக சுபாவத்தை யார் அறிய வல்லவர்கள். சதுர்த்தச புவனங்களும் அஞ்சத்தக்க மஹாசத்தவீராகிய ராவணனார், தேகத்தைத்துறந்து வீரசுவர்க்கமடைந்தார். கணுக்கடர்ந்த கருப்புவில்லை ஏந்தி மலர்க்கணைகளால் எந்நேரமும் இருபது தோள்களின் மேலும் எய்துகொண்டுவந்த மன்மதராசனுடைய லக்ஷியமென்னும் ராவணனை ஸ்ரீராமனென்னும் மனுஷ்யரானவர், தம்முடைய பராக்கிரமத்தால் அழித்து விட்டாரோ ! என் பிராணபதமான நாயகமே, எல்லா இறைவர்களுக்கும் திருப்தியுண்டாக்காத அமுதமாகித் திருப்பாற்கடலில் திருக்கண்வளர்கின்ற ஸ்ரீசர்வேசுர னென்றே ஸ்ரீராமபிரானை நினைத்திருப்பேன். நீரதை எவ்வளவும் ஆலோசியாமல் அந்த அப்பிராகிருதராகிய ஸ்ரீராகவபிரானுடைய தேவியாரை வஞ்சமாய் எடுத்துக்கொண்டு வந்து சிறை வைத்துவிட்டீர். இப்போது உம்முடைய விசாலமாகிய மார்புமுழுதும் பட்டிருக்கிற புண்களின் துவாரங்களைப்பாரும். என்று கூக்குரலிட்டு அழுதனள்.

இப்படி புலம்பி அழுத பதிவிரதா சிரோமணியாகிய மண்டோதரி யானவள் எழுந்து அந்த ராவணனுடைய மார்பைத் தழுவிப் பெருமூச்செறிந்து பிரியாமை துக்கத்தாலே உயிரைவிட்டனள். அப்படிபிராணனைவிட்ட மண்டோதரியினுடைய கற்பினிலைமையைக்கண்டு, தேவதா ஸ்திரீகளும், மற்ற பூலோக நாகலோக ஸ்திரீகளும், ரிஷிபத்தினிமார்களும், ஆகிய எல்லா பதிவிரதா ஸ்திரீகளும் கொண்டாடினார்கள். மண்டோதரியும் இறந்துபோனபின் விபீஷணாழ்வா னானவர், வேதவிதிப்படி பிரேதசடங்குகளைச்செய்து, சந்தனஅகிற்கட்டைகளை அடுக்கி அதன்மேல் தன் அண்ணனை ஏற்றி மற்ற கடன்களையும் செய்துமுடித்து,மயனுடைய புத்திரிகா ரத்தினமாகிய மண்டோதரியையும் தன்தமையனோடு கட்டைகளின் மேலேற்றித் தீயால் தகனமாக்கிக் குடங்களிலிருந்து நீரைக்கொட்டுவதிலும் அதிகமாய் இரண்டு கண்களினின்று நீர்சொரிந்து அழுது, கும்பகருணன் இந்திரஜித்து, கும்பன், நிகும்பன், முதலானவர்களுக்கும், நீர்க்கடன்முதலியதுகளைச்செய்து, எல்லோர்க்கும் இவனையல்லாமல் வேறே சரணாகதி யில்லையென்று உணர்ந்து, ஸ்ரீகோதண்ட தீட்சா குருவினுடைய சீர் பாதங்களை வந்து வணங்கினார். தம்முடைய சரணாரவிந்தங்களை வந்துவணங்கிய ஸ்ரீ விபீஷணாழ்வானை ஸ்ரீ சக்கரவர்த்தித் திருக்குமாரர் கடாக்ஷித்து ! என்றுக்கிக்கிருப் மரணமென்பது யாவருக்கும் இயற்கையாய் அமைந் திருப்பது தானே. இது என்ன நீ அறியாததோ என்று பலபல தேறுதல்சொல்லி அவருடைய துன்பப்பாசத்தை நீக்கிவிட்டார்.

இராவணன் வதைப் படலம்

முற்றிற்று.

# மீட்சிப்படலம்.

தான் முன்னேசெய்த அருந்தவத்தின் பயனால் தம்மைச் சரணமடைந்து உஜ்ஜீவித்த விபீஷணாழ்வானைப்பார்த்து, மநுநீதிமுதலிய தருமசாஸ்திரவிதிகளை யறிந்திருக்கிற புத்திமானே? நீவருத்தப்படாதே என்று திருவாய்மலர்ந்தருளி, ஸ்ரீலட்சுமணப்பெருமாளைப் பார்த்து, சுக்கிரீபமஹாராஜர், அநுமான், மற்றவானரவீரர்கள் இவர்களோடு நீசென்று வேதத்தில் சொல்லியபடி நீதிமானாகிய விபீஷணனுக்கு முடிசூட்டக்கடவாயென்று ஆக்ஞாபித்து மற்றவர்களுக்கும் விடைகொடுத்தருளினார். அப்போது அங்குநின்ற சமஸ்ததேவர்களும்,மற்ற திக்குப்பாலகர்களும், தங்கள்தங்களுக்கேற்ற செய்கைகளைச் செய்யும் உட்களிப்போடுசென்று,சமுத்திரம், ஸ்ரீஹரியினுடைய பாதோதகமாகிய கங்கை, முதலிய தீர்த்தங்களையும், திவ்விய ரத்தினமயமாகிய சொர்ணகிரீடங்களையும், பெருமையாகிய வச்சிரமணிகளிழைத்த சிங்காசனத்தையும், மற்றும் வேண்டியவைகளையும், விரைவாகக்கொண்டுவந்தனர்கள். மூலதாமரையிற் பிறந்த பிரமன் கட்டவேண்டிய ஏற்பாடுகளைச்சொல்ல அச்சொல்லின்வழியே தெய்வத்தச்சனானவன், அங்குவந்துள்ள பிறைச்சந்திரனையும் கங்கையையும் சடாபாரத்தில் தரித்த சிவன் முதலாகிய தேவர்கள் யாவரும், அதிசயித்துப் புகழ்ந்து கொண்டாடும்படி நானாவொளிகளை வீசுகின்ற மணிமயமாகிய மண்டபமொன்று சிருட்டித்தனன். உடனே விதிசிவாதி சமஸ்ததேவர்களும், ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு வேதவிதிப்படி மங்களாபிஷேகஞ்செய்து சர்வாபரணங்களாலும் அலங்கரித்து அழைத்துவந்து சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கச் செய்தபோது, சுமித்திராதேவியிளஞ்சிங்கமாகிய ஸ்ரீராமாநுஜர், ஸ்ரீராகவபிரானுடைய ஆக்கினையின்படி தமது திருக்கரங்களால் திவ்வியமணிமகுடமொன்றெடுத்து, ஸ்ரீராமபத்திரருடைய திருவடித்தாமரைகளைத் தியானித்து வேதமந்திரங்களைச் சொல்லி ஸ்ரீவிபீஷணாழ்வானுக்குச் சூட்டினர். ஒரு நீலமலையானது சூரியகிரணத் தொகுதியைச் சிகரத்தில்சூடி, சிவந்த ரத்தினாசனத்தின்மேல் இருந்தாற்போல, தம்முடைய தலையில் மணிமுடிவிளங்க விபீஷணாழ்வான் சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்து விளங்கினார். இலங்காநகரத்துக் கரசனாக ஸ்ரீவிபீஷணாழ்வான் இளையபெருமாளால் முடிசூட்டப்பட்டவுடனே தர்மதேவதை நடனஞ்செய்தது. முப்பத்துமுக்கோடி தேவர்களும் கற்பகமலர்களைக் கொய்துகொய்து தூவினார்கள். சித்தர் சாரணர்கள் முதலானவர்கள், தங்களுக்கு வேறே மலர்கள் கிடையாமல் திரிமூர்த்திகளோடும், முனிவர்களோடும், பரமவைதிகமார்க்க பிராமணர்களோடும், ஆசிர்வசனமென்னும் மலர்களைத்தூவினார்கள். பட்டாபிஷிக்தனாகிய அரக்கர்குலாதிபனானவர், இலட்சுமணருடைய பாதாம்புயங்களை வணங்கி, ஸ்ரீராகவபிரானைத் தரிசிக்க வேண்டுமென்கிற பேரவாவையுடையவராய், மேருமலையுங் கண்டு நாணுகின்ற தோள்களையுடைய இராமாநுஜரே? யான், ஸ்ரீசர்வலோக சரணியராகிய ஸ்ரீராமபிரானைச் சேவித்து வருமளவும் நீர் இந்த லங்காநகரத்திலிருந்து, இங்குள்ளவஸ்துக்காவல் செய்திரும் என்று அவரிடத்திலே விடைபெற்றுக்கொண்டு, சுக்கிரீபமஹாராஜா அங்கதன் முதலானவர்கள் சூழ்ந்துவரச்சென்று ஸ்ரீராமச்சந்திரருடைய திருவடிகளைவணங்கினார். உடனே அன்னமாய் அருமறைதந்த சுவாமியும், தம்மையே சரணமடைந்த விபீஷணாழ்வானை, வாரியெடுத்தணைத்து, அவைதிக மார்க்காநுசாரிகளாகிய ராக்ஷசர்களைப்போ லல்லாமல் பரமவைதிக மார்க்கத்தில் பிசகாமல் ஒழுகுகின்ற சிரஞ்சீவியாகிய சுகுண சீலனே? யாகாதிகளால் தேவர்களைத் திருப்திசெய்து, நீதியிலும் தருமத்திலும் தவறாமல் நடந்து,திரிலோகவாசிகளும் வந்து வணங்கும்படி இம்மை மறுமைப்பயன்களைத் தருவதாக அரசு செய்யக்கடவா யென்றும், மற்றும் பலபல நீதிகளைக் கூறி, உன்னைச்சேர்ந்தவர்களோடு மிகுந்த கீர்த்தியை அடைந்து வாழக்கடவா யென்றும் சொல்லினர். சொல்லி முடிந்தபின், மேலே நடக்க வேண்டியதை ஆலோசித்து, திருவடிகளைப்பார்த்து அநுமானே? பவளம் போன்ற வாயையும் மயில்போலும் சாயலையுமுடைய சானகியினிடத்தே சென்று இங்குநடந்த செய்திகள் யாவற்றையும் சொல்லென்று அனுப்பினர். சர்வ சுவாமியினுடைய கட்டளையின்படி திருவடிகளானவர், அழகிய அசோகவனத்தைச்சேர்ந்து,நீரில்லாமல் வாடிக்கிடக்கின்ற ஒரு பூங்கொம்புக்குத் தளிர்க்கும்படி வார்க்கின்ற நீரைப்போல ஸ்ரீராமபிரானுடைய வீரபிரதாபச் செய்கையைக் கொண்டு, பிராட்டியாருக் கெதிரேநின்று, ஸ்ரீரகுகுலதிலகருடைய சகஸ்திர திருநாமங்களையும் பலபலமுறை வாயாரப்பாடிக் குதித்துக் குதித்துச் சாரிகை திரிந்து ஆநந்தத்தாண்டவஞ்செய்து, களிப்பு

ன் மிகுதியால் நடுங்குகின்ற அழகிய இரண்டு
திருக்கரங்களையும் உச்சியின்மேற்கூப்பிநின்று
சர்வக்கியரா யிருந்தும் ஒன்றும் அறியாதவ
ர்போல் இந்தவனத்திலிருப்பவரே மங்களம்
உண்டாகுக ! சர்கவதிபார்வதிமுதலிய உத்தம
ஸ்திரீ ஜனங்கள் யாவரும் சிரசின்மேல் வைத்
துக்கொள்ளத்தக்க திவ்வியாபரணம்போன்ற
வரே மங்களம் உண்டாகுக ! உம்முடைய
இல்வாழ்க்கைக்கு மங்களம்உண்டாகுக ! உம்
முடைய திரு மாங்கலியத்துக்கு மங்களம் உ
ண்டாகுக ! சக்கரதரனாகிய மத்தகஜமானது,
தேவரீர் பக்கலில் அபசாரப்பட்ட தசமுகனா
கிய முண்மரத்தைத் துவம்சப்படுத்திய விஜய
த்துக்கு மங்களம் உண்டாகுக ! என் தாயே
சர்வாத்தும தயாபராயே ! அந்தப் பாபிஷ்
டனுடையதலைகள் பர்வதராசிகளைப்போலப்
பூமிப் புழுதியில் உருண்டு கிடக்கின்றதுகள்.
ரத்தினாபரணங்களைத் தரித்த புஜசமூகங்கள்,
சமுத்திரத்தின் அலைகளைப்போலத் தரையில்
கிடக்கின்றதுகள். பருத்த தேகமானது சமுத்
திரத்தைப்போலக் கிடக்கிறது. மஹா பரிசு
த்தராகிய விபீஷணாழ்வானவர் சுவாமியை
நோக்கி, ஸ்ரீதசராத்மஜரே ! தேவரீர் இன்னும்
பிராட்டியாரை வரவழையாமலிருப்பது தே
வரீருக்குப் பிழையாக முடியும். அன்றியும்
யாவரும் மதிக்கத்தக்க புகழுமல்லவென்றுசொ
ன்னுரென்று சொல்லினர். இப்படி ஆஞ்ச
நேயர் சொல்லிக்கொண்டு வரும்போது. தம்
மை அடைந்தவர்களுடைய இருவினைகளை
யொழித்து நித்தியானந்தத்தைத் தருகின்ற
சீதாபிராட்டியார், தினந்தினம் ஒவ்வொருகலை
யால் வளராமல் எல்லாக்கலைகளையும் ஒரேதின
த்திற்சேர்ந்து சந்திரன் வளர்ந்தாற் போலச்
சர்வாவயங்களும் பூரித்தார். இம்மட்டுமோ,
செவ்வாம்பல் போன்ற திருவாயும், திருமுக
மண்டலமும், மலர்ந்து தோன்றவும், நுட்ப
மாகிய இடையானது வருந்தும்படி தாம்
கொண்ட காதலுக்கு இரண்டுபங்கு அதிகமா
க ஸ்தனபாரங்கள் பூரித்துத் தோன்றவும், இ
ராகுவால் பிடிக்கப்பட்டு மறுபடியும் கக்கிய
சந்திரனைப்போலவும் காணப்பட்டார். ஆஞ்
சநேயர், ஸ்ரீராமநாதருடைய செய்திகளைச்
சொல்லிக் கொண்டு வரும்போது சர்வ லோ
கேசுவரியாகிய பிராட்டியாருக்கு முன்னே
ஓங்கிப்பூரித்தது, மனமோ! மனத்திலுண்டா
கிய பெருங்களிப்போ? அழகிய வளையலணி
ந்ததோள்களோ? அல்லது ஸ்தனபாரமோ? எது
வோ இன்னதென்று அறிந்து சொல்ல எம்
மால் முடியாது. இப்படி பூரித்ததும் அல்
லாமல், திருமுகத்தில் புருவங்கள் நெறித்தன.
ஸ்தனங்கள் வெயர்வைக் குமிழிகளை அரும்
பின. நினைப்பதொன்றும் சொல்வதொன்று
மாயினது. இந்தப்பிரகாரம் பிராட்டியாரைச்
செய்யவல்லது ஸ்ரீராமபிரானுடைய வீரபிர
தாபமே அல்லாமல் மறவும் செய்ய வல்ல
தோ ? கற்புநூலிற் சொல்லியபடி நடந்து த
ன்னைப் பாதுகாப்பவரில்லாமல், குற்றத்தை
அடைந்திருந்த இல்லறத்தினது குற்றத்தை
நீக்கிப் புனிதமாக்கும்படி திருவவதரித்த சா
னகிபிராட்டியானவர், மேலே சொல்லியபடி
ஆநந்தப் பரவசப்பட்டவராய், அஞ்சனா இள
ஞ் சிங்கத்தைப்பார்த்து இன்னதைச் சொல்ல
லாமென்கிற நினைவில்லாமல், உன்மத்த மடை
ந்தவர்களைப் போலச் சும்மாவிருந்து, யான்
யாதுசொல்லப் போகிறேனென்றுஇருந்தார்.
அந்த நிலைமையைக்கண்ட ஆஞ்சநேயர், சகந்
மாதாவே தேவரீருடைய இருதயத்திலுண்
டாகிய களிப்பின் மிகுதியாலோ ? அல்லது
என்னுடைய தூதுபொய்யென்றோ? நீர் ஒன்
றும் பேசாமலிருப்பதென்றார். அதுகேட்ட
ருளிய எம்முடைய தாயானவர், என்னப்ப
னே ஆஞ்சநேயா ! உன்னுடைய வார்த்தை
யாகிய அமிர்தத்தைப் பானஞ் செய்ததினால்
என்னுள்ளத்தில் கரைபுரண் டெழுந் தோங்கி
ய சந்தோஷ பிரவாகத்தினாலே பரவசப்பட்
டு எதைச்சொல்லுவோமென்று ஆலோசித்து
ஆலோசித்து, ஒன்றுந்தோன்றாமல் சும்மா இ
ருக்கின்றேனே அல்லாமல் நீசொன்ன சமா
சாரமாகிய மகாபாக்கியமானது, எனக்கு உ
ண்டாகிய பைத்தியத்தைப் போக்க மாட்டா
மல் மேலும், பைத்தியத்தையுந் தருமோ,
முன்னே தூதுவந்தபோது இந்தச் சிறையி
லிருந்து யானே நீக்குகிறேனென்று சொன்
ன நீ அப்படியே இப்போது சிறையில்
நின்றும் நீக்கிச் சந்தோஷச் செய்தியையும்
சொன்னாய். அப்படிப்பட்ட உபகாரியாகிய
உனக்கு என்னபிரதியுபகாரஞ் செய்யப்போ
கிறேனென்பதை யோசித்து யோசித்து
உன்னோடு பேசவும் மாட்டாமல் சும்மா இரு
ந்து விட்டேன். என் ஐயனே அநுமானே !
இந்தத் திரிபுவனங்களையும், நீ செய்த நன்றிக்
குப் பிரதி நன்றியாகத் தந்தபோதினும் சரிப்
படுமோ! அதுவுமன்றி, நீசெய்தஉபகாரத்தை
ப்போல என்றைக்கும் அந்த மூன்றுலகமும்
அழியாமலும் இருக்குமா !. அழிந்து போகு
மேயென்று நினைத்துக்கொண்டே யிருந்தே
ன். என் புத்திரதீபமே உன்னை என் தலையால்
வணங்கவும் கூடுமென்று எண்ணுகிறேன். இப்

டி யிருப்பதினால் யாதொருபகாரமும் செய்யச் சக்தியற்றநான் உனக்கு என்ன செய்யலாமென்று எண்ணி யிருந்தேனே அல்லாமல் பேச மறந்து விட்டவளல்லேன். சாணைபிடித்த இரத்தினத்துக்குச் சமானமான ஸ்ரீராம தூதனே! உன்பக்கலில் நான் செய்ய வேண்டியது யாது அதைச்சொல்லக் கடவாயென்று கேட்டார். உடனே வாயுபுத்திரரானவர், எம்முடைய இறைவியே! நீர் எனக்குத் தயை செய்கின்ற வரம் வேறொன்றுமில்லை. உம்முடைய மனம் களிக்கின்ற அநந்த கலியாண குண நிதியாகிய ஸ்ரீரகுகுல நாயகரிடத்தில் யான் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி நீர் கிருபைசெய்வது தான் நான் பெற்றுக் கொள்ளும் பெருவரமாகும். இதுவும் அல்லாமல் ரத்தினத்தைப்போலக் களங்கமற விளங்குகிற திருமுகத்தையுடைய திரிசடை யென்னும் என்தாயை ஒழித்து, இந்த ராக்ஷசஸ்திரீகளையெல்லாம் என்னுடைய கையறையால் கொல்லும்படி வேண்டுகிறேன். இதைத் தயைசெய்வீராகில் இதுவும் ஒருவரந்தானென்றுசொன்னார். இவர்களைக்கொலைசெய்வதும் ஒருவரமாகுமோ என்பீராகில், முன்னே தேவரீரைத் தகாதவார்த்தைகளைச்சொல்லி ஒவ்வொருத்தியும் உம்மை எடுத்து விழுங்குவேனென்று ஓடிவந்தவர்களன்றோ? ஆகையால் யான் பெற்றுக்கொள்ள வேண்டிய வரமேயாகும். சீக்கிரத்தில் இவ்வரத்தைக் கிருபைசெய்வீராளுல் இந்த நீச ஸ்திரீகளுடைய மலைபோன்ற உடலை என்னுடைய கூரியநகங்களால் பிளந்து உயிரை நமனுக்கு விருந்திடுகிறேன். இம்மட்டிலேதில்லாமல், இந்தநிசாசரஸ்திரீகளுடைய குடல்களைப் பிடுங்கி ரத்தத்தைப் பானஞ்செய்து உடலைமுறுக்கித் தின்றுவிடுகிறேன் என்றுகேட்டுக் கொள்ளுதலும்-இதைக் கேட்ட தேகவலியையுடைய ராக்ஷச ஸ்திரீகளெல்லாம் - எங்களுடையதாயே உம்முடைய பாதாரவிந்தமே எங்களுக்கு அடைக்கலமென்று பிராட்டியாருடைய திருவடித் தாமரைகளைப் பற்றி விழுந்தார்கள். தாயாரானவர் அரக்கமாதர்களை நோக்கி அஞ்சாதேயுங்கள் அஞ்சாதேயுங்களென்று அபயப்பிரதானந்தந்து ஆஞ்சநேயருடைய முகத்தைப்பார்த்துத் திரிகரணத்தாலும் பரிசுத்தவானே! அந்தப்பாபிஷ்டன் கட்டளையின்படி இவர்கள் செய்தார்களே அல்லாமல் இவர்களுடைய சுயபுத்தியால் என்னதீமை செய்தார்கள் பெற்றதாயைக் காட்டிலும் என்னிடத்தில்அன்பின் மிகுந்த ஆஞ்சநேயா! நான்செய்த தீவினையால் இந்தத் துன்பங்கள் நேரிட்டதுகளே அல்லாமல்வேறல்ல. ஆயினும், ஸ்ரீகாகுஸ்தகுலதிலகருக்குச் சர்வசித்தமாயிருந்த பட்டாபிஷேகத்தை நிவர்த்திந்த கூனியானவள் இவ்வளவு துன்பங்களுக்கும் காரணமாயிருந்தாள் அந்தக்கூனியைப்பார்க்கினும் இவர்கள் கெட்டவர்களல்லவே. அன்றியும் கழிந்தது போனதைப்பற்றிச் சிந்திக்கவேண்டுவதில்லை. நவ்வியாகரண பண்டிதனே! எல்லாத்தீவினைகளும் வசிப்பதற்கு இருப்பிடமாகிய துஷ்டஸ்திரீகளா யிருந்தபோதிலும் இவர்களை மனங்கலங்கும்படி செய்யாதே இவ்வரத்தை எனக்கு நீ கொடுக்கவேண்டுமென்று பிராட்டியார் சொல்லியருளினர். என்று சொன்னபோது திருவடிகளானவர், சீதாபிராட்டியாருக்குத் தண்டன் சமர்ப்பித்து எம்பெருமானுடைய தேவியாரது திருவுளப்பாங்கின்படியே நடந்து கொள்ளக் கடவேன் என்று நின்றுகொண்டிருந்தனர். இங்கே இப்படியிருக்க யாவரினும் பெரியோராகிய ஸ்ரீராமபத்திரர் ஸ்ரீவிபீஷிணாழ்வானை நோக்கி, இலங்காநகரராஜனே எமதுதேவியை வைபவத்தோடு அதிசீக்கிரத்தில் அழைத்துவாவென்று அருளிச்செய்தனர். அருளிச்செய்தமாத்திரத்தில் இருளைப்போல மேனியும், சூரியனைப்போல முடியும், மேகத்தில் தோன்றுகிற மின்னலைப்போலப் பீதாம்பரமும் ஆபரணங்களும் விளங்குகின்ற ஸ்ரீவிபீஷிணாழ்வானனவர் விரைந்துசென்று, ஸ்ரீசானகிபிராட்டியாருடைய திருவடித்தாமரைகளுக்குத் தண்டன்சமர்ப்பித்து, எல்லோர்க்குந்தாயே! அந்தணர்கள் அருந்தெய்வமாகிய ஸ்ரீராகவபிரானனவர், தம்முடைய திருவுளத்தில் உத்தேசங்கொண்டகாரியமெல்லாம் முடிந்துவிட்டதுகள்இனி உம்மைக்காணும்படி விரும்புகின்றார். நீங்கள் இருவரும் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தைக்கண்டு சேவிக்கும்படி பிரமன் முதலிய தேவர்கள் யாவரும் வந்திருக்கிறார்கள். ஆதலால் தேவரீருக்குச் சீக்கிரத்தில் அலங்காரஞ்செய்வித்து உம்முடையவருத்தத்தை ஆற்றுவித்துஎன்னிடத்தில்அழைத்துவாவென்றார்.எம்முடைய இறைவியேஎழுந்தருள்வீராகஎன்றார். ஸ்ரீவிபீஷிணாழ்வான்சொன்னசொற்களைக்கேட்ட பிராட்டியாரானவர்,ராக்ஷசகுல வீரனே! யான் இந்த லங்காநகரத்துக்குள் இருக்கும் தன்மை இப்படிப்பட்டதென்று, அங்குவந்திருக்கும் தேவர்களும், முனிவர்களும், கற்புடையமங்கையர்களும், கண்டுணரும்படி இதுவேபிரகாரம் யான்வருவேனே

யாகுல் அது எனக்குப் பெருமை யுடையதாயிருக்கும். அப்படியல்லாமல் யான்அலங்காரஞ் செய்துகொண்டு வருவேனே ஆகில் பெருமையல்லஎன்று அருளிச்செய்தார். அது கேட்டராக்ஷசகுலராஜன், பிராட்டியாரைநோக்கி எம்முடையதாயே? தேவரீர் அலங்காரஞ் செய்துகொண்டு எழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தது யானே சொல்லிய தல்ல நீலரத்தினமலைபோன்ற திருத்தோள்களையுடைய ஸ்ரீரகுகுலோத்தமருடைய அருளப்பாடாகும் என்று சொன்னார். ஆனால் அப்படியே அலங்காரஞ் செய்துகொள்ளக்கடவேனென்று சம்மதித்தார். உடனே தேவர்களுடைய உத்தரவினுல் சுவர்க்கலோகத்திலிருந்து திலோத்தமை முதலிய தேவதாஸ்திரீகள் தாயாரை அலங்காரஞ் செய்யும்படிவந்து சேர்ந்தார்கள். அந்தத் திலோத்தமையும், மேநகையும், ரம்பையும், உருவசியும், மற்ற தேவதாஸ்திரீகளும், வாசனை நூட்டிய தைலமுதலிய திருமஞ்சனதிரவியங்களைச் சுமந்துகொண்டுவந்து நெருங்கிநின்று, பெண்ணிலக்கணம்விளையுங் காணியும், கற்புடைய மங்கையர்க்கு ஆபரணமும், அழகென்னும் பொன்னின் மதிப்பையறியும் உரையாணியும், திருப்பாற்கடலில் அமுதத்தோடு அவதரித்த அன்னமும், அறங்களைவளர்க்கும் தாயும், உயர்ந்தவேதமார்க்கத்தைத் திருத்தும்படி அவதாரஞ்செய்த செல்வியும் ஆகிய ஸ்ரீசீதாபிராட்டியாருடைய சடையாய்த்திரண்டுள்ள கூந்தலைச் சிக்குநீக்கி வாரி, சர்க்கரைப் பாலைவென்று அமுதத்தைப்போலப் பெருகுகின்ற சொற்களையுடைய பவளம்போன்ற வாயில் முத்துகளின்வரிசையை ஒத்த தந்தவரிசையை விளக்கி, வாசனை தைலத்தைச் சிரசிலிட்டுத் தேய்த்து, மலினமாயுள்ள திவ்விய ரத்தினத்தைச் சாணைபிடிப்பவர்போல, வேதகீதங்களை யெடுத்துப்பாடி வேதமுறைமையின்படித் திருமஞ்சனஞ்செய்து, திருமேனியை மெல்லிய சீலையால் ஈரமில்லாமல் துவட்டிக் கருவிளைமலரைப்போலச் சித்திரத்தொழிலமைந்த பட்டுவஸ்திரத்தை உடுத்து, அதன்மேல் மேகலாபரணத்தைப் பூட்டி, அழகிய பவளக்கொடிக்குப்பாலினுலாலை அப்பினுற்போலத் திருவுருவ முழுமையும் கலவைச்சந்தனம் பூசி, குங்குமச் சந்தனத்தை ஸ்தன பாரங்களின்மேல்அப்பி, சந்திரனுடைய தேவி மார்பில் தரித்துக் கொள்ளும் முத்துவடத்தையும், இந்திராணி அலங்கரித்துக் கொள்ளும் ரத்தினாங்களையும், மற்ற ஆபரணங்களையும் தக்கபடிஅணிந்து இயற்கையாய்ச் சிவந்துள்ள அதரத்துக்குச் செஞ்சாயந் தீற்றி, பிராட்டியாருடைய திருவழகைக்கண்டு பிறருடைய [illegible] வேதமந்திரங்களைச்சொல்லி [illegible] மண்பொட்டிட்டு நின்றார்கள். திலோத்தமை முதலிய ஸ்திரீகளால் அலங்கரிக்கப்பட்ட பின்பு ஸ்ரீவிபீஷணாழ்வானவர் சந்திரமண்டலத்தின் மத்தியில் மானிருந்தாற்போலச் சானகிபிராட்டியாரை விமானத்தின் மேல் எழுந்தருளச் செய்துகொண்டு, சமஸ்த தேவதாஸ்திரீகளும், ரிஷிபத்தினிமார்களும், வேதவசனங்களால் தோத்திரஞ்செய்து கொண்டு சூழ்ந்து வரவும், சகன்மாதாவினுடைய திவ்விய சேவையைக்கண்டு சேவிக்கும்படி வந்து நெருங்குகின்ற தேவர்கள் முதலானவர்களை வழிவிட்டு விலகும்படி, ராக்ஷசவீரர்கள் பொற் பிரம்புகளை எற்றி, அதட்டிக்கொண்டு முன்னே செல்லவும், தேவதேவர்களுக்கு நாயகனாகிய ஸ்ரீராகவபிரான் பக்கலில் போய்ச் சேர்ந்தார். தேவர்களும், ரிஷிகளும், வித்தியாதரர்களும், நாகர்களும், தெய்வப்பெண்களும், அருந்ததிப்பெண்களும், வித்தியாதர ஸ்திரீகளும், நாகஸ்திரீகளும், முதலிய திரிபுவனத்திலுள்ள மற்ற உத்தம புருஷர்களும், கற்புடைய ஸ்திரீகளும், பெருங்களிப் புடையவர்களாய்க் கூட்டங்கூட்டமாய் வந்து நிறைந்து மொய்த்துக்கொண்டு தேவன் தேவிகளுடையவடிவழகைச் சேவித்துப் பல்லாண்டுகூறினார்கள். இலங்கை அசோகவனத்தி லிருந்து தாயார் எழுந்தருளிய காலத்தில் சமஸ்ததேவ சமூகங்களும், மற்றவர்களும் முன்னும் பின்னும் பக்கங்களிலும் நிறைந்து, செல்லுதற்கு வழியில்லாமற் போகவே ராக்ஷச வீரர்கள், ஓட்டித் தூரத்துதலினுல் அவர்கள் கலந்தோடுவதினுல் கருங்கடலின் முழக்கம்போல ஒரு மகாகோஷம் பிறந்தது. அந்தக் கோஷத்தைக் கேட்டருளிய அறக்கடவுளாகிய ஸ்ரீராமநாதரானவர் முன்னே வழியி லுண்டாகிய பேரோசையானது யாதென்று, அன்றலர்ந்த செந்தாமரை மலர்போன்ற திருமுகமண்டலத்தில் கோபம் தோன்றும்படியாகப் பார்த்துக் கேட்டருளினுர். உடனே சமீபத்தில் இருந்த முனிவர்கள், சர்வலோகசரணியா! ஸ்ரீராமபத்திரா! ஸ்ரீ சீதாபதி! அந்தக் கோஷமானது வேறொன்று மல்ல. பிராட்டியார் எழுந்தருளுவதற்கே வழியில்லாமல் தேவர்கள் முதலானவர்கள் அடர்ந்து மொய்த்துவந்த காரணத்தினுல், ஸ்ரீவிபீஷணாழ்வானுடைய ஆக்ஞ

லையால் ராக்ஷசகுலவீரர்கள் அவர்களை அதட்டி வழியிலிருக்கும்படிச் செய்தினால் அவர்கள் கலைந்தோடும்போது உண்டான கோஷம் என்றார்கள். மௌனசீலர்கள் சொன்னதையெல்லாம் திருச்செவி சார்த்திக் கேட்டருளிய ஸ்ரீகோதண்டதீக்ஷாகுருவானவர், மிகவும்பவளம்போன்ற அதரம் துடிக்கும்படி நகைத்து, வேதசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த விபீஷணா! சாதுசஜ்ஜனர்களாகிய தேவர் முதலானவர்களை அதட்டித் துரத்தி அவர்கள் பக்கலில் ஏன் அபசாரப்பட்டு நீதியல்லாததைச் செய்கிறாய். எம்மைக்காணவேண்டுமென்பது மாத்திரமேயல்ல. உயுத்தகளத்தைக்காணவேண்டுமென்னும் ஆசையாலும் வந்து நெருங்குகின்ற திக்குப்பாலகர்களையும், தேவர்களையும் கடிந்து துரத்தும்படி யார் உனக்குச்சொன்னார். மழுவாயுதத்தைத் தாங்கிய சிவமூர்த்தி, உபேந்திரனாகிய விஷ்ணுமூர்த்தி, பிர்மமூர்த்தி இவர்களும், இவர்களுடைய பத்தினிமார்களாகிய பார்வதிதேவி, மகாலக்ஷ்மிதேவி, சரசுவதிதேவி, இவர்களும் இல்லாமல் உலகத்திலுள்ளவர்களுக்கு ஒரு காரியமும் நடப்பதுண்டோ! அளவிடற்கரிய தேவர்கள் தங்களுடைய உருவத்தை மறைத்துக்கொண்டு சேர்ந்து படுகளத்தின் பெருமையைப் பார்க்கவந்திருப்பார்களே. அவர்களை அதட்டித் துரத்துவார்களு முண்டோ! அந்தத் தேவர்களே அப்படி உன்னால் துரத்தப்படுவார்களானால் மற்றவர்கள் என்னபாடுபட்டிருக்கமாட்டார்கள். ராக்ஷசகுல வீரசிகாமணியே சாதுஜனங்களைத் தடைசெய்து ஓட்டுவது உனக்கு அடுத்ததன்று என்று அருளிச்செய்தனர். அப்படி வேதநாயகன் திருவுளங்கண்ணி அருளச்செய்ததைக்கேட்ட பரிசுத்த குணவானாகிய விபீஷணாழ்வானானவர், அதிதுக்காக்கிராந்தராயிருந்தார். அருந்ததிக்குத் திலகம்போன்ற சானகிபிராட்டியார், கழுகும் பருந்தும் பேயும்பசிப்பிணிதீர்ந்து களிக்கும்படிராக்ஷசர்களுடைய உடல்களைச் சின்னபின்னப்படுத்திய வீரகோதண்டச் செல்வனுடைய திருமேனியின் கட்டழகினலங்காரத்தைப் பேரவாவோடு கண்டு சேவித்துத் திருவுளமுங் கண்களும் களிக்கப் பார்த்து, அப்போது தமக்குள் அடங்காத பெருங்களிப்பால், என்னுடைய கற்பினொழுக்கத்தை யாவரும் அறியச்செய்து, என்னாயகனுடைய வீரத் தன்மையைப் பிரங்கடப்படுத்தி, என் குலத்தினுடைய பெருமையை நிலைபெறச்செய்து, இந்த வுலகத்தில் வியர்த்தமாய் நான் பிராணத் தியாகஞ்செய்து கொள்ளாதபடி உயிர்பிழைத்திருக்கச் செய்த அநுமானுக்கு நான் சொன்ன சிரஞ்சீவித்துவத்தை என்னுடைய கற்பானது நிலைபெறச்செய்யுமே அல்லாமல் செய்யாமற்போகாதன்றேயென்று சொல்லினர். அப்படிச்சொல்லி, ராக்ஷசர்களுடைய ஊரில் தங்கியிருந்த குற்றமுடைய எனக்கு அடையவேண்டுவது இனி வேறே என்ன இருக்கிறதென்று பூரிப்புடையவராயிருந்த சீதாபிராட்டியார், தமக்கெதிரே பச்சிலைபோன்ற திருமேனியும், பவளம்போன்ற வாயுமுடையவராய்த் திருக்கரத்தில் ஸ்ரீகோதண்டத்தைத் தாங்கிக்கொண்டிருந்த ஸ்ரீரகுநாயகனைக் கண்களாற் கண்டு, உயிரை இழந்த உடலானது அந்தஉயிரைக்கண்டு அடையுந் தன்மைபோலத் தம்முடைய திருமுகமண்டலத்தை நாயகருக்குக் காட்டும்படி, தேவஸ்திரீகள் சூழ்ந்துவர எழுந்தருளிவந்த விமானத்தைவிட்டுப் பூமியிலிறங்கி ஸ்ரீ காகுஸ்தகுல திலகருடைய திருமேனியையும் அவருடைய ஸ்ரீகோதண்ட பராக்கிரமத்தையும் கண்டு சேவிக்கப் பெற்றேன். இனி இந்தச்சன்மநாக்கத்தை ஒழித்தாலும், வேறு சன்மத்தை அடைந்தாலும், அந்தந்தக் காலத்தில் என்னாயகனைக்கற்போடுகூடி வணங்கினாலும் நன்று. அல்லாது அவனையே முழுதும் மறந்தாலும் நன்று. இந்த ஸ்ரீசர்வலோகசரணியருடைய திவ்வியமங்கள விக்கிரகத்தின் வடிவழகை என் கண்களாரக்காணாமல் ஒருவேளை தேகவியோகம் நேரிடுமோஎன்று சர்வதா துக்கித்துக்கொண்டிருந்தேன். ஆ! ஆ! என் பாக்கியவசத்தால் இந்த ஸ்ரீமானுக்குச் சமீபத்திலேவந்து சேவிக்கவும் பெற்றேனென்று முன் கொண்டிருந்த ஏக்கம்நீங்கி ஸ்ரீசர்வசுவாமியினுடைய சீர்பாதங்களுக்குத் தண்டன் சமர்ப்பித்து நின்றார். பின்பு, கற்பென்கின்ற தருமத்துக்கு அரசியும், பிர்மருத்திரேந்திராதிகளுடைய தேவிமார்களது கழுத்தில் திருவென்னும் ஆபரணமாயெழுந்தருளியிருந்து ரட்சிப்பவரும், எல்லா அழகுகளுக்கும் அழகு கொடுப்பவரும், மகாகீர்த்தி வாழ்தற்கு இருப்பிடமானவரும், தம்மிடத்திலேயே அன்புவைத்த எல்லாவுயிர்களையும் இரட்சித்தருளுகின்ற தர்மஸ்வரூபியும், ஆகிய ஸ்ரீசனகமகாராஜனுடைய அருந்தவப்புத்திரிகா ரத்தினத்தை, ஸ்ரீ புருஷோத்தமராகிய ஸ்ரீராகவபிரானானவர் திருக்கண்களால் கடாக்ஷித்தருளினார். அப்படிக் கடாக்ஷித்த ஸ்ரீதசராத்மஜரானவர், தம்மைக்காணப்பெற்ற பாக்கியத்தாலுண்டாகிய ஆநந்தத்தால் இரண்டு

நேத்திரங்களி னின்றும் தாரைதாரையாய் ஸ்தன பாரங்களின்மேல் நீர்சொரியும்படி வனக்கஞ்செய்த கற்பின் வாழ்வாகிய சகந்மாதாவே, சர்ப்பத்தைப் போலச் சீறிப்பார்த்து, ஓ சனகராஜ புத்திரியே ? அவைதிக மார்க்கானுசாரியாகிய ராக்ஷசனுடைய நகரத்தில் இருபதியத்தம் வாசஞ்செய்துகொண் டிருந்தாய் அங்கிருந்துகொண்டு அறுசுவை யுண்டிகளையும் சிறிதும் கவலையென்பதே இல்லாமல் உண்டுகொண் டிருந்தாய். இப்படியெல்லாம் நடந்தபடியால் உன்னுடைய கற்பின் னிலைமை கெட்டுப்போன தன்றோ ? அப்படிக் கெட்டுப்போயும் இன்னம் உயிரோடு பிழைத்திருக்கின்றாய். இந்தப் பிரகாரம் பல குற்றங்களையும் செய்திருந்தும் சிறிதும் அச்சமில்லாமல் திரும்பிவந்தது என்னகாரணம்? உன்னைநான் இச்சிப்பே னென்று நினைத்தோ ? கடலைத்தூர்த்து அணைகட்டி அதன் வழியாக இலங்காநகரத்துக்குள்ளே பிரவேசித்து ராக்ஷசப்பூண்டறும்படி என்பகைவனாகிய ராவணனைக்கொலைசெய்தது, ஓ மைதிலியே ! உன்னைச் சிறையிலிருந்து மீட்பிக்கும்படியென்று நினைத்துக்கொண்டாயோ ? அந்த நினைப்புக்கொள்ளாதே. உன்னாலே எனக்கு நேரிட்ட அவமானத்தைப் போக்கிக் கொள்ள வேண்டுமென்று செய்தேன். என்னிடத்தில் லேசமும் அன்பில்லாத சனகராஜன் பெண்ணே! ராக்ஷசர்களுக்கு அமிர்தத்தைப் பார்க்கிலும் ருசிக்கின்ற மாம்சத்தையும், மதுவையும், போஜமான மட்டும் இதுபரியந்தம் உண்டாயே. சிலநாளாவது உன்னோடு உறவாடிக்கொண் டிருந்த எங்களுக்கு அந்த மதுமாமிச விருந்து செய்விக்கலாமென்று விரும்பி வந்தாயோ ? அப்படி விருந்துசெய்ய அழைத்துக் கொண்டு போவதாயிருந்தால், என் நாணத்தோடு தலைகுனிந்துகொண்டு கண்ணீர்சொரிகிறாய். உயர்ந்த ஆபரணங்களில் பதித்த ரத்தினத்தினது ஒளியைப்போல உத்தமப்பெண்ணுக் குரிய நற்குண நற்செய்கைகள் நீநல்லஇராசவமிசத்திலே பிறந்தவளல்ல ஆகையால்உன்னிடத்தில் கிடைக்க மாட்டாதுகள். ஒரு புழுவைப்போலப் பூமியில் உற்பத்தியானாய் அதற்குத் தக்கபடி துர்க்குண துர்ச்செய்கைகளைக் காட்டினாய். ஆ! சீதா ? சூரிய குலமானது அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, என்னும் பெண்ணுக்குரிய குணங்களும், இழிதுணையில்லாமையும், குற்றமில்லாத குடிப்பிறப்பும், கற்பென்கின்ற திடமும், நல்லொழுக்கமும், புருஷனே தெய்வமெனக்கொள்ளும் நிச்சயஞானமும், கீர்த்தியும், பொய்சொல்லாமையும் ஆகிய குணங்கள் குறைவின்றி நிறைந்தஸ்திரீகளையுடைத்தாயிருக்கிறதென்னும் மகாகீர்த்தியை அடைந்திருந்தது. ஒருபெண்ணாகிய நீ அந்தச் சூரியவமிசத்தோடு சம்பந்தப்பட்டபடியால், ஈகையென்பதில்லாத அரசனுடைய கீர்த்தியைப்போல அந்தவமிசத்தின் கீர்த்தி முழுமையும் நாசமாய்விட்டதன்றோ? ஆ!சானகி? குலஸ்திரீகளா யுள்ளவர்கள், நாயகனை நீங்கியிருக்கிறகாலத்தில் பஞ்சேந்திரியங்களையும் அடக்கி நல்லொழுக்கத்தையே உறுதியாகக்கொண்டு, தலைமயிரைச் சிக்கற வாரி முடியாமல் சடையாகச்செய்வித்து, கற்பென்னும் ஒருபெருந்தவத்தைச் செய்துகொண் டிருப்பர்கள். அந்தப்பெருந்தவத்துக்கு ஒரு பழிநேரிடுவதாயிருந்தால் தங்கள் பிராணனை விட்டொழிந்து அப்பழியைவாராமல் தடுத்துவிடுவார்கள் இந்தநற்குணங்களில் ஒன்றையாவது நான் உன்னிடத்தில் காணவில்லையே. நான் இனி உனக்கென்ன சொல்வது. உன்னுடைய நடக்கையானது என்னுடைய நெஞ்சைப்பிளக்கின்றதே. நீநடந்தநடக்கை குலத்துக்குத்தக்கது அல்லவென்று உனக்குத் தெரிந்திருப்பதினால் உனக்கு இஷ்டமானமார்க்கமே நீ செல்லக்கடவாய் என்று சொன்னார். மெய்ஞ்ஞானமுடையயோகிகளுடைய இருதயத்தில் வசிப்பவராகிய ஸ்ரீரகுராமரானவர், ஸ்ரீசீதாபிராட்டியாருடைய கற்பினிலைமையை யாவருங் கண்டுணரும்படிச் செய்ய வேண்டுமென்னும் கருத்தால் இப்படி நிர்த்தாக்ஷிணியமாகச் சொன்னதைக் கேட்டுக்கொண்டிருந்த பிரமன்முதலியதேவர்களும், முனிவர்களும், அவர்களுடையமனைவிமார்களும், ராக்ஷசர்களெல்லோரும், வானரர்களும், மற்றயாவர்களும், வாயைத்திறந்து கதறி அழுதார்கள். இவ்விருவர்களும் கருணையாலும் இச்சையாலும்கொண்ட மானுஷாவதாரத்துக்கேற்கச் சகலவைதிகாதி ஒழுக்கங்களை நடந்து காட்டுகின்றவர்க ளாகையால், சர்வசுவாமியானவரைக் காணாமல் நெஞ்சம் புண்பட்டிருந்த சானகிபிராட்டியாருக்கு அவர் சொன்னசொல் புண்ணில்கோலிட்டாற்போல அதிகதுக்கத்தை உண்டாக்கினபடியால் தம்முடைய இரண்டு விசாலநேத்திரங்களினின்றும் ரத்தக்கண்ணீ ரொழுகும்படியாய்ப் பூமியை நோக்கிக்கொண்டு தம்மைமுழுதும் மறந்துபோய் பெருமூச்சு விடுகின்றவராயும், பாலைவனத்திலிருந்து சூரியகிரண வெப்பத்தால் தபிக்கப்பட்டு நீருண்ணும் ஆசை

யால்வருந்தி மரணாவஸ்தையடைந்த மானுன் நல்ல நீர்நிறைந்த தடாகத்தைக்கண்டு அதன்சமீபத்திற்போ புண்ணக்கூடாத சிலதடையை அடைந்தாற்போலத் தாம் குரூரர்கள் வசிக்கின்ற இலங்காநகரத்துக்குள் அதிகஷ்டத்தோடு வாசஞ்செய்து கொண்டிருந்து ஸ்ரீசுவாமியைக் காணவேண்டுமென்கிற பேராசையோடு வந்தஇடத்தில் அவருடைய நிர்த்தாட்சிணியமாகிய சொற்களைக்கேட்டு அதிதுக்கத்தை யுடையவராய், தம்முடைய நேத்திரங்களிலிருந்து பெருகாநின்ற நீரானது உலகத்தில் பெருகிஓடும்படிப்புலம்பி, இதுபரியந்தம்யாதொருநீதியொழுக்கமுமில்லாமல் இருந்து அடைந்தபேறு, இந்த மஹானுபாவருடைய திருமேனியைக்காணுதலும்,இவருடைய திருவடிகளுக்குத் தண்டன் சமர்ப்பித்தலுமாம். இந்தஅரியபேறும்பெற்றேன்.நான்செய்துவந்த கற்பின்தவமும் நல்லபயனையேதந்தது என்று தமக்குள்ளே தீர்மானித்துக்கொண்டு, ஸ்ரீசர்வசுவாமியைப்பார்த்து எல்லோரினும்உயர்ந்த பரம்பரனே! இந்தஅநுமானும் ஸ்ரீவிபீஷிணாழ்வானும் என்னிடத்தில் வந்து ஸ்ரீரகுநாயகரானவர் உம்மைவரும்படி ஆக்கியாபித்தாரென்று சொல்லி அழைத்துவந்தார்கள். யான் இதுவரையும் அநுபவஞ்செய்து கொண்டிருந்த என்னுடைய துக்கநிலையை தேவரீர்பக்கலில் ஸ்ரீஆஞ்சநேயர்சொன்னது மில்லையோ? அவர் சொல்லாமற் போவாரோ யாகில் அவரைத் தூதுவரென்று சொல்லவுங் கூடுமோ? இத்தனைக்காலமாக நான் பிரயாசத்தோடுசெய்துவந்த எப்படிப்பட்ட தவமும்-நன்மையும் - கற்பும் - ஆகிய அவற்றையெல்லாம், நீர் அறியாமையால் அவை வியர்த்தமாய்ப் போனதுகளன்றோ? எல்லோருக்கும் கண்போல விளங்குகின்ற ஸ்ரீபுருஷோத்தமரானவர், என்னை நீ தகாதவளென்று சொன்னபோதே உலகத்திலுள்ளவர்கள் என்னைக் கற்புடையவ ளென்று சொல்லுவார்களோ? சொல்லப்போகிறதில்லை. தாமரையிலெழுந்தருளிய பிரமதேவராலும் பேதிக்கப்படாத மனநிச்சயத்தை யுடையவளு மல்லாதவளானேனென்றுசொல்லி, இனிஇந்த உத்தமருடைய திருவுளத்தில் கொண்ட சமுசயத்தைநீக்க யாரால்முடியும். பொதுவாய்நிற்கின்ற தருமதேவதையும் இவரைப்போலவே அறியாமற்போகுமோ? யாதோ தெரிந்திலேன். பிரமனும் - சிவனும் - உபேந்திரனுமெழுந்தருளியிருக்கும் தருமமூர்த்தியாகிய விஷ்ணுவும், உள்ளங்கை நெல்லிக்கனிபோல எல்லாவற்றையும் அறிந்துகொள்பவர்களாயிருந்தும் மங்கையருடைய மனத்திலுள்ளதை இன்னதென்று அறிந்துகொள்ளமுடியுமோ? முடியாது. ஆகையால் இனி அந்நியர் நம்பும்படியோ என்னுடைய குற்றமற்ற கற்பினைச் சொல்லிக்காட்டுவேன் என்று தமக்குள்ளே யோசித்துக்கொண்டு, வேதநாயகனே நீர் விரும்பாத இந்தத்தேகத்தை விடுவதைப்பார்க்கிலும் சிறந்தகாரியமொன்றுமில்லை.இதுவே உம்முடைய கட்டளையும், என்கடமையுமாகுமென்று சொல்லிவிட்டு இளையபெருமாளைக் கடாட்சித்து, சுமித்திராதேவியாருடைய புத்திரதீபமே! சீக்கிரத்தில் தீயைமூட்டக்கடவீரென்று ஆக்கியாபித்தனர். உடனே ஸ்ரீராமாநுஜரானவர், எல்லாவுயிர்களுக்கும் ஆதாரவாய் எழுந்தருளியிராநின்ற ஸ்ரீராமசுவாமியைத் தண்டன் சமர்ப்பித்து நின்றனர் அவரும், அப்படியேசெய்யக்கடவாயென்று கண்காட்டினர். சுவாமியினுடைய அபிமதத்தைப் பெற்றுக்கொண்ட ஸ்ரீலட்சுமணரானவர், தமதுயிர்நீங்கித் தள்ளாடும்படி மிகுந்த துன்பமுடையவராய்க் கண்களில் நீர் தாரைதாரையா யொழுகச்சென்று சாஸ்திரவிதிப்படி தீயைமூட்டினர். செந்தாமரைமலரில் வசிப்பவராகிய தெய்வங்களுக்குத் தாயானவர், அந்தத்தீக்குச்சமீபத்திற்போய் நெருங்கினமாத்திரத்தில், அதைக்கண்டு சகிக்கமாட்டாமல் சதுர்வேதங்களும் நித்தியமாகிய தருமதேவதையும், மற்றவுயிர்களும், வாயைத்திறந்து கதறி ஓலமிட்டதுகள். மூட்டியதீயை நெருங்கித் தாயாரானவர் சுற்றிவரும்போது திரிபுவனங்களிலுமுள்ள எல்லாச்சீவர்களும் தங்கள் தங்களுக்கு நேரிட்ட துன்பத்திலும் அதிகதுன்பத்தை அடைந்து நிலைகலங்கி ஓவென்று கோஷித்து அலறிஅழுது சர்வலோகேசுவரர்களுக்கும் ஈசுவரராகிய ஸ்ரீராமபத்திரரே நீர் இந்த நிர்த்தோஷிராகிய பிராட்டியார் பக்கலில் வைத்திருக்கிற பிடிவாதம் தகுதியுள்ளதன்று அழைத்தருள்வீராக என்று சொன்னார்கள். இந்திராணி - பார்வதி - சரசுவதி-மற்ற தெய்வ மகளிர்கள் யாவரும், சகத்மாதாவைக்கண்டு வாய்திறந்து கதறி அழுது கைகளால் தங்கள் கண்களை மோதியறைந்து அறைந்து துடிதுடித்தார்கள். பிரமன் - சிவன் - இந்திரன் முதலான தேவர்கள் யாவர்களும், பூமிமுழுமையும் தனது ஒருதலையில் சுமக்கின்ற ஆதிசேஷன் ஏதோ ஒரு காரணத்தால் விஷத்தைதக்கக்கினால் அந்த விஷோபத்திரவத்தால் தாங்கள் எப்படி வருத்தப்படு

ளரிகளோ? அப்படிப்பட்ட வருத்தத்தை அடைந்து தவித்தார்கள். இப்படி சமஸ்த ஜீவர்களும் தம்மைக்கண்டு மனோ துக்கிதர்களாயிருக்க ஸ்ரீசானகிப்பிராட்டியார், அக்கினிபகவானே! திரிகரணங்களாலும் எதொரு குற்றத்தையும் அடைந்திருப்பேனே ஆனால் நீ அதிகோபத்தை யுடையவனாய் என்னைச் சுட்டுச் சாம்பலாக்கக் கடவாயென்று சொல்லி, ஸ்ரீபுருஷோத்தமனாகிய ஸ்ரீரகுநாயகனை நோக்கி, நின்றவிடத்திலேதானே இருந்து மனப்பூர்வகமான தண்டன் சமர்ப்பித்துத் தம்முடைய சுவஸ்தானமாகிய தாமரைமலரில் எழுந்தருளுவதுபோல அந்தத் தீயினுக்குள் நடுவே குதித்தார். அப்படிக் குதித்தவுடனே அவருடைய தெய்வத்தன்மையுள்ள கற்பாகிய நெருப்பினால் அந்தநெருப்புத் தகிக்கப்பட்டது. உடனே தீயின்கடவுளானவர், தம்மிலேகுதித்த சர்வ சகந்மாதாவை தமது கரங்களினாலே சுமந்தெழுந்து, ஓ! தீனபந்து, தேவதேவோத்தமா, ஸ்ரீகாகுஸ்தகுல நாயகா என்னுடைய தேகமுழுமையும் எரிகின்றதே என்று கதறி மற்ற இரண்டுகைகளையுங் குவித்துக் கும்பிட்டுக்கொண்டு, வேதாந்தத்தின்முடிவில் பிரதிபாதிக்கப்பட்ட பரவஸ்துவாயுள்ள ஸ்ரீராகவபிரானுடைய திருவடிகளுக்குச் சமீபத்திலே வந்துநின்றார். முன்னேசுவாமியுடனேஊடிக்கொண்டதினால் உண்டாகிய வேர்வையும்உலர்ந்துபோகவில்லை அளகபாரத்திலும் திருக்கழுத்திலும் கைகளிலும் தரித்திருந்த பூமாலைகளும் நீரில்தோய்த் தெடுத்தாற்போல விளங்கின. நிலைகலங்கிய சமஸ்தாத்துமாக்களும் தங்கள்தங்கள் நிலையில்நின்றன. அருந்ததிமுதலிய கற்புடையஸ்திரீகள்யாவர்களும் நாணமும், ஒழுக்கமும், இல்லாதவர்களாய்அந்தமார்க்கத்தில் நின்று ஆநந்தக்கூத்தாடினார்கள். அக்கினிபகவானும், உம்முடைய தேவியாரது தெய்வத்தன்மையுள்ள கற்புத்தீயினால், ஒன்றுமறிலோசியாமல் என்னுடைய பலத்தை க்ஷீணிக்கச் செய்தீர். சுத்தமானயாகாக்கினி ஸ்வரூபராகிய தேவரீர்எம்மேல்என்ன கோபத்தினால் இப்படி என்னைச்சுட்டெரித்தீரென்றுபலபலவிதமாய்முறையிட்டனர். அப்படி முறையிட்டுக்கொண்டிருந்த அக்கினிபகவானைநோக்கி, ஸ்ரீராமநாதரானவர், நீர்யார்? அக்கினியிலிருந்தெழுந்து வந்து எங்களிடத்தில் நீர்பேசுவதென்ன? இந்தத்தீயொழுக்கமுடைய ஒருத்தியைச் சுட்டெரிக்காமல்சும்மாவிட்டீர். யார்சொல்லைக் கேட்டுக்கொண்டு இப்படிச்செய்தீர். இவற்றையெல்லாம்சொல்லக்கேட்டருளுங்கேட்டருளினார் ஸ்ரீபராத்பரமாவாகிய ஸ்ரீராமச்சந்திரனே! நானே அக்கினி தேவன். இந்த உலகமாதாவினுடைய கற்பென்கிற அதிதீக்ஷணியமாகிய தீயானது, என்னைச்சுட அதைப்பொறுக்கமாட்டாமையால் உம்மைச் சரணமடைந்தேனென்னும் என்னுடைய முறைப்பாட்டைக் கேட்டருளியும், யாவருக்கும் சாக்ஷிபூதனாய் நிற்கின்ற நீர், என் சமுசயப்படுகிறீர். வாளாயுத உயுத்தத்தில் மிகவும் கீர்த்திபெற்ற பெருமையாகிய தோள்களையுடைய ஸ்ரீகோதண்ட தீக்ஷாகுருவே! குலஸ்திரீகளை விவாகஞ்செய்வதும், அவர்கள் இல்லறத்தினின்றும் விலகுவார்களேயானால் சத்தியபூர்வகமாய்க் கேட்பதும், மற்ற பல பொருள்களிடத்தில் சந்தேகந்தோன்றினால் அந்தச் சந்தேகத்தை நிவர்த்திசெய்து கொள்வதும், ஆகிய இவையெல்லாம் என்னிடத்திலே தான் செய்துகொள்ள வேண்டும். இது நான் சொல்வதன்று. நித்தியமாயும், அபௌருஷேயமாயுமிருக்கின்ற வேதங்களே சொல்லுகின்றன. எவர்களாவது ஐயப்பட்ட பொருள்களை என்னிடத்திலிடுவார்களேயாகில் அதிசீக்கிரமாக அந்த ஐயப்பாட்டை நீக்கி உள்ளங்கை நெல்லிக்கனிபோல அப்பொருள்களினது உண்மை நிலையைக் காட்டுகின்றஎன்னுடைய சத்தியவசனத்தைக் கேட்டருளியும் சந்தேகிக்கின்றீரோ ஒருகாலத்திலும் அசத்தியம் பேசியறியாத ஆஞ்சநேயருடைய சொற்களையும்உண்மையென்றுகொள்ளீர் இதென்ன ஆச்சரியம். சர்வலோக மாதாவாகிய இந்தச் சானகிபிராட்டியார் தீயில்குதித்தபோது சமஸ்த தேவர்களும், திரிலோகவாசிகளும், மற்றசராசரங்களும் அதி துக்கத்தோடு தங்கள் கண்களை மோதியறைந்துகொண்டு ஆ!ஆ! என்று அலறி முறையிட்டதையும் கேட்டீரில்லை. தர்மஸ்தாபனார்த்தமாகத் திருவவதரித்த மஹாபிரபுவே! தருமத்தைநீக்கித் தருமத்துக்கு அந்நியாயமாகிய இந்த அதர்மகுணத்தை எங்கிருந்து கொண்டீரோ? பதிவிரதாஸ்திரீகளுடைய சிரோபூஷணமாயுள்ள இந்தச் சீதாபிராட்டியார், சித்தத் திருவுளத்தில் சீறுவாரேயானால், இனி மேகங்கள் வருஷிப் வருஷிக்குமோ வருஷிக்க மாட்டாது. பூமி பிளந்துபோகுமே யல்லாமல் சராசரப் பொருள்களைச் சுமந்துகொண்டும் இருக்குமோ? தருமமும் தன்வழியில் செல்லுமோ? உலகவாசிகளாகிய தேவர்கள் முதலானவர்கள் உயிரோடு பிழைத்திருப்பார்களோ? இவர் திருவுளத்தில் சீற்றங்கொண்டு சபிப்பாரேயானால், மூலதாமரையிலெழுந்தருளிய

பிரஜாபதியாகியபிமமரும் இறந்துபோவதல் லாமல் உயிர்பிழைத்திருப்பாரோ? என்று இன்னம் பலபலவிதமாக எடுத்துச்சொல்லித் துதித்தனர். அசத்தியமாகிய பொருள்களை யெல்லாம்சுட்டெரித்துச் சாம்பலாய்ச்செய் யத்தக்க அக்கினிபகவானுனவர், தேவசமூஹ ங்களும் மற்ற திரிலோகத்தவர்களும், குதித் துக் குதித்துநின்று நடனஞ்செய்யத் தாம், மங்கையர்க்கரசியாகிய பிராட்டியாரை ஸ்ரீப கவான்பக்கலில் கொண்டுபோய் விடுத்தனர். இப்படி அக்கினிபகவானுனவர், சொல்லிய தைக்கேட்டருளிய கருணைசலதியாகிய ஸ்ரீரா கவபிரானுனவர், அக்கினிபகவானேசர்வலோ கங்களுக்கும் அழிவில்லாத சாக்ஷியா யிருக்கி ன்ற நீர், இந்தச் சானகியினிடத்தில் இழிந்த குணங்களில்லை. சிறிதுநிந்தையும் கிடையாது என்று சொல்லுவதினால் இனிப் பழிப்பில் லாதவளே. யானும்அங்கிகரிப்பவனும்ஆவாள் என்று அருளிச்செய்தனர். அது சமயத்தில் இந்திராதிதேவர்கள் சதுர்முகராகிய பிர மதேவனைப்பார்த்து, தேவரீர் மூலப்பிரகிரு தியின் காரியமாய் எல்லாச் சீவர்களுக்கும் பொதுவாய்நின்று அவைகளை மயக்குகின்ற மாயையானது சிறிதும் அணுகாமல் உண்மை அறிவு ஆனந்தமே திருவுருவமாக வுடைய ஸ்ரீராமபத்திரருக்கு, அவருடைய யதார்த்த நிலையில் நீர் அறிந்தவற்றுள்ளே சிறிதை எடுத் துச்சொல்லும். அவரோ தம்முடைய யதார் த்த ஸ்திதி அறியாதவர்போலக் காணப்படுகி றுரென்றுசொல்லப் பிரமதேவரானவர்ஸ்ரீரா மசுவாமிக் கெதிரேநின்று துதியாக உண்மை யை வெளிப்படுத்தத் தலைப்பட்டார்.

## பிர்மாஸ்துதி,

## கவி.

மன்னர்தொல் குலத்தவ ரினத்துணை யொ ருமனிசன், என்னவுன்னலை யுன்னைநீ யிராம கேளிதனைச், சொன்னநான்மறை துணிவி னிற் றுணிந்தமெய்த் துணிவு, நின்னலாதில் லை நின்னின்வே றுள்ளலை நெடியோய்... (க)

பகுதியென்றுள தியாதினும் பழையது ப யந்த, விகுதியால்வந்த விளைவுமற் றதற்குமே னின்ற, புகுதியாவர்க்கு மரியவப் புருடனு நீயிம், மிகுதியுன்பெரு மாயையி னுல்வந்த விக்கம்............................(உ)

முன்புபின்பிரு புடையெனுங் குணிப்பரு முறைமைத், தன்பெருந்தன்மை தான்றெரி மறைகளின் றலைகள், மன்பெரும்பர மார்த்த மெமன் றுரைக்கின்ற மாற்றம், அன்பினில்லா யல் லான்மற்றிங் கியாரையு மறையா... (ங)

எனக்குமெண்வகை யுருவற்கு மிமையவர் க் கிறைவன், றனக்கும்பல்பெரு முனிவர்க்கு முயிருடன் றழீஇய, அனைத்திறுக்குநீ யேபர மென்பதை யறிந்தார், வினைத்துவக்குடை வீட்டருந் தளைநின்று மீள்வார்...........(ச)

என்னைத்தான்முத லாகிய வுருவங்க ளை வையும், முன்னைத்தாய்தந்தை யெனும்பெரு மாயையின் மூழ்கித், தன்னைத்தாமறி யாமை யிற் சலிப்பவச் சலந்தீர்ந், துன்னைத்தானை யென் றுணர்வது முத்திவித் தொழிந்த...(ரு)

ஐயஞ்சாகிய தத்துவந் தெரிந்தறிந் தவற் றின், மெய்யெஞ்சாவகை மேனின்ற நினக்கு மேல் யாரோ, பொய்யெஞ்சாவில தென்னு மீ தருமறை புகலும், வையஞ்சான்றினிச் சா ன்றுக்குஞ் சான்றிலை வழக்கால்..........(சு)

அளவையாலளந் தாமன்றென் றறிவுறு ம மைதி, உளவையாவையு முனக்கில்லை யுபநிட த் தனது, களவையாய்ந்துறத் தெரிந்திடு தாயினுங் கண்ணல், துளவையாய்முடி யாயு ளை நீயெனத் துணியும்..........................(எ)

சரணமென்றுள வுன்னைவந் தறிவுகா ணுமே அரணமல்லவர்க் கிவைகடந் தறிவரி தாக, மர ணந்தோற்றமென் றிவற்றிடை மயங்குப வவ ற்றுன், சரணமல்லதோர் சரணில்லை யன்னு வை தவிர்ப்பான்..........................(அ)

தோற்றமென்பதொன் றுனக்கில்லை நின்க ணே தோற்றும், ஆற்றல்சான்முதற் பகுதிமற் றதனுளாம் பண்பால், காற்றுமுன்னுடைப் பூதங்க ளவைசென்று கடைக்கால், விற்றுவீற் றுற்று வீவுறு நீயென்றும் விளியாய்......(கூ)

மின்னைக்காட்டுதல் போல்வந்து விளியுமே ய் யுலகந், தன்னைக்காட்டவுந் தருமத்தை நா ட்டவுந் தனியே, என்னைக்காட்டுதி யீசனைக் காட்டுதி யெமக்கு, முன்னைக்காட்டிலை யொ ளிக்கினு மிலைமறை யுரையால்...........(௰)

என்னுருக்கோடிவ் வுலகினை யீனுதி யிடை யே, உன்னுருக்கொடு புகுந்தறின் றோம்புதி யுமையோன், றன்னுருக்கொடு துடைத்திமற்

திருதனி யருக்கன், முன்னுருக்கொடு பகல்
செயுந் தரத்தது முதலோய்.. ......... (௧௧)

திருக்குவாஷ்மலி செல்வத்துச் செருக்கு
வேந் திறத்தத், தருக்குமாய்வுறத் தானவ ரர
க்கர் வெஞ்சமரில், இரிக்வாவிறெநத் தனை
ப்படில் புலயா மியையாக், கருக்குளாய்வந்
து தோற்றுதி யிங்கிது கடனே......... (௧௨)

ஓங்காரப்பொரு டேருவோர் தாமுனினை
யுணர்வோர், ஓங்காரப்பொரு ளென்றுணர்ந்
திருவினை யுருப்போர், ஓங்காரப்பொரு ளா
மலிறென் றாழிசென் றுறும், ஓங்காரப்பொ
ரு ளேபொரு ளெங்கலா வரவோர்... (௧௩)

## வசனம்.

எங்களுடைய துக்கநிவாரணார்த்தமாகத் தி
ருவவதாரஞ் செய்த வரபாலன மூர்த்தியாகி
ய ஸ்ரீராமப்பிரபுவே ? அடியேன் சொல்வ
தைக் கேட்டருள்விராக. பழைமை யாகிய
சூரியவம்சஸ்தர்களில் பிறந்த ஒருமனிதனாக
உம்மை நினைத்துக் கொள்ளாதேயும். சமஸ்
த அண்டங்களும், அவற்றுள் தங்கிய எங்களை
யுள்ளிட்ட சராசரப்பொருள்க ளெல்லாமும்,
உம்முடைய சங்கல்ப லேச மாத்திரத்தால்
தோன்றி உம்முடைய கருணையில் ஒதுங்கி நி
ற்கின்றன. ஆகையால் இந்தச் சமஸ்த பொ
ருள்களும் உம்மை யல்லாமல் இல்லை. நீரோ
அந்நியமாய் நினைத்தருள வேண்டாம். மூல
ப்பிரகிருதியென்று அநாதியாக தேவரீருடை
ய சந்நிதானத்தி லொன்று உண்டு, அதிலே நி
ன்றும் சப்தஸ்பரிசரூப ரசகந்தங்களைந்தும்
அவற்றிலேதோன்றிய பிருதிவி, அப்பு, தேயு,
வாயு, ஆகாயமென்னும் பூதங்களைந்தும், அவ
ற்றில் கூறுகளாகிய மெய், வாய், கண், மூக்
கு, செவி, என்னும் ஞானேந்திரிய மைந்து
ம், வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம்,
என்னும் கன்மேந்திரியங்க ளைந்தும், ஆகிய
வேறுபாடாக வந்த விரிவும், இவற்றிற்கு மே
லே நின்ற புருஷனும், அவன் தெரிந்து கொ
ள்வதற்குக் காரணமாகிய, மான், அகங்காரம்,
மனம், என்றும் இவையும், தேவரீருடைய ஆ
சிரயத்தில் நிற்பனவைகளல்லவோ ? இந்த விரி
வெல்லாம் உம்முடைய மாயாசக்தியால் விரி
ந்தனவேயாம். தோற்றமும், ஒடுக்கமும், அ
ளவுமில்லாமலிருக்கிற தம்முடைய பெருமை
யிரால் அறியப்படாமல் தாமே அறியத்தக்
க வேதசிரசக்கள், காரிய வஸ்துக்களாகிய எங்
களுக்குமேல் ஒருபரமாத்துமாவுண்டென்று
சொல்லும். அந்தப்பரமாத்துமாயாமெனின்ன
ங்களிடத்தில் கருணையுள்ள நீர்தாமென்றுசொ
ல்லுகின்றனவே அல்லாமல் இங்கேவந்திருக்கி
றபிர்மருத்திரேந்திராதிகளாகியஎங்களிலொரு
வனையும் சொல்லவில்லையே பிரமனாகியஎனக்
கும்சிவனுக்கும் இந்திரனுக்கும்பலபிர்மரிஷி
களுக்கும், மற்ற சிவராசிக ளெல்லார்க்கும்,
நீரே முதற்கடவுளென்று உண்மையறிந்து நி
ட்சித்தர்களாய்த் தேவதாந்தரங்களைப் பஜிக்
காமல் உம்மையேஉபாசிப்பவர்கள், நிவர்த்தி
செய்யக்கூடாதஇருவினைகளாகிய பாசத்தளை
யை நீங்கி முத்தியுலகத்தை அடைவார்கள்.
யான்முதலாகிய எல்லாச்சேதனர்களும், தாய்
தந்தைமனையாள் புத்திரர் தனம் இவர்கள்மே
ல் வைத்த ஆசையாகிய கடலில் அழுந்தி, தங்
களுக்குச்சுவாமியாகிய உமக்குச்சொந்தமென்
கிற உண்மைஞான மில்லாமையால் அந்தச்ச
னன சமுத்திரத்திலேயே கிடந்து துக்கங்க
ளாகிய மகரமச்சங்களால் கவ்வப்பட்டு நடுங்
குவார்கள். தேவரீருடைய நிர்ஹேதுககிருபை
யால் சிலசேதனர்கள், உம்மையே சுவாமியெ
ன்றும், உமக்குத் தாங்கள் சேஷபூதர்க ளென்
றும், உண்மைஞானம் பிறந்து பிறவித் துன்
பங்களை யொழித்து முத்தியுலகத்துக்கு வித்
தைப்போ லாவார்கள். இருபத்தைந்தாகிய
தத்துவங்களையும் ஐயமறத்தெரிந்தால்யதார்த்
தமானவகையால்அத்தத்துவங்களுக்குமேலே
நீருண்டு அப்படிநின்ற உமக்குமேல்யாருண்டு ஒ
ருவருமில்லையே. இப்படியேசதுர்வேதங்களு
ம் உண்மையாக உமக்குமேல் ஒருவருமில்லை
யென்றே சொல்லும். முதற்கடவுளாகியநீர் உ
ண்டென்பதை உலகத்தாருணர்ந்துகொள்வத
ற்கு இந்தவுலகம் உண்டாயிருப்பதே சாக்ஷி
யாகும். இந்தச்சாக்ஷி உண்மையோ அல்ல
வோ என்று அறிந்து கொள்ள இதற்கு வே
றே சாக்ஷிவேண்டியதில்லை. இதுவேபிரமாண
முமாகும். பிரத்தியக்ஷம் அனுமானம், ஆகம
ம், என்னும் பிரமாணங்களால் உம்முடைய
இருப்பை ஆமென்றும், அல்லவென்றும், அ
றிகின்ற ஆராய்ச்சி எங்களுக்கே அல்லாமல் உ
மக்கோ கிடையாது. ஏனென்றால், உமக்கு
மேல் ஒருபொருளு மில்லாமையாலே. உப
நிடதங்கள், தம்முடைய அறிவால் உம்முடை
ய ஒளிப்பை ஆராய்ந்து நிருணயிக்கமாட்டா
மற் போயினும், அளபமாலையணிந்த பரஞ்
சுடரே ? நீர் ஒருவர் உண்டென்று நிச்சயித்
துக்கூறும். உம்முடைய ஜாயமான கடாட்
சம்பெறுத புருஷன் உம்முடைய அநந்தகலி
யாண குணங்களை ஒருவாறு அறிந்து உஜ்ஜீ

விக்க விரும்புவாரோ ஆகில் அவருடைய அறிவை மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்றும் அந்தக் கரணங்கள் தடைசெய்யும். ஆதலால் அவற்றை நிக்கிரகித்துக் கொண்டு உம்முடைய நிலையை அறியமாட்டாதவராகிச் சனனமரணங்களில் அகப்பட்டுக் கொண்டு மயங்குவார்கள். அந்தச் சனனமரணங்களில் அழுந்தி வருந்துகின்றவர்களுக்கு அவற்றை நீக்க உம்முடைய திருவடிகளை யல்லாமல் வேறுசரணாநெறியும் உண்டோ ? இச்சையாலல்லாமல், எங்களைப்போல இருவினைகளால் பிறப்பென்பதொன்று உமக்குக்கிடையாது. உம்மிடத்தில் நின்றும் தோன்றிய பரமசக்தியுடைய மூலப்பிருகிருதியில் நின்று ஜனித்த முறைமையை யுடைய ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களும், தேவரீருடைய சங்கல்பத்தினால் ஏற்படுத்திய, காலப்பரிமாணம் ஆனபோது அழிந்துவிடும். சுவாமியாகிய நீரோ ! என்றும் அழியமாட்டீர். மேகத்தில்தோன்றி மறைகின்ற மின்னலைப்போல உம்மிடத்தில் ஜனித்து நசிக்கின்ற உலகங்களைச் சிருட்டிக்கவும், அவற்றில் தருமத்தை ஸ்தாபிக்கவும், நீர் அநாதியாய் ஒருவராயிருந்து, முன்னே என்னைச் சிருட்டிக்கின்றீர். என்னைக்கொண்டு சாக்ஷாத்ருத்திரனைச்சிருட்டிக்கின்றீர். கடைசியில் எங்களை யுள்ளிட்ட எல்லாப்பொருள்களையும் அழிக்கின்றீர். எமக்குக்காரணமாகிய உம்முடைய நிலையைமாத்திரம் காட்டமாட்டீர். அப்படி நீர் மறைந்திருந்தாலும், நாங்கள் எங்களுக்கு மூலகாரணப்பொருள் நீரேயென்று வேதவாக்கியங்களால் சந்தேகமறத் தெளிகின்றோம். அந்தச்சிருட்டி சம்மாரங்களையாவது நாங்களே செய்கிறோமோ, இல்லையே. சூரியனானவன் தன்னுருவத்தைக் காட்டிப் பகலையும், தனது உருவத்தை மறைத்து இராத்திரியையும் செய்வதுபோல, என்னுருவத்துக்குள் அந்தராத்துமாவாக எழுந்தருளியிருந்து இவ்வண்டங்களைச் சிருட்டிக்கின்றீர். எங்களில் ஒருவராய் உபேந்திரமூர்த்தியாகி இடையிலெழுந்தருளியிருந்து எல்லாப் பொருள் களையும் பாலனஞ் செய்கின்றீர். பார்வதி நாதனாகிய சிவனுக்குள் அந்தரியாமியா யிருந்து அவற்றையெல்லாம் அழிக்கின்றீர். சம்பத்தின் ராசியாகிய பெருஞ் செல்வத்தினாலே கர்வித்துக் கிடக்கிற நாங்கள் கொண்ட கர்வமானது அடங்கும்படி அசுரர்களும் அரக்கர்களும் குரூரமாக யுத்தஞ்செய்து எங்களை அடித்துத் துரத்தவே நாங்கள் வந்து உம்மைச் சரணாகதியென்று அடைகிறோம். அதன் பொருட்டு, வசிக்கத் தகுதியல்லாத மானுஷிய கர்ப்பத்தினின்று அவதரித்து அந்தக் கொடியவர்களை நாசஞ் செய்து எங்களைக் காக்கின்றீர். இப்படிச்செய்வது உமக்குக்கடனே அல்லாமல் மற்றாருக்குக் கடமையாகும். மூன்றெழுத்துக் கூடி ஓரெழுத்தாய் நின்ற பிரணவத்தினுடைய உண்மைப்பொருளை யறிந்தவர்கள், உம்மை உள்ளபடி அறிந்தவர்களாவார்கள். தேவரீரைப் பிரணவத்தின் வாச்சியமாக அறிந்த அந்தப் புருஷர்களே இருவகைவினைகளையும் வேரறுத்து ஒழிப்பவர்கள். அந்தப் பிரணவப் பொருளை அறிவதுதான் உண்மை ஞானமென்று உணராதவர்கள் மிகுந்த கியானிகளா யிருந்த போதிலும், பிரணவப் பொருளாகிய நீர் உண்டோ இல்லையோ என்று சந்தேகங் கொண்டு, யுகமுடிவு வரையும் பிறக்கிறதும், இறக்கிறதுமாய் உழன்றுகொண்டிருந்தும் உஜ்ஜீவிக்க மாட்டார்கள். சர்வசுவாமீ ! தேவரீருடைய நிலை யிப்படிப் பட்டதாக இருக்கிறது. அதைக்காட்டாமல் ஒளித்து நின்று எங்களை மயக்குகிறீர். ஆனாலும், உம்முடைய திருமார்பிலெழுந்தருளியிருந்து எங்களையும் எங்களுக் கிருப்பிடமாகிய அண்டங்களையும் பெற்று, கிரகஸ்தாச்சிரமத்தை ஓங்கிவளரும்படி அனுஷ்டித்தருளிய எங்கள் தாயாகிய சானகி பிராட்டியாரை வியர்த்தமாகக் கோபஞ்செய்யாதேயும் என்று சொல்லி முடித்தனர்.

இந்தப் பிரகாரம், சமஸ்த அண்ட சராசரங்களைச் சிருட்டித்த சதுமுகனானவர் துதி செய்து ஆனவுடனே. ரிஷப வாகனத்தை யுடைய உமாநாயகராகிய சிவனானவர், ஸ்ரீசர்வலோக சரணியரே ? ஸ்ரீராம நாதரே ! ஞானமே திருமேனியாக உடையவரே ? மூலப்பிரகிருதிக்கும் அதன்காரியமாகிய எங்களுக்கும் மூலகாரணப் பொருளா யிருக்கிற நீர் உம்முடையபெருமையையொன்றும்அறியீர்போலும் சமஸ்த அண்டங்களையும் பெற்றதாயாகிய சீதாபிராட்டியா ரென்னும் கற்புடைய மங்கையர்க் கரசியானவர் பழையபடியே உம்முடைய திருமார்பை வந்துசேர்ந்தார். தாரகமந்திர வாச்சியனாகிய ஸ்ரீராமபிரானே ? தேவரீர்; புராதனமாகிய சகல அண்டசராசரங்களையும் பெற்ற அழகிய திருவயிற்றையுடைய எங்கள் தாயாகிய ஸ்ரீசானகிபிராட்டியாரை நிக்கிரகிப்பது தகுதியல்ல. இப்பிராட்டியார் கற்பில் நின்றும் தவறுவாராகில் இந்தச் சமஸ்தபுவன சராசரங்களும் அழிந்துபோகாமல் இன்னம் நிலைத்துமிருக்குமோ?

அப்போதே அழிந்துபோய்விடும். ஆகையால் இந்தச் சாக்ஷாது மகேசுவரியைத் தேவரீர் இப்படி நிந்திப்பது மறந்துவிடத் தக்கது என்று சொல்லினர். நம்மைநோக்கித் தவஞ்செய்தவர்களுக்கு வேண்டிய இஷ்டகாமியங்களைத் தயைசெய்கிற பரமசிவனானவர், பின்னும் ஆலோசனைசெய்து, அநந்தகல்யாணகுண நிலயமாகிய, ஸ்ரீராகவபிரானைப்பிரிந்த துன்பத்தால் தேகவியோக மடைந்து, பாலனகர்த்தாவாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவினுலகத்தை அடைந்த தசரதசக்கிரவர்த்தியினிடத்திற் சென்று, மகா புண்ணியசீலராகிய சக்கரவர்த்தியே! நீர் பூலோகத்துக்குப்போய், ஷாட்குண்ணிய பரப்பிரமமாகிய ஸ்ரீராமசந்திரனைச்சேவித்து உம்முடைய மனோதுக்கத்தையும் ஆற்றிக்கொள்ளுமென்று சொல்லினர். ஸ்ரீசங்கரபகவானுடைய வாக்கின்படி சக்கரவர்த்தியானவர் தமக்குப்பிராணபதமாயிருந்த ஸ்ரீராகவபிரானைக் காணவேண்டுமென்கிற கருத்தால் பூலோகத்துக்குவந்து சர்வசுவாமிக் கெதிரே நின்றனர். உடனே வேதபுருஷனாவும் அவ்வேதங்களால்அறியப்பட்ட பரவஸ்துவாகவும் இராநின்ற ஸ்ரீசானகிரமணனானவர், சக்கரவர்த்தியினுடைய பாதங்களில் தமது திருமுடிதோயும்படித் தண்டன் சமர்ப்பித்தனர். அப்படித் தண்டன் சமர்ப்பித்த திருக்குமாரனை வாரியெடுத்துப் பர்வதம்போல விசாலமாகிய மார்பி லழுந்தும்படி இறுகஅணைத்து, தம்முடையகண்களி லொழுகாநின்ற ஆநந்தபாஷ்பத்தால் திருமஞ்சனமாட்டி, இப்போதுதான் நாம் வாழ்ந்தோமென்கிற களிப்பு அதிகரித்தவராய் முன்னே தாமடைந்திருந்த துக்கங்கள் யாவற்றையும் அங்குள்ள யாவரும் கேட்கும்படிசொல்லிப் பிரலாபிக்கத் தொடங்கினார். அக்காலத்திலே கேகயநாட்டரசனுடைய புத்திரியாகிய கைகேசியானவள், என்னிடத்தில் பெற்ற வரமென்கிற கூரியவேலாயுதமானது, என்தேகத்தை நீங்கும்படி செய்ததுமல்லாமல் இன்றுவரையும் என்னெஞ்சினிடத்திலேயே நின்று உபத்திரவத்தை விளைத்துக்கொண்டிருந்தது என்னப்பனே ஸ்ரீராமா! இப்போது உன்னை யான் ஆலிங்கனஞ் செய்தபின், திவ்வியாபரணங்களைத் தரித்துப் பரிமளம் மணக்கின்ற உன்திருமார்பாகிய காந்தக்கல்லானது அந்தவரமென்கிற வேலைக் கிரகித்துவிட்டது. அழகிய பெரிய திருத்தோள்களையுடைய ஸ்ரீரகுநாயகா! நல்லகுணங்களையுடைய சுபுத்திரர்களைப்பெற்று அதிகபிரக்கியாதியையடைந்த புருஷர்களும், என்னுடைய கால்களில் நின்றும் எழுகின்றதுகளுக்கும் சமானமாகா தென்னும்படியான மகாகீர்த்தியை எனக்குண்டாக்கினாய். இருவினைகளிலிருந்தும் நீங்கினவர்களுக்கும் பெறக்கூடாத ஸ்ரீவிஷ்ணுலோகத்தையும், சற்கீர்த்தியையும் பெற்று யாவர்களினும் உயர்ந்திருக்கிறேன். ஸ்ரீசூரியவமிசகுலதிலகனே சானகீரமணா! முன்னாலே நான் வணங்கிக்கொண்டிருந்த தேவர்களும், முனிவர்களும் பலமுறைபார்த்து எனக்குக் கைகளைக்குவித்துத் தண்டனிடுதலை உன்னுடைய செந்தாமரைமலர்போன்ற கண்களால் பாராய். ஸ்ரீசர்வேசுரனுடைய திருவுந்திமலரில் அவதரித்த பிரமனோடு நானும் சமானமென்னும்படி அந்தச் சதுர்முகனோடு சத்தியவுலகத்தில் ஒரே ஆசனத்தில் இருக்கும்படியாயும் என்னைச்செய்தாய் என்றுசொல்லித் தம்முடைய புத்திரராகிய ஸ்ரீராமநாதனை எடுத்தெடுத்து மார்பில் இறுகத் தழுவிப் பின்பு ஸ்ரீசீதாபிராட்டியார் பக்கலில் சென்றார். உடனே பிராட்டியாரும் ஸ்ரீசக்கிரவர்த்தியாருடைய பாதங்களில் நமஸ்காரஞ் செய்தனர். நமஸ்காரஞ்செய்த பிராட்டியாரை யாவரும் சொல்ல முடியாத புகழையுடைய தசரதரானவர் அதிக கருணையோடு அணைத்து நின்று, மங்கையர்க்கரசியே ஸ்ரீராகவபிரான், உன்னை அக்கினியில் பிரவேசிக்கும்படி சொன்னது. உன்னுடைய அழிவில்லாத கற்பினிலைமையை உலகத்தாருடைய இருதயத்தில் நாட்டும்படியே அல்லாமல் வேறன்று. அதை உன்னுள்ளத்தில் நினைக்கவேண்டாம். ஸ்ரீபகவத்பக்திஹீனர்களாகிய பாபிஷ்ட துராத்துமாக்கள், உன் விஷயத்தில் சங்கைகொண் டிருப்பார்களே ஆனால், அவர்களும் இப்போது அந்தச் சந்தேகத்தை நீக்கி உன்னிடத்தில் நிச்சயமாகிய நம்பிக்கை அடைந்து உஜ்ஜீவிப்பார்களன்றோ! இது சத்தியமே. கங்கைநாடாகிய கோசலநாட்டு ராஜசிகாமணியின்மேல்சீற்றங்கொள்ளாதே. பொன்னைத் தீயிற்போட்டெடுத்தல் அப்பொன்னினுடைய வாஸ்தவத்தை அறியும்படியல்லவோ! அப்படியென்றே இதையும் நினைப்பது தகுதியாகும். விதிசிவேந்திராதி தேவர்களும், முனிவர்களும், கூடியிருக்கிற இந்த மஹா சபையில் நீ கற்புடைய மங்கையர்களுக்கு அரசியென்று தெரிவிப்பதற்காகவே உன்னை அக்கினியில் முழுகச்சொன்னது. இது சமயம் தப்பிப் போனால் இந்த மஹாசபையைக்கூட்டி உன்னுடைய கற்பினிலைமையைக் காட்டுதல் அருமையென்று நினைத்து, இந்த

ப் புருஷோத்தமன் செய்தானாகும். பெண்
ணுக்குரிய இயற்கைக்குணங்களமைந்த அரு
ந்ததிமுதலாகிய கற்பிலக்கணம் மிகுதியுமு
டைய உத்தமஸ்திரீகளுக்குச் சிரோபூஷண
மாய் விளங்குகின்ற எம்தாயே! உன்னுடை
ய அவதாரஸ்தலமோ பூமி. நீ இருந்துவந்த
இடம், மனவாக்குக்கெட்டாத ஸ்ரீவைகுந்
தம். உன்னுடைய கலியாணகுணங்களுக்கு
யாதொரு மாசுங்கிடையாது. இனி எந்தமூட
னும் உன்விஷயத்தில் வாய்மதங்கொண்டு
தூஷணத்தைப்பேசி அபசாரப்பட்டுக் கெட்
டுப்போகான் என்று இவ்வண்ணமாகச்சொ
ல்லினர். பின்பு ஸ்ரீசீதாபிராட்டியாருடைய
திருவுளத்தில் சீற்றமென்பது சிறிதுமில்லை
யென்பதைச் சக்கரவர்த்தியானவர் அறிந்து
கொண்டு மனத்தில் சிறிதும் கிலேசமில்லாத
வராய், ஸ்ரீராமாநுஜர் பக்கலிற்போய், உள்
ளத்திலுள்ள அன்பானது கட்டும்படியாகத்
தம்மைத்தாமேதழுவுவதுபோலத் தம்முடை
யமாரிபில் அவர் ஒன்றும்படித்தழுவி, தம்
முடையகண்களிலிருந்து இடைவிடாது ஒழு
காநின்ற நீரானது, பட்டாபிஷேகத்தில் திரு
மஞ்சனஞ்செய்கின்ற தீர்த்தம்போல இளை
யபெருமாளுடைய சடாமகுடத்திற் பாய்ந்
து இழியும்படியாக உச்சிமோந்து அப்ப
னே ஸ்ரீலக்ஷ்மணா! என்னுடைய சனனவி
யாதியையும், ஸ்ரீரகுநாயகன் ஆரண்ணியத்
துக்குத் தனியாய்ப்போகின்றானென்று என்
னெஞ்சிற்கொண்ட துன்பப்பிணியையும் நீக்
கினாயே. சுமித்திராதேவி யிளஞ்சிங்கமே!
திரிமூர்த்திகளுடைய லோகவாசிகளெல்லா
ரும் நீ இந்திரனுடைய பகைவனாகிய இந்தி
ரஜித்துவைப் போரில்வென்ற மகாகீர்த்தி
யையே பேசுகிறார்கள். என்ஐயனே! இந்த
உலகத்துக்கு நேரிட்டதுக்கமாகிய விரோதத்
தை நிவர்த்திக்கச்செய்து தருமத்தை நிலை
பெறச்செய்தாயே என்று பலவாறு சொல்
லினர்.

இப்பிரகாரம் இலக்குமணனோடு பேசிவி
ட்டு, சக்கரவர்த்தியானவர் ஸ்ரீசானகீரமண
ரிடத்துச் சென்று, என்பிராணபதமாகிய
ஸ்ரீராமா! அநந்தகலியாணகுணநிலயமே! நீ
என்னிடத்தில் பெற்றுக்கொள்ளத்தக்க ஒருவ
ரம் கேட்கக்கடவாயென்றார். புத்திரவாச்சல்
லியத்தால் கேட்டபிதாவைநோக்கி ஸ்ரீராம
பிரானானவர், என்னிடத்தில் அத்தியந்தம் பிரீ
தியுடையவராயிருந்த தந்தையே! என்பொ
ருட்டுத் தேவரீர் தேகவியோக மானதைக்
கேட்டு யான் அடைந்திருந்த துக்கத்தை, நீர்
அடைந்திருக்கிற ஸ்ரீவிஷ்ணு லோகத்துக்கு
வந்து உம்மைக்கண்டு நிலாமென்றிருந்தே
ன். அப்படி துக்கித்துக்கொண்டிருந்த நான்
என்னுடைய பாக்கியவசத்தால் இப்போது
இங்கே இந்தத்தேகத்தோடு காணும்படியான
பெரும்பயனைப்பெற்றேன். இனியான்பெற்
றுக்கொள்ளவேண்டியது யாதென்றார். தாம்
கொண்ட மானுஷியாவதாரத்துக்கேற்க நடி
க்கின்ற ஸ்ரீராகவபிரானானவர், சொல்வதைக்
கேட்ட தசரதசக்கரவர்த்தியானவர், என்னை
யனே! ஆனபோதிலும் உனக்குவேண்டிய
தொன்றைக் கேட்பாயாகவென்று சொல்ல
வே ஸ்ரீராமபத்திரரானவர், என்பிதாவே!
நீர் என்னிடத்தில்வைத்த வாச்சல்லிய குணாதி
சயத்தால் பொல்லாதவளென்று வெறுத்து
விட்ட என்தெய்வமும், உம்முடைய புத்திர
னாகிய பரதாழ்வானும், எனக்குத்தாயும், தம்
பியும் ஆகும்படியான மகாவரத்தைத் தரக்
கடவீரென்றுகேட்டருளினார். அப்படி சர்வ
சுவாமியானவர், கேட்டபோது அவருடைய
கருணையைக்குறித்துச் சமஸ்தசிவர்களுந்துதி
செய்து ஆரவாரித்தார்கள். யாவருக்கும்
வரத்தைத்தயைசெய்கின்ற ஸ்ரீரகுவம்சதிலக
னே! நீ கேட்டுக்கொண்ட இரண்டிலே பர
தன் உனக்குத் தம்பியேயாகக்கடவன். உனக்
கு யான்கொடுத்த திருமுடியை அபகரித்துக்
கொண்டு, இந்த விரதவேஷத்தை உனக்குக்
கொடுத்த பாவிமேல் எனக்குண்டாகிய கோ
பமானது சத்தியமாய் நீங்கவில்லையென்று,
ஸ்ரீராமபிரானைத் தழுவிநின்றகைகளும் தள
ர்ந்து தொங்கும்படியாக அதிகதுக்கத்தோடு
சொன்னார். அதுகேட்டருளிய ஸ்ரீராமபிரா
னானவர், தசரதசக்கரவர்த்தியாரைப்பார்த்து,
என்பிதாவே! நிலையில்லாத தேகபோஷணா
ர்த்தத்துக்கு உபயோகியாய் இருக்கின்ற ராச்
சியாதிகாரத்தை யாம்விரும்பும் விருப்பமா
னது பெருங்குற்றங்களுக்கெல்லாம் மூல
மென்பதை யான் அறிந்துகொள்ளாமற்போ
னதே குற்றமல்லாமல் என்னை வளர்த்தெடுத்
த தெய்வமாகிய தாயானவள், கருணையால்
என்விஷயத்தில் அந்தராச்சியாதிகாரத்தைத்த
டுத்துவிட்டது குற்றமோவென்றுசொல்லினார்.
அப்படியேயாகுகவென்று தசரதரும் சம்ம
தித்து முன்னே கைகேசிமேற்கொண்டிருந்த
கோபம் ஆறினார். இராவணனுக்கு அஜசங்க
ரர்கள் தயைசெய்து கொடுத்திருந்த வரங்க
ளையெல்லாவற்றையும் அழித்து வெற்றிகொ
ண்ட ஸ்ரீராகவபிரானானவர்கேட்டுக்கொண்ட
படி சக்கரவர்த்தியார் சம்மதித்ததைக்கண்ட

தேவர்கள் யாவர்களும்,ஒருவரைஒருவர்பார்த்தே மனோ.நாம்பெற்றுக்கொண்ட வரம் கேட்டும்படி. தம்முடைய இறைவனைக் காட்டிக்கொடுப்பிய மகோபகாரியாகிய கைகேயியானவள் இந்தச்சக்கரவர்த்தியாரிடத்தில் பெற்றுக்கொண்ட வரங்களும் இரண்டு. அந்த இரண்டுவரங்களின்படி நடத்திக்கொண்ட எம்பெருமானுக்கு இன்று இவர்கொடுத்த வரங்களும் இரண்டென்று மனவிரக்கத்தோடு பேசிக்கொண்டார்கள். திரிலோகநாதனும் புத்திரனாகக் கொண்டாடுகின்ற சத்தியத்தின் பொருட்டு உயிரைக்கொடுத்து மிகுந்த கீர்த்தியை அடைந்த தசரதசக்கரவர்த்தியானவர் இப்படி இரண்டுவரங்களைத் தந்து, சகந்மோகனாகார ஸ்வரூபராகிய ஸ்ரீராமபிரானையும் இளையபெருமாளையும் ஸ்ரீசீதாபிராட்டியாரையும், விட்டுப்பிரிந்து விமானத்தில் மீண்டு போயினர். தமது திருக்கரத்தில் ஸ்ரீகோதண்டந் தாங்கிநின்ற திருக்கோலமாயெழுந்தருளியிராநின்ற ஸ்ரீராகவபிரான் சந்நிதியில் தேவர்கள் யாவரும்வந்து சகத்காரண பரவஸ்துவே! எங்கள்குலதெய்வமே எங்கள் நிமித்தம் இந்த மானுஷியாவதாரத் திருமேனியெடுத்த பக்தவத்சலனே! தசரதசக்கரவர்த்தியினிடத்தும் பெற்றுக்கொண்ட வரத்தைப் போல எங்களிடத்தில் யாதேனும் ஓர் வரத்தைப் பெற்றுக்கொள்ளுமென்று கேட்டார்கள். அப்போது ஸ்ரீராமபிரானானவர், ஓ தேவர்களே! ராக்ஷசவீரர்களால் யுத்தத்தில் மடிந்துபோன வானரர்களெல்லாம், உயிர்பிழைத்தெழுந்திருக்கவும், அவர்கள் எந்தெந்தவனங்களிலும் பர்வதங்களிலும் இவைபோன்றஇடங்களிலும்போய் வசிக்கின்றார்களோ? அந்த இடங்களெல்லாம், மதுரமான காய்களும், கனிகளும், கிழங்குகளும், தேனும், உண்ணத்தக்க நீரும் புஷ்கரமாய் இருக்கவும் வரத்தை தருகவென்று கேட்டருளினர். யாவருக்கும் முதல்வராகிய சதுர்முகக்கடவுளும், மழுவாயுதத்தையுடைய சாக்ஷாத்து ருத்திரபகவானும், இந்திரனும் மற்றதேவர்களும், முனிவர்களும், துன்பத்தையே விளைக்கின்ற சனன நோய்க்கு மருந்தவனாய்விளங்குகின்ற ஸ்ரீராமசந்திரனே உம்முடைய கருணாவீக்ஷணியத்தால் அப்படியே ஆகக்கடவதென்று ஒவ்வொருவருந் தனித்தனியே சொல்லிக் கண்களும் மனமும் குளிர்ந்தார்கள். பாபாத்துமாவாகிய ராவணன்நேருடுசெய்த முதற்போர் முதல் அவனிறுதிசெய்த கடைசிப்போர்வரையும் மாண்டுபோன வானரங்களில் ஆஞ்சநேயர்கொண்டுவந்த சஞ்சீவியால் பிழைத்தவைபோக மற்றவையெல்லாம் உயிர்த்தெழுந்து சிந்தையும் விழிகளும் களிக்கும்படியாக நடந்த உயுத்தங்களையெல்லாம் நினைத்தும் படுகளத்தைப்பார்த்தும் அத்தியந்தப் பிரீதியோடு, அடிவந்து தாமரைசமலர்போன்ற நேத்திரங்களையுடைய ஸ்ரீரகுநாயகருக்குத் தண்டஞ் சமர்ப்பித்தன. இராவணன், கும்பகருணன், இந்திரஜித்து, அதிகாயன், கும்பன், நிகும்பன், மகரக்கண்ணன், பிசாசன், தூம்ராக்ஷன், வச்சிரதந்தன், முதலிய ராக்ஷசவீரர்களால் மடிந்துபோய் இப்போது உயிர்பெற்றெழுந்த அந்த வானரங்களெல்லாம் அங்கே சந்தோஷ ஆரவாரஞ்செய்துகொண்டிருந்தன. பிரமன் முதலிய தேவர்களெல்லாம், ஸ்ரீராமநாதனைநோக்கித் தேவரீர் சுக்கிலபட்சத்து அஷ்டமியில் சுவேலாசலத்தை வந்து அடைந்து இலங்காநகரத்தை வானரசைநியங்களால் முற்றுகைபோட்டு அரக்கர்கள் யாவரையும் கொலைசெய்து அமரபட்சத்துப் பஞ்சமி திதியில் இராக்ஷசகுல நாயகனாகிய இராவணனையும் உயிர்மாய்த்து, இனி இந்த அண்டத்தில் வஞ்சகர்களில்லையென்னும்படியாகக் கொலைத்தொழில்செய்த தாமரைமலர்போன்ற கைகளையுடைய எம்பெருமானே! தாயார்சொல்லியபடி பதினாலுவருஷமும் இன்றோடுமுடிகின்றது. இன்றைத்தினமே அயோத்திக்கெழுந்தருளி ஸ்ரீபரதாழ்வானுக்குத் தரிசனையாகாவிட்டால் அந்தஸ்ரீமான் தீயைமூட்டி அதில் குதித்துப் பிராணத்தியாகஞ்செய்து கொள்வார். ஆதலால் அப்படி அயோத்தியில் நடவாதபடி தேவரீர் சீக்கிரமாய் எழுந்தருளவேண்டுமென்று சொல்லிவிட்டுப்போயினார்கள். உடனேசுவாமியானவர், விபீஷணாழ்வான் முதலானவர்களைப்பார்த்துச் சொல்லுகிறார். என்தாயானவர் எனக்குக்கட்டளையிட்டவருஷங்கள் பதினான்கும் இன்றோடு சரிப்பட்டுப் போகிறது. இன்றைத்தினம் நான் அயோத்தியைப்போய்ச் சேராமற்போவேனேயானால் என்தம்பி பரதாழ்வான் எரியில்விழுந்து பிராணனைமாய்த்துக்கொள்வான். அதுகண்டு என்குலமுற்றும் நாசமாய்விடும். அப்படி நேரிடவொட்டாமல் இங்கேயிருந்து இந்தத்தினமே அயோத்திக்குப் போகத்தக்க வாகனமும் ஒன்று உண்டோவென்று கேட்டருளினார். சுவாமி சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்த ஸ்ரீவிபீஷணாழ்வானானவர், யக்ஷராஜனாகிய குபேரனுக்குப் பிரமதேவரால் கொடுக்கப்பட்ட ஒரு புஷ்பகவிமானமொன்றுண்டு.

அது மகாபரிசுத்தமுடையது. அதன்மீது இந்த வானரவெள்ளங்கள் யாவும் ஏறினும் ஒரு புறத்தில் அடங்கிப்போமே யல்லாமல் அதற்கு ஒரு சுமையாகமாட்டாதுகள். இராவணன் மற்போதாவது ஒரு காலத்தில் இலங்கையினின்ன ராக்ஷசர்களை யெல்லாம் ஏற்றிக்கொண்டு போய் உலாவுவான். அவ்வளவு பெரியதென்று சொல்லினர். அப்படிப்பட்டதானல் அதைக்கொண்டுவாவென்று சுவாமியானவர் கட்டளையிட்டனர். அண்ட கோடிக ளொன்றுயித்திரண்டு ஒருருவமாயினதுபோன்ற பெரிய உருவமுடையதாயும், ஆயிரஞ் சூரியர்கள் ஏககாலத்தில் உதயஞ்செய்தாற்போன்ற ஒளியையுடையதாயும், அநேக மணிகள் கணீர்கணீரென்று சப்திப்பதும், ஆகிய அந்தப் புஷ்பக விமானத்தைச் சர்வ சுவாமியினுடைய கட்டளையின்படி விபீஷிணாழ்வானனவர் அதி வேகமாய்க் கொண்டுவந்தார். அந்தப் புஷ்பக விமானம் பூமியில் வந்திறங்கியதைக் கண்டு ஸ்ரீராகவபிரானனவர் திருவுள மகிழ்ந்து நம்முடைய எண்ணம் முடியுமென்று அதன்மேல் எழுந்தருளினர்.

உடனே தேவர்கள் யாவரும் அவர்மேல் புஷ்பங்களைவாரி யிறைத்துப் பல்லாண்டு கூறினர்கள். கற்புக்குத் தன்னைப்போன்றவரில்லாத ஸ்ரீ சானகி பிராட்டியானவள் திரிசடையென்னும் சுகுணவதியானவள் தண்டன் சமர்ப்பித்து அடியாளும் தேவரீரோடு அயோத்திக்கு வருகிறேனென்று சொல்லினள். அதுகேட்டு ஸ்ரீசீதாபிராட்டியானவர், அம்மா திரிசடையே! நீ யாதொரு துன்பமுமில்லாமல் இலங்காநகரத்துக்கு ஒரு தெய்வத்தைப்போலிருக்கக் கடவாயென்று ஆக்கியாபித்து ஸ்ரீராமபிரான் பக்கலில்வந்து சேர்ந்தார். மணம் வீசுகின்ற மாலையைத்தரித்த இராமாநுஜரும் விமானத்தின்மே லெழுந்தருளினர். சமஸ்த அண்டங்களையும் உண்ட ஸ்ரீசர்வேசுரனுடைய திருவுதரத்தைப்போல எழுபதுவெள்ள வானரங்களை யுடையதாயும், வாயுவினது வேகமும் பின்னிடும்படி மனோவேகத்தை ஒத்த வேகத்தை யுடையதாயும், ஆகாயத்தின்கண் விளங்குகின்ற விமானத்தின்மே லெழுந்தருளி யிராநின்ற ஸ்ரீராம நாதரானவர், ஸ்ரீ விபீஷிணாழ்வானை நோக்கிப் பூவினிதழ்களால் தொடுத்த மாலையைத் தரித்தவனே ? உன்னை விட்டுப் பிரியாத மந்திரிமுதலானவர்கள் களிக்கும்படியாயும், இலங்கா நகரத்தில் உள்ளவர்களெல்லாம் புகழும்படியாயும், அரசுசெய்துகொண்டு சுகமாக வாழ்ந்திரு. அறிவுடையோர் நிறிமார்க்கம் இதுவாமென்று சொன்னிம்படியான ஒழுக்கங்களை யுடைய விபீஷிணாழ்வானே ! ஸ்ரீசர்வேசுரன் அன்னமாய்த் திருவுருக்கொண்டு சதுர்வேதங்களையும் உபதேசிக்கப்பெற்ற பிரமதேவரானவர் ஆதிபுருஷராகப்பெற்ற குலத்திற் பிறந்த சுசீலனே ! சத்துருக்கள் யாவரும் வந்து கப்பங்கட்டி வணங்குகின்ற இலங்கா நகரத்திலேயே இருந்து அரசுசெய்துகொண்டிருக்கப் போவென்று அருளிச்செய்தனர். மனோவாக்குக்கெட்டாத கீர்த்தியையுடைய ஸ்ரீராம பத்திரானவர், சுக்கிரீவமகாராஜனைப்பார்த்து ஓ! சூரிய புத்திரனாகிய மஹாராஜனே ! உன்னுடைய புஜபலத்தாலே பத்துத்தலைகளையுடைய ராவணனைச் சங்கரித்தேன். அவன் முதலிய ராக்ஷசர்களுடைய யுத்தத்தில் உன்னுடைய சேனைகள் யாவும் மிகுதியுஞ் சிரமப்பட்டு இளைப்படைந்தன. ஆகையால், நீ உன்னுடைய சேனைகளோடு கிட்கிந்தைக்குப் போய்ச் சேர்ந்து வாழக்கடவாயென்றுசொல்லி அங்கதப்பெருமானையும், சாம்பவந்தனையும், பநசனையும், வெற்றியைத் தரத்தக்க போரில் வல்ல நீலன் முதலாகிய சேனாநாயகர்களையும், வாயுபுத்திரராகிய ஸ்ரீ ஆஞ்சநேயனையும், கடாக்ஷித்து நீங்களும் சுக்கிரீவ மஹாராஜருடனே போங்களென்றும் திருவாய் மலர்ந் தருளினர்.

நம்முடைய ஐயனானவர், இந்த வசனத்தைச் சொன்ன மாத்திரத்தில் ஸ்ரீவிபீஷிணாழ்வான் முதலிய யாவர்களும், மனந்திடுக்கிட்டு உடலும் உயிரும் நிலைகலங்கும்படியாக விழிகளில் நீர் தாரைதாரையாக ஒழுக்கி ஸ்ரீராகவபிரானுடைய செந்தாமரை மலர் போன்ற திருவடிகளை அவரவர்களும் தங்கள் தங்கள் தலைகளில் சூட்டிக்கொண்டு, எம்பெருமானே ! உம்மை விட்டு நீங்குவோமே யானால் நாங்கள் பிழைப்பதில்லையென்னும் அன்பைக்காட்டிச் சர்வசுவாமியே ! தேவரீரோடு பெரிய மதில் சூழ்ந்த திருவயோத்திக்கு வந்திருந்து, பசும்பொன்னாற் செய்யப்பட்டு முத்துமாலைகள் தொங்குகின்ற ரத்தினமய கிரீடத்தைத் தரித்துக் கொள்ளும் பட்டாபிஷேக திவ்விய மகோற்சவத்தையும், அங்கு நடக்கும் வைபவங்களையும்; சிங்காதனத்தின் மேல் தேவரீர் எழுந்தருளி யிருக்கும் அழகையும், உஜ்ஜீவிக்கும்படி கண்டு சேவிக்குமளவும், தேவரீரைப் பிரியாதிருக்கும்படி தயைசெய்யவேண்டுமென்று மிகுதியும் பணிவாகக்கேட்டுக்கொண்டார்கள். ஸ்ரீவிபீஷிணாழ்வான் ஸ்ரீசுக்கிரீவ மஹாராஜா முதலானவர்கள் அதிப்ரீதியோ

டு கேட்டுக்கொண்ட விண்ணப் பத்தையும் அவர்கள் பிரிவெனுந் துன்பத்தாலடைகின்ற நடுக்கத்தையும் ஸ்ரீஜகந்நாதரானவர் கடாக்ஷித்து நீங்கள் துன்பப்படவேண்டாம். நீங்கள் சொன்னபடியே உங்களை அயோத்திக்கு அழைத்துக்கொண்டுபோக முன்னமே நான் நினைத்தனன்டு. ஆனால், உங்களுடைய உள்ளக் கருத்தை அறியும்படி யான் அதுசொன்னதே அல்லால் வேறன்று என்றுசொல்லியருளினர். அப்படி சொல்லியருளிய ஸ்ரீராம சுவாமியினுடைய மொழியைக் கேட்டவுடனே ஸ்ரீசுக்கிரீவ மஹாராஜரும், ஸ்ரீவிபீஷணாழ்வானும், திருவடிகளும், மற்ற வானரத் தலைவர்களும், சேனைகளும், சகல சகத்காரணராகிய ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரருடைய சீர்பாதங்களை வணங்கித் தேகத்தோடு முத்தி யடைந்தவர்களைப்போல அச்சரிய பூதர்களாய் நின்றார்கள். நின்ற அவர்கள்யாவரையும் புட்பகவிமானத்தின்மே லேறும்படி சுவாமி ஆக்கியாபிக்கவே அதிகயினாவாக, சுக்கிரீவன் முதலானவர்களும், வானரப் படைகளும், விபீஷணரும், அவருடைய சேனைகளும், அந்த விமானத்தின் மீதே ஒருபுறத்தில் இருந்தார்கள். இவர்களை அல்லாமல் பதினாலுலோகங்களும் அவற்றிலுள்ள சராசரங்கள் யாவும் ஏறின போதிலும் மேலும் வெற்றிடம்மிகவும்இருக்கத்தக்க அவ்வளவு பெருமையுள்ள விமானத்தினுடைய இயல்பை யோகீசுவரர்களாலே சொல்லவேண்டியதேயல்லாமல் இந்தப்பூமியின்கண் சொல்ல வல்லவர்கள் யாருண்டு. புட்பகவிமானத்தின் மேல் எழுபது வெள்ளச்சேனைகளும் சூரியபுத்திரனும், இலங்காதிபதியும், அவருடைய சேனையும், சூழ்ந்துட்கார்ந்திருக்க மத்தியில் ஸ்ரீராமாநுஜர் ஒருபக்கத்திலும், ஸ்ரீசீதாபிராட்டியார் ஒரு பக்கத்திலும், இருக்க இவ்விருவருக்கும் நடுவே ஸ்ரீராகவபிரான் எழுந்தருளினர். அந்தப் புட்பக விமான மானது அப்பிராகிருத பரமபதத்தைப்போலத் தோன்றியது. ஹேயகுணங்களும் முதலும் நடுவும் முடிவுமில்லாமலும் நான்குவேதங்களுக்கு எட்டாமலும், இருக்கிற ஸ்ரீ பரஞ்சுடரைப்போல ஸ்ரீராகவபிரான் அந்த விமானத்தில் விளங்கினர். ஸ்ரீராமபத்திரருடைய அநுமதியினால் சூரியபுத்திரராகிய சுக்கிரீவ மகாராஜரும், இலங்காநகராதிபதியாகிய ஸ்ரீவிபீஷணாழ்வாரும், வெற்றியே புனைத்தக்க இருவகைச் சேனைகளும், அஞ்சநேயர் சாம்பவர் முதலிய படைத் தலைவர்களும், மனித உருவங் கொண்டார்கள். மேற்றிசையிலே அந்த மித்த பின்பு கீழ்த்திசையிலே உதயஞ்செய்கின்ற சூரியன் தக்ஷிணாயனம் நீங்கி உத்தராயணத்துக்காக வட பாரிசத்தில் வருவது போல யாதொரு தடையுமில்லாமல் புட்பக விமானமானது ஆகாயமார்க்கத்தில் தாவிவரும் போது ஸ்ரீசானகி பிராட்டியாரைப்பார்த்து நம்மையனானவர் சொல்லுகின்றார். இலங்காபுரியை வலஞ்செய்து கொண்டு போகவேண்டுமென்று நினைப்பதற்கு முன்னே விமானமானது அதிகவினாவாகக் கீழ் கோபுர வாயலில் வந்துவிட்டது. அப்போது ஸ்ரீ சர்வ சுவாமியானவர் ஹே சீதா! இங்கேதான் பிரகஸ்தனென்னும் ராக்ஷசப்படைத்தலைவன் நீலனென்னும் வானரப்படைத்தலைவனால் உயிர்மாய்ந்தான். சுபாரிசனென்பவன் மாண்டதும் இவ்விடமேயாம். மேற்றிசை வாயில் வந்தபோது இங்கே இந்திரஜித்து ஸ்ரீ லக்ஷ்மணனால் கொலையுண்டான். வடதிசை வாயலில் வந்தவிடத்து இவ்விடத்தில் ராவணனானவன் ஸ்ரீசுக்கிரீவனால் தன் கிரீடத்தி லிழைக்கப்பட்ட சிரோரத்தினங்களை யிழந்து என்றால் கொலையுமுண்டான். நல்ல நெற்றியையுடைய ஹே சானகி? உன்னைப்பிரிந்து பலநாள்கழிந்த பிற்பாடு நான் ஸ்ரீசுக்கிரீவனோடு சிநேகஞ்செய்து உன்னைத் தேடும்படி அநுமானை அனுப்ப அநுமான் உன்னைக்கண்டுவந்து செய்திதெரிவித்தபின் வானர சிரேஷ்டர்கள் கட்டியது இந்தச் சேதுவாகும். இந்தத் திருவணையினுடைய மகாத்துமியந்தைச் சொல்லப் பிர்மாவினாலும் முடியாது. இதன்பெருமையை எவ்வளவென்று சொல்லுவேன். ஹே மைதிலி! பெற்ற தாய் தந்தையர்களுக்கும் குருவுக்கும் பெருங் குற்றத்தைச் செய்து சுற்றத்தாரையும் அழித்த பாதகர்களும் வந்து தரிசிப்பார்களேயானால் உடனே தேவர்களாவார்கள்..

இந்திரன் மலைகளைச் சிறகரிந்த காலத்தில் ஓடிவந்தொளித்த மைந்நாகபர்வதமும், பார்த்தவர்களுடைய பாபங்களை ஒழிக்கின்ற கெந்தமாதன பர்வதமும் இங்கே யிருக்கின்றன. பாராய் அவ்விரண்டுமலைகளும் இந்தச் சேதுவினுடைய சம்பந்தத்தால் பரிசுத்தம் அடைகின்றன. நதிகளிலேசிறந்தகங்கை,யமுனை,கோதாவிரி,காவிரி நதி;முதலிய நதிகள் யாவற்றிலும் முழுகினாலல்லாமல்பாபங்கள்நீங்கமாட்டாதுகள். இந்தச்சேது அப்படிஅல்ல,தரிசனஞ்செய்தமாத்திரத்திலேயேஎல்லாப்பாபங்களையும் ஒழித்துவிடும்.பசுவையும்,ஆசாரியனையும், முனிவர்களையும், ஸ்திரீகளின் கூட்டத்தையும், குழந்தைகளையும்,ஏதோஒருபயத்தால் அஞ்சி

வந்து அடைக்கலம் புகுந்தவனாயும், கொலைசெய்த மகாபாதகர்கள் வந்து சேதுஸ்நானஞ் செய்வார்களேயானால், அவர்கள் தங்கள் பாதகங்களையெல்லாந் தொலைத்து, தேவர்கள் வணங்குகின்ற தேவர்களாகி விடுவார்கள். ஸ்ரீசர்வ சுவாமியானவர் அங்கு மரக்கலங்கள் தோணிகள் முதலானவைகள் உலாவவேண்டுமென்று திருவுளத்திலெண்ணித் தமது திருக்கையிலுள்ள ஸ்ரீகோதண்டத்தினது முனைநுனியால் கீறிவிட்டு, ஹே ஜனகமகாராஜபுத்திரியே! பஞ்சமாபாதகங்களைச் செய்தவர்களானாலும், இந்தத்திருவணைக்குச்சமீபத்தில் வருவார்களே ஆனால் இருபத்தொரு ஜனனமும் துக்கவியாதி யில்லாதவர்களாய், தேவர்கள் விரும்புகின்ற சங்கநிதி, பதுமநிதிகளைப்போலச் சிரேஷ்டர்களாவார்கள். செந்தாமரைமலரில் வசிக்கின்ற ஸ்ரீசிதா! இந்தச் சேதுவைப்போலத் தான் ஆகவில்லையே என்கிற துக்கத்தால் கங்கையானவள் ருத்திரபகவானுடைய நெற்றிக்கண்ணி னெருப்புச்சூட்டையும் சகித்துக்கொண்டு, அவருடையசடைக்காட்டிலிருந்து தவஞ்செய்கின்றாளென்போமானால் இந்தத்திருவணையினுடைய மான்மியத்தை எப்படிச்சொல்லக்கூடும். என்று சேதுவின் பெருமையாவுஞ் சொல்லிவிட்டு, ஹே வனிதாரத்தினமே! இங்கேதான் சமுத்திரராஜன் என்னுடைய பாணதீக்ஷணியத்தைப் பொறுக்கமாட்டாமல் என்னைவந்து சரணம்புகுந்தான். இது அகஸ்தியர் வாசம்பண்ணும் பொதியமலை. இது அழகப்பெருமான் எழுந்தருளிய திருமாலிருஞ்சோலை. இது ஸ்ரீநிவாசப்பெருமான் எழுந்தருளிய சேஷமலை என்று சொல்லிக்கொண்டு வரும்போது பிராட்டியானவர், சுவாமீ! தேவரீருடைய தாசனாகிய அநுமானை எவ்விடத்தில் கண்டதென்று கேட்டருளவே சுவாமியானவர் பிராட்டியாரைப்பார்த்து இதோ தோன்றுகிற கிட்கிந்தைமலையாகும். சமுத்திரங்களையெல்லாம் ஒரேபாய்ச்சலிற் பாயவல்ல வாலியென்னும் மகாவீரனை அவன்செய்த அக்கிரமத்துக்குத் தண்டனையாகக் கொல்வித்துத் தருமநூல்களைக்கற்றுணர்ந்து அதன் வழியேநடக்கின்ற மேலோர்களைப்போலும் நல்லொழுக்கத்தையுடைய சூரியபுத்திரனாகிய ஸ்ரீசுக்கிரீவமஹாராஜன் பட்டத்தைப்பெற்று வாழ்கின்ற இடமும் இதுதானென்று சொல்லியருளினர். அதுகேட்ட ஸ்ரீபிராட்டியானவர், தேவர்களும்அஞ்சத்தக்கசேனைகள் சூழ்ந்துவரயானொருபெண்,பெண்கள்கூட்டமில்லாமல் அயோத்தியாநகரத்துக்கு வருகினேயானால் என்னுடைய பெண்மையானது பெருமைப்படாது. ஆதலால் இந்தக்கிட்கிந்தையிலிருந்து ஸ்திரீகளை எனக்கு உசாத்துணையாக ஏற்றுதல் யுக்தமாகுமென்று சொன்னார். அந்தச்சொல்லை ஸ்ரீராமபிரான் சுக்கிரீவருக்குச்சொல்லினர். அந்தமகாராஜாவானவர் திருவடிகளைப்பார்த்து நீர் சீக்கிரமாகப் போய்க் கிட்கிந்தையிலுள்ள ஸ்திரீகளை ராஜதரிசனத்துக்குப்போகும்முறைமை எப்படியோ அந்த முறைமைப்படி கொண்டுவாருமென்று சொல்ல, உடனே ஆஞ்சநேயரும் விமானத்தைவிட்டிழிந்து சென்று ஸ்திரீஜனங்களை அம்முறைமையாகக் கொண்டுவந்தார். அந்த வானரப்பெண்கள்யாவரும் விமானத்தின்மேலேறித் தங்கள் அரசனாகிய சுக்கிரீவமகாராஜனையும், ஸ்ரீசானகிபிராட்டியாரையும் ஸ்ரீராமப் பிரபுவையும் நமஸ்காரஞ் செய்து நின்றவர்களாகித் தாம் கிட்கிந்தையிலிருந்துகொண்டுவந்த சுமங்கலத்துக்குரிய பொருள்களைப் பிராட்டியார் பக்கலில் வைத்து முறையாக வணங்கிச் சமீபத்தில் உட்கார்ந்தார்கள். ஸ்ரீசீதாபிராட்டியாரும் இனியாதொருகுறைவுமில்லையென்று திருவுளமகிழ்ந்தனர். உடனே புட்பகவிமானமும் மனோவேகமாகச் சென்றது. அப்படிச் செல்லும்போது ஸ்ரீராகவபிரான் ஸ்ரீசீதாபிராட்டியைப்பார்த்து ஹே சீதா! நமக்கெதிரே தோன்றுகிற நதியானது கோதாவிரி. அதற்குப் பக்கத்தில்தோன்றுகிற பர்வதத்திலேதான் நாமிருவரும் ஒருவரையொருவர்பிரிந்து துன்பங்களையநுபவித்தது. தேனுண்ணும்படி வண்டுகள் மொய்த்து ஒலிக்கின்ற மலர்மாலைசொருகிய கூந்தலையுடைய சானகீ பெருமையாகிய விரதங்களை அநுசரித்து உபாசனை செய்பவர்களும், யாகங்களைச் செய்பவர்களும், வசிக்கின்றதண்டகாரண்ணியமோ அதோதோன்றுகிறது. அது தேவர்களில் சிரேஷ்டனாகிய இந்திரனும் வணங்கத்தக்க சித்திரகூடம். இது பரத்துவாசரிஷியானவர் வாசம்பண்ணுகிற இடம் என்று சொன்னார். மின்னல்போலும் தேககாந்தியுடைய ஸ்ரீசானகிபிராட்டியாரை நோக்கி ஸ்ரீராமநாதரானவர் இப்படிச்சொல்லிக்கொண்டுவரும்போது, பரத்துவாச முனிசிரேஷ்டரானவர் ஸ்ரீராகவபிரானானவர் வருகின்றாரென்று அறிந்து எங்கள் உபாசனமூர்த்தியாய் எங்களை ஆட்கொள்ளும் தேவதேவநாயகர் வருகின்றாரென்று மற்றமுனிவர்கள் யாவரும் சூழ்ந்துவர எதிர்கொள்ளும்படி

உத்தேசித்து, குடையும் கமண்டலமும் ஒருகையில் பிடித்து மற்றொருகையில் வேதவிதிப்படி யமைந்த திரிதண்டத்தைப் பிடித்து மகத்தாகிய தவங்களெல்லாம்ஒன்றுசேர்ந்திரண்டு ஒருருவம்பெற்று எதிரேவருவதுபோல வருவதை, எல்லையில்லாதவளவாவது நினையளவாவது தலையோடுபொருந்திய சிரேதகம் உள்ளத்தில் சிறிதுமில்லாத அரக்கர்களாகிய யானைக்கூட்டத்தைச்சங்கரித்து மேருமலையில்குகையில் வசிக்கின்ற சிங்கத்தைப்போல விளங்குகின்ற ஸ்ரீராமபத்திரர்கண்டு புட்பகமானது பூமியில் தாழும்படி நினைத்தனர். நினைத்த மாத்திரத்தில் சுவர்க்கலோகமானது பூமியில் வந்து இறங்கியதுபோலப் புட்பகமானது பூமியில்வந்துதங்கியது. எல்லை அளாக உடைய சுவாமியானவர் விமானத்தை விட்டிறங்கி விரைந்துபோய்ப் பரமவைதிகஸ்தராகிய பரத்துவாசமுனிவருடைய பாதங்களுக்குத் தண்டன் சமர்ப்பித்தனர். தண்டன்சமர்ப்பித்த தாமரைக்கண்ணராகிய ஸ்ரீராகவபிரானை அம்முனிவர் வாரியெடுத்தணைத்து உச்சிமோந்து சடைமுடியிலுள்ள தூசுகள் நீங்கும்படி ஆநந்தக்கண்ணீர்சொரிந்தனர். உடனே சிறந்த அளகபாரத்தையுடைய ஸ்ரீசானகிபிராட்டியாரும் ஸ்ரீராமாநுஜரும் தண்டன் சமர்ப்பித்துச் சமீபத்தில் நெருங்கின மாத்திரத்தில் அருமையாகிய தவசிரேஷ்டரானவர், ஆசிர்வசனங்களைச்சொல்லிச் சந்தோஷகரமாகிய உண்ணுதற்குரிய அமுதத்தை எதிர்வரக்கண்டாற்போல அவர்களைக்கண்டு மனங்குதுகலித்து ஆநந்தக்கண்ணீர் பெருக்கினர். அதன்பின்பு ஸ்ரீசுக்கிரீவமகாராஜரும், ஸ்ரீவிபீஷணாழ்வானும், ஸ்ரீஆஞ்சநேயரும், சாம்பவரும், மற்றவானரர்களும், தம்மை வணங்குந்தோறும் ஆசிர்வதித்து ஞானநாயகனைப் பிராட்டியாரோடு, முனிவர்கூட்டங்கள் சூழ்ந்து வேதகோஷஞ் செய்துவரத் தம்முடைய ஆச்சிரமத்துக்குள்ளே அழைத்துச் சென்று, ஸ்ரீசூரியவம்சகுலதிலகராகிய ஸ்ரீராமபத்திரர்முதலிய யாவருக்கும் செய்யவேண்டிய மரியாதைகள் யாவுஞ்செய்து ஆநந்தக்கண்ணீர்பெருக ஸ்ரீசுவாமியினுடைய திவ்வியமங்கள வடிவழகைச்சேவித்தும், அவருடைய அமானுஷ சேஷ்டிதங்களை நினைத்தும் ஒருவார்த்தைசொல்லுகிறார். ஸ்ரீரகுவம்சகுலவீரனே! எண்ணமையோர்த்த முனிவர்களும், அஜசங்கராதி தேவர்களும், மற்ற திரிலோகவாசிகளும், துன்பப்பட்டு வருந்தக் கடவித்ததும், அதற்கிசைந்த கொடுந்தொழிலுமுடைய ராவணாதிராக்ஷசர்கள் இறந்து அவர்களுடைய உதிரமாமிசங்களை வாரியுண்டு களித்துப் பேய்க்கூட்டங்கள் நடனஞ்செய்யும்படி வளைத்த ஸ்ரீகோதண்டத்தைக்கையிற்பிடித்த எம்முடைய ஐயனே! உன்னுடைய சௌரியத்தை நாங்கள் எப்படிப்பட்டதென்றுநிச்சயித்துச் சொல்லுவோம். விராதனையும், கரனையும், மாரீசனையும், வெற்றி மிகுந்த கவந்தனையும், ஏழுமராமரங்களையும், வாலியினுடைய மார்பையும், சமுத்திரத்தையும், இராவணனுடைய மார்பையும், கும்பகருணனுடைய பெருவலியையும், ஒரே பாணத்தால் நாசப்படுத்திச் சேதனர்களாகிய எங்களையாவரையும் ரக்ஷித்த எம்பெருமானே! உன்னுடைய சாமர்த்தியத்தைச்சொல்ல எங்களால் முடியுமோ? கௌசலாதேவி இளஞ்சிங்கமே! முன்னேநாங்கள்செய்த அருந்தவத்தால் இந்தச்சித்திரகூடத்தில் வசித்திருந்து இதைவிட்டுச் சென்று தென்றிசைக்கணுள்ள திமைகள் யாவற்றையும் நீக்கி இந்தத் திசையை நோக்கிவந்து எம்முடைய பர்ணசாலையில் எழுந்தருளினதுவரையும், நடந்த உன்னுடைய பராக்கிரமாதிசயத்தையும் மற்றவற்றையும், நாங்கள் மறந்துவிட்டோமில்லை. இன்றைத்தினத்தில் எங்களுக்கு நல்விருந்தாக இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். வேதங்களின் பரமார்த்தத்தை நன்குணர்ந்த பரத்துவாசரானவர் ஸ்ரீரகுநாயகரைப்பார்த்து மேலுஞ்சொல்லுகிறார். எங்கள்குலதெய்வமே ஸ்ரீசானகீரமணா! ஸ்ரீகோதண்டத்தை வளைத்து உண்மையை யுடைய தேவர்களது துன்பத்தையொழித்துச் சர்வலோகங்களையுங் காக்கின்ற செந்தாமரைமலர்போன்ற கண்களையும், மரகதரத்தினம்போன்ற திருமேனியையுமுடைய தீனபந்துவே! ஸ்ரீபரதாழ்வானுடையநிலையைச் சற்றுச்சொல்லுகிறேன் கேட்டருளவேண்டும். ஸ்ரீதசரதாத்மஜனே! நீ தென்றிசையைச் சென்றபின், உன்னுடைய பிரிவால் ஸ்ரீபரதாழ்வான், தேகம் வெயர்த்தும், அன்பக்கண்ணீர் சொரிந்தும், நல்வினைதீவினைகளையும், ஸ்ரீபகவத்தாசர்களுக்குச்செய்யும் வைதிக கைங்கரியத்தையும், வெறுத்தும், மனம் பிரமையடைந்தும், மறந்து ஒருவேளை உலகத்தை பார்ப்பதாயிருந்தால் தென்றிசையையல்லாமல் மற்றதிசைகளைப்பாராமலும், பயமும் துக்கமும் ஒருருவு கொண்டதென்னும்படியாய்த்தோன்றியும் இருக்கிறான். இம்மட்டுத் தானேஇந்திரியங்களை நிக்கிரகித்துக் கனி காய்களை ஆகாரமாகப் புசித்தும், நாடு

களித்துச்சென்று குதிரைகளுக்காகக் கொல்லுவேந்த புல்லைப்பரப்பி அதன்மேற் படுத்தும், அயோத்தியா நகரத்துக்குள் பிரவேசியாமல் நந்திக்கிராமத்தில் வாசஞ்செய்துகொண்டு உன்னுடைய திருநாமத்தை மறவாமல் இரவும் பகலும் வாயாற்சொல்லிக்கொண்டிருக்கிறனென்றுசொல்லி, என்னப்பனே ஸ்ரீராமபத்திரா! ராக்ஷசகுல நாயகனுடைய இருபது நீலகுலாசலங்களை யொத்த தோள்களையும், பத்துச்சூரியர்களையொத்த முடிகளணிந்த தலைகளையும் துண்டித்துத் தள்ளிய வீர நாயகா! நாங்கள் உன்னைப் பிரிந்தது முன்பேோ உன்னுடைய பராக்கிரமாதிசய லீலைகளையும், உன் பக்த கோடிகளுடைய இருப்பையும் சார்வதாஞான திருஷ்டியால் அறிந்துகொண் டிருக்கிறோம், இம்மாத்திரமேயல்லாமல் உன்னை எங்களுடைய இருதய கமலத்தில் சாக்ஷாத்கரித்துக்கொண்டு நித்தியாநந்த அநுபவஞ்செய்துகொண் டிருக்கிற நாங்கள் உன்னை எவ்விதத்தில்பிரிந்தவர்களாவோம்ஆதலால் உன்னை நாங்கள் எப்போதும் பிரிந்தவர்களல்லோமென்று கூறினர்.

அந்தப்பரத்துவாச முனிவரைப்பார்த்துத் தம்முடைய அவதாரத்துக்குத் தக்கபடி நடிக்கின்ற ஸ்ரீராகவ பிரானுனவர் சங்கரபகவானும், நான்முகக்கடவுளுமே புகழ்தற்குத் தகுந்த மாதவ சிரேஷ்டரே! உம்மை வணங்கி உம்முடைய கிருபைக்குப் பாத்திரவானுகி உயர்ந்தேன். அது காரணத்தால் எனக்குச்சமானமான புருஷன் நானே அல்லாமல் ஒருவருமில்லையென்று சொல்லினர். பின்பு ஸ்ரீ பரத்துவாச முனிவரானவர் ஸ்ரீராமபத்திரரைக் கருணையாகப் பார்த்து, ஸ்ரீராமநாதா! உனக்கு என்னவரம் என்னல் பெற்றுக்கொள்ள வேண்டுமோ அந்தவரத்தை என்னைக்கேட்பாயாக வென்றார். அதுகேட்டருளிய ஸ்ரீராமசுவாமியானவர், இந்தவானரர்கள், தாங்கள் இஷ்டப்பட்டுச் சென்ற காடுகளி லெல்லாம், மழை காலத்தில் செழித்து உண்டாகுவது போலக் காய்கனிகளும், கிழங்குகளும், தேனும், மதுரமாகிய நீரும், நிறைந்திருக்கவும், அவர்கள் சுகசீவிகளா யிருக்கவும், வரத்தைத் தயைசெய்ய வேண்டுமென்று கேட்டருளினர். அந்த முனிவரும், அப்படியே ஆகக்கடவன வென்று ஆசீர்வதித்து எங்கள் ஐயனே ஸ்ரீரகுராமா! உனக்கும் உன்னுடைய சேனைகளுக்கும், விருந்துசெய்கிறேனென்று, ஆகவநீயம், தக்ஷிணக்கினியம், காருக பத்தியம் என்னும் மூன்றுதியாலமைத்த யாகத்தில் வேதமந்திரங்களைச்சொல்லி ஆவிப்பாகஞ்சொரிந்தார். ஆகுதிபெய்தமாத்திரத்தில் யாதொருகுறைவுமில்லாமல் சுவர்க்கலோகத்திலுள்ள எல்லா வளப்பங்களும் ஒருமிக்கவந்து அங்கே இறங்கியதுகள். அரசர்முதல்அடியார்கள் வரைக்கும் ஒருபேதமுமில்லாமல் அபரிமிதமாக அந்த வளப்பங்களை அநுபவிக்கக்கண்டு பிற்பாடு ஸ்ரீராகவபிரான் அறுசுவையுள்ள உண்டியை அமுதுசெய்யப்போகும்போது திருவடிகளைஅழைத்து, அநுமானே நாம் அயோத்திக்கு வருவதற்கு முன்பாக நீ சென்று ஸ்ரீ பரதாழ்வானைக் கண்டு எம்முடைய க்ஷேமத்தைத் தெரிவித்து அந்தப் பரதன் தான் விழுந்திறக்கும்படி தீமூட்டி யிருப்பான். அதை அவித்துவிட்டு அவனுடைய எண்ணத்தையும் அவனிருப்பையும், நீ அறிந்துகொண்டு எம்மிடம்வந்து சேரவேண்டுமென்று சொல்லித் தமது விரலாழியையுங் கொடுத் தனுப்பினர்.

உடனே ஸ்ரீ அஞ்சனாதேவி புத்திரர், தம்முடைய பிதாவினுடைய வேகமும், தம்முடைய சுவாமியினது பாணவேகமும், மனோவேகமும் பின்னிடும்படிச்சென்று கங்கையின் கரையிலுள்ள ஸ்ரீகுகப்பெருமானுக்கும் ஸ்ரீராம பத்திரருடைய வருகையையும் எழுந்தருளியிருக்கும் ஆச்சிரமத்தையும் தெரிவித்து ஆகாய மார்க்கமாகச் சென்றார். அநந்த கலியாணகுண நிலயமாகிய ஸ்ரீ ராகவ பிரான்தெற்குத்திக்கை நோக்கிச் சென்ற செய்திகள்யாவற்றையும் சொன்னோம். எம்பெருமானனவர் அக்காலத்தில் நான் பதினன்கு வருஷமானவுடன் அயோத்தியா நகரத்துக்குத் திரும்பி வருகிறேனென்றுசொன்னதை விசுவசித்திருந்த ஸ்ரீபரதாழ்வானுடைய நிலையை இனியெடுத்துச் சொல்லுவோம்: ஸ்ரீசர்வேசுரனாகிய ஸ்ரீராகவபிரான் ஆரண்ணியத்துக் கெழுந்தருளும்போது சித்திரகூடத்தண்டைவந்து கண்டுபோன ஸ்ரீபரதாழ்வானனவர், ஸ்ரீ சத்துருக் காழ்வானை நோக்கி ஹே சத்துருக்கா! ஸ்ரீசர்வ சுவாமி யானவர் அருளிய திருப்பாதுகையை நந்திக்கிராமத்தில் சிங்காதனத்தின்மேல் எழுந்தருளச்செய்து நீ ஒரு ஏவலாளியைப்போ லிருந்து கொண்டு அயோத்தியா நகரத்திலுள்ள அந்தணர் முதலிய வருணத்தார் துன்பப்படாதவண்ணம் காத்திருவென்று ஆக்கியாபித்துத் தாமும் அங்கே ஒருவரோடும் வார்த்தையாடாமல் இந்திரியங்களை நிக்கிரகித்துவிட்டுத் தமது தமையனுடைய திருப்பாதுகைகளைத் தியானித்து அர்ச்சனைசெய்துகொண்டு, பிரியே

க்கிற துக்கத்தினுல் உடல்மெலிந்து எலும்புருவமாய்நின்று, பார்ப்போர் அம்பெய்பட்டது ஒருருவங் கொண்டதுபோலத் தோன்றுகின்ருர் இவரென்னும்படியாகக் காணப்பட்டும், ஸ்ரீஸ்வாமியானவர் ஆரண்ணியத்துக்குச் சென்றதை நினைக்கும்போதெல்லாம் கண்களில் நீர்பெருக்கிக்கொண்டும் காய்கனி கிழங்குகளையல்லாமல் மற்றொன்றையும் புசியாமலும், ஸ்ரீராமபிரான் நம்மை யாட்கொள்ளும்படி வருகிறதிசை இதுவன்றோ என்று தென்றிசையையே நோக்கிக் கொண்டு உயிர்போவது வருவதுமாய் மகா துக்கத்தை அநுபவித்தும், என்னுயிர்க்கும் உயிராகிய ஸ்ரீரகுநாயகன் திருமுடி சூட்டியபின் னல்லாமல் என் துன்பம் ஒழியமாட்டாதென்று தமக்குள் நினைத்துக்கொண்டும், இருந்தனர்.

இப்படிப்பட்ட துக்காக்கிராந்தராயிருக்கின்ற ஸ்ரீபரதாழ்வானவர், ஒருநாள் திருப்பாதுகைளை அர்ச்சிக்குங்காலத்தில் ஸ்ரீராமபத்திரானவர் அயோத்திக்குத் திரும்பி வருகிறேனென்று சொல்லிய திருவாய்மை நினைத்து அந்நாள் இன்றைக்கோ வென்று சோதிஷசாஸ்திரிகளை வரவழைத்துக் கேட்டபோது அவர்களும் இன்றைக்குத் தானென்று சொன்னுர்கள். அந்தச் சொல்லைக்கேட்ட மாத்திரத்தில் ஸ்ரீரகுநாயகர் திரும்பிவருகிறே னென்ற சொல்லை நினைத்துக்கொண்டு கொலையுண்டவர்களைப்போலச் சுவாசம்அடங்கிப்பூமியில்விழுந்து மறுபடியும் எழுந்து செந்தாமரைமலரைவென்ற கண்களில் தாரை தாரையாக நீர் சொரிந்து உடலினின்றும் பிராணன் போவதும் வருவதுமாய் உஞ்சலாட அதிக மாறுவஸ்தை அடைந்து அங்கிருந்த முனிவர் முதலானவர்களைப் பார்த்து, ஓ முனிவர்களே? பொய்சொல்ல அறியாத எங்கள் அருந்தெய்வமாகிய ஸ்ரீராமநாதர், எனக்குச்சொல்லிவிட்டுப்போன நாட்கெடுவையும், நான்படுகிற துன்பத்தையும், எங்கள் தாயாகிய கௌசலாதேவியினுடைய பிரமாதிசயத்தையும் சகித்துக்கொண்டு வனத்திலேயே வாசஞ்செய்யமாட்டார். யான் செய்த பாபகர்மபலனுல் ஏதோ ஒருபங்கம் அவ்விடத்திலும் நேரிட்டு அதனுல் காலவிளம்பனம் நேரிட்டிருக்கலாமென்று தேம்பித்தேம்பி யழுவார்.

ஆ! ஆ! எங்களுடைய வீரசிகாமணியாகிய ஸ்ரீகோதண்ட பாணிக்கு எதிரே திரிமூர்த்திகளாயினும், ஸ்வர்க்கமத்திய பாதாளங்களிலுள்ள எவர்களாயினும், அபகரித்துவந்து பிராணபீதியில்லாமல் நிற்பார்களோ அவ்வவு சக்திமான்களல்லர்களே யென்று நாம்கொண்ட சந்தேகத்தை நிவர்த்திப்பார். பரதனென்பவன் ராச்சியாதி காரத்தில் இப்போது இச்சை யுடையவனு யிருப்பான் அப்படி இச்சையிருக்கிறபட்சத்தில் அந்த ராச்சியபட்டாபிஷேகத்தை அவனே அடையட்டும். நமக்கு வேண்டியதில்லை இந்தக்காட்டி லிருந்துகொண்டு தவஞ்செய்வதே நல்ல ஆத்மபலனென்று தமக்குள் ஆலோசித்துக்கொண்டு வனத்திலே இருந்துவிட்டாரோ என்று மூர்ச்சையடைவார். நான் பிராணனை மாய்த்துக்கொள்வதினுல் இங்குள்ள குடும்பத்தார் யாவரும் உயிர்மாய்த்துக்கொள்வார்கள் அப்படி என்குடும்பத்தை நான் கொலைசெய்வனுகிலும் ஆகக்கடவேன். அந்த ஸ்ரீராகவபிரானுனவர் வனத்திலேயே வாசஞ்செய்தாலும் செய்யட்டும். அல்லது அயோத்தியாபுரிக்கு வந்து அரசு செய்தாலும் செய்யட்டும். எங்களாண்டவர் வருவார் வருவா ரென்று நினைத்து இந்தத்துக்கத்தில் வருந்தமாட்டேன். என்னுயிரோடு என் துக்கத்தைப் போக்கடிப்பேனென்ருர். இப்படிப் பலபலவிதமாகச்சொல்லி ஸ்ரீபரதாழ்வானவர் ஸ்ரீசத்துருக்கனை என்னிடம் வரச்சொல்லுங்களென்று தூதரை அனுப்பினுர். அந்தத்தூதர்கள் போய்ச் சொன்னமாத்திரத்தில் ஸ்ரீசத்துருக்காழ்வானவர் விரைந்துவந்து தமது தமையனுருடைய சீர்பாதங்களை வணங்கினுர். வணங்கிய திருத்தம்பியாரைக் கண்ணீ ரொழுகி வடிகின்ற தமது மார்பி லிறுகத்தழுவி என்னையனே சத்துருக்கா! இப்போது நான் உன்னிடத்தில் கேட்டுக்கொள்ளும் வரமோ ஒரு குற்றமுமில்லாதது. ஆகையால் நீயும் சம்மதித்துக் கொடுக்கவேண்டியதே. அந்தவரம் என்னவென்று கேட்பாயாகில் நம்முடைய தெய்வநாயகனுகிய ஸ்ரீராகவப்பெருமானுனவர் முன்னே தாம் திருவாய்மலர்ந்தருளிப் போனநாள் இன்றுகும். இத்தினத்தில் எழுந்தருளாமையால் இனித்தீயைமூட்டி அதில் குதித்து இறந்துவிடுகிறேன், அயோத்தியா நகரத்திலுள்ளவர்கள் வருந்தாதபடி நீ ராஜ்யபட்டாபிஷிக்தனுகி அரசுசெய்யக்கடவாய் இதுதான்வேறொன்றுமல்லஇதைத்தடுக்காதேயென்று கேட்டுக்கொண்டார். ஸ்ரீபரதாழ்வானவர் இந்தச்சொல்லைச்சொன்னமாத்திரத்தில் ஸ்ரீசத்துருக்கப்பெருமான் தமது கைகளால் இரண்டுகாதுகளையும் மூடிக்கொண்டு திடுக்கிட்டு கண்களும் மனமும் நடுநடுங்கி விஷத்தையுண்டவரைப்போல அதிகவேதனை

ப்பட்டுத் சோர்ந்துவிழுந்து புலம்பிக்கதறிப் பெருமூச்செறிந்து மறுபடியும் எழுந்து, மனங்கொதித்து ஸ்ரீபரதாழ்வானைப்பார்த்து ஸ்ரீராகவபிரானெழுந்தருளவில்லையென்று கவலைகொண்ட என்னையனே! அடியேன் தேவரீர் விஷயத்தில் என்ன அபசாரப்பட்டேன். ஒருதம்பியானவர் திருவயோத்தியாபுரியென்னும் பூமகளைக்கைவிட்டுக் காட்டையாளும்படியாகப்போன தன்தமையனார்க்கு வேண்டிய கைங்கரியங் குறைவின்றிச் செய்யப்போனார். காட்டுக்குச்சென்ற தமையனானவர் இன்னநாளில் வருகிறேனென்று சொல்லிப்போன தவணை தப்பிப்போய்ச் சென்று ஒருதம்பியானவர் தம்முடைய உயிரைமாய்த்துக்கொள்ள யத்தனப்படுகிறார். இவற்றையெல்லாங்கண்டு நான்றுகொண்டு பிராணனை விடாமல் நான்தானோ அயோத்தியாபுரியை அரசாள இருக்கின்றேன். ஆ! ஆ! என்னுடைய யோக்கியதை நன்றாயிருக்கிறது இதென்ன ஆச்சரியம். என்னையனே! ஸ்ரீராகவபிரானார் காட்டுக்கெழுந்தருளியபின் நகரத்துக்குள் பிரவேசித்து வாழ்ந்துகொண்டிருந்தார் ஸ்ரீபரதமகாராஜனென்று உலகத்தார்சொல்லவொட்டாமல்,நீர் அயோத்திக்குப்புறம்பிலேயிருந்து இந்த அரியதவத்தையே செய்துகொண்டிருந்தீர். உமக்குப் பின்பிறந்தவனாகிய இந்தச்சத்துருக்கனென்கின்ற ஒரு அடியானிருந்தபோதிலும் இப்படிப்பட்ட சொல்லைச்சொல்லலாமோ! தேவரீர் தீயில்குதித்துப் பிராணனை மாய்த்துக்கொண்டபிறகு நான் உயிரோடிருந்தேனாகில் அதுவும், ஒரு குடையின்கீழ் இந்தப் பூமண்டலங்களை ஆளுவதும் ஒன்றுக்கொன்று சமானமானதேயல்லாமல் வேறன்று. அப்படிச்சொல்லி முறையிட்ட ஸ்ரீசத்துருக்காழ்வானை நோக்கி ஸ்ரீபரதாழ்வானானவர், தம்பீ சத்துருக்கா! நம்முடைய பெருமானானவர் இதுபரியந்தம் வாராமல் தாமசித்திருக்கிறார். இங்கே நாமும் அப்படியே சர்வசித்தமாயிருக்கிறோம் நாம் இறந்துவிட்டால்இந்தப்பூமிஅரசனில்லாமல்அலைந்துபோமல்லவா அதை அந்தக்காருண்ணியமூர்த்தியார்கேள்விப்பட்டு ஆரண்ணியத்திலேயே இருக்கமாட்டார் வந்து இந்த அரசாட்சியை ஏற்றுக்கொள்வார். அவர் இப்போதுசெய்கிற மாறுபாடும் நிலைபெறாது.ஆகையால் என்னப்பனே!சீக்கிரமாகச்சென்று அக்கினியைமூட்டக்கடவாயென்று ஆக்கியாபித்தார். அப்போது இந்தச்செய்தி அயோத்திமாநகரத்தில் சொன்னவுடனே ஸ்ரீபரத்தாமனைப்பெற்ற கற்பில் சமானமில்லாத ஸ்ரீகௌசல்யாதேவியார் வயிற்றில் மோதி அடித்துக்கொண்டு புத்திரசோகமடைந்து அழுது, என்மகனே என்மகனே நீ இறப்பாயேயானால் உடனே இந்த அயோத்தியிலுள்ள ஜனங்கள் யாவரும் இறந்துபோவதற்குச் சந்தேகமில்லையென்று துக்கமே உருக்கொண்டு நடந்ததுபோல விரைந்தோடி ஸ்ரீபரதாழ்வானை விலக்கும்படி. சென்றார் மற்ற மந்திரிமார்களும், சேனாநாயகர்களும், பிராமணர்களும், எல்லாஸ்திரீகளும் அந்நகரத்திலுள்ள யாவரும், கைகளைத் தங்கள் தலைமேல் வைத்து வாய்விட்டுக் கதறிக்கொண்டு சூழ்ந்து செல்லவும், இந்திரன்முதலாகிய தேவர்களும், அவர்களுடைய தேவிமார்களும், முனிவர்களும், ஸ்ரீபரதாழ்வானுடைய இருப்பைநோக்கி ஸ்துதிசெய்யவும், விரைந்துசென்ற ஸ்ரீகௌசல்யாதேவியானவர் தம்முடைய கூந்தலானது அவிழ்ந்தலையவும், தேகந்தடுமாறவும், கண்கள் நீர்சொரியவும், திடுக்கிட்டு, ருத்திரபூமியில் சித்தப்படுத்தியிருக்கிற நெருப்பில் விழப்போகின்ற தமது திருக்குமாரருக்கும் தீக்கும் குறுக்கேபோய் நின்றார். அப்படி நின்ற திருத்தாயாருடைய சரணகமலங்களுக்கு ஸ்ரீபரதாழ்வானானவர் தண்டன் சமர்ப்பித்தனர். தண்டன்சமர்ப்பித்த குமாரனை வாரிஎடுத்து உறுதியாக அணைத்துப்பிடித்துக்கொண்டு சொல்லுகிறார். அப்பா பரதா! சக்கரவர்த்தியார் நம்மைவிட்டுப்பிரிந்து மரணத்தைத் அடைந்ததும், ஜேஷ்டபுத்திரனாகிய ஸ்ரீராமன் நாம் படுகிற துன்பமொன்றையுங் கவனியாமல் காட்டுக்குச் சென்றதும், முன்னே நாம்செய்த தீவினைப்பயனாகும். பதினான்குவருஷங் கழிந்தபின் வருகிறேனென்று சொல்லிப்போய் அந்த ஸ்ரீராகவன் இன்னம் வராமலிருப்பதும் நாம்செய்த பாபகர்மபலந்தான். நீ அதைநினைத்துக்கொண்டு இப்படிச்செய்யத்தலைப்பட்டாய். நீ தீயில்குதிக்கநினைப்பாயேயானால் இந்தக் கோசலதேசமுழுமையும்; அரசர்களும், சதுரங்கசேனைகளும், அக்கினிப்பிரவேசஞ்செய்வார்கள். நானும், சுமித்திராதேவியும், அந்தக்கைகேயியல்ல. நாங்களும் நெருப்பில்மூழ்குவோம். இவ்வளவிலேபோகுமோ தருமதேவதையும் தீயில்குதித்து மாய்ந்துவிடும். உலகங்களும் தங்கள் நிலைகுலைந்துபோகும். என்னருங்குழந்தையே அப்பா ஸ்ரீபரதா! மநுஸ்மிருதியிற் சொல்லப்பட்ட சத்கருமங்கள்யாவும்,உன்னுடைய ஒழுக்கமேயென்று நாங்கள்நினைத்திருக்கிறோம். உன்னுடைய அருமையைச் சிறிதும் நீ அறிந்தனை,

ளையில்லை. உன்னுடைய பெருங்கீர்த்தியானது ஊழிகாலம் வந்துபோயினும் அழியுமோ அநேக ஸ்ரீராமர்களானபோதிலும் உன்னுடைய கருணையையோசித்துப்பார்த்தால் உனக்குச்சமானமாவார்களோ, இவ்வுலகஞ்செய்த புண்ணியமாகிய உன்னுடையஉயிர்போகுமேயானால் தேவர்களாயினும் இந்த மனுஷர்களாயினும் உயிரோடிருப்பார்களோ !. அந்த ஸ்ரீராமபத்திரன் இன்றைக்கு வராமற்போனால் நாளையாவது வருவான். உனக்குச் சொன்னசொல்லைத் தவறிப்போவானென்று நினைக்கவேண்டாம். நாளைக்கும் வராமல் தப்பிப்போவானே ஆனால் நாமெல்லோரும் மரணமடைவது திண்ணந்தான். தருமசுரூபி நீயேயல்லாமல் வேறில்லையென்னும்படியாய் இருக்கின்ற ஸ்ரீபரதா ! ஒப்பற்ற பரதன் இறந்துபோனானென்று துக்கித்து நெடுநாள்வாழ இருக்கிற உயிர்கள் யாவும் இறக்கும்படி செய்யப்போகிறாயோ அப்படி செய்யாதே இறத்தலும், சிலர்விட்டுப்பிரிதலும், ஒன்றின் மேற்கொண்ட மோகத்தினாலே பிறத்தலும் சேதனர்களுக்குக் கடமையென் றுணர்ந்து இந்த லோகபந்தத்தில் நின்றும் நீங்குதல் அல்லதுயான் எனதென்னும் இருவகைப் பற்றையும் துறத்தல் இது தான் ஒரு புருஷனுக்குக் கடமையென்று சொல்லப்படுவ தென்று சொல்லினர்.

இந்தப்பிரகாரம் நீதிகளை யெடுத்துச் சொன்ன ஸ்ரீகௌசல்யா தேவியைப்பார்த்து,ஸ்ரீபரதாழ்வானானவர் சொல்லுகிறார். அம்மா என் தெய்வமே ! புத்திரனானவன் என் சொல்லைத் தப்பித்து விட்டானென்று என்மேலும் நிஷ்டூரங்கொள்ளாதேயும். யான் முன்னேசெய்துகொண்ட சபதம் தவறுவேனே யானால் நம்முடைய சூரியவமிசத்தாருடையநல்லொழுக்கத்துக்குக் குற்றம் நேரிடு மல்லவா அப்படி நம்முடைய குலதர்மமானது அழியும்படியாக என்பிராணனை விரும்பி வாழமாட்டேன். முன்னே செய்து கொண்ட சபதத்தையே செய்து முடிப்பேன்.தாம் சொன்ன சொல் தப்பிப்போகாமல் யதார்த்தத்துக்குத் தம்முடைய உயிரைக் கொடுத்து ஸ்ரீவிஷ்ணுலோகத்தை அடைந்த சக்கரவர்த்தியாருக்கு நானும் புத்திரன்தானே. அப்படியிருக்க நான் சொன்னசொல்லைத் தவறிப்போகலாமோ மூத்தோர் சொன்ன சொல்லின்படித் தாம் சங்கற்பித்துக் கொண்டது பிசகாமல் நடப்பது ஸ்ரீகாகுஸ்தராகிய ஸ்ரீராம பிரானுக்கு மாத்திரந்தானா கடமை ! மற்றபுத்திரர்கள் அப்படி நடப்பது நீதியல்லவோ !. ஸ்ரீசக்கரவர்த்தியாருடைய ஜேஷ்டபாரியாகிய என் தாயே! தாயினுடைய சொல்லின்படி நடத்தலும் பிதாவினுடைய வாக்கின்படி நிறைவேற்றலும், தாய்மார் தம்பிமார்களிடத்து வைக்கவேண்டிய அன்பைப் பற்றில்லாமல் ஒழித்தலும், சர்வசுவாமியாகிய ஸ்ரீராமபிரானுக்கே கடமை. நானோ அப்படியொன்றுஞ்செய்யவில்லை. நான் இன்னது செய்வேனென்று ஆதியில் சொல்லிக்கொண்ட சொல்லை இந்தத் தீயில் வீழ்ந்து மாண்டு காட்டுவேனேயானால் ஒரு குற்றமும் இல்லாதவனாவேனென்றுசொல்லிவிட்டு மூட்டியிருக்கிற நெருப்புக்குச் சமீபத்தில்போய், அயோத்தியாபுரி ஜனங்களும் மற்றவர்களும் கோவென்று முறையிட்டு அழுதுகொண்டு பின்தொடரத் தாம் அந்த அக்கினிக்கெதிரே நின்று ஸ்ரீராமருடைய திருவடிகளைத் தியானித்துப் பூசையைச்செய்கின்ற ஸ்ரீ பரதாழ்வானுக்கு எதிரே !. ஸ்ரீ அநுமானானவர், நம்முடைய ஐயனானவர் இதோ வந்தார் யாவரும் பூசிக்கப்பட்ட ஸ்ரீராகவ பிரானானவர் இதோவந்தார் உண்மைக்கும் உண்மையாய் நின்ற உம்முடைய உயிர் நீங்கினால் அந்த ஸ்ரீராமப் பிரபுவானவர் உயிரோடும் இருப்பாரோ !. என்று ஓயாமல் சொல்லிக்கொண்டு வந்து அந்தச் சனநெருக்கங்களுக்குள் பிரவேசித்துத்தமதுகையினால் எரிகின்ற நெருப்பை அவித்துக் கரியாக்கி விட்டார். தீயைக் கரியாக்கி விட்டு வாயுபுத்திரரானவர் ஸ்ரீபரதாழ்வானுடைய சீர்பாதங்களை நமஸ்கரித்து எழுந்துநின்று வாயைக் கையாற்பொத்தி வளைந்து நின்று ஸ்ரீபரதமகாராஜரே நீர் அங்கீகரிக்கத்தக்கது ஒருசொல்லுண்டு. அதைக்கேட்பீராக, முன்னாலே ஸ்ரீராமச்சந்திரரானவர் தாம் வருகிறதாகச் சொல்லிப் போன நாள் முடிய வில்லையே. இன்னம் நாற்பது நாழிகை யிருக்கிறது. அப்படி யில்லாமற்போனால் உமக்கு முன்னே தானே நான் நெருப்பை மூட்டிப் பிராணனை மாய்த்துக்கொள்ளுகிறேன். இன்றிராத்திரியுங்கழிந்து நாளை உதயம்வரையில் உம்முடைய அடியேன்சொல்லை நம்பியிரும். என்சொல் தவறிப் போகுமேயானால் நீரும் இந்தச்சனங்களும் பிராணனை மாய்த்துக் கொள்ளுங்கள். நம்முடைய நாயகருக்குப் பரத்துவாச முனிவர் விருந்து செய்யும்படி வேண்டிக்கொண்டு அவரை அங்கே நிறுத்திவிட்டனர். அல்லாமற் போனால் உம்மிடத்தில் வராமல் கால விளம்பனமும் செய்வாரோ! இன்னமொன்றுஅடியேன்சொ

லிலக்கேளும், தேவதேவர்களுக்கும்நாயகனு கிய ஸ்ரீராகவபிரானுனவர், அதிகிருபையோ டு கொடுத்த பெரிய அடையாளம் ஒன்றுண் டு. அதை அடியேனும்கொண்டுவந்தேன். யா தொரு குற்றமு மில்லாத பரிசுத்த இருதயத் தையுடைய ஸ்ரீபரதமகா ராஜரே ! நீர் அதை ப்பாருமென்று ஸ்ரீசுவாமியினுடைய மோதி ரத்தைக் காட்டினர். காட்டிய மோதிரமான து ஸ்ரீபரதாழ்வானுக்கும் ஸ்ரீசத்ருருக்காழ் வானுக்கும் திருவயோத்தியா புரியிலுள்ளவ ர்களுக்கும், விஷத்தால் பிராணன்போகின்ற ஒருவனுக்குப் பிரயோகித்த நல்லமருந்தைப் போ லாயிற்று. முன்னாலே அழுது கொண் டிருந்த வாய்களெல்லாம் சந்தோஷ ஆரவா ரஞ் செய்தன. தாரைதாரையாய் நீர் பெருக் கிக்கொண்டிருந்த கண்களெல்லாம் அந்த நீ ரைச் சொரிந்தில. பூமியிலே வளைத்து மோ திக்கொண்டிருந்த தலைகளெல்லாம், ஸ்ரீஆஞ் சநேயருக்குக் கைகளைக் குவித்துத் தண்டன் சமர்ப்பித்துக் கொண்டு மேலே உயர்ந்தெழு ந்தன. ஸ்ரீபரதாழ்வானுனவர் அந்தத்திருவிர லாழியை வாங்கித் தமது திருமுகத்தி லணைத் துக்கொண்டு, இந்த மோதிரத்தைக் கண்டு பூ ரிப்பதற்கு நம்முடைய பரதமகா ராஜருடை ய தேகம் போதுமானதோ வென்று சொன் னவர்கள் நாணும்படி தேகம் மிகவும் பூரித்து ஸ்ரீபரதரானவர் தம்மை வணங்குகின்ற அஞ் சனு புத்திரனா வணங்கிக் குதித்துக் குதித்து க் கூத்தாடினர்.

ஸ்ரீராகவ பிரானுனவர் தம்மைப் பிரிந்து போனது முதல் அவருடைய பிரிவின் துன் பத்தையே யல்லாமல் யாதொரு சந்தோஷ த்தையும் அனுபவிக்காமையாலே, வாயால் ஊதினுல் பறந்துபோகத்தக்க நிலையிலிருந்த ஸ்ரீபரதாழ்வா னுடைய திருமேனி யானது இவர் நம்முடைய பரதமகா ராஜ ரல்லர் யா ரோ அந்நியரென்னும்படி பூரிப்பினுல் பரு த்தது. அவருடைய இரண்டுதோள்களும், தி க்குகளை யளாவும்படி வளர்ந்தனகள். இப்ப டிப் பூரித்துநின்று ஸ்ரீராமபத்திரர் தம்மிடத் து வைத்துள்ள கருணையைக் குறித்துச் சற்று நேரம் அழுவார். ஸ்ரீகாகுஸ்தரானவர் வரு வாரென்கிற மகிழ்ச்சியால் சற்றுநேரம் சிரி ப்பார். தமக்குச் சுவாமியி னுடைய திருவிர லாழியைக் கொண்டுவந்து கொடுத்தலாகிய மகோபகாரஞ்செய்த ஸ்ரீஅநுமானுக்குச் ச ற்றுநேரம் தண்டன் சமர்ப்பிப்பார். களிப்பு அதிகரிப்பதனுல் எழுந்து சற்றுநேரம் துள் ளுவார். ஸ்ரீஜானகீ ரமணனுனவர் சொல்ன

சொல் தவறினுரென்று வியர்த்தமாய் அப சாரப் பட்டோமேயென்று சற்றுநேரம் பூ மியில் விழுந்து புரண்டு அழுவார். ஆ! ஆ! ஸ்ரீ ராம சுவாமியினுடைய மோதிரமும் நமக்கு க் கிடைத்த தல்லவாவென்று பூரிப்பார். அவ ருடைய சொல்தவருத நிலையைக்குறித்து அ ச்சப்பட்டு உடல் வெயர்ப்பார். அங்குள்ள கூட்டத்தாரோடு ஸ்ரீராமருடைய கலியாண குணங்களைப்பாடிக் கைகளைக் கொட்டிக்கொ ண்டு சற்றுநேரம்ஆனந்தக்கூத்தாடுவார். அங் குள்ளவர்களைப் பார்த்து உங்களுடைய பா வங்களெல்லாம் நசிக்கும்படி பாவிகளே ! ஆநந்தத்தாண்டவம் செய்யுங்கோள் செய்யு ங்கோள், இந்தப் பரத்துவாசருடைய ஆச்சி ரமத்தண்டைதான் ஸ்ரீராமநாதர் எழுந்தருளி யிருக்கிருர் அங்கே ஓடிச் சேவியுங்கோள் சேவியுங்கோள். ஸ்ரீராமபிரானுடைய மஹா கீர்த்தியைப் பாடுங்கோள் பாடுங்கோள். இ ப்படிப்பட்ட மகோபகாரஞ் செய்த ஸ்ரீரா மதூதருடைய பாதார விந்தங்களைத் தலையி ல் சூடிக்கொள்ளுங்கோள் சூடிக்கொள்ளுங் கோளென்பார். எம்பெருமானுனவர் காட் டுக்கெழுந்தருளும்படி வஞ்சனைசெய்த மா யக்கைகேசியானவர் இனிப்பிராணனைமாய்த் துக்கொள்வா ரல்லவாவென்று தமது தோள் களைக்கொட்டுவார். ஒருபாதத்தைப் பூமியில் ஊன்றிநின்று மற்றொருபாதத்தைத் தூக்கிக் கொண்டு, நீலமலை ஆடுவதுபோல மண்டலா கிருதியாக நடனஞ்செய்வார். சுவாமியினு டைய புகழைப்பாடுவார். தமக்கெதிரேயுள் ள பிராமணர்களைநோக்கி நீங்கள் ஆசாரத்தில் வழுவாமல் நடக்கும்படியாக நல்லகாலம் நேரிட்டதல்லவாவென்று அவர்களை நமஸ்கரி ப்பார். அரசர்களைப்பார்த்து நீங்கள் ராஜதர் மங்களில் பிசகி ஒருவரோடொருவர் கலகித் து நாசமடையாமல் நீதியோடு ராஜ்ஜியபா லனஞ் செய்து ஒருவருக் கொருவர் அந்நி யோந்நியமா யிருக்கும்படி நல்லகாலம் இப் போது சம்பவித்ததல்லவா வென்று அவர் களைத் தொழுவார். தாதியர்களைப்பார்த்து, கூனியென்னும் மகாபாதகியானவள் நம் முடைய பெருமான் பக்கலில் அபசாரப்ப ட்டு நாமெல்லாம் வருந்தும்படியாக இவ்வ ளவு தீமைகளைச் செய்ததுபோல நீங்கள் யாதொரு தீமையும் செய்யாமல் உத்தமிக ளா யிருக்கிறீர்க ளல்லவா வென்று அவர்களு க்குத் தண்டனிடுவார். இனி ஸ்ரீராகவபிரான் பட்டாபிஷேகஞ்செய்துகொண்டு சிங்காதன த்தின்மேல் எழுந்தருளியிருக்க அவருக்கு

வேண்டிய குற்றேவல்களைச்செய்து யான்
உஜ்ஜீவிப்பதற்கு உபயோகியா யிருப்பது
இந்தத்தேகமல்லவாவென்று தம்மைத்தாமே
கும்பிடுவார். உன்மத்தராய்ச் சற்றுநேரம் உட்
கார்ந்திருப்பார். நிமிர்ந்திட்டு எழுந்திருந்து சற்
றுநேரம் நிற்பார். ஸ்ரீராமபிரான் பக்கலில்
கொண்ட ப்ரீதியானது ஸ்ரீபரதாழ்வானை இ
ப்படி யெல்லாம் செய்விக்குல் அந்தப்
ப்ரீதியென்பது மயக்கத்தைத்தருகின்ற மது
விலே பிறந்ததுதானோ! அறியோம். இந்த
விதமாக ஆநந்தப்பரவசராய்நின்ற ஸ்ரீபரதா
ழ்வானுனவர் ஸ்ரீஆஞ்சநேயனைப்பார்த்து நீ
திரிமூர்த்திகளில் ஒருவனு யிருக்கலாமென்று
நினைக்கிறேன் நீ பிரமசாரி உருவங்கொண்டு
வந்தது வாஸ்தவமன்று உண்மையாக நீ யா
ரோ அதை எங்களுக்குச் சொல்லவேண்டுமெ
ன்றுகேட்க ஆஞ்சநேயர்சொல்லுகிறார். ஸ்ரீரா
மசந்திரர் பக்கலில் அதி பக்திமானவராகிய
ஸ்ரீபரதாழ்வானே! அஞ்சனுதேவியானவர்
திருமலையில்நின்ற திருக்கோலமா யிராநின்ற
ஸ்ரீநிவாசப்பெருமாளைநோக்கி நெடுநாள் த
வஞ்செய்து அந்தத்தவத்தின் பலனாக வாயு
பகவானுக்கு என்னைப்பெற்றாள். நானே உம்
முடையதலைவனாகிய ஸ்ரீராகவபிரானுக்கு
அடிமைத்தொழில் செய்கின்ற ஏவலாளன்.
எனக்கு இயற்கையான உருவம் ஒரு குரங்கி
னுடையவடிவம். அவ்வுருவத்தைமாற்றிக்கொ
ண்டு இங்கேவந்தேன். அடிமைத்தொழில்
செய்கின்ற நாயினேனுடைய அற்ப உருவத்
தை உம்முடைய தாமரைமலர்போன்ற கண்
களால் பார்த்தருளுமென்று பொய்யாகிய
பிராமண உருவத்தை நீக்கிவிட்டு, தேவர்களு
டைய கண்ணுக்கும் எட்டாததூரத்தில் தமது
முடியானது உயரும்படியாக வளர்ந்துநின்
றார். திருவடிகளுடைய உருவத்தைக்கண்டு
ஸ்ரீபரத சத்ருக்னர்களும், வசிஷ்டரிஷியும்,
இது ஆச்சரியப்படத்தக்க உருவமென்று நி
னைத்தார்கள். அங்குள்ளசேனுவீரர்களெல்லா
ம் அவருடைய திருமேனியைக்கண்டு பயத்
தால் இறக்காமற்போயினும் பிராணபீதிய
டைந்தார்கள். அப்போது ஸ்ரீபரதாழ்வானு
னவர், ஹே ஆஞ்சநேயா! இங்கேநின்று நா
ங்கள் சொல்லுகிற சொற்கள் உன்னுடைய
குண்டலங்களணிந்த காதுகளில் நுழைய மா
ட்டாதுகள். இந்த அழிவில்லாத உருவத்தைச்
சீக்கிரமாகக் குறுகச்செய்வாயென்று வேண்
டிக்கொண்டார். உடனே திருவடியானவர்
தம்முடைய திருவுருவத்தைப் பழையபடி
சுருக்கிவணங்கிக்கொண்டு எதிரேநின்றார். அவ
ருக்கு ஸ்ரீபரதாழ்வானுனவர் திரவியமும்
ஆபரணங்களும் முதலியவற்றைப் ப்ரீதியி
னுல்கொடுத்து ஸ்ரீசத்ருக்னாழ்வானைநோக்
கித் தம்பீ சத்ருக்னா! ஸ்ரீராகவபிரான் பர
த்துவாசருடைய ஆச்சிரமத்தில் எழுந்தருளி
யிருக்கிறார் அவரை எதிர்கொண்டு போகும்ப
டி அயோத்தியாநகரத்துள்ள ஜனங்களைப் பிர
யாணஞ் செய்யுங்களென்றும், தோரணங்க
ள்நாட்டி, மேலேகொடிச்சீலைசுற்றிப் பூரணகல
சங்களைவேதிகைகளின்மேல்வைத்து இப்படிப்
பட்ட சர்வாலங்காரங்கள் செய்யுங்களென்
றும், ரத கஜ துரகங்களுக்கு அலங்காரம்பண்
ணுங்களென்றும், அயோத்தியாநகரத்தின்
மதில்முதற்கொண்டு பாத்துவாசர்வசிக்கும்
வனம்வரைக்கும் முத்துப்பந்தர்போடுங்கோ
ளென்றும், பறைஅறைவித்துத் தெரிவிப்பா
யென்று உத்திரவுசெய்தார் இந்தவண்ணம்உத்
திரவு செய்த மாத்திரத்தில் ஸ்ரீ பரதாழ்வானு
டையதிருவடிகளைவணங்கிச் சத்ருக்னப்பெ
ருமானுனவர், குற்றமில்லாத நூற்கேள்விகளை
யும்அவற்றிற்குத்தக்கஒழுக்கத்தையுமுடையசு
மந்திரனுக்கு இப்படி நகராலங்காரஞ்செய்வி
க்கும்படி தெரிவித்தார். அந்தக் கட்டளையை
ப் பெற்றுக்கொண்டு குதூகலமான சித்தமு
டையவராய்ச் சுமந்திரனென்னும் முதன் மந்
திரியானவர் வள்ளுவர்களை அழைப்பித்து ஸ்ரீ
ராமச் சந்திரர் சித்திர கூடத்தில் எழுந்தருளி
யிருக்கிறார் அவரை எதிர்கொண்டு போம்படி
புரவாசிகள்யாவரும் பிரயாணப்படவும், நக
ரமுழுமையும், ரதகஜதுரகபதாதிகளும், அல
ங்காரஞ்செய்யவும், அயோத்திமாநகரமுதற்
கொண்டு பரத்துவாசருடைய ஆச்சிரமம் வ
ரையில் முத்துப்பந்தர் போடவும் முரசங்
கொட்டித் தெரிவிக்கக்கடவீர்களென்று ஆ
ஞ்ஞாபித்தார். அவருடைய ஆக்கினையின்படி
வள்ளுவர்கள் யானைகளின்மேலேறிச்சென்று
சுவர்க்கத்தையும் திக்குகளையுங் கடந்து சென்
ற மகாகீர்த்தியையுடைய ஸ்ரீராகவபிரானுக்கு
எதிர்கொண்டு போகும்படி நகரஜனங்களும்,
அரசர்களும், சதுரங்கசேனைகளும் எழக்கட
வீர்கள். நகரத்தை அலங்காரம் செய்யக்கட
வீர்கள். அயோத்தியாநகர் மதில்முதல் சித்திர
கூடம் வரையில் முத்துப்பந்தல் போடக்கட
வீர்களென்று பறைசாற்றினர்கள். வள்ளுவர்
கள் கொட்டிய முரசொலியைக் கேட்டமாத்
திரத்தில் ஆச்சரியகரமாய் இனத்து கொண்டு
திருவயோத்தியாபுரியிலுள்ள பிரம க்ஷத்திரிய
வைசிய சூத்திர சாதுர் வருணத்தார்களும்,
அவ்விடக்கூடாத களிப்பையுடையவர்களாய்

விரைவாக அலங்காரஞ் செய்துகொண்டு பிர யாணத்துக்குச் சித்தமானார்கள். தோஷரஹித ராகிய ஸ்ரீராமநாதனை எதிர்கொள்ளவேண்டு மெனக் கொட்டிய பேரிகையின் ஓசையான து அந்நகரவாசிகளுக்கு நெடுநாள் தரித்திர த்தால் வருத்தப்பட்டுக்கொண்டிருந்த ஏழை களுக்குத் திரவியக்குவியல்யாதொருமுயற்சி யும் இல்லாமல் எதிர்ப்பட்டாற்போலவும், மு ன்னேதிருக்கலியாணத்தினிமித்தம் ஸ்ரீமிதிலா புரிக்குப்பிரயாணப்படும்படி கொட்டியமுர சொலியைப்போலவும்இருந்தது. முரசொலி யைக்கேட்டு அலங்கரித்துக்கொண்டு ஆயத்த மான அறுபதினாயிரம் அக்குரோணி சேனைக ளும், ராஜநாயகர்களும், மற்றவர்களும், அவ ரவர்களுடைய சுபத்தினிமார்களும், தாங்கள் வெகுதினமாக அடையவேண்டுமென்று கோ ரியிருந்தபொருள் தானேவந்து கிடைத்தாற் போலச் சந்தோஷங் கொண்டாடிக்கொண்டு சென்றார்கள். எங்களுடைய துக்கநிவாரணார்த் தத்துக்குக்காரணபூதர்கள் இவர்களல்லவாவெ ன்று தேவர்கள் நெருங்கித் தோத்திரஞ்செய் து கும்பிடும்படியாகத் தாய்மார்கள்மூவரும் பொன்னால் செய்யப்பட்ட மணிகளிழைத்த தண்டிகைகளில் சென்றார்கள். தமக்குத்தா மே சமானமானவர்களாகிய முனிசிரேஷ்டர் களும், பந்துஜனங்களும் சூழ்ந்துவரச்சத்து ருக்கனோடு ஸ்ரீபரதாழ்வானவர் திருவடிக ளுடைய கையைப்பற்றிக்கொண்டு ஸ்ரீராகவ பிரானுடைய திருப்பாதுகைகளைத் தமது ச டைமுடியின்மேல் எழுந்தருளச்செய்து,இரு புறத்திலும் சாமரைவீசவும் வெண்பட்டுக்கு டைபிடிக்கவும், எழுகடலினோசையைப்போ ல - ரத - கஜ - துரகங்களினோசை கோஷிக்க வும் சென்றனர். பீதாம்பரதாரியாய் மணி மகரகுண்டலங்களைத் தரித்தவராயும் செந்தா மரைமலர்போன்ற நேத்திரங்களை யுடையவ ராயும் சங்குசக்கர முதலிய பஞ்சாயுத பாணி யாயும் எனக்குள் எழுந்தருளியிராநின்ற ஸ்ரீ கோதண்டதீக்ஷாகுருவை எதிர்கொள்ளும்ப டியாய் ஸ்ரீபரதாழ்வான்செல்கின்றார் என்னு டைய கிரணவெப்பத்தால் கந்தகிநிறைந்த வழி தாமரசமலர்போன்ற அவருடைய பா தங்களைச்சுடும் ஆதலால் நான் மறைந்துவிடு கிறேனென்று போகின்றவனைப்போலச் சூரி யபகவான் அஸ்தமனமானார். ஆஞ்சநேயரு டைய கையைப்பற்றிச்செல்ற ஸ்ரீபரதாழ் வானவர், பொழுதுபோனவுடனே ஸ்ரீ அநு மானைப்பார்த்து ஸ்ரீலக்ஷ்மிபதியாகிய ஸ்ரீ ராமச்சந்திரானவர், எந்தஇடத்தில் இப்போ து வசித்துக்கொண்டிருக்கிறார் அங்கே தங்கி யிருப்பதற்குக் காரணம்யாது அவற்றையெ ல்லாம் சாங்கோபாங்கமாகச் சொல்லக்கட வாயென்றுகேட்டார். என்று கேட்டமாத்திர த்தில் ஆஞ்சநேயரானவர் ஸ்ரீபரதாழ்வானுக் குத் தண்டன்சமர்ப்பித்து எம்பெருமானான வர் திருவயோத்தியாபுரியில் இருந்ததும் ஸ்ரீ மிதிலாநகரத்துக்குச்சென்று திருக்கலியாண மகோச்சவத்தை நிறைவேற்றிக்கொண்டு திரு வயோத்தியாபுரிக்குத் திரும்பி எழுந்தருளிய தும், தேவரீர் அறிந்திருக்கின்றனவே யல்லா மல் அடியேன்சொல்லவேண்டியதில்லை யன் றோ! சித்திரகூடத்தைநீங்கிச்சென்றபின் பத் துத்தலைகளையுடைய ராவணனோடு நடந்தயுத் தமும், இந்தப்பரத்துவாசருடைய ஆச்சிரம த்தை அடைந்ததுமே முடிவாகுமென்று ஸ்ரீ ராமபிரானுடைய திவ்விய சரித்திரங்களைச் சொல்லத்தொடங்கினார். ஸ்ரீபரதமகாராஜனே ஸ்ரீகோதண்டத்தைக் கையிற்றாங்கிய எம்பெ ருமானானவர் சித்திரகூடபர்வதத்தை நீங்கிச் சென்றபின்பு விராதனென்னும் ஒருராக்ஷச னைக்கொலைசெய்து தபோநிதிகள் வாசஞ்செ ய்கின்ற தண்டகாரண்ணியத்தைச் சேர்ந்தார். அங்கேயிருந்த அருந்தவமுனிவர்யாவர்களும் ஸ்ரீசர்வசுவாமியின் பக்கலில்வந்து ஸ்ரீராமப் பிரபுவே! நாங்கள் ராவணகும்பகருணாதி ரா க்ஷசர்களுக்கு எங்கள் தபோபலம் அழிந்து போனோம். அவர்கள்செய்கிற உபத்திரவத் தால் யாகாதி சத்கருமங்களையும் செய்வதில் லை என்று முறையிட்டுக்கொள்ளவே ஸ்ரீராம நாதரானவர் கருணைசுரந்து தண்டகாரண்ணி யவாசிகளே! ஸ்ரீபகவத்பக்தமான சீலர்களா கிய உங்கள்பக்கலில் அபசாரப்பட்ட அந்த ராக்ஷசர்களையெல்லாம் என்கையிலுள்ள கோ தண்டத்தைவளைத்துக்கூர்மையுள்ள அம்புக்கு இரையாக்கி நாசப்படுத்துகிறேன். இதுசத்தி யமாகும். நீங்கள்உங்கள்மனத்திலுள்ள கிலே சங்களை ஒழிக்கக்கடவீர்களென்று அவர்களு க்கு அபயபிரதானங்கொடுத்து அங்கேபத்து வருஷம் வசித்திருந்தனர். அப்போது தண் டகாரண்ணிய முனிவர்கள்யாவரும் நித்தநித் தமும் ஸ்ரீராமபிரானுடைய ஜகன்மோஹனா கார திவ்வியமங்கள விக்கிரக சௌந்தரியத் தைத் தங்கள் கண்களாரச்சேவித்தும் விட்டு ப்பிரிய மனமில்லாதவர்களா யிருந்தபோதி லும் மேலேநடக்கவேண்டிய ராவணாதிகளைச் செயம்பெறுதலை யோசித்து ஸ்ரீராகவபிரா னே நீர் இந்தவனத்துக்குச் சமீபத்திலுள்ள அகஸ்தியருடைய ஆச்சிரமத்துக்குப் போ

சக்கடவியென்று ஆக்ஞாபிக்க உடனே அங்கிருந்து புறப்பட்டுச்சென்றார். அகஸ்தியமுனிவரானவர் ஸ்ரீகாகுஸ்தர் எழுந்தருளுவதை முன்னதாக அறிந்து எதிர்கொண்டுவந்து அழைத்துச்சென்று திவ்வியமாகிய ஒருவில்லையும், அம்பறாத்தூணியையும், கவசத்தையும், வாளாயுதத்தையுங் கொடுத்தனர். அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சடாயுவென்னும் கழுகின்ராஜனைக்கண்டு சானகிபிராட்டியாரோடும் இளையபெருமாளோடும் கூட சோலைகளடர்ந்த பஞ்சவடியில் வாசஞ்செய்தார். அங்கே நம்முடைய ஆண்டவனானவர் சுகமாக எழுந்தருளியிருக்கும்போது, ராக்ஷசகுலத்தார் நெடுநாளாகச் செய்துவந்த பாபங்களெல்லாம் ஒன்றாய்த்திரண்டு ஒருருவமாய்நின்ற சூர்ப்பநகை யென்பவள்வந்து ஸ்ரீசானகிபிராட்டியாரைச் சீறிச்சென்றாள். அதுகண்ட இளையபெருமாளானவர் பிராட்டியாருக்குப் பயநிவர்த்திசெய்து, அந்த ராக்ஷசியினுடைய காதுகளையும், மூக்கையும், ஸ்தனங்களையும் கொய்து துரத்திவிட்டார். உடனே அவள்ஓடி, கரனிடத்திலே சென்று முறையிட்டாள். அதுசெய்திகேட்ட கரனும், திரிசிரனும், தூஷணனும், மூன்று வடவாக்கினி மூண்டெழுந்தாற்போல உடன்சேர்ந்து சேனைகளோடு அதிகவிரைவாகவந்து எதிர்த்தார்கள். நம்மையனானவர் தமது திருக்கரத்திலே பிடித்திருந்த ஸ்ரீகோதண்டத்தைக் கண்ணால் பார்த்தமாத்திரத்தில் அவர்கள்யாவரும் தீப்பொறிப்பட்ட பஞ்சுக்குவியலையொத்து நாசமாயினார்கள். அம்மூவரும் ஸ்ரீராமபாணத்தால் நாசமானதைக்கண்ட சூர்ப்பநகையானவள் இலங்காநகரத்துக்குப்போய் இராவணனிடத்தில் சொல்லி முறையிட்டுக்கொண்டாள். அந்தப் பாபிஷ்டன் வஞ்சகமாகிய மானையொன்றேவிப் பிராட்டியாரைவிட்டு ஸ்ரீராமலட்சுமணர்கள் பிரியச்செய்து தான் திரிதண்டத்தைக் கையிற்பிடித்து வைதிகமார்க்கச் சந்நியாசிவேடங்கொண்டுவந்து நம்முடையதாயை நிலத்தோடுபேர்த்தெடுத்துக்கொண்டு போகும்போது,வந்துஎதிர்த்த சடாயுவைப் பூமியில்விழும்படி சிவமூர்த்தி கொடுத்த வாளாயுதத்தால் அவருடைய சிறகைவெட்டித் தள்ளிவிட்டு அதிதுக்கத்தோடு உருத்தட்டக்கொண்டிருக்கின்ற பிராட்டியாரை அசோகவனத்தில் சிறைவைத்துவிட்டான். [illegible]னும் மானைத் துரத்திச் சென்று [illegible] கொலைசெய்து திரும்பி வருகின்ற [illegible] வழியிலே இராமாநுஜனைக்கண்டு மனக்கிலேசத்தோடு அதிகவிரைவாய்வந்து குற்றுயிராய்க் கிடக்கின்ற தமது தந்தையாகிய சடாயுராஜனைக்கண்டு மிகுதியும் துன்பப்பட்டு அவர்க்குச்செய்யவேண்டிய கடன்களைச் செய்துவிட்டுத் தேவியாரைத் தேடிக்கொண்டு தெற்குத்திசையை நோக்கிச்செல்லுகையில் கவந்தனைச் சம்ஹரித்து அவனுக்குச் சாபவிமோசனஞ்செய்து தம்முடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்த சபரியானவள்செய்த பூசனையை ஏற்றுக்கொண்டு அவள்சொன்ன அடையாளப்படி கிட்கிந்தைக்குவந்துசேர்ந்தார். இளையபெருமாளோடுவந்த ஸ்ரீராமநாதர் ஸ்ரீசுக்கிரீவமகாராஜனைச் சிநேகித்து வாலியினாலுண்டாகிய துன்பத்தைநீக்கி உனக்கு முடிசூட்டுகிறேனென்று அபயங்கொடுத்துப் பின்பு மராமரமேழையும் மகாபராக்கிரமசாலியாகிய வாலியினுடையமார்பையும் ஊடுருவிச்செல்லும்படி பாணப்பிரயோகஞ்செய்து ஸ்ரீசுக்கிரீவமஹாராஜருக்குப் பட்டாபிஷேகஞ் செய்தனர். அடுத்துவந்த மாரிகாலம் ஒழிந்தபிறகு, கவயன், இடபன், நீலன், மயிந்தன், சாம்பன், சதவலி, பநசன், அங்கதன், முதலிய வானரசிரேஷ்டர்களும், எழுபதுவெள்ளம் வானரர்களும் சூழும்படி ஸ்ரீமகாராஜாவானவர் ஸ்ரீராமசுவாமி பக்கலில்வந்து சேர்ந்தார். ஸ்ரீராமபத்திரருடைய அநுமதிபெற்றுத் தேவியாரைத் தேடும்படி ஒவ்வொரு திக்குக்கும் இரண்டுவெள்ளஞ்சேனைகளை அனுப்பித்தேடும்படிமஹாராஜா அனுப்பினார். தென்திசையில் இரண்டுவெள்ளஞ் சேனையோடுசென்ற அங்கதப்பெருமானும் சாம்பவரும் என்னை இலங்கைக்குள் பிரவேசிக்கும்படி ஏவினார்கள் நானும் மகேந்திரமலையிலிருந்து பாய்ந்து லங்காநகரத்தைச் சேர்ந்து ஸ்ரீசகன்மாதாவைக் கண்டுசேவித்து நான்திரும்பிவந்து ஸ்ரீசர்வசுவாமிக்குச் செய்திசொன்ன மாத்திரத்தில் வானரவெள்ளங்களெல்லாமோடும்வந்து தென்சமுத்திரக்கரையைச் சார்ந்தார். அதுசமயத்தில் மெய்ஞ்ஞானத்துக்கும் மெய்ஞ்ஞானம்போன்ற ஒழுக்கமுடைய ஸ்ரீவிபீஷணாழ்வானானவர் தமையனாகிய ராவணனைப் பார்த்து நீ ஸ்ரீசீதாபிராட்டியாரைவிட்டு ஸ்ரீராமபிரானை சரணாகதிஅடை. இல்லாவிட்டால் உன்னுடைய சம்பத்தும் ஆயுசும் முடிந்து நாசமடைவாய் என்று சொன்னார். அந்தநீதிமொழிகளைக்கேட்டுத் துராத்துமாவாகிய தசக்கிரீவனானவன் மிகுந்த கோபிஷ்டனாய் அவரைச்சீறினான். உடனே சுத்தசீலராகிய ஸ்ரீவி

பீஷணாழ்வானானவர் காருண்ணிய மூர்த்தியாகிய தாசரதியைச் சரணம்புகுந்தார். சரணமடைந்த அவருக்கு ஸ்ரீகாகுஸ்தரானவர் அபயப்பிரதானந்தந்து இலங்கா நகரத்துக்கு அரசன் இவனேதானென்று வாக்களித்துப்பிற்பாடு வருணனைக்குறித்து உபாசித்தார்.

வருண பகவானோ சற்றுத் தாமதஞ் செய்தான். அதுகண்டு ஸ்ரீராம பிரானுக்கு இரண்டு நேத்திரங்களும் சிவந்தன. உடனே சமுத்திரமும் வருண பகவானுடைய உடம்பும் வெந்துபோயின. அந்தச் சமுத்திரராஜன் அபயமென்றுசொல்ல அவனுக்கு அபயங்கொடுத்தார். உடனே வானரவீரர்கள் மலைகளைக் கொண்டுவந்து சமுத்திரத்தை அணைகட்டி அதன்வழியாகச்சென்று இலங்கையைமுற்றுகை போட்டுக் கொண்டு ஆரவாரித்தார்கள். அவ்வோசையைக்கேட்டுத் தேவர்களும் ராக்ஷச பயந் தீர்ந்தார்கள். அப்போது வெள்ளிமலையைப் பேர்த்தெடுத்த ராவணனுடைய இருபது தோள்களையும் அஷ்டதிக் கஜங்களினது தந்தங்களை முறித்த மார்பையும், பத்துத்தலைகளையும், அம்புகளால் அறுத்துத்தள்ளிக் கும்பகருணனுடைய தோள்களையும் கால்களையுங் கண்டித்து மற்ற ராக்ஷசர்களையும் நாசப்படுத்திச் சுவாமியானவர் தேவர்களுடைய துன்பத்தை நீக்கினர். ஸ்ரீராமாநுஜரானவர் இந்திரஜித்துவையும் மற்ற தம்பிமார்களையும் மற்றவர்களையும், தம்முடைய அம்பினால் துண்டித்து வீழ்த்தினர். தேவர்கள் யாவரும் புஷ்பமாரியைத்தூவி இறந்த ராக்ஷசக் கூட்டங்களில் கவந்தங்கள் கூத்தாடுவதைக் கண்டு சந்தோஷித்தார்கள். தேவர்களும், முனிவர்களும், சித்தர்களும், அவரவர்களுடைய பத்தினிமார்களும், மற்ற திரிலோக வாசிகளும், தனித்தனியாக ஸ்ரீராகவ பிரானைப் புகழ்ந்து மொய்த்துக் கொள்ள அப்போது காயாம்பூவைப்போலுந் திருமேனியையுடைய ஸ்ரீ ஜானகி ரமணரானவர், விபீஷிணருக்கு நீதிகளைச்சொல்லி இறந்தவர்களுக்கு உத்தரகிரியைகளைச் செய்வித்து, ஸ்ரீ லக்ஷ்மணனைக் கொண்டு அவருக்குப் பட்டங்கட்டுவித்தார். இவையெல்லாம் நடந்தபின் தம்மிடத்தி லெழுந்தருளிய ஸ்ரீஜானகி பிராட்டியாரைச் சுவாமியானவர் சீறியருளினர். அதுகண்டு பிரமதேவனும், சிவனும், இந்திரனும், மற்ற தேவர்களும், ஸ்ரீதாசரதியைத் தோத்திரஞ்செய்து நிற்க, அக்கினிபகவான் சொன்ன சொல்லால் கோபந் தீர்ந்தார். சத்தியத்துக்குப் பிராணனைக்கொடுத்த சக்கரவர்த்தியானவர் விமானத்தின்மேல் அங்கே எழுந்தருளினர். ஸ்ரீராகவபிரானும், பிராட்டியாரும், இலட்சுமணரும், சக்கரவர்த்தியாருடைய பாதத்தில் விழுந்து சேவித்தார்கள். சேவித்தவர்களைத் தனித்தனி ஆலிங்கனஞ்செய்து, ஸ்ரீரகுபதியை நோக்கி என்னால் உனக்கு வேண்டிய வரம் பெற்றுக்கொள் என்று கேட்டார். அதற்கு ஸ்ரீராம பிரானானவர் என்னையனே: தம்முடைய கருணையால் என்னையெடுத்து வளர்த்த தாயும், அவருடைய புத்திரனும் முன்போலவே எனக்குத்தாயும் தம்பியு மாகும்படி வரந் தயைசெய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டானர். சக்கரவர்த்தியாரும் அப்படியே ஆகுகவென்று வரந்தந்துபோனார். தேவர்கள் உமக்கு வேண்டிய வரத்தைக் கேளுமென்று கேட்டுக்கொள்ள அதற்குச் சுவாமியும் இறந்தவானரர்கள் உயிர்த் தெழுந் திருக்கவும், எல்லா வானரர்களும் சென்ற இடங்களிலெல்லாம் உணவுகள் குறைவின்றிக் கிடைக்கவும் சுகசீவிகளா யிருக்கவும் வரந்தரவேண்டுமென்று கேட்க அத்தேவர்களும் உம்முடைய கருணையால் அப்படியே ஆகுக என்று சொல்லிப் போயினர்கள். தென்னிலங்கை வேந்தராகிய ஸ்ரீவிபீஷிணாழ்வானானவர், அதிக விரைவாய் அயோத்திக்குப் போகவேண்டு மென்கிற குறிப்பை அறிந்து கொண்டு புட்பக விமானத்தைக்கொடுத்தார். அதன்மேல் ஸ்ரீராகவபிரானும், சீதாபிராட்டியாரும், இலட்சுமணரும், மகாராஜாவும், ஸ்ரீவிபீஷிணாழ்வானும், சாம்பவர் முதலிய படைவீரர்களும், இருவகைச் சேனைகளும் ஆரோகணித்துக்கொண்டு பரத்துவாசருடைய ஆச்சிரமத்துக்கு வந்து சேர்ந்தார்கள். சேர்ந்தபின்பு ஸ்ரீரகுபதி யானவர் உம்மிடத்துள்ள பிரேமாதிசயத்தாலே என்னை அழைத்து விரலாழியைக் கொடுத்து நீ விரைவாகச் சென்று இதைக்காட்டி என் தம்பியாகிய ஸ்ரீபரதாழ்வானுடைய துன்பத்தை முழுமையும், நீக்கிவரக் கடவாயென்று என்னை அனுப்பினரென்று சாங்கோபாங்கமாகச் சொல்லினர். சமுத்திரத்தைத் தாண்டி ராக்ஷசர்களுடைய நகரத்தை எரியூட்டிய வாயுபுத்திரரானவர் சொல்லிக்கொண்டுவரக் கேட்டருளிய ஸ்ரீ பரதாழ்வானானவர் கண்ணீர் பெருக்கிக்கொண்டு ஸ்ரீ அநுமானே! இலங்கா நகரத்தில் ராக்ஷசவேட்டையாடிய நீலமேகம்போன்ற திருமேனியையுடைய ஸ்ரீராமபத்திரர்க்குப்பின்தொடர்ந்து சென்றான் ஒரு தம்பி. அவருடைய சரித்திரங்களைக்கேட்டுக்கொண்டிருப்பேனாகிய நானும் ஒரு தம்பியாயிரு

கிறேன். என்னுடைய அடிமைத்தொழிலும் மகாகீர்த்தியை யுடையதன்றோ! என்று சொல்லிக்கண்ணீரொழுக அழுதுகொண்டு ஆஞ்சநேயருடைய காதினை வலக்கரத்தாற் பற்றி அந்த இருளிலே கால்நடையாகச் சென்று சூரியோதயத்துக்கு முன்னே கங்கைக்கரையைச் சேர்ந்தார். கீழ்த்திசைக் காவலாளியாகிய இந்திரனானவன், எம்பெருமான் இராவணவேட்டையாடித்திரும்பி அயோத்தியாநகரத்துக்கு எழுந்தருளிப் பூதேவியும் சீதேவியும் உள்ளங் குதுகலிக்கும்படி தரித்துக் கொள்ளும் பொன்னாற்செய்த கிரீடத்துக்குத் தகுந்த சிகாமணியை யெடுத்தாற்போலச் சூரியனுதயஞ் செய்தான்.

சூரியோதய மானவுடன் ஸ்ரீபரதாழ்வாருனவர் காலைக்கடன்களைச் செய்து ஸ்ரீசக்கரவர்த்தித்திருக்குமாரருடைய திருப்பாதுகளை யர்ச்சித்து, ஆஞ்சநேயனைநோக்கி, பிலவங்கசிரேஷ்டனே! நீ சொல்லிய சொல் தவறிப் போய்போ லிருக்கிறது. நீ நவவியாகரண பண்டிதனாகையால் உன்னுடைய சொல்லுக்கு எதிர்சொல் சொல்லுவாரு முண்டோ! ஸ்ரீராமநாதரோடுகூட எழுபது வெள்ளம் வானரசேனைகளும் ராக்ஷசகுல ராஜனுடைய அளவில்லாத ராக்ஷசசேனைகளும் இதோ தோன்றுகிற பாரத்துவாசருடைய ஆச்சிரமத்தில் வந்திருக்குமேயானால் சமுத்திர கோஷம்போல ஆரவார மில்லாமல் இருக்கவுங்கூடுமோ! மஹாவீரசிகாமணியே! எம்பெருமான் எழுந்தருளினானென்று சொன்னது சத்தியந்தானோ! நீசொன்ன பாரத்துவாசருடைய சோலை நமக்கு இரண்டுயோசனை தூரத்தி லிருக்கிறது சமுத்திரம் பெருகிப் பொங்கியதை ஒத்திருக்கக்கூடிய எழுபதுவெள்ள வானரசேனைகளும், மற்ற ராக்ஷசவீர சேனைகளும், இந்தச் சோலையில் தங்கியிருப்பது யதார்த்தமே யானால் சிறிதும் அரவமில்லாம லிருப்பதுமுண்டோ ! இதென்ன ஆச்சரியம். நீ எனக்கு ஆசை காட்டி அழைத்துவந்தது போதும்போதும். எது எப்படி யிருந்தபோதிலும் இருக்கட்டும். ஐயா மகாநுபாவா! நீ சொன்ன எங்கள் ஸ்ரீரகுகுலதிலகருடைய என்பிராணபதமாகவும் இருக்கிற ஸ்ரீசக்கரவர்த்தித்திருக்குமாரர் எங்கே இருக்கிறார் என்று அதிகதுக்கமும் கோபமுந் தோன்றக் கேட்டருளினார். ஸ்ரீபரதாழ்வாருனவர் அப்படி உரைத்துக் கேட்டருளும்போது ஸ்ரீ அநுமாருனவர் அவர்க்குத் தண்டன் சமர்ப்பித்துச் சொல்லுகிறார். ஸ்ரீதாரகமந்திரவாச்சிய திவ்விய சரித்திர குலபுங்கவ புருஷோத்தமனே! யான் சொன்னதுபொய்யன்று இந்தப் பாரத்துவாச முனிவரும் மற்றமுனிவர்களும்சமஸ்ததேவர்களும்ஸ்ரீபரத்தாமருடைய வேண்டுகோளின்படி கொடுத்த வரத்தால் இந்தச்சோலையில்பூவையும், காயையும்,கனிகளையுமேயன்றி, மதுவையும் பரிமாணத்துக்குஅதிகமாக உண்டுசமஸ்தவானரர்களும்,ராக்ஷசர்களும்,அறிவழிந்துமயங்கிக்கிடக்கிறார்கள்போலக்காணுகிறது. இல்லாவிட்டால்யாதொருஅரவமுமில்லாமலிராது. தேவர்களும் முனிவர்களும்கொடுத்த வரத்தால் பெருகிய மதுவையும் காய் கனிகளையும், நிரப்ப உண்டு மயங்கிச்செயலழிந்து சோம்பிவாயைத்திறவாம லிருக்கின்றார்கள் அப்படி அல்லாவிட்டால் இருவகைச்சேனைகளும் சும்மாஇருப்பவைகளல்லவே. என்னையனே என்மேல் கோபங்கொள்ளாதேயுமென்று தேற்றி, இனி ஒருக்ஷணத்துக்குள்ளே நம்முடைய பெருமானுனவர் புட்பகவிமானத்தின்மேல் எழுந்தருளுகின்ற திவ்வியசேவையை இங்கிருந்தபடியே நீர்பெருக்கிக்கொண்டிருக்கின்ற நேத்திரங்களாலேயே சேவித்துக் களிக்கப்போகிறீர் என்று இன்னும்பலபலவிதமாகச்சொல்லிக்கொண்டிருந்தனர். ஸ்ரீபாரத்துவாசருடைய ஆச்சிரமத்தி லெழுந்தருளி யிருக்கின்ற தாமரைமலர்போன்ற திருக்கண்களை யுடைய ஸ்ரீகோதண்டதீக்ஷாகுருவானவர் செய்த செய்கைகளை இனிஎடுத்துச்சொல்லுவாம். அருந்தவர்க்கரசனுனவர் அறுசுவைப் பதார்த்தங்களோடு போசனத்தை அமைத்துவைக்க ஸ்ரீமைதிலியோடும் ஸ்ரீராமாநுஜரோடும் தம்முடைய ஆதரவைப் பெற்றுள்ள துணைவர்களோடும் ஸ்ரீராகவபிரானுனவர் அமுது செய்து எழுந்தருளி யிருக்கும்போது ஸ்ரீகுகப்பெருமானுனவர் கருங்கடல் புரண்டு வருவதுபோல வேடுவச்சேனை தம்மைச் சூழ்ந்துவர அதிகவிரைவாய் வந்து ஸ்ரீராமபத்திரசுவாமியை தண்டன்சமர்ப்பித்து அவருடைய திவ்வியமங்களகர விக்கிரக சௌந்தரியத்தில் தம்முடைய மனமும், கண்களும், அழுந்திச் சுழலமிடச் சுற்றிச்சுற்றிச் சேவித்து இப்படிப்பட்ட திவ்விய சேவையை இத்தனைகாலமாகச் சேவியாமல் வியர்த்தமாய்க் காலத்தைப் போக்கி விட்டோமேயென்று மிகுந்த துக்கத்தால் அழுதனர். எம்மேல்வைத்த நிர்ஹேதுககிருபையால் எம்மை யாட்கொள்ளும்படி இங்கேஎழுந்தருளினானென்கிற பக்திபாரவசத்தால்தட்டுமாறிப்பலமுறை தண்டன் சமர்ப்பித்தனர். ஸ்ரீராகவபிரானுனவர் ஸ்ரீபரதாழ்

ளாலே எடுத்துத் தழுவுவதுபோலத் தண்டஞ் சமர்ப்பித்த ஸ்ரீகுகப்பெருமானை வாரியெடுத்தணைத்தழுவி, என்னப்பா குகனே! உன்னுடைய புத்திரர்களும் மனைவியும் க்ஷேமமோ வென்று குசலப் பிரசினை செய்தார். நாயேனுக்குத் தேவரீருடைய கருணாகடாக்ஷமாயிருக்கும்போது தேவர் விரும்பிய பொருள்கள் கிரஹிப்பது அருமையானவைகளல்ல. மெய்ஞ்ஞானச் செல்வராகிய இளையபெருமானானவர் உம்மைப்பிரியாமல் பின்தொடர்ந்து வந்து செய்தற்குரிய கைங்கரியங்களைச் செய்தனர். அவ்வாறு செய்யாது அஞ்ஞானமே நிரம்பிய மனத்தையுடையேனுக்கு இந்த அற்ப தேகத்தோடு கூடிவாழ்தலொன்றுமே நித்திய சுகமல்லவோ! இப்படிப் பலபலவிதமாகச்சொல்லித் துக்கித்தனர். இவ்வாறு தம்மைத் தாமே இகழ்ந்துகொண்டு துக்கிக்கின்ற ஸ்ரீகுகாழ்வானைப் பக்தவத்சலராகிய ஸ்ரீ சக்கரவர்த்தித் திருக்குமாரர் கடாக்ஷித்துப் பரதனிருந்த நிலையினின்றும் நீ என்ன வேறுபட்டிருந்தாய். எல்லா விதத்திலும் நீ அவனையே ஒத்திருக்கின்றாய். இனித் துன்பப்படவேண்டாம். போய் உட்காரென்று சொல்ல உடனே ஸ்ரீசானகிபிராட்டியாரையும், ஸ்ரீராமாநுஜரையும், நமஸ்கரித்து உட்கார்ந்தார். ஸ்ரீ ரகுபதியானவர் ஸ்ரீ குகப்பெருமானையும் முன்னே தமது திருக்கண்களால் பார்த்து ஸ்ரீமகாராஜா முதலிய தோழர்களைப் பின்பு பார்த்து, இந்த ஸ்ரீமான் சிறந்த தீர்த்தமாகிய கங்கையினிருகரைக்கும் நாதன். தாயைப் பார்க்கிலும் எல்லா வுயிர்களிடத்தும் அன்புள்ளவன் வேதமார்க்கத்தில் தவறுதலில்லாத வேடராஜனென்னும் பெயருள்ளவனென்று சொல்லினர். ஸ்ரீசானகி ரமணனானவர் சொல்லியருளினபோது ஸ்ரீசுக்கிரீவ மஹாராஜா முதலானவர்கள் பொருக்கென எழுந்து ஒவ்வொருவராக ஸ்ரீகுகப்பெருமானைக் காடாலிங்கனஞ்செய்து சிநேகித்தார்கள்.—இந்தப்பிரகாரம் நடத்திக்கொண்டிருக்கையில், சூரிய பகவான், ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரருடைய ஜகந்மோகனாகார திவ்விய சௌந்தரியத்தை யாவருங்கண்டு சேவிப்பதினால் அவர் திருமேனிக்குக் கண்ணெச்சில் படுமே யென்னும் பிரேமைபால் உலகமுழுமையும் இருளால் மூடிவிடுவான் போல அஸ்தமித்தான். ஸ்ரீராகவ பிரானானவர் சந்தியாவந்தனக் கடமையைச் செய்து சேனைகள் யாவும் கடல்வளைந்து கொண்டதுபோலச் சூழ்ந்து சயனித்துக்கொள்ள ஸ்ரீசீதாபிராட்டியாரும் தாமுமாகச் சயனித்துக்கொண்டார். ஸ்ரீராமாநுஜரும் ஸ்ரீகுகப்பெருமானும் கையில் வில்லும் அம்பு மேந்திக்கொண்டு சிறிதும் கலங்காமல் இராமுழுமையும் காத்துக்கொண்டு நின்றார்கள். சூரியனும் உதயமானான். ஸ்ரீபுருஷோத்தமராகிய தாசரதியானவர் உதய கடமை செய்துகொண்டு ஸ்ரீசானகி பிராட்டியாரும் ஸ்ரீலட்சுமணரும் இரு பக்கங்களிலும் வரச் சென்று பரத்துவாசருக்குத் தண்டஞ் சமர்ப்பித்து அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு எல்லாரோடுங் கூடப் புட்பக விமானமேறிப் பரத்துவாச முனிவருடைய கருணையும் மனமும் தம்பின்னே தொடர்ந்துவரச் சென்றனர். அந்தப் புஷ்பக விமானமானது தாவி ஆகாயத்தில் செல்லும்போது, இஷ்டநாயகனைக் கண்டமாத்திரத்தில் காமக்குறிப்புத்தோன்ற நின்ற குல மங்கையைப்போலாகியும், சித்திரம் உயிர்பெற்றதுபோல அலங்கார முடையதாகியும், இந்திரலோகமும் ஒப்பாகாத இயற்கை யழகுடையதாகியும் விளங்காநின்ற திருவயோத்தியாபுரியினது மதிளின்புறமானது தோன்றியது. அப்புறஞ் சற்றுத் தூரம் புஷ்பகவிமானம் சென்றபோது, மதிள்களாற் சூழப்பட்டு அழகாகிய அயோத்தியா நகரந் தோன்றுநிற்க, அதிமேதாவிகளாகிய தோழர்களைப்பார்த்து ஞானமே திருமேனியாக வுடைய ஸ்ரீசானகீ ரமணனானவர் இப்படிப்பட்ட அலங்காரத்தை யுடையதென்று ஒருவராலும் சொல்லமுடியாத அயோத்தியாநகரந் தோன்றுகிறதென்று சொல்லுதலும், கைகளைக் கூப்பிக்கொண்டு யாவர்களும் எழுந்து வணங்கி நின்றார்கள். அப்போது விமானமானது ஆகாயத்தின்கண் வருவதானதும் அநேக சூரியர்கள் உதயமாயினாற்போல அந்தப் புஷ்பக விமானமும் அதிலெழுந்தருளிய ஸ்ரீராகவபிரானுமே ஸ்ரீ ஆஞ்சநேயருக்கு முன்னே தோன்றினார்கள். தோன்றின மாத்திரத்தில் ஆஞ்சநேயர் ஸ்ரீ பரதாழ்வானைப் பார்த்துப் பரதமஹாராஜனே! அன்றலர்ந்த செந்தாமரை மலர்போன்ற திருநேத்திரங்களையுடைய ஸ்ரீராமபிரானும், கற்புடையபெண்களுக்கு ஆபரணம்போலச் சிரேஷ்டமாக விளங்குகின்ற ஸ்ரீசானகி பிராட்டியாரும், உமக்குப்பின்னே அவதரித்த ஸ்ரீலக்ஷ்மணப் பெருமானும், வானரசேனைகளும், விமானத்தின்மேல் வருகின்றதைப் பார்த்தருளீராக என்று சொன்னார். பதினாலு லோகங்களும் தம்மேலேறிய போதிலும், வெற்றிடம் இருக்கத்தக்க பெருமை யுடையதா யொளி

யமைந்த விமானத்தின்மேல் ஊழிமுதல்வனா கிய ஸ்ரீராமபத்திரர் தோன்றுகின்றாரென்று ஆஞ்சநேயர் சொல்லும்போது, ஸ்ரீராமசுவாமியை எதிர்கொள்ளும்படி வந்தவர்களெல்லாம், ஒளியைவீசுகின்ற மேருமலையின் பெருங்குகையில் விளங்குகின்ற நீருண்ட மேகம்போல விமானத்துக்குள்ளே எழுந்தருளிய ஸ்ரீரகுபதியைக் கண்டவுடனே ஆரவாரித்த சந்தோஷ ஆரவாரமானது ராவணன் அரசாண்ட தென்னிலங்கைக்கு அப்புறத்திலும் சென்றது. சத்தியத்தை ஆசரித்து மாயிசதேகத்தை விட்டொழித்து ஸ்ரீவிஷ்ணுலோகத்தையடைந்த ஸ்ரீசக்கரவர்த்தியானவர் வருவதைக் கண்டாற்போலக் காட்டுக்குச் செல்ற தன்பிராண பதமாகிய ஸ்ரீராகவபிரானை ஸ்ரீபரதாழ்வான் கண்களாரக்கண்டனர். தாம் இழந்துபோன பொருள் கிடைப்பதற்குமுன் வருந்திய துன்பங்களெல்லாம் அப்பொருள் கிடைத்த மாத்திரத்தில் முன்பட்ட துன்பங்களை யெல்லாம் மறந்து ஆநந்திப்பவர்களைப் போல ஸ்ரீசுவாமியானவர் காட்டுக்குச்சென்றதினாலிருந்த துக்கங்களால் வருத்தப்படுத்தப்பட்ட ஸ்ரீபரதாழ்வானவர் அதிகதுக்கலங்கொண்டு ஸ்ரீசீதாபதியைக் கும்பிடும்படி ஆஞ்சநேயர் கையைப்பற்றிக் கொண்டிருந்ததைவிட்டுக் கைகளைக் குவித்துக்கொண்டிருந்தார். யாவரினும் அதி மேம்பாடுள்ள கீர்த்திமானாகிய ஸ்ரீபரதாழ்வானவர் தாம்பற்றியிருந்த கையைவிட்டவுடனே ஸ்ரீஅநுமானானவர் அவ்விடத்தினின்றும் மேலே யெழுந்து தமக்கெதிரே வருகின்ற விமானத்தின் மேற்பாய்ந்து ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரருடைய சிரீபாதங்களை வணங்கி ஸ்ரீபரதாழ்வார் படுகிற ஆற்றாமையை நினைத்துக்கொண்டு கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருக்கிக்கொண்டு நின்று ஸ்ரீமஹாலட்சுமிக்கு நிவாசஸ்தானமாகிய திருமார்பையுடைய எம்பெருமானே! சுவாலையை வீசிக்கொண்டு எரிகின்ற பெருநெருப்பில் விழுந்து விடுவதற்குச் சங்கித்தமாயிருந்த ஸ்ரீபரதாழ்வானை நாயேன் அடைந்து தேவருடைய வரவைச்சொல்லினேன் சொன்னபின்புதான் அயோத்தியாநகரத்தில் உள்ளார் யாவரும் உயிரோடிருப்பவர்களாயினார்கள். யான்செய்த தீவினைகள்பலவற்றும் அநேக இடுக்கண்கள் ஒன்றின்பின்னொன்றாக வந்துகொண்டே யிருக்கின்றன. யான் செய்த சுகிர்தத்தால் நீயொருவன் கிடைத்து அவற்றை யொழிக்க ஒழிந்துபோகின்றன. என் தாயைப் புரக்கிறதும் என்னிடத்தில் அன்புவைத்துள்ள ஆஞ்சநேயா என்று சொல்லிக் காடாலிங்கனஞ்செய்து, நீ எனக்குக் கிடைத்தது தவத்தாலேயென்று எனக்கு மாத்திரமா சொல்லிக்கொள்வது என் பிதாவுக்கும், தாய்க்கும், தம்பிமார்களுக்கும், எம்மைச்சார்ந்தவர்களுக்குமாகும், என்றுசொன்னார்.

இவ்வாறு ஸ்ரீராமபத்ரியானவர் திருவாய் மலர்ந்தருளுகையில், முத்திநெறிக்கு வழித்துணையும், தமக்குத்தாமே சமானமானவையும் ஆகிய ஸ்ரீராமபிரானுடைய திருப்பாதுகைகளைத் தலையின்மேல் தாங்கிக்கொண்டும், இரண்டுகரங்களைக் குவித்துக்கொண்டும், கண்டவர்களுக்குள்ளே இந்தத்தேகத்திலும் உயிருண்டோ வென்றாற்குக் கண்ணீரொழுக்கலாலும் அழுதலாலும் நடத்தலாலும் உயிருண்டு உண்டென்னும்படியாக மிகவும் இளைத்த தேகத்தையுடையவராய் எல்லாருடைய கீர்த்திகளையும் தாழ்த்திவிட்டு ஓங்கிஉயர்ந்த புகழையுடைய ஸ்ரீபரதாழ்வானவர் விமானத்துக்குச்சமீபத்திலே நெருங்கிவந்தார். அப்படிவந்த ஸ்ரீபரதாழ்வானுக்குத் தண்டஞ்சமர்ப்பித்துவிட்டுத் தருமதேவதைக்குத்துணைவனாய் நிற்கின்ற ஸ்ரீஆஞ்சநேயரானவர் ஸ்ரீஜானகீரமணனைநோக்கிச் சுவாமீதேவருக்குத் திருத்தம்பியாரும் சிந்தையும், மொழியும், செல்லாத நிலைமையுடையதாகிய பரமபதத்தையடைவதற்குச் சுலபமார்க்கமாகிய பாரதந்திரியமென்னும் மெய்ஞ்ஞான அரசையாண்டுகொண்டிருந்தவரும் தேவர்பக்கலில் உண்டாகிய பிரேமாதிசயத்தால் பெற்றதாய் விஷயத்தில் பகைமைபாராட்டுபவருமாகிய ஸ்ரீபரதாழ்வான் இதோவந்துநிற்கின்றார். தம்முடைய திருக்கண்களால் கடாட்சித்தருளுமென்று வாய்பொத்திக்கொண்டு சொல்லினர். ஸ்ரீஅஞ்சனாதேவிபுத்திரர்காட்டத் தமது திருத்தம்பியாரைக்கண்ட ஸ்ரீரகுராமரானவர் ஸ்ரீதசரதசக்கரவர்த்தியாரைக் கண்டாலொத்த சந்தோஷித்தாராகி, தம்மைக்காணவந்த அயோத்தியாநகர ஜனங்களையும், அறுபதினாயிரம் அக்குரோணிசேனாவீரர்களையும், தாய்மார் மூவர்களையும், தம்பிமார்களையும், முனிவர்களையும் காண்பேனென்று நினைத்தமாத்திரத்தில் புஷ்பகவிமானமானது பூமியிலிறங்கியது. ஸ்ரீராகவபிரான் எழுந்தருளிய புஷ்பகவிமானம், அவரவர்கள்செய்த நல்வினையால் விண்ணுலகத்திலிருந்து விமானமானது சத்கருமங்களைச் செய்தவர்களைச் சுவர்க்கலோகத்துக்குக் கொண்டுபோம்படி வந்ததுபோல எல்லாவுயிர்களும் களித்தன. ஸ்ரீதசரதராம

ரானவர், ஸ்ரீகௌசல்யாதேவி முதலிய தாய்மார்களுக்கு, பசுவின்பக்கலில்வந்த இளங்கன்றுபோலவும், விஷயாந்தரமுதலியவற்றை ஒழித்த பிரபன்னர்களுக்கு மன்னுலயம்வந்ததுபோலவும், வாலிபர்களுக்குத் தங்கள்கண்களிலாடுகின்ற பாவைபோலவும், பிரிவினையினால் இளைத்த தேகத்தையுடைய ஸ்ரீபரதசத்ருக்னர்களுக்கு நல்லுயிர்வந்ததுபோலவும், தம்மைத்தரிசியாமையால் மிகவும்வருத்தமுற்று உழன்றுகொண்டிருந்த எளிய உயிருடையோர்களுக்கெல்லாம், பெற்றதாய்வந்தாற்போலவும், அன்புடை சத்புருஷர்களுக்கெல்லாம் தேவாமிர்தம்போலவும், மெய்ஞ்ஞானத்தையுடைய உயர்ந்தோர்களுக்கெல்லாம் தம்முடைய யதார்த்த நிலைமையோடு பிரசன்னமாயினதுபோலவும், மதர்த்தவிழிகளையுடைய மங்கையர்களுக்கெல்லாம் களிப்பைத்தருகின்ற தேன்போலவும் ஆனார். தங்களுக்குப்பிராணன் ஸ்ரீஜானகீரமணனே அல்லாமல் வேறேயுண்டென்றுநினையாத கோசலநாட்டாரும் அயோத்தியாநகரத்தாருமாகிய ஸ்திரீபுமான்கள்யாவரும், ஸ்ரீராமநாதர் எதிரேவந்ததைக்கண்டவுடனே சித்திரப்பிரதிமை உயிரடைந்தாற்போல முன்னடைந்திருந்த சித்தப்பிரமைநீங்கி நல்ல உணர்ச்சியை அடைந்தார்கள். ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரர் வந்துவிட்டாரென்கிற ஆநந்தத்தால் சுமங்கல் ஸ்திரீகளும், புருஷர்களும், சுவாமிமேலும், ஒருவருக்கொருவர் தங்கள்மேலும் வாரிவாரித் தூவுகின்ற பரிமளப்பொடிகளும், சந்தனமும், நெய்யும், முத்துகளும், புஷ்பங்களும், வாசத்தைலமும், ஒன்றாகச்சேர்ந்து பெருகிக் குதிரைகளினுடைய நுரையோடும், யானைகளினுடைய மதத்தோடும், அவர்களது கண்களிலிருந்து ஒழுகாநின்ற நீரோடும்கலந்து கடலையுங்கடந்தோடியது.

இந்தப்பிரகாரம் யாவரும் சந்தோஷிங்கொண்டாடி வந்தபோது கருணைசலதியாகிய ஸ்ரீராமநாதனைப்பெற்ற கௌசல்யாதி தாய்மார்கள் மூவரும், தம்பிமார்களிருவரும் வசிஷ்டமுனி ஒருவரும்போய்ப் புஷ்பகவிமானத்தின்மீதேறினார்கள் ஸ்ரீராமபிரானும் முன்னே தங்குலத்துக்கு ஆசாரியராகிய வசிஷ்டருடைய பாதங்களை வணங்கினார். வணங்கிய ஸ்ரீராகவபிரானை அம்முநிபுங்கவர் ஆசீர்வசித்து முன் தாம் கொண்டிருந்த துன்பங்கள் நீங்கும்படி இரண்டுகரங்களாலும் தூக்கி எடுத்துப் பலமுறைதழுவினார். பின்பு ஸ்ரீராமராஜர் அந்த முனிசிரேஷ்டருடைய பாதங்களைவணங்க அவர் ஸ்ரீரகுபதியைத் தழுவியது போலவே ஆசீர்வசனஞ்சொல்லி ஆலிங்கனஞ்செய்தனர். தாய்மார்கள் மூவர்களில் கைகேசியினுடைய அடிகளைச்செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீதசரதாத்மஜர் நமஸ்கரித்து மற்ற இருவர்களுடைய கால்களையும் நமஸ்கரித்தார். அம்மூவரும் கண்களில் நீர்பெருக்கி மிகவும் பிரீதியோடு தழுவினார்கள். ஸ்ரீசனகராஜபுத்திரியாரும், மூவரையும் மாமியர்களையும் வணங்கி நின்றார். தனக்கொப்பில்லாத வெற்றியையுடைய ஸ்ரீலக்ஷ்மணர் மூன்று தாய்மார்களையும் வணங்கினார். வணங்கிய இளையபெருமாளை எடுத்து அணைத்துக் குழந்தாய் நீதான் ஸ்ரீராமனுக்குத் தம்பியென்னும்படி காட்டுக்கு அப்புருஷோத்தமனோடுகூடப் போய்வந்தாயென்று சொல்லி ஆசிர்வதித்தார். ஆதியில் தாம் கொடுத்தருளிய திருப்பாதுகைகளிரண்டையும் ஸ்ரீபரதாழ்வானானவர் திருவடிக்காணிக்கையாகவைத்துத் தண்டன்சமர்ப்பித்தனர். அப்படித் தண்டன்சமர்ப்பித்த ஸ்ரீபரதாழ்வானைத் தமது திருப்பவளத்தால் ஆசிர்வசனம் சொல்லவொன்றும் அறியாமல் உதடுகள் துடிக்கக்கதறி அழுது ஸ்ரீரகுராமரானவர் உயிரும் உடலும் ஒன்றும்படி காடாலிங்கனஞ்செய்து தமது நேத்திரங்களிலிருந்து பெருகி ஒழுகாநின்ற நீரால், இளமைக்கும் அழகுக்கும் மாறாக அணிந்திருக்கிற சடைமுடியிலுள்ள மாசெல்லாம் நீங்கும்படியாகக் கழுவி உச்சியைமோந்து கன்றைக்கண்ட பசுவைப்போலத்தமதுள்ளத்துள்ள அன்புபுறத்திலும் தோன்றநின்றார். அதுசமயத்தில், ரத கஜ துரகபதாதியாகிய நால்வகைச் சேனைகளின் ஆடம்பரமும், மற்றவைபவங்களும் ஸ்ரீசர்வசுவாமியினுடைய திருப்பாதுகைகளுக்கே நடக்கும்படிசெய்துவந்த ஸ்ரீபரதாழ்வானுடைய திருவடிகளில், இந்திரனை வெற்றிகொண்ட இந்திரஜித்துவைக் கொலைசெய்த இளையபெருமாளானவர் வீழ்ந்துதண்டனிட்டார். தண்டனிட்ட ஸ்ரீராமாநுஜனை ஸ்ரீபரதாழ்வான் எடுத்துத்தழுவினார். அவ்விருவர்களுடைய திருமேனிகளையுங்கண்ட அறிவுடையோர் யாவர்களும், ஸ்ரீராமபத்திரனை விட்டுப்பிரியமாட்டாமல் அவரோடு பின்றொடர்ந்துசென்று காட்டில்வருந்திய திருமேனியோ! அவருடைய பிரிவைச்சகியாமல் அதிதுக்கத்தால் நாட்டிலிருந்து வருந்திய திருமேனியோ! இவ்விரண்டுள் எதுமிகுதியும் இளைத்

ந் மெலிந்திருப்பது என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு உள்ளம் நைந்தார்கள். கடைசியில் ஸ்ரீசத்ருக்னப்பெருமாளானவர், தேவதேவநாயகனாகிய ஸ்ரீராகவபிரானுடைய ஸ்ரீபாதங்களிலும், இளையபெருமாளுடைய திருவடிகளிலும் நானாவித நல்லமலர்களைத் தூவிச் சேவித்துக்கொண்டார். அவ்விருவர்களும் எம்பிரானைத்தவின் ஸ்ரீமகேச்வரியாகிய ஸ்ரீஜானகிபிராட்டியாருடைய திருவடிகளை வணங்கினார். ஸ்ரீராகவபிரானானவர் ஸ்ரீபாதசத்ருக்னர்களுக்குத் தம்முடைய உயிர்த்தோழர்களாகிய ஸ்ரீசுக்ரீவமஹாராஜா முதலானவர்களை இவன்றான் இவன்றான் இப்படிப்பட்டவர்களென்று சொல்லிக்காட்டினர். உடனே ஸ்ரீசுவாமியோடுகூட வந்தவர்கள் இவ்விருவர்களையும் வணங்கினார்கள். ஸ்ரீபரதாழ்வானும், ஸ்ரீசுக்ரீவமஹாராஜாவையும், அங்கதப்பெருமானையும், குமுதனையும், சாம்பவானையும், நீலனையும், மற்றும் படைவீரர்களையும், ஸ்ரீவிபீஷிணாழ்வானையும், அவரவர்களுக்குத் தக்கவிதமாக மரியாதைகளைச் செய்தார். சுமந்திரனென்னும் முதன்மைபெற்ற மந்திரியானவர், மந்திரிமார்களோடும், சேனாநாயகர்களோடும், பந்துக்களோடும், மதகஜங்கள்போன்ற ராஜகுமாரர்களோடும், மற்றவர்களோடும் ஸ்ரீரகுநாதருக்கெதிரேவந்து, அருமைத்திருமேனி வாடிவருந்தும்படி காட்டுக்கெழுந் தருளியதை நினைக்குந்தோறும் தோன்றுகிற அழுகையும், அந்தப்பதினான்கு வருஷங்களையுங் கழித்து வந்து இனிப்பட்டாபிஷேகஞ் செய்து கொள்வாரல்லவாவென்று நினைக்குந்தோறும் தோன்றுகிற மகிழ்ச்சியும், ஒன்றையொன்று அதிகரித்து உயரும்படியாகத் தொழுது எழுந்திருந்து கண்ணீர் பெருக்கிக் கொண்டு நிற்க, நம்மையனானவர் அவரைத்தழுவிக் குசலப்பிரசனைகள் செய்து ஆதரித்தார். இளையபெருமாளும்அப்படியே க்ஷேமங்களை விசாரித்துச் சந்தோஷித்தார். சுமந்திரானவர் ஸ்ரீராம பத்திரனைச் செவ்வையாயுற்றுப் பார்த்து இனி இந்தப் பூமிக்கு யாதொரு குற்றமு மில்லையென்று மற்ற மந்திரிமார்களைப் பார்த்துச் சொன்னர். தம்மோடு ஒத்தவர்களும் தம்மிலும் உயர்ந்தவர்களு மில்லாத ஸ்ரீராமநாதரானவர் சேனைகளெல்லாம் விமானத்தின்மேல் ஏறக்கடவதென்று கட்டளையிட்டனர். சமுத்திரானது மேகத்திலடங்குவதுபோல அந்தச் சேனைகளெல்லாமும் விமானத்தின் மேலேறி ஸ்ரீராம லட்சுமணர்களுடைய ஸ்ரீபாதங்களை வணங்கின. இவைகளையெல்லாம் அந்தரமார்க்கத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்ததேவர்கள்யாவரும், இந்தவிமானத்தை அண்டங்களையெல்லாம் உண்ட ஸ்ரீசர்வேசுரனுடைய திருவயிற்றுக்குச் சமானமென்று சொல்லுவோமேயானல் அந்தத் திருவுதரத்தில் பிரமருத்திரேந்திராதி சமஸ்த சேதனர்களும் அடங்கியிருந்தார்களே யல்லாமல் தாம் அடங்கி யிருந்ததுண்டோ? இல்லையே இந்தவிமானத்திலே அந்தத் தேவதேவநாயகனாகிய ஸ்ரீராகவபிரான் எழுந்தருளியிருப்பதால் இதற்கு அந்தத் திருவுதரம் ஒப்பாகமாட்டாது. ஸ்ரீபகவானுடையதிருவயிறே ஒப்பாகாமற்போருமேயானல் சமுத்திரத்தை ஒன்றைமாத்திரம் தமக்குள் அடக்கிய அகஸ்தியருடையகையோன்றே சமானமாகப்போகிறது என்றுசொல்லிக் கற்பகமலர்களைத் தூவித் துதித்தார்கள். இடிக்கூட்டங்களும், ஏழு சமுத்திரங்களும், ஒருமித்து ஆரவாரித்தாற்போல முரசங்களும், சங்கங்களும், மற்றவாத்தியங்களும், யானை குதிரைகளும், ஒலிக்கிற ஓசையும், பிராமணர்களுடைய வேதகீதங்களினோசையும், உயர்ந்தோங்கித் திக்குகளெல்லாம் பரவிச் சத்தித்து, ஆகாயவீதியில்நின்று சமஸ்ததேவகணங்களும், சித்தர்களும், சாரணர்களும், ஸ்ரீசக்கரவர்த்தித்திருக்குமாரருக்குக் கூறும் பல்லாண்டொலியினுள் அடங்கிப்போகாநின்றன. இவ்வளவு கோஷத்தோடு அயோத்தியைநோக்கி ஆகாயத்தில் செல்கின்ற புஷ்பகவிமானமானது இந்திரனுக்குக் களிப்புண்டாகும்படி சுவர்க்கலோகத்துக்குச் செல்வதுபோ லிருக்கிறதென்று இந்தப்பூமியிலுள்ளோர்யாவரும் பேசிக்கொண்டிருக்கையில் இந்திரனோடும் மற்ற தேவர்களோடும் சுவர்க்கலோகமே பூலோகத்துக்கு வருவதுபோல அந்தப்புஷ்பகவிமானம், தேவர்கள் தூவுகிற மலர்மாரியோடு ஸ்ரீஅயோத்தியாநகரத்தை வந்துசேர்ந்தது.

---

## மீட்சிப்படலம்—முற்றும்.





ஸ்ரீமதேராமாநுஜாய நம:

# பெரியாழ்வார் திருமொழி.

## பாசுரம்.

மரவடியைத் தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய் வானோர்வாழச் ... *
செருவுடைய திசைக்கருமந் திருத்திவந் துல்காண்ட திருமால்கோயில்... ...*
திருவடிதன் திருவுருவுந் திருமங்கை மலர்க்கண்ணுங் காட்டிநின்று ... ... *
உருவுடைய மலர்நீலங் காற்றுட்ட வொலிசலிக்கு மொளியரங்கமே. ... ...*

# திருமுடிசூட்டுப்படலம்.

ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரரோடு யாவரும் விமானத்தைவிட்டிழிந்தனர்கள். அப்படியே ஸ்ரீசானகிரமணர் ஸ்ரீபரதாழ்வாேடும் மற்றவர்களோடும் திருவயோத்தியாபுரிக்குத் தென்மேற்குத்திசையிலுள்ள நந்திக்கிராமத்தைச்சேர்ந்து, தாமும் மற்ற தம்பிமார்களும் சடைமுடியை மாற்றிவிட்டுச் சௌரமும் செய்துகொண்டு சரயுநதியில்மூழ்கி, கேசவாதித் திருநாமங்களைச் சொல்லித் திருமணக்காப்பிட்டுக்கொண்டு பீதாம்பரதாரிகளாயும், சர்வாபரணபூஷிதர்களாயும், நந்திக்கிராமத்தைவிட்டு அயோத்தியாநகரத் தெல்லைக்கண்வந்து, ஸ்ரீராமச்சந்திரரானவர், சதுர்வேதங்களையுமொத்த நான்குவெள்ளைக்குதிரைகளைக்கட்டிச் சூரியனைப்போல விளங்குகின்ற ரதத்தின்மேல் ஆரோகணித்தருளினர். உடனே அந்தத்திருத்தேரில் மற்றமூவர்களும் ஏறியருளி, அவர்களில் ஸ்ரீராமாநுசர் சுவாமிக்குப் பின்புறத்துநின்று வெண்கொற்றக் குடைபிடிக்கவும், ஸ்ரீசத்ருக்னாழ்வான் பின்னேநின்று இரண்டுகரங்களிலும் இரண்டு சாமரங்களைப் பற்றிவீசவும், ஸ்ரீபரதாழ்வானவர் ஆநந்தப்பரவசராய்க் கண்ணீர் பெருக்கிக்கொண்டு முட்கோல்பிடித்துத் தேரை நடத்தச்சென்றார். ஸ்ரீபுருஷோத்தமராகிய ஸ்ரீராகவபிரானெழுந்தருளிய திருத்தேருக்கு இரண்டுபாரிசங்களிலும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் ஸ்ரீசுக்கிரீவமஹாராஜாவும், யானையின்மேலேறிப்போற்றிசெய்துகொண்டுசென்றார்கள். ஸ்ரீஅங்கதப்பெருமான் கொடிப்படையில்முன்னேபோனார். திருவனந்தாழ்வானுக்கொப்பாகிய திருவடிகள் திருத்தேருக்குப் பின்வந்தார். அறுபத்தேழ்கோடி வானரப்படைவீரர்கள்மானுடவுருவங்கொண்டு நல்லஆடையாபரணங்களைத்தரித்துக்கொண்டும், கலவைச்சந்தனமுதலிய பூச்சுகளைப்பூசிக்கொண்டும், வெண்பட்டுக்குடை நிழலைச்செய்ய யானைகளின்மேல் ஏறிப்போனார்கள். நவகண்டங்களிலுமுள்ள ராஜபுருஷர்களில் சிலர்யானைகளின்மேலும் சிலர்பசும்பொன்தகடுவேய்ந்த தேர்களிலும், சாமரைகள் பக்கங்களில் வீசவும் வெண்பட்டுக்குடைகள் பிடிக்கவும், ரத்தினமயகிரீடங்கள் சிரசுகளில் பிரகாசிக்கவும் ஏறிக்கொண்டு கைகளைக்குவித்துச் சென்றார்கள். வானரமங்கையர்களெல்லாம் தெய்வஸ்திரீகளைப்போல உருவமாறி நல்ல பட்டுவஸ்திரங்களை யுடுத்துத் திவ்வியாபரண பூஷிதர்களாய், பிடியானைகளின்மேலும், குதிரைகளின்மேலும், கோவேறுகழுதைகளின்மேலு மேறி, விண்மீன்கூட்டங்களைப்போலச் செல்ல. அவ

[illegible] மகேசுவரியாகிய ஸ்ரீஜாநகிப்பிராட்டியார் விமானத்தின்மேல் சந்திரனைப்போலச் சென்றார். ஆகாயவீதியினின்று எல்லாத்தேவர்களும், முனிவர்களும், ஸ்ரீராகவபிரானும் ஸ்ரீசீதாபிராட்டியாரும் எழுந்தருளுகிற திவ்வியசேவையைச் சேவிக்கும் உள்ளக்களிப்பால் கற்பகமலர்களையும் வேறுசுகந்தமலர்களையும் கைகளோய்வில்லாமல் வாரிவாரிச்சொரிதலாலே இந்தப்பூமண்டலம் அந்தப் புஷ்பங்களாலேயேநிறைந்து தரைதோன்றப் படாமையால் அதைக்கண்ட நிறைந்த கல்வியாளர்கள் இப்பூமியை பூவென்று அழைத்தார்கள் அன்றுமுதல் இந்தச்சகத்துக்குப் பூவென்று பெயருண்டாயிற்று. ஸ்ரீரகுநாதரானவர் காட்டுக்கெழுந்தருளிய பிரிவின் துன்பத்தாலே, கோடைகாலத்தில் நீர்ப்பசையில்லாத மேகம்போலப் பதினான்கு வருஷம் வரையில் மதநீர்ப்பெருக்காமல் இளைத்துச்சோம்பிக்கிடந்தயானைகளெல்லாம்இப்போதுஸ்ரீராகவபிரானவர் ஆரணியத்தைவிட்டுத்திருவயோத்யாபுரிக்கெழுந்தருளியதை உணர்ந்தும் அவரைச்சேவித்தும் தாம்கொண்ட ஆநந்தமானது உள்ளத்தில்நிறைந்து அடங்காமல் பெருகியதுபோல மூன்றுமதநீரும் ஆறாய்ப்பெருகியோடிகடலில்போய்விழும்படிப்பெருக்கியதுகள். அந்தயானைகளைப்போலவே குதிரைகளெல்லாம் பேசி அறியாத ஊமைகள் ஏதோ ஒருதெய்வவருளால் பேசும்படி பெற்றபோது எப்படி பேசுவார்களோ அதுபோலவும், இடிகளையே பெய்கிற மேகராசிகளைப்போலவும், கனைத்துக்கொண்டு செல்றதுகள். ஓரறிவுயிர்களாகிய மரங்கள் செடிகள் கொடிகள்யாவும் ஸ்ரீசர்வசுவாமியானவர் வனத்துக்கெழுந்தருளிய துக்கத்தால், அரும்பெடுத்துப்போதாகி மலராமலிருந்து இப்போது ஸ்ரீராமபத்திரர் அயோத்திக்கு எழுந்தருளியபடியால் அந்தந்தப் பருவங்களில் மலர்களைமலர்வதுபோல அரும்பி உடனே நல்லமணமுள்ள மலர்களைமலர்ந்து சுகந்தத்தை வீசியதுகள். ஸ்ரீராமபத்திரர் அயோத்தியாபுரியைப் பிரிந்ததுமுதல் அதிக துக்கத்தையடையவர்களாய்க் கலவி இன்பத்தி லிச்சையில்லாமல் வெறுத்திருந்தஸ்திரீஜனங்கள் யாவரும். ஸ்ரீரவிகுலசந்திரர் எழுந்தருளினவுடனே மிகுந்த செல்வச் செருக்குடையவர்களாய்க் கலவியில்நினைப்புஉண்டாகவே அந்தமங்கையர்களுக்கு உடல்முழுமையும்பொன்னிறம்போன்ற பசலைபூத்தது. இவ்வண்ணம் திருவயோத்திமாநகரமெங்கும் மிகுந்தகளிப்பேசிறக்கும்படி அநந்தகலியாணகுண சலதியாகிய ஸ்ரீரவிகுலோத்துங்கரானவர் அயோத்தியா நகரத்துக்குள்ளே பிரவேசித்து ஸ்ரீகௌசலை முதலிய தாய்மார்களை வணங்கி ஸ்ரீவசிஷ்ட பகவானுக்கு நமஸ்காரஞ்செய்து தங்கள் குலத்தினருக்குத் திருவாராதனமாகிய ஆயிரமௌலி எம்பெருமானைப் பணிந்து ஸ்ரீதேவியும் பூதேவியும் குதூகலமாக நடித்துக்கொண்டிருக்கிற அரண்மனைக்குள்ளே சென்றனர். ஸ்ரீரகுகுலநாயகர் திருமாளிகைக்குள் எழுந்தருளின வுடனே புருஷர்களும் ஸ்திரீகளும் உடுத்திருந்த வஸ்திரங்களை அவிழ்த்துவிட வேண்டுமென்னும் கருத்தில்லாதவர்களாயினும் தாமே அவிழ்ந்துவிடுகிற அந்த வஸ்திரங்களை கீழேவிழவொட்டாமல் பலமுறை கைகளால் தாங்கிக்கொண்டவர்களாயினும் ஆநந்தப்பரவசத்தால் தேகம்பூரிப்பதினாலும் துள்ளித்துள்ளிக் குதிப்பதினாலும் தங்களையறியாமல் வஸ்திரங்கள்அவிழ்ந்துபோய் மதுபானஞ்செய்த மயக்கத்தாலே திருவாலிகளாயிருப்பவர்களைப்போலின்றார்கள். பிராமணர்களுடுத்திருந்த வஸ்திரங்களை வேசியர்கள் பறித்துஉடுத்திக்கொண்டார்கள். அந்தவேசையர்களுடைய ஆடைகளை அந்தணர்கள் பறித்துத் தரித்துக் கொண்டார்கள். ஒருவருடலோடு ஒருவருடல் நெருங்கிப் படுதலாலே ஸ்ரீசுவாமியினுடைய சேவையைக் காணும்படி சந்தனமுதலிய பூச்சுகளைப் பூசவுநேரமில்லாமல் அதிகவிரைவாய் வந்துவிட்டவர்களுடைய தேகமும், பூசிவந்தவர்களுக்கு இரட்டிப்பாகச் சந்தனமுதலானவைபட்டுப் பரிமளித்தன. ஸ்ரீராமசுவாமியானவர் ராஜசம்பத்தை நீங்கியிருந்த பதினான்குவருஷமும் நல்ல ஆடையும் இரத்தினாபரணங்களும் தரியாமல் துக்கத்தையே அநுபவித்துக்கொண்டிருந்த மங்கையர்கள் யாவரும் இப்போது சர்வாபரணங்களாலும் தங்கள் உடல் மறையும்படியாகத் தரித்துக் கொண்டமையால் அந்தந்த அவயவங்களி னிலக்கணந்தோன்றாமல் புருஷர்கள் மயங்கிநின்றார்கள்.

தேவபுருஷர்களுடைய தேகத்தி லணிந்திருந்த சந்தனம் ராஜ புருஷர்களுடைய தேகத்திலும், ராஜபுருஷர்களுடைய உடலிலணிந்த சந்தனம் தேவபுருஷர்களுடைய உடலிலும்பட்டுப் பரிமளிக்குங் காரணத்தால் தேவதாஸ்திரீகள் நம்முடைய நாயகர் பூலோகஸ்திரீயை ஆலிங்கனம் செய்து வந்தாரென்றும் ராஜஸ்திரீகள் நம்முடையகணவர் தேவதாஸ்திரீயைத் தழுவிவந்தாரென்றும் தங்கள்

தங்கள் கொழுநர்களோடு ஊடிக்கொண்டார்கள். இவ்வாறு அரண்மனை யெங்கும் சந்தோஷாரவாரமா யிருக்கும்போது ஸ்ரீராமச்சந்திரரானவர், ஸ்ரீபரதாழ்வானைக் கருணையோடு பார்த்து ஹே பரதா! ஸ்ரீவிபீஷணாழ்வானையும் ஸ்ரீசுக்கிரீவ மஹாராஜாவையும் மற்ற வானரப்படைத் தலைவர்களையும், மற்றவர்களையும், அழைத்துப்போய் நம்முடைய சக்கரவர்த்தியினுடைய மாளிகையிலுள்ள சிறப்புகளை யெல்லா வற்றையும் காட்டென்று கட்டளையிட்டார். என்று கட்டளையிட்ட வுடனே ஸ்ரீபரதாழ்வானவர் சுவாமிக்குத் தண்டன் சமர்ப்பித்து அவர்கள் யாவரையும் அழைத்துச் சென்று பல திருமாளிகைகளைக் கடந்து போய், தேவர்களுக்கு வாசஸ்தலமாய்நானா ரத்தினங்கள் பிரகாசிக்கின்ற மேருமலைபோலவும், ஸ்ரீமகாலட்சுமிக்கு நிவாசமாகவும் விளங்குகின்ற ஸ்ரீதசரதசக்கரவர்த்தியினுடைய அந்தப் புரத்தைக் காட்டினர். அந்தத்திருமாளிகை வச்சிரம், மாணிக்கம், நீலம், மரகதம், முதலிய ரத்தினங்களால் கட்டப்பட்டதாகையால் அவர்கள் அம்மணிகளுடைய கிரணகாந்தியால் உயிரும் நிலைகுலைந்து மனமும் தங்கள் மனோநிட்டமு மிழந்து புத்திமயங்கி கண் இமை கொட்டாமல் அப்படி யப்படியே நின்று விட்டார்கள். அங்கிருந்து நீங்கி ரத்தினங்களுக்குள் ஸ்ரீகௌஸ்துவ மணியைப்போல விளங்குகின்ற ஒரு திருமாளிகையைக் கண்டு இது யாதென்று வினவினார்கள். அவர்களைப்பார்த்து ஸ்ரீபரதாழ்வானவர், பூர்வத்தில் இக்ஷுவாகு மஹாராஜா மூலதாயனையில் உற்பவித்த சதுர்முகனை நோக்கித் தவஞ்செய்து பெற்றுவந்த ஸ்ரீபிரணவாகார விமானத்துள் அப்பிரணவத்தின் பொருளாய்ச் சயனித்த திருக்கோலமாய் ஆயிரமௌலியான் எழுந்தருளியிருக்கும் திருமாளிகை யென்று சொன்னார். அதுகேட்டு இதைத்துதிக்க எங்களால் முடியுமோ முடியாதென்று தண்டன் சமர்ப்பித்து விட்டு அப்புறஞ் சென்று மற்றொரு ரத்தினமய மண்டபத்தைச் சேர்ந்து உட்கார்ந்தார்கள். அங்கு உட்கார்ந்துகொண்டு தாங்கள் கண்டுவந்த நானாவித விசித்திரமணிகளா லமைத்த தொழில்களை எண்ணி எண்ணி ஆச்சரியபூதர்களாயிருந்த அவர்களில் சுக்கிரீவமகாராஜாவானவர், ஸ்ரீபரதாழ்வானை நமஸ்கரித்துப்பரிசுத்தகுணசீலரேநம்முடைய பெருமானுக்குப் பட்டாபிஷேகம் செய்யும் நல்லநாள் இன்னநாளென்று இன்னம் குறிக்காமலிருப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்டார். கேட்ட மஹாராஜாவைப்பார்த்து ஸ்ரீபரதாழ்வானவர் எழுகடலினது தீர்த்தமும், கங்கைமுதலிய நதிகளினது தீர்த்தமும், இவ்விடத்தில் வந்து சேர்தற்குச்சில நாள் சுழியுமல்லவா? அவை வந்த பின்புதான் ஒரு திவ்விய முகூர்த்தநாள் நிச்சயித்துக்கொள்ளவேண்டுமென நம்முடைய ஆஞ்சநேயர் இருக்கச்செய்தே அந்தத்தீர்த்தங்கள் இங்கேவருவது பிரயாசமோவென்று சொல்லி ஆஞ்சநேயரைப் பார்த்தார். அந்த மகாநுபாவர் இந்தக்குறிப்பை அறிந்துகொண்டு தீர்த்தங் கொண்டு வரும்படி பூமியைத்தாண்டி அப்புறத்தே சென்றார். ஸ்ரீபரதரானவர் சாரதியை அழைத்து எம்முடைய குலத்துக்கு ஆசாரியராகிய வசிஷ்டமுனிவரையும், கணிதநூல்களில் வல்ல மற்றவர்களையும் இங்கே வரும்படிச் செய்யவேண்டுமென்று சொல்ல அப்படியே சாரதியானவன் சென்று அவர்களுக்குத் தெரிவிக்க, வசிஷ்டமுனிவரும், கணிதசாஸ்திரிகளும், வந்து மண்டபத்தைச் சேர்ந்தார்கள். வசிஷ்ட பகவானைக் கண்டமாத்திரத்தில் யாவரும் எழுந்து தண்டன் சமர்ப்பித்தார்கள். உடனே ஸ்ரீபரதரானவர் ஒரு திவ்வியாசனத்தைக்காட்டி அதிலெழுந்தருளும்படி கேட்டுக்கொள்ள வசிஷ்டரும் அந்த ஆசனத்தின்மேலெழுந்தருளினர். மற்றவர்களும் தங்கள்தங்களுக்குரிய பீடங்களில் உட்கார்ந்தார்கள். ஸ்ரீராமபத்திரருடைய மூத்த திருத்தம்பியார் வசிஷ்டமுனிவரை நோக்கி, பூதேவியும் அஷ்ட லட்சுமிகளும் களிக்கும்படி ஸ்ரீதசரதாத்மஜருக்குத் திருமுடி சூட்டும்நாள் எந்தநாள் என்று கேட்டார். அம்முனி சிரேஷ்டரும் நன்றாய் ஆலோசித்து நாளையென்று சொன்னார். இந்தப்பூமண்டலத்துக்கு ஏகசக்ராதிபதியாயிருந்த தசரதசக்ரவர்த்தியாருடைய திருக்குமாரருக்குத் திருமுடிசூட்டும் நக்ஷத்திரத்தையும், வாரத்தையும், லக்கினத்தையுங் குறித்து எழுதி இந்திரகுருவாகிய பிரகஸ்பதிக்கு ஒப்பாகிய முனிபுங்கவர்களுக்கும், மற்ற தேசாதிபதிகளுக்கும், தூதுவர்கள் வசமாகத் திருமுகங்களை அனுப்பினார்கள். ஸ்ரீமுகங்களைக்கொண்டு இந்தப் பூலோகமேயல்லாமல் மற்ற சுவர்க்க பாதல லோகங்களுக்கும் போய்ச் சுவாமியினுடைய பட்டாபிஷேக சுபச்செய்தியைத் தெரிவித்தனர்கள்.

அந்த மங்களச் செய்தியைக் கேட்டவுடனே திரிலோகவாசிகளும் ஸ்ரீராம நாதரானவர் திருமுடி சூடிக்கொண்டு சிங்காதனத்தின் மேல் எழுந்தருளியிருக்குந் திவ்விய சேவை

யைச் சேவிக்கவேண்டுமென்கிற பேரவாவால் தங்கள் தங்கள் சுயதேசத்தில் ஒருவருமில்லாமல் அயோத்திமாநகரத்துக்கு வந்து சேர்ந்தார்கள். அப்படி வந்து சேர்ந்தவர்களுடைய வைபவத்தையும் முன்னே அயோத்திமாநகரத்திலுள்ள வைபவத்தையும், ஒருமுடிவு தோன்றும்படி செய்யுளில் அமைத்துப்பாடுவது சதுர்முகராகிய பிரமதேவராலும் முடியுமோ முடியாது. ஆதலால் அந்த வைபவங்களை எடுத்து வருணிக்காமல் விட்டுவிட்டு மற்றவைகளைச் சொல்லப்புகுந்தானென்று என்னை யிகழ்பவர்களில்லை. எந்த வுலகத்தார்களும் வந்து சேர்ந்த போது வசிஷ்ட முனிவர் ஸ்ரீராமபத்திர ரிடத்துக்கு எழுந்தருளினர். அவர்பின்னே ஸ்ரீபரதாழ்வானும், ஸ்ரீசுக்கிரீவமஹாராஜாவும், ஸ்ரீவிபிஷிணாழ்வானும், சாம்பவரும், அங்கதப் பெருமானும், மற்ற படைவீரர்களும், போய் அனந்தகலியாணகுண பரிபூரணரா யெழுந்தருளியிராநின்ற ஸ்ரீரவிகுல சந்திரருக்குத் தண்டன்சமர்ப்பித்து, ஸ்ரீசர்வ சுவாமியே நாளையதினம் தேவர்திருமுடி சூடும் நல்லநாள். அதற்காக முன்னாள் செய்ய வேண்டிய தொடக்கத்தைச் செய்யஎழுந்திருமென்று கேட்டுக்கொண்டார்கள்.

சாக்ஷாது ருத்திரபகவானுக்குச் சமானமாகிய முனிசிரேஷ்டரும் அப்படியேகூறினர். அக்கிரியைகளைச்செய்யச் சுவாமி எழுந்துசென்றனர். பிரமதேவர்வந்திருந்து, மயனென்னும் நாமமுள்ள தெய்வத்தச்சனைநோக்கி கட்டவேண்டிய முறைமைகளைச்சொல்ல மயனும் அந்தவண்ணமே பொன்னும் நவரத்தினங்களுங்கொண்டு ஒருதிவ்வியமணி மண்டபத்தை யாதொருகுறைவுமில்லாமல் நிருமாணஞ்செய்தான். முன்னே தீர்த்தங்கொண்டு வரும்படி தாவிச்சென்ற ஸ்ரீஅஞ்சனாதேவி புத்திரர் நாய்குதிலைசக்கடலினது தீர்த்தங்களையும், சப்தபுண்ணியநதிகளினது தீர்த்தங்களையுங்கொண்டு,தம்முடையபிதாவைப்போல அதிவிரைவாய்வந்து சேர்ந்தார். பலஅரசர்கள்பலஅறுபாலைகளில்மேல்குடைநிழலில்பலபெலரத்தினக்குடங்களில் சரயுநதிதீர்த்தத்தை நிரப்பி எந்திக்கொண்டு காளம், சங்கம், மற்றும் பலவாத்தியங்கள் முழங்கவந்து சேர்ந்தார்கள். பளிங்குக்கற்களால்கட்டிய ஒரு சிங்காரமாளிகையில் மாணிக்கப்பலகைதைத்து, வச்சிரக்கால்கள்சேர்த்துச் சுற்றிலும் பொன்னால்சமைத்த பீடத்தின்மேல் ஸ்ரீராகவபிரான் ஸ்ரீஜானகிபிராட்டியாரோடு எழுந்தருளினர். சுமங்கலஸ்திரீகள் மங்களகீதங்கள் பாடவும், சாஸ்திரவிதிப்படி அந்தணர்கள் வேதகோஷஞ்செய்யவும், சங்கம், தாளம், முழவம், முதலிய பலவாத்தியங்கள் ஆரவாரிக்கவும், தேவர்கள் பூமழைசொரியவும், வசிஷ்டர் முதலிய முனிவர்கள், பிராமணர்கள், மிருந்தபுத்திமான்களும் நல்லொழுக்க முடையவர்களுமாகிய ராஜபுருஷர்கள், மந்திரியர்கள், இவர்கள் யாவர்களும் முறையாக முதலபிஷேகஞ் செய்தார்கள். ஸ்ரீசுக்கிரீவமகாராஜா, சாம்பவர், அநுமான், ஸ்ரீவிபிஷிணாழ்வான், குகப்பெருமான் மற்றவர்களும்,முறையாகப் பின்பு அபிஷேகஞ்செய்தார்கள்.

அதுகாலத்தில் மரகதரத்தினமலையானது செந்தாமரைமலர்கள் பலபூத்துக் கங்காநதியினுடைய அலைகளின்துளிகளால் முழுமையும் நனைந்து, இரண்டுபொற்குழைகளைத் தாவிப் பாய்கின்ற வேல்போலும் வடிவமைந்த விசாலநேத்திரங்களையுடைய ஒருசொர்ணநிற மயிலோடும் வீற்றிருந்தாற்போல விளங்குகின்ற ஸ்ரீசானகீராமரை முனிவர்கள்முதலிய சாதுசஜ்ஜனங்கள் யாவரும் தங்கள் சனனநோய் நீங்கும்படி கண்களும் மனமுங் குளிரச் சேவித்து ஆநந்தித்தார்கள்.

இந்தத் திருவபிஷேகம் ஸ்ரீவசிஷ்டமுனித்திரர் பரமவைதிகமார்க்கத்தின்படி மந்திரங்களைச் சொல்லிநடத்தி, சுமந்திரனென்னும் முதன்மந்திரியைச்சமீபத்தில்வைத்துக்கொண்டு மற்றும்பல சடங்குகளையும்இந்திரனுக்குமுடிசூட்டுங்காலத்தில் நடக்கும் கிரியாவிசேடங்களைப்போல மிகுதியும் செய்தனர். இவையெல்லாம் நடந்தபின்பு, சிங்காதனத்தை மகாநுபாவராகிய ஸ்ரீஅநுமான் சுமக்கவும், உடைவாளை ஸ்ரீஅங்கதப்பெருமான் பற்றிநிற்கவும், ஸ்ரீபரதாழ்வான் வெண்கொற்றக் குடைபிடிக்கவும், ஸ்ரீலட்சுமணசத்துருக்கர்கள் இருபுறத்திலும்நின்றுசாமரைவீசவும், திருவெண்ணெய்நல்லூர்ச்சடையப்பனென்னும் வள்ளலுடைய வேளாண் மரபினுயர்ந்த வொருவர் மாணிக்கமய கிரீடத்தை எடுத்துக் கொடுக்க வாங்கி ஸ்ரீவசிஷ்டபகவானனவர், உபயவிபூதி நாயகனாகிய ஸ்ரீராமபிரானுக்குச் சூட்டினார். அசுரகுலகுருவாகிய சுக்கிரனும், தேவகுலகுருவாகிய பிரகஸ்பதியும், கணிதசாஸ்திரவிதிப்படி குறித்தநல்லமுகூர்த்தத்தில் திரிலோகத்தார்களும் துள்ளித்துள்ளிக் குதிக்க சதுர்வேதங்களோடும் சிதேவி பூதேவிகளோடு ஸ்ரீசர்வேசுரனாகிய ஸ்ரீரவிகுலநாயகர் திருமுடிசூடியருளினர். அவாப்தசமஸ்தகாமராய்ப் பக்தபராதீனராய் விளங்குகின்ற ஞானமே

திருமேனியாகவுடைய ஸ்ரீராமபிரானனவர், தம்மிடத்தில் மிகுதியும் அன்புடையோர்களுடைய கருத்தின்படி அதி திருப்தி யுடையவராய்ச் சூடிக்கொண்ட திருமுடியான்து அவருடைய சிரசின்மேல் பிரகாசித்துக்கொண்டிருப்பினும், சமஸ்தசேதனர்களும் மிகுதியும் களிக்கின்ற களிப்பை யோசித்துப்பார்த்தால், ஒவ்வொருசேதனனும் தன்தன் முடியிலும் அன்றுஅந்தமுடியைத்தரித்துக்கொண்டு ராச்சியாதிகாரம் பெற்றுக்கொண்டாற்போலிருந்தது. பலநாள்தவஞ்செய்து தம்முடைய இயற்கைக்குத்தக்க நாயகராகிய ஸ்ரீராமச்சந்திரனை அடைந்து இடையே பிரிந்துவருந்திக்கொண்டிருந்த பூதேவியானவர், இப்போது ஸ்ரீபுருஷோத்தமராகிய ஸ்ரீராமநாதனை மாந்தளிர்போலச் சிவந்து மிருதுவாகிய கைகளைநீட்டி ஸ்தனங்கள் அவருடைய மார்பிலழுந்தும்படி தழுவினர். திருமுடி சூடிக்கொண்டு ஸ்ரீசானகிபிராட்டியோடு ஸ்ரீராகவபிரான் பட்டாபிராமரா யெழுந்தருளியிருக்கும் திவ்வியசேவையைக்கண்ட ஸ்ரீவசிஷ்டர் முதலியபிரமரிஷிகளும், மற்றபிராமண சஜ்ஜனர்களும், ஆநந்தப்பரவசர்களாய் ஸ்ரீசர்வசுவாமியினுடைய திருவழகுக்குக் கண்ணெச்சில் படுமோ என்கிற பயத்தால், (பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்றும், இராக்கதர் வாழிலங்கை பாழாளாகப் படைபொருதானுக்குப் பல்லாண்டு கூறுதுமேயென்றும், நாடுநகரமு நன்கறிய நமோ நாராயணாய வென்று பாடுமன்முடைப் பத்தருள்ளீர் வந்து பல்லாண்டு கூறுமினேயென்றும், தொண்டக்குலத்தி லுள்ளீர்வந் தடிதொழு தாயிரநாமஞ்சொல்லிப் பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்மினேயென்றும், பந்தனைதீரப் பல்லாண்டு பல்லாயிரத்தாண் டென்று பாடுதுமே யென்றும், பையுடைநாகப் பகைக்கொடியானுக்குப் பல்லாண்டு கூறுவெனென்றும்,) மங்களாசாசனஞ்செய்து, [வாவிமாவலத்தொருவனதுடல் கெட வரிசிலை வளைவித்தன், றேலநாறுதண் டடம்பொழி லிடம்பெற விருந்தவனே யென்றும், கலங்கமாக்கடல் கவிகுலம்பணிசெய வருவனாயணைகட்டி, இலங்கைமாநகர் பொடிசெய்த வடிகளே யென்றும், மறையாய நால்வேதத் துண்ணின்ற மலர்ச்சுடரே, முறையாலிவ்வுலகெல்லாம் படைத்திடந் துண்டுமிழ்ந்தளந்தாய், பிறையேறு சடையானு நான்முகனும் இந்திரனும் இறையாதலறிந்தேத்தவீற்றிருத்தலிதுவியப்பேயென்றும்,] வேதாங்கத்தாலும், வேதமொழிகளாலும், துதிசெய்தார்கள். அப்பால் ஸ்ரீவசிஷ்டமுனிவர் வேதமந்திரங்களைச்சொல்லச் சாஸ்திர விதிப்படி ஸ்ரீராகவபிரானனவர் திருத்தம்பிமார்கள் மூவருக்கும் கிரீடங்களைத் தரித்து ஸ்ரீபரதாழ்வான் செங்கோல் நடாத்தும்படி ஆக்கியாபித்து, எல்லாரோடும் அளவிடப்படாத நானாவித போகங்களை அநுபவித்துக்கொண்டிருந்தனர்.

திருமுடிசூட்டுப்படலம் - முற்றும்.

## விடைகொடுத்தபடலம்.

அப்படி அநுபவித்துக்கொண் டிருக்குங் காலத்தில் ஒருநாள் பசும்பொன்னாற் சுவர்களெழுப்பி மாணிக்கத் தூண்கள் நட்டு நானாவித ரத்தினங்களால் மூகடுவேய்ந்த கொலுமண்டபத்தில் மணிகளிழைத்த சிவிகையின்மேல் நீருண்டமேகமும் மின்னலும்போல ஸ்ரீஜனக மஹாராஜ புத்திரியோடு ஸ்ரீதசரதராமர்வந்து, பரந்தவடிவினதாகிய கருங்கடலின் மத்தியில் மின்னல்களோடுவதுபோல ரத்தினஹாரங்களும், முத்தாரங்களும், மதாணியும், திருமார்பில் அசைந்து பிரகாசிக்கவும், உதயசூரியனைப்போல நவரத்தினங்களிழைத்த பொன்மகுடம் திருமுடியில் விளங்கவும், மேகசிரேஷ்டமானது பலசெந்தாமரை மலர்களை மலர்ந்து ஒரு சிங்காதனத்தின்மேலிருந்தாற்போல ரத்தினமய சிங்கங்கள்சுமந்த பீடத்தின்மேலெழுந்தருளியிருந்தார். மரகதமலையின் பக்கங்களில் வெண்மையாகிய சந்திரிகைபாய்வதுபோல, வேல்போலுங் கண்களையுடைய மங்கையர்கள் தாமரைமலர்போன்ற கைகளால் சாமரைகளைப் பற்றி வீசவும், தம்முடைய ஜகன்மோகனுகார திவ்விய வடிவழகில் ஈடுபட்டு, நாகர்களும், நரர்களும், தேவர்களும் பலவாறு துதிக்கவும், சந்திரன்கண்டு உள்ளம் நோகும்படி பதினாலு லோகங்களிலும், தன்னுடைய குளிர்ந்த ஒளி வீசிக்கொண்டு, பிரதாபலங்கேசுரனை வெற்றிகொண்ட கீர்த்தி மேலே ஓங்கிப் பரவியதுபோல மேலே வெண்கொற்றக்குடை நிழலைச்செய்யவும், கற்புள்ள சுமங்கலி பிராமண ஸ்திரீகள் மங்கல கீதங்கள்பாடவும், ஸ்ரீமத்வேதமார்க்க பிராமண ஜனங்கள் ஆசீர்வசனங்களைச்சொல்லவும், தாளம், முழவம், சங்கம், முதலான மங்கள வாத்தியங்கள் முழங்கவும், சேல்போலப் பிறழ்கின்ற கருங்கண்களையும் கோவைக்கனிபோன்ற சிவந்தவாயையும், தாமரைமலர்

போகின்ற முகத்தையுமுடைய சௌந்தரியவதிகளாகிய வேசியாஸ்திரிகள் நடனஞ்செய்யவும், அலைகளையெதிர்த்து கோஷிக்கின்ற சமுத்திரத்தின் ஓசையையும் அடக்கும்படி நானாவித வாத்தியங்கள் முழங்கும்படியாகச் சப்பன்ன தேசாதிபதிகளும் அயோத்தியாநகரத்தினது பர்வதாகாரமாகிய கோபுர வாயலில் நெருங்கிவந்து தம்முடைய திவ்விய கீர்த்திகளையெடுத்துப் புகழ்ந்து முடிகள் ஒன்றோடொன்று தாக்கும்படி வணங்குந்தோறும் ஸ்ரீபாதங்களிரண்டும் சிவக்கவும், சுமந்திரர் முதலாகிய மந்திரிமார்களும், முனிவர்களும், படைத்தலைவர்களும், சூழ்ந்து துதிக்கவும், பவளம் போன்ற சிவந்தவாயால் கற்புடைய மங்கையர்கள் பல்லாண்டு சொல்லவும், சிங்காதனத்தின்மேல் தேவராஜனைப்போல ஸ்ரீராமச்சந்திரர் அரசுவீற்றிருந்தார்.

நித்தியவிபூதி லீலாவிபூதி நாயகராகிய ஸ்ரீராகவப்பெருமான் அரசுவீற்றிருக்கும்போது, மயிந்தன், துமிந்தன், கும்பன், அகம்பன், அநுமான், குமுதாக்ஷன், சதவலி, குமுதன், ததிமுகன், முதலாகிய அறுபத்தேழுகோடி வீரர்களோடும், எழுபதுவெள்ள வானரசேனைகளும் சூழ்ந்துவரச் சூரியபுத்திரராகிய ஸ்ரீசுக்கிரீவ மஹாராஜாவும், ராக்ஷசகுலவீரரோடு ஸ்ரீவிபீஷணாழ்வானும், புள்ளிகளமைந்த புலியின் தோலையிறுகக்கட்டிய அரையும், சுழல்கின்ற செங்கண்ணும், மலைபோல் உருண்டுதிரண்ட புயங்களும், உடையவராய்த் தம்முடைய வேடுவச்சேனை சூழ்ந்து வர ஒரு சிங்கம்போல ஸ்ரீகுகப்பெருமானும், வந்து தண்டன்சமர்ப்பித்துக் கைகளைக்கூப்பிக்கொண்டுநின்றார்கள். ஸ்ரீராமச்சந்திரரும் அவர்களிடத்துத் தமக்குண்டாகிய பேரன்புமறையாமல் முகத்தில்தோன்றும்படிக் கருணையாகக்கடாட்சித்து அவர்களைக்கட்டி ஆலிங்கனஞ்செய்ததுபோலவேயன்போடு இனியவார்த்தையால் தமது திருப்பவளந்திறந்து, யாதொருகுற்றமுமில்லாத வெற்றியாளர்களே! இங்கே உட்காருமென்று சொல்லினர். அவர்கள்யாவரும் அப்படியே ஆசனங்களின்மேல் உட்கார்ந்து இமைகொட்டாமல் ஸ்ரீசுவாமியினுடைய வடிவழகைப் பார்த்துப்பார்த்து ஆநந்தித்துக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீமத் வேதமார்க்கத்தில் ஒழுகாநின்ற மெய்ஞ்ஞானச் செல்வர்களாகிய முனிசிரேஷ்டர்களும், நான்குவேதங்களையும் ஐயமறவுணர்ந்த கிரகஸ்தாச்சிரமத்தார்களும், வேதத்திலும் ஸ்மிருதியிலும் சொல்லியபடி நடக்கின்ற உண்மையுடைய வானப்பிரஸ்தாச்சிரமத்தார்களும், குருகுலவாசஞ்செய்து சாமாநிய சாஸ்திரங்களையும் சதுர்வேதங்களையும் அவற்றைச்சார்ந்த நூல்களையும் சந்தேகவிபரீதமில்லாமல் கற்றறிகிற பிரமசரியாச்சிரமத்தார்களும், பாரம்பரியமாய்ப் பலநூல் கற்றுணர்ந்த வித்வஜனர்களும், அயோத்தியாநகரத்துக் கிறைவராகிய ஸ்ரீரகுநாயகனை முறையாகச்சூழ்ந்து தங்கள் தங்களுக்குரிய பீடங்களின்மேல் உட்கார்ந்தார்கள். விதிசிவேந்திராதி சமஸ்ததேவர்களும், முனிவர்களும், வேண்டிக்கொண்ட பிரார்த்தனையின் பொருட்டுத் திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மேல் சயனித்துத் திருக்கண்வளர்வதைவிட்டு நீர்வளப்பமிகுந்த அயோத்திமாநகரத்தில்வந்து அவதரித்த நிர்மலசுரூபராகிய ஸ்ரீகாகுஸ்தனை வணங்கித் துதித்துச் சமஸ்ததேசாதிபதிகளும் மற்றவர்களும் தங்களுக்குரிய ஆசனங்களின்மேல் வீற்றிருந்தார்கள். இந்தப்பிரகாரம் நித்தம் நடந்துகொண்டே மெள்ளமெள்ள இரண்டு மாதங்கழிந்தது. தேவர்கள்முதலாகிய சாதுஜனங்களுடைய துக்கநிவாரணார்த்தமாகத் திருவயோத்தியாபுரியி லவதரித்து, அவைதிகமார்க்காநுசாரிகளாகிய துஷ்டராக்ஷசர்களைச் சங்கரித்த ஸ்ரீராமபிரானானவர், முதலில் சதுர்வேதிகளாகிய பிராமணர்களுக்கெல்லாம், ரத்தினமும், முத்தும், பொன்னும் விளையத்தக்க பூமியும், பசுவும், தானஞ்செய்தும், எங்களுக்கு இன்னது குறைவு என்று சொல்லி யாசித்தவர்களுக்கெல்லாம் அவர்களுடைய உள்ளக்குறைவு நீங்கும்படி வேண்டியவற்றைத் தானஞ்செய்தும், அவர்களுக்குத் தண்டன் சமர்ப்பித்து அவர்களெல்லோரையும் அனுப்பிவிட்டு அரசர்களைவரும்படி உத்தரவுசெய்தனர். அப்படியேஅரசர்களும்வந்தார்கள், வந்தஅரசர்களைக் கிருபையோடுபார்த்து அவரவர்களுக்குத்தக்கபடி தேசம், சிவிகை, ரத்தினகிரீடம், ரத்தினாரம், முத்தாரம், இவைமுதலிய ஆபரணங்கள், குதிரை, தேர், யானை, பீதாம்பரம், இவைகளை உள்ளன்போடு கொடுத்து அவர்கள் தங்கள் பதிகளுக்குப் போகும்படி கட்டளையிட்டனர். பிற்பாடு திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்வதைவிட்டு அயோத்தியாநகரத்தில்வந்த ஸ்ரீராமச்சந்திரரானவர், சுவர்க்கலோக வாசிகளை நானாவித இடுக்கண்செய்த சம்பராசுரனைச் செயங்கொண்ட தசரதசக்கரவர்த்தியாருக்கு அக்காலத்தில் இந்திரன்மனங்களித்துக்கொடுத்த தெய்வமணிகளிழைத்த கடகத்தையும், யானைகளையு

ம், குதிரைகளையும், தேர்களையும், நல்லசொர்ணாம்பரங்களையும், ஸ்ரீசுக்கிரீவமஹாராஜருக்கு வெகுமதியாகக்கொடுத்தார். யாதொருபழிச்சொல்லுமில்லாத ஸ்ரீஜெயராமரானவர், அறிவுடையோரால் அங்கதனென்னும் பெயரை அழகுபடும்படி திருத்தும்விதம்போலப் இட்சுவாகு சக்கரவர்த்திக்குப் பூர்வத்தில் பிரமதேவரானவர் கொடுத்திருந்த வாகுவலயத்தை அங்கதப்பெருமானுக்குக் கொடுத்தார். அப்போது அங்கதப்பெருமான் கொண்ட ஆநந்தத்தை யாராலறிந்து சொல்லிமுடியும். மேலும் அந்தஅங்கதப்பெருமானுக்குப்பெரிய விலைமதிப்புள்ள ரத்திஹாரத்தையும், பீதாம்பரத்தையும், குதிரைகளையும், கஜசிரேஷ்டங்களையும், கொடுத்து உனக்கு நீயே அல்லாமல் வேறு ஒப்பிலாதவனே அப்பா அங்கதா! சூரியகுமாரராகிய ஸ்ரீசுக்கிரீவமாகாஜாவைப் பிரியாமல் அவருடைய அபிமதாநுசாரியாய் நடந்துகொ ளென்றார்.

நித்தியமாய் வழங்கிக்கொண் டிராநின்ற கீர்த்தியையுடைய ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரர் ஸ்ரீஅநுமானைக் கருணையோடு கடாட்சித்து நீசெய்த மகோபகாரத்தை எமக்கு யார்செய்யப் போகிறார்கள்.. அதற்குப் பிரதியுபகாரமாக யான் செய்யவேண்டிய தென்ன இருக்கிறது. எமக்காகக் கொடிய அரக்கர்களோடு போர்செய்த திண்ணிய தோள்களை யுடையானே! இதோ என் மார்பிலணிந்த வச்சிரமணியாரத்தை அணிந்துகொள்ளென்றார். என்று புகழ்ந்த மாத்திரத்தில் ஆஞ்சநேயரானவர் மிகவும் நாணத்தோடு தலைவணங்கி வாயைப்புதைத்து முன்தானையை மடக்கி யொதுக்கிக்கொண்டு ஒன்றும்பேசாமல் பயபக்தியோடு நின்றனர். அப்படி நின்ற வாயுபுத்திரனை நன்றாயுற்றுக் கடாட்சித்து ஸ்ரீசர்வசுவாமியானவர் தமது திருமார்பி லணிந்திருந்த வச்சிரரத்திஹாரத்தையும், மெல்லிய பீதாம்பரத்தையும், யானைகளையும், குதிரைகளையும், கொடுத்தனர்.. ஸ்ரீசர்வேசுரனுடைய திருமார்பைநீங்கி மிதிலாபுரியில்திருவவதரித்தஸ்ரீசானகிபிராட்டியாரை ஸ்ரீசுவாமியானவர் கடைக்கண்ணால்கடாட்சித்தனர். அக்குறிப்பைஅறிந்துகொண்டு பிராட்டியாரும் முன்னே தமக்குச் சரசுவதிதேவி சமர்ப்பித்த முத்தாரத்தைத் தமது திருக்கரத்தால் எடுத்து மஹாபிரீதியோடு திருவடிகளுக்குக் கொடுத்தனர். சமஸ்த அண்டங்களையும் அவற்றிலுள்ள சேதநா சேதனங்களையும் முன்னே தம்முடைய உந்திக்கமலத்தில் வழியே தந்த ஸ்ரீபரந்தாமராகிய ஸ்ரீராமநாதரானவர், விபீஷணனை வெல்லுஞ் சந்திரனுக்கொப்புள்ளதும் இந்திரன் தரித்துக்கொள்ளத் தக்கதுமாகிய முத்தாரத்தையும், மற்றுஞ் சில ஆபரணங்களையும், யானை குதிரைகளையும், பீதாம்பரத்தையும், சாம்பவந்தருக்கும், சிறந்தநவமணி மாலையையும், முத்துமாலையையும், பொன்னிழையால் நெய்த வஸ்திரத்தையும், ஒப்பிலாத பொன்னணிகளையும், மற்றபல அணிகளையும், யானை குதிரைகளையும், நீலனுக்குங் கொடுத்தார். ஆதியிலே சதுர்முகனைச் சிருட்டித்த ஸ்ரீபகவானாகிய ஸ்ரீரகுநாயகர் மத்தகஜங்களையும், சுவேதாசுவங்களையும், பொன்னாபரணங்களையும், மாணிக்க மாலையையும், மேலும் யோக்கியமான பலவஸ்துக்களையும், சதவலி என்னும் படைவீரனுக்கும், விலைமதிக்க அருமையானதும், தனக்குச் சமான மில்லாததுமாகிய ஒளியுள்ள மணியாரத்தையும், பொன்வஸ்திரத்தையும், மதித்த யானைகுதிரைகளையும் கேசரிஎன்னும்படைத்தலைவனுக்குங்கொடுத்தார். கோசலநாட்டு அரசனாகிய ஸ்ரீராகவபிரான், நானாரத்திஹாரங்களையும், கனகாம்பரத்தையும், கஜதுரகங்களையும், இப்படிப்பட்ட அளவில்லாத திவ்விய வஸ்துக்களையும், குமுதன், தாரன், பநசன், ஆகிய இவர்களுக்குக் கண்டோர் ஆநந்திக்கும்படி ஒவ்வொருவராக அழைத்துக் கொடுத்தார். இந்தப்படி அறுபத்தெழுகோடிபடைத்தலைவர்களில் மற்றவர்களுக்கு அவரவர்களுடைய யோக்கியதைக்குத் தக்கபடி முத்தாரம், மணியாரம், பொன்னணிகள், வஸ்திரங்கள், கஜம், துரகம், முதலியவற்றைக் கொடுத்து இனியவார்த்தைகளைப்பேசி, கடலைப்போல ஓங்கிப்பெருகிய எழுபதுவெள்ளம் வானரவீரர்களைக் கடாட்சித்துச் சுகித்து வாழத் தம்முடைய கருணையைப் பாலித்தனர்.

வானரர் யாவர்களுக்கும் நடக்கவேண்டிய முறைமையாவும் நடத்தினர். க்ஷீரசாகரத்தில் திருவனந்தாழ்வான்மேல்செய்யும் அறிதுயிலை நீங்கி அயோத்தியில்வந்தவதரித்த எம்ஐயனானவர் பின்பு மின்னலினது திரட்சியையொத்த முடியைத்தரித்த சிவந்த நேத்திரங்களையுடைய ஸ்ரீவிபீஷணாழ்வானைக் கிருபையோடு திருக்கண் மலர்சார்த்தி, இந்தச் சராசரங்களையெல்லாம் சுமக்கும் பெருவலியுள்ள உனக்கு நீயே ஒப்பல்லாமல் வேறொருவரும் ஒப்பாகார். ஒருவருண்டென்று சொல்லினும், பொன்னை இரும்பு ஒத்ததாயினும் ஒப்பாகமாட்டாரென்று அவருடைய உண்மை

திலையை எடுத்துப் புகழ்ந்து, முன்னே தேவர்கள் தமக்குச் சமர்ப்பித்த ரத்தினக்கடகத்தையும், மதயானைகளையும் குதிரைகளையும், ரதங்களையும், மணிகளழுத்திய பொன்னணிகளையும், பொன்னிழையால் நெய்யப்பட்ட வஸ்திரங்களையும், கலவைச் சாந்தையும், செஞ்சந்தனத்தையும், அன்போடு கொடுத்தார். சிருங்கிபேரியமென்னும் நகரத்துக்கு அரசனாகிய ஸ்ரீகுகப்பெருமானைக் கடாக்ஷித்து, குற்றமற்ற குணவராயினோர்க்கு என்ன உபசாரஞ் சொல்லுகிறது என்று சொல்லி, யானைகளையும், குதிரைகளையும், திகிக்குவியலையும், உயர்ந்த விலையுள்ள வஸ்திரங்களையும், ரத்தினாபரணங்களையும், கொடுத்து அவருடைய ஊருக்குப் போகும்படி விடைகொடுத்தனர்.

உடனே கருணைசலதியாகிய ஸ்ரீராமநாதரானவர், திருவடிகளையும், அங்கதப் பெருமானையும், சாம்பவனையும், மஹாராஜாவையும் நோக்கி உங்களைப் பிரியும் பிரிவை நினைப்பதற்குங் கூடாமையா யிருக்கிறது. நீங்கள்வசிக்கும் கிட்கிந்தையானது உங்களுடையதல்ல என்னுடையதே அங்குள்ள குடிகள் காப்பாரில்லாமல் வருந்துவார்களேயானால் அக்குற்றம் என்னைச்சாருமல்லவா ஆகையால் என்னுடைய ஆக்கினையால் கிட்கிந்தைக்குச் சேனைகளோடுபோய்ச் சேருங்களென்று உத்திரவுதந்து ஸ்ரீவிபீஷணாழ்வானையும் நோக்கி வானரேந்திரர்களுக்குச் சொன்னது போலவே இன்சொற்கள்சொல்லி விடைகொடுத்தனர். ஸ்ரீசர்வசுவாமியானவர் இப்படித் தங்களுக்குவிடைகொடுத்தவுடனே அதிவிவேகிகளும், வேதஞ்சொல்லும் சத்திய மார்க்கத்தில் நடப்பவர்களுமாகிய அவர்கள்யாவரும், சுவாமியைப்பிரிகிறோமென்று சிறிதும்நெஞ்சங்கலங்காமல் குதுகலமாகிய நெஞ்சுடையவர்களாய், நம்முடைய சுவாமியானவர் ஏவியதைச்செய்வதே நமக்குக்கடனென்றுணர்ந்து, ஸ்ரீபரதாழ்வானையும், ஸ்ரீராமாநுஜனையும், ஸ்ரீசத்துருக்கப்பெருமானையும், வசிஷ்ட பகவானையும், தாய்மார்கள் மூவரையும்,மகேசுவரியாகிய ஸ்ரீசானகி பிராட்டியாரையும், ஸ்ரீசர்வேசுரனாகிய ஸ்ரீராகவபிரானையும், தனித்தனியாகப்பிரதட்சிணஞ்செய்து நமஸ்கரித்து அவரவர்களிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு பிரயாணப்பட்டுத் திருவயோத்தியாபுரியைக்கடந்து கங்கைக்கரையில் சிருங்கிபேரியநகரத்தில் ஸ்ரீகுகப்பெருமானை இருக்கவிட்டு.அப்பாற்சென்று கிஷ்கிந்தாபுரியை அடைந்து அங்கே, ஸ்ரீசுக்கிரீவமகாராஜா அங்கதப்பெருமான், சாம்பவர், திருவடிகள், நீலன், பநசன், முதலானவர்களை இருக்கவிட்டு, அரக்கர்சேனைகளோடு ஆகாயமார்க்கமாக ஸ்ரீராகவபிரானுடைய கருணைக்குப் பாத்திரபூதராகிய ஸ்ரீவிபீஷணாழ்வானவர் சமுத்திரஞ் சூழ்ந்த இலங்காநகரமே போய்ச்சேர்ந்தார். பிரமருத்திரேந்திராதி சமஸ்தசேதனர்களுக்கும் பிதாவாகிய ஸ்ரீதசரத ராமசுவாமியானவர், தமக்குத்துணைவர்களாகிய ஸ்ரீசுக்கிரீவமகாராஜாமுதலானவர்களைத்தங்கள்தங்கள் இருப்பிடமேபோய்ச்சேரும்படி உத்திரவு கொடுத்து அனுப்பிவிட்டு, நித்தியசூரியாவதாரமாகிய திருத்தம்பிமார்கள் தம்முடைய சீர்பாதநிழலைவிட்டுப் பிரியாமல் வேண்டிய உபசாரகைங்கரியங்களைச் செய்துகொண்டிருக்கவும் மநுஸ்மிருதியிற் சொல்லியபடி சாதுர்வருணத்தார்களும் மற்றவர்களும் ஸ்ரீமத்பரமவைதிகமார்க்கத்தில் நடக்கவும், பொய், கொலை, களவு, முதலிய தீச்செயல்களைச் செய்யுமவர்களுளராயினவர்களைத் தக்கபடிதண்டித்துப் பூபாரத்தைநீக்கி, ஸ்ரீதேவி பூதேவிகளிருவருந் திருவுளம் வாட்டமில்லாமல் களித்திருக்கவும், திரிலோகத்தார்களும், இவர்தான் நம்முடையபெருமானென்று துதித்துவணங்கிக் குற்றேவல்களைச்செய்யவும், தானுந்தருமமாக இந்தத் தரணியை ஆண்டுகொண்டிருந்தனர்.

விடைகொடுத்தபடலம்முற்றும்.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

---

## அபியுக்தர்கள்செய்த கவி.

அன்னதான மகிலநற்றானமே … *
கன்னிதானங் கபிலையின்றானமே …*
சொன்னதான பலமெனச்சொல்லுவார்
மன்னிராம கதைமறவார்க்கரோ… *

(இ-ள்.) நித்தியமாகிய ஸ்ரீமத்ராமாயண காலக்ஷேபம்செய்துகொண்டிருக்குமவர்கள், சத்புருஷர்களுக்கு அன்னதானம், பூதானம், கன்னிகாதானம், கோதானம், இரணியதானம் இவைகளைச்செய்தபேறு அடைவார்களென்று அறிவுடையோர்கள்சொல்லுவர்கள். எ-று.

சம்பநாடனு மமெசெவிசாற்றுபூங் …*
கொம்பநாடன் கொழுநனிராமப்பேர்
பம்பநாடமழைக் குங்கதைபாச்செய்த*
கம்பநாடன் கழறலையிற்கொள்வாம். *

(இ-ள்.) பரமசிவனானவர் புரிவத்தில் தம்முடைய நாயகியாகிய உமாதேவிக்கு உபதேசித்த, ஸ்ரீசானகிராமனுடைய திருநாமங்கள் பலசெய்யுள்களினும் பொருந்தும்படி நித்தியமாகிய ஸ்ரீராமசரித்திரத்தைக் கவியாகச் செய்தருளிய கம்பநாட் டாழ்வாருடைய திருவடிகளை எல்லாநன்மையும் அடையும்படி நாம் தலையில் தரித்துக்கொள்ளுவாம்-எ-று.

வாழ்வார் திருவெண்ணெய் நல்லூர்ச்சடையப்பன் வாழ்த்துபெறத், தாழ்வாருயரப்புலவோரகவிருடானகலப், போழ்வார்கதிரி னுதித்ததெய்வப் புலமைக்கம்பநாட், டாழ்வாரடியைச் சிந்திப்பவர்க்கி யாதுமரியதன்றே...※

(இ-ள்.) செழிப்பு நிறைந்த திருவெண்ணெய் நல்லூரிலுள்ள சடையப்பவள்ளலானவர் வாழ்த்தை யடையவும், கல்வியில் புலமை நிரம்பாதவர்கள் புலமை நிரம்பி உயரவும், ஸ்ரீசர்வேசுரன் பக்கலில் அன்பில்லாதவர்கள் அன்புபெற்று உயரவும், புலமையுடையோர்களுக்கு, சொன்னோக்கம், பொருணோக்க முதலிய நோக்கங்களைப்பற்றித் துணியப்படாமல் தமது நெஞ்சி லுண்டாயிருந்த அறிவின்மையாகிய இருளானது ஒழியவும், இருளைச் சிதைத் தோட்டுகின்ற நீண்ட கிரணங்களையுடைய மார்த்தாண்டனைப்போல தம்முடைய தவப்பேறாக அவதரித்த தெய்வப்புலமையுள்ள கம்பநாட்டாழ்வாருடைய திருவடிகளைத் தியானிப்பவர்களுக்கு எதுவும் அருமையாயிராது, யாவும் கைகூடும். எ-று.

உயுத்தகாண்டவசனம்
முற்றும்.

---

கம்பநாட்டாழ்வார் திருவடிவாழ்க.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# உயுத்தகாண்டம்—படலவகராதி.


| படலங்கள். | பக்கம். | படலங்கள். | பக்கம். |
|---|---|---|---|
| அங்கதன்தூதுப்படலம் ... ... | ௪௦௨ | நிகும்பலையாகப்படலம் ... ... | ௫௬௧ |
| அணிவகுப்புப்படலம் ... ... | ௩௯௯ | படைகாட்டுப்படலம் ... ... ... | ௫௯௭ |
| அதிகாயன்வதைப்படலம் ... ... | ௪௬௫ | படைத்தலைவர்வதைப்படலம் ... | ௫௧௧ |
| இந்திரஜித்துவதைப்படலம் ... | ௫௮௩ | பிரமாஸ்திரப்படலம் ... ... ... | ௫௨௪ |
| இரணியன்வதைப்படலம் ... ... | ௩௪௦ | பிரம்மாஸ்துதி ... ... ... | ௬௬௧ |
| இராவணன்முதனாள்யுத்தப்படலம் | ௪௦௫ | மகரக்கண்ணன்வதைப்படலம் ... | ௫௨௧ |
| இராவணன்சோகப்படலம் ... ... | ௫௬௦ | மகுடபங்கப்படலம் ... ... | ௩௯௫ |
| இராவணன்களங்காண்படலம் ... | ௬௨௮ | மண்டோதரிபுலம்பல் ... ... ... | ௬௫௮ |
| இராவணன்தேரேறுபடலம் .. ... | ௬௩௧ | மந்திரப்படலம் ... ... ... | ௩௩௧ |
| இராவணன்வதைப்படலம் ... . | ௬௩௭ | மருத்துப்படலம் ... ... ... | ௫௪௯ |
| இலங்கைகேள்விப்படலம் ... ... | ௩௬௭ | மாயாசனகப்படலம் ... ... | ௪௫௫ |
| இலங்கைகாண்படலம் ... ... | ௩௯௦ | மாயாசீதைப்படலம் ... ... ... | ௫௬௦ |
| ஒற்றுக்கேள்விப்படலம் ... ... | ௩௮௨ | மீட்சிப்படலம் ... ... ... | ௬௬௧ |
| கடல்காண்படலம் ... ... ... | ௩௨௯ | மூலபலவதைப்படலம் ... ... | ௬௦௧ |
| களியாட்டப்படலம் ... ... ... | ௫௫௮ | வருணனடைக்கலப்படலம் ... | ௩௭௨ |
| கும்பகருணன்வதைப்படலம் ... | ௪௨௧ | வானரவீரர்களங்காண்படலம் ... | ௬௨௪ |
| கோபுரப்படலம்... ... ... ... | ௩௯௨ | விடைகொடுத்தபடலம் ... ... | ௬௯௭ |
| சானகிகளங்காண்படலம்... ... | ௫௪௫ | விபீஷணனடைக்கலப்படலம் ... | ௩௫௬ |
| சேதுப்படலம் ... ... ... ... | ௩௭௮ | விபீஷணாழ்வானிரங்கல் ... ... | ௬௫௬ |
| திருமுடிசூட்டுப்படலம் ... ... | ௬௯௩ | வேலேற்றுப்படலம் ... ... ... | ௬௯௯ |
| நாகபாசப்படலம் ... ... ... | ௪௮௬ | | |


படலவகராதி-முற்றிற்று.





ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

# ஸ்ரீமத்ராமாயண அரங்கேற்றச்சுருக்கம்.



எண்ணில் பல்வளஞ்செறி வெண்ணெய்நல்லூரினில், மருளறவுண்மைதேர் தெருளுறு மறிவினில், அராமாபதிநிகர் கிராமாதிபதியாகிய சடையப்பவள்ளலென்பவர் புலவர்பெருமானாகியகம்பநாடனைநோக்கிஐயா! அளப்பருந்தமிழ்க்கொருவிளக்கமேயெனவும், வேந்தமூவருஞ்சிரம் ஏந்துபூவெனவும் நின்றநீர் வடமொழியிலுள்ள இதிகாசசிரேஷ்டமாகிய ஸ்ரீமத் ராமாயணத்தைத் தமிழில் பெருங்காப்பியமாகச் செய்தால், இத்தமிழ் வழங்கும் நாட்டினில் கசடறக்கற்ற புலவர்கள் யாவரும் சிறந்த இலக்கியமாகக் கொள்வதும் அன்றி ஸ்ரீராமபிரானுடைய திவ்வியசரித்திரத்தை எளிதிற் கற்றுணர்ந்து மற்றையோர்க்கும் தெரிவித்து அவர்களை உய்யும்படிசெய்து, தாமும் உய்வார்களென்று சொல்லினர். அதுகேட்டுக்கம்பநாடரும்அப்படியேசெய்துதருகின்றேமென்றுசொல்லி நெடுநாளாய்ச்செய்யாமலேகாலஹரணம்பண்ணினர். அப்படிக்காலதாமசம்கம்பநாடர்செய்துவருவதைவள்ளலானவர்கண்டு நாம்குலோத்துங்கச்சோழனைக்கொண்டு சொல்வித்தாவது நமது அபிப்பிராயத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமென்று சென்று சோழனுக்கு அதை அறிவித்தனர்.

அரசன் இது தகுந்ததேயெனத் தனக்குள் கருதி மஹாகவியாகிய கம்பநாடனைப் பாடும்படிக் கேட்டுக்கொள்வோமேயானால், அவர் நம்முடைய சொல்லில் மதிப்புவைத்துப் பாடினால் பாடலாம், மதியாமல் பாடாவிட்டால், அளவிடுதலரிய கல்விச்செல்வமுடைய அவனைப் பொருட் செல்வமுடைய நாம் யாதுசெய்யலாம். சொன்னோக்கம் பொருணோக்கம் முதலிய வமைத்துப்பாடுதல் அவர்க்கோ எளிது மற்றவர்க்கு அரிது. இதுபற்றியன்றே கம்பர்வீட்டுக் கட்டுத்தறியுங் கவிசெய்யும் என்றும், புத்திநுட்பத்தால் அறியவேண்டிய ஒன்றை இதென்னகம்பர் சூத்திரமோ! என்றும், பழமொழிகளாகக் கற்றோரும் மற்றோரும் வழங்கி வருகிறார்கள். அவர் பாடித் தருவாரேயானால் வடமொழியிலுள்ளவைபோல், அறமுதலிய நான்கு புருடார்த்தங்களைத் தருவதும், தன்னோடொத்தவரும் உயர்ந்தோருமில்லாத தலைவனையுடையதும், மலை கடல் நாடு நகரம் இருது சூரியோதயம் சந்திரோதயம்முதலியபலவற்றின்வருணனையும், மந்திரமிருத்தலும், தூதுவிடுத்தலும், பகைமேற்செல்லுதலும், போர்செய்தலும், வெற்றியடைதலும், தொடர்ந்துஎட்டுவகைச்சுவைமுதலானவற்றையு முடையதும் ஆகிய பெருங்காப்பியம் தமிழில் இல்லையென்னுங் குற்றமும் நீங்கும். இவ்விலக்கணங்களை யமைத்துப் பாடவேண்டுமெனில் ஸ்ரீராகவபிரானுடைய சரித்திரமேயன்றி வேறின்று. பாடவல்லோரும் இவரேயன்றி வேறொருவரும் இலர். ஆதலால் இவரை எவ்வகையாலாவது பாடும்படிக் கேட்டுக்கொள்ளவேண்டும். இவர்பாடித்தருவாரேயானால் நாமும் தமிழ்நாட்டிலுள்ளவர்களுமேயன்றித் தமிழுஞ்செய்தபாக்கியமாம். கம்பநாடனைமாத்திரம்பாடும்படி நாம் கேட்டுக்கொண்டால் எவ்விதத்திலும் காலவிளம்பனஞ் செய்வர். இவரையும் வேறொரு புலவரையும் தனித்தனிப் பாடச் சொல்வோமென்றால் இவரைப்போலத்தெய்வப்புலமை

யுள்ள மகாகவி ஒருவரையுங் கண்டிலோம். தற்காலத்தில் மாத்திரந்தானென்று மூன்றுமில்லை இனியுண்டாவது மில்லை. ஆயினும் மற்றைப் புலவர்களில் சிறந்த ஒட்டக்கூத்தனை யாவது இவரோடுகூட்டிப் பாடிப் பாடிக் கேட்டுக்கொள்ளலாம், ஒருவரையொருவர் முந்தவேண்டிச் சீக்கிரத்தில் பாடிமுடிப்பரென்றுதமக்குள்ளே தெளிந்து அவ்விருவர்களையும் அழைப்பித்துத் தக்கபடி உபசரித்துப் பாடித்தரும்படி கேட்டுக்கொண்டனன். ஒட்டக்கூத்தர் பாலகாண்டமுதல் ஐந்தாவது சுந்தரகாண்டம் வரையும்பாடி ஆறாவது யுத்தகாண்டத்தில் கடல்காண்படலம் வரையும் பாடினார். அதுவரையும் கம்பநாடர் தெய்வவணக்கமுஞ்செய்யவில்லையென்பதைச் சடையப்ப வள்ளலார் அறிந்து வேற்றிடத்திற்போய்க் கம்பநாடரையும் ஒட்டக்கூத்தனையும் இராமாயணம்பாடச்சொன்னதாங்கள் அவர்களைஎவ்வளவுபாடியாச்சென்று கேளாதிருப்பது தருமமாவென்ன, உடனே சோழன் அவ்விருவரையும் வரவழைத்து இராமசரித்திரம் எம்மட்டும் பாடியாயிற்றென்றுகேட்க, ஒட்டக்கூத்தர் கடல்காண்படலபரியந்தமென்றார். கம்பநாடர் ஒருபாட்டும்பாடாதிருந்தும் ஒட்டக்கூத்தரினும் அதிகமாகப் பாடினதாகச் சொல்லவேண்டுமென்று நினைத்ததனால், அப்போது பொய் சொல்வது ஆவசியமாயிருந்தது. தாம்சொல்லும்பொய் பிறருக்குத் துன்பஞ்செய்யாதாதலாலும் உடனே அவ்வளவும்பாட வல்லவராதலாலும் கடல்காண் படலத்துக்கு அப்புறத்துள்ள சேதுபந்தனப் படலம் வரையும் பாடினேனென்றனர்.

புலவர் பெருமானே! அதைச் சற்றே பிரசங்கிக்கக் கேட்போமென்று அரசன் சொல்ல, பூர்வத்தில் சரசுவதியானவள் ஸ்ரீவான்மீகிபகவானுடைய நாவில் எழுந்தருளி ஸ்ரீமத்ராமாயணத்தைப் பாடிமுடித்தாற்போல இப்போது ஸ்ரீராமபிரானுடைய திவ்யசரித்திரகுணானுபவநிஷ்டராகிய கம்பநாடருடைய நாவில் எழுந்தருளியபடியால், உடனேஇவர் அப்படலத்தைமாத்திரம்பாடியருளி உபந்யாசஞ்செய்யத்தொடங்கி, மஹாராஜாவினுடைய ஆணையால் வானரவீரரும், படைத்தலைவர்களும் மலைகளைவேரோடுபறித்துவந்து கடலிலிடுவதைப்பார்த்துப் பேசுமிடத்து, குமுதனென்னும்படைத்தலைவன் தன் கையிற்கொடாமல் விட்டெறிந்த சிறந்தமலையானது, கூத்தாடினேர்போலத்திமிதமென்றொலியெழச்சமுத்திரத்தில்வீழ்ந்தது. அதுகாரணத்தால் அலைகளாம் குதிப்புடைய கடலினது துளிகள்நம்முடைய ஊரில்பிரவேசிக்கக்கண்டதேவர்கள் அமுதம்இன்னமும் உண்டாமமென்னும் ஆசையால் துள்ளிக் கூத்தாடினார்கள் என்னும் பொருளமைந்த,

கவி.

குமுதனிட்ட குலவரை கூத்தரின் ......*
திமிதமிட்டுத் திரியுந்திரைக்கடற் ......*
றுமிதமூர்புக வானவர் துள்ளினார் ......*
அமுதமின்னு மெழுமெனுமாசையால் ......*

என்னுந் திருவிருத்தத்தைக்கூறிச் சொற்சுவை முதலிய பல சுவையுந் தோன்றும்படி விரித்து உபந்யசித்தார். அதுகண்டு சடையப்பவள்ளலும், குலோத்துங்கச் சோழனும், ஒட்டக்கூத்தப் புலவரும் மற்றவர்களும் இந்தக்கம்பநாடருடைய கல்விப்புலமை, செயற்கையால் வந்ததல்ல தெய்வப்புலமையாகும் என்று உண்மையறிந்து அதிஆச்சரியமானசர்களாய்ப் பரவசப்பட்டார்கள். ஒட்டக்கூத்தர் ஆயினும் நாம் சும்மாவிருப்பது தகுதியன்று நாம் ஏதேனும் ஓராட்சேபம் செய்யவேண்டுமென்று கம்பநாடரைநோக்கித் துளியைத் துமியென்றதென்னையென்ன, அதுகேட்டு நானும் அறியேன் அவளும்பொய்சொல்லாளென்றுகூறி இச்சொல்லளவில் இச்சபையிலுள்ளார் திருப்தியாகாரென்று தமக்குள்எண்ணிப் புன்னகை கொண்டு துமியென்னும் முதனிலைத்தொழிற்பெயர் மலையெறிந்ததனாற் சிதறுற்ற நீர்த்துளிகளுக்கு ஆகுபெயராய் வந்ததென்று கூறினர். இது நிகண்டுதிவாகரங்களிலாவது சிறந்த இலக்கியங்களிலாவது உண்டோவென்றுகேட்க, கம்பர் உலக வழக்கத்தில் சாதாரணமாயுள்ள இப்பதத்தை அவைகளிலும் காட்டவேண்டுமோவென்று சொல்லினர். ஒட்டக்கூத்தர் அதையெனக்கு மெய்ப்பிக்கவேண்டுமென அப்படியேசெய்கிறேனென்றுசொல்லிஉபந்யாசமுடிந்தபிறகு கம்பநாடர்விட்டிற்குவந்துசபையில்தம்மையறியாமல் தம்முடையவாக்கில்பிறந்த திருவிருத்தங்களைக்குறித்தும்தாம்இதுபரியந்தம்கேட்டு, மறியாததுமியென்னுஞ்சொல் அத்திருவிருத்தங்களில் ஒவ்றிலே தொடுக்கப்பட்டதைக்குறித்தும் மிகுந்த வியப்புடையவராய் இது சரசுவதியினுடைய கடாட்சந்தான் மற்றொன்றுமல்லவென்று நிர்மானித்துக்கொண்டு சரசுவதியைத் தியானித்தனர். பாரதியும் பிரசன்னமாய்நின்று முன்னே வைதிகமுனிவராகிய வான்மீகிமுனிவருடைய வாக்கிலிருந்து வடமொழிச்சுலோகரூபமாய் ஸ்ரீமத்ராமாய

ணத்தை வெளியிட்டாற்போல இப்போது உன்னுடையவாக்கினின்று தென்மொழிச்செய்யுளுருவமாய் வெளியிடச் சித்தமாயிருக்கின்றேன். ஆதலால் இதைக்குறித்து நீவியக்கவாவது அஞ்சவாவது வேண்டுவதில்லை நாளைப்பொழுது விடியச்சாமநேரத்தில் ஒட்டக்கூத்தனையும் மற்றவர்களையும் ஆயர்வீதியே அழைத்துவாவென்றுசொல்லி மறைந்தனள்.

அப்படியே கம்பநாடர் ஒட்டக்கூத்தனையும், குலோத்துங்கச் சோழனையும், மற்றபுலவர்களையும் அவ்வீதிவழியே அழைத்துப்போகையில் ஒருவீட்டில் அபௌருஷேயமாகிய வேதமே தயிர்த்தாழியும், வேதாந்தமேதயிரும், வைதிகசாஸ்திரங்களேமத்தும், தாம்பும், இதிகாசபுராணங்களே சிறுபிள்ளைகளும், தானொரு ஆய்ப்பெண்ணுமாக உருக்கொண்டு அந்நேரத்திலே தயிர்கடைந்துகொண்டிருந்த வாணியானவள் அவர்கள் சமீபத்தில் வராநிற்கையில் அவர்களுக்குக் கேட்கும்படிதன்னைச்சூழ்ந்துநின்றஇதிகாசபுராணச்சிறுவர்களைநோக்கிப்பிள்ளைகளே! உங்கள்மேல் மோர்த்துமி தெறிக்கப்போகிறது எட்ட விருங்கோளென்றுசொல்ல, தெய்வக்கவிஞர் ஒட்டக்கூத்தனைக் கேட்டீரோவென்ன அவர்சரிதானென்று ஒப்புக்கொண்டு, இவ்வீடு குடியில்லாவீடென்று எனக்குத்தெரியுமே இப்பொழுது யாரிங்கேவந்திருக்கிறவர்கள் அறிவோமென்று மடியிற்சொருகியிருந்த ஜமுதாட்டை உருவிக்கொண்டு ஓடிப்பார்க்கையில். அங்கே ஒருகோபிகாஸ்திரீயும், சிலகோபாலர்களும், தயிர்த்தாழிமுதலானவைகளும் பிரத்தியட்சமாகத்தோன்றி மறைந்துபோயினமையால் இது சாரதையினது திருவிளையாட்டென்றுகருதி ஆச்சரியப்பட்டுத் திரும்பினர். அப்புறம்ஒட்டக்கூத்தர் சோழராஜனிடத்தில் தாம்பாடிமுடிப்பதாகச்சொன்னதின்பொருட்டுக்கிட்டத்தட்டஆறுமாசத்துக்குள்கடல்காண்படலத்தினின்றுமற்றபாகத்தையும்பாடிமுடித்தார். அக்காலத்திலுள்ள புலவர்கள் கம்பநாடர்உபநியாசஞ்செய்தகவியைக்கேட்டவர்களாகையால் அக்கவிபோல ஒட்டக்கூத்தருடையகவிசொற்சுவைமுதலியன இல்லையென்றுசொல்லுஞ்சொல்லைப்பலமுறைகேட்டு அந்தத்தெய்வக்கவிஞருடையகவிக்குமுன்னே நமதுகவி பயன்படமாட்டாதென்றெண்ணி ஒருநாள்தம்முடைய இராமாயணத்தைச் சஞ்சிகைசஞ்சிகையாக உருவிக் கிழித்துக்கொண்டிருக்கையில், ஒட்டக்கூத்தர்வசிக்கும் வீதிவழியேயதோஒருகாரியார்த்தமாகச்சென்றபுலவர்பெருமானானவர் கிழிபட்ட ஏட்டுக்குவியல்களைக்கண்டு ஒட்டக்கூத்தனைநோக்கிக் கிழித்தெறியப்படுகின்றதேதென்னவென, யான்பாடின ராமாயணமென்ன, ஏன்கிழித்தெறிகிறீரென, அவர் வரகவியேகவி மற்றக்கவியெல்லாங் கவியென்றுசொல்லிக் குறையுங்கிழிக்க எத்தனிக்கையில், இவர் அப்புலவருடைய கையிலிருந்த ஏடுகளைச் சீக்கிரமாய்ப் பறித்துப்பார்த்து உத்தரகாண்டமென்றுதெரிந்து கிழிக்கவொட்டாமல்தடுத்து, ஸ்ரீராகவசரித்திரமன்றி இராக்கதர்களுடைய சரித்திரத்தை உத்தரகாண்டம் சொல்லுகின்றமையால் நாம்பாடவேண்டுவதில்லையென்றும், இவர்பாடினதையே வைத்துக் கொள்ளலாமென்றும், நம்முடைய வாக்குக்கும் இவர் வாக்குக்கும் உள்ள தாரதம்மியம் உலகத்தாருக்குத் தெரியவருமென்றும், யோசித்து ஒட்டக்கூத்தனைநோக்கி அருமைப்பட்டுப்பாடியதை எவ்விதுகக் கிழித்தெறியவேண்டும்! நான் ஆறுகாண்டமாத்திரம் பாடுவேன் அதன்பின்னே இந்தஉத்தரகாண்டத்தைச் சேர்த்துக் கொள்ளுகிறேனென்றார். அதற்கு ஒட்டக்கூத்தரும் உடன்பட்டார். அக்காண்டத்தில் சிற்சில இடங்களில் சிற்சிலகவிகளைத்தாமும்பாடிச்சேர்த்தனர்.

உலகத்தில் அறிவுடையோர் தங்கள்மனோரதம் கைகூடுகிறதற்கும் நிர்விக்கினமாய் நிறைவேறுதற்கும் பாரதத்தை விராடபருவத்தினின்றும், ஸ்ரீமத்ராமாயணத்தைச் சுந்தரகாண்டத்தினின்றும் படித்தலும், பிறர்கேட்க உபநியசித்தலும், வழக்கமாகையால் நல்ல நாட்கொண்டு சுந்தரகாண்டத்திலிருந்து பாடத்தொடங்கி, அன்றுமுதல் சூரியாஸ்தமனகாலத்தில் சந்தியாவந்தனக்கடன் கழித்திட்டு வடமொழிப்புலவர்களாகிய வைதிகபிராமணர்களை வைத்துக்கொண்டு இராமுழுதும் வான்மீகம், வாசிஷ்டம், போதாயனமுதலியஇராமாயணங்களையும்மற்றைச்சாத்துவிகபுராணங்களையும் ஆராய்ந்து சிறிதுநேரம் நித்திரைசெய்து உதயத்துக்கெழுந்து நித்தியகருமானுட்டான முடித்துக்கொண்டு தம்மிடத்திலுள்ள கற்றுச்சொல்லிகளில் சிற்சிலர் ஏடுமெழுத்தாணியுமெடுத்து எழுதும்படிஆளுக்குஐம்பது, அறுபது, எண்பது, எழுபதாக அஸ்தமனபரியந்தம் நாளொன்றுக்கு எழுநூறுசெய்யுள்விழுக்காடுபாடுவார், இத்தினங்களில் சரசுவதியானவள் இவர்வாக்கில் ஆவிர்ப்பவிருப்பதுமல்லாமல் புறத்திலும் ஒரு திவ்யதிமங்கையினுருக்கொண்டு இவர்சமீபத்தில் எழுந்தருளி இவர்கண்ணுக்குமாத்திரம் தே

விறித்கொண் டிருப்பாள். பொழுதுபோன
படமைகம்பநாடனாநோக்கி, பொழுதுமுடி
ந்ததுகம்பா!என்பள். இவர்கலைமகளைநோக்கி,
எழுதிமுடிந்தது அம்பா ! என்பர். இந்தப்ப
டி ஒருபட்சத்துக்குள் ஆறுகாண்டமும்பாடி
முடித்தனர். நாளொன்று எழுநூறுகவிவீதம்
பாடினு ரென்பதைக்குறித்து அபியுக்த ரொரு
வர் பாடியபாடல்.

கவி.

கழுந்தாயுனகழல் பணியாதவர் கதிர்மணி
முடிமீதே, அழுந்தவாளிக டொடுபிலைராகவ
வழிநவகவிநாதன், விழுந்தநூயிற தெழுவத
ன்முன்மறை வேதியருடனுராய்ந், தெழுத்த
நூயிறு விழுவதன்முன்கவி பாடினதெழுநூ
றே. ... ... ... ... *

என்பதாம்,

ஸ்ரீமத்ராமாயணம் பாடிமுடிந்த செய்தி
யைக் குலோத்துங்கச்சோழன் சடையப்பவ
ள்ளல் முதலானவர்க்குத் தெரிவித்து, சி
றையிருந்தவளேற்றஞ் சொல்வதாகிய இவ்வி
திகாசஸ்ரேஷ்டம் வைதிகநூல்களி லொன்றுத
லால் எல்லாத் திவ்விய தேசங்களிலும் சிறந்த
திருவரங்கம் பெரியகோயிலில் அரங்கேற்றல்
செய்யவேண்டுமென அவர்கள் அநுமதிபெற்
று ஸ்ரீகோசத்தை எடுப்பித்துக்கொண்டுகோ
யிலுக்குப்போய் அத்திருப்பதியிலுள்ள ஸ்ரீ
வைஷ்ணவர்களுக்குத் தாம் வந்திருக்கும் செ
ய்தியைத்தெரிவிக்க, அவர்கள் இப்பெருங்கா
வியத்தில் நரஸ்துதி பண்ணப்பட் டிருக்கிற
தென்பதாலும், வேறு சில அபிப்பிராயத்தா
லும்அக்கருத்தைவெளிப்படுத்தாமல்,தமிழில்
வல்லவர்களாயிருந்தும் வடமொழியா யிருந்
தால்தவிரும்யோசனையில்லை தென்மொழியா
னமையிது எப்படிப்பட்டதோவென்று எங்க
ளுக்குச்சந்தேகமிருக்கிறது. நீரோ மகாகவி
உம்முடையபுலமையைக்குறித்தும், யோக்கி
தையைக்குறித்தும்புகழநாங்கள் அருகர்களல்
லோம். தமிழில் வித்துவான்களாயிருப்பவர்
கள் தில்லை மூவாயிரவர்களும், மின்னும்சிற்
சிலபேர்களு மாதலால் அவர்களிடமேசென்
று அவர்களுடைய அங்கீகாரம் பெற்றுவந்தா
ல் உமது காவியத்துக்கும் உமக்கும் அதிக
கௌரவமா யிருக்கு மென்றார்கள்.

அவர்கள் சாதித்த பிரகாரம் தெய்வப்புல
மைக்கம்பநாடரானவர் திருச்சித்திரகூடத்து
க்குச்சென்று தில்லைமூவாயிரவர்களில் சிற்சில
ரைக்கண்டுஇச்செய்தியைத்தெரிவிக்கநாங்கள்
மூவாயிரவரும் கூடினுலல்லாமல் இச்சேதத்
தில் உமக்கு உத்திரம் சொல்ல முடியாதென்
றார்கள். தாம்போய்க் கண்டவர்களெல்லாம்
இப்படிச் சொல்லிவிடவே சற்றே உள்ளங்க
லங்கி,

குலசேகரப்பெருமாள் திருமொழி.

பாசுரம்.

வந்தெதிர்ந்ததாடகைதன் னுரத்தைக்கீறி ... *
வருகுருதிபொழிதரவன்கணையொன்றேவி.
மந்திரங்கொண்மறைமுனிவன் வேள்விகாத்து
வல்லரக்கருயிருண்டமைந்தன்காண்மின்.*
செந்தளிர்வாய் மலர்நகைசேர் செழுந்தண்
சோலைத், தில்லைநகர்த்திருச்சித்திர கூடந்த
ன்னுள், அந்தணர்களொருமூவாயிரவரேத்த*
வணிமணியாசனத்திருந்தவம்மான்றனே.

இதுமுதலிய பாசுரங்களால் சித்திரகூட
த் தெம்பெருமானைத் தியானித்துக்கொண்டு
சயனித்தனர். அந்தத் திவ்வியதேசத்துப் பெ
ருமானுனவர் இவருடைய சொப்பனத்திலெ
ழுந்தருளி நாளை உதயத்திலே அத்தில்லை மூ
வாயிரவர்களில்தலைமையானவருடையபிள்ளை
பாம்புதீண்டி இறந்துபோகும், அப்பிள்ளைக்
குத்தகனசமுஸ்காரஞ்செய்வதற்காக அவர்க
ள்யாவரும் அத்தலைவன் வீட்டில்கூடுவார்கள்.
அதுசமயத்தில்நீர்பாடின ராமாயணத்தில் நா
கபாசபடலத்தை எடுத்து இன்னஇன்ன பாட
லை வாசித்து, உன்னுடைய கவியின் தெய்வத்
தன்மையைப் பின்னுள்ளோரும் உணர்ந்து
கொள்ளும்படிமூன்றுசெய்யுளுஞ் செய்யெ
ன்று அருளிச்செய்து போயினர்.

விடிந்தபொழுது தீனதயாளனுகிய கோவி
ந்தராஜப்பெருமாள் அருளப்பாட்டின்படி
தெய்வப்புலமைக் கம்பநாடர்எழுந்துஅநுட்
டான முடித்துக்கொண்டு சந்நிதிக்குப்போய்
ஸ்ரீகோவிந்தராஜப்பெருமாளைச் சேவித்துத்
தீர்த்தஞ் சடகோபம் லபிக்கப்பெற்றுத்திரு
ம்பிச்சென்று தலைவர்வீட்டில் மூவாயிரவரு
ங்கூடி யிருப்பதுகண்டு, இராமாயணம் அரங்
கேற்ற வேண்டுமென்ன, நாங்கள் குழந்தை
யைப் பறிகொடுத்துப் பரிதபிக்கின்றோமே
இதுதானு உம்முடைய ராமாயணப்பெருங்
காப்பியத்தை அரங்கேற்றுகிறசமயமென்றார்
கள். நான்நெடுநாளாய்க் காத்திருந்தும் இன்
றுதானே நீங்கள் மூவாயிரவரும் ஒருசேரக்கூ
டும்படிநேரிட்டது. இனிஎந்தக்காலத்தில் இப்
படிப்பட்ட சமயம்நேரிடப்போகிறதென்று
சொல்லிஐயன்மீர்! குழந்தை எவ்விதத்தாலிற
ந்ததென்றுவினவ, அவர்கள்பாம்புகடித்துஇற
ந்தது விஷமிறங்குதற்குத்தலையில்குடோரி
யிட்டும்மற்றும் எத்தனையோமணிமந்திர ஔ

ஷிதங்களைப்பிரயோகித்தும்'ஷ்ருகூலப்படவி ல்லையென்றார்கள். அந்தப்பிள்ளையைனக்குச் சற்றேகாட்டுமென்ன அதுகேட்டு அம்மூவா யிரவர்களும் இவர் மகாகவியாதலால் இவரா ல்நமக்கு அநுகூலங் கிடைக்கிறுங் கிடைக்கு மென்று பரபரப்புடனே குழந்தையை எடு த்துவந்துகாட்டினர்கள். இவர்கடிவாயைக் க ண்டு யமன், யமதூதன், காலன்முதலிய நான் குபற்களும்பதிந்தபடியால் அசாத்தியமென் றேசொல்லுவார்களென்னுகையில்,ஊர்க்குடி மிவந்துஐயா! இக்குழந்தை தலைமுழுகிவரும் போது தீண்டியபடியால்விஷம்அதிசீக்கிரமா கத்தலைக்கேறிப்பற்கள் கருகிக்கண்பஞ்சடைந் துபோயிற்று. இனியென்ன செய்தாலும் ப லிப்பது பிரயாசமே என்றான். இது மெய் தான் ஸ்ரீசர்வேசுரனுடைய கடாக்ஷத்தால் இப்பிள்ளை உயிர்த்தெழுந்தால் எம்முடைய இஷ்டத்தை நிறைவேற்றுவீர்களா வென்று கேட்க அவர்கள் யாவரும் கவிதாசார்வ பெ ளமரே! செத்தவர்கள் பிழைப்பார்களென் பது ஆச்சரியமாயிருக்கிறது. அப்படி நடக் குமேயானால் நீர் ஏவியதைச்செய்யாமல் நா ங்கள் தடுக்கச் சக்தர்களல்லோ மென்றார்கள். அதுகேட்டுக்கம்பநாடர் திருச்சித்திரகூடத்தி ல் சிரியமணியாசனத்தின்மேலெழுந்தருளிய ஸ்ரீபகவானைத்தியானித்துக்கொண்டு ஸ்ரீராமா யணத்தைஅவிழ்த்து நாகபாசப்படலத்தைஎ டுத்து இராமாநுஜர் முதலானவர்கள் இந்திர ஜித்து எய்த நாகபாசத்தால் கட்டுண்டு மூர்ச் சித்துக் கிடக்கையில், அஷ்டைசுவரிய ஸ்ரீ மந்நாராயணன் ஆதியில் செய்த சங்கற்பத்தி ன்படி பெரியதிருவடி எழுந்தருளியதனல் அந்நாகபாசக்கட்டு நிவாரணமான சந்தர்ப்ப த்தில், கருடபகவான் பல ஆயிரயுகங்கள்முடி யினும் ஓரிறகும் உதிராத தம்முடைய சிறகு களை வீசுவதினல் உண்டாகிய படர்ந்த காற் றனது, செல்லுதற்குரியதாகாத நிலத்திலே அந்தகாரத்தில் செல்லவே, இளையபெருமாள் முதலானவர்களைக் கட்டிக்கிடந்த நாகபாச மானது சிறுதுண்டங்களாக அற்றுப்போயி னது. சகல இந்திரியங்களையும் அடக்கி மூவா சைகளையும்பற்றறவிட்டு இதுவே ஆத்துமஉஜ் ஜீவனமென்று நல்லறிவாலே தீர்மானித்து ஸ்ரீபகவத் கைங்கரியத்தையே செய்யும் கலங் காத நிலையையுடைய பரமைகாந்தியின் விஷ யத்தில் அவைதிகர்கள் மாச்சரியத்தால் சார்த் திய பழிகள் அப்புருஷனையடையாத தன்மை போல அந்நாகபாசத்தால் கட்டுண்ட அவர்க ளுடைய திருமேனியின் வடுக்களும் தோன் றுமல் மறைந்துபோயின என்னும் பொரு ளுட்கொண்ட,

கவி.

பல்லாயிரத்தின் முடியாதபக்க மடவாரிச
வந்தபடர்கால், செல்லாநிலத்தி லிருளூடுசெ
ல்ல வுடலிற்றயாளிசிதறத், தொல்லாமவித்து
முணர்வோடு மெண்ணியறமேனபிழைக்குமுர
வோன், வல்லாமெருத்தனிடையேயபடைத்த
வடுவானமேனிவடுவும். ... ... ※

என்னுந்திருவிருத்தத்தையும், பாதகனுகிய இந்திரஜித்து எய்தநாகபாசமானது வாசனைத ங்கிய தாமனைத்தாளினது நூல் எளிதினிங்குவ துபோல எளிதி னீங்கியதென்று சொல்வது யாதுகாரணம், கைம்மாறுவேண்டாமல் கொ டுக்குந்தன்மையால் மேகமோவென்று கண் டோர்ஐயங்கொள்கின்ற சலியாதநிலைமையை யுடையோனுகிய சரராமவள்ளல் (சடையப்ப வள்ளலுடைய இளையதம்பி) வாசஞ்செய்யும் திருவெண்ணெய்நல்லூரில்வந்துசேர்ந்த அறி வுவிளக்கமாகிய அந்தணர்களும் வித்துவஜனங் களும்மற்றுஞ் சாதுஜனங்களும் ஆகிய இவர்க ளை யமபாசத்தைப்போலச்சேர்ந்து வருத்து கின்ற தரித்திரத்தைப்போல இருந்த இடமே தெரியாமல் மறைந்து போயிற்று. என்னும் பொருளைத்தருகின்ற, கவி.

வாசங்கலந்த மரைநாளநூலின் வகையென் ப தென்ன மழையென், றுசங்கைகொண்ட கொடைமீளியண்ணல்சரராமன்வெண்ணெய னுரும், தேசங்கலந்த மறைவாணர்செஞ்சொ லறிவாளரென்றிம்முதலோர், பாசங்கலந்தப சிபோலகன்றபதகன்றுரந்தவுரகம்......... ※

என்னுந் திருவிருத்தத்தையும், மற்றுஞ் சிலவிருத்தங்களையும்வாசித்து,

கவி.

ஆழியான்பள்ளி யணையேயவன்கடைந்த ※
வாழிவரையின் மணித்தாம்பே - பூழியான் ※
பூணேபுரமெரித்த பொற்சிலையிற்பூட்டுகின்ற,
நாணேயகலநட. ... ... (க)

எனவும்.

மங்கைபொருபாகன் மார்பிலணியாரமே ※
பொங்குகடல்கடைந்தபொற்கயிறே-திங்களை
யும், சீறியதன்மேலூருந்தெய்வத்திருநாணே
எறியபாம்பேயிறங்கு. ... ...(உ)

எனவும்.

பாரைச்சுமந்தபடவரவேபங்கயக்கண் ......※
வீரன்கிடந்துறங்குமெல்லணையே- ஈரமதிச் ※
செஞ்சடையான்பூணுந்திருவாபரணமே ...※
நஞ்சுடையாய்தூரநட. ... ... (௩)

எனவும்.

நூதனமாகமூன்றும்வெண்பாவையும்பாடி எல்லாப்பாம்புகளுக்கும் அரசனாகிய திருவனந்தாழ்வானைப் பிரார்த்தித்தவுடனே ஒருசர்ப்பம் அவ்விடமாய்வந்து யாவரும்பார்த்துக்கொண்டிருக்கும்போதே அக்குழந்தையைக் கிட்டி முன்புகடித்தவாயில் மறுபடியுங்கடித்து அந்தவிஷத்தை மீட்டுக்கொண்டு திரும்பிச் சென்றாய்ப்போயிற்று. பின்புஇறந்துகிடந்த குழந்தை உயிர்பெற்று நித்திரை செய்தெழுந்தாற்போலெழுந்தது. இவ்வற்புதத்தைக்கண்ட தில்லை மூவாயிரவர்களும் மற்றவர்களுங்கம்பநாடருடையதெய்வப்புலமையைக்குறித்து அதி ஆச்சரியமானவர்களாய் அவர்களில் சிலர் இவர்திருவனந்தாழ்வான்மீது கண்வளர்கின்ற கோவிந்தராஜப்பெருமானுடைய திவ்வியகருணையைப் பூரணமாய்ப்பெற்றவரென்றும், சிலர் இவர்விஷகண்டராகிய சாக்ஷாத் ருத்திரபகவானே இப்படி மானிடவுருவங்கொண்டு வந்தாரென்றும் மனப்பூர்வகமாகச்சொல்லிப் பலவாறுதுதித்தார்கள். எக்காலத்திலும் எவர்களையும்மதியாத செருக்கொண்ட தில்லையில்வாழ்கின்ற அந்தணர்கள்மூவாயிரவர்களும், கம்பநாடரைத்தெய்வப்புலமையுள்ளவரென்றுஉள்ளபடியே யறிந்துமுன்தெரியாமல், இவர்விஷயத்தில் அபசாரப்பட்டோமேயென்று மிகுதியும் அநுதாபப்பட்டுத் தங்கள் தங்களால் இயன்றமட்டுபசரித்துப்பூசித்தனர்கள்.

பிறகு மரித்த பிள்ளைக்காக மசானத்தில் அடுக்கிய காஷ்டத்தின்மேல் அப்பாம்பைக்கொண்டுபோய்த்தகனசஞ்சயன முடித்தவர்கள், கம்பநாடரிடத்திலிருந்த ஸ்ரீராமாயணபுத்தகத்தைத் தாங்களேவாங்கிஅவிழ்த்துத் தனித்தனியே அனைவரும் பார்வையிட்டுச் சொல்நடை பொருள்நடை கற்பனை கருத்து இச்சுவை ஓசைமுதலானவைகளையும் விசதமாக ஆராய்ந்தறிந்து தமிழில் இப்பெருங்காப்பியத்தைப்போல ஒருநூலுமுண்டோ! பெருங்காப்பியமில்லையென்று தமிழுக்கு இதுவரையும் உண்டாயிருந்த குற்றமும் ஒழிந்ததென்றுசொல்லி வியந்து தங்களுக்குள்ளே பிரமானந்தமடைந்து, நம்மிடத்திலவத்தம்மம் நாம் நன்றாயிருக்கிறதென்று அஞ்சலிபந்தத்தோடுபெருநூலுக்கும்நமக்கும் பெருமையாகாது முன்னுமே அதங்கோட்டுமுனிவர் தொல்காப்பியத்தில் சில ஆட்சேபஞ்செய்ததுபோல நாமும் சில ஆட்சேபஞ்செய்து பிறகு அங்கீகாரஞ்செய்தலேநலமென்று தெய்வக்கவிஞரைநோக்கிச் சிலகேள்விகள் கேட்கத்தலைப்பட்டார்கள்.

கவி.

நாடியபொருள்கைகூடுஞானமும்புகழுமுண்டாம், வீடியல்வழியதாக்கும் வேரியங்கமலைநோக்கும், நீடியவரக்கர்சேனைநீறுபட்டழியவாகை, சூடியசிலையிராமன்தோள்வலிகூறுவோர்க்கே.

என்னும்பாடலில் நாடியபொருள்கைகூடுமென்றவாக்கியத்திலேயே பின்கூறுவனவெல்லாம் அடங்கியிருக்க, ஞானமும் புகழுமுண்டாமென்று மிகைபடக் கூறியதென்னையென, கம்பநாடர் பொருள்என்பது ஒருபொருள், இருபொருள், முப்பொருள், நாற்பொருள், ஐம்பொருள், முதலியவாகப்பலவகைப் படும். அவற்றுள். ஒருபொருள்-மோட்சம், இருபொருள்-கல்வி-செல்வம், முப்பொருள் - சித்து- அசித்து- ஈசுரன்- நாற்பொருள்- அறம்- பொருள் - இன்பம் - வீடு- ஐம்பொருள்-ஸ்வஸ்ரூபம்- பரஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம்,உபாயஸ்வரூபம்,விரோதிஸ்வரூபம்ஆம்.உலகத்தார்யாவரும் பிரதானமாகநாடும்பொருள் கல்வி-செல்வம் இரண்டுமேயாதலால் இங்கு அவ்விருபொருளையுமே கருதி-நாடியபொருள்கைகூடுமென்றும், அவற்றுள் கல்வியால் ஞானமும், செல்வத்தால் கைங்கரியமும் உண்டாதல்பற்றிச் சாதனசாத்தியமுறையாக அவற்றின்பின் ஞானமும்புகழு முண்டாம் என்றும், (கைங்கரியத்தைப் புகழெனக் காரணத்தைக் காரியமாகவுபசரித்தனர்.) இவ்விரண்டும் ஒருசேர உண்டான விடத்துத் தன் புருஷகாரத்தால் நிரதிசயாநந்த முத்தியைத்தரும் பெரியபிராட்டியார் கடாட்சிப்பார் அதுபற்றி அவற்றின்பின் வீடியல்வழியதாக்கும் வேரியங்கமலைநோக்கும் என்றும், இப்பயனைத்தும் உள்ளன்போடு ஸ்ரீராகவசரித்திரத்தைக் காலக்ஷேபஞ் செய்வோர்க்காதலால், தவத்தில் மிகுந்த அரக்கர்களும் அவர்களுடைய சேனையும் நீறுகி நாசமடையும்படிவென்று வெற்றிமாலையைத்தரித்த ஸ்ரீகோதண்டராமபிரானுடைய திருத்தோள்களது பராக்கிரமத்தைப் படனஞ்செய்வோர்க்கே என்பதுதோன்ற,நீடியவரக்கர்சேனை நீறுபட்டழியவாகை சூடியசிலையிராமன் றோள்வலிகூறுவோர்க்கேஎன்றும் சொல்லினும் என்றார். பின்னும் அவர்கள், சூடியசிலையிராமன் றோல்கதைகூறுவோர்க்கேயெனின் உமதுகருத்தின்படி ஸ்ரீராமா

யணமென்பதடங்கும் அப்படிகூறாது தோள்வலியென்றதென்னையென, தெய்வக்கவிஞர், தாடகையைச்சங்கரித்து, சுவாகுவைக்கொன்று, கௌசிகமுனி வேள்வியைக்காத்து, மிதிலையில் சிவனதுவில்லை ஒடித்து, சீதாபிராட்டியைத் திருமணமுடித்து, அயோத்திக்கு மீண்டுவருகையில் பரசுராமனைவென்று, வனத்தில் விராதன்தோலைச்சரித்து, கரதூஷணாதியரை அதமாக்கி, மாயமானைக்கொன்று, கவந்தனைமாய்த்து, மராமரத்தைத்தொளைத்து, வாலியைவதைத்து, சுக்கிரீவனுக்கு அரசளித்து, வருணனைவாட்டி, மகராட்சனைமடித்து, கும்பகருணனைச் சேதித்து, மூலபலத்தைமுடித்து, ராவணாதிராட்சசர்களையெல்லாம் கருவறுத்து, விபீஷணாழ்வானுக்கு முடிசூட்டியது ஸ்ரீதாரகமந்திர வாச்சியனுடைய புஜபலமேயாதலால் ஆதிதொடங்கி அந்தமட்டும்அவன் தோளாண்மையைச் சொல்வதே ஸ்ரீராமாயணமென ஆராய்வோர்க்கு நன்குவிளங்குதற்பொருட்டுத் தோள்வலியென்றும். என்றார்.

மேலும்பற்பலவாறு அவர்கள்வினவிய வினாக்களுக்கெல்லாம் மகாகவியாகிய கம்பநாடர் தக்கவாறு விடைகூறக்கேட்டு, இவருடைய தெய்வப்புலமைக்கு நம்முடையகல்வி எம்மாத்திரமெனத் தங்களையிகழ்ந்துகொண்டு அவரைவாயாரப்புகழ்ந்து சந்தோஷப்பட்டு நாடியபொருள்கைகூடுமென்னுந்திருவிருத்தத்தில் நீறுபட்டழியவென்றதற்குநீர் எந்தப்பொருளைச்சொல்லிக்கொள்ளினும்சொல்லிக்கொள்ளும் அந்த ராக்ஷசசேனைகள், நீர் தரித்திருக்கும் திருமண்பட்டன்றே நாங்கள் தரித்தநீறுபட்டுத்தானே அழிந்தது என்றுசாதுரியமாகச்சொல்லி இவ்விதிகாச சிரேஷ்டத்தைப்பாட நீரேதகுந்தவர் என்றுமெச்சித் தங்களில் தலைவராயினோ ரொருவர்செய்த அதிகவியோடு கையொப்பங் கொடுத்தனர்கள்.

கவி.

மெய்ச்சிட்டர் பொதுநோக்கிற் சீர்தூக்கி
க் கம்பனெனு மேதக்கோன்றன், உச்சிட்ட
மூலத்துள கசடறக்கற்றுயர்புலவ ருளுற்றியா
ப்பில், வைச்சிட்ட சொற்பொருணோக் கணி
முதல வென்பர்தனி மிதிலைக்காந்தை, விச்சி
ட்ட மணவாளன் புகழெனின்மற் றிதன்றகை
மை விளம்பற்பாற்றே. ......... .......*

இச்செய்யுளையுங்கையொப்பத்தையுங்கொண்டுபோய் நம்பெருமாள் சந்நிதியிலுள்ள பரமவைதிக மார்க்கத்தாருக்குக்காட்டி நடந்தசெய்தியெல்லாம் சொல்ல அவ்வந்தணர்கள் அதிசயப்பட்டுத் திருநறுங்கொண்டையென்னுந்தலத்திலுள்ள சைநர்களில் அந்நகர் தமிழிற் பெயர்பெற்றவித்துவான்களும் சமயதுவேஷிகளுமாயிருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் வாயை அடக்கும்படி அவர்களிடத்திலும் கையொப்பம் வாங்கவந்தால் யுக்தமாயிருக்குமென்றார்கள்.

இவர் நல்லதென்று புறப்பட்டு அவ்விடத்துக்குப் போனபொழுது, அவர்கள் ஸ்ரீமத் ராமாயணத்தைத் தமிழில் பெருங்காப்பியமாகச்செய்து, தில்லை மூவாயிரவர்கள் முன்னிலையில் அராத்திண்டப்பட்டு இறந்த பிள்ளையை உயிர்ப்பித்து, அரங்கேற்றியதெய்வப்புலமைக் கம்பநாடர் வந்தாரென்கிற செய்தியைக் கேள்விப்பட்டவுடனே என்றுங்காணாத பொருளைக் கண்டவர்கள்போலப் பரமசந்துஷ்டி யடைந்து எதிர்கொண் டழைத்துப் போய் உபசரித்து எங்களிடம்வந்த தென்னையென, கம்பநாடர் யாம்பாடின ராமாயணத்துக்கு உங்களுடைய கையொப்பம் வாங்க வந்தோ மென்றனர். உம்முடைய தெய்வப்புலமையையும், தில்லையில் பிரத்தியட்சமாக நடந்த ஸ்ரீமத் ராமாயணத்தினது தெய்வத்தன்மையையும் நோக்கும்போது எங்களுடைய கையொப்பம் எம்மாத்திரம்! தமிழில் வித்துவான்களா யிருக்கிற தில்லை மூவாயிரவர்களுடைய கையொப்பமும் பெற்றுக்கொண்டீர். அப்படியிருந்தும் நீர் எங்களுடைய கையொப்பம் வேண்டுமென வந்து எங்களைப் பெருமைப்படுத்தினீரென்றுசொல்லி, ஸ்ரீராமாயணத்தை வாங்கி ஆங்காங்குப் பார்வையிட்டுச் சொற்சுவை பொருட்சுவை முதலியவற்றை நோக்கி அதியாச்சரியமான சீகர்களாய் ஒருவரை ஒருவர் நோக்கித் தமிழிலுள்ள சிந்தாமணி, சிலப்பதிகாரம், வளையாபதி, மணிமேகலை, குண்டலிகேசி. என்னும் பஞ்சகாவியமுதலிய நூல்களும், மற்றுஞ்சிலசங்கச்செய்யுண்முதலிய நூல்களும் இந்நூல்போலப் பெருங் காப்பியத்தி னிலக்கணம் முற்றும் பெற்றுவது, சொன்னோக்கம் பொருணோக்கம் முதலிய நோக்க முடையனவா யாவது உண்டோ! இவரைத் தெய்வக்கவிஞ ரென்பதற்கு யாதொரு ஐயப்பாடும் இல்லையெனக் கூறி, இவருடைய புலமையை யாவருக்கும் புலப்படுத்த வேண்டுமெனத் தாங்களும் சிற்சில இடங்களில் ஆட்சேபஞ்செய்ய வேண்டுமென்று பல கேள்விகள் கேட்டனர்கள். அவற்றுள்சிலவருமாறு.

கவி.

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும் ......*
நிலை பெறுத்தலு நீக்கலு நீங்கலா .........*
அலகிலா விளை யாட்டுடை யாரவர்! ........*
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே. ... ... *

என்ற பாடலில் எப்பொருட்கும் இறைவன்செயலே விளையாட்டென்ற தெய்வே! ஒப்பாரும் மிக்காரும் இல்லாத கடவுள் விளையாட்டானாலும் அவரைச் சிறுவனென்றன்றோ நினைக்கவேண்டி வரும் என்றும், மூன்றுசெய்யுளால் கடவுள் வணக்கஞ் செய்ய வேண்டியதெய்வே ஒருசெய்யுளால் செய்ததேல அமையாதோ வென்றுங் கேட்டார்கள். அம்மூன்று கேள்விக்குங் கம்பநாடர் — சகலாண்ட சராசரங்களையும் ஆக்கலும்-காத்தலும்-அழித்தலும்-சர்வசக்தியுடைய அவர்க்கு இச்சாமாத்திரத்தில் எளிதினிற்கவனவென்பதும், அவரது விளையாட்டுச்செய்கையே இப்படிப்பட்டதாயின் அவர்வேண்டுமெனக்கவன்றான்றிச் செய்யும் செய்கை எப்படிப்பட்டதாயிராதா? இதனினும் பெருஞ் செய்கையாயிருக்குமென்பதுந்தோன்ற, அவற்றைவிளையாட்டென்றும், வஸ்துநிச்சயம்பண்ணுமிடத்து நாமரூபக்கிரியைகளை ஆவசிகமாகச் சொல்லவேண்டுமாதலால் அவற்றுள் ஸ்ரீசர்வேசுரனுடைய க்கிரியை உலகம்யாவையுந் தாமுளவாக்கலும் என்றபாடலாலும், குணம், சிற்குணத்தர் தெரிவருநன்னிலை யென்ற பாடலாலும், நாமம், ஆதியந்தம ரியென யாவையும் என்றபாடலாலுஞ் சொல்லப்பட்டன வென்றும், நாமக்கிரியைகளைச் சொன்னவளவில் உருவம் தானே யமைதலால் அதனையொழித்து அவனது அநந்தகல்யாணகுணக்கடலிலாடுதல் ஆன்றோர் ஒழுக்கமாதலால் குணங்கூறப்பட்டனவென்றுங் கூறினர். அதுகேட்டுச் சைநர்கள், சரஸ்வதியம்சமாகிய உமது வல்லமையை நாங்கள்கூறஎம்மாத்திரமென்றுகூறி, ஐயாதெய்வக்கவிஞரே! இப்பெருங் காப்பியத்துள் எங்களுக்கு ஏதாவது ஆதாரம் உண்டோவென்று வினவ, உண்டென்று யுத்தகாண்டத்தில் இந்திரசித்து வதைப்படலத்தில், வில்வீரர்களுக்கெல்லாம் சிறந்த இந்திரசித்து இறந்த மாத்திரத்தில் அந்த ராவணனுக்கு அரசாட்சி யானது இனிச்செல்ல மாட்டாதென்று களிப்படைந்த தேவர்களெல்லாரும், உடுத்த வாடையையும் மேலுத்தரீயத்தையும் ஒக்க உரித்து சுருட்டி மேலே செல்லும்படி வீசி ஆநந்தத்தால் ஆரவாரித்தபோது கொல்லாவிரதிகளாகிய சமணர்களுடைய உபாசனதேவர்களாகிய அருகர்கூட்டம்போல இருந்தனர்கள். எல்லோருங் கருத்தை உட்கொண்ட,

கவி.

வில்லாளரானோர்க்கெல்லா மேலவன் விளிந்தலோடும், செல்லாதவ் விலங்கைவேந்தற் கரசெனக் களித்ததேவர், எல்லாருந்தூசுநீக்கியே றிடவார்த்தபோது, கொல்லாத விரதத்தோர் தங் கடவுளர் கூட்டமொத்தார் ..........*

என்ற பாடலைச் சொன்னார். அதையவர்கள்கேட்டு வியந்து, அவர்களுக்குள் தலைவராயினோர் ஒருவர்.

கவி.

பாரோர்ந்த படவரவப் பெரும்பாயன் மிசைத் துயிலும் பரமன் சீர்த்திச், சீரோர்ந்த பெருங்காப் பியந்தமிழிற் புனைந்துலகஞ் சிறக்கவீந்தான், நீரோர்ந்தகடலாடை நீணிலத்தெற னக்கொப்பு நிகழ்த்தவொண்ணுப், பேரோர்ந்த நற்றெய்வப் புலமைபெறு கம்பனைனும் பெரியனம்மா.......*

எனக்கூறிய் துதிகவி யொன்றுங் கையொப்பமுங் கொடுத்தனர்கள்.

அச்செய்யுளையுங் கையொப்பத்தையுங் கொண்டுபோய்க் கோயிலிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் காட்ட இம்மட்டிலேபோதுமென்றுரை மாவண்டூரிற் சிரேஷ்ட பண்டிதனாகிய ஒருகருமா னிருக்கின்றான் அவனுடைய கையொப்பமும் வாங்கிக் கொண்டுவாருமென்றார்கள். அப்படியே புறப்பட்டு மாவண்டூருக்குப் போய் அந்தக் கருமானுக்குத் தமதுவரவைத் தெரிவிக்க, அப்புலவன் எதிர்கொண்டு சென்று அதிக மரியாதையோடு உபசரித்து என்னையும் ஒரு பொருள் செய்து தாம்வரவேண்டுமோ தங்களுடைய நூலினுள்ள செய்யுளின் கருத்தை யுண்மையாக உணர வல்லவர்களு முண்டோ அப்படி யிருந்தும் தாங்கள் தில்லைமூவாயிரவர்களிடத்தும் திருநறுங்கொண்டைச் சமணர்களிடத்தும் மிகையாகக் கையொப்பம் வாங்கினீர்கள். இனிநானுந் தரவேண்டுமோ வென்றுசொல்லி அதிவிரயத்தோடு அப்பெருங்காப்பியத்தை வாங்கி அவிழ்த்து வாசித்துப்பார்த்து எழுத்துச் சொற்பொருள் யாப்பணியென்னும் இலக்கணங்களுக்கு இலக்கியமாயுள்ளது இதனைஅன்றிவேறொன்றுமில்லையெனமனத்தோவேர்யாரப்பலவாறு புகழ்ந்து இந்த மகாகாவியத்தில் எங்களுக்கு ஏதேனும்ஆஸ்பதமுண்டோவெ

ன்று வணக்கமாய்க் கேட்க, இல்லாமற் போவானேன் உங்கட்கென்று கூறி, ஸ்ரீராமபிரான் மேல் இராவணன் மாயாஸ்திரத்தைப் பிரயோகித்தபோது, அவர் மாதலியை நோக்கி இதென்னவென்று வினவ, மாதலி சர்வசுவாமியை நோக்கி, கருக்கொண்டு நிறைந்த மேகத்தைப்போலுந் திருமேனியையுடையானே, கொடிய திக்கஜங்களினுடைய தந்தங்களை ஒடித்த மார்பையுடைய ராவணன், தான் நூலிழைநுழைகின்ற சிற்றூசியைச் செய்து இருப்புத்தொழிலில் தேர்ந்த கருமானிடத்துச்சென்று விருப்பத்தோடு விலைக்கு வாங்கிக்கொள்ளென்று விற்கின்ற அறிவிலியைப்போல, மாயப்பெருமானாகிய உம்மேல் மீளாத மாயாஸ்திரத்தைப் பிரயோகித்தானென்று கூறிய பொருளமைந்த,

கவி.

இருப்புக்கம்மியற் கிழைநுழை யூசியொன் றியற்றி, விருப்புக்கோடியால் விலைக்கெனும் பதடியின் விட்டான், கருப்புக் கார்மழை வண்ணவக் கடுந்திசைக் களிற்றின், மருப்புக்கல்லிய மார்பவன் மீளருமாயை.........✻

என்ற பாடலைச் சொல்லினர். அதற்கவன் சந்தோஷிப்பட்டு,

கவி.

கருக்கொண்ட முகில்வண்ணத் தனிமுதல்வன் காசில்கொற்றக் கதையொண்பாவால் ...✻
குருக்கொண்டமுதிர்கருணை யொடுதந்தால்✻
கடப்பாடு கோளில்வானின் ..........✻
மருக்கொண்ட பொழிலழுந்தூ ரெம்முடை மாதவப்பேறு வந்துதோன்றித் .......✻
திருக்கொண்ட தனித்தெய்வப் புலமைபெறு கம்பனெனுஞ் சீரியோனே. ... ... ...✻

என்ற துதி கவியுங் கையொப்பமுங் கொடுத்தான்.

அதைக்கொண்டுவந்து காண்பித்த பொழுது ஸ்ரீரங்கத்தார் தெய்வக்கவிஞரை நோக்கி, தஞ்சாவூரில் அஞ்சனாட்சி யென்ற ஒருதாசி பிரபல வித்துவாம்சையாயிருக்கிறாள். அவள் அதிக கர்வமுடையவளாகையால் எதாவது பிதற்றுவாள். அவள் கையொப்பமும்வந்தால் சர்வோத்தமமாயிருக்குமென, இவர், ஆராயினுமென்ன, (கடைநிலத்தோராயினுங் கற்றுணர்ந்தோரைத் தலைநிலத்துவைக்கப்படும்.) என்பதனால் குற்றமில்லையென்று அவளிடஞ் சென்றபொழுது, அவள் உள்ள நடுங்கித் தேவரீர் என்னைப் பொருள்செய்து இவ்வளவு தூரம் வந்தது யார் செய்த பாக்கியமோ! ஆயினும் என்னாரியமென்று பிரயத்தோடு கேட்க, தம்முடையகருத்தை வெளியிட்டனர். இதற்கோதாயங்கள் எழுந்தருளுவது, அடியாளைவரும்படி நியமித்தால் தலையால் நடந்துவாரேனே? இம்மட்டில்லை அபசாரமென்று வருத்தமுற்று, மற்றும் தமதுகல்விக்குமுன்னே மற்றையோர்கல்வி எம்மாத்திரம்! சூரியனுக்குமுன்னே மின்மினியும், கடலுக்குமுன்னே கால்வாயுமாமேயென்றுகூறி, ஸ்ரீராமாயணத்தை வாங்கிச்சிற்சில இடங்களிலுள்ள கவிகளைவாசித்து அதியாச்சரியத்தோடு களித்து, இந்தப் பெருங்காப்பியத்தில் அடியேங்களுக்கு எவ்வளவாவது பற்றுண்டோவென்றுகேட்டனள். புலவர்பெருமானுமவர், பலவுண்டு. அவற்றுள் ஒன்றுசொல்லுகிறேனென்று, பாலகாண்டம் மிதிலைக்காட்சியில், மிதிலாநகர ராசவீதியிலுள்ள விசித்திரங்களைப்பார்த்துக்கொண்டே விசுவாமித்திர முனிவர் பின்னே போகிய ராமலக்ஷ்மணர்கள், அங்கங்கு பலமங்கையர்கள் ஆணிமுத்திழைத்த பந்துகளை எறிந்து விளையாடுகையில் சரீர சம்பந்தத்தால், உண்டாகும் போக சுகத்தைத் தழுவிய புருஷர்களோடு சமமாக அனுபவித்து, அதற்காகவிலையுங் கொள்ளுகின்ற பாம்பின்படம்போன்ற அல்குலையுடைய வேசையர்களது மனம்போலவும், அடுத்த பொருளின்நிறமாய்க் காணப்படுகிற பளிங்கு போலவும், மைதீட்டிய செவ்வரி படர்ந்த நெடியகண்ணினது பார்வைபடுதலும் கறுத்துவந்து சிவந்தகையில் வந்துசேர்ந்தபோது சிவந்துதோன்றும் பந்துகள்பலவற்றையுங்கண்டார்கள். என்றபொருளமைந்த,

கவி.

மெய்வருபோகமொக்க வுடனுண்டுவிலையுங்கொள்ளும், பையரவல்குலார்த முள்ளமும் பளிங்கும்போல, மையரி நெடுங்கணோக்கம் படுதலுங்கருகிவந்து, கைபுகிற் சிவந்துகாட்டுங் கந்துகம் பலவுங்கண்டார். ... ... ✻

என்ற பாடலைச்சொன்னார், அதுகேட்டு உள்ளமகிழ்ந்து,

கவி.

அம்பராவணி சடையர னயன்முதல் ... ✻
உம்பரான் முனிவரால் யோகரானுயர்... ✻
இம்பராற் பிணிக்கருமிராமவேழஞ்சேர்... ✻
கம்பராம் புலவரைக் கருத் திருத்துவாம்...✻

என்ற துதிகவியும் கையொப்பமுங் கொடுத்தனள். அவ்விரண்டையுங் கொண்டு வந்து கோயிலிலுள்ள முதலிகளாகிய ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் காட்டினர்.

ஸ்ரீரங்கநாதர் அருளைப் பாட்டின்படி கம்பநாடர், ஆழ்வார் விஷயத்தில் நூறு கட்டளைக் கலித்துறையால், ஆழ்வார் நூற்றந்தாதி என்று வழங்குகின்ற சடகோபரந்தாதியென ஓரந்தாதி பாடியருளினர். அதைக்குறித்து அப்பின்பு அபியுக்தரொருவர்பாடியபாடல்,

கவி.

நஞ்சடகோபனைப் பாடினையோவென நம்பெருமாள், விஞ்சியவாதரத் தாற்கேட்பக் கம்பர் விளைந்துரைத்த, செஞ்சொலந்தாதி கலித்துறைநூறுந் தெரியும்வண்ணம், நெஞ்சடியேற்கருள் வேதந்தமிழ்செய்த நின்மலனே. ... ... ... ... ... ... ...*

என்பது. அவ்வந்தாதியில்,

கவி.

வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன் முதலோர், கோதற்றஞானக்கொழுந்தின் முன்செல்க குணங்கடந்த, போதக்கடலெங்க டென்குருகூர்ப் புனிதன்கவியோர், பாதத்தின் முன்செல்லுமே தொல்லைமூலப் பரஞ்சுடரே. ..........................*

என்பது முதற்பாடல்.

( இதன்பொருள். )

புராதனமாயும், எல்லாப்பொருள்களுக்கு மூலகாரணமாயும், மேன்மையாயும், சோதிசுருபமாயும் விளங்காநின்ற ஸ்ரீமந்நாராயணன், வேதங்களையும் வேதாந்தங்களையும் கடந்து அவற்றின்முன் செல்லினும் செல்லட்டும். உண்மைநிலையுணர்ந்த யோகியர்கள், பிரமன் முதலிய தேவர்கள் இவர்களுடைய குற்றமில்லாத ஞானத்தின் முடிவைக்கடந்து செல்லினும் செல்லட்டும். எய்குணமில்லாத மெய்ஞ்ஞானக் கடலாய்த் தென்றிசைக்கண் திருக்குருகூரில் அவதரித்த பரிசுத்தனாகிய எங்கள்சடகோபன் வெளியிட்டருளிய திராவிடவேதத்தில் ஒரு கவியினது ஒருபாதத்தைக்கடந்து செல்வானோ செல்லமாட்டான் -எ-று.

ஸ்ரீசர்வேசுரன் ஸ்ரீசடகோபனுடைய பாசுரத்தினது ஓரடியைக் கடக்கமாட்டானென்பது என்னெனில், பாண்டிநாட்டில் திருக்குருகூரென்னுந் திவ்வியதேசத்தில் அர்ச்சாவதாரமாயெழுந்தருளியிருக்கின்றஆழ்வாருக்குக்கோயிலிலும் வீதிப்புறப்பாட்டிலும்வெகுகாலமாகவேதந் தமிழ்செய்த மாறன் சடகோபன் என்பது முதலாகப் பற்பல விருது கூறித் திருச்சின்ன மூதிவருவதையும் பிரமோச்சவங் கண்டருளப் பண்ணுவதையும் பற்றி ஒருகாலத்தில்தென்மதுரைச்சங்கத்தார் தங்கள் மடமையால்அசூயைகொண்டுஆழ்வார் பக்தரோயல்லாமல் பகவானல்லரே இவரை வேதந்தமிழ்செய்த மாறன் சடகோபனென விருதுகூறித் திருச்சின்னமூதுவதும் உச்சவம் நடத்துவதும் என்னகாரணம்! இவர் செய்தருளிய திருவாய்மொழி தமிழ்ச்செய்யுளே அன்றி வேதமென்பது தகுதியன்றென்று வாய்மதம்பேசி அபசாரப்பட்டார்கள். அப்போது ஆழ்வார் திருநகரியிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தச்சங்கத்தார் தமிழான்றமை பழகினவர்களாதலால் இவர்களுக்கு வடநூல்மேற்கோள்களைக் கூறி வாதிப்பதனால் பயனொன்றுமில்லை. இவர்கள் எப்படியும் பிரத்தியட்சமாக ஒன்று நடந்தாலல்லாமல் ஒப்பார்களென்று மனம்பதைத்துக் குருகைப்பிரான் சந்நிதியிற்போய்ச் சேவித்து, ஆழ்வாரே! தேவரீரையும், முத்தையாயிரமாகிய தமிழ்வேதத்தையும், அவமதித்த சங்கத்தாருக்குக் கர்வபங்கமாம்படி தேவரீர் ஏதாவது பிராயச்சித்தம் செய்வித்தாலொழிய அடியோங்கள் எழுந்திருக்கக் கடவோமல்லோமெனத் தீர்க்கவைராக்கிய சித்தர்களாய் மூன்றுநாள்வரையும் ஸ்நானம், அநுஷ்டானம், ஜெபம், ஹோமம், உபயவேத பாராயணம், பகவதாராதனம் முதலானவைகளும் இல்லாமல் கிடந்தவிடையிலிருந்தார்கள்.

அப்படி அவர்களிருப்பதற்காகத் திருவுளமிரங்கி ஆழ்வார் ஒருவிர்த்த பிராமணனுவந்து, யார்காணும் மூன்றுநாளாக இந்தக்கோயிலின் வாசலில் கிடக்கிறவர்கள்! இப்படிச் செய்வதற்குக் காரணமென்னவென்று கேட்க, அவர்கள், தென்மதுரைச் சங்கத்தார்தங்கள் மடமைத்தனத்தால்இகழ்ந்தபடியைத்தெரிவித்துஅம்மூடமதிகளுக்குஎப்படியும்ஒருபிராயச்சித்தம் நடக்கவேண்டுமென்பது அடியேங்களுடைய அபிமதமென்ன, அந்த விர்த்த பிராமணர், புன்னகைகொண்டு இந்தக்கலிகாலத்திலும் அப்படிநடக்குமா? இதென்ன பைத்தியம்! என்றுசொல்ல, ஸ்ரீவைஷ்ணவர்கள் அப்படி நடவாவிட்டால் இங்ஙனே அன்னபானாதிகளில்லாமலிருந்து பிராணனை விட்டுவிடுகிறோமென்று சொல்லினர்கள். அது கேட்டருளிய விர்த்தபிராமணர், அவர்களுடைய மனோநிச்சயத்துக்காகத் திருவுளமுகப்பாகி, ஸ்ரீசடகோபர் வெளியிட்டருளிய தமிழ்வேதத்தில் இன்னபத்தில் இத்தனையாவது பாசுரத்தை ஒரு சிறுநறுக்கில் எழுதிக்கொண்டுபோய்ச் சங்கப்பலகையின்மேல் வையுங்கோளென்று அருளிச்செய்து அந்தர்த்தானமாயினர்.

அவர்கள் அப்படியே தொண்ணூற்றைந்தாந் திருவாய்மொழியின் முதற்பாசுரத்தைச்சொல்லிக்கொண்டுபோய் வைத்தமாத்திரத்தில் சங்கப்பலகையானது பொற்றாமரைக் குளத்தில் முழுகி விட்டது. அதன் மேலிருந்த புலவர்களெல்லாம் தத்தித்தடுமாறி எழுந்து மெல்ல தீர்த்திக்கரைசேர்ந்து பார்க்கும்போது அமிழ்ந்தபலகை குமிழெழுந்து மேலெழுந்து தன்னிடத்தில் வைத்த சிறுமுறியை மாத்திரம் எத்திக்கொண்டிருந்தது. அவர்கள் இதுதனக்கை யெடுத்து. "கண்ணன்கழலிணைகள் - நண்ணுமனமுடையீர் - எண்ணுந்திருநாமம் - திண்ணநாரணமே" இத்திருவாய்மொழியைவாசித்தறிந்து இச்சிறுமுறிக்கு இடங்கொடுத்த சங்கப்பலகை இதனோடு நமக்கும் இடங்கொடுக்குமா! கொடாதாதலால் நம்மையகற்றி விட்டதென்றும், ஆழ்வாருடைய அருளிச் செயல் உண்மையாகவே வேதமென்றும் அறிந்து முன்னேதாங்கூறியது மடமையென்று துக்கித்து, மற்றும் திருவள்ளுவர், ஔவை, இடைக்காடர் ஒருவரையொருவர் சந்தித்தபோது வள்ளுவரை நோக்கி நீர்செய்த நூல் எப்படிப்பட்டதென்று மற்ற இருவருங்கேட்டதற்கு "குறுமுனிவன் முத்தமிழு மென்குறளு நங்கை சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்" என்றுசொன்னதையும், அதுகேட்டு, ஔவை, உம்முடைய குறளும் அகஸ்தியமுனிவரால் வெளியிடப்பட்ட முத்தமிழும், நங்கைப்பிராட்டியினுடைய புத்திரராயவதரித்தபொழுதே இருவகைப்பற்றும் மற்றுத்துறந்த சிறுமுனியாகிய ஸ்ரீசடகோபர் விரித்துரைத்தத் தமிழ்வேதத்திற்குப் புத்திரவதானமென்றுசரியே. அந்தத்திரவிடவேதத்துக்குஅவ்வளவுசொல்வதேபோதாதென்று, "ஐம்பொருளு நாற்பொருளு முப்பொருளும் பெய்தமைத்த - செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொருளைத்-தன்குருகூர்ச்-சேய்மொழியதென்பர் சிலரியானிவ்வுலகின்-தாய்மொழியதென்பேன் றலைத்து - என்றுசொன்னதையும்.

(இதன்பொருள்.)

ஐம்பொருளும்-அர்த்தபஞ்சகத்தையும் நாற்பொருளும், சதுர்விதபுருஷார்த்தங்களையும், முப்பொருளும் - சித்து - அசித்து-ஈச்சரனிவைகளையும், பெய்தமைத்த-நிரப்பி அமைத்த, செம்பொருளை - உண்மைப்பொருளை, எம்மறைக்கும்-எவ்வகைப்பட்ட வேதங்களுக்கும், சேட்பொருளை-சம்மதமாகிய மேலான பொருளை, சிலர்-அதன்றன்மையுணராதசிலர், தன்குருகூர்-குளிர்ந்ததிருக்குருகூரிலவதரித்த, சேய்மொழியது- பிறந்தபொழுதே து றந்தகுழந்தையினதுசொல், என்பர் - என்று சொல்லுவார்கள். தலைத்து-அவர்களைத்தடுத்து, யான்-நானோ, இவ்வுலகின் - இந்தஅண்டங்களுக்கு, தாய்-தாயுமாய்நின்ற ஸ்ரீமந்நாராயணன் பிரமனுக்கு உபதேசித்த, மொழிய தென்பேன்-மொழியாகிய-வேதமேயென்று சொல்வேன்-எ-று.

அதுகேட்ட இடைக்காடர்திரவிடவேதத்தினிடத்துத்தமக்குண்டானபெருதராதிசயத்தால் கவி.

சேய்மொழியோ தாய்மொழியோசெப்பிரண்டுமொன்றவ் - வாய்மொழியையாருமறையென்ப வாய்மொழிபோல், ஆய்மொழிகள்சால வுளவெனினு மம்மொழியின், சாய்மொழியதென்பேன்றலைத்து. என்றுசொன்னதையும், நினையாமற் போனோமே யென்றனர்.

(இதன்பொருள்.)

செப்பின்-சொல்லுமிடத்து, சேய்மொழியோ - திரவிடவேதமும், தாய்மொழியோ வடமொழிவேதமும், இரண்டும்-ஆகிய இவ்விரண்டும், ஒன்று - வேற்றுமையில்லாமல் ஒரு பொருளையே சொல்லுதலால் ஒன்றேயாம், (அதுகாரணத்தால்)அவ்வாய்மொழியை - அத்திருவாய்மொழியை - யாரும்-மேலோர்யாவரும், மறையென்ப - வேதமேயென்றுசொல்லுவார்கள், வாய்மொழிபோல்-திருவாய்மொழிபோல், ஆய்மொழிகள் - தெரிந்தெடுத்த மொழிகளால் சமைத்தநூல்கள், சாலவுளவெனினும் - மிகுதியும்உண்டெனினும்,தலைத்து அதைத்தடுத்து, அம்மொழியின்-அத்திருவாய்மொழியினது, சாய்மொழியது- சாயையாகச் செய்யப்பட்ட நூல்களாகும், என்பேன்-என்றுசொல்லுவேன்.எ-று.

அப்படிநினையா விடினும், பூர்வம் ஒரு காலத்தில் தாமிரபருணி நதியின் வடகரையி லிருந்த யோகி யொருவரை நந்திக் கோன் டிருந்த நாயானது தென்கரையிலுள்ள ஆழ்வார் திருநகரிக்குப் பிரதிதினமும் மத்தியான வேளையிற்போய் வீதியில் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய உச்சிஷ்டத்தைத் தின்று வயிற்றை நிரப்பிக்கொண்டுவருவதுண்டு. ஒருநாள்போய்த் திரும்பிவர நேரப்பட்டதனால்

நாயின்னும் வரவில்லையே யெனக்கருதியவரா லே ஆற்றோரத்தில் வந்துபார்க்கும்போது அந்நாய் நட்டாற்றில்வருகையில் மேல்வெள் ளம்வந்தபடியால் நிற்கக்காலோய்ந்து அந்நீ ரிலமிழ்ந்து மெல்லக்கிளம்பிற்று. அப்போ து, அதன்கபாலம்வெடித்து ரந்தரத்தில் வழியாய் நாயின்ஆத்மாவானது ஜோதிமயமா ய் விமானத்தின்மேல்சென்றது. தாம்செய்து வந்தயோகபலத்தால் யோகியானவர் பிரத்தி யட்சமாகக்கண்டு புன்பிறப்புள்ளநாயும் எம் மையொத்தவர்களும் பெறுதற்கரிய பேறு பெற்றதே இதென்ன காரணத்தையுடையதா யிருந்தது ஒன்றுமில்லையே. ஆழ்வார்திருநகரி யிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுடைய உச்சி ஷ்டத்தைப் புசித்ததினாலல்லவா இப்பேறுகி டைத்ததென்று ஆராமையோடு கண்ணீர்வி ட்டு மனமுருகி அவர் "வாய்க்கருங் குருகைத் திருவீதியெச்சில் வாரியுண்ட-நாய்க்கும் பர மபதமளித்தா யந்தநாயொ டிந்தப்- பேய்க்கு மிடமளித்தாற் பழுதோ பெருமான்மகு டம்- சாய்க்கும் படிக்குக் கவிசொல்லு ஞானத்தமிழ்க்கடலே" என்றுகூறியது முதலாக மற்றும் பலர் தோத்திரித்த பாடல்களையாவது நினைத்து அபசாரப் படாமலிருந்தோமா இல்லையேயென்று அநுதாபப்பட்டு அவ்வப சாரத்தை ஆழ்வார் க்ஷமிக்கும்பொருட்டு,

கவி.

சேமங்குருகையோ செய்ய திருப்பாற்கடலோ-நாமம்பராங்குசனோ நாரணனோ-தாமம் துளவோவகுளமோ தோளிரண்டோ நான்கும், உளவோபெருமானுனக்கு,

இதுமுதலியபாடல்களைத் தனித்தனி ஒவ்வொருவரும் பாடித்துதித்தார்கள்.

சங்கப்புலவர்கள்யாவரும் பாடநினைத்தபோது. ஒருசொல்லாவது ஓரெழுத்தாவது அசை சீர் தளை முதலியவைகளில் ஏதாவது சிறிதும் பேதப்படாமல் இந்த ஒருசெய்யுளே எல்லாருடைய வாக்கினின்றும் பிறந்ததென்று சொல்லுவாருமுண்டு. பின்புஅவர்கள்ஆழ்வாருக்கு அன்றுமுதல் விருதுகூறல்முதலியவை பவங்களும் முன்னிலும் அதிகமாய்நடக்கும் படிசெய்தார்களென்பதாம்.

இப்படியே இக்கம்பநாடர் பூர்வதசையில் தென்மதுரையில் முந்நூறு தமிழ்ப்புலவர்களோடு சங்கப்பலகை ஏறியிருந்தகாலத்தில் ஸ்ரீமதுரகவிகளுடைய திருவம்சத்தில் திருவவதரித்த ஸ்ரீமதுரகவிகளென்னுந் திருநாமமுடையவரும், ஸ்ரீமதுரகவிகளுடைய வமிசோத்பவருமாகிய [illegible] ஸ்ரீ வைஷ்ணவரொருவர், ஸ்ரீமதுரகவிகளுடைய ஏற்பாட்டின்படி [illegible] ஆழ்வாருக்கு நித்தியபட்சமாக ம்வந்சோச்சவங்களெல்லாங்குறைவறநடத்திக்கொண்டுமஹோத்சவங் கண்டருளப்பண்ணி, வேதந்தமிழ்செய்த பெருமாள் வந்தார். திருவாய்மொழிப் பெருமாள்வந்தார். திருநகரிப் பெருமாள்வந்தார். திருக்குருகூர் நம்பிவந்தார். காரிமாறன்வந்தார். நாவீறன்வந்தார். சடகோபர்வந்தார். பராங்குசர்வந்தார். என ப்பலசின்னம் பணிமாற, அதுகேட்டுக் கம்பநாடரிடத்திருந்து சில தமிழ்ப்புலவர்கள்வந்து எங்கள் கம்பநாடரோடு தருக்கித்துச் சங்கப்பலகை ஏறினாலொழிய, வேதந்தமிழ்செய்த பெருமாளென்று விருதுகூறவொட்டோமென்று தடுக்க, ஸ்ரீமதுரகவிகளும், அது ஞாயமாம். எங்கள் ஆசாரியர் எங்கும் எழுந்தருளார். அவருடைய திவ்யஸூக்திக்குச் சங்கப்பலகை இடங்கொடுத்ததாகில் அவருக்கு இடங்கொடுத்ததாமே யென்றுசொல்லி ஒரு சிறுமுறியிலே "கண்ணன் கழலிணையென்னும் பாசுரத்தை எழுதி இச்சிறுமுறியைச் சங்கப்பலகையின்மேலேவையுங்கோளென்று அவர்கள்கையிலேகொடுத்தனர். அவர்களும்போய்க் கம்பநாடருக்குச் சொல்லி அச்சிறுமுறியைச் சங்கப்பலகையின் மேலேவைக்க, கம்பநாடரோடுசேர ஏறியிருந்த முந்நூறுதமிழ்ப் புலவர்களையும் இவரையும் அச்சங்கப்பலகை கவிழ்த்துப்போட்டு ஆழ்வார் திவ்ய ஸூக்திச் சிறுமுறியொன்றையுமே தரித்துக்கொண்டிருந்தது. இதைக்கண்டு கம்பநாடர் பயந்து,

கவி.

ஈயாடுவதோகருடற்கெதிரே யிரவிக்கெதிர் மின்மினியாடுவதோ, நாயாடுவதோ வுறுவெம்புலிமுன்னரியாடுவதோநரகேசரிமுன், பேயாடுவதோவழகூர்வசிமுன்பெருமான்வகுளாபரணன்னருள்கூர்ந், தோவாதுரையாயிரமாமறையின் ஒருசொற் பொருமோ வுலகிற் கவியே.

எனவும்.

நீயேயநிலைநினதகத்தே நிற்குநேமியங்கை ✻ ஆயேயறியுமற்றாறிவாரடியேங்களுக்குத் ✻ தாயேபொருநற் திருக்குருகூர்த்தமிழ்க் காரி பெற்ற, சேயேநினது திருவாய்மொழியின் செழும்பொருளே.

எனவும் ஆழ்வார் விஷயமாகக் கவிசொல்லி அபராத க்ஷாபனம் பண்ணிக்கொண்டார். அங்கிருந்த மற்ற தமிழ்ப்புலவர்களும் தனித்தனியே கவிசொல்லி அப

சாரம் சமர்ப்பித்துக் கொண்டார்கள். இது அருமிரப்படிக் குருபரம்பரா பிரபாவத்திற் கண்டெழுதியது.

இரு திக்க. கம்ப நாடர், சடகோபரந்தாதி பாடிமுடித்தவுடனே ஸ்ரீரங்கதாமஞ்சந்நிதியில்பெரிய ஆயிரக்கால்மண்டபத்திற்சதுசாஸ்திர பண்டிதர்களாகிய வடமொழிப்புலவர்களிலும், முத்தமிழிலும் புலமைநிரம்பிய தமிழ்ப்புலவர்களிலும், உபயகவிகளிலும், வைதிக சம்பிரதாயத்தையுடைய ஸ்மார்த்தர் மாத்துவர், வைஷ்ணவர் என்னும் பிரசித்திமாகிய திரிமதஸ்தர்களிலும், மற்றுஞ்சில நவீனசுதந்திர மதஸ்தர்களிலும், அரசர்கள் பிரபுக்கள் முதலானவர்களிலும் வெகுபேர் திரண்டு நிறைந்திருக்க, பிரபத்திநிஷ்டாபராகிய ஸ்ரீமந்நாதமுனிகளது திருவோலக்கத்தில தெய்வப்புலமைக்கம்பநாடர் தெய்வவணக்கஞ்செய்து அவையடக்கமுங்கூறிக் கிரமமாக ஸ்ரீராமாயணத்தை அரங்கேற்றினார்.

அரங்கேற்றும் பொழுது ஸ்ரீவைஷ்ணவர்களில் சிற்சிலர் பற்பல ஆட்சேபங்களைக் கூறக் கம்பநாடர் பலவற்றிற்குத் தாம் சமாதானஞ் சொல்லியதுமன்றித் தம்முடைய புத்திரராகிய அம்பிகாபதியினுடைய புலமைத்திறம் அங்குள்ள கற்றுயர்ந்தோருக்கும் புலப்படும்படி சில ஆட்சேபங்களுக்கு அவரைக்கொண்டும் சமாதானஞ்சொல்வித்தனர். அரங்கேற்றல் அப்படி நடந்துவருகையில், இரணியன் சூர்ப்பநகி மூக்கறுபட்டு இராவணனை நினைத்துக்கொண்டு புலம்பியதைச் சொல்லிய பாடல்களில் ஒன்றாகிய,

கவி.

உருப்படிவ மன்மதனை யொத்துளரோ யா
விலுமுன், செருப்படியிற் பொடியொவ்வா
மானுடனாச்சிறுதியோ,நெருப்படியிற்பொ
டிச்சத நின்மதத்திசையானை, மருப்பொடி
யப் பொருப்பிடியத் தோணியிர்த்தவலியோ
னே. ......... *

என்பதை வாசிக்கக்கேட்டு, அதில் உன்செருப்படியிற் பொடியொவ்வா மானுடனா என்பதைக்குறித்து அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவர் கம்ப நாடரை நோக்கி எல்லாரும் ஸ்ரீசேஷனாகிய ஸ்ரீசக்கரவர்த்தித் திருமகனார் விஷயத்திலும் ஸ்ரீ சமித்திரா சிங்கத்தின் விஷயத்திலும் செருப்படியிற் பொடியொவ்வா மானுடனென்றுகூறி அபசாரப்படச்செய்தீர் அல்லவா, கம்பநாடர் பக்கத்திலிருந்த அம்பிகாபதி அவருக்குத் தண்டம் சமர்ப்பித்துக் கும்பகருணன் இறந்த செய்தியை அறிந்த இராவணன் தன்னைக் கண்டோர் யாவரும் புலம்பியழத் தானும் அழுதானென்று சொல்லுதல் அவனுடைய வீரத்துக்குக்குறைவாமென்றெண்ணி,தாமேதேடிக்கொண்ட சிறுமையால் தன்னையும் மற்றவர்களையும் அழுவித்தானென்னும் பொருள் பட, "பண்டைத்தன்னுமத்தின் காரணத்தைப் பாரித்தானென்று சொன்னவர், ஸ்ரீபகவான் விஷயத்திலும் அவனடியார்விஷயத்திலும் அபசாரப்படுவாரோ என்ன, ஸ்ரீமந்நாதமுனிகள் புன்னகைகொண்டு அந்த ஸ்ரீவைஷ்ணவரை நோக்கி, கவிகூறுங் கூற்றமன்றி அரக்கி கூற்றுகச்சொல்லிய உன் செருப்படியிற் பொடியொவ்வா மானுடனென்றதற்கு, ராமலட்சுமணர்கள் அவள் இஷ்டப்படி நடவாமையாலும், மூக்கு முதலிய அவயவத்தைச் சேதித்தமையாலும், அவள் இப்படியே தூஷிப்பாளாகையால் இதுவொரு கருத்தும், செரு- படி எனப்பிரித்து 'உனது' உயுத்தபூமியில் ஒரு துகளுக்கும் ஒப்பாகாத மானுடனென வேறொரு கருத்தும் படும்படி சிலேஷையாகச் சொன்னது வித்வசாமர்த்தியமே யல்லது அபசாரமன்றென்று அருளிச்செய்தனர். அது கேட்டு யாவரும் ஆநந்தித்தார்கள்.

இரணிய வதைப்படலம் வாசிக்கப்படும் போது உபயகவிகளில் வல்லவர்களுக்குள் சிலர், ஸ்ரீமத் ராமாயணத்தில் எங்கும் இரணிய வதைப்படலம் சொல்லப்படவில்லையே. இதேது நவீனமாயிருக்கிறதென்று வினவினார்கள். கம்பநாடர் இது புராணாந்தரமென்ன, அவர்கள் இது புராணாந்தரமாயினும்வடமொழியில் ஸ்ரீவால்மீகி முனிவர் முதலிய முனிவர்களால் சொல்லப்படாததை நீர் சொன்னமையால் எவ்விதத்தில் ஒப்புக்கொள்வது. இப்படலத்தைக் குறித்து இங்குள்ள யாவரும் ஒப்புக்கொள்ளும்படி ஏதேனும் ஒருதிட்டாந்தம் காண்பிக்க வேண்டும். அதாவது இது சிங்கப்பெருமான் திவ்விய சரித்திரமாதலால் இதைத் திருவரங்கம்பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கும் மேட்டழகிய சிங்கரானவர் சிரக்கம்பம்கரக்கம்பம்செய்து திருவுளம்உவந்தருளுவதுதானென்றார்கள். இதுவிஷயத்தில் முக்காலநிகழ்ச்சியும் உணரவல்ல மெய்ஞ்ஞானச்செல்வராகிய ஸ்ரீமந்நாதமுனிகள்ஒன்றும் வார்த்தைசொல்லாதிருந்தனர்.கம்பநாடர்இக்காவியத்தை ஆரம்பித்தநாள்முதல் இடையூறு சம்பவித்தபடியேயிருக்கிறது இவையெல்லாம் ஸ்ரீராமபிரானுடைய சங்கற்பந்தான் வேறு

ன்றென் றுதூணிற்று. அவ்விரணிய வலைநப்பட
லத்திலிரணியன், ஸ்ரீபிரகலாதனுழ்வானை நோ
க்கி, நீசொல்லிய அரியென்பவன் எவ்விடத்தி
லிருப்பானென்று கேட்டதற்கு ஸ்ரீபிரகலா
தனுழ்வான், அந்தப்பரஞ்சுடர் அகண்டிதனு
கையால் இன்னஇடத்தில் இருப்பான் இரா
னென்று கண்டிதப்படுத்திச்சொல்லவும், அவ
னுடைய அனுக்ரவவிபுத்துவ அதிசயங்களை
இன்னபடியென் றறியவும், வேதங்களாலும்
முடியாது. ஆயினும்ஒருவாறுசொல்லுகிறேன்
அவன், சாணளவாகிய பொருளிலு மிருப்பா
ன். அனுவையொருதன்மையாக நூறுகூறுக
ள் செய்த சிற்றணுக்களிலும் தனித்தனியிருப்
பான். பெரியமேருமலையிலு மிருப்பான். இ
ங்கே நிற்கின்ற தூணிலுமிருப்பான். அவனெ
ங்கேயுண்டென்று நீ கேட்ட சொல்லிலுமிரு
ப்பான். அவனில்லாதஇடங்கிடையாது. இப்
படியவனிருப்பதைச் சீக்கிரமாக ஆராய்ந்து
பாரென்று சொல்லியருளினர். இரணியனே நல்
லதென்று னென்னும்பொருள்தரும்.

கவி.

சாணிலுமுளனோர்தன்மை யணுவினைச்சதக்
கூறிட்ட, கோணினு முளன்மாமேருக் குன்றி
னுமுளனிந்நின்ற, தூணினுமுளன்முன்சொன்
ன சொல்லினுமுளனித்தன்மை, காணுதிவிரை
விலென்று னன்றெனக்கனகன் சொன்னான்.※

என்னும்பாடலையும்.

தேவர்க ளென்போர்யாவர்க்கும் உனக்
கும் ஒருதன்மையாய்நின்று, இந்த அண்டங்க
ளெங்கும் வியாபித்திருப்பவனை, இத்தூணினி
டத்து நான்காணும்படிகாட்டு. நீ காட்டாவி
ட்டால், பெருத்தமதத்தகத்தையுடைய யானை
யைச்சிங்கமானது கொன்றாற்போல உன்னைக்
கொலைசெய்து உன்னுடைய செம்புருக்குப்
போன்ற உதிரத்தை நிரம்ப உண்டு உனதுதே
கத்தையும் தின்பேனென்று சொன்னானென்
னும் பொருளமைந்த,

கவி.

உம்பர்க்கு முனக்குமொத்திவ் வுலகெங்கு
ம் பரந்துளானைக், கம்பத்தின் வழியேகாணக்
காட்டுதி காட்டிடாயேல், கும்பத்தின்கரியை
க் கோண்மாக் கொன்றென நின்னைக்கொன்
றுன், செம்பொத்த குருதிதேக்கி யுடலையுந்
தின்பெ னென்றான். ...........................※

என்னும்பாடலையும்,

அவ்விரணியன் சொன்னதைக் கேட்ட
பிரம ஞானி யாகிய பிரகலாத னுழ்வான்,
இரணியனைநோக்கி, ஸ்ரீசர்வேசுரனுக்குத் தா
சனுய் நிற்கின்ற எனதுயிரை உன்னால் கொலை
செய்வதற்கு அவ்வளவுஎளியதாகிய ஒருபொ
ருளல்ல. நான்முன்சொன்ன ஸ்ரீஹரி, இந்தத்
தூணிலுண்டென்பதேயல்ல நீ தீண்டின தீண்டின
இடங்களிலெல்லாந் தோன்றுமதற் பொருள்,
என்னுயிரை நானே மாய்த்துக் கொள்வேன்.
அதன்மேலும் உயிர்வாழ்தலை விரும்புவேனு
னால், அந்த ஸ்ரீ ஹரிக்கு அடியேனல்லேனெ
ன்று னென்ற பொருளமைந்த,

கவி.

என்னுயிர் நின்னாற்கோறற் கெளியதொ
ன் றன்றியான்முன், சொன்னவன் றொட்ட
தொட்ட விடந்தொறுந் தோன்றானயின், எ
ன்னுயிர் யானேமாய்ப்பல் பின்னும்வாழ்
வுகப்பலென்னின், அன்னவற்கடியேனல்லே
னென்றன னறிவின்மிக்கான். ...........※

என்னும்பாடலையும்,

இப்படிப் பிரகலாதனுழ்வான் பிரதிக்
ஞையை இரணியன் கேட்டவுடனே இப்பிரதி
க்கினையினுண்மையைக் காணவேண்டு மென்
கிற விருப்பமானது வெளியேதோன்றும் வ
ண்ணம் கோபத்தோடு நன்று நன்று என்று
சொல்லிச் சிரித்து, விசையோடு இடியானது
விழுந்தாற்போல எதிரே நின்ற ஒரு தூ
ணினை வெற்றியும் கீர்த்தியும் தங்கிய வலக்கர
த்தாலே அறைந்தான். அறைந்தமாத்திரத்தில்
சர்வாந்தரிமியாகிய சிவந்த கண்களையுடைய
ஸ்ரீ சிங்கப்பெருமான் திக்குகளும் அண்டமு
ம் பிளந்துபோம்படி கலகலவென்று சிரித்த
னர் என்னும்பொருளமைந்த,

கவி.

நசைதிறந் திலங்கப்பொங்கி நன்று நன்
றென்ன நக்கு, விசைதிறந் துருமு வீழ்ந்த
தென்னவோர் தூணின்வென்றி, இசைதிறந்
தமர்ந்தகையா லெற்றினு னெற்ற லோடும்,
திசைதிறந் தண்டங்கீறச் சிரித்தது செங்கட்சீ
யம். .........................................※

என்னும்பாடலையும்,

ஸ்ரீ சர்வேசுரன் நாரசிங்கத் திருவுருக்
கொண்டு பிரசன்னமாய்ச் சிரித்ததைக்கண்ட
மெய்ஞ்ஞானச் சிறுவராகிய ஸ்ரீ பிரகலாதனு
ழ்வான் ஆனந்தத்தால் ஆடிப்பாடிக் கண்ணீர்
சொரிந்து தொழுததைச் சொல்லிய,

கவி.

நாடிநான் றருவெனென்ற நல்லறி வாளனு
னும், தேடிநான் முகனுங்காணுச் சேயவன்
சிரித்தலோடும், ஆடினு னழுதான்பாடி யரற்
றினன் சிரத்திற்செங்கை, சூடினன் றொழுதா
னோடி யுலகெலாந் துகைத்தான் றுள்ளி. ... ※

என்னும்பாடலையும் வாசித்தார்.

வாசிக்கும்போதே மேட்டழகிய சிங்கப்பெருமாள் தமது திருக்கரங்களை நீட்டித் திருமுடியைத் தூக்கிப் பலம்போதும் சிவந்த வாயைத்திறந்து கடகடவென்று அந்த மண்டபமும் அதிர, அங்குள்ள சகல மஹாஜனங்களும் நடுங்கச் சிரித்து ஆர்ப்பரித்தார். அப்பொழுது எல்லாரும் அதிசயித்துத் திருச்சித்திரகூடத்தில் தில்லைமூவாயிரவர் பிள்ளை பாம்புகடித்து இறந்தது. அது நாகபாசப்படலத்தில் சில கவிகளை வாசிக்கப் பிழைத்தது. இங்கே இரணியவதைப்படலத்தில் சில கவிகளை வாசிக்கச் சுதைவடிவாயெழுந்தருளியிருக்கின்ற மேட்டழகிய சிங்கப்பெருமான் திருவுளமுகந்து அவ்வுகப்பு யாவர்க்குந்தோன்றும்படி சிரக்கம்பகரக்கம்பமோடு அட்டகாசமுஞ்செய்தனர். ஆதலால் இப்பெருங்காப்பியம் தெய்வீகமுடையதென்றும், இத்தெய்வீகம் யாவர்க்குந்தோன்றவேண்டுமெனத் திருவுளத்தெண்ணியல்லவோ இந்நூலில் அந்தந்தச் சந்தர்ப்பங்கண்டு அதற்குத் தக்கவாறு விசேஷார்த்தஞ்சொல்லிச் சமர்த்தித்து வந்த பரமயோகியாகிய ஸ்ரீமந்நாதமுனிகளும் இவ்விஷயத்தில்மாத்திரம்வார்த்தைசொல்லாமல் மௌனமாயிருந்தனரென்றும், தங்கள் தங்களுக்குள்ளெண்ணிக் கம்பநாடனைக் குறித்து மிகவும் மெச்சிக்கொண்டாடினார்கள்.

அதற்குமேலும் அச்சபையிலுள்ள அறிவிற் சிறந்தோர் அங்காங்குக் கேட்டகேள்விகளுக்கெல்லாம் ஏற்றபடி சமாதானஞ்சொல்லி, ஸ்ரீராமாயணம் முழுவதும்வாசித்துமுடித்தபின்பு ஸ்ரீமந்நாதமுனிகள் இந்தப்பெருங்காப்பியம் இவ்வளவுசிறப்புடையதாக இயற்றப்பட்டும் பாலில் விஷங்கலந்தாற்போல இடையிடையே நரஸ்துதி பண்ணப்பட்டதனால் ஸ்ரீவைஷ்ணவர்கள் தில்லைமூவாயிரவர் முதலானோர்களுடைய கையொப்பம்வாங்கி வரும்படி இவனைப்பலவிடங்களிலு மோடியுழலச் செய்தாரென்று திருவுளத்தில் உய்த்துணர்ந்து, கம்பநாடனைநோக்கிச் சிறையிருந்தவ ளேற்றஞ்சொல்வதாகிய இந்த இதிகாசச்ரேஷ்டத்தில் நரஸ்துதி செய்தது யாதுகாரணமென்ன வினவினர். கம்பநாடர் அந்தப்பரமயோகீந்திரருக்குத் தண்டன் சமர்ப்பித்து நின்று, சிறுவயதுமுதல் அடியேனைத் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளலவர் ஆதரித்தனர். அவருடையதத்தினத்தால்தான் அடியேன் திருவெண்ணெய்நல்லூரில் இந்நூல்செய்தது. இதுவுமன்றி. அம்பிகாபதி விவாகத்திற்பாதபூசைநடக்கும்போது, அரசர்களும், மற்றும் மகாசனங்களும் வந்து நிறைந்திருக்கும் கலியாணவாசலில் மேற்படி வள்ளலானவர்வந்து, தாம் இருக்க இடமில்லாமையால் அங்குள்ளவர்களில் பலர் எழுந்து இங்கேவரலாம் இங்கேயிருக்கலாமென்று உபசரிக்காநிற்கையில் நீங்களெழுந்திருக்க வேண்டாமென்றுகூறி ஒருவரும்நிற்பதற்கும் யோக்கியமன்றி ஒழிந்திருந்த அங்கணத்தின் வரம்பின்மேல் நின்றுகொண்டிருப்பதைக்கண்டு தேவரீருடைய அடியாள்சகியாமல் பரிதபித்து இத்தனைசனங்களுக்கும் இங்கே இடமிருக்க எங்களண்ணா அவர்களுக்குமாத்திரம் அந்த அங்கணமோ கிடைத்ததென்று கேட்க, உன்தமையனை இந்த இடத்திலேயா வைக்கிறது, நான்வைக்குமிடத்தில் வைக்கிறேனென்று சொல்லிய சொல்லுமுண்டு. இவற்றையெல்லாம் கருதித்தான் அந்தவள்ளலுடைய பெயரைப் பலவிடங்களிலும் அவருடைய தம்பிமார்களாகிய கண்ணன், சராமன் என்பவர்களுடைய பெயர்களை இரண்டொரு இடத்திலும் இதிற்சொல்லிவைத்தேனென்று அதிவிநயத்தோடு சொல்லிக்கொண்டனர்.

அதுகேட்டருளிய ஸ்ரீமந்நாதமுனிகள் இது உபகார ஸ்ம்ருதியாமெனத் திருவுளங்கொண்டு கம்பநாடனைநோக்கி நீர்சொல்வதெல்லாம் சரிதான். நீர்செய்த இப்பெருங்காப்பியத்தில் நூற்றுக்கொன்று வீதமாக அவ்வள்ளலுடைய பெயரைச்சொல்லியிருக்கின்றீரோ மகாகாவியத்தில் அப்படிஅடிக்கடிச்சொல்வது தகுதியன்று. ஆயிரத்துக்கொன்று வீதமாக இருந்தாற்போதுமென்றனர். கம்பநாடர் அதற்கு மனம் வருத்தப்படமல் சுவாமி! மகாபாக்கியம். அந்தவள்ளலுடைய குணாதிசயம் அடியேனுடைய சிற்றறிவுக்கு எட்டாமையால் நூற்றுக்கொன்றாகமதித்தேன். தேவரீர் ஆயிரத்துக்கொன்றாக மதித்தது விசேஷமேயென்று வணக்கமாகக்கூறினர். ஸ்ரீமந்நாதமுனிகள் திருவுளமகிழ்ந்து கிருபைகூர்ந்து கம்பநாடருக்குக் கவிச்சக்கரவர்த்தியென்றும், தெய்வக்கவிஞரென்றும், ஆழ்வார்பக்கல் இக்கம்பநாடருக்குண்டாயிருக்கும்பிராவண்ணியத்தைநோக்கி ஆழ்வாரென்றுந் திருநாமமிட்டு, அவர் பாடின ராமாயணத்துக்கு அங்கிருந்த வித்வஜன சிரேஷ்டர்களில் சிலர் சாத்துக்கவிகொடுக்கவும், அவரால் இரண்டுகவியைப் பாடுவித்துத் திவ்விய பிரபந்தத்தோடு சேர்க்கவும், அந்தத்திவ்வியதேசத்தில் நடக்கும் உச்சவாதிகளில் அழகியமணவாளன் திருவீ

றிப் புறப்பாடாகித் திரும்பிக் கோயிலுக்குட் செல்லும்பொழுதெல்லாம் கம்பநாடர் கட்டுவி த்தமண்டபத்தில் எழுந்தருளப்பண்ணித்திரு வந்திக்காப்பு நடப்பிக்கவும், சடகோப சந்தா தியில் இரண்டுபாடலைத் திருக்குருகூரில் ஆழ் வார்சந்நிதியில் நித்தியப்படியாகச் சேவிக்கவு ம் வேண்டுமெனக்கட்டளையிட்டுத் தமதுகோ ஷ்டியிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களைநோக்கிக் கம் பநாடராகிய கவிச்சக்கரவர்த்திக்குப் பெரு மாள்சேவைபண்ணுவித்து ஸ்ரீசடகோபமுத லானவைகளும் பிரசாதியுங்கோ ளென்பதாக நியமித்தருளினர்.

அந்நியமனப்படி அவர்கள் கம்பநாட ரை அழைத்துப்போய் நம்பெருமாளுக்கு த்திருமஞ்சன முதலானவைகளுஞ் சமர்ப்பி த்துப் பிரணவாகார விமானத்தில் திருக்கண் வளர்கின்ற பிரணவப்பொருளாகிய ஸ்ரீரங்க நாதனையும், ஸ்ரீரங்கநாயகியாரையும், அவர் சேவிக் கும்படி செய்து ஸ்ரீமத்ராமாய ணத்தைச் சுவாமியினுடைய பொன்னடிகளி ல்சமர்ப்பித்து, அவருக்குத்திருமாலை தீர்த்த ம் பிரசாதம் ஸ்ரீசடகோப முதலானவைகளு ஞ் சாதிப்பித்து, விசேஷமரியாதை நடப்பி த்தார்கள். அவைகளைக்கம்பநாடர் பெற்றுக் கொண்டு "அன்றுநான்பிறந்திலேன்" எனத்தி ருமழிசைப்பிரான் அருளிச்செயலின்படி கீ ழ்ப்போன சன்மங்களனைத்தும் அறிவின்றி அவலமாய்க்கழிந்ததனால் அப்பொழுதெல்லா ம் அடியேன்பிறந்தேனல்லேன். இப்பொழு து சன்மசாபல்யமாகிக் கிருதார்த்தனும்படி சதாசாரியகடாக்ஷம் வாய்க்கப்பெற்றமையா ல் இந்தச்சன்மமே உத்கிருஷ்டமானசன்மம் என்று நெஞ்சநெகிழ்ந்து சரீரம்புளகித்துக் கண்களில் ஆநந்த பாஷ்பம்பெருகப் பரவச மாயினர்.

கவி.

எண்ணியசகாத்தமெண்ணூற் ... ✻
நேழின்மேற்சடையன்வாழ்வு ... ✻
நண்ணியவெண்ணெய்நல்லூர் ... ✻
தன்னிலேகம்பநாடன் ... ... ✻
பண்ணியவிராமகாதை ... ✻
பங்குனியத்தநாளில் ... ... ... ✻
கண்ணியவரங்கர்முன்னே ... ✻
கவியரங்கேற்றினனே. ... ... ✻

இது.

ஸ்ரீராமாயணம்பாடின இடத்தையும், அ ரங்கேற்றியதையும், காலத்தையும் குறித்துக் கோயிலிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவர் பாடியது.

கவி.

அம்பிலேயிலையைநாட்டி யானைக்கவிழ்முதயீ ந்த, தம்பிரானென்னத்தானிருந்தசிலைதாகு நாட்டிக், கம்பநாடுடையவள்ளல் கவிச்சக்கரவ ர்த்திபார்மேல, நம்புபாமாலையாலே நரர்க்கு மின்றமுதயீந்தான்,

இது.

கவிச்சக்ரவர்த்தியென்றும் பட்டப்பெ யரைக்குறித்து மற்றொருவர்பாடியது.

கவி.

இம்பர்நாட்டிற் செல்வமெலா மெய்தியரசா ண்டிருந்தாலும், உம்பர்நாட்டிற் கற்பகக்கா வோங்குநீழலிருந்தாலும், செம்பொன்மேரு வனையபுயத் திறல்சேரிராமன்திருக்கதையில்✻ கம்பநாடன்கவிதையிற்போற் கற்றோர்க்கிதய ங்களியாதோ.

என்பதுமுதலாக மற்றுஞ் சிலர்பாடிய செய்யுள்களை ஸ்ரீமத்ராமாயணத்தின் பாயிர த்திற்காண்க.

இப்படி எல்லாமரியாதையும் பெற்றபி ன்பு கம்பநாடர் ஸ்ரீமந்நாதமுனிகளையும்ம ற்றுமுள்ள பிரபன்னர் முதலானவர்களையும், சேவித்து அவர்களிடத்தில் நியமனம்பெற்று க்கொண்டு, கோயிலிலிருந்து திருவெண்ணெ ய் நல்லூருக்குவந்து சடையப்பவள்ளலைக் க ண்டு, அரங்கேற்றியசெய்திகளையெல்லாம் வி வரித்து அவர் உபசரிக்கப்பெற்று, அங்கிருந் து உறையூருக்குப்போய்க் குலோத்துங்கச் சோழனைக்கண்டு நடந்தசெய்திகள்யாவும் ஆ தியந்தமாகச்சொல்லினர். அரசன் அப்படியா வென்று ஆச்சரியப்பட்டு இதுவிஷயத்திலே மி குபிரயாசப்பட்டீர். பட்டாலும்உமக்குக்கா வியத்திற்கும் மிகுந்தசிறப்பேயென்று சொல் லிச் சந்தோஷிப்பட்டு, இவ்விடத்தில், நானும் மற்ற அரசர்களும், சடையப்பவள்ளலும் உ ம்முடையவாக்காலே ஒருமுறை இராமாயண முழுதும் கிரமமாக உபதேசிக்கக் கேட்கவே ண்டாவோவென, அப்படியே செய்யலாமெ ன்றனர். உடனே சோழராசன், பாண்டியன் சேரன்முதலானவர்களுக்குப் பத்திரிகைமூல மாக இதுசங்கதியைத் தெரிவித்து வரவழை த்து ஒருபெரிய மகாவித்வ சபை கூட்டுவி த்தனன். அரசர்களும் கற்றுவல்லோர்களும் கூடியபெருஞ்சபைநடுவில்கம்பநாடர்களுந் தருளியிருந்து கற்றுச்சொல்லிக்கையேடுபிடி த்து வாசிக்கத்தாம் உபதேசிக்கத் தலைப்பட் டார்.

(நகரத்துக்குச் சுகரப்போலி. வளாயா துகொ
டுத்தலால்) வள்ளலே, (தருமத்தை மாறுதா
செய்தலால்) பின்னு கன்னனுக்குப் பின்தோ
ன்றிய தருமனே (அழிவின்றி வாழ்தலால்)மன்
னு-நிலைபெற்றவனே, (தமிழை வளர்த்தலால்)
தென்னு- பாண்டியனே, சோழங்கம்- சோழ
தேசமாகிய அங்கத்தையுடைய, (சோழங்க
ம் கடைக்குறை) பெருமானே - பெருமையு
டையானே- என்பதாம். மற்றும் பதசாரமும்
விரமுதலிய எண்சுவைகளும் தோன்ற விரித்
துக் கூறினர்.

இக்குலோத்துங்கச்சோழராசன் முதலா
னவர் அதைக்கேட்டுமிகுதியும்ஆச்சரியப் பட்
டு, பாடினவன் மூடனும், பாட்டு அனைக்காசு
பெறுதனுமாயிருந்தும், அவனைவித்துவானெ
ன்றும், அதைப்பாடலென்றும் ஸ்தாபித்ததை
க்குறித்து இந்தத்தெய்வக் கவிஞரை மிகவுங்
கொண்டாடினார்கள். பின்பு சோழராசன் இவ
னைப்பற்றி அவனுக்கு ஆடையணி முதலிய
வெகுமதிகள் செய்தனன். கம்பநாடர் அவ்வி
றகுதலையனைத் தம்முடைய கற்றுச்சொல்லிக
ளாகிய புலவர்களில் ஒருவனைக்கொண்டு தமி
ழிலக்கண விலக்கியங்களைக் கற்பித்துப் பாட
ப்பழகுவித்து ஒருநாள் சபைக்கு வரவழை
த்து, வந்தனைக்கொண்டு சமிசைகொடுப்பி
த்துக் கவிபாடச்சொல்லி அதை அவனே உப
நியாசஞ் செய்யும்படிச் செய்தனர். அதைப்
பற்றித் தான் இதைத் தம்மிடத்திலே கண்டே
னென்று சொன்றனர். அதுகேட்டுச் சந்தோ
ஷித்து இப்படிப்பட்ட தெய்வப்புலமையுள்
ள கம்பநாடனை கால்நடையாய்ப் போக்கு
வரவு செய்யப் பார்த்துக்கொண் டிருப்பது
நமக்கு அழகல்லவென்று, அவருக்கு யானைத்
தந்தத்தால் தொட்டி சமைத்துக் கனைக்குப்
பொற்றகடு சித்திரித்து வேய்ந்து, அடியிலே
நிலத்தால் கால்கடைந்துபொருத்தி, மரகதத்
தால் குமிழ்நிரைத்து, மேலுக்கு விசித்திரமா
கிய சரிகைமுகமற் பன்னுங்குவிரித்து, நெரு
ங்க முத்துக்குச்சுகள்தூக்கி, கனையி னிருபுற
மும் தங்கத்தால் சிங்கவுருவமைத்து, கண்ணு
க்கு நீலமும், பல்லுக்கு வச்சிரமும், வாய்க்
குப் பதுமராகமுப், அமைத்துச் சமைத்த
வியப்புயர்ந்த தண்டிகை யொன்று வெகுமதி
செய்தான். கவி.

பின்பு "திய்வரோடொன்றிய திறத்தரு
நலத்தோர், ஆய்வனாயந்நிலை யறிந்தனர் அ
றந்தாங், கேயவரு நன்பொடி படிந்துட
னெழுந்தே, பாய்பரி விரைந்தது திரைநன
பரந்தே. ...... ...............................*

இப்பாடலில் குதிரையின் இயல்பு மு
தலியவற்றை விரித்துக்கூறியபோது, சிந்து
தேசாதிபதி மனமகிழ்ந்து தெற்கிய முதலிய
இடங்களில் நற்சுழிகளுள்ள நூறு உத்தமசாதி
க் குதிரைகள் வெகுமதிசெய்தனன். இக்காவி
யத்தில் ஒவ்வொரு நயங்கண்டு. குடகதேசத்
திற்கும், பாண்டியதேசத்திற்கும், சிந்து தே
சத்திற்கும் அதிபதிகள் தனித்தனி யானை குதி
ரை தண்டிகைகள் வெகுமதி செய்ததைப் பா
ர்த்திருந்த மாறுவாடித் தேசத்தரசன், அதற்
குமுன் கம்பநாடர் எழுச்சிப் படலத்தில்,

கவி.

தள்ளரும்பரந் தாங்கிய வொட்டகம்,தெள் நெ
திங்கரும் பியாவையுந் திலகில, உள்ளமென்ன
நீதம் வாயுமுலர்ந்தன, கள்ளுண் மாந்தரிற்
கைப்பனதேடியே. ...... ...... ........*

என்றபாடலை உபநியசித்ததைக்கேட
டிருந்தும், அப்பொழுது நாமொன்றும் செய்
யாமற் போனேமே யென்று வெகுலச்சை
யடைந்து பிறகு தன் தேசத்திலுண்டாகும்
ஒட்டகங்களில் இருபது வெகுமதி கொடுத்
தான். கவி.

கோலங்காண் படலத்தில் "அமிழ்நிமைத்
துணைகள் கண்ணுக் கணியென வமைக்குமா
போல், உமிழ்சுடர்க் கலன்கணங்கை யுருவி
னை மறைப்பதோரார், அமிழ்திளைச் சுவைசெ
ய்தென்ன வழகினுக்கழகு செய்தார், இமிழ்
திரைப் பரவைஞால மேழைமை யுடைத்தா
மாதோ. ...........................................*

என்ற பாடலைப் பலவாறு விரித்துக்
கூறும்போது, காஸ்மீர தேசத்தரசன்
சிற்சில கேள்விகள்கேட்க அதற்குத்தக்கவாறு
விடைகொடுக்கக்கேட்டு ஆநந்தப்பரவசனுய்,
பதினாயிரம் இருபதினாயிரம் பொன் விலையே
றப்பெற்ற இருபதுசால்வைகளைக்கொடுத்து
அவற்றுள் ஒன்றைஎடுத்துக்கம்பநாடருக்குப்
போர்த்துவிட்டான்.

பின்னும்அப்படலத்தில்.

கவி.

கோனணி சங்கம்வந்து குடியிருந்தனைய க
ண்டத், தினமில்கலன்கடம்பி லிலையவணணி
தல்செய்தார், மானணிநேக்கினர்த மங்கலக்
கழுத்திற்கெல்லாம், தானணியானபோதுதன
க்கணியாதுமாதோ.

என்றபாடலை உபநியாயஞ் செய்யும்போ
து கூர்ச்சரதேசத்துக் கனவர்த்தக சிரேஷ்
டனொருவன் எழுந்துநின்று, ஐயா தெய்வக்
கவிஞரே ! சுமங்கலிஸ்திரிகளுடையகழுத்துக்
கு ஸ்ரீசொர்ணட்டியானாத் திருவாபரணமே

டு ஒடிந்துமேல்விழுந்து அலறி அழவேண்
டுமே அப்படியுஞ்செய்யாமலும், தன்னரு
மைத்திருமகனைக் கொடுந்தொழிலரக்கன்கொ
ண்டுபோனதிருல் பெற்றவயிறுபற்றியெரிய
அக்கலானது நீராயுருகிக் கரைந்து பிரக்கி
னையிலாமல், அழுந்துணையாக ஒருவனாயுந்
தேடாது தனியே கதறிக்கொண் டிருப்பது
டற்றி நிலைதளர்வான் றன்னைக்கண்டு பிரங்
காதே; தனியே கதறுந் தடங்கடலென்றுமே
ன்று. பின்னும் அச்சமுத்திர நங்கை
அவ்வாறு அழுகையில், அந்நங்கையினது அ
லைகாகிய கைகளின் மேல்தவழ்ந்து விளையா
டும் இளந்தென்ற லாகிய பிள்ளையானது இ
தென நம்முடையதாய்மருமகனை உபசரிக்
காய் அழுது கொண்டிருக்கிறாள். இவர் நம்
முடைய முன்பிறந்தாளைத்திருமணம்புணர்ந்
த காலத்தில் நாம் அருகிலிருந்து விளையாட்
டுச்செய்யும் பாக்கியம் பெறுமற் போனோ
மே இப்போதாவது நடத்தி நம்முடையஅத்
தானைச் சந்தோஷிப் படுத்துவோ மென்றெ
ண்ணி "இளம்பிள்ளையமறியாது" என்பதற்
கேற்கச் சமயாசமயந் தெரியாமல் புன்னைப்
பூவிலுள்ள பராகமாகிய கந்தப் பொடியை
வீசிக்கந்தப்பொடிவசந்தமாடத் தலைப்பட்ட
துபற்றித்திரைமேற்றவழ்கின்றபிள்ளைத்தென்
றல்களுயிர்க்கும்புன்னைக் குறும்பூநறுஞ்சு
ண்ணம்பூசா தொருகாற்போகா தென்றுமே
ன்றுங்கூறினர்.

கேட்ட சபையிலுள்ளோர் யாவரு
ம் கம்பநாடருடைய புலமையைக் குறித்து
ஆச்சரியப் பட்டார்கள்.

பிராட்டிகளன்காண்படலத்தில்.

ஸ்ரீ சீதாநாயகியாரைப் புஷ்பகவிமானத்தின்
மேலேற்றி யுத்தகளத்துக்குக் கொண்டுவந்
து அவருக்கு, பிரமாஸ்திரத்தால் செய்கை
யற்றுக்கிடக்கின்ற இளயபெருமாள் முதலா
னவர்களையும், அவர்களைக்கண்டு துக்கித்து
மெய்மறந்துகிடக்கின்ற பெரியபெருமாளை
யும் பாரென்று அரக்கிமார்கள் காண்பித்த
பொழுது,

கவி.

மங்கையழுதாள்வானாட்டுமயில்களழுதார்மழ
விடையோன், பங்கினுறையுங் குயிலழுதாள்
பதுமமலர்மேன்மாதழுதாள், கங்கையழுதா
ளுமடந்தை யழுதாள்மேலத் தடங்கண்ணன்,
தங்கையழுதா ளிராக்காத வரக்கிமாருந் தாந்
தழுதார்..............................*

பொன்றுழையுழையா டனையின்ற பூமாமடந்
தை புரிந்தழுதாள், குன்றுமறையுந் தருமமு
மேருழைந் தழுதழுதனர்ந்தனுந, மின்று
வுடற்றும் பெரும்பாவ மழுதயில்லென்பிறர்
செய்கை, நின்றார்நின்றபடியழுதார் நினைப்பு
முயிர்ப்பு நீத்திட்டாள். ....................*

பிராட்டி அழுகையை நோக்கித் தேவ
ஸ்திரீகள்முதலியோர்அழுதனரென் றுங்கருத்
துக்கொண்ட,

இப்பாடல்களை உபநியாசஞ்செய்து பி
ராட்டியாரை உபத்திரவஞ்செய்துவந்த அர
க்கிமார்களும், பாவமும், அழுத அழுகைதா
ன் உள்ளபடி அதிசயமாமென்றார்.

பாண்டியராசன் ஸ்ரீசர்வோத்தமியாகியசக
லபிராட்டியாருடனே சகத் காரணராகிய
ஸ்ரீசர்வஸ்வாமியும் இத்தனை கஷ்டபாடுகள்பட
வந்ததெல்லாம் மேற்படி தேவஸ்திரீகளுக்கு
ம் அவர்களுடைய நாயகிமார்களுக்கும்
ராவணனியரால் நேரிட்ட உபத்திரவத்தை நி
வர்த்திக்கும்பொருட்டே யாதலால் அவர்கள்
அதைநினைப்பார்களானால், அவர்களைத் துக்கி
க்கவேண்டாவென்று தடுத்தாலும் கேட்டமா
ட்டார்கள். இந்த அரக்கிமார்களுக்கோ அப்
படிப்பட்ட ஆபத்துசம்பவிக்கவுமில்லை. அப்
படிசம்பவித்து ஸ்ரீராமபிரானாவது ஸ்ரீசீதா
பிராட்டியாவது சகாயஞ்செய்யவுமில்லை. இ
ப்படி ஒரோதவும் இல்லாதிருந்தும் அரக்கி
மார்கள் துக்கித்தது ஸ்ரீவைதேகியாருடைய
துக்கம் சகிக்கமுடியாமையாலே யாதலால்
இது உசிதமென்றது மெய்தானென்றான். அ
துகேட்டுச்சபையிலுள்ளவர்கள் யாவரும் எ
ம்பெருமாட்டியாகிய பிராட்டியை வருத்த
ப்படுத்திக்கொண்டிருந்த அரக்கிமார்களே அ
வருடைய துக்கத்தைக்கண்டு சகியாமல் உள்
ளுருகி அழுதார்களானால் அவருடைய அரு
மைத்திருமேனி எப்படிபதைத்திருக்கவேண்
டும் அவர் எவ்வளவு கலக்கம் பட்டிருக்
கவேண்டும். என்னென்று புலம்பியிருக்கவே
ண்டுமென்று பலவாறுகளெண்ணி அப்பிராட்
டிபக்கல் விசேஷ பக்தி யுடையவர்களாதலா
ல் தங்கள்மனங்குழைய முகம்வாட மெய்
சோரக் கண்ணீர்பெருக அலறி அழுதார்கள்.
அதுகண்டருளிய கம்பநாடர் கற்றுச்சொல்
லியைமறுத்துப்படலமெடுத்துவாசிக்கச்சொ

ஸ்ரீ, திருவடி.சத்ருக்னன்கொண்டுவந்தானென்றும்
அந்தவாடைப்பட்டிறந்தவர்களெல்லாம்உயிர்
பெற்றெழுந்தாரகளென்றும் உபந்நியாசஞ்
செய்தனர். அதுகேட்டவர்கள் யாவரும் துக்கமா
றிக் களிப்படைந்தனர்கள்.

சோழராஜன் இவ்விஷயம் ஸ்ரீகுலசே
கராழ்வார் ஸ்ரீமத்ராமாயண காலக்ஷேபஞ்
செய்தவாறாயிற்றென்று சொல்லி நகைத்தான்.
ஜெயதியென்னும் அரசன் அது எவ்வாறென்
றுவினவ, கம்பநாடர் ஸ்ரீகுலசேகராழ்வாரெ
ன்பவர் ஸ்ரீமத்ராமாயண காலக்ஷேபஞ் செ
ய்துவருகையில், ஆரணியகாண்டத்தில் சூர்ப்
பநகை மூக்கறுப்புண்டு கரதூஷணாதியரிடத்தி
ற்போய் முறையிட்டுக்கொள்ள, அதி உக்கிர
மாய்எண்ணிறந்த துஷ்டசேனைகளைக்கூட்டிக்
கொண்டுஎதிர்த்தனர்கள். அதுசமயத்தில்தமக்
கொருவருந் துணையில்லாமல் சுவாமியும் அ
வர்களை எதிர்த்தனரென்று சொல்லக்கேட்டு
ஸ்ரீராமபிரான்பக்கல் அதிபக்திபாரவசிய ரா
கையால், நெடுநாளைக்குமுன் நடந்தசரித்திர
ம் அன்றுநடக்கிறதாக எண்ணிச் சுவாமிதனி
த்திருக்க இளையபெருமாள் எங்கேசென்றன
ரென்றுகேட்க, பௌராணிகர்ஜனகபிராட்டி
யாரெழுந்தருளியிருக்கும் பர்ணசாலையண்
டைகாவலாயிருக்கும்படி ஸ்ரீரகுநந்தனர் நிய
மித்தனர். அந்நியமனத்தின்படிஅவர்அங்குற்றி
ருக்கிறாரென்றுசொல்லக்கேட்டவுடனே மந்தி
ரிகளுடைய தந்திராலோசனையால், இரண்டு
ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆழ்வாருக்கெதிரேவந்து,
சுவாமி பாதசாரியாயும் தனித்தவராயும் இரு
க்கிறாரென்று அநுதபித்து உக்கிராகாரமாய்த்
தமது சேனையைப்படையெடுக்கும்படிகட்
டளையிட்டுத் தாமும் போர்க்கோலம்பூண்டு
அச்சேனைகளுக்குப் பின்னேசெல்லுகையில்
ஸ்ரீசர்வஸ்வாமியானவர் கரதூஷணாதியர்களை
யும் அவர்களுடைய சேனைகளையும் ஜயித்து
த்தேவர்கள் புஷ்பமாரிபெய்யப் பர்ணசாலை
க்கு மீண்டுவந்தாரென்ற சுலோகங்களை எடுத்
துக்கூறினார்கள். ஆழ்வார் அதுகேட்டுக் கோ
பாவேசமாறித் தெற்குநோக்கிப்போனஸை
ந்யத்தைத் திரும்பிவரும்படி நியமித்தா
ரென்றுகூற, ஜெயதி ஸ்ரீகுலசேகராழ்வாருக்
கு ஸ்ரீசர்வேசுரன் பக்கல் பரமபக்தி நிலை
பெற்றிருக்கவேண்டும். அது அவருக்கும்
"அன்புபெறுகையரும்பேறெனக்கென்றும்,,
என்ற ஸ்ரீபிரகலாதாழ்வாருக்குமன்றி மற்ற
இருக்குமோவென்றுமனநெகிழ்ந்து புகழ்ந்
தான்.

இவ்வாறுசிறையிருந்தவளேற்றஞ்சொல்வ
தாகிய ஸ்ரீராமாயணத்தைத்தெய்வப்புலமைக்
கம்பநாட்டாழ்வார் உபந்நியாசஞ்செய்து மு
டித்தபின்னர். சேரல் கம்பநாடருக்கு விலை
யேறப்பெற்ற ஆடையணிகளையும் நிலங்களை
யும் வெகுமதிசெய்து,

கவி.

நாதலத்திறுள்ளதமிழ்க்குற்றமெல்லாம்...*
அராவுமராமாயிற்றன்றே இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வா னடிபணியுமாதித்தன் *
கம்பநாட்டாழ்வான்கவி.

எனத்துதிகவியுமொன்று பாடித்தந்தன
ன். கருணாகரபாண்டியன், தானும்அவ்வாறு
நல்லவெகுமதிகள்செய்து,

கவி.

நாலாற்றுங் கவிச்சக்கர வர்த்திசெய்புடாருந்
முடைமைநோக்கி,வரலாற்றுமுறையினியற்ற
மிழுணர்ந்தமுதியோரு மற்றுமுளாரும், மூ
லாற்றுங் கடற்பாரிற்கம்பருத்திரமுதுசொன்
மொழி பவன்றேற், கெரலாற்று மால்சங்க
மொக்குமெனின் யாம்வேறெப் பியம்பவ
மால்.............................*

என்றதுதிகவியுங் கொடுத்தான். ஔவை
முதலியவித்வஜனர்களும் துதிகவிகள் பாடிக்
கொடுத்தனர்கள்.

குலோத்துங்கச்சோழன் ஸ்ரீராமர்பட்டாபி
ஷேகமகோற்சவத்தை ஒருபடத்தில் எழுதுவி
த்துத்தன்னரண்மனைக்குச் சமீபத்தில்பட்டா
பிஷேகமண்டபமென ஒருமண்டபங்கட்டுவி
த்து, அதைச்சுவர்க்கம்போலச் சிங்காரஞ்செ
ய்து நடுவில் பத்மராக பீடத்தின்மேல்அப்ப
டத்தையெழுந்தருளப்பண்ணுவித்து;ஸ்ரீவை
ஷ்ணவர்களைக்கொண்டு ஆராதித்து, ஸ்ரீமத்க
ம்ப ராமாயணத்தைப் படத்தில் சமீபத் தில்
வைத்துச் சுகந்த புஷ்பஞ் சாத்திப் பின்பு
பொன் மயமாகிய தண்டிகையின் மேல் வை
த்துச் சோடசஉபசாரத் தோடு முன்னேகொ
ண்டு செல்லப் பின்னேகவிச் சக்கரவர்த்திக்கு
உயர்ந்த பட்டாடை தரித்துச் சங்கு சக்கரக்
கடுக்கனும், நவரத்தினகண்டியும்,வச்சிரபதக்
கமும், முத்துமாலையும்,தங்கக்காப்புக்கொலு
சுமிட்டுச் சந்தனபுஷ்ப தாம்பூலமுங்கொடுத்

து சப்த லட்சணமுடைய பட்டத்து யானையின்மேல் பொன்னம்பாரிவைத்து அதன்மீது அவரை ஏற்றி நானாவித வாத்தியங்கள் முழங்கத் தன்மந்திரி பிரதானியர்கள் சாமரம் போடச் சிறப்பாகக் கிராமபிரதட்சிணஞ்செய்வித்து அவருக்குச்சத்திரம்,சாமரம்,திருச்சின்னம்,முதலிய அநேகவிருதுகளுங்கொடுத்து

கவி.

வாழ்வார்திருவெண்ணெய்நல்லூர்ச்சடையப் பன்வாழ்த்துப்பெறத், தாழ்வாருயரப்புலவோரகவிருடானகலப், போழ்வார்கதிரி னுதித்த தெய்வப்புலமைக்கம்பநாட், டாழ்வாரடியைச்சிந்திப்பவர்க்கியாதுமரியதன்றே.........*

என்றதுதிகவியுஞ் செய்துவாசித்துப் பிராமணர்களுக்குக் கோதான பூதானங்களும் கவீசுரர்களுக்குப் பலவித வெகுமானங்களுஞ்செய்து அரசர்கள் முதலானவர்களுக்குத் தக்கவாறு மரியாதைபண்ணி விடைகொடுத்தனன். அவர்களுக்குள், சிற்சிலர்போம்பொழுது ஸ்ரீமத்கம்பராமாயணத்தைப் பார்த்து ஒவ்வொருபிரதி எழுதுவித்துக்கொண்டுபோனார்கள்.

கம்பநாடர் சீவவந்தவராயிருந்தகாலத்தில் எப்பொழுதாவது எவ்விடத்துக்காயினும் போகவரவேண்டியிருந்தால் முன்போலக் காலநடையாகப் போகாமல், ஸ்ரீராமாயணத்தை உபநியாசஞ்செய்தபோது ஆநந்தித்துக் கருணாகரபாண்டியன் கொடுத்த தந்தத்தாற்செய்த தண்டிகையின்மேல் ஏறி, குலோத்துங்கச்சோழன் வியந்துகொடுத்த சுவேதசத்திரங்கவிக்கவும், சாமரம்வீசவும், திருச்சின்ன மூதவும், மற்றும்பற்பல விருதுகள்பிடிக்கவும், குடகதேசாதிபதி கொடுத்த யானைகளும், மாறுவாடித் தேசத்தரசன் கொடுத்த ஒட்டகங்களும், சிந்துதேசத்திறைவன் கொடுத்தகுதிரைகளும், ஆந்திரதேசாதிபதி கொடுத்த கண்டவாள் எருதுகளுஞ் சேர்ந்துமுந்நூறுபுலவர்களும், தங்கள் தங்களுக்கு உசிதமானவாகனங்களின்மேலேறிக்கொண்டுபெருங்கூட்டமாகச்சூழ்ந்து ஒரு அரசனுடையதன்மை வருவதுபோலவரப்பிரயாணம்பண்ணுவதுண்டு. இந்தக்கூட்டம்போகிறவருகிறவார்களில் இவைகளுக்குவேண்டிய ஆகாரம்... ங்கங்குள்ளசோலைகள், தோப்புகள்,கொல்லைகள், கழனிகளில்வேண்டிய மட்டும்பெற்றுக்கொள்வதற்குத் தடையில்லை. அந்த நஷ்டத்தை வருஷவாரியில் அந்தந்தத்தேசத் தரசர்கள் தங்களுக்குவரும் மேல்வாரத்தில் கம்பநாடர் போனவழிகண்டு கழித்துஇவ்வளவென்று கழித்துக் குடிகளுக்குக் கொடுப்பது பெருவழக்கமாயிருந்தது.

முத்தமிழுணர்ந்தமெய்த்தலைப்புலவரும் *
மூடுகெழீஇயநீவோன்செல்வரும்..........*
சிரமேற்பொறுக்குஞ்செழுமலரெனவும்...*
கற்போர்காமுறுங்கற்பகமெனவும் .........*
விளங்கிச்சென்னைக்கல்விச்சங்கத்தில்.........*

தமிழ்ப்புலமைநடாத்தும், இயற்றமிழாசிரியராகிய அஷ்டாவதானம், வீராசாமிசெட்டியாரவர்கள் எழுதியவினோதரசமஞ்சரியென்னும் நூலில் இச்சரித்திரம் சுருக்கமொழியக் காணலாம்.

ஸ்ரீராமாயண அரங்கேற்றச்சுருக்கம்,

முற்றிற்று.



கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்,

